# யேசுக்கிறீஸ்துநாதருடைய

பரிசுத்த

# புதிய ஏற்பாடு.

A. M. D.

THE

# NEW TESTAMENT

OF OUR

# LORD JESUS-CHRIST

TRANSLATED INTO TAMIL FROM THE LATIN VULGATE
WITH ANNOTATIONS.

BY THE

Rev. J. B. TRINCAL,
OF THE SOCIETY OF JESUS.

AND

CAREFULLY REVISED BY SEVERAL FATHERS OF THE SAME SOCIETY.

THIRD & REVISED EDITION.

TRICHINOPOLY:
ST. JOSEPH'S COLLEGE PRESS.

1906.

A. M. D. G. (7896)



# யேசுக்கிறீஸ்துநாதருடைய

## பரிசுத்த

# புதிய ஏற்பாடு.

இஃது

கத்தோலிக்கு ரோமான் திருச்சபையில் வழங்கிவரும்
வுல்காத்தா என்னும் லத்தீன் பிரதியிலிருந்து
யேசு சபையைச்சேர்ந்த

ஜி. பா. திரிங்கால் சுவாமியவர்களால்

தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு,
வேறு சில குருக்களால் ஆராய்ந்து பார்வையிடப்பட்டது.

மூன்றும் பதிப்பு.

TRICHINOPOLY:
ST. JOSEPH'S COLLEGE PRESS.

1906.

# பொருள் அட்டவணை.


| பொருள். | பக்கம். |
|---|---|
| அர்ச். மத்தேயு சுவிசேஷம் … … … … | 1 |
| அர்ச். மாற்கு ஷை … … … … | 87 |
| அர்ச். லூக்கா ஷை … … … … | 135 |
| அர்ச். அருளப்பர் ஷை … … … … | 225 |
| அப்போஸ்தலர் நடபடி … … … … | 295 |
| அர்ச். சின்னப்பர் உரோமாபுரியாருக்கு எழுதிய நிருபம் … … | 379 |
| ,, ஷை கொரிந்தியருக்கு எழுதிய முதல் நிருபம் … | 421 |
| ,, ஷை ஷை இரண்டாம் நிருபம் … | 461 |
| ,, ஷை கலாத்தியருக்கு எழுதிய நிருபம் … … | 485 |
| ,, ஷை எபேசியருக்கு எழுதிய நிருபம் … … | 501 |
| ,, ஷை பிலிப்பியருக்கு எழுதிய நிருபம் … … | 515 |
| ,, ஷை கொலோசியருக்கு எழுதிய நிருபம் … … | 525 |
| ,, ஷை தெசலோனிக்கேயருக்கு எழுதிய முதல் நிருபம் … | 535 |
| ,, ஷை ஷை இரண்டாம் நிருபம் … | 545 |
| ,, ஷை திமோத்தேயுவுக்கு எழுதிய முதல் நிருபம் … | 551 |
| ,, ஷை ஷை இரண்டாம் நிருபம் … | 563 |
| ,, ஷை தீத்துவுக்கு எழுதிய நிருபம் .. … | 571 |
| ,, ஷை பிலமோனுக்கு எழுதிய நிருபம் … … | 577 |
| ,, ஷை எபிரேயருக்கு எழுதிய நிருபம் … … | 581 |
| ,, யாகப்பர் எழுதிய பொதுவான நிருபம் … … … | 611 |
| ,, இராயப்பர் திருச்சபைக்கு எழுதிய முதல் நிருபம் … | 623 |
| ,, ஷை இரண்டாம் நிருபம் … … | 633 |
| ,, அருளப்பர் எழுதிய முதல் நிருபம் … … … | 641 |
| ,, ஷை இரண்டாம் நிருபம் … … … | 651 |
| ,, ஷை மூன்றாம் நிருபம் … … | 653 |
| ,, யூதா எழுதிய பொதுவான நிருபம் … … … | 655 |
| ,, அருளப்பர் வெளிப்படுத்தின காட்சி ஆகமம் … … | 659 |

# பாயிரம்.

---

முதல் சுவிசேஷகராகிய அர்ச். மத்தேயுஸ் என்பவர் கலிலேயா தேசவாசியாகிய அல்பை என்பவருடைய குமாரன். லேவி என்னும் மறுநாமமும் இவருக்கு இடப்பட்டிருந்தது. இவர் ஆயத்துறையில் வேலையாயிருக்கையில் திவ்விய கர்த்தர் இவரைக் கண்டு, தம்மைப் பின்பற்றும்படி அழைத்தார். உடனே இவர் கர்த்தரைப் பின்தொடர்ந்து, அப்போஸ்தலரில் ஒருவரானார். அன்றியும், அக்காலத்திலிருந்த யூதர்குல விசுவாசிகளுக்காக இச்சுவிசேஷத்தை கி. பி. 41-ம் வருஷத்தில் இபுறு பாஷையில் எழுதித்தந்தார். சிலகாலத்துக்குப்பின் இதைக் கிறேக்கப் பாஷையில் ஒருவர் மொழிபெயர்த்தார். அவர் இன்னாரென்பது நிச்சயமில்லை. ஆகிலும் இவர் எழுதித்தந்த இபுறு பாஷைச் சுவிசேஷந்தான் அர்ச். ஜெரோம் என்பவருடைய நாளிலே செசாரேய நகரத்துப் புத்தகசாலையில் இருந்தது. இச்சுவிசேஷகர் பழைய ஏற்பாட்டை மேற்கோளாக எடுத்துரைக்கும்போதும், ஆண்டவருடைய திருவாய் மொழிகளை எடுத்துக் கூறும்போதும் வேதாகமத்தை மொழிபெயர்த்த எழுபது ஆசிரியருடைய கிறேக்கப் பாஷைப் பிரதியைப் பின்செல்லாமல் இபுறு பாஷைப் பிரதிக்கொத்தபிரகாரமாய் எழுதியிருக்கிறதைக் காண்கிறோம். அப்படியே, “நமது குமாரனை எஜிப்திலிருந்து அழைப்பித்தோம்” என்றும், “ஏனெனில் இவர் நசரேனுஸ் எனச் சொல்லப்படுவார்” என்றும் எழுதப்பட்டிருக்கிற வாக்கியங்களைக் காண்க. இவர் புறதேசங்களில் சத்தியவேதம் போதிக்கப் போயிருந்த இடத்தில் வேதசாட்சியாக மரணமடைந்தார். இப்போது இத்தாலியா தேசத்து சலெர்னோ என்னும் பட்டணத்தில் இவருடைய சரீரம் பூச்சியத்தோடே அடக்கஞ் செய்யப்பட்டிருக்கிறது.

---



# அர்ச். மத்தேயு எழுதிய

# யேசுக்கிறீஸ்துநாதருடைய

# பரிசுத்த சுவிசேஷம்.

## முதல் அதிகாரம்.

*கிறீஸ்துநாதருடைய வம்சவரிசை.*

1. அபிரகாம் குமாரனாகிய தாவீதின் குமாரன் யேசுக்கிறீஸ்துநாதருடைய ஜன்மிடாபின் ஆகமமாவது: ஆதி. 12-3; 22-18; சங். 131, 11; இசை. 11-1; ஜெரெ. 23-5; அருள். 7-42.

2. அபிரகாம் ஈசாக்கைப்பெற்றார். ஈசாக்கு யாக்கோபைப் பெற்றார். யாக்கோபு யூதாவையும், அவர் சகோதரர்களையும் பெற்றார். ஆதி. 21-2, 3; 25-26; 29-35.

3. யூதாவோ, தாமாரென்பவளால் பாரேசையும், சாராவையும் பெற்றார். பாரேஸ் எஸ்ரோனைப் பெற்றார். எஸ்ரோன் ஆரோமைப்பெற்றார். ஆதி. 38-27; ரூத். 4-18.

4. ஆரோம் அமினதாபைப் பெற்றார். அமினதாபு நாஸ்ஸோனைப் பெற்றார். நாஸ்ஸோன் சல்மோனைப் பெற்றார். எண். 7-12.

5. சல்மோன் ராஹாப் என்பவளால் போவோஸைப் பெற்றார். போவோஸ் ரூத் என்பவளால் ஓபேதைப் பெற்றார். ஓபேது ஜெஸ்ஸேயைப் பெற்றார். ஜெஸ்ஸேயோ தாவீதிராசாவைப்பெற்றார். ரூத். 4-21, 22.

6. தாவீதிராசா ஊரியாவின் மனைவியாயிருந்தவள் மூலமாய் சலோமோனைப் பெற்றார். 2 அரசர். 12-24.

7. சலோமோன் ரோபோவாமைப் பெற்றார். ரோபோவாம் அபியாவைப் பெற்றார். அபியாஸ் ஆசாவைப் பெற்றார். 1 நாளா. 3-10.

8. ஆசா யோசப்பாத்தைப் பெற்றார். யோசப்பாத் யோராமைப்பெற்றார். யோராம ஓசியாவைப் பெற்றார். 1 நாளா. 3-10, 11.

9. ஓசியாஸ் யோவாத்தாமைப் பெற்றார். யோவாத்தாம் ஆக்காஸைப் பெற்றார். ஆக்காஸ் எசெக்கியாவைப் பெற்றார். 1 நாளா. 3-12, 13.

10. எசெக்கியாஸ் மனாசேயைப்பெற்றார். மனாசே ஆமோனைப் பெற்றார்.

---

1. **அபிரகாம் குமாரனாகிய தாவீதின் குமாரன்:** ஒரு கோத்திரத்தில் தலைமுறை தலைமுறையாய்ப் பிறந்தவர்கள் வேதாகமங்களிலே புத்திரரென்று அழைக்கப் படுகிறார்கள். அபிரகாம், தாவீது இவர்கள் விசேஷித்து குறிக்கப்பட்டிருப்பதற்கு அவர்களிருவருக்கும் விசேஷ வாக்குத்தத்தஞ் செய்யப்பட்டதே காரணம்.

ஆண்டவருடைய தூதன் சொர்ப்பனத்தில் அவருக்குத் தோன்றிச் சொன்னதாவது: சூசையே, தாவீதன் குமாரனே, நீர் உமது மனைவியாகிய மரியம்மாளை அங்கீகரித்துக்கொள்ள அஞ்ச வேண்டாம். அவளிடம் உண்டான கர்ப்பம் இஸ்பிரீத்து சாந்துவினால் ஆயிற்று.

21. அவள் ஒரு குமாரனைப் பெறுவாள். நீர் அவருக்கு யேசு என்னும் நாமஞ் சூட்டுவீர்; ஏனெனில் அவரே தமது ஜனத்தை அவர்களுடைய பாவங்களினின்று இரட்சிப்பா ரென்றார். தனி. 9-24; லூக். 1-31; 4-12.

22. இவை யாவும் ஆண்டவர் தீர்க்கதரிசியால் மொழிந்தது நிறைவேறும்படி ஆயிற்று. அவர் சொல்வதேதெனில்:

23. "ஒரு கன்னி கர்ப்பந்தரித்து ஒரு புத்திரனைப் பெறுவாள், அவருக்கு எம்மானுவேல் என்னும் நாமமிடுவார்கள்" அதற்கு "சர்வேஸ்பரன் நம்மோடு" என்றர்த்தமாம். இசை. 7-14; 61-1.

24. அப்போது சூசையப்பர் நித்திரையினின்று எழுந்து, ஆண்டவருடைய தூதன் தமக்குக் கட்டளையிட்டபடி செய்து தம்முடைய மனைவியை அங்கீகரித்துக்கொண்டார்.

25. அன்றியும் அவள் தலைப்பேறான தன் குமாரனைப் பெறுமளவும் அவர் அவளையறியாதிருந்து, அவருக்கு யேசு என்னும் நாமஞ் சூட்டினார். லூக். 2-7.

## 2-ம் அதிகாரம்.

சோதிட சாஸ்திரிகள் திவ்விய குழந்தையை ஆராதித்ததும், திருப்பாலன் எஜிப்து தேசத்துக்குக் கொண்டுபோகப்பட்டதும், எரோதரசன் குழந்தைகளைக் கொன்றதும், திருக்குடும்பம் எஜிப்து தேசத்தினின்று திரும்பினதும்.

1. அப்படியே எரோதரசனுடைய நாட்களில் யூதாவின் ஊராகிய பெத்லேமிலே யேசுநாதர் பிறந்திருக்கையில் இதோ கீழ்த்திசையினின்று சோதிட சாஸ்திரிகள் எருசலேம் நகருக்கு வந்து, லூக். 2-4;

21. **யேசு:**—தமிழ்ப் பாஷையில் யேசுவென்றோ அல்லது சேசுவென்றோ சொல்ல வேண்டுமென்பதைப் பற்றிச் சுவிசேஷப் பொருத்தத்தின் பாயிரத்துக்குப் பின் காண்க.

23. **தலைப்பேறு:**—லூக் 2-ம் அதி. 7-ம் வசன வியாக்கியானத்தில் இதற்கு விபரங் காண்க.

25. **பெறுந்தனையும்:**—இந்த வசனத்தில் திருக்கன்னி தேவசுதனைப் பெறுந்தனையும் சூசையப்பர் அவளை அறியவில்லை, அதாவது அணுகவில்லை, என்று சொல்லும்போது, பின்காலத்தில் அணுகினாரென்று அர்த்தமல்ல. ஒருவன் சாகுந்தனையுங் கலியாணஞ் செய்யவில்லையென்றால், செத்தபின் கலியாணஞ் செய்தானென்கலாமா? 109-ம் சங்கீதத்தில், நாம் உம்முடைய சத்துருக்களை உமக்குப் பாதப்படி யாக்குந்தனையும் நமது வலது பாரிசத்தில் உட்கார்ந்திருமென்று வசனித்திருப்பதினால், பிற்காலத்தில் அவர் பிதாவின் வலது பாரிசத்திலே இருக்கவில்லையென் றர்த்தமாகுமோ? அல்லவே.

1. **எரோதரசன்:**—புதிய ஏற்பாட்டில் எரோதன் என்னும் பேர்கொண்ட இராசாக்கள் மூன்று பேர் காணப்படுகிறார்கள். (1) மாசில்லாக் குழந்தைகளைக் கொன்றவன் முந்தினவன். இவன் யூதகோத்திரமல்ல, புறஜாதியான். (2) இரண்டாம் எரோதன் ஸ்நாபக அருளப்பரைக் கொலைசெய்து யேசுநாதரையும் பைத்தியகாரனென்று நிந்தித்தவனென்க. இவன் முந்தின எரோதனுடைய மகனும் ஆர்க்கலாவுடைய தம்பியுமாயிருந்தான். (3) மூன்றாம் எரோதன் அர்ச். இராயப்பரைச் சிறையிலடைத்து அர்ச். இயாகப்பரைத் தலைவெட்டினவனும். இவன் முதலாம் எரோதனுடைய மூன்றா மகனான அரிஸ்தோபுலினிடத்திற் பிறந்தவன். இவன் தேவகோபாக்கினையால் சரீர ஆதியந்தம் க்ஷணத்திற் புழுத்துச்செத்தான்.

**பெத்லேம்:**—பெத்லெம் ஊர் நசரேத்தூருக்கு சுமார் 15 காத வழிதூரம்.

2. யூதருடைய இராசாவாகப் பிறந்திருக்கிறவர் எங்கே? ஏனெனில் கீழ்த்திசையில் அவருடைய நட்சத்திரத்தைக் கண்டு அவரை ஆராதிக்க வந்தோம் என்றார்கள். எண். 24-17; இசை. 60-3.

3. எரோதரசன் இதைக்கேட்கவே கலங்கினான். எருசலேம் முழுதும் அவனோடு கலங்கினது.

4. பின்னும் அவன் பிரதான ஆசாரியரையும், சனத்தின் வேதபாரகரையும் ஒன்றாய்க்கூட்டி கிறீஸ்துவானவர் எங்கே பிறப்பாரென்று அவர்களிடம் விசாரித்தான்.

5. அவர்கள் அவனுக்குச் சொன்னதாவது: யூதாவின் பெத்லேம் ஊரில்தான்; ஏனெனில் தீர்க்கதரிசியால் இவ்வாறு எழுதப்பட்டிருக்கிறது:

6. "நீயோ பெத்லேமே, யூதாவின் காணியே, யூதாவின் சிரேஷ்ட நகரங்களில் நீ அற்பமேனும் சிறிதல்ல. ஏனெனில் எனது இஸ்ராயேல்சனத்தை ஆளுந் தலைவர் உன்னிடமிருந்து வெளிப்படுவார்" என்பதாம். அரு. 7-42. மிக். 5-2.

7. அப்போது எரோதன் சோதிட சாஸ்திரிகளை இரகசியமாய் அழைத்து அவர்களுக்கு நட்சத்திரந் தோன்றின காலத்தைப் பற்றிச் சாக்கிரதையாய் விசாரித்து அறிந்தான்

8. பிறகு அவர்களைப் பெத்லேம் ஊருக்கு அனுப்பி: நீங்கள் போய், பிள்ளையைப் பற்றிச் சாக்கிரதையாய் விசாரியுங்கள். அவரை நீங்கள் கண்டபின், நானும் வந்து அவரை ஆராதிக்கும்படி எனக்கு அறிவியுங்கள் என்றான்.

9. அரசன் சொன்னதை அவர்கள் கேட்டபின் புறப்பட்டார்கள். அப்போது இதோ, கீழ்த்திசையில் அவர்கள் கண்ட நட்சத்திரம் பிள்ளை இருந்த இடத்தின்மேல் வந்து நிற்குமட்டும் அவர்களுக்கு முன்சென்றது.

10. நட்சத்திரத்தைப் பார்த்து சந்தோஷ மிகுதியால் அனந்தங்கொண்டார்கள்.

11. பின்பு வீட்டில் பிரவேசித்துப் பாலனை அவர் தாயான மரியம்மாளோடு கண்டு, சாஷ்டாங்கமாக விழுந்து அவரை ஆராதித்தார்கள். மேலும் தங்கள் பொக்கிஷங்களைத் திறந்து, பொன்னும், தூபவர்க்கமும், மீறையும், அவருக்குப் பாதகாணிக்கைகளை வைத்தார்கள். சங். 71-10.

12. மேலும் அவர்கள் எரோதனிடம் திரும்பிப்போகாதபடி சொப்பனத்தில் உத்தரவு பெற்றதால், வேறே மார்க்கமாய்த் தங்கள் தேசத்திற்குத் திரும்பிப் போனார்கள்.

2. **அவருடைய நட்சத்திரத்தை:** இரட்சகர் பிறக்குங் காலத்தில் யாகோபின் கோத்திரத்தாராகிய இஸ்ராயேலருடைய தேசத்தின்மேல் ஓர் நவமான நட்சத்திரங் காணப்படுமென்று பாலாமென்கிற தீர்க்கதரிசி வசனித்திருந்தார். எண். அதி 24-வச. 14. க. அ. மு. 1432-ஆம்.

4. **யூத வேதபாரகர்:** - யாரென்றால், வேதப்பிரமாணத்தை நன்றாய்ப் படித்தறிந்து சனங்களுக்கு அதை விவரிக்கும் உத்தியோகம் பெற்றிருந்தவர்களாம். அவர்கள் எடுத்துக் காட்டின தீர்க்கதரிசனம் மிக்கேயாஸ் தீர்க்கதரிசியால் கூறப்பட்டது. (மிக்கேயாஸ் 5-2.) க. அ. மு. 758-ஆம்.

**குறிப்பு.**—க. அ. மு. கர்த்தர் மனுஷவதாரத்துக்குமுன் என்று விரித்துச் சொல்லுக.

9. திவ்விய குழந்தை பிறந்த காலத்தை யறிய விரும்புகிறவர்கள் லூக். அதி. 2 வச. 2, வியாக்கியானங் காண்க.



"மேலும் தங்கள் பொக்கிஷங்களைத் திறந்து, பொன்னும், தூபவர்க்கமும், மீறை யும் அவருக்குப் பாதகாணிக்கை வைத்தார்கள்."

(மத். 2-11.)

13. அவர்கள் புறப்பட்டபின் இதோ ஆண்டவருடைய தூதன் சூசையப்பருக்குச் சொர்ப்பனத்தில் தோன்றி: நீர், எழுந்திருந்து, குழந்தையையும் அதன் தாயையும் அழைத்துக்கொண்டு எஜிப்து தேசத்துக்கு ஓடிப்போய், நான் உமக்குச் சொல்லுமளவும் அங்கேயிரும். ஏனெனில் பிள்ளையைக் கொல்லுவதற்கு எரோதன் அதைத் தேடும்படி நேரிடும் என்றார்.

14. உடனே அவர் விழித்தெழுந்து, பிள்ளையையும் அதன் தாயையும் இரவில் கூட்டிக்கொண்டு, எஜிப்து தேசத்திற்குப்போய்,

15. எரோதன் சாகுமட்டும் அங்கே இருந்தார். இவ்விதமாய் எஜிப்துத் தேசத்திலிருந்து என் குமாரனை அழைத்தேனென்று தீர்க்கதரிசியால் ஆண்டவர் சொன்னது நிறைவேறும்படியாயிற்று ஓசே. 11-1.

16. அப்போது எரோதன் சோதிடசாஸ்திரிகளால் தான் ஏய்க்கப்பட்டதாக அறிந்து, வெகுவாய்ச் சினந்து, ஆட்களை அனுப்பிச் சோதிடசாஸ்திரிகளிடமிருந்து தான் அறிந்துகொண்ட காலத்தின்படி பெத்லேமிலும் அதன் சுற்றுப்புறங்களிலெங்கும் இரண்டுபிராயமுதல் அதற்குட்பட்ட சகல ஆண் குழந்தைகளையுங் கொலைப்படுத்தினான்.

17. அப்போது எரேமியாஸ் தீர்க்கதரிசியால் மொழியப்பட்டது நிறைவேறிற்று. அதாவது:

18. ராமா ஊரில் குரல் சத்தமும் அழுகையும் பெரும்புலம்பலும் கேட்கப்பட்டது. ராக்கேல் தன் பிள்ளைகள் மேல் அழுது அவைகள் இல்லாததினால் ஆறுதல் வேண்டாமென்றிருந்தாள் என்பதாம். ஜெரே. 31-14.

19. எரோதன் இறந்தபின்பு, இதோ ஆண்டவருடைய தூதன் எஜிப்து தேசத்தில் சூசையப்பருக்குச் சொர்ப்பனத்தில் தோன்றி:

20. நீர் எழுந்து பிள்ளையையும் அதன் தாயையுங் கூட்டிக்கொண்டு இஸ்ராயேல் நாட்டுக்குப் போம். ஏனெனில் பாலகனுடைய உயிரைப்பறிக்கத் தேடினவர்கள் இறந்துபோனார்கள் என்றார்.

21. அப்போது அவர் எழுந்து பிள்ளையையும் அதன் தாயையும் அழைத்துக்கொண்டு இஸ்ராயேல் தேசத்துக்கு வந்தார்.

22. ஆனால் அர்க்கலாவுஸ் தன் தகப்பனாகிய எரோதனுக்குப்பதிலாய் யூதேயாவில் அரசாளுகிறானென்று அவர் கேள்விப்பட்டு, அங்கே போகப் பயப்பட்டார். ஆயினும் சொர்ப்பனத்தில் எச்சரிக்கைபட்டு கலிலேயா நாட்டுப்புறங்களுக்கு ஒதுங்கிப்போய், லூக். 2-39.

13. **எஜிப்து தேசம்:** பெத்லேமூரிலிருந்து எஜிப்துதேசத்துக்கு உத்தேசம் பத்து நாள் பயணமாம்.

15. **எஜிப்திலின்று:** இந்தத் தீர்க்கதரிசனம் ஓசேயெ என்பவரால் கூறப்பட்டது. (ஓசே. 11-1) க. அ. மு. 801-ளு. ஓசேயெ தீர்க்கதரிசி தேவப்பிரஜைகளாகிய இஸ்ராயேல் புத்திரரைப் பற்றி வசனித்ததைச் சுவிசேஷகர் இவ்விடத்தில் திவ்விய கர்த்தரின்மேல் ஆரோபித்துப் பேசுகிறார்.

18. **இராக்கேல்:**—யாக்கோபுடைய மனைவியாயிருந்த இவள் மரித்தபின்பு பெத்லேமூரில் அடக்கம் பண்ணப்பட்டிருந்தாள். ஆகையால் பெத்லேமிலும் அதுக்கருகாமையிலும் பிறந்து கொல்லப்பட்ட பிள்ளைகளெல்லாம் அவளுக்குப் பேரப்பிள்ளைகளாயிருந்தன. ஜெரே. 31-15; க. அ. மு. 629 (கால்மேத்).

23. நசரேத்து என்னும் ஊரில் சேர்ந்து, வாசஞ்செய்தார். நசரேயனென அழைக்கப்படுவாரென்று தீர்க்கதரிசிகளால் சொல்லப்பட்ட வாக்கியம் இவ்விதமாக நிறைவேறிற்று. அருள. 1-46.

## 3-ம் அதிகாரம்.

*யேசுநாதருக்கு முன்னோடியாகிய அர்ச். அருளப்பர் தபத்தின் ஞானஸ்நானத்தைப் பிரசங்கித்ததும், யேசுநாதர் அவரால் ஞானஸ்நானம் பெற்றதும்.*

1. அந்நாட்களிலேலொவென்றால் ஸ்நாபக அருளப்பர் புறப்பட்டு யூதேயா தேசத்தின் வனாந்தரத்தில் பிரசங்கிக்கத் துவக்கி; மாற். 1-4.

2. தவஞ்செய்யுங்கள், ஏனெனில் மோட்ச ராச்சியம் சமீபித்திருக்கின்றது என்பார். லூக். 3-3.

3. இவர் யாரென்றால்: ஆண்டவருடைய வழியை முஸ்திப்புச் செய்யுங்கள்; அவருடைய மார்க்கங்களைச் செவ்வைப்படுத்துங்களென்று வனாந்தரத்தில் கூப்பிடுகிற குரலொலி என, இசையாஸ் தீர்க்கதரிசியால் குறிக்கப்பட்டவராமே. மாற். 1-3; லூக். 3-16; அருள. 1-23; இசை. 40-3.

4. இந்த அருளப்பர் ஒட்டக மயிருடையையும் இடையில் வார்க்கச்சையையும் அணிந்திருந்தார். இவருடைய போசனம் வெட்டுக்கிளியுங் காட்டுத்தேனுமாயிருந்தது.

5. அப்போது எருசலேம் பட்டணத்தாரும், யூதேயா தேசத்தாரெல்லாரும், யோர்தான் நதியின் சுற்றுப்புறத்தாரனைவரும் அவரிடத்திற்குப் புறப்பட்டுப்போய், மாற். 1-5.

6. தங்கள் பாவங்களை வெளிப்படுத்தி யோர்தான் நதியில் அவரால் ஞானஸ்நானம் பெறுவார்கள்.

7. ஆனால் அவர் பரிசேயரிலும் சதுசேயரிலும் அனேகர் தம்முடைய ஞானஸ்நானம் பெறவருகிறதைக் கண்டு, அவர்களை நோக்கிச் சொல்லுவார்: விரியன் பாம்புகளின் குட்டிகளே, வரப்போகிற கோபாக்கினைக்குத் தப்பித்துக்கொள்ள உங்களுக்கு வழி காட்டினவன் யார்? லூக். 3-7; 8; 9.

8. ஆகையால் தகுதியான தவப்பலனைச் செய்யுங்கள்;

9. எங்களுக்குப் பிதாவாக அபிராகாம் இருக்கிறாரென்று உங்கள் உள்ளத்தில் சொல்ல நினையாதேயுங்கள்; ஏனென்றால் சர்வேசுரன் இந்தக் கல்லுகளினின்றும் அபிராகாமுக்குப் புத்திரர்களைப் பிறப்பிக்க வல்லவராயிருக்கிறாரென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். அருள. 8-39.

---

23. **நசரேத்து:**— எருசலேம் பட்டணத்துக்கு வடக்கே ஏறக்குறைய 12 காத வழி தூரம். ஆர்க்கலாவு ஆண்ட யூதேயா தேசமானது எஜிப்து தேசத்திலிருந்து நசரேத்தூருக்குப் போகிற பாதையிலிருந்ததினாலே அர்ச். சூசையப்பர் அந்த வழியாய்ப் போகப் பயப்பட்டார்.

2. **தவஞ்செய்யுங்கள்:**— இவ்விடத்தில் **தவம்** என்னும் மொழியானது மூலபாஷையில் மனத்தபம் சரீரத்தபம் இவ்விரண்டையுங் குறிக்கிறது. அர்ச். ஸ்நாபக அருளப்பர் கொடுத்த ஞானஸ்நானம் பாவப்பொறுத்தலுக்கு ஆயத்தப்படுத்துகிற ஒரு சடங்காயிருந்ததொழிய அது தன் இயல்பிலே பாவப்பொறுத்தலைப் பயக்கவில்லை. (அப். 19-4.)

6. **தங்கள் பாவங்களை வெளிப்படுத்தினார்கள்,** என்பதால் பாவப்பொறுத்தலுக்கு ஆயத்தமாகப் பாவங்களை அறிவிக்கவேண்டுமென்று இவ்வாக்கியங் காண்பிக்கிறது.

7. **பரிசேயர்:**— யூதர்களுக்குள்ளே கல்விசாஸ்திரத்திலும் வேதாசாரங்களிலுஞ் சிறந்தவர்களாய், மாம்ச உத்தானமும் அரூபிகளும் உண்டென்று போதித்து வந்தவர்களாயினும், அவர்களில் பெரும்பாலார் புண்ணியவேஷந்தரித்து மேட்டிமைக்காரராய் மெய்யான தேவ பயபக்தியற்றவர்களாயிருந்தார்கள்.

10. இப்பொழுதே மரங்களின் வேரருகில் கோடரி போட்டிருக்கிறது; ஆகையால் நற்கனி கொடாத மரமெல்லாம் வெட்டுண்டு, அக்கினியிலே போடப்படும்.

11. பச்சாத்தாபத்திற்காக, நான் ஜலத்தினால் உங்களுக்கு ஞானஸ்நானங் கொடுக்கிறேனென்பது மெய்யே; ஆனால் எனக்குப்பின் வருகிறவர் என்னிலும் அதிக வல்லவராயிருக்கிறார்; அவருடைய பாதரட்சைகளைச் சுமக்க நான் பாத்திரவானல்ல; அவரோ இஸ்பிரீத்து சாந்துவிலும் அக்கினியிலும் உங்களுக்கு ஞானஸ்நானங்கொடுப்பார். மாற். 1-8; லூக். 3-16; அருள. 1-26; அப். 1-5.

12. அவருடைய சுளகு அவருடைய கையிலிருக்கிறது. அவர் தமது களத்தைத் தூற்றி, தம்முடைய கோதுமையைக் களஞ்சியத்தில் சேர்த்துக்கொள்வார்; பதர்களையோ அவியாத அக்கினியிலே சுட்டெரிப்பார் என்றார்.

13. அப்போது யேசுநாதர் அருளப்பரால் ஞானஸ்நானம் பெறத்தக்கதாக, கலிலேயா நாட்டிலிருந்து யோர்தான் நதிக்கு அவரிடத்தில் வந்தார். மாற். 1-9.

14. ஆனால் அருளப்பர் அவரைத் தடுத்து: தேவரீரால் நான் ஞானஸ்நானம் பெறவேண்டியதாயிருக்க, நீர் என்னிடத்தில் வருகிற தெப்படி? என்க,

15. யேசுநாதர் அவருக்குப் பிரத்தியுத்தாரமாக: இப்போது தடை செய்யாதே; ஏனெனில் இவ்விதமாய் நாம் சர்வ நீதியையும் நிறைவேற்றத் தகுதியாமென்று திருவுளம்பற்றினார்.

16. அதினால் அருளப்பர் அவரைத் தடைசெய்யாமல்விட, யேசுநாதர் ஞானஸ்நானம் பெற்று, உடனே ஜலத்தைவிட்டு கரையில் ஏறினார். அப்போது இதோ, பரமண்டலங்கள் அவருக்குத் திறக்கப்பட்டுச் சர்வேசுரனுடைய இஸ்பிரீத்துவானவர் புறா வடிவாய் இறங்குகிறதையும், தமதுமேல் வருகிறதையுங் கண்டார். லூக். 3-22.

17. மீளவும் இதோ பரமண்டலங்களினின்று ஓர் குரலொலியுண்டாகி: என் நேச குமாரன் இவரே, இவர்பேரில் நான் பூரண பிரியமாயிருக்கிறேனென்று சத்தித்தது. லூக். 9-35; 2 இரா. 1-17.

## 4-ம் அதிகாரம்.

கிறீஸ்துநாதர் உபவாசித்துச் சோதிக்கப்பட்டதும், அவர் போதிக்கத்துவக்கி, அப்போஸ்தலர்க[illegible] காரரைக் குணமாக்கினதும்.

1. அப்போது யேசுநாதர் பசாசினாலே சோதிக்கப்படுவதற்கு இஸ்பிரீத்து சாந்துவினால் வனாந்தரத்துக்குக் கூட்டிக்கொண்டு போகப்பட்டார். மாற். 1-12; லூக். 4-1.

2. அவர் நாற்பது இரவும், நாற்பது பகலுமாக உபவாசமாயிருந்த பின்பு அவருக்குப் பசியுண்டாயிற்று.

3. அப்போது சோதனை செய்வோன் அவரண்டையில் வந்து: நீர் சர்வே

11. **அக்கினியிலும்:**—இஷ்டப்பிரசாதம் அல்லது தேவசினேகம் இந்த அக்கினியால் குறிக்கப்படுகிறது. அப். நட. 2-ம் அதி. 3-ம் வச.

2-வச. தமிழ்ப் பாஷையில் நாற்பது பகல் நாற்பது இரவு என்காமல் நாற்பது நாளென்று மாத்திரஞ் சுருக்கமாய்ச் சொல்லுவது வழக்கம். நாற்பது பகல் நாற்பது இரவென்று சொல்லுவது எபிரேயர் பாஷை நடையாம். ஆதி. 7-ம். அதி. 4-ம் வச. பாத். 24-ம் அதி. 18-ம் வச.

3-வச. **சோதனைசெய்வோன்:**—பசாசானது மனிதனை இடைவிடாமல் சோதிக்கிற வேலையாகவேயிருப்பதால், வேதாகமத்தில் அதற்குச் சோதனை செய்வோனென்கிற பேர் கொடுக்கப்பட்டிருக்கிறது.

சுரனுடைய சுதனானால் இந்தக்கல்லுகள் அப்பங்களாகும்படி சொல்லும் என்றான்.

4. அதற்கு அவர் மாறுத்தாரமாக: மனுஷன் அப்பத்தினாலேமாத்திரமல்ல, சர்வேசுரனுடைய வாயினின்று புறப்படுகிற எந்த வாக்கியத்தினாலும் பிழைக்கிறானென்று எழுதப்பட்டிருக்கிறது என்றார். உபாக. 8-3. லூக். 4-4.

5. அப்பொழுது பசாசானவன் அவரைப் பரிசுத்த நகரத்திற்குத் தூக்கிக்கொண்டுபோய்த் தேவாலயச் சிகரத்தில் அவரை நிறுத்தி:

6. அவரை நோக்கி: நீர் சர்வேசுரனுடைய சுதனானால் கீழே குதியும்; ஏனெனில், அவர் உம்மைக்குறித்துத் தம்முடைய தூதர்களுக்குக் கட்டளையிட்டிருக்கிறாரென்றும்; உம்முடைய பாதம் ஒருவேளை கல்லில் இடறாதபடிக்கு அவர்கள் உம்மைத் தங்கள் கரங்களிலே ஏந்திக்கொள்வார்களென்றும் எழுதியிருக்கிறது என்றான். சங்.

7. யேசுநாதர் அதற்கு: உன்தேவனாகிய கர்த்தரைச் சோதியாதிருப்பாயாகவென்று மீளவும் எழுதியிருக்கிறது என்றார். உபாக. 6-16.

8. பசாசானவன் மறுபடியும் அவரை எடுத்து மிகவும் உயர்ந்த ஓர்பர்வதத்தின்மேல் கொண்டுபோய், உலக இராச்சியங்கள் எல்லாவற்றையும், அவைகளின் மகிமையையும் அவருக்குக் காண்பித்து,

9. நீர் சாஷ்டாங்கமாக விழுந்து என்னை ஆராதிப்பீராகில் இவையெல்லாம் உமக்குத் தருவேனென்றான்.

10. அப்போது யேசுநாதர் அவனை நோக்கி: சாத்தானே, அப்பாலே போ, உன்தேவனாகிய கர்த்தரை ஆராதித்து, அவர் ஒருவரையே சேவிப்பாயாக என்று எழுதியிருக்கிறது என்றார். உபாக. 6-13.

11. அப்போது பசாசு அவரைவிட்டு, அகன்றுபோகவே, இதோ தேவதூதர்கள் அணுகி அவருக்குப் பணிவிடை செய்தார்கள்.

12. பின்பு அருளப்பர் பிடிபட்டாரென்று யேசுநாதர் கேள்விப்பட்டு, கலிலேயா நாட்டில் ஒதுங்கி, மாற். 1-14; லூக். 4-14; அருள. 4-43.

13. நசரேத்தென்னும் ஊரைவிட்டு, சபுலோன் நெப்தலி யென்கிற நாடுகளின் எல்லைகளிலே கடற்கரைக்கடுத்த கப்பர்நவூமென்னும் ஊரிலேவந்து வாசம்பண்ணினார்.

14. இப்படியே இசையாஸ் தீர்க்கதரிசி உரைத்த வாக்கியம் நிறைவேறும்படி ஆயிற்று.

15. அதாவது: சபுலோன் நாடும் நெப்தலி நாடும் யோர்தான் நதிக்கப்புறம் கடலுக்குச் செல்லும் வழியும், புறஜாதியார் தேசமாகிய கலிலேயாவும்,

16. அந்தகாரத்தில் உட்கார்ந்திருந்த ஜனமும் பெரிய ஒளியைக்கண்டார்கள். மரண நிழலின் திசையில் உட்கார்ந்திருந்தவர்களுக்கு வெளிச்சம் தோன்றிற்று, என்பதாம். இசை. 9-1. லூக். 1-79.

17. அதுமுதல் யேசுநாதர், தவஞ்செய்யுங்கள், ஏனெனில் மோட்ச இராச்சியம் சமீபித்திருக்கிறதென்று பிரசங்கிக்கத் தொடங்கினார். மாற். 1-15.

5. **பரிசுத்த நகரம்:**— ஜெருசலேம் பட்டணமாம்.

9. **இந்த இராச்சியமெல்லாம் உமக்குத் தருவேன்:**— இவ்வாக்கியத்தைக்கொண்டு பசாசானது ஒரு ஆத்துமத்தை எம்மாத்திரம் மதிக்கிறதென்று அறிந்துகொள்ளலாம். ஒரு ஆத்துமத்துக்காக உலகமெல்லாங் கொடுக்கிறதுக்கு அது தயாராயிருக்கிறது.

18. பின்னியும் யேசுநாதர் கலிலேயா நாட்டின் கடலருகே நடந்து போகையில், இராயப்பரென்னும் சீமோனும் அவருடைய சகோதரனான பிலேந்திரருமாகிய இருசகோதரர் கடலில் வலை வீசிக்கொண்டிருக்கிறதைக் கண்டார். ஏனெனில் அவர்கள் செம்படவர்களாயிருந்தார்கள். மாற். 1-16; லூக். 5-2.

19. அப்போது அவர்களை நோக்கி, நீங்கள் என் பிறகே வாருங்கள், நானுங்களை மனிதர்களைப் பிடிக்கிறவர்களாக்குவேனென்று திருவுளம்பற்றினார்.

20. அவர்களும் உடனே வலைகளை விட்டுவிட்டு அவரைப் பின்சென்றார்கள்.

21. பின்னும் அவர் அவ்விடம் விட்டு அப்புறம் போகையில், வேறே இரண்டு சகோதரர்களான செபதேயுவின் மகன் யாகப்பரும், அவருடைய சகோதரனாகிய அருளப்பரும், தங்கள் பிதாவாகிய செபதேயுவோடு கூடப் படகில் தங்கள் வலைகளைப் பழுது பார்த்துக்கொண்டிருக்கிறதைக் கண்டு, அவர்களையும் அழைத்தார்.

22. அவர்களும் உடனே வலைகளையும் தங்கள் பிதாவையும் விட்டுவிட்டு அவரைப் பின்சென்றார்கள்.

23. பின்பு யேசுநாதர் கலிலேயா நாடெங்குஞ் சுற்றிப்போய், அவர்களுடைய ஜெப ஆலயங்களில் போதித்து (மோட்ச) இராச்சியத்தின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, ஜனங்களுக்குள்ளிருந்த எல்லா நோக்காடுகளையும் வியாதிகளையும் சொஸ்தமாக்கிவந்தார்.

24. ஆதலால் சீரியா நாடெங்கும் அவருடைய கீர்த்தி பரவிச் செல்லவே, பற்பல நோய்களாலும் உபத்திரவங்களாலும் வருந்திய சகல பிணியாளிகளையும், பேய்ப் பிடித்தவர்களையும், சந்திரரோகிகளையும், திமிர்வாதக்காரரையும், அவருடைய சமுகத்தில் கொண்டு வந்தார்கள். அவர் அவர்களைக் குணமாக்கினார்.

25. அதினிமித்தம் கலிலேயா நாட்டிலும், தெக்கப்போலியிலும், எருசலேமிலும், யூதேயாவிலும், யோர்தான் நதிக்கு அப்புறத்திலுமிருந்து திரளான ஜனங்கள் அவரைப் பின்சென்றார்கள். மாற். 3-7.

## 5-ம் அதிகாரம்.

*யேசுநாதர் மலையின்மீது செய்தருளின பிரசங்கம். எட்டுப்பாக்கியங்களும் கிறீஸ்துவ புண்ணிய சாங்கோபாங்கத்தின் சங்க்ஷேபமும்.*

1. அப்போது யேசுநாதர் ஜனத்திரளைக் கண்டு ஒரு மலையின் மீதேறி உட்கார்ந்த மாத்திரத்தில், அவருடைய சீஷர்கள் அவரண்டையில் அணுக, லூக். 6-17.

2. அவர் தமது திருவாய் மலர்ந்து அவர்களுக்குப் போதித்தருளினதாவது :

3. மனத் தரித்திரர் பாக்கியவான்கள் ; ஏனெனில் மோட்ச இராச்சியம் அவர்களுடையது. லூக். 6-20.

---

19. **மனிதர்களைப் பிடிக்கிறவர்களாக்குவேன் :** இராயப்பருக்கு இதுவரையில் மீன் பிடிக்கிற தொழிலாயிருந்ததுபோல, இனி மனிதரை இரட்சிக்கிற தொழிலாயிருக்குமென்று யேசுநாதர் காட்டுகிறாரொழிய, மீனை வஞ்சகமாய்ப் பிடிக்கிறதுபோல, மனிதரையும் வஞ்சகமாய்ச் சேர்க்கவேணுமென்று ஆண்டவர் சொல்லுகிறதில்லை.

3. **மனத்தரித்திரம் மூன்றுவகைப்படும் :** 1-வது. சகலத்தையுந் துறந்துவிடுகிற சந்நியாசம், 2-வது. ஆஸ்தி இருந்தும் அதன்பேரில் பற்றுதல் இல்லாதிருத்தல், 3-வது. தரித்திரனாயிருந்தால் தேவசித்தத்துக்கு அமைந்து மனத்திருப்தியாயிருத்தல்.

4. சாந்த குணமுள்ளவர்கள் பாக்கியவான்கள்: ஏனெனில் அவர்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள். சங். 36-11.

5. அழுகிறவர்கள் பாக்கியவான்கள்; ஏனெனில் அவர்கள் ஆறுதலடைவார்கள். இசை. 61-2.

6. நீதியின்மேல் பசிதாகமுள்ளவர்கள் பாக்கியவான்கள்: ஏனெனில் அவர்கள் திர்ப்தி யடைவார்கள். லூக். 6-21.

7. இரக்கமுள்ளவர்கள் பாக்கியவான்கள்: ஏனெனில் அவர்கள் இரக்கமடைவார்கள்.

8. தூய இருதயமுள்ளவர்கள் பாக்கியவான்கள்: ஏனெனில் அவர்கள் சர்வேசுரனைத் தரிசிப்பார்கள். சங். 23-4.

9. சமாதானம் பண்ணுகிறவர்கள் பாக்கியவான்கள்: ஏனெனில அவர்கள் தேவமக்கள் என்னப்படுவார்கள்.

10. நீதியினிமித்தம் உபத்திரவப்படுகிறவர்கள் பாக்கியவான்கள்: ஏனெனில் மோட்ச இராச்சியம் அவர்களுடையது. 1 இரா. 3-14.

11. என்னைப்பற்றி மனிதர் உங்களைச் சபித்துத், துன்பப் படுத்தி, உங்கள்மேல் சகல தின்மையையும் அபாண்டமாய்ச் சொல்லும்போது, நீங்கள் பாக்கியவான்கள்.

12. அப்போது அகமகிழ்ந்து அக்களியுங்கள்; ஏனெனில் பரலோகத்தில் உங்கள் சம்பாவனை ஏராளமாயிருக்கின்றது. இவ்வண்ணமே உங்களுக்கு முன்னிருந்த தீர்க்கதரிசிகளையும் உபத்திரவப்படுத்தினார்கள்.

13. நீங்கள் பூமியின் உப்பாயிருக்கிறீர்கள்; உப்பானது சாரமற்றுப்போனால் எதினால் சாரமாக்கப்படும்? இனி அது வெளியே கொட்டப்படுவதற்கும், மனிதரால் மிதிக்கப் படுவதற்குமேயன்றி, வேறொன்றுக்கும் உதவாது. மாற். 9-49; லூக். 14-34.

14. நீங்கள் உலகத்தின் ஒளியாயிருக்கிறீர்கள், பருவதத்தின்மேலிருக்கிற பட்டணம் மறைவாயிருக்கமாட்டாது.

15. தீபத்தைக் கொளுத்தி மரக்காலின் கீழ் வைக்காமல் வீட்டிலுள்ள யாவருக்கும் பிரகாசிக்கும்படி அதை விளக்குத்தண்டின்மேல் வைப்பார்கள். மாற். 4-21; லூக். 8-16.

16. அவ்வண்ணமே மனிதர் உங்கள் நற்கிரியைகளைக் கண்டு, பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதாவை மகிமைப்படுத்தும்பொருட்டு, உங்கள் ஒளி அவர்களுக்கு முன்பாகப் பிரகாசிக்கக்கடவது. 1 இராய. 2-12.

4. **பூமியைச் சுதந்தரித்துக்கொள்வார்கள்**:— சாந்தகுணமுள்ளவர்கள் மோட்சத்தைச் சுதந்தரித்துக்கொள்வதுமன்றி, இவ்வுலகத்திலும் எதிரிகளும் வழக்குகளுமில்லாமல் அமரிக்கையாய் வாழ்வார்களாமே.

6. **நீதி**:—நீதியென்றால் புண்ணிய சாங்கோபாங்கநெறியாகும்; வேதாகமத்தில் நீதி என்னும் இச்சொல் இவ்வர்த்தமாகவே பல இடங்களில் வழங்குகிறது.

13. **பூமியின் உப்பு**:—உப்பானது, 1-வது. ஒரு பதார்த்தம் கெட்டுப்போகாதபடி காப்பாற்றுகிறது; 2-வது. போசனத்துக்கு ருசி கொடுக்கிறது. அப்படியே, 1-வது. ஆத்துமங்கள் கெட்டுப்போகாமல் காப்பாற்றுவதும், 2-வது. ஜனங்கள் ஞானக்காரியங்களின்மேல் பிரியப்படும்படியான புத்தி பிரசங்கம் செய்கிறதும், வேதியர் தொழிலாமே.

16. **உலகத்தின் ஒளி**:—யேசுநாதர் படிப்பித்த வேதமாத்திரமே உலகத்துக்கு மெய்யான வெளிச்சமாயிருக்கிறதினால், அதைப்போதிக்கக் குறிக்கப்பட்ட அப்போஸ்தலர்களும் உலகத்துக்கு ஒளியாயிருக்கிறார்களென்று சொல்லப்படுகிறார்கள்.

17. வேதப் பிரமாணத்தையாகிலும் தீர்க்கதரிசனங்களை என்கிலும் அழிக்க வந்தேனென்று நீங்கள் நினைக்கவேண்டாம். அழிப்பதற்கல்ல; நிறைவேற்றுவதற்கே வந்தேன்.

18. உண்மையாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்: வானமும் பூமியும் ஒழிந்துபோகுமுன் வேதப்பிரமாணத்திலுள்ள சகலமும் நிறைவேறுமொழிய அதில் ஓர் சிறு அட்சரமாவது ஓர் புள்ளியாவது நிறைவேறுமற்போவதில்லை. லூக். 16-17.

19. ஆகையால் மிகவும் சிறிதாகிய இந்தக் கற்பனைகளில் ஒன்றை மீறி, அவ்வண்ணமே மனிதருக்குப் போதிப்பவன் மோட்ச இராச்சியத்தில் மிகவுஞ் சிறியவனாக எண்ணப்படுவான். அவைகளை அனுசரித்துப் போதிப்பவனோ மோட்ச இராச்சியத்தில் பெரியவனாக எண்ணப்படுவான். யா. 2-10.

20. ஏனெனில் வேதபாரகர் பரிசேயர், இவர்களுடைய நீதியிலும் உங்கள் நீதி அதிகப்பட்டிராவிட்டால் மோட்ச இராச்சியத்திற்குள் பிரவேசிக்க மாட்டீர்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

21. கொலை செய்யாதிருப்பாயாக, கொலை செய்பவன் நியாயத்தீர்ப்புக்கு ஆளாகிறானென்று முன்னோர்களுக்குச் சொல்லப் பட்டதாகக் கேள்விப்பட்டிருக்கிறீர்களே., யாத்திரா. 20-13; உபாக. 5-17.

22. நானோ உங்களுக்குச் சொல்லுகிறேன்: தன் சகோதரனைக் கோபிக்கிற எவனும் நியாயத்தீர்ப்புக்கு ஆளாவான். ஆனால் தன்சகோதரனை ராக்கா என்பவன் ஆலோசனைச் சங்கத் தீர்ப்புக்கு ஆளாவான்; பைத்தியனே என்பவன் அக்கினிச் சூளைக்கு ஆளாவான்.

17. **நிறைவேற்றுவதற்கே வந்தேன்:**—பழைய ஏற்பாடானது யேசுநாதர் சுவாமியைக் குறிப்பாகவும் உருவகமாகவுங் காட்டுகிறது. யேசுநாதர்சுவாமி மனுஷ சுபாவமெடுத்துத் தம்மைக்குறித்துச் சொல்லப்பட்ட யாவற்றையும் சரிவர நிறைவேற்றினாரமே.

19. **மிகவும் சிறியவன்:**—தேவ தீர்வையால் தள்ளுண்டவனென்று வேதபாரகர் வியார்த்திபண்ணுகிறார்கள்.

20. **வேதபாரகர், பரிசேயர்:**—என்பதற்கு மத். 2-ம். அதி. 4-ம் வசனம். 3-ம். அதி 7-ம். வசனங்களில் வியாக்கியானங்காண்க. அடியில் சொல்லப்படும் கற்பனைகளுக்கு விரோதமாய் நினைவு ஆசைகளால் மாத்திரம் கட்டிக்கொள்ளும் பாவங்களைப் பரிசேயர் அற்பமாக எண்ணியிருந்தபடியால், அவைகளின் கனத்தைக்காட்டும்படி, அவைகளை அற்பமென்று எண்ணி கட்டிக்கொள்ளுகிறவர்களும் தேவ தீர்வையால் தள்ளுண்டுபோவார்கள் என்று யேசுநாதர் உரைக்கிறார்.

22. **நியாயத் தீர்ப்புக்கு ஆளாவான்:**—அதாவது, யூதர்களுக்குள் சிறிய குற்றங்களை விசாரித்துக் கண்டிக்க ஏற்பட்டிருந்த கிராம நியாய சபையின் தீர்ப்புக்குப் பாத்திரவானாவான்.

**ராக்கா** என்பது அதிக கோபத்தையும் நிந்தையையுங் குறிக்கும் சொல். இந்த வார்த்தையைச் சொல்லித் திட்டுகிறவன் ஆலோசனைச் சங்கத்தீர்ப்புக்கு ஆளாவான். அதாவது பெரிய அக்கிரம குற்றங்களை விசாரித்து ஆக்கினையிடும்படி எருசலேமில் ஏற்பட்டிருந்த சானேதிரிம் என்னப்பட்ட 72 பேர் அடங்கிய ஆலோசனை சங்கத்தாருடைய ஆக்கினைத் தீர்ப்புக்குள்ளாவான்.

**பைத்தியனே** என்பது மிகுந்த துவேஷ நிந்தையோடு சொல்லும்போது மகா பெருங் குற்றமாக மதிக்கப்படுவதால் அப்படிச் சொல்லுகிறவன் அக்கினிச் சூளைக்காளாவானென்று கர்த்தர் படிப்பிக்கிறபடியால், பாவத்தின் கனத்துக்குத் தக்கது ஆக்கினையும் கடினமாகுமென்றும், அதினால் நாம் புறத்தியாரை நிந்திக்கிறபாவத்துக்கு விலக்கி நடக்கவேண்டுமென்றும் கற்பிக்கிறார்.

23. ஆதலால் நீ பீடத்தண்டையில் உன் காணிக்கையைச் செலுத்தும் பொழுது உன்சகோதரன் உன்மேல் ஏதோ மனத்தாங்கலா யிருக்கிறானென்று அங்கே நினைவு கூர்வாயாகில்,

24. உன் காணிக்கையை அங்கே பீடத்தின் முன்பாக வைத்துவிட்டு, முந்த உன் சகோதரனோடு உறவாடப் போ; பின்பு வந்து உன்காணிக்கையைச் செலுத்துவாயாக.

25. நீ உன் எதிராளியோடு வழியி லிருக்கும்போதே சீக்கிரத்தில் அவனோடு சமாதானமாய்ப் போ; இல்லாவிட்டால் ஒருவேளை அவன் உன்னை நியாயாதிபதிக்குக் கையளிப்பான். நியாயாதிபதி உன்னைச் சேவகனுக்கு ஒப்புவிக்க, நீ சிறையில் அடைபடுவாய். லூக். 12-58.

26. நீ கடைசிக்காசு உத்தரிக்குமளவும் அவ்விடம்விட்டு வெளியேற மாட்டாயென்று சத்தியமாகவே உனக்குச் சொல்லுகிறேன்.

27. விபசாரம் பண்ணதிருப்பாயாக வென்று பூர்வீகத்தாருக்குச்சொல்லப் பட்டதாகக் கேள்விப் பட்டிருக்கிறீர்களே. யாத்திரா. 20-14.

28. நானோ உங்களுக்குச் சொல்லுகிறேன்: ஓர் ஸ்திரீயை இச்சிக்கும்படி அவளை நோக்குகிற எவனும் தன் இருதயத்தில் அவளோடு விபசாரஞ் செய்தாயிற்று. யாத்தி. 20-17.

29. உன் வலதுகண் உனக்கு இடறலாயிருந்தால், அதைப்பிடுங்கி அதைத் தூர எறிந்துபோடு, ஏனெனில் உன் உடல் முழுதும் நரகத்தில் தள்ளப்படுவதைவிட, உன்அவயவங்களில் ஒன்று சேதமாய்ப்போவது உனக்கு நலமாம். மாற். 9-46.

30. அப்படியே உனது வலதுகை உனக்கு இடறலாயிருந்தால் அதைத் தரித்துத் தூரமாய் எறிந்து போடு. ஏனெனில் உடல்முழுதும் நரகத்தில் தள்ளப்படுவதைவிட உன் அவயவங்களில் ஒன்று சேதமாய்ப்போவது உனக்கு நலமாம்.

31. அன்றியும் எவனாவது தன் ஸ்திரீயைத் தள்ளிவிடுவானாகில், விவாகத் தீர்ப்பின் சீட்டை அவளுக்குக்கொடுக்கக்கடவானென்று சொல்லப்பட்டிருக்கின்றது. உபாக. 24-1.

32. நானோ உங்களுக்குச் சொல்லுகிறேன்: தன் மனைவியை விபசாரத்தினிமித்தமன்றித் தள்ளிவிடுகிறவனும் அவளை விபசாரியாகப் பண்ணுகிறான், அப்படித் தள்ளிவிடப்பட்டவளைக் கொள்ளுகிறவனும் விபசாரம் பண்ணுகிறான். மாற். 10-11; லூக். 16-18; 1 கொரி. 7-10.

33. மீளவும் பொய்யாணை யிடாமல், ஆண்டவருக்கு உன் ஆணையைச் செலுத்துவாயாகவென்று பூர்வீகத்தாருக்குச் சொல்லப்பட்டதாகக் கேள்விப்பட்டிருக்கிறீர்களே. யாத்திரா. 20-7.

34. நானோ எவ்விதத்திலும் ஆணையிட வேண்டாமென்று உங்களுக்குச்

25. **வழியிலிருக்கும்போதே**:—பிறருக்கு நாம் ஏதேனும் அநீதம் செய்திருந்தால் அதைத் தாமதமில்லாமல் பரிகரிக்கவேண்டியதென்று இவ்விடத்தில் ஆண்டவர் படிப்பிக்கிறார்.

29. எந்த மனிதராகிலும், எந்தப் பொருளென்கிலும் நமக்குக் கண்ணைப்போலவும் கைகால்களைப்போலவும் பிரியமும் அவசரமுமாயிருந்தாலும், நாம் பாவத்தில் விழுவதற்கு வழியும் காரணமுமாயிருந்தால், அப்பேர்ப்பட்டவர்களையும் அந்தப் பொருட்களையும் நீக்கிவிடவேண்டுமென்று ஆண்டவர் கற்பிக்கிறார்.

34. **ஆணையிடவேண்டாம்**:—உண்மையும் கனமுமான விஷயத்திலே தகுந்த நியாயமிருக்கும்போது ஆணையிடுவது பாவமல்ல.

சொல்லுகிறேன்; பரலோகத்தின்மேலும் ஆணையிடவேண்டாம், ஏனெனில் அது சர்வேசுரனுடைய சிம்மாசனமாயிருக்கின்றது.

35. பூலோகத்தின் மேலும் வேண்டாம்; ஏனெனில் அது அவருடைய பாதப்படியாயிருக்கின்றது. எருசலேமின் மேலும் வேண்டாம், ஏனெனில் அது பெரிய இராசாவின் நகரமாயிருக்கின்றது.

36. நீ உன் தலையின்மேலும் ஆணையிடாதே; ஏனெனில் ஒரு ரோமத்தை வெண்மை அல்லது கருமையாக்க உன்னால் ஆகாது.

37. ஆகையால் உங்கள் பேச்சு ஆம், ஆம், இல்லை, இல்லை என்பதாயிருக்கக் கடவது. இவைகளுக்கு மேற்பட்டது தின்மையாலுண்டாகிறது. யாக. 5-12.

38. கண்ணுக்குக் கண்ணும், பல்லுக்குப் பல்லும், என்று சொல்லக் கேட்டிருக்கிறீர்களே. யாத்திரா. 21-24.

39. நானோ தின்மைக்கு எதிர்த்து நிற்கவேண்டாமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகையால் ஒருவன் உன்னை வலதுகன்னத்தில் அறைந்தால் அவனுக்கு மறுகன்னத்தையுந் திருப்பிக்கொடு. லூக். 6-29.

40. உன்னுடன் வழக்காடி உன் அங்கியைப் பறிக்கவிரும்புகிறவனுக்கு உன் போர்வையையும் விட்டுவிடு. 1 கொ. 6-7.

41. எவனாவது ஆயிரம் அடித்தூரம் வர உன்னைப் பலவந்தஞ் செய்தால், அவனோடு வேறே ஈராயிரம் அடித்தூரம் போவாயாக.

42. உன்னிடத்தில் கேட்கிறவனுக்குக் கொடு. உன்னிடத்தில் கடன் வாங்க விரும்புகிறவனுக்கு முகத்தைத் திருப்பாதே. உபாக. 15-7.

43. உன் பிறனைச் சிநேகித்து உன் சத்துராதியைப் பகைப்பாயாகவென்று சொல்லப்பட்டதாகக் கேட்டிருக்கிறீர்களே. லேவி. 19-18.

44. நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்: உங்கள் சத்துராதிகளைச் சிநேகியுங்கள். உங்களைப்பகைக்கிறவர்களுக்கு நன்மைசெய்யுங்கள். உங்களை உபத்திரவப் படுத்துகிறவர்களுக்காகவும், உங்கள்பேரில் அபாண்டஞ்சொல்லுகிறவர்களுக்காகவும் வேண்டிக்கொள்ளுங்கள். லூக். 6-27; 22-34; உரோ. 12-20; அப். 7-59.

45. இவ்விதமாய்ப் பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவுக்கு (ஏற்ற) பிள்ளைகளாயிருப்பீர்கள். அவர் நல்லோர்மேலும் தீயோர்மேலும் தமது சூரியன் உதிக்கவும், நீதிமான்கள்மேலும் அநீதர்கள்மேலும் மழை வருஷிக்கவுஞ் செய்கிறார்.

46. ஏனெனில் உங்களை நேசிக்கிறவர்களையே நீங்கள் நேசிப்பீர்களானால் உங்களுக்கு என்ன சம்பாவனை கிடைக்கும்? ஆயக்காரரும் அவ்வண்ணஞ் செய்கிறதில்லையோ?

47. உங்கள் சகோதரருக்கு மாத்திரம் வந்தனஞ் செய்வீர்களேயாகில் (மற்றவர்களிலும்) அதிகமாய் நீங்கள் செய்கிறதென்ன? அஞ்ஞானிகளும் அப்படிச் செய்கிறதில்லையோ?

48. ஆகையால் பரமண்டலங்களிலேயிருக்கிற உங்கள் பிதா உத்தமராயிருக்கிறதுபோல நீங்களும் உத்தமராயிருங்கள்.

39. இவ்வாக்கியத்தைக்கொண்டு பழிவாங்காமல் நமக்கு பிறரால் வருகிற நிந்தையைப் பொறுமையோடு சகித்துக்கொள்ளவேணுமென்று கர்த்தர் படிப்பிக்கிறாரேயொழிய, ஒரு கன்னத்தில் அடிக்கிறவனுக்கு மறுகன்னத்தைக் காட்டவேணுமென்று கட்டளையிடுகிறதில்லை. அரு. 18. அதி. 22. 23. வச. காண்க.

46. ஆயக்காரர்:—புப்ளிக்கானி என்னப்பட்ட இந்த ஆயக்காரர், சனங்களை அநியாயமாய் நெருக்கிடைபண்ணி அவர்களுடைய சொத்துக்களைப் பிடுங்கித் தின்றதினால், அவர்களுக்குக் கெட்டபேர் உண்டாயிருந்தது.

## 6-ம் அதிகாரம்.

*யேசுநாதர் மலையின்மீது பண்ணின பிரசங்கத்தின் தொடர்ச்சி. பிட்சை, செபம், தபமுதலியவைகளை நடத்தவேண்டிய விதமும், பிறருடைய குற்றத்தை மன்னித்துப் பண ஆசையையும் மிஞ்சின கவலையையும் விலக்கவேண்டுமென்பதும்.*

1. நீங்கள் மனிதரால் காணப்படும்பொருட்டு அவர்களுக்குமுன்பாக உங்கள் தர்மக் கிரியைகளைச் செய்யாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்; இல்லாவிட்டால் பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதாவினிடத்தில் சம்பாவனை அடையமாட்டீர்கள்.

2. ஆகையால் நீ தர்மஞ் செய்யும்போது, கள்ள ஞானிகள் மனிதரால் சங்கிக்கப்படத்தக்கதாக ஜெப ஆலயங்களிலும் தெருவீதிகளிலும் செய்கிறதுபோல, உனக்கு முன்பாக எக்காளம் ஊதப்பண்ணாதே. அவர்கள் தங்கள் சம்பாவனையை அடைந்துகொண்டார்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

3. நீ தர்மஞ் செய்யும்போது, உன் தர்மம் இரகசியமாயிருக்கும்படி உன் வலதுகை செய்வதை இடதுகை அறியாதிருக்கக்கடவது.

4. அப்போது அந்தரங்கத்தில் காண்கிற உன்பிதா உனக்குச் சம்பாவனை அளிப்பார்.

5. அவ்வண்ணமே நீங்கள் ஜெபம் செய்யும்போது மனிதரால் காணப்படும் பொருட்டு ஜெப ஆலயங்களிலும், சந்திக்கோடிகளிலும் நின்றுகொண்டு ஜெபம் பண்ணப்பிரியப்படுகிற கள்ள ஞானிகளைப்போ லிருக்கவேண்டாம். அவர்கள் தங்கள் சம்பாவனையை அடைந்துகொண்டார்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்

6. நீயோவென்றால் ஜெபம் செய்யும்போது உன் அறைக்குள் பிரவேசித்துக் கதவைச்சாத்தி அந்தரங்கத்தில் உன் பிதாவைப் பிரார்த்தித்துக்கொள். அப்போது அந்தரங்கத்தில் காண்கிற உன் பிதா உனக்குப் பலன் அளிப்பார்.

7. அல்லாமலும் நீங்கள் ஜெபம் செய்யும்போது அஞ்ஞானிகளைப் போல வளர்த்துச் சொல்லாதேயுங்கள். ஏனென்றால் தங்களுடைய சொல் மிகுதியினால் தங்கள் மன்றாட்டுக் கேட்டருளப்படுமென்று நினைக்கிறார்கள்.

8. ஆகையால் நீங்கள் அவர்களுக்கு ஒத்தவர்களாகவேண்டாம். ஏனெனில் நீங்கள் உங்கள் பிதாவைநோக்கி வேண்டிக்கொள்ளுமுன்னமே அவர் உங்களுக்கு வேண்டியது இன்னதென்று அறிந்திருக்கிறார்.

9. ஆதலால் நீங்கள் இவ்வாறு பிரார்த்திப்பீர்களாக: பரமண்டலங்களிலேயிருக்கிற எங்கள் பிதாவே, உம்முடைய நாமம் அர்ச்சிக்கப்படுவதாக.

10. உம்முடைய இராச்சியம் வருக, உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுமாப்போல பூமியிலேயுஞ் செய்யப்படுவதாக.

11. சீவாதாரத்துக்குவேண்டிய எங்கள் அப்பத்தை எங்களுக்கு இன்று தாரும்.

---

6. **அந்தரங்கத்தில்:**—நாம் செய்கிற நற்கிரியைகளில் சிலவற்றை மனிதர் கண்முன்பாகத்தான் செய்யும்படியாய் வரும். ஆனால் அவைகளை மனிதர் புகழ்ச்சிக்காகச் செய்யாமல் சர்வேசுரனுக்குப் பிரியப்படவேணுமென்கிற கருத்தோடே செய்யவேண்டியது.

11. **சீவாதாரத்துக்குவேண்டிய எங்கள் அப்பம்:**—என்பதனால் சரீர பிழைப்புக்கு அவசியமான அன்னவஸ்திரமுமல்லாமல் ஆத்தும சீவியத்துக்கு அவசியமான வரப்பிரசாதமும் குறிக்கப்பட்டிருக்கிறது. இவ்விடத்தில் சீவனத்துக்கு வேண்டிய அப்பமென்றும், அர்ச். லூக்கா சுவிசேஷத்தில் அன்றன்றுள்ள எங்களப்பமென்றும் சொல்லியிருந்தும் இரண்டுக்கும் ஒரே அர்த்தந்தான்.

12. எங்கள் கடன்காரருக்கு நாங்கள் பொறுக்குமாப்போல எங்கள் கடன்களை எங்களுக்குப் பொறும்.

13. எங்களைச் சோதனையிலே பிரவேசிப்பியாதேயும், ஆனால் தின்மையிலேநின்று எங்களை இரட்சித்துக்கொள்ளும். ஆமென்.

14. ஏனெனில் நீங்கள் மனிதருடைய குற்றங்களை அவர்களுக்கு மன்னிப்பீர்களேயாகில், உங்களுக்கும் உங்கள் பரம பிதா உங்கள் குற்றங்களை மன்னிப்பார். மத். 18-35; மாற். 11-25.

15. ஆனால் நீங்கள் மனிதருக்கு மன்னியாதிருந்தால், உங்கள் பிதாவும் உங்கள் பாவங்களை உங்களுக்கு மன்னிக்கமாட்டார்.

16. அன்றியும் நீங்கள் உபவாசமாயிருக்கும்போது கள்ள ஞானிகளைப்போல வாடினமுகமாய் இருக்கவேண்டாம். ஏனெனில் அவர்கள் உபவாசமாயிருக்கிறதாக மனிதருக்குத் தோன்றும்படி தங்கள் முகங்களைச் சுண்டிக்கொள்ளுகிறார்கள். அவர்கள் தங்கள் சம்பாவனையை அடைந்துகொண்டார்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

17. நீயோ உபவாசமாயிருக்கும்போது உன் சிரசைத் தைலத்தால் பூசு, உன் முகத்தையும் கழுவு.

18. உபவாசமாய் இருக்கிறாயென்று மனிதர்களுக்குத் தோன்றாமல் அந்தரங்கத்திலிருக்கிற உன் பிதாவுக்குத் தோன்றும்படி (அப்படிச் செய்). அப்போது அந்தரங்கத்தில் காண்கிற உன் பிதா உனக்குச் சம்பாவனையளிப்பார்.

19. பூலோகத்தில் உங்களுக்குப் பொக்கிஷங்களைச் சேர்த்துவைக்கவேண்டாம். இங்கே அந்தும் துருவும் அரிக்கின்றது, திருடரும் கன்னமிட்டுத் திருடுகிறார்கள்.

20. ஆனால் பரலோகத்தில் உங்கள் பொக்கிஷங்களைச் சேர்த்துவையுங்கள். அங்கே அந்தும் துருவும் அரிக்கிறதுமில்லை. திருடர் அங்கே கன்னமிட்டுத் திருடுகிறதுமில்லை. லூக். 12-33; 1 திமோ. 6-19.

21. உன் பொக்கிஷம், எங்கேயிருக்கிறதோ அங்கேயே உன் இருதயமும் இருக்கின்றது.

22. உன் கண்ணானது உன் சரீரத்தின் தீபமாயிருக்கின்றது. உன் கண் இயல்பானதாயிருந்தால் உன் சரீரமுழுதும் பிரகாசமுள்ளதாயிருக்கும். லூக். 11-34.

23. ஆனால் உன் கண் கெடுதியாயிருந்தால் உன் சரீரமுழுதும் இருளுள்ளதாயிருக்கும். ஆகையால் உன்னிலுள்ள ஒளியே இருளாயிருந்தால் இருள்தான் எவ்வளவோ மிகுதியாயிருக்கும்.

13. **சோதனையிலே பிரவேசிப்பியாதேயும்** :— அதாவது சோதனை வராமல் எங்களைக் காப்பாற்றியருளும். அப்படி வந்தாலும் அதற்குள் அகப்பட்டுப் பாவத்தில் விழாதபடி எங்களைத் தற்காத்தருளுமென்றர்த்தமாம்.

19. **பொக்கிஷங்களைச் சேர்த்துவைக்கவேண்டாம்** :— என்பதினால் இலௌகீக பொருட்களின்மேல் மிதமிஞ்சின பற்றுதல் விலக்கப்பட்டிருக்கிறது. (21-ம் வசனம் காண்க.) ஏனெனில் மிதமிஞ்சின பற்றுதலால் இருதயஞ் சர்வேசுரனை மறந்து இந்த உலக வாழ்வை மாத்திரம் அபேட்சிக்கும்.

22. **கண் இயல்பானதாயிருந்தால்** :— அதாவது நமது உட்கருத்து நேர்மையானதாயிருந்தால், தேவ சித்தத்தை மாத்திரம் நோக்கினால் நமது செய்கைகள் கிரமமுள்ளவைகளாயிருக்கும்.

24. எவனாலும் இரண்டு எஜமான்களுக்கு ஊழியஞ் செய்யக்கூடாது. ஏனெனில் ஒருவனைப் பகைத்து, மற்றொருவனை நேசிப்பான், அல்லது ஒருவனைச் சார்ந்துகொண்டு மற்றொருவனைப் புறக்கணிப்பான். சர்வேசுரனுக்குந் திரவியத்திற்கும் ஊழியஞ்செய்ய உங்களால் கூடாது. லூக். 16-13.

25. ஆதலால் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: உங்கள் உயிர் பிழைக்க எதை உண்போமென்றும், உங்கள் உடலை மூட எதை உடுப்போமென்றும் ஏக்கமாயிராதேயுங்கள். உணவைவிட உயிரும் உடையைவிட உடலும் மேன்மையானதல்லவோ? லூக். 12-22; பிலிப். 4-6; 1 திமோ. 6-7; 1. இராய. 5-7.

26. ஆகாயப் பட்சிகளை நோக்கிப் பாருங்கள்; அவைகள் விதைக்கிறதுமில்லை, அறுக்கிறதுமில்லை, களஞ்சியங்களில் குவிக்கிறதுமில்லை. ஆகிலும் அவைகளை உங்கள் பரமபிதா போஷித்துவருகிறாரே. அவைகளிலும் நீங்கள் மிகவும் மேன்மையுள்ளவர்கள் அல்லவோ?

27. மேலும் யோசித்துக் கவலைப்படுவதினால் தன் உயரத்துக்கு ஒரு முழம் கூட்ட உங்களில் எவனாலே கூடும்?

28. ஆகையால் உடைக்காக நீங்கள் கவலைப்படுவானேன்? வயல் வெளிகளிலுள்ள லீலிப் புஷ்பங்கள் எப்படி வளருகிறதென்று கவனித்துப்பாருங்கள். அவைகள் உழைக்கிறதுமில்லை, நூற்கிறதுமில்லை.

29. ஆயினும் சலோமோன் முதலாய்த் தனது சர்வ மகிமையிலும் அவைகளில் ஒன்றைப்போலெங்கிலும் உடைபூண்டதில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

30. ஆகையால் இன்றைக்கு இருந்து நாளைக்கு அடுப்பிலே போடப்படும் காட்டுப் புல்லுக்குச் சர்வேசுரன் இத்தன்மையாய் உடை உடுத்துவித்தால், அற்ப விசுவாசமுள்ளவர்களே, உங்களுக்கு எவ்வளவோ அதிகமாய் உடை உடுத்துவிப்பார்?

31. ஆதலால் என்னத்தை உண்போம் அல்லது என்னத்தைக் குடிப்போம் என்று கவலைப்படாதிருங்கள்.

32. ஏனெனில் இவைகளெல்லாவற்றையும் அஞ்ஞானிகளே தேடுகிறார்கள். உங்கள் பிதாவானவரோவென்னில் இவைகளெல்லாம் உங்களுக்கு வேண்டியவைகளென்று அறிவார்.

33. ஆகையால் சர்வேசுரனுடைய இராச்சியத்தையும் அவருடைய நீதியையும் முந்த முந்தத் தேடுங்கள். அப்போது இவைகள் எல்லாம் உங்களுக்குக் கூட்டிக் கொடுக்கப்படும்.

34. ஆகையால் நாளையைக்குறித்துக் கவலைப்படாதிருங்கள், ஏனெனில் நாளையத்தினம் தன்மேல் கவலைகொண்டிருக்கும். அன்றாடக் கவலையே அன்றன்றைக்குப் போதும்.

24. **திரவியத்துக்கும்**:—என்னும் இந்த வார்த்தை மூலபாஷையில் மாம்மோன் என்றிருக்கிறது. அதற்குச் சீரிய பாஷையில் திரவியமென்றர்த்தமாம்.

34. **கவலைப்படாதிருங்கள்**:— இவ்விடத்தில் ஆத்துமத்துக்குக் கெடுதியாக, உலககாரியங்களின்மேல் கவலையாகாதென்று சொல்லப்படுகிறது.

## 7-ம். அதிகாரம்.

யேசுநாதர் மலைமீது பண்ணின பிரசங்கத்தின் முடிவு. மற்றவர்களை மதிக்காமல் எண்ணப்படாதென்பதும்; பரிசுத்தமானவைகளை நாய்களுக்கு போடலாகாதென்பதும்; ஜெபத்தில் நம்பிக்கையும் வேதப் பிரமாணத்தின் தொகுப்பும்; ஒடுக்கமான வாசலும்; கனிகளைக்கொண்டு விருக்ஷத்தை அறியவேண்டுமென்பதும்; பாறையின்மேல் அல்லது மணலின்மேல் கட்டப்பட்ட வீடும்.

1. நீங்கள் தீர்க்கப்படாதபடி ஒருவருக்கும் நீங்கள் தீர்ப்பிடாதேயுங்கள். லூக். 6-37; உரோ. 2-1.

2. ஏனெனில் நீங்கள் மற்றவர்களை எவ்வாறு தீர்ப்பீர்களோ, அவ்வாறே நீங்களும் தீர்க்கப்படுவீர்கள். எந்த அளவில் அளப்பீர்களோ, அதே அளவில் உங்களுக்கும் அளக்கப்படும். மாற். 4-24.

3. நீ உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தைப் பாராமல், உன் சகோதரன் கண்ணிலிருக்கிற துரும்பைப் பார்க்கிறதென்ன?

4. அல்லது நீ எப்படி உன் சகோதரனைப்பார்த்து: பொறு, உன் கண்ணிலிருக்கிற துரும்பை எடுத்துவிடுகிறேன் என்கிறாய்? இதோ உன் கண்ணில் உத்திரம் இருக்கிறதே.

5. கள்ள ஞானியே, முந்தமுந்த உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தைத் தள்ளிவிடு; அதின்பின் உன் சகோதரன் கண்ணிலிருக்கிற துரும்பை எடுக்கப் பார்ப்பாய்.

6. பரிசுத்தமானதை நாய்களுக்குப் போடாதேயுங்கள்; உங்கள் முத்துக்களையும் பன்றிகள் முன் எறியாதேயுங்கள். ஏனெனில் ஒருவேளை அவைகள் தங்கள் கால்களால் அவைகளை மிதித்துப் பின்னும் திரும்பிக்கொண்டு உங்களைப் பீறிப்போடலாம்.

7. கேளுங்கள், உங்களுக்குக் கொடுக்கப்படும்; தேடுங்கள் கண்டடைவீர்கள்; தட்டுங்கள் உங்களுக்குத் திறக்கப்படும். மத். 21-22; மாற். 11-24; லூக். 11-9.

8. ஏனெனில் கேட்கிற எவனும் பெற்றுக்கொள்ளுகிறான். தேடுகிறவனுங் கண்டடைகிறான். தட்டுகிறவனுக்கும் திறக்கப்படும். அரு. 14-3; யா. 1-6.

9. அன்றியும் உங்களுக்குள் எந்த மனிதனானாலும் தன்மகன் அப்பத்தைக் கேட்டால், அவனுக்குக் கல்லை எடுத்து நீட்டுவானோ? லூக். 11-11.

10. அல்லது மச்சத்தைக்கேட்டால், அவனுக்குச் சர்ப்பத்தை எடுத்து நீட்டுவானோ?

11. ஆகையால் நீங்கள் தீயோராயினும் உங்கள் பிள்ளைகளுக்கு நற்கொடைகளைக் கொடுக்க அறிந்திருக்கும்போது, பரமண்டலங்களிலிருக்கிற உங்கள் பிதாவானவர் தம்மை வேண்டிக்கொள்ளுகிறவர்களுக்கு எவ்வளவோ அதிகமாய் நன்மைகளைத் தந்தருள்வார்!

12. ஆகையால் மனுஷர் உங்களுக்கு எதெதைச் செய்ய வேணுமென்று விரும்புகிறீர்களோ, அதையெல்லாம்

1. சர்வேசுரனால் நாம் தீர்வையிடப்படாதபடிக்கு மற்றவர்கள்மேல் நியாயமின்றிக் குற்றம் நினைக்கவும், சாட்டவுமொண்ணாதென்று திவ்விய கர்த்தர் இவ்விடத்தில் படிப்பிக்கிறார். வேத புஸ்தகத்தில் தீர்ப்பிடுகிறதென்பது பிறர்மேல் மனதில் குறைவான எண்ணங்கொள்ளுகிறதென்று அர்த்தமாம். இந்த அர்த்தத்தில் அநேகாநேக இடங்களில் இவ்வார்த்தைப் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது.

6. **நாய்களுக்குப் போடாதேயுங்கள்:**—அப்போஸ்தலர்கள் ஆள் இடம் காலமறிந்து வேதசத்தியங்களைப் போதிக்கவேண்டுமென்று இவ்விடத்தில் யேசுநாதர் படிப்பிக்கிறார்.

11. **நன்மைகளைத் தந்தருளுவார்:**—உலக நன்மைகள் அநேக சமயங்களில் அநேகருக்குச் சர்ப்பம்போலும் கல்லுப்போலும் கெடுதியாயிருப்பதால், அவைகளை அவர்கள் கேட்கும்போது ஆண்டவர் கொடாமல் அவர்களுக்கு மெய்யாகவே நன்மையானதைக் கொடுப்பார்.

நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள். ஏனெனில் வேதப்பிரமாணமும் தீர்க்கதரிசனங்களுமிதுவே. லூக். 6-31; தோபி. 4-16.

13. நெருக்கமான வாசல் வழியாய் உட்பிரவேசியுங்கள். ஏனென்றால் கேட்டுக்குச் செல்லும் வாசல் அகன்றதும் அதன் வழி விசாலமுமாயிருக்கின்றது அதில் பிரவேசிக்கிறவர்களும் அநேகர். லூக். 13-24.

14. ஜீவியத்துக்குச்செல்லும் வாசல் எவ்வளவோ நெருக்கமும் அதன் வழி எவ்வளவோ ஒடுக்கமுமா யிருக்கின்றது! அதைக் கண்டுபிடிக்கிறவர்களும் சொற்பப்பேர்.

15. ஆட்டுத்தோலைப் போர்த்துக்கொண்டு உள்ளத்திலே பறிக்கிற ஓநாய்களாய் உங்களிடத்தில்வருகிற கள்ளத்தீர்க்கதரிசிகள் மட்டில் எச்சரிக்கையாயிருங்கள்.

16. அவர்களுடைய கனிகளைக்கொண்டே அவர்களை அறிவீர்கள். முட்செடிகளில் திராட்சப்பழங்களையாவது முட்பூண்டுகளில் அத்திப்பழங்களையாவது பறிப்பாருண்டோ?

17. அவ்வாறே நல்ல மரமெல்லாம் நல்ல கனிகளைக் கொடுக்கும். கெட்ட மரமோ கெட்ட கனிகளைக்கொடுக்கும்.

18. நல்ல மரம் கெட்ட கனிகளைக் கொடுக்கமாட்டாது; கெட்ட மரம் நல்ல கனிகளைக்கொடுக்கமாட்டாது.

19. நற்கனிகொடாத மரமெல்லாம் வெட்டுண்டு அக்கினியிலே போடப்படும். மத். 3-10.

20. ஆதலால் அவர்களுடைய கனிகளைக்கொண்டே அவர்களை அறிவீர்கள்.

21. என்னை நோக்கி ஆண்டவரே, ஆண்டவரே என்று சொல்லுகிறவர்கள் எல்லாரும்மோட்சஇராச்சியத்திற்குள் பிரவேசிப்பதில்லை. ஆனால் பரமண்டலங்களிலிருக்கிற என் பிதாவின் சித்தத்தை நிறைவேற்றுகிறவனே மோட்ச இராச்சியத்தில் பிரவேசிப்பான். மத். 25-11; லூக். 6-46.

22. அந்நாளில் அநேகர் என்னைநோக்கி: ஆண்டவரே! ஆண்டவரே! உமது நாமத்தினால் தீர்க்கதரிசனஞ் சொன்னோம். உமது நாமத்தினால் பேய்களை ஓட்டினோம். உமது நாமத்தினால் அநேக அற்புதங்களையுஞ் செய்தோமல்லோ? என்பார்கள். அப். 19-13.

23. அப்போது நான் அவர்களை நோக்கி: உங்களை ஒருபோதும் அறியேன்; பாவாக்கிரமங்களைச் செய்வோரே, என்னைவிட்டு அகன்றுபோங்களென்று பிரசித்தமாய்ச் சொல்லுவேன். மத். 25-41; லூக். 13-27.

24. ஆதலால் என்னுடைய இவ் வார்த்தைகளைக் கேட்டு, இவைகளை அனுசரிக்கிற எவனும் கற்பாறையின் மேல தன்வீட்டைக்கட்டி எழுப்பின விவேகமுள்ள மனுஷனுக்கு ஒப்பாவான். லூக். 6-48; உரோ. 2-13; யாக. 1-22.

25. மழையும் பெய்து, நதிகளும் புரண்டு, காற்றுகளும் அடித்து அவ்வீட்டின்மேல் வந்து மோதியும், அது விழவில்லை. ஏனெனில் அதின் அஸ்திவாரம் கற்பாறையின்மேல் ஊன்றியிருந்தது.

23. பாவாக்கிரமஞ் செய்வோரே:—பாவிகள் எப்படி புதுமை செய்திருக்கக் கூடுமென்றால், யூதாசைப்போல துவக்கத்தில் நல்லவர்களாயிருந்து அதிசயங்களைச் செய்து பின்னால் கெட்டுப்போயிருக்கலாம். அல்லது புதுமைக்கு ஆளாயிருந்தவர்களுடைய விசுவாசத்தினாலே பாவிகள் ஒரு சமயத்தில் ஒரு அற்புதத்தைச் செய்யலாம். அப்படியே விசுவாசமில்லாத ஒரு அஞ்ஞானி விசுவாசமுள்ள மற்றொரு அஞ்ஞானிக்கு மரண அவஸ்தையில் கொடுத்த ஞானஸ்நானம் அவஸ்தைக்காரன் பிழைக்கக் காரணமாயிருக்கலாம்.

26. ஆனால் என்னுடைய இவ்வார்த்தைகளைக்கேட்டு இவைகளை அனுசரியாத எவனும், மணலின்மேல் தன்வீட்டைக் கட்டின மதியீனனுக்கு ஒப்பாயிருப்பான்.

27. மழையும் பெய்து, நதிகளும் புரண்டு, காற்றுகளுமடித்து அவ்வீட்டின்மேல் வந்து மோதவே அது விழுந்தது, அதன் சேதமும் பெரிதாயிற்றென்று திருவுளம் பற்றினார்.

28. யேசுநாதர் இவ்வாக்கியங்களை வசனித்து முடிக்கவே, ஜனங்கள் அவருடைய போதகத்தின்மேல் ஆச்சரியப்பட்டார்கள்.

29. ஏனெனில் அவர்களுடைய வேதபாரகரையும் பரிசேயரையும் போல் அவர் போதியாமல் அதிகாரமுடையவராக அவர்களுக்கு உபதேசித்து வந்தார். மாற். 1-22; லூக். 4-32.

## 8-ம். அதிகாரம்.

*குஷ்டரோகியும், செந்தூரியனாகிய சேர்வைக்காரனுடைய ஊழியனும், பேய்பிடித்தவர்களுஞ்சொஸ்தமானதும், கடலின் கொந்தளிப்பு அடங்கினதும், துரத்தப்பட்ட பேய்கள் பன்றிகளுக்குள் பிரவேசித்ததும்.*

1. யேசுநாதர் மலையில் நின்று இறங்கினபோது திரளான ஜனங்கள் அவரைப் பின்சென்று போனார்கள்.

2. அப்போது இதோ ஒரு குஷ்டரோகி வந்து, அவரை நமஸ்கரித்து: ஆண்டவரே, தேவரீருக்குச் சித்தமானால் என்னைச் சுத்தமாக்க உம்மால் கூடுமென்றான். மாற். 1-40; லூக். 5-12.

3. அப்போது யேசுநாதர் தமது கரத்தை நீட்டி அவனைத்தொட்டு: சித்தமாயிருக்கிறேன். சுத்தமாகு என்றார். உடனே அவனுடைய குஷ்டரோகஞ் சுத்தமாயிற்று.

4. யேசுநாதர் அவனைநோக்கி: இதை நீ ஒருவருக்குஞ் சொல்லாதபடி பார்த்துக்கொள். ஆயினும் போய், குருப்பிரசாதிக்கு உன்னைக்காண்பித்து அவர்களுக்கு அத்தாட்சியாக மோயீசன் கட்டளையிட்ட காணிக்கையைச் செலுத்து என்றார். லேவி. 14-12; 14-21.

5. பின்பு அவர் கப்பர்னவும் ஊரில் பிரவேசித்தபோது செந்தூரியன் ஒருவன் அவரிடத்திலே வந்து அவரை மன்றாடி: லூக். 7-1.

6. ஆண்டவரே! என் ஊழியன் திமிர்வாதமாய் வீட்டிலே கிடந்து அகோர வாதைப்படுகிறான் என்றான்.

7. அதற்கு யேசுநாதர்: நான் வந்து அவனைக் குணமாக்குவேன் என்றார்.

8. அப்பொழுது செந்தூரியன் மறுமொழியாக: ஆண்டவரே! தேவரீர் என் இல்லத்தில் பிரவேசிக்க அடியேன் பேறு பெற்றவனல்ல. ஆனால்

4. குஷ்டரோகிகள் ஆண்டவரிடத்தில் வந்தபோது அவர்களைக் குருமார்களிடத்தில் அனுப்பித் தங்களை அவர்களுக்குக் காண்பிக்கவும் மோயிசன் கட்டளையிட்ட காணிக்கையைச் செலுத்தவும் கற்பிக்கிறார். ஏனென்றால் பழைய ஏற்பாட்டில் குஷ்டரோகிகள் மற்றவர்களோடு புழங்காதபடி ஊர்களுக்குப் புறம்பாக்கப்பட்டிருந்ததால், அவர்கள் குணமடைந்திருந்தாலும் குருக்களுடைய அத்தாட்சிப்பத்திரமில்லாமல் ஊருக்குள் புழங்கக்கூடாதென்று விலக்கியிருந்தது. அப்படியே புதிய ஏற்பாட்டிலும் பாவமாகிற ஆத்தும குஷ்டம் நீங்குவதற்கு அத்தாட்சியாக அதிகாரம் பெற்ற குருக்களிடத்தில் பாவியானவன் பாவப்பொறுத்தல் ஆசீர்வாதம் பெற்று அபராதக்கடனுந் தீர்க்கவேண்டியது.

5. செந்தூரியன் என்பது ரோமானருக்குள் நூறு போர்ச்சேவகருக்குத் தலைவனென்று அர்த்தமாம்.

தேவரீர் ஒருவார்த்தைமாத்திரஞ் சொல்லியருளும், என் ஊழியன் சொஸ்தமடைவான். லூக். 7-6.

9. ஏனெனில் அடியேனும் அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்ட மனிதனாயிருக்கிறேன். எனக்குக் கீழ்ப்பட்டிருக்கிற போர்ச்சேவகரும் உண்டு. (அவர்களில்) ஒருவனை நோக்கி நான் போவெனப் போகிறான்; வேறொருவனை நோக்கி: வாவென வருகிறான்; என் ஊழியனையும் இதைச் செய்யென செய்கிறான் என்றான்.

10. யேசுநாதர் இதைக்கேட்டு அதிசயித்து, தமது பிறகே வருகிறவர்களை நோக்கி: நான் இஸ்ராயேலரிடத்தில் இம்மாத்திரம் விசுவாசத்தைக் காணவில்லையென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

11. ஆகையால் அநேகர் கிழக்கிலும் மேற்கிலுமிருந்து வந்து, பரலோக இராச்சியத்தில், அபிரகாம், ஈசாக்கு, யாக்கோப்பு என்பவர்களோடுகூடப் பந்தியில் அமருவார்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

12. இராச்சியத்தின்மக்களோ புறம்பான இருளிலே தள்ளப்படுவார்கள்; அங்கே அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்குமென்று திருவுளம்பற்றினார்.

13. பின்னும் யேசுநாதர் செந்தூரியனை நோக்கி: நீ போகலாம். நீ விசுவசித்தபடியே உனக்கு ஆகக்கடவது என்றார். அந்நேரமே அந்த ஊழியன் சௌக்கியமடைந்தான்.

14. மேலும் யேசுநாதர் இராயப்பருடைய வீட்டுக்கு வந்தபோது, அவருடைய மாமியாள் சுரங்காய்ந்து படுத்திருக்கிறதைக் கண்டு,

15. அவளுடைய கரத்தைத் தொட்டார். உடனே காய்ச்சல் அவளைவிட்டு விட, அவள் எழுந்து அவர்களுக்குப் பணிவிடை செய்தாள். மாற். 1-31; லூக். 4-38.

16. பின்னும் சாயங்காலமானபோது பேய்பிடித்திருந்த அநேகரை அவர் முன்பாகக் கொண்டுவந்தார்கள். அவர் தமது வார்த்தையினால் அந்தப் பேய்களைத்துரத்தி, நோயுள்ள யாவரையும் சொஸ்தமாக்கினார். மாற். 1-32.

17. இவ்விதமே, அவர் நம்முடைய பலவீனங்களை ஏற்றுக்கொண்டு, நமது பிணிகளைச் சுமந்துகொண்டாரென்று இசையாஸ் தீர்க்கதரிசியால் வசனிக்கப்பட்ட வாக்கியம் நிறைவேறும்படியாயிற்று.

18. பின்பு யேசுநாதர் திரளான ஜனங்கள் தம்மைச் சூழ்ந்திருக்கிறதைக்கண்டு, கடலைக்கடந்து அக்கரைக்குப் போகக் கட்டளையிட்டார்.

19. அப்போது வேதபாரகன் ஒருவன் அவரிடம் அணுகி: குருவே நீர் எங்கே போனாலும் உம்மைப் பின்செல்லுவேன் என்றான்.

11-12. இவ்விரு வசனங்களாலும் அஞ்ஞானிகள் சத்திய வேதத்தில் சேர்வார்களென்றும், யூதசாதியார் சத்தியவேதத்தில் சேராமல் மூர்க்கராகித் தள்ளுண்டு போவார்களென்றும் அர்த்தமாகும். **இராச்சியத்தின் மக்கள்** யூதஜாதியாரென்று அறிக. ஏனெனில் அவர்கள் சத்திய திருச்சபையாகிய இராச்சியத்திலிருக்க ஆதியிலே குறிக்கப்பட்டவர்களாமே.

14. அர்ச். இராயப்பரும் இன்னுஞ் சில அப்போஸ்தலர்களும் யேசுநாதரால் அழைக்கப்படுமுன் கலியாணம் செய்திருந்தார்களென்பது மெய்யே. ஆனால் அப்போஸ்தலராக அழைக்கப்பட்டது முதல் சமுசார வாழ்க்கையை விட்டுவிட்டு யேசுநாதர் சுவாமியைப் பின்சென்றார்கள். (மத். 18-27). ஆகையால் அப்போஸ்தலர்கள் மனைவிகளோடே அங்கங்கே சுற்றிப்போய்ச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்துவந்தார்களென்று பதிதமார்க்கத்தார் சொல்லுவது சரியல்ல.

20. யேசுநாதர் அவனை நோக்கி: நரிகளுக்கு வளைகளும், ஆகாயப் பறவைகளுக்குக் கூடுகளுமுண்டு; மனுமகனுக்கோ தலைசாய்க்க இடமில்லை என்று திருவுளம்பற்றினார். லூக். 9-58.

21. அவருடைய சீஷர்களில் மற்றொருவன் அவரை நோக்கி: ஆண்டவரே, நான் முந்தமுந்தப் போய், என் தந்தையை அடக்கஞ்செய்ய உத்தரவு தந்தருளும் என்றான்.

22. அதற்கு யேசுநாதர்: மரித்தவர்கள் தங்கள் மரித்தவர்களை அடக்கஞ்செய்ய விட்டுவிடு; நீ நம்மைப் பின்செல் என்றார்.

23. பின்பு அவர் ஓர் படகிலேறவே, அவருடைய சீஷர்களும் அவரோடே கூடப்போனார்கள். மாற். 4-36; லூக். 8-22.

24. அப்போது திடீரென, படகு அலைகளால் மூழ்கிப் போகும்படியான விதமாய்க் கடலிலே பெரும் புசல் உண்டாயிற்று. அவரோ நித்திரை செய்து கொண்டிருந்தார்.

25. ஆகையால் அவருடைய சீஷர்கள் அவரிடத்தில் அணுகி அவரை எழுப்பி: ஆண்டவரே! எங்களை இரட்சியும், செத்தோமென்றார்கள்.

26. யேசுநாதர் அவர்களைப்பார்த்து: அற்ப விசுவாசமுள்ளவர்களே, என் பயப்படுகிறீர்கள் என்றுசொல்லி, உடனே எழுந்து, காற்றையுங் கடலையும் அதட்டவே, மகா அமரிக்கை உண்டாயிற்று.

27. அங்கிருந்த மனிதர் பிரமித்து: இவர் எப்பேர்ப்பட்டவர்! காற்றும், கடலும் இவருக்கு அமைகிறதே என்றார்கள்.

28. பின்னும் அவர்கள் கடலைக்கடந்து ஜெராசெனியருடைய தேசத்தின் கரையில் இறங்கினபோது, பேய்பிடித்திருந்த இரண்டு மனிதர் கல்லறைகளிலிருந்து புறப்பட்டு அவருக்கு எதிராக ஓடிவந்தார்கள். அவர்கள் மகா மகாக் கொடியராயிருந்தபடியால் அவ்வழியாக ஒருவனும் போகக்கூடாததாயிருந்தது.

29. அவர்கள்வந்து பேரிரைச்சலிட்டு: யேசுவே, சர்வேசுரனுடைய குமாரனே! உமக்கும் எங்களுக்கும் என்ன? காலம் வருமுன்னே எங்களை வதைப்பதற்கு இங்கே வந்தீரோ? என்றார்கள்.

30. அப்படி யிருக்க அவர்களுக்கு அப்பால் அவ்வளவு தூரமின்றி அநேகம் பன்றிகள் கூட்டமாய் மேய்ந்து கொண்டிருந்தன. மாற். 5-11; 8-32.

31. அப்பொழுது பேய்கள் அவரை நோக்கி: நீர் இவ்விடத்திலிருந்து எங்களைத் துரத்தினால், இந்தப் பன்றிக் கூட்டத்தில் எங்களை அனுப்பிவிடுமென்று கெஞ்சிக்கேட்க,

32. அவர்: போங்கள் என்று அவைகளுக்குச் சொன்னார். உடனே அவைகள் புறப்பட்டு அந்தப்பன்றிகளுக்குள் நுழையவே, அந்தக் கூட்டமெல்லாம் மிகுந்த வேகத்தோடு கடலிலே தலைகீழாய்ப்பாய்ந்து ஜலத்தில் மடிந்தது.

---

20. **மனுமகன்:** யேசுநாதர்சுவாமி மெய்யாகவே மனுஷ சுபாவத்தை யெடுத்தாரென்று இதனால் தெளிவாகிறது. இதினிமித்தமே பல இடங்களில் தம்மை மனுமகனென்று யேசுநாதர்சுவாமி சொல்லுகிறார்.

29. **காலம் வருமுன்னே:**— அதாவது நடுத்தீர்வையின் காலம் வருமுன்னே. (மத். 25-41).

33. அவைகளை மேய்த்தவர்களோ பயந்தோடிப்போய், பட்டணத்தில் வந்து சகல செய்திகளையும் பேய் பிடித்தவர்களுடைய விஷயங்களையும் அறிவித்தார்கள்.

34. ஆதலால் இதோ பட்டணமுழுமையும் யேசுநாதருக்கு எதிராகப்புறப்பட்டு அவரைக்கண்டு தங்கள் எல்லைகளை விட்டு அப்புறம் போகும்படி அவரை மன்றாடினார்கள். மாற். 5-17; லூக். 8-37.

## 9-ம் அதிகாரம்.

*யேசுநாதர் திமிர்வாதக்காரனைச் சொஸ்தமாக்கினதும், அர்ச். மத்தேயுவை அழைத்ததும், பரிசேயருக்கும் ஸ்நாபக அருளப்பருடைய சீஷர்களுக்கும் மறுமொழி சொன்னதும், பெரும்பாடுள்ளவளைச் சொஸ்தமாக்கி மரித்த ஒரு பெண்ணை உயிர்ப்பித்ததும், இரண்டு குருடருக்குப் பார்வை அளித்ததும், பேய்பிடித்த ஊமையைக் குணமாக்கினதும்.*

1. ஆதலால் யேசுநாதர் படகேறி கடலைக் கடந்து தமது பட்டணத்துக்கு வந்தார்.

2. அங்கே படுக்கையில் கிடந்த ஒரு திமிர்வாதக்காரனை அவர் சமுகத்தில் கொண்டு வந்தார்கள். யேசுநாதர் அவர்களுடைய விசுவாசத்தைக் கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி: மகனே, நம்பிக்கையாயிரு, உன் பாவங்கள் உனக்குப் பொறுக்கப்பட்டன என்று திருவுளம்பற்றினார். மாற்.2-3; லூக். 5-18.

3. உடனே வேதபாரகரில் சிலர்: இவர் தேவ தூஷணஞ் சொல்லுகிறாரென்று தங்கள் உள்ளத்தில் சொல்லிக் கொண்டார்கள். மாற். 2-3.

4. யேசுநாதர் அவர்களுடைய நினைவுகளைக் கண்டறிந்து சொன்னதாவது: நீங்கள் என் உங்கள் இருதயங்களிலே தீது நினைக்கிறீர்கள்?

5. உன் பாவங்கள் உனக்குப் பொறுக்கப்பட்டன என்பதோ, அல்லது எழுந்திருந்து நட என்பதோ, எது அதிக எளிது?

6. ஆனால் பூமியிலே பாவங்களைப் பொறுக்க மனுமகனுக்கு வல்லமையுண்டென்று நீங்கள் அறிந்துகொள்ளும்படிக்கு, இதோ திமிர்வாதக்காரனைநோக்கி அவர் சொன்னதாவது: நீ எழுந்திருந்து உன் கட்டிலை எடுத்துக்கொண்டு உன்வீட்டுக்குப்போ என்றார்.

7. என்றவுடனே அவன் எழுந்து தன் வீட்டுக்குப் போனான்.

8. இதைக் கண்ட ஜனங்கள் திகிலடைந்து, மனிதருக்கு இப்படிப்பட்ட வல்லமையைத் தந்தருளின சர்வேசுரனைத் தோத்தரித்தார்கள். மாற். 2-13; லூக். 5-24.

33. அசுசியான பன்றிகளுக்குள்ளே முதலாய்ப் பிரவேசிக்க பசாசுகள் உத்தரவு கேட்டதினாலே பசாசுகள் அவைகளைவிட எவ்வளவோ அசுத்தமான வஸ்துக்களென்றும், அந்த நீசப்பன்றிகளுக்குள்ளே முதலாய் உத்தரவின்றி அவைகள் பிரவேசிக்கக் கூடாததினால், அவைகள் எவ்வளவு பலவீனமுள்ளவைகளென்றும் விளங்குகிறது. ஆகையால் மனிதர்பேரிலே ஆவேசமேறுகிற பசாசுகள் சர்வேசுரனுடைய உத்தரவின் பேரில்தான் ஆவேசமாகின்றதென்பதற்குச் சந்தேகமில்லை. கிறீஸ்துவர்கள் சர்வேசுரனுடைய பிள்ளைகளாயிருக்கிறதினாலே அவர்களைச் சாதாரணமாய்ப் பேய் பிடிக்கமாட்டாது. ஆகையால் பண்டிதரால் தீராத வியாதி பேயால் வந்ததென்று கிறீஸ்துவர்கள் நினைப்பது பெரும் பைத்தியம். சிலர் பேய்மந்திரம் பண்ணுகிறதினாலே பேய்பிடிக்கிறதற்கு அவர்களே காரணமாயிருக்கிறார்கள். பன்றிக்குடையவர்களுக்கு நஷ்டமாகக் கர்த்தர் இந்த உத்தரவு கொடுப்பானேன் என்பதற்குப் பலமுகாந்தரங்களுண்டானாலும், தாம் சகலத்துக்கும் ஆண்டவராயிருக்கிறாரென்று காண்பிக்கவே இவ்விதம் செய்தாரென்கலாம்.

9. யேசுநாதர் அவ்விடத்தை விட்டு அப்புறம் போகையில், ஆயத்துறையில் உட்கார்ந்திருந்த மத்தேயு என்னப் பட்ட ஓர் மனிதனைக் கண்டு, அவனை நோக்கி: என் பிறகே வாவென்றார். அவனும் உடனே எழுந்து அவரைப் பின் சென்றான். மாற். 2-14; லூக். 5-27.

10. பின்னும் சம்பவித்ததேதெனில், யேசுநாதர் அவன் வீட்டில் பந்தியமர்ந் திருக்கையிலே அநேக ஆயக்காரரும் பாவிகளும் வந்து அவரோடும் அவரு டைய சீஷர்களோடுங் கூடப் பந்தி அம ர்ந்தார்கள்.

11. இதைக் கண்ட பரிசேயர் அவ ருடைய சீஷர்களை நோக்கி: உங்கள் குரு ஆயக்காரரோடும் பாவிகளோடும் அசனம் செய்வானேன் என்றார்கள்.

12. யேசுநாதர் அதைக் கேட்டுத் திருவுளம்பற்றினதாவது: சொஸ்தமு ள்ளவர்களுக்கு வைத்தியன் வேண்டுவ தில்லை, நோயாளிகளுக்கே வேண்டும்.

13. பலியையல்ல, தயாளத்தையே விரும்புகிறேன் என்பதின் கருத்தென் னவென்று போய்க் கற்றுக்கொள்ளுங் கள். ஏனெனில் நீதிமான்களையல்ல, பாவிகளையே அழைக்க வந்தேன் என் றார். ஓசே. 6-6; மத்தேயு 12-7; 1 திமோ. 1-15.

14. அப்போது அருளப்பருடைய சீஷர்கள் அவரண்டையில் வந்து: நாங் களும் பரிசேயரும் அடிக்கடி உபவா சித்துக்கொண்டு வருகையிலே உம்மு டைய சீஷர்கள் உபவாசியாமலிருப்பா னேன்? என்று கேட்க, மாற். 2-18; லூக். 5-33.

15. யேசுநாதர் அவர்களை நோக்கி: மணவாளனுடைய பிள்ளைகள் மணவா ளன் தங்களோடிருக்குமளவும் துக்கிக் கக் கூடுமோ? ஆனால் மணவாளன் அவர்களிடத்தினின்று எடுபடுங்காலம் வரும்; அப்போது அவர்களும் உபவா சிப்பார்கள்.

16. ஒருவனும் கோடி வஸ்திரத்தில் துண்டெடுத்துப பழையவஸ்திரத்தோடு பொருத்தமாட்டான். ஏனெனில் இது வஸ்திரத்தின் நிறைவைக் கெடுப்பது மன்றி, கிழிதலும் அதிகமாகும்.

17. அவ்வாறே புதுத் திராட்ச இரச த்தைப் பழைய சித்தைகளில் வார்க்க மாட்டார்கள். ஏனெனில் அப்படிச் செய்தால் சித்தைகள் வெடித்து, இரச முஞ் சிந்திப்போவதுமன்றிச் சித்தை களுஞ் சேதமாய்ப்போகும், ஆனால் புதிய ரசத்தைப் புதிய சித்தைகளில் வார்ப்பார்கள். அப்பொழுது இரண் டுங் காப்பாற்றப்படும் என்றார்.

---

11. **ஆயக்காரர்:** - மத். 5-46 வச. காண்க.

15. **மணவாளனுடைய பிள்ளைகள்:** — எபிரேயபாஷையில் மணவாளனுடைய தோ ழர்களை மணவாளனுடைய பிள்ளைகளென்று அழைப்பது வழக்கம். மணவாளனாகிய யேசு நாதர் பரலோகத்துக்கு ஆரோகணமானபின், அப்போஸ்தலர்கள் பசியினாலும் வேத விரோ திகளுடைய நெருக்கிடையினாலும் வெகு துன்பப்பட்டார்களென்று நாம் அறிந்திருக்கிறது மல்லாமல் அவர்கள் உபவாசமாயிருந்தார்களென்று அப்போஸ்தலர் நடபடி 13-ம் அதி. 2-3 வசனங்களில் காண்கிறோம்.

17. **இந்த உவமைகளில்** பழைய ஏற்பாட்டின் சடங்குகளைப் புதிய ஏற்பாட்டின் ஆசார முறைமைகளோடு கலந்து அநுசரிக்கக் கற்பிக்கப்படாதென்று விளங்குகிறது.

18. யேசுநாதர் இவைகளை அவர்களோடு பேசிக் கொண்டிருக்கையில், இதோ அதிபதியொருவன் அணுகி அவரை நமஸ்கரித்து: ஆண்டவரே, என் குமாரத்தி இப்பொழுதே மரித்தாள். ஆயினும் தேவரீர் வந்து, உமது கரத்தை அவள்மேல் வைத்தருளும். அவளும் பிழைப்பாள் என்றான். மாற். 5-22; லூக. 8-41.

19. அப்போது யேசுநாதர் எழுந்து தமது சீஷர்களோடுகூட அவன் பிறகே போனார்.

20. அப்போது இதோ பன்னிரண்டு வருஷமாய்ப் பெரும்பாடுள்ளவளான ஒரு ஸ்திரீ அவர் பிறகே அணுகி அவருடைய வஸ்திரத்தின் விளிம்பைத் தொட்டாள். மாற். 5-25; லூக. 8-43.

21. ஏனெனில் நான் அவருடைய வஸ்திரத்தை மாத்திரந் தொட்டேனாகில் சௌக்கியமாவேனென்று தனக்குள் சொல்லிக்கொண்டாள்.

22. ஆனால் யேசுநாதர் திரும்பிப் பார்த்து அவளைக் கண்டு: மகளே நம்பிக்கையாயிரு, உன் விசுவாசம் உன்னைச் சௌக்கியமாக்கினதென்றார். அந்நேரமுதல் அந்த ஸ்திரீ சௌக்கியமாயிருந்தாள். லூக 11-14

23. யேசுநாதர் அந்த அதிபதியினுடைய வீட்டிற் சேர்ந்தபோது அங்கே தாரை ஊதுகிறவர்களையும் இரைகிற ஜனக் கூட்டத்தையுங் கண்டு,

24. விலகிப் போங்கள்: ஏனெனில் இச்சிறு பெண் சாகவில்லை, நித்திரை செய்கிறாளென்றார். ஆனால் அவர்கள் அவரை நகைத்தார்கள்.

25. கும்பலை வெளியே தள்ளினபின், அவர் உட் பிரவேசித்து, சிறுபெண்ணின் கரத்தைப் பிடிக்கவே அவள் எழுந்திருந்தாள்.

26. இந்தக் கீர்த்தி அந்நாடெங்கும் பரவிப் பிரஸ்தாபமாயிற்று.

27. யேசுநாதர் அவ்விடம் விட்டுப் போகையில் குருடர் இருவர் அவரைப் பின்தொடர்ந்து: தாவீதின் குமாரனே, எங்கள்மேல் இரக்கமாயிருமென்று கூப்பிட்டுக் கொண்டு வந்தார்கள்.

28. அவர் வீட்டிற் சேர்ந்தபோது அந்தக் குருடரும் அவரிடத்தில் நெருங்கிவந்தார்கள். யேசுநாதர் அவர்களை நோக்கி: இதை உங்களுக்குச் செய்ய என்னாலே கூடுமென்று விசுவசிக்கிறீர்களா? என்றார். அதற்கு அவர்கள்: ஆம், ஆண்டவரே என்றார்கள்.

29. அப்போது யேசுநாதர் அவர்களுடைய கண்களைத் தொட்டு: உங்கள் விசுவாசத்தின்படி உங்களுக்கு ஆகக்கடவதென்று திருவுளம்பற்றினார்.

30. உடனே அவர்களுடைய கண்கள் திறக்கப்பட்டன. அப்போது யேசுநாதர் அவர்களை மிகவும் கண்டிப்பாய் எச்சரித்து, இதை எவனும் அறியாதபடி பார்த்துக்கொள்ளுங்கள் என்றார்.

31. அவர்களோ புறப்பட்டுப்போய் அத்தேசமெங்கும் அவருடைய கீர்த்தியைப் பிரசித்தப்படுத்தினார்கள்.

32. அவர்கள் வெளியே போன மாத்திரத்தில் பசாசு பிடித்த ஊமையான ஒரு மனிதனை அவரண்டையிலே கொண்டுவந்தார்கள். மத். 2-22. லூக. 11-14.

18 அர்ச. மாற்கு, லூக்கா இவர்கள் சொல்லுகிறபடி அந்தப் பிரபு தன் மகள் அவஸ்தையாயிருக்கும்போதே யேசுநாதரிடத்தில் அறிவித்திருக்கிறான். யேசுநாதர் அவன் வீட்டுக்குப் போகுமுன்னே வழியிலே பிரபுவின் ஊழியர் வந்து, பெண் இறந்து போயிற்று என்று சொல்ல, பிரபு யேசுநாதசுவாமியை நோக்கி என் குமாரத்தி இப்போதே மரித்திருக்கிறாள். ஆனாலும் தேவரீர் வந்து அவளை உயிர்ப்பிக்க வேணுமென்று மன்றாடினான். இந்தக் கடைசிப் பாகத்தை மாத்திரம் மத்தேயு சொல்லி முந்தின சங்கதிகளை விட்டுவிட்டார். இவ்விதம் அநேகவிடங்களிலே காணலாமென்று அறிக.

33. அவர் பசாசைத் துரத்தினவுடனே ஊமையன் பேசத்துவக்கினன். ஜனக்கூட்டம் பிரமித்து, இவ்வண்ணம் இஸ்ராயேலருக்குள் ஒருபோதும் தோன்றினதில்லை என்றார்கள்.

34. பரிசேயரோ: இவன் பேய்களின் தலைவனைக்கொண்டு பேய்களை ஓட்டுகிறானென்று சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

35. பின்பு யேசுநாதர் சகல பட்டணங்களிலுங் கிராமங்களிலுஞ் சுற்றித் திரிந்து, அவர்களுடைய ஜெப ஆலயங்களில் உபதேசித்துப் பரலோகராச்சியத்தின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, எவ்வித நோயையும் பிணியையும் குணமாக்கிக்கொண்டு வந்தார். மாற். 6-6.

36. அன்றியும் அவர் ஜனக்கும்பல்களைக்கண்டு, அவர்கள் மேய்ப்பனில்லாத ஆடுகளைப்போல அலைக்கழிக்கப்பட்டுக் கிடக்கிறார்களென்று அவர்கள் மேல் மனமிரங்கினார்.

37. பின்னும் தமது சீஷர்களைப் பார்த்து: அறுப்பு மிகுதியாயிருக்கின்றது, வேலையாட்களோ கொஞ்சமாயிருக்கிறார்கள்.

38. ஆகையால் தன் அறுப்புக்கு வேலையாட்களை அனுப்பும்படி அறுப்புக்கு எஜமானை மன்றாடுங்களென்று திருவுளம்பற்றினார்.

## 10-ம். அதிகாரம்.

*அப்போஸ்தலர்களுடைய நாமங்களும், கிறீஸ்துநாதர் அவர்களை அனுப்பும்போது சொன்ன புத்திமதிகளும்.*

1. அப்பொழுது அவர் தம்முடைய பன்னிரண்டு சீஷர்களையும் தம்மிடத்தில் வரவழைத்து அசுத்த அரூபிகளைத் துரத்தவும், எல்லாப் பிணிகளையும் எல்லா நோய்களையுஞ் சொஸ்தமாக்கவும் அவர்களுக்கு வல்லமையைத் தந்தருளினார். மாற். 3-13; லூக். 6-13, 9-1.

2. அப்பன்னிரண்டு அப்போஸ்தலர்களுடைய நாமங்களாவன: முந்தினவர் இராயப்பர் என்னப்படுகிற சீமோன்: பிறகு அவருடைய சகோதரனான பெலவேந்திரரும், அப். 1-13.

3. செபதேயின் குமாரனாகிய இயாகப்பரும், அவருடைய சகோதரனான அருளப்பரும், பிலிப்பென்பவரும், பர்தலோமையாரும், தோமையாரும், ஆயக்காரனான மத்தேயும், அல்பேயின் குமாரனாகிய இயாகப்பரும், ததேயும்,

4. கனானேய சீமோனும், யேசுநாதரைக்காட்டிக்கொடுத்த யூதாஸ் இஸ்காரியோத்துமாம்.

38. கிறீஸ்துவர்கள் தங்கள் பிள்ளைகள் சர்க்கார் உத்தியோகங்களையும் வியாபார முதலான தொழில்களையும் பண்ணவேணுமென்று சாதாரணமாய் முயற்சியாயிருக்கிறார்களே யொழிய, தேவ ஊழியத்தில் தங்களைச் செலவழிக்கும்படி பிள்ளைகளுக்குப் புத்தி சொல்லமாட்டார்கள். இதினாலே குருக்களுடைய தொகை இந்தத் தேசத்தில் அதிகரிக்கிறதில்லை.

2. யேசுநாதர் இராயப்பருடைய சகோதரராகிய பெலவேந்திரரை எல்லாருக்கு முந்தி அழைத்திருக்க, இவ்விடத்திலும் அப்போஸ்தலர்களுடைய பெயர்களெல்லாஞ் சொல்லப்படுகிற மற்ற இடங்களிலும், இராயப்பர் முதல்வரென்று கூறப்படுகிறதினாலே யேசுநாதர் அவரைத் தமது திருச்சபைக்குத் தலைவராக ஏற்படுத்தின சத்தியம் வெளியாகிறது.

4. யூதாஸ் தம்மைக் காட்டிக் கொடுப்பானென்று யேசுநாதர் அறிந்திருந்தும், அவனை அப்போஸ்தலனாகத் தெரிந்து கொண்டார். ஒருவன் எவ்வளவுபரிசுத்தமான அந்தஸ்திலிருந்தாலும், அவன் தவறிப்போகலாமென்கிறதினாலே சகலரும் தேவபயத்தோடே நடக்க வேண்டுமென்று கர்த்தர் இதனால் படிப்பிக்கிறார். சம்மனசுக்களே தவறிப் போயிருக்க, மனிதன் எச்சரிக்கையாயிராவிட்டால் தவறுவது அதிசயமல்ல.

5. இந்தப்பன்னிருவரையும் யேசுநாதர் அனுப்பினபோது அவர்களுக்குக் கற்பித்ததாவது: நீங்கள் புற ஜாதியாருடையநாடுகளில் போகாமலும், சமாரியருடைய பட்டணங்களில் பிரவேசியாமலும்,

6. சேதமாய்ப்போன இஸ்ராயேல் கோத்திரத்தின் ஆடுகளிடத்திற்கே முக்கியமாய்ப்போங்கள். அப். 13-46.

7. அப்படியே நீங்கள் போய் மோக்ஷ இராச்சியம் சமீபித்திருக்கிறதென்று பிரசங்கியுங்கள்.

8. நோயாளிகளைக் குணமாக்குங்கள், மரித்தோரை உயிர்ப்பியுங்கள், குஷ்டரோகிகளைச் சுத்தமாக்குங்கள்; பசாசுகளை ஓட்டுங்கள். இலவசமாய்ப் பெற்றுக் கொண்டீர்கள், இலவசமாய்க் கொடுங்கள்.

9. உங்கள் கச்சைகளில் பொன்னையாவது வெள்ளியையாவது காசையாவது வைத்துக்கொள்ளவேண்டாம்.

10. வழிக்காகப் பையையாவது இரண்டு அங்கிகளையாவது பாதரட்சைகளையாவது, தடிக்கம்பையாவது வைத்துக் கொள்ளாதேயுங்கள். ஏனெனில் வேலைக்காரன் தன் உணவுக்குப் பாத்திரவானாயிருக்கிறான். மாற். 6-8; லூக். 9-3, 10-4.

11. எந்தப்பட்டணத்திலாவது ஊரிலாவது நீங்கள் பிரவேசிக்கும்போது, அதில் யோக்கியவான் யாரென்று விசாரித்து, அவ்விடத்தை விட்டுப் போகுமளவும் அவனிடத்தில் தங்கியிருங்கள்.

12. நீங்கள் ஒரு வீட்டில் பிரவேசிக்கும்போது: இந்தவீட்டுக்குச் சமாதானம் உண்டாவதாகவென்று சொல்லி வாழ்த்துங்கள்.

13. அந்த வீடு பாத்திரமானதாகில் உங்கள் சமாதான வாழ்த்துதல் அதற்கு உண்டாகும்; அது அபாத்திரமானதாகில் உங்கள் சமாதானவாழ்த்துதல் உங்களிடத்தில் திரும்பிவிடும்.

14. எவனாகிலும் உங்களை ஏற்றுக் கொள்ளாமலும் உங்கள் வார்த்தைக்குச் செவிகொடாமலும் போனால், நீங்கள் அந்த வீட்டையாவது பட்டணத்தையாவது விட்டு வெளியே புறப்பட்டுப்போய், உங்கள் கால்களில் ஒட்டின தூசியையுந் தட்டிப்போடுங்கள்.

15. தீர்வைநாளிலே அந்தப் பட்டணத்தைவிட சோதோம் கொமொர்ரா நாட்டிற்கு (ஆக்கினை) அதிக லகுவாயிருக்குமென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

5. **சமாரியர்** அல்லது சமாரியா நாட்டார்:—யாதெனில் சலோமோன் மகனாகிய ரோபோவாம் என்ற இராஜாவின் காலத்திலே அவனுடைய கொடுமையைச் சகிக்கமாட்டாமற் பிரிந்துபோன யூத ஜாதியாரான பத்துக் கோத்திரத்தில் சிலர் பபிலோன் அடிமைத்தன காலத்தில் சமாரியா நாட்டில் தங்கி, அஞ்ஞானிகளான அசீரியரோடு சம்பந்தம் பண்ணிப் பாதி அஞ்ஞானிகள் போலும் பாதி யூதர் போலும் நடந்துவந்தவர்களாமே.

9. 10. அப்போஸ்தலர்கள் யேசுநாதர் சுவாமி காலத்திலே அடுத்திருந்த கிராமங்களுக்கு மாத்திரம் பிரசங்கிக்கப் போனதினாலே, அன்னவஸ்திரத்துக்கு வேண்டியவைகளைக் கொண்டுபோக வேண்டியதில்லையென்று ஆண்டவர் சொல்லுகிறார். இதினாலே எவ்வளவு தூரம் போனாலும் ஒன்றும் கொண்டு போகப்படாதென்றல்ல. ஏனெனில் அப்போஸ்தலர்களுக்குள்ளே யூதாஸ் பொக்கிஷக்காரனாயிருந்தான். அரு. 13-21. அப். நட. 12-7. வசனங் காண்க.

16. ஓநாய்களின் நடுவில் ஆடுகளை அனுப்புகிறதுபோல் இதோ, நான் உங்களை அனுப்புகிறேன். ஆகையால் சர்ப்பங்களைப்போல விவேகமுள்ளவர்களும், புறாக்களைப்போல கபடில்லாதவர்களுமாய் இருங்கள். லூக். 10-3.

17. மனிதர் மட்டில் சாவதானமாயிருங்கள். ஏனெனில் நீதிச்சங்கங்களுக்கு உங்களைக் கையளிப்பார்கள், தங்கள் ஜெப ஆலயங்களிலும் உங்களைச் சாட்டைகளால் அடிப்பார்கள். லூக். 12-11

18. அவர்களுக்கும் புறஜாதியாருக்கும் நீங்கள் எதிர்ச் சாட்சிகளாகும்படி அதிபதிகள் முன்பாகவும், ராஜாக்கள் முன்பாகவும் என்னைப்பற்றிக் கூட்டிக்கொண்டு போகப்படுவீர்கள்.

19. ஆயினும் அவர்கள் உங்களைக் கையளிக்கும்போது, எவ்விதமாய் அல்லது எதைப் பேசுவோமென்று நீங்கள் கவலைப்படாதிருங்கள். ஏனெனில் நீங்கள் பேசவேண்டியது அந்நேரத்தில் உங்களுக்கு அருளப்படும். லூக். 12-11.

20. அதேனென்றால் பேசுகிறவர்கள் நீங்களல்ல; உங்கள்பிதாவின் இஸ்பிரீத்துவானவரே உங்களிலிருந்து பேசுகிறவர்.

21. அன்றியும் சகோதரன் தன் சகோதரனையும், தகப்பன் தன் மகனையும் மரணத்துக்குக் கையளிப்பார்கள். பிள்ளைகள் பெற்றோருக்கு விரோதமாய் எழும்பி அவர்களைக் கொலைசெய்வார்கள்.

22. என் நாமத்தினிமித்தம் யாவராலும் பகைக்கப்படுவீர்கள். ஆயினும் முடிவுபரியந்தம் நிலைத்திருப்பவன் எவனோ, அவனே இரட்சண்ணியம் அடைவான்.

23. அன்றியும் ஒரு பட்டணத்தில் உங்களைத் துன்பப்படுத்தும்போது வேறொன்றுக்கு ஓடிப்போங்கள். மனுமகன் வருவதற்குள்ளாக இஸ்ராயேலருடைய பட்டணங்களெல்லாஞ் சுற்றி முடிக்கமாட்டீர்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

24. சீஷன் தன் குருவிலும், ஊழியன் தன் எஜமானிலும் மேற்பட்டவனல்ல; லூக். 6-40; அரு. 13-16.

25. சீஷன் தன் குருவைப்போலவும், ஊழியன் தன் எஜமானைப்போலவும் இருப்பது போதும். வீட்டெஜமானை அவர்கள் பெயேல்சேபூப் என்று அழைத்தார்களென்றால், அவனுடைய வீட்டாரை எவ்வளவோ அதிகமாய்ச் சொல்லுவார்கள்?

26. ஆதலால் அவர்களுக்குப் பயப்படவேண்டாம். ஏனெனில் வெளியாக்கப்படாத மறைபொருளுமில்லை, அறியப்படாத இரகசியமுமில்லை. மாற். 4-22; லூக். 8-17, 12-2.

27. நான் உங்களுக்கு இருளில் சொல்லுகிறதை நீங்கள் வெளிச்சத்தில் சொல்லுங்கள். காதுக்குள்ளே கேட்கிறதை நீங்கள் அரமியங்களின் மேல் பிரசங்கியுங்கள்.

16. சர்ப்பமானது ஆபத்திலகப்படாதபடி விவேகமாயிருப்பதுமல்லாமல், தப்பித்துக்கொள்ள வகையில்லாதிருந்தால் தன் தலையைக் காப்பாற்றும்படி உடலுக்குள் அதை மறைத்து உடலில் அடி வாங்குகிறதுபோல, மனிதன் தன் ஆத்துமத்தைக் காப்பாற்றும்படி உடலைப் பலியாக்க வேண்டும். புறாவானது மன சுத்தத்துக்கும் நேர்மையான குணத்துக்கும் குறியாயிருக்கின்றது.

23. மனுமகன் வருவதற்குள்ளாக:—அப்போஸ்தலர்கள் உலகமெல்லாம் சுற்றிப்போய் வேதம் போதித்து முடிக்குமுன் மனுமகன் வருவார். அதாவது, அவர்கள் இறந்து போவார்களென்று அர்த்தமாம்.

28 சரீரத்தைக் கொல்லுகிறவர்களுக்கு நீங்கள் பயப்படவேண்டாம். ஆத்துமத்தையோ அவர்களால் கொல்ல முடியாது. ஆனால் ஆத்துமத்தையுஞ் சரீரத்தையும் நரகத்திலே கெடுக்க வல்லவருக்கே பிரதானமாய்ப் பயப்படுங்கள்.

29. ஒரு காசுக்கு இரண்டு அடைக்கலங் குருவிகள் விற்கப்படுகிறதல்லவோ? ஆயினும் அவைகளில் ஒன்றாவது உங்கள் பிதாவின் சித்தமின்றித் தரையில் விழமாட்டாது. அப 27-35.

30. உங்கள் சிரசின் ரோமங்களெல்லாம் எண்ணப்பட்டிருக்கின்றது.

31. ஆதலால் அஞ்சாதிருங்கள்; அநேகம் அடைக்கலங் குருவிகளைவிட நீங்கள் மேலானவர்களாயிருக்கிறீர்கள்.

32. அன்றியும் மனிதர் முன்பாக என்னை அறிக்கையிடுகிறவன் எவனோ, அவனை நானும் பரமண்டலங்களிலிருக்கிற என் பிதாவின் முன்பாக அறிக்கையிடுவேன். மாற். 8-38; லூக். 9-26; 12-8; 2 தீமோ. 2-12.

33. மனிதர் முன்பாக என்னை மறுதலிப்பவன் எவனோ, அவனை நானும் பரமண்டலங்களிலிருக்கிற என் பிதாவின் முன்பாக மறுதலிப்பேன்.

34. நான் பூலோகத்தில் சமாதானத்தை அனுப்ப வந்தேனென்று நீங்கள் நினைக்க வேண்டாம். சமாதானத்தையல்ல, வாளையே அனுப்பவந்தேன். லூக். 12-51.

35. எவ்வாறெனில் தன் தகப்பனுக்கு விரோதமாய் மனிதனையும், தன் தாய்க்கு விரோதமாய் மகளையும், தன் மாமிக்கு விரோதமாய் மருமகளையும் பிரிக்க வந்தேன்.

36. ஏனெனில் மனிதனுடைய சத்துருக்கள் அவனுடைய வீட்டாராமே. மிக்கா. 7-6; லூக். 12-51.

37. என்னிலும் தன் தகப்பனையாவது தாயையாவது அதிகமாய்ச் சிநேகிக்கிறவன் எனக்குப்பாத்திரவானல்ல; எனக்கு மேலாய்த் தன் மகனையாவது மகளையாவது சிநேகிக்கிறவனும் எனக்குப் பாத்திரவானல்ல. லூக். 14-26.

38. தன் சிலுவையை எடுத்துக்கொண்டு என்னைப் பின்செல்லாதவனும் எனக்குப் பாத்திரவானல்ல. மத். 16-24; மாற். 8-34; லூக். 14-27.

39. தன் ஜீவனைக்கண்டடைகிறவன் எவனும் அதை இழப்பான்; என்னிமித்தம் தன் ஜீவனை இழந்தவனோவென்றால் அதைக் கண்டடைவான். மத். 16-25; லூக். 17-33; அரு. 12-25.

40. உங்களை ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக்கொள்ளுகிறான்; என்னை ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை அனுப்பினவரை ஏற்றுக்கொள்ளுகிறான். லூக். 10-16; அரு. 13-20.

41. தீர்க்கதரிசி என்னும் நாமத்தினிமித்தம் ஒரு தீர்க்கதரிசியை ஏற்றுக்கொள்ளுகிறவன் தீர்க்கதரிசிக்குரிய

34. 35. 36. யேசுநாதர் சுவாமி நிலைநிற்கிற மனச் சமாதானத்தை உலகத்துக்குக் கொண்டு வந்ததற்குச் சந்தேகமில்லை. (லூக். 2. அதி. 14. வசனம்.) ஆனால் பொல்லாதவர்கள் அவருடைய போதனைகளைக் கேட்க மனமில்லாமல் எதிரிடை செய்வார்களென்கிறதினாலே நல்லவர்கள் வெகு துன்பப்பட வேண்டியிருக்கும். இன்னம் அவனவனுடைய துர்ச்சுபாவம் யேசுநாதருடைய போதனைக்கு அடங்காமல் எதிர்த்து நிற்குமென்கிறதினாலே மனப் போராட்டம் உண்டாகும். இந்த உட் போராட்டத்தைக் காட்டும்படிதான் மனிதனுடைய பகைவர் அவன் வீட்டாரென்று ஆண்டவர் உரைக்கிறார்.

38. தன் உறவினருக்குப் பிரியப்படும்படி தேவ கற்பனையை மீறுகிறவன் யேசுநாதர் சுவாமிக்குச் சீஷனாயிருக்கப் பாத்திரவான் அல்லவென்று அர்த்தமாம்.

39. தன் உயிர் பிழைக்கும்படி வேத கற்பனையை மீறி நடக்கிறவன் நரகத்தில் நித்திய காலம் செத்தும் சாகாமல் வேதனைப்படுவானுமே.

சம்பாவனையை அடைவான். நீதிமான் என்னும் நாமத்தினிமித்தம் ஒருநீதிமானை ஏற்றுக் கொள்ளுகிறவன் நீதிமானுக்குரிய சம்பாவனையை அடைவான்.

42. அவ்வண்ணமே சீஷன் என்னும் நாமத்தினிமித்தம் மிகவும் அற்பரான இவர்களில் ஒருவனுக்கு எவனாகிலும் ஒருபாத்திரம் தண்ணீர்மாத்திரங் குடிக்கக் கொடுத்தாலும், தனது சம்பாவனையை இழந்துபோகானென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று திருவுளம்பற்றினார். மாற். 9-40.

## 11-ம். அதிகாரம்.

*யேசுநாதர் அருளப்பருக்குப் பதில்மொழி அனுப்பினதும், அவரைப் புகழ்ந்ததும், யூதரைக் கண்டித்ததும், தமது பிதாவை ஸ்துதித்து, வருந்துகிறவர்களைத் தம்மிடம் அழைத்ததும்.*

1. யேசுநாதர் தம்முடைய பன்னிரண்டு சீஷர்களுக்கும் இவைகளைக் கற்பித்து முடிந்தபின்பு சம்பவித்ததேதெனில், அவர்களுடைய பட்டணங்களில் போதிக்கவும் பிரசங்கிக்கவும் அவ்விடம் விட்டு புறப்பட்டார்.

2. அருளப்பரோவெனில் கிறீஸ்துநாதருடைய செய்கைகளைப்பற்றிச் சிறைச்சாலையில் கேள்விப்பட்டபோது தம்முடைய சீஷர்களில் இருவரை அனுப்பி: லூக். 7-18.

3. வரவேண்டியவர் நீர்தாமோ, அல்லது வேறொருவர் வரக் காத்திருக்க வேண்டுமோ என்று அவருக்குச் சொல்லுவித்தார்.

4. யேசுநாதர் அவர்களுக்கு மறுமொழியாகச் சொன்னதாவது: நீங்கள் போய், கேட்டவைகளையும், கண்டவைகளையும் அருளப்பருக்கு அறிவியுங்கள். இசை. 35-6; 62-1.

5. குருடர் காண்கிறார்கள், முடவர் நடக்கிறார்கள், குஷ்டரோகிகள் சுத்தமாகிறார்கள், செவிடர் கேட்கிறார்கள், மரித்தோர் உயிர்த்தெழும்புகிறார்கள், ஏழைகள் சுவிசேஷம் போதிக்கப்படுகிறார்கள்.

6. என் மட்டில் இடறல்படாதவன் பாக்கியவான் என்றார்.

7. அவர்கள் போனபின்பு யேசுநாதர் அருளப்பரைக் குறித்து ஜனக்கூட்டத்தை நோக்கிச் சொல்லத் துவக்கினதாவது: நீங்கள் கானகத்தில் எதைப் பார்க்கப் போனீர்கள்? காற்றினால் அசைந்தாடுகிற நாணலையோ? லூக். 7-24.

8. பின்னை எதைத்தான் பார்க்கப் போனீர்கள்? மெல்லிய உடைகளை அணிந்த மனிதனையோ! இதோ மெல்லிய உடையணிகிறவர்கள் இராஜ மாளிகைகளில் இருக்கிறார்களே.

9. அல்லவென்றால் எதைப் பார்க்கப் போனீர்கள்? தீர்க்கதரிசியையோ?

---

3. அர்ச். அருளப்பர் கர்த்தரை இன்றொன்று அறியாதவர் அல்ல, ஆனால் தமது சீஷர்கள் நேராய் யேசுநாதரைக் கண்டுபேசி அவர் தேவ குமாரனென்று அறிந்து அவரைப் பின்சென்று நடக்கும்படிக்கு அவர்களை அவரிடத்திற்கு அனுப்பினார்.

5. ஏழைகளுக்கு சுவிசேஷம் பிரசங்கிக்கப்படுகிறது. தனவான்களுக்கும் ஏழைகளுக்கும் சுவிசேஷம் போதிக்கப்படுகிறது மெய்தான். ஆனால் உலகம் செய்கிறதுபோல ஏழைகளை சுவிசேஷம் இகழாமல், அவர்களை வித்தியாசமின்றி தனவான்களைப் போல் மதித்து அவர்களுக்கு அறநெறியை அன்போடே காட்டிவருகிறது. இவ்விதப் பிறசிநேகம் மற்ற எந்த மதத்திலும் கிடையாது. இது சத்திய கிறீஸ்துவேதத்தின் அறிகுறிகளில் ஒன்று.

6. **இடறல் படாதவன்:** - எனது தாழ்மையையும் பாடுகளையும் அவமான மரணத்தையும் கண்டும், நான் தெய்வகுமாரன்தானென்று விசுவசிக்கிறவன் இடறல்படாதவனென்றறிக.

ஆம் தீர்க்கதரிசியிலும் மேற்பட்டவனாத்தான் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

10. ஏனென்றால் இதோ என் தூதனை உமது சமுகத்துக்கு முன்பாக அனுப்புகிறேன், அவன் உமக்கு முன்னே உமது வழிகளை ஆயத்தம் பண்ணுவான் என்று எழுதப்பட்டது இவனைப் பற்றித்தான். மலக். 3-1; மாற். 1-2; லூக். 7-27.

11. ஸ்திரீகளிடத்திலே பிறந்தவர்களுக்குள்ளே ஸ்நாபக அருளப்பனைப் பார்க்கிலும் பெரியவன் ஒருவனும் எழும்பினதில்லையென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகிலும் மோக்ஷராச்சியத்தில் சிறியவனானவன் அவரிலும் பெரியவனாயிருக்கிறான்.

12. ஸ்நாபக அருளப்பருடைய நாள் முதல் இதுவரையில் பரலோக இராச்சியம் பலவந்தப்படுகின்றது. பலவந்தம் பண்ணுகிறவர்களே அதைப் பறித்துக் கொள்ளுகிறார்கள்.

13. ஏனெனில் வரிவேதமும், தீர்க்கதரிசிகளனைவரும் அருளப்பர்வரையில் வருங்காரியங்களை அறிவித்தார்கள்.

14. அன்றியும் நீங்கள் அங்கீகரித்துக்கொள்ள மனதாயிருந்தால் வரவிருக்கிற எலியாசென்பவர் இவர்தான். மல். 4-5.

15. கேட்கச் செவியுள்ளவன் கேட்கக்கடவான்.

16. இந்த ஜென்மத்தை யாருக்கு ஒப்பிட்டு மதிப்பேன்? இது கடைவீதியில் உட்கார்ந்திருந்த சிறுவர்களுக்கு ஒப்பாயிருக்கின்றது. அவர்கள் தங்கள் தோழரைக் கூப்பிட்டு:

17. நாங்கள் உங்களுக்காகப் பாடியும், நீங்கள் ஆடவில்லை. நாங்கள் புலம்பியும் நீங்கள் அழவில்லையென்றதுபோலிருக்கிறது.

18. எவ்வாறெனில் அருளப்பர் போஜனபானம் பண்ணாதவராய் வந்தார். அதற்கு அவர்கள்: அவன் பேய் பிடித்தவன் என்கிறார்கள்.

19. மனுமகன் போஜன பானம்பண்ணுகிறவராய் வந்தார். அதற்கு அவர்கள்: இதோ இவன் பெருணன், திராட்ச இரசக்குடியன், ஆயக்காரருக்கும் பாவிகளுக்கும் சிநேகிதன் என்கிறார்

11. பழைய வேதத்திலே பிறந்தவர்களுக்குள்ளே ஸ்நாபக அருளப்பர் எல்லா மனிதர்களிலும் மேன்மையானவரென்றாலும், அவர் யேசுநாதருக்கு சீஷனாயிருந்து அவருடைய போதகத்தைக் கேட்கும் பாக்கியம் பெற்றவரல்ல. ஆகையால் திருச்சபையாகிய யேசுநாதருடைய இராச்சியத்திலே அப்போஸ்தலரைப்போல மேன்மை யடைந்தவரல்லவென்று அர்த்தம் பண்ணலாம்.

12. **பலவந்தப்படுகிறது:**—மனிதன் தன் துர்க்குணங்களோடே பலவந்தமாய்ப் போராடி அவைகளை வென்றுதான் பரகதி அடையவேண்டியது. ஆகையால் பழைய ஏற்பாட்டின் ஆசாரங்களை அனுசரிக்கிற யூத ஜனங்களுக்கு மாத்திரம் மோக்ஷ வழி திறந்திருக்கிறதென்கிற போதனை ஸ்நாபக அருளப்பர் காலமுதல் எடுபட்டுப்போனதென்று அர்த்தமாம். மெனோக்.

14. உலக முடிவில் எலியாஸ் தீர்க்கதரிசி தோன்றி, யேசுநாதர்தான் உலக இரட்சகரென்று யூதர்களுக்குப் போதித்து அவர்களை மனந்திருப்புவார். அப்படியே இப்போது ஸ்நாபக அருளப்பர் யூதருக்கு யேசுநாதர்தான் உலக இரட்சகரென்று போதித்து அவர்கள் மனந்திரும்பப் பிரயாசப்படுகிறதினாலே அவரையும் எலியாசென்று யேசுநாதர் அழைக்கிறார்.

19. **ஞானமானது தன் புத்திரர்களால்:** யேசுநாதர் சுவாமியும் ஸ்நாபக அருளப்பரும் ஞானத்தின் புத்திரர்களாமே. அருளப்பர் அருந்தவத்தினாலும் யேசுநாதர் சாமானிய சுபாவநடக்கையாலும் சத்திய வழியைப் போதித்தார்கள். யூதர்களுக்கு ஒருவகையும் பிடிக்கவில்லை. இப்படிப் பிடிக்காமற் போன குறை யூதர்களுடைய துர்க்குணத்தினாலொழிய தேவ ஞானத்தினால் உண்டாகிறதில்லை.

கள். இதினாலே ஞானமானது அதன் புத்திரர்களால் நியாயமுள்ளதென்று ஒப்பிக்கப்பட்டதென்றார்.

20. பின்பு தாம் அநேகாநேக அற்புதங்களைச் செய்த பட்டணங்கள் தவஞ்செய்யாததைப் பற்றி அவைகளைக் கடிந்துகொள்ளத் தொடங்கி:

21. ஐயோ! கொர்சாயிம் உனக்குக் கேடாம்: ஐயோ! பெத்சாயிதா உனக்குக் கேடாம்: உங்களிடத்தில் பண்ணப்பட்ட அற்புதங்கள் தீர், சிதோன் நகரங்களில் செய்யப்பட்டிருக்குமேயாகில் அந்நகரத்தார் அப்போதே மயிர்ச்சட்டையிலும் சாம்பலிலும் தவஞ்செய்திருப்பார்களே.

22. ஆதலால் நடுத்தீர்க்கிறநாளிலே உங்களைவிடத் தீர் சிதோன்நகரங்களுக்கு அதிக இலகுவாயிருக்குமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

23. நீயோ கப்பர்னவு நகரமே, வானமட்டும் உயர்ந்துபோவாயோ? பாதாளமட்டும் தாழ்த்தப்படுவாய். ஏனென்றால் உன்னிடத்தில் பண்ணப்பட்ட அற்புதங்கள் சோதோம் நகரில் பண்ணப்பட்டிருக்குமேயாகில் அந்நகரம் இந்நாள்மட்டும் ஒருவேளை நிலைத்திருக்குமாக்கும்.

24. ஆதலால் நடுத்தீர்க்கிற நாளிலே உன்னிலும் சோதோம்நாட்டுக்கு அதிக இலகுவாயிருக்குமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றருளிச்செய்தார்.

25. அந்நேரத்தில் யேசுநாதர் மீளவும் வசனித்ததாவது: பிதாவே, பரலோகத்துக்கும், பூலோகத்துக்கும் ஆண்டவரே! உம்மை ஸ்தோத்திரிக்கிறேன். ஏனெனில் நீர் இவைகளை ஞானிகளுக்கும்விவேகிகளுக்கும்மறைத்துச் சிறியோர்களுக்கு வெளிப்படுத்தினீர்.

26. ஆம், பிதாவே, இவ்விதம் உமக்குப் பிரியமாயிருந்ததால் அப்படியே ஆகக்கடவது.

27. சகலமும் என்பிதாவினால் எனக்குக் கையளிக்கப்பட்டிருக்கிறது. மேலும் பிதாவைத்தவிர சுதனை ஒருவனும் அறியான். அத்தன்மையே சுதனும், சுதன் யாருக்கு வெளிப்படுத்தச் சித்தமாயிருப்பாரோ அவனும் தவிர, பிதாவை ஒருவனும் அறியான். அரு. 6-46; 7-28; 8-19; 10-15.

28. வருந்திச் சுமை சுமந்திருக்கிறவர்களாகிய நீங்களெல்லோரும் என் அண்டையில் வாருங்கள், நான் உங்களைத் தேற்றுவேன்.

29. என் நுகத்தை உங்கள்மேல் ஏற்றுக்கொண்டு, நான் சாந்தமும் மனத்தாழ்ச்சியும் உள்ளவனாயிருக்கிறேனென்று என்னிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள். அப்போது உங்கள் ஆத்துமங்களுக்கு இளைப்பாற்றியைக் கண்டடைவீர்கள். ஜெரே. 6-16.

30. ஏனெனில் என் நுகம் இனிதாயும் என் சுமை இலகுவாயும் இருக்கிறதென்று திருவுளம் பற்றினார். 1. அரு. 5-3.

22. தீர், சிதோன் இவைகள் பெனிக்கையா தேசத்தைச் சேர்ந்த அஞ்ஞானிகளுடைய பட்டணங்களாம். யேசுநாதர் அங்கே போதிக்கப் போகவில்லை.

30. யேசுநாதர் சுவாமியுடைய கட்டளையெல்லாம் தேவசிநேகம் பிறசிநேகங்களில் அடங்கியிருக்கிறதினாலேயும், சிநேகமானது எல்லாவற்றையும் இன்பமாக மாற்றுகிறதினாலேயும் யேசுநாதர்சுவாமி: என் நுகம் இனிது, என் சுமை லகுவானது என்கிறார்.

15. யேசுநாதர் அதையறிந்து அவ்விடம் விட்டு விலகிப்போனார். ஆனால் (அங்கேயும்) அநேகர் அவரைப் பின்சென்றமையால், அவர்களெல்லோரையும் அவர் குணமாக்கி,

16. தம்மைப் பிரசித்தம்பண்ண வேண்டாமென்று அவர்களுக்குக் கட்டளையிட்டார்.

17. இவையாவும் இசையாஸ் தீர்க்கதரிசியால் சொல்லப்பட்டது நிறைவேறும்படி சம்பவித்தது. அவர்சொல்வதேதெனில் :

18. இதோ, நான் தெரிந்துகொண்ட என் ஊழியன், என்மனதுக்கு மிகவும் பிரியமான என் அன்பர், அவர்மேல் என் இஸ்பிரீத்துவை ஸ்தாபிப்பேன். அவர் நீதித் தீர்ப்பைப் புறஜாதியாருக்கு அறிவிப்பார்.

19. அவர் வழக்காடவுமாட்டார்; கூக்குரலிடவுமாட்டார். அவருடைய குரல் சத்தத்தை வீதிகளில் எவனும் கேட்கவுமாட்டான்.

20. நீதித் தீர்ப்பை ஜெயத்துக்குக் கொண்டுவருமட்டும் முறிந்த நாணலை ஒடிக்கவுமாட்டார். புகைகிற திரியை அவிக்கவுமாட்டார்.

21. அவருடைய நாமத்தின்மேல் புறஜாதியார் நம்பிக்கை வைப்பார்கள் என்பதாம். இசை. 42-1.

22. அத்தறுவாயிலே பசாசுபிடித்திருந்த குருடும் ஊமையுமாகிய ஒருவன் அவரிடத்தில் கொண்டுவரப்பட்டான். அவன் பேசும்படியாகவும் பார்க்கும்படியாகவும் அவனைச் சொஸ்தமாக்கினார்.

23. அப்பொழுது ஜனங்களெல்லாரும் அதிசயப்பட்டுத் தாவீதன் குமாரன் இவர்தானோ என்றார்கள்

24. பரிசேயரோவெனில் இதைக் கேட்டு: இவன் பசாசுகளின் தலைவனாகிய பேயேல் சேபூலைக்கொண்டு பசாசுகளைத் துரத்துகிறானொழிய மற்றப்படியல்ல என்றார்கள். மத். 9-34; மாற். 3-22; லூக். 11-15.

25. யேசுநாதர் அவர்களுடைய நினைவுகளை அறிந்து அவர்களுக்குச் சொன்னதாவது: தனக்கு விரோதமாய்ப்பிரிந்த எந்த இராச்சியமும் பாழாய்ப்போம். தனக்குத்தானே விரோதமாய்ப் பிரிந்த எந்தப்பட்டணமானாலும், வீடானாலும் நிலைநிற்கமாட்டாது. லூக். 11-17.

26. சாத்தான் சாத்தானைத் துரத்துவானாகில், தனக்குத் தான் விரோதமாய்ப் பிரிந்திருக்கிறானே. அப்படியானால் அவன் இராச்சியம் நிலை நிற்பதெப்படி ?

27. நான் பேயேல்சேபுபினாலே பேய்களை ஓட்டுகிறேனாகில், உங்கள் மக்கள் யாராலே அவைகளை ஓட்டுகிறார்கள் ? ஆகையால் அவர்களே உங்களுக்கு நடுவர்களாயிருப்பார்கள்.

28. ஆனால் நான் சர்வேசுரனுடைய இஸ்பிரீத்துவினால் பேய்களை ஓட்டுகிறேனாகில், சர்வேசுரனுடைய இராச்சியம் உங்களிடத்தில் வந்துவிட்டது.

29. அல்லாமலும் பலவானைப்பிடித்து முந்திக் கட்டினாலொழிய ஒருவன் பலவானுடைய வீட்டுக்குள் எப்படி நுழைந்து அவனுடைய தட்டுமுட்டுகளைக் கொள்ளையிடுவான் ? கட்டினபின்னல்லோ அவனுடைய வீட்டைக்கொள்ளையிடுவான்.

29. இந்த உவமையின் அர்த்தமாவது :—இந்நாள்மட்டும் பசாசு மனிதர்கள்பேரில் வல்லமை செலுத்தி ஆத்துமங்களை வசப்படுத்தி ஆண்டுகொண்டுவந்தது. ஆனால் இப்போது அதைப்பார்க்க வல்லபமுள்ள யேசுநாதர் வந்து, அதை ஜெயித்துக்கட்டி அடக்கி அதற்கடிமைப்பட்டிருந்த மனிதர்களை மீட்டுக்கொண்டு வருகிறாரென்று அர்த்தமாம்.

30. என்னோடு இராதவன் எனக்கு விரோதியாயிருக்கிறான். என்னோடு கூட்டிச்சேர்க்காதவன் சிதறடிக்கிறான். மாற். 9-39; லூக். 9-50.

31. ஆனதைப்பற்றி நான் உங்களுக்குச்சொல்லுகிறதாவது: எவ்வித பாவமும் தூஷணமும் மனிதருக்கு மன்னிக்கப்படும்; இஸ்பிரீத்துவானவரைத் தூஷணித்தலோ மன்னிக்கப்படமாட்டாது. மாற். 3-28; லூக். 12-10.

32. மீளவும் யாராகிலும் மனுமகனுக்கு விரோதமாய் ஒரு வார்த்தை சொல்லியிருந்தால், அவனுக்கு மன்னிக்கப்படும், இஸ்பிரீத்துசாந்துவுக்கு விரோதமாய்ப் பேசுவானாகில், அவனுக்கு இம்மையிலும் மறுமையிலும் மன்னிக்கப்படமாட்டாது.

33. ஒன்றில் மரத்தையும் நல்லதாக்குங்கள், கனியையும் நல்லதாக்குங்கள். ஒன்றில் மரத்தையுங் கெட்டதாக்குங்கள், அதின் கனியையுங்கெட்டதாக்குங்கள். ஏனெனில் மரமானது அதின்கனியைக்கொண்டே அறியப்படுகின்றது.

34. விரியன் பாம்புகளின் ஜன்மமே நீங்கள் தீயோராயிருக்க, நல்லவைகளை எப்படிப் பேசக்கூடும்? ஏனெனில் இருதய சம்பூரணத்தால் வாய் பேசுகின்றது. லூக். 6-45.

35. நல்ல மனுஷன் நல்லவைகளை நல்ல பொக்கிஷத்திலிருந்து எடுத்துக் காட்டுகிறான். கெட்ட மனுஷன் கெட்டவைகளைக் கெட்டபொக்கிஷத்திலிருந்து எடுத்துக் காட்டுகிறான்.

36. ஆனால் மனுஷர்கள் பேசியிருக்கும் ஒவ்வொரு வீண்வார்த்தைகளின் பேரிலும் தீர்வை நாளில் கணக்குச் சொல்லுவார்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

37. ஏனெனில் உன் வார்த்தைகளைக் கொண்டே நீ நீதிமானுக்கப்படுவாய்; அல்லது உன் வார்த்தைகளைக்கொண்டே குற்றவாளியென்று தீர்வையிடப்படுவாயென்று திருவுளம்பற்றினார்.

---

32. மறுமையில் மன்னிக்கப்படுகிற பாவங்கள் உண்டென்று இவ்வேதவாக்கியத்தில் காண்பிக்கப் பட்டிருக்கிறதினாலே, உத்தரிக்கிற ஸ்தலம் உண்டென்பது திருஷ்டாந்தமாய் விளங்குகிறதாமே. ஏனெனில் நரகத்தில் ஒரு பாவமும் மன்னிக்கப்படுகிறதுமில்லை. மோட்சத்தில் ஒரு சொற்பப் பாவத்தோடு பிரவேசிக்கவுங் கூடாது. ஆகையால் மறுமையில் பாவ மன்னிப்படையத்தக்க இடமே உத்தரிக்கிற ஸ்தலமென்று சொல்லவேண்டும். 'இம்மையிலும் மறுமையிலும் பொறுக்கப்படாத பாவமாகிய இஸ்பிரீத்துசாந்துவைத் தூஷணிக்கிற பாவங்கள் ஏதென்றால், மனமறியச் சத்தியத்தை எதிர்த்தலும், யூதர்கள் செய்தாப்போல தேவ வல்லபத்தால் உண்டான அற்புதங்களை பசாசின் கிரியைகள் என்று சாதித்தலுமாம். இப்படிச் செய்கிறவர்கள் கன்னெஞ்சராய்த் தங்கள் பாவத்திற்காக வழக்கமாய் மனஸ்தாபப்படாமற் போகிறதினாலே அவர்கள் பாவப்பொறுத்தலடைகிறதில்லை. ஆனால் என்ன பாவத்தைச் செய்திருந்தாலும் பாவியானவன் மெய்யாகவே மனஸ்தாபப்பட்டால் பாவப்பொறுத்தலடைவான் என்பதற்குச் சந்தேகமில்லை.

33. **கனியையும் நல்லதாக்குங்கள்:**—ஜனங்களெல்லாரும் யேசுநாதர்சுவாமியை நல்லவரென்று புகழ்ந்தார்கள். (மத். 22-16.) அவருடைய விரோதிகள் முதலாய் அவரிடத்தில் யாதோர் குற்றமுங் காணவில்லை. (மத். 26-60.) ஆகையால் யேசுநாதர் நல்லவராயிருக்க, அவர் செய்யும் கிரியைகளாகிய கனிகளும் நல்லவைகளாயிருக்கவேண்டியது. ஆகையால், அவர் பேய்களை ஒட்டுகிறது பொல்லாத பசாசின் உதவியினாலென்று பரிசேயர் சொன்னது மகா அபத்தமாம்.

36. ஒரு வீண் வார்த்தைக்கும் கணக்குக் கொடுக்க வேண்டியிருக்குமென்று யேசுநாதர்சுவாமி சொல்லுகிறதினாலே அற்பக் குற்றங்களுக்கு தண்டனையாக மறுலோகத்தில் உத்தரிக்கிற ஸ்தலமிருக்கிறதென்று வெளியாகிறது.

38. அப்போது வேதபாரகரிலும் பரிசேயரிலும் சிலர் யேசுநாதனை நோக்கி: போதகரே, உம்மிடமிருந்து ஒரு அடையாளத்தைக் காண விரும்புகிறோம் என்றார்கள்.

39. அவர் பிரத்தியுத்தாரமாக அவர்களுக்குச் சொன்னதாவது: இந்தக் கெட்ட விபசார சந்ததி ஒரு அடையாளத்தைத் தேடுகிறது. ஆயினும் யோனாஸ் தீர்க்கதரிசியின் அடையாளமல்லாது வேறு அடையாளம் இதற்குக் கொடுக்கப்படமாட்டாது. மத். 16-4; லூக். 11-29; 1 கொ. 1-22; யோனா. 2-1.

40. எவ்வாறெனில் யோனாஸென்பவர் மூன்று பகலும் மூன்று இரவும் திமிங்கலத்தின் வயிற்றினுள் இருந்தது போல, மனுமகனும் மூன்று பகலும் மூன்று இரவும் பூமியின் உள்ளத்துள் இருப்பார்.

41. நினிவைப்பட்டணத்தார் தீர்வை நாளிலே இச்சந்ததியாரோடு எழும்பி இவர்களைக் குற்றவாளிகளென்று தீர்ப்பார்கள். ஏனெனில் அவர்கள் யோனாஸென்பவருடைய பிரசங்கத்தைக் கேட்டுத் தவஞ்செய்தார்கள். ஆனால் இதோ, யோனாஸிலும் மேற்பட்டவர் இங்கேயிருக்கிறார். யோனா. 3-5.

42. தென்திசை யரசி தீர்வைநாளிலே இச்சந்ததியாரோடு எழும்பி இவர்களைக் குற்றவாளிகளென்று தீர்ப்பாள். ஏனெனில், அவள் சலோமோனுடைய ஞானத்தைக் கேட்கும்படி பூமியின் எல்லைகளிலிருந்து வந்தாள். ஆனால், இதோ, சலோமோனிலும் மேற்பட்டவர் இங்கேயிருக்கிறார். 3 அரச. 10-1; லூக். 11-31

43. அசுத்த அரூபி ஒரு மனுஷனிடத்திலிருந்து புறப்பட்டபின்பு வறண்ட இடங்களில் இளைப்பாற்றியைத்தேடித் திரிந்துங் காணமல். லூக். 11-24.

44. நான் விட்டுவந்த என் வீட்டுக்குத் திரும்பிப்போவேன் என்றுசொல்லி, அங்கேவந்தபோது வீடுவெறுமையாயும், துடைப்பத்தால் பெருக்கி அலங்கரிக்கப்பட்டும் இருக்கிறதைக் கண்டு,

45. திரும்பிப்போய், தன்னிலும் அதிகப்பொல்லாத வேறு ஏழு பேய்களைத் தன்னோடு கூட்டிக்கொண்டு வந்து உட்பிரவேசித்து, அங்கே வாசம் பண்ணுகின்றது. ஆகையால் அந்தமனிதனுடைய முந்தின ஸ்திதியிலும் பிந்தின ஸ்திதி அதிக கேடுள்ளதாயிற்று. மகா கெட்டவர்களாகிய இந்தச் சந்ததியாருக்கும் இவ்வாறே சம்பவிக்குமென்று திருவுளம்பற்றினார். 2 இராய. 2-10.

46. அவர் ஜனங்களோடு இன்னும் பேசிக்கொண்டிருக்கையில், இதோ, அவருடைய தாயாரும் சகோதரரும் வெளியே நின்று அவரிடத்தில் பேசும்படி வழிபார்த்துக்கொண்டிருந்தார்கள். மாற். 3-31; லூக். 8-19.

47. ஆகையால் ஒருவன் அவரை நோக்கி: இதோ, உம்முடைய தாயாரும் சகோதரரும் உம்மைத் தேடிக்கொண்டு வெளியில் நிற்கிறார்கள் என்றான்.

---

38. இவ்விடத்தில் அடையாள மென்பது புதுமை, அல்லது ஆச்சரியமான செய்கையென்று அர்த்தமாம். இன்னும் வேறிடங்களிலும் இப்படியே அர்த்தமாம்.

40. **மூன்று பகலும் மூன்று இரவும்:**—யூதர்களுடைய நாட்கணக்கு காலையில் துவக்காமல், சாயங்காலத்தில் தொடங்கினது. ஆகையால் வெள்ளிக்கிழமை சாயந்திரமான போதே சனிக்கிழமை ஆரம்பமாயிற்று. யேசுநாதர்சுவாமி ஒய்வுநாளாகிய சனிக்கிழமை துவக்குமுன்னே கல்லறையில் அடக்கப்பட்டதினால் மூன்றுநாள் கல்லறையிலிருந்தாரென்கிறது சரிதான். மூன்றுநாள் இரவும் பகலுமென்கிறது எபிரோய பாஷைப் போங்கொழிய மற்றப்படியல்ல. மத். 4-2; 3 அரசர். 18-8 காண்க.

48. தம்மிடத்தில் இதைச் சொன்னவனுக்கு அவர் பிரத்தியுத்தாரமாக: என் தாயார் யார்? என் சகோதரர் யார் என்று சொல்லி,

49. தமது சீஷர்கள் பக்கமாய்க் கையை நீட்டி: இதோ என்தாயாரும், என் சகோதரரும்;

50. ஏனெனில் பரமண்டலங்களிலிருக்கிற என்பிதாவின் சித்தத்தை நிறைவேற்றுகிறவன் எவனோ,அவனே எனக்குச் சகோதரனும், சகோதரியும், தாயுமாயிருக்கிறான் என்றார்.

## 13-ம். அதிகாரம்.

யேசுநாதர் விதை விதைத்தவன் உவமையையும், தகளை, கடுகுமணி, புளித்தமா, புதையல், முத்து, வலை, இவைகளின் உவமைகளையும் சொன்னதும், தமது சுய நாட்டில் அவமதிக்கப்பட்டதும்.

1. அன்றுதானே யேசுநாதர் வீட்டிலிருந்து புறப்பட்டுப்போய், கடலோரத்தில் உட்கார்ந்தார்.

2. அப்போது அவரிடத்தில் திரளான ஜனங்கள் வந்து கூடினமையால், அவர் ஓர் படகிலேறி உட்கார்ந்தார். ஜனக்கூட்டமெல்லாம் கரையில் நின்றுகொண்டிருந்தது. மாற். 4-1; லூக். 8-4.

3. அவர் அநேக காரியங்களை உவமைகளாக அவர்களுக்குப் பேசித் திருவுளம்பற்றினதாவது: இதோ விதை விதைக்கிறவன் விதைக்கப் புறப்பட்டான்.

4. அவன் விதைக்கிறபோது சில விதைகள் வழியோரத்தில்விழ, ஆகாயப்பறவைகள் வந்து அவைகளைப் பட்சித்துப்போட்டன.

5. சில விதைகள் அதிக மண்ணில்லாத கற்பாறை நிலத்தில் விழுந்து, மண் ஆழமில்லாததினால் உடனே முளைத்தன.

6. ஆயினும் சூரியன் எழும்பவே, அவைகள் எரிந்து, வேரில்லாமையால் உலர்ந்துபோயின.

7. சில விதைகள் முள்ளுக்கள் நடுவில் விழவே, முள்ளுகள் எழும்பி, அவைகளை நெருக்கிப்போட்டன.

8. வேறு சில விதைகள் நல்ல நிலத்தில் விழுந்து, ஒன்றுக்குச் சிலது நூறாகவும், சிலது அறுபதாகவும், சிலது முப்பதாகவும் பலனைத் தந்தது.

9. கேட்கச் செவியுள்ளவன் கேட்கக்கடவான் என்று திருவுளம்பற்றினார்.

10. பின்பு சீஷர்கள் அவரிடத்தில் வந்து, ஏன் அவர்களோடு உவமைகளாகப் பேசுகிறீரென்று கேட்டார்கள்.

11. அவர் மறுமொழியாக அவர்களுக்குச் சொன்னதாவது: மோக்ஷ இராச்சியத்தின் இரகசியங்களை அறிந்துகொள்ள உங்களுக்குக் கொடுக்கப்பட்டது. அவர்களுக்கோ கொடுக்கப்படவில்லை.

12. ஏனெனில் உள்ளவன் எவனோ அவனுக்குக் கொடுக்கப்படும்; அவனுஞ் சம்பூரணனாவான். இல்லாதவன் எவனோ அவனிடத்தினின்று உள்ளதும் எடுத்துக்கொள்ளப்படும். மத். 25-29; லூக். 19-26.

13. அவர்கள் கண்டும் காணாமலும், கேட்டும் கேளாமலும், உணராமலுமிருக்கிறபடியால், நான் அவர்களோடு உவமைகளில் பேசுகிறேன்.

48. இவ்வாக்கியத்தினாலே சுவாமி தமது மாதாவைப் புறக்கணித்தாரென்று பதிதர் சலஞ் சாதிக்கிறார்கள். ஆனால் பிதாவையும் மாதாவையும் சங்கித்திருப்பாயாக என்கிற கற்பனையைக் கொடுத்த திவ்வியகர்த்தனை இப்படித் தூற்றுகிறது பெரிய தேவ தூஷணமே யொழிய மற்றப்படியல்ல. ஆனால் பெற்றோர் பிறந்தார் சகோதரர் பேரிலுள்ள அன்பைப் பறுத்துத் தேவ ஊழியத்தை விடக்கூடாதென்றும், தேவ சிநேகமே எல்லாத்திலும் தமக்குப் பிரியமென்றும் இதிலே கர்த்தர் கற்பிக்கச் சித்தமானாரென்றும் அறியவும்.

காக்கின்றமன்னகவியொட்டக்கூத்தநின்கட்டுறையாம்
பாக்கண்டொளிப்பர்களோதமிழ்பாடியமாவலரே. (உ௨)

கருமான்.

செல்லன்புதல்வன்றிருவேங்கடவன்செகத்குருவாங்
கொல்லன்கவியைக்குறைசொல்லுவோரைக்குறடுகொண்டு
பல்லைப்பிடுங்கிப்பருந்தாட்டமாட்டிப்பகைவர்முன்னே
அல்லும்பகலுமடிப்பேன்கவியிருப்பாணிகொண்டே. (உ௩)

அம்பட்டன்.

விண்பட்டகொக்கெனவெல்லுமவலலூறின்விலவிலத்துப்
புண்பட்டநெஞ்சொடுமிங்குநின்றுய்பொட்டையாய்புகலாய்
கண்பொட்டையாயினுமம்பட்டனன்கவிவாணர்முன்னே
பண்பட்டசெந்தமிழ்நீயுந்திடுக்கிடப்பாடுவனே. (உ௪)

குயவன்.

மோனைமுத்தமிழ் மும்மதமும்பொழி
யானைமுன்வந் தெதிர்த்தவரொட்டா
கூனையுங்குடமுங் குண்டுசட்டியும்
பானையும்வனையங்குசப் பையலயான். (உ௫)

தச்சன்.

சொன்னசந்தக்கவியாவருஞ்சொலலுவர்சொற்சுவைசேர்
இன்னசந்தக்கவியேதெனமபோதிலெதிர்த்தவரை
வன்னசந்தங்கெடவாயைக்கிழித்திந்தவாய்சசியிறைற்
கன்னசந்தங்களினிறகவியாபபைகட்டாவுவனே. (உ௬)

தட்டான்.

திகிரிவட்டக்குடைச்செங்கோலபயன்செழுஞ்சிலம்பிற்
பகுதியொட்டக்கூத்தபட்டனைநானப்பணைககவியின்
மிகுதவொட்டத்தட்டிவிட்டகையோட்டிலுருககிக்குத்திப்
புகுதவொட்டித்தட்டிமேலணுகாவண்ணம்போர்செய்வனே. ()

ஒட்டக்கூத்தனும் புகழேந்தியும்.

வென்றிவளவன் விறல்வேந்தர்தம்பிரான்
என்றுமுதுகுக் கிடான்கவசம்-துன்றும்
வெறியார்தொடைகமழு மீனவர்கோன்கைவேல்
எறியான்புறங்கொடுக்கி னென்று. (உ௮)

பழியும்புகழுமெவர்க்குமுண்டாமிந்தப்பாரிலுனக்
கழியுஞ்சிலையுங்கயலுமென்றுலகளங்கதுங்கா

அப்படியானால் தகளைகள் எங்கிருந்து உண்டானதென்று கேட்க,

28. அதற்கு அவன்: இதை மாற்றான் செய்தான் என்றான். அப்போது ஊழியர்: நாங்கள் போய் அவைகளைப் பிடுங்கிப்போட உமக்குச் சித்தமோ என்று கேட்டார்கள்.

29. அதற்கு அவன்: வேண்டாம், தகளைகளைப் பிடுங்கும்போது அவைகளோடு கூட ஒருவேளை கோதுமையையும் வேர் அறுத்துப்போடுவீர்கள்.

30. ஆனதால் இரண்டையும் அறுப்புக் காலம்வரையில் வளரவிடுங்கள். அறுப்புக்காலத்தில் நான் அறுப்புக்காரரைப்பார்த்து: முந்த முந்தத் தகளைகளைச்சேர்த்து அவைகளைச் சுட்டெரிக்கும்படி கட்டுகளாகக் கட்டுங்கள்; கோதுமையையோ, என் களஞ்சியத்தில் சேர்த்துவையுங்கள் என்பேன் என்று சொன்னான் என்றார்.

31. அவர் வேறொரு உவமையையும் அவர்களுக்குச் சொல்லிக் காட்டினார்: பரலோக இராச்சியமானது ஓர் மனிதன் எடுத்துத் தன் நிலத்தில் விதைத்த கடுகுமணிக்கு ஒப்பாய் இருக்கின்றது. மாற். 4-31; லூக். 13-19.

32. அது சகல வித்துகளிலும் மிகவும் சிறிதாயிருந்தாலும், வளரும் போது சகல பூண்டுகளிலும் அதிகப் பெரிதாகி, ஆகாயத்தின் பட்சிகள் அதின் கிளைகளிலே வந்து வசிக்கத்தக்க மரமாகிறது என்றார்.

33. இன்னமும் அவர் அவர்களுக்கு உரைத்த வேறோர் உவமையாவது: பரலோக இராச்சியமானது மூன்று மரக்கால் மாவு முழுதும் புளிப்பேறும்படி ஓர் ஸ்திரீ அதற்குள் மறைத்துவைத்த புளிக்காரத்துக்கு ஒப்பாயிருக்கிறதென்று திருவுளம்பற்றினார். லூக். 13-21.

34. யேசுநாதர் இவையெல்லாஞ் ஜனக் கூட்டத்துக்கு உவமைகளாகச் சொன்னார். உவமைகளினாலன்றி வேறு விதமாய் அவர்களோடு பேசினவரல்ல.

35. இவ்விதமாய் நான் உவமைகளில் என் வாயைத் திறப்பேன். உலக ஆரம்பமுதல் மறைவாய் இருப்பவைகளை வெளிப்படுத்துவேன் என்று தீர்

---

29. **கோதுமையையும் வேர் அறுத்துப்போடுவீர்கள்:** இவ்வாக்கியத்தைக் கொண்டு இந்தஉலகத்திலே கெட்டவர்களும் துன்பதுரிதங்களுமுண்டாயிருப்பது நல்லவர்களுடைய நன்மைக்காகத்தான் என்று விளங்குகிறது. ஆயினும் சர்வேசுரன் பொல்லாதவர்களுக்கு உடனேக்குடனே ஆக்கினை இடாமல், அவர்கள் மரணகாலம் வரையில் காத்திருப்பானேனென்றால், அவர்களுக்கு இடும் ஆக்கினையால் நல்லவர்களுக்கு யாதொரு கெடுதியுண்டாகாதிருக்கவும், அவர்களாலடையக்கூடிய உதவியற்றுப்போகாதிருக்கவும் இன்னும் அவர்களே மனந்திரும்பி நல்லவர்கள் ஆகலாமென்பதினாலுந்தானென்றறிக.

32. யேசுநாதசுவாமியுடைய திருச்சபையானது ஏழைகளுக்குச் சத்தியத்தைப் பிரசங்கிக்கிறதினாலேயும், தாழ்ச்சியைப் படிப்பிக்கிறதினாலேயும் ஒரு கடுகு மணிக்குச் சமானமாயிருக்கிறது. அப்படியிருந்தும் உலகத்தின் எத்திசையிலும் அது பரம்பி எல்லோருக்கும் குளிர்ந்த நிழல்போன்ற மனச் சமாதான சந்தோஷத்தைத் தருகிறது.

33. ஒரு ஊரில் அல்லது ஒரு கோத்திரத்தில் ஒருவன் மாத்திரம் முந்த முந்த விசுவாசியானாலும் அவனுக்குக் கொடுக்கப்பட்ட வரப்பிரசாதமானது அவனைச் சூழ்ந்திருக்கிறவர்களிடத்திலும், விசேஷமாய் அவன் உறவின் முறையாரிடத்திலும் முயற்சி செய்து அவர்களுக்குள்ளேயுஞ் சத்திய விசுவாசம் பரம்பிவரக் காண்கிறோம். இவ்விதமாய் ஒரு மனிதன் மூன்று மரக்கால் மாவுக்குள் திணிக்கப்பட்ட புளிக்காரம்போல் ஆகின்றான். அப்படியே புல்காரியா தேசத்தில் அடிமையாகப் பிடித்துக்கொண்டு போகப்பட்டிருந்த ஒரு அஞ்ஞான ஸ்திரீ கிறீஸ்துவளாகி, தன் தேசத்தாரெல்லாரும் மனந்திரும்பக் காரணமானாள்.

க்கதரிசியால் சொல்லப்பட்டது நிறை வேறும்படியாயிற்று. சங். 77-2.

36. பின்பு யேசுநாதர் ஜனங்களை அனுப்பிவிட்டு, வீட்டில்சேர்ந்தபோது அவருடைய சீஷர்கள் அவரண்டை யில் வந்து: தேவரீர் வயலின் தகளைக ளைப்பற்றிய உவமையை எங்களுக்கு வெளியாக்கியருளும் என்றார்கள். மாற். 4-34.

37. அவர் பிரத்தியுத்தரமாக அவர்களுக்குத் திருவுளம்பற்றினதா வது: நல்ல விதையை விதைக்கிறவன் மனுமகனும்.

38. வயலோ உலகமாம். நல்லவிதை பரலோக இராச்சியத்தின் புத்திரராம். தகளைகளோ தீயோனுடைய மக்க ளாம்.

39. அவைகளை விதைத்த மாற்றான் பசாசாம்; அறுப்புக்காலமானது உலக முடிவாம்; அறுப்புக்காரர்களோ சம் மனசுக்களாம். காட்சி. 14-55.

40. ஆகையால் தகளைகளைக் கட் டித் தீயில் சுட்டெரிப்பது எப்படியோ, அப்படியே உலகமுடிவில் சம்பவிக்கும்.

41. மனுமகன் தம்முடைய தூதர் களை அனுப்புவார். அவர்கள் அவரு டைய இராச்சியத்தினின்று, சகல இட றல்களையும் அக்கிரமஞ் செய்வோரை யும் ஒன்றாகச்சேர்த்து,

42. அக்கினிச்சூளையில் தள்ளுவார் கள். அங்கே அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்கும்.

43. அப்போது நீதிமான்கள் தங் கள் பிதாவின் இராச்சியத்தில் சூரிய னைப்போலப் பிரகாசிப்பார்கள். கேட் கச் செவியுள்ளவன் கேட்கக்கடவான். தனி. 12-3.

44. பரலோக இராச்சியமானது ஓர் நிலத்தில் புதைத்திருக்கிற புதையலு க்கு ஒப்பாயிருக்கின்றது. அதைக் கண்ட மனிதன் அதை மறைத்து, அதைப்பற்றிய சந்தோஷத்தினால் போய், தனக்குள்ள யாவையும் விற்று அந்த நிலத்தை வாங்கிக்கொள்ளுகி றான்.

45. மீளவும் பரலோக இராச்சிய மானது நல்ல முத்துகளைத் தேடுகிற வர்த்தகனுக்கு ஒப்பாயிருக்கின்றது.

46. அவன் விலையேறப்பெற்ற ஓர் முத்தைக் கண்டமாத்திரத்தில், போய், தனக்குண்டான யாவற்றையும் விற்று அதை வாங்கிக்கொள்ளுகிறான்.

47. அல்லாமலும் பரலோக இராச் சியமானது கடலில் வீசப்பட்டு எவ் வகை மச்சங்களையுஞ் சேர்த்து வாரிக் கொள்ளும் வலைக்கு ஒப்பாயிருக்கின் றது.

48. அது நிறைந்தபின், வெளியில் இழுத்துக் கரையில் உட்கார்ந்து நல்ல வைகளை தெரிந்தெடுத்து, பாத்திரங்க ளில் வைத்துக்கொண்டு, ஆகாதவைக ளைப் புறம்பே எறிந்துவிட்டார்கள்.

44-46. இந்த இரண்டு உவமைகளுக்கும் அர்த்தமாவது: அநேக திரவியங்களை அட க்கிக்கொண்டிருக்கிற புதையலும் விலையேறப்பெற்ற முத்தும் சத்தியவேதந்தான். அதைக் கைக்கொள்ளும்படி விவேகமுள்ள மனிதன் தன் ஆஸ்திபாஸ்தி முதலிய யாவுமிழந்து போகப் பின்வாங்காதிருப்பதுமன்றி தன்னுயிரையு முதலாய்க் கொடுக்கச் சந்தோஷமாய்ச் சம்மதிப்பான் என்று அர்த்தமாம்.

47. இந்த வலை சத்திய திருச்சபைதான். அதில் ஞானஸ்நானம் பெற்றவர்களெல் லாரும் அடங்கினவர்களாம். ஆகிலும் அவர்களில் சிலர் நல்லவர்களாயுஞ் சிலர் கெட்டவ ர்களாயுஞ் நடக்கிறார்கள். நடுத்தீர்வை நாளிலே நல்லவர்களும் கெட்டவர்களும் பிரிக்கப் பட, நல்லவர்களுக்கு நித்திய மோட்சமும், பொல்லாதவர்களுக்கு நித்திய நரகமுங்கிடைக் கும்.

49. இவ்வண்ணமே உலகத்தின் முடிவிலே நடக்கும் தேவ தூதர் புறப்பட்டுப் போய் நீதிமான்கள் நடுவிலிருந்து தீயோரைப் பிரித்து,

50. அவர்களை அக்கினிச் சூளையிலே போடுவார்கள். அங்கே அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்குமென்றார்.

51. பின்னும் அவர்: நீங்கள் இவையெல்லாம் கண்டுபிடித்தீர்களோ? என்றார். அதற்கு அவர்கள்: ஆம் என்றார்கள்.

52. அப்போது அவர்களை நோக்கி அவர் சொன்னதாவது: ஆகையால் பரலோக இராச்சியத்துக்கடுத்தவைகளிலே தேர்ந்த வேதபாரகன் எவனும் தன் பொக்கிஷத்திலிருந்து புதியவைகளையும் பழையவைகளையும் வெளியில் எடுத்துக் காட்டுகிற வீட்டெஜமானுக்கு ஒப்பாயிருக்கின்றான் என்றார்.

53. யேசுநாதர் இந்த உவமைகளையெல்லாம் சொல்லி முடிந்தபின்பு, சம்பவித்ததேதெனில், அவர் அவ்விடம் விட்டு,

54. தம்முடைய சுயதேசத்துக்கு வந்து, அவர்களுடைய ஜெப ஆலயத்திலே போதித்துக்கொண்டுவந்தார். அவர்கள் ஆச்சரியப்பட்டுச் சொன்னதாவது: இந்த ஞானமும் அற்புத செய்கைகளும் இவருக்கு வந்ததெப்படி? மாற். 6-1; லூக். 4-16.

55. இவர் தச்சனுடைய குமாரனல்லவோ? இவருடைய தாயார் மரியம்மாளல்லவோ? யாக்கோபும், யோசேப்பும், சீமோனும், யூதாவும், இவருடைய சகோதரரல்லவோ?

56. இவருடைய சகோதரிகள் யாவரும் நமது நடுவிலிருக்கிறார்களல்லவோ? அப்படியிருக்க, இவருக்கு இவையெல்லாம் எங்கேயிருந்து உண்டாயிற்று? என்று சொல்லி,

57. அவர் மட்டில் இடறல்பட்டார்கள். யேசுநாதரோவெனில் அவர்களை நோக்கி: தன் சுய நாட்டிலும், சுய வீட்டிலுந் தவிர மகிமையடையாத தீர்க்கதரிசியில்லை என்றார்.

58. ஆதலால் அவர்களுடைய அவிசுவாசத்தினிமித்தம் அங்கே அவர் மிகுந்த அற்புதங்களைச் செய்யவில்லை.

## 14-ம். அதிகாரம்.

அர்ச். ஸ்நாபகஅருளப்பருடைய சிரசு பெண்பிள்ளைக்கு வெகுமதியாகக் கொடுக்கப்பட்டதும், வியாதிஸ்தர் ஆரோக்கியமடைந்ததும், ஐந்து அப்பங்களும் இரண்டு மச்சங்களும் பலுகினதும், இராயப்பர் கடலின்மேல் நடந்ததும்.

1. அக்காலத்தில் அத்தேசத்தின் சதுர்த்த பாகத்துக்கு அதிபதியான எரோதனென்பவன் யேசுநாதருடைய கீர்த்தியைப்பற்றிக் கேள்விப்பட்டு, மாற். 6-14; லூக். 9-7.

52. வேதபாரகர் திருச்சபையின் பிள்ளைகளுடைய சக்திக்கு தக்கது தாங்கள் கற்றிருக்கிற வேத சத்தியங்களை அவர்களுக்குப் படிப்பிக்கவேண்டியவர்கள். ஆகையால், பண்டக சாலையில் இருக்கிற பொருட்களை வெளியே எடுத்துக் காட்டுகிற வீட்டெஜமானுக்குச் சமானமாயிருக்கிறார்கள்.

55-56. **இவருடைய சகோதரர்**:—சகோதரிகள் என்பது கிட்டின பந்துக்களென்று அர்த்தமாம். இங்கே சொல்லப்பட்ட யாக்கோப்பும் யோசேப்பும் கிளேயோப்பாவின் மனைவியாகிய மரியம்மாளுடைய பிள்ளைகள். (மத். 27-56; அரு. 19-25) பெரியப்பன், சிற்றப்பன், பெரிய தாய், சிறிய தாய், இவர்களுடைய பிள்ளைகள் தங்களுக்குள் அண்ணன் தம்பி, அக்காள் தங்கச்சி, என்று அழைக்கிறது இந்தத் தேசத்திலும் சகசமான காரியமென்று எல்லாருக்கும் தெரியுமே. அவ்விதமே யூதர்களுக்குள்ளே கிட்டின உறவினரை அண்ணன் தம்பி என்பது வழக்கம்.

1. இங்கே குறிக்கப்பட்டிருக்கிற எரோதன் மாசில்லாத குழந்தைகளைக் கொன்ற எரோதனுடைய மகன். இவன் தன் தகப்பனுடைய இராச்சியத்தில் காற்பங்காகிய கலிலேயா நாட்டிற்கு அரசனாயிருந்தான். சதுர்த்தபாகம்=கால்பங்கு.

2. தன் ஊழியரோடு சொன்னதாவது: இவர் ஸ்நாபக அருளப்பர்தான். இவர் மரித்தோரில் நின்று உயிர்த்திருக்கிறார். இதைப்பற்றியே இவரிடத்தில் அற்புதங்கள் விளங்குகின்றன என்றான்.

3. இந்த எரோதன் தன் சகோதரனுடைய மனைவியாகிய எரோதியாளினிமித்தம், அருளப்பனைப் பிடித்துக் கட்டிக் காவலில் வைத்திருந்தான். மாற். 6-17; லூக். 3-20.

4. ஏனெனில் அருளப்பர் அவனைப் பார்த்து: நீர் அவளை வைத்திருக்கலாகாதென்று சொன்னார்.

5. எரோதன் அவரைக் கொலை செய்ய மனதாயிருந்தும், ஜனங்கள் அவரைத் தீர்க்கதரிசியாக எண்ணியிருந்தபடியால் அவர்களுக்குப் பயந்திருந்தான். மத். 21-26.

6. ஆனால் எரோதனுடைய ஜனன நாளிலே, எரோதியாளுடைய மகள் சபை நடுவில் நடனஞ்செய்து எரோதனுக்குப் பிரியப்பட்டாள்.

7. ஆகையால் அவள் தன்னிடம் எதுகேட்டாலுங் கொடுப்பதாக அவன் ஆணையிட்டு அவளுக்கு வாக்குக் கொடுத்தான்.

8. அவளோ தன் தாயினால் ஏற்கனவே எச்சரிக்கப்பட்டு: இப்போதே ஸ்நாபக அருளப்பருடைய சிரசை ஒரு தட்டில் எனக்குத் தாருமென்றாள்.

9. அரசன் இதைக்கேட்டு விசனப்பட்டான். ஆயினும் ஆணையைப்பற்றியும், தன்னோடு பந்தியில் இருந்தவர்களைப் பற்றியும் அதைக் கொடுக்கக் கட்டளையிட்டான்.

10. ஆதலால், ஆள் அனுப்பி, அருளப்பரைக் காவலிலே சிரச்சேதஞ் செய்வித்து,

11. அவருடைய சிரசை ஓர் தட்டில் கொண்டுவந்து சிறு பெண்ணின் கையில் கொடுக்க, அவள் அதைத் தன் தாயிடங் கொண்டுபோனாள்.

12. அப்போது அவருடைய சீஷர்கள் வந்து; அவருடைய சரீரத்தை எடுத்து அடக்கஞ் செய்து, பின்னும் யேசுநாதரிடத்தில் போய் அதை அறிவித்தார்கள்.

13. யேசுநாதர் அதைக்கேட்டு ஓர் படகிலேறி அவ்விடம் விட்டு, வனாந்தரமான ஓரிடத்தில் ஏகாந்தமாய் ஒதுங்கிப்போனார். ஆனால் ஜனங்கள் அதைக் கேள்விப்பட்டு, பட்டணங்களிலிருந்து கால் நடையாய் அவரைப் பின்தொடர்ந்தார்கள். மாற். 6-31; லூக். 9-10; அரு. 6-1.

14. அவர் அதினின்று வெளிப்பட்டபோது, திரளான ஜனக்கூட்டத்தைக் கண்டு, அவர்கள் மேல் மனமிரங்கி அவர்களுக்குள் வியாதிக்காரராயிருந்தவர்களைக் குணமாக்கினார்.

15. சாயங்காலமானபோது அவருடைய சீஷர்கள் அவரிடத்தில் வந்து: இது வனாந்தரமான இடமாயிருக்கின்றது, பொழுதுஞ் சாய்ந்துபோயிற்று. இந்த ஜனங்கள் கிராமங்களுக்குப் போய்த் தங்களுக்கு ஆகாரங்களை வாங்கிக்கொள்ளும்படி அனுப்பிவிடும் என்றார்கள்.

16. யேசுநாதரோவெனில் அவர்களை நோக்கி: அவர்கள் போகவேண்டுவதில்லை; நீங்களே அவர்களுக்குச் சாப்பிடக் கொடுங்களென்றார்.

17. அதற்கு, அவர்கள் மறுமொழியாக: இங்கே ஐந்து அப்பமும், இரண்டு மீனும் தவிர வேறொன்றும் எங்களிடத்தில் இல்லையென்றார்கள்.

18. அதற்கு அவர்: அவைகளை இங்கே என்னிடம் கொண்டுவாருங்கள் என்றார்.

19. அப்பொழுது, அவர் ஜனங்களைப் புல்லின்மேல் உட்காரக் கட்டளையிட்டு, ஐந்து அப்பங்களையும் இரண்டு மச்சங்

களையும் எடுத்துப் பரலோகத்தை அண்ணாந்துபார்த்து, ஆசீர்வதித்து அப்பங்களைப் பிட்டுச் சீஷர்களுக்குக் கொடுத்தார். சீஷர்களோ ஜனங்களுக்குக் கொடுத்தார்கள்.

20. எல்லாரும் சாப்பிட்டுத் திருப்தியடைந்தார்கள். மீதியான துண்டுகளைப் பன்னிரண்டு கூடைகள்நிறைய எடுத்தார்கள்.

21. பெண்களும் பிள்ளைகளும் தவிர, சாப்பிட்ட புருஷர்களுடைய தொகை ஐயாயிரமாமே.

22. அப்போது யேசுநாதர் தாம் ஜனங்களை அனுப்புவதற்குள்ளாகச் சீஷர்கள் உடனே படகிலேறித் தமக்கு முன் கடலைக்கடக்கும்படி அவர்களைக் கட்டாயம்பண்ணினார். மாற். 6-45.

23. அவர் ஜனங்களை அனுப்பிவிட்ட பின்பு, தனியே ஜெபம்பண்ணத்தக்கதாக மலையின்மேல் ஏறி, சாயரக்ஷையானபோது அங்கே தனித்திருந்தார்.

24. படகோவெனில் எதிர்க்காற்றாயிருந்ததினாலே, நடுக்கடலில் அலைகளால் அலைக்கழிக்கப்பட்டது.

25. இரவு நாலாஞ்சாம வேளையில், அவர் கடலின்மேல் நடந்து அவர்களிடத்திற்கு வந்தார்.

26. அவர் கடலின்மேல் நடக்கிறதைக் கண்டு அவர்கள் கலங்கி, இது பூதமென்று சொல்லிப் பயந்து அலறினார்கள்.

27. உடனே யேசுநாதர் அவர்களோடு பேசி: தைரியமாயிருங்கள்; நான்தான், பயப்படாதேயுங்கள் என்றார்.

28. இராயப்பர் மறுமொழியாக: ஆண்டவரே! நீர்தானென்றால், நான் ஜலத்தின்மேல் உம்மிடத்தில் வர எனக்குக் கட்டளையிட்டருளும் என்றார்.

29. அவர் வாவென்று சொல்லவே, இராயப்பர் படகினின்று இறங்கி யேசுநாதரிடஞ்சேர ஜலத்தின்மேல் நடந்து போனார்.

30. ஆனால் காற்றுப் பலமாயிருந்ததைக் கண்டு அவர் பயந்து, அமிழ்ந்திப்போகத் துவக்குகையில், ஆண்டவரே! என்னை இரட்சியுமென்று அலறினார்.

31. உடனே யேசுநாதர் கையை நீட்டி அவனைப் பிடித்து: அற்ப விசுவாசமுள்ளவனே! ஏன் பயப்பட்டாய்? என்றார்.

32. அவர்கள் படகிலேறினவுடனே காற்று அமர்ந்துபோயிற்று.

33. அப்பொழுது படகிலிருந்தவர்கள் அணுகி: மெய்யாகவே நீர் சர்வேசுரனுடைய குமாரன் என்று சொல்லி அவரை ஆராதித்தார்கள்.

34. பின்பு அவர்கள் கடலைக் கடந்து ஜெனேசரேத்தென்னும் நாட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். மாற். 6-53.

35. அவ்விடத்து மனிதர்கள் அவரை இன்னாரென்று அறிந்த மாத்திரத்தில், அந்நாடெங்கும் ஆளனுப்பி எல்லாப் பிணியாளிகளையும் அவரிடத்தில் கொண்டுவந்து,

36. அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தையாகிலும் இவர்கள் தொடும்படிக்கு அவரை மன்றாடினார்கள். தொட்ட யாவருஞ் சொஸ்தமடைந்தார்கள்.

## 15-ம். அதிகாரம்.

யேசுநாதர் பரிசேயருடைய தவறுதலான மாமூல்களைக் கண்டித்ததும், கானானேயாளுடைய மகளையும் வேறநேக வியாதிஸ்தரையுங் குணமாக்கினதும், அப்பமும் மச்சமும் பலுகச்செய்ததும்.

1. அப்பொழுது, எருசலேமிலிருந்து வேதபாரகரும் பரிசேயரும் வந்து யேசுநாதரிடத்தில் சொன்னதாவது: மாற். 7-1.

2. உம்முடைய சீஷர்கள் முன்னோர்களின் பாரம்பரை முறைமைகளை

மீறுவானேன்? ஏனெனில் அவர்கள் அப்பம் புசிக்கும்போது தங்கள் கைகளைக் கழுவுகிறதில்லையே என்றார்கள். மாற். 7-5.

3. அதற்கு அவர் பிரத்தியுத்தரமாகச் சொன்னதாவது: நீங்களும் உங்கள் பாரம்பரை முறைமைகளைப்பற்றிச் சர்வேசுரனுடைய கற்பனையை மீறுவானேன்? ஏனெனில் சர்வேசுரன் திருவுளம்பற்றியிருக்கிறதாவது:

4. பிதாவையும் மாதாவையுஞ் சங்கித்திருப்பாயாக. பிதாவை அல்லது மாதாவைச் சபிக்கிறவன் சாகவே சாவான் என்று சொல்லியிருக்கிறார். யாத். 20-12; உபாக. 5-16; க. இராய. 6-2; யாத்தி. 21-17; எண். 20-9; பழமொழி. 21-20.

5. நீங்களோ எவனாவது தன் தகப்பனை அல்லது தாயை நோக்கி: என்னால் ஒப்புக்கொடுக்கப்படுகிற எந்தக் காணிக்கையும் உனக்கு உதவுமென்பானானால் (போது) மென்று சொல்லி,

6. அவன் பிதாவையாவது மாதாவையாவது சங்கிக்கத் தேவையில்லையென்கிறீர்கள். இவ்வகையாய் உங்கள் மாமூல்களைப்பற்றி, நீங்கள் சர்வேசுரனுடைய கற்பனையை வியர்த்தமாக்கினீர்கள்.

7. கள்ள ஞானிகளே! உங்களைக் குறித்து இசையாசென்பவர் நன்றாய்த் தீர்க்கதரிசனஞ் சொல்லியிருக்கிறார். அதாவது:

8. இந்த ஜனம் உதடுகளால் என்னை ஸ்துதிக்கிறது. அவர்கள் இருதயமோ எனக்குத் தூரமாயிருக்கின்றது. இசை. 29-13; மாற். 7-6.

9. மனிதருடைய போதகங்களையும், கற்பனைகளையும் போதித்து, என்னை வியர்த்தமாய் வணங்குகிறார்கள் என்பதே.

10. பின்பு அவர் ஜனக்கூட்டத்தைத் தம்மிடத்தில் அழைத்து அவர்களை நோக்கி: நீங்கள் கேட்டு உணர்ந்துகொள்ளுங்கள். மாற். 7-14.

11. வாய்க்குள்ளே போகிறது மனுஷனை அசுத்தப்படுத்தாது; ஆனால் வாயினின்று புறப்படுகிறதே மனுஷனை அசுத்தப்படுத்தும் என்று திருவுளம்பற்றினார்.

12. அப்போது அவருடைய சீஷர்கள் அணுகி: பரிசேயர் இந்த வாக்கியத்தைக் கேட்டு இடறல்பட்டார்களென்று அறிந்திருக்கிறீரோ? என்று அவரிடத்தில் சொன்னார்கள்.

13. அவர் மாறுத்தாரமாக: என் பரம பிதா நடாத நாற்றெல்லாம் வேரோடு பிடுங்கப்படும். அரு. 15-2.

14. அவர்களை விட்டுவிடுங்கள். அவர்கள் குருடரும், குருடருக்கு வழி

---

5. பிள்ளைகள் தங்கள் தாய் தகப்பனுக்கு உதவியாகச் செய்யவேண்டிய செலவைக் கோவிலிலே காணிக்கையாகச் செலுத்திவிட்டால், பிள்ளைகளுடைய கடமை தீர்ந்ததென்று வேதபாரகரும், பரிசேயரும் தங்கள் சுய லாபத்தைப்பற்றிப் போதித்துக்கொண்டு வந்தார்கள். இது அடாதகாரியமென்று கர்த்தர் இவ்விடத்தில் யூதர்களுக்குக் காண்பிக்கிறார்.

9. **மனிதருடைய போதகங்கள்:**—அதாவது, வேத கற்பனைகளுக்கு ஒவ்வாததும் தன்னிலே பிரயோசனமற்றதும் பத்திக்கு ஏதுவற்றதுமான போதகங்கள், வீண் சாதியாசாரங்கள் இவ்விதமானவைகள்.

11. இவ்வாக்கியங்களைக்கொண்டு பதிதர் சுத்தபோசன நாட்களில் மாமிசம் சாப்பிட்டாலும் அதிலே குற்றமில்லையென்று சாதிக்கிறார்கள். ஆனால் ஆதித்தகப்பன் சாப்பிட்ட கனி புறத்திப்பட்ட பொருளாயிருந்தாலும், சர்வேசுரனுடைய கற்பனையை மீறி அவன் சாப்பிட்டதினாலே அவனுக்குக் குற்றமானதல்லோ; அதுபோல விலக்கப்பட்ட நாட்களிலே தின்ற மாமிஷத்தினாலல்ல, திருச்சபையின் கற்பனையை மீறுவதினால்தான் பாவமுண்டாகிறது.

காட்டிகளுமாயிருக்கிறார்கள். குருட
னுக்குக் குருடன் வழிகாட்டினால் இரு
வரும் குழியில் விழுவார்களென்று
திருவுளம்பற்றினார். லூக். 6-39.

15. அப்போது இராயப்பர் அவரை
நோக்கி: இந்த உவமையை எங்களுக்கு
வெளியாக்கியருளுமென்று கேட்டார்.
மாற். 7-17.

16. அதற்கு அவர்: இன்னம் உங்க
ளுக்குப் புத்தி இல்லையோ?

17. வாய்க்குள்ளே போகிற எது
வும் வயிற்றில் சென்று ஒதுக்கிடமாய்
வெளியே போகிறதென்று உங்களுக்
குத் தெரியாதோ?

18. வாயில் நின்று புறப்படுகிறவை
களோ, இருதயத்தில் நின்று வெளிப்ப
டுகின்றன. அவைகளே மனிதனை
அசுத்தப்படுத்தும்.

19. ஏனெனில் மனிதனுடைய இரு
தயத்தினின்று துர்ச் சிந்தனைகளும்
கொலைபாதகங்களும் விபசாரங்களும்,
காமங்களும், களவுகளும், பொய்ச் சா
ட்சிகளும், தேவ தூஷணங்களும் புறப்
படுகின்றன.

20. இவைகளே மனுஷனை அசுத்
தப்படுத்தும், கைகழுவாமல் சாப்பிடு
வதோ மனுஷனை அசுத்தப்படுத்தாது
என்றார்.

21. பின்பு யேசுநாதர் அவ்விடம்
விட்டுப் புறப்பட்டு, தீர், சீதோன்
திசைகளில் ஒதுங்கிப்போனார். மாற்.
7-24.

22. அப்போது இதோ கனானேய
நாட்டின் எல்லைகளிலிருந்து புறப்பட்டு
வந்த ஓர் ஸ்திரீ யேசுநாதரை நோக்கி:
ஆண்டவரே! தாவிதின் குமாரனே,
என்பேரில் இரக்கமாயிரும். என்
குமாரத்தி பசாசினால் கடினமாய் உபா
திக்கப்படுகிறாளென்று கூப்பிட்டாள்.
மாற். 7-24.

23. அவர் அவளுக்குப் பதில்மொழி
யாக ஒருவார்த்தையும் சொல்லவில்லை.
அப்போது அவருடைய சீஷர்கள் அவ
ரிடத்தில் வந்து: இந்த ஸ்திரீ நமது பிற
கே கூப்பிட்டுக்கொண்டு வருகிறாளே,
தேவரீர் அவளை அனுப்பிவிடுமென்று
மன்றாடினார்கள்.

24. அவரோ மறுமொழியாக: இஸ்
ராயேல் கோத்திரத்தினின்று சிதறிப்
போன ஆடுகளிடத்திற்கு அனுப்பப்
பட்டேனேயொழிய மற்றப்படியல்ல
வென்றார். மத். 10-6; அரு. 10-3.

25. ஆனால் அவள் வந்து, அவரை
ஆராதித்து; ஆண்டவரே! அடியாளு
க்கு உதவி செய்தருளுமென்று மன்றா
டினாள்.

26. யேசுநாதர் மறுமொழியாக அவ
ளைப் பார்த்து: பிள்ளைகளின் அப்ப
த்தை எடுத்து நாய்களுக்குப் போடு
வது நல்லதல்லவென்க,

27. அவளோ ஆண்டவரே! சரி
தான்; ஆகிலும் நாய்க்குட்டிகளும் தங்
கள் எஜமான்களுடைய மேசையிலி
ருந்து விழுகிற ரொட்டித் துண்டுகளைத்
தின்குமே என்றாள்.

28. அப்போது யேசுநாதர் பிரத்தி
யுத்தாரமாக: ஓ ஸ்திரீயே, உன் விசு
வாசம் பெரிதாயிருக்கின்றது; நீ விரு
ம்பினபடியே உனக்கு ஆகக்கடவதெ
ன்றார். அந்நேரமே அவள் மகள்
ஆரோக்கியமானாள்.

29. பின்பு யேசுநாதர் அவ்விட
த்தை விட்டுப்போய், கலிலேயாக் கட
லருகே வந்து, ஒரு மலைமீது ஏறி,
அங்கே உட்கார்ந்தார்.

24. இந்த வாக்கியத்திற்கு அர்த்தமாவது: கெட்டுப்போன இஸ்ராயேல் வீட்டின் ஆடுகளிடத்திற்குமாத்திரம் இப்போது அனுப்பப்பட்டிருக்கிறேன்; பிற்பாடு புறஜாதியாருக்குப் பிரசங்கிக்குங் காலம் வருமென்று அர்த்தமாம். (மத். 28-92.)

30. அப்பொழுது திரளான ஜனங்கள், தங்களோடு ஊமைகள், குருடர், சப்பாணிகள், முடவர் முதலான அநேகரைக் கூட்டிக்கொண்டு அவரண்டையில் வந்து, அவர்களை அவருடைய பாதத்தில் வைத்தார்கள். அவர் அவர்களைச் சௌக்கியப்படுத்தினார். இசை. 35-5.

31. ஆதலால் ஊமைகள் பேசுகிறதையும், சப்பாணிகள் நடக்கிறதையும், குருடர் காண்கிறதையும் ஜனங்கள் பார்த்து அதிசயித்து, இஸ்ரவேலரின் தேவனைத் துதித்தார்கள்.

32. அப்போது யேசுநாதர் தம்முடைய சீஷர்களை அழைத்து, அவர்களிடத்தில் சொன்னதாவது: இந்த ஜனக் கூட்டத்தின்மேல் பரிதாபப்படுகிறேன், ஏனெனில் இதோ மூன்றுநாளாய் என்னோடு விடாமலிருக்கிறார்கள்; அவர்களுக்குச் சாப்பிடவும் ஒன்றுமில்லை. வழியில் சோர்ந்து போகாதபடி, அவர்களைப் பட்டினியாய் அனுப்பிவிட எனக்கு மனதில்லையென்றார். மாற். 8-2.

33. அதற்குச் சீஷர்கள்: இவ்வளவு திரளான கூட்டத்தைத் திர்ப்தியாக்குவதற்கு வேண்டிய அவ்வளவு அப்பம், இந்த வனாந்தரத்தில் நமக்கு எப்படி அகப்படும்? என்றார்கள்.

34. யேசுநாதர் அவர்களை நோக்கி: உங்களிடத்தில் எத்தனை அப்பங்கள் உண்டென்றார். அவர்கள்: ஏழு அப்பங்களும் சில சிறுமீன்களும் உண்டென்றார்கள்.

35. அப்போது அவர் ஜனங்களைத் தரையில் பந்தியமரக் கட்டளையிட்டு,

36. ஏழு அப்பங்களையும் மீன்களையும் வாங்கி, நன்றியறிந்த தோத்திரஞ் சொல்லி, அவைகளைப் பிட்டுச் சீஷர்களுக்குக் கொடுத்தார். சீஷர்கள் ஜனங்களுக்குக் கொடுத்தார்கள்.

37. எல்லாரும் சாப்பிட்டுத் திர்ப்தியானார்கள். பின்பு மீதியான துண்டுகளை ஏழு கூடைகள் நிறைய எடுத்தார்கள்.

38. அசனம் பண்ணினவர்களோ, பெண்களும் பிள்ளைகளுந் தவிர, நாலாயிரம்பேராயிருந்தார்கள்.

39. பின்பு யேசுநாதர் ஜனக்கூட்டத்தை அனுப்பிவிட்டு, ஓர் படகில் ஏறி மகேதா நாட்டெல்லைகளுக்கு வந்தார்.

## 16-ம். அதிகாரம்.

பரிசேயர் சதுசேயருடைய புளிக்காரமும், இராயப்பருடைய விசுவாச உச்சாரணமும், அதின் சம்பாவனையும், கிறீஸ்துநாதர் தமது மரணத்தையும் உத்தானத்தையும் முன் அறிவித்ததும், சுய பரித்தியாகமும்.

1. அப்போது பரிசேயரும் சதுசேயரும் அவரைச் சோதிக்கும்படி அவரண்டையில் வந்து, வானத்தினின்று ஓர் அடையாளத்தைத் தங்களுக்கு காண்பிக்கும்படி அவரை மன்றாடினார்கள். மாற். 8-11.

2. அவரோ மறுமொழியாக அவர்களுக்குத் திருவுளம்பற்றினதாவது: சாயங்காலமானபோது நாளை வெக்களிப்பாயிருக்கும்; ஏனெனில் வானஞ் சிவந்திருக்கிறதென்றும், லூக். 12-54.

3. காலையிலோ இன்று புசல் உண்டாகும், ஏனெனில் வானஞ் சிவப்பும் மந்தாரமுமாய் இருக்கிறதென்றுஞ் சொல்லுகிறீர்கள்.

4. ஆனதால் வானத்தின் தோற்றத்தைப் பகுத்தறிய உங்களுக்குத் தெரிகிறதே. காலங்களின் அடையாளங்களை நிதானித்தறிய உங்களாலே கூடாதோ? இந்தக் கெட்ட விபசார சந்ததி ஓர் அடையாளத்தைக் கேட்கின்றது. ஆயினும் யோனஸ் தீர்க்கதரிசியின் அடையாளந்தவிர, வேறு அடையா

4. யோனஸ் தீர்க்கதரிசியின் அடையாளம்:—இதினர்த்தம் மத். 12-40 காண்க.

ளம் இதற்குக் கொடுக்கப்படமாட்டாதென்று சொல்லி, அவர்களைவிட்டுப் புறப்பட்டுப் போனார். மத். 12-39; யோனா. 2-1.

5. மேலும் அவருடைய சீஷர்கள் கடலைக்கடந்து அக்கரைக்குச் சென்றபோது, அப்பங்களைக் கொண்டுபோக மறந்துபோனார்கள்.

6. யேசுநாதர் அவர்களைப் பார்த்து: பரிசேயர் சதுசேயர் என்பவர்களுடைய புளித்த மாவின்மட்டில் கண்ணுண்டாயிருந்து எச்சரிக்கையாய் இருங்கள் என்றார். மாற். 8 15; லூக். 12-1.

7. அவர்களோ? நாம் அப்பங்களைக் கொண்டுவரவில்லையே என்று, தங்களுக்குள்ளே சொல்லி யோசித்துக்கொண்டிருநதார்கள்.

8. யேசுநாதர் அதையறிநது, அவர்களுக்குத் திருவுளம்பற்றினதாவது: அற்ப விசுவாசமுள்ளவர்களே, உங்களுக்கு அப்பங்கள் இல்லாததைப்பற்றி உங்களுக்குள்ளே சிநதிப்பானேன்?

9. இன்னும் நீங்கள் உணரவில்லையோ? ஐயாயிரம் பேர்களுக்கு ஐந்து அப்பங்களைப் பகிர்ந்தபோது, எத்தனை கூடை (மீதி) எடுத்தீர்கள் என்றும், மத். 14-7; அரு. 6-9.

10. நாலாயிரம் பேர்களுக்கு ஏழு அப்பங்களைப் பகிர்ந்தபோது எத்தனை கூடைகள் மிச்சமெடுத்தீர்களென்றும் உங்களுக்கு ஞாபகமில்லையோ? மத். 15-34.

11. ஆகையால் பரிசேயர் சதுசேயருடைய புளித்த மாவின்மட்டில் எச்சரிக்கையாயிருங்களென்று நான் சொன்னது அப்பத்தைப்பற்றியல்லவென்று நீங்கள் கண்டுபிடியாமல் போனதென்ன என்றார்?

12. அப்பொழுது அவர்கள் அப்பங்களின் புளிக்காரத்தைப் பற்றியல்ல, பரிசேயர் சதுசேயருடைய போதனையைப்பற்றியே எச்சரிக்கையாயிருக்கச் சொன்னாரென்று கண்டுபிடித்தார்கள்.

13. பின்பு யேசுநாதர் பிலிப்புவின் சேசாரேயா என்னுந் திசைகளுக்கு வநதபோது, தம்முடைய சீஷர்களை நோக்கி: மனுஷர்கள் மனுமகனை யாரென்று சொல்லுகிறார்களென்று கேட்டார். மாற். 8-27. லூக். 9-18.

14. அவர்கள் மாறுத்தாரமாக: சிலர் ஸ்நாபக அருளப்பரென்றும், சிலரோ எலியாவென்றும், வேறுசிலர் எரேமியாஸ் அலலது தீர்க்கதரிசிகளில் ஒருவரென்றுஞ் சொல்லுகிறார்களென்றார்கள்.

15. யேசுநாதர் அவர்களைப்பார்த்து: நீங்களோ, என்னை யாரென்கிறீர்கள் என்றுகேட்டார்.

16. சீமோன் இராயப்பர் மறுமொழியாக: நீர் கிறீஸ்துவானவர், சுயஞ்சீவிய சர்வேசுரனுடைய குமாரன் என்றார். அரு. 6-70.

17. அப்போது யேசுநாதர் அவருக்கு மறுமொழியாக, யோனாவின் குமாரனான சீமோனே, நீ பாக்கியவான், ஏனெனில் மாம்சமும் இரத்தமுமல்ல, பரமண்டலங்களிலிருக்கிற என் பிதாவானவர்தாமே இதை உனக்கு வெளிப்படுத்தினார்.

11. புளிக்காரம்:— பரிசேயர் சதுசேயருடைய துர்ப்போதகமாம். புளிக்காரமானது மாவுமுழுதும் புளித்துப்போகப்பண்ணுகிறதுபோலே, அவர்களுடைய துர்ப்போதகமும் கேட்கிறவர்களைக் கெடுத்துப்போடுகிறதென்று அர்த்தமாம்.



"மோக்ஷத்தின் திறவுகோல்களை உனக்குக் கொடுப்பேன்."

(மத். 16-19.)

18. மேலும் நான் உனக்குச் சொல்லுகிறேன் : நீ இராயாய் இருக்கிறாய்! இந்த இராயின்மேல் என் திருச்சபையைக் கட்டுவேன். நரகத்தின் வாசல்கள் அதை மேற்கொள்ள மாட்டாது. அரு. 1-42.

19. மோக்ஷத்தின் திறவுகோல்களையும் உனக்குக்கொடுப்பேன்; பூலோகத்தில் நீ எதைக் கட்டுவாயோ, அது பரலோகத்திலுங் கட்டப்பட்டிருக்கும் நீ பூலோகத்தில் எதைக் கட்டவிழ்ப்பாயோ, அது பரலோகத்திலுங் கட்டவிழ்க்கப்பட்டிருக்கும் என்றார். இசை. 22-22; அரு. 20-23.

20. அப்பொழுது யேசுக்கிறீஸ்து தாம்தான் என்பதை எவனுக்குஞ் சொல்லாதபடி அவர் தமது சீஷர்களுக்குக் கட்டளையிட்டார்.

21. அதுமுதல் யேசுநாதர் தாம் எருசலேமுக்குப் போகவும், மூப்பராலும் வேதபாரகராலும் ஆசாரியராலும் அநேகம் பாடுபடவும், கொலையுண்ணவும், மூன்றாம்நாள் உயிர்த்தெழும்பவும் வேண்டுமென்று தமது சீஷர்களுக்குச் சொல்லிக்காட்டத் தொடங்கினார்.

22. ஆனால் இராயப்பர் அவரைத் தனியே அழைத்து: சுவாமீ இது உமக்கு வராதிருக்கக்கடவது. இப்படி உமக்கு வரவு மாட்டாதென்று அவரைக் கடிந்துகொண்டார்.

23. அவர் திரும்பி இராயப்பரைப் பார்த்து: சாத்தானே என் பின்னாலே போ; எனக்கு நீ இடறலாயிருக்கிறாய். நீ சர்வேசுரனுக்கடுத்தவைகளையல்ல மனுஷருக்கடுத்தவைகளையே சிந்திக்கிறாய் என்றார். மாற். 8-33.

24. அப்போது யேசுநாதர் தம்முடைய சீஷர்களுக்கு வசனித்த வாக்கியமாவது: யாதொருவன் என் பிறகே வர மனதாயிருந்தால், தன்னைத்தானே

18. இரா என்றால் கற்பாறையென்று தெலுங்குப்பாஷையில் அர்த்தமாம். இந்த இராயின்மேல் என் திருச்சபையைக் கட்டுவேன், என்றதில் அர்ச்சியசிஷ்ட இராயப்பர் அசையாத கற்பாறைபோல் திருச்சபைக்கு அஸ்திவாரமாய் அதைத் தாங்கிப் பழுதில்லாமல் காப்பாற்றும் வரத்தை யேசுநாதர் அவருக்குக் கொடுத்தாரென்று அறிக. நரகத்தின் வாசல்கள், அதாவது பேய்களும் பேய்களால் ஏவப்பட்ட இதர மதத்தாரும், துஷ்டர்களும் திருச்சபையை அழிக்க என்ன முயற்சி செய்தாலும், என்ன தந்திரம் பண்ணினாலும் திருச்சபையை அழிக்கவும், ஒருக்காலும் திருச்சபை சத்தியத்தில் தவறவும், மாட்டாதென்று நிச்சயமாகிறது.

19. **மோட்சத்தின் திறவுகோல்கள் :** ஒரு கோட்டையின் திறவுகோலையுடைய அதிபதிக்கு அந்தக் கோட்டையின்மேல் அதிகாரம் இருக்கிறதுபோல இராயப்பருக்கு மோட்ச இராட்சியத்தின் மேல் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறதென்று யேசுநாதர்சுவாமி காட்டுகிறார். ஆகையால் அவர் மனுஷர் மோட்சத்தை அடைகிறதற்கு என்ன ஏற்பாடு செய்வாரோ, அவைகளையெல்லாம் யேசுநாதர் சுவாமியும் அங்கீகரிப்பாரென்று அறிக. இந்த ஏற்பாடுகளைத்தானே இவ்விடத்திலே கட்டுகிறதும், கட்டவிழ்க்கிறதென்றும், சொல்லியிருக்கிறது. ஆயினும் இந்த வார்த்தைகள் பாவ மன்னிப்பை விசேஷமான பிரகாரமாய்க் குறிக்கின்றன.

20. தாம் இன்னாரென்று வெளியரங்கமாய்ச் சகலருக்கும் அப்போஸ்தலர் பிரசங்கிக்க வேண்டியகாலம் இன்னும் வரவில்லையென்று யேசுநாதர் அறிந்து, தாம் தேவ குமாரனென்றும், உலக இரட்சகரென்றும், ஜனங்களுக்கு அறிவியாதபடி கற்பித்தார். பின்னும் இஸ்பிரீத்துவின் வரத்தைப் பெற்றுக்கொள்ளும் வரையில் அப்போஸ்தலர் அறிவிலும் தைரியத்திலும் குறைவுள்ளவர்களாயிருந்தமையால், அவர்கள் பேச்சு ஜனங்களுக்குள் ஏறாதபடியினாலும், அவர்களால் கேட்டு அறிந்துகொள்ளுவதைவிட, ஜனங்களே அவருடைய அற்புதங்களைக்கண்டு அவர் தேவ குமாரனென்று விசுவசிப்பது அவர்களுக்குப் பலனாகுமென்பதினாலும் அவ்விதம் கற்பித்தார்.

பரித்தியாகஞ் செய்து, தன் சிலுவையை எடுத்துக்கொண்டு என்னைப் பின்செல்லக்கடவான். மத். 10-38; லூக். 2-23; 14-27.

25. ஏனெனில் தன் பிராணனைக் காப்பாற்ற மனதாயிருக்கிறவன் அதை இழப்பான். என்னைப்பற்றித் தன் பிராணனை இழப்பவனோவென்றால் அதைக் கண்டடைவான். லூக். 17-33; அரு. 12-25.

26. மெய்யாகவே மனிதன் உலகமெல்லாம் ஆதாயமாக்கிக்கொண்டாலும், தன் ஆத்துமம் சேதப்பட்டால் அவனுக்குப் பிரயோசனமென்ன? அல்லது தன் ஆத்துமத்துக்கு ஈடாக என்னத்தைக் கொடுப்பான்?

27. மனுமகன் தம்முடைய பிதாவின் மகிமையிலே தன் தூதர்களோடு கூட வருவார். அப்பொழுது ஒவ்வொருவனுக்கும் அவனவன் கிரியைகளுக்குத் தக்கதாகப் பலன் அளிப்பார். அப். 17-31; ரோ. 2-6.

28. இங்கே நிற்கிறவர்களில் சிலர் மனுமகன் தம்முடைய இராச்சியத்தில் வருவதைக் காணுமளவும், மரணத்தைச் சுவைபார்க்கமாட்டார்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார். மாற். 8-39; லூக். 9-27.

## 17-ம். அதிகாரம்.

கிறீஸ்துநாதர் மறுரூபமானதும், அருளப்பனை எலியாவென்றதும், சந்திரரோகியைக் குணமாக்கினதும், விசுவாசத்தின் சக்தியை விளக்கித் தம்முடைய மரணத்தை மறுபடியும் முன்னறிவித்ததும், வரிப்பணங் கொடுத்ததும்.

1. (இதற்கு) ஆறு நாளைக்குப் பிறகு யேசுநாதர் இராயப்பனையும், இயாகப்பனையும், அவர் சகோதரனாகிய அருளப்பனையும் அழைத்துக்கொண்டு ஓர் உயர்ந்த மலையின்மேல் அவர்களை ஏகாந்தமாய்க் கூட்டிக்கொண்டுபோய், மாற். 9-1; லூக். 9-28.

2. அவர்களுக்கு முன்பாக மறுரூபமானார். அவருடைய முகம் சூரியனைப்போல துலங்கினது. அவருடைய வஸ்திரங்கள் பனியைப்போல வெண்மையாயிற்று.

3. அன்றியும் இதோ, மோயீசனும், எலியாசும் அவரோடு பேசுகிறவர்களாக அவர்களுக்குக் காணப்பட்டார்கள்.

4. அப்பொழுது இராயப்பர் யேசுநாதரை நோக்கி: சுவாமீ, நாம் இங்கேயிருக்கிறது நல்லது. தேவரீருக்குச் சித்தமானால், இங்கே உமக்கு ஒரு கூடாரமும், மோயீசனுக்கு ஒரு கூடாரமும், எலியாசுக்கு ஒருகூடாரமுமாக மூன்று கூடாரங்களை அடிப்போமாகவென்றார்.

28. **மனுமகன் தன் இராச்சியத்தில்** வருவதென்பதற்கு இரண்டு அர்த்தஞ் சொல்லலாம் 1-வது. தமது தெய்வீக மகிமையில் காணப்படுவது என்க. இவ்வித மகிமையில் தாம் மறுரூபமானபோதும், தாம் பரலோகத்துக்கு ஆரோகணமானபோதும் தமது தெய்வீக மகிமையைக் காண்பித்தருளினார். 2-வது. நடுத்தீர்க்க வரும்போது என்றர்த்தமாம். இந்தக் கருத்தில் எருசலேமுக்குத் தீர்வையிட்டு அதை அழித்து அத்தோடு பழைய வேதச் சடங்குகளையும் மாற்றிப் புது ஏற்பாட்டை நிலை நிறுத்தின காலமென்றர்த்தமாம்.

3. யேசுநாதர் வேதப்பிரமாணத்தையும் தீர்க்கதரிசனத்தையும் நிறைவேற்ற வந்ததினாலே வேதப்பிரமாணத்தைக் கொடுத்த மோயீசனும், பிரதான தீர்க்கதரிசிகளுக்குள்ளே ஒருவரான எலியாசும்: இவர்தான் மனுக்குலத்தின் இரட்சகரென்று அவருக்குச் சாட்சிகளாக அவரோடு காணப்பட்டார்களென்று அறிக.

5. அவர் இன்னம் பேசிக்கொண்டிருக்கையில், இதோ பிரகாசமுள்ள ஓர் மேகம் அவர்களுக்கு நிழலிட, மேகத்தினின்று இதோ, ஓர் குரலொலி உண்டாகி: நம்முடைய நேச குமாரன் இவரே, இவர்பேரில் நாம் பூரண பிரியமாயிருக்கிறோம், இவருக்குச் செவிகொடுங்கள் என்று சத்தித்தது. மத். 3-17; 2 இரா. 1-17.

6. இதைக்கேட்டுச் சீஷர்கள் முகங்குப்புற விழுந்து, மிகவும் பயந்தார்கள்.

7. அப்பொழுது யேசுநாதர் கிட்ட வந்து, அவர்களைத் தொட்டு: எழுந்திருங்கள், பயப்படாதேயுங்கள் என்றார்.

8. அவர்களோ தங்கள் கண்களை ஏறெடுத்துப் பார்த்தபொழுது, யேசுநாதர் ஒருவரைத் தவிர வேறொருவரையுங் காணவில்லை.

9. அவர்கள் மலையிலிருந்து இறங்குகையில், யேசுநாதர் அவர்களை நோக்கி: மனுமகன் மரித்தோரினின்று உயிர்த்தெழுந்திருக்கும் வரையில், நீங்கள் இந்தக் காட்சியை ஒருவருக்குஞ் சொல்லாதேயுங்கள் என்று கட்டளையிட்டார்.

10. அப்பொழுது சீஷர்கள் அவரை வினவி: அப்படியானால் முந்த முந்த எலியாவென்பவர் வரவேண்டுமென்று வேதபாரகர் சொல்லுவதேன்? என்றார்கள்.

11. அதற்கு யேசுநாதர் மாறுத்தரமாக: எலியாவென்பவர் வந்து யாவற்றையும் சீர்ப்படுத்துவாரென்பது உள்ளதுதான். மல். 4-5.

12. ஆயினும், எலியாவென்பவர் வந்தாயிற்றென்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; அவர்கள் அவரை அறியாமல் தங்களுக்கு இஷ்டமானதெல்லாம் அவருக்குச் செய்தார்கள். அவ்வாறே மனுமகனும் அவர்கள் கையால் பாடுபடப்போகிறார் என்றார். மத். 11-14; 14-10.

13. அப்பொழுது அவர் ஸ்நாபக அருளப்பனைக் குறித்துத் தங்களுக்குச் சொன்னாரென்று சீஷர்கள் அறிந்துகொண்டார்கள்.

14. பின்பு அவர் ஜனங்களிடத்தில் வந்தபோது, ஒரு மனுஷன் அவரிடத்தில் வந்து, அவர் முன்பாக முழந்தாளிட்டுச் சொன்னதாவது: ஆண்டவரே! என் மகன்பேரில் இரக்கமாயிரும், ஏனென்றால் சந்திர ரோகியாய் மிகவும் வாதைப்படுகிறான்; பலமுறை அக்கினியிலும் அடிக்கடி ஜலத்திலும் விழுகிறான். மாற். 9-16; லூக். 3-38.

15. அவனை உம்முடைய சீஷர்களிடத்தில் கொண்டுவந்தேன். அவனைச் சௌக்கியப் படுத்த அவர்களாலே கூடாமற்போயிற்று என்றான்.

16. அதற்கு யேசுநாதர் மறுமொழியாக: ஓ! விசுவாசமற்ற கெட்ட சந்ததியே, எதுவரைக்கும் நான் உங்களோடிருப்பேன்? எதுவரைக்கும் உங்களைச் சகிப்பேன்? அவனை இங்கே என்னண்டையில் கொண்டுவாருங்கள் என்றார்.

17. பின்னும் யேசுநாதர் அவனை அதட்டவே, பேய் அவனை விட்டுப் போயிற்று. அந்நேரமுதல் அந்தப் பையன் சௌக்கியமானான்.

18. பிற்பாடு சீஷர்கள் தனிமையாய் யேசுநாதரிடத்தில் வந்து, அதைத் துரத்த எங்களால் கூடாமற் போனதேன்? என்றுகேட்டார்கள்.

12. இதற்கு வியாக்கியானம் (11. அதி. 14. வச) காண்க.

இடையாளோமுன்னுலக மேழளந்தோன்மைந்தன்
குடையானதன்றே கொடிது. (அம்புலியணிந்தோனுள் - ஆதிரை.)
எட்டாநாள் அத்தம் (கை) வில-புருவம-அமபு-கண.

வாழ்நிலைசோபொன்னுலகம வணகளநகைககோபுரத்தின்
ஏழ்நிலைமேலேறிடினு மேறலாம்-பாழுமனமே
அன்புன்னைககாட்ட வாரனறியபேயருமை
தெனபுன்னைககாட்டனடி சேர. (உ௪)

கஞ்சிகுடியாளே கமபஞசோறுண்ணுளே
வெஞ்சினங்களெனறும விருமபாளோ-நெஞ்சதனில
அஞசுதலையாவாருக காறுதலையாவாளே
கஞசமுககாமாட்சி காண. (உ௫)

சிதாரவிந்தபுயன் றென்னவன்றன் றிண்சிலம்பிற்
போதாலுங்கண்ணாலும போரசெயவோாக-கோதும்
கொடியிடையாாதமமாற குணமாமோவிந்த
துடியிடையார்கொணட துயா. (உ௬)

போதாற்போாசெய்வான - மனமதன. கண்ணாற்போர்செயவான-
நாமசிவன. இவர்கள்கொடிமீனம - இடபம - இவற்றிடையிலுள்ளது-
மேஷம் - ஆடு.

அப்பிலேதோய்த்திட் டடுத்தடுத்துநாமதனைத்
தப்பினுமமையாது தபபாதோ-இபபுவியில
இககலிஙகமபோலுமெலன லேகலிஙகமாமதுளைச
சொககலிஙகந்தானிருககச சொல. (உ௭)

ஆக - செய்யுள - சசசு.

---

## பட்டணத்துச்சுவாமிகள்.

காப்பிளககப்பொயயுளாததுநவநிதியந்தேடி
கலமொனறுமறியாதநாரியளாசகூடிப்
பூப்பிளக்கவெழுகின்றபுற்றீசல்போலப
புலபுலெனக்கலகலெனப்புதல்வாகளைப்பெறுவீர்
காப்பதற்கும்வகையறியீாகைவிடவுமாட்டீா
கவட்டுத்தொண்மரக்கிடுகிறகாலுமைத்துக்கொண்டே
ஆப்பதனைப்பிடித்தசைத்தபேய்க்குரங்குபோல
அகப்பட்டீரிடுக்கிடுகிறமூலயகப்பட்டீரோ (௧)



"என்பேரில் விசுவாசமுள்ள இச்சிறியோரில் ஒருவனுக்கு இடறலாயிருப்பவனெவனோ, அவன் கழுத்திலே எந்திரக் கல்லைக்கட்டி, ஆழ்ந்த சமுத்திரத்தில் அவன் அமிழ்த்தப்படுவது அவனுக்கு நலமாயிருக்கும்."

(மத். 18-6.)

15. மேலும் உன் சகோதரன் உனக்கு விரோதமாய்க் குற்றஞ்செய்திருப்பானாகில், நீ போய், நீயும் அவனுந் தனித்திருக்கையில் அவனைக் கடிந்துகொள். அவன் உனக்குக் காதுகொடுத்தால் உன் சகோதரனை ஆதாயமாக்கிக்கொள்வாய். லூக். 17-3; லேவி. 19-17; எக். 19-13; யாக. 6-19.

16. அவன் உனக்குக் காதுகொடாவிட்டால், எல்லா வார்த்தையும் இரண்டு அல்லது மூன்று சாட்சிகளுடைய வாக்கில் நிற்கும்பொருட்டு, இன்னும் உன்னோடேகூட ஒருவர் அல்லது இருவரை அழைத்துக்கொண்டு போ. உபாக. 19-15; அரு. 8-17; 2 கொ. 13-1; எபி. 10-28.

17. அவன் அவர்களுக்கும் செவிகொடாதிருந்தால், அதைத் திருச்சபைக்குத்தெரியப்படுத்து. அவன் திருச்சபைக்கும் காது கொடாவிட்டால் அவன் உனக்கு அக்கியானியையும் ஆயக்காரனையும்போல் இருக்கக்கடவான். 1 கொ. 5-11; 2 தெச. 3-14.

18. மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்: பூலோகத்தில் நீங்கள் எவைகளைக்கட்டுவீர்களோ, அவைகள் பரலோகத்திலும் கட்டப்பட்டிருக்கும். பூலோகத்தில் எவைகளைக் கட்டவிழ்ப்பீர்களோ, அவைகள் பரலோகத்திலும் கட்டவிழ்க்கப்பட்டிருக்கும். அரு. 20-23.

19. இன்னமும் உங்களுக்குச் சொல்லுகிறேன்: உங்களில் இரண்டுபேர் தாங்கள் மன்றாடிக்கேட்கும் எந்தக் காரியத்திலும் பூமியில் ஒருமனப்பட்டிருந்தால், அது பரமண்டலங்களிலிருக்கிற என் பிதாவினால் அவர்களுக்குச் செய்தருளப்படும்.

20. ஏனெனில் என் நாமத்தினாலே எங்கே இரண்டு அல்லது மூன்றுபேர் கூடியிருக்கிறார்களோ, அங்கே அவர்கள் நடுவிலே நானிருக்கிறேனென்று திருவுளம்பற்றினார்.

21. அப்பொழுது இராயப்பர் அவரிடத்தில் அணுகி: சுவாமீ! என்சகோதரன் எனக்கு விரோதமாய் எத்தனை விசை குற்றஞ் செய்வான், நானும் அவனுக்கு மன்னிப்பேன்? ஏழுதரமட்டுமோ? என்றார். லூக். 17-4.

22. அதற்கு யேசுநாதர்: ஏழு தரமாத்திரமல்ல, எழுபதுதரம் மட்டுமென்று உனக்குச் சொல்லுகிறேன்.

23. ஆதலால் பரலோக இராச்சியமானது தன் ஊழியரிடத்தில் கணக்குக் கேட்க வேண்டுமென்றிருந்த ஓர் அரசனுக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது.

17. அக்கியானியையும் ஆயக்காரனையும்போல: இவ்விடத்தில் திருச்சபையின் சொற்படி கேளாதவன், திருச்சபைக்குப் புறம்பாகத் தள்ளப்படுவானென்று யேசுநாதர் சுவாமி காட்டுகிறார். இதினாலே திருச்சபைக்கு இருக்கிற அதிகாரம் எப்படிப்பட்டதென்று விளங்குகிறது.

18. எல்லா அப்போஸ்தலர்களுக்கும் யேசுநாதர் இவ்வாக்கியத்தை திருவுளம்பற்றுகிறபோது அர்ச். இராயப்பருங் கூடயிருந்தபடியால், எல்லாருக்கும் பொதுவாய் உரைக்கப்பட்ட இவ்வாக்கியத்தால், கொடுக்கப்பட்ட அதிகாரம் மத் 16-19. மற்ற இடங்களில் இராயப்பருக்கு மாத்திரம் விசேஷித்து உரைக்கப்பட்ட வாக்கியங்களினால் அவருக்குக் கொடுக்கப்பட்ட விசேஷ அதிகாரத்துக்கு விரோதமல்ல. அரு. 21-15-ம் வசனமுதல் 17-ம வசனம் வரையில் காண்க.

22. ஏழு எழுபது தரம்:—அதாவது, குற்றத்தை இத்தனை விசைதான் மன்னிக்க வேண்டுமென்பதற்குக் கணக்கில்லையென்று அர்த்தமாம்.

24. அவன் கணக்குக் கேட்கத் துவக்கினபோது, பதினாயிரம் தலேந்து அவனிடத்தில் கடன்பட்டிருந்த ஒருவன் அவனுக்கு முன்பாகக் கொண்டுவரப்பட்டான்.

25. ஆனால் கடனைச்செலுத்த அவனுக்கு நிர்வாகமில்லாமையால், அவனுடைய எஜமான் அவனையும், அவன் பெண்சாதி பிள்ளைகளையும், அவனுக்குண்டான யாவற்றையும் விற்றுக் கடனைச் செலுத்தக் கட்டளையிட்டான்.

26. அப்பொழுது, அந்த ஊழியன் அவன் பாதத்திலே விழுந்து, அவனை நோக்கி: என்பேரில் பொறுமையாயிரும், எல்லாவற்றையும் உமக்குச் செலுத்திவிடுகிறேன் என்று மன்றாடினான்.

27. ஆகையால், எஜமான் அந்த ஊழியன்மேல் மனமிரங்கி அவனையும் விடுதலையாக்கி, அவன் கடனையும் அவனுக்கு மன்னித்துவிட்டான்.

28. இப்படியிருக்க, அந்த ஊழியன் வெளியே புறப்பட்டுப்போய்த் தன்னிடத்தில் நூறு தெனியார் கடன்பட்டிருந்த தன் உடனூழியரில் ஒருவனைக் கண்டு, அவன் மன்னையைப் பிடித்து நெரித்து, நீ பட்ட கடனைக்கொடு என்றான்.

29. அப்போது அவனுடைய உடனூழியன் அவன் காலிலே விழுந்து அவனை மன்றாடி: என்பேரில் பொறுமையாயிரு; உனக்கு எல்லாவற்றையும் கொடுத்துத் தீர்த்துப்போடுகிறேன் என்றான்.

30. ஆனால் அவன் சம்மதியாமல், போய், அவன் தன் கடனைத் தீர்க்குமளவும் அவனைச் சிறைச்சாலையிலே போடுவித்தான்.

31. அவனுடைய மற்ற உடனூழியர்கள் நடந்தவைகளைக் கண்டு, மிகவும் துக்கப்பட்டுத் தங்கள் எஜமானிடத்தில் வந்து, நடந்ததெல்லாவற்றையும் அறிவித்தார்கள்.

32. உடனே அவனுடைய எஜமான் அவனை வரவழைத்து: துஷ்ட ஊழியனே, நீ என்னை மன்றாடினதினாலே, உன் கடனெல்லாம் உனக்கு மன்னித்தேனே.

33. ஆகையால், நான் உனக்கு இரங்கினதுபோல நீயும் உன் உடனூழியனுக்கு இரங்கவேண்டாமோ? என்று சொல்லி,

34. அவனுடைய எஜமான் கோபித்து, அவன் கடனையெல்லாம் செலுத்துமளவும் உபாதிக்கிறவர்கள் கையில் அவனை ஒப்புவித்தான்.

35. ஆகையால் உங்களிலும் அவனவன் தன் சகோதரனுக்கு உங்கள் முழு இருதயத்தோடு மன்னியாவிட்டால், என் பரம பிதாவும் உங்களுக்கு இவ்வண்ணமே செய்வாரென்று திருவுளம் பற்றினார். மத். 6-14; மாற். 11-25.

## 19-ம். அதிகாரம்.

கர்த்தர் மெய்விவாகத்தைப்பற்றியும், அண்ணகர், ஐசுவரியர் இவர்களைப்பற்றியும் திருவுளம்பற்றின விசேஷங்கள்.

1. யேசுநாதர் இந்த வாக்கியங்களைச் சொல்லிமுடித்தபின்பு சம்பவித்ததேதெனில்: கலிலேயா நாட்டைவிட்டுப் புறப்பட்டு, யோர்தான் நதிக்கப்பால் யூதேயா நாட்டெல்லைகளுக்கு வந்தார். மாற். 10-1.

24. தலேந்து:—எழுநூற்று ஐம்பது அவுன்ஸ் நிறையுள்ள வெள்ளி ஒரு தலேந்து ஆகும். ஒரு அவுன்ஸ் வெள்ளி 5 ஷில்லிங்கு; ஆகையால் ஒரு தலேந்து நூற்றெண்பத்தேழு பவுன் 10 ஷில்லிங்காகும்.

28. தெனியார்;—இது ஏழரைப் பென்ஸ்கொண்ட ரோமானருடைய ஒரு நாணயம்.

2. திரளான ஜனங்கள் அவரைப் பின் செல்லவே, அவர் அவ்விடத்தில் அவர்களைச் சொஸ்தமாக்கினார்.

3. பரிசேயரோ அவரைச் சோதிக்கும்படி அவரிடத்தில் வந்து: புருஷனானவன் எந்தக் காரணத்தினாலாவது தன் மனைவியைத் தள்ளிவிடலாமா? என்று கேட்டார்கள். மாற். 10-2.

4. யேசுநாதர் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாகச் சொன்னதாவது: ஆதியிலே மனுஷனைப் படைத்தவர் ஆணும் பெண்ணுமாக அவர்களைப் படைத்தார் என்பதையும்,

5. அதினிமித்தம் மனுஷனானவன் தன் தகப்பனையும், தாயையும் விட்டுத் தன் மனைவியுடனே சார்ந்து, இருவரும் ஒரே மாம்சமாய் இருக்கக்கடவார்கள் என்று உரைத்ததையும் நீங்கள் வாசித்ததில்லையோ? ஆதி. 1-27; ஆதி. 2-24; எபே. 5-31; 1 கொ. 6-16.

6. ஆகையால் அவர்கள் இப்போது இருவராயிராமல் ஒரே மாம்சமாயிருக்கிறார்கள். இதினாலே சர்வேசுரன் இணைத்ததை மனிதன் பிரிக்காதிருப்பானாக என்று திருவுளம்பற்றினார்.

7. அதற்கு அவர்கள்: அப்படியானால் விலக்குச் சீட்டைக் கொடுத்து அவளை அனுப்பிவிடும்படி மோயீசன் கற்பிப்பானேன்? என்றுகேட்க, மத். 5-31; உபாக. 24-1.

8. அவர்: உங்கள் இருதயக் கடினத்தைப்பற்றியே மோயீசன் உங்கள் மனைவிகளைத் தள்ளிவிடலாமென்று உங்களுக்கு உத்தரவுகொடுத்தார் ஆயினும், ஆதிமுதல் அப்படியிருந்ததில்லை.

9. நானோவென்றால், விபசாரத்தைப் பற்றியல்லாது, தன் மனைவியைத் தள்ளிவிட்டு, வேறொருத்தியை விவாகஞ் செய்கிறவனும், விபசாரஞ் செய்கிறானென்றும், தள்ளப்பட்டவளைக் கொள்ளுகிறவனும், விபசாரஞ் செய்கிறானென்றும் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார். மத். 5-34; மாற். 10-11; லூக். 16-18; 1 கொ. 7-10, 11-19.

10. அப்பொழுது அவருடைய சீஷர்கள் அவரை நோக்கி: பெண்சாதி மட்டில் புருஷனுடைய காரியம் இப்படியானால், விவாகம்பண்ணுகிறது சுகமில்லை என்றார்கள்.

11. அதற்கு யேசுநாதர்: வரம்பெற்றவர்களல்லாதே, மற்ற எவரும் இந்த வார்த்தையை உணரார்கள்.

12. ஏனெனில் தாயின் உதரத்தினின்று அப்படிப் பிறந்த அண்ணகரும் உண்டு; மனிதராலாக்கப்பட்ட அண்ணகருமுண்டு; பரலோக இராச்சியத்தைப்பற்றித் தங்களைத்தாங்களே அண்ணகராக்கிக்கொண்ட அண்ணகருமுண்டு, கண்டுபிடிக்க வல்லவன் கண்டுபிடிக்கட்டும் என்று திருவுளம்பற்றினார்.

13. அத்தருணத்திலே பாலர்மேல் அவர் கையைவைத்துச் செபிக்கும்படி அவர்களை அவரிடத்தில் கொண்டுவந்தார்கள். சீஷர்களோ அவர்களை அதட்டினார்கள். மாற். 10-13; லூக். 18-15.

9. விபசாரத்தினிமித்தம் புருஷன் தன் பெண்சாதியைத் தள்ளி விடலாமென்றாலும், அவள் உயிரோடிருக்குமட்டும், அவன் வேறே கலியாணஞ் செய்யப்படாது. இதன் கருத்தைச் சரியாய் அறியும்படி மாற். 10-11; லூக். 16-18; 1 கொ. 11-10; 11-19 வசனங்களைக் காண்க.

12. மோக்ஷ இராச்சியத்துக்காக விவாகம் பண்ணாமல் விரத்தத்துவமாயிருக்கிறது புண்ணியமென்று ஆண்டவர் இவ்விடத்தில் காட்டுகிறதினாலே, எல்லாரும் கலியாணந்தான் பண்ணவேண்டுமென்பது தப்பிதம். கலியாண அந்தஸ்தைவிட விரத்தத்துவ அந்தஸ்து அதிக மேன்மையும் புண்ணியமுமான து.

14. ஆனல் யேசுநாதர் அவர்களை நோக்கி: சிறுவர்களைச் சும்மாவிடுங்கள் அவர்களை என்னிடத்தில் வரத் தடைசெய்யாதேயுங்கள். ஏனெனில் மோக்ஷ இராச்சியம் அப்படிப்பட்டவர்களுடையது என்று சொல்லி, மத் 18-3.

15. அவர்கள்மேல் கரங்களைவைத்த பின்பு அவ்விடத்தில்நின்று புறப்பட்டுப் போனார்.

16. அப்போது இதோ, ஒருவன் அவரிடத்தில் வந்து: நல்ல குருவே! நான் நித்திய சீவியத்தை அடையும்படி என்ன நன்மை செய்யவேண்டும்? என்று அவரைக் கேட்டான். லூக். 18-18.

17. யேசுநாதர் அவனைப் பார்த்து: நீ நன்மையைப்பற்றி என்னை வினவுவானேன்? சர்வேசுரன் ஒருவரே நல்லவர். ஆயினும், நீ சீவியத்தில் பிரவேசிக்கவேண்டுமானல், கற்பனைகளை அனுசரித்துக்கொண்டு வா என்றார்.

18. அவன்: எந்தக் கற்பனைகளை? என்க, யேசுநாதர் திருவுளம்பற்றினதாவது: கொலைசெய்யாதிருப்பாயாக, விபசாரம்பண்ணுதிருப்பாயாக, களவாணுதிருப்பாயாக, பொய்ச்சாட்சிசொல்லாதிருப்பாயாக. ஆகி. 20-13.

19. உன் பிதாவையும், மாதாவையும் சங்கித்திருப்பாயாக; உன்னைப் போல உன் பிறனையும் சிநேகிப்பாயாக என்றார்.

20. அதற்கு அந்த வாலிபன்: இவையெல்லாம் சிறுபந்துவக்கி அனுசரித்திருக்கிறேன்; இன்னும் எனக்குக் குறைவாயிருக்கிறதென்ன? என்றான்.

21. யேசுநாதர் அவனை நோக்கி: நீ உத்தமனயிருக்கவிரும்பினல் போய், உனக்குள்ளவைகளை விற்றுத் தரித்திரருக்குக் கொடு; அப்பொழுது பரலோகத்திலே உனக்குப் பொக்கிஷமுண்டாயிருக்கும். பின்னும் வந்து என்னைப் பின்செல் என்றார்.

22. அந்த வாலிபனே, இந்த வார்த்தையைக்கேட்டுக் கிலேசத்தோடு போய்விட்டான். ஏனெனில் மிகுந்த காணியாட்சிகளுடையவனுய் இருந்தான்.

23. ஆதலால் யேசுநாதர் தம்முடைய சீஷர்களை நோக்கித் திருவுளம்பற்றினதாவது: ஐசுவரியவான் மோக்ஷ இராச்சியத்திலே பிரவேசிப்பது அருமையாயிருக்கிறதென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

24. அன்றியும், ஐசுவரியவான் சர்வேசுரனுடைய இராச்சியத்தில் பிரவேசிப்பதைவிட, ஊசியின் காதில் ஒட்டகம் நுழைகிறது அதிக எளிதாயிருக்கிறதென்று திரும்பவும் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

25. சீஷர்கள் இதைக் கேட்டு மிகவும் அதிசயித்து, அப்படியானல் யார்தான் இரட்சண்ணியம் அடையக்கூடும்? என்றார்கள்.

26. யேசுநாதர் அவர்களைப் பார்த்து: மனிதராலே இது கூடாததுதான்; சர்வேசுரனலே எல்லாங் கூடும் என்றார்.

27. அப்போது இராயப்பர் மாறுத்தாரமாக, அவரை நோக்கி: இதோ நாங்கள் எல்லாவற்றையுந் துறந்துவிட்டு, உம்மைப்பின்சென்று வந்தோமே. அதினல் எங்களுக்கு என்ன கிடைக்கும்? என,

24. ஆஸ்திக்காரர் தங்கள் ஆஸ்தியின்மேல் மிதமிஞ்சின பற்றுதல் வைத்திருப்பதினலே அவர்கள் மோக்ஷத்துக்குப் போவது அருமையாயிருக்கிறதென்று ஆண்டவர் அறிவிக்கிறார். ஆகையால் ஆஸ்தியின்மேல் பற்றுதல் இல்லாதவர்கள் மோக்ஷகரை சேருவதற்கு விக்கினமில்லை. மேலும் ஒட்டகத்தின் உவமை யூதர்களுக்குள் பழமொழியாக வழங்கினதினல் ஆண்டவர் அதை எடுத்துரைத்தாரேயொழிய ஐசுவரியர் மோக்ஷத்துக்குப் போவது முழுதும் கூடாத காரியமென்கிற கருத்தாகச் சொல்லவில்லை.

28. யேசுநாதர் அவர்களுக்குச் சொன்னதாவது: மறுஜென்மத்தில் மனுமகன் தம்முடைய மகிமைப் பத்திராசனத்தில் வீற்றிருக்கும்போது, என்னைப் பின்சென்ற நீங்களும், இஸ்ராயேலருடைய பன்னிரண்டு கோத்திரங்களையும் நடுத்தீர்ப்பவர்களாகப் பன்னிரண்டு சிம்மாசனங்களில் உட்காருவீர்களென்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

29. அல்லாமலும் என் நாமத்தைப் பற்றி வீட்டையாவது, சகோதரரையாவது, சகோதரிகளையாவது, தந்தையையாவது, தாயையாவது, மனைவியையாவது, பிள்ளைகளையாவது, நிலங்களையாவது, விட்டுவிட்ட எவனும், நூறு மடங்கு பெறுவான், நித்திய சீவியத்தையும் சுதந்தரித்துக்கொள்ளுவான்.

30. மேலும் முதல்வர்களாகிய அநேகர் கடைசியானவர்களாகவும், கடைசியானவர்கள் முதல்வர்களாகவும் இருப்பார்கள். மத்தே. 20-16; மாற். 10-31; லூக். 13-30.

## 20-ம். அதிகாரம்.

*திராட்சத் தோட்டத்துக்கு வேலையாட்களை அழைத்த உவமையும், கிறீஸ்துநாதர் தமது பாடுகளை முன் அறிவித்ததும், செபதேயின் குமாரர்களும், எரிக்கோ நகரின் குருடர்களும்.*

1. மோக்ஷ இராச்சியமானது தன் திராட்சத் தோட்டத்துக்கு வேலையாட்களை அமர்த்தும்படி, அதிகாலமே வெளியிலே புறப்பட்ட வீட்டெஜமானுக்கு ஒப்பாயிருக்கிறது.

2. அவன் வேலையாட்களோடு நாள் ஒன்றுக்கு ஒரு பணம் கூலியாக ஒப்பந்தஞ் செய்து, அவர்களைத் தன் திராட்சத் தோட்டத்துக்கு அனுப்பினான்.

3. ஏறக்குறைய மூன்றுமணி நேரத்திலும் அவன் வெளியே புறப்பட்டுப் போய்க் கடைவீதியில் சும்மா நின்றுகொண்டிருந்த சிலரைக் கண்டு:

4. நீங்களும் என் திராட்சத் தோட்டத்துக்குப் போங்கள். நியாயமானபடி உங்களுக்குக் கூலி கொடுப்பேனென்று அவர்களுக்குச் சொன்னான்.

5. அவர்களும் போனார்கள்; மறுபடியும் அவன் ஆறும், ஒன்பதாம் மணியிலும் வெளியே புறப்பட்டுப் போய் அவ்வண்ணமே செய்தான்.

6. ஏறத்தாழப் பதினோராம் மணி நேரத்திலும் அவன் வெளியே புறப்பட்டுப்போய்ச் சோம்பலாய் நின்ற வேறு சிலரைக் கண்டு: நீங்கள் நாள் முழுவதும் இங்கே சும்மா நிற்பானேன்? என்று கேட்க,

7. அவர்கள்: எங்களை ஒருவரும் வேலைக்கு அமர்த்தவில்லை என்றார்கள். அவன்: நீங்களும் என் தோட்டத்துக்குப்போங்கள் என்றான்.

8. பிறகு பொழுது சாய்ந்தபோது, தோட்டத்து எஜமான் தன் காரியக்காரனைப் பார்த்து: நீ வேலையாட்களைக் கூப்பிட்டுக், கடைசியாட்கள் துவக்கி, முதல் ஆட்கள் வரைக்கும் (சரி) கூலி கொடு என்றான்.

9. பதினோராமணி நேரத்தில் வந்தவர்களும் அணுகி, ஒவ்வொரு பணம் வாங்கினார்கள்.

29. பெண்சாதி பிள்ளைகளை விட்டுவிடக் கூடுமோவென்றால், அஞ்ஞானிகள் ஞானஸ்நானம் பெற்றுக் கிறீஸ்துவர்களாகிறதற்கு, பெண்சாதி பிள்ளைகள் விக்கினமாயிருந்தால், அவர்களை விடத்தான் வேண்டியிருக்குமென்று அறிக. மேலும் கலியாணம் பண்ணின கிறீஸ்துவர்களுக்குள், பெண்சாதி சம்மதத்தின்மேல் புருஷனும், புருஷன் சம்மதத்தின் மேல் பெண்சாதியும், இல்வாழ்க்கையை விட்டு விரத்தர்களாகலாம்.

10. அப்போது முந்தினவர்கள் வந்து, தாங்கள் அதிகமாய்ப் பெற்றுக்கொள்வோமென்று எண்ணியிருந்தார்கள். ஆயினும், அவர்களும் ஒவ்வொரு பணம் வாங்கினார்கள்.

11. அதை வாங்குகையில் அவர்கள் வீட்டெஜமான்பேரில் முறையிட்டு :

12. கடைசியில் வந்த இவர்கள் ஒரு மணிநேரம் வேலைசெய்திருக்க, பகலின் பாரத்தையும், வெயிலின் கொடுமையையும் சுமந்த எங்களோடு இவர்களைச் சமமாக்கினீரோ என்றார்கள்.

13. எஜமான் மறுமொழியாக அவர்களில் ஒருவனை நோக்கி : நண்பனே! நான் உனக்கு அநியாயஞ்செய்யவில்லை; நீ ஒரு பணத்துக்கு என்னோடு சம்மதிக்கவில்லையோ?

14. உனக்குள்ளதை வாங்கிக்கொண்டுபோ ; உனக்குக் கொடுத்தபடியே கடைசியில் வந்த இவனுக்குங் கொடுப்பது என்னுடைய இஷ்டம்.

15. எனக்கு இஷ்டமானதை நான் செய்யலாகாதோ? அல்லது நான் நல்லவனாயிருப்பதால், உன் கண் கெட்டதாயிருக்கிறதோ? என்றான்.

16. இவ்விதமே கடைசியானவர்கள் முதல்வர்களாகவும், முதல்வர்கள் கடைசியானவர்களாகவும் இருப்பார்கள். ஏனெனில் அழைக்கப்பட்டவர்கள் அநேகர், தெரிந்துகொள்ளப்பட்டவர்களோ சொற்பபேர் என்றார். மத். 19-30 ; மாற். 10-31 ; லூக். 13-30.

17. பின்பு யேசுநாதர் எருசலேம் நகருக்கு ஏறிப்போகையில், பன்னிரு சீஷரையும் தனியே அழைத்து, அவர்களுக்குச் சொன்னதாவது :

18. இதோ நாம் எருசலேமுக்கு ஏறிப்போகிறோம். மனுமகன் பிரதான குருக்களிடத்திலும், வேதபாரகரிடத்திலும் ஒப்புக்கொடுக்கப்படுவார் ; அவர்கள் அவரை மரணத்தீர்வையிட்டு,

19. அவரை ஆகடியஞ்செய்யவும், வாரினால் அடிக்கவும், சிலுவையில் அறையவும், புறஜாதியாருக்குக் கையளிப்பார்கள். ஆயினும், மூன்றாம் நாளிலே அவர் உயிர்த்தெழும்புவார் என்றார்.

20. அத்தருவாயிலே, செபதேயின் குமாரருடைய தாய் தன் பிள்ளைகளோடுகூட ஏதோ கேட்கவேண்டுமென்று யேசுநாதரிடம் வந்து வணங்கினாள். மாற். 10-35.

21. அவர் அவளைப்பார்த்து : உனக்கு என்ன வேண்டும் என்றார். அதற்கு அவள் : தேவரீருடைய இராச்சியத்திலே இந்த என்னுடைய இரண்டு பிள்ளைகளையும், உமது வலதுபக்கத்தில் ஒருவனும் இடது பக்கத்தில் ஒருவனுமாக உட்காரக் கற்பித்தருளும் என்றாள்.

22. யேசுநாதர் மாறுத்தரமாக, அவர்களை நோக்கி : நீங்கள் கேட்கிறது இன்னதென்று அறியீர்கள். நான் உட்கொள்ளப்போகிற பாத்திரத்தை நீங்களும் உட்கொள்ளக் கூடுமா? என்றார். அதற்கு அவர்கள் : கூடும் என்றார்கள்.

---

16. இந்த உவமையின் கருத்தென்னவென்றால், யூதர்கள் சர்வேசுரனால் அபிரகாம் காலமுதல் தெரிந்துகொள்ளப்பட்டு, மெய்யான சர்வேசுரனுக்கு ஊழியஞ்செய்ததினாலே, மனந்திரும்பின புறஜாதியாரைவிட, மோக்ஷத்திலே அதிகமான மகிமையை அடைவோமென்று எண்ணியிருந்தார்கள். ஆகையால் யேசுநாதர் இந்த எண்ணத்தை மாற்றும்படி, தம்மை விசுவசித்துப் பின்செல்லும் புறஜாதியாருக்கு யூதர்களைப்போலவே சரியொத்த கிருபையும், மோக்ஷ சம்பாவனையும், அவரவர் நடத்தைக்குத் தக்கது கிடைக்குமென்றுவிவரிக்கிறார். சிலர் சொற்பக்காலம் சர்வேசுரனுக்கு ஊழியஞ் செய்திருந்தாலும், தங்களுடைய ஊக்கம், அன்பு, பத்திவைராக்கியத்தினாலே நெடுங்காலம் ஊழியஞ் செய்தவர்களுடைய மகிமைக்கு ஒப்பாகவும், அவர்களிலும் மேலிட்ட விதமாயும் மகிமையை அடையலாம்.

23. அப்பொழுது அவர் : என் பாத்திரத்தை நீங்கள் உட்கொள்வீர்களென்பது மெய்தான். ஆயினும் என் வலது பாரிசத்திலாவது, இடது பாரிசத்திலாவது உட்காரும்படி உங்களுக்கு அருளுவது என்னுடைய காரியமல்ல. என் பிதாவினால் நியமிக்கப்பட்டவர்களுக்கே கிடைக்கும் என்றார்.

24. அதைக்கேட்டு மற்றப் பத்துப்பேரும் அந்த இரண்டு சகோதரர்பேரிலும் சினங்கொண்டார்கள். மாற். 10-41.

25. அப்பொழுது யேசுநாதர் அவர்களைத் தமதருகில் வரவழைத்து : புறஜாதியாருடைய அதிகாரிகள் அவர்கள்மேல் காருபாறுபண்ணுகிறார்களென்றும், பெரியவர்களாய் இருக்கிறவர்கள் அவர்கள்மேல் அதிகாரஞ்செலுத்துகிறார்களென்றும் அறிந்திருக்கிறீர்களே. மாற். 10-42; லூக். 22-25.

26. உங்களுக்குள்ளே அப்படியிருக்கலாகாது : உங்களில் எவனாவது பெரியவனாயிருக்க விரும்பினால் அவன், உங்களுக்குப் பணிவிடைக்காரனா யிருக்கக்கடவான்.

27. உங்களில் முதன்மையாயிருக்க விரும்புகிறவன் உங்களுக்கு ஊழியனாயிருப்பானாக.

28. அத்தன்மையே, மனுமகன் பணிவிடை கொள்ளவராமல், பணிவிடை செய்யவும், அநேகருடைய இரட்சணியமாகத் தன் பிராணனைக் கொடுக்கவும் வந்தார் என்றார். பிலி. 2-7.

29. பின்பு அவர்கள் எரிக்கோப் பட்டணத்தைவிட்டுப் புறப்பட்டுப் போகையில், திரளான ஜனக்கூட்டம் அவரைப் பின்சென்றது. மாற். 10-46; லூக். 18-35.

30. அப்பொழுது இதோ, வழியருகே உட்கார்ந்திருந்த இரண்டு குருடர் யேசுநாதர் அவ்வழியே போகிறாரென்று கேள்விப்பட்டு : ஆண்டவரே! தாவீதின் குமாரனே, எங்கள்பேரில் இரக்கமாயிருமென்று கூப்பிட்டார்கள்.

31. ஆனால் ஜனக்கூட்டம் அவர்களைப்பேசாதிருக்கும்படி அதட்டினது. அவர்களோ, முன்னிலும் அதிகமாய்க் கூவி : ஆண்டவரே! தாவீதின் குமாரனே, எங்கள்பேரில் இரக்கமாயிரும் என்றார்கள்.

32. ஆதலால் யேசுநாதர் நின்று, அவர்களை வரவழைத்து : உங்களுக்கு நான் என்னசெய்ய வேண்டும் என்க,

33. அவர்கள் : ஆண்டவரே! எங்கள் கண்கள் திறக்கப்படவேண்டும் என்றார்கள்.

34. யேசுநாதரோ அவர்கள்மேல் மனமிரங்கி அவர்கள் கண்களைத்தொட்டார். உடனே அவர்கள் பார்வையடைந்து அவர் பிறகே போனார்கள்.

## 21-ம். அதிகாரம்.

யேசுநாதர் எருசலேம் பட்டணத்தில் ஒட்டோலோகமாய்ப்பிரவேசித்ததும், தேவாலயத்தினின்று வியாபாரிகள் துரத்தப்பட்டதும், அத்திமரம் காய்ந்துபோனதும், பிரதான ஆசாரியனை மறுத்ததும், இரண்டு குமாரர்களையும், கொலைபாதகத் தோட்டக்காரரையும் பற்றிய உவமைகளும்.

1. பின்பு அவர்கள் எருசலேமுக்குச் சமீபமாய் வந்து ஒலிவேத்தென்னும் மலையருகே பெத்பாஜேஎன்னும் ஊரில் சேர்ந்தபோது, யேசுநாதர் இரண்டு சீஷர்களை அனுப்பி, மாற். 11-1; லூக். 19-29.

2. அவர்களுக்கு திருவுளம்பற்றினதாவது : உங்களுக்கு எதிராக இருக்கிற கிராமத்துக்குப் போங்கள்; உடனே அங்கே ஒரு கழுதையும், அதனோடு ஒரு குட்டியும் கட்டப்பட்டிருக்கக் காண்பீர்கள். அவைகளை அவிழ்த்து இங்கே என்னிடம்கொண்டுவாருங்கள்.

23.* பாத்திரம் என்பது கசப்பான துன்பதுரிதப் பாடுகளென்று அர்த்தமாம்.

3. யாராவது உங்களுக்கு ஏதேனும் சொன்னால், இவைகள் ஆண்டவருக்கு தேவையென்றுசொல்லுங்கள், உடனே அவைகளைப்போக விடுவான் என்றார்.
4. இதெல்லாம் தீர்க்கதரிசியால் வசனிக்கப்பட்ட வாக்கியம் நிறைவேறும்படி சம்பவித்தது. அவர் வசனித்ததாவது:
5. இதோ உன் அரசன் சாந்தமுள்ளவராய்க் கழுதையின்மீதும், பொதிமிருகக்குட்டியாகிய அதின் மறியின்மீதும் ஏறிக்கொண்டு உன்னிடத்தில் வருகிறாரென்று, சீயோன் குமாரத்திக்குச் சொல்லுங்கள் என்பதாம. இசை. 62-11; சக். 9-9; அரு. 12-15.
6. ஆதலால் சீஷர்கள்போய், யேசுநாதர் தங்களுக்குக் கட்டளையிட்டபடியே செய்து,
7. கழுதையையும் குட்டியையுங் கொண்டுவநது, அவைகளமேல் தங்கள் வஸ்திரங்களை விரித்து, மேலே அவாஏறி உட்காரச செய்தாாகள்
8 அப்பொழுது திரளான ஜனங்கள் தங்கள் வஸ்திரங்களை வழியில் விரித்தார்கள். வேறு சிலர் மரக்கிளைகளை ஒடித்து வழியிலே பரப்பினார்கள்.
9. அல்லாமலும் அவருக்கு முன்னும் பின்னுமாக நடநது வநத திரளான ஜனங்கள்: தாவீதன் குமாரனுக்கு ஓசன்னா! சாவேசுரனுடைய நாமத்தினால் வருகிறவர் ஆசீர்வதிக்கப பட்டவா! உநநதங்களில் ஓசன்னாவென்று கூவி ஆர்ப்பரித்துக்கொண்டுபோனார்கள். சங். 117-26; மாற். 11-10; லூக். 19-38.
10. இவ்விதமாய் அவர் எருசலேம் பட்டணத்தில் பிரவேசிக்கையில் பட்டணம் அனைத்துங் கலங்கி: இவர் யாரென்று கேட்க,
11. ஜனங்கள்: இவர் கலிலேயா நாட்டிலுள்ள நசரேத்திலிருந்துவந்த தீர்க்கதரிசியாகிய யேசுநாதர் என்றார்கள்.
12. யேசுநாதர் தேவாலயத்துக்குள் பிரவேசித்து, அத்தேவாலயத்தில் விற்கிறவர்கள் வாங்குகிறவர்களாகிய எல்லாரையும் வெளியே துரத்திக் காசுக்காரருடைய பலகைகளையும், புறாவிற்கிறவர்களுடைய ஆசனங்களையுங் கவிழ்த்து, மாற். 11-15; லூக். 19-45; அரு. 2-14.
13. அவர்களை நோக்கி: என் ஆலயம் ஜெப ஆலயம் என்னப்படும்; நீங்களோ அதைக் கள்ளருடைய குகையாக்கினீர்களென்று எழுதப்பட்டிருக்கிறது என்றார். இசை. 56-7; ஜெரே. 7-11; லூக். 19-46.
14. அத்தறுவாயிலே, குருடரும் முடவரும் தேவாலயத்திலே அவரண்டையில வரவே, அவர்களைக் குணமாக்கினார்.
15. அவர் செய்த அற்புதங்களையும், தாவீதன் குமாரனுக்கு ஓசன்னா! என்று, தேவாலயத்தில் கூப்பிடுகிற பிள்ளைகளையும் பிரதான ஆசாரியரும் வேதபாரகருமகண்டு,கோபமடைநது,
16. அவரைநோக்கி: இவர்கள் சொல்லுகிறதைக் கேட்கிறீரோ? என, யேசுநாதர் அவர்களுக்கு மாறுத்தாரமாக: ஆம, கேட்கிறேன். சிறுவருடைய வாயினின்றும், பாலகருடைய வாயினின்றும் உம்முடையஸ்துதியைப் பூரணமாக்கிக் கொண்டீரென்கிற வாக்கியத்தை நீங்கள் ஒருக்காலும் வாசிக்கவில்லையோ? என்றார். சங். 8-3.

5. எருசலேம் பட்டணம் சீயோன் மலையருகில் கட்டப்பட்டிருந்ததினால், தீர்க்கதரிசிகள் எருசலேம் பட்டணத்தைப்பற்றிப் பேசும்போது அதைச் சீயோன் குமாரத்தியென்பார்கள். அத்தேசத்தில் கழுதை வாகனம் இராஜாத்திகள் முதலாய்ப் பிரயோகித்து வந்ததினால், அது இந்நாட்டில் சொல்வதைப்போல் ஈனமானதல்ல.
9. ஓசன்னா என்பதற்கு, புகழ்ச்சி, தோத்திரம், வாழ்த்துதல் உண்டாகக்கடவதென்று பயனும்.

17. மேலும் அவர்களைவிட்டுப் பட்டணத்திலிருந்து வெளியே புறப்பட்டு, பெத்தானியாவுக்குப்போய் அங்கே தங்கினார்.

18. காலையில் அவர் பட்டணத்துக்குத் திரும்பி வரும்போது அவருக்குப் பசியுண்டாயிற்று.

19. அப்பொழுது வழியருகே ஓர் அத்திமரத்தைக் கண்டு, அதன்கிட்டப் போய், அதிலே இலைகளைத்தவிர வேறொன்றையுங் காணாமையால் அந்த மரத்தைப் பார்த்து: இனி ஒருக்காலும் உன்னிடத்தில் எக்காலமும் காய் காய்க்காமல் போகட்டும் என்றார். அக்ஷணமே அத்திமரம் பட்டுப்போயிற்று. மாற். 11-13.

20. சீஷர்கள் அதைக்கண்டு அதிசயித்து: எப்படி அது ஒருக்ஷணத்திலே பட்டுப்போயிற்று என்றார்கள். மாற். 11-20.

21. யேசுநாதரோ அவர்களை நோக்கிச் சொன்னதாவது: நீங்கள் தத்தளியாமல், விசுவாசமுள்ளவர்களாயிருந்தால், இந்த அத்திமரத்திற்குச் சம்பவித்ததை நீங்கள் செய்வதுமல்லாமல், இந்த மலையைநோக்கி நீ பெயர்ந்து, சமுத்திரத்தில் போய் விழுவென்று சொன்னாலும், அப்படியே ஆகுமென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

22. ஆதலால் ஜெபத்தில் நீங்கள் விசுவாசத்தோடு கேட்கிற யாவையும் பெற்றுக்கொள்வீர்கள் என்றார். மத். 7-7; மாற். 11-24; அரு. 3-22.

23. பின்பு யேசுநாதர் தேவாலயத்தில் வந்து உபதேசித்துக் கொண்டிருக்கையில், பிரதான ஆசாரியரும், ஜனத்தின் மூப்பரும் அவரிடத்தில் அணுகி: நீர் எந்த அதிகாரத்தைக்கொண்டு இவைகளைச் செய்கிறீர். இந்த அதிகாரத்தை உமக்குக் கொடுத்தது யார்? என்றார்கள். மாற். 11-28; லூக். 20-2.

24. யேசுநாதர் மறுமொழியாக அவர்களுக்குச் சொன்னதாவது: நானும் உங்களை ஓர் கேள்வி கேட்பேன், அதை நீங்கள் எனக்குச் சொல்லுவீர்களேயாகில், நானும் எந்த அதிகாரத்தைக் கொண்டு இவைகளைச் செய்கிறேனென்று உங்களுக்குச் சொல்லுவேன்.

25. அருளப்பருடைய ஞானஸ்நானம் எங்கிருந்து வந்தது? மோக்ஷத்திலிருந்தோ, மனிதரிடத்திலிருந்தோ? என்றார். அப்பொழுது அவர்கள் தங்களுக்குள்ளே ஆலோசித்து:

26. நாம் மோக்ஷத்திலிருந்து வந்ததென்போமாகில்: நீங்கள் அவனை விசுவசியாமற் போனதென்ன? என்று நமக்குச் சொல்லுவார். மனிதரால் உண்டானதென்போமாகில் ஜனங்களுக்குப் பயப்பட வேண்டியதாயிருக்கிறது. ஏனெனில் எல்லாரும் அருளப்பனை தீர்க்கதரிசியென்று எண்ணியிருந்தார்களே என்று சொல்லி, மத். 14-5.

27. யேசுநாதருக்குப் பிரத்தியுத்தாரமாக: அது எங்களுக்குத் தெரியாது என்றார்கள். அப்பொழுது அவரும் அவர்களை நோக்கி: எந்த அதிகாரத்தைக்கொண்டு நானும் இவைகளைச் செய்கிறேனென்று உங்களுக்குச் சொல்லேன்.

---

19. கனிகளில்லாமல் இலைகளைமாத்திரங்கொண்டிருந்த இந்த அத்திமரத்தினால் அந்நாள் யூதருடைய சபை குறிக்கப்படுகிறது. அவர்கள் வேதத்தின் வெளியாசார சடங்குகளைமாத்திரம் அனுசரித்து, அதின் கனிகளாகிய புண்ணியங்களை அனுசரியாதிருந்ததினாலே, தேவசாபத்துக்கு ஆளானார்களென்று கர்த்தர் காண்பிக்கிறார்.

22. கிறீஸ்துவர்கள் பூரண விசுவாச நம்பிக்கையோடே செய்கிற ஜெபமானது, ஒருபோதும் வீணாய்ப்போகாமல், அவர்கள் ஆத்தும இரட்சணியத்துக்கு அவசியமான நன்மைகளைப் பெறுவிப்பதுமல்லாமல் லௌகீக காரியங்களில் தேவசித்தத்துக்கொத்தபடி பலிக்கும்.

28. ஆயினும் உங்களுக்கு எப்படித் தோன்றுகிறது? ஒரு மனுஷனுக்கு இரண்டு குமாரர் இருந்தார்கள். அவன் முந்தினவனிடத்தில் வந்து: மகனே, நீ இன்றைக்குப் போய் என்னுடைய திராட்சத் தோட்டத்திலே வேலை செய் என்றான்.

29. அவனோ பதில் மொழியாக: மாட்டேனென்றான். ஆயினும் பிறகு அவன் மனஸ்தாபப்பட்டுப் போனான்.

30. பின்பு அவன் மற்றவனிடத்தில் வந்து அப்படியே சொன்னான். அதற்கு அவன்: ஐயா போகிறேன், என்று சொல்லிப் போகாதிருந்தான்.

31. இவ்விருவரில் எவன் தகப்பனுடைய சித்தத்தை நிறைவேற்றினான்? என்று கேட்க, அவர்கள்: முந்தினவன் தான் என்றார்கள். அப்போது யேசுநாதர் அவர்களைப் பார்த்து: ஆயக்காரரும் வேசிகளும் மோக்ஷராச்சியத்திலே உங்களுக்கு முந்தி பிரவேசிப்பார்கள் என்று உண்மையாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

32. ஏனென்றால் அருளப்பர் உங்களிடத்திற்கு நீதி மார்க்கத்தில் வந்தார். ஆயினும், நீங்கள் அவரை விசுவசிக்கவில்லை. ஆயக்காரரும் வேசிகளுமோ அவரை விசுவசித்தார்கள். அதை நீங்கள் கண்டிருந்தும், அவரை விசுவசிக்கும்படியாகப் பிற்பாடாகிலும் மனஸ்தாபப்படவில்லையே.

33. வேறொரு உவமையைக் கேளுங்கள். ஒரு கிரகஸ்தன் இருந்தான். அவன் ஒரு திராட்சத்தோட்டத்தை உண்டு பண்ணி, அதற்குச் சுற்றிலும் வேலியடைத்து, அதில் ஓர் ஆலையும் நாட்டிக் கோபுரமும் கட்டி, அதைக் குடியானவர்களிடத்தில் குத்தகையாக விட்டுத் தூரதேசத்திற்குப் போயிருந்தான். இசை. 5-1; ஜெரே. 2-21; மாற். 12-1; லூக். 20-9.

34. பின்பு பலன்காலஞ் சமீபித்தபோது, அதின் பலன்களை வாங்கிக் கொண்டு வரும்படியாகத் தன் ஊழியர்களைக் குடியானவர்களிடம் அனுப்பினான்.

35 குடியானவர்களோ அவனுடைய ஊழியர்களைப் பிடித்து, ஒருவனை அடித்தார்கள்; ஒருவனைக் கொலை செய்தார்கள்; வேறொருவனைக் கல்லாலெறிந்து கொன்றுபோட்டார்கள்.

36. மறுபடியும் அவன் முந்தினவர்களைவிட அதிகமான வேறே ஊழியர்களை அனுப்பினான். அவர்களையும், அப்படியே செய்தார்கள்.

37. கடைசியாய் அவன்: என் குமாரனுக்குப் பயப்படுவார்களென்று சொல்லித் தன் குமாரனை அவர்களிடத்தில் அனுப்பினான்.

38. குடியானவர்களோ குமாரனைக் கண்டு: இவனே, சுதந்தரவாளி; வாருங்கள், இவனைக் கொன்று போடுவோமாக. அப்போது அவனுடைய காணி

31. இவ்விரண்டு குமாரர்களுடைய தகப்பன் சர்வேசுரன்தான். இரண்டு குமாரர்கள் அஞ்ஞானிகளும், இஸ்ராயேல் ஜனங்களுமாம். அஞ்ஞானிகள் முந்தச் சர்வேசுரனுடைய கட்டளையைக் கேளாமலிருந்து, பின்னால் கேட்டு நடப்பார்களென்றும், இஸ்ராயேல் ஜனங்கள் தேவகட்டளைக்குக் கீழ்ப்படிகிறோமென்று சொல்லியும் கீழ்ப்படியாமல் நடக்கிறார்களென்றும் சொல்லுகிறார்.

32. நீதிமார்க்கத்தில் வந்தாரென்பதற்கு உங்களுக்குப் பரிசுத்தத் தனத்தைப் போதிக்கும்படி வந்தாரென்பது கருத்து.

33. இதில் கிரகஸ்தன், சர்வேசுரன்; திராட்சதோட்டம், யூதஜனம்; கோபுரம், யூதருடைய தேவாலயம். ஆலை முதலியவைகள் பழைய வேதப்பிரமாணம். சர்வேசுரன் கண்ணுக்குக் காணப்படாததினால், தூரதேசத்துக்குப் போனவர் போலிருக்கிறார்.

யாட்சியை நாம் எடுத்துக்கொள்ளு வோமென்று தங்களுக்குள்ளே சொல் லிக்கொண்டு, மத். 26-3 ; 27-2; அரு. 11-53.

39. அவனைப் பிடித்துத் திராட்சத் தோட்டத்துக்கு வெளியே தள்ளிக் கொன்றுபோட்டார்கள்.

40. அப்படியிருக்கத் திராட்சத் தோட்டத்து எஜமான் வரும்போது அவர்களை என்ன செய்வான்? என் றார்.

41. அவர்கள் பிரத்தியுத்தரமாக: அந்தக் கொடியரைக் கொடிய நாசம் பண்ணி, தக்க காலத்திலே தனக்குப் பலனைத்தரத்தக்க வேறே குடியானவர் களுக்குத் தன் திராட்சத்தோட்டத் தைக் குத்தகையாகக் கொடுப்பான் என்றார்கள்.

42. யேசுநாதர் அவர்களுக்குத திருவுளம்பற்றினதாவது: கட்டுகிறவ ர்கள் ஆகாதென்று தள்ளிவிட்ட கல் லே மூலைக்குத தலைமையாயிற்று. இது ஆண்டவரால் ஆனது; எங்கள கண்க ளுக்கும் ஆச்சரியமாயிருக்கிறதென்று நீங்கள் ஒருபோதும் வேதாகமங்களில் வாசிக்கவில்லையோ? சங். 117-22; அப். 4-11; ரோ. 9-33; 1 இராய. 2-7.

43. ஆதலால் சர்வேசுரனுடைய இராச்சியமானது உங்களிடத்தினின்று எடுபட்டு அதின் பலனைத தருகிற ஜனங்களுக்குக் கொடுக்கப்படுமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். அப். 13-46.

44. இந்தக் கல்லின்மேல் விழுகிற வன் நொறுங்கிப்போவான். இது எவன் மேல் விழுமோ, அவனை நசுக்கிப்போ டும் என்றார்.

45. அவர் உரைத்த இந்த உவமை களைப் பிரதான ஆசாரியரும், பரிசேய ரும் கேட்டபோது தங்களைக்குறித்தே பேசுகிறாரென்று அறிந்துகொண்டார் கள்.

46. ஆகையால் அவர்கள் அவரைப் பிடிக்கத தேடியும், ஜனங்கள் அவரைத் தீர்க்கதரிசியென்று எண்ணியிருநதபடி யால், அவர்களுக்குப் பயநதிருந்தார் கள்.

## 22-ம். அதிகாரம்.

இராஜ கலியாணம், செசாருககுரியதைச் செசாருக்குக் கொடுப்பது, மரித்தோர் உயிர்த்தல், வேதப்பிரமாணத்தின் தொகுப்பு, மெசியாஸ் தாவீதன் குமாரனும் ஆண்டவருமாயிருத்தல்.

1. யேசுநாதர் அவர்களுக்கு மறுபடியும் உவமைகளாகப் பேசித் திருவுளம் பற்றினதாவது:

2. பரலோக இராச்சியமானது தன் குமாரனுக்குக் கலியாணஞ்செய்த ஓர் இராஜனுக்கு ஒப்பாயிருக்கின்றது. லூக். 14-16; காட்சி. 19-9.

3. கலியாணத்துக்கு அழைக்கப்பட் டவர்களைக் கூப்பிடும்படி, அவன் தன் ஊழியரை அனுப்பினான். அவர்களோ வர மனமில்லாதிருநதார்கள்.

4. மீளவும் அவன் வேறு ஊழியரை அனுப்பி: இதோ, என் விருந்தை ஆய த்தம் பண்ணினேன். என் எருதுகளும்

42. தள்ளிவிடப்பட்ட கல்லானது மூலைக்குத் தலைமையானது எப்படியென்றால், சிற்பாசாரிகள் கட்டடத்திற்கு உதவாத கற்களை எறிந்து போடுகிறாப்போல் யூதர்கள் யேசுநாதரைப் புறக்கணித்துத் தள்ளிச் சிலுவையில் அறைந்துகொன்றார்கள். ஆயினும், யேசுநாதர் மரித்தபின்பு உயிர்த்தெழுந்தருளி சர்வேசுரனுடைய ஞானமாளிகையாகிற திருச்சபைக்குப் பிரதான மூலைக்கல்லானார். மூலைக்கல்லானது இரண்டு சுவர்களை ஒன்றாய்ச்சேர்க்கிறதுபோல, யேசுநாதர் பழைய ஏற்பாட்டையும் புதிய ஏற்பாட்டையும் இணைக்கிறார்.

கொழுக்க வளர்த்த ஜெந்துக்களும் அடிக்கப்பட்டிருக்கின்றன. எல்லாந் தயாராயிற்று, கலியாணத்துக்கு வாருங்களென்று அழைக்கப்பட்டவர்களுக்குச் சொல்லுங்கள் என்றான்.

5. ஆனால் அவர்கள் அதை அலட்சியம்பண்ணி, ஒருவன் தன் கிராமத்துக்கும், ஒருவன் தன் வியாபாரத்துக்கும் போய்விட்டார்கள்.

6. மற்றவர்களோ அவனுடைய ஊழியரைப் பிடித்து அவமானப் படுத்திக் கொன்று போட்டார்கள்.

7. அரசன் இதைக் கேள்விப்பட்டுக் கோபமடைந்து தன் இராணுவத்தையனுப்பி, அந்தக் கொலை பாதகரைச் சங்கரித்து, அவர்களுடைய பட்டணத்தையும் சுட்டெரித்தான்.

8. அப்பொழுது அவன் தன் ஊழியரைப் பார்த்துச் சொன்னதாவது: கலியாணவிருந்து ஆயத்தமாயிருக்கிறது. அழைக்கப்பட்டவர்களோ அபாத்திரரானார்கள்.

9. ஆகையால் நீங்கள் வழிச்சந்திகளிலேபோய், நீங்கள் காண்கிறயாவரையும் கலியாணவிருந்துக்கு அழைத்துக் கொண்டு வாருங்கள் என்றான்.

10. அப்படியே ஊழியர் புறப்பட்டு, வீதிகள்தோறும் போய், எதிர்ப்பட்ட நல்லவர்கள் பொல்லாதவர்கள் எல்லாரையுங் கூட்டிக்கொண்டு வந்தார்கள். கலியாணசாலையும் பந்தியமர்ந்தவர்களால் நிறைந்தது.

11. பந்தியமர்ந்தவர்களைப் பார்க்கும்படி, அரசன் உள்ளே பிரவேசித்த போது, அங்கே கலியாண வஸ்திரம் அணியாத ஒருவனைக் கண்டு:

12. சிநேகிதனே! கலியாண வஸ்திரமின்றி, நீ இங்கே எபபடிப் பிரவேசித்தாய்? என்று கேட்க, அவன் மவுனமாயிருந்தான்.

13. அப்போது அரசன் பணிவிடைக்காரரை நோக்கி: இவனுடைய கை கால்களைக்கட்டி, இவனை வெளியே இருளிலே தள்ளுங்கள். அங்கே அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்கும் என்றான். மத். 8-12; 13-42; 25-30.

14. ஏனெனில் அழைக்கப் பட்டவர்கள் அநேகர், தெரிந்துகொள்ளப்பட்டவர்களோ சொற்பப்பேர் என்று திருவுளம்பற்றினார்.

15. அப்போது பரிசேயர் போய் அவரைப் பேச்சிலே (குற்றம்) பிடிக்க வேண்டுமென்று ஆலோசனை செய்து, மாற். 12-13; லூக். 20-20.

16. தங்கள் சீஷர்களையும் ஏரோதியரையும அவரிடத்திலனுப்பிச் சொல்லுவித்ததாவது: போதகரே! நீர் சத்தியவந்தரென்றும், சர்வேசுரனுடைய நெறியை உள்ளபடியே போதிக்கிறீரென்றும், நீர் மனிதருடைய தாக்ஷண்யம் பார்க்காதவராகையால் ஒருவனையுஞ் சட்டைபண்ணுதவரென்றும் அறிந்திருக்கிறோம்.

17. ஆகையால் செசாரிராயனுக்கு வரி செலுத்தத் தகுமோ, தகாதோ? உமக்குத் தோன்றுகிறதென்ன? எங்களுக்குச் சொல்லும் என்றார்கள்.

16. ஏரோதனுடைய கோத்திரத்தார் இராஜ பட்டத்தை உரோமாபுரி இராயர்களால் பெற்றுக்கொண்டதினிமித்தம், ரோமாபுரி இராயனுக்குப் பகுதி செலுத்தவேண்டுமென்று அவர்கள் சொல்லும்போது அதற்கு இணங்கி அவர்கள் பாரிசமாய்ச் சேர்ந்த யூதர்கள் ஏரோதியர்கள் அல்லது ஏரோதியானிகள் என்னப்பட்டார்கள். அன்றியும் அவர்களில் சிலர், வரவேண்டிய மெசியாஸ் ஏரோதன்தானென்று சொல்லிவந்தபடியால் அவர்கள் ஒருவகைப் பிரிவினைக்காரருமாயிருந்தார்கள்.

18. யேசுநாதரோ அவர்களுடைய துர்மனதையறிந்து, கள்ளஞானிகளே, நீங்கள் என்னைச் சோதிப்பானேன்?

19. வரிப்பணத்தை எனக்குக் காண்பியுங்களென்று சொல்ல, அவர்கள் தெனியர் என்ற ஒருபணத்தை எடுத்து அவருக்குக் காண்பித்தார்கள்.

20. அப்போது யேசுநாதர்: இந்த ரூபமும், மேலெழுத்தும் யாருடையதென்று அவர்களைக் கேட்டார்.

21. அதற்கு அவர்கள்: செசாருடையது என்றார்கள். அப்பொழுது யேசுநாதர்: அப்படியானால் செசாருடையவைகளைச் செசாருக்கும், சர்வேசுரனுடையவைகளைச் சர்வேசுரனுக்கும் செலுத்துங்கள் என்றார். உரோ. 13-7.

22. இதைக்கேட்டு அவர்கள் ஆச்சரியப்பட்டு, அவரைவிட்டு அகன்று போனார்கள்.

23. உத்தானம் இல்லையென்கிற சதுசேயர் அன்றுதானே அவரிடத்தில் வந்து, அவரை வினவினதாவது: அப். 23-6.

24. குருவே, ஒருவன் புத்திரனில்லாமல் இறந்துபோவானாகில், அவனுடைய சகோதரன் அவனுடைய மனைவியை விவாகம்பண்ணித் தன் சகோதரனுக்குப் புத்திர சந்தானம் பிறப்பிக்கவேண்டுமென்று மோயீசன் கற்பித்திருக்கிறாரே. உபாக. 25-6; மாற். 12-19; லூக். 20-28.

25. அப்படியிருக்க, எங்களுக்குள்ளே சகோதரர் ஏழுபேர் இருந்தார்கள். மூத்தவன் ஓர் ஸ்திரீயைக் கலியாணஞ் செய்து மரித்தான். அவனுக்குப் பிள்ளையில்லாததினாலே தன் மனைவியைத் தன் தம்பிக்கு விட்டுவிட்டான்.

26. இரண்டாம், மூன்றாம், ஏழாம் பேர் வரைக்கும் அப்படியே செய்தார்கள்.

27. எல்லாருக்குங் கடைசியாக அந்த ஸ்திரீயும் மரித்தாள்.

28. ஆதலால் உத்தானத்திலே, அவள் அந்த ஏழுபேர்களில் எவனுக்கு மனைவியாயிருப்பாள்? எல்லாரும் அவளைக் கொண்டிருந்தார்களே என்றார்கள்.

29. யேசுநாதர் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக: நீங்கள் வேத வாக்கியங்களையும், சர்வேசுரனுடைய வல்லமையையும் அறியாமல் தவறிப்போகிறீர்கள்.

30. ஏனெனில், உத்தானத்திலே பெண் கொள்வதுமில்லை, கொடுப்பதுமில்லை. அவர்கள் பரலோகத்திலே தேவ தூதர்களைப்போலிருப்பார்கள்.

31-32. மேலும் மரித்தோருடைய உத்தானத்தைப்பற்றி: நாமே அபிரகாமின் தேவனும், யாக்கோபின் தேவனும், ஈசாக்கின் தேவனுமாயிருக்கிறோம் என்று சர்வேசுரனால் உங்களுக்கு உரைக்கப்பட்டிருக்கிறதை நீங்கள் வாசிக்கவில்லையோ? தேவன் மரித்தோர்களுக்கல்ல, சீவியர்களுக்கே தேவனாயிருக்கிறாரென்று திருவுளம் பற்றினார். யாத்தி. 3-6.

33. இதைக்கேட்டு ஜனங்கள் அவருடைய போதகத்தின்மேல் அதிசயப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

34. அப்படியிருக்க, அவர் சதுசேயருடைய வாயை அடைத்துப்போட்டாரென்று பரிசேயர் கேள்விப்பட்டு, ஒருங்குடன் கூடிவந்தார்கள்.

35. அவர்களில் நீதி சாஸ்திரியான ஒருவன் அவரைச் சோதிக்கும்படியாக:

36. போதகரே, வேதப்பிரமாணத்தில் பெரிதான கற்பனை எதுவென்று கேட்டான். மாற். 12-28; லூக். 10-25.

37. யேசுநாதர் அவனை நோக்கி: உன் தேவனாகிய கர்த்தாவை உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமத்தோடும், உன் முழு மனதோடும் சிநேகிப்பாயாக. உபா. 6-5.

38. இதுவே எல்லாத்திலும் பெரிதும் முதன்மையுமான கற்பனை.

39. இதற்கு ஒப்பாயிருக்கிற இரண்டாம் கற்பனை என்னவென்றால், உன் பிறனை உன்னைப்போல் சிநேகிப்பாயாக என்பதே. லேவி. 19-18; மாற். 12-31.

40. இந்த இரண்டு கற்பனைகளிலும் வேதப்பிரமாண முழுமையும் தீர்க்க தரிசனங்களும் அடங்கியிருக்கின்றன என்றார்.

41. பின்பு பரிசேயர் கூடியிருக்கையில் யேசுநாதர் அவர்களை நோக்கிக் கேட்டதாவது:

42. கிறீஸ்துநாதரைக்குறித்து உங்களுக்குத் தோன்றுகிறது என்ன? அவர் யாருடைய குமாரன்? என்று கேட்க, அவர்கள்: தாவீதின் குமாரன் என்றார்கள்.

43. அதற்கு அவர்: அப்படியானால் தாவீதென்பவர் இஸ்பிரீத்துசாந்துவின் ஏவலால் அவரை ஆண்டவரென்று அழைக்கிறதெப்படி.?

44. நாம் உம்முடைய சத்துருக்களை உமது பாதங்களுக்கு மணையாகப் போடுமட்டும், நமது வலதுபாரிசத்தில் உட்காருமென்று ஆண்டவர் என் ஆண்டவருக்குத் திருவுளம்பற்றினாரென்று சொல்லியிருக்கிறாரே. லூக். 20-42; சங். 109-1.

45. ஆகையால் தாவீதென்பவர் அவரைத் தன் ஆண்டவரென்று அழைத்திருக்க, அவருக்கு அவர் குமாரனாயிருக்கிறதெப்படி? என்றார்.

46. அதற்கு மறுமொழியாக ஒருவனும் அவருக்கு ஒரு வார்த்தையுஞ் சொல்லக்கூடவுமில்லை. அதுமுதல் அவரைக் கேள்விகேட்க எவனுந் துணியவுமில்லை.

## 23-ம். அதிகாரம்.

யேசுநாதர் வேதபாரகரையும், பரிசேயரையும் பற்றிச் செய்த பிரசங்கம்.

1. அதன் பிறகு யேசுநாதர் ஜனக் கூட்டங்களையும் தமது சீஷர்களையும் நோக்கித் திருவுளம்பற்றினதாவது:

2. வேதபாரகரும் பரிசேயரும் மோயீசனுடைய ஆசனத்தில் உட்கார்ந்திருக்கிறார்கள்.

3. ஆதலால் அவர்கள் உங்களுக்குச் சொல்லுகிற யாவையும் கைக்கொண்டு அநுசரியுங்கள். ஆனாலும் அவர்களுடைய கிரியைகளின்படியே செய்யாதேயுங்கள். ஏனெனில் அவர்கள் சொல்லுவார்கள்; ஆனால் செய்யார்கள்.

4. அதெப்படியெனில், சுமக்க முடியாத பாரச்சுமைகளைக் கட்டி, மனிதருடைய தோள்மேல் சுமத்துகிறார்கள். தாங்களோ அவைகளைத் தங்கள் விரலினாலும் அசைத்துப்பார்க்கமாட்டார்கள். லூக். 11-46; அப். 15-10.

5. மனிதரால் காணப்படும்பொருட்டு, அவர்கள் தங்கள் கருமங்களையெல்லாம் செய்துகொண்டுவருகிறார்கள். எப்படியெனில, அவர்கள் தங்கள் கற்பனைப் பட்டயங்களை அகலமாக்கித் தங்கள் வஸ்திரங்களின் தொங்கல்களையும் பெரிதாக்குகிறார்கள். உபா. 6-8; 22-12.

6. விருந்துகளில் முதன்மையான இடங்களையும, ஜெப ஆலயங்களில் முதல் ஆசனங்களையும் விரும்புகிறார்கள்.

5. தாங்கள் வேதத்தை நுணுக்கமாய் அநுசரிக்கிறோமென்று காட்டும்படி, பரிசேயர் சில வேதவாக்கியங்களை ஏடுகளில் எழுதி, நெற்றியிலும் கைகளிலும் கட்டிக்கொள்வது வழக்கமாயிருந்தது.

7. வீதிகளில் வாழ்த்துதல்களையும், தேசிகரே என்று மனிதரால் அழைக்கப்படுவதையும் ஆசிக்கிறார்கள். மாற். 12-39; லூக். 11-43; 20-46.

8. நீங்கள் தேசிகர் என்று அழைக்கப்படவேண்டாம். ஏனெனில், உங்களுக்கு ஒருவரே தேசிகராயிருக்கிறார். நீங்களோ எல்லாரும் சகோதரர்களாய் இருக்கிறீர்கள். யாக. 3-1.

9. பூமியில் ஒருவனையும் உங்களுக்குப் பிதாவென்று அழைக்கவேண்டாம்; ஏனெனில் உங்களுடைய ஏக பிதா பரமண்டலங்களிலே இருக்கிறார் மல்கி. 1-6.

10. நீங்கள் உபாத்தியாயரென்று அழைக்கப்படவும் வேண்டாம்; ஏனெனில், கிறிஸ்துநாதர் ஒருவரே உங்களுக்கு உபாத்தியாயராயிருக்கிறார்.

11. ஆனால் உங்களில் பெரியவனாயிருக்கிறவன், உங்களுக்கு ஊழியனாயிருப்பானாக.

12. ஏனென்றால் தன்னை உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவான். தன்னைத் தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுவான். லூக். 14-11; 18-14.

13. கள்ள ஞானிகளாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஐயோ கேடு! ஏனெனில் நீங்கள மனிதர்களுக்கு மோக்ஷ இராச்சியத்தை அடைத்துப்போடுகிறீர்கள். நீங்களும் அதில் பிரவேசிக்கிறதில்லை, பிரவேசிக்கிறவர்களையும் பிரவேசிக்க விடுகிறதில்லை.

14. கள்ள ஞானிகளாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஐயோ கேடு! ஏனெனில் நீண்ட ஜெபங்களைச் ஜெபித்துக்கொண்டு,விதவைகளுடைய வீடுகளைப் பக்ஷிக்கிறீர்கள். இநினிமித்தம் அதிகக் கடினமான தீர்வையை அடைவீர்கள். மாற். 12-40; லூக். 20-47.

15. கள்ள ஞானிகளாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஐயோ கேடு! ஏனெனில், ஒருவனை உங்கள் சீஷனாக்கிக்கொள்ளும்படி சமுத்திரத்தையும், பூமியையுஞ் சுற்றித்திரிகிறீர்கள். அவனைச் சீஷனாக்கினபின்பு, உங்களிலும் இருமடங்காக அவனை நரக புத்திரனாக்குகிறீர்கள்.

16. குருடராகிய வழிகாட்டிகளே, உங்களுக்கு ஐயோ கேடு! ஏனெனில் ஒருவன் தேவாலயத்தின்பேரில் ஆணையிட்டால், அது ஒன்றுமில்லையென்றும், தேவாலயத்திலுள்ள பொன்னின்பேரில் ஆணையிடுகிறவன், அதற்குக் கடனாளியாயிருக்கிறானென்றுஞ் சொல்லுகிறீர்கள்.

17. மதியீனரே, குருடரே, எது பெரிது? பொன்னோ, பொன்னைப் பரிசுத்தமாக்குகிற தேவாலயமோ?

18. பின்னையும் ஒருவன் பீடத்தின் பேரில் ஆணையிட்டால், அது ஒன்றுமில்லையென்றும், பீடத்தின்மேலுள்ள காணிக்கையின்பேரில் ஆணையிடுகிறவன், அதற்குக் கடனாளியாகிறானென்றுஞ் சொல்லுகிறீர்கள்.

19. குருடரே, எதுபெரிது? காணிக்கையோ, காணிக்கையைப் பரிசுத்தமாக்குகிற பீடமோ?

9. உலகத்தில் நமக்குத் தகப்பன், எஜமான், உபாத்தியாயர்களிருந்தாலும், அவர்களெல்லாரையும்விட, சர்வேசுரனே நமக்கு மேலான தகப்பனும், எஜமானும், குருவுமாயிருக்கிறார். எந்தத் தகப்பனானாலும், எஜமானானாலும், குருவானாலும், நம்மை சர்வேசுரனிடத்திலின்று அகற்றுவார்களானால், அவர்களை நாம் பின்பற்றக் கூடாதென்பது கருத்து.

20. ஆகையால் பீடத்தின்பேரில் ஆணையிடுகிறவன் அதன்பேரிலும், அதின்மேலுள்ள எல்லாவற்றின்பேரிலும் ஆணையிடுகிறான்.

21. தேவாலயத்தின்பேரில் ஆணையிடுகிறவன் அதின்பேரிலும் அதில் வசிக்கிறவர்பேரிலும் ஆணையிடுகிறான்.

22. வானமண்டலத்தின்பேரில் ஆணையிடுகிறவன் சர்வேசுரனுடைய பத்திராசனத்தின்பேரிலும், அதில் வீற்றிருக்கிறவர்பேரிலும் ஆணையிடுகிறான்.

23. கள்ள ஞானிகளாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஐயோ கேடு! ஏனெனில் நீங்கள் துளசி, சோம்பு, சீரகங்களில் பத்தில் ஒருபாகம் காணிக்கையாகச் செலுத்திவருகையிலே, வேதப பிரமாணத்தில் அதிக கனமானவைகளாகிய நீதியையும், இரக்கத்தையும், விசுவாசத்தையும் விட்டுவிட்டீர்கள். இவைகளைச் செய்யவேண்டியது; அவைகளையும் விடலாகாது. லூக். 11-42.

24. வழிக்காட்டிக் குருடரே, ஒரு கொசுகை விழுங்காதபடிக்கு உங்கள் பானங்களை வடிகட்டி, ஒட்டகத்தை விழுங்குகிறீர்கள்.

25. கள்ள ஞானிகளாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஐயோ கேடு! ஏனெனில் உங்கள் அன்னபான பாத்திரங்களின் வெளிப்புறத்தைச் சுத்தஞ்செய்கிறீர்கள். உங்கள் உள்ளத்திலோ கொள்ளையும் அசுத்தமும் நிறைந்தவர்களாய் இருக்கிறீர்கள்.

26. குருடனான பரிசேயனே, பாத்திரத்தின் வெளிப்புறம் சுத்தமாகும்படி, முந்தமுந்த அதின் உட்புறத்தைச் சுத்தம்பண்ணு.

27. கள்ளஞானிகளாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஐயோ கேடு! ஏனெனில், வெள்ளையடிக்கப்பட்ட கல்லறைகளுக்கு ஒப்பாயிருக்கிறீர்கள். அவைகள் வெளியே மனிதருக்கு அழகாய்த் தோன்றினாலும், உள்ளே மரித்தோருடைய எலும்புகளாலும் சகல அசுத்தத்தாலும் நிறைந்திருக்கின்றது.

28. அத்தன்மையே, நீங்களும் வெளியே மனிதருக்கு நீதிமான்களென்று காணப்படுகிறீர்கள். உள்ளத்திலோ, கள்ள ஞானமும், அக்கிரமமும் நிறைந்தவர்களாயிருக்கிறீர்கள்.

29. கள்ளஞானிகளாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஐயோ கேடு! ஏனெனில், நீங்கள் தீர்க்கதரிசிகளுடைய சமாதிகளைக்கட்டி, நீதிமான்களின் கல்லறைகளைச் சிங்காரித்து:

30. எங்கள் பிதாக்களுடைய காலத்திலே, நாங்களிருந்தோமானால், தீர்க்கதரிசிகளுடைய இரத்தத்தைச் சிந்துவதில், அவர்களோடு உடன்பட்டிருக்கமாட்டோம் என்கிறீர்கள்.

31. ஆகையால், தீர்க்கதரிசிகளைக் கொன்றவர்களுடைய புத்திரராயிருக்கிறீர்களென்று, நீங்களே உங்களுக்குச் சாட்சிகளாயிருக்கிறீர்கள்.

32. ஆதலால், நீங்கள் உங்கள் பிதாக்களுடைய (பாவக்கிரம) அளவை நிரப்புங்கள்:

33. சர்ப்பங்களே, விரியன்பாம்புகளின் சந்ததிகளே! நரகாக்கினைத் தீர்ப்புக்கு எப்படி தப்புவீர்கள்? மத். 3-7.

29. இங்கே பரிசேயர் இறந்துபோன தீர்க்கதரிசிகளுக்கு, கல்லறைகள் கட்டினதைப் பற்றி, யேசுநாதர் அவர்கள் பேரில் குறை சொல்ல நினைக்கிறதில்லை. தீர்க்கதரிசிகளை வாதைப்படுத்தி, அவர்களைக் கொன்றுபோட்ட பாவத்தை நினைத்து அழாமல், அவர்களுக்குக் கல்லறைகள் மாத்திரம் கட்டுகிறது கள்ளப் பத்தியென்று காட்டுகிறார்.

34. ஆகையால் இதோ, நான் தீர்க்க தரிசிகளையும், ஞானிகளையும், வேதசாஸ்திரிகளையும் உங்களிடத்திற்கு அனுப்புகிறேன். நீங்களோ அவர்களில் சிலரைக் கொல்லுவீர்கள், சிலரைச் சிலுவையில் அறைவீர்கள். சிலரை உங்கள் ஜெப ஆலயங்களில் வாரினாலடித்து, சிலரை ஊருக்கு ஊர் தொடர்ந்து உபாதிப்பீர்கள்.

35. நீதிமானாகிய ஆபேலின் இரத்த முதல், தேவாலயத்திற்கும், பீடத்திற்கும் நடுவே நீங்கள் கொலைசெய்த பரேக்கியாஸ் குமாரனாகிய சக்கரியாசின் இரத்தமட்டும், பூமியில் சிந்தப்பட்ட நீதிமான்களின் இரத்தமெல்லாம் உங்கள்மேல் வரும்படியாக (இவ்விதம் செய்வீர்கள்) ஆதி. 4-8 ; எபி. 11-4.

36. இவையெல்லாம் இந்தச் சந்ததியின்மேல் வருமென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

37. எருசலேமே, எருசலேமே, தீர்க்கதரிசிகளைக் கொலைசெய்து, உன்னிடமாய் அனுப்பப்பட்டவர்களைக் கல்லால் எறிந்து கொல்லுகிறாயே ; கோழியானது தன் குஞ்சுகளைத் தன் சிறகுகளுக்குள்ளே அணைத்துக்கொள்ளுகிறதுபோல, எத்தனையோ முறை நானும் உன் குமாரர்களை அணைத்துக்கொள்ள விரும்பினேன், உனக்கு மனமில்லாமல் போயிற்றே. லூக். 13-34.

38. ஆதலால், இதோ உங்கள் வீடு, உங்களுக்குப் பாழாய் விடப்படும்.

39. ஏனெனில் ஆண்டவருடைய நாமத்தினாலே வருகிறவர், ஆசீர்வதிக்கப்பட்டவரென்று நீங்கள் சொல்லுமளவும், இதுமுதல் என்னைக் காணமாட்டீர்களென்று உங்களுக்குச்சொல்லுகிறேன் என்றார்.

## 24-ம். அதிகாரம்.

எருசலேமின் அழிவுகளும் நடுத்தீர்வை நாளுக்கும் முன் சம்பவிக்கும் அடையாளங்களும், அத்திமரத்தின் உவமையும், பிரமாணிக்க, அப்பிரமாணிக்க ஊழியனும்.

1. யேசுநாதர் தேவாலயத்தை விட்டுப் புறப்பட்டுப் போகும்போது, அவருடைய சீஷர்கள் தேவாலயத்தின் கட்டிடங்களை அவருக்குக் காண்பிக்கும்பொருட்டு அவரிடத்தில் அணுகினார்கள். மாற் 13-1 ; லூக். 21-5.

2 அவரோவெனில், அவர்களுக்கு மறுமொழியாக : இவையெல்லாம பார்க்கிறீர்களே. ஆகிலும்,இங்கே இடிபடாமல் கல்லின்மேல் கல் நிற்கப்போகிறதில்லையென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார். லூக். 19-44.

35. பரேக்கியாஸ் குமாரனாகிய சக்கரியாஸ் குருவாயிருந்து பூசைப்பலியிடுகிற நேரத்திலே, யோவாஸ் இராஜாவின் கட்டளைப்படி கொல்லப்பட்டார். (2 நாளா ; 24-21).

39. அதாவது, இதுமுதல் நடுத்தீர்க்கிற நாள்வரையில் யூதர்கள் நடுவில் யேசுநாதர் பிரசங்கிக்கமாட்டாரென்று அர்த்தமாம்.

2. கர்த்தர் மனுஷாவதாரத்தின் எழுபதாம் வருஷத்தில், உரோமாபுரி இராயனான வெஸ்பாசியானுடையகாலத்தில், தீத்தூஸ் என்ற தளவாயால், எருசலேம்நகரமும், அதின் நடுவிலிருந்த தேவாலயமும், தரைமட்டாக நிர்மூலம் பண்ணப்பட்டது. ஆகிலும் அப்போது தேவாலயத்தின் அஸ்திவாரம் இடிக்கப்படாமலிருந்தது. ஆனால் ஏறக்குறைய முந்நூறு வருஷத்துக்குப் பிறகு, வேதத்தை மறுதலித்த ஜூலியானு என்ற உரோமாபுரி இராயன் கத்தோலிக்கு உரோமான் திருச்சபைக்கு விரோதமாகவும், யூதர்களுக்குப் பிரியப்படும்படியாகவும், ஆண்டவருடைய இந்தத் தீர்க்கதரிசனத்தை, பொய்யாக்கும்படிக்கு, இடிபட்ட தேவாலயத்தைத் திரும்பிக் கட்டி முடிக்கத்தக்கதாக, ஏராளமான ஆட்களையும் பணங்களையும் அனுப்பினான். ஆனால், வேலைக்காரர் பழைய அஸ்திவாரங்களைப் பறித்து எறிந்து, புது அஸ்திவாரம்போட ஆரம்பித்தமாத்திரத்தில், தோண்டப்பட்ட அஸ்திவாரத்தில் நின்று, அக்கினிச்சுவாலையெழும்பி, வேலையாட்களையும் சேகரிக்கப்பட்ட சாமான்களையும் சுட்டெரித்து சாம்பலாக்கிப்போட்டது. ஆகையால் இந்தத் தீர்க்கதரிசனத்தைப் பொய்யாக்கச் செய்த வேலையே அதைச் சம்பூரணமாய் நிறைவேற்றினதென்றறியவும்.

3. பின்னும் அவர் ஒலிவேத் மலையின்மேல் உட்கார்ந்திருக்கும்போது, சீஷர்கள் தனித்து அவரிடத்தில் வந்து இவைகள் எப்போது நடக்குமென்றும், உம்முடைய வருகைக்கும், உலகத்தின் முடிவுக்கும் அடையாளம் ஏதென்றும் எங்களுக்குச் சொல்லியருளும் என்றார்கள்.

4. யேசுநாதர் பிரத்தியுத்தாரமாக அவர்களுக்குச் சொன்னதாவது: ஒருவனும் உங்களை மயக்காதபடி எச்சரிக்கையாயிருங்கள். எபி. 5-6; கொ. 2-18.

5. ஏனெனில் அநேகர் என் நாமத்தைத் தரித்துக்கொண்டுவந்து: கிறீஸ்துநாதர் நானே என்றுசொல்லி அநேகரை மயக்குவார்கள்.

6 அன்றியும் யுத்தங்களையும், யுத்த செய்திகளையும் கேள்விப்படுவீர்கள். ஆகிலும் கலங்காதபடிக்குப் பார்த்துக்கொள்ளுங்கள். ஏனெனில், இவைகள் நடக்க வேண்டியதுதான். ஆகிலும் இன்னும் முடிவல்ல.

7. ஏனெனில் தேசம் தேசத்தின் மேலும், இராச்சியம் இராச்சியத்தின் மேலும் விரோதமாய் எழும்ப, கொள்ளைநோய்களும், பஞ்சங்களும் இடத்துக்கிடம் பூமியதிர்ச்சிகளும் உண்டாகும்.

8. இவையெல்லாம் துயரங்களின் துவக்கமாமே.

9. அப்பொழுது உங்களை உபத்திரவத்திற்குக் கையளித்து உங்களைக் கொல்லுவார்கள். என் நாமத்தினிமித்தம் எல்லா ஜனங்களாலும் பகைக்கப்படுவீர்கள். மத். 10-17; லூக். 21-12; அரு. 15-20; 16-2.

10. அப்போது அநேகர் இடறல்பட்டு, ஒருவரை ஒருவர் காட்டிக்கொடுத்து, ஒருவரை ஒருவர் பகைப்பார்கள்.

11. அநேக மாயத்தீர்க்கதரிசிகளும் எழும்பி அநேகரை மயக்குவார்கள்.

12. இவ்விதமாய்ப் பாவாக்கிரமம் மிகுந்ததினால், அநேகருடைய (தேவ) சிநேகம் குளிர்ந்துபோம்.

13. ஆனாலும் முடிவுபரியந்தம் நிலைநிற்பவன் எவனோ, அவனே இரட்சிக்கப்படுவான்.

14. மேலும் (மோக்ஷ) இராச்சியத்தினுடைய இந்தச் சுவிசேஷம் பூமி எங்கும் சகல ஜாதிகளுக்கும் அத்தாட்சியாகப் பிரசங்கிக்கப்படும்; அதன்மேல் முடிவு வரும்.

15. ஆதலால், தனியேல் தீர்க்கதரிசியால் வசனிக்கப்பட்ட அருவருப்புக்குரிய நாசமானது திருஸ்தலத்தில் நிற்கக் காணும்போது, வாசிக்கிறவன் உணரக்கடவான். மாற். 13-14; லூக். 21-20; தானி. 9-27.

16. அப்போது யூதேயா நாட்டிலிருக்கிறவர்கள், மலைகளுக்கு ஓடிப்போகக் கடவார்களாக.

17. அரமியத்தில் இருக்கிறவனும் தன் வீட்டிலிருந்து எதையாகிலும் எடுக்கும்படி இறங்காதிருப்பானாக.

18. வயலிலிருக்கிறவனும் தன் வஸ்திரத்தை எடுக்கும்படி திரும்பாதிருப்பானாக.

19. அந்நாட்களில் கற்பவதிகளுக்கும், பாலூட்டுகிறவர்களுக்கும் ஐயோ கேடு!

15. உரோமர் பாளையம் எருசலேமை முற்றிகை செய்து அதை நெருக்குகிற காலத்தில், எருசலேமிலுள்ள யூதருடைய பாளையம் தங்கள் கோவிலிலே தங்கியிருந்தது. அப்போது ஒருவன் ஒருவனை வெட்டியும், குத்தியும் கொலைசெய்தும், இவை முதலிய பாவாக்கிரமங்களைச் செய்தார்களென்று, இந்த முற்றிகையின் சரித்திரத்தை எழுதினவர்களால் தெரிய வருகிறது. அதுவே தேவாலயத்தில் நடக்கக் கூடாத அருவருப்புக்குரிய நாசமென்று சொல்லப்படும்.

20. ஆதலால் நீங்கள் ஓடிப்போவது மாரிகாலத்திலாவது ஓய்வுநாளிலாவது நேரிடாதபடிக்குப் பிரார்த்தித்துக்கொள்ளுங்கள்.

21. ஏனெனில், அப்பொழுது மிகுந்த உபத்திரவமுண்டாகும். அவ்வித உபத்திரவம் உலகமுண்டான நாள்முதல் இந்நாள்மட்டும் இருந்ததுமில்லை. இனி இருக்கப்போகிறதுமில்லை.

22. அந்த நாட்கள் குறைந்தாலொழிய, எந்த மாம்சமும் பிழைக்கமாட்டாது. ஆயினும் தெரிந்துகொள்ளப்பட்டவர்களினிமித்தம் அந்த நாட்கள் குறைக்கப்படும்.

23. அக்காலத்தில், இதோ கிறீஸ்துநாதர் இங்கேயிருக்கிறூர் அல்லது, அங்கேயிருக்கிறூர் என்று யாராவது உங்களுக்குச் சொன்னூல் விசுவசியாதேயுங்கள். மாற். 13-21; லூக். 17-23.

24. ஏனெனில் கள்ளக் கிறீஸ்துக்களும், கள்ளத் தீர்க்கதரிசிகளும எழும்பிக் கூடுமாகில் தெரிநதுகொள்ளப்பட்டவர்களை முதலாய் வஞ்சிக்கும்படியான பெரிய அடையாளங்களையும் அற்புதங்களையும் செய்வார்கள்.

25. இதோ, முன்னதாக உங்களுக்கு அறிவித்தேன்.

26. ஆதலால், இதோ, அவர் வனாந்தரத்திலிருக்கிறூர் என்று சொன்னூலும் வெளியே புறப்படாதிருங்கள். இதோ, வீட்டுக்குள்ளேயிருக்கிறூர் என்றூலும், விசுவசியாதேயுங்கள்.

27. ஏனெனில் மின்னலானது கிழக்கில் தோன்றி, மேற்குமட்டாகப் பிரகாசிப்பது எப்படியோ, அப்படியே மனுமகனுடைய வருகையுமிருக்கும்.

28. பிணம் எங்கேயோ, அங்கேயே கழுகுகளும் வந்துகூடும். லூக். 17-37.

29. அந்நாட்களின் உபத்திரியத்துக்குப்பின்பு, சூரியன் இருள, சந்திரன் தன்னொளி கொடாதிருக்க, நட்சத்திரங்களும் வானத்தினின்றுவிழ, வானத்தின் வல்லமைகள் அதிரும். இசை. 13-10; 32-57; யோவேல். 2-10; 3-15; மாற். 13-24.

30. அப்பொழுது மனுமகனுடைய அடையாளமானது வானத்தில் காணப்படுவதுமன்றி, பூமியிலுள்ள சகல ஜாதி ஜனங்களும் புலம்பி, மனுமகன் வான மேகங்களின்மேல் மிகுந்த வல்லபத்தோடும் மகிமையோடும் வருவதைக் காண்பார்கள். லூக். 21-25; காட்சி. 1-7.

31. அப்போது அவர் தம்முடைய தூதர்களை எக்காளப் பெருந்தொனியோடு அனுப்புவார். அவர்கள் வானத்தின் மேல்முனை முதல், கடைமுனைவரையில், நான்கு திசைகளிலுமிருந்து அவரால் தெரிநதுகொள்ளப்பட்டவர்களைக் கூட்டிச்சேர்ப்பார்கள். 1 கொ. 15-52; தெச. 4-15.

32. அத்திமரத்தினின்று ஓர் உவமையைக் கற்றுக்கொள்ளுங்கள். அதில் இளந்துளிர்கண்டு, இலைகள் தளைக்கும்போது, கோடைகாலம் சமீபமாயிற்றென்று அறிநதிருக்கிறீர்கள்.

---

28. கழுகுகளுக்குப் பிரேதங் கிடக்கிற இடத்தைக் காட்டவேண்டியதில்லை. தாங்களாய் அவ்விடம் பறந்து போம். அவ்வண்ணமே நடுத்தீர்க்கிற நாளிலே, உலகத்தின் எப்பக்கத்திலுமிருந்து மனிதர்களெல்லாரும் உயிர்த்து, நடுவராகிய யேசுநாதர் சுவாமியுடைய சமூகத்துக்கு தாங்களாய்ப் பறந்து போவார்களென்று அர்த்தமாம்.

29. நட்சத்திரங்கள் விழுமென்கும்போது மெய்யான நட்சத்திரங்களல்ல, கொள்ளி நட்சத்திரங்கள் ஆகாசத்தினின்று விழுந்து, மனிதருக்குச் சேதமும் மயக்கமுமுண்டாக்கும்.

30. மனுமகனுடைய அடையாளம் சிலுவைதான் என்று அறிக.

33. இவ்வண்ணமே, நீங்களும் இவைகளெல்லாவற்றையும் காணும்போது, அவர் சமீபமாய் வாசலருகே வந்திருக்கிறாரென்று அறிந்துகொள்ளுங்கள்.

34. இவையெல்லாம் நடந்தேறுமளவும், இந்தச்சந்ததி ஒழிந்துபோவதில்லையென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

35. வானமும் பூமியும் ஒழிந்துபோம். என் வார்த்தைகளோ ஒழிந்துபோகாது. மாற். 13-31.

36. ஆனால் அந்த நாளையும் நாழிகையையும்பற்றிப் பிதா ஒருவரேயன்றி வேறெவனும், பரலோகத்திலுள்ள சம்மனசுக்களுமுதலாய் அறியார்கள்.

37. நோவா என்பவருடைய நாட்களில் எப்படியிருந்ததோ, அப்படியே மனுமகனுடைய வருகையிலும் இருக்கும். ஆதி. 7-7; லூக். 17-26.

38. எவ்வாறெனில் சளப்பிரளயத்திற்கு முந்தின நாட்களிலே, நோவா என்பவர் பேழையில் பிரவேசிக்கும் நாள்வரையில் ஜனங்கள் உண்டும், குடித்தும், பெண்கொண்டும், கொடுத்துமிருந்து,

39. ஜலப்பிரளயம் வந்து எல்லாவற்றையும் வாரிக்கொண்டுபோகும்வரைக்கும் உணராதிருந்தார்கள். அவ்விதமே மனுமகனுடைய வருகையிலுமிருக்கும்.

40. அப்பொழுது இருவர் வயலிலிருக்க, ஒருவன் எடுபடுவான், ஒருவன் விடுபடுவான்.

41. இரு பெண்கள் ஒரு திரிகையில் அரைத்துக்கொண்டிருக்க, ஒருத்தி எடுபடுவாள், ஒருத்தி விடுபடுவாள்.

42. ஆதலால் விழித்திருங்கள். ஏனெனில் உங்கள் ஆண்டவர் எந்நேரத்தில் வருவாரென்று நீங்கள் அறியீர்கள்.

43. திருடன் எந்நேரத்தில் வருவானென்று வீட்டெஜமான் அறிந்திருப்பானாகில், மெய்யாகவே விழித்திருந்து தன் வீட்டைக் கன்னமிடவொட்டானென்று அறிந்துகொள்ளுங்கள். மாற். 13-33; லூக். 12-39.

44. அப்படியே நீங்களும் மனுமகன் எந்நேரம் வருவாரென்று அறியாததினாலே ஆயத்தமாயிருங்கள்.

45. தன் குடும்பத்தாருக்குத் தக்க வேளையில், ஆகாரம் கொடுக்கும்படி, அவர்களுக்கு எஜமான் ஏற்படுத்திய நம்பிக்கையும், விவேகமுமுள்ள ஊழியன் யாரென்று நினைக்கிறாய்?

46. அவனுடைய எஜமான் வரும்போது, இப்படிச் செய்துகொண்டிருக்கிறவனாக எந்த ஊழியனைக் காண்பானோ, அந்த ஊழியனே பாக்கியவான். காட்சி. 16-15.

47. எஜமான், தனது சர்வ சம்பத்துக்களின்மேலும் அவனைக் காரியக்காரனாக ஏற்படுத்துவான் என்று உண்மையாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

48. ஆனால் அந்த ஊழியன் துஷ்டனாயிருந்து: என் எஜமான் வரத் தாமதிக்கிறாரென்று, தன்னிருதயத்தில் சொல்லிக்கொண்டு,

49. தன் உடனூழியரை அடிக்கத் தொடங்கி, வெறியரோடு புசித்தும் குடித்துமிருப்பானாகில்,

33. நீங்கள் காணும்போது என்றதினாலே, அப்போஸ்தலர்களே இவ்வுலகத்திலிருந்து பார்ப்பார்களென்று அர்த்தமல்ல. இதில் எருசலேம் நகரத்தின் அழிவையும், உலகத்தின் முடிவையும் குறித்து யேசுநாதர் பேசுகிறபடியால், முதல் காரியம் நிறைவேறுவதை அப்போதிருந்த மனிதருடைய தலைமுறை காணமல் ஒழிந்து போவதில்லையென்றும், உலகத்தின் முடிவில் நடக்கப் போகிறவைகளைக் காணுந்தனையும் மனுக்குலத்தார் ஒழிந்து போவதில்லையென்றும் அர்த்தமாம்.

50. அவன் நினையாத நாளிலும், அறியாத நேரத்திலும் அவ்வூழியனுடைய எஜமான் வந்து,

51. அவனை நீக்கி, வஞ்சனைக்காரர்களோடே அவனுக்குப் பங்கை விதிப்பான். அவ்விடத்தில் அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்கும். மத். 13-42; 25-30.

## 25-ம். அதிகாரம்.

பத்துக் கன்னிகைகளின் உவமையும், தலேந்துகளின் உவமையும், பொதுத் தீர்வையின் விவரங்களும்.

1. அப்போது, மோக்ஷ இராச்சியமானது தீபங்களைக் கையிலே எடுத்துக்கொண்டு, மணவாளனையும், மணவாளியையும் எதிர்கொள்ளப்போன பத்துக் கன்னியர்களுக்கு ஒப்பாயிருக்கும்.

2. எப்படியெனில், அவர்களில் ஐந்துபேர் மதியீனரும், ஐந்துபேர் விவேகிகளுமாயிருந்தார்கள்.

3. ஆனால் ஐந்து மதியீனர்களும் தீபங்களை எடுத்துக் கொள்ளும்போது தங்களோடு எண்ணெயையும் எடுத்துக் கொள்ளவில்லை.

4. விவேகிகளோவென்றால், தீபங்களோடு தங்கள் பாத்திரங்களில் எண்ணெயையும் எடுத்துக்கொண்டு போனார்கள்.

5. மணவாளன் வரத் தாமதித்தபோது, எல்லாரும் தூங்கிவிழுந்து நித்திரை பண்ணினார்கள்.

6. நடுச்சாமத்திலே: இதோ மணவாளன் வருகிறார்; அவருக்கு எதிர்கொண்டு போங்களென்று சத்தமுண்டாயிற்று.

7. உடனே அந்தக் கன்னியர்களெல்லாரும் எழுந்திருந்து, தங்கள் தீபங்களைத் தயார்பண்ணினார்கள்.

8. அப்போது மதியீனர் விவேகிகளை நோக்கி: எங்கள் தீபங்கள் அவிந்துபோகிறது. உங்கள் எண்ணெயில் எங்களுக்குக் கொஞ்சந் தாருங்கள் என்றார்கள்.

9. அதற்கு விவேகிகள் மறுமொழியாக: ஒருவேளை உங்களுக்கும் எங்களுக்கும் பற்றாமல்போகும். ஆதலால் நீங்கள் விற்கிறவர்களிடத்திலே போய், உங்களுக்கு வேண்டியதை வாங்கிக்கொள்ளுங்கள். அதுவே தாவிலை என்றார்கள்.

10. அப்படியே அவர்கள் வாங்கப் போன சமயத்தில், மணவாளன் வந்தார். அப்போது தயாராயிருந்தவர்கள் அவரோடு மணவறைக்குள் பிரவேசிக்கவே கதவு அடைக்கப்பட்டது.

11. கடைசியாய் மற்றக் கன்னிகைகளும் வந்து, ஆண்டவரே! ஆண்டவரே! எங்களுக்குத் திறந்தருளுமென்று பிரார்த்திக்க,

12. அவர் மறுமொழியாக: உங்களை அறியேனென்று உண்மையாகவே சொல்லுகிறேன் என்றார்.

13. ஆகையால் விழிப்பாயிருங்கள். ஏனெனில் நாளும் நாழிகையும் உங்களுக்கு தெரியாது. மாற். 13-33.

14. மேலும், (பரலோக இராச்சியமானது) புறதேசத்துக்குப் பிரயாணமாய்ப் போன ஒரு மனிதன் தன் ஊழியனை அழைத்து அவர்களிடத்தில் தன் திரவியங்களை ஒப்பித்தது போலாகும்.

15. அவன் ஒருவனுக்கு ஐந்து தலேந்தும், வேறொருவனுக்கு இரண்டு தலேந்தும், இன்னொருவனுக்கு ஒன்றுமாக, அவனவனுடைய சக்திக்குத் தக்கபடி கொடுத்து, உடனே பிரயாணமாய்ப் போனான்.

1. மோக்ஷ இராச்சியம் என்பது இவ்விடத்தில் யுத்த சபையாகிய திருச்சபைதான் என்றறிக.

16. ஐந்து தலேந்தை வாங்கினவன் போய், அவைகளைக்கொண்டு உழைத்து, வேறு ஐந்தைச் சம்பாதித்தான்.

17. அவ்வண்ணமே இரண்டு தலேந்தை வாங்கினவனும் வேறு இரண்டைச் சம்பாதித்தான்.

18. ஒன்றை வாங்கினவனோ போய், பூமியைத் தோண்டித் தன் எஜமானுடைய பணத்தைப் புதைத்துவைத்தான்.

19. வெகு காலத்துக்குப்பின், அந்த ஊழியருடைய எஜமான் வந்து, அவர்களிடத்தில் கணக்குக் கேட்டான்.

20. அப்பொழுது, ஐந்து தலேந்தைப் பெற்றுக்கொண்டவன் அணுகி வேறே ஐந்து தலேந்தை ஒப்புக்கொடுத்து: ஆண்டவனே! ஐந்து தலேந்தை என் வசத்தில் ஒப்புவித்தீரே, இதோ வேறைந்தை ஆதாயமாகச் சம்பாதித்தேன் என்றான்.

21. எஜமான் அவனைப்பார்த்து: சவ்வாஸ், நம்பிக்கையுள்ள நல்ல ஊழியனே! நீ சொற்பக்காரியங்களில் பிரமாணிக்கனாயிருந்ததினால், அநேக காரியங்களின்மேல் உன்னை அதிகாரியாக்குவேன். உன் எஜமானுடைய சந்தோஷத்துக்குள் பிரவேசி என்றான்.

22. அப்படியே இரண்டு தலேந்தை வாங்கினவனும் வந்து: ஆண்டவனே! என்வசத்தில் இரண்டு தலேந்தை ஒப்புவித்தீரே, இதோ வேறிரண்டைச் சம்பாதித்தேன் என்றான்.

23. எஜமான் அவனைப் பார்த்து: சவ்வாஸ், நம்பிக்கையுள்ள நல்ல ஊழியனே! நீ கொஞ்சத்தில் பிரமாணிக்கமுள்ளவனாயிருந்ததினால், அநேக காரியங்களின்மேல் உன்னை அதிகாரியாக ஸ்தாபிப்பேன். உன் எஜமானுடைய சந்தோஷத்துக்குள் பிரவேசி என்றான்.

24. பிறகு ஒருதலேந்தை வாங்கினவனும் வந்து: ஆண்டவனே! நீர் கண்டிப்புள்ள மனுஷனென்று அறிவேன். நீர் விதையாத இடத்தில் அறுக்கிறவரும், தெளிக்காத இடத்தில் சேர்க்கிறவருமாயிருக்கிறீர்.

25. ஆகையால் நான் பயந்து போய், உமது தலேந்தைப் பூமியில் புதைத்துவைத்தேன். இதோ, உம்முடையதைப் பெற்றுக்கொள்ளும் என்றான்.

26. எஜமான் மாறுத்தரமாக: கெட்ட சோம்பேறி ஊழியனே! நான் விதையாத இடத்தில் அறுக்கிறவனும், தெளிக்காத இடத்தில் சேர்க்கிறவனுமென்று அறிந்திருந்தாயே.

27. ஆகையால் என் பணத்தை நீ காசுக்காரரிடத்தில் போட்டுவைக்கவேண்டியதாயிருந்தது. அப்போது நான் வந்து, என்னுடையதை வட்டியோடு பெற்றிருப்பேனே என்று சொல்லி,

28. இவனிடத்திலிருக்கிற தலேந்தை எடுத்துப் பத்துத் தலேந்துள்ளவனுக்குக் கொடுங்கள்.

29. ஏனெனில் உள்ளவனுக்குக் கொடுக்கப்படும், அவனும் சம்பூரணனாவான். இல்லாதவனிடத்திலிருந்தோ, அவனுக்குள்ளதாகத் தோன்றுகிறதும் எடுத்துக்கொள்ளப்படும். மத். 13-12; மாற். 4-25; லூக். 8-18; 19-26.

30. பிரயோஜனமற்ற இந்த ஊழியனைப் புறம்பான, இருளிலே தள்ளுங்கள். அங்கே அழுகையும் பற்கடிப்புமுண்டாயிருக்கும் என்றான்.

31. அன்றியும் மனுமகன் தமது மகிமைப்பிரதாபத்தில் வரும்போது, சகல சம்மனசுக்களும் அவரோடு வர, அவர் தமது மகத்துவ பத்திராசனத்தில் வீற்றிருப்பார்.

32. அப்போது சகல ஜாதி ஜனங்களும் அவர் முன்பாகக் கொண்டுவந்து சேர்க்கப்படுவார்கள். மேய்ப்பவனானவன் வெள்ளாடுகளினின்று செம்மறியாடுகளைப் பிரிப்பதுபோலே, அவரும் அவர்களை வெவ்வேறாகப் பிரித்து,

33. செம்மறியாடுகளைத் தமது வலது பக்கத்திலும், வெள்ளாடுகளைத் தமது இடது பக்கத்திலுமாக நிறுத்துவார்.

34. அப்போது அரசன் தமது வலது பக்கத்திலிருப்பவர்களை நோக்கிச் சொல்லுவார் : என் பிதாவினால் ஆசீர்வதிக்கப்பட்டவர்களே ! வாருங்கள். உலகமுண்டானது முதல் உங்களுக்காக ஆயத்தம்பண்ணப்பட்டிருக்கிற இராச்சியத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுங்கள்.

35. ஏனெனில் நான் பசியாயிருந்தேன், எனக்குப் போஜனங் கொடுத்தீர்கள். தாகமாயிருந்தேன், எனக்குப் பானங் கொடுத்தீர்கள். பரதேசியாயிருந்தேன், எனக்கு விடுதி கொடுத்தீர்கள். இசை. 58-7 ; எசே. 18-7.

36. நான் வஸ்திரமில்லாதிருந்தேன், எனக்கு வஸ்திரம் கொடுத்தீர்கள். வியாதியாயிருந்தேன் ; என்னை விசாரிக்க வந்தீர்கள். காவலிலிருந்தேன் ; என்னைப் பார்க்கவந்தீர்கள் என்பார். பிரச. 7-39.

37. அப்போது நீதிமான்கள் மறுமொழியாக அவரை நோக்கி : ஆண்டவரே ! நீர் எப்போது பசியாயிருக்கக் கண்டு உமக்குப் போஜனங்கொடுத்தோம்? தாகமாயிருக்கக் கண்டு உமக்குப் பானங்கொடுத்தோம்?

38. நீர் எப்போது பரதேசியாயிருக்கக் கண்டு உமக்கு விடுதி கொடுத்தோம்? அல்லது வஸ்திரமில்லாதிருக்கக் கண்டு வஸ்திரங்கொடுத்தோம்?

39. எப்பொழுது நீர் வியாதியுள்ளவராக அல்லது காவலிலிருக்கிறவராகக் கண்டு உம்மிடத்தில் வந்தோம்? என்று கேட்பார்கள்.

40. அரசன் அவர்களுக்கு மறுமொழியாக : என்னுடைய மிகவும் சிறிய சகோதரர்களாகிய இவர்களில் ஒருவனுக்கு நீங்கள் செய்தபோதெல்லாம், எனக்கே அதைச் செய்தீர்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்பார்.

41. பிறகு அவர் இடது பக்கத்திலிருப்பவர்களை நோக்கி : சபிக்கப்பட்டவர்களே ! என்னைவிட்டகன்று, பசாசுக்கும் அதன் தூதர்களுக்கும் ஆயத்தம் பண்ணப்பட்டிருக்கிற நித்திய அக்கினியிலே போங்கள். மத். 7-23 ; லூக். 13-27 ; சங். 6-9.

42. ஏனெனில், நான் பசியாயிருந்தேன், நீங்கள் எனக்குப் போஜனங் கொடுக்கவில்லை. தாகமாயிருந்தேன், எனக்குப் பானங்கொடுக்கவில்லை.

43. பரதேசியாயிருந்தேன், நீங்கள் எனக்கு விடுதிகொடுக்கவில்லை. வஸ்திரமில்லாதிருந்தேன், நீங்கள் என்னை உடுத்தினதில்லை. வியாதியஸ்தனும் சிறையாளியுமாயிருந்தேன், நீங்கள் என்னைச் சந்திக்கவில்லை என்பார்.

44. அப்போது அவர்களும் அவருக்கு மாறுத்தாரமாக, ஆண்டவரே ! நீர் பசித்திருக்கிறதையாவது, தாகமாயிருக்கிறதையாவது, பரதேசியாயிருக்கிறதையாவது, வியாதியாயிருக்கிறதையாவது, காவலிலிருக்கிறதையாவது நாங்கள் எப்போது கண்டு, உமக்கு உதவிசெய்யாமலிருந்தோம்? என்பார்கள்.

45. அப்பொழுது அவர் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக : அதிக சிறியவர்களாகிய இவர்களில் ஒருவனுக்கு நீங்கள் செய்யாதபோதே, எனக்கே செய்யாதிருந்தீர்களென்று, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்பார்.

46. இவ்விதமாக இவர்கள் நித்திய ஆக்கினைக்கும், நீதிமான்களோ, நித்திய சீவியத்திற்கும் போவார்கள் என்று திருவுளம்பற்றினார். தானி. 12-2 ; அரு. 5-29.

## 26-ம். அதிகாரம்.

கடைசி இராப்போசனமும், தேவநற்கருணை
யை உண்டாக்கினதும், கிறீஸ்துநாதரு
டைய பாடுகளின் வரலாறும்.

1. யேசுநாதர் இந்த வாக்கியங்களை
யெல்லாஞ் சொல்லி முடித்தபின்பு
சம்பவித்ததேதெனில், அவர் தம்மு
டைய சீஷர்களைப் பார்த்து:

2. இரண்டு நாளுக்குப்பின், பாஸ்
காப்பண்டிகை வருமென்றும், அப்போ
து மனுமகன் சிலுவையில் அறையப்
படும்படி கையளிக்கப்படுவாரென்றும்
அறிந்திருக்கிறீர்களே என்றார். மாற்.
14-1; லூக். 22-1.

3. அத்தறுவாயிலே, பிரதான ஆசா
ரியரும், ஜனத்தின் மூப்பரும், கைப்
பாசென்னப்பட்ட பெரிய குருவினு
டைய அரமனையிலேகூடி,

4. யேசுநாதரைக் கபடமாய்ப் பிடித்
துக் கொலைசெய்யும்படி ஆலோசனை
செய்தார்கள்.

5. ஆனாலும் ஒருவேளை ஜனங்களுக்
குள்ளே கலகமுண்டாகாதபடி, இதைத்
திருநாளில் செய்யவொண்ணாது என்
றார்கள்.

6. யேசுநாதர் பெத்தானியாவூரில்
குஷ்டரோகியாயிருந்த சீமோனென்ப
வன் வீட்டிலிருக்கையிலே,

7. ஓர் ஸ்திரீ விலையேறப்பெற்ற பரி
மள தைலமுள்ள வெள்ளைக்கல்சிமிழைக்
கொண்டுவந்து, அவரிடத்திலணுகி,
பந்தியிலிருந்த அவருடைய சிரசின்
மேல் ஊற்றினாள். மாற். 14-8; அரு.
11-2; 12-3.

8. சீஷர்களோ இதைக்கண்டு, சின
ந்து சொன்னதாவது: இந்த நஷ்டம்
என்னத்துக்கு?

9. இதை உயர்ந்த கிரயத்துக்கு
விற்றுத் தரித்திரருக்குக் கொடுத்திருக்
கலாமே என்றார்கள்.

10. ஆனால் யேசுநாதர் இதையறிந்
து அவர்களுக்குச் சொன்னதாவது:
இந்த ஸ்திரீயை ஏன் தொந்தரவுபண்
ணுகிறீர்கள்? உண்மையாகவே இவள்
என்மட்டில் நற்கிரியையைச் செய்திரு
க்கிறாள்.

11. ஏனெனில் தரித்திரர் எப்போ
தும் உங்கள் நடுவிலிருக்கிறார்கள். நா
னோ உங்கள் நடுவில் எப்போதும் இருப்
பதில்லை.

12. அப்படியிருக்க, இவள் இந்தத்
தைலத்தை என் தேகத்தின்மேல் ஊற்
றினது என்னை அடக்கம்பண்ணத்தக்
கதாகச் செய்தாள்.

13. உலகமுழுதும் இந்தச் சுவிசே
ஷம் பிரசங்கிக்கப்படுகிற இடமெல்
லாம், இவள் செய்ததும் இவளுடைய
ஞாபகமாகச் சொல்லப்படுமென்று,
மெய்யாகவே உங்களுக்குச் சொல்லு
கிறேன் என்றார்.

14. அப்போது பன்னிருவரில் ஒரு
வனாகிய யூதாஸ்இஸ்காரியோத்தென்
பவன் பிரதான ஆசாரியர்களிடத்திற்
குப்போய்: மாற். 14-10; லூக். 22-4.

15. நான் அவரை உங்கள் கையில்
ஒப்புக்கொடுப்பேன்; நீங்கள் எனக்கு
என்ன கொடுப்பீர்கள்? என்று கேட்க,
அவர்கள் அவனுக்கு முப்பதுவெள்ளிக்
காசு கொடுக்கும்படி தீர்த்தார்கள்.

16. ஆதலால், அவன் அதுமுதல்
அவரைக் காட்டிக் கொடுக்கும்படி சம
யந்தேடிக்கொண்டிருந்தான்.

17. அப்படியிருக்க, புளியாத அப்பப் பண்டிகையின் முதல் நாளிலே, சீஷர்கள் யேசுநாதரிடத்தில்வந்து: பாஸ்காவைப் புசிப்பதற்கு நாங்கள் எங்கே உமக்கு ஆயத்தம்பண்ணச் சித்தமாயிருக்கிறீர்? என்றார்கள். மாற். 14-12; லூக். 22-7.

18. யேசுநாதர் பிரத்தியுத்தாரமாக: நீங்கள் பட்டணத்திலே இன்னானிடத்திற்குப்போய், அவனை நோக்கி: என் காலம் சமீபித்திருக்கின்றது. என் சீஷர்களோடு உன் வீட்டில் பாஸ்காவைக் கொண்டாடுவேன் என்பதாய்ப் போதகர் சொல்லுகிறாரென்று சொல்லுங்கள் என்றார்.

19. சீஷர்கள், யேசுநாதர் தங்களுக்குக் கற்பித்தபடியே செய்து, பாஸ்காவை ஆயத்தப்படுத்தினார்கள்.

20. பின்பு சாயரட்சையானபோது, அவர் தம்முடைய பன்னிரண்டு சீஷர்களோடுங்கூடப் பந்தியமர்ந்தார். மாற். 14-17; லூக். 22-14.

21. அவர்கள் அசனம்பண்ணிக்கொண்டிருக்கையிலே, அவர்: உங்களிலே ஒருவன் என்னைக் காட்டிக் கொடுக்கப் போகிறானென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார். அரு. 13-21.

22. ஆதலால் அவர்கள் மிகவுந் துக்கித்து: ஆண்டவரே! நானோவென்று ஒவ்வொருவரும் சொல்லத் தொடங்கினார்கள்.

23. அவரோ அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாகச் சொன்னதாவது: என்னோடு பாத்திரத்தில் கையிடுகிறவனே என்னைக் காட்டிக்கொடுப்பான்.

24. மனுமகன் தன்னைக்குறித்து எழுதப்பட்டபடியே போகிறார். ஆயினும் மனுமகன் எந்தமனிதனாலே காட்டிக்கொடுக்கப்படுவாரோ, அவனுக்கு ஐயோ கேடாம். அந்த மனிதன் பிறவாதிருந்தால் அவனுக்கு நலமாயிருக்கும் என்றார். சங். 40-10.

25. அவரைக் காட்டிக்கொடுத்த யூதாஸென்பவன் அவரை நோக்கி, குருவே! நானோ என்று கேட்க, நீயே சொல்லுகிறாய் என்றார்.

26. அப்படியே அவர்கள் அசனம் பண்ணிக்கொண்டிருக்கையில், யேசுநாதர் அப்பத்தை எடுத்து ஆசீர்வதித்துப் பிட்டுத் தம்முடைய சீஷர்களுக்குக் கொடுத்து: இதை வாங்கிப் புசியுங்கள், இது என் சரீரமாயிருக்கிறது என்றார். 1. கொ. 11-24.

27. பின்பு அவர் பாத்திரத்தையும் எடுத்துத் தோத்திரஞ்சொல்லி, அதை அவர்களுக்குக் கொடுத்து: நீங்கள் எல்லாரும் இதிலே பானஞ்செய்யுங்கள்.

28. ஏனெனில் இது பாவங்களின் பொறுத்தலினிமித்தம், அநேகருக்காகச் சிந்தப்படும் புதிய உடன்படிக்கையின் என் இரத்தமாயிருக்கின்றது.

---

17. புளியாத அப்பப் பண்டிகையின் முதல் நாள்: அதாவது வியாழக்கிழமை, இங்கே பாஸ்கா என்பது அந்த நாளில், சாப்பிடக் குறிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியாம். யூதர்களுக்கு முதல் மாசமாகிய, நீசான் மீ 14-ம் உ சாயந்தரம் பாஸ்குத் திருநாள் துவக்கினது. அதுமுதல் ஏழுநாள் வரையில், புளியாத அப்பஞ் சாப்பிடும்படி கட்டளையாயிருந்தது. நீசான் என்கிற மாசம் தமிழ் பங்குனி மாசத்தோடு பொருந்தும். (லேவித். 23-5, 6.)

26. இவ்விடத்தில் யேசுநாதர்சுவாமி, இது என் சரீரமென்று சொல்லுகிறாரேயொழிய, இதிலென்றாவது, இத்தோடென்றாவது, இது என் சரீரத்தின் அடையாளமென்றாவது சொல்லுகிறதில்லை. ஆகையால் அப்பமானது யேசுநாதருடைய திருச்சரீரமாக மாறிப்போகிறதென்று சொல்லவேண்டியது.

27. நீங்களெல்லோரும்:—யேசுநாதர் இந்த வார்த்தைகளைப் பன்னிரண்டு அப்போஸ்தலர்களைப் பார்த்துச் சொல்லுகிறாரொழிய சகல கிறீஸ்துவர்களையும் பார்த்துச் சொல்லுகிறதில்லை.



"என் பிதாவே! கூடுமாகில் இந்தப் பாத்திரம் என்னைவிட்டு அகலக்கடவது. ஆகிலும் என் மனதின்படியல்ல; உம்முடைய சித்தத்தின்படியாகட்டும்."

(மத். 26-39.)

29. இதுமுதல், இனி என் பிதாவின் இராச்சியத்திலே உங்களோடுகூட நவமான திராட்சப்பழ இரசத்தை நான் பானம்பண்ணும் நாள்வரைக்கும், இதை நான் பானம் பண்ணுவதில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

30. மேலும் சங்கீதம்பாடின பின்பு, ஒலிவேத் மலைக்குப் புறப்பட்டுப் போனார்கள்.

31. அப்பொழுது யேசுநாதர் அவர்களை நோக்கி: இந்த இராத்திரியிலே நீங்களெல்லாரும் என்னிமித்தம் இடறல் படுவீர்கள். ஏனெனில் மேய்ப்பனை அடிப்பேன். ' மந்தையின் ஆடுகள் சிதறுண்டுபோகுமென்று எழுதியிருக்கின்றது. மாற். 14-27; அரு. 16-32 சக். 13-7.

32. ஆனால நான் உயிர்த்தெழுந்த பிறகு, உங்களுக்கு முன் கலிலேயா நாட்டுக்குப் போவேன் என்றார். மாற். 14-28; 16-7.

33. அப்பொழுது இராயப்பர் அவருக்கு மறுமொழியாக: உம்மைப் பற்றி எல்லாரும் இடறல்பட்டாலும், நான் ஒருபோதும் இடறல் படேன் என்றார்.

34. யேசுநாதரோ அவரை நோக்கி: இந்த இராத்திரியிலே சாவல் கொக்கரிக்குமுன், மும்முறை நீ என்னை மறுதலிப்பாயென்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்றார். மாற். 14-30; அரு. 13-38.

35. அதற்கு இராயப்பர்: உம்மோடுகூட நான் சாகவேண்டியிருந்தாலும் உம்மை மறுதலியேன் என்றார். அவ்வண்ணமே சீஷர்களெல்லாரும் சொன்னார்கள். மாற். 14-31; லூக். 22-33.

36. பின்பு யேசுநாதர் அவர்களோடுகூட ஜெத்சேமனி என்னப்பட்ட பூங்காவனத்துக்கு வந்து, தம்முடைய சீஷர்களை நோக்கி, நான் அங்கேபோய் ஜெபம்பண்ணுமளவும், நீங்கள் இங்கே உட்கார்ந்திருங்கள் என்று சொல்லி,

37. இராயப்பனையும், செபெதையுவின் குமாரரிருவரையும் அழைத்துக் கொண்டுபோய், துயரப்படவும், ஆயாசப்படவும் துடங்கினார்.

38. மேலும் அவர்களைப்பார்த்து: என்னாத்துமம் மரணமட்டும் துக்கமாயிருக்கிறது. நீங்கள் இங்கே தங்கி, என்னோடுகூட விழித்திருங்கள் என்றார்.

39. பிறகு அவர் சற்று அப்பால் போய், முகங்குப்புறவிழுந்து: என் பிதாவே! கூடுமாகில் இநதப் பாத்திரம் என்னைவிட்டு அகலக்கடவது. ஆகிலும் என் மனதின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகட்டுமென்று சொல்லி வேண்டிக்கொண்டார்.

40. பின்னும்அவர் தம்முடைய சீஷர்களிடத்திற்கு வந்து, அவர்கள் நித்திரை செய்கிறதைக் கண்டு, இராயப்பனை நோக்கி: இப்படி ஒருமணிநேரம் என்னோடுகூட விழித்திருக்க உங்களாலே கூடாமல்போயிற்றோ?

41. நீங்கள் சோதனைக்குட்படாதபடிக்கு விழித்திருந்து, ஜெபஞ்செய்யுங்கள். மனமானது வேகமுள்ளதுதான், மாம்சமோ துர்ப்பலமுள்ளது என்றார்.

29. இந்த வாக்கியத்திற்கு அர்த்தமாவது: இந்த பாஸ்காவானது நாம் உங்களோடு புசிக்கிற கடைசி விருந்தா யிருக்கிறபடியினாலே, நான் பாடுபடுகிறதற்கு முன்னே உங்களோடுகூட இதைப் புசிக்க, மிகுந்த ஆசையாயிருந்தேன். நான் இதுமுதல் இவ்வுலகத்திலே மறுபடியும், இந்தத் திராட்ச ரசத்தை, உங்களோடுகூடப் பானம்பண்ணுவதில்லை. ஆனால் நம்முடைய பிதாவின் இராச்சியமாகிய மோக்ஷத்திலே உங்களோடுகூட புசித்து, பேரின்ப ரசமாகிய மோக்ஷ ஆனந்தத்தை என்றென்றைக்கும், உங்களோடுகூட சுகித்து வருவேனென்றர்த்தமாம்.

42. அவர் மறுபடியும் இரண்டாமுறை போய்: என் பிதாவே! இந்தப் பாத்திரத்தை நான் உட்கொண்டாலொழிய, இது அகன்றுபோகக்கூடாதாகில், உமது சித்தத்தின்படியே ஆகக்கடவதென்று சொல்லி வேண்டிக்கொண்டார்.

43. பின்பு அவர் திரும்பிவந்தபோது, அவர்கள் நித்திரைசெய்கிறதைக் கண்டார். ஏனெனில், அவர்களுடைய கண்கள் தூக்கமயக்கங்கொண்டிருந்தன.

44. ஆதலால் அவர்களைவிட்டு அவர் மறுபடியும் போய், அந்த வாக்கியத்தைத்தானே சொல்லி மூன்றாமுறையும் வேண்டிக்கொண்டார்.

45. பின்னும், அவர் தம்முடைய சீஷர்களிடத்தில் வந்து, அவர்களை நோக்கி: நீங்கள் இப்போது நித்திரைசெய்து இளைப்பாறுங்கள். இதோ நேரம் அடுத்திருக்கின்றது. மனுமகன் பாவிகளுக்குக் கையளிக்கப்படப்போகிறார்.

46. எழுந்திருங்கள், போவோமாக; இதோ என்னைக் காட்டிக்கொடுப்பவன் நெருங்கி வந்திருக்கிறான் என்றார்.

47. அவர் இன்னம் பேசிக்கொண்டிருக்கையிலே, இதோ பன்னிருவரில் ஒருவனாகிய யூதாசும், அவனோடுகூட பிரதான ஆசாரியராலும் ஜனத்தின் மூப்பராலும் அனுப்பப்பட்ட திரளான ஜனங்களும் கத்திகளையும் தடிகளையும் எடுத்துக்கொண்டு வந்தார்கள். மாற். 14-43; லூக் 22-47; அரு. 18-3; அப். 1-16.

48. அவரைக் காட்டிக்கொடுத்தவனோ, அவர்களுக்குக் கொடுத்திருந்த அடையாளமாவது: நான் எவனை முத்தஞ்செய்வேனோ, அவன்தான். அவனைப்பிடித்துக்கொள்ளுங்களென்றுசொல்லியிருந்தான்.

49. ஆகையால், உடனே அவன் யேசுநாதரிடத்தில் வந்து: குருவே! வாழ்கவென்றுசொல்லி அவரை முத்தமிட்டான்.

50. யேசுநாதர் அவனை நோக்கி: சிநேகிதனே, எதுக்காகவந்திருக்கிறாய்? என்றார். அப்போது அவர்கள் நெருங்கி யேசுநாதர்மேல் கரங்களை நீட்டி, அவரைப் பிடித்தார்கள்.

51. அப்போது யேசுநாதரோடிருந்தவர்களில் ஒருவன் கைநீட்டித் தன் பட்டயத்தை உருவி, பெரிய குருவின் ஊழியனைத்தாக்கி, அவன் காதற வெட்டினான்.

52. அப்பொழுது, யேசுநாதர் அவனை நோக்கி: உன் பட்டயத்தை அதனிடத்தில்போடு. ஏனெனில் பட்டயத்தை எடுப்பவர்களெல்லாரும் பட்டயத்தாலே மடிவார்கள். ஆதி. 9-6; காட்சி. 13-10.

53. நான் என் பிதாவை மன்றாடக்கூடாதென்றும், அவர் பன்னிரண்டு சேனைக்கதிகமான தேவதூதர்களை இக்ஷணமே என்னிடத்தில் அனுப்பமாட்டாரென்றும் நினைக்கிறாயோ?

54. அப்படியானால் இவ்விதமாய்ச் சம்பவிக்கவேண்டுமென்கிற வேதவாக்கியங்கள் எப்படி நிறைவேறும் என்று திருவுளம்பற்றினார். இசை. 53-10.

55. அந்நேரத்தில் யேசுநாதர் ஜனக்கூட்டத்தை நோக்கி: நீங்கள் என்னை ஒரு கள்ளனைப்போல கத்தியோடும், தடிகளோடும் பிடிக்கப் புறப்பட்டு வந்தீர்கள். நாள்தோறும் தேவாலயத்திலே போதித்துக்கொண்டு உங்கள் நடுவில் உட்கார்ந்திருந்தேனே. அப்பொழுது நீங்கள் என்னைப்பிடிக்கவில்லையே.

56. இதெல்லாம் தீர்க்கதரிசிகளால் எழுதப்பட்டவைகள் நிறைவேறும்படி சம்பவித்தது என்றார். அப்பொழுது சீஷர்களெல்லாரும் அவரைவிட்டு ஓடிப்போனார்கள். ஜெரெ. 12-20; மாற். 14-50.

57. ஆனால் யேசுநாதரைப் பிடித்தவர்கள், அவரைப்பெரிய குருவாகிய கைப்பாசுவினிடத்திற்குக் கூட்டிக்கொண்டு போனார்கள். அவ்விடத்தில் வேதபாரகரும் மூப்பரும் வந்து கூடியிருந்தார்கள். லூக். 22-54; அரு. 18-24.

58. இராயப்பரோவென்றால் தூரத்தில் அவரைப்பின்சென்று, பெரியகுருவின் அரமனை முற்றம்வரைக்கும்வந்து, உள்ளே பிரவேசித்து, முடிவைக்காணும்படி ஊழியரோடுகூட உட்கார்ந்தார்.

59. ஆனால் பிரதான ஆசாரியர்களும், சங்கத்தாரனைவரும் யேசுநாதரைக் கொலைப்படுத்தும்படி அவருக்கு விரோதமாய்ப் பொய்ச்சாக்ஷி தேடிக்கொண்டிருந்தார்கள்.

60. அநேக பொய்ச் சாக்ஷிகள் வந்திருந்தும் அவர்களுக்குப் பிடிக்கவில்லை. கடைசியில் இரண்டு பொய்ச்சாக்ஷிகள் வந்து:

61. இவன் சர்வேசுரனுடைய ஆலயத்தை இடிக்கவும், மூன்று நாளைக்குள் அதை மறுபடியுங் கட்டவும் என்னாலாகுமென்று சொன்னான் என்றார்கள். அரு. 2-19.

62. அப்பொழுது பெரிய குரு எழுந்து, அவரை நோக்கி: உனக்கு விரோதமாய் இவர்கள் சொல்லுகிற சாக்ஷிக்கு நீ பதிலொன்றுஞ் சொல்லுகிறதில்லையோ? என்று கேட்டான்.

63. யேசுநாதரோ மவுனமாயிருந்தார். மீளவும் பெரிய குரு அவரை நோக்கி: நீ தேவ சுதனாகிய கிறீஸ்துதானோவென்று எங்களுக்குச் சொல்லும்படி, சுயஞ்சீவிய கடவுளின் பேரில் உன்னை ஆணையிட்டுக் கேட்கிறேன் என்றான்.

64. அதற்கு யேசுநாதர்: நீர் (உள்ளபடி) சொன்னீர். அல்லாமலும் மனுமகன் வல்லமையுள்ள சர்வேசுரனுடைய வலதுபாரிசத்தில் வீற்றிருப்பதையும், வான மேகங்களின் மேல் வருவதையும், இதுமுதல் காண்பீர்களென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார். மத் 16-27; உரோ. 14-10; 1. தெச. 4-14.

65. அப்பொழுது பெரிய குரு தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு: இவன் தேவ தூஷணஞ் சொன்னான். இன்னும் நமக்குச் சாக்ஷிகள் வேண்டியதென்ன? இதோ! தேவ தூஷணத்தை இப்பொழுது கேட்டீர்களே.

66. உங்களுக்குத் தோன்றுகிறதென்ன? என்றான். அவர்களோ மறுமொழியாக: இவன் சாவுக்கு பாத்திரவானாயிருக்கிறான் என்றார்கள்.

67. அப்போது, அவருடைய முகத்தில் துப்பி, அவரைக் குட்டினார்கள். வேறு சிலர் அவரைக் கன்னத்தில் அறைந்து: இசை. 50-6; மாற். 14-65.

68. கிறீஸ்துவே, உன்னை அடித்தவன் யாரென்று எங்களுக்குத் தீர்க்கதரிசனமாகச் சொல்லென்றார்கள்.

69. அப்படியிருக்க இராயப்பர், வெளியே அரமனை முற்றத்தில் உட்கார்ந்திருந்தார். அப்போது பணிவிடைக்காரி ஒருத்தி அவர்கிட்ட வந்து: நீயும் கலிலேயனாகிய யேசுவோடுகூட இருந்தாய் என்றாள். லூக். 22-55; அரு. 18-17.

70. அவரோ எல்லாருக்கு முன்பாக மறுதலித்து: நீ சொல்லுகிறதை அறியேன் என்றார்.

71. பின்னும் அவர் வாசலைக் கடந்து வெளியே போகையில், வேறொரு பணிவிடைக்காரி அவரைக் கண்டு அங்கே இருந்தவர்களை நோக்கி: இவனும் நசரேனுவாகிய யேசுவோடு கூட இருந்தான் என்றாள்.

72. மீளவும் அவர் : அந்த மனிதனை அறியேனென்று ஆணையிட்டு மறுதலித்தார்.

73. மேலும் சற்று நேரத்துக்குப் பின், அங்கே நின்றவர்கள் நெருங்கி இராயப்பரைப் பார்த்து : மெய்யாகவே நீயும் அவர்களில் ஒருவன்தான், உன் பேச்சும் உன்னை வெளிப்படுத்துகிறது என்றார்கள்.

74. அப்போது, அவர் : அம்மனிதனைத் தான் அறியவில்லையென்று சபிக்கவும், ஆணையிடவுந் துடங்கினார். அந்நேரமே சாவல் கொக்கரித்தது.

75. அப்பொழுது : சாவல் கொக்கரிக்குமுன், மும்முறை என்னை மறுதலிப்பாயென்று, யேசுநாதர் திருவுளம்பற்றின வார்த்தையை இராயப்பர் நினைத்துக்கொண்டு, வெளியில் புறப்பட்டுப்போய்த் துயரமாய் அழுதார். மாற். 14-72.

## 27-ம். அதிகாரம்.

யூதாஸ் நான்றுகொண்டதும், யேசுநாதருடைய பாடுகளும், மரணமும், அடக்கமும்.

1. விடியற்காலமானபோது சகல பிரதான ஆசாரியரும், ஜனத்தின் மூப்பரும், யேசுநாதரைக் கொலைப்படுத்தும்படி, அவருக்கு விரோதமாக ஆலோசனை செய்து,

2. அவரைக் கட்டி, கூட்டிக்கொண்டுபோய், தேசாதிபதியாகிய, போஞ்சுப்பிலாத்துவினிடத்தில் ஒப்புவித்தார்கள். மாற். 15-1; லூக். 23-1; அரு. 18-28.

3. அப்பொழுது அவரைக் காட்டிக் கொடுத்த யூதாஸ், அவர் சாவுக்குத் தீர்வையிடப்பட்டாரென்று கண்டு, மனஸ்தாபத்தால் ஏவப்பட்டு, அந்த முப்பது வெள்ளிக் காசுகளைப் பிரதான ஆசாரியர்களிடத்திற்கும் மூப்பர்களிடத்திற்கும் திரும்பக் கொண்டுவந்து :

4. குற்றமில்லாத இரத்தத்தைக் காட்டிக்கொடுத்துப் பாவத்தைச் செய்தேன் என்றான். அதற்கு அவர்கள் : அது எங்களுக்கென்ன? நீயே பார்த்துக்கொள் என்றார்கள்.

5. அப்போது, அவன் அந்த வெள்ளிக்காசுகளைத் தேவாலயத்தில் எறிந்துவிட்டு, அப்பால் போய் நான்றுகொண்டு செத்தான். அப். 1-18.

6. பிரதான ஆசாரியர்கள் அந்த வெள்ளிக் காசுகளை எடுத்து : இவை இரத்தக் கிரயமானதால் இவைகளைக் காணிக்கைப்பெட்டியில் போடலாகாது என்று சொல்லி,

7. ஆலோசனைசெய்து, அந்நியரைப் புதைப்பதற்கு அவைகளைக்கொண்டு ஓர் குயவனுடைய நிலத்தை வாங்கினார்கள்.

8. இதினிமித்தம் அந்த நிலமானது இந்நாள்வரைக்கும், இரத்த நிலம் என்பதாக அசல்தமா என்னப்படுகிறது. அப். 1-19.

9. அப்போது, எரேமியாஸ் தீர்க்கதரிசியால் வசனிக்கப்பட்டது நிறைவேறிற்று! அதாவது : இஸ்ராயேல் புத்திரரிடத்தில் விலைபேசி மதிக்கப்பட்டவருடைய கிரயமாகிய முப்பது வெள்ளிக்காசுகளை எடுத்து,

6. இரத்தக் கிரயத்தைச் சர்வேசுரனுக்குக் காணிக்கையாகக் கொடுக்கப்படாதென்று, பழைய ஏற்பாட்டில் விலக்கியிருந்தது. (உபா. 23-18) இங்கே சொல்லியிருக்கிற காணிக்கைப்பெட்டி கொர்போனு என மூலபாஷையிற் சொல்லப்படுகிறது. கொர்போனு என்றால் காணிக்கைபோடுகிற இடமாம்.



"அவரைக்கட்டிக் கூட்டிக்கொண்டுபோய், தேசாதிபதியாகிய போஞ்சுப் பிலாத்துவினிடத்தில் ஒப்புவித்தார்கள்." (மத். 27-2.)

10. ஆண்டவர் எனக்கு நிரூபித்த படியே அவைகளைக் குயவனுடைய நிலத்துக்குக் கொடுத்தார்கள் என்பதாம். சக். 11-12.

11. அப்பொழுது யேசுநாதர் தேசாதிபதியின் முன்பாக நின்றார். தேசாதிபதி அவரைப் பார்த்து: நீ யூதருடைய இராஜாவாயிருக்கிறாயோ? என்று கேட்டான். அதற்கு யேசுநாதர்: நீர் உள்ளபடியே சொல்லுகிறீர் என்றார். மாற். 15-2; லூக். 23-3; அரு. 18-33.

12. பின்னும், பிரதான ஆசாரியரும் மூப்பரும் அவர்பேரில் குற்றஞ்சாட்டுகையில், அவர் மறுமொழியொன்றும் சொல்லவில்லை.

13. அப்போது பிலாத்து அவரை நோக்கி: உனக்கு விரோதமாய் எம்மாத்திரம் குற்றஞ்சாட்டுகிறார்களென்று நீ கேட்கிறதில்லையோ? என்றான்.

14. அவரோ ஒரு வார்த்தைக்கும் அவனுக்கு மறுமொழி சொன்னவரல்ல. அதினால் தேசாதிபதி மிகவும் ஆச்சரியப்பட்டான்.

15. அப்படியிருக்க, பண்டிகை நாளிலே ஜனங்களுக்கு இஷ்டமான ஓர் விலங்குக்காரனை அவர்களுக்கு விடுதலையாக்குவது தேசாதிபதிக்கு வழக்கமாயிருந்தது.

16. அப்பொழுது பரபாவென்னப்பட்ட பேர்போன விலங்குக்காரன் ஒருவன் அவன் வசத்திலிருந்தான்.

17. ஆகையால், பிலாத்து அவர்களை ஒன்றாய்க்கூட்டி: உங்களுக்கு எவனை நான் விடுதலையாக்க விரும்புகிறீர்கள், பரபாவையோ, கிறீஸ்து என்னப்படுகிற யேசுவையோ? என்றான்.

18. ஏனெனில் பொறாமையினால் அவரைக் கையளித்தார்களென்று அறிந்திருந்தான்.

19. பின்னும், அவன் தன் நியாயாசனத்தில் உட்கார்ந்திருக்கையில், அவனுடைய மனைவி அவனிடத்திற்கு ஆளனுப்பி: உமக்கும் அந்த நீதிமானுக்கும் யாதொன்றும் ஆகாதிருக்கக்கடவது. ஏனெனில் அவரைப்பற்றி இன்று சொர்ப்பனத்திலே வெகு பாடுபட்டேனென்று சொல்லுவித்தாள்.

20. அப்படியிருக்க, பிரதான ஆசாரியரும் மூப்பரும் பரபாவைக் கேட்கவும், யேசுநாதரைக் கொல்லுவிக்கவும் ஜனங்களை இணக்கினார்கள். மாற். 15-14; லூக். 23-18; அரு. 18-40; அப். 3-14.

21. தேசாதிபதி திரும்பவும் ஜனங்களைப் பார்த்து: இவ்விருவரில் எவனை உங்களுக்கு விடுதலையாக்க வேண்டுமென்று கேட்க, அவர்கள் பரபாவை என்றார்கள்.

22. அதற்குப் பிலாத்து: அப்படியானால், கிறீஸ்தென்னப்படுகிற யேசுவை என்னசெய்வேன்? என்றான்.

23. அவன் சிலுவையிலே அறையப்படவேண்டும் என்று எல்லாரும் சொன்னார்கள். அப்பொழுது தேசாதிபதி: அவன் என்ன பொல்லாப்பு செய்தான்? என்று கேட்க, அவர்கள் அதிகமாய்க் கூவி: அவன் சிலுவையிலே அறையப்படுவானாக என்றார்கள்.

24. ஆகையால் பிலாத்து: கலகம் அதிகமாகிறதேயன்றித் தன் பிரயாசத்தால் பிரயோசனமில்லையென்றுகண்டு, தண்ணீரை அள்ளி, ஜனங்களுக்கு முன்பாகக் கைகளைக் கழுவி: இந்த நீதிமானுடைய இரத்தத்தின்மட்டில் நான் குற்றமில்லாதவனாயிருக்கிறேன். நீங்களே பார்த்துக்கொள்ளுங்கள் என்றான்.

24. அர்ச். அருளப்பர் 19-ம் அதி. 10-ம் வசனத்தில், பிலாத்து யேசுநாதரை நோக்கி: உன்னைச் சிலுவையில் அறைகிறதற்கும், அல்லது விடுதலையாக்குகிறதற்கும் எனக்கு அதிகாரமுண்டென்று நீ அறியாயோ? என்று கேட்டிருக்க, இவ்விடத்தில் சொல்லியிருக்கிறபடி நான் குற்றவாளியல்லவென்று தன் கைகளைக் கழுவுகிறது மெய்யான மதியீனம்.

25. அதற்குச் சமஸ்த ஜனமும் மறுமொழியாக: அவனுடைய இரத்தம் எங்கள் பேரிலும், எங்கள் மக்கள் பேரிலும் இருக்கட்டும் என்றார்கள்.

26. அப்போது அவன் பரபாஸை அவர்களுக்கு விடுதலையாக்கி, யேசுநாதரைச் சாட்டைகளால் அடிப்பித்துச் சிலுவையில் அறையும்படிக்கு அவர்களுக்குக் கையளித்தான்.

27. அப்போது அதிபதியினுடைய சேவகர்கள் யேசுநாதரை அரமனை முற்றத்திற்குக் கூட்டிக் கொண்டுபோய், சேவகர் படையெல்லாம் அவரிடத்தில் கூடி வரச்செய்து, மாற். 15-16; சங். 21-17.

28. அவருடைய வஸ்திரங்களைக் கழற்றி, ஓர் சிவப்புச் சால்வையை அவர்மேல் போர்த்தினார்கள்.

29. முள்ளுகளால் ஓர் முடியையும் பின்னி, அவருடைய சிரசின்மேல் வைத்து, ஓர் மூங்கில் தடியையும் அவருடைய வலது கையில் கொடுத்தார்கள். பின்னும், அவர் முன்பாக முழங்கால் படியிட்டு: யூதருடைய இராஜாவே வாழ்கவென்று அவரைப் பரியாசம் பண்ணி,

30. அவர்மேல் துப்பி, அந்த மூங்கில் தடியையும் வாங்கி, அவரைச் சிரசில் அடித்தார்கள்.

31. அப்படியே அவர்கள் அவரைப் பரியாசம் பண்ணினபிற்பாடு, சால்வையை அவரிடத்தினின்று எடுத்துவிட்டு, அவருடைய வஸ்திரங்களை அவருக்கு உடுத்தி; அவரைச் சிலுவையில் அறையும்படி கூட்டிக்கொண்டு போனார்கள்.

32. அவ்விதமே அவர்கள் வெளியில் புறப்பட்டுப் போகையில், சீரேனை ஊராகிய சீமோனென்னும் பேருள்ள ஓர் மனிதனைக் கண்டு, அவருடைய சிலுவையைச் சுமக்கும்படி அவனைப் பலவந்தஞ் செய்தார்கள். மாற். 15-21; லூக். 23-26.

33. பின்னும் கபால ஸ்தலமென்று அர்த்தமுள்ள கொல்கொத்தாவென்னும் இடத்துக்கு வந்து சேர்ந்தார்கள். மாற். 15-22; லூக். 23-33; அரு. 19-17.

34. அப்போது அவருக்குப் பிச்சுக் கலந்த திராட்ச ரசத்தைக் குடிக்கக் கொடுத்தார்கள். அவரோ அதைச் சுவை பார்த்தபின், அதைக் குடிக்காமல் விட்டுவிட்டார்.

35. அவரைச் சிலுவையில் அறைந்த பின்பு, அவர்கள் சீட்டுப் போட்டு அவருடைய வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பகிர்ந்துகொண்டார்கள். இவ்விதமாய்: என் வஸ்திரங்களையும் தங்களுக்குள்ளே பங்கிட்டார்கள். என் அங்கியின்பேரிலும் சீட்டுப் போட்டார்களென்று, தீர்க்கதரிசியால் சொல்லப்பட்ட வாக்கியம் நிறைவேறிற்று. சங். 21-19; மாற். 15-24; லூக். 23-34; அரு. 19-23.

36. பின்பு அவர்கள் உட்கார்ந்து அவரைக் காத்துக்கொண்டிருந்தார்கள்.

37. அன்றியும், இவன் யூதர்களுடைய இராஜாவாகிய யேசு என்பதாய் அவருடைய தீர்ப்பின் நியாயத்தை எழுதி, அவருடைய சிரசுக்குமேலாக வைத்தார்கள்.

38 அப்பொழுது அவரோடுகூட இரண்டு கள்ளர்கள், வலது பக்கத்தில் ஒருவனும், இடது பக்கத்தில் ஒருவனுமாகச் சிலுவையில் அறையப்பட்டார்கள்.

39. அப்படியிருக்க, அவ்வழியாய்ப் போனவர்கள் அவரைத் தூஷணித்து, தங்கள் தலைகளை அசைத்து:

40. ஆ! சர்வேசுரனுடைய ஆலயத்தை இடித்து, மூன்றுநாளைக்குள்ளே அதைத் திரும்பக் கட்டுகிறவனே! உன்னைத்தானே இரட்சித்துக்கொள்: நீ சர்வேசுரனுடைய சுதனானால், சிலுவையினின்று இறங்கி வா என்பார்கள்.

41. அவ்விதமே பிரதான ஆசாரியரும், வேத பாரகரும் மூப்பரோடு கூடப் பரியாசம் பண்ணி:

42. இவன் மற்றவர்களை இரட்சித்தான்; தன்னைத்தானே இரட்சித்துக் கொள்ள இவனால் கூடவில்லை; இவன் இஸ்ராயேலின் இராஜாவானால், இப்போதே சிலுவையினின்று இறங்கட்டும், அப்போது இவனை விசுவசிக்கிறோம்.

43. சர்வேசுரனை நம்பினானே; அவர் இவனை நேசித்தால் இப்போதே இவனை இரட்சிக்கட்டும். ஏனென்றால் நான் சர்வேசுரனுடைய குமாரனென்று சொன்னானே என்றார்கள். சங். 21-9.

44. அவரோடுகூட சிலுவைகளில் அறையப்பட்டிருந்த கள்ளர்களும் அப்படியே அவரைப் பழித்துக்கொண்டிருந்தார்கள். லூக். 23-39.

45. அல்லாமலும், (பகல்) ஆறாம் மணி நேரமுதல் ஒன்பதாம் மணி நேரம் வரைக்கும் பூமண்டலமெங்கும் அந்தகாரமுண்டாயிற்று.

46. ஏறக்குறைய ஒன்பதாம் மணி நேரத்தில் யேசுநாதர் உரத்த சத்தமாய், ஏலி! ஏலி! லாமா சபக்தானி! அதாவது: என் சர்வேசுரா, என் சர்வேசுரா, நீர் என்னைக் கைநெகிழ்ந்தது ஏதென்று கூப்பிட்டார். சங். 21-2.

47. அப்போது அங்கே நின்றவர்களில் சிலர் இதைக் கேட்டு: இவன் எலியாசென்பவரைக் கூப்பிடுகிறான் என்று சொல்ல,

48. உடனே அவர்களில் ஒருவன் ஓடிப்போய், கடற்காளானை எடுத்து, அதைக் காடியில் நிறையத் தோய்த்து, ஒரு கோலின் மேலேற்றி, அவருக்குக் குடிக்கக் கொடுத்தான்.

49. மற்றவர்களோ: பொறு, எலியாஸ் வந்து, இவனை இரட்சிப்பாரோ, பார்ப்போம் என்றார்கள்.

50. யேசுநாதர் மறுபடியும் மகா சத்தத்தோடு கூப்பிட்டு உயிர்விட்டார்.

51. அப்போது, இதோ தேவாலயத்தின் திரைச்சீலை மேலே துவக்கிக் கீழ்மட்டும் இரண்டாய்க் கிழிந்து போக, பூமியும் அதிர, கல் மலைகளும் பிளந்துபோக, 2. நாளா. 3-14.

52. கல்லறைகளும் திறக்கப்பட்டு, மரித்த அநேக அர்ச்சியசிஷ்டவர்களுடைய சரீரங்களும் உயிர்த்தன.

53. மேலும் அவருடைய உத்தானத்துக்குப்பிறகு, இவர்கள் கல்லறைகளினின்று புறப்பட்டுப் பரிசுத்த நகரத்தில்வந்து, அநேகருக்குத் தரிசனையானார்கள்.

54. அன்றியும், செந்தூரியனும் அவனோடுகூட யேசுநாதரைக் காத்துக்கொண்டிருந்தவர்களும் பூமியதிர்ச்சியையும், சம்பவித்த மற்றவைகளையும் கண்டமாத்திரத்தில், மிகவும் பயந்து: மெய்யாகவே இவர் தேவசுதனாயிருந்தார் என்றார்கள்.

55. மேலும் கலிலேயாவிலிருந்து யேசுநாதரைப் பின்சென்று, அவருக்குப் பணிவிடை செய்துகொண்டுவந்த அநேக ஸ்திரீகள் அங்கே தூரத்தில் நின்றுகொண்டிருந்தார்கள்.

56. அவர்களுக்குள்ளே மரியமதலேனம்மாளும், இயாகப்பருக்கும் யோசேப்புக்கும் தாயான மரியம்மாளும், செபதேயுவின் குமாரர்களுடைய தாயும் இருந்தார்கள்.

44. வலது பக்கத்துக் கள்ளன் மனந்திரும்பினது மெய்யே, ஆயினும் துவக்கத்தில் அவனும் யேசுநாதர்சுவாமியைத் தூஷணித்தானென்று நினைக்க இடமுண்டு.

45. யூதருடைய கணக்கின்படி பகல் ஆறாம் மணியென்றால், மத்தியானமென்றர்த்தமாம்.

57. சாயங்காலமானபோது, அரிமத்தியா ஊரானும், ஐசுவரியவானுமாகிய யோசேப்பென்னும் பேருள்ள ஓர் மனுஷன் வந்தார். இவரும் யேசுநாதருக்குச் சிஷனாயிருந்தவர். மாற். 15-42; லூக் 23-50; அரு. 19-38.

58. இவர் பிலாத்துவினிடத்தில் போய், யேசுநாதருடைய சரீரத்தைக் கேட்டார். அப்பொழுது சரீரத்தைக் கொடுக்கும்படி பிலாத்து கட்டளையிட்டான்.

59. ஆதலால் யோசேப்பென்பவர் அந்தச் சரீரத்தை யெடுத்து, அதைத் தூய பரிவட்டத்தினால் சுற்றி,

60. தான் கற்பாறையிலே வெட்டியிருந்த புதிதான கல்லறையில் அதை அடக்கஞ்செய்து, கல்லறை வாசலிலே ஓர் பெருங் கல்லைப் புரட்டிவைத்துப் போனார்.

61. அங்கே மரியமதலேனம்மாளும், மற்றொரு மரியம்மாளும் கல்லறைக்கு எதிரே உட்கார்ந்திருந்தார்கள்.

62. ஆயத்தத்தினத்திற்குப் பிந்தின தினமாகிய மறுநாளிலே பிரதான ஆசாரியரும் பரிசேயரும் பிலாத்துவினிடத்தில் கூடிவந்து:

63. ஆண்டவனே! அந்த வஞ்சகன் உயிரோடிருக்கையிலே மூன்றுநாளைக்குப்பின் உயிர்ப்பேன் என்று சொன்னது எங்கள் ஞாபகத்திலிருக்கிறது.

64. ஆகையால், ஒருவேளை அவனுடைய சிஷர்கள் வந்து, அவனைக் களவாய்க் கொண்டுபோய், மரித்தோரிலிருந்து உயிர்த்தானென்று ஜனங்களுக்குச் சொல்லாதபடி, மூன்றுநாள்மட்டும் கல்லறையைக் காவல்பண்ணக் கட்டளையிடும். இல்லாவிட்டால் பிந்தின மோசம் முந்தின மோசத்திலும் அதிக கெடுதியாயிருக்கும் என்றார்கள்.

65. அதற்கு பிலாத்து: உங்களுக்குக் காவல்சேவகர் உண்டே. நீங்கள் போய், உங்களுக்குத் தெரிந்தபடி காவல்செய்துகொள்ளுங்கள் என்றான்.

66. ஆகையால், அவர்கள் போய், கல்லின்மேல் முத்திரையிட்டு, காவல் சேவகரைவைத்துக் கல்லறையைப் பத்திரப்படுத்தினார்கள்.

## 28-ம். அதிகாரம்.

கிறீஸ்துநாதர் உயிர்த்ததும், சிஷர்கள் சகல ஜாதி ஜனங்களுக்கும் பிரசங்கிக்கப் போகும்படி கட்டளைபெற்றதும்.

1. ஓய்வுநாள் முடிவாகி, வாரத்தின் முதல்நாள் விடியற்காலமாகையில் மரியமதலேனம்மாளும் மற்றொரு மரியம்மாளும் கல்லறையைப் பார்க்க வந்தார்கள். மாற். 16-1; லூக். 24-1; அரு. 20-1.

2 அப்பொழுது இதோ, பூமி மிகவும் அதிர, ஆண்டவருடைய தூதன் வானத்தினின்று இறங்கிவந்து, கல்லைப் புரட்டி அதின்மேல் உட்கார்ந்தார்.

3. அவருடைய ரூபம் மின்னலைப் போலவும் அவருடைய உடை வெண்பனியைப்போலவும் இருந்தது.

4. காவற்சேவகரோ அவரைக்கண்ட பயங்கரத்தால் திடுக்கிட்டுச் செத்தவர்களைப்போலானார்கள்.

5. அப்பொழுது, தேவதூதன் அந்த ஸ்திரிகளைப் பார்த்து: நீங்கள் பயப்படவேண்டாம், சிலுவையிலே அறையுண்ட யேசுநாதரைத் தேடுகிறீர்களென்று அறிவேன்.

6. அவர் இங்கே இல்லை. ஏனெனில் தாம் திருவுளம்பற்றினபடியே உயிர்த்தெழுந்தார். ஆண்டவர் வைக்கப்பட்டிருந்த இடத்தை வந்துபாருங்கள்.

62. ஆயத்தத் தினமென்றால் வெள்ளிக்கிழமையாம். யூதர்கள் சனிக்கிழமையிலே, சமையல் முதலாய்ச் செய்யாதிருந்ததினால், அன்றைக்கு வேண்டிய காரியமெல்லாம் வெள்ளிக்கிழமையே ஆயத்தம் பண்ணிக்கொள்வார்கள்.



"அப்பொழுது இதோ, பூமி மிகவும் அதிர, ஆண்டவருடைய தூதன் வானத்தினின்று இறங்கி வந்து, கல்லைப் புரட்டி அதின்மேல் உட்கார்ந்தார்."

(மத்., 28-2.)

"அவர் இங்கே இல்லை; தாம் திருவுளம்பற்றினபடியே உயிர்த்தெழுந்தார்."

(மத். 28-6.)

7. பின்னும் நீங்கள் தீவிரமாய்ப் போய், அவர் உயிர்த்தெழுந்தாரென்று அவருடைய சீஷர்களுக்குச் சொல்லுங்கள். இதோ, உங்களுக்கு முன்னே கலிலேயாவுக்குப்போகிறார்; அங்கே அவரைக்காண்பீர்கள்; இதோ, முன்னமே உங்களுக்கு அறிவித்தேன் என்றார்.

8. அப்பொழுது அவர்கள் அச்சத்தோடும், மிகுந்த சந்தோஷத்தோடும் கல்லறையைவிட்டுத் தீவிரமாய்ப் புறப்பட்டு, அவருடைய சீஷர்களுக்கு இதை அறிவிக்கும்படி ஓடினார்கள்.

9. ஓடுகையில், இதோ, யேசுநாதர் அவர்களுக்கு எதிர்ப்பட்டு: நீங்கள் வாழ்க என்றார். அவர்களோ அணுகி அவருடைய பாதங்களைத் தழுவி, அவரை ஆராதித்தார்கள்.

10. அப்பொழுது யேசுநாதர் அவர்களை நோக்கி: அஞ்சாதிருங்கள். நீங்கள் போய், என் சகோதரர்கள் கலிலேயாவுக்குப் போகும்படி அவர்களுக்கு அறிவியுங்கள். அங்கே அவர்கள் என்னைக் காண்பார்கள் என்றார்.

11. அவர்கள் போனபின்பு, இதோ காவல் சேவகரில் சிலர் நகரத்தில்வந்து, சம்பவித்த யாவையும் பிரதான ஆசாரியர்களுக்கு அறிவித்தார்கள்.

12. ஆதலால், அவர்கள் மூப்பர்களோடு கூட்டங்கூடி, ஆலோசனை செய்து, சேவகர்களுக்குப் பணத்தை ஏராளமாய்க் கொடுத்து:

13. நாங்கள் நித்திரை செய்துகொண்டிருக்கையில், அவருடைய சீஷர்கள் இரவிலே வந்து, அவனைக் களவாய்க் கொண்டுபோனார்களென்று சொல்லுங்கள்.

14. இது அதிபதிக்குக் கேள்வியானால், நாங்கள் அவனிடத்தில் இணக்கமாய்ப் பேசி, உங்களுக்கு மோசம் வராதபடி செய்வோம் என்றார்கள்.

15. அவர்கள் பணத்தை வாங்கிக்கொண்டு, தங்களுக்குப் படிப்பித்தபடியே செய்தார்கள். இதினாலே இந்தப் பேச்சு யூதர்களுக்குள்ளே இந்நாள் வரைக்கும் பிரசித்தமாயிருக்கிறது.

16. பதினொரு சீஷர்களும் கலிலேயா நாட்டில் யேசுநாதர் தங்களுக்குக் குறித்த மலைக்குப் போய்,

17. அங்கே அவரைக் கண்டு, ஆராதித்தார்கள். சிலரோ சந்தேகப்பட்டார்கள்.

18. அப்பொழுது, யேசுநாதர் அணுகி அவர்களோடு பேசித் திருவுளம்பற்றினதாவது: பரலோகத்திலும் பூலோகத்திலும் எனக்குச் சர்வ அதிகாரமும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

19. ஆகையால் நீங்கள் போய், சகல ஜாதி ஜனங்களுக்கும் உபதேசித்து: பிதாவுடையவும் சுதனுடையவும் இஸ்பிரீத்துசாந்துடையவும் நாமத்தினாலே அவர்களுக்கு ஞானஸ்நானங்கொடுத்து, மாற். 16-15.

20. நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவற்றையும் அனுசரிக்கும்படி அவர்களுக்குப் போதியுங்கள். இதோ நான் உலகமுடியுமட்டும் எந்நாளும் உங்களோடு கூட இருக்கிறேனென்று திருவுளம்பற்றினார்.

---

20. அப்போஸ்தலர்கள் மரிப்பார்களென்று யேசுநாதர் அறிந்திருந்தும், உலகமுடியுமட்டும் அவர்களோடுகூடத் தாமிருக்கிறதாகச் சொல்லுகிறபடியால், அப்போஸ்தலர்களுடைய மரணத்துக்குப் பின், அவர்களுடைய ஸ்தானத்திலே இருக்கிறவர்களோடும் யேசுநாதர்சுவாமி வசிக்கிறாரென்று சொல்ல வேண்டியது. அப்போஸ்தலர்களுடைய ஸ்தானங்களும் உலகமுடியுமட்டும் நிலை நிற்குமென்று நிச்சயமாயிருக்கிறது.



# பாயிரம்.

---

அர்ச். மாற்கு தலையான அப்போஸ்தலரான அர்ச். இராயப்பருக்குச் சீஷனாயிருந்தார். அர்ச். இராயப்பர் உரோமாபுரியிலே சுவிசேஷத்தைப் பிரசங்கித்துத் திருச்சபையை ஸ்தாபித்தபிறகு அந்தப் புதுக்கிறீஸ்துவர்கள் அர்ச். இராயப்பர் பிரசங்கித்த சுவிசேஷத்தைச் சுருக்கமாய்த் தங்களுக்கு எழுதித்தரவேண்டுமென்று அர்ச். மாற்குவைக் கேட்டுக்கொண்டார்கள். அப்படியே அவர் கர்த்தர் அவதாரத்தின் ஏறக்குறைய 45-ம் வருஷத்தில் இந்தச் சுவிசேஷத்தைச் சுருக்கமாய் எழுதினார். இதை அர்ச். இராயப்பர் பார்வையிட்டு ஏற்றுக்கொண்டு கிறீஸ்துவர்களுக்குள் வழங்குவித்தார். இது அர்ச். மத்தேயு எழுதிய சுவிசேஷத்தின் சுருக்கம்போலிருக்கிறது. அவர் இதை லத்தீன் பாஷையில் எழுதினாரோ, அல்லது கிரேக்கப் பாஷையில் எழுதினாரோ, நிச்சயமில்லை. ஆனாலும் ஆதி முதற்கொண்டு இது அந்த இரண்டு பாஷைகளிலும் வழங்கிவந்தது. பிற்பாடு, அர்ச். மாற்கு அவ்விடத்திலிருந்து அர்ச். இராயப்பராலே எஜிப்து தேசத்தின் இராஜதானிப் பட்டணத்துக்கு முதல் மேற்றிராணியாராக அனுப்பப்பட்டு, அநேக வருஷம் அதில் அவர் பட்ட பிரயாசத்தினாலே, அந்தப் பட்டணத்திலும், அந்த ராச்சியத்திலும் சத்தியவேதம் மிகவும் பரம்பினதுந் தவிர, அவருடைய காலத்திலேயே அந்தக் கிறீஸ்துவர்களுக்குள் அநேகர் உலகத்தைத் துறந்து வனவாசிகளானார்கள். அவ்விடத்து அஞ்ஞானிகள் தங்கள் தேவர்களை அத்தனை ஆயிரம்பேர் விட்டுவிட்டதற்குக் காரணம் அர்ச். மாற்கு என்று நினைத்து, அவரைக் கொல்லத் தீர்மானித்து, ஒருநாள் அவர் பூசைபண்ணும்போது அந்த அஞ்ஞானிகள் அவரைப் பலவந்தமாய்ப் பிடித்துக் கழுத்திலே கயிற்றைக் கட்டி, அங்கே கிடந்த திரளான கற்களின்மேலே நிஷ்டூரமாய் இழுத்துக்கொண்டுபோனதினாலே, கர்த்தர் மனுஷாவதாரமான 64-ம் வருஷத்திலே வேதசாட்சியாக மரணத்தையடைந்தார். பிற்பாடு அந்த அஞ்ஞானிகள் அவருடைய சரீரத்தைச் சுட்டுப்போட ஆயத்தம்பண்ணுகிறபோது, கனமான இடியும், மின்னலும், மழையும், கல்மாரியும், புசலும் வந்ததினாலே பயந்து ஓடிப்போனார்கள். கிறீஸ்துவர்கள் அத்திருச் சரீரத்தை எடுத்துத் தக்க ஸ்தலத்திலே அடக்கம்பண்ணினார்கள். பிற்காலத்திலே கிறீஸ்துவர்கள் அதை வெனிசென்கிற பட்டணத்துக்குக் கொண்டுபோய், அவ்விடத்திலே அவரைக்குறித்து வெகு நேர்த்தியான கோவிலைக் கட்டி, அதிலே மகா பூச்சியத்தோடே ஸ்தாபித்தார்கள்.



# அர்ச். மாற்கு எழுதிய

# யேசுக்கிறீஸ்துநாதருடைய

# பரிசுத்த சுவிசேஷம்.

## முதல் அதிகாரம்.

*அருளப்பர் பிரசங்கித்ததும், யேசுநாதர் ஞானஸ்நானம் பெற்றதும், பசாசினால் சோதிக்கப்பட்டதும், முதல் சீஷர்களை அழைத்ததும், ஆவேஷமுள்ளவர்களும் வியாதிக்காரர்களும் குணமாக்கப்பட்டதும்.*

1. சர்வேசுரனுடைய சுதனாகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய சுவிசேஷத்தின் ஆரம்பமாவது :

2. இதோ, நான் உமது சமுகத்துக்கு முன்பாக என் தூதனை அனுப்புகிறேன் ; அவன் உமக்கு முன்னே உமது வழியை ஆயத்தப்படுத்துவானென்றும்,

3. ஆண்டவருடைய வழியை முஸ்திப்புச் செய்யுங்கள், அவருடைய பாதைகளைச் செவ்வையாக்குங்களென்றும், வனாந்தரத்தில் கூப்பிடுகிறவனுடைய குரலொலி என்று இசையாஸ் தீர்க்கதரிசியின் ஆகமத்திலே எழுதியிருக்கிறபடியே, மல்க். 3-1 ; இசை. 40-3 ; மத். 3-3 ; லூக். 8-4 ; அரு. 1-3.

4. அருளப்பர் வனாந்தரத்திலே ஞானஸ்நானங்கொடுத்து, பாவப்பொறுத்தலுக்காகப் பச்சாத்தாபத்தின் ஞானஸ்நானத்தைக்குறித்துப் பிரசங்கித்துக்கொண்டிருந்தார்.

5. அப்போது யூதேயா தேசத்தார் அனைவரும், எருசலேம் பட்டணத்தார் யாவரும் அவரிடத்தில் புறப்பட்டுப்போய், தங்கள் பாவங்களை வெளிப்படுத்தி, அவர் கையால் யோர்தான் நதியில் ஞானஸ்நானம்பெறுவார்கள். மத். 3-5.

6. அருளப்பர் ஒட்டக மயிருடையைத் தரித்து, இடையில் ஓர் வார்க்கச்சையைக் கட்டியிருந்தார். அவருடைய உணவோ வெட்டுக்கிளிகளும் காட்டுத்தேனுமாம். மேலும் அவர் பிரசங்கித்துச் சொன்னதாவது : மத். 3-4 ; லேவி. 11-22.

7. என்னிலும் அதிக வல்லவர் எனக்குப் பின்வருகிறார். அவருடைய பாதரட்சைகளின் வாரைக் குனிந்து அவிழ்க்க நான் பாத்திரவானல்ல. மத். 3-11 ; லூக். 3-16 ; அரு. 1-27.

8. நான் ஜலத்தினால் உங்களுக்கு ஞானஸ்நானங்கொடுத்தேன். அவரோ இஸ்பிரீத்துசாந்துவினால் உங்களுக்கு ஞானஸ்நானங்கொடுப்பார் என்றார். அப். நட. 1-5 ; 2-4 ; 11-16 ; 19-4.

---

5. மத்தேயு 3-ம் அதிகாரம் 6-ம் வசனத்தின் வியாக்கியானங் காண்க.

9. பின்னும் சம்பவித்ததாவது: அந்நாட்களில் யேசுநாதர் கலிலேயா நாட்டிலுள்ள நாசரேத்தூரிலிருந்து வந்து, அருளப்பர் கையால் யோர்தான் நதியில் ஞானஸ்நானம்பெற்று,

10. ஜலத்தினின்று ஏறினவுடனே, பரமண்டலம திறக்கப்பட்டிருக்கிறதையும், இஸ்பிரீத்துசாந்துவானவர் புறு வடிவாய் இறங்கித் தமதுமேல் நிற்கிறதையும் கண்டார். லூக். 3-32. அரு. 1-32.

11. அப்போது: என் நேச குமாரன் நீரே, உம்மில் நான் பிரியமாயிருக்கிறேன் என்று பரமண்டலங்களில் நின்று ஓர் குரலொலி உண்டாயிற்று.

12. உடனே இஸ்பிரீத்துவானவர் அவரை வனாந்தரத்திற்குப் போகும்படி தூண்டினார். மத். 4-1; லூக். 1-1.

13. அவர் வனாந்தரத்திலே நாற்பது பகலும் நாற்பது இரவுமிருந்து, சாத்தானால் சோதிக்கப்பட்டு, காட்டு மிருகங்களின் நடுவே சஞ்சரித்துக்கொண்டிருந்தார். தேவதூதர்கள் அவருக்குப் பணிவிடை செய்தார்கள்.

14. ஆனால் அருளப்பர் காவலில் வைக்கப்பட்ட பின்பு, யேசுநாதர் கலிலேயா நாட்டுக்கு வந்து, சர்வேசுரனுடைய இராச்சியத்தின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து: மத். 4-12; லூக். 4-14; அரு. 4-43.

15. காலம் நிறைவேறி, சர்வேசுரனுடைய இராச்சியம் சமீபமாயிற்று. பச்சாத்தாபப்பட்டுச் சுவிசேஷத்தை விசுவசியுங்கள் என்றார்.

16. மேலும் அவர் கலிலேயாக் கடலோரமாய் நடந்துபோகையில், சீமோனும் அவருடைய சகோதரனாகிய பெலவேந்திரரும் கடலில் வலைகளை வீசிக்கொண்டிருக்கிறதைக் கண்டார். (ஏனெனில் அவர்கள் செம்படவர்களாயிருந்தார்கள்.) மத். 4-18; லூக். 5-2.

17. யேசுநாதர் அவர்களை நோக்கி: என் பிறகே வாருங்கள். உங்களை மனுஷர்களைப் பிடிக்கிறவர்களாக்குவேன் என்றார்.

18. உடனே அவர்கள் தங்கள் வலைகளை விட்டுவிட்டு, அவரைப் பின்சென்றார்கள்.

19. மீளவும் அவர் அவ்விடத்திலிருந்து சற்றுத் தூரஞ் சென்று, செபதேயுவின் குமாரனாகிய யாகப்பரும், அவருடைய சகோதரனாகிய அருளப்பரும், படகிலே வலைகளைப் பழுது பார்த்துக்கொண்டிருக்கிறதைக் கண்டு,

20. உடனே அவர்களையும் அழைத்தார். அவர்கள் தங்கள் தகப்பனாகிய செபதேயுவைக் கூலியாட்களோடு படகிலே விட்டுவிட்டு, அவரைப் பின்சென்றார்கள்.

21. பின்பு, அவர்கள் கப்பர்நவும் ஊருக்குப்போனார்கள். உடனே அவர் ஓய்வுநாட்களில் ஜெப ஆலயத்தில் பிரவேசித்து, அவர்களுக்குப் போதித்து வந்தார். மத். 4-13; லூக். 4-31.

22. அவர்கள் அவருடைய போதகத்தின்மேல் அச்சரியப்பட்டார்கள். ஏனெனில் அவர் வேதபாரகரைப் போல் போதியாமல், அதிகாரமுடையவராய் அவர்களுக்குப் போதித்துவந்தார். மத். 1-28; லூக். 4-32.

23. அப்பொழுது அசுத்த அரூபி பிடித்திருந்த ஓர் மனிதன் அவர்களுடைய ஜெப ஆலயத்திலிருந்தான். அவன் உரத்தச் சத்தமாய்க் கூப்பிட்டு: லூக். 4-33.

24. நசரேனுவாகிய யேசுவே! எங்களுக்கும் உமக்கும் என்ன? எங்களைக் கெடுக்க வந்தீரோ? நீர் இன்னாரென்று அறிவேன்; நீர் சர்வேசுரனுடைய பரிசுத்தர் என்றான்.

25. யேசுநாதர் அதை அதட்டி: நீ பேசாமல், இந்த மனிதனை விட்டுப் புறப்பட்டுப்போ என்றார்.



"என் நேச குமாரன் நீரே, உம்மில் நான் பிரியமாயிருக்கிறேன்."

(மாற். 1-11.)

26. அந்த அசுத்த அரூபி அவனை அலைக்களித்து, பேரிரைச்சலிட்டுக் கொண்டு அவனை விட்டுப்போயிற்று.

27. அதனால் எல்லாரும் ஆச்சரியப்பட்டு: இது என்ன? நவமான இந்தப் போதகம் எப்படிப்பட்டது? இவர் அதிகாரத்தோடு அசுத்த அரூபிகளுக்கும் கட்டளையிடுகிறார்; அவைகளும் அவருக்குக் கீழ்ப்படிகின்றதே என்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டார்கள்.

28. இதினிமித்தம் அவருடைய கீர்த்தி சீக்கிரத்திலே கலிலேயா நாடெங்கும் பரம்பிற்று.

29. உடனே அவர்கள் ஜெப ஆலயத்தை விட்டுப் புறப்பட்டு, யாகப்பரோடும் அருளப்பரோடுங்கூட சீமோன் பெலவேந்திரர் என்பவர்களுடைய வீட்டுக்கு வந்தார்கள். மத். 8-14; லூக். 4-38.

30. அங்கே சீமோனுடைய மாமி காய்ச்சலாய்க் கிடந்தாள். உடனே அவளைக்குறித்து அவரிடத்தில் சொன்னார்கள்.

31. அவர், கிட்டப்போய் அவளுடைய கையைப் பிடித்து அவளைத் தூக்கினார். உடனே காய்ச்சல் அவளை விட்டுவிட்டது; அவள் அவர்களுக்குப் பணிவிடை செய்தாள்.

32. சாயங்காலமாகிச் சூரியன் அஸ்தமித்த பின்பு, எல்லாப் பிணியாளிகளையும் பேய்பிடித்தவர்களையும் அவருடைய சமுகத்தில் கொண்டுவந்தார்கள்.

33. பட்டணமனைத்தும் அந்தவீட்டு வாசலுக்குமுன் வந்து கூடியிருந்தது.

34. நானாவித பிணிகளால் வருந்தின அநேகரையும் அவர் சௌக்கியப்படுத்தி, அநேகம் பசாசுகளையும் துரத்தினார். அவைகள் தம்மை அறிந்திருந்தபடியால், அவர் அவைகளைப் பேசவிடவில்லை. லூக். 4-41.

35. (மறுநாள்) அவர் அதிகாலையில் கருக்கலோடு எழுந்து புறப்பட்டு, வனாந்தரமான ஓர் இடத்திற்குப்போய், அங்கே ஜெபம்பண்ணிக்கொண்டிருந்தார்.

36. அப்போது, சீமோனும் அவரோடிருந்தவர்களும் அவரைப் பின்தொடர்ந்துபோய்,

37. அவரைக் கண்டபோது: எல்லாரும் உம்மைத் தேடுகிறார்களென்று அவருக்குச் சொன்னார்கள்.

38. அவரோ அவர்களை நோக்கி: அடுத்த ஊர்களிலும் பட்டணங்களிலும் நான்பிரசங்கிக்கவேண்டுமாதலால் அவ்விடங்களுக்குப் போவோமாக. ஏனெனில் அதற்காகவே வந்தேனென்றார்.

39. அப்படியே அவர் அவர்களுடைய ஜெப ஆலயங்களிலும் கலிலேயா நாடடங்கலும் பிரசங்கித்துக் கொண்டும் பசாசுகளைத் துரத்திக் கொண்டும் இருந்தார்.

40. அப்பொழுது ஒரு குஷ்டரோகி அவரிடத்தில் வந்து முழங்காற்படியிட்டு: உமக்குச் சித்தமானால் என்னைச் சுத்தமாக்க உம்மாலாகும் என்று அவரை மன்றாடினான். மத். 8-2; லூக். 5-12.

41. யேசுநாதரோ அவன்மேல் மனமிரங்கித் தம்முடைய கரத்தை நீட்டி அவனைத் தொட்டு: சித்தமாயிருக்கிறேன், சுத்தமாகக்கடவாய் என்றார்.

42. என்றவுடனே, குஷ்டரோகம் அவனை விட்டு நீங்கிற்று. அவன் சுத்தமானான்.

43. உடனே அவர் அவனையனுப்பி விடுகையில், அவனைக் கண்டிப்பாய் எச்சரித்து:

44. நீ இதை ஒருவனுக்கும் சொல்லாதபடி பார்த்துக்கொள். ஆயினும் நீ போய், பிரதான ஆசாரியனுக்கு உன்னைக்காண்பித்து, உன் சுத்திகரிப்புக்காக மோயீசன் கட்டளையிட்டவைகளை அவர்களுக்கு அத்தாட்சியாகச் செலுத்து என்று அவனுக்குத் திருவுளம்பற்றினார். லேவி. 14-2.

45. அவனோ புறப்பட்டுப்போய், இச்செய்தியை எங்கும் பிரசித்தம்பண்ணத்தொடங்கினான். ஆகையால் யேசுநாதர் வெளியரங்கமாய் ஒரு பட்டணத்திலும் பிரவேசிக்கக் கூடாமல், வெளியே வனாந்தரமான இடங்களிலே தங்கியிருந்தார். எத்திசைகளிலிருந்தும் ஜனங்கள் அவரிடத்தில் கூடிவருவார்கள்.

## 2-ம். அதிகாரம்.

*யேசுநாதர் ஓர் திமிர்வாதக்காரனைச் சௌக்கியப்படுத்தினதும், லேவியென்ற மத்தேயுவை அழைத்ததும், தாம் பாவிகளோடு சஞ்சரிப்பதற்குள்ள காரணங்களை வெளியாக்கிப் பரிசேயர் முதலியவர்களைக் கண்டித்ததும்.*

1. சில நாட்களுக்குப் பின், அவர் மறுபடியும் கப்பர்நவும் ஊருக்குப் போனார். மத். 9-1.

2. அவர் வீட்டிலிருக்கிறாரென்று கேள்விப்பட்டவுடனே திரளான ஜனங்கள் வந்து கூடினதால், வீடும் வாசலுமுதலாய்க் கொள்ளாமல் போயிற்று. அவர் தேவ வாக்கியத்தை அவர்களுக்குப் பிரசங்கித்தார்.

3. அப்பொழுது நாலுபேரால் சுமக்கப்பட்ட ஓர் திமிர்வாதக்காரனை அவரிடத்தில் கொண்டுவந்தார்கள். லூக். 5-18.

4. ஆனால் கூட்டத்தினிமித்தம் அவருடைய சமுகத்தில் அவனை வைக்கக் கூடாமல், அவரிருந்த வீட்டின் கூரையைப் பிரித்துத் திறப்பாக்கி, திமிர்வாதக்காரன் கிடக்கிற கட்டிலை இறக்கினார்கள்.

5. யேசுநாதர் அவர்களுடைய விசுவாசத்தைக் கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி: மகனே, உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டன என்று திருவுளம்பற்றினார்.

6. அப்பொழுது அங்கே உட்கார்ந்திருந்த வேதபாரகரில் சிலர்:

7. இவன் இப்படிப் பேசுவானேன்? தேவதூஷணஞ் சொல்லுகிறான். சர்வேசுரன் ஒருவரோயன்றிப் பாவங்களை மன்னிக்கத்தக்கவர் யார் என்று தங்கள் இருதயங்களில் சிந்தித்துக்கொண்டிருந்தார்கள். யோபு. 14-4. இசை. 43-25.

8. அவர்கள் இப்படித் தங்களுக்குள்ளே சிந்திக்கிறார்களென்று யேசுநாதர் தமது புத்தியால் அறிந்து, அவர்களைப்பார்த்து: நீங்கள் உங்கள் இருதயங்களில் இவைகளைச் சிந்திக்கிறதென்ன?

9. இந்தத் திமிர்வாதக்காரனைநோக்கி: உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டன என்று சொல்வதோ அல்லது நீ எழுந்து உன் கட்டிலையெடுத்துக்கொண்டு நடவென்று சொல்வதோ எது எளிது?

10. பூமியிலே பாவங்களை மன்னிக்கும்படி மனுமகனுக்கு அதிகாரமுண்டென்று நீங்கள் அறிந்துகொள்ளவேண்டியதென்று சொல்லி, திமிர்வாதக்காரனை நோக்கி:

11. உனக்குச் சொல்லுகிறேன்: நீ எழுந்து உன் கட்டிலை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப்போ என்றார்.

12. உடனே அவன் எழுந்து, தன் கட்டிலை எடுத்துக்கொண்டு எல்லாருக்கும் முன்பாகப் போனான். ஆகையால் எல்லோரும் ஆச்சரியப்பட்டு: நாங்கள் ஒருக்காலும் இப்படிக் கண்டதில்லை என்று சர்வேசுரனை ஸ்துதித்தார்கள்.

13. திரும்பவும் அவர் புறப்பட்டுக் கடற்பக்கமாய்ப் போனார். அப்பொழுது ஜனக்கூட்டமெல்லாம் அவரிடத்தில் வரவே, அவர்களுக்கு உபதேசித்தார்.

14. பின்னும் அவர் நடந்துபோகையில், அல்பேயின் குமாரனாகிய லேவி என்பவர் ஆயத்துறையில் உட்கார்ந்திருக்கக்கண்டு: என்பிறகே வாவென்று அவருக்குச்சொன்னார். அவர் எழுந்து அவரைப் பின்சென்றார். மத். 9-9; லூக். 5-29.

15. அதன்பின் சம்பவித்ததேதெனில்: யேசுநாதர் அவருடைய வீட்டிலே பந்தியமர்ந்திருக்கையில், அநேகம் ஆயக்காரர்களும் பாவிகளும் அவரோடும் அவருடைய சீஷர்களோடுங்கூடப் பந்தியமர்ந்தார்கள். ஏனெனில் அவர் பிறகே வந்தவர்கள் வெகுபேராயிருந்தார்கள்.

16. அவர் ஆயக்காரரோடும் பாவிகளோடும் போஜனபானம்பண்ணுகிறதை வேதபாரகரும் பரிசேயரும் கண்டு, அவருடைய சீஷர்களை நோக்கி: உங்கள் குரு, ஆயக்காரரோடும் பாவிகளோடும் போஜனபானம்பண்ணுவானேன்? என்றார்கள்.

17. யேசுநாதர் அதைக்கேட்டு அவர்களை நோக்கி: சௌக்கியமுள்ளவர்களுக்கு வைத்தியன் வேண்டியதில்லை, வியாதியஸ்தர்களுக்கே வேண்டியது. நீதிமான்களையல்ல, பாவிகளையே அழைக்க வந்தேன் என்றார். 1 திமோ. 1-15.

18. அருளப்பருடைய சீஷரும் பரிசேயரும் உபவாசித்து வருவார்கள். அவர்கள் அவரிடத்தில் வந்து: அருளப்பருடைய சீஷர்களும் பரிசேயருடைய சீஷர்களும் உபவாசிக்கிறார்களே; உம்முடைய சீஷர்கள் உபவாசியாதிருப்பதேன்? என்றார்கள்.

19. அதற்கு யேசுநாதர்: மணவாளன் தங்களோடிருக்கிறவரையில், மணவாளனுடைய தோழர்கள் உபவாசிக்கக்கூடுமோ? மணவாளன் அவர்களோடிருக்கிற காலமெல்லாம் அவர்கள் உபவாசிக்கக்கூடாது.

20. மணவாளன் அவர்களை விட்டு எடுபடும் நாட்கள் வரும். அப்போது அந்த நாட்களில் அவர்கள் உபவாசிப்பார்கள். மத். 9-15; லூக். 5-35.

21. ஒருவனும் கோடிப்புடவையில் துண்டெடுத்துப் பழைய வஸ்திரத்தோடு தைக்கமாட்டான். ஏனெனில் அப்படிச்செய்தால், கோடித்துண்டு பழையதினின்று எடுபட, பீற்றலும் அதிகமாகும்.

22. அவ்விதமே ஒருவனும் புதுத் திராட்ச ரசத்தைப் பழைய சித்தைகளில் வார்க்கமாட்டான். ஏனெனில் அப்படிச்செய்தால் ரசம் சித்தைகளை வெடிப்பிக்கவே, ரசமும் சிந்திப்போம், சித்தைகளும் சேதமாகும். ஆகையால் புது ரசத்தைப் புதுச் சித்தைகளில் வார்த்துவைக்கவேண்டும் என்றார்.

23. மீளவும் சம்பவித்ததேதெனில், ஆண்டவர் ஓய்வுநாளில் விளைவு நிலங்களின்வழியாய்ப் போகும்போது, அவருடைய சீஷர்கள் முன்னடந்து கதிர்களைக் கொய்யத் தொடங்கினார்கள். மத். 12-1; லூக். 6-1.

24. அப்போது பரிசேயர் அவரை நோக்கி: இதோ ஓய்வுநாளில் செய்யத்தகாததை இவர்கள் செய்வானேன்? என்றார்கள்.

25. அதற்கு அவர்: தாவீதென்பவர் அவதிப்பட்டுத்தாமும் தம்மோடிருந்தவர்களும் பசியாயிருந்தபோது என்ன செய்தாரென்றும்,

21. 22. இவ்விரு வசனங்களுக்கும் மத். சுவி. 9-ம் அதி. 17-ம் வசனத்தின் வியாக்கியானத்தைக் காண்க.

26 பிரதான ஆசாரியனாகிய அபியத்தார் காலத்திலே அவர் எப்படித்தேவாலயத்தில் பிரவேசித்து, ஆசாரியர்களேயன்றி வேறொருவரும் புசிக்கத்தகாத (தேவ) சமுகத்து அப்பங்களை யெடுத்துத் தானும் புசித்து, தன்னோடிருந்தவர்களுக்கும் கொடுத்தாரென்றும் நீங்கள் ஒருபோதும் வாசித்ததில்லையோ? என்றார். அரச. 21-6.; லேவி. 24-9.

27. அவர் மறுபடியும் அவர்களை நோக்கி: ஓய்வுநாள் மனுஷனுக்காக உண்டாக்கப்பட்டதேயன்றி, மனுஷன் ஓய்வுநாளுக்காக உண்டாக்கப்பட்டவனல்ல.

28. ஆதலால் மனுமகன் ஓய்வுநாளுக்கும் ஆண்டவராயிருக்கிறார் என்று திருவுளம்பற்றினார்.

## 3-ம். அதிகாரம்.

*யேசுநாதர் சூம்பின கரத்தையுடையவனையும் வேறு பிணியாளிகளையும் சௌக்கியமாக்கினதும், அப்போஸ்தலர்களைத் தெரிந்துகொண்டதும், தாம் தலையான பசாசினாலே பேய்களை ஓட்டவில்லையென்றதுமாகிய வர்த்தமானங்கள்.*

1. மறுபடியும் அவர் ஜெப ஆலயத்தில் பிரவேசித்தார். அங்கே சூம்பின கரத்தையுடைய ஓர் மனிதனிருந்தான். மத். 12-3; லூக். 6.

2. அவர்பேரில் குற்றஞ்சாட்டும் பொருட்டு, ஓய்வுநாளிலே சௌக்கியப்படுத்துவாரோவென்று அவர்மேல் நோக்கமாயிருந்தார்கள்.

3. அப்பொழுது அவர் சூம்பின கரத்தையுடைய மனிதனை நோக்கி: நீ எழுந்து நடுவிலே நில் என்று சொல்லி,

4. அவர்களைப் பார்த்து: ஓய்வுநாளிலே நன்மை செய்வதோ தின்மை செய்வதோ, சீவனைக் காப்பதோ அல்லது அழிப்பதோ, எது தகுதி? என்று கேட்க, அவர்கள் மௌனமாயிருந்தார்கள்.

5. அவர்களுடைய இருதயக் குருட்டாட்டத்தின்மேல் அவர் துயரப்பட்டு, அவர்களைக் கோபமாய்ச் சுற்றிப் பார்த்து: உன் கரத்தை நீட்டென்று, அந்த மனிதனுக்குச் சொன்னார்; அவன் நீட்டவே, அவனுடைய கரம் சொஸ்தமாயிற்று.

6. உடனே பரிசேயர் புறப்பட்டுப் போய், அவரை எப்படிச் சங்கரிக்கலாமென்று எரோதியரோடுகூட அவருக்கு விரோதமாய் ஆலோசனை பண்ணினார்கள். மத். 12-14.

7. யேசுநாதர் தம்முடைய சீஷர்களோடு ஒதுங்கிக் கடலோரத்துக்குப் போனார். அவரைப் பின்சென்று திரளான ஜனங்கள் கலிலேயாவிலும், யூதேயாவிலும்,

8. எருசலேமிலும், இதுமேயாவிலும், யோர்தான் நதிக்கு அப்புறத்திலுமிருந்து வந்தார்கள். அன்றியும் தீர் சீதோன் பட்டணங்களின் திசையிலிருந்தும் திரளான ஜனங்கள் அவர் செய்துவந்த அற்புதங்களைக் கேள்விப்பட்டு அவரிடத்தில் வந்தார்கள்.

9. ஜனங்கள் கும்பலாயிருந்ததைப் பற்றி, அவர்கள் தம்மை நெருக்காதபடி, தமக்காக ஓர்படகைத் தயார் செய்யவேண்டுமென்று அவர் தம்முடைய சீஷர்களுக்குச் சொன்னார்.

---

26-ம் வசனத்துக்கு அர்ச். மத். 12-ம் அதி. 29-ம் வசனத்தின் வியாக்கியானம் காண்க.

27. ஓய்வுநாள் மனுஷனுக்காக உண்டாக்கப்பட்டதென்பதின் கருத்தேதெனில், மனிதன் ஆறுநாள் உழைத்து வேலைசெய்தபின், ஒருநாள் இளைப்பாறி சரீரப் பெலனைக் காப்பாற்றவும், அந்த நாளில் ஆத்தும நன்மைக்காகச் சர்வேசுரனுக்கு ஊழியஞ்செய்யவும் அந்த நாள் ஏற்படுத்தப்பட்டிருக்கிறதென்பதாம்.

10. ஏனெனில், அவர் அநேகரைச் சொஸ்தமாக்கினதினால், பிணியுள்ள யாவரும் அவரைத் தொடவேண்டுமென்று அவர்மேல் நெருங்கிவிழுவார்கள்.

11. அசுத்த அரூபிகளும் அவரைக் கண்டமாத்திரத்தில் அவர் முன்பாகச் சாஷ்டாங்கமாகவிழுந்து :

12. நீர் சர்வேசுரனுடைய குமாரனென்று உரத்த சத்தமாய்க் கூப்பிட்டன. அவரோ தம்மை வெளிப்படுத்தாதபடிக்கு அவைகளை மிகவும் பயமுறுத்தி அடக்குவார்.

13. பின்பு அவர் ஓர் மலையின்மேல் ஏறி தமக்குச் சித்தமானவர்களை தம்மிடத்தில் வரவழைக்கவே, அவர்கள் அவரிடத்தில் வந்தார்கள்.

14. அப்பொழுது அவர் பன்னிருவர் தம்மோடிருக்கவும், தாம் அவர்களைப் பிரசங்கிக்க அனுப்பவும் நியமித்து,

15. வியாதிகளைச் சொஸ்தமாக்கவும், பேய்களைத் துரத்தவும் அவர்களுக்கு அதிகாரங்கொடுத்தார்.

16. (அவர்களில்) சீமோனுக்கு இராயப்பனென்று பெயரிட்டார்.

17. (மற்றவர்களாரெனில்) செபதேயின் குமாரனாகிய யாகப்பர், யாகப்பருடைய சகோதரனாகிய அருளப்பர்; இவ்விருவருக்கும் இடியின் மக்களென்று அர்த்தமுள்ள போவானெர்கேஸ் என்று பெயரிட்டார்.

18. பெலவேந்திரர், பிலிப்பு, பர்தலோமையு, மத்தேயு, தோமையார், அல்பையின் குமாரனாகிய யாகப்பர், ததேயு, கனானேய சீமோன்,

19. அவரைக் காட்டிக்கொடுத்தவனாகிய யூதாஸ்இஸ்காரியோத் ஆகிய இவர்களாம்.

20. பின்னும் அவர்கள் வீட்டுக்கு வந்தார்கள், அங்கே மறுபடியும் திரளான ஜனங்கள் கூடிவந்ததினால், அப்பம் புசிக்கமுதலாய் அவர்களுக்குக் கூடாமையாயிருந்தது.

21. அவருடைய இனத்தார் இதைக் கேட்டபோது: அவர் பித்துக்கொண்டிருக்கிறாரென்று சொல்லி, அவரைப் பிடிக்கப் புறப்பட்டார்கள்.

22. எருசலேமிலிருந்து வந்த வேதபாரகர்: இவன் பேயேலசேபூலைக் கொண்டிருக்கிறானென்றும், பசாசுகளின் தலைவனைக்கொண்டு பசாசுகளைத் துரத்துகிறானென்றும் சொன்னார்கள். மத். 6-34.

23. அவர்களை அவர் வரவழைத்து, உவமைகளில் அவர்களுக்குச் சொன்னதாவது: சாத்தான் சாத்தானை எப்படி துரத்தக்கூடும்?

24. ஒரு இராச்சியம் தனக்குத்தானே விரோதமாய்ப் பிரியுமாகில், அந்த இராச்சியம் நிலைநிற்கமாட்டாதே.

25. ஒரு வீடு தனக்குத்தானே விரோதமாய்ப் பிரியுமாகில், அந்த வீடு நிலைநிற்கமாட்டாதே.

26. அப்படியே, சாத்தான் தனக்கு விரோதமாய் எழும்பிப் பிரிந்திருந்தால், நிலைநிற்கமாட்டாமல் அழிந்து போவான்.

27. பலவானை முந்திக் கட்டினாலொழிய, ஒருவனும் அவன் வீட்டுக்குள் புகுந்து, அவனுடைய தட்டுமுட்டுக்களைக் கொள்ளையிடமுடியாது. கட்டினால், அப்போது அவன் வீட்டைக் கொள்ளையிடுவான்.

28. மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்: மனுமக்களுக்குச் சகல பாவங்களும், அவர்கள் தூஷணித்திருக்கும் தூஷணங்களும் மன்னிக்கப்படும்.

29. ஆயினும் இஸ்பிரீத்துசாந்துவுக்கு விரோதமாய்த் தூஷணித்திருப்பவன் என்றென்றைக்கும் மன்னிப்பை அடையாமல் நித்திய பாவக்குற்றவாளியாயிருப்பான் என்றார். மத். 12-13; லூக். 12-10; 1 அரு. 5-16.

30. அவர் அசுத்த அரூபியைக் கொண்டிருக்கிறுரென்று அவர்கள் சொல்லிக்கொண்டிருந்ததினுல் அவர் இப்படிச் சொன்னூர்.

31. அத்தருணத்திலே அவருடைய தாயாரும் சகோதரரும் வந்து, வெளியே நின்று, அவரை அழைத்துவரும்படி அவரிடத்தில் ஆளனுப்பினூர்கள். மத். 12-46; லூக். 8-19.

32. அப்பொழுது ஜனக்கூட்டம் அவரைச்சுற்றி உட்கார்ந்திருக்க, அவர்கள் அவரை நோக்கி: இதோ உம்முடைய தாயாரும் சகோதரரும் வெளியே நின்று, உம்மைத் தேடுகிறூர்கள் என்றூர்கள்.

33. அவரோ அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக: என் தாயாரும் என் சகோதரரும் யார்? என்றுசொல்லி,

34. தம்மைச்சூழ உட்கார்ந்திருந்தவர்களைச் சுற்றிப் பார்த்து: இதோ என் தாயும் என் சகோதரர்களும் இவர்களே.

35. ஏனெனில் சர்வேசுரனுடைய சித்தத்தை நிறைவேற்றுகிறவன் எவனே, அவனே என் சகோதரனும் என் சகோதரியும் தாயுமாயிருக்கிறுன் என்று திருவுளம் பற்றினூர்.

## 4-ம். அதிகாரம்.

கர்த்தர் விதைக்கிறவனுடைய உவமையையும், தண்டின் மேலேற்றிய விளக்கு, நிலத்தில் ஊன்றிய விதை, கடுகுமணி, இவைகளின் உவமைகளையும் திருவுளம் பற்றினதும், கடற்கொந்தளிப்பை அமர்த்தினதும்.

1. அவர் மறுபடியும் கடற்கரையில் போதிக்கத் துடங்கினூர். அப்பொழுது திரளான ஜனங்கள் அவரிடத்தில் வந்து கூடினமையால், அவர் கடலில் ஓர் படகின்மேல் ஏறி உட்கார்ந்தார். ஜனங்களெல்லாரும் கடலோரமாய்க் கரையிலிருந்தார்கள்.

2. அவர் அநேக காரியங்களை உவமைகளாக அவர்களுக்குப் போதித்து, தம்முடைய போதகத்திலே அவர்களுக்குச் சொன்னதாவது: மத். 13-2; லூக். 8-4.

3. கேளுங்கள்: இதோ, விதைக்கிறவன் விதைக்கப் புறப்பட்டான்.

4. அவன் விதைக்கிறபோது, சிலது வழியோரத்தில் விழுந்தது. ஆகையால் ஆகாயத்துப் பறவைகள் வந்து அவைகளைப் பட்சித்துப்போட்டன.

5. வேறு சிலது அதிக மண்ணில்லாத கற்பாறை நிலத்தில் விழுந்தது; அதற்கு ஆழமான மண்ணில்லாததினுலே சீக்கிரத்தில் முளைத்தது.

6. ஆனுல் வெயில் ஏறவே, அது காய்ந்து, வேரில்லாதபடியால் தீய்ந்துபோயிற்று.

7. வேறு சிலது முள்ளுகள் நடுவில் விழுந்தது. முள்ளுகள் எழும்பி அதை நெருக்கிப்போட்டதினுல், அது பலன் கொடாமல்போயிற்று.

8. வேறு சிலது நல்ல நிலத்தில் விழுந்து, வளர்ந்தோங்கி விளைந்து, ஒன்று முப்பதும், ஒன்று அறுபதும், ஒன்று நூறுமாகப் பலனைத் தந்தது.

9. கேட்கச் செவியுள்ளவன் கேட்கக்கடவான் என்று திருவுளம்பற்றினூர்.

10. அவர் தனித்திருக்கும்போது, அவரோடிருந்த பன்னிருவரும் இந்த உவமையைக் குறித்து அவரை வினவினூர்கள்.

35-ம் வசனத்துக்கு அர்ச். மத். 12-ம் அதி. 48-ம் வசனத்தின் வியாக்கியானம் காண்க.

11. அவர் அவர்களுக்குத் திருவுளம்பற்றினதாவது: சர்வேசுரனுடைய இராச்சியத்தின் இரகசியத்தை அறியும்படி உங்களுக்கு அருளப்பட்டது. புறம்பே இருக்கிறவர்களுக்கோ சகலமும் உவமைகளால் சொல்லப்படுகிறது.

12. ஏனெனில் ஒருவேளை அவர்கள் மனந்திரும்பாதபடிக்கும் பாவங்கள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதபடிக்கும், அவர்கள் கண்ணாரக்கண்டும், காணாதவர்களாகவும், காதாரக்கேட்டும் உணராதவர்களாகவும் இருக்கும்படியாமே என்றார். இசை. 6-9; மத். 13-14; அரு. 11-40; அப். நட. 28-26; உரோ. 11-8.

13. மீளவும் அவர் அவர்களை நோக்கி: இந்த உவமையை நீங்கள் அறியவில்லையோ? அப்படியானால், மற்ற உவமைகளையெல்லாம் எப்படி அறிவீர்கள்?

14. விதைக்கிறவன் வாக்கியத்தை விதைக்கிறான்.

15. வாக்கியம் விதைக்கப்படுகிற வழியோரமானவர்கள் யாரெனில் வாக்கியத்தைக் கேட்கிறவர்களாம். ஆயினும் அவர்கள் வாக்கியத்தைக் கேட்டபின், சாத்தான் உடனே வந்து, அவர்கள் இருதயங்களில் விதைக்கப்பட்ட வாக்கியத்தைப் பறித்துக்கொள்ளுகிறான்.

16. அவ்வண்ணமே கற்பாறை நிலத்தில் வாக்கியம் விதைக்கப்பெற்றவர்கள் யாரெனில் வாக்கியத்தைக் கேட்டமாத்திரத்தில், உடனே அதைச் சந்தோஷமாய் ஏற்றுக்கொள்ளுகிறவர்கள்தான்.

17. ஆயினும் அவர்கள் தங்களில் வேரில்லாமல் நிலையற்றவர்களாயிருக்கிறார்கள். பின்பு வாக்கியத்தினிமித்தம் நெருக்கிடையும் உபத்திரவமும் உண்டாகவே, அவர்கள் உடனே இடறல்படுகிறார்கள்.

18. முள்ளுக்கள் நடுவில் வாக்கியம் விதைக்கப்பெற்ற மற்றவர்களும் உண்டு. அவர்கள் வாக்கியத்தைக் கேட்கிறவர்கள்தான்.

19. ஆனால் பிரபஞ்சத்தின் கவலைகளும் ஐசுவரியங்களின் மாய்கையும் மற்றவைகளின்மேலுள்ள துரிச்சைகளும் உட்பிரவேசித்து, வாக்கியத்தை அமுக்கிப்போடுகின்றன. ஆதலால் அது பலனற்றதாய்ப் போகின்றது. 1 திமோ. 6-17.

20. நல்லநிலத்தில வாக்கியம் விதைக்கப்பெற்றவர்கள் யாரெனில், வாக்கியத்தைக் கேட்டு ஏற்றுக்கொண்டு, ஒன்று முப்பதும், ஒன்று அறுபதும், ஒன்று நூறுமாகப் பலன் கொடுக்கிறவர்கள் தானென்று திருவுளம்பற்றினார்.

21. மீளவும் அவர் அவர்களை நோக்கி: தீபத்தை மரக்காலின் கீழாவது, கட்டிலின் கீழாவது வைக்கும்படி கொண்டுவருவார்களோ? தண்டின்மேலல்லோ வைக்கும்படி கொண்டு வருவார்கள். மத். 5-15; லூக். 8-16; 11-33.

22. ஏனெனில் வெளிப்படாத மறைபொருளும் இல்லை. பிரசித்தமாகாதபடி இரகசியமாக்கப்பட்டதுமில்லை. மத். 10-26; லூக். 8-17.

23. யாதொருவன் கேட்கச் செவியுள்ளவனாயிருந்தால் கேட்கக்கடவான் என்றார்.

24. மறுபடியும் அவர் அவர்களை நோக்கி: நீங்கள் கேட்கிறதைக் கவனியுங்கள். எந்த அளவினால் அளப்பீர்களோ, அந்த அளவினால் உங்களுக்குத் திரும்ப அளக்கப்படுவதுமன்றி, கூடவுங்கொடுக்கப்படும். மத். 7-2; லூக். 6-38.

25. ஏனெனில் உள்ளவனுக்குக் கொடுக்கப்படும். இல்லாதவனிடத்தி லிருந்து உள்ளதும் பறித்துக்கொள் ளப்படும் என்றார். மத். 13-12; 25-29; லூக். 8-18; 19-26.

26. இன்னமும் அவர் வசனித்ததா வது: சர்வேசுரனுடைய இராச்சிய மானது ஒரு மனிதன் நிலத்தில் விதை யை விதைப்பதற்கு ஒப்பாயிருக்கின் றது.

27. இரவும் பகலும் அவன் நித்திரை செய்தாலும், எழுந்திருந்தாலும், அவ னுக்குத் தெரியாமலே விதை முளைத்து வளருகின்றது.

28. ஏனெனில் பூமியானது முந்தப் பயிரையும், பின்பு கதிரையும், பின்னுங் கதிரில் நிறைந்த தானியத்தையும் பல னாகத் தானாய் தருகின்றது.

29. பலன் விளைந்த உடனே அறுப் புக்காலமானதால் உடனே அறிவாளை ப்போடுகிறான் என்றார்.

30. மறுபடியும் அவர் உரைத்ததா வது: சர்வேசுரனுடைய இராச்சியத் தை எதற்குச் சமானமாக்குவோம? அல்லது அதை எந்த உவமானத்திற்கு ஒப்பிடுவோம்?

31. அது ஒரு கடுகுமணிக்கு ஒப்பா யிருக்கின்றது. அது பூமியில் விதைக் கப்படும்போது பூமியிலுள்ள சகல விதைகளிலும் அதிக சிறிதாயிருக்கின் றது. மத். 13-31; லூக். 13-18.

32. ஆயினும் விதைக்கப்பட்டபின் போ, அதுஎழும்பி, சகல பூண்டுகளிலு ம் அதிகப்பெரிதாகி, ஆகாயப்பட்சிகள் அதின் நிழலின்கீழ்வந்து, வசிக்கத்தக்க பெருங்கிளைகளை விடுகின்றது என்றார்.

33. அவர்கள் கேட்டுணரத்தக்க விதமாய் இப்படிப்பட்ட அநேக உவ மைகளால் அவர்களுக்கு வாக்கியத் தைச் சொல்லிக்கொண்டிருந்தார்.

34. ஆனால் உவமையின்றி அவர்க ளோடு பேசினவரல்ல. ஆயினும் தம் முடைய சீஷர்களுக்கு எல்லாவற்றை யும் தனியே வியாக்கியானம்பண்ணு வார்.

35. அன்றையத்தினம், சாயங்கால மானபோது அவர்களை நோக்கி: அக்க ரைக்குப்போவோமாக என்றார்.

36. ஆகையால் அவர்கள் ஜனக்கூட் டத்தை அனுப்பிவிட்டு, அவர் படகில் இருந்தபடியே அவரைக் கொண்டுபோ னார்கள். வேறே படகுகளும் அவ ரோடுகூட இருந்தன. மத். 8-23; லூக். 8-22.

37. அப்பொழுது பலத்த சுழல்கா ற்று உண்டாகி, படகு நிரம்பத்தக்க விதமாய் அலைகள் அதின்மேல் மோதிக் கொண்டிருந்தன.

38. அவரோ பின்னணியத்தில் ஓர் தலையணையின்மேல் நித்திரைபண்ணிக் கொண்டிருந்தார். அவர்கள் அவரை எழுப்பி: போதகரே! நாங்கள் சாகி றது உமக்குக் கவலையில்லையோ? என் றார்கள்.

39. உடனே அவர் எழுந்து, காற் றையும் அதட்டி, கடலை நோக்கி: நீ சத் திக்காதே, இரையாதே என்றார். உட னே காற்று ஓய்ந்தது, மிகுந்த அமரிக் கை உண்டாயிற்று.

40. அப்பொழுது, அவர் அவர்களை நோக்கி: நீங்கள் ஏன் பயப்படுகிறீர்கள்? இன்னமும் உங்களுக்கு விசுவாசமில்லை யோ? என்றார். அவர்களோ மிகுந்த பயங்கரமுற்று, ஒருவர் ஒருவரைப் பார்த்து: இவர் யாரென்று நினைக்கிறாய்? இதோ, காற்றுங் கடலும் இவருக்குக் கீழ்ப்படிகின்றதே என்றார்கள்.

31. இந்த உவமை திருச்சபை உண்டாகி வர்த்தித்து வளர்கிறதைக் குறிக்கிறதெப் படியெனில், திருச்சபையானது துவக்கத்தில் கடுகுமணிபோல அற்பமாகத் தோன்றி னும் காளாவட்டத்தில் பெரும் விருட்சம்போல வளர்ந்து, பரவி, சகல ஜாதி ஜனங்களும் அதின் அடைக்கல நிழலில் வந்து தங்கும்படி ஆண்டவர் செய்திருக்கிறார்.

## 5-ம் அதிகாரம்.

துரத்தப்பட்ட பேய்க்கூட்டம் பன்றிகளுக்குள்ளே பிரவேசித்ததும், பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரீ சௌக்கியமானதும், யயீரொன்பவனுடைய மகளைக் கர்த்தர் உயிர்ப்பித்ததும்.

1. அதற்குப் பிற்பாடு அவர்கள் கடலின் ஜலசந்தியைக் கடந்து, ஜெராசேனியருடைய நாட்டுக்கு வந்தார்கள். மத். 8-28; லூக். 8-26.

2 அவர் படகிலிருந்து இறங்கினவுடனே, அசுத்தஅரூபி பிடித்திருந்த ஓர் மனிதன் கல்லறைகளிலிருந்து அவருக்கு எதிராக வந்தான்

3. அவன் கல்லறைகளில் வாசம் பண்ணினதுமன்றிச் சங்கிலிகளாலே முதலாய் அவனைக் கட்டியடக்க எவனாலும் கூடாதிருந்தது.

4. ஏனெனில் அவன் அநேகமுறை விலங்குகளாலும் சங்கிலிகளாலும் கட்டுண்டிருந்தும், சங்கிலிகளையும் முறித்து, விலங்குகளையும் உடைத்துப்போடுவான். ஆதலால் அவனை கட்டியடக்க ஒருவனாலும் கூடவில்லை.

5. அவன் எப்போதும் இரவும் பகலும் கல்லறைகளிலும் மலைகளிலும் இருந்து கூக்குரலிட்டுக் கல்லுகளால் தன்னை அடித்துக்கொள்ளுவான்.

6. அவன் தூரத்திலே யேசுநாதரைக் கண்டு, ஓடிவந்து அவரை நமஸ்கரித்து,

7. உரத்த சத்தமாய்க் கூப்பிட்டு: யேசுவே! அதி உன்னத கடவுளின் குமாரனே, உமக்கும் எனக்கும் என்ன? என்னை வாதைப்படுத்தாதபடிக்குச் சுவாமியின்மேல் உமக்கு ஆணை என்றான்.

8. ஏனெனில் அவர் அவனைநோக்கி: அசுத்த அரூபியே! இம்மனிதனைவிட்டுப் புறப்பட்டுப்போ என்று சொல்லியிருந்தார்.

9. பின்னும் அவர் உன் பேரென்னவென்று அவனைக் கேட்க, அவன் என் பேர்: படை, ஏனெனில் நாங்கள் அநேகராயிருக்கிறோம் என்றான்.

10. மேலும் தன்னை அத்தேசத்தினின்று துரத்தாதபடிக்கு அவரைமிகவும் கெஞ்சிக் கேட்டுக்கொண்டான்.

11. அப்போது ஓர் பெரும் பன்றிக்கூட்டம் அங்கே மலைச்சாரலில் மேய்ந்துகொண்டிருந்தது.

12. அந்த அரூபிகள் அவரை நோக்கி: நாங்கள் அந்தப் பன்றிகளுக்குள்ளே போகும்படி, எங்களை அவைகளுக்குள் அனுப்புமென்று அவரைக் கெஞ்சி மன்றாடின.

13. உடனே யேசுநாதர் அவைகளுக்கு உத்தரவுகொடுத்தார். ஆதலால் அந்த அரூபிகள் புறப்பட்டுப் பன்றிகளுக்குள்ளே பிரவேசிக்கவே, ஏறக்குறைய ஈராயிரம் பன்றிகளுள்ள அந்தக் கூட்டம் மிகுந்த வேகத்தோடு தலைகீழாய்க் கடலிலே பாய்ந்து, ஜலத்தில் திக்குமுக்காடி மடிந்தது.

---

13. இந்தச் சரித்திரத்தை அர்ச். மத்தேயு, மாற்கு, லூக்கா: மூவரும் எழுதியிருக்கிறார்கள். அர்ச். மத்தேயு பேய்பிடித்த இரண்டுபேர் இருந்தார்களென்கிறார். ஆயினும் பேய்பிடித்த அவ்விருவரில் ஒருவன் அதிகமாய் வாதிக்கப்பட்டவனாகவும், அத்தேசத்தாருக்குள்ளே அதிகமாய் அறியப்பட்டவனாகவும் இருந்ததினாலாக்கும் அவனொருவனைக்குறித்தே மற்ற இரண்டு சுவிசேஷகரும் எழுதியிருக்கிறார்களொழிய, மற்றவனைக்குறித்து ஒன்றும் எழுதவில்லை. அர்ச். மத். 8-ம் அதி. 33-ம் வசனத்தின் வியாக்கியானத்தில் மற்றும் விபரங்களைக் காணவும்.

14. அவைகளை மேய்த்தவர்களோ ஓடிப்போய், பட்டணத்திலும் காடுகளிலும் இந்தச்செய்தியை அறிவித்தார்கள். ஆகையால் சம்பவித்ததென்னவென்று பார்க்கும்படி, ஜனங்கள் புறப்பட்டு,

15. யேசுநாதரிடத்தில் வந்தபோது, பசாசினால் அலைக்கழிக்கப்பட்டிருந்தவன் வஸ்திரந்தரித்து, புத்தித் தெளிவோடு உட்கார்ந்திருக்கிறதைக் கண்டு பயந்தார்கள்.

16. மேலும் பேய்பிடித்திருந்தவனுக்கும் பன்றிகளுக்கும் எவ்விதம் சம்பவித்ததென்று கண்டிருந்தவர்களும் அவர்களுக்கு விபரமாய்ச் சொன்னார்கள்.

17. ஆகையால் தங்கள் எல்லைகளை விட்டு அவர் போகும்படி, அவரைமன்றாடத் தொடங்கினார்கள்.

18. அப்படியே அவர் படகிலேறும்போது, பசாசினால் உபாதிக்கவாதைப்பட்டவன் தானும் அவரோடிருக்கும்படி அவரை உத்தரவுகேட்கத் துவக்கினான்.

19. ஆனால் யேசுநாதர் அவனை ஏற்றுக்கொள்ளாமல், அவனை நோக்கி: நீ உன் வீட்டில் உன் பந்துக்களிடத்திற்குப்போய், ஆண்டவர் உனக்குச் செய்தது எம்மாத்திரமென்றும், உன்பேரில் எவ்வளவு இரக்கமாயிருந்தாரென்றும் அவர்களுக்கு அறிவிப்பாயாக என்றார்.

20. அவ்வண்ணமே அவன் போய், யேசுநாதர் தனக்கு எவ்வளவு பெரிதான காரியங்களைச் செய்தருளினாரென்று, தெக்கப்போலி நாட்டில் பிரசித்தப் படுத்தத் துவக்கினான். அதினால் எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள்.

21. யேசுநாதர் மறுபடியும் படகிலேறி, ஜலசந்தியைக்கடந்து, இக்கரைக்குவந்து கடலோரத்திலிருக்கும்போது, திரளான ஜனங்கள் அவரிடத்தில் கூடிவந்தார்கள்.

22. அப்பொழுது ஜெப ஆலயத் தலைவர்களில் ஒருவனாகிய ஜயீரொன்பவன் வந்து, அவரைக் கண்டவுடனே அவருடைய பாதத்தில் தண்டனாகவிழுந்து: மத். 9-18; லூக். 8-49.

23. என் குமாரத்தி மரண அவஸ்தைப்படுகிறாள், அவள் சௌக்கியப்பட்டுப் பிழைக்கும்படி நீர் வந்து, அவள்மேல் உமது கையை வைத்தருளும் என்று மிகவும் கெஞ்சி மன்றாடினான்.

24. அப்படியே அவர் அவனோடே கூடப்போனார். வெகு ஜனக்கூட்டமும் அவரைப் பின்பற்றி அவரை நெருக்கிக்கொண்டு போனது.

25. அப்பொழுது பன்னிரண்டு வருஷமாய்ப் பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரீயானவள்,

26. அநேக வைத்தியர்களால் பல வேதனைகளுக்குள்ளாகி, தனக்குள்ள யாவற்றையும் செலவழித்திருந்தும் சற்றும் வாசியாகாமல், மென்மேலும் அதிக வாதைப்பட்டிருக்கையில்,

27. யேசுநாதரைப்பற்றிக் கேள்விப்பட்டவுடனே கூட்டத்துக்குள் பின்னாகவந்து அவருடைய வஸ்திரத்தைத் தொட்டாள்.

28. ஏனெனில் அவருடைய வஸ்திரத்தையாவது தொடுவேனாகில் சௌக்கியம் அடைவேனென்று சொல்லிக்கொண்டிருந்தாள்.

29. அக்ஷணமே அவளுடைய உதிர ஊற்று வற்றிப்போக, அந்த உபாதை குணமாயிற்றென்று தன் சரீரத்தில் உணர்ந்துகொண்டாள்.

30. உடனே யேசுநாதர் தம்மிடத்தினின்று புறப்பட்ட வல்லமையைத் தமக்குள்ளே அறிந்துகொண்டு, ஜனக்கூட்டத்தைத் திரும்பிப் பார்த்து: என் வஸ்திரங்களைத் தொட்டது யார் என்றார்.

31. அதற்கு அவருடைய சீஷர்கள்: ஜனக்கூட்டம் உம்மை நெருக்கிக்கொண்டிருக்கிறதைக் காண்கிறீர். அப்படியிருந்தும், என்னைத் தொட்டது யாரென்று கேட்கிறீரோ என்றார்கள்.

32. ஆயினும் இதைச் செய்தவளைக் காணும்படி அவர் சுற்றிலும் பார்த்தார்.

33. அப்போது தன்னிடத்தில் சம்பவித்ததை அறிந்த அந்த ஸ்திரீயானவள் பயந்து, நடுங்கி, அவர் முன்பாக வந்துவிழுந்து, உண்மையெல்லாம் அவருக்குச் சொன்னாள்.

34. அவர் அவளைப்பார்த்து: மகளே! உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது. சமாதானத்துடன் போ, உன் உபாதை நீங்கிச் சொஸ்தமாயிரு என்றார். லூக். 7-50; 8-48.

35. அவர் இன்னம் பேசிக்கொண்டிருக்கையிலே ஜெப ஆலயத்தலைவனுடைய ஆட்கள் வந்து: உம்முடைய குமாரத்தி இறந்துபோனாள். இனிப் போதகரை வருத்தப்படுத்துவானேன்? என்றார்கள்.

36. யேசுநாதர் அவர்கள் சொன்ன வார்த்தையைக் கேட்டு, ஜெப ஆலயத்தலைவனை நோக்கி: நீ பயப்படாதே, விசுவாசத்தோடுமாத்திரம் இருவென்றார்.

37. பின்னும் இராயப்பரும், இயாகப்பரும், இயாகப்பருடைய சகோதரராகிய அருளப்பருந்தவிர, வேறொருவரும் தம்மோடு வருவதற்குச் சம்மதியாமல்,

38. ஜெப ஆலயத் தலைவனுடைய வீட்டுக்கு வந்து, அங்கே சந்தடியையும் வெகுவாய்ப் புலம்பி அழுகிறவர்களையும் கண்டு,

39. உள்ளே போய் அவர்களை நோக்கி: நீங்கள் ஏன் கலங்கியழுகிறீர்கள்? பிள்ளை சாகவில்லை, தூங்குகிறாள் என்றார்.

40. அதினிமித்தம் அவர்கள் அவரை நகைத்தார்கள். அவரோவென்றால் எல்லாரையும் அப்புறப்படுத்திச் சிறுபெண்ணினுடைய தந்தை தாயையும் தம்மோடிருந்தவர்களையும் அழைத்துக்கொண்டு, அந்தச் சிறுபெண் கிடந்த இடத்தில் பிரவேசித்து,

41. அவளுடைய கையைப் பிடித்து அவளை நோக்கி: தலீத்தாக்கூமி என்றார். அதற்கு சிறு பெண்ணே, உனக்குச் சொல்லுகிறேன், எழுந்திரு என்று அர்த்தமாம். என்றவுடனே சிறுபெண் எழுந்து நடந்தாள்.

42. அப்போது அவளுக்குப் பன்னிரண்டு பிராயமாயிருந்தது. அவர்கள் மிகவும் ஆச்சரியப்பட்டுப் பிரமித்திருந்தார்கள். மத். 9-24.

43. இதை ஒருவரும் அறியாதிருக்கும்படி அவர்களுக்கு அவர் கண்டிப்பாய்க் கட்டளையிட்டுப் பிள்ளைக்குப் போஜனங் கொடுக்கும்படி சொன்னார்.

## 6-ம். அதிகாரம்.

யேசுநாதர் தமது ஜென்மநாட்டில் புதுமைகளைச் சொற்பமாய்ச் செய்ததேனென்பதும், அப்போஸ்தலர்களுக்குக் கற்பித்த புத்திமதிகளும், ஸ்நாபக அருளப்பருடைய மரணமும், ஐந்து அப்பங்களும் இரண்டு மச்சங்களும் ஐயாயிரம் பேருக்குப் பலுகினதும், கடலின் கொந்தளிப்பை அமர்த்தினதும், தமது வஸ்திர விளிம்பைத் தொட்ட அநேகரைச் சுகமாக்கினதும்.

1. பின்பு யேசுநாதர் அவ்விடத்தை விட்டுத் தமது ஜென்ம நாட்டுக்கு வந்தார். அவருடைய சீஷர்களும் அவரோடுகூட வந்தார்கள். மத். 13-54; லூக். 4-16.

2. ஓய்வுநாளானபோது, ஜெப ஆலயத்தில் போதிக்கத் துடங்கினார். அநேகர் கேட்டு, அவருடைய போதகத்தின் மேல் ஆச்சரியப்பட்டுச் சொன்னதாவது: இவையெல்லாம் இவனுக்கு எங்கிருந்து வந்தன? இவனுக்கு கொடுக்கப்பட்ட ஞானமும் எப்படிக்கொத்தது! இவன் கரங்களால் செய்யப்படுகிற அற்புதங்களும் எத்தன்மையானவைகள்!

3. இவன் தச்சனல்லவா? மரியம்மாளுடைய குமாரனும், யாக்கோபு, யோசேப்பு, யூதா, சீமோன் என்பவர்களுடைய சகோதரனுமல்லவா? இவனுடைய சகோதரிகளும் இங்கே நம்மோடிருக்கிறார்களல்லவோ? என்று சொல்லி, அவர் மட்டில் இடறல்பட்டார்கள். அரு. 6-42.

4. யேசுநாதர் அவர்களை நோக்கி: ஓர் தீர்க்கதரிசி தன் ஜென்ம தேசத்திலும், தன் வீட்டிலும், தன் இனத்திலுமொழிய (வேறெங்கும்) மகிமையில்லாதிருக்கமாட்டானென்று திருவுளம்பற்றினார். மத் 13-57; லூக். 4-24; அரு. 4-44.

5. பின்னும் அவர் சில வியாதிஸ்தர் மேல் கரங்களை நீட்டிக் குணமாக்கினாரொழிய, அங்கே வேறே யாதொரு புதுமையும் செய்யக்கூடாமல்,

6. அவர்களுடைய அவிசுவாசத்தின்மேல் ஆச்சரியப்பட்டு, சுற்றுக் கிராமங்களில் சுற்றிப்போய்ப் போதித்து வந்தார்.

7. மேலும் பன்னிருவரையும் வரவழைத்து, அவர்களை இருவர் இருவராக அனுப்பத் துடங்கி, அவர்களுக்கு அசுத்த அரூபிகளின்மேல் அதிகாரத்தைக் கொடுத்து, மத். 10-1; மாற். 3-15; லூக். 9-1.

8. வழிக்கு ஒருகோலைத்தவிர வேறெதுவும், பையாவது அப்பமாவது, இடைக்கச்சையில் காசாவது கொண்டுபோக வேண்டாமென்றும்,

9. பாதரட்சைகளைத் தொடுத்திருக்கலாமாயினும், இரண்டு அங்கிகளை அணிய வேண்டாமென்றும் கற்பித்தார். அப். 12-8.

10. அன்றியும் அவர்களை நோக்கி: நீங்கள் எங்கேயாகிலும் ஒரு வீட்டில் பிரவேசித்தால், அவ்விடத்திலிருந்து புறப்படுமளவும் அங்கேதங்கியிருங்கள்

11. யாராகிலும் உங்களை ஏற்றுக்கொள்ளாமலும், உங்களுக்குச் செவிகொடாமலுமிருந்தால், நீங்கள் அவ்விடத்திலிருந்து புறப்பட்டு, உங்கள் கால்களில் படிந்த தூசியை அவர்களுக்கு எதிர் சாட்சியாக உதறிப்போடுங்கள் என்றார். மத். 10-14; லூக். 9-5; அப். 13-51; 18-6.

12. அப்படியே அவர்களும் புறப்பட்டுப்போய்த் தவஞ்செய்யும்படி ஜனங்களுக்குப் பிரசங்கித்து,

13. அநேகம் பேய்களையும் ஓட்டி, அநேக வியாதிக்காரரையும் எண்ணெய் பூசிச் சௌக்கியப்படுத்தினார்கள்.

14. அப்போது அவருடைய பேர் பிரபல்லியமாகிக்கொண்டு வந்ததினால் ஏரோதராசன் (அவரைப்பற்றிக்) கேள்விப்பட்டு: ஸ்நாபக அருளப்பன் மரித்தோரினின்று உயிர்த்திருக்கிறான்; ஆனதைப்பற்றி அவனிடத்தில் அற்புதங்கள் விளங்குகின்றன என்பான். மத். 14-1; லூக். 9-7.

---

3. இங்கே சொல்லப்பட்ட யேசுநாதருடைய சகோதரர் சகோதரிகள் இன்னாரென்று அறியும்படி மத். 13-ம் அதி. 56-ம் வசன வியாக்கியானங் காண்க.

13. இவ்வேத வாக்கியத்தில் பின்னாலே யேசுநாதர் ஸ்தாபித்த அவஸ்தைப்பூசுதல் என்கிற தேவத்திரவிய அநுமானம், ஒரு குறிப்பாய்க் காட்டப்பட்டிருக்கிறதென்று திரிதேந்தென்னும் திருச்சபை சங்கத்தாரால் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

15. சிலர்: அவர் எலியாஸ்தான் என்பார்கள். வேறு சிலரோ: அவர் தீர்க்கதரிசியென்றும், தீர்க்கதரிசியைப் போல் ஒருவனென்றும் சொல்லுவார்கள்.

16. ஏரோதன் இதைக்கேட்டு: நான் சிரச்சேதஞ்செய்த அருளப்பன் இவன் தான். இவன் மரித்தோரினின்று உயிர்த்திருக்கிறான் என்றான்.

17. ஏனெனில் ஏரோதன் தன் சகோதரனை பிலிப்புவின் மனைவியாகிய ஏரோதியாளைக் கட்டிக்கொண்டதினாலே, அவள் நிமித்தம் அவன் ஆளனுப்பி அருளப்பனைப்பிடித்துக்கட்டிக் காவலில் வைத்திருந்தான்.

18. அதேதெனென்றால் அருளப்பர் ஏரோதனைப்பார்த்து: நீர் உம்முடைய சகோதரன் மனைவியை வைத்திருக்கலாகாதென்று சொல்லுவார். லேவி. 18-16.

19. ஏரோதியாளோ அவருக்குச் சதிமோசம் நினைத்து, அவரைக் கொல்ல மனதாயிருந்தாள்; ஆயினும் அவளால் கூடாதிருந்தது.

20. என்னத்தினாலென்றால், அருளப்பர் நீதிமானும் பரிசுத்தனுமாகிய மனிதனென்று ஏரோதன் அறிந்து, அவருக்கு அஞ்சி, அவரைக்காப்பாற்றி வந்ததுமன்றி, அவருடைய சொல்லைக் கேட்டு, அநேக காரியங்களைச்செய்து, விருப்பமாய் அவருக்குக் காதுகொடுத்து வந்தான்.

21. அப்படியிருக்க ஓர் தக்கநாள் வந்தது. ஏரோதன் தான் பிறந்த வருஷாந்தர நாளிலே பிரபுகளுக்கும் சேனாதிபதிகளுக்கும் கலிலேயா நாட்டிலுள்ள பெரியோர்களுக்கும் ஓர் விருந்து பண்ணினான்.

22. அப்போது அந்த ஏரோதியாளுடைய மகள் உள்ளேவந்து நடனஞ்செய்து, ஏரோதனுக்கும் அவனுடன் பந்தியிலிருந்தவர்களுக்கும் பிரியப்பட்டமையால், அரசன் அச்சிறுபெண்ணை நோக்கி: உனக்கு இஷ்டமானதை என்னிடத்தில் கேள், உனக்குத் தருவேனென்றுசொல்லி,

23. நீ எதைக் கேட்டாலும், அது என்னிராச்சியத்தில் பாதியானாலும், உனக்குத் தருவேனென்று அவளுக்கு ஆணையுமிட்டான். எஸ்தேர். 5-6.

24. உடனே அவள் வெளியேபோய்: நான் என்னத்தைக் கேட்கவேண்டுமென்று தன்தாயிடத்தில் கேட்டாள். அதற்கு அவள்: ஸ்நாபக அருளப்பருடைய சிரசைக் கேள் என்றாள்.

25. ஆதலால் உடனே அவள் தீவிரமாய் அரசனிடத்தில் வந்து: நீர் இப்போதே ஸ்நாபக அருளப்பருடைய சிரசை ஓர் தட்டில் எனக்குத்தரவேண்டும் என்று கேட்டாள்.

26. அரசன் (இதைக்கேட்டு) விசனப்பட்டான். ஆகிலும் தானிட்ட ஆணையைப்பற்றியும், தன்னோடுபந்தியிலிருந்தவர்களைப்பற்றியும் அவளைக் கஸ்திப்படுத்த மனமில்லாமல்,

27. ஓர் கைவேல் சேவகனை அனுப்பி, அருளப்பருடைய சிரசை ஒரு தட்டில் கொண்டுவரக் கட்டளையிட்டான். அந்தப்படி அவன் சிறைக்கூடத்தில் அவரைச் சிரச்சேதஞ்செய்து,

28. அவருடைய சிரசை ஒரு தட்டில் கொண்டுவந்து, அதை அந்தச் சிறு பெண்ணுக்குக் கொடுத்தான். அந்தச் சிறுபெண் அதைத் தன் தாயினிடத்தில் கொடுத்தாள்.

29. அதைக் கேட்டு, அவருடைய சீஷர்கள்வந்து, அவருடைய சரீரத்தை எடுத்து ஒரு கல்லறையில் வைத்தார்கள். மத். 14-12.

30. அப்படியாகையில், அப்போஸ்
தலர்கள் யேசுநாதரிடத்தில் கூடிவந்து,
தாங்கள் செய்தவைகளும் போதித்த
வைகளுமாகிய எல்லாவற்றையும், அவ
ருக்கு அறிவித்தார்கள். லூக். 9-10.

31. அவர் அவர்களை நோக்கி: பிர
த்தியேகமாய் வனாந்தரமான ஓர் இட
த்திற்குவந்து, சற்றே இளைப்பாறுங்கள்
என்றார். ஏனெனில் அநேகர் வருகிற
தும் போகிறதுமாயிருந்ததினாலே சாப்
பிடுவதற்கு முதலாய் அவர்களுக்குச்
சமயமில்லாதிருந்தது. மத். 14-13;
லூக். 9-10; அரு. 6-1.

32. ஆகையால், அவர்கள் ஓர் பட
கில் ஏறிப் பிரத்தியேகமாய் வனாந்தர
மான ஓர் இடத்திற்குப் போனார்கள்.

33. அவர்கள் புறப்பட்டுப் போகிற
தை ஜனங்கள் கண்டார்கள்; அவர்கள்
எங்கே போகிறார்களென்று அநேகர்
அறிந்து, சகல பட்டணங்களிலுமிருந்
து கால்நடையாய் அவ்விடத்துக்குக்
கூட்டமாய் ஓடி, அவர்களுக்குமுன்னே
அங்கே சேர்ந்தார்கள்.

34. ஆகையால் யேசுநாதர் படகை
விட்டு வெளியே வந்தபோது, திரளான
ஜனங்களைக் கண்டு, அவர்கள் மேய்ப்ப
னில்லாத ஆடுகளைப்போலிருந்ததினால்,
அவர்கள்மேல் மனமிரங்கி, அவர்களு
க்கு அநேக காரியங்களைப் போதிக்கத்
தொடங்கினார். மத். 9-36; 14-14.

35. வெகுநேரம் சென்றபிறகு அவ
ருடைய சீஷர்கள் அணுகி: இது வனாந்
தரமான இடம், நேரமுமாயிற்று.

36. ஆகையால் இவர்கள் அடுத்த
கிராமங்களிலும் ஊர்களிலும் போய்,
சாப்பிடுவதற்குவேண்டிய உணவுகளை
வாங்கிக்கொள்ளும்படி இவர்களை அனு
ப்பிவிடும் என்றார்கள். லூக். 9-12.

37. அப்பொழுது அவர் பிரத்தி
யுத்தாரமாக: நீங்களே அவர்களுக்கு
உணவு கொடுங்கள் என்றார். அதற்கு
அவர்கள்: அப்படியானால் நாங்கள்
போய், இருநூறு தெனியரொன்னும்
பணத்துக்கு அப்பங்களை வாங்கி அவர்
களுக்குச் சாப்பிடக் கொடுப்போமா
என்க,

38. யேசுநாதர் அவர்களை நோக்கி:
உங்கள் வசத்தில் எத்தனை அப்பங்களு
ண்டு? போய்ப் பாருங்கள் என்றார்.
அவர்கள் பார்த்து வந்து: ஐந்து அப்
பங்களும், இரண்டு மச்சங்களும் உண்டு
என்றார்கள்.

39. அப்போது எல்லாரையும் பந்தி
பந்தியாய்ப் பசும் புல்லின்மேல் உட்
காரவைக்கும்படி அவர்களுக்கு கட்ட
ளையிட்டார். அரு. 6-10.

40. அப்படியே ஜனங்கள் நூறு
நூறு பேராகவும், ஐம்பதைம்பது
பேராகவும், வரிசை வரிசையாய் உட்
கார்ந்தார்கள்.

41. பின்பு அவர் அந்த ஐந்து அப்
பங்களையும் இரண்டு மச்சங்களையும்
எடுத்து, பரலோகத்தை அண்ணார்ந்து
பார்த்து, ஆசீர்வதித்து, அப்பங்களைப்
பிட்டு, அவர்களுக்குப் பரிமாறும்படி
தம்முடைய சீஷர்களிடத்தில் கொ
டுத்தார். இரண்டு மச்சங்களையும் யா
வர்க்கும் பகிர்ந்துகொடுத்தார்.

42. எல்லோரும் புசித்துத் திருப்தி
அடைந்தார்கள்.

43. பின்னும் அப்பங்களிலும் மச்சங்
களிலும் மீதியான துண்டுகளை பன்னி
ரண்டு கூடைகள் நிறைய எடுத்தார்கள்.

44. புசித்தவர்களோ ஐயாயிரம் புரு
ஷர்களாயிருந்தார்கள்.

45. உடனே அவர், ஜனங்களை அனு
ப்பிவிடுமளவில், தம்முடைய சீஷர்கள்
கடலைக் கடந்து பெத்சாயிதாவுக்குத்
தமக்குமுன்னே போகும்படி அவர்க
ளைக் கட்டாயப்படுத்தினார்.

46. அன்றியும் அவர் ஜனங்களை
அனுப்பிவிட்டபின்பு, ஜெபஞ்செய்யும்
படி ஓர் மலையின்மேல் ஏறினார்.

47. பொழுதுபோனபிறகு படகு நடுக்கடலில் இருக்க, அவர் கரையில் தனிமையாய் இருந்தார்.

48. அவர்களுக்கு எதிர்காற்றாயிருந்ததினாலே அவர்கள் தண்டு வலிக்கிறதில் வருத்தப்படுகிறதை அவர் கண்டு, ஏறக்குறைய இரவின் நாலாஞ் சாமத்தில் கடலின்மேல் நடந்து, அவர்களுக்குச் சமீபமாய் வந்து, அவர்கள் பக்கமாய் அப்பால்போகவேண்டுமென்றிருந்தார். மத். 14-25.

49. அவர் கடலின்மேல் நடக்கிறதை அவர்கள் கண்டவுடனே, அது ஒரு பூதமென்று எண்ணி அலறினார்கள்.

50. ஏனெனில் எல்லாரும் அவரைக் கண்டு கலங்கினார்கள். உடனே அவர் அவர்களோடு பேசி: தைரியமாயிருங்கள். நான் தான், பயப்படாதேயுங்கள் என்று சொல்லி,

51. அவர்களிடம் படகில் ஏறினார். உடனே காற்று அமர்ந்துபோயிற்று. அதினால் அவர்கள் தங்களுக்குள்ளே மிகவும் அதிகமாய்ப் பிரமிப்படைந்தார்கள்.

52. ஏனெனில் அவர்கள் இருதயம் குருட்டாட்டமுள்ளதாய் இருந்தபடியினாலே, அப்பங்களின் புதுமையை அவர்கள் உணராதிருந்தார்கள்.

53. மேலும் அவர்கள் கடலைக் கடந்து, ஜெனசரேத்தென்னும் நாட்டுக்கு வந்து, கரைபிடித்தார்கள்.

54. அவர்கள் படகிலிருந்து இறங்கினவுடனே, ஜனங்கள் அவரை அறிந்துகொண்டு,

55. அந்தச் சுற்றுப்புறங்களெங்கும் ஓடித்திரிந்து, அவர் வந்திருக்கிறாரென்று கேள்விப்பட்ட இடங்களுக்கெல்லாம் நோவாளிகளைக் கட்டில்களில் எடுத்துக்கொண்டுவரத் துவக்கினார்கள்.

56. அன்றியும் அவர் ஊர்களிலாவது, கிராமங்களிலாவது, பட்டணங்களிலாவது, எங்கெங்கே பிரவேசித்தாலும், அவர்கள் வியாதிக்காரரை வீதிகளிலே வைத்து, அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தையாவது, இவர்கள் தொடும்படி அவரை மன்றாடுவார்கள். அப்படியே அவரைத் தொட்ட யாவரும் சொஸ்தமாவார்கள்.

## 7-ம். அதிகாரம்.

பரிசேயர் தங்களுடைய பாரம்பரை வழக்கத்தைப்பற்றிச் சர்வேசுரனுடைய கற்பனைகளை மீறுகிறதும், மனிதனை அசுத்தப்படுத்துவது ஏதுவென்பதும், கனானேயாள் மகளிடத்திலிருந்து பேய் துரத்தப்பட்டதும், செவுடும் ஊமையுமானவன் சௌக்கியப்பட்டதும்.

1. பின்னும் எருசலேமிலிருந்து வந்த பரிசேயரும் வேதபாரகரில் சிலரும் அவரிடத்தில் கூடிவந்தார்கள்.

2. அப்பொழுது அவருடைய சீஷர்களில் சிலர் கழுவாத அசுத்தக் கைகளோடு அப்பம்புசிக்கிறதை அவர்கள் கண்டு, அவர்கள்மேல் குறைபேசினார்கள். மத. 15-2.

3. ஏனெனில் பரிசேயரும் சகல யூதரும் முன்னோருடைய மாமூல்களைக் கைபபற்றி, அடிக்கடி கைகழுவினாலொழிய சாப்பிடமாட்டார்கள்.

4. அவ்வண்ணமே அவர்கள் கடையிலிருந்து வரும்போதும் ஸ்நானம் பண்ணாமல் சாப்பிட மாட்டார்கள். இதுவுமன்றி, பானபாத்திரங்கள், கிண்ணங்கள், செப்புப்பாத்திரங்கள் ஆசனப்பலகைகள் முதலியவைகளைக் கழுவுதலும், இன்னும் மற்றநேக ஆசாரங்களும் அநுசரிக்கும்படி அவர்களுக்கு மாமூலாய்க் கற்பிக்கப்பட்டிருந்தது.

5. ஆதலால் பரிசேயரும் வேதபாரகரும் அவரை நோக்கி: உம்முடைய சீஷர்கள் முன்னோருடைய பாரம்பரியத்தின்படி நடவாமல் ஏன் அசுத்தக் கரங்களோடு அப்பம் புசிக்கிறார்கள் என்று வினவினார்கள்.

6. அவர் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக: கள்ள ஞானிகளாகிய உங்களைக்குறித்து, இசையாஸென்பவர் நன்ருய்த் தீர்க்கதரிசனம் சொல்லியிருக்கிருர். அவர் எழுதியிருக்கிறதாவது: இந்த ஜனங்கள் தங்கள் உதடுகளால் என்னைச் சங்கிக்கிருர்கள், அவர்கள் இருதயமோ எனக்குத் தூரமாயிருக்கின்றது.

7. மனிதருடைய போதகங்களையும் கட்டளைகளையும் போதித்து, என்னை வீணுய் ஆராதிக்கிருர்கள் என்று சொல்லியிருக்கிருர். இசை. 29-13.

8. நீங்கள் சர்வேசுரனுடைய கற்பனையைவிட்டு, கலயங்களையும், பாத்திரங்களையும் கழுவுகிறதாகிய மனிதருடைய பாரம்பரியத்தை அநுசரித்து வருகிறீர்கள். இன்னும் இவைபோன்ற வேறநேக காரியங்களையும் செய்கிறீர்கள் என்ருர்.

9. பின்னும் அவர்களை நோக்கி: நீங்கள் உங்கள் பாரம்பரியத்தை அநுசரிக்கும்படி சர்வேசுரனுடைய கற்பனையை மெய்யாகவே வியர்த்தமாக்குகிறீர்கள்.

10. அதெப்படியென்ருல்: உன் பிதாவையும், உன் மாதாவையும் சங்கித்திருப்பாயாக என்றும், பிதாவையாவது மாதாவையாவது தூஷணிப்பவன் சாகவே சாவானுக என்றும் மோயீசன் சொல்லியிருக்கிருரே. யாத்திரா. 20-12; உபாக. 5-16; மத். 15-4.

11. நீங்களோ, யாதாமொருவன் தன் தகப்பனையாவது தாயையாவது நோக்கி: என்னுல். ஒப்புக்கொடுக்கப்படுகிற எந்தெந்த கோர்பானும், அதாவது காணிக்கையும் உனக்கு உதவுமென்று சொல்வானுகில் போதுமென்று சொல்லி,

12. அவனை இனித் தன் தகப்பனுக்காவது, தாய்க்காவது ஏதேனும் உதவி செய்யவொட்டாமல்,

13. நீங்கள் படிப்பித்த உங்கள் பாரம்பரியத்தினுல், சர்வேசுரனுடைய வாக்கியத்தை வியர்த்தமாக்குகிறீர்கள். இவைபோன்ற அநேககாரியங்களையும் செய்கிறீர்கள் என்ருர்.

14. மறுபடியும் அவர் ஜனங்களை வரவழைத்து, அவர்களுக்குச் சொன்னதாவது: நீங்கள் எல்லோரும் நான் சொல்வதைக் கேட்டு உணர்ந்துகொள்ளுங்கள். மத். 15-17.

15. மனிதனுக்குப் புறம்பேயிருந்து அவனுக்குள்ளே போகிற எதுவும் அவனை அசுத்தப்படுத்தத் தக்கதல்ல; ஆனுல் மனிதனிடத்தினின்று புறப்படுகிறவைகளே அவனை அசுத்தப்படுத்தும்.

16. யாதொருவன் கேட்கச் செவியுள்ளவனுயிருந்தால், கேட்கக் கடவான் என்ருர்.

17. அவர் ஜனக்கூட்டத்தை விட்டு வீட்டில் பிரவேசித்தபோது, அவருடைய சீஷர்கள் அந்த உவமையைப் பற்றி அவரை வினவினர்கள்.

18. அதற்கு அவர்: இவ்விதமோ நீங்களும் அறிவீனராயிருக்கிறீர்கள்? புறம்பேயிருந்து மனுஷனுக்குள்ளே போகிற எந்தப்பொருளும் அவனை அசுத்தப் படுத்தாதென்று நீங்கள் அறியீர்களோ?

11. யூத ஆசாரியர் வேத கற்பனையை மாற்றி, தாய் தகப்பன்மார்களுக்குப் பிள்ளைகள் செய்யவேண்டிய சமரக்ஷணை உதவியை அவர்களுக்குச் செய்யாமல், அந்தச் செலவை கோவிலில் காணிக்கையாகச் செலுத்தினுல் போதுமென்று கற்பித்து, பிள்ளைகள் தாய் தந்தைகளை நோக்கி: நான் உங்களுக்குச் செய்யவேண்டியதைக் கோவிலுக்குச் செலுத்தினேன். அது உங்களுக்கு நன்மை உதவியாகுமென்று சொல்லக் கற்றுக்கொடுத்தார்கள். இது தேவ கற்பனைக்கு ஒவ்வாதென்று கர்த்தர் அவர்களைக் கண்டிக்கிருர்.

19. ஏனெனில் அது மனிதனுடைய இருதயத்துக்குள்ளே பிரவேசியாமல், வயிற்றில் சென்று, உணவுயாவையும் கழிக்கிற மறைவிடமாய் வெளியே போகின்றது.

20. மனிதனுடைய இருதயத்திலிருந்து புறப்படுகிறவைகளே மனிதனை அசுத்தப்படுத்துகின்றன.

21. ஏனெனில் மனிதனுடைய இருதயத்துக்குள்ளிருந்து துர்ச்சிந்தனைகளும், விபசாரங்களும், வேசித்தனங்களும், கொலைபாதகங்களும்,

22. களவுகளும், லோபித்தனங்களும், துஷ்டத்தனங்களும், கபடங்களும், காமவிகாரங்களும், வன்கண்ணும், தேவதூஷணமும், ஆங்காரமும், மதிகேடும் புறப்படுகின்றன. ஆதி. 6-5.

23. இந்தத் தின்மைகளெல்லாம் உள்ளத்தினின்று புறப்பட்டு, மனிதனை அசுத்தப்படுத்துகின்றன என்றார்.

24. பிற்பாடு அவர் எழுந்து அவ்விடம்விட்டுப் புறப்பட்டு, தீர் சீதோன் பட்டணங்களின் எல்லைகளுக்குப் போய், ஒரு வீட்டில் பிரவேசித்து, அதை எவனும் அறியாதிருக்கவிரும்பியும், அவர் மறைந்திருக்கக் கூடாமற் போயிற்று. மத். 15-21.

25. எப்படியெனில் அசுத்த அரூபி பிடித்திருந்த குமாரத்தியையுடைய ஒரு ஸ்திரீ அவரைப்பற்றிக் கேள்விப்பட்டவுடனே உள்ளேவந்து, அவர் பாதத்தில் விழுந்தாள்.

26. அந்த ஸ்திரீ சிரோப்பெனிசியாவில் பிறந்தவளும் அக்கியானியுமாயிருந்தாள். அவள் தன் மகளிடத்தினின்று பசாசைத் துரத்திவிடவேண்டுமென்று அவரை மன்றாடினாள்.

27. யேசுநாதர் அவளை நோக்கி: முந்திப் பிள்ளைகள் திருப்தியடையட்டும். ஏனெனில் பிள்ளைகளுடைய அப்பத்தை எடுத்து நாய்களுக்குப் போடுவது நல்லதல்ல என்றார்.

28. அதற்கு அவள் மாறுத்தாரமாக: மெய்தான் ஆண்டவரே, ஆகிலும் நாய்க்குட்டிகளும் பிள்ளைகளுடைய மேசையிலிருந்து விழுகிற ரொட்டிப்பொடிகளை தின்குமே என்றாள்.

29. அப்போது அவர்: இந்த வார்த்தையினிமித்தம் நீ போ, பசாசு உன் மகளைவிட்டுப் போய்விட்டது என்று அவளுக்குச் சொன்னார்.

30. அவள் தன் வீட்டுக்குப்போனபொழுது, சிறுபெண் மஞ்சத்தின்மேல் படுத்திருக்கிறதையும், பசாசு போய் விட்டதையுங் கண்டுகொண்டாள்.

31. பின்னும் அவர் தீரின் எல்லைகளைவிட்டுப் புறப்பட்டு, சீதோன் வழியாகத் தெக்கப்போலி நாட்டின் எல்லைகளின் நடுவே கலிலேயாக் கடலருகே வந்தார்.

32. அங்கே ஊமையனும், செவிடனுமான ஒருவனை அவர் சமுகத்தில் கொண்டுவந்து: அவர் தமது கையை அவன்மேல் வைக்கும்படி அவரை மன்றாடினார்கள். மத். 9-32.

33. அவர் ஜனக்கூட்டத்திலிருந்து அவனைத் தனியே அழைத்துக்கொண்டு போய், அவனுடைய செவிகளுக்குள் தமதுவிரல்களையும் வைத்து, உமிழ்ந்து அவன் நாவையுந் தொட்டு,

34. வானத்தை அண்ணார்ந்து பார்த்து, பெருமூச்செறிந்து: எப்பெத்தா என்று அவனுக்குச் சொன்னார். அதற்குத் திறக்கப்படு என்று அர்த்தமாம்.

35. அக்ஷணமே அவனுடையசெவிகளும் திறக்கப்பட்டு, அவன் நாவின் கட்டும் அவிழ்ந்துபோக, அவன் செவ்வையாய்ப்பேசினான்.

36. இதை எவனுக்கும் சொல்லாதபடி அவர்களுக்குக் கட்டளையிட்டார். ஆயினும் அவர் எவ்வளவு அதிகமாய் அவர்களுக்குக் கட்டளையிட்டாரோ, அவ்வளவு அதிகமாய் அவர்கள் அதைப்பிரசித்தம் பண்ணி:

37. இவர் எல்லாவற்றையும் நன்றாய்ச்செய்தார்; செவிடர் கேட்கவும், ஊமையர் பேசவும் செய்தாரென்று சொல்லி மென்மேலும் அதிசயப்பட்டார்கள்.

## 8-ம். அதிகாரம்.

ஏழு அப்பமும் சில மீன்களும் நாலாயிரம் பேருக்குப் பலுகினதும், பரிசேயருடைய புளிக்காரம் இன்னதென்பதும், ஒரு குருடன் பார்வையடைந்ததும், இராயப்பருடைய விசுவாச உச்சாரணமும், சிலுவையைச் சுமந்துகொள்ளவேண்டிய அவசியமும்.

1. அந்நாட்களிலே மறுபடியும் திரளான ஜனங்கள் கூடிவந்திருக்கையில், சாப்பிடுவதற்கு அவர்களிடத்தில் ஒன்றுமில்லாதபோது, யேசுநாதர் தம்முடைய சீஷர்களை அழைத்து, அவர்களுக்குத் திருவுளம்பற்றினதாவது: மத். 15-32.

2. இந்த ஜனங்களின்மேல் இரக்கமாயிருக்கிறேன். ஏனெனில் இதோ, இவர்கள் மூன்றுநாளாய் என்னிடத்தில் தங்கி, உண்பதற்கு ஒன்றுமில்லாதிருக்கிறார்கள்.

3. இவர்களைப் பட்டினியாய் வீட்டுக்கு அனுப்பிவிட்டால், வழியில் சோர்ந்துபோவார்கள். ஏனெனில் இவர்களில் சிலர் தூரத்திலிருந்து வந்திருக்கிறார்கள் என்றார்.

4. அதற்கு அவருடைய சீஷர்கள் மறுமொழியாக: வனாந்தரமான இவ்விடத்திலே ஒருவன் எங்கேயிருந்து அப்பங்களைக் கொண்டுவந்து அவர்களை திருப்தியாக்கக்கூடும் என்றார்கள்.

5. மீளவும் அவர்: உங்கள் வசத்தில் எத்தனை அப்பங்கள் உண்டென்று அவர்களைக் கேட்க, அவர்கள்: ஏழு என்றார்கள்.

6. அப்பொழுது அவர் ஜனங்களைத் தரையில் பந்தியமரக் கட்டளையிட்டு, அந்த ஏழு அப்பங்களையும் எடுத்து நன்றியறிந்த தோத்திரஞ்சொல்லி, அவைகளைப் பிட்டுப் பரிமாறும்படி தம்முடைய சீஷர்களுக்குக் கொடுத்தார். அவர்கள் ஜனங்களுக்குப் பரிமாறினார்கள்.

7. சில சிறு மச்சங்களும் அவர்களிடத்தில் இருந்தது. அவைகளையும் அவர் ஆசீர்வதித்து, பரிமாறக்கட்டளையிட்டார்.

8. ஜனங்கள் சாப்பிட்டுத் திருப்தியடைந்தார்கள். மேலும் மீதியான துண்டுகளை ஏழு கூடைகள்நிறைய எடுத்தார்கள்.

9. சாப்பிட்டவர்கள் ஏறக்குறைய நாலாயிரம்பேராயிருந்தார்கள். பின்பு அவர் அவர்களை அனுப்பிவிட்டார்.

10. உடனே அவர் தம்முடைய சீஷர்களோடுகூடப் படகிலேறி, தல்மனுத்தாவின் எல்லைகளில் வந்தார்.

11. அப்போது பரிசேயர் புறப்பட்டுவந்து, அவரோடு தர்க்கிக்கத் துவக்கி, அவரைச் சோதிக்கும்படி வானத்திலிருந்து ஓர் அதிசயத்தை அவரிடத்தில் கேட்டார்கள். மத். 16-1; லூக். 11-54.

12. அவர் தமதுள்ளத்தில் பெருமூச்சுவிட்டு: இந்தச் சந்ததி ஓர் அதிசயத்தைக் கேட்பானேன்? இந்தச் சந்ததிக்கு ஓர் அதிசயமும் கொடுக்கப்படுவதில்லையென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

13. பின்னும் அவர்களைவிட்டு, மறுபடியும் அவர் படகில் ஏறி அக்கரைக்குப் போனார்.

14. அப்பொழுது (சீஷர்கள்) அப்பங்களை எடுத்துக்கொண்டுவர மறந்துபோனதால், அவர்களிடத்தில் படகிலே ஒரு அப்பமாத்திரம் இருந்ததொழிய வேறில்லை.

15. அப்படியிருக்க, அவர்: பரிசேயருடைய புளிக்காரத்தின் மட்டிலும் எரோதனுடைய புளிக்காரத்தின் மட்டிலும் நீங்கள் எச்சரிக்கையாய்ப் பார்த்துக்கொள்ளுங்களென்று அவர்களுக்குக் கற்பித்தார்.

16. அவர்களோ: நம்மிடத்தில் அப்பங்களில்லையே என்று சொல்லி, ஒருவரோடு ஒருவர் யோசித்துக்கொண்டிருந்தார்கள்.

17. யேசுநாதர் இதை அறிந்து, அவர்களை நோக்கி: உங்களிடத்தில் அப்பங்களில்லாததைப்பற்றி நீங்கள் யோசிக்கிறது என்ன? இன்னும் உங்களுக்கு அறிவும், உணர்வும் இல்லையோ? இன்னும் உங்கள் இருதயம் குருடடைந்திருக்கிறதோ?

18. உங்களுக்குக் கண்ணிருந்தும், காண்கிறதில்லையா? காதுகளிருந்தும் கேட்கிறதில்லையா? உங்களுக்கு ஞாபகமுமில்லையா?

19. நான் ஐந்து அப்பங்களை ஐயாயிரம் பேருக்குப் பகிர்ந்தபோது, மீதியான துண்டுகளை எத்தனை கூடைகள் நிறைய எடுத்தீர்கள் என்றார். அதற்கு அவர்கள்: பன்னிரண்டு என்றார்கள். மாற். 6-41; அரு. 6-11.

20. பின்னும் நான் ஏழு அப்பங்களை நாலாயிரம்பேருக்குப் பகிர்ந்தபோது துண்டுகளை எத்தனை கூடைகள் நிறைய எடுத்தீர்கள் என்றார். அவர்கள்: ஏழு என்றார்கள்.

21. அப்படியானால், நீங்கள் இன்னும் உணராதிருக்கிறது எப்படி என்று அவர்களுக்குச் சொன்னார்.

22. பின்பு அவர்கள் பெத்சாயிதா ஊருக்கு வந்தார்கள்; அப்போது ஒரு குருடனை அவர் சமுகத்தில் கூட்டிக்கொண்டுவந்து, அவனைத் தொடும்படி அவரை மன்றாடினார்கள்.

23. அவர் குருடனுடைய கையைப் பிடித்து, அவனை ஊருக்கு வெளியே அழைத்துக்கொண்டுபோய், அவன் கண்களில் உமிழ்ந்து, அவன்மேல் தமது கைகளை வைத்து, ஏதாகிலும் காண்கிறாயோ என்று கேட்டார்.

24. அவன் ஏறெடுத்துப் பார்த்து: நடக்கிறமனிதர் மரங்கள்போலிருக்கக் காண்கிறேன் என்றான்.

25. பின்னும் அவர் மறுபடியும் அவனுடைய கண்களின்மேல் தமது கைகளை வைக்கவே, அவன் காணத்தொடங்கி, சகலத்தையும் தெளிவாய்ப் பார்க்கும்படியான விதமாய்ச் சௌக்கியமடைந்தான்.

26. அப்போது யேசுநாதர் அவனைத் தன் வீட்டுக்கு அனுப்பி: நீ உன்வீட்டுக்குப்போ; ஆயினும் ஊருக்குள்ளே போனால் இதை ஒருவருக்கும் சொல்லாதே என்றார்.

27. பின்பு யேசுநாதரும், அவருடைய சீஷர்களும் புறப்பட்டு, பிலிப்புவின் செசாரையாவைச் சேர்ந்த கிராமங்களுக்குப் போகும்போது, வழியிலே அவர் தம்முடைய சீஷர்களை நோக்கி: ஜனங்கள் என்னை யாரென்று சொல்லுகிறார்கள் என்று கேட்டார். மத். 16-13; லூக். 9-18.

28. அவர்கள் அதற்கு மாறுத்தரமாக: சிலர் ஸ்நாபக அருளப்பனென்றும், சிலர் எலியாவென்றும், வேறு சிலர் தீர்க்கதரிசிகளில் ஒருவர்போலென்றும் சொல்லுகிறார்கள் என்றார்கள்.

15-ம் வசனத்துக்கு அர்ச். மத். 16-ம் அதி. 11-ம்வசனத்தின் வியாக்கியானங்காண்க.

29. அப்பொழுது அவர்: நீங்கள் என்னை யாரென்று சொல்லுகிறீர்கள் என்று அவர்களைக்கேட்க, அதற்கு இராயப்பர் மறுமொழியாக: நீர் கிறீஸ்துநாதர் என்றார்.

30. அப்பொழுது தம்மைக்குறித்து இதை எவனுக்கும் சொல்லாதபடி அவர்களைக் கண்டிப்பாய் எச்சரித்தார்.

31. மேலும்: மனுமகன் அநேகபாடு படவும், மூப்பராலும், பிரதான ஆசாரியராலும், வேதபாரகராலும், ஆகாதவனென்று தள்ளப்படவும், கொலையுண்ணவும், மூன்றுநாளுக்குப்பின் உயிர்த்தெழுந்திருக்கவும் வேண்டியதென்று அவர்களுக்குப் போதிக்கத் தொடங்கினார்.

32. இந்த வாக்கியத்தை அவர் வெளியரங்கமாய்ச் சொல்லிக்கொண்டிருந்தார். அப்படியிருக்க, இராயப்பர் அவரைத் தனியே அழைத்துக் கொண்டு போய், அவரைக் கடிந்துகொள்ள ஆரம்பித்தார்.

33. அவர் தம்முடைய சீஷர்களைத் திரும்பிப் பார்த்து, இராயப்பரை மிகவும் மிரட்டி: சாத்தானே, என் பின்னாலே போ; நீ சர்வேசுரனுக்கு அடுத்தவைகளையல்ல, மனுஷருக்கு அடுத்தவைகளையே சிந்திக்கிறாய் என்றார்.

34. பின்னும் அவர் தம்முடைய சீஷர்களோடு ஜனக்கூட்டத்தை வரவழைத்து, அவர்களுக்குத் திருவுளம்பற்றினதாவது: யாதொருவன் என்னைப் பின்சென்றுவர விரும்பினால், தன்னைத் தானே பரித்தியாகஞ்செய்து, தன் சிலுவையைச் சுமந்துகொண்டு, என்னைப் பின்பற்றக்கடவான். மத். 10-38; 16-24; லூக். 9-23; 14-27.

35. ஏனெனில் தன் உயிரைக் காக்க விரும்புகிறவன் அதை இழந்துபோவான். ஆனால் என்னையும், சுவிசேஷத்தையும்பற்றித் தன் உயிரை இழந்துபோகிறவன் அதைஇரட்சித்துக்கொள்வான். லூக். 17-33; அரு. 12-25.

36. மனிதனானவன் உலகமெல்லாம் ஆதாயமாக்கிக்கொண்டாலும், தன் ஆத்துமத்தைச் சேதப்படுத்துவானாகில் அவனுக்குப் பிரயோஜனமென்ன?

37. அல்லது மனிதன் தன் ஆத்துமத்துக்கு ஈடாக என்னத்தைக் கொடுப்பான்?

38. ஆகையால் விபசாரமும் பாவாக்கிரமுமுள்ள இந்தச் சந்ததியிடத்தில் என்னையும், என் வாக்கியத்தையுங்குறித்துக் கூச்சப்படுகிறவன் எவனோ, அவனைக்குறித்து மனுமகனும் தன் பிதாவின் மகிமையில் பரிசுத்த சம்மனசுக்களோடு கூட வரும்போது கூச்சப்படுவார் என்றார். மத். 10-33; லூக். 9-26; 12-9.

39. மீளவும் அவர்களை நோக்கி: சர்வேசுரனுடைய இராச்சியம் வல்லமையோடு வருவதைக் காணுமளவும் இங்கே நிற்கிறவர்களுக்குள்ளே சிலர் மரணத்தைருசிபாரார்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று திருவுளம்பற்றினார். மத். 16-28; லூக். 9-27.

30-ம் வசனத்துக்கு அர்ச். மத். 16-ம் அதி. 20-ம் வசனத்தின் வியாக்கியானங் காண்க.

34-ம் வசனத்துக்கு அர்ச். மத். 10-ம் அதி. 38-ம் வசனத்தின் வியாக்கியானங்காண்க.

35-ம் வசனத்துக்கு அர்ச். மத். 10-ம் அதி. 39-ம் வசனத்தின் வியாக்கியானங்காண்க.

39-ம் வசனத்துக்கு அர்ச். மத். 16-ம் அதி. 28-ம் வசனத்தின் வியாக்கியானங்காண்க.

## 9-ம். அதிகாரம்.

*யேசுநாதர் மறுரூபமானதும், எலியாஸ் ஏற்கனவே வந்தாரென்று காண்பித்ததும், செவிடும் ஊமையுமான பேயைத் துரத்தினதும், தாழ்ச்சியைப் படிப்பித்ததுமாகிய வர்த்தமானங்கள்.*

1. ஆறுநாளைக்குப் பிற்பாடு, யேசுநாதர் இராயப்பனையும், யாகப்பனையும், அருளப்பனையும் அழைத்து, ஓர் உயர்ந்த மலையின்மேல் அவர்களைத் தனியே ஏகாந்தமாய்க் கூட்டிக்கொண்டு போய், அவர்களுக்கு முன்பாக மறுரூபமானார். மத். 17-1; லூக். 9-28.

2. அப்போது அவருடைய வஸ்திரங்கள் ஒளிவேறி, உறைபனிபோல் அதிமிக வெண்மையாய்த் துலங்கிற்று. அதைப்போல பூமியில் எந்தச் சலவைக்காரனும் வெண்மையாக்கமாட்டான்.

3. அன்றியும் எலியாசும், மோயீசனும் அவர்களுக்குத் தரிசனையாகி, யேசுநாதரோடு சம்பாஷித்துக்கொண்டிருந்தார்கள்.

4. அப்படியிருக்க, இராயப்பர் யேசுநாதனைப்பார்த்து: சுவாமீ, நாம் இங்கேயிருக்கிறது நல்லது. ஆதலால் உமக்கு ஒரு கூடாரமும், மோயீசனுக்கு ஒரு கூடாரமும், எலியாசுக்கு ஒரு கூடாரமும் ஆக மூன்று கூடாரங்களை அடிப்போமாக என்றார்.

5. ஏனெனில் அவர்கள் பயந்து திடுக்கிட்டிருந்தபடியால், தான் சொல்லுகிறது இன்னதென்று அவருக்குத் தெரியவில்லை.

6. அப்பொழுது ஓர் மேகம் எழும்பி, அவர்களுக்கு நிழலிட, அந்த மேகத்தினின்று ஓர் குரலொலியுண்டாகி: இவர் நமக்கு மிகவும் பிரியமுள்ள குமாரன், இவருக்குச் செவிகொடுங்கள் என்று சத்தித்தது.

7. உடனே அவர்கள் சுற்றிலும் பார்க்கையில், தங்களோடு யேசுநாதர் ஒருவனைத்தவிர வேறொருவனையும் காணவில்லை.

8. அவர்கள் மலையைவிட்டு இறங்கும்போது, அவர் அவர்களை நோக்கி: மனுமகன் மரித்தோரிலிருந்து, உயிர்த்து எழுந்திருக்குமளவும், நீங்கள் கண்டவைகளை ஒருவருக்கும் சொல்லவேண்டாமென்று கட்டளையிட்டார். மத். 17-9.

9. மரித்தோரிலிருந்து உயிர்த்த பிறகு என்பது என்னவென்று ஒருவரிடத்தில் ஒருவர் விசாரித்து, இந்த வார்த்தையைத் தங்களுக்குள்ளே அடக்கிக்கொண்டு:

10. அப்படியானால், எலியாஸ் முந்தி வரவேண்டுமென்று பரிசேயரும், வேதபாரகருஞ் சொல்லுகிறார்களே, அதென்னவென்று அவனை வினவினார்கள். மல்க்கி. 4-5.

11. அதற்கு அவர் பிரத்தியுத்தாரமாக: எலியாஸ் முந்திவந்து, எல்லாவற்றையும் சீர்ப்படுத்துவாரென்பது மெய்தான். அல்லாமலும் மனுமகன் மிகவும் பாடுபட்டு நிந்தைப்படவேண்டுமென்று எழுதியிருக்கிறபடியே அவருக்கு நடக்கும். இசை. 53-3.

12. ஆனால் எலியாஸ் வந்தாயிற்றென்றும், அவனைக்குறித்து எழுதியிருக்கிறபடியே தங்களுக்கு இஷ்டமானதெல்லாம் அவருக்குச் செய்தார்களென்றும் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார். மத். 17-12.

3-ம் வசனத்துக்கு மத். 17-ம் அதி. 3-ம் வசனத்தின் வியாக்கியானங்காண்க.

12-ம் வசனத்துக்கு மத். 11-ம் அதி. 14-ம் வசனத்தின் வியாக்கியானங்காண்க.

13. அவர் தம்முடைய சீஷர்களிடத்தில் வந்தபோது, அவர்களைச் சுற்றிலும் திரளான ஜனக்கூட்டம் நிற்கிறதையும், அவர்களோடு வேதபாரகர் தர்க்கிக்கிறதையும் கண்டார்.

14. உடனே ஜனங்களெல்லாரும் யேசுநாதரைக்கண்டு, அதிசயமும், பயமுமடைந்து, ஓடிவந்து அவரைக் கும்பிட்டார்கள்.

15. அவர் அவர்களைநோக்கி: உங்களுக்குள்ளே எதைக்குறித்துத் தர்க்கஞ்செய்கிறீர்களென்று கேட்க,

16. கூட்டத்தினின்று ஒருவன் மறுமொழியாக: குருவே! ஊமைப்பேய் பிடித்திருக்கிற என் மகனை உம்மிடத்தில் கொண்டுவந்தேன். லூக். 9-38.

17. அது அவனை எங்கே பிடித்தாலும், அவனைக் கீழேவிழத்தாட்டுகிறது; அப்பொழுது அவன் நுரைகக்கிப் பல்லுகளையும் நெறுநெறெனக் கடித்து, சோர்ந்துபோகிறான். அதைத் துரத்தும்படி உம்முடைய சீஷர்களிடத்தில் கேட்டேன், அவர்களால் கூடாமற் போயிற்று என்றான்.

18. அவர் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக: ஓ! அவிசுவாசமுள்ள சந்ததியே, எத்தனைகாலம் உங்களோடிருப்பேன்? எத்தனைநாள் உங்களைச் சகிப்பேன்? அவனை என்னிடத்தில் கொண்டுவாருங்கள் என்றார்.

19. அப்படியே அவனைக்கொண்டு வந்தார்கள். அவன் அவரைக் கண்டவுடனே, அந்த அரூபி அவனை அலைக்கழித்தது; அவன் தரையிலே மோதி விழுந்து, நுரைகக்கிப் புரண்டு கொண்டிருந்தான்.

20. அப்பொழுது அவர்: இது இவனுக்கு உண்டாகி எவ்வளவு காலமாயிற்றென்று அவனுடைய தகப்பனைக் கேட்க, அவன்: பாலத்துவம் முதற்கொண்டே உண்டாயிருக்கிறது.

21. அது இவனைக் கொன்றுபோடும்படி அடிக்கடி நெருப்பிலும், தண்ணீரிலும் இவனைத் தள்ளிற்று. ஆனால் நீர் ஏதாகிலும் செய்யக்கூடுமானால் எங்கள்பேரில் மனதிரங்கி, எங்களுக்கு உதவிசெய்தருளும் என்றான்.

22. அதற்கு யேசுநாதர்: நீ விசுவசிக்கக் கூடுமானால், விசுவசிக்கிறவனுக்குச் சகலமும் கூடும் என்று அவனுக்குத் திருவுளம்பற்றினார்.

23. உடனே பிள்ளையின் தகப்பன் அழுகையோடு பேரொலியிட்டு: ஆண்டவரே! விசுவசிக்கிறேன், என் விசுவாசக்குறையில் எனக்கு உதவிசெய்தருளும் என்றான்.

24. அப்பொழுது யேசுநாதர் ஜனக்கூட்டம்மொய்த்துவருகிறதைக்கண்டு, அசுத்த அரூபியை மிரட்டி: ஊமையும் செவிடுமான அரூபியே, நான் உனக்கு கட்டளையிடுகிறேன்: இந்தப் பிள்ளையைவிட்டுப்போ, இனி இவனிடத்தில் பிரவேசியாதே என்றார்.

25. உடனே அது அலறிக்கொண்டு, பிள்ளையை வெகுவாய் அலைக்கழித்து, அவனை விட்டுப் புறப்பட்டுப் போயிற்று. பிள்ளையோ செத்தவன் போலானான். இதினால் அநேகர் அவன் செத்தானென்று சொல்லும்படியாயிற்று.

26. ஆனால் யேசுநாதர் அவன் கையைப் பிடித்து, அவனைத் தூக்கவே, அவன் எழுந்திருந்தான்.

27. பின்னும் அவர் வீட்டில் பிரவேசித்தபோது, அவருடைய சீஷர்கள்: எங்களால் ஏன் அதைத் துரத்தக்கூடாமற்போயிற்றென்று அவரை இரகசியமாய் வினவினார்கள்.



"இந்த வகைப் பசாசு ஜெபத்தினாலும், உபவாசத்தினாலுமேயன்றி, வேறெந்த விதத்திலும் போகமாட்டாது."

(மாற். 9-28.)

28. அதற்கு அவர்: இந்த வகைப் பசாசு ஜெபத்தினாலும், உபவாசத்தினாலுமேயன்றி, வேறெந்த விதத்திலும் போகமாட்டாதென்று அவர்களுக்குத் திருவுளம்பற்றினார்.

29. பிற்பாடு அவர்கள் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு, கலிலேயா நாட்டைக் கடந்துபோனார்கள். அதை ஒருவரும் அறியாதிருக்க வேண்டுமென்று விரும்பினார்.

30. ஆனால் அவர் தம்முடைய சீஷர்களுக்கு உபதேசித்து: மனுமகன் மனிதர்களுக்குக் கையளிக்கப்படுவார், அவர்கள் அவரைக் கொலைசெய்வார்கள், கொலையுண்டு, மூன்றும் நாளில் உயிர்தெழுந்திருப்பாரென்று அவர்களுக்குச் சொல்லுவார். மத். 17-21; லூக். 9-22-44.

31. அவர்களோ அந்த வார்த்தையைக் கண்டுபிடியாதிருந்ததுந் தவிர, அதைப்பற்றி அவரைக் கேட்கவும் பயந்திருந்தார்கள்.

32 அதன்பின் அவர்கள் கப்பர்நவும் ஊருக்கு வந்து, வீட்டிலிருக்கும் போது: நீங்கள் வழியிலே என்னத்தைக்குறித்துப் பேசிக் கொண்டுவந்தீர்கள் என்று அவர்களைக் கேட்டார்.

33. அவர்களோ மௌனமாயிருந்தார்கள். ஏனெனில் தங்களில் எவன் பெரியவனென்று வழியில் தங்களுக்குள்ளே தர்க்கித்துக்கொண்டிருந்தார்கள். மத். 18-1; லூக். 9-46.

34. அப்போது அவர் உட்கார்ந்து, பன்னிருவரையும் வரவழைத்து, அவர்களுக்குச் சொன்னதாவது: எவனாவது முதல்வனாயிருக்க விரும்பினால், அவன் எல்லாருக்கும் கடைசியானவனுமாய், எல்லாருக்கும் பணிவிடைக்காரனுமாய் இருப்பானாக என்று சொல்லி,

35. ஓர் பிள்ளையை எடுத்து, அதை அவர்கள் நடுவிலே நிறுத்தி, அதை அரவணைத்துக்கொண்டு, அவர்களுக்குச் சொன்னதாவது:

36. இப்படிப்பட்ட பிள்ளைகளில் ஒன்றை என் நாமத்தினாலே ஏற்றுக்கொள்ளுகிற எவனும், என்னை ஏற்றுக்கொள்ளுகிறான். ஆனால் என்னை ஏற்றுக்கொள்ளுகிற எவனும் என்னையல்ல, என்னை அனுப்பினவரை ஏற்றுக்கொள்ளுகிறான் என்றார்.

37. அப்போது அருளப்பர் அவரை நோக்கி: குருவே! நம்மைப் பின்செல்லாத ஒருவன் உமது நாமத்தினாலே பசாசுகளைத் துரத்துகிறதைக் கண்டு அவனைத் தடுத்தோம் என்றார். லூக். 9-49.

38. அதற்கு யேசுநாதர்: அவனைத் தடுக்கவேண்டாம்; ஏனெனில் என் நாமத்தினாலே அற்புதத்தைச் செய்து, எளிதாய் என்னைக் குறித்துத் தீங்கு பேசக்கூடியவன் ஒருவனுமில்லை. 1. கொ. 12-3.

39. அதேதெனில், உங்களுக்கு விரோதமாயிராதவன் உங்கள் பாரிசமாயிருக்கிறான்.

40. அன்றியும் நீங்கள் கிறீஸ்துவினுடையவர்களாய் இருக்கிறதைப்பற்றி, எவனாவது என் நாமத்தினிமித்தம் உங்களுக்கு ஒரு பாத்திரந் தண்ணீர் குடிக்கக் கொடுப்பானாகில், அவன் தன் சம்பாவனையை இழந்து போவதில்லையென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். மத். 10-42.

41. ஆனால் என்பேரில் விசுவாசமாயிருக்கிற இச் சிறியோரில் ஒருவனுக்கு இடறலாயிருப்பவன் எவனோ, அவன் கழுத்திலே எந்திரக்கல் கட்டுண்டு, சமுத்திரத்திலே தள்ளப்பட்டால் அவனுக்கு அதிக நலமாயிருக்கும். மத். 18-6; லூக். 17-2.

42. உன் கையானது உனக்கு இடறலாயிருந்தால், அதைத் தறித்துப் போடு; நீ இரண்டு கையுள்ளவனாய் நரகத்திலும், அவியாத அக்கினியிலும் போவதைவிட, கைமுடவனாய்ச் சீவியத்தில் பிரவேசிப்பது உனக்கு நலமாயிருக்கும். மத். 5-30; 18-8.

43. அங்கே அவர்களுடைய புழுவும் சாகாது, அக்கினியும் அவியாது.

44. அவ்வண்ணமே, உன் கால் உனக்கு இடறலாயிருந்தால் அதை வெட்டிப்போடு; நீ இருகாலுள்ளவனாய் அவியாத அக்கினி நரகத்தில் தள்ளப்படுவதைவிட நொண்டியாய் நித்திய சீவியத்தில் பிரவேசிப்பது உனக்கு நலமாயிருக்கும்.

45. அங்கே அவர்களுடைய புழுவும் சாகாது, அக்கினியும் அவியாது. இசை. 66-24.

46. உன் கண் உனக்கு இடறலாயிருந்தால், அதைப் பிடுங்கி எறிந்துபோடு; நீ இரு கண்ணுள்ளவனாய் அக்கினி நரகத்தில் தள்ளப்படுவதைவிட ஒற்றைக்கண்ணனாய்ச் சர்வேசுரனுடைய இராச்சியத்தில் பிரவேசிப்பது உனக்கு நலமாயிருக்கும். மத். 5-29.

47. அங்கே அவர்களுடைய புழுவும் சாகாது, அக்கினியும் அவியாது.

48. எப்படியெனில் எல்லாப் பலியும் உப்பினால் உப்பிடப்படுவதுபோல, எவனும் அக்கினியால் உப்பிடப்படுவான். லேவி. 11-13.

49. உப்பானது நல்லதுதான்; ஆகிலும் உப்பு காரமற்றுப்போனால் எதைக்கொண்டு அதைச் சுவையாக்குவீர்கள்? உங்கள் உள்ளத்தில் உப்பையும், உங்களுக்குள்ளே சமாதானத்தையும் கொண்டிருங்கள் என்றார். மத். 5-13; லூக். 14-34.

## 10-ம். அதிகாரம்.

*யேசுநாதர் விவாகத்தைப் பிரிக்கலாகாதென்றதும், சிறு குழந்தைகளை ஆசீர்வதித்ததும், ஆஸ்திக்காரர் இரட்சண்ணியமடைவது அரிதென்று காண்பித்ததும், தம்முடைய பாடுகளை முன்னறிவித்ததும், பார்திமேயென்ற குருடனைச் சொஸ்தமாக்கினதும்.*

1. பின்பு அவர் அவ்விடம்விட்டெழுந்து, யோர்தான் நதிக்கப்பால் யூதேயா தேசத்தின் எல்லைகளில் வந்தார். அங்கே மறுபடியும் ஜனங்கள் அவரிடத்தில் கூட்டமாய் வரவே, அவர் தம்முடைய வழக்கத்தின்படியே மறுபடியும் அவர்களுக்குப் போதித்தார். மத் 19-1.

2. அப்போது பரிசேயர், அவரைச் சோதிக்கும்படியாக அவரிடத்தில் வந்து: புருஷன் தன் மனைவியைத் தள்ளிவிடலாமா என்று கேட்டார்கள்.

3. யேசுநாதர் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக: மோயீசன் உங்களுக்குக் கட்டளையிட்டிருக்கிறது என்னவென்றார்.

4. அதற்கு அவர்கள்: விலக்குச்சீட்டை எழுதிக்கொடுத்து, அவளைத் தள்ளிவிடலாமென்று மோயீசன் உத்தரவு கொடுத்திருக்கிறார் என்றார்கள். உபாகமம். 24-1.

---

49-ம் வசனத்துக்கு மத்தேயு. 5-ம் அதி. 13-ம் வசனத்தின் வியாக்கியானங்காண்க. பின்னும், உங்கள் உள்ளத்தில் உப்பைக்கொண்டிருங்கள் என்பதின் அர்த்தமாவது: உப்பினால் சகல போஜன பதார்த்தங்களும் உருசியடைந்து, பிரியமும், சுகமும் கொடுப்பது போல, விசுவாசிகள் தங்களுக்குள் விமரிசை, ஞானமென்கிற உப்பின் குணத்தையடைந்து, ஒருவருக்கொருவர் பிரியப்படவும், ஒன்றித்திருக்கவும், ஒருவரொருவரைக் காப்பாற்றவும் முயற்சியுள்ளவர்களாயிருக்கவேண்டுமென்று அர்த்தமாம்.



"பாலர்களை நம்மிடத்தில் வரவிடுங்கள், அவர்களைத் தடுக்காதேயுங்கள்; ஏனெனில் சர்வேசுரனுடைய இராட்சியம் இப்படிப்பட்டவர்களுடையது."

(மாற். 10-14.)

5. யேசுநாதர் அவர்களுக்குப்பிரத்தியுத்தாரமாகச் சொன்னதாவது : உங்கள் இருதயக்கடினத்தைப் பற்றியே, அவர் இந்தக் கட்டளையை உங்களுக்கு எழுதித்தந்தார்.

6. ஆகிலும் சிருஷ்டிப்பின் துவக்கத்தில் சர்வேசுரன் அவர்களை ஆணும் பெண்ணுமாக உண்டாக்கினார். ஆதி. 1-27.

7. அதினிமித்தம் மனுஷனனவன் தன் தநதை தாயைவிட்டுத் தன்மனைவியோடு சார்நதிருப்பான் ; ஆதி. 2-24; மத். 19-5 ; 1 கொ. ; எபெ. 5-31.

8. இருவரும் ஒரே மாம்சமாயிருப்பார்கள் ; ஆகையால் அவர்கள் இருவரல்லவே, ஒரே மாம்சமாயிருக்கிறார்கள். 1 கொ. 6-16 ; ஆதி. 2-24.

9. ஆனதால் சர்வேசுரன் இணைத்ததை மனிதன் பிரிக்காதிருப்பானாக என்றார்.

10. பின்பு வீட்டிலே அவருடைய சீஷர்கள் மறுபடியும் இதைக்குறித்து அவரை வினவினார்கள்.

11. அப்பொழுது அவர் அவர்களுக்குத் திருவுளம்பற்றினதாவது: யாதொருவன் தன் மனைவியைத் தள்ளிவிட்டு, வேறொருத்தியை விவாகஞ்செய்தால், அவளுக்கு விரோதமாய் விபசாரஞ்செய்கிறான். மத். 5-32.

12. அத்தன்மையே, மனைவியும் தன் புருஷனைத் தள்ளிவிட்டு, வேறொருவனை விவாகஞ் செய்தால், விபசாரியாகிறாள் என்றார்.

13. அத்தருணத்தில் பாலகரை அவர் தொடும்படியாக அவர்களை அவரிடத்தில் கொண்டுவந்தார்கள். சீஷர்களோ கொண்டுவந்தவர்களை அதட்டினார்கள்.

14. யேசுநாதர் இதைக்கண்டு விசனப்பட்டு, அவர்களுக்குச் சொன்னதாவது : பாலகர்களை நம்மிடத்தில் வர விடுங்கள், அவர்களைத் தடுக்காதேயுங்கள் ; ஏனெனில் சர்வேசுரனுடைய இராச்சியம் இப்படிப்பட்டவர்களுடையதாயிருக்கிறது.

15. சிறுபிள்ளையைப்போல சர்வேசுரனுடைய இராச்சியத்தை ஏற்றுக்கொள்ளாத எவனும் அதில் பிரவேசியானென்று மெய்யாகவே உங்களுக்குச்சொல்லுகிறேன் என்று சொல்லி,

16. அவர்களை அரவணைத்து, அவர்கள்மேல் தமது கைகளை வைத்து, அவர்களை ஆசீர்வதித்தார்.

17. பின்னும் அவர் பயணப்பட வெளியே வந்தபோது, ஒருவன் ஓடிவந்து, அவருக்குமுன்பாக முழநதாளிட்டு: நல்ல குருவே, நான்நித்திய சீவியத்தை அடையும்பொருட்டு என்ன செய்யவேண்டும் என்று கேட்டான். மத். 19-16 ; லூக். 18-18.

18. யேசுநாதர் அவனை நோக்கி : நீ என்னை நல்லவனென்று சொல்லுவானேன் ? சர்வேசுரன் ஒருவரே தவிர நல்லவன் ஒருவனுமில்லையே.

19. விபசாரம் செய்யாதிருப்பாயாக ; கொலை செய்யாதிருப்பாயாக ; பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக ; வஞ்சனை செய்யாதிருப்பாயாக ; உன் பிதாவையும் மாதாவையும் சங்கித்திருப்பாயாக என்னுங் கற்பனைகளை அறிநதிருக்கிறாயே என்றார். யாத். 20-13.

20. அதற்கு அவன் மறுமொழியாக : குருவே, இவையெல்லாம் என் சிறுபந்துவக்கி அநுசரித்து வந்திருக்கிறேன் என்றான்.

12-ம் வசனத்துக்கு மத். 19-ம் அதி. 9-ம் வசனத்தின் வியாக்கியானங் காண்க.

21. அப்பொழுது யேசுநாதர் அவனை நோக்கிப்பார்த்து, அவன்மேல் அன்பு வைத்து: உனக்கு ஒன்று குறைவாயிருக்கின்றது; நீபோய் உனக்குண்டான யாவற்றையும் விற்று, தரித்திரருக்குக் கொடு; மோக்ஷத்தில் உனக்குப் பொக்கிஷமுண்டாயிருக்கும்; பின்னும் வந்து என்னைப் பின்செல்லென்று அவனுக்குத் திருவுளம்பற்றினார்.

22. அவனோ, இந்த வாக்கியத்தால் துக்கமடைந்து, கிலேசத்தோடு போய்விட்டான். ஏனெனில் மிகுந்த சொத்துள்ளவனாயிருந்தான்.

23. ஆதலால் யேசுநாதர் சுற்றிலும் பார்த்து: பணக்காரர் சர்வேசுரனுடைய இராச்சியத்தில் பிரவேசிப்பது எவ்வளவோ அருமையாயிருக்கிறதென்று தம்முடைய சீஷர்களுக்குத் திருவுளம்பற்றினார்.

24. சீஷர்கள் அவருடைய வார்த்தைகளைக்குறித்து . அதிசயப்பட்டுக்கொண்டிருந்தார்கள். யேசுநாதர் மறுபடியும் அவர்களை நோக்கி: பிள்ளைகளே, பணத்தின்மேல் நம்பிக்கை வைத்திருக்கிறவர்கள் சர்வேசுரனுடைய இராச்சியத்தில் பிரவேசிப்பது எவ்வளவோ அருமையாயிருக்கிறது.

25. ஆஸ்திக்காரன் சர்வேசுரனுடைய இராச்சியத்தில்பிரவேசிப்பதை விட, ஒட்டகமானது ஊசியின் காதுக்குள் நுழைந்துபோகிறது அதிக எளிதாம் என்றார்.

26. அவர்கள் இன்னும் அதிகமாய் ஆச்சரியப்பட்டு: அப்படியானால், யார் இரட்சணியமடையக்கூடுமென்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டார்கள்.

27. யேசுநாதர் அவர்களை நோக்கி: இது மனிதர்களால் கூடாததாயினும், சர்வேசுரனால் கூடாததல்ல; ஏனெனில் சர்வேசுரனால் சகலமும் கூடுமென்று திருவுளம்பற்றினார்.

28. அப்போது இராயப்பர்: இதோ நாங்கள் எல்லாவற்றையுந் துறந்துவிட்டு, உம்மைப் பின்பற்றினோமே என்று சொல்லத்தொடங்கினார். மத். 19-27; லூக். 18-28.

29. அதற்கு யேசுநாதர் பிரத்தியுத்தாரமாக: என்னிமித்தமாகவும், சுவிசேஷத்தினிமித்தமாகவும், வீட்டையாவது, சகோதரர், சகோதரிகளையாவது, தந்தை தாயையாவது, பிள்ளைகளையாவது, காணிகளையாவது விட்டுவிட்டவனும்,

30. இப்பொழுது இம்மையிலே துன்பங்களோடு நூறத்தனையாய் வீடுகளையும், சகோதரரையும், சகோதரிகளையும், தாய்மார்களையும், பிள்ளைகளையும், நிலங்களையும் பெற்றுக்கொள்வதுமன்றி, மறுமையிலே நித்தியசீவியத்தையும் அடையாதிருப்பதில்லையென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

25-ம் வசனத்துக்கு மத். 19-ம் அதி. 24-ம் வசனத்தின் வியாக்கியானங்காண்க.

30. யேசுநாதரைப் பின்செல்லும்படி இவ்வுலக நன்மைகளை விட்டுவிடுகிறவர்கள் அவைகளுக்குப் பதிலாய் ஞான நன்மைகளைக் கைக்கொள்ளுவார்கள். அவைகளால் இவ்வுலகத்திலே முதலாய் உண்டாகும் மனச்சமாதானமும் ஞானசந்தோஷமும், தாங்கள் துறந்துவிட்ட லௌகீக நன்மைகளிலும் நூறுமடங்குமாத்திரமல்ல, இன்னும் அதிகமான பெரிய நன்மைகளாகவேயிருக்கின்றன. மேலும் யேசுநாதசுவாமியைப்பற்றியும் மோட்ச இராச்சியத்தைப்பற்றியும் தங்கள் தாய் தகப்பன், சகோதரர், வீடுவாசல், காணி, பூமிகளை விட்டுவிடுகிற சந்நியாசிகளுக்கு நூறுபங்கு அதிக பட்சமுள்ள சிரேஷ்டர்களும், மற்றுஞ் சந்நியாசிகளும், தாய் தந்தைகள் சகோதரிடமாயிருப்பதுமல்லாமல், அவர்கள் போகுமிடமெல்லாம் அவர்களுக்கு வீடுவாசல் காணி பூமியாகிற மடங்களும் நிலங்களும் அனுபவிக்கக் கிடைக்குமென்றும் அர்த்தமாம்.

31. ஆகிலும் முதலானவர்கள் அநேகர் கடைசியானவர்களாகவும், கடைசியானவர்கள் அநேகர் முதலானவர்களாகவும் இருப்பார்கள் என்றார்.

32. பின்னும் அவர்கள் எருசலேமுக்குப் பிரயாணமாய்ப் போகையில், யேசுநாதர் அவர்களுக்கு முன்னே நடந்துபோக, அவர்கள் பிரமித்துப் பயத்தோடு அவர் பிறகே போனார்கள். அப்பொழுது அவர் பன்னிருவரையும் மறுபடியும் அழைத்து, தமக்குச் சம்பவிக்கப்போகிறவைகளை அவர்களுக்குச் சொல்லத்தொடங்கினார்.

33. இதோ, எருசலேம் நகருக்குப் போகிறோம்; அங்கே மனுமகன் பிரதான ஆசாரியர்களுக்கும், வேதபாரகர்களுக்கும், மூப்பர்களுக்கும் கையளிக்கப்படுவார்; அவர்கள் அவரை மரணத்தீர்வையிட்டு, புறஜாதியாரிடத்தில் அவரை ஒப்புக்கொடுப்பார்கள்.

34. அவர்கள் அவரை நகைத்து, அவர்மேல் துப்பி, அவரைச் சாட்டையால் அடித்து, அவரைக் கொலைசெய்வார்கள், ஆனால் மூன்றாம் நாளில் அவர் உயிர்த்தெழுந்திருப்பார் என்றார்.

35. அப்பால் செபதேயுவின் குமாரராகிய இயாகப்பரும், அருளப்பரும் அவரண்டையில்வந்து: சுவாமீ, நாங்கள் உம்மை ஏதெதைக்கேட்டாலும், அதை நீர் எங்களுக்குச் செய்தருள வேண்டுமென்று விரும்புகிறோம் என்றார்கள். மத். 20-20.

36. அதற்கு அவர்: நான் உங்களுக்கு என்ன செய்யவேண்டுமென்று விரும்புகிறீர்கள் என்க,

37. அவர்கள்: உமது மகிமையிலே எங்களில் ஒருவன் உமது வலதுபாரிசத்திலும், ஒருவன் உமது இடதுபாரிசத்திலுமாக உட்காரும்படி எங்களுக்குச் செய்தருளும் என்றார்கள்.

38. யேசுநாதர் அவர்களை நோக்கி: நீங்கள்கேட்கிறது இன்னதென்று அறியீர்கள். நான் பானஞ்செய்யும் பாத்திரத்தில் பானஞ்செய்யவும், நான் பெறுகிற ஸ்நானத்தைப் பெறவும் உங்களால் கூடுமோ என்றார். லூக். 12-50.

39. அதற்கு அவர்கள்: எங்களால் கூடும் என்றார்கள்; அப்போது யேசுநாதர் அவர்களுக்குத் திருவுளம்பற்றினதாவது: நான் பானஞ் செய்யும் பாத்திரத்தில் நீங்களும் பானஞ் செய்வீர்களென்பதும், நான்பெறும் ஸ்நானத்தை நீங்களும் பெறுவீர்களென்பதும் மெய்தான்.

40. ஆயினும், என்னுடைய வலது பாரிசத்திலாவது, இடது பாரிசத்திலாவது உட்காரும்படி உங்களுக்கு அருளுவது என் காரியமல்ல. எவர்களுக்கு ஆயத்தம்பண்ணப்பட்டிருக்கிறதோ, அவர்களுக்கே அது கிடைக்கும் என்று திருவுளம்பற்றினார்.

41. மற்றப் பத்துப்பேர்களும் அதைக்கேட்டு, இயாகப்பர்மேலும், அருளப்பர்மேலும் எரிச்சல்கொள்ளத் துவக்கினார்கள்.

42. அப்பொழுது யேசுநாதர் அவர்களை வரவழைத்து, அவர்களுக்கு வசனித்ததாவது: புறஜாதியாருக்குள் அதிபதிகளாகக் காணப்படுகிறவர்கள் அவர்களைக் காறுபாறு பண்ணுகிறார்களென்றும், அவர்களுக்குள்ளே பெரியவர்கள் அவர்கள்மேல் அதிகாரஞ்செலுத்துகிறார்களென்றும் அறிவீர்களே. லூக். 22-25.

43. உங்களுக்குள் அப்படியல்லவே. ஆனால் உங்களுக்குள்ளே எவனாவது அதிக பெரியவனாயிருக்க விரும்பினால், அவன் உங்களுக்குப் பணிவிடைக்காரனாயிருப்பானாக.

31-ம் வசனத்துக்கு மத். 20-ம் அதி. 16-ம் வசனத்தின் வியாக்கியானங் காண்க.

44. உங்களுக்குள்ளே எவனாவது தலைவனாயிருக்க விரும்பினால், அவன் எல்லாருக்கும் ஊழியனாயிருப்பானாக.

45. ஏனெனில் மனுமகன் பணிவிடைகொள்வதற்குவராமல், பணிவிடை செய்யவும், அநேகருடைய மீட்பாகத் தம்முடைய உயிரைக் கொடுக்கவும் வந்தார் என்றார்.

46. பின்னும் அவர்கள் எரிக்கோ நகருக்கு வந்தார்கள். அவரும், அவருடைய சீஷர்களும், திரளான ஜனங்களும் எரிக்கோ நகரத்தைவிட்டுப் புறப்பட்டுப் போகையில், திமேயுவின் குமாரனாகிய பார்த்திமேயு என்னும் ஒரு குருடன் வழியருகே உட்கார்ந்து பிச்சைவாங்கிக் கொண்டிருந்தான். மத். 20-29; லூக். 18-35.

47. அவன், நசரேனுவாகிய யேசுநாதர் அவர்தானென்று கேள்விப்பட்டு: யேசுவே! தாவீதின் குமாரனே, என் பேரில் இரக்கமாயிருமென்று கூப்பிடத் துவக்கினான்.

48. அவன் பேசாதிருக்கும்படி அநேகர் அவனை அதட்டினார்கள். ஆனால் அவன்: தாவீதின் குமாரனே! என் பேரில் இரக்கமாயிரும் என்று அதிக மதிகமாய்க் கூப்பிட்டான்.

49. ஆகையால் யேசுநாதர் நின்று, அவனை அழைத்துவரக் கட்டளையிட்டார். அவர்கள் குருடனை அழைத்து: தைரியமாயிரு, எழுந்திரு, உன்னைக் கூப்பிடுகிறாரென்று அவனுக்குச் சொன்னார்கள்.

50. அவனோ, தன் (மேல்) வஸ்திரத்தை எறிந்துவிட்டு, துள்ளியெழுந்து அவரிடத்தில் வந்தான்.

51. யேசுநாதர் அவனை நோக்கி: நான் உனக்கு என்னசெய்ய வேண்டுமென்று விரும்புகிறாய் என்றார். அதற்குக் குருடன்: என் குருவே நான் பார்வையடையவேண்டும் என்றான்.

52. யேசுநாதர் அவனை நோக்கி: நீ போகலாம்; உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது என்றார். என்றவுடனே அவன் பார்வையடைந்து, வழியில் அவரைப் பின்தொடர்ந்துபோனான்.

## 11-ம். அதிகாரம்.

கிறீஸ்துநாதர் ஒட்டோலகமாய் எருசலேம் பட்டணத்தில் பிரவேசித்ததும், அத்திமரத்தைச் சபித்ததும், தேவாலயத்தினின்று வியாபாரிகளைத் துரத்தினதுமாகிய விசேஷங்கள்.

1. அவர்கள் எருசலேம் நகருக்கும், ஒலிவமலையருகிலுள்ள பெத்தானியா ஊருக்கும் சமீபமாய் வந்தபோது, அவர் தம்முடைய சீஷர்களில் இருவரை அனுப்பி: மத். 21-1; லூக். 19-29.

2. அவர்களுக்குச் சொன்னதாவது: உங்களுக்கு எதிரேயிருக்கிற கிராமத்துக்குப்போங்கள். நீங்கள் அங்கே பிரவேசித்தவுடனே, இன்னும் ஒருவனும் ஏறியிராத ஒரு வேசரிக்குட்டி கட்டியிருக்கக் காண்பீர்கள். அதை அவிழ்த்துக்கொண்டுவாருங்கள்.

3. நீங்கள் என்னசெய்கிறீர்களென்று யாதொருவன் உங்களிடத்தில் கேட்டால், இது ஆண்டவருக்குத் தேவையாயிருக்கிறது என்று சொல்லுங்கள்; உடனே அதை இவ்விடம் அனுப்பிவிடுவான் என்றார்.

4. ஆதலால் அவர்கள் போய், இருவழிச்சந்தியில் வெளியே ஒருவாசலுக்குமுன் கட்டியிருந்த அந்தக் குட்டியைக்கண்டு, அதை அவிழ்த்தார்கள்.

5. அங்கே நின்றவர்களில் சிலர் அவர்களை நோக்கி: நீங்கள் இந்தக்குட்டியை அவிழ்த்து, என்னசெய்கிறீர்கள் என்று கேட்டார்கள்.

6. யேசுநாதர் தங்களுக்குக் கற்பித்தபடியே அவர்கள்பதில் சொல்லவே, அதைக்கொண்டுபோகும்படி விட்டார்கள்.

7. அவர்கள் அந்தக் குட்டியை யேசுநாதரிடத்தில் கொண்டுவந்து, அதின்மேல் தங்கள் வஸ்திரங்களைப் போட்டார்கள்; அவர் அதின்மேல் ஏறிப் போனார். அரு. 12-14.

8. அப்போது அநேகர் தங்கள் வஸ்திரங்களை வழியில் விரித்தார்கள், வேறு சிலர் மரங்களின் கிளைகளை ஒடித்து வழியிலே பரப்பினார்கள்.

9-10. முன்னால் போகிறவர்களும் பின்னால் வருகிறவர்களும் ஆர்ப்பரித்து: ஓசன்னா! ஆண்டவருடைய நாமத்தினாலே வருகிறவர் ஸ்தோத்தரிக்கப்பட்டவர். இதோ வருகிற எங்கள் பிதாவாகிய தாவீதின் இராச்சியம் ஆசீர்வதிக்கப்படுவதாக, உன்னதத்திலே ஓசன்னா! என்றார்கள். மத். 21-9; லூக். 19-38; சங். 117-26.

11. அவர் எருசலேம் நகரில் பிரவேசித்து, தேவாலயத்தில் சேர்ந்து, எல்லாவற்றையுஞ் சுற்றிப்பார்த்து, சாயங்காலமானபோது, பன்னிருவரோடுங் கூடப் புறப்பட்டுப் பெத்தானியாவுக்குப்போனார். மத். 21-10.

12. மறுநாள் அவர்கள் பெத்தானியாவிலிருந்து புறப்பட்டு வருகையில், அவர் பசியாயிருந்தார்.

13. அப்பொழுது, இலைகளுள்ள ஓர் அத்திமரத்தைத் தூரத்திலே கண்டு, அதிலே ஒருவேளை ஏதாகிலும் அகப்படுமாவென்று பார்க்கும்படி வந்தார். அவர் அதின்கிட்ட வந்தபோது இலைகளைத் தவிர அதில் வேறொன்றையுங் காணவில்லை. ஏனெனில் அது அத்திப் பழக் காலமல்ல. மத். 21-19.

14. அப்போது யேசுநாதர் அந்த மரத்தை நோக்கி: இனி ஒருபோதும் எவனும் உன்னிடத்தில் கனிகளைப் புசியாதிருப்பானாக என்றார். இதை அவருடைய சீஷர்கள் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

15. பிற்பாடு அவர்கள் எருசலேம் நகருக்கு வந்தார்கள். யேசுநாதர் தேவாலயத்தில் பிரவேசித்து, தேவாலயத்தில் விற்கிறவர்களையும், வாங்குகிறவர்களையும் துரத்தத்துவக்கினார். காசுக்காரருடைய பலகைகளையும் புறா விற்கிறவர்களுடைய ஆசனங்களையும் கவிழ்த்து,

16. ஒருவனும் தேவாலயத்தின் வழியாக யாதொரு பண்டத்தையும் கொண்டுபோக விடாமல்:

17. என்னுடைய வீடு சகல ஜாதி ஜனங்களுக்கும் ஜெபவீடென்று சொல்லப்படும் என்று எழுதியிருக்கிறதல்லோ? நீங்களோ அதைக் கள்ளருடைய குகையாக்கினீர்கள் என்று சொல்லி அவர்களுக்குப் பிரசங்கித்தார். இசை. 56-7; எரே. 7-11.

18. அதைக்கேட்டு, பிரதான ஆசாரியரும், வேதபாரகரும் அவரை எப்படிச் சங்கரிக்கலாமென்று வகை தேடிக்கொண்டிருந்தார்கள். ஆயினும் ஜனங்களெல்லாரும் அவருடைய போதகத்தின்மேல் ஆச்சரியப்பட்டிருந்ததினால், அவருக்கு அஞ்சியிருந்தார்கள்.

19. சாயரட்சையானபோது அவர் பட்டணத்தைவிட்டு வெளியே புறப்பட்டுப்போனார்.

20. காலையில் அவர்கள் அவ்வழியாய் வரும்போது அந்த அத்திமரம் வேரோடு பட்டுப்போயிருப்பதைக் கண்டார்கள்.

14-ம் வசனத்துக்கு மத். 21-ம் அதி. 19-ம் வசனத்தின் வியாக்கியானம் காண்க.

21. அப்போது இராயப்பர் நினைவு கூர்ந்து, அவரை நோக்கி: சுவாமீ! இதோ, நீர் சபித்த அத்திமரம் பட்டுப்போயிற்று என்றார்.

22. யேசுநாதர் பிரத்தியுத்தாரமாக அவர்களுக்குத் திருவுளம்பற்றினதாவது: சர்வேசுரன்பேரில் விசுவாசமாயிருங்கள். மத். 21-21.

23. எவனாகிலும் இந்த மலையை நோக்கி: நீ பெயர்ந்து சமுத்திரத்தில் தள்ளுண்டுபோவென்று சொல்லி, தான் சொன்னபடியே ஆகுமென்று தன் இருதயத்தில் தத்தளியாமல் விசுவசித்தால், அவனுக்கு அநுகூலமாகுமென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

24. ஆதலால் நீங்கள் ஜெபம் பண்ணும்போது கேட்கிறதை யெல்லாம் பெற்றுக் கொள்வீர்களென்று விசுவசியுங்கள். அவைகள் உங்களுக்குச் சம்பவிக்குமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். மத்.7-7; 21-22.

25. நீங்கள் ஜெபம்பண்ணநிற்கும்போது, யாதொருவன்மேல் உங்களுக்கு ஏதேனும் மனத்தாங்கலிருந்தால், பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவானவர் உங்களுடைய பாவங்களை உங்களுக்கு மன்னிக்கும்படி, நீங்களும் அவனுக்கு மன்னியுங்கள். மத். 6-14; 18-35; லூக். 11-9.

26. நீங்கள் மன்னிக்காவிட்டால் பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவும் உங்கள் பாவங்களை உங்களுக்கு மன்னிக்கமாட்டார் என்றார்.

27. பின்பு அவர்கள் மறுபடியும் எருசலேம் நகருக்கு வந்தார்கள். அவர் தேவாலயத்தில் உலாவிக்கொண்டிருக்கையிலே, பிரதான ஆசாரியரும், வேதபாரகரும், மூப்பரும் அவரிடத்தில் வந்து:

28. நீர் எந்த அதிகாரத்தைக்கொண்டு இவைகளைச் செய்கிறீர்? நீர் இவைகளைச் செய்யும்படியாக இந்த அதிகாரத்தை உமக்குக் கொடுத்தவர் யாரென்று அவரைக் கேட்டார்கள். லூக். 20-2.

29. யேசுநாதர் அவர்களுக்கு மாறுத்தாரமாக: நானும் உங்களை ஒரு வார்த்தை கேட்பேன். எனக்கு மறுமொழி சொல்லுங்கள். அப்போது நானும் எந்த அதிகாரத்தைக்கொண்டு இவைகளைச் செய்கிறேனென்று உங்களுக்குச் சொல்லுவேன்.

30. அருளப்பர் கொடுத்த ஞானஸ்நானம் மோட்சத்திலிருந்து உண்டானதோ, மனிதர்களால் உண்டானதோ? எனக்குப் பதில்சொல்லுங்கள் என்றார்.

31. அப்பொழுது அவர்கள் தங்களுக்குள்ளே ஆலோசித்து: மோட்சத்திலிருந்து வந்தது என்போமாகில், நீங்கள் ஏன் அதை விசுவசியாமற் போனீர்கள் என்பார்.

32. மனிதர்களால் உண்டானது என்போமாகில், ஜனங்களுக்குப் பயப்படுகிறோம். ஏனெனில் எல்லாரும் அருளப்பரை மெய்யாகவே தீர்க்கதரிசியென்று எண்ணியிருந்தார்களே என்று யோசித்து,

33. யேசுநாதரை நோக்கி: அது எங்களுக்குத் தெரியாதென்று பதில் சொன்னார்கள். அப்பொழுது யேசுநாதர்: நானும் இன்ன அதிகாரத்தைக் கொண்டு இவைகளைச் செய்கிறேனென்று உங்களுக்குச் சொல்லேன் என்றார்.

## 12-ம். அதிகாரம்.

யேசுநாதர் கொலைபாதகரான திராட்சத் தோட்டத்தாரையும், மூலைக் கல்லையும் பற்றிச் சொல்லிய உவமைகளும், செசாருடையதைச் செசாருக்குச் செலுத்த வேண்டுமென்பதும், மரித்தோருடைய உத்தானமும், பிரதான கற்பனையும், பரிசேயருடைய பெருமை சிலாக்கியமும், விதவையின் காணிக்கையுமாவன.

1. பின்னும் அவர் உவமைகளாக அவர்களுக்குச் சொல்லத் துடங்கினதாவது: ஒரு மனிதன் திராட்சத்தோட்டத்தை உண்டாக்கி, அதைச் சுற்றிலும் வேலியடைத்து அதில் ஆலைத் தொட்டியையும் உண்டுபண்ணி, கோபுரமுங்கட்டி, அதைக் குடியானவர்கள் வசமாய்க் குத்தகைக்கு விட்டு, புறதேசத்துக்குப் புறப்பட்டுப் போனான். இசை. 5-1; எரே. 2-21; மத். 21-33; லூக். 20-9.

2. மேலும் அந்தக் குடியானவர்களிடத்தில் திராட்சத்தோட்டத்துக் கனிகளில் பாகம் வாங்கிவரும்படிக்குப் பருவகாலத்திலே ஓர் ஊழியனை அவர்களிடம் அனுப்பினான்.

3. அவர்கள் அவனைப்பிடித்து, அடித்து, வெறுமையாய் அனுப்பிவிட்டார்கள்.

4. பின்பு வேறொரு ஊழியனை அவர்களிடத்தில் அனுப்பினான். அவனை அவர்கள் தலையிலே காயப்படுத்தி நிந்தை அவமானம்பண்ணினார்கள்.

5. திரும்பவும் வேறொருவனை அனுப்பினான்; அவனை அவர்கள் கொலை செய்தார்கள். வேறு அநேகரையும் அனுப்பினவிடத்தில், அவர்கள்சிலரை அடித்தும், சிலரைக்கொன்றும் போட்டார்கள்.

6. இப்படியாகையில், இன்னம் அவனுக்கு மிகவும் பிரியமான ஒரு குமாரனிருந்தான். அவர்கள் என் குமாரனுக்கு அஞ்சுவார்களென்று சொல்லி, அவனையும் அவர்களிடத்தில் அனுப்பினான்.

7. குடியானவர்களோ: இவனே சுதந்தரவாளி, வாருங்கள், இவனைக் கொன்றுபோடுவோம். அப்போது சுதந்தரம் நம்முடையதாகுமென்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டு,

8. அவனைப் பிடித்துக் கொலைசெய்து, திராட்சத் தோட்டத்துக்குப் புறம்பே எறிந்துவிட்டார்கள்.

9. ஆகையால் திராட்சத் தோட்டத்து எஜமான் என்னசெய்வான்? அவன் வந்து, அந்தக் குடியானவர்களைச் சங்கரித்து, திராட்சத்தோட்டத்தை மற்றவர்களுக்குக் கொடுப்பானல்லோ!

10-11. வீடு கட்டுகிறவர்கள் தள்ளிவிட்ட இந்தக்கல்லே மூலைக்குத் தலைமையான கல்லாயிற்று. இது ஆண்டவரால் ஆனது; எங்கள் கண்களுக்கும் ஆச்சரியமாயிருக்கிறதென்று வேதத்தில் எழுதியிருக்கிறதை நீங்கள் வாசித்ததில்லையோ என்றார். சங். 117-22; இசை. 28-16; மத். 21-42; அப். 4-11; உரோ. 9-33; 1 இரா. 2-7.

12. இந்த உவமையைத் தங்களைக் குறித்தே சொன்னாரென்று அவர்கள் அறிந்து, அவரைப்பிடிக்கும்படி வகை தேடினார்கள். ஆயினும் ஜனங்களுக்கு அஞ்சி, அவரைவிட்டுப்போய்விட்டார்கள்.

13. பின்னும் அவர்கள் அவரைப் பேச்சில் பிடிக்கும்படி, பரிசேயரிலும் எரோதியரிலும் சிலரை அவரிடத்தில் அனுப்பினார்கள். மத். 22-15; லூக். 20-20.

11-ம் வசனத்துக்கு மத். 21-ம் அதி. 42-ம் வசனத்தின் வியாக்கியானங் காண்க.

14. அவர்கள் வந்து: போதகரே! நீர் சத்தியவந்தரென்றும், எவன்மட்டிலும் தாக்ஷண்யமில்லாதவரென்றும் அறிந்திருக்கிறோம். ஏனெனில் நீர் மனிதருடைய முகத்தைப்பாராமல் சர்வேசுரனுடைய மார்க்கத்தை உள்ளபடியே போதிக்கிறீர். செசார் இராயனுக்கு வரி செலுத்தலாமோ அல்லது செலுத்தாதிருப்போமோ என்று அவரை வினவினார்கள்.

15. அவர்களுடைய கபடத்தை அவர் அறிந்து: நீங்கள் ஏன் என்னைச்சோதிக்கிறீர்கள்? தெனியரென்கிற நாணயத்தை என்னிடத்தில் கொண்டுவாருங்கள்; நான் பார்க்கட்டுமென்று அவர்களிடத்தில் சொன்னார்.

16. அப்படியே அவர்கள் அதைக் கொண்டுவந்து கொடுக்க, அவர்: இந்த ரூபமும் மேலெழுத்தும் யாருடையதென்று அவர்களைக் கேட்டார். அதற்கு அவர்கள்: செசாருடையது என்றார்கள்.

17. யேசுநாதர் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக: அப்படியானால், செசாருடையதைச்செசாருக்கும், சர்வேசுரனுடையதைச் சர்வேசுரனுக்கும் செலுத்துங்கள் என்றார். அவர்களோ அவர்பேரில் ஆச்சரியப்பட்டார்கள். உரோ. 13-7.

18. அதன்பின், மாம்ச உத்தானமில்லையென்று சாதிக்கிற சதுசேயர் அவரிடத்தில்வந்து, அவரை வினவிச்சொன்னதாவது: மத். 22-23; லூக். 20-27.

19. போதகரே! ஒருவனுடைய சகோதரன் புத்திர சந்தானமில்லாமல், தன் மனைவியைவிட்டு இறந்துபோனால், அவன் சகோதரன் அவனுடைய மனைவியை விவாகம்பண்ணித் தன் சகோதரனுக்குப் புத்திர சந்தானமுண்டாக்க வேண்டுமென்று மோயீசன் எங்களுக்கு எழுதிவைத்திருக்கிறார். உபா. 25-5.

20. அப்படியிருக்க, சகோதரர் ஏழுபேரிருந்தார்கள். மூத்தவன் ஒருபெண்ணை விவாகம்பண்ணி, புத்திரசந்தானமில்லாமல் இறந்துபோனான்.

21. இரண்டாஞ் சகோதரன் அவளை விவாகம்பண்ணி, அவனும் சந்தானமில்லாமல் இறந்துபோனான். மூன்றாஞ் சகோதரனும் அப்படியேயானான்.

22. ஏழுபேரும் இந்தப்பிரகாரமாய் அவளை விவாகம் பண்ணிச் சந்தானமில்லாமல் இறந்துபோனார்கள். எல்லாருக்குங் கடைசியாய் அந்த ஸ்திரீயும் மரணமானாள்.

23. ஆதலால், உத்தானநாளில் அவர்கள் உயிர்த்து எழுந்திருக்கும்போது, அவர்களில் எவனுக்கு அவள் மனைவியாயிருப்பாள்? ஏழுபேரும் அவளை மனைவியாகக் கொண்டிருந்தார்களே என்றார்கள்.

24. யேசுநாதர் அவர்களுக்குப்பிரத்தியுத்தாரமாக: நீங்கள் வேதவாக்கியங்களையும், தேவ வல்லமையையும் அறியாமலல்லோ தவறிப் போகிறீர்கள்?

25. ஏனெனில் மரித்தோரினின்று உயிர்த்தபின்பு, பெண்கொள்வதுமில்லை, பெண் வாழ்க்கைப்படுவதுமில்லை. அவர்கள் பரலோகத்திலே தேவதூதர்களைப்போலிருப்பார்கள்.

15. தெனியர் என்பது யூதர்களில் ஒவ்வொருவரும் வருஷந்தோறும் உரோமாபுரி இராயனுக்குச் செலுத்தவேண்டிய ஆள் வரிப்பணமாம். இதைத்தான் அர்ச். மத். 22-ம் அதி. 10-ம் வசனத்தில் வரிப்பணமென்று சொல்லியிருக்கிறது.

26. மேலும் மரித்தோர் உயிர்ப்பதைப்பற்றி: நாம் அபிரகாமின் தேவனும், ஈசாக்கின் தேவனும், யாக்கோபின் தேவனுமாயிருக்கிறோமென்று சர்வேசுரன் முட்செடியிலிருந்து மோயீசனுக்கு எவ்விதம் திருவுளம்பற்றினாரென்பதை நீங்கள் அவருடைய ஆகமத்தில் வாசித்ததில்லையோ? யாத். 3-6; மத். 22-32.

27. அவர் மரித்தோருக்கல்ல, சீவியருக்கே தேவனாயிருக்கிறார். ஆகையால் நீங்கள் மிகவும் தவறிப்போகிறீர்கள் என்று திருவுளம்பற்றினார்.

28. அப்பொழுது, வேதபாரகரில் ஒருவன் அவர்கள் தர்க்கம்பண்ணுகிறதைக் கேட்டு, யேசுநாதர் அவர்களுக்கு நன்றாய்ப் பதில்சொன்னாரென்று கண்டு, அவர் கிட்டவந்து: எல்லாக் கற்பனைகளிலும் முதன்மையான கற்பனை எதுவென்று கேட்டான். மத். 22-35.

29. யேசுநாதர் அவனுக்குப் பிரத்தியுத்தாரமாக: எல்லாக் கற்பனைகளிலும் முதன்மையான கற்பனை எதுவென்றால்: இஸ்ராயேலே கேள், உன் சர்வேசுரனாகிய ஆண்டவர் ஒருவரே சர்வேசுரன்.

30. உன் சர்வேசுரனாகிய ஆண்டவரை உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமத்தோடும், உன் முழு மனதோடும், உன் முழுப்பலத்தோடும் சிநேகிப்பாயாக; இதுவே முதன்மையான கற்பனை. உபாக. 6-4.

31. இதற்குச் சரியொத்த இரண்டாம் கற்பனை ஏதென்றால்; உன்னைப்போல உன் பிறனையுஞ் சிநேகிப்பாயாக, என்பதாம். இவைகளிலும் பெரிதான வேறே கற்பனை இல்லை என்றார். லேவி. 19-18; மத். 22-39; உரோ. 13-9; கலா. 5-14; இயா. 2-8.

32. அப்பொழுது வேதபாரகன் அவரை நோக்கி: சரிதான் போதகரே! ஒரே சர்வேசுரன் உண்டென்றும், அவரல்லாதே வேறே சர்வேசுரன் இல்லையென்றும்,

33. அவரை முழு இருதயத்தோடும், முழுப்புத்தியோடும், முழு ஆத்துமத்தோடும் சிநேகிப்பதும், தன்னைப்போலத் தன் பிறனைச் சிநேகிப்பதும் எல்லாத் தகனபலிகளிலும் மற்றப் பலிகளிலும் மேன்மையானதென்றும் நீர் சத்தியத்தின்படியே சொன்னீர் என்றான்.

34. அவன் ஞானமாய்ப் பதிலுரைத்தானென்று யேசுநாதர் கண்டு: நீ சர்வேசுரனுடைய இராச்சியத்துக்குத் தூரமானவனல்லவென்று அவனுக்குத் திருவுளம்பற்றினார். அதன்பின், ஒருவரும் அவரைக் கேள்விகேட்கத் துணியவில்லை.

35. பின்பு யேசுநாதர் தேவாலயத்திலே உபதேசம்பண்ணும்போது வசனித்ததாவது: கிறீஸ்துநாதரைத் தாவீதின் குமாரனென்று வேதபாரகர் சொல்லுவது எப்படி?

36. தாவீதுதாமே இஸ்பிரீத்துசாந்துவினால் ஏவப்பட்டு: நான் உம்முடைய சத்துருக்களை உமக்குப் பாதப்படியாகப்போடுமட்டும், நீர் என் வலதுபாரிசத்தில் உட்கார்ந்திருமென்று ஆண்டவர் என் ஆண்டவருக்குச் சொன்னார் என்று சொல்லுகிறாரே. சங். 109-1; மத். 22-44; லூக். 20-42.

37. ஆகையால் தாவீது அவரை ஆண்டவரென்று சொல்லியிருக்க, அவருக்கு அவர் குமாரனாயிருப்பதெப்படி என்று திருவுளம்பற்றினார். திரளான ஜனங்கள் அவருடைய வாக்கியத்தை விருப்பத்தோடு கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

38. மீளவும் அவர் போதிக்கையில் அவர்களுக்குத் திருவுளம் பற்றினதாவது: நீங்கள் வேதபாரகர்மட்டில் எச்சரிக்கையாயிருங்கள். அவர்கள் நீடிய அங்கிகளோடு உலாவவும், தெருக்களில் வந்திக்கப்படவும் விரும்புகிறார்கள்.

39. ஜெப ஆலயங்களில் முதல் ஆசனங்களில் உட்காரவும், விருந்துகளில் முதன்மையான இடங்களிலிருக்கவும் விரும்பி,

40. நெடும் ஜெபம்பண்ணுகிறதாகப் பாராட்டி, விதவைகளுடைய வீடுகளைப் பட்சிக்கிறார்கள்; அவர்கள் அதிக கண்டிப்பான தீர்ப்பை அடைவார்கள் என்றார். மத். 23-6; லூக். 11-43; 20-46.

41. பின்பு யேசுநாதர் காணிக்கைப் பெட்டிக்கு எதிராக உட்கார்ந்து, ஜனங்கள் அதில் காணிக்கை போடுகிறதைப் பார்த்துக்கொண்டிருந்தார். ஐசுவரியமுள்ள அநேகர் மிகுதியாய்ப்போட்டார்கள்.

42. ஏழையான ஓர் விதவை வந்து, ஒருகாசு பெறுமான இரண்டு சல்லியைப்போட்டாள்.

43. அப்பொழுது அவர் தம்முடைய சீஷர்களை அழைத்து அவர்களுக்குச் சொன்னதாவது: காணிக்கைப் பெட்டியில் காணிக்கை போட்ட எல்லாரையும் விட, இந்த ஏழைக் கைம்பெண் அதிகமாய்ப் போட்டாளென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்;

44. எப்படியெனில், அவர்களெல்லாரும் தங்கள் நிறைவாகரத்திலிருந்து எடுத்துப் போட்டார்கள். இவளோ, தன் வறுமையில் தன் சீவனத்துக்குண்டாயிருந்ததெல்லாவற்றையும் போட்டாளென்று திருவுளம்பற்றினார்.

## 13-ம். அதிகாரம்.

யேசுநாதர் தேவாலயத்தின் அழிவையும், நடுத்தீர்வையையும், அதற்குமுன் சம்பவிக்கும் அடையாளங்களையும் முன்னறிவித்தது.

1. அவர் தேவாலயத்தைவிட்டு வெளியே போகும்போது, அவருடைய சீஷர்களில் ஒருவர் அவரை நோக்கி: போதகரே! இவைகள் எப்படிப்பட்ட கல்லுகள், எப்பேர்க்கொத்த கட்டடங்களென்று பாரும் என்றார். மத். 24-1.

2. யேசுநாதர் அவருக்கு மாறுத்தரமாக: இந்த விஸ்தாரமான கட்டடங்களையெல்லாம் காண்கிறாயே. ஆகிலும் இவையெல்லாம் இடிபடாமல், கல்லின் மேல் கல் நிற்கவிடப்படுவதில்லை என்றார். லூக். 19-44; 21-6.

3. பின்பு அவர் தேவாலயத்துக்கு எதிராக ஒலிவ மலையின்மேல் உட்கார்ந்திருக்கையில், இராயப்பரும், யாகப்பரும், அருளப்பரும், பிலவேந்திரரும் அவரைத் தனியே வினவி:

4. இவைகள் எப்போது நடக்குமென்றும், இவையெல்லாம் நிறைவேறத் துவக்கும்போது என்ன அடையாளந் தோன்றுமென்றும் எங்களுக்குச் சொல்லவேண்டும் என்றார்கள்.

5. யேசுநாதர் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாகச் சொல்லத் துடங்கினதாவது: ஒருவனும் உங்களை மயக்காதபடிக்குப் பார்த்துக்கொள்ளுங்கள். எபே. 5-2; 2 தெச. 2-3.

6. ஏனெனில் அநேகர் என் நாமத்தைத் தரித்துக்கொண்டு, நானே (கிறீஸ்துநாதர்) என்று சொல்லி, அநேகரை மயக்குவார்கள்.

2-ம் வசனத்துக்கு மத். 24-ம் அதி. 2-ம் வசனத்தின் வியாக்கியானம் காண்க.

7. அன்றியும் யுத்தங்களையும், யுத்தச் செய்திகளையும் கேள்விப்படும்போது கலங்காதேயுங்கள். ஏனெனில் இவைகள் முந்த முந்த நடக்கவேண்டியதுதான். ஆகிலும் முடிவு உடனே வராது.

8. தேசத்தார் தேசத்தார்மேலும், இராச்சியத்தார் இராச்சியத்தார்மேலும் எழும்புவார்கள். அன்றியும் பற்பல இடங்களில் பூமியதிர்ச்சிகளும், பஞ்சங்களும் உண்டாகும். இவைகளே துன்ப துரிதங்களின் துவக்கமாம்.

9. நீங்களோ, உங்கள்பேரில் எச்சரிக்கையாயிருங்கள். ஏனெனில் உங்களை நீதிச் சங்கங்களுக்குக் கையளிப்பார்கள்; நீங்கள் ஜெப ஆலயங்களில் அடிக்கப்படுவீர்கள். என்னிமித்தம் தேசாதிபதிகளுக்கும் இராஜாக்களுக்கும் சாட்சியாக அவர்களுக்கு முன் நிறுத்தப்படுவீர்கள்.

10. ஆயினும் சகல ஜாதி ஜனங்களுக்கும் முந்த முந்தச் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படவேண்டும்.

11. உங்களைக் கொண்டுபோய்க் கையளிக்கும்போது, என்ன பேசுவோமென்று முன்னதாக யோசியாதிருங்கள். அந்நேரத்தில் உங்களுக்கு அருளப்படுவது எதுவோ, அதையே பேசுங்கள். ஏனெனில் பேசுகிறவர்கள் நீங்களல்ல, இஸ்பிரீத்துசாந்துவானவரே பேசுகிறவர். மத். 10-19; லூக். 12-11; 21-14.

12. சகோதரன் சகோதரனையும், தகப்பன் மகனையும் மரணத்துக்குக் கையளிப்பார்கள். பிள்ளைகள் பெற்றோருக்கு விரோதமாய் எழும்பி அவர்களைக் கொலைசெய்வார்கள்.

13. என் நாமத்ினிமித்தம் சகலராலும் பகைக்கப்படுவீர்கள். ஆகிலும் முடிவுபரியந்தம் நிலைத்திருப்பவன் எவனோ, அவனே இரட்சண்ணியம் அடைவான்.

14. மேலும் பாழுந்தன்மையின் அருவருப்பு நிற்கத்தகாத இடத்திலே நிற்கிறதை நீங்கள் காணும்போது, வாசிக்கிறவன் உணர்ந்துகொள்ளக் கடவான். அப்போது யூதேயாவிலிருக்கிறவர்கள் மலைகளின்மேல் ஓடிப்போகக்கடவார்கள். தனி. 9-27; மத். 24-15; லூக். 21-20.

15. வீட்டின்மேல் இருப்பவன் வீட்டுக்குள் இறங்காமலும், வீட்டிலிருந்து எதையாகிலும் எடுத்துக்கொள்ள உள்ளே போகாமலும் இருக்கக்கடவான்.

16. காட்டிலிருப்பவன் தன் வஸ்திரத்தை எடுத்துக்கொள்ளப் பின்னிட்டுத் திரும்பாதிருக்கக்கடவான்.

17. அந்நாட்களில் கற்பவதிகளுக்கும், பாலூட்டுகிறவர்களுக்கும் ஐயோ! நிர்ப்பாக்கியம்.

18. இவைகள் மாரிகாலத்தில் சம்பவியாதபடிக்குப் பிரார்த்தித்துக்கொள்ளுங்கள்.

19. ஏனெனில் சர்வேசுரன் உலகத்தை உண்டாக்கின நாள்முதல் இதுவரைக்கும் இல்லாததும், இனி இருக்கமாட்டாததுமான உபத்திரவங்கள் அந்நாட்களிலே உண்டாயிருக்கும்.

20. ஆகையால் ஆண்டவர் அந்நாட்களைக் குறைத்திராதிருந்தால் எந்த மாம்சமும் பிழைக்கத்தக்கதில்லை. ஆகிலும் தாம் குறித்துத்தெரிந்துகொண்டவர்களினிமித்தம் அவர் அந்நாட்களைக் குறைத்திருக்கிறார்.

14-ம் வசனத்துக்கு வியாக்கியானம், அர்ச். மத்தேயு சுவிசேஷம் 24-ம் அதி. 15-ம் வசனங் காண்க.

20-ம் வசனத்தில் ஆண்டவர் தாம் குறித்துத் தெரிந்துகொண்டவர்களென்பதற்கு அர்ச். மத். 13-ம் அதி. 14-ம் வசன வியாக்கியானத்தையும், உரோமர். 9-ம் அதி. 33-ம் வசன வியாக்கியானத்தையுங்காண்க. எந்த மாம்சமுமென்பதற்கு எந்த மனிதனுமென்று அர்த்தமாம்.

21. அப்போது இதோ, கிறிஸ்துநாதர் இங்கேயிருக்கிறார்; அதோ, அங்கேயிருக்கிறார் என்று ஒருவன் உங்களுக்குச் சொன்னாலும் அதை விசுவசியாதேயுங்கள். மத். 24-23; லூக். 17-23.

22. ஏனெனில் கள்ளத் தீர்க்கதரிசிகளும், கள்ளக் கிறிஸ்துக்களும் எழும்பி, கூடுமாகில் தெரிந்துகொள்ளப்பட்டவர்களைமுதலாய் மயக்கத்தக்க புதுமைகளையும், அதிசயங்களையும் செய்வார்கள்.

23. ஆகையால், நீங்கள் எச்சரிக்கையாயிருங்கள். இதோ எல்லாவற்றையும் உங்களுக்கு முன்னதாகவே அறிவித்தேன்.

24. அன்றியும் அந்நாட்களில் அந்த உபத்திரவத்துக்குப் பிற்பாடு சூரியன் இருளடையும்; சந்திரனும் தன் ஒளி கொடாதிருக்கும். இசை. 13-10; எசேக். 32-7; ஜொயெல். 2-10.

25. வானத்தின் நட்சத்திரங்களும் உதிர்ந்துவிழும். வானமண்டலங்களிலுள்ள சத்துவங்களும் அசைக்கப்படும்.

26. அப்போது மனுமகன் மிகுந்த வல்லமையோடும், மகிமையோடும் மேகங்களின்மீதே வருகிறதைக் காண்பீர்கள்.

27. அவர் தம்முடைய தூதர்களை அனுப்பி, பூமியின் கடைமுனை முதல், வானத்தின் கடைமுனை மட்டும் நான்கு திசைகளிலுமிருந்து தாம் தெரிந்துகொண்டவர்களை ஒன்றாய்க் கூட்டிச்சேர்ப்பார். மத். 24-31.

28. அத்திமரத்தினால் ஒரு உவமையைக் கற்றுக்கொள்ளுங்கள். அதில் இளங்கிளை உண்டாகி, இலைகள் துளிர்க்கும்போது, கோடைகாலம் சமீபமாயிற்றென்று அறிந்துகொள்ளுகிறீர்கள்.

29. அப்படியே இவைகளெல்லாம் சம்பவிக்கிறதை நீங்கள் காணும்போது, (மனுமகன்) வாசலருகே அடுத்திருக்கிறாரென்று அறிந்துகொள்ளுங்கள்.

30. இவையெல்லாம் சம்பவிக்குமுன்னே, இந்தச் சந்ததி ஒழிந்துபோகாதென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

31. வானமும் பூமியும் ஒழிந்துபோம்; என்வார்த்தைகளோ ஒழிந்துபோவதில்லை.

32. ஆகிலும் அந்நாளைப்பற்றியாவது நாழிகையைப்பற்றியாவது பிதாவைத் தவிர வேறே ஒருவரும், அறியார்கள். மோட்சத்திலுள்ள சம்மனசுக்களும் சுதனும் முதலாய் அறியார்கள்.

33. எச்சரிக்கையாய் இருங்கள்; விழிப்பாயிருந்து ஜெபம்பண்ணுங்கள். ஏனெனில் அந்தக்காலம் எப்போதென்று அறியமாட்டீர்கள். மத். 24-42.

34. ஒருமனிதன் தன் வீட்டைவிட்டுத் தூரப்பிரயாணம் போகையில், தன் ஊழியருக்கு அந்தந்த வேலைக்குரிய அதிகாரத்தைக் கொடுத்து, வாசல் காப்பவனும் விழித்திருக்கும்படி கட்டளையிட்டு, புறப்பட்டதுபோலிருக்கிறது.

35. அப்படியே நீங்களும் விழித்திருங்கள். வீட்டெஜமான் சாயங்காலத்திலோ, நடுச்சாமத்திலோ, சாவல் கூப்பிடும் நேரத்திலோ, விடியற்காலத்திலோ, எந்நேரத்திலோ வருவாரென்று உங்களுக்குத் தெரியாது.

---

32. பிதாவாகிய சர்வேசுரன் அறிந்ததெல்லாஞ் சுதனும் அறிந்திருக்கிறாரென்பது வேதசத்தியமாமே. ஆனால் நடுத்தீர்க்கிற நாளையாவது நாழிகையாவது சுதன் அறியவில்லையென்று கர்த்தர் சொல்லும்போது, அதைச் சீஷர்களுக்கு அறிவிக்கும்படியாகத் தேவ சித்தமில்லாததினால், தாம் அறிவிக்கும்படி அறியவில்லை என்றாரென்றர்த்தமாம்.

36. அவர் ஒருவேளை அகப்பிலே வந்து, நீங்கள் தூங்குகிறதாகக் காணு தபடிக்கு விழித்திருங்கள்.

37. நான் உங்களுக்குச் சொல்லுகி றதையே எல்லாருக்கும் சொல்லுகி றேன்; விழிப்பாயிருங்கள் என்றார்.

## 14-ம். அதிகாரம்.

யூதர்கள் யேசுநாதருக்கு விரோதமாய்ச் சதியோசனை செய்ததும், ஓர் ஸ்திரீ அவர்மேல் பரிமளத் தைலத்தை வார்த்ததும், யூதாசுடைய சதிதுரோகமும், திவ்விய நற்கருணையை ஸ்தாபித்ததும், கிறீஸ்துநாதருடைய பாடுகளின் வரலாறும்.

1. இரண்டு நாளைக்குப்பின் பாஸ்காப் பண்டிகையும், புளியாத அப்பப்பண்டிகையும் வந்தது. அப்பொழுது பிரதான ஆசாரியரும், வேதபாரகரும் அவரை எப்படித் தந்திரமாய்ப் பிடித்து, கொலைசெய்யலாமென்று வகை தேடிக்கொண்டிருந்தார்கள். மத். 26-2; 22-1.

2. ஆகிலும் ஒருவேளை ஜனங்களுக்குள்ளே கலகம் உண்டாகாதபடிக்குத் திருநாளிலே இது தகாதென்று சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

3. அப்படியிருக்க, அவர் பெத்தானியாவில் குஷ்டரோகியாயிருந்த சீமோன் வீட்டில் பந்தியமர்ந்தபோது, ஓர் ஸ்திரீயானவள் விலையேறப்பெற்ற சுத்த இலாமச்சைத் தைலமுள்ள வெண்கல் சிமிழைக் கொண்டுவந்து, சிமிழை யுடைத்து, (தைலத்தை) அவருடைய சிரசில் ஊற்றினாள். மத். 26-6. அருள். 12-1.

4. அப்பொழுது சிலர் இதைப்பற்றி தங்களுக்குள்ளே எரிச்சல்கொண்டு: தைலத்தை இப்படிச் சேதமாக்கினது என்னத்துக்கு?

5. இந்தத் தைலத்தை முந்நூறு தெனியருக்கு அதிகமான கிரயத்துக்கு விற்று, தரித்திரருக்குக் கொடுத்திருக்கலாமே என்று சொல்லி, அவள்மேல் முறுமுறுத்துக் கொண்டிருந்தார்கள்.*

6. அப்பொழுது யேசுநாதர் திருவுளம்பற்றினதாவது: அவளைச்சும்மா விட்டுவிடுங்கள். ஏன் அவளைத் தொந்தரவுபண்ணுகிறீர்கள்? அவள் என்னிடத்தில் நற்கிரியையைச் செய்திருக்கிறாள்.

7. தரித்திரர் எப்போதும் உங்களோடிருக்கிறார்கள். உங்களுக்குஇஷ்டமான போது அவர்களுக்கு நன்மை செய்யலாம்; நானோ உங்களோடு எப்போதும் இருப்பதில்லை.

8. இவள் தன்னால் இயன்றதைச் செய்தாள். அடக்கத்துக்காக என் சரீரத்துக்குத் தைலம்பூச முந்திக்கொண்டாள்.

9. மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்: சர்வலோகத்திலும் இந்தச் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படும் இடமெல்லாம், இவள் செய்ததும் இவள் ஞாபகமாகச் சொல்லப்படும் என்றார்.

10. அப்போது பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ் இஸ்கரியோத்து என்பவன் அவரைப் பிரதான ஆசாரியருக்குக் காட்டிக் கொடுக்கும்படி அவர்களிடத்திற்குப் போனான். மத். 24-14.

11. அவர்கள் அதைக் கேட்டுச் சந்தோஷப்பட்டு, அவனுக்குத் தாங்கள் பணங்கொடுப்பதாக வாக்குத்தத்தம் செய்தார்கள். ஆதலால் அவன் அவரை எப்படிக் காட்டிக் கொடுக்கலாமென்று தக்க சமயம் பார்த்துக்கொண்டிருந்தான்.

5. தெனியர் என்பது ஏறக்குறைய இரண்டரை அணு பெறுமானமுள்ளது.

12. அப்படியிருக்க (யூதர்கள்) பாஸ்காவைப்பலியிட்டு வந்த நாளாகிய புளியாத அப்பப்பண்டிகையின் முதலாம் நாளிலே சீஷர்கள் அவரை நோக்கி: நீர் பாஸ்காவைப் புசிக்கும்படி நாங்கள் எங்கே போய் உமக்கு ஆயத்தம்பண்ணச் சித்தமாயிருக்கிறீர்? என்றார்கள்.

13. அப்பொழுது அவர் தம்முடைய சீஷர்களில் இருவரை அனுப்பி, அவர்களுக்குச் சொன்னதாவது: நீங்கள் பட்டணத்துக்குப் போங்கள். அங்கே தண்ணீர்க் குடஞ் சுமந்துவருகிற ஒரு மனிதன் உங்களுக்கு எதிர்ப்படுவான். நீங்கள் அவனைப் பின் தொடர்ந்து போய்,

14. அவன் எந்த வீட்டில் பிரவேசிப்பானோ, அந்த வீட்டெஜமானனை நோக்கி: என் சீஷர்களோடு நான் பாஸ்காவைப் புசிக்கும் இடமாகிய என் அசனசாலை எங்கேயென்று போதகர் கேட்கிறார் என்று சொல்லுங்கள்.

15. அவன் ஆயத்தமாயிருக்கிற ஒரு பெரிய அசனசாலையை உங்களுக்குக் காண்பிப்பான்; அங்கே நமக்கு முஸ்திப்புச் செய்யுங்கள் என்றார்.

16. அவ்வண்ணமே அவருடைய சீஷர்கள் புறப்பட்டு, பட்டணத்தில் போய், அவர் தங்களுக்குச் சொன்னபடியே கண்டு, பாஸ்காவை ஆயத்தம் பண்ணினார்கள்.

17. சாயங்கால வேளையில் அவர் பன்னிருவரோடுங்கூட அவ்விடத்திற்கு வந்தார். மத். 26-20; லூக். 22-14.

18. அவர்கள் பந்தியமர்ந்து, சாப்பிடுகையில் யேசுநாதர் அவர்களை நோக்கி: மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன், என்னோடுகூடப் புசிக்கிறவனாகிய உங்களில் ஒருவன் என்னைக் காட்டிக்கொடுப்பான் என்றார். அரு. 13-21.

19. அவர்களோ துயரப்படவும், நானோவென்று ஒவ்வொருவரும் அவரைக் கேட்கவும் தொடங்கினார்கள்.

20. அதற்கு அவர்: என்னோடுகூடப் பாத்திரத்தில் கையிடுகிறவனாகிய பன்னிருவரில் ஒருவனே அவன்;

21. உள்ளபடியே மனுமகன் தன்னைக்குறித்து எழுதப்பட்டபடியே போகிறார், ஆயினும் மனுமகனைக் காட்டிக் கொடுக்கப்போகிற அந்த மனிதனுக்கு ஐயோ கேடு! அந்த மனிதன் பிறவாதிருந்தால் அவனுக்கு நலமாயிருக்கும் என்றார். சங். 40-10; அப். 1-16.

22. பின்னும் அவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருக்கையில், யேசுநாதர் அப்பத்தை எடுத்து, ஆசீர்வதித்து பிட்டு, அவர்களுக்குக் கொடுத்து: இதை உட்கொள்ளுங்கள்; இது என்னுடைய சரீரமாயிருக்கிறது என்றார். மத். 26-26; 1. கொரி. 11-24.

23. பானபாத்திரத்தையும் எடுத்து நன்றியறிந்தஸ்தோத்திரஞ்செய்து, அவர்களுக்குக் கொடுத்தார்; எல்லாரும் அதிலே பானம்பண்ணினார்கள்.

24. அப்பொழுது அவர் அவர்களை நோக்கி: இது அநேகருக்காகச் சிந்தப்படும் புதிய உடன்படிக்கையின் என்னுடைய இரத்தமாயிருக்கின்றது.

25. இது முதல் சர்வேசுரனுடைய இராச்சியத்தில் நவமான ரசத்தை நான் பானம்பண்ணும் நாள்வரைக்கும், இந்த திராட்ச ரசத்தை பானஞ் செய்யேனென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

26. மேலும் அவர்கள் தோத்திரக் கீதம் பாடினபின்பு, ஒலிவமலைக்குப் புறப்பட்டுப்போனார்கள்.

27. அப்பொழுது யேசுநாதர் அவர்களை நோக்கி: நீங்கள் எல்லாரும் இந்த இராத்திரியிலே என்னிமித்தம் இடறல்படுவீர்கள். ஏனெனில் மேய்ப்பனை அடிப்பேன், ஆடுகள் சிதறடிக்கப்படுமென்று எழுதியிருக்கின்றது. அரு. 16-32; சக். 13-7.

28. ஆயினும் நான் உயிர்த்தெழுந்த பின்பு உங்களுக்கு முன்னே கலிலேயாவுக்குப் போவேன் என்றார்.

29. அதற்கு இராயப்பர் எதிருத்தாரமாக: உம்மைப்பற்றி எல்லாரும் இடறல் பட்டாலும், நான் இடறல்படேன் என்றார்.

30. யேசுநாதர் அவரை நோக்கி: இன்று, இந்த இராத்திரியிலே இருமுறை சாவல் கூவுமுன்னே, நீ மும்முறை என்னை மறுதலிப்பாயென்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

31. அவரோ, அதிகமாய்ப் பேசி: நான் உம்மோடேகூடச் சாகவேண்டியிருந்தாலும், உம்மை மறுதலியேன் என்றார். அப்படியே எல்லாரும் சொன்னார்கள்.

32. பின்பு அவர்கள் ஜெத்சேமனியென்னும் தோட்டத்துக்கு வந்தார்கள். அப்போது அவர் தம்முடைய சீஷர்களைப்பார்த்து: நான் ஜெபம் பண்ணுமளவும், நீங்கள் இங்கே உட்கார்ந்திருங்கள் என்று சொல்லி, மத். 26-36; லூக். 22-40.

33. இராயப்பரையும், இயாகப்பரையும், அருளப்பரையும் தம்மோடு அழைத்துக்கொண்டுபோய், பயப்படவும், சலிப்படையவும் தொடங்கினார்.

34. அப்பொழுது அவர்: என் ஆத்துமமானது மரணத்துக்கேதுவான துயரங்கொண்டிருக்கிறது, நீங்கள் இங்கே தங்கி, விழித்திருங்கள் என்று அவர்களிடத்தில் சொன்னார்.

35. அதன்பின் சற்று அப்பால் போய் தரையில் முகங்குப்புறவிழுந்து, கூடுமானால் அந்த வேளை தம்மைவிட்டு நீங்கவேண்டுமென்று பிரார்த்தித்து:

36. அப்பா, பிதாவே! உம்மால் எல்லாங் கூடும், இந்தப் பாத்திரத்தை என்னிடத்தினின்று அகற்றியருளும்; ஆயினும் என் மனதின்படியல்ல, உம்முடைய மனதின்படியே ஆகட்டும் என்றார்.

37. பின்னும் அவர் வந்து, அவர்கள் நித்திரை செய்கிறதைக்கண்டு, இராயப்பரை நோக்கி: சீமோனே, நித்திரை செய்கிறாயோ? ஒரு மணிநேரம் விழித்திருக்க உன்னால் கூடாமல்போயிற்றோ?

38. சோதனைக்குட்படாதபடிக்கு விழித்திருந்து, ஜெபஞ் செய்யுங்கள். மனமானது வேகமுள்ளதுதான்; மாம்சமோ பலவீனமுள்ளது என்றார்.

39. மறுபடியும் அவர்போய், அந்த வாக்கியத்தையே சொல்லி வேண்டிக்கொண்டார்.

40. பின்னும் அவர் திரும்பி வந்து, மறுபடியும் அவர்கள் நித்திரை செய்யக் கண்டார். ஏனெனில் அவர்களுடைய கண்கள் பழுவாயிருந்தன; அவருக்கு என்ன பதில் சொல்லுவதென்றும் அவர்கள் அறியாதிருந்தார்கள்.

41. அவர் மூன்றுமுறையும் வந்து அவர்களுக்குத் திருவுளம்பற்றினதாவது: இப்போது நித்திரை செய்து இளைப்பாறுங்கள்; போதும், நேரம் வந்துவிட்டது, இதோ, மனுமகன் பாவிகளுக்குக் கையளிக்கப்படப் போகிறார்.

42. எழுந்திருங்கள், போவோமாக. இதோ, என்னைக் காட்டிக் கொடுப்பவன் சமீபமாயிருக்கிறான் என்றார்.

43. அவர் இன்னம் பேசிக்கொண்டிருக்கையில் பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ்இஸ்கரியோத்து வந்தான்; அவனோடுகூடப் பிரதான ஆசாரியர்களாலும், வேதபாரகர்களாலும், மூப்பர்களாலும் அனுப்பப்பட்ட திரளான ஜனங்கள் கத்திகளையும் தடிகளையும் எடுத்துக்கொண்டு வந்தார்கள். மத். 26-47; லூக். 22-47; அரு. 18-3.

44. அவரைக் காட்டிக் கொடுத்தவன்: நான் எவனை முத்தஞ்செய்வேனோ, அவன்தான்; அவனைப்பிடித்துப் பத்திரமாய்க்கொண்டுபோங்கள் என்று அவர்களுக்கு அடையாளங் கொடுத்திருந்தான்.

45. ஆதலால் அவன் வந்தவுடனே, அவரை அணுகி: குருவே வாழ்கவென்று அவரை முத்தமிட்டான்.

46. அவர்களோ அவர்மேல் கை போட்டு அவரைப் பிடித்தார்கள்.

47. அப்பொழுது அவரைச் சூழ்ந்து நின்றவர்களில் ஒருவர், வாளை உருவிப் பிரதான ஆசாரியனுடைய ஊழியனைத் தாக்கி, அவன் காதற வெட்டினார்.

48. யேசுநாதரோ அவர்களை நோக்கி: நீங்கள் கத்திகளையும், தடிகளையும் எடுத்துக்கொண்டு, திருடனைப் பிடிக்க வருகிறதுபோல், என்னைப் பிடிக்க வந்தீர்களோ?

49. நாள்தோறும் தேவாலயத்தில் போதித்துக்கொண்டு, உங்கள் நடுவிலிருந்தேனே, அப்பொழுது நீங்கள் என்னைப் பிடிக்கவில்லையே; ஆனாலும் வேதவாக்கியங்கள் நிறைவேற வேண்டியதாயிருக்கிறது என்றார்.

50. அப்பொழுது அவருடைய சீஷர்களெல்லாரும் அவரைவிட்டு, ஓடிப்போனார்கள். மத். 26-56.

51. அப்போது ஒருவாலன் வெறும் உடம்பின்மேல் ஒரு துப்பட்டியைப் போர்த்திக்கொண்டு அவர் பிறகேபோனான்; அவனையும் பிடித்தார்கள்.

52. அவனோ, துப்பட்டியை எறிந்துவிட்டு, நிர்வஸ்திரமாய் அவர்களிடத்தினின்று தப்பி ஓடிப்போனான்.

53. யேசுநாதரை அவர்கள் பெரிய குருவினிடத்தில் கூட்டிக்கொண்டுபோனார்கள். அங்கே சகல ஆசாரியர்களும் வேதபாரகர்களும் மூப்பர்களும் கூடி வந்திருந்தார்கள். மத். 26-57; லூக். 22-54; அரு. 18-13.

54. இராயப்பரோவெனில், தூரத்தில் அவரைப் பின்சென்று, பெரிய குருவின் அரமனை முற்றத்துக்குள் வந்து, பணிவிடைக்காரரோடு நெருப்பண்டையில் உட்கார்ந்து, குளிர்காய்ந்துகொண்டிருந்தார்.

55. அப்பொழுது ஆசாரியரும், ஆலோசனைச் சங்கத்தார் அனைவரும் யேசுநாதரை மரணத்துக்கு உட்படுத்தும்படி அவருக்கு விரோதமாகச் சாட்சி தேடினார்கள். ஆகிலும் அகப்படவில்லை. மத். 26-59.

56. ஏனெனில் அநேகர் அவருக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்சிசொல்லியும், அந்தச் சாட்சிகள் ஒன்றுக்கொன்று ஒவ்வாதிருந்தன.

57. பின்னும் சிலர் எழுந்து, அவருக்கு விரோதமாய்ப் பொய்சாட்சி சொல்லி:

58. கைவேலையாகிய இந்தத் தேவாலயத்தை நான் இடித்துப்போட்டு, கைவேலையல்லாத வேறொன்றை மூன்றுநாளைக்குள்ளே கட்டுவேனென்று, இவன் சொன்னதை நாங்கள் கேட்டோம் என்றார்கள். அரு. 2-19.

59. அவர்களுடைய சாட்சியும் ஒவ்வாதிருந்தது.

60. அப்பொழுது பெரியகுரு சபை நடுவில் எழுந்து, யேசுநாதரை நோக்கி: இவர்கள் உனக்கு விரோதமாய்ச் சொல்லுகிறதற்கு நீ பதில்மொழி ஒன்றும் சொல்லுகிறதில்லையா என்று கேட்டான்.

61. அவரோ ஒரு பதில்மொழியுஞ் சொல்லாமல் மௌனமாய் இருந்தார். மறுபடியும் பெரியகுரு அவரை வினவி: ஸ்துதிக்கப்பட்ட சர்வேசுரனுடைய குமாரனாகிய கிறீஸ்து நீதானோ என்று கேட்க:

62. யேசுநாதர் அவனை நோக்கி: அவர் நான்தான். அல்லாமலும் மனுமகன் சர்வேசுரனுடைய வல்லப வலது பாரிசத்திலே வீற்றிருப்பதையும் வான மேகங்களின்மேல் வருவதையும், காண்பீர்கள் என்றார். மத். 24-30.

63. அப்பொழுது பெரிய குரு தன்னுடைய வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு: இன்னும் நமக்குச் சாட்சிகள் வேண்டியதென்ன?

64. தேவ தூஷணத்தைக் கேட்டீர்களே, உங்களுக்குத் தோன்றுகிறதென்ன என்றான். அவர்கள் எல்லாரும் அவரை மரணத்துக்குரிய குற்றவாளியென்று தீர்மானித்தார்கள்.

65. அப்போது சிலர் அவர்மேல் துப்பவும், அவர் முகத்தை மூடி, அவரைக்குட்டவும், தீர்க்கதரிசனஞ் சொல்லென்று அவரிடத்தில் சொல்லவும் தொடங்கினார்கள். பணிவிடைக்காரரும் அவரைக் கன்னத்தில் பலமுறை அறைந்தார்கள்.

66. அத்தருணத்தில் இராயப்பர் கீழே அரமனை முற்றத்திலிருக்கையில், பெரிய குருவின் ஊழியக்காரிகளில் ஒருத்தி வந்து,

67. குளிர் காய்ந்துகொண்டிருந்த இராயப்பரைக் கண்டு, அவரை உற்றுப்பார்த்து: நீயும் நசரேனுவாகிய யேசுவோடு இருந்தாயென்றாள். மத். 26-69. லூக். 22-56; அரு. 18-17.

68. அவரோ மறுதலித்து: நான் அறியேன்; நீ என்ன சொல்லுகிறாயென்றும் எனக்குத் தெரியாது என்றார். பின்னும் அவர் அரமனை முற்றத்துக்கு முன்பாக வெளியில் புறப்படவே, சாவல் கூவிற்று.

69. மறுபடியும் பணிவிடைக்காரி அவரைக்கண்டு: இவன் அவர்களில் ஒருவனென்று சுற்றி நின்றவர்களுக்குச் சொல்லத் தொடங்கினாள். மத். 26-71.

58. இந்தத் தேவாலயத்தை இடித்துப்போடுங்கள், இதை மூன்று நாளைக்குள் திரும்ப எழுப்புவேனென்று யேசுநாதர் சொன்னது மெய்யே. ஆனால் தம்முடைய சரீரமாகிய தேவாலயத்தைக் குறித்துச் சொல்லியிருந்தாரொழிய கட்டப்பட்ட தேவாலயத்தைப் பற்றிச் சொன்னவரல்ல. அன்றியுஞ் சர்வேசுரனுடைய தேவாலயத்தை நான் இடிக்கவும் மூன்று தினத்துக்குள் அதைத் திரும்பக் கட்டவும் வல்லவனாயிருக்கிறேனென்றாவது, கைவேலையான இந்தத் தேவாலயத்தை நான் இடித்து, கைவேலையல்லாத வேறொன்றை மூன்றுநாளைக்குள் கட்டுவேனென்றாவது அவர் சொல்லவில்லை. ஆகையால் இவ்விரண்டு விஷயங்களிலும் அவர்கள் சொன்ன சாட்சி பொய்யாயும், ஒன்றோடொன்று ஒவ்வாததாயுமிருந்தது.

70. அவரோ மறுபடியும் மறுதலித்தார். மீளவும் சற்றுநேரத்துக்குப்பின் அங்கே நின்றவர்கள் இராயப்பனை நோக்கி: மெய்யாகவே நீயும் அவர்களில் ஒருவன்; ஏனெனில் நீ கலிலேயன் என்றார்கள். லூக். 22-59; அரு. 18-25.

71. ஆனால் அவர்: நீங்கள் சொல்லுகிற அந்த மனிதனை அறியேனென்று சபிக்கவும், ஆணையிடவும் தொடங்கினார்.

72. உடனே சாவல் மறுபடியும் கூவிற்று. அப்போது: சாவல் இருமுறை கூவுமுன், நீ என்னை மும்முறை மறுதலிப்பாய் என்று, யேசுநாதர் தனக்குச் சொன்ன வார்த்தையை இராயப்பர் நினைத்துக்கொண்டு, அழத்துவக்கினார். மத். 26-75; அரு. 13-38.

## 15-ம். அதிகாரம்.

*யேசுநாதர் குற்றஞ்சாட்டப்பட்டதும், பிலாத்து அவரைச் சிலுவையில் அறையும்படி சேவகர்களுக்குக் கையளித்ததும், அவருடைய மரணமும் அடக்கமும்.*

1. பின்பு விடியற்காலமானவுடனே பிரதான ஆசாரியர்கள் மூப்பரோடும், வேதபாரகரோடும், ஆலோசனைச் சங்கத்தாரனைவரோடும் கூடி ஆலோசனை செய்து, யேசுநாதரைக் கட்டிக் கூட்டிக்கொண்டுபோய், பிலாத்துவினிடத்தில் ஒப்புக்கொடுத்தார்கள். மத். 27-1; லூக். 22-66; அரு. 18-28.

2. அப்பொழுது பிலாத்து அவரை நோக்கி: நீ யூதருடைய இராஜாவோ என்று வினவினான். அதற்கு அவர் மறுமொழியாக: நீர் (உள்ளபடியே) சொல்லுகிறீர் என்றார். மத். 27-2.

3. பிரதான ஆசாரியர்கள் அவர்மேல் அநேக விஷயங்களில் குற்றஞ்சாட்டிக்கொண்டிருந்தார்கள்.

4. அப்பொழுது பிலாத்து மறுபடியும் அவரை நோக்கி: பார், உன்மேல் எத்தனையோ விஷயங்களில் குற்றஞ்சாட்டுகிறார்கள்; நீ யாதொரு மறுமொழியும் சொல்லுகிறதில்லையா என்று கேட்டான்.

5. யேசுநாதர் அதற்கும் யாதொரு மறுமொழியும் சொல்லாதிருந்தார். அதினால் பிலாத்து ஆச்சரியப்பட்டான்.

6. அப்படியிருக்க, பண்டிகைதோறும் விலங்கில்கிடக்கிறவர்களில் எவனை ஜனங்கள் கேட்பார்களோ, அவனை அவர்களுக்காக விடுதலை செய்வது அவனுக்கு வழக்கமாயிருந்தது.

7. அப்பொழுது ஓர் கலாபத்தில் கொலைசெய்தவனும், கலாபக்காரரோடு விலங்கிடப்பட்டிருந்தவனுமாகிய பரபாஸென்னப்பட்ட ஒருவனிருந்தான்.

8. ஜனங்கள் (பிலாத்துவினிடத்தில்) வந்து, அவன் தங்களுக்கு எப்போதும் செய்து வந்ததுபோல் செய்யவேண்டுமென்று மன்றாடத் தொடங்கினார்கள்.

9. பிலாத்து அவர்களுக்கு மறுமொழியாக: நான் யூதர்களுடைய இராஜாவை உங்களுக்கு விடுதலை செய்ய விரும்புகிறீர்களோ என்று கேட்டான்.

10. ஏனெனில் பொறாமையினாலே பிரதான ஆசாரியர்கள் அவரைக் கையளித்தார்களென்று அறிந்திருந்தான்.

11. ஆனால் அவன் பரபாஸையே தங்களுக்கு முக்கியமாய் விடுதலையாக்கவேண்டுமென்று ஜனங்கள் கேட்டுக்கொள்ளும்படி பிரதான ஆசாரியர்கள் அவர்களை ஏவிவிட்டார்கள்.

12. ஆகையால் பிலாத்து மறுபடியும் அவர்களை நோக்கி: அப்படியானால், யூதர்களுடைய இராஜாவுக்கு நான் என்ன செய்ய விரும்புகிறீர்கள் என்று கேட்டான். மத். 27-22; லூக். 23-17.

13. அதற்கு அவர்கள்: அவனைச் சிலுவையிலே அறையுமென்று மறுபடியும் சத்தமிட்டுச் சொன்னார்கள். அரு. 18-40.

14. ஆனால் அவன் என்ன தின்மை செய்தானென்று பிலாத்து அவர்களிடத்தில்கேட்க, அவர்களோ: அவனைச் சிலுவையிலே அறையுமென்று அதிகமாய்க் கூக்குரலிட்டார்கள்.

15. ஆகையால் பிலாத்து ஜனங்களைப் பிரியப்படுத்த விரும்பி, பரபாஸை அவர்களுக்கு விடுதலை செய்து, யேசுநாதனைச் சாட்டைகளால் அடிப்பித்துச் சிலுவையில் அறையும்படிக்கு அவர்களுக்குக் கையளித்தான்.

16. அப்பொழுது போர்ச் சேவகர் அவனை பிரேத்தோர் அதிகாரியின் நியாயசாலையின் முற்றத்துக்குக் கூட்டிக்கொண்டு போய், சேவகர் கூட்ட முழுமையும் அங்கே கூடிவரும்படிச் செய்து, மத். 27-27; அரு. 19-2.

17. ஓர் சிவப்பான போர்வையையும் அவருக்கு உடுத்தி, ஓர் முண்முடியையும் பின்னி, அவருக்குச் சூட்டி:

18. யூதருடைய இராஜாவே வாழ்கவென்று அவருக்கு ஆசாரம்பண்ணத் துவக்கினார்கள்.

19. பின்னும் மூங்கில் தடியால் அவனைச் சிரசிலடித்தார்கள்: அவர்மேல் துப்பினார்கள், முழந்தாட்படியிட்டும் அவனை நமஸ்கரித்தார்கள்.

20. அப்படி அவனை ஆகடியஞ்செய்த பின்பு, சிவப்புப் போர்வையைக் கழற்றி, அவருடைய வஸ்திரங்களை அவருக்கு உடுத்தி, சிலுவையில் அறையும்படிக்கு வெளியே கூட்டிக்கொண்டு போனார்கள்.

21. அப்பொழுது அலேக்சாந்தர், ரூப்புஸ் என்பவர்களுக்குத் தகப்பனும், சிரேனே ஊரானுமாகிய சீமோனென்னப்பட்ட ஒருவன் கிராமத்திலிருந்து வந்து, அவ்வழியாய்ப் போகையில், அவருடைய சிலுவையைச்சுமக்கும்படி அவனைக் கட்டாயம் பண்ணினார்கள். மத். 27-32; லூக். 23-36.

22. மேலும் கபால ஸ்தலமென்று அர்த்தங்கொள்ளும் கொல்கொத்தா என்னப்படுகிற இடத்திற்கு அவனைக் கூட்டிக்கொண்டுபோய்,

23. வெள்ளைப்போளம் கலந்த திராட்சரசத்தை அவருக்குக் குடிக்கக்கொடுத்தார்கள். அதை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை.

24. பின்னும் அவர்கள் அவனைச் சிலுவையில் அறைந்து, அவருடைய வஸ்திரங்களைப் பங்கிட்டு, அவனவன் எதெதை எடுத்துக் கொள்வதென்று அவைகளின்மேல் சீட்டுப் போட்டார்கள். மத் 27-35; லூக். 23-34; அரு. 19-23.

25. அவனைச்சிலுவையில் அறைந்தபோது மூன்றும் மணி நேரமாய் இருந்தது.

25. யூதர் தங்கள் காலக் கணிதத்தை, இத்தேசக் கணிதத்துக்கு ஒப்பாக, ஒரு பகல் 30 நாழிகையை, மூன்று மணிநேரம் அதாவது, ஏழரை நாழிகையடங்கிய நான்கு சாமங்களாக வகுத்து, முதலாம், மூன்றும், ஆறும், ஒன்பதாம் மணி யென்று குறிப்பிடுவார்கள். சூரியன் உதயமாகிற ஆறுமணி முதல் ஒன்பதுமணிவரையில் செல்லும் 7½ நாழிகையாகிய முதல் சாமத்தை முதல் மணியென்றும், 9 மணி முதல் 12 மணி வரையில் செல்லும் இரண்டாஞ் சாமத்தை மூன்றும் மணியென்றும், 12 மணி முதல் பின்னேரம் 3 மணி மட்டுமுள்ள மூன்றுஞ் சாமத்தை ஆறும் மணியென்றும், 3 மணி முதல் பொழுது அஸ்தமாகும் நேரம் வரையில் செல்லும் நாலாஞ் சாமத்தை ஒன்பதாம் மணியென்றுங் கணக்கிட்டு வரு

26. அவருடைய தீர்ப்பின் அறிக்கைப்பத்திரமாக: **யூதருடைய இராஜா** என்று தலைப்பில் எழுதி வைக்கப்பட்டிருந்தது.

27. அன்றியும் அவருடைய வலது பக்கத்தில் ஒருவனும், இடதுபக்கத்தில் ஒருவனுமாக இரண்டு கள்ளரை அவரோடுகூடச் சிலுவைகளில் அறைந்தார்கள்.

28. அக்கிரமிகளோடு எண்ணப்பட்டாரென்கிற வேதவாக்கியம் இவ்விதமாய் நிறைவேறிற்று. இசை. 53-12.

29. அவ்வழியாய்ப்போனவர்களும் அவரைத் தூஷணித்து, தங்கள் தலைகளை அசைத்து: ஆ! ஆ! சர்வேசுரனுடைய ஆலயத்தை இடித்து மூன்று நாளைக்குள்ளே திரும்பக் கட்டுகிறவனே, அரு. 2-19.

30. சிலுவையினின்று இறங்கி, உன்னையே இரட்சித்துக்கொள் என்பார்கள்.

31. அத்தன்மையே பிரதான ஆசாரியர்களும் வேதபாரகரோடு அவரைப் பரியாசம்பண்ணி, ஒருவன் ஒருவனைப் பார்த்து: இவன் மற்றவர்களை இரட்சித்தான்; தன்னைத்தான் இரட்சித்துக்கொள்ள இவனால் கூடவில்லை.

32. நாம் கண்டு விசுவசிக்கும் பொருட்டு, இஸ்ராயேலுக்கு இராஜாவாகிய கிறீஸ்து இப்போது சிலுவையினின்று இறங்கட்டும் என்பார்கள். அவரோடு கூடச் சிலுவைகளில் அறைபட்டவர்களும் அவரை நிந்தித்துக்கொண்டிருந்தார்கள்.

33. ஆறாம் மணி நேரமுதல் ஒன்பதாம் மணிநேரம்வரைக்கும் பூமண்டலமெங்கும் அந்தகாரம் உண்டாயிற்று.

34. மேலும் ஒன்பதாம் மணிநேரத்தில் யேசுநாதர் மிகுந்த சத்தமாய்: எலோயி, எலோயி, லம்மா சபக்தானி என்று கூப்பிட்டார். அதற்கு என் சர்வேசுரா, என் சர்வேசுரா, ஏன் என்னைக் கை நெகிழ்ந்தீர் என்றர்த்தமாம். சங். 21-2; மத். 27-46.

35. அப்பொழுது சூழ நின்றவர்களில் சிலர் இதைக்கேட்டு: இதோ, எலியாசைக் கூப்பிடுகிறான் என்றார்கள்.

36. ஒருவன் ஓடிப்போய், கடற்காளானைக் காடியில் நிறையத் தோய்த்து, அதை ஒரு கோலில் மாட்டி அவருக்குக் குடிக்கக் கொடுத்து: பொறுங்கள் இவனை இறக்கிவிட எலியாஸ் வருவாரோ, பார்ப்போம் என்றான்.

37. யேசுநாதர் பேரொலியாய்க் கூப்பிட்டு உயிர்விட்டார்.

38. அப்பொழுது தேவாலயத்தின் திரைச்சீலை மேல்துவக்கிக் கீழ்வரைக்கும் இரண்டாய்க் கிழிந்தது.

39. அன்றியும் அவருக்கு எதிரே நின்ற செந்தூரியன் அவர் இப்படிக் கூப்பிட்டு உயிர்விட்டதைக் கண்டு: இந்த மனிதன் மெய்யாகவே சர்வேசுரனுடைய குமாரன்தான் என்றான்.

வார்கள். அர்ச். மாற்கு அந்த ஒழுங்குக்கு இசைவாக எழுதுகிறபடியால், மூன்றும் மணி நேரத்தில் யேசுநாதரைச் சிலுவையில் அறைந்தார்களென்கும்போது, காலை 9 மணி முதல் 12 மணிமட்டுமுள்ள இரண்டாஞ் சாமத்தைக் குறிக்கிறார். ஆகையால் தால்லியோலி என்ற சாஸ்திரி குறிப்பிட்டிருக்கிறதுபோல 3-ம் மணி முடிந்து, 6-ம் மணி துவக்கப்போகையில் கர்த்தரைச் சிலுவையில் அறைந்தார்களென்றெண்ணத்தகும். கர்த்தர் மூன்று மணிநேரம் சிலுவையில் தொங்கி ஒன்பதாம் மணி வேளையில், அதாவது, பின்னேரம் மூன்று மணிக்கு உயிர்விட்டாரென்றறியவும்.

40. அப்பொழுது அநேக ஸ்திரீகள் தூரத்தினின்று பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்குள் மரியமதலேனம்மாளும், சின்ன யாகப்பருக்கும், யோசேப்புக்கும் தாயான மரியம்மாளும், சலோமையம்மாளும் இருந்தார்கள். மத். 27-55.

41. இவர்கள் அவர் கலிலேயா நாட்டிலிருக்கும்போது, அவரைப் பின்சென்று, அவருக்கு ஊழியஞ் செய்துவந்தவர்கள். இன்னும் அவருடன் ஒரு சலேமுக்கு ஏறிவந்த வேறே அநேக ஸ்திரீகளும் அவர்களோடு இருந்தார்கள். லூக். 23-43.

42. ஓய்வுநாளுக்கு முந்தின நாள் ஆயத்தநாளாயிருந்தபடியினாலே, சாயங்காலமானபோது,

43. மேன்மையுள்ள ஆலோசனைக்காரரும், சர்வேசுரனுடைய இராச்சியத்துக்கு எதிர்பார்த்திருந்தவருமாகிய அரிமத்தியாவூர் யோசேப்பென்பவர் வந்து, பிலாத்துவினிடத்தில் துணிந்து போய், யேசுநாதருடைய சரீரத்தைக் கேட்டார்.

44. அவர் இத்தனை சீக்கிரத்தில் மரித்திருப்பாரோவென்று பிலாத்து ஆச்சரியப்பட்டு, செந்தூரியனை வரவழைத்து, அவர் இத்தனை சீக்கிரத்தில் மரித்தாரோவென்று அவனைக் கேட்டான்.

45. செந்தூரியன் வழியாக அதை அறிந்துகொண்டபின், சரீரத்தைச் யோசேப்பென்பவருக்குகொடுத்தான்.

46. யோசேப்பென்பவர் ஓர் பரிவட்டச் சீலையை விலைக்குவாங்கி, அவரைச் (சிலுவையிலிருந்து) இறக்கி, பரிவட்டச் சீலையால் சுற்றிக் கற்பாறையில் வெட்டப்பட்டிருந்த கல்லறையில் அவரை வைத்து, கல்லறை வாசலில் ஓர் படலைக் கல்லைப் புரட்டிவைத்தார்.

47. மரியமதலேனம்மாளும், யோசேப்பின் தாயாகிய மரியம்மாளும் அவர் வைக்கப்பட்ட இடத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

## 16-ம். அதிகாரம்.

*யேசுநாதர் உயிர்த்துத் தம்முடைய சீஷர்களுக்குத் தரிசனையானதும், சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படி அவர்களுக்கு அதிகாரங் கொடுத்ததும், மோட்சத்துக்கு ஆரோகணமானதுமாகிய வர்த்தமானங்கள்.*

1. ஓய்வுநாள் கடந்தபின், மரியமதலேனம்மாளும், யாகப்பருடைய தாயாகிய மரியம்மாளும், சலோமையம்மாளும் வந்து, யேசுநாதருக்குப் பூசும்படியாகப் பரிமளவர்க்கங்களை விலைக்கு வாங்கிக்கொண்டு, மத். 28-1; லூக். 24-1; அரு. 20-1.

2. வாரத்தின் முதலாம் நாள் அதிகாலமே சூரியன் உதயமானபோது கல்லறைக்கு வந்தார்கள்.

3. (வருகிறபோது) கல்லறை வாசலினின்று யார் நமக்குக் கல்லைப் புரட்டித் தள்ளுவானென்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

4. ஏனெனில் அந்தக் கல் மிகவும் பெரிதாயிருந்தது: ஆனால் அவர்கள் ஏறெடுத்துப் பார்க்கையில், கல் புரட்டப்பட்டிருக்கிறதைக் கண்டார்கள்.

5. பின்னும் அவர்கள் கல்லறைக்குள் பிரவேசித்தபோது, வெள்ளை அங்கியைத் தரித்து, வலது பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு வாலனைக் கண்டு, திடுக்கிட்டார்கள். மத். 28-5; லூக். 24-4; அரு. 20-12.

6. அவர் அவர்களை நோக்கி: நீங்கள் அஞ்சவேண்டாம்; சிலுவையில் அறையுண்ட நசரேனுவாகிய யேசுவைத் தேடுகிறீர்கள்; அவர் உயிர்த்தெழுந்தார். இங்கேயில்லை; அவரை வைத்த இடம் இதுவே.

7. நீங்கள் அவருடைய சீஷர்களிடத்திலும், இராயப்பரிடத்திலும் போய் உங்களுக்குமுன் அவர் கலிலேயாவுக்குப்போகிறாரென்றும், அவர் உங்களுக்குச் சொல்லியிருந்ததுபோல அவரை

அங்கே காண்பீர்களென்றும் அவர்களுக்குச் சொல்லுங்கள் என்றார். மாற் 14-28.

8. நடுக்கமுந் திகிலும் அவர்களைப் பிடித்திருந்ததினாலே, அவர்கள் வெளியே புறப்பட்டுக் கல்லறையைவிட்டு ஓடிப்போனார்கள். அல்லாமலும் அவர்கள் பயந்திருந்தபடியினாலே எவனுக்கும் ஒன்றும் சொன்னவர்களல்ல.

9. யேசுநாதர் வாரத்தின் முதல்நாட் காலையில் உயிர்த்தெழுந்தருளினபின்பு முந்தமுந்த மரியமதலேனம்மாளுக்குத் தரிசனையானார். இவளிடமிருந்தே அவர் ஏழுபேய்களைத் துரத்தியிருந்தார். அரு. 20-16.

10. அவள் போய் அவரோடுகூட இருந்தவர்கள் துக்கித்து, அழுதுகொண்டிருக்கையில், அவர்களுக்கு இந்தச் செய்தியை அறிவித்தாள்.

11. அவர் உயிரோடிருக்கிறாரென்றும், அவளுக்குத் தரிசனையானாரென்றும் அவர்கள் கேட்டும், நம்பவில்லை

12. இவைகளுக்குப்பின், அவர்களில் இரண்டுபேர் ஒருகிராமத்திற்கு நடந்து போகையில், அவர்களுக்கு அவர் வேறு ரூபமாய்த் தரிசனையானார். லூக். 24-13.

13. இவர்களும் போய், மற்றவர்களுக்கு அறிவித்தார்கள். இவர்களையும் அவர்கள் நம்பவில்லை.

14. கடைசியாய்ப் பதினொருவரும் பந்தியிலிருக்கையில், அவர்களுக்கு அவர் தரிசனையாகி, தாம் உயிர்த்திருக்கிறதைக் கண்டவர்களை அவர்கள் விசுவசியாமற்போனதைப்பற்றி அவர்களுடைய அவிசுவாசத்தையும் இருதயக் கடினத்தையுங் கண்டித்தார்.

15. பின்னும் அவர் அவர்களுக்குத் திருவுளம் பற்றினதாவது: நீங்கள் உலகமெங்கும்போய், எல்லாச்சிருஷ்டிகளுக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள்.

16. விசுவசித்து, ஞானஸ்நானம் பெறுபவன் இரட்சண்ணியமடைவான் விசுவசியாதவனோ ஆக்கினைத் தீர்வையிடப்படுவான்.

17. மேலும் விசுவசிக்கிறவர்களைத் தொடர்ந்துவரும் அற்புதங்களாவன: என் நாமத்தினால் பேய்களைத் துரத்துவார்கள், நூதனமான பாஷைகளைப் பேசுவார்கள். அப். 2-4; 10-46; 16-8; 28-5.

18. பாம்புகளைப் பிடித்துத் தூக்குவார்கள். சாவுக்கேதுவான யாதொன்றைப் பானஞ்செய்தாலும், அது அவர்களுக்குப் பொல்லாப்புச் செய்யாது. நோயாளிகளின்மேல் கைகளை நீட்ட, அவர்கள் சௌக்கியமடைவார்கள் என்றார்.

19. கர்த்தராகிய யேசுநாதர் இவ்விதமாய் அவர்களுடன் பேசினபின்பு, பரலோகத்திற்கு எழுந்தருளி சர்வேசுரனுடைய வலது பாரிசத்தில் உட்கார்ந்திருக்கிறார்.

20. அவர்கள் புறப்பட்டுப்போய் எங்கும் பிரசங்கித்தார்கள். கர்த்தர் அவர்களுக்கு உடனுதவி செய்து, தொடர்ந்து நடந்த அற்புதங்களால் அவர்களுடைய வாக்கியத்தை உறுதிப்படுத்தினார்



# பாயிரம்.

அர்ச். லூக்கா சீரியா நாட்டின் ராஜதானிப் பட்டணமாகிய அந்தியோக்கியா நகரில் பிறந்து வளர்ந்து, சாஸ்திரத்திலும் சித்திரவேலையிலும் வைத்தியத் தொழிலிலும் பேர்போனவராயிருந்தார். அர்ச். சின்னப்பர் அந்நகருக்கு வந்து, சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்போது, இவர் மனந்திரும்பினதுமன்றி, அவருக்குப் பிரியமுள்ள சீஷனும், பிரியாத் துணைவருமானார். அர்ச். சின்னப்பரால் ஏற்படுத்தப்பட்ட சபைகளுக்காக இவர் இந்தச் சுவிசேஷ சுருக்கத்தைக் கிரேக்கப் பாஷையில் 55-ம். வருஷத்தில் எழுதினார். அன்றியும், 63-ம். வருஷத்தில் உரோமாபுரியிலிருந்து அப்போஸ்தலர் நடபடி என்னும் உத்தமமான வேறொரு சிறு பிரபந்தத்தையும் எழுதினார். இவர் அர்ச். தேவமாதாவின்பேரில் மிகுந்த பத்தியுள்ளவராயிருந்ததினாலே, அந்த ஆண்டவளைக் குறித்துத் தமது சுவிசேஷத்தில் வெகு தோத்திரங்களை எழுதினதுமல்லாமல் தேவமாதாவின் சாயலையும் ஒரு படத்தில் எழுதிவைத்தார். அந்தப் படம் இப்போது உரோமாபுரியிலுள்ள தேவமாதாவின் பெரிய கோவிலிலே மகா பூச்சியத்தோடே வைக்கப்பட்டிருக்கிறது. இவர் எப்போதும் விரத்தராயிருந்து, தாம் உயிரோடிருந்த எண்பத்தினாலு வருஷத்துக்குள்ளாகத் தமது வாக்கினாலும், இஸ்பிரீத்துசாந்துவின் ஏவலால் தாம் எழுதின இரண்டு வேதாகமங்களினாலும் அநேக இராச்சியத்தாருக்கு வேதத்தைப் போதித்து, வெகு புண்ணியங்களையும் செய்து காலம்பண்ணினார்.



# அர்ச். லூக்காஸ் எழுதிய

# யேசுக்கிறீஸ்து நாதருடைய

# பரிசுத்த சுவிசேஷம்.

## முதல் அதிகாரம்.

அருளப்பருடைய பிறப்பும், திவ்விய வார்த்தையின் மனுஷாவதாரமும் முன்னறிவிக்கப்பட்டதும், அர்ச். கன்னிமரியம்மாள் எலிசபெத்தம்மாளைச் சந்தித்ததும், அருளப்பர் பிறந்ததும், சக்கரியாசுடைய சங்கீதமும்.

1. நமது மத்தியில் நடந்தேறிய விஷயங்களின் வரலாற்றை ஒழுங்குடன் எழுத அநேகர் முயன்றபடியால்,

2. துவக்கமுதல் கண்ணால் கண்டவர்களும், வாக்கியத்தைப் பிரசங்கிக்கிற உத்தியோகமுள்ளவர்களுமாய் இருந்தவர்கள் நமக்குக் கையளித்தபடியே,

3. ஆதிமுதல் யாவற்றையுங் கவனமாய்க் கற்றுக்கொண்ட நானும், உத்தம தெயோபிலே, உனக்கு ஒழுங்குடன் எழுதுவது நலமென்று எனக்குத் தோன்றிற்று.

4. ஏனெனில், உனக்குப் போதிக்கப்பட்டவைகளின் உண்மையை நீ அறிந்துகொள்ளவேண்டுமென்பதைப் பற்றித்தான்.

5. யூதேயாதேசத்து அரசனாகிய எரோதின் நாட்களிலே, அபியாவின் கோத்திரத்தார் முறையைச் சேர்ந்தவராகிய சக்கரியாஸ் என்னும் பேருள்ள ஓர் குருப்பிரசாதியிருந்தார். அவருடைய மனைவி ஆரோன் குமாரத்திகளிலொருத்தி; அவளுக்குப் பேர் எலிசபெத். (முதல். நாளா. 24-10.)

6. அவர்கள் இருவரும் ஆண்டவருடைய சகல கற்பனைகளிலும் நீதி முறைமைகளிலும் குற்றமின்றி நடந்து, தேவ சமுகத்தில் நீதிமான்களாயிருந்தார்கள்.

---

3. தேயோபிலே:—என்பது, தேவ பக்தனென்றர்த்தமாம். இதினால் சகலகிறீஸ்துவர்களும், குறிக்கப்படுகிறார்களென்றறிக. (அப். 1-1.)

5-ம் வசனத்தில் சொல்லப்படுகிற எரோதன் யாரென்றறியும்படி, மத். 2-ம் அதி. முதல் வசனத்தின் வியாக்கியானம் காண்க.

5. குரு கோத்திரமாகிய ஆரோன் வமிசம் பலுகிப் பெருகினதினால், தாவீது இராஜா அக்கோத்திரத்தாரை 24 குடும்பங்களாகப் பிரித்து, ஒவ்வொரு குடும்பத்தாரும் ஒவ்வொரு வாரம் திருப்பணி செய்யும்படி, ஏற்பாடு செய்து அவர்களுக்குள் முறை குறிக்கும்படி சீட்டுப் போட்டதில், 8-வது சீட்டு அபியாஸ் என்பவர் குடும்பத்துக்கு விழுந்தது.

7. எலிசபெத் மலடியுமாய், இருவ ரும் வயது சென்றவர்களுமாயிருந்த மையால், அவர்களுக்குப் பிள்ளையில் லாதிருந்தது.

8. அப்படியிருக்கையில் சம்பவித்த தேதெனில், அவர் தேவசந்நிதானத் தில் தமது வரிசை முறையில் குருத்து வத்தொழில் நடத்திவருங்காலத்தில்,

9. குருத்துவத் தொழிலுக்கடுத்த வழக்கப்படி, கர்த்தருடைய ஆலயத்து க்குள் பிரவேசித்துத் தூபங்கொடுக் கும்படி, அவருக்குச் சீட்டு விழுந்தது.

10. தூபங்கொடுக்கும் வேளையில், ஜன ங்களெல்லாரும் கூட்டமாய் வெளியே ஜெபஞ்செய்துகொண்டிருந்தார்கள்.

11. அப்போது ஆண்டவருடைய தூதன் தூபப்பீடத்தின் வலது புறத் தில் நிற்கிறவராய் அவருக்குத் தரிசனை யானார்.

12. சக்கரியாஸ் அவரைக் கண்டு கலங்க, பயமும் அவரைப் பிடித்தது.

13. தேவதூதனே அவரை நோக்கி: சக்கரியாஸே, நீ பயப்படாதே; ஏனெ னில் உன்னுடைய மன்றாட்டு கேட் டருளப்பட்டது. உன் மனைவியாகிய எலிசபெத் உனக்கு ஓர் குமாரனைப் பெறுவாள். அவனுக்கு அருளப்ப னென்று பேரிடுவாய்;

14. உனக்குச் சந்தோஷமும் அக்க ளிப்பும் உண்டாகும்; அநேகரும் அவ னுடைய பிறப்பினால் மகிழ்வார்கள்.

15. ஏனென்றால், அவன் ஆண்டவ ருடைய சமுகத்தில் பெரியவனாயிருப் பான்; திராட்ச இரசத்தையும் மது வையும் பானஞ்செய்யான். அவன் இன்னும் தாயின் உதரத்திலிருக்கும் போதே இஸ்பிரீத்துசாந்துவினால் நிர ப்பப்படுவான்;

16. இஸ்ராயேல் புத்திரரில் அநேக ரைத் தங்கள் தேவனாகிய கர்த்தரிடத் திற்குத் திருப்புவான்;

17. பிதாக்களின் இருதயங்களைப் பிள்ளைகளிடத்திற்கும், அவிசுவாசிக ளை நீதிமான்களின் விவேகத்திற்குந் திருப்பி, கர்த்தருக்கு உத்தம ஜனத்தை ஆயத்தப்படுத்தும்படி அவன் எலியா சுடைய ஞானத்தையும் வல்லமையை யும் உடையவனாய் அவருக்கு முன்னாக நடப்பான் என்றார். (மல். 4-6; மத். 11-14)

18. அதற்குச் சக்கரியாஸ் தேவதூத ரை நோக்கி: இதை நான் அறிவதெப் படி? நானோ விருத்தாப்பியனாயிருக் கிறேன்; என் மனைவிக்கும் நாள் கடந் துபோயிற்றே என்றார்.

19. தேவதூதன் அவருக்கு மாறுத் தாரமாக: நான் ஆண்டவருடைய சந்நி தானத்திலே நிற்கிற கபிரியேல்; உன் னுடன் பேசி இந்தச் சுப செய்திகளை உனக்கு அறிவிக்கும்படியாய் அனுப் பப்பட்டேன்.

20. தக்க காலத்திலே நிறைவேறப் போகிற என் வாக்கியங்களை நீ விசுவ சியாததினிமித்தம், இவைகள் சம்பவி க்கும் நாளளவும் இதோ, நீ பேசக் கூடாத ஊமையாயிருப்பாய் என்றார்.

21. ஜனங்களோ சக்கரியாசுக்காகக் காத்திருந்து, அவர் தேவாலயத்தில் தாமதிக்கிறதைப்பற்றி, ஆச்சரியப்பட் டுக்கொண்டிருந்தார்கள்.

9. சீட்டினால் குறிக்கப்பட்டாரென்கும்போது, இந்தச் சீட்டு முன் தாவீதன் போட்ட, சீட்டைக் குறிப்பதல்ல. கோவில் திருப்பணியில் பலவகைச் சடங்குகளிருந்ததினால் இவருடைய கோத்திரத்தாரோ, தங்களுக்குள் சீட்டுப்போட, தூபங்கொடுக்கும்படி இவருக் குச் சீட்டு விழுந்ததென்றறிக.



*தேவதூதன் அவள் இருந்த இடத்தில் பிரவேசித்து: "பிரியதத்தத்தினாலே பூரணமானவளே வாழ்க! கர்த்தர் உம்முடனே, ஸ்திரீகளுக்குள்ளே ஆசிர்வதிக்கப்பட்டவள் நீரோ என்றார்."*

(லூக். 1-28.)

22. அவர் வெளியே வந்தபோது அவர்களிடத்தில் பேசக் கூடாதிருந்தார். அதினாலே அவர் தேவாலயத்தில் ஒரு தரிசனத்தைக் கண்டாரென்று அவர்கள் அறிந்துகொண்டார்கள். அவரோ அவர்களுக்குச் சயிக்கினைசெய்து ஊமையாகவே இருந்தார்.

23. பின்னும் சம்பவித்ததேதெனில், அவருடைய திருப்பணிநாட்கள் நிறைவேறினபின், அவர் தம்முடைய வீட்டுக்குத் திரும்பினார்.

24. அந்நாட்களுக்குப்பின் அவருடைய மனைவியாகிய எலிசபெத் கர்ப்பந்தரித்து, ஐந்து மாதமாக வெளிப்படாதிருந்து:

25. மனிதருக்குள்ளே எனக்கிருந்த இகழ்ச்சியை நீக்க, ஆண்டவர் என்னைக் கிருபாகடாட்சத்தோடு நோக்கின இந்த நாட்களிலே, எனக்கு இப்படிச் செய்தருளினார் என்று சொல்லிவந்தாள்.

26. ஆறாம் மாதத்திலே, காபிரியேல் என்னும் தேவதூதன் கலிலேயா நாட்டிலுள்ள நசரேத்தூருக்குச் சர்வேசுரனால் அனுப்பப்பட்டு,

27. தாவீதின் கோத்திரத்தாராகிய சூசையப்பர் என்னப்பட்ட ஓர் மனிதனுக்கு விவாக பந்தனமான ஓர் கன்னிகையிடத்தில் வந்தார். அந்தக் கன்னிகையின் பேர் மரியம்மாள். (மத். 1-18.)

28. தேவதூதன் அவளிருந்த இடத்தில் பிரவேசித்து: பிரியதத்தத்தினாலே பூரணமானவளே வாழ்க! கர்த்தர் உம்முடனே; ஸ்திரிகளுக்குள்ளே ஆசீர்வதிக்கப்பட்டவள் நீரே என்றார்.

29. இதை அவள் கேட்டமாத்திரத்தில், அவருடைய வார்த்தையினால் கலங்கி, இந்த மங்களம் எத்தன்மையானதோ என்று யோசனையாயிருக்கையில்,

30. தேவதூதன் அவளை நோக்கி: மரியே! நீர் அஞ்சவேண்டாம், ஏனெனில் சர்வேசுரனிடத்தில் கிருபைபெற்றிருக்கிறீர்.

31. இதோ, உமது உதரத்தில் கர்ப்பந்தரித்து, ஓர் குமாரனைப் பெறுவீர்; அவருக்கு யேசு என்னும் நாமஞ்சூட்டுவீர். (இசை. 7-14; லூக். 2-21; தனி. 7-14.)

32. அவர் பெரியவராயிருப்பார், உன்னதமானவருடைய சுதன் என்னப்படுவார்; ஆண்டவரான சர்வேசுரன் அவர் தந்தையாகிய தாவீதின் சிங்காசனத்தை அவருக்குத் தந்தருளுவார்; ஆதலால் அவர் யாக்கோபின் கோத்திரத்தில் என்றென்றைக்கும் அரசாளுவார். (மாற். 5-7; மிக். 4-.7)

33. அவருடைய அரசாட்சிக்கு முடிவு இராது என்றார்.

27. இந்த வசனத்திற்கு மத். 1-18-ம் வசன வியாக்கியானங் காண்க.

28. இந்த வாக்கியத்தினாலே தேவதூதன், அர்ச். கன்னிமரியாயை மூன்று வகையாய் விசேஷித்துப் புகழுகிறார். 1-வது பிரியதத்தத்தினால், அதாவது: இஷ்டப்பிரசாதத்தினால் பூரணமானவளே அல்லது நிறைந்தவளேயென்றும்; 2-வது கர்த்தர் உம்முடனிருக்கிறார், அதாவது: உம்முடைய ஆத்துமம் சர்வேசுரனுடைய சிம்மாசனம், அல்லது தேவாலயமாய் இருக்கிறதென்றும்; 3-வது ஸ்திரீகளுக்குள் ஆசீர்வதிக்கப்பட்டவள் நீரே, அதாவது: உலகமுண்டானதுமுதல் உலகமுடியுமட்டும் உண்டான ஸ்திரீகளுக்குள்ளே அநேகர் ஆசீர்வதிக்கப்பட்டவர்களாயிருந்தாலும், எல்லாருக்கும் மேலாக நீர்மாத்திரம் விசேஷமாய் ஆசீர்வதிக்கப்பட்டவளென்றும் வசனிக்கிறார். ஓர் தேவதூதனால் இப்படிப்பட்ட புகழ்ச்சி சொல்லப்படுவதைப் பார்க்க, மேலான மகிமை வேறேது?

32, 33. **தாவீதன் சிம்மாசனம்:**—என்பது திருச்சபையின் அரசாட்சியாம். யாக்கோபு கோத்திரத்தில் என்றென்றைக்கும் அரசாளுவாரென்றதினால், அப்போஸ்தலர்களும் மூந்தின விசுவாசிகளும் மாத்திரம் யாக்கோபின் வம்சத்தாரல்ல, ஞானஸ்நானம்பெற்ற அஞ்ஞானிகளெல்லாரும், விசுவாசத்தினால் அபிரகாம் யாக்கோபு என்பவர்களுடைய புத்திரராயிருக்கிறார்கள்.

34. அப்போது மரியம்மாள் தேவ தூதனைப் பார்த்து: இது எப்படியாகும்? நான் புருஷனை அறியேனே என்று சொல்ல,

35. தேவதூதன் அவளுக்கு மாறுத்தாரமாக: இஸ்பிரீத்துசாந்து உமது மேல் எழுந்தருளிவருவார்; உன்னதருடைய வல்லபமானது உமக்கு நிழலிடும்; ஆகையால் உம்மிடத்தில் பிறக்கும் பரிசுத்தர் தேவசுதன் என்னப்படுவார்.

36. இதோ, உமக்குப் பந்துவாகிய எலிசபெத்தும் தன் முதிர்வயதிலே ஓர் புத்திரனைக் கர்ப்பந்தரித்திருக்கிறாள். மலடி என்னப்பட்ட அவளுக்கு இது ஆறாம் மாதம்.

37. ஏனெனில் சர்வேசுரனால் கூடாத வாக்கு ஒன்றுமில்லை என்றார்.

38. அப்போது மரியம்மாள்: இதோ, நான் ஆண்டவருடைய அடிமை, உம்முடைய வார்த்தையின்படியே எனக்கு ஆகக்கடவது என்றாள். என்றவுடனே தேவதூதன் அவளைவிட்டு அகன்றுபோனார்.

39. அந்நாட்களிலே மரியம்மாள் எழுந்து, மலைநாட்டிலே யூதா தேசத்திலுள்ள ஓர் பட்டணத்துக்குத் தீவிரமாய்ப்போய்,

40. சக்கரியாசுடைய வீட்டில் பிரவேசித்து, எலிசபெத்தம்மாளை வாழ்த்தினாள்.

41. அப்போது சம்பவித்ததேதெனில், மரியம்மாள் சொன்ன வாழ்த்துதலை எலிசபெத்தம்மாள் கேட்டமாத்திரத்தில், அவளுடைய உதரத்திலிருந்த பிள்ளை துள்ளிற்று; எலிசபெத்தம்மாளும் இஸ்பிரீத்துசாந்துவினால் நிரப்பப்பட்டு,

42. உரத்த சத்தமாய்க் கூப்பிட்டுச் சொன்னதாவது: ஸ்திரீகளுக்குள்ளே ஆசீர்வதிக்கப்பட்டவள் நீரே! உம்முடையவயிற்றின் கனியும் ஆசீர்வதிக்கப்பட்டதாமே.

43. என் ஆண்டவருடைய தாயார் என்னிடத்தில் எழுந்தருளிவர எனக்குக் கிடைத்ததெப்படி?

44. இதோ, நீர் வாழ்த்தின சத்தம் என் காதில் விழுந்தவுடனே, என் வயிற்றிலுள்ள பிள்ளை அக்களிப்பால் துள்ளிற்று.

35. இதிலே தேவதூதன் அர்ச். கன்னிமரியாயிக்குச் சொன்ன மறுமொழிக்கு அர்த்தமாவது: நீர் புருஷனையறியாத கன்னியாயிருக்கிறீரென்று எனக்குத் தெரியும். ஆனால் ஒரு கன்னி ஒரு குழந்தையைப் பெறுவாளென்றும், அந்தக் குழந்தை எம்மனுவேல் அதாவது: நம்முடன் வாசம்பண்ணுகிற சர்வேசுரன் என்று பேரிடப்படுவாரென்றும் இசையாஸ் தீர்க்கதரிசியானவர் வசனித்திருக்கிறார். அந்தக் கன்னி நீர்தான். நீர் பெறப்போகிற திவ்விய பாலன் சர்வேசுரனுடைய குமாரன் என்னப்படுவாரென்றும், இஸ்பிரீத்து சாந்துவானவர் தம்முடைய தேவ வல்லமையைக்கொண்டு உம்முடைய பரிசுத்த உதரத்தில் உமது இரத்தத்தினால், அந்தத் திருக்குழந்தையின் சரீரத்தை உண்டாக்குவாரென்றும் அர்த்தமாம்.

38. ஆழ்ந்த தாழ்ச்சியும், மட்டற்ற கீழ்ப்படிதலுமுள்ள இந்த வார்த்தையினாலே சம்மனசு சொன்ன காரியத்திற்கு அர்ச். கன்னிமரியாயி சம்மதித்தவுடனே கர்த்தருடைய மாம்ச ஐக்கியத்தின் பரமரகசியம் நிறைவேறிற்று.

40. அர்ச். சூசையப்பர் திருக்கன்னிகையோடு எலிசபெத் வீட்டிற்கு வரவில்லை. வந்திருப்பாராகில், எலிசபெத்தம்மாள் தேவ தாயாராக அவளைப் புகழ்ந்து கொண்டாடினபோது, தேவமாதா கர்ப்பணியாயிருப்பதின் இரகசியத்தை அறிந்திருப்பார்.

44. ஸ்நாபக அருளப்பர் தாய்வயிற்றில் எந்தச் சமயத்தில் துள்ளினாரோ, அப்போதே அவருக்குச் ஜென்மதோஷம் நீங்கிப் போயிற்று. அதினிமித்தம் அவர் பிறந்த திருநாளும் திருச்சபையில் கொண்டாடப்படுகிறது. மேலும் இரட்சகர் செய்த இந்த முந்தின அற்புதத்தைத் தமது மாதாவின் வழியாகச் செய்ததினாலே, நாம் அவள் மட்டிலே எவ்வளவு உறுதியான நம்பிக்கை வைக்கத்தகுமென்று அறிந்துகொள்ளலாம்.

45. அன்றியும் விசுவசித்தவளாகிய நீயோ பாக்கியவதி; ஏனெனில் ஆண்டவரால் உமக்கு வசனிக்கப்பட்டவைகள் நிறைவேறும் என்றாள்.

46. அப்போது மரியம்மாள் வசனித்ததாவது: என் ஆத்துமமானது ஆண்டவரை மகிமைப்படுத்துகின்றது;

47. என் இரட்சணியமாகிய சர்வேசுரனிடத்தில் என் மனமும் ஆனந்தமாய் எழும்பி மகிழ்கின்றது;

48. ஏனெனில் தமது அடிமையானவளுடைய தாழ்மையைக் கிருபாகடாட்சத்தோடு பார்த்தருளினார். ஆகையால் இதோ, இக்காலமுதல் எல்லாத் தலைமுறைகளும் என்னைப் பாக்கியவதி என்பார்கள்.

49. ஏனெனில் வல்லபமிக்கவர் பெருமையுள்ளவைகளை என்னிடத்தில் செய்தருளினார்; அவருடைய நாமம் பரிசுத்தமுள்ளது.

50. அவருடைய கிருபையும் தலைமுறைதலைமுறையாக அவருக்குப் பயந்து நடக்கிறவர்கள்மேலிருக்கின்றது.

51. அவர் தம்முடைய கரத்தின் வல்லமையைக் காட்டியருளினார்; தங்கள் இருதயசிந்தனையில் கர்வமுள்ளவர்களைச் சிதறடித்தார். (இசை. 51-9; சங். 32-10.)

52. வல்லபமுடைத்தானவர்களை ஆசனத்திலேநின்று தள்ளி, தாழ்ந்தவர்களை உயர்த்தினார்.

53. பசித்திருக்கிறவர்களை நன்மைகளினால் நிரப்பித் தனவான்களை வெறுமையாய் அனுப்பிவிட்டார். (1. இரா. 2-5; சங். 33-11.)

54. தமது கிருபையை நினைவுகூர்ந்து, தம்முடைய தாசனாகிய இஸ்ராயேலைப் பரிக்கிரகம்பண்ணினார்.

55. அப்படியே நமது பிதாக்களாகிய அபிரகாமுக்கும், ஊழியுள்ளகாலம் அவர் சந்ததியாருக்கும் அவர் வாக்குத்தத்தம் பண்ணியிருந்தார் என்றாள். (ஆதி. 17-9; 22-16; சங். 131-11; இசை. 41-8.)

56. பின்னும் மரியம்மாள் அவளோடேறக்குறைய மூன்றுமாதம் இருந்து, தன் வீட்டுக்குத் திரும்பிப் போனாள்.

57. அப்படியிருக்க, எலிசபெத்தம்மாளுடைய பிரசவகாலம் நிறைவேறினபோது, அவள் ஓர் குமாரனைப் பெற்றாள்.

58. அப்போது ஆண்டவர் தமது கிருபையை அவளிடத்தில் விளங்கச்செய்தாரென்று அவளுடைய அயலகத்தாரும் சுற்றத்தாரும் கேள்விப்பட்டு, அவளுடன் மகிழ்ந்து அவளை வாழ்த்தினார்கள்.

59. எட்டாம் நாளில் சம்பவித்ததேதெனில்: பிள்ளைக்கு விருத்தசேதனஞ்செய்ய அவர்கள் கூடிவந்து, அதின் தகப்பனுடைய நாமத்தின்படியே சக்கரியாஸ் என்று அதற்குப் பேரிடப்போகையில்,

60. அதின் தாய் எதிர்மொழியாக: அப்படியல்ல, அதற்கு அருளப்பன் என்று பேரிடவேண்டும் என்றாள்.

61. அவர்களோ அவளைநோக்கி: உன் உறவின்முறையாரில் இந்தப் பெயர் கொண்டவன் ஒருவனுமில்லையே என்றுசொல்லி,

62. அதின் தகப்பனுக்குச் சயிக்கினைகாட்டி, அதற்கு என்ன பேரிடவேண்டுமென்று கேட்டார்கள்.

63. அவர் ஓர் எழுத்துப்பலகையைக் கேட்டுவாங்கி, அதின்பேர் அருளப்பனென்று எழுதினார். அதினால் எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள்.

64. அக்ஷணமே அவருடைய வாய் திறக்கப்பட்டு, நாவும் கட்டவிழ்க்கப் பட்டு, சர்வேசுரனைத் தோத்தரித்துப் பேசினார்.

65. ஆகையால் அவருடைய அயலகத்தாரெல்லாருக்கும் பயமுண்டானது மன்றி, யூதாவின் மலைநாடெங்கும் இந்தச் செய்திகளெல்லாம் பிரசித்தமுமாயிற்று.

66. (இவைகளை) கேள்விப்பட்ட யாவரும் தங்கள் இருதயங்களில் இவைகளை வைத்துக்கொண்டு, ஒருவனொருவனைப்பார்த்து: இந்தப்பிள்ளை எப்படிப்பட்டதாய் இருக்குமென்று நினைக்கிறாய் என்பார்கள். ஏனெனில் ஆண்டவருடைய கரம் அதனோடிருந்தது.

67. மீளவும் அதின் தந்தையாகிய சக்கரியாஸ் இஸ்பிரீத்துசாந்துவினால் நிரப்பப்பட்டுத் தீர்க்கதரிசனமாய் உரைத்ததாவது:

68. இஸ்ராயேலின் தேவனாகிய கர்த்தர் தோத்தரிக்கப்படுவாராக. ஏனெனில், அவர் தம்முடைய பிரஜைகளைச் சந்தித்து, அவர்களை மீட்டுக் கொண்டார். (சங். 73-12.)

69-70. பூர்வீக முதலிருந்த தம்முடைய பரிசுத்த தீர்க்கதரிசிகளின் வாயால் அவர் திருவுளம்பற்றினபடியே, தம்முடைய தாசனாகிய தாவீதின் வம்சத்தில் நமக்கு ஓர் இரட்சணியக் கொம்பை ஏற்படுத்தினார். (சங். 131-17; ஜெ. 23-6; 30-10.)

71. நம்முடைய சத்துருக்களிடத்தினின்றும், நம்மைப் பகைக்கிறவர்களுடைய கையினின்றும் நம்மை இரட்சிக்கவும்,

72. (இவ்விதமாய்) நம்முடைய பிதாக்களுக்கு இரக்கஞ் செய்யவும், தம்முடைய உடன்படிக்கையை நினைவு கூரவும் (அவ்வண்ணஞ் செய்தார்).

73. நம்முடைய பிதாவாகிய அபிரகாமுக்கு அவர் இட்ட ஆணையேதெனில்:

74. நம்முடைய சத்துருக்களின் கையினின்று நாம் விடுதலையாகி, அச்சமின்றி,

75. நம்முடைய வாழ்நாளெல்லாம் தமது சமுகத்தில் பரிசுத்தத்தோடும், நீதியோடும் நமக்கு ஊழியஞ்செய்யும்படி அனுக்கிரகம் செய்வோம் என்பதே. (22-16; ஜெரெமி. 31-33; எபி. 6-13.)

76. நீயோ பாலனே! உன்னதமான வருடைய தீர்க்கதரிசி என்னப்படுவாய்; ஏனெனில் ஆண்டவருடைய வழிகளை ஆயத்தஞ் செய்யும்படியாகவும்,

77. நமது கடவுளின் இரக்க உருக்கத்தால் அவருடைய ஜனத்தின் பாவ மன்னிப்புக்காக அவர்களுக்கு இரட்சணிய அறிவைக் கொடுக்கும்படியாகவும், அவருடைய சமுகத்துக்கு முன் நடந்துபோவாய். (மல். 4-5.)

78. அந்த இரக்க உருக்கத்தால் உன்னதத்தினின்று உதயமானவர் (சக். 3-8; 6-12; மல. 4-2.)

79. அந்தகாரத்திலும் மரண நிழலிலும் உட்கார்ந்திருக்கிறவர்களுக்கு ஒளிவீசவும், நமது பாதங்களைச் சமாதானத்தின்பாதையில் நடத்தவும் நம்மைச் சந்தித்திருக்கிறார் என்றார்.

80. பிள்ளையோ வளர்ந்து, ஞானத்தில் தேறி, தம்மை இஸ்ராயேல் ஜனத்துக்குக் காண்பிக்கும் நாள்வரைக்கும் வனாந்தரங்களிலே இருந்தார்.

66. **ஆண்டவருடைய கரம் அதனோடு இருந்தது,** என்பதற்கு சர்வேசுரனுடைய வல்லபமும், அவருடைய கிருபையுள்ள பராமரிப்பும் அவரோடு இருந்ததென்று பயனும்.

69. **கொம்பு:**—மூலபாஷையில் கொம்பு என்னும் பெயரால் வல்லமையைக் குறிக்கிறது வழக்கம். இவ்விடத்தில் இரட்சண்ணிய கொம்பு என்பது உலக இரட்சகனென்றறிக.

80. ஏரோதரசன் குழந்தைகளைக் கொல்லத்தேடின சமையத்தில், எலிசபெத்தம்மாள் தன் குமாரனை வனாந்தரத்துக்கு எடுத்துக்கொண்டுபோனாளென்று நினைக்க இடமுண்டு.

## 2-ம். அதிகாரம்.

கிறீஸ்துநாதர் பிறந்து, விருத்த சேதனம் செய்யப்பட்டதும், மரியம்மாளின் சுத்திகரச்சடங்கும், சிமையோனும் விதவை அன்னம்மாளும் சொன்ன தீர்க்கதரிசனங்களும், கிறீஸ்துநாதர் சாஸ்திரிகள் நடுவில் சம்பாஷித்ததும்.

1. அந்நாட்களிலே சம்பவித்ததேதெனில்: உலகமுழுமையும் குடிக்கணக்கு எழுதப்படும்படியாக செசார் அகுஸ்துஸ் இராயனிடத்திலிருந்து ஓர் கட்டளை பிறந்தது.

2. சீரியதேசத்து அதிபதியாகிய சீரினுஸ் என்பவனால் இந்த முதலாம் குடிக்கணக்குச் செய்யப்பட்டது.

3. ஆதலால் எல்லாரும் தங்கள் பேர் எழுதிக்கொடுக்கும்பொருட்டு, தங்கள் தங்கள் சொந்த ஊருக்குப் போவார்கள்.

4-5. அப்படியிருக்க, சூசையப்பர் தாவீதின் கோத்திரத்தையும்,குடும்பத்தையும் சேர்ந்தவராகையால், கர்ப்பவதியான தம்முடைய மனைவி மரியம்மாளோடு பேரெழுதிக் கொடுக்கும்படியாக, கலிலேயாவிலுள்ள நசரேத்தை விட்டு யூதேயாவிலுள்ள பெத்லேம் என்னும் தாவீது நகரத்துக்குப் போனார். (மிக். 5-2; 1. அரச. 20-6.)

6. அவர்கள் அங்கே இருக்கையில் சம்பவித்ததேதெனில், அவளுக்குப் பேறுகாலம் நிறைவேறிற்று.

7. அவள் தன் தலைச்சன் பிள்ளையைப் பெற்று, துணிகளால் அவரைச் சுற்றி முன்னிட்டியில் கிடத்திவைத்தாள். ஏனெனில் சத்திரத்தில் அவர்களுக்கு இடமில்லாமல் போயிற்று.

8. அப்போது அந்த நாட்டில் சில இடையர்கள் விழித்து, தங்கள் கிடைக்குச் சாமக் காவல் காத்துக்கொண்டிருந்தார்கள்.

1. இங்கே சொல்லப்பட்ட செசார் அகுஸ்துஸ் என்பவன் ரோமாபுரி ராயனுமே. அவனுடைய நாளிலே உரோமருடைய செங்கோன்மை ஐரோப்பா, ஆசியா, ஆப்பிரிக்கா என்னும் மூன்று கண்டங்களிலுஞ் செலுத்தப்பட்டிருந்தது. அவர்களுடைய ஆளுகைக் குட்பட்ட தேசங்கள் மாத்திரம் அக்காலத்திலே பிரபலியமாயிருந்தபடியால், உரோமர் உலகமெல்லாம் இராச்சியபாரம் பண்ணுகிறார்களென்பது வழக்கப்பேச்சாயிருந்தது. ஆகையால்தான் உலகமெல்லாம் குடிக்கணக்கெழுதும்படி கட்டளை பிறந்ததென்று அர்ச். லூக்காஸ் சொல்லுகிறார்.

7. திருச்சபைக் கணக்கின்படி, உலக சிருஷ்டிப்பின் 4004-ம் வருஷத்தில், ஜலப்பிரளயத்தின் 2348-ம் வருஷத்தில், இரக்ஷகர் உன் கோத்திரத்தில் பிறப்பாரென்று பிதாப்பிதாவாகிய அபிராமுக்குச் சர்வேசுரன் வாக்குத்தத்தம்பண்ணின 1921-ம் வருஷத்தில், பிதாப்பிதாவாகிய யாக்கோபு தன் மூத்த குமாரன் யூதாவை நோக்கி, உன் கோத்திரத்தில் இரக்ஷகர் பிறப்பாரென்றும், அவர் பிறக்குமட்டும் உன் கோத்திரத்தில் இராஜாங்கமிருக்குமென்றும் வசனித்த 1689-ம் வருஷத்தில், மோயீசன் தேவ வல்லமையால் இஸ்ராயேலரைப் பாரவோன் அடிமைத்தனத்தினின்று மீட்டுக்கொண்ட 1461-ம் வருஷத்தில், தாவீதென்பவர் இராஜ பட்டம் பெற்ற 1032-ம் வருஷத்தில், சலமோன் தேவாலயத்தைக் கட்டின 1005-ம் வருஷத்தில், தேவ குமாரன் கன்னித்தாயாரிடத்தில் பிறப்பாரென்று தீர்க்கதரிசியாகிய இசையாஸ் வசனித்த 715-ம் வருஷத்தில், தானியேல் தீர்க்கதரிசி கர்த்தர் பிறப்புக்குக் குறித்த 65-ம் வருஷ வாரமாகிய எப்தோமாதில், அதாவது: அந்த தீர்க்கதரிசனத்தின் 455-ம் வருஷத்தில், உரோமாபுரியுண்டாகிய 753-ம் வருஷத்திலே, உரோமாபுரி இராயனாகிய, ஒக்த்தாவியான் அகுஸ்துஸ் என்கிறவன் பட்டத்துக்கு வந்த 42-ம் வருஷத்திலே, மார்கழி-மீ 25-ம் தேதியிலே, நடுச்சாமநேரத்திலே திவ்வியகர்த்தருடைய திருப் பிறப்புச் சம்பவித்ததென்றறிக. அர்ச் கன்னிமரியம்மாள் தன் தலைச்சன் பிள்ளையைப் பெற்றாளென்று சொல்லும்போது, அந்தப் பிள்ளைக்கு முந்தி வேறு பிள்ளைகளைப் பெற்றதில்லையென்று அர்த்தமாகுமே யொழிய பின்பு வேறே பிள்ளைகளையும் பெற்றாளென்று அது குறிக்கிறதில்லை.

9. அப்பொழுது இதோ, ஆண்டவருடைய தூதன் அவர்களருகே வந்து நிற்க, தெய்வீகப்பிரகாசம் அவர்களைச் சூழ்ந்து ஒளிர, அவர்கள் மிகவும் பயந்து அஞ்சினார்கள்.

10. ஆனால் தேவதூதன் அவர்களை நோக்கி: நீங்கள் பயப்படாதிருங்கள்; ஏனெனில் இதோ, எல்லா ஜனத்துக்கும் மகா சந்தோஷத்தை வருவிக்கும் சுபசெய்தியை உங்களுக்கு அறிவிக்கிறேன்.

11. அதேதெனில்: இன்று தாவீதின் நகரத்தில் கிறீஸ்துநாதராகிய இரட்சகர் உங்களுக்காகப் பிறந்திருக்கிறார்.

12. குழந்தையைத் துணிகளில் சுற்றி, முன்னிட்டியில் கிடத்தியிருக்கக் காண்பீர்கள்; இதுவே உங்களுக்கு அடையாளம் என்றார்.

13. என்றவுடனே வானுலக சேனையின் கூட்டம் அந்தத தேவதூதனோடு சேர்ந்து, சர்வேசுரனைத துதித்து:

14. உன்னத ஸ்தலங்களிலே சர்வேசுரனுக்கு மகிமைப் பிரதாபமும், பூலோகத்திலே நல்லமனதுள்ள மனுஷர்களுக்குச சமாதானமும உண்டாகக் கடவது என்றார்கள். (எபே. 14-14.)

15. பின்னும நடந்ததேதெனில், தேவதூதர்கள் அவர்களைவிட்டுப பரலோகத்துக்குப் போனவுடனே, இடையர்கள் ஒருவரொருவரை நோக்கி: நாம பெத்லேமட்டும்போய், சம்பவித்ததும், ஆண்டவர் நமக்கு அறிவித்ததுமாகிய இந்தச சங்கதியைப பார்ப்போமாக என்று பேசிக்கொண்டு,

16. தீவிரமாய் வந்து, மரியம்மாளையும், சூசையப்பரையும் முன்னிட்டியில் கிடத்தியிருந்த குழந்தையையும் கண்டார்கள்.

17. கண்டு, அந்தக்குழந்தையைக் குறித்துத் தங்களுக்குச் சொல்லப்பட்ட சங்கதியை அறிந்துகொண்டார்கள்.

18. அன்றியும் கேட்டவர்களெல்லாரும் இடையர்களால் தங்களுக்குச் சொல்லப்பட்டவைகளின் பேரிலும் ஆச்சரியப்பட்டார்கள்.

19. மரியம்மாள் இந்த வாக்கியங்களையெல்லாம தன் இருதயத்தில் வைத்துச சிந்திந்துக்கொண்டு வருவாள்.

20. இடையரும் தங்களுக்குச் சொல்லப்பட்டபடியே தாங்கள் கண்டதும் கேட்டதுமாகிய யாவற்றையுமபற்றிச் சர்வேசுரனைத் தோத்தரித்துக்கொண்டு திரும்பிப்போனார்கள்.

21. பின்பு பிள்ளைக்கு விருத்தசேதனஞ்செய்வதற்கு எட்டுநாளான போது, அவர் தாயின் உதரத்தில் உற்பவிக்குமுன்னே தேவதூதனால் சொல்லப்பட்டபடியே யேசு என்ற நாமதேயம் அவருக்குச சூட்டப்பட்டது. (ஆதி. 17-12; யாத. 12-3; மத. 1-21; லூக். 1-31.)

22. மோயீசனுடைய நியாயப் பிரமாணத்தின்படி அவளுடைய சுத்திகர நாட்கள் நிறைவேறினபோது, அவரை எருசலேமுக்குக் கொண்டுபோனார்கள். (லேவி. 12-6.)

23. ஏனெனில தாயின் கருப்பையைத்திறந்து பிறக்கும் ஆணெல்லாம் ஆண்டவருக்கு அபிஷேகமாக்கப்பட்டதென்று, கர்த்தருடைய நியாயப் பிரமாணத்திலே எழுதியிருக்கிறபடி, அவரைக் கர்த்தர் சமுகத்தில ஒப்புக்கொடுக்கவும், (யாத 13-2; எண் 8-16.)

24. ஒருசோடு காட்டுப் புறுக்களையாவது, இரண்டு மாடப்புறுக் குஞ்சுகளையாவது பலியாகச் செலுத்தவேண்டுமென்று, கர்த்தருடைய பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடி செய்யவும் (அவரை எருசலேமுக்குக் கொண்டுபோக வேண்டியதாயிருந்தது.) (லேவி. 12-8.)




"உன்னத ஸ்தலங்களிலே சர்வேசுரனுக்கு மகிமைப் பிரதாபமும், பூலோகத்திலே நல்ல மனதுள்ள மனுஷர்களுக்குச் சமாதானமும் உண்டாவதாக."

(லூக். 2-14.)

25. அப்பொழுது, இதோ எருசலேமில் சிமையோன் என்னும் பேருள்ள ஓர் மனிதன் இருந்தார். அந்த மனிதன் நீதிமானுமாய், பயபக்தியுடையவருமாய், இஸ்ராயேலின் தேற்றரவுக்கு எதிர்பார்த்திருக்கிறவருமாய் இருந்தார். இஸ்பிரீத்துசாந்துவானவரும் அவரிடத்தில் இருந்தார்.

26. அன்றியும், தாம் ஆண்டவருடைய கிறீஸ்துவைக் காண்பதற்குமுன்னே சாவைக் காண்பதில்லையென்று அவர் இஸ்பிரீத்துசாந்துவினால் வாக்குப்பெற்றிருந்தார்.

27. அப்படியிருக்க, அவர் இஸ்பிரீத்துசாந்துவின் ஏவலால் தேவாலயத்துக்கு வந்தார். குழந்தையாகிய யேசுநாதருக்காக வேதமுறைமைப்படி செய்வதற்கு அவருடைய பிதா மாதா அவரை உள்ளேகொண்டுவரும்போது,

28. அவர் தம்முடைய கரங்களில் அவரை ஏந்திக்கொண்டு, சர்வேசுரனைத்தோத்திரித்து வசனித்ததாவது:

29. ஆண்டவரே! உம்முடைய வாக்கியத்தின்படியே உம்முடைய தாசனை இப்பொழுது சமாதானத்தோடு போகவிடுவீர்;

30. ஏனெனில் தேவரீர் சகல ஜனங்களுக்கும் முன்பாக ஏற்படுத்தின,

31. உம்முடைய இரட்சிப்பை என்னுடைய கண்கள் கண்டுகொண்டன.

32. (அது) புறஜாதிகளைப் பிரகாசிப்பிக்கிற ஒளியாகவும், உமது ஜனமாகிய இஸ்ராயேலருக்கு மகிமையாகவும் இருக்கிறது என்றார்.

33. அவருடைய பிதாவும், மாதாவும் அவரைக்குறித்துச் சொல்லப்பட்டவைகளின்பேரில் அதிசயித்துக்கொண்டிருந்தார்கள்.

34. அல்லாமலும், சிமையோன் அவர்களை ஆசீர்வதித்து, அவருடைய தாயாராகிய மரியம்மாளைநோக்கிச் சொன்னதாவது: இதோ, இவர் இஸ்ராயேலில் அநேகருக்குக் கேடாகவும், உத்தானமாகவும், விரோதிக்கப்படும் குறியாகவும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறார்.

35. உம்முடைய ஆத்துமத்தையும் ஓர் வாள் ஊடுருவும்; இதினாலே அநேகருடைய இருதய சிந்தனைகள் வெளிப்படும்படியாகும் என்றார். (இசை. 8-14; ரோமை. 9-33; 1. இரா. 2-7)

36. அன்றியும், ஆசேர்கோத்திரத்தாளும், பானுவேல் குமாரத்தியுமாகிய அன்னாள் என்னும் ஓர் தீர்க்கதரிசினி இருந்தாள். அவள் கன்னிமைப் பிராயமுதல் தன் புருஷனோடு ஏழு வருஷம் வாழ்ந்தவளும், அதிக வயதுசென்றவளுமாயிருந்தாள்.

37. எண்பத்து நாலு வயதுமட்டும் விதவையாயிருந்த அவள் தேவாலயத்தைவிட்டு அகலாமல், இரவும் பகலும் உபவாசித்து ஜெபஞ்செய்து (ஆண்டவருக்கு) ஊழியஞ்செய்துகொண்டு வந்தாள்.

38. அவளும் அந்நேரத்தில் சந்நிதியிலே வந்து, ஆண்டவரை ஸ்துதித்து, இஸ்ராயேலின் இரட்சிப்புக்காகக் காத்துக்கொண்டிருந்த யாவரோடும் அவரைக்குறித்துப்பேசினாள்.

34. இரட்சகர் இராஜ மகிமையோடு வருவாரென்று யூத ஜாதியார் எண்ணியிருக்க, யேசுநாதருடைய தரித்திரமும், பாடுகளும், சிலுவை மரணமும் அநேகருக்கு இடறலாயிருக்குமென்று அறிவிக்கிறார்.

39. கர்த்தருடைய வேதகட்டளைப்படி அவர்கள் சகலத்தையும் நிறைவேற்றினபின்பு, கலிலேயாவிலுள்ள நசரேத்தென்னும் தங்கள் ஊருக்குத் திரும்பிப்போனார்கள்.

40. பிள்ளை வளர்ந்து, ஞானத்தால் நிறைந்து, பலப்பட்டுவந்தது; சர்வேசுரனுடைய அருளும் அவரிடத்தில் இருந்தது.

41. அவருடைய பிதாவும், மாதாவும் வருஷந்தோறும் பாஸ்கா என்னும் மகா பண்டிகை நாளிலே எருசலேம் நகருக்குப் போவார்கள். (யாத் 23-15; உபா. 16-1.)

42. அவ்வண்ணமே அவருக்குப் பன்னிரண்டு வயது நடக்கிறபோது, அவர்கள் பண்டிகையின் வழக்கப்படி எருசலேமுக்குப்போய்,

43. பண்டிகை நாட்கள் முடிந்து திரும்பி வரும்போது, பாலனாகிய யேசுநாதர் பிதா மாதாவுக்குத் தெரியாமல் எருசலேமிலே தங்கிவிட்டார்.

44. அவர் வழித்துணைவர்களோடு கூட இருப்பாரென்று அவர்கள் எண்ணிக்கொண்டு, ஒருநாள் பயணம்வந்து, தங்கள் இனத்தாரிடத்திலும், அயலாரிடத்திலும் விசாரித்தும்,

45. காணாததினாலே அவரைத் தேடிக்கொண்டு, எருசலேமுக்குத் திரும்பி வந்தார்கள்.

46. பின்னும் சம்பவித்ததேதெனில், மூன்று நாளைக்குப்பிறகு தேவாலயத்திலே அவர் சாஸ்திரிகள் நடுவிலே உட்கார்ந்து, அவர்கள் சொல்லுகிறதைக் கேட்கவும் அவர்களை வினவவும் கண்டார்கள்.

47. அவருடைய வாக்கைக் கேட்டயாவரும் அவருடைய ஞானத்தையும், மாறுத்தாரங்களையும்பற்றிப் பிரமித்துக்கொண்டிருந்தார்கள்.

48. (அவருடைய மாதா பிதாவும்) அவரைக்கண்டு ஆச்சரியப்பட்டார்கள். அப்போது அவருடைய தாயார் அவரை நோக்கி: மகனே, ஏன் எங்களுக்கு இப்படிச் செய்தீர்? இதோ, உம்முடைய தந்தையும், நானும் துக்கித்து, உம்மைத் தேடினோமே என்றாள்.

49. அதற்கு அவர்: நீங்கள் ஏன் என்னைத் தேடினீர்கள்? நான் என் பிதாவின் காரியங்களில் அலுவலாயிருக்கவேண்டுமென்று உங்களுக்குத் தெரியாதோ என்றார்.

50. ஆனால் அவர்கள் தங்களுக்கு அவர் சொன்ன வார்த்தையைக் கண்டுபிடிக்கவில்லை.

51. பின்பு அவர் அவர்களோடுகூடப் புறப்பட்டு, நசரேத்தூருக்கு வந்து, அவர்களுக்குக் கீழ்ப்படிந்திருந்தார். அவருடைய தாயார் இந்த வாக்கியங்களையெல்லாம் தன்னிருதயத்தில் வைத்திருந்தாள்.

52. யேசுநாதரோவென்றால் சர்வேசுரனுக்கும், மனிதருக்கும் முன்பாக ஞானத்திலும், பிராயத்திலும், வரப்பிரசாதத்திலும் வளர்ந்துகொண்டுவந்தார்.

39. மூன்று இராஜாக்கள் திவ்விய குழந்தையைச் சந்தித்ததையும், திருக்குடும்பம் எஜிப்து தேசத்துக்கு ஓடிப்போனதையும், அர்ச். லூக்காஸ் எழுதாமல் விட்டு விட்டபடியால், சுத்திகரச் சடங்கு நிறைவேறினபிறகு, அவர்கள் நசரேத்தூருக்குப் போனார்களென்று தொடர்பாகச் சொல்லுகிறாரொழிய, அப்போது உடனே நசரேத்தூருக்குப் போனார்களென்று நினைக்கக் கூடாது. எஜிப்திலிருந்து திரும்பி வந்தபின் நசரேத்தூருக்குப்போனார்களென்று நிச்சயமாயிருக்கிறது.



"பின்பு அவர் அவர்களோடுகூடப் புறப்பட்டு, நசரேத்தூருக்கு வந்து, அவர்களுக்குக் கீழ்ப்படிந்திருந்தார்." (லூக். 2-51.)



*"யேசுநாதரோவென்றால் சர்வேசுரனுக்கும் மனிதருக்கும் முன்பாக ஞானத்திலும், பிராயத்திலும், வரப்பிரசாதத்திலும் வளர்ந்துகொண்டுவந்தார்."*

(லூக். 2-52.)

## 3-ம். அதிகாரம்.

அர்ச். அருளப்பர் ஆயக்காரர், சேவகர் முதலிய ஜனங்களுக்குப் போதித்ததும், கிறீஸ்துநாதரைக்குறித்துச் சாட்சிசொல்லி, அவருக்கு ஞானஸ்நானங்கொடுத்ததும், எரோதென்பவனால் சிறையில் வைக்கப்பட்டதும், கிறீஸ்துநாதருடைய வம்ச வழியுமாவன:

1. திபேரியூ என்னும் செசாருடைய இராச்சியபாரத்தின் பதினைந்தாம் வருஷத்திலே, போஞ்சுபிலாத்து என்பவன் யூதேயா தேசத்துக்கு அதிபதியாகவும், எரோது என்பவன் கலிலேயா நாட்டின் சதுர்த்த பாகபதியாகவும், அவன் சகோதரனாகிய பிலிப்பு இத்துரையா நாட்டுக்கும், திராக்கோனிதி நாட்டுக்கும் சதுர்த்த பாகபதியாகவும், லிசினியாஸ் என்பவன் அபிலினேநாட்டுக்குச் சதுர்த்த பாகபதியாகவும்,

2. அன்னாஸ், கைப்பாஸ் என்பவர்கள் பிரதான ஆசாரியர்களாகவும் இருந்தகாலத்தில், வனாந்தரத்திலே சக்கரியாஸ் குமாரனை அருளப்பருக்கு ஆண்டவருடைய வாக்கியம் உண்டாயிற்று. (அப். 4-6.)

3-4. அப்பொழுது அவர் யோர்தான் நதிக்கடுத்த நாடெங்கும் வந்து, இசையாஸ் தீர்க்கதரிசியின் வாக்கியாகமத்தில் எழுதியிருக்கிறபிரகாரம், பாவ விமோசனத்துக்காகத் தவத்தின் ஞானஸ்நானத்தைப் பிரசங்கித்தார். (அதில் எழுதியிருப்பதேதெனில்): வனாந்தரத்திலே சத்திக்கிறவனுடைய குரலொலி (இதோ)! ஆண்டவருடைய வழியை முஸ்திப்புச்செய்யுங்கள், அவருடைய பாதைகளைச் செவ்வையாக்குங்கள்.

5. பள்ளத்தாக்கெல்லாம் தூர்க்கப்படும்; மலை குன்றெல்லாம் தாழ்த்தப்படும்; கோணலானவைகள் நேராகவும், கரடானவைகள் சமவழிகளாகவுமிருக்கும்.

6. எந்த மனிதனும் சர்வேசுரனுடைய இரட்சணியத்தைக் காண்பான் என்பதாம். (மத். 3-1; மாற். 1-4; இசை. 40-3; அரு. 1-23.)

7. அவ்வண்ணமே அவர் தமயிடத்தில் ஞானஸ்நானம் பெறும்படிக்குப் புறப்பட்டுவந்த திரளான ஜனங்களைப் பார்த்து: விரியன்பாம்புக குட்டிகளே! வரப்போகிற கோபாக்கினைக்குத் தப்பித்துக்கொள்ள உங்களுக்கு வகை காட்டினவன் யார்? (மத். 3-7; 23-33.)

8. ஆகையால் தவத்துக்கு ஏற்ற பலனைக்கொடுங்கள்; எங்களுக்குப் பிதாவாக அபிரகாம் இருக்கிறாரென்று சொல்லத் தொடங்காதேயுங்கள். ஏனென்றால் சர்வேசுரன் இந்தக் கல்லுகளினின்று அபிரகாமுக்குப் புத்திரர்களைப் பிறப்பிக்க வல்லவராயிருக்கிறார் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

9. இப்பொழுதே, மரங்களின் வேரருகில் கோடரி போடப்பட்டிருக்கின்றது. ஆகையால் நற்கனி கொடாத மரமெல்லாம் வெட்டுண்டு, அக்கினியிலே போடப்படும் என்றார்.

10. அப்போது ஜனங்கள்: அப்படியானால், நாங்கள் என்ன செய்யவேண்டும் என்று அவரைக் கேட்டார்கள்.

11. அவர் அவர்களுக்கு மாறுத்தாரமாக: இரண்டு சட்டைகளையுடையவன் இல்லாதவனுக்குக்கொடுப்பானாக; ஆகாரத்தையுடையவனும் அவ்வண்ணம் செய்வானாக என்றார். (இயா. 2-15; 1 அரு. 3-17.)

1. சதுர்த்தபாகபதி என்பது ஒரு தேசத்தில் நாலிலொரு பங்குக்கு அதிபதி என்றர்த்தமாம்.

2 ஆண்டவருடைய வாக்கியம் அவருக்குண்டாயிற்று என்பது அவர் வனாந்தரத்தை விட்டு, நாட்டுக்குள்ளே போய் இரட்சகருக்கு வழியாயத்தம் செய்யத்தக்கதாகத் தவத்தைப் பிரசங்கிக்க ஆண்டவரால் கற்பிக்கப்பட்டாரென்று அர்த்தமாம்.

12. பின்பு ஆயக்காரரும் ஞானஸ்நானம்பெற வந்து: போதகரே! நாங்கள் என்ன செய்யவேண்டியது என்று அவரைக் கேட்டார்கள்.

13. அவரோ, அவர்களை நோக்கி: உங்களுக்குக் கற்பிக்கப்பட்டிருக்கிறதற்கு அதிகமாய் ஒன்றும் செய்யாதிருங்கள் என்றார்.

14. பிறகு போர்ச்சேவகரும் அவரை வினவி: நாங்களும் செய்யவேண்டியதென்ன என்றார்கள். அவர்களுக்கு அவர் மறுமொழியாக: நீங்கள் ஒருவரையும் பலவந்தஞ்செய்யாதேயுங்கள்; அபாண்டஞ்சொல்லாதேயுங்கள்; உங்கள் சம்பளத்தைக்கொண்டு மனத்திருப்தியாயிருங்கள் என்றார்.

15. அப்படியிருக்க, ஜனங்களெல்லாரும் அருளப்பரைக் குறித்து ஒருவேளை இவர்தான் கிறீஸ்துநாதரோ என்று எண்ணி, தங்கள் இருதயங்களிலே யோசித்துக்கொண்டிருக்கையில்,

16. அருளப்பர் பிரத்தியுத்தாரமாக எல்லோரையும் நோக்கிச் சொன்னதாவது: நான் ஜலத்தினால் உங்களுக்கு ஞானஸ்நானங்கொடுக்கிறது மெய்யே; ஆனால் என்னிலும் வல்லவர் ஒருவர் வருகிறார்; அவருடைய பாதரட்சைகளின் வாரை அவிழ்க்க நான் பாத்திரவானல்ல; அவரோ உங்களுக்கு இஸ்பிரீத்துசாந்துவினாலும் அக்கினியினாலும் ஞானஸ்நானங்கொடுப்பார். (மத். 3-11; மாற். 1-8; அரு. 1-26; அப். 1-5; 11-16; 19-4.)

17. அவருடைய சுளகு அவர் கையிலிருக்கிறது; அவர் தமது களத்தைத் தூற்றி, கோதும்பையைக் களஞ்சியத்திலே சேர்த்துக் கொள்ளுவார்; பதர்களையோ அவியாத அக்கினியிலே சுட்டெரிப்பார் என்றார்.

18. மற்றும் அநேக நல்ல புத்திகளையும் சொல்லி ஜனங்களுக்குப் போதித்தார்.

19. அப்படியிருக்க, இராச்சியத்தின் சதுர்த்த பாகபதியாகிய எரோது என்பவன் தன் சகோதரன் மனைவியாகிய எரோதியாளைப்பற்றியும், தான் செய்திருந்த சகல பொல்லாங்குகளைப் பற்றியும் அருளப்பரால் கண்டிக்கப்பட்டபோது, (மத். 14-4; மாற். 6-17.)

20. அவன் அருளப்பரைச்சிறையில் அடைத்து, (தான் செய்த) மற்ற அக்கிரமங்களோடு இதனையும் கூட்டினான்.

21. ஜனங்களெல்லாரும் ஞானஸ்நானம் பெறுகிறபோது சம்பவித்ததேதெனில், யேசுநாதரும் ஞானஸ்நானம்பெற்று ஜெபஞ்செய்கையில், பரமண்டலம் திறக்கப்பட்டு, (மத். 3-17; 17-5; லூக். 9-35; 2 இரா. 1-17.)

22. இஸ்பிரீத்துசாந்துவானவர் தேகவடிவாய் புறாவைப்போல் அவர்மேல் இறங்க, பரலோகத்தினின்று ஓர் குரலொலியும் உண்டாகி: நீரே நமது நேசகுமாரன்; உமதுபேரில் பிரியமாயிருக்கிறோம் என்றுசத்தித்தது. (மத்.3-17.)

23. அப்போது யேசுநாதருக்கு ஏறக்குறைய முப்பது பிராயமாகத் துவக்கினதுமன்றி, அவர் சூசையப்பருக்குக் குமாரனாக எண்ணவும் பட்டிருந்தார். சூசையப்பர் ஏலியினின்றும், ஏலி மத்தாத்தினின்றும்,

24. மத்தாத் லேவியினின்றும், லேவி மெல்க்கியினின்றும், மெல்க்கி ஜான்னையினின்றும், ஜான்னை யோசேப்பினின்றும்,

25. யோசேப் மத்தாத்தியாவினின்றும், மத்தாத்தியா ஆமோஸினின்றும், ஆமோஸ் நாகூமினின்றும், நாகூம் எஸ்லியினின்றும், எஸ்லி நாகேயினின்றும்,

16. அந்த அக்கினி பெந்தக்கோஸ்த் என்ற இஸ்பிரீத்துசாந்து திருநாளிலே அப்போஸ்தலர்கள் பேரில் இறங்கின அக்கினியும், ஆத்துமங்களைச் சுத்திகரித்துத் தேவசிநேகத்தால் எரியப்பண்ணுகிற இஷ்டப்பிரசாதமாகிற அக்கினியுந்தான்.

26. நாகே மாகாத்தினின்றும், மாகாத் மத்தாத்தியாவினின்றும், மத்தாத்தியா செமேயினின்றும், செமேய் யோசேப்பினின்றும், யோசேப் யூதாவினின்றும்,

27. யூதா யோவான்னுவினின்றும், யோவான்னு ரெஸாவினின்றும், ரெஸா சொரோபாபெலினின்றும், சொரோபாபெல் சலாத்தியேலினின்றும், சலாத்தியேல் நேரியினின்றும்,

28. நேரி மெல்க்கியினின்றும், மெல்க்கி ஆத்தியினின்றும், ஆத்தி கோசனினின்றும், கோசன் எல்மாதனினின்றும், எல்மாதன் ஏரினின்றும்,

29. ஏர் ஜெசுவினின்றும், ஜெசு எலியேசரினின்றும், எலியேசர் யோரிமினின்றும், யோரிம் மத்தாத்தினின்றும், மத்தாத் லேவியினின்றும்,

30. லேவி சிமையோனினின்றும், சிமையோன் யூதாவினின்றும், யூதா யோசேப்பினின்றும், யோசேப் யோனுவினிறும், யோனு எலியாக்கிமினின்றும்,

31. எலியாக்கிம், மெலெயாவினின்றும், மெலெயா மென்னுவினின்றும், மென்னு மத்தாத்தாவினின்றும், மத்தாத்தா நாத்தானினின்றும், நாத்தான் தாவீதினின்றும்,

32. தாவீது ஜெசேயினின்றும், ஜெசே ஓபேதினின்றும், ஓபேது போவோஸினின்றும், போவோஸ் சலோமோனினின்றும், சலோமோன் நாஸ்ஸோனினின்றும்,

33. நாஸ்ஸோன் அமினதாபினின்றும், அமினதாப் ஆருமினின்றும், ஆரும் எசரோனினின்றும், எசரோன் பாரோஸினின்றும், பாரோஸ் யூதாவினின்றும்,

34. யூதா யாக்கோபினின்றும், யாக்கோப் ஈசாக்கினின்றும், ஈசாக் அபிரகாமினின்றும், அபிரகாம் தாரேயினின்றும், தாரே நாக்கோரினின்றும்,

35. நாக்கோர் சாரூக்கினின்றும், சாரூக் இராகாவினின்றும், இராகாவு பாலேக்கினின்றும், பாலேக் எபேரினின்றும், எபேர் சாலேயினின்றும்,

36. சாலே காயினுனினின்றும், காயினுன் அற்பக்சாதினின்றும், அற்பக்சாத் சேமினின்றும், சேம் நோவாவினின்றும், நோவா லாமேக்கினின்றும்,

37. லாமேக் மத்துசலேயினின்றும், மத்துசலே ஏனோக்கினின்றும், ஏனோக் ஜாரேத்தினின்றும், ஜாரேத் மலாலேயேலினின்றும், மலாலேயேல் காயினுனினின்றும்,

38. காயினுன் ஏனோஸினின்றும், ஏனோஸ் சேத்தினின்றும், சேத் ஆதாமினின்றும், ஆதாம் கடவுளினின்றும் உண்டானவர்களாம்.

38. சேத் ஆதாமினின்றும், ஆதாம் கடவுளினின்றும் உண்டானவர்களென்று சொல்லும்போது, சேத் வரையிலுள்ளவர்கள் தங்கள் பிறப்பு வகையால் உண்டானவர்களென்றும், ஆதாமோ கடவுளின்று, சிருஷ்டிப்பு முறையால் உண்டானவனென்றும் அறிக. இந்த வம்ச வரிசைக்கும் அர்ச். மத்தேயு கொடுத்த வம்ச வரிசைக்கும் சில வித்தியாசங்கள் உண்டாம். அர்ச். மத்தேயு தாவீது மகன் சலோமோன் வழியாக அர்ச். சூசையப்பனைப் பெற்ற யாக்கோபு வரிசையிலே கோத்திர வழியை எடுத்துக் காட்டுகிறார். அர்ச். லூக்காஸோவென்றால், தாவீதின் மற்றொரு குமாரனுகிய நாத்தான் வழியாக அர்ச். சூசையப்பனை வளர்த்த தகப்பனுகிய எலியின் வரிசையிலே வம்ச வழியை எழுதிக் காண்பிக்கிறார். எப்படியிருந்தாலும் இருவரும் தாவீதின் பிதிர்வழிதான். அர்ச். லூக்காஸ் அர்ச். சூசையப்பனை எலியின் மகனுக வரைந்ததற்கு வேதபாரகர்கள் பல முகாந்தரஞ் சொல்லுகிறார்கள். அவைகளில் இரண்டு முகாந்தரங்களை மாத்திரம் இவ்விடத்தில் எடுத்துக் காட்டு

## 4-ம். அதிகாரம்.

யேசுநாதர் நாற்பதுநாள் உபவாசமாயிருந்து பசாசினால் சோதிக்கப்பட்டதும், நசரேத்தூரில் ஜெப ஆலயத்தில் பிரசங்கித்ததும், கப்பர்நாவும் ஊரில் பேய்பிடித்தவனையும், இராயப்பருடைய மாமியாளையும், வேறு பல வியாதிக்காரர்களையும் சொஸ்தப்படுத்தினதும்.

1. யேசுநாதர் இஸ்பிரீத்துசாந்துவினால் நிறைந்தவராய் யோர்தான் நதியைவிட்டுத் திரும்பி, இஸ்பிரீத்துவினால் வனாந்தரத்துக்குக் கொண்டுபோகப்பட்டு, (மத். 4-1; மாற். 1-12.)

2. அங்கே நாற்பது நாளிருந்து, பசாசினால் சோதிக்கப்பட்டார். அந்தநாட்களில் அவர் ஒன்றும் புசியாமலிருந்தார்; பின்பு அவருக்குப் பசியுண்டாயிற்று.

3. அப்பொழுது, பசாசு அவரைப் பார்த்து: நீர் தேவசுதனானால், இந்தக்கல் அப்பமாகும்படி சொல்லும் என்றது.

4. யேசுநாதர் அதற்கு மாறுத்தாரமாக: மனிதன் அப்பத்தினால்மாத்திரமல்ல, சர்வேசுரனுடைய எந்த வார்த்தையினாலும் பிழைக்கிறானென்று எழுதப்பட்டிருக்கிறது என்றார். (உபா. 8-3; மத். 4-4.)

5. பின்பு பசாசு அவரை உயர்ந்த மலையின்மேல் கொண்டுபோய், ஒரு க்ஷணப் பொழுதிலே உலகராச்சியங்களையெல்லாம் அவருக்குக் காண்பித்து:

6. இவைகளின்மேல் சர்வ அதிகாரத்தையும், இவைகளின் மகிமையையும் உமக்குத் தருவேன். ஏனெனில், இவைகள் எனக்குக் கையளிக்கப் பட்டிருக்கின்றன; எனக்கு இஷ்டமானவனுக்கு இவைகளைக் கொடுக்கிறேன்.

7. ஆதலால் நீர் என்முன்பாக விழுந்து நமஸ்கரித்தால், இவையெல்லாம் உம்முடையதாயிருக்கும் என்றது.

8. அதற்கு யேசுநாதர் மாறுத்தாரமாக: உன் தேவனாகிய ஆண்டவரை நமஸ்கரித்து, அவர் ஒருவரையே சேவிப்பாயாக என்று எழுதியிருக்கிறதே என்றார். (உபா. 6-13.)

9. மீளவும் பசாசு அவரை எருசலேம்நகருக்குக் கொண்டுபோய், தேவாலயத்தின் சிகரத்தின்மேல் அவரை நிறுத்தி: நீர் தேவசுதனானால், இங்கிருந்து கீழே குதியும்,

10. ஏனெனில் உம்மைக் காப்பாற்றும்பொருட்டு அவர் தம்முடைய தூதர்களுக்கு உம்மைக்குறித்துக் கட்டளையிட்டிருக்கிறார் என்றும்,

11. உமது பாதம் ஒருவேளை கல்லில் மோதாதபடிக்கு அவர்கள் தங்கள் கரங்களிலே உம்மை ஏந்திக்கொள்வார்களென்றும் எழுதப்பட்டிருக்கிறது என்றது. (சங். 90-11.)

12. யேசுநாதர் அதற்கு பிரத்தியுத்தாரமாக: உன் தேவனாகிய ஆண்டவரைச்சோதியாதிருப்பாயாக என்று சொல்லப்பட்டிருக்கிறதே என்றார். (உபா. 6-16.)

கிறேன். 1-வது ஏலி, யாக்கோபு இருவரும் கூடப்பிறந்த சகோதரர் முறையில், ஏலி என்பவர் கலியாணஞ்செய்து, பிள்ளையின்றி இறந்துபோயிருந்தால், அவர் பெண்சாதியைத் தேவகட்டளைப்படிக்கு, யாக்கோபு கலியாணம் செய்து பிள்ளையைப் பெற்றால், அந்தப்பிள்ளையை யாக்கோபின் மகனென்றாவது, ஏலியின் மகனென்றாவது சொல்லலாம். 2-வது. யாக்கோபு சூசையப்பரைப் பெற்றபின் இறந்துபோயிருந்தால், ஏலி அவரை வளர்த்திருக்கலாம். அப்படியிருந்தால் சூசையப்பரை ஏலியின் மகனென்று சொல்லவும் ஞாயமுண்டு.

13. அன்றியும் சோதனையெல்லாம் முடிந்தபின்பு, பசாசு சிலகாலத்துக்கு அவரை விட்டு அகன்றுபோய்விட்டது.

14. பின்பு யேசுநாதர் இஸ்பிரீத்து சாந்துவின் வல்லமையால் கலிலேயா நாட்டுக்குத் திரும்பிவந்தார். அவருடைய கீர்த்தியும் அத்தேசமெங்கும் பரம்பிற்று. (மத். 4-12; மாற். 1-14.)

15. ஏனெனில் அவர்களுடைய ஜெப ஆலயங்களில் அவர் உபதேசித்து வந்ததுமல்லாமல், எல்லாராலும் புகழவும் பட்டார்.

16. பின்பு தாம் வளர்ந்த நசரேத்தூருக்கு அவர் வந்து, தமது வழக்கத்தின்படி ஓய்வுநாளிலே ஜெப ஆலயத்தில் பிரவேசித்து, வாசிக்க எழுந்து நின்றார். (மத் 2-13; 13-54; மாற். 6-1; அப். 13-14; 17-2.)

17. அப்பொழுது இசையாஸ் தீர்க்கதரிசியின் ஆகமம் அவருக்குக் கொடுக்கப்பட, அவர் புஸ்தகத்தை விரித்தபோது தென்பட்ட இடத்தில் எழுதப்பட்டிருந்ததாவது:

18. ஆண்டவருடைய இஸ்பிரீத்து வானவர் என்மேலிருக்கிறார். ஆதலால் அவர் என்னை அபிஷேகம்பண்ணித் தரித்திரருக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கவும், இருதயம் நொறுங்கினவர்களைக் குணப்படுத்தவும்,

19. சிறைப்பட்டவர்களுக்கு விடுதலையையும், குருடருக்குப் பார்வையையும் பிரசித்தப்படுத்தவும், மனமுடைந்தவர்களைச் சுயாதீனராய் அனுப்பிவிடவும், ஆண்டவருக்குப் பிரியமான வருஷத்தையும், பிரதிபலன் நாளையும் பிரசங்கிக்கவும் என்னை அனுப்பினார் என்பதாம். (இசை. 61-1.)

20. பின்னும் அவர் புஸ்தகத்தைச் சுருட்டிப் பரிசாரகனிடத்தில் கொடுத்து, உட்கார்ந்தார். ஜெப ஆலயத்திலிருந்த எல்லோருடைய கண்களும் அவர்மேல் நோக்கமாயிருந்தன.

21. அப்போது யேசுநாதர் அவர்களோடு பேசத் தொடங்கி: இன்று இந்த வேதவாக்கியம் உங்கள் காதுகளில்விழுந்து, நிறைவேறிற்று என்றார்.

22. சகலரும் அவருக்குச் சாட்சி கொடுத்து, அவர் வாயிலிருந்து புறப்பட்ட அருள்வாக்கியங்களைக் குறித்து ஆச்சரியப்பட்டு: இவர் சூசையின் மகனல்லவோ என்றார்கள். (சங். 45-2; மத். 13-54; மாற். 6-2; அரு. 6-12.)

23. அப்போது அவர் அவர்களை நோக்கி: வைத்தியனே, உன்னையே சௌக்கியப்படுத்திக்கொள் என்கிற பழமொழியை எனக்குச் சொல்லி, கப்பர்நாவும்ஊரில் எவ்வளவோ பலத்த காரியங்கள் செய்யப்பட்டதாகக் கேள்விப்பட்டோம்; அவைகளை உன் ஜென்ம ஊராகிய இவ்விடத்திலும் செய்யென்று சந்தேகமற எனக்குச் சொல்லுவீர்கள் என்றார். (மத். 4-23.)

24. மேலும் அவர் திருவுளம்பற்றினதாவது: எந்தத் தீர்க்கதரிசியும் தன் ஜென்ம நாட்டில் அங்கீகரிக்கப்படானென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். (மத். 13-57.)

25. எலியாசுடைய நாட்களிலே மூன்று வருஷமும், ஆறு மாதமும் வானம் அடைபட்டுத் தேசமெங்கும் மிகுந்த பஞ்சமுண்டானபோது, இஸ்ராயேலருக்குள் அநேகம் விதவைகள் இருந்தார்கள். (3 அரசர். 17-9; 18-1; இயா. 5-17.)

13. **பசாசு சில காலத்துக்கு அவரை விட்டுப் போனது** என்கும்போது, அவருடைய பாடுகளின் காலம் வரையில் சோதிக்க வரவில்லை என்பதாகத் தோன்றுகிறது.

20. **புஸ்தகத்தைச் சுருட்டி:**—அக்காலத்தில் கந்தைத் துணிகளால் காகிதம் செய்கிறவகை தெரியாதிருந்தது. அப்போது தோலைப் பதனிட்டு, அதில் எழுதிச் சுருட்டிக்கட்டி வைத்திருப்பார்கள்.

26. ஆயினும் சீதோன்நாட்டில் சரேப்தாவூரிலுள்ள ஓர் கைம் பெண்ணிடத்திலேயன்றி, அவர்களுக்குள் வேறே யாரிடத்திலும் எலியாஸ் அனுப்பப்படவில்லை. (3 அர. 17-9.)

27. அவ்வண்ணமே எலிசேயு என்னும் தீர்க்கதரிசியின் காலத்திலே, இஸ்ராயேலருக்குள் அநேகம் குஷ்டரோகிகள் இருந்தார்கள். ஆயினும் சீரியாதேசத்தாளுகிய நாமானொழிய, அவர்களில் வேறொருவனும் சுத்தமாக்கப்படவில்லையென்று சத்தியப்பிரகாரம் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார். (4 அர. 5-14.)

28. இதைக்கேட்டு ஜெப ஆலயத்திலிருந்த யாவரும் கோபம் நிறைந்தவர்களாய்,

29. எழுந்து, அவனை ஊருக்குப் புறம்பே தள்ளி, தங்கள் ஊர் கட்டப்பட்டிருந்த மலையின் உச்சியிலிருந்து அவனைத் தலைகீழாகத் தள்ளிவிடும்படி அவ்விடமட்டும் அவனைக் கொண்டு போனார்கள்.

30. அவரோவெனில் அவர்கள் நடுவே நடந்து, போய்விட்டார்.

31. பின்பு அவர் கலிலேயா நாட்டின் பட்டணமாகிய கப்பர்நாவும் நகருக்குப் போய், அங்கே ஓய்வுநாட்களில் அவர்களுக்குப் போதித்துவந்தார். (மத். 4-13; மாற். 1-21.)

32. அவருடைய வாக்கியம் அதிகாரமுள்ளதாயிருந்தபடியால், அவருடைய போதகத்தைப்பற்றி அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். (மத். 7-28.)

33. அப்பொழுது, ஜெப ஆலயத்தில் அசுத்தப் பேய் பிடித்த ஒரு மனிதனிருந்தான். அவன் உரத்த சத்தமாய்க் கூப்பிட்டு: (மாற். 1-23.)

34. நசரேனுவாகிய யேசுவே! என்னைச் சும்மாவிடும்; எங்களுக்கும் உமக்கும் என்ன? எங்களைக் கெடுக்க வந்தீரோ? உம்மை இன்னாரென்று அறிவேன்; நீர் சர்வேசுரனுடைய பரிசுத்தர் என்றான்.

35. யேசுநாதர் அவனை அதட்டி: நீ பேசாதே, இந்த மனிதனை விட்டுப் போ என்றார். அப்பொழுது பேய் அவனைச் (சபை) நடுவில் விழத்தாட்டி, அவனுக்கு ஒரு பொல்லாப்புஞ் செய்யாமல், அவனை விட்டுப்போயிற்று.

36. இதினாலே எல்லோரும் திகிலடைந்து, ஒருவர் ஒருவரை நோக்கி: இது என்ன வாக்கு? வல்லமையோடும் அதிகாரத்தோடும் பேய்களுக்குக் கட்டளையிடுகிறார். அவைகளும் ஓடிப்போகின்றதே என்பார்கள்.

37. இதினிமித்தம் அவருடைய கீர்த்தி அந்நாட்டில் எவ்விடத்திலும் பரம்பிற்று.

38. பின்பு யேசுநாதர் ஜெப ஆலயத்தை விட்டெழுந்து, சீமோன் என்பவருடைய வீட்டுக்குள் வந்தார். அங்கே சீமோனுடைய மாமியாள் கடுங்காய்ச்சலாய்க் கிடந்தமையால் அவளுக்காக அவனை மன்றாடினார்கள். (மத். 8-14; மாற். 1-30.)

39. அவர் அவள் பக்கமாய்க் குனிந்துநின்று, காய்ச்சலுக்குக் கட்டளையிட்டார்; அது அவளைவிட்டு நீங்கிற்று. உடனே அவள் எழுந்து அவர்களுக்குப் பணிவிடைசெய்தாள்.

40. பின்பு சூரியன் அஸ்தமித்தபோது, சகலரும் தங்களுக்குள்ளே பற்பல பிணிகளால் வருத்தப்பட்டவர்களை அவரிடத்தில் கொண்டுவந்தார்கள். அவரும் ஒவ்வொருவர் பேரிலும் தம்முடைய கைகளை வைத்து அவர்களைச் சௌக்கியப்படுத்தினார்.

41. பசாசுகளும்: நீர் சர்வேசுரனுடைய குமாரனென்று சத்தமிட்டுக்கொண்டு, அநேகரை விட்டுப்போயின. ஆயினும், அவரைக் கிறீஸ்துநாதரென்று அவைகள் அறிந்திருந்தபடியால், அவர் அவைகளைப் பேசவொட்டாமல் அதட்டினார். (மாற். 1-34.)

42. பொழுதுவிடியவே, அவர் புறப்பட்டு, வனாந்தரமான ஓரிடத்துக்குப் போனார். ஜனங்கள் அவரைத் தேடிக்கொண்டு, அவரிடமட்டும்வந்து, அவர் தங்களைவிட்டுப் போகாதபடி அவரை நிறுத்திக்கொள்ளப்பார்த்தார்கள்.

43. அவர் அவர்களை நோக்கி: நான் மற்றப் பட்டணங்களுக்கும் சர்வேசுரனுடைய இராச்சியத்தைப் பிரசங்கிக்க வேண்டும்; ஏனெனில், அதற்காகவே அனுப்பப்பட்டிருக்கிறேன் என்றார்.

44. பின்னும் அவர் கலிலேயாநாட்டிலுள்ள ஜெப ஆலயங்களில் பிரசங்கித்துக்கொண்டுவந்தார்.

## 5-ம். அதிகாரம்.

யேசுநாதர் இராயப்பருடைய படகிலிருந்து பிரசங்கித்ததும், அற்புதமாய்த் திரளான மச்சங்களைப் பிடிக்கச்செய்ததும், குஷ்டரோகியையும், திமிர்வாதக்காரனையும் குணமாக்கினதும், மத்தேயு என்பவரை அழைத்ததும்.

1. பின்பு சம்பவித்ததாவது: அவர் ஜெனேசரேத் என்னும் ஏரியினருகே நிற்கையில், திரளான ஜனங்கள் தேவவாக்கியத்தைக் கேட்கும்படி, அவரிடத்தில் வந்து நெருங்கினார்கள்.

2. அப்போது ஏரியோரத்தில் இரண்டு படகுகள் நிற்கக் கண்டார். மீன் பிடிக்கிறவர்கள் கீழேயிறங்கி வலைகளை அலைசிக்கொண்டிருந்தார்கள்.

3. அவைகளில் ஒன்றாகிய சீமோனுடைய படகிலே அவர் ஏறி, கரைக்குச் சற்றுத் தூரத்தில் அதைத் தள்ளும்படி அவரைக் கேட்டுக்கொண்டு, அந்தப் படகில் உட்கார்ந்து ஜனங்களுக்கு உபதேசித்தார்.

4. உபதேசித்து முடிந்தபின், சீமோனை நோக்கி: படகை ஆழத்திலே தள்ளிக்கொண்டுபோய், மீன் பிடிப்பதற்கு உங்கள் வலைகளை வீசுங்கள் என்றார்.

5. சீமோன் பிரத்தியுத்தாரமாக: போதகரே, நாங்கள் இரவெல்லாம் பிரயாசப்பட்டும், ஒன்றும் அகப்படவில்லை; ஆகிலும் தேவரீருடைய வார்த்தையின்படியே வலையை வீசுவேன் என்றார்.

6. அப்படி அவர்கள் செய்தவுடனே, தங்கள் வலை கிழிந்துபோகத்தக்க ஏராளமான மச்சங்களை வளைத்துப்பிடித்தார்கள்.

7. அப்போது மற்றப் படகிலிருந்த கூட்டாளிகள் வந்து தங்களுக்கு உதவிசெய்யும்படி, அவர்களுக்குச் சயிக்கினை காட்டினார்கள். அவர்களும்வந்து, இரண்டு படகுகளையும் நிரப்ப, அவைகள் கிட்டத்தட்ட அமிழ்ந்திப் போகிறதாயிருந்தன.

8. சீமோன் இராயப்பர் இதைக் கண்டவுடனே, யேசுநாதருடைய பாதத்திலேவிழுந்து: ஆண்டவரே, நான் பாவியான மனுஷன். என்னைவிட்டு அகலும் என்றார்.

9. ஏனெனில் அவர்களுக்கு அகப்பட்ட மீன்பாட்டினிமித்தம், அவரும் அவரோடிருந்த சகலரும் பிரமிப்படைந்திருந்தார்கள்.

10. அவ்விதமே சீமோனுடைய தோழராகிய செபதேயின் குமாரர் இயாகப்பரும் அருளப்பரும் (பிரமிப்படைந்திருந்தார்கள்.) ஆனால் யேசுநாதர் சீமோனைநோக்கி: பயப்படாதே, இது முதல் நீ மனுஷரைப் பிடிக்கிறவனாயிருப்பாய் என்றார். (மத். 4-19; மாற். 11-19.)

11. ஆதலால் அவர்கள் படகுகளைக் கரைக்குத் தள்ளினபின், எல்லாவற்றையும்விட்டு, அவரைப் பின்சென்றார்கள். (மத். 4-20; லூக். 19-27.)

12. மீளவும் சம்பவித்ததாவது: யேசுநாதர் ஒரு பட்டணத்திலிருக்கையிலே, நிறைகுஷ்டரான ஓர் மனிதன் அவரைக்கண்டு, முகங்குப்புறவிழுந்து: ஆண்டவரே! தேவரீருக்குச் சித்தமானால் என்னைச் சுத்தமாக்க உம்மாலே கூடுமென்று மன்றாடினான். (மத். 8-2; மாற். 14-40.)

13. அவர் தமது கரத்தை நீட்டி, அவனைத் தொட்டு: சித்தமாயிருக்கிறேன், சுத்தமாயிரு என்றார். என்றவுடனே குஷ்டரோகம் அவனைவிட்டு நீங்கிற்று.

14. பின்னும் அவர் இதை ஒருவருக்கும் சொல்ல வேண்டாமென்று அவனுக்குக் கட்டளையிட்டு: நீ போய் ஆசாரியனிடத்தில் உன்னைக்காண்பித்து, உன் சுத்திகரிப்புக்காக மோயீசன் கட்டளையிட்டபடியே அவர்களுக்கு அத்தாட்சியாகக் காணிக்கையைச் செலுத்து என்றார். (எண். 14-4.)

15. ஆயினும், அவருடைய கீர்த்தி அதிகமாய்ப்பரம்பவே, திரளான ஜனங்கள் அவருடைய வாக்கைக் கேட்கவும், தங்கள் வியாதிகளில் சொஸ்தமடையவும் கூடிவருவார்கள்.

16. அவரோவெனில், வனாந்தரத்தில் தனித்துப்போய் ஜெபஞ்செய்வார். (மத். 14-26; மாற். 6-46.)

17. பின்னும் ஒருநாள் சம்பவித்ததேதெனில்: யேசுநாதர் உட்கார்ந்து போதித்துக்கொண்டிருக்கையில், கலிலேயாவிலும் யூதேயாவிலுமுள்ள சகல ஊர்களிலிருந்தும், எருசலேம்நகரத்திலுமிருந்தும் வந்த பரிசேயரும், நீதிசாஸ்திரிகளும் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களைக் குணப்படுத்துகிறதற்குக் கர்த்தருடைய வல்லமையும் இருந்தது.

18. அப்போது இதோ, சிலமனிதர் திமிர்வாதமுள்ள ஓர் மனிதனைக் கட்டிலோடு தூக்கிக்கொண்டு, அவனை உள்ளே கொண்டுவரவும், அவர் முன்பாக வைக்கவும் வகைதேடினார்கள். (மத். 9-2; மாற். 2-3.)

19. ஆனால் ஜனக்கும்பலினிமித்தம் அவனை எவ்வழியாய் உள்ளே கொண்டு வருகிறதென்று வகைகாணாமல், வீட்டின்மேல் ஏறி, ஓடுகளின் வழியாய் அவனை யேசுநாதர் முன்பாக மத்தியிலே கட்டிலோடு இறக்கினார்கள்.

20. அவர்களுடைய விசுவாசத்தை அவர் கண்டு: மனிதனே, உன்பாவங்கள் உனக்குப் பொறுக்கப்பட்டன என்றார்.

21. அப்போது வேதபாரகரும் பரிசேயரும்: தேவதூஷணஞ்சொல்லுகிற இவன் யார்? கடவுள் ஒருவரோயன்றிப் பாவங்களை மன்னிக்கக் கூடியவர் யார் என்று சொல்லி, யோசிக்கத்தொடங்கினார்கள்.

22. ஆனால் யேசுநாதர் அவர்களுடைய யோசனைகளை அறிந்து, அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாகத் திருவுளம்பற்றினதாவது: நீங்கள் உங்களிருதயங்களில் யோசிக்கிறதென்ன?

23. பாவங்கள் உனக்குப் பொறுக்கப்பட்டன என்று சொல்லுவதோ, அல்லது நீ எழுந்துநட என்றுசொல்லுவதோ எது அதிக எளிது?

24. பூமியிலே பாவங்களைப் பொறுக்கும்படி மனுமகனுக்கு வல்லமை உண்டென்று, நீங்கள் அறிந்துகொள்ளவேண்டியதென்று சொல்லி, அவர் திமிர்வாதக்காரனைப் பார்த்து: இதோ, உனக்குச் சொல்லுகிறேன், நீ எழுந்து உன் கட்டிலை எடுத்துக்கொண்டு, உன் வீட்டுக்குப்போ என்றார்.

14. மத். 8-ம் அதி. 6-ம் வசனத்தின் வியாக்கியானம் காண்கவும்.

25. உடனே, அவன் அவர்களுக்கு முன்பாக எழுந்து, தான் படுத்திருந்த கட்டிலை எடுத்துக்கொண்டு, சர்வேசுரனைப் புகழ்ந்துகொண்டாடித் தன் வீட்டுக்குப் போனான்.

26. இதினாலே, எல்லோரும் பிரமிப்படைந்து, சர்வேசுரனைத் தோத்தரித்ததுமன்றி, பயம் நிறைந்தவர்களாய்: ஆச்சரியத்துக்குரியவைகளை இன்று கண்டோம் என்றார்கள்.

27. இவைகளுக்குப் பிற்பாடு, யேசுநாதர் புறப்பட்டு, ஆயத்துறையில் உட்கார்ந்திருந்த லேவி என்னும் பேருள்ள ஒரு ஆயக்காரனைக் கண்டு அவரைநோக்கி: என்னைப் பின்செல்லுவாய் என்றார். (மத். 9-9; மாற். 2-14.)

28. அவர் எல்லாவற்றையும் விட்டு எழுந்து, அவரைப் பின்சென்றார்.

29. மேலும் அந்த லேவி என்பவர் தன் வீட்டில் அவருக்குப் பெரியவிருந்து செய்தார். அப்போது ஆயக்காரரும், அவர்களோடுகூடப் பந்தியமர்ந்த மற்றவர்களும் பெருங் கூட்டமாயிருந்தார்கள்.

30. அதினிமித்தம் பரிசேயரும், அவர்களுடைய வேதபாரகரும் முறுமுறுத்து, அவருடைய சீஷர்களை நோக்கி: நீங்கள் ஆயக்காரரோடும், பாவிகளோடும் போசன பானஞ்செய்வானேன் என்றார்கள்.

31. அதற்கு யேசுநாதர் பிரத்தியுத்தாரமாக: வைத்தியன் நோயாளிகளுக்கு அல்லாதே, சுகமாயிருக்கிறவர்களுக்கு வேண்டுவதில்லை.

32. நீதிமான்களையல்ல, பாவிகளையே பச்சாத்தாபத்துக்கு அழைக்க வந்தேன் என்றார்.

33. மீளவும் அவர்கள் யேசுநாதரை நோக்கி: அருளப்பருடைய சீஷர்கள் அடிக்கடி ஒருசந்திபிடித்து, ஜெபம்பண்ணுகிறார்கள்; பரிசேயருடைய சீஷர்களும் அப்படியே செய்கிறார்கள்; உம்முடைய சீஷரோ, போசனபானம்பண்ணுகிறார்களே; அது என்னத்தினாலே என்று கேட்டார்கள். (மாற். 2-18.)

34. அதற்கு அவர்: மணவாளன் தங்களோடு இருக்கையிலே, நீங்கள் மணவாளனுடைய தோழர்களை உபவாசிக்கச்செய்யக்கூடுமோ?

35. ஆகிலும் மணவாளன் அவர்களிடத்திலிருந்து எடுபடுகிற நாட்கள் வரும்; அந்த நாட்களிலே அவர்கள் உபவாசம் பண்ணுவார்கள் என்றார்.

36. பின்னும் அவர்களுக்கு ஒரு உவமையையும் சொன்னார்: (அதாவது) எவனும் புதிய வஸ்திரத்தில் துண்டெடுத்துப் பழைய வஸ்திரத்துக்கு ஒட்டுப்போடமாட்டான்; அப்படிச்செய்தால், அவன் புதியதையும் கிழிக்கிறான், புதியதில் எடுத்த ஒட்டும் பழையதுக்கு ஒவ்வாது.

37. அவ்வண்ணமே, எவனும் புதுத்திராட்ச ரசத்தைப் பழைய சித்தைகளில் வார்க்கமாட்டான். அப்படிச் செய்தால், புது ரசமானது சித்தைகளை வெடிப்பிக்கவே, ரசமும் சிந்திப்போம், சித்தைகளும் சேதமாகும்.

38. ஆகையால் புதுரசத்தைப் புதுச் சித்தைகளில் வார்க்கவேண்டும். அப்பொழுது இரண்டும் காப்பாற்றப்படும்.

30. மத். 9-ம் அதி. 11-ம் வசனம் வியாக்கியானம் காண்க.

35. மத். 9-15. வியாக்கியானம் காண்க.

38. மத். 9-17. வியாக்கியானம் காண்க.

39. அல்லாமலும், ஒருவனும் பழைய ரசத்தைக் குடித்து, உடனே புது ரசத்தை விரும்பமாட்டான். பழைய ரசமே தாவிலே என்பான் என்று திருவுளம்பற்றினர்.

## 6-ம். அதிகாரம்.

*கிறீஸ்துநாதர் சீஷர்களுக்குச் சனுவாகப் பேசினதும், சூம்பின கரத்தைச் சௌக்கியப்படுத்தினதும், அப்போஸ்தலர்களைத் தெரிந்துகொண்டதும், மலையின் மேல் செய்த பிரசங்கத்தின் சங்க்ஷேபமும்.*

1. இரண்டாம் முதல் ஓய்வுநாளிலே அவர் விளைவு நிலங்களின்வழியாய்ப் போகும்போது, சம்பவித்ததேதெனில், அவருடையசீஷர்கள் கதிர்களைக் கொய்து, கைகளால் கசக்கித் தின்றார்கள். (மத். 12-1 ; மாற். 2-23.)

2. பரிசேயரில் சிலர் அவர்களை நோக்கி : ஓய்வு நாட்களிலே செய்யத்தகாததை நீங்கள் ஏன் செய்கிறீர்கள் என்றார்கள்.

3. யேசுநாதர் அவர்களுக்கு மாறுத்தரமாகச் சொன்னதாவது : தாவீதென்பவரும், அவரோடிருந்தவர்களும் பசியாயிருந்தபோது, அவர்செய்ததை நீங்கள் வாசித்ததில்லையா ?

4. எப்படி அவர் சர்வேசுரனுடைய ஆலயத்தில் பிரவேசித்து, ஆசாரியர் மாத்திரமேயன்றி மற்றெவரும் உண்ணத் தகாத தேவசமுகத்து அப்பங்களை எடுத்து, தாமும் சாப்பிட்டு, தம்மோடு கூட இருந்தவர்களுக்கும் கொடுத்தார் என்றார். (1 அர. 21-6 ; யாத். 29-32.)

5. மேலும், மனுமகன் ஓய்வுநாளுக்கும் கர்த்தராயிருக்கிறொன்று அவர்களுக்குத் திருவுளம்பற்றினர்.

6. பின்னும் வேறொரு ஓய்வுநாளிலே அவர் ஜெப ஆலயத்தில் பிரவேசித்துப் போதிக்கும்படியாயிற்று. அங்கே ஒரு மனிதனிருந்தான் ; அவனுடைய வலதுகை சூம்பிப்போய் இருந்தது. (மத். 12-10 ; மாற். 3-1.)

7. வேதபாரகரும், பரிசேயரும் அவர் மேல் குற்றஞ்சாட்ட வழிகிடைக்கும்படி, அவர் ஓய்வுநாளிலே சுகப்படுத்துவாரோ என்று கவனமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

8. அவரோ, அவர்களுடைய எண்ணங்களை அறிந்து, சூம்பின கையையுடைய மனிதனைநோக்கி: நீ எழுந்து, நடுவிலே நில் என்றார். அவனும் எழுந்து நின்றான்.

---

39. இந்த உவமைக்கு அர்த்தமாவது : பழைய திராட்ச ரசத்திலும், புது திராட்ச ரசம் அதிக மதுரமும் பெலமுள்ளதாயிருந்தாலும், பழைய ரசத்தைப் பானம் பண்ணப் பழகினவர்கள் புதிய ரசத்துக்குப் பிரியப்பட மாட்டார்களென்பது போல, பழைய ஏற்பாட்டின் ஆசாரங்களை அநுசரித்துக்கொண்டு வந்தவர்கள் உடனே புதிய ஏற்பாட்டின் முறைமைப்படிக்கு நடக்கப் பிரியப்படமாட்டார்களென்பதால், அவர்களை மெள்ள மெள்ள அதில் உட்படுத்த வேண்டுமென்று அர்த்தமாம்.

1. **முதல் ஓய்வுநாளில் :**— இவ்வாக்கியத்துக்குக் கிரந்தகர்த்தாக்கள் பலவித வியாக்கியானம் செய்கிறார்கள். அதில் ஒன்றை இங்கே குறிப்போம் : யூதர்களுக்குள் வருஷத்திலே முதல் வகுப்புத் திருநாட்கள் மூன்று நடந்தன. அம்மூன்றிலும் பேர்போனது பாஸ்குத் திருநாள். 2-வது பெந்தக்கோஸ்தஸ் திருநாள். 3-வது செநோப்பேயியா என்கிற கூடாரத் திருநாள். இந்த மூன்றில் 2-ம் திருநாளாகிய பெந்தக்கோஸ்தஸ் இந்த வாக்கியத்தில் 2-ம் முதல் ஓய்வுநாளென்று சொல்லப்படுகின்றது. இந்தக்கணக்கின்படி முதலாம் முதல் ஓய்வு நாளென்றால், பாஸ்குத் திருநாளாகும். 3-ம் முதல் ஓய்வு நாளென்றால் கூடாரத்திருநாளாகும்.

4. மத். 12-ம் அதி. 4-ம் வசனம் வியாக்கியானம் காண்க.

9. அப்பொழுது யேசுநாதர் அவர்களை நோக்கி: ஓய்வு நாட்களில் நன்மைசெய்யலாமோ, தின்மை செய்யலாமோ, சீவனைக்காக்கலாமோ, அழிக்கலாமோ? நான் உங்களைக்கேட்கிறேன் என்று சொல்லி,

10. அவர்கள் எல்லாரையும் சுற்றிப் பார்த்து, அந்த மனிதனை நோக்கி: நீ உன் கையை நீட்டு என்றார். அவன் நீட்டினான். உடனே அவனுக்குக் கை சொஸ்தமாயிற்று.

11. அவர்களோ, முழுப்பைத்தியம் பிடித்தவர்களாய் யேசுநாதருக்கு என்ன செய்யலாமென்று ஒருவரோடு ஒருவர் பேசிக்கொண்டிருந்தார்கள்.

12. அந்நாட்களிலே சம்பவித்ததேதெனில்: அவர் ஜெபஞ்செய்யத்தக்கதாக, ஒருமலைக்குப் புறப்பட்டுப்போய், சர்வேசுரனை வேண்டிக் கொள்வதிலே இரவெல்லாம் செலவழித்தார்.

13. மேலும் பொழுதுவிடிந்தபோது, அவர் தம்முடைய சீஷர்களை அழைத்து, அவர்களில் பன்னிருவரைத்தெரிந்துகொண்டு, அவர்களுக்கு அப்போஸ்தலர் என்று பேரிட்டார். (மத். 10-1; மார்ற். 3-13.)

14. (அவர்கள் யாரெனில்) இராயப்பனென்று தாம் காரணப்பெயரிட்ட சீமோனும், இவருடைய சகோதரனாகிய பிலவேந்திரரும், இயாகப்பரும், அருளப்பரும், பிலிப்பும், பர்த்தலோமேயும்,

15. மத்தேயும், தோமையாரும், அல்பேயின் குமாரனாகிய யாகப்பரும், செலோத்தேஸ் என்னப்பட்ட சீமோனும்,

16. இயாகப்பருடைய சகோதரனாகிய யூதாவும், துரோகியான யூதாஸ் இஸ்க்காரியோத்து என்பவனுமாம்.

17. பின்னும் அவர் அவர்களோடு கூட இறங்கி, மைதானமான ஓரிடத்திலே நின்றார். அங்கே அவருடைய சீஷர்கூட்டமும், யூதேயாநாட்டின் எத்திசையிலிருந்தும், எருசலேம் நகரத்திலிருந்தும், தீர், சீதோன் நகரங்களின் கடற்கரைகளிலிருந்தும் வந்த ஏராளமான ஜனங்களும் இருந்தார்கள்.

18. இவர்கள் அவருடைய வாக்கைக்கேட்கவும், தங்கள் நோய்களினின்று சுகமாக்கப்படவும் வந்திருந்தார்கள். அசுத்தஅரூபிகளால் உபாதிக்கப்பட்டவர்களும் சொஸ்தமானார்கள்.

19. அவரிடத்திலிருந்து ஒரு சக்தி புறப்பட்டு, எல்லாரையும் குணமாக்கினபடியினாலே, ஜனங்களெல்லாரும் அவரைத் தொடும்படி வழி தேடிக்கொண்டிருந்தார்கள்.

20. அப்போது அவர் தம்முடைய சீஷர்கள்மேல் தமது கண்களை ஏறெடுத்துப்பார்த்துத் திருவுளம்பற்றினதாவது: தரித்திரர்களே, நீங்கள் பாக்கியவான்கள்; ஏனெனில் சர்வேசுரனுடைய இராச்சியம் உங்களுடையது. (மத். 5-2.)

21. இப்பொழுது பசியாயிருக்கிறவர்களே, நீங்கள் பாக்கியவான்கள்; ஏனெனில் திருப்தியடைவீர்கள். இப்பொழுது அழுகிறவர்களே, நீங்கள் பாக்கியவான்கள்; ஏனெனில் சிரிப்பீர்கள். (மத். 5-6.)

22. மனுமகனைப்பற்றி ஜனங்கள் உங்களைப் பகைத்து, உங்களை விலக்கித் தூஷணித்து, உங்கள்பேரை ஆகாதென்று தள்ளும்போது, நீங்கள் பாக்கியவான்களாயிருப்பீர்கள். (மத். 5-11.)

23. அந்நாளிலே அகமகிழ்ந்து, களிகூருங்கள். ஏனெனில் இதோ, பரலோகத்திலே உங்கள் சம்பாவனை ஏராளமாயிருக்கின்றது. அவர்களுடைய பிதாக்களும் தீர்க்கதரிசிகளுக்கு இவ்வண்ணமே செய்தார்கள்.

24. ஆனால் ஐசுவரியவான்களே, உங்களுக்கு ஐயோகேடு; ஏனெனில் நீங்கள் உங்கள் ஆறுதலையடைந்திருக்கிறீர்கள். (எக். 31-7; அமோஸ். 6-1.)

25. திருப்தி அடைந்திருக்கிறவர்களே, உங்களுக்கு ஐயோகேடு! ஏனெனில் பசியாயிருப்பீர்கள்; இப்போது சிரிக்கிறவர்களே, உங்களுக்கு ஐயோகேடு! ஏனெனில் அழுது புலம்புவீர்கள். (இசை. 63-13.)

26. ஜனங்கள் உங்களைப் புகழும்போது (உங்களுக்கு) ஐயோகேடு! ஏனெனில் அவர்களுடைய பிதாக்கள் கள்ளத் தீர்க்கதரிசிகளுக்கும் இவ்வாறே செய்தார்கள்.

27. எனக்குச் செவிகொடுக்கிற உங்களுக்கு நான் சொல்லுகிறதாவது: உங்கள் சத்துருக்களை நேசியுங்கள்; உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள்; (மத். 5-44.)

28. உங்களைச் சபிக்கிறவர்களை ஆசீர்வதியுங்கள்; உங்கள்மேல் அபாண்டம் சொல்லுகிறவர்களுக்காக வேண்டிக்கொள்ளுங்கள்;

29. உன்னை ஒரு கன்னத்தில் அடிக்கிறவனுக்கு மறு கன்னத்தையும் காட்டு; உன்னிடத்திலிருந்து உன் போர்வையைப் பறிக்கிறவனுக்கு உன் அங்கியையும் எடுத்துக்கொள்ளத் தடை செய்யாதே. (மத். 5-39; 1 கொ. 6-7.)

30. உன்னைக் கேட்கிற எவனுக்கும் கொடு; உன்னுடையவைகளைப் பறித்துக் கொள்ளுகிறவனிடத்தில் அவைகளைத் திரும்பக் கேளாதே;

31. மனுஷர் உங்களுக்கு எவ்விதம் செய்ய வேண்டுமென்று விரும்புகிறீர்களோ, அவ்விதமே நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள். (மத். 7-12.)

32. அன்றியும் உங்களை நேசிக்கிறவர்களையே நீங்கள் நேசித்தால், உங்களுக்குப் பலன் என்ன? பாவிகளும் தங்களை நேசிக்கிறவர்களை நேசிக்கிறார்களே. (மத். 5-46.)

33. உங்களுக்கு நன்மைசெய்கிறவர்களுக்கே நீங்கள் நன்மைசெய்தால், உங்களுக்குப் பலன் என்ன? பாவிகளும் இவ்விதம் செய்கிறார்களே.

34. எவர்களிடத்திலிருந்து (பிரதிபலன்) பெற்றுக்கொள்ள நம்புகிறீர்களோ, அவர்களுக்கே நீங்கள் கடன் கொடுத்தால், உங்களுக்குப் பலன் என்ன? சரிக்குச்சரி பெற்றுக்கொள்ளலாமென்று பாவிகளும் பாவிகளுக்குக் கடன்கொடுக்கிறார்களே. (மத். 5-42; உப. 15-8.)

35. நீங்களோ உங்கள் சத்துருக்களைச் சிநேகியுங்கள்; நன்மை செய்யுங்கள்; ஏதுவும் எதிர்பாராமல் கடன் கொடுங்கள். அப்பொழுது உங்கள் சம்பாவனை மிகுதியாயிருக்கும், அதிஉன்னதருக்குப் புத்திரருமாயிருப்பீர்கள்; ஏனெனில் அவர் நன்றியறியாதவர்களுக்கும், தீயோர்களுக்கும் காருண்ணியராயிருக்கிறார்.

36. ஆகையால் உங்கள் பிதா இரக்கமுள்ளவராய் இருக்கிறதுபோல, நீங்களும் இரக்கமுள்ளவர்களாய் இருங்கள்.

37. ஒருவரையும் குற்றவாளிகளாகத் தீர்க்காதேயுங்கள்; நீங்களும் குற்றவாளிகளாகத் தீர்க்கப்படமாட்டீர்கள். எவன்மேலும் ஆக்கினைத் தீர்வையிடாதேயுங்கள். உங்கள் மேலும் ஆக்கினைத் தீர்வையிடமாட்டார்கள். மன்னியுங்கள், நீங்களும் மன்னிக்கப்படுவீர்கள். (மத். 7-1.)

38. கொடுங்கள், உங்களுக்கும் கொடுக்கப்படும்; அமுக்கவும் குலுக்கவும்பட்டுச் சரிந்துவிழும் நல்ல அளவை உங்கள் மடியில் போடுவார்கள். ஏனெனில் நீங்கள் அளந்த அளவினாலேயே உங்களுக்கும் பதில் அளக்கப்படும் என்றார். (மத். 7-3.)

39. மீளவும் அவர் அவர்களுக்கு ஒரு உவமையைச் சொன்னார்: குருடனுக்குக் குருடன் வழிகாட்டக் கூடுமோ? இருவரும் குழியிலல்லோ விழுவார்கள்?

40. சீஷன் குருவுக்கு மேற்பட்டவனல்ல; எவனும் தன் குருவைப்போல் இருப்பானாகில், உத்தமனாயிருப்பான். (மத். 10-24; அரு. 13-16.)

41. நீ உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தைக் கவனியாமல், உன் சகோதரன் கண்ணிலிருக்கிற துரும்பைப் பார்க்கிறதென்ன? (மத். 7-3.)

42. அல்லது, உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தை நீயே பாராமல், உன் சகோதரனை நோக்கி: சகோதரனே பொறு, உன் கண்ணிலிருக்கிற துரும்பை எடுத்துவிடுகிறேன் என்று சொல்லக் கூடியதெப்படி? கள்ள ஞானியே, முந்த முந்த உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தைத் தள்ளிவிடு. அதன்பின் உன் சகோதரன் கண்ணிலிருக்கிற துரும்பை எடுத்துப்போடப் பார்ப்பாய்.

43. ஏனெனில் கெட்ட கனியைக் கொடுக்கிற நல்ல மரமுமில்லை; நல்ல கனியைக் கொடுக்கிற கெட்ட மரமுமில்லை. (மத். 7-18; 12-33.)

44. ஆகையால் ஒவ்வொரு மரமும் தன்தன் கனியைக்கொண்டே அறியப்படும். ஏனென்றால் முட்செடிகளில் அத்திப்பழங்களைப் பறிக்கிறதுமில்லை; முள்ளியில் திராட்சக் குலைகளை அறுக்கிறதுமில்லை.

45. நல்ல மனிதன் தன் இருதயமாகிய நல்ல பொக்கிஷத்தினின்று நல்லவைகளை எடுத்துக்காட்டுகிறான். கெட்ட மனிதனும் கெட்ட பொக்கிஷத்தினின்று கெட்டவைகளை எடுத்துக் காட்டுகிறான். ஏனெனில் இருதயத்தின் நிறைவாகரத்தினால் வாய் பேசுகின்றது.

46. நான் சொல்லுகிறவைகளை நீங்கள் செய்யாதிருக்கையில், என்னை நோக்கி நீங்கள்: சுவாமீ! சுவாமீ! என்று அழைப்பானேன்? (மத். 7-21; உரோ. 2-13.)

47. என்னிடத்தில் வந்து, என் வாக்கியங்களைக்கேட்டு, அவைகளை அநுசரிக்கிறவன் யாருக்கு ஒப்பாயிருக்கிறானென்று உங்களுக்குக் காண்பிப்பேன். (யாக. 1-22; மத். 7-21, 24.)

48. ஆழமாய்த்தோண்டி, கற்பாறையின்மேல் அஸ்திவாரமிட்டு, வீட்டைக் கட்டுகிற மனுஷனுக்கு ஒப்பாயிருக்கிறான். வெள்ளம் புரண்டுவந்து, நதியானது அந்த வீட்டின்மேல் மோதியும், அதை அசைக்கமாட்டாமற்போயிற்று; ஏனெனில் அது கற்பாறையின்மேல் அஸ்திவாரமிடப்பட்டிருந்தது.

49. ஆனால் கேட்டும், அநுசரியாதவன் அஸ்திவாரமின்றி, மண்ணின்மேல் தன் வீட்டைக் கட்டின மனுஷனுக்கு ஒப்பாயிருக்கிறான். நதியானது அந்த வீட்டின்மேல் மோதவே, அது விழுந்தது; அதின் சேதமும் மிகுதியாயிற்று என்றார்.

## 7-ம். அதிகாரம்.

*யேசுநாதர் செந்தூரியனுடைய விசுவாசத்தைப் பாராட்டினதும், விதவையின் மகனை உயிர்ப்பித்ததும், அருளப்பர் தம்முடைய சீஷர்களை யேசுநாதரிடத்தில் அனுப்பினதும், பாவியான ஓர் ஸ்திரீ கிறீஸ்துநாதருடைய பாதத்தைத் தைலத்தால் பூசினதும்.*

1. அவர் தம்முடைய வார்த்தைகளையெல்லாம் ஜனங்களின் செவிகளில் படச் சொல்லி முடித்த பின்பு, கப்பர்நாவும் ஊருக்குப்போனார். (மத். 8-5.)

2. அங்கே செந்தூரியனாகிய ஒருவனுக்கு அருமையாயிருந்த ஒரு ஊழியன் வியாதிப்பட்டு, சாகக்கிடந்தான்.

3. அவன் யேசுநாதரைப்பற்றிக் கேள்விப்பட்டபோது, யூதருடைய மூப்பரை அவரிடத்தில் அனுப்பி, அவர் வந்து, தன் ஊழியனைக் குணமாக்கவேண்டுமென்று மன்றாடினான்.

4. ஆகையால் அவர்கள் யேசுநாதரிடத்தில் வந்து, அவரை வருந்தி மன்றாடி: தேவரீர் இதை அவனுக்குச் செய்தருளுவதற்கு, அவன் பாத்திரவான்தான்.

5. ஏனெனில் அவன் நம்முடைய ஜனத்தையும் நேசிக்கிறான்; எங்களுக்கு ஒரு ஜெப ஆலயத்தையும் கட்டிக் கொடுத்தான் என்று அவரிடத்தில் சொன்னார்கள்.

6. ஆதலால் யேசுநாதர் அவர்களோடுகூடப் போனார். அவர் வீட்டுக்குக் கொஞ்சந் தூலையில் வரும்போது, செந்தூரியன் தன் சிநேகிதர்களை அவரிடத்தில் அனுப்பிச் சொல்லுவித்ததாவது: ஆண்டவரே, நீர் வருத்தப்படவேண்டாம்; ஏனெனில் என் இல்லத்தில் நீர் பிரவேசிக்க நான் பேறுபெற்றவனல்ல.

7. அதைப்பற்றியே, நான் உம்மிடத்தில் வரவும் என்னைப் பாத்திரனென்று எண்ணவில்லை. நீர் ஒரு வார்த்தை சொல்லியருளும்; என் ஊழியன் சொஸ்தமடைவான்;

8. ஏனெனில், நானும் அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்ட மனிதனயிருக்கிறேன். எனக்குக் கீழ்ப்பட்ட போர்ச்சேவகருமுண்டு. நான் ஒருவனை நோக்கி: போ என்றால், போகிறான். வேறொருவனைப் பார்த்து: வா என்றால், வருகிறான். என் தாசனை நோக்கி: இதைச்செய் என்றால், செய்கிறான் என்றான்.

9. யேசுநாதர் இதைக் கேட்டு ஆச்சரியப்பட்டு, தம்மைப் பின்சென்று வருகிற ஜனங்களைத் திரும்பிப் பார்த்து: நான் இஸ்ராயேலரிடத்தில் இம்மாத்திரம் விசுவாசத்தைக் காணவில்லையென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

10. அனுப்பப்பட்டவர்கள் வீட்டுக்குத் திரும்பிவந்தபோது, வியாதியாயிருந்த ஊழியன் சுகமாயிருக்கிறதைக் கண்டார்கள். (மத். 8-8.)

11. அதன் பிறகு சம்பவித்ததென்னவென்றால், அவர் நயீமென்னும் பட்டணத்துக்குப் போகையில், அவரோடுகூட அவருடைய சீஷர்களும், திரளான ஜனங்களும் போனார்கள்.

12. அவர் பட்டணத்து வாசலுக்குச் சமீபமாய் வருகையில், இதோ தன் தாய்க்கு ஏக குமாரனாகிய ஒருவன் மரித்து, வெளியில் கொண்டுவரப்பட்டான். அவளோ, விதவையாயிருந்தாள். பட்டணத்திலிருந்து வெகு ஜனங்களும் அவளோடுகூட வந்தார்கள்,

13. கர்த்தர் அவளைக் கண்டபோது, அவள்மேல் மனமிரங்கி, அவளைப் பார்த்து: நீ அழவேண்டாம் என்று சொல்லி,

14. கிட்ட நெருங்கிப் பாடையைத் தொட்டார். அதைச் சுமந்தவர்களோ நின்றார்கள். அப்பொழுது அவர்: வாலிபனே, உனக்குச் சொல்லுகிறேன் எழுந்திரு என்றார்.

15. உடனே, இறந்தவன் எழுந்திருந்து, உட்கார்ந்து பேசத்துடங்கினன். அவனை அவர் அவன் தாயிடம் ஒப்புவித்தார்.

10. மத்தேயு 8-ம் அதிகாரத்தில் சேர்வைக்காரன் தானே யேசுநாதரிடத்தில் நேராய் வந்து, விண்ணப்பஞ் செய்ததாகச் சொல்லப்பட்டிருக்க, இவ்விடத்தில் அவன் யூதருடைய மூப்பர்களை அனுப்பி விண்ணப்பஞ் செய்ததாக எழுதப்பட்டிருக்கிறது. இதை ஒரு விகற்பமென்று எண்ணக் கூடாது; ஏனெனில் ஒரு எஜமான் தன் ஸ்தானதிபதியைக் கொண்டு செய்கிற காரியத்தைத் தான் தானே செய்கிறதாகச் சொல்லுகிற வழக்கமுண்டு.

16. சகலரும் பயமடைந்து, மகா தீர்க்கதரிசி நமது நடுவிலே தோன்றினாரென்றும், கடவுள் தமது பிரசைகளைச் சந்தித்தருளினாரென்றும் சொல்லிச் சர்வேசுரனை ஸ்துதித்தார்கள் (லூக். 24-19; அரு. 4-19.)

17. அவரைப்பற்றி இந்தச் செய்தி யூதேயா தேசமுழுவதிலும், சுற்றியிருக்கிற எத்திசையிலும் பரம்பிற்று.

18. அருளப்பருடைய சீஷர்கள் இவைகளையெல்லாம் அவருக்கு அறிவித்தார்கள். (மத். 11-2.)

19. அப்பொழுது அருளப்பர் தம்முடைய சீஷரில் இருவரை அழைத்து, யேசுநாதரிடத்தில் அனுப்பி: வர இருக்கிறவர் நீர்தானோ, அல்லது வேறொருவருக்கு எதிர்பார்த்திருக்கிறோமோ என்று சொல்லுவித்தார். (மத். 11-2.)

20. அவ்வண்ணமே அவர்கள் அவரிடத்தில் வந்து: ஸ்நாபக அருளப்பர் எங்களை உம்மிடத்தில் அனுப்பி, வர இருக்கிறவர் நீர்தானோ, அல்லது வேறொருவருக்கு எதிர்பார்த்திருக்கிறோமோ என்று கேட்கிறார் என்றார்கள்.

21. அந்நேரத்தில் அவர் வியாதிகளையும், கொடியநோய்களையும், அசுத்த அரூபிகளையும் நீக்கி, அநேகரைக் குணப்படுத்தி, அநேகம் குருடருக்கும் பார்வையளித்தார்.

22. பின்னும் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக: நீங்கள் போய், கேட்டவைகளையும், கண்டவைகளையும் அருளப்பரிடத்தில் அறிவியுங்கள்; குருடர் காண்கிறார்கள்; முடவர் நடக்கிறார்கள்; குஷ்டரோகிகள் சுத்தமாகிறார்கள்; செவிடர் கேட்கிறார்கள்; மரித்தோர் உயிர்த்தெழும்புகிறார்கள்; ஏழைகளுக்குச் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படுகிறது;

23. ஆயினும், என்னைப்பற்றி இடறல்படாத எவனும் பாக்கியவான் என்று திருவும்பற்றினார்.

24. அருளப்பருடைய தூதர்கள் புறப்பட்டுப் போனபின்பு, யேசுநாதர் அருளப்பரைக் குறித்து ஜனங்களை நோக்கிச் சொன்னதாவது: கானகத்திலே நீங்கள் எதைப் பார்க்கப்போனீர்கள்? காற்றினால் அசைந்தாடும் நாணலையோ?

25. எதைத்தான் பார்க்கப் போனீர்கள்? மெல்லிய உடைகளை அணிந்த மனிதனையோ? இதோ விலையுயர்ந்த உடைகளை அணிந்து, செல்வத்திலிருக்கிறவர்கள் இராஜ மாளிகைகளில் இருக்கிறார்களே?

26. பின்னும் எதைப்பார்க்கப் போனீர்கள்? தீர்க்கதரிசியையோ? ஆம், தீர்க்கதரிசியிலும் பெரியவரைத்தான் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்;

27. ஏனெனில் இதோ, நான் என் தூதனை உமது சமுகத்துக்குமுன் அனுப்புகிறேன்; அவன் உமக்கு முன்பாக உமது வழிகளை ஆயத்தம்பண்ணுவான் என்று இவரைப்பற்றியே எழுதப்பட்டிருக்கிறது.

---

19. மத். 11-ம் அதி. 3-ம் வசனம் வியாக்கியானம் காண்க.

22. உலக இரட்சகர் வரும்போது இப்படிப்பட்ட அற்புதங்களையெல்லாஞ் செய்வாரென்று இசையாஸ் தீர்க்கதரிசி 35-ம் அதி. 54-ம் வச; 61-ம் அதி. 16-ம் வச. முதலிய இடங்களில் வசனித்திருக்கிறார். ஆகையால் இசையாஸ் தீர்க்கதரிசியால் அறிவிக்கப்பட்ட இரட்சகர் தாம்தாமென்று அருளப்பருடைய சீஷர்களுக்கு ஒப்பிக்கத்தக்கதாக அவர்களுக்கு முன்பாக இந்த அற்புதங்களைச் செய்தார்.

28. ஆதலால் ஸ்திரீகளிடத்தில் பிறந்தவர்களுக்குள்ளே ஸ்நாபக அருளப்பனைப்பார்க்கப் பெரிய தீர்க்கதரிசி ஒருவனுமில்லை என்று, உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகிலும் சர்வேசுரனுடைய இராச்சியத்தில் அதிக சிறியவனாயிருக்கிறவன் இவரிலும் பெரியவனாயிருக்கிறான் என்றார்.

29. இதைக்கேட்ட எல்லா ஜனங்களும், ஆயக்காரரும் சர்வேசுரனை நீதிபரனென்று புகழ்ந்தார்கள். இவர்கள் அருளப்பருடைய ஞானஸ்நானம்பெற்றவர்கள்.

30. ஆனால் அவரிடத்தில் ஞானஸ்நானம் பெறாதவர்களான பரிசேயரும், நீதி சாஸ்திரிகளும் தங்களுக்குக் கேடாகச் சர்வேசுரனுடைய ஆலோசனையைப் புறக்கணித்தார்கள்.

31. பின்னும் கர்த்தர் திருவுளம்பற்றினதாவது: ஆகையால் இந்தச்சந்ததியின் மனுஷரை யாருக்கு ஒத்தவர்கள் என்பேன்? இவர்கள் யாருக்கு ஒப்பாயிருக்கிறார்கள்?

32. சந்தை வெளியில் உட்கார்ந்து, ஒருவர் ஒருவரோடு பேசி: உங்களுக்காக நாங்கள் இசை குழலூதியும், நீங்கள் நடனம் செய்யவில்லை; நாங்கள் புலம்பியும், நீங்கள் அழவில்லை என்று சொல்லுகிற சிறுவர்களுக்கு ஒப்பாயிருக்கிறார்கள்.

33. எவ்வாறெனில், ஸ்நாபக அருளப்பர் அப்பம் புசியாதவருமாய், திராட்சரசம் குடியாதவருமாய் வந்தார். அதினாலே நீங்கள் அவரைப்பேய்பிடித்தவன் என்கிறீர்கள். (மத். 3-4; மாற். 1-6.)

34. மனுமகன் போசனபானம் பண்ணுகிறவராய் வந்தார்; அவரை நீங்கள் இதோ பேருண்டியும், திராட்சரசத்தைக் குடிக்கிறவனுமாகிய மனிதன், ஆயக்காரருக்கும் பாவிகளுக்கும் சிநேகிதன் என்கிறீர்கள்.

35. ஆயினும் ஞானமானது நீதியுள்ளதென்று தன் சகல புத்திரராலும் ஒப்பிக்கப்பட்டது என்றார்.

36. பிற்பாடு பரிசேயரில் ஒருவன் தன்னோடு அவர் அசனம் பண்ணவேண்டுமென்று அவரை மன்றாடினான். ஆதலால் அவர் அந்தப் பரிசேயனுடைய வீட்டில் பிரவேசித்துப் பந்தியமர்ந்தார்.

37. அப்பொழுது இதோ, பட்டணத்திலே பாவியாயிருந்த ஓர் ஸ்திரீ, அவர் பரிசேயனுடைய வீட்டில் பந்தியமர்ந்திருக்கிறாரென்று அறிந்து, ஓர் பரிமளதைல சிமிழைக் கொண்டுவந்து, (மத். 26-7; மாற். 14-3; அரு. 12-3.)

38. அவருடைய பாதங்களினருகே பின்தாங்கி நின்று, தன் கண்ணீரால் அவருடைய பாதங்களைக்கழுவத்துவக்கித் தன் கூந்தலால் துடைத்து, அவருடைய பாதங்களை முத்தஞ்செய்து, பரிமள தைலத்தால் பூசினாள்.

39. அவரை அழைத்த பரிசேயன் இதைக்கண்டு: இவர் தீர்க்கதரிசியாயிருந்தால், தம்மைத் தொடுகிற ஸ்திரீ யாரென்றும், எப்படிக்கொத்தவளென்றும் சந்தேகமற அறிந்திருப்பாரே; அவள் பாவியல்லோ என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டான்.

28. மத். 11-ம் அதி. 11-ம் வசன. வியாக்கியானம் காண்க.

35. மத். 11-ம் அதி. 19-ம் வசன. வியாக்கியானம் காண்க.

40. யேசுநாதர் அவனைநோக்கிப் பிரத்தியுத்தாரமாக: சீமோனே நான் உனக்கு ஒருகாரியஞ்சொல்லவேண்டும் என்றார். அதற்கு அவன்: போதகரே, சொல்லும் என்றான்.

41. அப்போது அவர் சொன்னதாவது: ஒரு கடன்காரனிடத்தில் இரண்டுபேர் கடன்பட்டிருந்தார்கள். ஒருவன் அவனுக்கு ஐஞ்ஞூறு தெனியரும், மற்றொருவன் ஐம்பது தெனியரும் கொடுக்கவேண்டியிருந்தது.

42. கொடுக்க அவர்களுக்கு வகையில்லாததினாலே, அவன் இருவருக்கும் கடனை மன்னித்துவிட்டான். இப்படியிருக்க, அவ்விருவரில் எவன் அவனை அதிகமாய்ச் சிநேகிப்பான் என்றார்.

43. சீமோன் மாறுத்தாரமாக: எவனுக்கு அதிகமாய் மன்னித்தானோ, அவனே அதிகமாய்ச் சிநேகிப்பான் என்று எண்ணுகிறேன் என்க, அவர் அவனை நோக்கி: சரியாய்த் தீர்மானித்தாய் என்றார்.

44. பின்னும் ஸ்திரீயின் பக்கமாய்த் திரும்பி, சீமோனை நோக்கி: இந்த ஸ்திரீயைப் பார்க்கிறாயே; நான் உன் வீட்டுக்கு வந்தேன், நீ என் கால்களுக்குத் தண்ணீர் தரவில்லை; இவளோ, தன் கண்ணீரால் என் பாதங்களைக் கழுவித் தன் கூந்தலால் துடைத்தாள்.

45. நீ என்னை முத்தஞ்செய்யவில்லை; இவளோ, நான் இங்கே பிரவேசித்ததுமுதல் ஓயாமல் என் பாதங்களை முத்தஞ்செய்தாள்.

46. நீ என் தலையில் எண்ணெய் பூசவில்லை; இவளோ, பரிமளதைலத்தால் என் பாதங்களைப் பூசினாள்.

47. ஆகையால் நான் உனக்குச் சொல்லுகிறேன்: இவள் மிகவும் சிநேகித்ததினால், இவளுக்கு மிகுந்த பாவங்கள் பொறுக்கப்படுகின்றன. ஆனால் எவனுக்குக் கொஞ்சம் பொறுக்கப்படுகிறதோ, அவன் கொஞ்சமாய்ச் சிநேகிக்கிறானென்று சொல்லி, (1 இரா. 4-8.)

48. அவளைப் பார்த்து: உன் பாவங்கள் உனக்கு மன்னிக்கப்படுகின்றன என்றார். (மத். 9-2.)

49. அவரோடுகூடப் பந்தியமர்ந்தவர்கள்: பாவங்களையும் மன்னிக்கிற இவர் யாரென்று தங்கள் உள்ளத்தில் சொல்லத் தொடங்கினார்கள்.

50. அவர் அந்த ஸ்திரீயை நோக்கி: உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது; நீ சமாதானத்தோடே போ என்று திருவுளம்பற்றினார்.

---

47. யேசுநாதர் இவ்விடத்தில்: சிநேகம் மன்னிப்புக்குக் காரணமாயிருக்கிறதென்றும், மன்னிப்பு சிநேகம் அதிகமாய் வளர்வதற்கு ஏதுவாயிருக்கிறதென்றும் காண்பிக்கிறார். எப்படியெனில், அதிகமாய்க் கடன்பட்டவன் அதிகமாய்ச் சிநேகித்ததினால் அவனுடைய அதிகக் கடன் மன்னிக்கப்பட்டது. அப்படி மன்னிப்படைந்தவன் தனக்கு வெகுவாய் மன்னிக்கப்பட்டபடியினாலே தன்னை மன்னித்தவன்மேல் அதிக நன்றியுள்ளவனாய் இன்னும் அதிகமாய்ச் சிநேகிப்பானென்பதற்குச் சந்தேகமில்லை. அர்ச். மரிய மதலேனம்மாள் இவ்விதஞ் செய்ததாக அறிவோம்.

50. **உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது:**—இங்கே குறிக்கப்படுகிற விசுவாசம் வெறுமையான விசுவாசமாயிராமல் நற்கிரியைகளோடும் தேவசிநேகத்தோடுங் கூடிய விசுவாசமாயிருந்ததென்று மரிய மதலேனம்மாளுடைய நடக்கையினால் விளங்குகிறது. மேலும் மதலேனம்மாள் அதிகமாய்ச் சிநேகித்ததினிமித்தம் அவளுக்கு அதிகமான பாவங்கள் மன்னிக்கப்பட்டதென்று 47-ம் வசனத்தில் உரைத்தபின், இவ்விடத்தில் அவள் விசுவாசம் அவளை இரட்சித்ததென்று ஆண்டவர் சொல்லுகிறார். ஏனெனில் இவ்விரண்டு புண்ணியங்களும் பூரணமாயிருக்கும்போது ஒன்றை விட்டு ஒன்று பிரியாது. பூரண விசுவாசமுள்ளவன் உண்மையான தேவசிநேகமில்லாமலும், உண்மையான தேவசிநேகமுள்ளவன் பூரண விசுவாசமில்லாமலும் இருக்கமாட்டான்.

## 8-ம். அதிகாரம்.

விதைக்கிறவனுடைய உவமையும், விளக்கை மரக்காலின்கீழ் வைக்கப்படாதென்பதும், கடலின் கொந்தளிப்பை அமர்த்தினதும், பசாசுகளைத் துரத்தி அவைகளைப் பன்றிகளுக்குள் பிரவேசிக்க உத்தரவுகொடுத்ததும், பெரும்பாடுள்ள ஓர் ஸ்திரீயைக் குணமாக்கினதும், ஜாயிரென்பவன் மகளை உயிர்ப்பித்ததும்.

1. பின்பு சம்பவித்ததேதெனில், அவர் பட்டணங்கள், ஊர்கள்தோறும் பிரயாணஞ்செய்து, சர்வேசுரனுடைய இராச்சியத்தின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்துக்கொண்டுவருவார். அவரோடு பன்னிருவரும் இருந்தார்கள்.

2. அன்றியும் கெட்ட அரூபிகளினின்றும், பற்பல வியாதிகளினின்றும் சொஸ்தமாக்கப்பட்ட சில ஸ்திரீகளும், ஏழு பசாசுகள் நீங்கின மதலேன் என்னப்பட்ட மரியம்மாளும், (மாற். 16-9.)

3. ஏரோதனுடைய காரியக்காரனான கூசாவின் மனைவியாகிய யோவான்னாளும், சூசான்னாளும், தங்கள் ஆஸ்திகளால் அவருக்குப் பணிவிடை செய்துகொண்டுவந்த வேறநேக ஸ்திரீகளும் இருந்தார்கள்.

4. அப்போது ஏராளமான ஜனங்கள்கூடி, பட்டணங்களிலிருந்து அவரிடத்தில் தீவிரித்து வரவே, அவர் உவமையாகச் சொன்னதாவது:

5. விதைக்கிறவன் ஒருவன் தன் விதையை விதைக்கப் புறப்பட்டான். அவன் விதைக்கிறபோது சில விதை பாதையோரத்தில் விழுந்து மிதிபட்டது; ஆகாயத்துப் பறவைகள் அதைப் பட்சித்துப்போட்டது. (மத். 13-3; மாற். 4-3.)

6. சிலது கற்பாறையின்மேல் விழுந்து முளைத்தது; ஆயினும் அதற்கு ஈரமில்லாததினாலே காய்ந்துபோயிற்று.

7. வேறு சிலது முள்ளுக்கள் நடுவில் விழுந்தது; ஆனால் முள்ளுக்களும் கூட எழும்பி, அதை அமுக்கிப்போட்டது.

8. வேறு சிலது நல்ல நிலத்தில் விழுந்தது; அது முளைத்து, நூறுமடங்காகப் பலனைத்தந்தது என்றார். இவைகளைச் சொல்லி: கேட்கச் செவியுள்ளவன் கேட்கக்கடவானென்று உரக்கக் கூறினார்.

9. அப்போது அவருடைய சீஷர்கள் இந்த உவமையின் கருத்து என்னவென்று அவரை வினவினார்கள்.

10. அவர்களுக்கு அவர் திருவுளம்பற்றினதாவது: சர்வேசுரனுடைய இராச்சியத்தின் இரகசியங்களை அறிந்துகொள்ள உங்களுக்கு அருளப்பட்டிருக்கிறது. மற்றவர்களுக்கோ, அவர்கள் கண்டும் காணாதவர்களாகவும், கேட்டும் உணராதவர்களாகவும் இருக்கும்படி, அவைகள் உவமைகளாகச் சொல்லப்படுகின்றது. (இசை. 6-9; மத். 13-14; மாற். 4-12; அரு. 12-40; அப். 25-26; உரோ. 11-8.)

11. இந்த உவமையின் கருத்து ஏதெனில்: விதை சர்வேசுரனுடைய வாக்கியம்.

12. பாதையோரத்தில் விதைக்கப்பெற்றவர்கள், வாக்கியத்தைக்கேட்கிறவர்களாம் பின்பு அவர்கள் விசுவசித்து, இரட்சணியம் அடையாதபடிக்குப் பசாசு வந்து, அவர்களுடைய இருதயத்தினின்று வாக்கியத்தைப் பறித்துக்கொள்ளுகிறது.

10. மத். 13-ம் அதி. 14-ம் வசன வியாக்கியானங் காண்க.

13. கற்பாறையின்மேல் விதைக்கப்பெற்றவர்கள் வாக்கியத்தைக்கேட்கும்போது, சந்தோஷத்தோடு அதை அங்கீகரிக்கிறவர்களாம். ஆயினும் அவர்கள் வேரில்லாதவர்களாய், தற்காலத்துக்கு விசுவசித்து, சோதனைகாலத்தில் பின்வாங்கிப் போகிறார்கள்.

14. முள்ளுக்கள் நடுவில் விதைக்கப்பெற்றது வாக்கியத்தைக் கேட்கிறவர்கள்தான். ஆயினும் அவர்கள் போய், கவலைகளாலும் ஐசுவரியங்களாலும் சீவியத்தின் இன்ப சுகங்களாலும் அமுக்கப்பட்டுப் பலன் கொடாதிருக்கிறார்கள்.

15. நல்ல நிலத்தில் விதைக்கப்பெற்றதோ நல்லதும், உத்தமமுமான இருதயத்தோடு வாக்கியத்தைக்கேட்டு, அதைக் காப்பாற்றிப் பொறுமையால் பலன் கொடுக்கிறவர்களாம்.

16. ஒருவனும் விளக்கைக் கொளுத்தி, அதை ஒரு பாத்திரத்தினால் மூடவும் மாட்டான், கட்டிலின்கீழ் வைக்கவும் மாட்டான்; ஆனால் உள்ளே வருகிறவர்கள் வெளிச்சத்தைக் காணும்படி, அதை ஒரு விளக்குத்தண்டின்மேல் வைப்பான். (மத். 5-15.)

17. ஏனென்றால் வெளியரங்கமாகாத அந்தரங்கமுமில்லை; அறியப்பட்டு வெளிக்கு வாராதபடி மறைக்கப்பட்டதுமில்லை. (மத். 10-26; மாற். 4-22.)

18. ஆதலால் நீங்கள் கேட்கிறவிதம் ஏதென்று பார்த்துக்கொள்ளுங்கள்: உள்ளவன் எவனோ அவனுக்குக் கொடுக்கப்படும்; இல்லாதவனிடத்திலோ, அவன் தனக்குண்டென்று நினைக்கிறதுமுதலாய்ப் பறிக்கப்படுமென்று திருவுளம்பற்றினார். (மத். 13-12; 25-29.)

19. பின்பு அவருடைய தாயாரும், சகோதரரும் அவரிடத்திற்கு வந்தார்கள். ஆனால், ஜனக்கூட்டத்தினிமித்தம் அவர்கள் அவரண்டையில் சேரக்கூடாதிருந்தது. (மத். 12-46; மாற். 3-32.)

20. அப்போது: உம்மைக் காணவிரும்பி, உம்முடைய தாயாரும் உம்முடைய சகோதரரும் வெளியே நிற்கிறார்கள் என்று அவருக்கு அறிவிக்கப்பட்டது.

21. அவரோ பிரத்தியுத்தாரமாக அவர்களை நோக்கி: சர்வேசுரனுடைய வாக்கியத்தைக் கேட்டு, அதை அநுசரிக்கிறவர்களே என் தாயாரும், என் சகோதரருமாயிருக்கிறார்கள் என்றார்.

22. பின்னும் ஒருநாள் சம்பவித்ததேதெனில், அவர் தம்முடைய சீஷர்களோடுகூட ஓர் படகிலேறி: கடலின் அக்கரைக்குப் போவோமாக என்று அவர்களுக்குச் சொன்னார். அப்படியே புறப்பட்டார்கள். (மத். 8-23; மாற். 4-36.)

23. அவர்கள் படகிலேறிப் போகையில், அவர் நித்திரைபண்ணிக்கொண்டிருந்தார். அப்பொழுது கடலிலே பலத்த சுழல்காற்றுண்டாகி, படகு தண்ணீரால் நிறைய, அவர்கள் ஆபத்துக்குள்ளானார்கள்.

18. திவ்விய கர்த்தர் அப்போஸ்தலரை நோக்கி 10-ம் வசனத்தில் மோக்ஷ இராச்சியத்தின் இரகசியங்களை அறிந்துகொள்ள உங்களுக்குக் கிருபைகிடைத்திருக்கிறதென்றும், 16-ம் வசனத்தில் ஒருவனும் விளக்கைக் கொளுத்தி மூடிவைக்காமல் தண்டின்மேல் வைப்பானென்றும் சொன்னபின்பு, இந்த வாக்கியத்திலே உங்களுக்குப் போதிக்கப்பட்ட வேத சத்தியங்கள் மற்றவர்களுக்கும் பிரயோசனமாகும்படி பார்த்துக்கொள்ளுங்கள். அந்த அறிவினால் மற்றவர்களுக்கு எவ்வளவு பிரயோசனமாயிருப்பீர்களோ, அவ்வளவுக்கு அதிக அறிவு உங்களுக்குக் கொடுக்கப்படும்; அதைப் பிரயோசனமாக்கிக்கொள்ளாவிட்டால், உங்களிடத்தில் உள்ள அறிவும் எடுத்துக்கொள்ளப்படும் என்று தெளிவிக்கிறார்.

20, 21. மத். 12-ம் அதி. 48-ம் வசன வியாக்கியானம் காண்க.

24. ஆகையால் அவர்கள் அவரிடத்தில் வந்து: சுவாமீ, சாகிறோம் என்று சொல்லி, அவனை எழுப்பினார்கள். அவரோ எழுந்து, புசலையும் ஜலத்தின் கொந்தளிப்பையும் அதட்டினார். உடனே புசல் ஒழிந்து, அமரிக்கையுண்டாயிற்று.

25. பின்பு அவர் சீஷர்களை நோக்கி: உங்கள் விசுவாசம் எங்கே என்றார். அவர்களோ, பயந்து அதிசயித்து, ஒருவர் ஒருவரை நோக்கி: இவர் யாரென்று நினைக்கிறாய்? காற்றுக்கும் கடலுக்கும் கட்டளையிடுகிறார், அவைகளும் இவருக்குக் கீழ்ப்படிகின்றனவே என்றார்கள்.

26. பின்பு கலிலேயா நாட்டுக்கு எதிரேயிருக்கிற, ஜெராசேனியருடைய நாட்டுக்கு அவர்கள் படகைச் செலுத்தினார்கள்.

27. அவர் கரையில் இறங்கினபோது, நெடுநாளாய்ப் பேய்பிடித்தவனும், வஸ்திரமணியாதவனும், வீட்டிலே தங்காமல் கல்லறைகளிலே தங்குகிறவனுமாகிய ஒருவன் அவருக்கு எதிராக வந்தான்.

28. அவன் யேசுநாதரைக் கண்டவுடனே, அவருக்கு முன்பாகச் சாஷ்டாங்கமாகவிழுந்து, பேரொலியாய்க் கூவி: யேசுவே! உன்னத சர்வேசுரனுடைய குமாரனே, உமக்கும் எனக்கும் என்ன? என்னை உபாதியாதபடி உம்மை மன்றாடுகிறேன் என்றான்.

29. அதேதெனில், அந்த அசுத்த அரூபி அந்த மனிதனைவிட்டுப்போகும்படி, அவர் அதற்குக் கட்டளையிட்டிருந்தார். அது அநேக காலமாய் அவனைப் பிடித்திருந்தது. அவன் சங்கிலிகளால் கட்டுண்டு விலங்குகளால் காபந்து செய்யப்பட்டிருந்தும், கட்டுகளை முறித்துப்போட்டு, பசாசினால் வனாந்தரங்களுக்குக் கொண்டுபோகப்பட்டிருந்தான்.

30. யேசுநாதர் அவனை நோக்கி: உன்பேர் என்ன என்று கேட்க, அவன்: படை என்றான். ஏனெனில் அநேகம் பேய்கள் அவனிடத்தில் புகுந்திருந்தன.

31. அப்பொழுது, தங்களைப் பாதாளத்திற்குப் போகக் கட்டளையிடாதபடிக்கு அவைகள் அவரைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டன.

32. அங்கே திரளான பன்றிகள் கூட்டமாய் மலையிலே மேய்ந்துகொண்டிருந்தது. அவைகளுக்குள்ளே போகும்படி தங்களுக்கு உத்தரவு கொடுக்க வேண்டுமென்று அவரைக் கெஞ்சிக் கேட்க, அவர் அவைகளுக்கு உத்தரவு கொடுத்தார்.

33. ஆகையால் பேய்கள் அந்த மனிதனைவிட்டுப் புறப்பட்டு, பன்றிகளுக்குள்ளே புகுந்தன; உடனே அந்தப்பன்றிக்கூட்டம் உயர்ந்த மேட்டிலிருந்து வேகமாய்க் கடலிலே பாய்ந்து, அமிழ்ந்தி மடிந்தது. (மத். 8-32.)

34. அவைகளை மேய்த்தவர்கள் சம்பவித்ததைக்கண்டு ஓடிப்போய், பட்டணத்திலும், கிராமங்களிலும் இதை அறிவித்தார்கள்.

33. மத். 8-ம் அதி. 33-ம் வசன வியாக்கியானம் காண்க. இந்த வரலாற்றை அர்ச். மத்தேயு, மாற்கு, லூக்கா மூவரும் எழுதியிருக்கிறார்கள். அர்ச். மத்தேயு பேய்பிடித்த இரண்டு பேர் இருந்தார்கள் என்கிறார். இங்கேயோ ஒருவனைப்பற்றிமாத்திரம் லூக்காஸ் பேசுகிறார். ஏனெனில், ஒருவன் மற்றவனைவிட அதிக உக்கிரம வெறிகொண்டவனாய் இருந்ததாகத் தோன்றுகிறது.

35. ஆகையால் சம்பவித்ததைப் பார்க்கத்தக்கதாக ஜனங்கள் புறப்பட்டு, யேசுநாதரிடத்தில் வந்தபோது, பேய்கள் நீங்கி, விடுதலையான மனுஷன் வஸ்திரமணிந்து, புத்திதெளிவோடு அவருடைய பாதத்தருகில் உட்கார்ந்திருக்கக்கண்டு, பயந்தார்கள்.

36. அவன் பேய்ப்படை நீங்கி, எப்படிச் சுகமாக்கப்பட்டானென்று கண்டவர்களும் அதை அவர்களுக்கு அறிவித்தார்கள்.

37. அப்போது ஜெராசேனிய நாட்டிலுள்ள சகல ஜனங்களும் மிகவும் பயமடைந்ததினாலே, அவர் தங்களைவிட்டுப் போகும்படி மன்றாடினார்கள். அப்படியே அவர் படகிலேறித் திரும்பிப் போனார்.

38. பேய்கள் நீங்கின மனிதன் தானும் அவரோடிருக்கும்படி அவரை மன்றாடினான்.

39. ஆனால் யேசுநாதர் அவனை நோக்கி: நீ உன் வீட்டுக்குத் திரும்பிப் போய், சர்வேசுரன் உனக்கு எவ்வளவு பெரிதானவைகளைச் செய்தருளினாரென்று அறிவியென்று சொல்லி அவனை அனுப்பி விட்டார். அவன் பட்டணமெங்கும் போய், யேசுநாதர் தனக்கு எவ்வளவு பெரிதானவைகளைச் செய்தாரென்று பிரசித்தமாக்கினான்.

40. யேசுநாதர் திரும்பிவந்தபோது சம்பவித்ததேதெனில், ஜனங்களெல்லாரும் அவருக்காகக் காத்துக்கொண்டிருந்ததினாலே, அவரை (சந்தோஷமாய்) ஏற்றுக்கொண்டார்கள்.

41. அப்போது இதோ, ஜெப ஆலயத்தலைவனாகிய ஜாயிர் என்ற ஒரு மனிதன் வந்து, யேசுநாதருடைய பாதத்திலே விழுந்து, தன் வீட்டிற்கு வர வேண்டுமென்று அவரை மன்றாடினான். (மத். 9-18.)

42. ஏனெனில் ஏறக்குறைய பன்னிரண்டு வயதுள்ள ஓரே குமாரத்தி அவனுக்கிருக்க, அவளும் சாகக்கிடந்தாள். அவர் அங்கே போகும்போது, திரளான ஜனங்கள் அவரை நெருக்கிக்கொண்டுபோக நேரிட்டது.

43. அப்போது பன்னிரண்டு வருஷமாய்ப் பெரும்பாடுள்ளவளாய்த் தன்னுடைய ஆஸ்தியெல்லாம் வைத்தியர்களிடத்தில் செலவழித்திருந்தும், ஒருவனாலும் குணமாக்கக் கூடாத ஒரு ஸ்திரீ இருந்தாள்.

44. அவள் அவருக்குப் பிறகே வந்து, அவருடைய வஸ்திரத்தின் விளிம்பைத் தொட்டாள். அக்ஷணமே அவளுடைய பெரும்பாடு நின்று போயிற்று.

45. அப்பொழுது யேசுநாதர்: என்னைத்தொட்டது யார் என்றார். எல்லாரும் தாங்கள் அல்ல என்க, இராயப்பரும் அவரோடிருந்தவர்களும்: சுவாமீ, ஜனங்கள் கும்பலாய் அடர்ந்து, உம்மை நெருக்குகிறார்களே, இப்படியிருக்க: என்னைத்தொட்டது யார் என்று கேட்கிறீரோ என்றார்கள்.

46. அதற்கு யேசுநாதர்: ஒருவன் என்னைத்தொட்டதுண்டு. ஏனெனில் என்னிடத்தினின்று ஒரு சக்தி புறப்பட்டதாக அறிந்திருக்கிறேன் என்றார்.

47. அப்பொழுது அந்த ஸ்திரீ (தான் செய்ததை) மறைக்கக் கூடவில்லையென்று கண்டு, நடுங்கிவந்து, அவருடைய பாதத்திலே விழுந்து, தான் அவரைத் தொட்ட காரணத்தையும், உடனே சௌக்கியப்பட்ட விதத்தையும் சகல ஜனங்களுக்கும் முன்பாகத் தெரிவித்தாள்.

48. அப்பொழுது அவர் அவளை நோக்கி: மகளே, உன்விசுவாசம் உன்னை இரட்சித்தது; நீ சமாதானத்தோடே போ என்றார்.

49. அவர் இன்னம் பேசிக்கொண்டிருக்கையிலே, ஒருவன் ஜெப ஆலயத் தலைவனிடத்தில் வந்து: உம்முடைய குமாரத்தி இறந்துபோனாள், அவரை வருத்தப்படுத்தாதேயும் என்றான்.

50. யேசுநாதர் இந்த வார்த்தையைக் கேட்டு, பிள்ளையினுடைய தகப்பனை நோக்கி: பயப்படாதே, விசுவாசமுள்ளவனுகமாத்திரமிரு, அப்போது (உன் மகள்) பிழைப்பாள் என்றார்.

51. அவர் வீட்டில் வந்தபோது, இராயப்பனையும் அருளப்பனையும் இயாகப்பனையும் பெண்ணின் தகப்பனையும் தாயையுந்தவிர வேறொருவனையும் தம்மோடு உள்ளே வரவொட்டாமல் நிறுத்தினார்.

52. அங்கே எல்லாரும் அவளைப் பற்றி அழுது புலம்பினார்கள். அவர் அவர்களை நோக்கி: நீங்கள் அழவேண்டாம்; பிள்ளை மரிக்கவில்லை, தூங்குகிறாள் என்றார்.

53. ஆனால் அவள் மரித்தாளென்று அவர்கள் அறிந்து, அவரைப் பரியாசம் பண்ணினார்கள்.

54. அவரோ, பிள்ளையின் கரத்தைப் பிடித்து: பிள்ளையே, எழுந்திரு என்று கூப்பிட்டார்.

55. அப்பொழுது அவளுக்கு உயிர் திரும்பிவர, உடனே அவள் எழுந்திருந்தாள்; அவளுக்கு ஆகாரங்கொடுக்கும்படி கட்டளையிட்டார்.

56. அப்பொழுது அவளுடைய தாய் தந்தைகள் பிரமித்துநிற்க, நடந்ததை ஒருவருக்கும் சொல்லாதபடி அவர் அவர்களுக்குக் கட்டளையிட்டார்.

## 9-ம். அதிகாரம்.

யேசுநாதர் அப்போஸ்தலர்களைப் பிரசங்கிக்க அனுப்பினதும், ஐந்து அப்பங்கள் பலுகினதும், இராயப்பருடைய விசுவாச உச்சாரணமும், யேசுநாதர் மறுரூபமானதும், சந்திர ரோகியைக் குணமாக்கினதும், தமது பாடுகளை முன்னறிவித்ததும், அப்போஸ்தலர்களுடைய தர்க்கமும்.

1. அப்போது யேசுநாதர் தமது பன்னிரண்டு அப்போஸ்தலர்களையும் வரவழைத்து, சகலபேய்களின்மேல் அவர்களுக்கு அதிகாரத்தையும், வியாதிகளைச் சொஸ்தமாக்க வல்லமையையும் கொடுத்து, (மத். 10-1; மாற். 3-15.)

2. சர்வேசுரனுடைய இராச்சியத்தைப் பிரசங்கிக்கவும், நோயாளிகளைக் குணமாக்கவும் அவர்களை அனுப்புகையில்,

3. அவர்களுக்குத் திருவுளம்பற்றினதாவது: நீங்கள் வழிக்கு ஊன்றுகோலையாகிலுஞ்சரி, பையையாகிலுஞ்சரி, அப்பத்தையாகிலுஞ்சரி, பணத்தையாகிலுஞ்சரி, ஒன்றையும் கொண்டுபோக வேண்டாம். இரண்டு அங்கிகளை முதலாய் வைத்துக்கொள்ளாதேயுங்கள். (மத். 10-9; மாற். 6-8.)

3. அப்போஸ்தலர்கள் கோல் முதலியவைகளை எந்தக் காரணத்தைப்பற்றியும் கொண்டு போகப்படாதென்று யேசுநாதர் விலக்கினதில்லை. ஏனெனில் மாற்கு 6-ம் அதி. 8, 9-ம் வசனத்தில் ஊன்றுகோல் கொண்டு போகலாமென்றும், பாதரக்ஷை தொடுக்கலாமென்றும் உத்தரவு கொடுக்கிறார். லூக்காஸ். 22-ம் அதி. 36-ம் வசனத்தில் பணப்பையுள்ளவனும், சாமான் பையுள்ளவனும் அவைகளை வைத்துக்கொள்ளும்படியாகவும் தன் அங்கியை விற்று வாள் முதலாய் வாங்கும்படியாகவும் உத்தரவு கொடுக்கிறார். ஆதலால் அர்ச். இராயப்பர் பாதரக்ஷை போட்டிருந்தாரென்று தெரியவருகிறது. (அப். நட. 12-8.) இவ்விடத்தில் யேசுநாதர் தரித்திர விஷயத்தில் உத்தமதனத்தைப் படிப்பிக்கிறாரொழிய ஒன்றும் கொண்டு போகப்படாதென்று சட்டமாய் விலக்கவில்லை.

4. எந்த வீட்டில் நீங்கள் பிரவேசித்தாலும், அதை விட்டுப்போகாமல், அங்கே தங்கியிருங்கள்.

5. யாராகிலும் உங்களை ஏற்றுக்கொள்ளாதிருந்தால், அந்தப் பட்டணத்தைவிட்டு வெளியே புறப்பட்டு, உங்கள் கால்களில் ஒட்டின தூசியை முதலாய் அவர்களுக்கு எதிர்ச்சாட்சியாக உதறிப்போடுங்கள் என்றார். (அப். 13-51.)

6. அப்படியே, அவர்கள் புறப்பட்டுப்போய், கிராமங்கள்தோறும் சுற்றித்திரிந்து, சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, எங்கும் ஆரோக்கியங் கொடுத்துவந்தார்கள்.

7. அப்பொழுது தேசத்தின் சதுர்த்த பாகபதியாகிய எரோதென்பவன் அவரால் செய்யப்படுகிற யாவையும் கேள்விப்பட்டுக் கலங்கிக்கொண்டிருந்தான்.

8. ஏனெனில் சிலர்: அருளப்பர் மரித்தோரினின்று உயிர்த்தெழுந்தாரென்றும், வேறு சிலர்: எலியாஸ் தோன்றினாரென்றும், மற்றவர்கள்: பூர்வீக தீர்க்கதரிசிகளில் ஒருவர் உயிர்த்தாரென்றும் சொல்லிக்கொண்டிருந்தார்கள். (மத், 14-1;மாற். 6-14.)

9. ஆகையால் எரோது: நான் அருளப்பனைச் சிரச்சேதஞ் செய்தேன். அப்படியிருக்க; இவரைப்பற்றி இப்பேர்ப்பட்ட காரியங்களைக் கேள்விப்படுகிறேனே; இவர் யார் என்று சொல்லி, அவரைக் காணத் தேடிக்கொண்டிருந்தான்.

10. பின்னும் அப்போஸ்தலர்கள் திரும்பிவந்து, தாங்கள் செய்த யாவற்றையும் அவருக்கு அறிவித்தார்கள். அப்பொழுது அவர் அவர்களைக் கூட்டிக்கொண்டு, பெத்சாயிதாவைச் சேர்ந்த வனாந்தரமான ஓர் இடத்துக்கு ஏகாந்தமாய் ஒதுங்கிப்போனார்.

11. ஜனங்கள் அதை அறிந்து, அவரைப் பின்சென்று போனார்கள். அவர்களை அவர் ஏற்றுக்கொண்டு, சர்வேசுரனுடைய இராச்சியத்தைப்பற்றி அவர்களுக்கு உபதேசித்து, சொஸ்தமாகவேண்டியிருந்தவர்களையும் சொஸ்தமாக்கினார்.

12. அப்பொழுது சாயங்காலமாயிற்று. ஆகையால் பன்னிருவரும் அவரிடத்தில்வந்து: நாம் இங்கே வனாந்தரமான இடத்திலிருக்கிறபடியினாலே, ஜனங்கள் சுற்றுக் கிராமங்களிலும் ஊர்களிலும் போய்த் தங்கவும், ஆகாரஞ் சம்பாதித்துக்கொள்ளவும் அவர்களை அனுப்பிவிடும் என்றார்கள். (மத். 14-15; மாற். 6-36.)

13. அவரோ, அவர்களை நோக்கி: நீங்களே அவர்களுக்குச் சாப்பிடக் கொடுங்கள் என்றார். அதற்கு அவர்கள்: எங்களிடத்தில் ஐந்து அப்பங்களும், இரண்டு மீன்களுமல்லாதே அதிகமில்லை; வேண்டுமானால், நாங்கள் போய் இந்த ஜனக்கூட்டத்துக்கெல்லாம் (உணவுகள்) வாங்கிவருவோம் என்றார்கள்.

14. ஏனெனில், ஏறக்குறைய ஐயாயிரம் புருஷர்கள் இருந்தார்கள். அப்போது அவர் தம்முடைய சீஷர்களை நோக்கி: அவர்களைப் பந்திக்கு ஐம்பது ஐம்பதுபேராக உட்காரச்செய்யுங்கள் என்றார்.

15. அவர்களும் அப்படியே செய்து, எல்லாரையும் பந்தியமர்த்தினார்கள்.

4. அப்போஸ்தலர் ஒரு ஊரில் யோக்கியன் யாரென்று விசாரித்து அவன் வீட்டில் தங்கியிருக்க வேணுமல்லாதே, நேர்ந்தபடி வீட்டுக்கு வீடுபோய்த் தங்குவது யோக்கியமல்லவென்று கர்த்தர் காண்பிக்கிறார்.

16. அவர் ஐந்து அப்பங்களையும், இரண்டு மச்சங்களையும் கையிலே வாங்கி பரலோகத்தை அண்ணார்ந்து பார்த்து, அவைகளை ஆசீர்வதித்து, பிட்டு ஜனங்களுக்குப் பரிமாறும்படி தம்முடைய சீஷர்களுக்குக் கொடுத்தார்.

17. எல்லாருஞ் சாப்பிட்டுத் திருப்தியானார்கள். அவர்களுக்கு மீதியான துண்டுகள் பன்னிரண்டு கூடைகள் நிறைய எடுக்கப்பட்டன.

18. பின்னுஞ் சம்பவித்ததேதெனில், அவர் தனித்து ஜெபஞ்செய்து கொண்டிருக்கையில், சீஷர்களும் அவரோடுகூட இருந்தார்கள். அவர் அவர்களை நோக்கி: ஜனங்கள் என்னை யாரென்று சொல்லுகிறார்கள் என்று கேட்டார்.

19. அதற்கு அவர்கள் மாறுத்தாரமாக: சிலர் உம்மை ஸ்நாபக அருளப்பரென்றும், சிலர் எலியாஸென்றும், வேறு சிலர் பூர்வீக தீர்க்கதரிசிகளில் ஒருவர் உயிர்த்தெழுந்தாரென்றும் சொல்லுகிறார்கள் என்றார்கள்.

20. அப்பொழுது அவர்: நீங்களோ, என்னை யாரென்று சொல்லுகிறீர்கள் என்று அவர்களைக்கேட்டார். அதற்கு சீமோன் இராயப்பர் பதில்மொழியாக: உம்மைச் சர்வேசுரனுடைய கிறீஸ்து என்கிறோம் என்றார்.

21. அப்பொழுது அவர் இதை ஒருவருக்கும் சொல்லாதபடி அவர்களுக்குக் கண்டிப்பாய்க் கட்டளையிட்டு,

22. மனுமகன் அநேகம் பாடுபடவும், மூப்பராலும் பிரதான ஆசாரியராலும் வேதபாரகராலும் ஆகாதவனென்று தள்ளப்படவும், கொலையுண்ணப்படவும், மூன்றும் நாள் உயிர்த்தெழுந்திருக்கவும் வேண்டும் என்றார். (மத். 17-21; மாற். 8-31; 9-30.)

23. பின்னும் அவர் சகலரையும் நோக்கிச் சொன்னதாவது: யாதொருவன் என் பிறகே வர மனதாயிருந்தால், தன்னைத்தானே பரித்தியாகஞ்செய்து, தன் சிலுவையை அநுதினமும் சுமந்துகொண்டு, என்னைப் பின்செல்லக் கடவான்; (மத். 10-38; 16-24; மாற். 8-34.)

24. ஏனெனில் தன் உயிரைக்காப்பாற்ற விரும்புகிறவன் அதை இழப்பான். என்னைப்பற்றித் தன் உயிரை இழப்பவனோ அதைக் காப்பாற்றிக்கொள்ளுவான். (லூக். 17-33; அரு. 12-25.)

25. மனிதனானவன் உலகமெல்லாம் ஆதாயமாக்கிக் கொண்டாலும், தன்னைத்தானே கெடுத்துச் சுயநாசம் வருவித்துக்கொண்டால், அவனுக்குப் பிரயோசனம் என்ன?

26. ஒருவன் என்னைக்குறித்தும் என் வாக்கியத்தைக் குறித்தும் வெட்கப்படுவானாகில், அவனைக்குறித்து மனுமகனும், தமக்கும் பிதாவுக்கும் சம்மனசுக்களுக்கும் உரிய மகிமையோடு வரும்போது வெட்கப்படுவார். (மத். 10-33; மாற். 8-38; 2 திமோ. 2-12.)

27. மீளவும் இங்கே நிற்கிறவர்களில் சிலர் சர்வேசுரனுடைய இராச்சியத்தைக் காணுமளவும், மரணசுவை பார்க்கமாட்டார்களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார். (மத். 16-28; மாற். 8-39.)

28. யேசுநாதர் இந்த வார்த்தைகளைச்சொல்லி, ஏறக்குறைய எட்டுநாளானபின்பு சம்பவித்ததேதெனில், அவர் இராயப்பரையும் இயாகப்பரையும் அருளப்பரையும் அழைத்துக்கொண்டு ஜெபம்பண்ணத்தக்கதாக ஓர் மலையின்மேல் ஏறினார். (மத். 17-1; மாற். 9-1.)

27. மத். 16-ம் அதி. 28-ம் வசன வியாக்கியானம் காண்க. இவ்விடத்தில் யேசுநாதர்சுவாமி தாம் மறுரூபமாகும் பிரதாப மகத்துவத்தை அப்போஸ்தலர்களில் சிலர் தாங்கள் சாகுமுன்னே காண்பார்களென்று அறிவிக்கிறார். (மெனோக்கியுஸ்.)

29. அவர் ஜெபம் பண்ணுகையில், அவருடைய முகரூபம் மாறி, அவருடைய வஸ்திரம் வெண்மையும் காந்தியுமாயிற்று.

30. அப்போது இதோ, இரண்டு மனிதர் அவரோடுகூடச் சம்பாஷித்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் மோயீசனும் எலியாசுமாம்.

31. அவர்கள் மகிமைப் பிரதாபத்தோடு தோன்றி, அவர் எருசலேமில் நிறைவேற்ற இருந்த மரணப் பயணத்தைக்குறித்துப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

32. அப்படியிருக்க, இராயப்பரும் அவரோடிருந்தவர்களும் நித்திரை மயக்கமாயிருந்தார்கள். ஆகிலும் அவர்கள் விழித்து, அவருடைய மகிமைப் பிரதாபத்தையும், அவரோடு நின்ற அந்த இரண்டுபேரையும் கண்டார்கள்.

33. பின்பு சம்பவித்ததேதென்றால், அவ்விருவரும் அவரைவிட்டுப் பிரிந்து போகையில், இராயப்பர் யேசுநாதரை நோக்கி என்ன சொல்லுகிறதென்று தெரியாமல்: குருவே! நாம் இங்கேயிருக்கிறது நல்லது, உமக்கு ஒருகூடாரமும், மோயீசனுக்கு ஒருகூடாரமும், எலியாசுக்கு ஒருகூடாரமும் ஆக மூன்றுகூடாரங்களை அடிப்போமாக என்றார்.

34. ஆனால் அவர் இவைகளைச் சொல்லுகையில் ஓர் மேகம் எழும்பி, அவர்களைத் தன்னிழலால் மறைத்தது. அவர்கள் அந்த மேகத்துக்குள் பிரவேசிக்கையில் சீஷர்கள் பயந்தார்கள்.

35. அப்பொழுது மேகத்திலிருந்து ஓர் குரலொலியுண்டாகி: இவரே நம்முடைய நேசகுமாரன், இவருக்குச் செவிகொடுங்கள் என்று சத்தித்தது. (2 இரா. 1-17.)

36. அந்தக் குரலொலி உண்டாகையில் யேசுநாதர் ஒருவரே காணப்பட்டார். அவர்களோவெனில் தாங்கள் கண்டவைகளில் ஒன்றையும் அந்நாட்களில் எவனுக்கும் சொல்லாமல் மௌனமாயிருந்தார்கள்.

37. மறுநாள் அவர்கள் மலையினின்று இறங்கினபோது, திரளான ஜனங்கள் அவருக்கு எதிர்கொண்டுவந்தார்கள்.

38. அப்பொழுது இதோ கும்பலினின்று ஓர் மனிதன் சத்தமிட்டு: போதகரே! என் மகன்மேல் கிருபைக்கண்ணோக்கியருள வேண்டுமென்று உம்மை மன்றாடுகிறேன். எனக்கு அவன் ஏக புத்திரனாயிருக்கிறான். (மத். 17-14; மாற். 9-16.)

39. இதோ அவனை ஓர் பேய் பிடிக்கிறது; உடனே அவன் அலறுகிறான்; அது அவனைக் கீழே விழத்தாட்டி, நுரைகக்க அலைக்கழித்து, அவனை இலேசில்விடாமல் சின்னாபின்னமாக்குகிறது.

40. அதை ஓட்டும்படி உம்முடைய சீஷர்களை மன்றாடினேன், அவர்களாலே கூடாமல் போயிற்று என்றான்.

41. அதற்கு யேசுநாதர்: ஓ, விசுவாசமற்ற கெட்ட சந்ததியே; எவ்வளவு காலம் உங்களோடிருந்து, உங்களைச் சகித்துக்கொண்டிருப்பேன்? உன் மகனை இங்கே கொண்டுவா என்றார்.

42. அப்படியே அவன் சமீபித்துவருகையில், பசாசானது அவனைக் கீழேதள்ளி, அலைக்கழித்தது.

43. யேசுநாதர் அசுத்த அரூபியை அதட்டிச் சிறுவனைக் குணமாக்கி, அவன் தகப்பனுக்கு அவனைக் கையளித்தார்.

30. மத். 17-ம் அதி. 3-ம் வசன வியாக்கியானம் காண்க.

40, 41. மத். 17-ம் அதி. 19-ம் வசன வியாக்கியானம் காண்க.

44. அப்பொழுது எல்லாரும் சர்வேசுரனுடைய மகத்துவத்தின்மேல் பிரமிப்படைந்தார்கள். மேலும், அவர் செய்துவந்த எல்லாவற்றையும்பற்றி யாவரும் ஆச்சரியப்பட்டுக்கொண்டிருக்கையில், அவர் தம்முடைய சீஷர்களை நோக்கி: நீங்கள் இந்த வார்த்தைகளை உங்கள் இருதயங்களில் வைத்துக் கொள்ளுங்கள்; அதாவது, மனுமகன் மனிதர்களுக்குக் கையளிக்கப்படும்படி நேரிடும் என்று திருவுளம்பற்றினார்.

45. அவர்கள் அந்த வார்த்தையைக் கண்டுபிடியாதிருந்தார்கள். ஏனெனில் அதை அவர்கள் உணர்ந்துகொள்ளாதபடி அது அவர்களுக்கு மறைபொருளாயிருந்தது; அந்த வார்த்தையைக்குறித்து அவரை வினவவும் பயந்திருந்தார்கள்.

46. அப்படியிருக்க, தங்களுக்குள்ளே யார் அதிக பெரியவனாயிருப்பானென்கிற எண்ணம் அவர்களுக்குள் புகுந்தது. (மத். 18-1; மாற். 9-33.)

47. ஆனால் யேசுநாதர் அவர்களுடைய இருதயச் சிந்தனைகளை அறிந்து, ஒரு சிறுவனை எடுத்துத் தமதருகில் அவனை நிறுத்தி,

48. அவர்களுக்கு வசனித்ததாவது: என் நாமத்தினாலே இந்தச்சிறுவனை ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக்கொள்ளுகிறான். என்னை ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை அனுப்பினவரை ஏற்றுக்கொள்ளுகிறான்; ஆகையால் உங்களெல்லாரிலும் எவன் அதிக சிறியவனாயிருக்கிறானோ, அவனே அதிக பெரியவன் என்றார்.

49. அப்போது அருளப்பர் பதிலுத்தாரமாக: சுவாமீ, உம்முடைய நாமத்தினாலே பசாசுக்களைத் துரத்துகிற ஒருவனை நாங்கள் கண்டு, அவன் எங்களோடு (உம்மை) பின்பற்றாததினாலே அவனைத் தடுத்துவிட்டோம் என்றார்.

50. யேசுநாதர் அவரைப் பார்த்து: நீங்கள் அவனைத் தடுக்கவேண்டாம். ஏனெனில், உங்களுக்கு விரோதமாயிராதவன் உங்கள் பாரிசமாயிருக்கிறான் என்று திருவுளம்பற்றினார்.

51. மீளவுஞ் சம்பவித்ததேதெனில், அவர் இவ்வுலகத்தினின்று எடுபடும் நாட்கள் நிறைவேறுகையில், அவர் எருசலேம் நகருக்குப் போகும்படி திடமுகங்காட்டி,

52. தமது சமுகத்துக்குமுன் தூதர்களை அனுப்பினார். அவர்கள் போய், அவருக்கு இடம் ஆயத்தம்பண்ணும்படி சமாரியருடைய ஒரு ஊரிலே பிரவேசித்தார்கள்.

53. ஆனால் அவர் எருசலேமுக்குப் போகிற நோக்கமாயிருந்ததினாலே, அவ்வூரார் அவரை ஏற்றுக்கொள்ளவில்லை.

54. அவருடைய சீஷர்களாகிய இயாகப்பரும் அருளப்பரும் இதைக்கண்டு: ஆண்டவரே, உமக்குச் சித்தமானால் வானத்தினின்று அக்கினி இறங்கி இவர்களைச் சுட்டெரிக்கும்படி சொல்லுகிறோம் என்றார்கள்.

55. அவர் திரும்பிப் பார்த்து, அவர்களைக் கண்டித்து: உங்களுக்கு யாருடைய புத்தியுண்டென்று உங்களுக்குத் தெரியவில்லை.

53. சமாரியர் யூதர்களுக்குள் வேதப் பிரிவினைக்காரராயிருந்து, சலோமோன் கட்டின தேவாலயத்தில் தேவாராதனைக்குப் போகாமல், தங்கள் சீமைக்கு அடுத்த மலையின்மேல் ஒரு கோவிலைக் கட்டி, தேவாராதனை செய்துவந்தார்கள். யேசுநாதர் தங்கள் கோவிலுக்கு வராமல், எருசலேமிலுள்ள தேவாலயத்துக்குப் போகிறாரென்று காய்மகாரத்தால் அவர் தங்குவதற்கு இடம் கொடாதிருந்தார்கள்.

56. மனுமகன் ஆத்துமங்களைச் சேதமாக்குவதற்கல்ல, அவைகளை இரட்சிக்கவே வந்தார் என்றார். அதன் பின்பு அவர்கள் வேறொரு ஊருக்குப் போனார்கள். (அரு. 3-17; 12-47.)

57. அவர்கள் வழிநடந்துபோகையில் சம்பவித்ததேதெனில், ஒருவன் அவரை நோக்கி: நீர் எங்கே போனாலும், உம்மைப் பின்செல்லுவேன் என்றான்.

58. யேசுநாதர் அவனை நோக்கி: நரிகளுக்கு வளைகளும், ஆகாயப் பறவைகளுக்குக் கூடுகளுமுண்டு; மனுமகனுக்கோ தலைசாய்க்க இடமில்லை என்றார். (மத். 8-20.)

59. பின்பு அவர் வேறொருவனை நோக்கி: என் பிறகே வா என்று சொல்ல, அவன்: ஆண்டவரே, முந்தி நான் போய், என் தகப்பனை அடக்கஞ்செய்ய எனக்கு உத்தரவு கொடுத்தருளும் என்றான்.

60. அதற்கு யேசுநாதர்: மரித்தோர் தங்களில் மரித்தோரை அடக்கஞ்செய்யட்டும்; நீ போய், சர்வேசுரனுடைய இராச்சியத்தை அறிவி என்று அவனுக்குத் திருவுளம்பற்றினார்.

61. பின்னும் வேறொருவன் (வந்து); ஆண்டவரே! உம்மை நான் பின்செல்லுவேன், ஆனால் முந்த என்வீட்டிலுள்ளவைகளை நீக்கிவிட எனக்கு உத்தரவு கொடுத்தருளும் என்றான்.

62. யேசுநாதர் அவனை நோக்கி: கலப்பையின்மேல் கையை வைத்துக் கொண்டு, பின்னிட்டுத் திரும்பிப்பார்க்கிறவனும் சர்வேசுரனுடைய இராச்சியத்துக்குத் தகுந்தவனல்ல என்று திருவுளம்பற்றினார்.

## 10-ம். அதிகாரம்.

எழுபத்திரண்டு சீஷர்கள் பிரசங்கிக்க அனுப்பப்பட்டதும், தேவசிநேக பிறர்சிநேகக்கற்பனைகளும், மரியம்மாள் மார்த்தம்மாள் இவர்களைப் பற்றிய விசேஷங்களும்.

1. இவைகளுக்குப்பின் கர்த்தர் வேறே எழுபத்திரண்டு பேரையும் நியமித்து, தாம் போகவிருந்த சகல பட்டணங்களுக்கும், இடங்களுக்கும், தமது சமுகத்துக்கு முன்பாக அவர்களை இருவரிருவராக அனுப்பி,

2. அவர்களுக்குச் சொன்னதாவது: அறுப்பு மிகுதியாம், வேலையாட்களோ கொஞ்சம்பேர்; ஆதலால் தன் அறுப்புக்கு வேலையாட்களை அனுப்பும்படி வெள்ளாண்மைக்கு எஜமானை மன்றாடுங்கள். (மத். 9-37.)

3. புறப்பட்டுப் போங்கள்; இதோ, ஆட்டுக்குட்டிகளை ஓநாய்களுக்குள்ளே அனுப்புகிறதுபோல, நான் உங்களை அனுப்புகிறேன். (மத். 10-16.)

4. பணப்பையையாவது கைச்சோளியையாவது பாதரட்சைகளையாவது கொண்டுபோகவேண்டாம்; வழியில் ஒருவனையும் வினவவும்வேண்டாம். (மாற். 6-8; 4 அர. 4-29.)

---

60. உலகத்தாரை மரித்தவர்களென்று ஆண்டவர் சொல்லுகிறார்.

2. மத். 9-ம் அதி. 38-ம் வசன வியாக்கியானம் காண்க.

4. வழியில் ஒருவனையும் வினவ வேண்டாமென்று ஆண்டவர் சொல்லும்போது, தேவ தொழிலுக்கு ஏற்பட்டவர்கள் பிரயாணம் போகையில், வழியிலே அவசரமின்றித் தங்கியிருக்கவும், வீண்காலம்போக்கவும் வேண்டாமென்று விலக்கினாரொழிய, எதிர்ப்பட்ட அறிமுகமுள்ளவர்களுக்குமங்கள வார்த்தை முதலாய்ச் சொல்லாமல் போகவேண்டுமென்று அர்த்தமல்ல. பழைய ஏற்பாட்டில் அர. 4-ம் அதி. 29-ம் வசனத்தில், எலிசேயு தீர்க்கதரிசியானவர் தன் சீஷனைப் பார்த்து: நீ உன் இடையைக் கட்டிக்கொண்டு, என் ஊன்று

5. நீங்கள் எந்த வீட்டில் பிரவேசித்தாலும்: இந்த வீட்டுக்குச் சமாதானம் உண்டாவதாக என்று முதலாவது சொல்லுங்கள்.

6. சமாதான புத்திரன் அங்கேயிருந்தால், உங்கள் சமாதானம் அவன் மேல் தங்கும்; இல்லாதிருந்தால், அது உங்களிடத்தில் திரும்பிவரும்.

7. அந்த வீட்டில்தானே தங்கி, அவர்களிடத்தில் உள்ளவைகளைப் புசித்துப் பானஞ்செய்யுங்கள். ஏனெனில் வேலைக்காரன் தன் கூலிக்குப் பாத்திரவானுயிருக்கிறான். வீட்டுக்கு வீடு போகாதேயுங்கள். (எண். 24-14; மத். 10-10; 1 திமோத். 5-18.)

8. அவ்வண்ணமே நீங்கள் எந்தப் பட்டணத்தில் பிரவேசித்தாலும், அந்தப் பட்டணத்தார் உங்களை ஏற்றுக்கொண்டால், அவர்கள் உங்களுக்குப் பரிமாறுகிறவைகளைப் புசித்து,

9. அவ்விடத்திலுள்ள நோவாளிகளைச்சொஸ்தமாக்கி, சர்வேசுரனுடைய இராச்சியம் உங்களுக்குச் சமீபித்தது என்று அவர்களுக்குச் சொல்லுங்கள்.

10. எந்தப் பட்டணத்திலாவது நீங்கள் பிரவேசிக்கையில், அந்தப் பட்டணத்தார் உங்களை ஏற்றுக்கொள்ளாதிருந்தால், நீங்கள் அதின் தெருவீதிகளில் புறப்பட்டு:

11. உங்கள் பட்டணத்திலிருந்து எங்கள்மேல் ஒட்டிய தூசியையும் உங்களுக்கு எதிரிடையாக உதறிப்போடுகிறோம், ஆகிலும் சர்வேசுரனுடைய இராச்சியம் சமீபித்ததென்பதை அறிந்துகொள்ளுங்கள் என்று சொல்லுங்கள். (அப். 13-51.)

12. அந்த நாளிலே இப்பட்டணத்தைவிட சோதோம் நகருக்குத் (தண்டனை) குறைவாயிருக்குமென்று உங்களுக்குச்சொல்லுகிறேன்.

13. கொர்சயிம் நகரமே, உனக்கு ஐயோகேடு! பெத்சாயிதா நகரமே, உனக்கு ஐயோ கேடு! உங்களில் செய்யப்பட்ட அற்புதங்கள் தீர், சீதோன் நகரங்களில் செய்யப்பட்டிருந்தால், அப்பொழுதே மயிர்ச் சட்டையணிந்து, சாம்பலில் உட்கார்ந்து தவஞ்செய்திருப்பார்கள். (மத். 11-21.)

14. ஆதலால் நடுத்தீர்வையிலே உங்களைவிடத் தீர், சீதோன் நகரங்களுக்குத் தண்டனை குறைவாயிருக்கும்.

15. நீயோ, வானமட்டும் உயர்த்தப்பட்ட கப்பர்நாவுமே, பாதாளமட்டும் அமிழ்த்தப்படுவாய்.

16. உங்களுக்குச் செவிகொடுக்கிறவன் எனக்குச் செவிகொடுக்கிறான். உங்களைப் புறக்கணிக்கிறவன் என்னைப் புறக்கணிக்கிறான். என்னைப் புறக்கணிக்கிறவனோ, என்னை அனுப்பினவரைப் புறக்கணிக்கிறான் என்று திருவுளம்பற்றினார். (மத். 10-40; அரு. 13-20.)

17. பின்பு எழுபத்திரண்டு சீஷர்களும் சந்தோஷமாய்த் திரும்பிவந்து: ஆண்டவரே, தேவரீருடைய நாமத்தினாலே பசாசுக்கள் முதலாய் எங்களுக்குக் கீழ்ப்படிகின்றன என்றார்கள்.

---

கோலை உன் கையில் பிடித்துக்கொண்டு, வழியில் ஒருவன் எதிர்ப்பட்டாலும், அவனுக்கு மங்கள வார்த்தை சொல்லாமலும், உனக்கு ஒருவன் மங்கள வார்த்தை சொன்னாலும், நீ அவனுக்குப் பதில்மொழியுரையாமலும் போய் என் கோலை இறந்துபோன பிள்ளையின் முகத்தின் மேல் வை என்றார். இதைக்கொண்டு மங்கள வார்த்தை சொல்லுதல் சட்ட திட்டமாய் விலக்கப்பட்டதென்று சொல்லப்படாது. காலத்தை வீண் போக்காமல் தனது தொழிலின்மேல் முழுதும் கருத்தாயிருக்க வேண்டுமென்று காண்பிக்கப்படுகிறது.

14. மத். 11-ம் அதி. 22-ம் வசன வியாக்கியானம் காண்க.

18. அவர்களுக்கு அவர் திருவுளம் பற்றினதாவது: சாத்தான் மின்னலைப் போல் வானத்தினின்று விழுகிறதைக் கண்டேன்.

19. இதோ சர்ப்பங்களையும், தேள்களையும், சத்துருவின் வல்லமை யாவையும் மிதிக்கும்படி உங்களுக்கு அதிகாரம் தந்தேன், உங்களுக்கு ஒன்றும் தீங்குசெய்யாது.

20. ஆயினும் அரூபிகள் உங்களுக்குக் கீழ்ப்படிகிறதைப்பற்றி நீங்கள் சந்தோஷப்பட வேண்டாம்; உங்கள் நாமங்கள் பரலோகத்தில் எழுதப்பட்டிருப்பதைப்பற்றியே சந்தோஷப்படுங்கள் என்றார்.

21. அந்நேரமே அவர் இஸ்பிரீத்து சாந்துவினால் களிகூர்ந்து: பிதாவே, பரலோகத்துக்கும் பூலோகத்துக்கும் கர்த்தாவே! நீர் இவைகளை ஞானிகளுக்கும் விவேகிகளுக்கும் மறைத்து, சிறியோர்களுக்கு வெளிப் படுத்தினபடியால், நான்உம்மை ஸ்துதிக்கிறேன். ஆம், பிதாவே, இவ்விதஞ் செய்வது உமது திருவுளத்துக்குப் பிரியமாயிருந்தது.

22. என் பிதாவினால் சகலமும் எனக்குக் கையளிக்கப்பட்டிருக்கிறது; மேலும் பிதா தவிர வேறொருவனும் சுதன் இன்னானென்று அறியான்; சுதனும் சுதன் யாருக்கு அறிவிக்கச் சித்தமாயிருப்பாரோ அவனும்தவிர வேறொருவனும் பிதா இன்னானென்று அறியான் என்றார்.

23. பின்னும் அவர் தம்முடைய சீஷர்கள்பக்கமாய்த் திரும்பிச் சொன்னதாவது: நீங்கள் காண்கிறவைகளைக் காணும் கண்கள் பாக்கியம்பெற்றவைகள். (மத். 13.16.)

24. ஏனெனில் அநேகம் தீர்க்கதரிசிகளும் இராஜாக்களும் நீங்கள் காண்கிறவைகளைக் காணவும், நீங்கள் கேட்கிறவைகளைக் கேட்கவும் விரும்பியிருந்தாலும், அவர்கள் காணவுமில்லை, கேட்கவுமில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

25. அப்பொழுது இதோ, நீதி சாஸ்திரியொருவன் எழுந்து, அவரைச் சோதிக்கத்தக்கதாக: போதகரே, நான் என்னத்தைச் செய்து, நித்திய சீவியத்தை அடைவேன் என்றுகேட்க, (மத். 22-35; மாற். 12-28.)

26. அவர் அவனை நோக்கி: வேதப்பிரமாணத்தில் எழுதப்பட்டிருக்கிறதென்ன? எவ்வாறு வாசிக்கிறாய் என்று கேட்டார்.

27. அதற்கு அவன் பிரத்தியுத்தரமாக: உன் தேவனாகிய கர்த்தரை உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமத்தோடும், உன் முழு தத்துவங்களோடும், உன் முழு மனதோடும் சிநேகிப்பாயாக; உன்னைப் போல உன் பிறனையும் சிநேகிப்பாயாக (என்று எழுதியிருக்கிறது) என்றான். (எண். 6-5.)

28. அவர் அவனை நோக்கி: நீ சரியாய்ப் பதிலுரைத்தாய்; அப்படியே செய்; அப்போது பிழைப்பாய் என்றார்.

29. அவனோ, தன்னை நீதிமானென்று காண்பிக்க விரும்பி, யேசுநாதரைப் பார்த்து: என் பிறன் யார் என்று கேட்டான்.

---

18. லூசிப்பேர் என்ற பசாசானது முன் எவ்வளவு மேலான வரங்களைப் பெற்றிருந்தும், ஆங்காரத்தால் கெட்டு நரகத்தில் விழுந்துபோனதே. ஆகையால் நீங்களும் உங்களுக்கு அளிக்கப்பட்ட வரங்களால் அகங்கரியாமல் தாழ்ச்சியாயிருக்கவேண்டுமென்று கர்த்தர் கற்பிக்கிறார்.

30. யேசுநாதர் மறுமொழியாகத் திருவுளம்பற்றினதாவது: ஒரு மனிதன் எருசலேமிலிருந்து எரிக்கோ நகருக்கு இறங்கிப் போகையில், கள்ளர் கையில் அகப்பட்டான். அவர்கள் அவனிடத்திலிருந்ததையெல்லாம் பறித்துக்கொண்டு, அவனைக் காயப்படுத்திக் குற்றுயிராய் விட்டுப்போனார்கள்.

31. அத்தருணத்தில் ஆசாரியன் ஒருவன் அவ்வழியாய் வரும்படி நேர்ந்தது. ஆனாலும் அவனைக்கண்டு, அப்பாலே போய்விட்டான்.

32. அவ்விதமே, ஒரு லேவித்தனும் அவ்விடத்துக்குச் சமீபமாய் வந்து, அவனைக் கண்டு, பக்கமாய் விலகிப்போனான்.

33. ஆனால் வழிப்போக்கனான சமாரியன் ஒருவன் அவனருகே வந்து, அவனைக்கண்டு மனமிரங்கி,

34 கிட்ட அணுகி, எண்ணெயும் திராட்ச ரசமும்வார்த்து அவனுடைய காயங்களைக்கட்டி, அவனைத் தன் வாகனத்தின்மேல் ஏற்றி, ஒரு சத்திரத்தில் கொண்டுபோய், அவனைப் பராமரித்தான்.

35. மறுநாள் அவன் இரண்டு தெனிியர் நாணயங்களை எடுத்துச் சத்திரக்காரனுக்குக் கொடுத்து: இவனை விசாரித்துக்கொள்; நீ அதிகமாய்ச் செலவழித்திருப்பதையெல்லாம் நான் திரும்பி வரும்போது, உனக்கு உத்தரிப்பேன் என்றான்.

36. ஆகையால் கள்ளர் கையில் அகப்பட்டவனுக்கு இந்த மூன்றுபேரில் எவன் பிறனாயிருந்தான் என்றார்.

37. அதற்கு அவன்: அவனுக்குத் தயை செய்தவனே என்றான். அப்போது யேசுநாதர் அவனை நோக்கி: நீயும் போய், அவ்விதமே செய் என்றார்.

38. பிற்பாடு சம்பவித்ததேதென்றால், அவர்கள் பிரயாணமாய்ப் போகையில், அவர் ஒரு ஊரிலே பிரவேசித்தார். அவ்விடத்தில் மார்த்தம்மாள் என்னப்பட்ட ஒரு ஸ்திரீ அவரைத் தன் வீட்டில் ஏற்றுக்கொண்டாள். (அரு. 11-1; 12-23.)

39. இவளுக்கு மரியம்மாளென்னும் பேருள்ள ஒரு சகோதரி இருந்தாள். அவள் ஆண்டவருடைய பாதத்தின் கிட்ட உட்கார்ந்து, அவருடைய வாக்கியத்தைக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

40. மார்த்தம்மாளோ பற்பல வேலைகளில் உழன்று வருகையில் (யேசுநாதருக்கு முன்பாக) வந்து நின்று: ஆண்டவரே, என் சகோதரி என்னைத் தனியே வேலைசெய்ய விட்டிருக்கிறதைப் பற்றித் தேவரீருக்குக் கவலையில்லையா? அவள் எனக்கு உதவிசெய்யக் கற்பித்தருளும் என்றாள்.

41. ஆண்டவர் அவளுக்குப் பிரத்தியுத்தாரமாக: மார்த்தாளே, மார்த்தாளே, நீ அநேக காரியங்களைப்பற்றிக் கவலைப்பட்டுக் கலங்குகிறாய்.

30. எருசலேமிலிருந்து இறங்கின இந்த மனுஷன் யூத ஜாதியானென்றும், அடுத்த 31-ம் வாக்கியத்தில் சொல்லியிருக்கிற குரு யூத ஜாதியாருடைய குருவென்றும், 33-ம் வாக்கியத்தில் குறித்திருக்கிற சமாரியன் யூத ஜாதியாருக்குப் புறம்பானவனென்றும், இவ்விரு ஜாதியாருக்குள் உண்பனை தின்பனை கிடையாதென்றும் அறிக (அரு. 4-ம் அதி. 9-ம் வச.) இங்கு சொல்லப்பட்ட உதாரணம் நன்றாய் விளங்கும்படி இத்தேசத்திலே குருக்களென்று விளங்குகிற பிராமணர் தங்கள் தேசத்தார் மட்டில் நடக்கிற வகையையும், சமாரியருக்கு ஒப்பான சத்திய வேதக் குருக்கள் இத்தேசத்தாரை நடத்துகிற வகையையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டியது.

42. ஆயினும் ஒரு காரியந்தான் அவசரம். மரியம்மாள் உத்தமமான பங்கைத் தெரிந்துகொண்டாள். அது அவளிடத்தினின்று எடுபடமாட்டாது என்று திருவுளம்பற்றினார்.

## 11-ம். அதிகாரம்.

ஜெபம் செய்யும் முறையும், நிலைமையான ஜெபத்தின் பலனும், யோனாஸ் தீர்க்கதரிசியின் அடையாளமும்.

1. மீண்டும் சம்பவித்ததேதெனில், அவர் ஒரு ஸ்தலத்திலே ஜெபஞ்செய்துகொண்டிருந்து முடிந்தபின், அவருடைய சீஷர்களில் ஒருவர் அவரை நோக்கி: சுவாமீ, அருளப்பர் தம்முடைய சீஷர்களுக்கு ஜெபம்பண்ணக் கற்றுக்கொடுத்ததுபோல தேவரீரும் எங்களுக்குக் கற்றுக்கொடுத்தருளும் என்றார்.

2. ஆதலால் அவர் அவர்களை நோக்கி: நீங்கள் ஜெபஞ் செய்யும்போது: பிதாவே! உம்முடைய நாமம் அர்ச்சிக்கப்படுவதாக; உம்முடைய இராச்சியம் வருக. (மத். 6-9.)

3. அன்றன்றுள்ள எங்கள் அப்பத்தை எங்களுக்கு இன்றுதாரும்.

4. எங்கள் பாவங்களை எங்களுக்கு மன்னியும், ஏனெனில், நாங்களும் எங்களிடத்தில் கடன்பட்ட எவனுக்கும் மன்னிக்கிறோம். எங்களைச் சோதனையிலே பிரவேசிப்பியாதேயும் என்று சொல்லுங்கள் என்றார்.

5. பின்னும் அவர் அவர்களை நோக்கி: உங்களிலே எவனாகிலும், ஒரு சிநேகிதனை உடையவனாயிருந்து, நடு இராத்திரியில் அவனிடத்திலேபோய்: சிநேகிதா, எனக்கு மூன்று அப்பங்களைக் கடனாகக் கொடு;

6. ஏனென்றால் என் சிநேகிதன் பிரயாணமாய் என்னிடத்தில் வந்திருக்கிறான், அவனுக்கு முன் வைக்க என்னிடத்தில் ஒன்றுமில்லை, என்று சொல்ல,

7. அவன் உள்ளேயிருந்து மாறுத்தாரமாக: நீ என்னைத் தொந்தரவு செய்யாதே, இப்போது கதவு அடைத்தாயிற்று, என் பிள்ளைகளும் என்னோடேகூடப் படுத்திருக்கிறார்கள், நான் எழுந்து உனக்குக் கொடுக்கமுடியாது என்று சொன்னாலும்,

8. இவன் விடாமல் கதவைத் தட்டிக்கொண்டிருந்தால், தனக்குச் சிநேகிதனாயிருக்கிறதினிமித்தம் அவன் எழுந்து கொடாதிருந்தாலும், இவனுடைய அலட்டலைப்பற்றியாவது எழுந்து, தேவைக்களவாய் அப்பங்களைக் கொடுப்பானென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

9. அவ்வண்ணமே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்: நீங்கள் கேளுங்கள், உங்களுக்குக் கொடுக்கப்படும்; தேடுங்கள், கண்டடைவீர்கள்; தட்டுங்கள், உங்களுக்குத் திறக்கப்படும் (மத். 7-7.)

---

42. யேசுநாதர் சுவாமி தமது பசியாற்ற ஒருவகை உணவு இருந்தால் போதும், பலவகை செய்ய அவசியமில்லையென்று மார்த்தம்மாளுக்குப் புத்தி சொல்லி, மரியம்மாள் தேவவாக்கைக் கேட்கிறதிலே, முழுதும் கருத்தாயிருக்கிறதினால், அவள் செய்கிறது உத்தமமான காரியம்; அதற்குத் தடை செய்யப்படாதென்று படிப்பிக்கிறார். (மெனோக்கியுஸ்.). இது இயல்பான அர்த்தமாயினும் ஞான அர்த்தத்திலே ஒரே காரியம் அவசியமென்பது, மனிதரெல்லாருக்கும் மகா முக்கியமாகிய ஆத்தும இரட்சணியமே அவசியமானதென்று பயனாம்.

4. மத். 6-ம் அதி. 11-ம் வசன வியாக்கியானம் காண்க.

10. ஏனெனில் கேட்கிற எவனும் பெற்றுக்கொள்ளுகிறான், தேடுகிறவன் கண்டடைகிறான், தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும்.

11. உங்களுக்குள்ளே எவனாகிலும் தன் தகப்பனிடத்தில் அப்பத்தைக் கேட்டால், அவனுக்குக் கல்லைக் கொடுப்பானோ? அல்லது மச்சத்தைக் கேட்டால், மச்சத்துக்குப் பதிலாகச் சர்ப்பத்தைக் கொடுப்பானோ? (மத். 7-9; அரு. 16-23.)

12. அல்லது முட்டையைக் கேட்டால், அவனுக்குத் தேளைப் பிடித்து நீட்டுவானோ?

13. ஆனால் நீங்கள் தீயோராயினும் உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல கொடைகளைக்கொடுக்க அறிந்திருக்கும்போது, உங்கள் பரம பிதாவானவர் தம்மை வேண்டிக்கொள்ளுகிறவர்களுக்கு எவ்வளவோ அதிகமாய் நல்ல இஸ்பிரீத்துவைத் தந்தருளுவார் என்று திருவுளம்பற்றினார்.

14. பின்பு அவர் ஊமையாயிருந்த ஒரு பசாசைத் துரத்தினார். பசாசைத் துரத்தினவுடனே ஊமையன் பேசினான்; ஜனங்கள் அதைப் பற்றி ஆச்சரியப்பட்டார்கள். (மத். 12-22.)

15. அப்போது அவர்களில் சிலர்: இவன் பேய்களின் தலையாகிய பேயேல்சேபூபினால் பேய்களைத் துரத்துகிறான் என்றார்கள். (மத். 9-34; மாற். 3-22.)

16. வேறு சிலர் அவரைச் சோதிக்கத்தக்கதாக வானத்தினின்று ஓர் அதிசயத்தை அவரிடத்தில் கேட்டார்கள்.

17. ஆனால் அவர்களுடைய நினைவுகளை அவர் கண்டமாத்திரத்தில் அவர்களை நோக்கிச்சொன்னதாவது: தனக்குத்தானே விரோதமாய்ப்பிரிந்த எந்த இராச்சியமும் பாழாய்ப்போம்; வீடும் வீட்டின்மேல் விழும்.

18. ஆகையால் சாத்தானும் தனக்குத்தானே விரோதமாய்ப் பிரிந்துபோனால், அதின் இராச்சியம் நிலை நிற்பதெப்படி? இப்படியிருக்க, நான் பேயேல்சேபூபினால் பேய்களை ஓட்டுகிறேன் என்கிறீர்களே.

19. நான் பேயேல்சேபூபினால் பேய்களை ஓட்டினால், உங்கள் மக்கள் யாரைக்கொண்டு அவைகளை ஓட்டுகிறார்கள்? ஆகையால் அவர்களே உங்களுக்கு நடுவர்களாயிருப்பார்கள்.

20. ஆனால் நான் சர்வேசுரனுடைய விரலினாலே பேய்களை ஓட்டுகிறேனாகில் சர்வேசுரனுடைய இராச்சியம் மெய்யாகவே உங்களிடத்தில் வந்திருக்கிறது.

21. ஆயுதமணிந்த பலசாலி தன் மாளிகையைக் காக்கிறபோது, அவன் உடைமைகளெல்லாம் பத்திரமாயிருக்கின்றன.

22. ஆனால் அவனிலும் அதிக பலவான் ஒருவன் சடுதியில் வந்து, அவனை ஜெயித்தால், அவன் நம்பியிருந்த ஆயுதங்களையெல்லாம் பறித்துக்கொண்டு, அவன் கொள்ளைப்பொருளையும் பங்கிடுவான்.

23. என்னோடு இராதவன் எனக்கு விரோதியாய் இருக்கிறான்; என்னோடு சேர்த்துக்கொள்ளாதவன் சிதறடிக்கிறான். (லூக். 9-50.)

24. அசுத்த அரூபி ஒரு மனிதனை விட்டுப் புறப்படும்போது, வறண்ட இடங்களில் இளைப்பாற்றியைத் தேடித் திரிந்தும், கிடையாமல்: நான் விட்டுப் புறப்பட்ட என் வீட்டுக்குத் திரும்பிப் போவேனென்று சொல்லி, (மத். 12-43.)

20. சர்வேசுரனுடைய விரல்:—அவருடைய வல்லபம்.

25. மறுபடி வந்து, அது துடைப்பத்தால் சுத்தமாக்கப்பட்டு, சோடிக்கப்பட்டிருக்கிறதைக் காண்கிறது.

26. அப்பொழுது அது போய், தன்னிலும் அதிக பொல்லாத வேறே ஏழு அரூபிகளைத் தன்னோடு கூட்டிக்கொண்டுவந்து, உள்ளே புகுந்து அங்கே குடியிருக்கும். அப்பொழுது அந்த மனிதனுடைய முந்தின ஸ்திதியிலும் பிந்தின ஸ்திதி அதிக கெடுதியாயிருக்கிறதென்று திருவுளம் பற்றினார். (2 இராய. 2-20.)

27. அவர் இவைகளை வசனிக்கையில் சம்பவித்ததேதெனில், ஜனக்கூட்டத்தில் நின்று ஓர் ஸ்திரீயானவள் தன் சத்தத்தை உயர்த்தி, அவரை நோக்கி: உம்மைச் சுமந்த உதரமும் நீர் அமுதுண்ட கொங்கைகளும் பாக்கியம் பெற்றவைகளே என்றாள்.

28. அதற்கு அவர்: அப்படியானாலும், சர்வேசுரனுடைய வாக்கியத்தைக்கேட்டு, அதை அநுசரிக்கிறவர்கள் பாக்கியவான்களென்று திருவுளம்பற்றினார்.

29. மீளவும் ஜனக்கும்பல்கள் திரண்டு கூடுகையில், யேசுநாதர் வசனிக்கத்தொடங்கினதாவது: இந்தச் சந்ததி தீய சந்ததியாமே. இது ஒரு அடையாளத்தைத் தேடுகிறது. ஆயினும் யோனாஸ் என்கிற தீர்க்கதரிசியின் அடையாளமல்லாது, வேறு அடையாளம் இதற்குக் கொடுக்கப்படுவதில்லை. (மத். 12-39.)

30. அதெப்படியென்றால் யோனாஸ் நினிவே பட்டணத்தாருக்கு அடையாளமானதுபோல, மனுமகனும் இந்தச் சந்ததிக்கு அடையாளமாயிருப்பார். (யோ. 2-1.)

31. தென்திசை அரசி தீர்வைநாளிலே இந்தச் சந்ததியின் மனுஷருக்கு விரோதமாய் எழும்பி, அவர்களுக்கு ஆக்கினைத்தீர்வையிடுவாள். ஏனெனில் அவள் சலோமோனுடைய ஞானத்தைக் கேட்கப் பூமியின் எல்லைகளினின்று வந்தாள். இதோ, சலோமோனிலும் பெரியவர் இங்கேயிருக்கிறார். (3 அரச. 10-11.)

32. நினிவே பட்டணத்தார் நடுத்தீர்வைநாளிலே இச்சந்ததியோடு எழும்பி இதற்கு ஆக்கினைத்தீர்வையிடுவார்கள். ஏனெனில் அவர்கள் யோனாஸின் பிரசங்கத்தைக்கேட்டுத் தவஞ்செய்தார்கள். இதோ, யோனாஸிலும் மேலானவர் இங்கேயிருக்கிறார். (யோனாஸ். 3-5.)

33. ஒருவனும் விளக்கைக் கொளுத்தி மறைவான இடத்திலாவது மரக்காலின் கீழாவது வைக்கமாட்டான். ஆனால் உள்ளே வருகிறவர்கள் வெளிச்சத்தைக் காணும்பொருட்டு அதை விளக்குத் தண்டின்மேல் வைப்பான். (லூக். 8-16.)

34. உன் கண்ணானது உன் சரீரத்தின் விளக்காமே. உன் கண் இயல்பானதாயிருந்தால், உன் உடல் முழுவதும் வெளிச்சமுள்ளதாய் இருக்கும். உன் கண் கெட்டதாயிருந்தால் உன் சரீரமும் இருள் மூடினதாயிருக்கும். (மத். 6-22.)

35. ஆகையால் உன்னிலுள்ள ஒளியானது இருளாகாதபடி பார்த்துக் கொள்.

26. மத். 12-ம் அதி. 29-ம் வசன வியாக்கியானம் காண்க.

28. தேவ வாக்கியத்தைக் கேட்டு அநுசரிக்கிறவர்கள் பாக்கியவான்களென்று யேசுநாதர் சுவாமி இங்கே சொல்லுகிறதினாலே, தேவ வாக்கியத்தை எல்லாரையும் விட உத்தமமாய்க் கேட்டு அநுசரித்துவந்த (லூக். 2-ம் அதி. 51-ம் வச.) பரமநாயகி, எல்லாரிலும் பாக்கியவதியென்று தன்னாலே விளங்குகிறது. அத்தோடு அவள் தேவதாயாகவும் இருப்பதால் இருவகையிலும் எல்லாரையும் விடப் பாக்கியவதியாளென்பதற்குச் சந்தேகமில்லை.

36. ஆகையால் உன் சரீர முழுவதும் ஒருபக்கத்திலும் இருளின்றி வெளிச்சமுள்ளதாயிருந்தால், எல்லாம் பிரகாசமாயிருப்பதுந்தவிர ஒளிவுள்ள தீபம் போல் உன்னைப் பிரகாசிப்பிக்கும் என்றார்.

37. யேசுநாதர் இவ்விதம் பேசிக்கொண்டிருந்தபொழுது, பரிசேயன் ஒருவன் தன் வீட்டில் அவர் அசனஞ்செய்யவேண்டுமென்று அவரை மன்றாடினன். ஆகையால் அவர் போய்ப் பந்தியமர்ந்தார்.

38. பரிசேயனேவென்றால்: இவர் அசனத்துக்குமுன் ஸ்நானஞ்செய்யாமலிருப்பதேன் என்று தனக்குள்ளே யோசித்துச்சொல்லத்தொடங்கினன். (மத். 15-2.)

39. ஆகையால் ஆண்டவர் அவனை நோக்கி: பரிசேயராகிய நீங்கள் போசனபான பாத்திரங்களின் வெளிப்புறத்தைச் சுத்தமாக்குகிறீர்கள்; உங்கள் உள்ளமோ கொள்ளையினாலும் அக்கிரமத்தினாலும் நிறைந்திருக்கின்றது. (மத். 23-25; தித்து. 1-15.)

40. மதிகேடரே, வெளிப்புறத்தை உண்டாக்கினவர் உட்புறத்தையும் உண்டாக்கவில்லையோ?

41. அப்படியிருக்க இனிச் செய்யவேண்டியதேதென்றால், பிட்சைகொடுங்கள்; அப்போது இதோ, உங்களுக்குச் சகலமுஞ் சுத்தமாயிருக்கும்.

42. ஆனால் பரிசேயரே, உங்களுக்கு ஐயோகேடு! ஏனெனில் புதினா, ரூத்தாப்பூண்டு இன்னும் மற்றச் சகல கீரைகளிலும் தசமபாகத்தைக் காணிக்கையாக ஒப்புக்கொடுத்து, நீதியையும் தேவசிநேகத்தையும் விட்டுவிடுகிறீர்கள். ஆயினும் இவைகளைச் செய்யவேண்டியது, அவைகளையும் விடப்படாது.

43. பரிசேயரே, உங்களுக்கு ஐயோ கேடு! ஏனெனில் ஜெப ஆலயங்களில் முதன்மையான ஆசனங்களையும், தெருக்களில் வந்தனங்களையும் இச்சிக்கிறீர்கள். (மத். 23-6; லூக். 20-46.)

44. உங்களுக்கு ஐயோகேடு! ஏனெனில் நீங்கள் வெளியில் காணப்படாத கல்லறைகளைப்போல் இருக்கிறீர்கள். அவைகளின்மேல் நடக்கிற மனுஷரும் அவைகளை அறியாதிருக்கிறார்கள் என்றார்.

45. அப்பொழுது நீதிசாஸ்திரிகளில் ஒருவன் அவரைநோக்கி: போதகரே, நீர் இப்படிப் பேசும்போது எங்களையும் அவமானப்படுத்துகிறீர் என்றான்.

46. அதற்கு அவர்: நீதிசாஸ்திரிகளாகிய உங்களுக்கும் ஐயோ கேடு! ஏனெனில் சுமக்கக்கூடாத சுமைகளை மனுஷர்கள்மேல் சுமத்துகிறீர்கள்; நீங்களோ, உங்கள் ஒற்றைவிரலினாலும் அந்தச் சுமைகளைத் தொடுகிறதில்லை. (மத். 23-4.)

47. தீர்க்கதரிசிகளுக்குக் கல்லறைகளைக் கட்டுகிற உங்களுக்கு ஐயோ கேடு! உங்கள் பிதாக்களோ, அவர்களைக் கொலைசெய்தார்கள்.

36. மத். 6-ம் அதி. 22-ம் வசன வியாக்கியானம் காண்க.

41. பிட்சையானது களவினாலும் அக்கிரமத்தினாலும் நிறைந்த ஆத்துமத்தைப் பரிசுத்தப்படுத்தக் கூடுமோ? கூடாது. ஆனால் நல்ல கருத்தோடு கொடுக்கப்பட்ட பிட்சையானது மனந்திரும்புதலுக்கும் பாவப்பொறுத்தலுக்கும் வேண்டிய தேவ கிருபையைப் பெறுவிக்கச் சக்தியுள்ளது. ஆகையால் பிட்சை கொடுங்கள். அப்போது மனந்திரும்புதலையும் பாவப்பொறுத்தலையும் ஆண்டவர் உங்களுக்குக் கொடுப்பாரென்று அர்த்தமாம். தோபி. 4-ம் அதி. 4-ம் வசனம் காண்க.

48. உங்கள் பிதாக்களுடைய கிரியைகளை நீங்கள் அங்கீகரிக்கிறீர்களென்பதற்குச் சந்தேகமறச் சாட்சி கொடுக்கிறீர்கள். ஏனெனில் உங்கள் பிதாக்களே அவர்களைக்கொலைசெய்தார்கள்; நீங்களோ, அவர்களுக்குக் கல்லறை கட்டுகிறீர்கள்.

49. இதினிமித்தம் சர்வேசுரனுடைய ஞானம் உரைத்ததாவது: இவர்களிடத்தில் தீர்க்கதரிசிகளையும் அப்போஸ்தலர்களையும் அனுப்புவேன்; அவர்களில் சிலரைக் கொலைசெய்து, சிலரை உபத்திரவப்படுத்துவார்கள்.

50. ஆகையால் உலக சிருஷ்டிப்பு முதல் இந்தச் சந்ததியால் சிந்தப்பட்ட சகல தீர்க்கதரிசிகளுடைய இரத்தத்திற்கும்,

51. அதாவது: அபேலின் இரத்த முதல் தேவாலயத்திற்கும் பீடத்திற்கும் நடுவே கொலையுண்ட சக்கரியாவின் இரத்தம் வரைக்கும் இந்தச் சந்ததியிடத்தில் கணக்கு வாங்கும்படியாயிருக்கும் என்று உரைத்திருக்கிறது. ஆம், அப்படியே இந்தச் சந்ததியிடத்தில் கணக்குக் கேட்கப்படும் என்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். (1 ஆதி. 4-8; 2 நாளா. 24-22; மத். 23-35.)

52. நீதி சாஸ்திரிகளே, உங்களுக்கு ஐயோ கேடு! ஏனெனில் அறிவாகிய திறவுகோலை எடுத்துக்கொண்டீர்கள்; நீங்களும் உட்பிரவேசியாமல், பிரவேசிக்கப்பார்த்தவர்களையும் தடுத்துவிட்டீர்கள் என்றார்.

53. அவர் இவைகளை அவர்களுக்குச்சொல்லும்போது, பரிசேயரும் நீதிசாஸ்திரிகளும் அவரைப்பலமாய் நெருக்கவும் பல கேள்விகளால் அவர் வாயை அடைக்கவுந்தொடங்கி,

54. அவரைக் குற்றஞ் சாட்டும்படியாக அவர் வார்த்தையில் ஏதாவது பிசகு பிடிக்கவேண்டுமென்று தந்திரம் பண்ணிக்கொண்டிருந்தார்கள்.

## 12-ம். அதிகாரம்.

யேசுநாதர் பரிசேயருடைய புளிக்காரமும் இஸ்பிரீத்துசாந்துவுக்கு விரோதமான தேவதூஷணமும் ஏதென்று அறிவித்ததும், வேதகலாபனைகளைப்பற்றிச் சொல்லிய புத்திமதிகளும்

1. அத்தறுவாயிலே திரளான ஜனங்கள் ஒருவரொருவரை மிதிக்கத்தக்கவிதமாய் வந்து சூழ்ந்திருக்கையில், அவர் தமது சீஷர்களைநோக்கி வசனிக்கத் தொடங்கினதாவது: பரிசேயருடைய கள்ள ஞானமாகிய புளிக்காரத்தின்மட்டில் நீங்கள் எச்சரிக்கையாயிருங்கள்.

2. ஆயினும், வெளியாக்கப்படாத மறைபொருளுமில்லை· அறியப்படாத இரகசியமுமில்லை.

3. ஏனென்றால் நீங்கள் இருளிலே சொன்னவைகள் வெளிச்சத்திலே சொல்லப்படும்; நீங்கள் அறைகளிலே காதுக்குள் பேசினது வீடுகளின்மேலே பிரசங்கிக்கப்படும்.

4. என் சிநேகிதராகிய உங்களுக்கு நான் சொல்லுகிறேன்: சரீரத்தைக் கொலைசெய்து, அதற்குமேல் ஒன்றுஞ் செய்யத் திராணியற்றவர்களுக்கு நீங்கள் அஞ்சவேண்டாம்.

5. ஆனால் நீங்கள் யாருக்கு அஞ்சவேண்டுமென்று உங்களுக்குக் காண்பிப்பேன்: உயிரைப் பறித்த பின்பு நரகத்தில் தள்ள வல்லமையுள்ளவருக்கே அஞ்சுங்கள்; ஆம், அவருக்கே அஞ்சுங்களென்று உங்களுக்குச்சொல்லுகிறேன்.

1. மத். 16-ம் அதி. 11-ம். வசன வியாக்கியானம் காண்க.

6. இரண்டு காசுக்கு ஐந்து அடைக்கலங்குருவிகள் விற்கிறதல்லவோ? ஆயினும் அவைகளில் ஒன்றாகிலும் சர்வேசுரனுடைய சமுகத்தில் மறக்கப்படுவதில்லை.

7. உங்கள் தலை உரோமங்களெல்லாம் எண்ணப் பட்டிருக்கின்றன; ஆகையால் நீங்கள் அஞ்சவேண்டாம்; அநேகம் அடைக்கலங்குருவிகளைவிட நீங்கள் அதிக விலையுள்ளவர்களாயிருக்கிறீர்கள். (லூக். 21-18.)

8. மீளவும் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: மனிதர் முன்பாக என்னை அறிக்கைபண்ணுகிறவன் எவனோ, அவனை மனுமகனும் சர்வேசுரனுடைய தூதர்முன்பாக அறிக்கை பண்ணுவார். (லூக். 9-26.)

9. மனிதர் முன்பாக என்னை மறுதலிக்கிறவன் சர்வேசுரனுடைய தூதர் முன்பாக மறுதலிக்கப்படுவான்.

10. மனுமகன்பேரில் குறைபேசின எவனுக்கும் மன்னிக்கப்படும். இஸ்பிரீத்துசாந்துவானவருக்கு விரோதமாய்த் தூஷணஞ் சொன்னவனுக்கோ மன்னிக்கப்படுவதில்லை. (மத். 12-31; மாற். 3-28; எபி. 6-4.)

11. இதன்றியே, ஜெப ஆலயங்களுக்கும் நியாயாதிபதிகளுக்கும் அதிகாரிகளுக்கும் முன்பாக உங்களைக் கொண்டு போய்விடும்போது, எவ்விதமாய் அல்லது என்ன மாறுத்தரஞ்சொல்லுவோம் என்றும், எதைப் பேசுவோம் என்றும் கவலைப்படாதிருங்கள். (மாற். 13-11.)

12. ஏனெனில் நீங்கள் பேசவேண்டியதை இஸ்பிரீத்துசாந்துவானவர் அந்நேரத்தில் உங்களுக்குப் படிப்பிப்பார் என்றார். (மத். 10-19; லூக். 21-14.)

13. அப்பொழுது ஜனக்கூட்டத்திலிருந்து ஓர் மனிதன் அவரைநோக்கி: குருவே, என் சகோதரன் என்னோடு காணியாட்சியைப் பங்கிட்டுக்கொள்ளும்படி அவனுக்குச் சொல்லும் என்றான்.

14. அவரோ, அவனைநோக்கி: மனுஷனே, உங்கள்மேல் என்னை நடுவனாகவும் பங்கிடுகிறவனாகவும் நியமித்தவன் யார் என்றார்.

15. பின்பு அவர் அவர்களைப்பார்த்து திருவுளம்பற்றினதாவது: எவ்வித பொருளாசையின்மட்டிலும் எச்சரிக்கையாயிருங்கள்; ஏனெனில் ஒருவனுக்குள்ள ஆஸ்தியின் பெருக்கத்தில் அவனுடைய உயிர் நிற்கிறதில்லை என்றார்.

16. மீளவும் அவர்களுக்கு அவர் ஒரு உவமையைச் சொன்னார், அதாவது: ஐசுவரியமுள்ள ஒருவனுடைய காணிபூமி ஏராளமான பலனைத்தந்தது.

17. அதினாலே அவன் தனக்குள்ளே யோசித்துக்கொண்டு: நான் என்ன செய்வேன்? என் தானியங்களைச் சேகரித்துவைக்க எனக்கு இடமில்லையே.

18. ஆகையால் நான் இப்படிச் செய்வேன்: என் களஞ்சியங்களை இடித்து அதிகப் பெரிதாகக் கட்டி, எனக்கு விளைந்த பலன்களெல்லாவற்றையும், என் ஆஸ்தியையும் அதிலே சேர்த்துவைத்து,

10. மத். 12-ம் அதி. 32-ம் வசன வியாக்கியானம் காண்க. இஸ்பிரீத்து சாந்துவாகிய சர்வேசுரனுடைய ஏவுதலுக்குக் கொஞ்சமாகிலும் இடங்கொடாத பாவி மனந்திரும்பி இரட்சணியமடைவது கூடாத காரியமென்று சொல்ல வேண்டியிருக்கிறது.

19. என் ஆத்துமாவைநோக்கி: என் ஆத்துமாவே, அநேகம் வருஷங்களுக்கு வேண்டிய வெகு சம்பத்துக்கள் உனக்குச் சேர்த்து வைக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் நீ இளைப்பாறி, உண்டு, குடித்து விருந்தாடு என்பேன் என்றான். (எக்கி. 11-19.)

20. அப்பொழுது சர்வேசுரன் அவனைநோக்கி: மூடனே, இந்த இராத்திரியில்தானே உன் உயிரை உன்னிடத்தினின்று வாங்குவார்களே அப்போது நீ தேடினவைகள் யாருடையதாகும் என்றார்.

21. சர்வேசுரனிடத்தில் திரவியவானாயிராமல், தனக்குப் பொக்கிஷத்தைச் சேர்த்துவைக்கிறவன் இவ்விதமாயிருக்கிறான் என்றார். (1 திமோ. 6-17; இயா. 5-1.)

22. பிற்பாடு அவர் தம்முடைய சீஷர்களைப்பார்த்து: இப்படியிருக்க, என்னத்தை உண்போமென்று உங்கள் சீவனுக்காகவும், என்னத்தை உடுத்திக் கொள்ளுவோமென்று உங்கள் சரீரத்துக்காகவும் கவலைப்படாதிருங்களென்று நான் உங்களுக்குச்சொல்லுகிறேன். (மத்.6-25.)

23. உணவைவிடச் சீவனும், உடையைவிட உடலும் மேன்மையுள்ளதாயிருக்கிறது.

24. காகங்களைக் கவனித்துப்பாருங்கள்; அவைகள் விதைக்கிறதுமில்லை, அறுக்கிறதுமில்லை, அவைகளுக்கு உக்கிராணமுமில்லை, களஞ்சியமுமில்லை; என்றாலும், சர்வேசுரன் அவைகளைப் போஷிக்கிறார். அவைகளிலும் நீங்கள் எவ்வளவோ அதிக மேன்மையுள்ளவர்களாயிருக்கிறீர்கள்.

25. பின்னும் யோசிப்பதினாலே தன் வளர்த்திக்குமேல் ஒரு முழங்கூட்ட உங்களுக்குள் எவனாலே கூடும்?

26. ஆகையால் அற்ப சொற்பக் காரியம் முதலாய் உங்களாலே கூடாதிருக்க, மற்றவைகளுக்காக நீங்கள் கவலைப்படுவானேன்?

27. லீலியப் புஷ்பங்கள் எப்படி வளருகிறதென்று கவனித்துப் பாருங்கள்; அவைகள் உழைக்கிறதுமில்லை, நூற்கிறதுமில்லை; என்றாலும் சலோமோன் முதலாய்த் தன் சர்வ மகிமையிலும் அவைகளில் ஒன்றைப் போலாகிலும் உடுத்தியதில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

28. ஆதலால் இன்றைக்குக் காட்டிலிருந்து, நாளைக்கு அடுப்பிலே போடப்படுகிற புல்லைச் சர்வேசுரன் இவ்விதமாய் உடுத்துவித்தால், அற்ப விசுவாசிகளே, உங்களை எவ்வளவோ அதிகமாய் உடுத்துவிப்பார்?

29. ஆனபடியினாலே என்னத்தை உண்போம், என்னத்தைக் குடிப்போமென்று விசாரப்பட்டு, ஏக்கமாய் வானத்தைப் பாராதேயுங்கள்.

30. ஏனெனில் இவையெல்லாம் உலகத்தார் (விசாரப்பட்டுத்) தேடுகிறார்கள்; உங்கள் பிதாவோ, இவைகள் உங்களுக்கு வேண்டியதென்று அறிந்திருக்கிறார்.

31. ஆகையால் சர்வேசுரனுடைய இராச்சியத்தையும் அவருடைய நீதியையும் முந்த முந்தத் தேடுங்கள்; அப்பொழுது இவையெல்லாம் உங்களுக்குக்கூடக் கொடுக்கப்படும்.

32. சிறுமந்தையே, நீங்கள் பயப்படாதேயுங்கள்; ஏனெனில் உங்களுக்குத் தம்முடைய இராச்சியத்தைத் தரும்படி உங்கள் பிதாவுக்குச் சித்தமாயிற்று.

33. உங்களுக்கு உள்ளவைகளை விற்று, பிச்சைகொடுங்கள்; பழமைப்படாத பணப்பைகளையும், குறையாத பொக்கிஷத்தையும் பரலோகத்திலே உங்களுக்குச் சம்பாதித்துவையுங்கள்; அங்கே திருடனும் அணுகான், பூச்சியும் அரிக்காது.

34. அதேனென்றால், உங்கள் பொக்கிஷம் எங்கேயிருக்கிறதோ, அங்கேயே உங்கள் இருதயமும் இருக்கும்.

35. உங்கள் இடைகள் வரிந்து கட்டப்படவும், எரிகிற தீபங்கள் உங்கள் கைகளில் இருக்கவுங்கடவது. (மத். 25-1.)

36. தங்கள் ஏஜமான் வந்து தட்டும்போது, உடனே அவருக்குத் திறக்கும்படியாக அவர் கலியாணத்தினின்று எப்பொழுது திரும்புவாரென்று காத்திருக்கிற மனிதருக்கு நீங்கள் ஒப்பாயிருக்கக் கடவீர்கள்.

37. ஏஜமான் வரும்போது, விழித்திருக்கிறவர்களாகக் காணப்படுகிற ஊழியரே பாக்கியவான்கள்; அவர் தமது இடையை வரிந்து கட்டி, அவர்களைப் பந்தியமரச் செய்து, அவர்களில் ஒவ்வொருவரிடத்திலும் போய், அவர்களுக்குப் பரிமாறுவாரென்று உண்மையாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

38. அவர் இரண்டாஞ் சாமத்தில் வந்தாலும், மூன்றாஞ் சாமத்தில் வந்தாலும், அவ்வண்ணமே காண்பாராகில், அவ்வூழியர் பாக்கியவான்கள்.

39. அல்லாமலும், திருடன் இன்ன வேளையில் வருவானென்று வீட்டெஜமான் அறிந்திருந்தால், சந்தேகமற விழித்திருந்து, தன் வீட்டைக் கன்னமிடவொட்டானென்று அறிந்துகொள்ளுங்கள். (மத். 24-43.)

40. அந்தப்படியே, நீங்களும் ஆயத்தமாயிருங்கள். ஏனென்றால் நீங்கள் நினையாதவேளையில் மனுமகன்வருவார் என்று திருவுளம் பற்றினார். (காட்சி. 16-15 )

41. அப்பொழுது இராயப்பர் அவரைப்பார்த்து: சுவாமீ, இந்த உவமையை எங்களுக்குமாத்திரஞ் சொல்லுகிறீரோ, அல்லது எல்லாருக்குஞ் சொல்லுகிறீரோ என்று கேட்க,

42. ஆண்டவர் திருவுளம்பற்றினதாவது: தன் வீட்டாருக்குத் தக்க சமயத்திலே கோதுமையை அளந்து கொடுக்கும்பொருட்டு ஏஜமானால் அவர்கள்மேல் ஏற்படுத்தப்பட்ட பிரமாணிக்கமும் விவேகமுமுள்ள காரியஸ்தன் யாரென்று நினைக்கிறாய்? (மத். 24-45; 1 கொரி. 4-2.)

43. ஏஜமான் வரும்போது, அப்படியே செய்துகொண்டிருக்கிறதாகக் காணப்படுகிற அந்த ஊழியனே பாக்கியவான்.

44. தனக்குண்டாகிய எல்லாவற்றின்பேரிலும் அவனை அதிகாரியாக ஏற்படுத்துவானென்று உண்மையாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

45. ஆனால் அந்த ஊழியன்: என் ஏஜமான் வரத் தாமதித்திருக்கிறாரென்று தன் இருதயத்தில் சொல்லிக்கொண்டு, மற்ற ஊழியரையும் ஊழியக்காரிகளையும் அடிக்கவும், உண்டு குடித்து, வெறியெடுக்கவும் துவக்கினால்,

46. அந்த ஊழியன் நினையாத நாளிலும் அறியாத நேரத்திலும் ஏஜமான் வந்து, அவனைப் புறம்பாக்கி, பிரமாணிக்கமற்றவர்களோடு அவனுக்கு வீதம் விதிப்பான்.

47. மேலும் தன் ஏஜமானுடைய சித்தத்தை அறிந்து, ஆயத்தம் பண்ணாமலும் அவன் சித்தப்படியே செய்யாமலுமிருந்த ஊழியன் அநேகம் அடிபடுவான்.

48. அறியாமல் தண்டனைக் குரியவைகளைச் செய்தவனோ, கொஞ்சம் அடிபடுவான். அதெப்படியென்றால் எவனுக்கு அதிகங் கொடுக்கப்பட்டதோ, அவனிடத்தில் அதிகங் கேட்கப்படும்; எவனிடத்தில் அதிகமாய் ஒப்புவித்தார்களோ, அவனிடத்தில் அதிகமாய்க் கேட்பார்கள்.

49. நான் பூமியிலே அக்கினியைப் போட வந்தேன். அது பற்றியெரிய வேண்டும் என்பதல்லாதே, வேறென்னத்தை விரும்புகிறேன்?

50. அன்றியும் நான் பெறவேண்டிய ஸ்நானம் ஒன்றுண்டு; அது நிறைவேறுமளவும் எவ்வளவோ நெருக்கிடைப் படுகிறேன். (மாற். 10-38.)

51. நான் பூமியிலே சமாதானத்தைக் கொண்டுவந்தேன் என்று நினைக்கிறீர்களோ? சமாதானத்தையல்ல; பிரிவினையையே கொண்டுவந்தேன் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். (மத். 10-34.)

52. எவ்வாறெனில், இதுமுதல் ஐந்து பேர் உள்ள ஒரு வீட்டில் மூவர் இருவருக்கும், இருவர் மூவருக்கும் விரோதமாய்ப் பிரிந்து நிற்பார்கள்.

53. தகப்பன் மகனுக்கும், மகன் தன் தகப்பனுக்கும், தாய் மகளுக்கும், மகள் தாய்க்கும், மாமியாள் தன் மருமகளுக்கும், மருமகள் தன் மாமியாளுக்கும் விரோதமாய்ப் பிரிந்து போவார்கள் என்றார்.

54. மறுபடியும் அவர் ஜனக்கூட்டத்தைப்பார்த்து: மேற்குத்திசையிலிருந்து ஓர் மேகம் எழும்புகிறதைக் கண்டவுடனே மழை வரும் என்கிறீர்கள்; அப்படியே ஆகின்றது.

55. தென்றல் வீசுகிறதைக் காணும்போது, உஷ்ணமுண்டாகும் என்கிறீர்கள்; அப்படியும் ஆகிறது.

56. கள்ள ஞானிகளே, வானம் பூமி இவைகளின் தோற்றத்தை நிதானிக்க வகை அறிந்திருக்கிறீர்களே; இக்காலத்தை நீங்கள் நிதானியாமல் போவதெப்படி?

57. நியாயமாயிருக்கிறதை நீங்களே தீர்மானிக்காமல் இருப்பதெப்படி?

58. நீ உன் எதிராளியோடு அதிகாரியினிடத்திற்குப் போகும்போது, வழியில்தானே அவனிடத்தினின்று விடுதலையாகும்படி பிரயாசப்படு. இல்லாவிட்டால், ஒருவேளை அவன் உன்னை நியாயாதிபதிக்கு முன்பாக இழுத்துக் கொண்டுபோவான்; நியாயாதிபதி உன்னைச் சேவகனுக்குக் கையளிப்பான்; சேவகன் உன்னைச் சிறைச்சாலையில் போடுவான்.

59. நீ கடைசிச் சல்லி உத்தரிக்குமளவும் அவ்விடம்விட்டு வெளிப்படமாட்டாயென்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

---

49-50. இந்த இரண்டு வசனங்களுக்கும் அர்த்தமாவது: யேசுநாதர் பூலோகத்திலே பற்றுவிக்கக் கொண்டுவந்த அக்கினி: முதலாவது இருதயங்களைப் பற்றியெரியப்பண்ணுகிற தேவசிநேக அக்கினி. 2-வது தேவ ஸ்தோத்திரத்தைப் பரம்பச் செய்யவும் ஆத்துமங்களை இரட்சிக்கவும் வேகமான பற்றுதல் என்கிற அக்கினி. 3-வது புண்ணியவான்களைப் பரிசுத்தமாக்குகிற வேத கலகங்களின் அக்கினியாம். அவர் பெறவேண்டியிருந்த ஸ்நானம் மனுஷருடைய இரட்சணியத்துக்காக அவர் சிந்தவேண்டியிருந்த தமது இரத்த ஸ்நானந்தான்.

51-53. மத். 10-ம் அதி. 34-36-ம் வசன வியாக்கியானம் காண்க.

54-56. மத் 12-ம் அதி. 40-ம் வசன வியாக்கியானம் காண்க.

59. மத். 5-ம் அதி. 25-ம் வசன வியாக்கியானம் காண்க.

## 13-ம். அதிகாரம்.

தவஞ்செய்யவேண்டுமென்பதும், காய்ப்பில்லாத அத்திமரமும், ஓய்வுநாளில் ஒரு ஸ்திரீ குணப்பட்டதும், கடுகுவிதை, புளிக்காரம் முதலியவைகளின் உவமைகளும், எருசலேமின் அழிவும்.

1. அக்காலத்திலே பிலாத்து என்பவன் கலிலேயருடைய பலிகளோடுகூட அவர்கள் இரத்தத்தையும் கலந்தானென்கிற சங்கதியை அங்கேயிருந்த சிலர் அவர்கள் விஷயமாய் அவருக்கு அறிவித்தார்கள்.

2. அவர் மறுமொழியாக அவர்களை நோக்கி: அந்தக் கலிலேயர் அப்படிக் கொத்த துன்பத்துக்கு உள்ளானதால், அவர்கள் எல்லாக் கலிலேயரிலும்பாவிகளாயிருந்தார்களென்று நினைக்கிறீர்களோ? (அரு. 9-3.)

3. அப்படியல்லவென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆனால் நீங்கள் தபஞ்செய்யாவிட்டால், எல்லாரும் அப்படியே கெட்டுப்போவீர்கள்.

4. அவ்விதமே சீலோவேயில் கோபுரம் இடிந்து, பதினெட்டுப்பேர்மேல் விழுந்து, அவர்களைக் கொன்றதே. அந்தப் பதினெட்டுப்பேரும் எருசலேமில் குடியிருக்கிற மற்றெல்லா மனிதரிலும் குற்றவாளிகளாயிருந்தார்களென்று நினைக்கிறீர்களோ?

5. அப்படியல்லவென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆனால் நீங்கள் தபஞ்செய்யாவிட்டால், எல்லாரும் அப்படியே கெட்டுப்போவீர்கள் என்றார்.

6. மேலும் இந்த உவமையையும் அவர்களுக்குத் திருவுளம்பற்றினார். ஒருவன் தன் திராட்சத் தோட்டத்திலே ஒரு அத்திமரத்தை நட்டுவைத்திருந்தான்; அதிலே அவன் கனியைத் தேடிவந்தும், அகப்படவில்லை.

7. ஆகையால் அவன் தோட்டக்காரனை நோக்கி: இதோ, மூன்று வருஷமாக இந்த அத்திமரத்தில் நான் கனியைத்தேடிவருகிறேன்; ஒன்றுங்காணவில்லை. ஆகையால் இதை வெட்டிப்போடு; ஏன் இடத்தை அடைத்துக்கொண்டிருக்கிறது என்றான்.

8. அவனோ மறுமொழியாக: ஐயா, இது இந்தவருஷமும் இருக்கட்டும்; அதற்குள்ளாக நான் இதைச்சுற்றிலும் வெட்டி, எருப்போடுகிறேன்;

1. யேசுநாதர்சுவாமி காலத்தில் கலிலேயா தேசத்தான் ஒருவன் (அப். நட. 5 அதி. 37 வச.) எழும்பி அநேகரைத் தன் பட்சமாய்த் திரட்டி செசாரிராயன் அஞ்ஞானியாயிருப்பதால், மெய்யான சர்வேசுரனைக் கும்பிடுகிறவர்கள் அவனுக்கு அடங்கி, வரி செலுத்துகிறது தகாதென்று போதித்து, ஜனங்களுக்குள் கலகமுண்டாக்கினான். அப்போது பிலாத்து என்ற தேசாதிபதி அக்கலகக்காரரோடே யுத்தஞ் செய்யப் போய், அவர்கள் பலியிட்டுக்கொண்டிருக்கும்போது, அவர்கள்மேல் பாய்ந்து அவர்களில் அநேகரைக் கொன்றதினால் அவர்கள் இரத்தம் அவர்கள் கொடுத்த பலிகளின் இரத்தத்தோடு கலந்ததென்று சொல்லப்பட்டிருக்கிறது. (கொர்னேலியுஸ் அலாப்பிதே.)

4. எருசலேம் நகரின் கோட்டைச் சுவரை யடுத்த சீலோவே என்னும் ஊற்றும் அந்த ஊற்றுக்கருகாண்மையில் ஒரு கோபுரமும் இருந்தது. ஏதோ காரணத்தால் அந்தக் கோபுரம் இடிந்துவிழவே, பதினெட்டுப்பேர் அதின்கீழ் அகப்பட்டுமடிந்தார்கள். இவர்களும் பிலாத்தனால் கொல்லப்பட்ட கலிலேயரும் சடுதியில் இறந்ததுபோல, பாவிகளும் மனந்திரும்பாதேபோனால், தேவ கோபாக்கினையால் சடுதி மரணமடைந்து நித்திய ஆக்கினைக்குள்ளாகலாம் என்பது கருத்து.

9. கனிகொடுத்தால் சரி; கொடாவிட்டால் இனி இதை வெட்டிப்போடுவீர் என்று சொன்னான் என்றார்.

10. பின்னும் அவர் ஓய்வுநாளிலே அவர்களுடைய ஜெப ஆலயத்தில் உபதேசித்துக்கொண்டிருந்தார்.

11. அப்பொழுது இதோ, பதினெட்டுவருஷமாய் நோக்காட்டு அரூபிபிடித்திருந்த ஒரு பெண்பிள்ளை அங்கேயிருந்தாள். அவள் கூனியாய்ச் சற்றும் நிமிர்ந்துபார்க்கக் கூடாதவளாயிருந்தாள்.

12. யேசுநாதர் அவளைக் கண்டு, அவளைத் தமதருகில் அழைத்து: ஸ்திரீயே, உன் நோக்காட்டினின்று விடுதலையாக்கப்பட்டாய் என்று சொல்லி,

13. அவள்மேல் தமது கரங்களை நீட்டினார். உடனே அவள் நிமிர்ந்து, சர்வேசுரனை ஸ்துதித்தாள்.

14. யேசுநாதர் ஓய்வுநாளிலே சொஸ்தப்படுத்தினதைப்பற்றி, ஜெப ஆலயத் தலைவன் கோபமடைந்து, ஜனங்களைநோக்கி: வேலைசெய்வதற்கு ஆறு நாட்கள் உண்டே, அந்த நாட்களிலே வந்து, சௌக்கியம் பெற்றுக்கொள்ளுங்கள். ஓய்வுநாளிலே இது தகாது என்றான்.

15. அப்பொழுது ஆண்டவர் அவனுக்குப்பிரத்தியுத்தாரமாக: கள்ள ஞானிகளே, உங்களில் ஒவ்வொருவனும் தன் எருதையாவது கழுதையையாவது ஓய்வுநாளிலே தொழுவத்தினின்று அவிழ்த்து, தண்ணீர்காட்டக் கொண்டுபோகிறதில்லையோ?

16. அப்படியிருக்க, இதோ, பதினெட்டு வருஷமாகச் சாத்தான் கட்டிவைத்திருந்த அபிரகாமுடைய குமாரத்தியாகிய இவளை ஓய்வுநாளிலே இந்தக் கட்டிலிருந்து அவிழ்த்துவிடவேண்டியதில்லையோ? என்றார்.

17. அவர் இவைகளைச் சொல்லும்போது, அவருடைய எதிராளிகள் அனைவரும் வெட்கப்பட்டார்கள். சகல ஜனங்களும் அவரால் மகத்துவப் பிரதாபமாய்ச் செய்யப்பட்ட சகல காரியங்களையும்பற்றிச் சந்தோஷப்பட்டார்கள்.

18. மேலும் அவர் திருவுளம்பற்றினதாவது: சர்வேசுரனுடைய இராச்சியம் எதற்கு ஒப்பாயிருக்கிறது? அதை எதற்கு நிகராக மதிப்பேன்?

19. அது ஒரு கடுகுவிதைக்கு ஒப்பாயிருக்கின்றது. அதை ஒருமனிதன் எடுத்துத் தன்னுடையதோட்டத்திலே போட, அது ஓங்கி வளர்ந்து, பெரிய விருட்சமாயிற்று. ஆகாயத்துப்பறவைகள் அதின் கிளைகளிலே வந்து தங்கின என்றார். (மத். 13-31; மாற். 4-31.)

9. இந்த உவமைக்கு அர்த்தமாவது: இந்தத் திராட்சத் தோட்டத்தின் எஜமான் சர்வேசுரன்; திராட்சத் தோட்டம் யூத சபை; அத்திமரம் அச்சபையிலுள்ள யூதர்களாம்; கனியோ பச்சாத்தாபக் கிரியைகளைக் கொடுக்கிற மனந்திரும்புதல்; தோட்டக்காரன் பிரயாசப்பட்ட மூன்று வருஷம் என்பது யேசுக்கிறீஸ்துநாதர் அவர்களுக்குப் பிரசங்கித்து வந்த காலம்; இன்னம் கெடுவாக அதற்குக் கொடுக்கப்பட்ட காலம் என்பது அப்போஸ்தலர் அவர்களுக்குப் பிரசங்கித்த நாட்களாம். அதிலும் அவர்கள் மனந்திரும்பாததினாலே, அந்த அத்திமரத்துக்கு இடப்பட்ட ஆக்கினைக்கொப்பாக, அவர்களும் வேரோடு பிடுங்கப்பட்டாற்போல, தங்கள் தேசத்தினின்று துரத்தப்பட்டு, நாலா தேசங்களிலுஞ் சிதறுண்டு தேவ சாபத்துக்குள்ளாயிருக்கிறார்கள். தவக்கனி கொடாத பாவிகளுக்கும் இவ்விதம் சம்பவிக்கும்.

19. மத். 13-ம் அதி. 32-ம் வசன வியாக்கியானம் காண்க.

20. மறுபடியும் அவர் சொன்னதாவது: சர்வேசுரனுடைய இராச்சியத்தை எதற்கு ஒப்பாக எண்ணுவேன்?

21. மூன்று மரக்கால் மாவு முழுதும் புளிப்பேறும்படிக்கு அதற்குள் ஓரிஸ்திரீ எடுத்துத் திணித்துவைத்த புளிக்காரத்துக்கு ஒப்பாயிருக்கின்றது என்றார். (மத். 13-33.)

22. பின்னும் அவர் எருசலேம் நகரத்துக்குப் பிரயாணமாகி, பட்டணங்கள், கிராமங்கள் வழியாய் உபதேசித்துக்கொண்டு போகும்போது, (மத். 9-35.)

23. ஒருவன் அவரைப் பார்த்து: ஆண்டவரே, இரட்சிக்கப்படுகிறவர்கள் கொஞ்சம்பேரோ என்றான். அவரோவெனில் அவர்களுக்குச் சொன்னதாவது:

24. நெருக்கமான வாசல் வழியாய் உட்பிரவேசிக்கப் பிரயாசப்படுங்கள்; ஏனெனில் அநேகர் உட்பிரவேசிக்கத் தேடுவார்கள்; அவர்களால் கூடாமற்போகும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். (மத். 7-13.)

25. வீட்டெஜமான் உட்பிரவேசித்து, கதவைப் பூட்டினபின்பு, நீங்கள் வெளியே நின்று: சுவாமீ, எங்களுக்குத் திறக்கவேண்டுமென்று சொல்லிக் கதவைத் தட்டத் துவக்குவீர்கள். அவர் மாறுத்தாரமாக: நீங்கள் எவ்விடத்தாரோ, உங்களை அறியேன் என்று உங்களுக்குச் சொல்லுவார். (மத். 25-10.)

26. அப்பொழுது நீங்கள்: உமதுசமுகத்திலே நாங்கள் போசனபானம்பண்ணினோமே, நீர் எங்கள் வீதிகளில் உபதேசித்தீரே என்று சொல்லத் துவக்குவீர்கள்.

27. ஆயினும் அவர் உங்களை நோக்கி: நீங்கள் எவ்விடத்தாரோ, உங்களை அறியேன். அக்கிரமக்காரராகிய நீங்களெல்லாரும் என்னைவிட்டு அகன்றுபோங்கள் என்பார். (மத். 7-23; 25-41.)

28. அப்பொழுது அபிரகாம், ஈசாக், யாக்கோப் என்கிறவர்களும், சகல தீர்க்கதரிசிகளும் சர்வேசுரனுடைய இராச்சியத்தில் இருக்கிறதையும், நீங்களோ, வெளியே தள்ளுண்டவர்களாயிருக்கிறதையும் காண்கையில், அங்கே உங்களுக்கு அழுகையும் பற்கடிப்பும் உண்டாகும்.

29. அன்றியும் கிழக்கிலும், மேற்கிலும், வடக்கிலும், தெற்கிலுமிருந்து அநேகர் வந்து, சர்வேசுரனுடைய இராச்சியத்தில் பந்தியமருவார்கள்.

30. மேலும் இதோ, கடைசியாயிருக்கிறவர்கள் முதல்வர்களாயிருப்பார்கள், முதல்வர்களாயிருக்கிறவர்கள் கடைசியானவர்களாயிருப்பார்கள் என்றார். (மத். 19-30; 20-16; மாற். 10-31.)

31. அன்றையத்தினத்திலே பரிசேயரில் சிலர் அவரிடத்தில் வந்து: நீர் இவ்விடம் விட்டுப் புறப்பட்டுப்போம்; ஏனென்றால் எரோது உம்மைக்கொலைசெய்ய மனதாயிருக்கிறான் என்றார்கள்.

21. மத். 13-ம் அதி. 33-ம் வசன வியாக்கியானம் காண்க.

30. யூதர்கள் முந்தியும் அஞ்ஞானிகள் பிந்தியும் சர்வேசுரனை அறியும்படி அழைக்கப்பட்டிருந்தாலும், அஞ்ஞானிகள் யூத ஜாதியாருக்கு முந்திப் பரலோக இராச்சியத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்களென்று அர்த்தமாம்.

32. அப்போழுது அவர் அவர்களை நோக்கி: நீங்கள் போய்: நான் இன்றைக்கும் நாளைக்கும் பசாசுகளைத் துரத்துகிறேன்; வியாதிக்காரரைச்சொஸ்தமாக்குகிறேன்; மூன்றும் நாளிலோ முற்றும் முடிவையடைகிறேன் என்று அந்த நரிக்குச் சொல்லுங்கள்.

33. ஆகிலும் இன்றும் நாளையும் மூன்றும் நாளிலும் நான் நடமாடவேண்டியது. ஏனெனில் ஒரு தீர்க்கதரிசியும் எருசலேம்நகருக்கு வெளியே மடிவது தகாது.

34. எருசலேமே, எருசலேமே, தீர்க்கதரிசிகளைக் கொலைசெய்து உன்னிடத்தில் அனுப்பப்படுகிறவர்களைக் கல்லால் எறிகிறுயே; பட்சியானது கூட்டிலுள்ள தன் குஞ்சுகளை இறக்கையின் கீழ் அணைத்துக்கொள்ளுவதுபோல, எத்தனையோ முறை உன் மக்களையும் அணைத்துக்கொள்ள விரும்பினேன், உனக்கு மனமில்லாமற்போயிற்றே. (மல். 23-37.)

35. ஆகையால் இதோ, உங்கள் வீடு உங்களுக்குப் பாழாய் விடப்படும். மேலும், கர்த்தருடைய நாமத்தினாலே வருகிறவர் ஆசீர்வதிக்கப்பட்டவரென்று நீங்கள் சொல்லுங்காலம் வருமளவும் என்னைக் காணமாட்டீர்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார். (லூக். 19-43.)

## 14-ம். அதிகாரம்.

மகோதர வியாதிக்காரன் குணமானதும், விருந்துக்கு அழைக்கப்பட்டவர்களுடைய உவமையும், கோபுரத்தைக் கட்டுமுன் செலவைக் கணிக்கவேண்டும் என்பதும்.

1. பின்பு சம்பவித்ததேதெனில், ஒரு ஓய்வுநாளிலே யேசுநாதர் பரிசேயரில் தலைவனாகிய ஒருவனுடைய வீட்டில் அசனம்பண்ணப் போயிருந்தபோது (அங்கே இருந்தவர்கள்) அவர் மேல் நோக்கமாயிருந்தார்கள்.

2. அப்பொழுது மகோதர வியாதியஸ்தனான ஒரு மனுஷன் அவருக்கு முன்பாக இருந்தான்.

3. யேசுநாதர் நீதி சாஸ்திரிகளையும் பரிசேயரையும் நோக்கி: ஓய்வு நாளிலே சுகமாக்கலாமா என்று கேட்டார். (மத். 12-10.)

4. அதற்கு அவர்கள் பேசாதிருந்தார்கள். அவர் அவனைக் கையால் பிடித்துச் சுகமாக்கி, அனுப்பினார்.

5. பின்னும் அவர் அவர்களைப் பார்த்து: உங்களில் யாதொருவனுடைய கழுதையாவது எருதாவது கிணற்றில் விழுந்தால், ஓய்வுநாளானாலும் உடனே அதை வெளியே இழுத்துவிடாதிருப்பானோ? என்றார்.

6. அதற்கு அவர்கள் பதில்சொல்ல மாட்டாமலிருந்தார்கள்.

7. அப்பால் விருந்துக்கு அழைக்கப்பட்டவர்கள் எப்படி முதல் ஆசனங்களைத் தெரிந்துகொள்ளுகிறார்களென்று அவர் பார்த்து, அவர்களுக்குச்சொன்ன உவமையாவது:

8. நீ கலியாணத்துக்கு அழைக்கப்பட்டிருக்கும்போது, பந்தியில் முதன்மையான இடத்தில் உட்காராதே; ஏனெனில் உன்னிலும் அதிக கனவான் ஒருவனை அவனால் அழைக்கப்பட்டிருக்கலாம்.

32. நரிக்கு ஒப்பான கபடுள்ள இந்த ஏரோதரசன் என்னைக் கபடமாய்ப் பிடித்து கொல்லத் தேடுகிறான். ஆனால் அவன் வஞ்சனைக்கு நான் பயப்படுகிறதில்லை, என் சித்தத்தின்படிக்குச் சில நாள் என் கிரியைகளை நடத்திக்கொண்டு வருவேன்; பிற்பாடு எனக்குச் சித்தமாயிருக்கும்போது, நான் எருசலேமுக்குப் போய் அங்கே மனிதர்களுடைய இரட்சணியத்துக்காக என் பிராணனைக் கொடுப்பேன்; அதுவரைக்கும் என்மேல் கை நீட்ட ஒருவனாலும் முடியாது என்பது கர்த்தர் சொல்லுவதின் கருத்தாம்.

9. அப்போழுது உன்னையும் அவனையும் அழைத்தவன் உன்னிடத்தில் வந்து: இவருக்கு இந்த இடத்தைக்கொடு என்று சொல்லும்படியாயிருக்கும். அப்பொழுது நீ வெட்கத்தோடு கடைசியான இடத்திற்குப் போவாய்.

10. ஆனால் நீ அழைக்கப்பட்டிருக்கும்போது, கடைசியான இடத்தில் போய் உட்கார்ந்திரு: அப்பொழுது உன்னை அழைத்தவன் வந்து உன்னை நோக்கி: சிநேகிதனே, மேலான இடத்துக்கு வாரும் என்றுசொல்ல, உன்னோடுகூடப் பந்தியிலிருக்கிறவர்களுக்கு முன்பாக அது உனக்கு மகிமையாயிருக்கும்.(உவமை 25-7.)

11. ஏனெனில் தன்னை உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவான்; தன்னைத் தாழ்த்துகிறவனோ உயர்த்தப்படுவான் என்றார். (மத். 23-12; லூக். 18-14.)

12. பின்னும் அவர் தம்மை விருந்துக்கு அழைத்தவனைப் பார்த்து: நீ பகல் விருந்தாவது இரா விருந்தாவது நடத்தும்போது, உன் சிநேகிதர்களையாவது உன் சகோதரர்களையாவது இனத்தார்களையாவது ஐசுவரியமுள்ள அயலார்களையாவது அழைக்கவேண்டாம். அழைத்தால், ஒருவேளை அவர்களும் உன்னை அழைப்பார்கள்; அப்பொழுது அது உனக்குப் பிரதிபலனாகிவிடும். (தொபி. 4-7; உவமை 3-9.)

13. ஆனால் நீ விருந்துசெய்யும்போது, ஏழைகளையும் ஊனரையும் சப்பாணிகளையும் குருடர்களையும் அழைப்பாயாக;

14. அவர்கள் உனக்குப் பதிலளிக்கக் கூடாதவர்களாகையால், நீ பாக்கியவானாயிருப்பாய்; ஏனெனில் நீதிமான்களுடைய உத்தானத்தில் உனக்குப் பிரதிபலனளிக்கப்படும் என்றார்.

15. அவரோடுகூடப் பந்தியமர்ந்தவர்களில் ஒருவன் இவைகளைக் கேட்டு, அவரை நோக்கி: சர்வேசுரனுடைய இராச்சியத்தில் அப்பம் புசிக்கிறவனே பாக்கியவான் என்றான்.

16. அப்பொழுது அவர் அவனை நோக்கித் திருவுளம்பற்றினதாவது: ஒரு மனுஷன் பெரிய விருந்துசெய்து, அநேகரை அழைப்பித்தான். (மத். 22-2.)

17. அப்படியே அவன் விருந்துவேளையில்: இப்பொழுது எல்லாம் தயாராயிருக்கின்றது, அழைக்கப்பட்டவர்கள் வரவேண்டுமென்று சொல்லும்படி, அவர்களிடத்தில் தன் ஊழியனை அனுப்பினான்.

12. ஒருவன் தன் உறவின் முறையார் சிநேகிதருக்கு விருந்து செய்யும்போது, வழக்கமாய் உலகப்பற்றுதலினாலும், பதிலுக்குப் பதிலடையலாமென்ற ஆசையினாலும் செய்கிறபடியால், அது பேறுபலனுள்ளதல்லவென்று ஆண்டவர் சொல்லுகிறாரொழிய, அதைப் பாவமென்று விலக்குகிறதில்லை. எவ்வளவுக்குப் புண்ணிய கருத்தோடு செய்யப்படுகிறதோ, அவ்வளவுக்குப் புண்ணிய பலன் கிடைக்குமென்றறிக.

15. **சர்வேசுரனுடைய இராச்சியத்தில் அப்பம் புசிக்கிறவனே பாக்கியவான்:—** சுவிசேஷத்திலே சர்வேசுரனுடைய இராச்சியமென்பது, சம்மனசுக்களும் அர்ச்சியசிஷ்டவர்களும் வாழும் பேரின்ப மோக்ஷத்தையும், இவ்வுலகத்தில் சத்திய திருச்சபையையும் குறிக்கும். பரலோகவாசிகளுடைய அப்பமென்பது அவர்களுக்கு எந்நாளும் திர்ப்தியையும் எந்நாளும் பேரின்ப ஆசையையும் வருவிக்கிற சர்வேசுரனுடைய தரிசனமாமே. இந்த ஆனந்தத்தை அனுபவிக்கிறவர்கள் மெய்யாகவே பாக்கியவான்கள். திருச்சபையில் மெய்யான இன்பத்தைத் தருகிற அப்பமானது சற்பிரசாதமாகிய யேசுநாதருடைய திருச் சரீரமாமே. இந்த அப்பத்தைத் தக்க ஆயத்தத்தோடு உட்கொள்ளுகிறவனும் பாக்கியவானாமே.

18. அவர்களெல்லாரும் ஒருப்படப் போக்குச்சொல்லத் துவக்கினார்கள்; ஒருவன் அவனைநோக்கி: நான் ஒரு தோட்டத்தை வாங்கினேன், அவசியமாய் நான்போய் அதைப் பார்க்க வேண்டும். ஆகையால் என்னை மன்னித்துக்கொள்ளக் கேட்டுக்கொள்ளுகிறேன் என்றான்.

19. மற்றொருவன்: ஐந்தேர் மாடு வாங்கினேன், அவைகளைப் பரீட்சிக்கப்போகிறேன். ஆகையால் என்னை மன்னித்துக்கொள்ளக் கேட்டுக்கொள்ளுகிறேன் என்றான்.

20. இன்னொருவன்: நான் ஒருபெண்ணை மணமுடித்தேன்; ஆதலால் வரக்கூடாது என்றான்.

21. ஊழியன் திரும்பிவந்து, இவைகளைத் தன்எஜமானுக்கு அறிவித்தான். அப்பொழுது குடும்பத்தெஜமான் கோபமடைந்து, தன் ஊழியனை நோக்கி: நீ சீக்கிரமாகப் பட்டணத்துத் தெருக்களிலும் வீதிகளிலும் போய், ஏழைகளையும் ஊனர்களையும் குருடர்களையும் நொண்டிகளையும் இங்கே அழைத்துக்கொண்டுவா என்றான்.

22. பின்னும் ஊழியன்: ஆண்டவனே, நீர் கட்டளையிட்டபடி செய்தாயிற்று, இன்னம் இடமிருக்கிறது என்றான்.

23. எஜமான் ஊழியனைநோக்கி: நீ புறப்பட்டு, வழிகளிலும் வேலிகளோரத்திலும்போய், என் வீடு நிறையும்படியாக ஜனங்களை உள்ளேவரும்படி கட்டாயப்படுத்து.

24. ஏனெனில் அழைக்கப்பட்டிருந்த அந்த மனுஷரில் ஒருவனும் என் விருந்தைச் சுவைபார்ப்பதில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று சொன்னான் என்றார்.

25. பின்பு வெகு ஜனங்கள் அவரோடுகூட நடந்து போகையில், அவர் அவர்களைத் திரும்பிப்பார்த்துச் சொன்னதாவது:

26. யாதொருவன் என்னிடத்தில் வந்து, தன் தகப்பனையும், தாயையும், மனைவியையும், பிள்ளைகளையும், சகோதரரையும், சகோதரிகளையும், இன்னும் தன் உயிரையுமுதலாய்ப் பகைக்காவிட்டால், என் சீஷனாயிருக்கக் கூடாது. (மத். 10-37.)

27. தன் சிலுவையைச் சுமந்துகொண்டு, என் பிறகே வராத எவனும் எனக்குச் சீஷனாயிருக்கக் கூடாது.

28. அதேதெனென்றால், உங்களில் எவனாவது ஒரு கோபுரத்தைக் கட்ட விரும்பினால், அவன் முந்த உட்கார்ந்து அதைக் கட்டி முடிப்பதற்குத் தனக்கு அவகாசமுண்டோவென்று அறியும்படி அதற்குச் செல்லும் செலவைக் கணக்குப் பாராதிருப்பானோ?

---

23. இந்த உவமையால் யேசுநாதர் தம்மைப் புறக்கணித்து, தமது வார்த்தைகளுக்குக் காதுகொடாத யூதரைக் கைவிட்டுப் புறஜாதி ஜனங்களைத் தமது திருச்சபைக்கு அழைத்துச் சேர்ப்பாரென்று தெளிவாகிறது.

26. நமது விரோதிகளை முதலாய் நாம் பகைக்கப்படாதென்று யேசுநாதர் கற்பித்திருக்க, நமது தாய்தந்தை முதலியவர்களைப் பகைக்காதிருந்தால், நாம் அவருக்குச் சீஷர்களாகக்கூடாதென்று இவ்வாக்கியத்தில் சொல்லியிருப்பதின் கருத்தேதெனில்: நாம் மெய்யாகவே கர்த்தரைச் சிநேகித்து அவரைப் பின்பற்றுவதற்கு நம்முடைய தந்தை தாய் முதலியவர்கள் தடையாயிருந்தால், அவர்கள் மேல் நமக்குள்ள பட்சத்தையும் பிரியத்தையும் பாராமல் அவர்களை விட்டுப் பிரியவேண்டுமென்பதே கருத்து.

28-33. இந்த இரண்டு உவமைகளுக்கும் அர்த்தமேதெனில், தனக்குள்ள யாவற்றையுந் துறந்துவிடத் துணியாமல், உத்தமதனத்தின் பாதையில் யேசுநாதரைப் பின்செல்ல வேண்டுமென்றிருக்கிறவன் செலவில்லாமல் கோபுரத்தைக் கட்டி முடிக்கப் பார்க்கிறவனைப்போலும், சேனையில்லாமல் சத்துருப் படையை முறிய அடித்து வெல்லப்போகிறவனைப் போலுமாவான் என்றர்த்தமாம்.

29. இல்லாவிடில், அவன் அஸ்திவாரம் போட்டபின் முடிக்கமாட்டாதே போனால், காண்கிற எல்லோரும் அவனை நகைக்கத் துவக்கி :

30. இந்த மனிதன் கட்டத் துவக்கினான், முடிக்கமாட்டாதேபோனான் என்று சொல்லுவார்களே.

31. அல்லது வேறொரு இராஜாவோடு யுத்தஞ்செய்யப் போகிற எந்த இராஜாவானாலும் முந்த உட்கார்ந்து, இருபதினாயிரம் பேரோடு தன்மேல் வருகிற அவனைப் பதினாயிரம்பேரோடு தான் எதிர்க்கக் கூடுமோவென்று ஆலோசியாதிருப்பானோ?

32. அப்படிக் கூடாதென்று கண்டால், அவன் இன்னந் தூரத்திலிருக்கும்போதே ஸ்தானாபதிகளையனுப்பிச் சமாதானத்துக்கடுத்தவைகளைக் கேட்டுக்கொள்ளுவானல்லோ?

33. அவ்வண்ணமே உங்களில் எவனும் தனக்குள்ள யாவற்றையுந் துறந்து விடாதிருந்தால், அவன் எனக்குச் சீஷனாயிருக்கமாட்டான்.

34. உப்பு நல்லதுதான்; ஆனால் அது காரமற்றுப்போனால் எதினால் காரமாக்கப்படும்? (மத். 5-13.)

35. அது பூமிக்காவது எருவுக்காவது உதவாமல், புறம்பே கொட்டப்படும். கேட்கச் செவியுள்ளவன் கேட்கக்கடவான் என்று திருவுளம்பற்றினார்.

## 15-ம். அதிகாரம்.

காணாமல்போன ஆட்டையும், திராக்மா என்ற நாணயத்தையும், ஊதாரிப்பிள்ளையையும் பற்றிய உவமைகள்.

1. அப்பொழுது அவருடைய வாக்கியங்களைக் கேட்கவேண்டுமென்று ஆயக்காரர்களும் பாவிகளும் அவரண்டையில் வந்தார்கள்.

2. அதினாலே பரிசேயரும் வேதபாரகரும் முறுமுறுத்து: இவர் பாவிகளை ஏற்றுக்கொண்டு, அவர்களோடே அசனம்பண்ணுகிறார் என்பார்கள். (மத். 9-11; 11-19.)

3. ஆகையால் அவர் பின்வரும் உவமையை அவர்களுக்குச் சொல்லி வசனித்ததாவது :

4. உங்களில் நூறு ஆடுகளை உடைய எவனாயினும் அவைகளில் ஒன்று காணாமற்போனால், மற்றத் தொண்ணூற்றொன்பது ஆடுகளையும் வனாந்தரத்தில் விட்டுவிட்டு, காணாமற்போன ஆட்டைக் காணுந்தனையும் தேடித்திரியானோ? (மத். 18-12.)

5. அதைக்கண்டு பிடித்தபின்பு, சந்தோஷமாய் அதைத் தன்தோள்களின்மேல் போட்டுக்கொண்டு,

6. வீட்டுக்குவந்து, தன் சிநேகிதரையும், அயலகத்தாரையும் கூட வரவழைத்து: காணாமற்போன ஆட்டைக் கண்டுபிடித்தேன், ஆகையால் என்னோடுகூடக் களிகூருங்களென்று சொல்லுவானல்லோ?

7. அவ்விதமே தவஞ்செய்ய அவசியமில்லாத தொண்ணூற்றொன்பது நீதி

34. உப்பினால் ஞானஸ்நானங் குறிக்கப்படுகிறது. குருவானவர் ஒருவனுக்கு ஞானஸ்நானங் கொடுக்கும்போது, கொஞ்சம் உப்பை அவனுடையநாவில் வைத்து: ஞானத்தின் உப்பை உட்கொள்ளென்று சொல்லுகிறார்.

7. மனந்திரும்ப அவசியமில்லாத நீதிமான்கள் பேரில் சர்வேசுரன் குறையற்ற பட்சமாயிருந்தாலும், மனந்திரும்புகிற பாவி அவருடைய சந்தோஷத்துக்கு ஒரு விசேஷ காரணமாயிருக்கிறானென்று இவ்வாக்கியத்தால் விளங்குகிறது.

மான்களைப்பற்றி உண்டாகிற சந்தோஷத்தைவிட, தவஞ்செய்கிற ஒரு பாவியினிமித்தம் மோட்சத்திலே அதிக சந்தோஷமுண்டாயிருக்குமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

8. அன்றியும் பத்து திராக்மா என்னும் பணங்களையுடைய எந்த ஸ்திரீயாகிலும் அதில் ஒன்று காணாமல்போனால், விளக்கைக் கொளுத்தி, வீட்டைப் பெருக்கி, அதைக் காணுந்தனையும் கவலையோடு தேடாதிருப்பாளோ?

9. அதை அவள் கண்டுபிடித்த பின்பு, தன் சிநேகிதிகளையும், அயல் வீட்டுக்காரிகளையுங் கூடவரவழைத்து: இதோ, காணாமற்போன என் பணத்தைக் கண்டுபிடித்தேன், ஆகையால் என்னோடேகூடக் களிகூருங்களென்று சொல்லுவாளல்லோ?

10. அவ்விதமே தவஞ்செய்கிற ஒருபாவியினிமித்தம் தேவதூதர்களுக்கு முன்பாகச் சந்தோஷமுண்டாயிருக்குமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

11. மீண்டும் அவர்சொன்னது: ஒரு மனிதனுக்கு இரண்டு குமாரர் இருந்தார்கள்.

12. அவர்களில் இளையவன் தகப்பனைநோக்கி: பிதாவே, ஆஸ்தியில் எனக்குக் கிடைக்கவேண்டிய பாகத்தை எனக்குத் தரவேண்டும் என்றான். ஆதலால் அவன் அவர்களுக்குத் தன் ஆஸ்தியைப் பங்கிட்டுக் கொடுத்தான்.

13. அப்படியிருக்கச் சிலநாளைக்குப் பின்பு, அந்த இளையமகன் எல்லாவற்றையும் சேர்த்தெடுத்துக்கொண்டு, தூரதேசத்துக்குப் புறப்பட்டுப்போய், அங்கே துர்ச்சனனாய்த் திரிந்து, தன் ஆஸ்தியை நாசமாக்கினான்.

14. எல்லாவற்றையுஞ் செலவழித்த பின்பு, அந்தத் தேசத்திலே கடின பஞ்சம் உண்டாகவே, அவன் வறுமைப் படத்தொடங்கி,

15. அந்தத் தேசத்துக் குடிகளில் ஒருவனிடத்தில் போய் ஒண்டினான். அந்தக் குடியானவன் தன் பன்றிகளை மேய்க்கும்படி அவனைத் தன் கிராமத்துக்கு அனுப்பினான்.

16. அங்கே பன்றிகள் தின்னும் கோதுகளால் அவன் தன் வயிற்றை நிரப்ப விரும்பினாலும், அதை அவனுக்கு ஒருவனும் கொடுக்கவில்லை.

17. அப்பொழுது அவன் புத்திதெளிந்து, தனக்குள்ளே யோசித்துச் சொல்லுவான்: என் தகப்பனார் வீட்டில் எத்தனையோ கூலியாட்களுக்கு ஏராளமான சாப்பாடு கிடைக்கிறது; நானோ, இங்கே பசியால் சாகிறேன்.

18. நான் எழுந்து, என் தகப்பனிடத்தில்போய்: பிதாவே, பரலோகத்துக்கு விரோதமாகவும், உமக்கு முன்பாகவும் நான் பாவஞ்செய்தேன்.

19. இனி உம்முடைய பிள்ளையென்று அழைக்கப்பட நான் பாத்திரனல்ல, உம்முடைய கூலியாட்களில் ஒருவனாக என்னை ஏற்றுக்கொள்ளும் என்பேன் என்று சொல்லி,

20. உடனே எழுந்து, தகப்பனிடத்திற்குவந்தான். அவன் இன்னும் தூரத்தில் வரும்போதே, அவனுடைய தகப்பன் அவனைக்கண்டு, மனதுருகி, ஓடிவந்து, அவன் கழுத்தில் தாவிவிழுந்து, அவனை முத்தமிட்டான்.

---

10. மோக்ஷவாசிகளுக்கும், இவ்வுலகத்திலுள்ள கிறீஸ்துவர்களுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லையென்றும், ஆகையால் அவர்களை நோக்கி மன்றாடுகிறது வீணென்றும் போதிக்கிறவர்களை இந்த வாக்கியம் மறுக்கிறது.

21. மகன் தகப்பனை நோக்கி: பிதாவே, நான் பரலோகத்துக்கு விரோதமாகவும், உமது சமுகத்திலும் பாவஞ் செய்தேன், இனி உம்முடைய பிள்ளையென்று அழைக்கப்படுவதற்கு நான் பாத்திரனல்ல என்றான்.

22. ஆனால் தகப்பன் ஊழியரை நோக்கி: நீங்கள் சீக்கிரமாய் முதல்தரமான வஸ்திரத்தைக் கொண்டுவந்து இவனுக்கு உடுத்துங்கள். இவன் கைக்கு மோதிரத்தையும், கால்களுக்குப் பாதரட்சைகளையும் போடுங்கள்;

23. கொழுத்த கன்றையுங் கொண்டுவந்து அடியுங்கள்; உண்டு விருந்தாடுவோமாக.

24. ஏனென்றால் என் குமாரனாகிய இவன் இறந்துபோய், மறுபடியும் உயிர்த்தான்; காணாமற்போய், மறுபடியுங் காணப்பட்டான் என்றான். ஆகையால் அவர்கள் விருந்தாடத் தொடங்கினார்கள்.

25. அப்பொழுது, அவனுடைய மூத்தகுமாரன் வயலிலிருந்தான். அவன் வீட்டுக்குச் சமீபித்து வருகையில், ஆடல்பாடல்களைக் கேட்டு,

26. பணிவிடைக்காரரில் ஒருவனை அழைத்து: இதென்ன என்று விசாரித்தான்.

27. அதற்கு அவன்: உம்முடைய தம்பி வந்திருக்கிறார்; அவர் சுகத்தோடு வந்துசேர்ந்ததைப்பற்றி, உம்முடைய தகப்பனார் கொழுத்த கன்றை அடிப்பித்தார் என்றான்.

28. அப்பொழுது அவன் எரிச்சல் கொண்டு, உள்ளேபிரவேசிக்க மனதில்லாதிருந்தான். ஆகையால் அவனுடைய தகப்பன் வெளியே வந்து, அவனை வருந்தி அழைக்கத்துவக்கினான்.

29. அவனோ, தகப்பனைப்பார்த்து மாறுத்தரமாக: இதோ, இத்தனைவருஷகாலமாய், நான் உமக்கு ஊழியஞ் செய்து, உம்முடைய கற்பனையை ஒருக்காலும் மீறாதிருந்தும், என் சிநேகிதரோடுகூட நான் விருந்தாடும்படிக்கு ஒரு வெள்ளாட்டுக் குட்டியையாவது நீர் எனக்கு ஒருபோதுந் தந்ததில்லை.

30. ஆனால் வேசிகளோடு தன் ஆஸ்தியை விழுங்கிவிட்ட உம்முடைய மகனாகிய இவன் வந்தவுடனே, கொழுத்த கன்றை அடிப்பித்தீரே என்றான்.

31. அதற்கு அவன்: மகனே, நீ எந்நாளும் என்னோடேகூட இருக்கிறாய்; எனக்குள்ள யாவும் உன்னுடையதாயிருக்கின்றது.

32. ஆனால் உன் தம்பியாகிய இவன் செத்துப் பிழைத்ததற்கும், காணாமற்போய், காணப்பட்டதற்கும், நாம் விருந்தாடிச் சந்தோஷங் கொண்டாட வேண்டுமே என்று அவனுக்குச் சொன்னான் என்றார்.

## 16-ம். அதிகாரம்.

*அநீத காரியஸ்தன் உவமையும், விவாகக் கட்டு அவிழ்க்கப்படாதென்பதும், ஐசுவரியவானையும் ஏழையாகிய லாசருவையும் பற்றிய உவமையும்.*

1. அன்றியும், அவர் தம்முடைய சீஷர்களை நோக்கித் திருவுளம்பற்றினதாவது: ஐசுவரியவானாகிய ஒரு மனிதனுக்கு ஒரு காரியஸ்தனிருந்தான். அவன் தன் எஜமானுடைய ஆஸ்தியைச் சிதறடித்ததாக எஜமானிடத்தில் அவனைக் குறித்து அவதூறு சொல்லப்பட்டது.

2. ஆகையால் எஜமான் அவனை வரவழைத்து, அவனை நோக்கி: உன்னைக் குறித்து இப்படி நான் கேள்விப்படுகிறதென்ன? உன் விசாரிப்பின் கணக்கையொப்புவி; நீ இனி என் காரியஸ்தனாயிருக்கக் கூடாது என்றான்.

3. அப்பொழுது காரியஸ்தன் தனக்குள்ளே சொல்லிக்கொண்டதாவது: நான் என்ன செய்வேன்? என் எஜமான் விசாரணை வேலையினின்று என்னை நீக்குகிறானே. மண் வெட்டவும் எனக்குச் சக்தியில்லை, பிட்சையெடுக்கவும் வெட்கமாயிருக்கிறது.

4. ஆகையால் நான் காரியஸ்தவேலையினின்று தள்ளப்படும்போது, சிலர் என்னைத் தங்கள் வீட்டில் ஏற்றுக்கொள்ளும்படி நான் செய்யவேண்டியது இன்னதென்று அறிவேன் என்று சொல்லிக்கொண்டு,

5. தன் எஜமானிடத்தில் கடன்பட்டவர்களை ஒவ்வொருவனாக வரவழைத்து, முதலாவது வந்தவனைப் பார்த்து: நீ என் எஜமானிடத்தில் பட்ட கடன் எவ்வளவு என்க,

6. அவன்: நூறுகுடம் எண்ணெய் என்றான். அப்பொழுது அவன்: நீ உன் சீட்டை வாங்கி, உடனே உட்கார்ந்து, ஐம்பதென எழுது என்றான்.

7. அப்பால் அவன் வேறொருவனை நோக்கி: உன் கடன் எவ்வளவு என, அவன்: நூறு கோரளவு கோதுமை என்றான். அதற்குக் காரியஸ்தன்: நீ உன் சீட்டை வாங்கி, எண்பதென எழுது என்றான்.

8. அந்த அநீத காரியஸ்தன் விவேகமாய்ச் செய்துகொண்டதைப் பற்றி, எஜமான் அவனை மெச்சிக்கொண்டான். ஏனெனில் இப்பிரபஞ்சத்தின் மக்கள் ஒளியின் மக்களிலும் தங்கள் சந்ததியிலே அதிக விவேகமுள்ளவர்களாயிருக்கிறார்கள்.

9. ஆகையால் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்: நீங்கள் மரணமடையும்போது நித்திய கூடாரங்களில் உங்களை ஏற்றுக்கொள்ளும்படிக்கு அநீதப் பொருட்களைக்கொண்டு உங்களுக்குச் சிநேகிதரைச் சம்பாதித்துக் கொள்ளுங்கள்.

10. அற்பக் காரியத்திலே பிரமாணிக்கனாயிருக்கிறவன் பெரிய காரியத்திலும் பிரமாணிக்கனாயிருக்கிறான். அற்பக் காரியத்திலே அநீதனாயிருக்கிறவன் பெரிய காரியத்திலும் அநீதனாயிருக்கிறான்.

11. ஆனால் அநீதப் பொருளிலே நீங்கள் பிரமாணிக்கமாய் இராவிட்டால், உங்களை நம்பி மெய்ப்பொருளை ஒப்பிப்பவர்கள் யார்?

7. ஒரு கோர் என்பது எபிரேயருக்குள் வழங்கிய அளவு. இந்நாட்டளவின்படிக்கு ஒரு கோரென்பது சுமார் 150 பக்காப்படி கொண்டதாகும்.

8. இந்த அநீத காரியஸ்தனை எஜமான் புகழ்ந்தானென்கும்போது அவனுடைய வஞ்சக செய்கையைப்பற்றியல்ல, அவன் தன் பிழைப்புக்கு வழிபண்ணிக்கொள்வதற்குக் காண்பித்த சாமர்த்தியத்தைப்பற்றியே புகழ்ந்தான். 2-வது. அந்தப் பொருளை அநீத பொருளென்பது ஏதுக்கெனில், அது அநேகம் அநீதங்களுக்குக் காரணமாயிருப்பதினாலும், அதை அநேகர் வழக்கமாய் அநீதத்தில் செலவழிக்கிறதினாலுமென்க.

10-12. அற்பக்காரியமாகிய அநித்திய பொருட்களைக் கிரமமாகவும் தன் ஆத்துமத்துக்குப் பிரயோசனமாகவும் செலவழிக்கிறவன் பெரிய காரியமாகிய இஷ்டப்பிரசாத முதலிய ஞான நன்மைகளையும் தன் ஆத்தும பிரயோசனமாக உதவிக்கொள்ளுவான். இப்படியிருக்க இப்பிரபஞ்ச பொருட்களை நீங்கள் உங்கள் ஆத்துமப் பிரயோசனமாக உதவிக்கொள்ளாதேபோனால், மெய்ப்பொருளாகிய இஷ்டப்பிரசாத முதலிய ஞான நன்மைகளைச் சர்வேசுரன் உங்களுக்குத் தரமாட்டார். 12-ம் வாக்கியத்தில் உலக ஆஸ்தியைப் பிறர்பொருளென்றும் ஞான ஆஸ்தியை உங்களுக்குச் சொந்தப் பொருளென்றும் ஆண்டவர் சொல்லுகிறார். (காலமேத்.)

12. பின்னையும், பிறர் பொருளில் நீங்கள் உண்மையற்றவர்களாயிருந்தால், உங்களுக்குச் சொந்தமானதை உங்களுக்குக் கொடுப்பவர்கள் யார்?

13. எந்த ஊழியனும் இரண்டு எஜமான்களுக்கு ஊழியஞ்செய்ய முடியாது. ஏனெனில் ஒன்றில், ஒருவனைப் பகைத்து, மற்றவனைச் சிநேகிப்பான்; ஒன்றில், ஒருவனைச் சார்ந்துகொண்டு, மற்றவனைப் புறக்கணிப்பான். அப்படியே சர்வேசுரனுக்கும் திரவியத்துக்கும் ஊழியஞ்செய்ய உங்களாலே கூடாது என்றார். (மத். 6-24.)

14. இவைகளையெல்லாம் பொருளாசைக்காரராகிய பரிசேயர் கேட்டு, அவரைக் கேலிபண்ணினார்கள்.

15. ஆதலால் அவர் அவர்களைப் பார்த்து: நீங்கள் மனிதருக்கு முன்பாக உங்களை நீதிமான்களாகக் காட்டுகிறீர்கள். சர்வேசுரனோ, உங்கள் இருதயங்களை அறிவார். அதேதெனென்றால், மனிதருக்கு உயர்ந்ததாயிருக்கிறதே தேவ சமுகத்தில் அருவருப்பாயிருக்கின்றது.

16. வேதப் பிரமாணமும், தீர்க்கதரிசனங்களும் அருளப்பர்வரைக்குந்தான். அது முதல் சர்வேசுரனுடைய இராச்சியம் சுவிசேஷமாகப் பிரசங்கிக்கப்பட்டுவருகிறது; எவரும் அதில் பலவந்தமாய்ப் பிரவேசிக்கிறார்கள். (மத். 11-12.)

17. ஆகிலும், வேதப் பிரமாணத்தில் ஒரு எழுத்தின் அணுப்பிரமாணமும் (நிறைவேறாமல்) போவதைவிட, வானமும் பூமியும் ஒழிந்துபோவது அதிக எளிதாயிருக்கும். (மத். 5-18.)

18. தன் மனைவியைத் தள்ளிவிட்டு, வேறொருத்தியை விவாகஞ் செய்து கொள்ளுகிற எவனும் விபசாரஞ் செய்கிறான். புருஷனாலே தள்ளப்பட்டவளை விவாகஞ்செய்கிறவனும் விபசாரஞ்செய்கிறான். (மத். 5-32; மாற். 10-4.)

19. ஐசுவரியவான் ஒருவன் இருந்தான். அவன் இரத்தாம்பரமும் மெல்லிய வஸ்திரமும் தரித்து, நாள்தோறும் சம்பிரமமாய் விருந்தாடி வந்தான்.

20. லாசார் என்னும் பேருள்ள ஒரு பிச்சைக்காரனும் இருந்தான். அவன் புண்கள் நிறைந்தவனாய் ஐசுவரியவானுடைய வாசலருகே கிடந்து,

21. அவனுடைய பந்தியிலிருந்து சிந்திவிழும் உரொட்டித் துண்டுகளால் தன் பசியை ஆற்றத் தேடியும், அவனுக்குக் கொடுப்பவன் ஒருவனுமில்லை. நாய்கள் வந்து அவன் புண்களை நக்கும்.

16. சர்வேசுரனுக்கும், உலக திரவியமாகிய பேய்க்கும் பொருந்தாத விரோதமானதினாலே, மனிதன் இருவருக்கும் பிரியப்படும்படியாக ஊழியஞ் செய்யவே முடியாது.

17. மத். 11-ம் அதி. 12-ம் வசன வியாக்கியானம் காண்க.

18. மத். 19-ம் அதி. 9-ம் வசன வியாக்கியானம் காண்க.

19. யேசுநாதர் 13-ம் வசனத்தில், ஆஸ்திக்கும் சர்வேசுரனுக்கும் ஊழியம் பண்ணக் கூடாதென்று சொன்னபோது, பரிசேயர் கேலி பண்ணினார்கள். ஏனெனில் சர்வேசுரன் பழைய ஏற்பாட்டிலே நல்ல நடைத்தைக்குச் சம்பாவனையாக ஆஸ்தியைக் கொடுப்போமென்று சொல்லியிருந்தார். (இசை. 1-ம் அதி. 19-ம் வச.) அபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு, தாவீது முதலியவர்கள் திரண்ட ஆஸ்திக்காரராயிருந்தாலும், சர்வேசுரனுக்குப் பிரிய தாசராயிருந்தார்கள். இதினிமித்தமே, யேசுநாதர்சுவாமி ஆஸ்தியைப்பற்றிப் பழைய ஏற்பாட்டில் சொல்லப்பட்டவைகள் ஸ்நாபக அருளப்பர் காலத்தோடு முடிகிறதென்றும், புதிய ஏற்பாட்டில் மனத்தரித்திரரே பாக்கியவான்கள், மோட்ச இராச்சியம் அவர்களுக்குரிய

22. பின்னும் சம்பவித்ததேதெனில், பிட்சைக்காரன் மரித்து, தேவதூதர்களால் அபிரகாம் மடியில் கொண்டுபோய் வைக்கப்பட்டான். இசுவரியவானும் மரித்து, நரகத்தில் புதைக்கப்பட்டான்.

23. அவன் ஆக்கினைக்குள்ளாயிருக்கும்போது, தன் கண்களை ஏறெடுத்து, தூரத்தில் அபிரகாமையும் அவருடைய மடியிலே லாசரையும் கண்டான்.

24. அப்பொழுது அவன் உரக்கக் கூப்பிட்டு: பிதாவாகிய அபிரகாமே, என்பேரில் இரக்கமாயிருந்து, லாசார் தன் விரலின் நுனியைத் தண்ணீரிலே தோய்த்து, என் நாவைக் குளிரச் செய்யும்படி அனுப்பியருளும். ஏனெனில் இந்த அக்கினிச் சுவாலையிலே உபாதைப்படுகிறேன் என்றான்.

25. அதற்கு அபிரகாம் அவனை நோக்கி: மகனே, உன் சீவியகாலத்தில் நீ நன்மைகளைப் பெற்று அனுபவித்தாய் என்றும், லாசார் அவ்விதமே தின்மைகளை அனுபவித்தான் என்றும் நினைத்துக்கொள். இப்பொழுது இவன் தேற்றரவடைகிறான், நீயோ வேதனைப்படுகிறாய்.

26. இதன்றியே, உங்களுக்கும் எங்களுக்கும் நடுவே ஒரு பெரும் பாதாளம் ஸ்திரமாய் ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் இங்கேயிருந்து அங்கே வரவும், அங்கேயிருந்து இங்கே வரவும் மனதிருந்தாலும், கூடாததாயிருக்கிறது என்றார்.

27. மீளவும் அவன்: அப்படியானால் பிதாவே, அவனை என் தகப்பன் வீட்டுக்கு அனுப்பும்படி உம்மை மன்றாடுகிறேன்;

28. ஏனெனில் எனக்கு ஐந்து சகோதரர்கள் உண்டு: அவர்களும் இந்த ஆக்கினை ஸ்தலத்துக்கு வாராதபடி, இவன் அவர்களுக்குச் சாட்சி சொல்லட்டும் என்றான்.

29. அபிரகாம் அவனுக்குப் பிரத்தியுத்தாரமாக: அவர்களுக்கு மோயீசனும் தீர்க்கதரிசிகளும் உண்டு; அவர்களுடைய வாக்கை அவர்கள் கேட்கக்கடவார்கள் என்று சொல்ல,

30. அவனோ: பிதாவாகிய அபிரகாமே, அப்படியல்ல, மரித்தோரிலிருந்து ஒருவன் அவர்களிடத்தில் போனால் தவஞ்செய்வார்கள் என்றான்.

31. அதற்கு அவர்: மோயீசனுக்கும் தீர்க்கதரிசிகளுக்கும் அவர்கள் செவிகொடாவிட்டால், மரித்தோரிலிருந்து ஒருவன் எழுந்துபோனாலும், விசுவசிக்கமாட்டார்களென்று சொன்னார் என்றார்.

---

தென்றும் போதிக்கிறார். ஆகையால் இப்பொழுது பிரசங்கிக்கப்படுகிற அருள்வேதம் பழைய வேதத்தைப் பார்க்க மேன்மையும் உத்தமமுமானதால், இதில் பிரவேசிக்க விரும்புகிறவர்கள் உலகக் கோட்பாடுகளையுந் தங்கள் மனவாஞ்சைகளையும் வெறுக்க வேண்டியது.

31. அபிரகாம் மடியென்பது, பிதாப்பிதாக்கள் ஸ்தலமாம். யேசுநாதர் பரலோகத்துக்கு ஆரோகணமாகி, ஜென்மப் பாவத்தினால் அடைபட்டிருந்த மோட்ச வாசலைத் திறக்குமுன் மரித்த மகாத்துமாக்கள், அந்த ஸ்தலத்தில் காத்துக்கொண்டிருந்தார்கள். யேசுநாதர் மரித்தவுடனே, அவருடைய திரு ஆத்துமம் அந்த ஸ்தலத்திற்குப் போய், அந்த ஆத்துமாக்களை அழைத்துக்கொண்டு வந்து, தாம் பரலோகத்துக்குப் போகும்போது, தம்மோடு அவர்களையும் கூட்டிக்கொண்டு போனார். 2-வது பூலோகத்திலே சுகம் அனுபவித்தாயென்றும், லாசர் துன்பப்பட்டானென்றும் நினைத்துக்கொள். இப்போது இவன் தேற்றரவடைய, நீ வேதனைப்படுகிறாயென்று அபிரகாம் சொல்லுகிறார். ஆகையால் இவ்வுலகத்திலே சுகத்தையனுபவித்தவர்கள் எல்லாரும் நரகத்துக்குப் போக வேண்டியதென்றும்,

## 17-ம். அதிகாரம்.

*கர்த்தர் துர்மாதிரிகையைக் கண்டித்ததும், திருந்துகிற சகோதரனுக்கு மன்னிக்க வேண்டுமென்பதும், விசுவாசத்தின் பலனும், பத்துக் குஷ்டரோகிகள் குணப்பட்டதும், தமது வருகையைக்குறித்து அவர் அறிவித்த விசேஷங்களும்.*

1. மீளவும் அவர் தம்முடைய சீஷர்களை நோக்கி: இடறல்கள் வராதிருப்பது கூடாத காரியம்; ஆயினும் அவைகள் எவனால் வருகிறதோ, அவனுக்கு ஐயோ கேடு! (மத். 18-8.)

2. அவன் இந்தச் சிறுவரில் ஒருவனுக்கு இடறலாயிருப்பதைவிட, அவன் கழுத்தில் எந்திரக்கல் கட்டுண்டு, சமுத்திரத்தில் தள்ளப்படுவது அவனுக்கு நலமாயிருக்கும்.

3. உங்கள்மட்டில் எச்சரிக்கையாயிருங்கள். உன் சகோதரன் உனக்கு விரோதமாய்க் குற்றஞ் செய்தால் அவனைக் கடிந்துகொள். அவன் மனஸ்தாபப்பட்டால், அவனை மன்னித்துக்கொள். (உபா. 19-17; மத். 18-15.)

4. அப்படியே அவன் ஒரு நாளில் ஏழுமுறை உனக்கு விரோதமாய்க் குற்றஞ்செய்து, ஒருநாளில் ஏழுமுறையும் உன்னிடத்தில்வந்து: மனஸ்தாபப்படுகிறேனென்று சொல்லுவானாகில், அவனை மன்னிப்பாயாக என்று திருவுளம் பற்றினார். (மத். 18-21, 22.)

5. அப்பொழுது, அப்போஸ்தலர்கள் ஆண்டவரை நோக்கி: எங்களுக்கு விசுவாசம் அதிகரிக்கச் செய்தருளும் என்றார்கள்.

6. அதற்கு ஆண்டவர்: ஒரு கடுகளவு விசுவாசம் உங்களுக்கிருந்தால், நீங்கள் இந்த முசுக்கட்டை மரத்தை நோக்கி: நீ வேரோடு பிடுங்குண்டு, சமுத்திரத்திலே நடப்படுவாயாக என்று சொல்ல, அது உங்களுக்குக் கீழ்ப்படியும். (மத். 17-19.)

துன்பப்பட்டவர்கள் எல்லாரும் மோட்சத்தையடைய வேண்டுமென்று சொல்லுவோமோ? அல்ல. இதிலே சொல்லப்பட்ட ஆஸ்திக்காரன் மோட்சத்தை எண்ணாமல், இவ்வுலக சுக செல்வங்களை மட்டும் தனக்குக் கதியாக எண்ணி நடந்தான். இவனைப்போல மரணபரியந்தம் நடந்தவர்களுக்கு நரகமே கதியாகும். அப்படியே அநேகம் பேர்கள் இவ்வுலக துன்பத்தையனுபவித்தாலும், மோட்சத்தை எண்ணாமலுந் தேடாமலுமிருக்கிறபடியினாலே, அந்தத் துன்பங்களினால் யாதொரு பிரயோசனமும் அடையாமல், நரகத்துக்குப் போகிறார்கள். ஆனால் லாசரைப்போல, அந்தத் துன்பங்களை மோட்ச நம்பிக்கையோடும், பொறுமையோடுஞ் சகித்துக்கொண்டு, வேத கற்பனைகளையும் அனுசரித்துப் புண்ணிய வழியில் நடந்து வருகிறவர்கள், அவனைப்போல் மோட்சத்தில் சேருவார்கள். 3-வது மோயீசனுக்கும் தீர்க்கதரிசிகளுக்கும் செவி கொடாதவர்கள் மரித்தோரிலிருந்து ஒருவன் போனாலும் விசுவசிக்கமாட்டார்களென்று அபிரகாம் சொல்லுகிறார். இங்கே மோயீசனையும் தீர்க்கதரிசிகளையும் குறித்து சொல்லுகிறதையெல்லாம், வேத வாக்கியங்களைக் குறித்துச் சொல்ல வேண்டும். தேவ வாக்கியங்களை விசுவசியாதவன்; மரித்தவர்கள் எழுந்து வருவதைக் கண்டாலும் விசுவசியான். அப்படியே யேசுநாதர் காலத்திலிருந்த யூதர்கள் தங்கள் கண்முன்பாக அவர் செய்த எண்ணிறந்த புதுமைகளையும், லாசர் உயிர்ப்பிக்கப்பட்டதையும் கண்டாலும், அவரை விசுவசிக்கவில்லை.

**3-4. இதில் நமக்கு விரோதமாய்க் குற்றஞ்செய்கிறவர்கள்மேல் நாம் பகை வைராக்கியம் வைக்கலாகாதென்று கர்த்தர் கற்பிக்கிறாரேயொழிய, ஒழுங்குக் கிரமத்தைக் காக்கும்படி குற்றவாளியை எவ்விதத்திலும் கண்டிக்கப்படாதென்றும், குற்றப் பரிகாரம் அவனிடம் வாங்கப்படாதென்றும் கற்பிக்கிறதில்லை. மத். 18-17. வியாக்கியானம் காண்க.**

7. உங்களுக்குள்ளே உழுவதற்காவது மேய்ப்பதற்காவது ஊழியனை வைத்திருக்கிற எவனாவது அந்த ஊழியன் வயலிலிருந்து வரும்போது, அவனை நோக்கி: நீ, உடனே போய் உட்கார்ந்து சாப்பிடு என்பானோ?

8. (அதைவிட்டு) நான் சாப்பிடும்படி போசனம் முஸ்திப்புச்செய்து, உன்னிடையை வரிந்துகொண்டு, நான் போசனபானஞ்செய்யுமட்டும் எனக்கு ஊழியஞ்செய், அதற்குப்பிற்பாடு நீ போசனபானம் செய்வாய் என்று சொல்லமாட்டானோ?

9. தான் கட்டளையிட்டவைகளை அந்த ஊழியன் செய்ததினாலே அவனுக்கு நன்றியறிந்தவனாயிருப்பானோ?

10. இல்லை என்று எண்ணுகிறேன். அந்தப்பிரகாரமே, நீங்களும் உங்களுக்குக் கட்டளையிடப்பட்ட எல்லாவற்றையும் செய்தபிற்பாடு: நாங்கள் உபயோகமற்ற ஊழியராயிருக்கிறோம்; நாங்கள் செய்யவேண்டியிருந்ததைச் செய்தோம் என்று சொல்லுங்கள் என்றார்.

11. பின்னும் சம்பவித்ததாவது: யேசுநாதர் எருசலேம் நகருக்குப் போகையில் சமாரியா, கலிலேயா நாடுகளின் நடுவே நடந்துபோனார்.

12. அவர் ஓர் கிராமத்துக்குள் பிரவேசிக்கும்போது, குஷ்டரோகிகளாகிய பத்துப்பேர் அவருக்கு எதிராக வந்து, தூரத்தில் நின்று: (உபா. 13-46.)

13. யேசுவே, போதகரே! எங்கள் பேரில் இரக்கமாயிரும் என்று உரத்த சத்தமாய்க் கூப்பிட்டார்கள்.

14. அவர்களை அவர் கண்டவுடனே: நீங்கள் போய், உங்களை ஆசாரியருக்குக் காண்பியுங்கள் என்றார். அவர்கள் போகும்பொழுதே சொஸ்தமானார்கள். (உபா. 14-2; மத். 7-4.)

15. அவர்களிலே ஒருவன் தான் சொஸ்தமானதைக் கண்டு, உரத்த சத்தமாய்ச் சர்வேசுரனை ஸ்துதித்துக் கொண்டு திரும்பிவந்து,

16. அவருடைய பாதங்களுக்கு முன்பாக முகங் குப்புறவிழுந்து, அவருக்கு நன்றியறிந்த தோத்திரஞ்சொன்னான். அவன் சமாரியனாயிருந்தான்.

17. யேசுநாதர் மறுமொழியாக: பத்துப்பேரும் சொஸ்தமானார்களல்லோ? மற்ற ஒன்பதுபேர் எங்கே?

18. இந்த அந்நியன் ஒழிய வேறொருவனும் திரும்பிவந்து, சர்வேசுரனுக்கு ஸ்துதிசெலுத்தக் காணோமே என்று சொல்லி,

19. அவனை நோக்கி: நீ எழுந்து போ, உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது என்று திருவுளம்பற்றினார்.

20. அத்தறுவாயிலே, பரிசேயர் அவரை நோக்கி: சர்வேசுரனுடைய இராச்சியம் எப்பொழுது வருமென்றுகேட்க, அவர் மறுமொழியாக: சர்வேசுரனுடைய இராச்சியம் பிரத்தியக்ஷமாய் வராது;

21. இதோ, இங்கேயிருக்கிறதென்றும், அதோ, அங்கேயிருக்கிறதென்றும் சொல்லார்கள். அதேனென்றால் சர்வேசுரனுடைய இராச்சியம் இதோ, உங்களுக்குள்ளேயிருக்கிறது என்றார். (அரு. 18-36.)

22. பின்பு அவர் தம்முடைய சீஷர்களை நோக்கி: மனுமகனுடைய நாளொன்றைக் காணவேண்டுமென்று நீங்கள் ஆசிக்கும் காலம் வரும். ஆயினும் அதைக் காணமாட்டீர்கள்.

20. பரிசேயர் எண்ணினதுபோல, சர்வேசுரனுடைய இராச்சியம் உலக ராஜாங்கத்துக்குரிய ஆரவாரத்தோடு துலங்காதென்றர்த்தமாகும்.

23. அப்பொழுது சிலர்: இதோ, இங்கேயென்றும், அதோ, அங்கேயென்றும் உங்களுக்குச் சொல்லுவார்கள்; நீங்கள் போகவும் வேண்டாம், பின்பற்றவும்வேண்டாம். (மத். 24-26.)

24. மின்னல் வானத்தின்கீழ் ஒரு திசையில் தோன்றி, வானத்தின்கீழ் மறுதிசை வரையிலும் பிரகாசிக்கிறது எப்படியோ, அப்படியே மனுமகனும் தம்முடைய நாளில் இருப்பார்.

25. ஆகிலும் முந்தமுந்த அவர் அநேகம் பாடுபடவும், இச்சந்ததியினால் ஆகாதவனென்று தள்ளப்படவும் வேண்டும்.

26. நோவா என்பவருடைய நாட்களிலே சம்பவித்ததுபோல மனுமகன் வரும் நாட்களிலும் சம்பவிக்கும்.

27. நோவா பேழைக்குள் பிரவேசித்த நாள்வரைக்கும் ஜனங்கள் உண்டும், குடித்தும், பெண்கொண்டும், கொடுத்தும் வந்தார்கள். அப்போது ஜலப்பிரளயம் வந்து எல்லாரையும் அழித்துப்போட்டது.

28. லோத் என்பவருடைய நாட்களிலே சம்பவித்ததுபோலவும் சம்பவிக்கும். ஜனங்கள் உண்டார்கள், குடித்தார்கள், கொண்டார்கள், விற்றார்கள், நட்டார்கள், வீட்டைக் கட்டினார்கள். (ஆதி. 19-25.)

29. லோத் என்பவர் சோதோமை விட்டுப் புறப்பட்ட நாளிலோ, வானத்திலிருந்து அக்கினியும் கெந்தகமும் பெய்து, எல்லாரையும் அழித்துப் போட்டது.

30. மனுமகன் தன்னை வெளியாக்கும் நாளிலும் இப்படியே நடக்கும்.

31. அந்நேரத்தில் வீட்டுக்குள் தன் பொருட்களிருக்க, அரமியத்தின்மேலிருப்பவன் அவைகளை எடுப்பதற்கு இறங்காதிருப்பானாக: அப்படியே வயலிலிருப்பவனும் திரும்பிவராதிருப்பானாக. (மத். 24-16.)

32. லோத் என்பவருடைய மனைவியை நினைத்துக்கொள்ளுங்கள். (ஆதி. 19-26.)

33. தன் ஜீவனை இரட்சிக்கத் தேடுகிறவனெவனும், அதை இழந்துபோவான். அதை இழப்பவன் எவனும், அதைப் பிழைப்பிப்பான். (மத். 10-39; மாற். 8-35; லூக். 9-24; அரு. 12-25.)

34. நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: அந்த இராத்திரியிலே இரண்டு பேர் ஒரு மஞ்சத்திலிருக்க, ஒருவன் எடுபடுவான், மற்றொருவன் விடுபடுவான். (மத். 24-40.)

35. இரண்டு ஸ்திரிகள் ஒரு திரிகை திரித்துக்கொண்டிருக்க, ஒருத்தி எடுபடுவாள், மற்றொருத்தி விடுபடுவாள். வயலிலிருக்கிற இருவரில் ஒருவன் எடுபடுவான், மற்றொருவன் விடுபடுவான் என்று திருவுளம்பற்றினார்.

36. அவர்கள் அவருக்கு பிரத்தியுத்தாரமாக: ஆண்டவரே எங்கே என்றார்கள்.

37. அதற்கு அவர்: பிணம் எங்கேயோ, அங்கேயே கழுகுகளும் வந்து கூடும் என்று திருவுளம்பற்றினார்.

## 18-ம். அதிகாரம்.

அந்த நடுவன் உவமையும், பரிசேயனும் ஆயக்காரனும் ஜெபஞ்செய்ததும், கர்த்தர் தம்முடைய பாடுகளை முன்னறிவித்ததும், எரிக்கோ கோட்டையின் அருகில் ஓர் குருடனுக்குப் பார்வையளித்ததும்.

1. சோர்ந்துபோகாமல் எப்போதும் ஜெபஞ்செய்ய வேண்டுமென்பதைக் குறித்து, அவர் ஓர் உவமையையும் அவர்களுக்குத் திருவுளம்பற்றினார்: (எக். 17-22; உரோ. 12-12; 1. தெ. 5-17).

33. மத். 10-ம் அதி. 39-ம் வசன வியாக்கியானம் காண்க.
37. மத். 24-ம் அதி. 28-ம் வசன வியாக்கியானம் காண்க.

2. ஒரு பட்டணத்திலே சர்வேசுர னுக்குப் பயப்படாதவனும், மனிதரை மதியாதவனுமாகிய ஒரு நடுவனிருந் தான்.

3. அந்தப் பட்டணத்திலே ஓர் விதவையுமிருந்தாள். அவள் அவனிடத்தில்வந்து: என் எதிராளிக்கு விரோதமாய் என் நியாயத்தைத் தீர்த்துக்கொடும் என்று கேட்பாள்.

4. வெகுகாலம்வரைக்கும் அவனுக்கு மனமில்லாதிருந்தது. பிறகு அவன் தனக்குள்ளே சொல்லிக்கொண்டதாவது: நான் சர்வேசுரனுக்குப் பயப்படாமலும், மனிதரை மதியாமலுமிருந்தபோதிலும்,

5. இந்தக் கைம்பெண் என்னைத் தொந்தரவு செய்கிறபடியால், அவள் கடைசியாய்வந்து என்னைத்திட்டி வையாதபடி அவளுக்கு நீதி செலுத்துவேனென்று சொன்னான் என்றார்.

6. பின்னும், ஆண்டவர் அவர்களை நோக்கி: அந்த அநீத நடுவன் சொல்லுகிறதேதென்று கேளுங்கள்.

7. அப்படியானால், சர்வேசுரன் தம்மால் தெரிந்து கொள்ளப்பட்டவர்கள் தம்மை நோக்கி இரவும் பகலுமாக அபயமிட்டுக் கூப்பிடுகிறபோது, (அவர்களுக்கு) நீதிசெலுத்தாமல் அவர்கள் மட்டில் பொறுத்துக் கொண்டிருப்பாரோ?

8. தீவிரமாய் அவர்களுக்கு நீதி செலுத்துவாரென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆயினும் மனுமகன் வரும்போது, பூலோகத்தில் விசுவாசத்தைக் காண்பாரென்று நினைக்கிறீரோ என்றார்.

9. பின்னும் தங்களை நீதிமான்களென்று நம்பி, ஆணவங்கொண்டு மற்றவர்களை அலட்சியம்பண்ணி வந்த சிலரைக்குறித்து அவர் பின்வரும் உவமையைச்சொன்னார்.

10. இரண்டு மனிதர் ஜெபம்பண்ணும்படி தேவாலயத்துக்குப் போனார்கள். அவர்களில் ஒருவன் பரிசேயன், மற்றவன் ஆயக்காரன்.

11. பரிசேயன் நின்றுகொண்டு தனக்குள்ளே ஜெபித்ததாவது: சர்வேசுரா! நான் திருடர் அநீதர் விபசாரக்காரராகிய மற்ற மனிதரைப்போலவும், இந்த ஆயக்காரனைப்போலவும் இராததைப்பற்றி உமக்குத் தோத்திரஞ்செய்கிறேன்.

12. நான் வாரத்தில் இருமுறை ஒருசந்திபிடிக்கிறேன்; எனக்குள்ள எல்லாவற்றிலும் பத்திலொருபாகம் செலுத்துகிறேன் என்றான்.

13. ஆயக்காரனோ, தூரத்தில் நின்று, தன் கண்களைமுதலாய் வானத்தைநோக்கி உயர்த்தத் துணியாமல், தன் மார்பில் அறைந்துகொண்டு: சர்வேசுரா! பாவியாகிய என்பேரில் கிருபையாயிரும் என்று ஜெபித்தான். (சங். 50-19.)

14. இவனே அவனைவிட நீதிமானாகித் தன் வீட்டுக்குத் திரும்பிப்போனானென்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஏனெனில் தன்னை உயர்த்துகிறவனும் தாழ்த்தப்படுவான்; தன்னைத் தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுவான் என்றார். (மத். 23-12; லூக். 14-11.)

8. சர்வேசுரனிடத்தில் அபயமிட்டு மன்றாடுகிறவர்களைத் தாமதமின்றி இரட்சிப்பாரென்கிறதில் சந்தேகமில்லை. ஆகிலும் விசுவாச நம்பிக்கையோடே வேண்டிக்கொண்டால் தானாகும். ஆனால், விசுவாசம் நம்பிக்கை நாளுக்கு நாள் குறைந்து போகிறபடியால், உலக முடிவில் அப்படிப்பட்ட உயிருள்ள விசுவாசிகள் வெகு அபூர்வமாய் இருப்பார்களென்று அர்த்தமாம்.

15. அத்தருணத்தில், அவர் பாலர்களைத்தொடும்படியாக அவர்களை அவரிடத்தில் கொண்டுவந்தார்கள். சீஷர்கள் அதைக்கண்டு அவர்களை அதட்டினார்கள் (மத். 19-13; மாற். 10-13.)

16. ஆனால் யேசுநாதர் அவர்களை வரவழைத்து: சிறுவர்களை என்னண்டையில் வரவிடுங்கள்; அவர்களைத் தடுக்காதேயுங்கள்; ஏனெனில் சர்வேசுரனுடைய இராச்சியம் அப்படிப்பட்டவர்களுடையது.

17. ஒரு சிறுபிள்ளைபோல் சர்வேசுரனுடைய இராச்சியத்தை ஏற்றுக்கொள்ளாதவன் அதிலே பிரவேசிக்க மாட்டான் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

18. அப்பொழுது ஒரு பிரபு அவரைநோக்கி: நல்ல போதகரே, நான் நித்திய சீவியத்தையடைவதற்கு என்ன செய்யவேண்டும் என்றான். (மத். 19-16; மாற். 10-17.)

19. யேசுநாதர் அவனை நோக்கி: என்னை நீ நல்லவன் என்பானேன்? சர்வேசுரன் ஒருவரேயன்றி நல்லவன் ஒருவனுமில்லை.

20. கொலை செய்யாதிருப்பாயாக, விபசாரம் பண்ணாதிருப்பாயாக, களவாணாதிருப்பாயாக, பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக, உன் பிதாவையும் மாதாவையும் சங்கித்திருப்பாயாக என்கிற கற்பனைகளை அறிந்திருக்கிறாயே என்று சொல்ல, (யாத். 20-13.)

21. அவன்: இவைகளையெல்லாம் என் இளம் பிராயமுதல் அநுசரித்துக்கொண்டுவருகிறேன் என்றான்.

22. யேசுநாதர் அதைக்கேட்டு, அவனுக்குச் சொன்னதாவது: இன்னும் உனக்கு ஒன்று குறைவாயிருக்கிறது, உனக்குள்ள எல்லாவற்றையும் விற்று, ஏழைகளுக்குக் கொடு; அப்பொழுது மோட்சத்தில் உனக்குப் பொக்கிஷம் உண்டாயிருக்கும்: பின்னும் வந்து, என்னைப் பின்செல் என்றார்.

23. அவனோ, இந்த வார்த்தைகளைக் கேட்டு, விசனமடைந்தான். ஏனெனில் மிகவும் திரவியவானாயிருந்தான்.

24. யேசுநாதர் அவன் விசனமடைந்ததைக் கண்டு திருவுளம்பற்றினதாவது: திரவியவான்கள் சர்வேசுரனுடைய இராச்சியத்தில் பிரவேசிப்பது எவ்வளவோ வருத்தமாயிருக்கின்றது. (லூக். 6-24.)

25. திரவியவான் சர்வேசுரனுடைய இராச்சியத்தில் பிரவேசிப்பதைவிட, ஒட்டகம் ஊசித்துவாரத்தின் வழியாய் நுழைந்து போவது எளிதாயிருக்கும் என்றார்.

26. இதைக்கேட்டவர்கள்: அப்படியானால் யார் இரட்சணியம் அடையக்கூடும் என்றார்கள்.

27. அதற்கு அவர்: மனிதர்களால் கூடாதவைகள் சர்வேசுரனால் கூடும் என்று அவர்களுக்குச் சொன்னார்.

28. அப்பொழுது இராயப்பர்: இதோ, நாங்கள் எல்லாவற்றையும் விட்டுவிட்டு, உம்மைப் பின்சென்றோமே என்று சொல்ல,

29. அவர் அவர்களைநோக்கி: சர்வேசுரனுடைய இராச்சியத்தினிமித்தம் வீட்டையாவது, பெற்றோரையாவது, சகோதரர்களையாவது, மனைவியையாவது, மக்களையாவது விட்டுவிட்ட எவனும்,

19. யேசுநாதர் தெய்வமும் மனுஷனுமாயிருந்ததால், அவர் மெய்யாகவே நல்லவராயினும், அந்தப்பிரபு அவரை மனுஷனென்றே எண்ணிக் கேட்டதினால், இவ்விதம் மறுமொழி சொன்னார்.

25. மத். 19-ம் அதி. 24-ம் வசன வியாக்கியானம் காண்க.

30. இம்மையில் மிகவும் அதிகமான வைகளையும், மறுமையில் நித்திய ஜீவனையும் அடையாமல் போவதில்லை என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

31. பின்னும் யேசுநாதர் பன்னிருவரையும் தம்மிடத்தில் அழைத்து, அவர்களுக்குத் திருவுளம் பற்றினதாவது: இதோ, எருசலேம் நகருக்குப் போகிறோம்; மனுமகனைக் குறித்துத் தீர்க்கதரிசிகளால் எழுதப்பட்ட யாவும் நிறைவேறும். (மத். 20-17.)

32. எப்படியெனில், அவர் புறஜாதியாருக்குக் கையளிக்கப்பட்டுப் பரியாசம் பண்ணப்படுவார், சாட்டைகளால் அடிக்கப்படுவார், துப்பப்படுவார்.

33. அவரைச் சாட்டைகளால் அடித்தபின்பு, அவரைக் கொலைசெய்வார்கள். மூன்றும் நாளிலோ அவர் உயிர்த்தெழுந்திருப்பார் என்றார். (மத். 10-21)

34. அவர்களோ இவைகளில் ஒன்றையும் கண்டுபிடிக்கவில்லை. இந்தப் பேச்சு அவர்களுக்கு மறைபட்டிருந்தது, சொல்லப்பட்டதையும் அவர்கள் அறிந்துகொள்ளவில்லை.

35. பின்பு சம்பவித்ததேதெனில், அவர் எரிக்கோப் பட்டணத்துக்குச் சமீபமாய் வருகையில், ஒரு குருடன் பாதையோரத்தில் உட்கார்ந்து, பிட்சைகேட்டுக்கொண்டிருந்தான். (மத். 20-29.)

36. ஜனக்கும்பல் நடந்துபோகிறதை அவன்கேட்டு: இதென்னவென்று விசாரித்தான்.

37. நசரோனுவாகிய யேசுநாதர் அவ்வழியாய்ப் போகிறாரென்று அவனுக்கு அறிவித்தார்கள்.

38. உடனே அவன்: யேசுவே! தாவீதின் குமாரனே, என்பேரில் இரக்கமாயிரும் என்றுகூவினான்.

39. முந்தி நடந்தவர்கள் அவன் பேசாதிருக்கும்படி அவனை அதட்டினார்கள். அவனோ: தாவீதின் குமாரனே, என்பேரில் இரக்கமாயிரும் என்று அதிகமாய்க் கூவினான்.

40. அப்பொழுது யேசுநாதர் நின்று, அவனைத் தம்மிடத்தில் அழைத்துவரக் கட்டளையிட்டார். அவன் கிட்டவந்தபொழுது, அவர் அவனை நோக்கி:

41. நான் உனக்கு என்ன செய்யவேண்டுமென்று கேட்க, அவன்: ஆண்டவரே, நான் பார்வை அடையவேண்டும் என்றான்.

42. அப்பொழுது யேசுநாதர்: நீ பார்வையடைவாயாக; உன் விசுவாசம் உன்னை இரட்சித்ததென்று அவனுக்குச் சொன்னார்.

43. அக்ஷணமே அவன் பார்வையடைந்து, சர்வேசுரனை ஸ்துதித்துக்கொண்டு அவர் பிறகே போனான். ஜனங்களெல்லாரும் இதைக் கண்டு, சர்வேசுரனைத் தோத்திரம்பண்ணினார்கள்.

## 19-ம். அதிகாரம்.

*சக்கேயு வீட்டில் யேசுநாதர் பந்தியமர்ந்ததும், பத்துராத்தல் பணத்தின் உவமையும், யேசுநாதர் எருசலேமுக்கு வேசரியின்மேல் ஏறிப்போனதும், எருசலேம் அழிவை முன்னறிவித்ததும், தேவாலயத்தினின்று வியாபாரிகளைத் துரத்தினதுமாகிய விசேஷங்கள்.*

1. பின்னும் யேசுநாதர் எரிக்கோ பட்டணத்தில் பிரவேசித்து, அதின் வழியாய் நடந்துபோகையில்,

2. இதோ, ஆயக்காரர்களுக்குத் தலைவனும் ஐசுவரியவானுமாயிருந்த சக்கேயு என்னப்பட்ட ஒரு மனிதன்

3. யேசுநாதர் இன்னாரென்று அவரைக் காண விரும்பியும், வளர்த்தியில் குள்ளனாயிருந்தபடியால், ஜனக்கூட்டத்தினிமித்தம் அவரைக் காணக்கூடவில்லை.

4. ஆதலால் அவன் முன்னுக்கு ஓடி, அவரைக் காணும்படி ஒரு காட்டத்தி மரத்தில் ஏறினான். ஏனெனில் அவர் அந்த வழியாய்ப் போகவேண்டியிருந்தது.

5. யேசுநாதர் அவ்விடத்தில் வந்தபோது, அண்ணாந்து பார்த்து, அவனைக்கண்டு: சக்கேயுவே, சீக்கிரம் இறங்கிவா, நான் இன்று உன் வீட்டிலே தங்க வேண்டும் என்று அவனுக்குச் சொன்னார்.

6. அவன் தீவிரமாய் இறங்கிவந்து, அவரைச் சந்தோஷமாய் அழைத்துக்கொண்டு போனான்.

7. இதைக் கண்ட யாவரும்: இவர் பாவியான மனிதனிடத்திலே தங்கினாரென்று முறுமுறுத்துக்கொண்டிருந்தார்கள்.

8. சக்கேயுவோ நின்று, கர்த்தரை நோக்கி: ஆண்டவரே, இதோ என் ஆஸ்திகளில் பாதியைத் தரித்திரருக்குக் கொடுக்கிறேன்; அல்லாமலும் நான் யாதொருவனிடத்தில் ஏதாவது அபகரித்திருந்தால், நாலுமடங்காக உத்தரிக்கிறேன் என்றான்.

9. யேசுநாதர் அவனை நோக்கி: இன்றைக்கு இந்த வீட்டுக்கு இரட்சணியமுண்டாயிற்று; ஏனெனில் இவனும் அபிரகாமுக்குப் புத்திரனாயிருக்கிறான்.

10. சிதறிப்போனதைத் தேடி, இரட்சிக்கும்படியாகவே மனுமகனும் வந்திருக்கிறார் என்றார். (மத். 18-2.)

11. இவைகளை ஜனங்கள் கேட்டுக்கொண்டிருக்கையில், அவர் எருசலேம் நகருக்குச் சமீபமாய் இருந்தபடியினாலும், சர்வேசுரனுடைய இராச்சியம் சீக்கிரத்தில் வெளிப்படுமென்று அவர்கள் எண்ணிக்கொண்டிருந்தபடியினாலும் அவர் இதற்குச் சேர்க்கையாக ஓர் உவமையைத் திருவுளம்பற்றினார்.

12. அவர் சொன்னதாவது: வங்கிஷபதியொருவன் ஒரு இராச்சியத்தைக் கைக்கொண்டு, திரும்பிவரும்படி தூர தேசத்துக்குப் போகப் புறப்பட்டான். (மத். 25-14.)

13. அப்பொழுது அவன் தன்னுடைய பத்து ஊழியரையும் வரவழைத்துப் பத்துராத்தல் பணங்களை அவர்களுக்குக் கொடுத்து: நான் திரும்பி வருமளவும் வியாபாரஞ் செய்யுங்கள் என்று அவர்களுக்குச் சொன்னான்.

14. அவனுடைய குடிகள் அவனைப் பகைத்து: இவன் எங்களுக்கு இராஜாவாயிருப்பது எங்களுக்கு மனதில்லையென்று சொல்லும்படி அவன் பின்னாலே ஸ்தானாபதிகளை அனுப்பினார்கள்.

15. ஆனால் அவன் இராச்சியத்தைக் கைப்பற்றிக்கொண்டு, திரும்பி வந்தபோது, தான் பணம் கொடுத்திருந்த ஊழியரில் ஒவ்வொருவனும் வியாபாரஞ்செய்தது எவ்வளவென்று அறியும்படி அவர்களைத் தன்னிடத்தில் அழைத்துவரக் கட்டளையிட்டான்.

12. இதைக் கண்டுபிடிக்கிறதற்கு அறியவேண்டியதாவது: அக்காலத்தில் யூதர்கள் சுய இராச்சியபாரத்தை இழந்துபோய், உரோமாபுரி இராயனுக்குக் கீழ்ப்பட்டவர்களாயிருந்தார்கள். ஆகையால் ஒருவன் இராச்சியபாரம் செய்ய விரும்பினால், உரோமாபுரிக்குப் போய் இராயனிடத்திலே அதிகாரப் பட்டம் பெற்றுக்கொள்ள வேண்டியதாயிருந்தது.

16. அப்பொழுது, முந்தினவன் வந்து: ஆண்டவனே, உம்முடைய ஒரு இராத்தல் பணம் பத்துராத்தல் பணத்தைச் சம்பாதித்திருக்கிறது என்றான்.

17. எஜமான் அவனைப் பார்த்து: நல்லது, உத்தம ஊழியனே, நீ அற்ப விஷயத்திலே நாணயவானாயிருந்தபடியால், பத்துப்பட்டணங்களுக்கு அதிகாரியாயிருப்பாய் என்றான். (லூக். 16-10.)

18. பின்பு இரண்டாம் ஊழியன் வந்து: ஆண்டவனே, உம்முடைய ஒரு ராத்தல் பணம் ஐந்துராத்தலை விளைவித்தது என்றான்.

19. அவன் இவனை நோக்கி: நீயும் ஐந்து பட்டணங்களுக்கு அதிகாரியாயிரு என்றான்.

20. பிறகு மற்றொருவன் வந்து: ஆண்டவனே, இதோ உம்முடைய ராத்தல்பணம், இதை ஓர் உறுமாலையில் முடிந்துவைத்திருந்தேன்.

21. ஏனென்றால் நீர் வைக்காததை எடுக்கிறவரும் விதைக்காததை அறுக்கிறவருமாகிய கண்டிப்புள்ள மனுஷனென்று (அறிந்து) உமக்குப் பயந்திருந்தேன் என்றான்.

22. எஜமான் அவனை நோக்கி: கெட்ட ஊழியனே, உன் வாயினாலேயே உன்னைத் தீர்வையிடுகிறேன். நான் வைக்காததை எடுக்கிறவனும், விதைக்காததை அறுக்கிறவனுமாகிய கண்டிப்புள்ள மனுஷனென்று நீ அறிந்திருந்தாயே.

23. ஆகையால் நான் திரும்பி வரும்போது, என் பணத்தை வட்டியோடுங் கூட நெருக்கி வாங்கும்படியாயிருந்ததே; அப்படியிருக்க, அதைக் காசுக்கடையில் ஏன் போட்டு வைக்கவில்லை என்று சொல்லி,

24. சூழ நின்றவர்களை நோக்கி: இவன் வசத்திலிருக்கிற அந்த இராத்தல் பணத்தையெடுத்து, பத்து ராத்தல் பணம் உள்ளவனுக்குக் கொடுங்கள் என்றான்.

25. அதற்கு அவர்கள்: ஆண்டவனே, அவனுக்குப் பத்துராத்தல் பணமிருக்கிறதே என்றார்கள்.

26. அதற்கு அவன்: உள்ளவனுக்குக் கொடுக்கப்படும்; அவன் பூர்த்தியடைவான்; இல்லாதவனிடத்திலிருந்து அவனுக்கு உள்ளதும் எடுத்துக்கொள்ளப்படும் என்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். (மத். 25-29; மாற். 4-25; லூக். 8-18.)

27. அன்றியும், தங்கள்மேல் நான் இராஜாவாயிருப்பதற்கு மனதில்லாதிருந்தவர்களாகிய என்னுடைய சத்துருக்களை இங்கே கொண்டுவந்து, என் கண்முன்பாகக் கொன்றுபோடுங்களென்று சொன்னான் என்றார்.

28. அவர் இவைகளை வசனித்தபின்பு, எருசலேம் நகருக்குப் புறப்பட்டு, முந்திநடந்துபோனார்.

29. பின்னும் சம்பவித்ததேதெனில், அவர் ஒலிவ மலைக்கு அருகாமையான பெத்பாஜெ, பெத்தானியா என்ற ஊர்களுக்குச் சமீபித்தபோது, தம்முடைய சீஷர்களில் இருவரை அனுப்பி:

27. இந்த உவமைக்கு அர்த்தமாவது: இராஜரீகத்தை அடையப்போன துரைமகன் தம்முடைய பிதாவிடத்திலே நித்திய இராச்சியபாரத்தைப் பெற்றுக்கொள்ளப் பரலோகத்துக்கு எழுந்தருளிய யேசுநாதர் தாமே. எங்களுக்கு இவர் இராஜாவாயிருக்க வேண்டாமென்று சொன்னவர்கள் யேசுநாதரை இரட்சகராக ஒப்புக்கொள்ளாத யூதர்களும், அவருடைய சுவிசேஷத்தை ஏற்றுக்கொள்ளாதவர்களுமாமே.

30. உங்களுக்கு எதிரேயிருக்கிற கிராமத்துக்குப் போங்கள். அதிலே நீங்கள் பிரவேசிக்கும்போது, மனிதரில் எவனும் ஒருபோதும் ஏறியிராத ஒரு வேசரிக்குட்டி கட்டப்பட்டிருப்பதைக் காண்பீர்கள். அதை அவிழ்த்துக் கொண்டுவாருங்கள்.

31. அதை ஏன் அவிழ்க்கிறீர்களென்று யாதொருவன் உங்களிடத்தில் கேட்டால், அதின் உபயோகம் ஆண்டவருக்குத் தேவையாயிருக்கிறதென்று சொல்லுங்கள் என்றார்.

32. ஆகையால் அனுப்பப்பட்டவர்கள் போய், அவர் தங்களுக்குச் சொன்னபடியே வேசரிக்குட்டி நிற்கிறதைக் கண்டார்கள்.

33. அவர்கள் குட்டியை அவிழ்க்கையில், அதற்கு உடையவர்கள்: குட்டியை ஏன் அவிழ்க்கிறீர்களென்று அவர்களைக் கேட்க,

34. அவர்கள்: இது ஆண்டவருக்குத் தேவையாயிருக்கிறது என்றார்கள்.

35. அப்படியே அதை யேசுநாதரிடத்தில் கொண்டுவந்து, அதின்மேல் தங்கள் வஸ்திரங்களை விரித்து யேசுநாதரை அதின்மேல் ஏற்றினார்கள். (அரு. 12-14.)

36. மீளவும் அவர் போகையில், அவர்கள் தங்கள் வஸ்திரங்களை வழியிலே விரித்துக்கொண்டு போனார்கள்.

37. அவர் ஒலிவ மலையின் இறக்கத்துக்குச் சமீபமாய் வருகையில், சீஷர்களுடைய கூட்டமெல்லாம் சந்தோஷித்து, தாங்கள் கண்ட சகல அற்புதங்களையும்பற்றிச் சர்வேசுரனை உரத்த சத்தமாய்ப் புகழ்ந்து:

38. ஆண்டவருடைய நாமத்தினாலே வருகிற இராஜாவுக்குத் தோத்திரம்; பரமண்டலத்திலே சமாதானமும், உன்னதங்களிலே மகிமையும் உண்டாவதாக என்று ஸ்துதிக்கத் தொடங்கினார்கள். (மத். 21-9; மாற். 11-10; அரு. 12-13.)

39. அப்பொழுது ஜனக்கூட்டத்திலிருந்த பரிசேயரில் சிலர் அவரை நோக்கி: போதகரே, உம்முடைய சீஷர்களை அதட்டும் என்றார்கள்.

40. அவர்களுக்கு அவர் மாறுத்தாரமாக: இவர்கள் பேசாமலிருந்தால், கல்லுகளே கூப்பிடுமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

41. பின்னும் அவர் சமீபமாய் வந்தபோது, பட்டணத்தைப் பார்த்து, அதின்பேரில் கண்ணீர்விட்டு, வசனித்ததாவது:

42. உனக்குக் கிடைத்த இந்த நாளிலாவது உன் சமாதானத்துக்கு உரியவைகளை நீ அறிந்திருந்தாலல்லோ தாவிளை; ஆனால் இப்பொழுது அவைகள் உன் கண்களுக்கு மறைவாயிருக்கின்றன.

43. ஆகையால் உனக்கு ஒரு காலம் வரும்; அப்போது உன் சத்துராதிகள் உன்னைச் சுற்றிலும் அகிள்வெட்டி, உன்னைச் சூழ வளைந்து, எப்பக்கத்திலும் உன்னை நெருக்கி,

44. உன்னையும், உன்னிலுள்ள உன் பிள்ளைகளையும் தரைமட்டமாக்கி, உன்னிடத்தில் கல்லின்மேல் கல் நிற்கவிடார்கள். ஏனெனில் உன்னைச் சந்திக்க வந்த காலத்தை நீ அறியாமற்போனாய் என்றார். (மத். 24-2; மாற். 13-2; லூக். 21-6.)

44. மத். 24-ம் அதி. 2-ம் வசன வியாக்கியானம் காண்க.

45. பின்பு அவர் தேவாலயத்தில் பிரவேசித்து, அதிலே விற்கிறவர்களை யும் வாங்குகிறவர்களையும் வெளியே துரத்தத் தொடங்கி: (மத். 21-12; மாற். 11-15.)

46. என் வீடு ஜெப வீடு என்று எழு தியிருக்கிறதே; நீங்களோ அதைக் கள் ளர் குகையாக்கினீர்கள் என்றார்.

47. மேலும் அவர் அநுதினமும் தேவாலயத்தில் போதித்துக்கொண்டி ருந்தார். பிரதான ஆசாரியரும் வேத பாரகரும் ஜனத்தின் தலைவர்களும் அவரைக் கொலைசெய்ய வகை தேடிக் கொண்டிருந்தார்கள்.

48. என்றாலும், ஜனங்களெல்லா ரும் அவருடைய வாக்கைக் கேட்டு ஸ்தம்பித்திருந்ததினாலே, அவருக்கு என்ன செய்யலாமென்று அறியாதிருந் தார்கள்.

## 20-ம். அதிகாரம்.

திராட்சத் தோட்டக்காரருடைய உவமை யும், இராயனுக்கு வரி செலுத்தவேண்டு மென்பதும், மாம்ச உத்தானமும், பேரா சையுள்ள வேதபாரகர்மட்டில் எச்சரிக் கையும்.

1. பின்பு ஒருநாள் அவர் தேவால யத்திலே ஜனங்களுக்கு உபதேசித்துச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்துக்கொண் டிருந்தபோது, பிரதான ஆசாரியரும் வேதபாரகர்களும் மூப்பர்களோடு கூடிவந்து, (மத். 21-23; மாற். 11-27.)

2. அவரை நோக்கிக் கேட்டதா வது: நீர் எந்த அதிகாரத்தைக்கொ ண்டு இவைகளைச் செய்கிறீர்? அல் லது இந்த அதிகாரத்தை உமக்குக் கொடுத்தது யார்? அதை எங்களுக்குச் சொல்லும் என்றார்கள்.

3. யேசுநாதர் அவர்களுக்கு மாறுத் தாரமாக: நானும் உங்களை ஒரு வார்த் தை கேட்பேன். எனக்குப் பதில் சொல்லுங்கள்:

4. அருளப்பருடைய ஞானஸ்நான ம் மோக்ஷத்திலிருந்து உண்டானதோ, மனிதர்களால் உண்டானதோ என்றார்.

5. அவர்களோ தங்களுக்குள் ஆ லோசித்து: நாம் மோக்ஷத்திலிருந்து உண்டானது என்போமாகில், நீங்கள் ஏன் அவரை விசுவசியாதிருந்தீர்கள் என்பார்.

6. மனிதர்களால் உண்டானது என் போமாகில், ஜனமெல்லாம் நம்மைக் கல் லாலெறியும். ஏனெனில் அருளப்ப ரைத் தீர்க்கதரிசியென்று அவர்கள் நிச் சயித்திருக்கிறார்கள் என்று சொல்லி:

7. அது எங்கேயிருந்து உண்டாயிற் றோ, எங்களுக்குத் தெரியாது என்றார் கள்.

8. ஆதலால் யேசுநாதர் அவர்களை நோக்கி: நானும் எந்த அதிகாரத்தைக் கொண்டு இவைகளைச் செய்கிறேனெ ன்று உங்களுக்குச் சொல்லேன் என் றார்.

9. மேலும் அவர் ஜனங்களுக்குப் பின்வரும் உவமையைச் சொல்லத் தொடங்கினார். அதாவது: ஒரு மனித ன் ஒரு திராட்சத்தோட்டத்தை நட்டு, அதைக் குடியானவர்களுக்குக் குத்த கையாகக் கொடுத்து, வெகுகாலம் புற தேசத்துக்குப் போயிருந்தான். (மத். 21-23; மாற். 22-2.)

10. ஆயினும், பருவகாலத்திலே குடி யானவர்கள் திராட்சத்தோட்டத்தின் கனிகளில் தனக்கு (பாகம்) கொடுக்கும் படி அவர்களிடத்தில் ஒரு ஊழியனை அனுப்பினான். அவர்களோ அவனை அடித்து, வெறுமனே அனுப்பிவிட்டா ர்கள்.

11. மறுபடியும் அவன் வேறொரு ஊழியனை அனுப்பினன். அவனையும் அவர்கள் அடித்து, அவமானப்படுத்தி, ஒன்றுங்கொடாமல் அனுப்பிவிட்டார்கள்.

12. அவன் மூன்றாந்தரமும் ஒருவனை அனுப்பினன். அவர்கள் அவனையும் காயப்படுத்தித் துரத்திவிட்டார்கள்.

13. அப்பொழுது திராட்சத் தோட்டத்து எஜமான் சொன்னதாவது: நான் என்ன செய்வேன்? என் நேச குமாரனை அனுப்புவேன்; இவனையாவது அவர்கள் கண்டு, ஒருவேளை அஞ்சுவார்கள் என்றான்.

14. குடியானவர்களோ இவனைக் கண்டபோது: இவனே சுதந்தரவாளி, சுதந்தரம் நம்முடையதாகும் பொருட்டு, இவனைக் கொன்றுபோடுவோமாக என்று சொல்லி தங்களுக்குள்ளே யோசித்துக்கொண்டு,

15. அவனைத் திராட்சத்தோட்டத்துக்குப் புறம்பேதள்ளிக் கொன்றுபோட்டார்கள். ஆகையால் அந்தத் திராட்சத்தோட்டத்து எஜமான் அவர்களுக்கு என்னசெய்வான்?

16. அவன் வந்து, அந்தக் குடியானவர்களைச் சங்கரித்து, திராட்சத்தோட்டத்தை வேறே ஆட்களிடத்தில் கொடுப்பான் என்றார். இதைக்கேட்டு அவர்கள்: சுவாமி இரக்ஷிக்க! என்றார்கள்.

17. யேசுநாதரோ அவர்களை ஏறெடுத்துப்பார்த்து: அப்படியானல், கட்டுகிறவர்களாலே ஆகாதென்று தள்ளப்பட்ட கல்லே மூலைக்கு முதன்மையான கல்லாயிற்று என்று எழுதப்பட்டதின் கருத்தென்ன? (மத். 21-42; இசை. 28-16; சங். 117-22.)

18. அந்தக் கல்லின்மேல் விழுகிற எவனும் நொறுங்குண்டுபோவான்; அது எவன்மேல் விழுமோ, அவனைத் தூளாக்கிப்போடும் என்றார்.

19. ஆதலால் பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் அவர் இந்த உவமையைத் தங்களைக் குறித்தே சொன்னாரென்று அறிந்து, அந்நேரத்திலே அவரைப்பிடிக்க வகை தேடினார்கள். என்றாலும் ஜனங்களுக்கு அஞ்சியிருந்தார்கள்.

20. பின்னும் அவர்கள் சமயம் பார்த்து, தேசாதிபதியின் அதிகாரத்துக்கும் வல்லமைக்கும் அவரைக் கையளிக்கவேண்டுமென்று, பேச்சிலே அவரைக் குற்றம்பிடிக்கும்படியாகத் தங்களை நீதிமான்களாகப் பாசாங்குசெய்யும் வஞ்சகரை (அவரிடத்தில்) அனுப்பினார்கள். (மத். 22-15; மாற்.12-13.)

21. ஆதலால் அவர்கள் அவரை வினவி: போதகரே, நீர் சரியாய்ப் பேசி, உபதேசிக்கிறீரென்றும், முகதாக்ஷணியமில்லாமல் சர்வேசுரனுடைய மார்க்கத்தை உண்மையாய்ப் போதிக்கிறீரென்றும் அறிந்திருக்கிறோம்.

22. செசார் இராயனுக்கு நாம் வரி செலுத்துவது தகுமோ, தகாதோ என்று கேட்டார்கள்.

23. அவர்களுடைய வஞ்சகத்தை அவர் அறிந்து, அவர்களுக்குச் சொன்னதாவது: நீங்கள் ஏன் என்னைச் சோதிக்கிறீர்கள்?

24. தெனியர் என்னும் பணத்தை எனக்குக் காண்பியுங்கள். இதிலுள்ள ரூபமும் எழுத்தும் யாருடையது என்று கேட்டார். அதற்கு அவர்கள்: செசாருடையது என்று பதில்சொன்னார்கள்.

16-18. இந்த உவமைக்கு மத். 21-ம் அதி. 33-41-42. வசன வியாக்கியானம் காண்க.

25. அப்பொழுது அவர்: அப்படியானல், செசாருடையதைச் செசாருக்கும், சர்வேசுரனுடையதைச் சர்வேசுரனுக்குஞ் செலுத்துங்கள் என்று அவர்களுக்குச் சொன்னர். (ரோமை. 13-7.)

26. ஜனங்களுக்கு முன்பாக அவருடைய பேச்சிலே அவர்கள் குற்றம்பிடிக்கக்கூடாதிருந்ததுந் தவிர, அவர் சொன்ன பதில் மொழியின்பேரிலும் ஆச்சரியப்பட்டு, வாயடைத்துப் போனர்கள்.

27. பின்பு, உத்தானமில்லையென்று சாதிக்கிற சதுசேயரில் சிலர் அவரிடத்திலே வந்து, அவரை வினவிச் சொன்னதாவது: (மத். 22-23; அப். 23-8.)

28. போதகரே, ஒருவனுடைய சகோதரன் மனைவியையுடையவனய்ப் புத்திர சந்தானமில்லாமல் இறந்துபோனல், அவனுடைய சகோதரன் அவனுடைய மனைவியைக் கலியாணஞ்செய்து, தன்சகோதரனுக்குப் புத்திரசந்தானம் உண்டாக்கக்கடவானென்று மோயீசன் எங்களுக்கு எழுதித் தந்திருக்கிறார். (உபா. 25-5.)

29. அப்படியிருக்க, சகோதரர் ஏழுபேரிருந்தார்கள். மூந்தினவன் ஓர் ஸ்திரீயைக் கலியாணஞ்செய்து, பிள்ளையில்லாமல் இறந்துபோனன்.

30. பிந்தினவன் அவளைக் கலியாணஞ்செய்து, அவனும் பிள்ளையில்லாமல் இறந்துபோனன்.

31. மூன்றாஞ்சகோதரனும் அவளைக் கலியாணம் செய்தான். அப்படியே ஏழுபேருஞ்செய்து, புத்திர சந்தானமில்லாமலே இறந்துபோனர்கள்.

32. எல்லாருக்கும் கடைசியாய் அந்த ஸ்திரீயும் இறந்துபோனள்.

33. ஆகையால் உத்தானத்திலே அவள் அவர்களில் எவனுக்கு மனைவியாயிருப்பாள்? ஏனெனில் ஏழுபேரும் அவளை மனைவியாகக் கொண்டிருந்தார்களே என்றார்கள்.

34. யேசுநாதர் அவர்களுக்குத் திருவுளம்பற்றினதாவது: இவ்வுலக மக்கள் மணம் முடிக்கிறார்கள், மணமுடிக்கவும் படுகிறார்கள்.

35. அவ்வுலகத்துக்கும், மரித்தோரிலிருந்து உயிர்த்தலுக்கும் பாத்திரவான்களாக எண்ணப்படுகிறவர்களோ வாழ்க்கைப் படுகிறதுமில்லை, பெண் கொள்ளுகிறதுமில்லை.

36. ஏனெனில் இனி அவர்கள் மரிக்கவும் மாட்டார்கள். அவர்கள் உத்தானத்தின் பிள்ளைகளானபடியால், சம்மனசுக்களுக்கு ஒத்தவர்களுமாய், சர்வேசுரனுடைய பிள்ளைகளுமாய் இருக்கிறார்கள்.

25. செசாருக்குச் செலுத்தவேண்டியதும் சர்வேசுரனுக்குச் செலுத்தவேண்டியதும் ஏதுவென்றால் உலக இராச்சியத்துக்கு அடுத்ததெல்லாம் உலக அதிகாரிக்கும், வேதத்துக்கடுத்ததெல்லாம் சர்வேசுரனுக்கும் உரியவைகளாமே. ஆகையால் கிறீஸ்துவர்கள் இராஜாங்கத்துக்குரிய காரியங்களில் உலக அதிகாரிகளுக்கும், வேதகாரியங்களில் சத்திய வேத அதிகாரிகளுக்கும் கீழ்ப்படிய வேண்டியது. உலக அரசாட்சி வேத அரசாட்சிக்குத் தடை செய்யக்கூடாது.

36. இவ்வுலகத்திலே மனுஷர் சாகிறபடியினலே, தங்கள் புத்திரர்களில் சீவிக்கும்படிக்கும், மனுக்குலம் வர்த்தித்து நீளித்திருக்கும்படிக்கும் கலியாணம் கற்பிக்கப்பட்டிருக்கிறது. ஆனல் மோக்ஷத்தையடைந்த விசுவாசிகள் அரூபிகளான சம்மனசுக்களைப்போல சாகாவரம் பெற்று, நித்திய காலம் வாழ்வார்களென்கிறதினலே அவர்களுக்குள் கலியாணம் இல்லை.

37. மோயீசன் முதலாய் முட்செடியருகில் பேசுகையில், ஆண்டவரை அபிரகாமின் தேவனென்றும் ஈசாக்கின் தேவனென்றும் யாக்கோபின் தேவனென்றும் சொன்னபோது மரித்தோர் உயிர்ப்பார்களென்பதைக் காட்டினார். (யாத். 3-6.)

38. ஏனெனில் சர்வேசுரன் மரித்தோருக்கல்ல, சீவியர்களுக்கே சர்வேசுரனாயிருக்கிறார். சகலரும் அவருக்குச் சீவியர்களாயிருக்கிறார்கள் என்றார்.

39. அப்பொழுது வேதபாரகரில் சிலர் மறுமொழியாக, அவரை நோக்கி: போதகரே, நன்றாய்ச் சொன்னீர் என்றார்கள்.

40. அதின்பின் அவர்கள் அவரிடத்திலே யாதொன்றையும் கேட்கத் துணியவில்லை.

41. அவரோவெனில் அவர்களை நோக்கித் திருவுளம்பற்றினதாவது: கிறீஸ்து தாவீதின் குமாரனென்று எப்படிச் சொல்லுகிறார்கள்?

42-43. ஆண்டவர் என் ஆண்டவரை நோக்கி: நான் உம்முடைய சத்துருக்களை உமக்குப் பாதபடியாகப் போடுமட்டும், நீர் என்னுடைய வலதுபாரிசத்தில் உட்காரும் என்றுரைத்தாரென்று தாவீதுதாமே சங்கீத ஆகமத்தில் சொல்லுகிறாரே.

44. தாவீது அவரை ஆண்டவரென்று சொல்லியிருக்க, அவருக்கு அவர் குமாரனாயிருப்பது எப்படி என்றார்.

45. பின்னும் ஜனங்களெல்லாரும் கேட்டுக்கொண்டிருக்க, அவர் தம்முடைய சீஷர்களுக்குச் சொன்னதாவது:

46. வேதபாரகர்மட்டிலே நீங்கள் எச்சரிக்கையாயிருங்கள். அவர்கள் நிலையங்கிகளோடு திரிய விரும்பி, சந்தைகளில் வந்தனங்களையும், ஜெப ஆலயங்களில் முதன்மையான ஆசனங்களையும், விருந்துகளில் முதல் இடங்களையும் இச்சிக்கிறார்கள். (லூக். 11-43.)

47. நீண்ட ஜெபம்பண்ணுகிறதாக வேஷங்காட்டி, விதவைகளின் வீடுகளை விழுங்குகிறார்கள். அவர்கள் அதிகமான ஆக்கினைத்தீர்வையடைவார்கள் என்றார்.

## 21-ம். அதிகாரம்.

கர்த்தர் இரண்டு சல்லி காணிக்கை போட்ட விதவையைப் புகழ்ந்ததும், எருசலேம் பட்டணமும் அதிலுள்ள தேவாலயமும் அழிந்துபோமென்று முன்னறிவித்ததும், விழித்து ஜெபம் பண்ணவேண்டுமென்று கற்பித்ததுமாகிய விசேஷங்கள்.

1. பின்பு அவர் கண்களை ஏறெடுத்துப் பார்த்தபொழுது, உண்டியலிலே ஐசுவரியவான்கள் தங்கள் காணிக்கைகளைப் போடுகிறதைக் கண்டார். (மாற். 12-41.)

2. ஓர் ஏழை விதவையும் அதிலே இரண்டு சல்லிகளைப் போடுகிறதைக் கண்டு அவர் திருவுளம்பற்றினதாவது:

3. எல்லாரையும் விட இந்த ஏழை விதவை அதிகமாய்ப் போட்டாளென்று உண்மையாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

4. ஏனெனில் அவர்களெல்லாரும் தங்களுக்கு ஏராளமாயிருக்கிறதிலே எடுத்து, சர்வேசுரனுக்குக் காணிக்கையாகப் போட்டார்கள். இவளோ தன் வறுமையில் தன் ஜீவனத்துக்கு இருந்ததெல்லாவற்றையும் போட்டுவிட்டாள் என்றார்.

• 4. தர்மமானது சர்வேசுரனுடைய சமுகத்திலே இரண்டு விதமாய் விலையேறப்பெற்றதாகிறது; 1-வது உட்கருத்தினாலும், 2-வது உதார குணத்தினாலுமென்க. இந்த

5. பின்னும், தேவாலயத்தைக் குறித்து: இது சிறந்த கற்களினாலும் காணிக்கைகளினாலும் அலங்கரிக்கப் பட்டிருக்கிறதென்று சிலர் சொல்லுகையில், அவர் திருவுளம்பற்றினதாவது:

6. நீங்கள் பார்க்கிற இவைகளில் கல்லின்மேல் கல் நில்லாமல் இடிபடும் நாட்கள் வரும் என்றார். (லூக். 19-44.)

7. அப்பொழுது அவர்கள்: போதகரே, இவைகள் எப்போது சம்பவிக்கும்? இவைகள் சம்பவிக்கத் துவக்கும்போது என்ன அடையாளம் உண்டாயிருக்கும் என்று அவரைக் கேட்க,

8. அவர் திருவுளம்பற்றினதாவது: நீங்கள் மோசம் போகாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்; ஏனெனில் அநேகர் என் நாமத்தைத் தரித்துக்கொண்டு வந்து: நானே (கிறீஸ்து) என்றும், காலஞ் சமீபமாயிற்றென்றும் சொல்லுவார்கள். ஆகையால் நீங்கள் அவர்களைப் பின் செல்லவேண்டாம்.

9. அன்றியும் நீங்கள் யுத்தங்களையும் கலகங்களையுங்குறித்துக் கேள்விப் படும்போது திகிலடையாதிருங்கள். இவைகள் முந்தமுந்த நடக்கவேண்டும்; ஆகிலும் முடிவு உடனே வராது என்றார்.

10. மீண்டும் அவர்களைநோக்கி அவர் வசனித்ததாவது: ஜனம் ஜனத்துக்கு விரோதமாயும், இராச்சியம் இராச்சியத்துக்கு விரோதமாயும் எழும்பும்.

11. பற்பல இடங்களிலே பலத்த பூமியதிர்ச்சிகளும், கொள்ளைநோய்களும், பஞ்சங்களும் உண்டாகும்; வானத்தினின்று பயங்கர தோற்றங்களும், பெரிய அடையாளங்களும் உண்டாகும்.

12. ஆனால் இவையெல்லாவற்றிற்கு முன்னே என் நாமத்தினிமித்தம் உங்களைப் பிடித்து, இராஜாக்களுக்கும், அதிகாரிகளுக்கும் முன்பாக இழுத்துக்கொண்டுபோய், ஜெப ஆலயங்களுக்கும் சிறைச்சாலைகளுக்கும் உங்களை ஒப்புவித்துத் துன்பப்படுத்துவார்கள்.

13. ஆயினும் நீங்கள் சாட்சிகளாகும்பொருட்டு, இது உங்களுக்குச் சம்பவிக்கும்.

14. ஆகையால் என்ன மறுமொழி சொல்லுவோமென்று நீங்கள் முன்னிதாய் யோசிக்க வேண்டியதில்லையென்பதை மனதில் வைத்துக்கொள்ளுங்கள். (லூக். 12-11.)

15. ஏனெனில் உங்கள் எதிராளிகளெல்லோரும் எதிர்க்கவும் மறுக்கவும் கூடாத வாக்கும் ஞானமும் நான் உங்களுக்குக் கொடுப்பேன். (அப். 6-10.)

16. (உங்கள்) பெற்றார், சகோதரர், சுற்றத்தார், சிநேகிதராலேயும் நீங்கள் காட்டிக் கொடுக்கப்படுவீர்கள். உங்களில் சிலரையுங் கொலைசெய்வார்கள்.

17. என் நாமத்தினிமித்தம் எல்லாராலேயும் பகைக்கப்படுவீர்கள்.

18. ஆகிலும் உங்கள் தலைமயிரில் ஒன்றாகிலும் சேதமாகாது. (லூக். 12-7.)

விதவை செலுத்திய காணிக்கை அற்பமானாலும், அவ்வளவுதான் அவளிடத்தில் இருந்ததென்கிறதினாலே, மிகுந்த உதாரத்தோடு கொடுத்தாளென்று சொல்லவேணும். இந்த உதார குணத்தைப்பற்றி மற்றவர்களைப்பார்க்க அவளே அதிகங்கொடுத்தாள். ஏனெனில் மற்றவர்கள் மெத்தக் கொடுத்தாலும் தங்களுக்கு உள்ளதெல்லாங் கொடுக்கவில்லை; மிச்சமாயிருக்கிறதை மாத்திரங் கொடுத்தார்கள். ஆகையால் அவளுடைய தர்மம் மற்றவர்களுடையதைப் பார்க்கச் சர்வேசுரனுடைய சமுகத்தில் அதிக மதிப்புக்குரியதாயிருந்ததென்றறிக.

6. மத். 24-ம் அதி. 2-ம் வசன வியாக்கியானம் காண்க.

19. உங்கள் பொறுமையைக் கொண்டு உங்கள் ஆத்துமங்களைக் காப்பாற்றிக்கொள்வீர்கள்.

20. எருசலேம் பட்டணம் படைகளால் சூழப்பட்டிருப்பதை நீங்கள் காணும்போது, அதின் அழிவு சமீபமாயிற்றென்று அறிந்துகொள்ளுங்கள். (தனி. 9-27; மத். 24-15; மாற். 13-14.)

21. அப்பொழுது யூதேயா நாட்டிலிருக்கிறவர்கள் மலைகளுக்கு ஓடிப்போகவும், அதின் நடுவிலிருப்பவர்கள் அதைவிட்டு அகலவும், நாட்டுப்புறங்களிலுள்ளவர்கள் அதில் பிரவேசியாதிருக்கவுங்கடவார்கள்.

22. ஏனெனில் எழுதப்பட்டயாவும் நிறைவேறும்படி பழிவாங்கக் குறிக்கப்பட்ட நாட்கள் இவைகளே.

23. அந்நாட்களிலே கர்ப்பவதிகளுக்கும் பாலூட்டுகிறவர்களுக்கும் ஐயோ நிர்ப்பாக்கியம்! ஏனெனில் பூமியின்மேல் மிகுந்த நெருக்கிடையும் இந்த ஜனத்தின்மேல் கோபாக்கினையும் உண்டாயிருக்கும்.

24. பட்டயக் கருக்கினாலும் விழுவார்கள், சகல புற ஜாதிகளுக்குள்ளும் சிறைகளாய்க்கொண்டுபோகப்படுவார்கள். அந்நியதேசத்தாருடைய காலம் நிறைவேறுமளவும் எருசலேம் நகர் புறஜாதியார்களாலே மிதிக்கப்படும்.

25. அப்பொழுது சூரியன் சந்திரன் நட்சத்திரங்களிலே பல அதிசயங்கள் தோன்றும். சமுத்திரமும் அலைகளும் இறைந்து கொந்தளிப்பதினால், பூமியில் ஜனங்களுக்கு உபத்திரவமுண்டாகும். (இசை. 13-19; எசேக். 32-7; ஜோ. 2-31; 3-15; மத். 24-29.)

26. உலகத்துக்கெல்லாம் இனி என்ன வரப்போகிறதோவென்று மனிதர்கள் பயந்து, எதிர்பார்த்திருப்பதினால் விடவிடத்துப் போவார்கள். ஏனெனில் வானமண்டலங்களின் சத்துவங்கள் அசைக்கப்படும்.

27. அப்பொழுது மனுமகன் மிகுந்த வல்லமையோடும் மகிமையோடும் மேகத்தின்மேல் வருவதைக் காண்பார்கள். (மத். 26-64.)

28. இவைகள் சம்பவிக்கத் தொடங்கும்போது, நீங்கள் அண்ணார்ந்துபார்த்து, உங்கள் தலைகளை உயர்த்துங்கள். ஏனென்றால் உங்கள் இரட்சணியம் சமீபித்திருக்கிறது என்றார். (ரோ. 8-23.)

29. பின்னும் அவர் அவர்களுக்குத் திருவுவமைபற்றின உவமையாவது: அத்திமரத்தையும், சகல விருட்சங்களையும் பாருங்கள்.

30. அவைகள் காய்க்கத் துவக்கும்போது, கோடைகாலம் சமீபித்திருக்கிறதென்று அறிந்துகொள்ளுகிறீர்களே.

31. அவ்விதமே நீங்களும் இவைகள் சம்பவிக்கிறதைக் காணும்போது, சர்வேசுரனுடைய இராச்சியம் சமீபமாயிற்றென்று அறிந்துகொள்ளுங்கள்.

32. இவையெல்லாம் நடந்தேறுமளவும், இந்தச் சந்ததி ஒழிந்துபோவதில்லையென்று உண்மையாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

33. வானமும் பூமியும் ஒழிந்துபோம்; என் வார்த்தைகளோ ஒழிந்துபோகாது.

24. எருசலேம் பட்டணத்தின் அழிவு உலகம் முடியுமட்டும் இருக்குமென்றும் யூதஜாதியார் அதுவரையில் மற்ற ஜாதியார்களுடைய அதிகாரத்துக்குள் அடங்கியிருப்பார்களென்றும் அறிக.

34. ஆனால் உங்கள் இருதயங்கள் ஒருவேளை பெருந்தீனியாலும், குடிவெறியாலும், இச்சீவியத்தின் கவலைகளாலும் பாரமாகாதபடிக்கும், அந்த நாள் திடீரென உங்கள்மேல் வராதபடிக்கும் உங்கள்மட்டில் எச்சரிக்கையாயிருங்கள்.

35. ஏனெனில் (அந்நாளானது) பூமியின் சர்வ பரப்பிலும் வசிக்கிற யாவர் மேலும் ஓர் வலைபோல் திடீரென வரும்.

36. ஆகையால் சம்பவிக்கப்போகிற இவைகளுக்கெல்லாம் நீங்கள் தப்பித்துக்கொள்ளவும், மனுமகன் முன்பாக நிற்கவும் பாத்திரவான்களென்று எண்ணப்படும்பொருட்டு எந்நேரமும் ஜெபம்பண்ணி, விழிப்பாயிருங்கள் என்று திருவுளம்பற்றினார்.

37. பகற்காலங்களிலே அவர் தேவாலயத்தில் உபதேசித்துக்கொண்டு வருவார். இராக்காலங்களிலோ வெளியேபோய், ஒலிவமலை என்னப்பட்ட மலையில் தங்குவார்.

38. ஜனங்களெல்லாரும் அவருடைய வாக்கியத்தைக் கேட்கும்படி, அதிகாலையில் எழுந்து தேவாலயத்தில் அவரிடத்திற்கு வருவார்கள்.

## 22-ம். அதிகாரம்.

கிறீஸ்துநாதருடைய பாடுகளின் வரலாறு.

1. அப்பொழுது பாஸ்கா என்னப்பட்ட புளியாத அப்பப்பண்டிகை சமீபித்திருந்தது. (மத். 26-2; மாற். 14-1.)

2. பிரதான ஆசாரியர்களும் வேதபாரகரும் யேசுநாதரை எப்படிக் கொலைசெய்யலாமென்று வழிதேடிக்கொண்டிருந்தார்கள். ஆயினும் ஜனத்துக்குப் பயந்திருந்தார்கள்.

3. அப்படியிருக்க, பன்னிருவரில் ஒருவனான இஸ்காரியோத் என்னப்பட்ட யூதாஸிடத்தில் சாத்தான் புகுந்தான். (மத். 26-14; அரு. 13-2.)

4. அவன் பிரதான ஆசாரியர்களிடத்திலும் அதிகாரிகளிடத்திலும் போய், தான் அவரை எவ்விதமாய் அவர்களுக்குக் காட்டிக் கொடுப்பதென்று அவர்களோடே பேசினான்.

5. அதினாலே அவர்கள் சந்தோஷப்பட்டு, அவனுக்குப் பணங்கொடுக்க ஒப்பந்தஞ்செய்தார்கள்.

6. அவனும் வாக்குக் கொடுத்து, ஜனக்கூட்டமில்லாதவேளையில், அவரைக் காட்டிக்கொடுக்கும்படி சமயந்தேடிக்கொண்டிருந்தான்.

7. அப்பொழுது பாஸ்காவைப் பலியிடவேண்டிய புளியாத அப்பப் பண்டிகைநாள் வந்தது.

8. யேசுநாதர் இராயப்பரையும், அருளப்பரையும் அனுப்பி: நாம் பாஸ்காவை உண்ணும்படிக்குநீங்கள்போய், அதை ஆயத்தம்பண்ணுங்கள் என்றார்.

9. அதற்கு அவர்கள்: நாங்கள் எங்கே ஆயத்தம்பண்ணும்படி சித்தமாயிருக்கிறீர் என்று கேட்க,

1. மத். 26-ம் அதி. 17-ம். வசன வியாக்கியானம் காண்க.

8. பாஸ்கா பண்டிகையிலே ஒரு செம்மறிப் புருவையைப் பலியிட வேண்டுமென்று சர்வேசுரன் யூதர்களுக்குக் கற்பித்திருந்தார். (லேவி. 2, 3-4-5.) அந்தச் செம்மறிப் புருவை யேசுநாதருக்கு அடையாளமுமாய் அந்தப் பலியானது யேசுநாதர் கபாலமலையில் செலுத்தும் பலிக்கு அடையாளமுமாயிருந்ததென்று வேதபாரகர் எல்லாரும் ஒருவாய்ப்பட ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

10. அவர் அவர்களைநோக்கிச்சொன்னதாவது: இதோ நீங்கள் பட்டணத்தில் பிரவேசிக்கையில், தண்ணீர்க்குடஞ் சுமந்து வருகிற ஒரு மனிதன் உங்களுக்கு எதிர்ப்படுவான்; அவன் பிரவேசிக்கும் வீட்டுக்குள் நீங்களும் அவனைப் பின்சென்று போய்,

11. அந்தவீட்டெஜமானைப்பார்த்து: நான் என் சீஷர்களோடுகூட பாஸ்காவை உண்ணும்படியான இடம் எங்கே என்று போதகர் உம்மிடத்தில் கேட்கிறார் என்று சொல்லுங்கள்.

12. அப்பொழுது அவன் விசாலமும் சிறந்ததுமான ஓர் அசன சாலையை உங்களுக்குக் காண்பிப்பான். அதிலே நீங்கள் ஆயத்தஞ்செய்யுங்கள்என்றார்.

13. அவர்களும்போய், அவர் தங்களுக்குச் சொன்னபடியே கண்டு, பாஸ்காவை ஆயத்தம் பண்ணினார்கள்.

14. பின்பு நேரமானபோது, அவரும் அவரோடுகூடப் பன்னிரு அப்போஸ்தலரும் பந்தியமர்ந்தார்கள். (மத். 26-20; 1 மாற். 14-17.)

15. அப்பொழுது அவர் அவர்களை நோக்கி: நான் பாடுபடுவதற்குமுன்னே இந்தப் பாஸ்காவை உங்களோடுகூட உண்ணும்படி ஆசைமேல் ஆசையாயிருந்தேன்.

16. ஏனெனில் இந்நேரமுதல் இது சர்வேசுரனுடைய இராச்சியத்தில் நிறைவேறுமளவும், நான் இதை உண்பதில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

17. பின்னும் அவர் பாத்திரத்தை எடுத்து, நன்றியறிந்த தோத்திரஞ்செய்து திருவுளம்பற்றினதாவது: இதை நீங்கள் வாங்கி, உங்களுக்குள்ளே பகிர்ந்துகொள்ளுங்கள்.

18. ஏனெனில் சர்வேசுரனுடைய இராச்சியம் வருமளவும், நான் திராட்சரசத்தைப் பானம்பண்ணுவதில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

19. பின்னும் அவர் அப்பத்தை எடுத்து, நன்றியறிந்த தோத்திரஞ்செய்து, அதைப்பிட்டு, அவர்களுக்குக் கொடுத்து: இது உங்களுக்காகக் கொடுக்கப்படுகிற என் சரீரம், என் நினைப்புக்காக இதைச் செய்யுங்கள் என்றார். (1. கொரி. 11-24.)

20. இந்தப்பிரகாரமாய் அசனத்துக்குப்பின், பானபாத்திரத்தையும் (எடுத்துக்கொடுத்து): இந்தப் பாத்திரம் உங்களுக்காகச் சிந்தப்படும் என் இரத்தத்தில் புது உடன்படிக்கையாயிருக்கிறது என்றார்.

21. ஆயினும் இதோ, என்னைக் காட்டிக்கொடுக்கிறவனுடைய கை என்னோடு மேசையிலிருக்கிறது. (மத். 26-11; மாற். 14-20; அரு. 13-18.)

22. மனுமகன் (தம்மைக்குறித்து) நிருபிக்கப்பட்டபடியே போகிறார்; ஆகிலும் எந்த மனிதனால் காட்டிக்கொடுக்கப்படுவாரோ, அந்த மனிதனுக்கு ஐயோ கேடு! என்றார். (சங். 4-10.)

23. அப்பொழுது அவர்கள்: நம்மில் எவன் இப்படிச் செய்யப் போகிறானென்று தங்களுக்குள்ளே விசாரிக்கத் தொடங்கினார்கள்.

18. **இனி நான் பானம் பண்ணுவதில்லை:**— இந்த வாக்கியத்தை யேசுநாதர் சுவாமி தேவநற்கருணை உண்டாக்கினபின் உரைத்ததாக அர்ச். மத்தேயு எழுதியிருக்கிறார். ஆனையால் இதை ஆண்டவர் இருமுறை உரைத்தாரென்று சொல்ல இடமுண்டாமே.



"நான் பாடுபடுவதற்குமுன்னே, இந்தப் பாஸ்காவை உங்களோடே கூட உண்ணும்படி ஆசைமேல் ஆசையாய் இருந்தேன். (லூக் .22-15.)
மனுமகன் (தம்மைக்குறித்து) நிரூபிக்கப்பட்டபடியே போகிறார். ஆயினும் எந்த மனிதனால் காட்டிக்கொடுக்கப்படுவாரோ, அந்த மனிதனுக்கு ஐயோ கேடு! (லூக். 22-22.)

24. அல்லாமலும் தங்களில் அதிக பெரியவனாகக் காணப்படுகிறவன் யார் என்று அவர்களுக்குள்ளே ஓர் வாக்குவாதமும் உண்டாயிற்று.

25. யேசுநாதரோ அவர்களை நோக்கி: புறஜாதியாருடைய இராஜாக்கள் அவர்கள்மேல் காறுபாறு பண்ணுகிறார்கள். அவர்கள்மேல் அதிகாரமுள்ளவர்களும் உபகாரிகளென்று அழைக்கப்படுகிறார்கள்.

26. ஆனால் நீங்கள் அப்படியல்ல; உங்களுக்குள்ளே பெரியவனாயிருக்கிறவன் சிறியவனாகவும், தலைமையாயிருக்கிறவன் பணிவிடைக்காரனாகவும் இருக்கக்கடவானாக.

27. ஏனெனில் பந்தியிலிருக்கிறவனோ, பணிவிடை செய்கிறவனோ எவன் பெரியவன்? பந்தியிலிருக்கிறவனல்லவா? ஆயினும் நான் உங்கள் மத்தியில் பணிவிடை செய்கிறவனைப்போலிருக்கிறேன்.

28. எனக்கு நேரிட்ட சோதனைகளிலே என்னோடு நிலைநின்றவர்கள் நீங்களே.

29. என் பிதாவானவர் எனக்கு இராச்சியத்தை ஏற்படுத்தினதுபோல, நானும் உங்களுக்கு ஏற்படுத்துகிறேன்.

30. அதினிமித்தம் நீங்கள் என் இராச்சியத்திலே என் மேசையில் போசனபானம்பண்ணுவதுமன்றி, இஸ்ராயேலின் பன்னிரண்டு கோத்திரங்களையும் நடுத்தீர்க்கிறவர்களாய்ச் சிம்மாசனங்களில் உட்காருவீர்கள் என்றார்.

31. மீளவும் ஆண்டவர் திருவுளம் பற்றினதாவது: சீமோனே சீமோனே, இதோ உங்களைக் கோதுமையைப் போல புடைக்கும்படி சாத்தான் கேட்டுக்கொண்டான்.

32. நானோ உன் விசுவாசம் தளராதபடி உனக்காக வேண்டிக்கொண்டேன். ஆகையால் நீ ஒருதரம் மனந்திரும்பினபின்பு, உன் சகோதரரை உறுதிப்படுத்து என்றார்.

33. அதற்கு அவர்: ஆண்டவரே, உம்மோடுகூட சிறைச்சாலைக்கும் மரணத்துக்கும் உள்ளாக ஆயத்தமாயிருக்கிறேன் என்று சொல்ல,

34. யேசுநாதர் அவரை நோக்கி: இராயப்பா, நீ என்னை அறியேனென்று மும்முறை மறுதலிப்பதற்குள்ளாக இன்று சாவல் கூவாதென்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார். பின்னும் அவர்களைப் பார்த்து: (மத். 26-34; மாற். 14-30.)

35. நான் உங்களைப் பணப்பையும் சாமான்பையும் பாதரட்சைகளுமில்லாமல் அனுப்பினபோது, ஏதேனும் உங்களுக்குக் குறைவாயிருந்ததோ என்க, (மத். 10-9.)

31. இவ்வாக்கியத்தில் சொல்லியிருக்கிறபடியே, மனிதனைச் சோதிக்கிறதற்கு முதலாய்ப் பசாசு சர்வேசுரனிடத்தில் உத்தரவு பெற்றுக்கொள்ளுகிறது. நல்லவர்களுடைய புண்ணியம் விளங்கவும், அவர்களைத் தாழ்ச்சியில் உறுதிப்படுத்தவும், அவர்களுக்கு மோட்ச சம்பாவனையைப்பெருகப்பண்ணவும் சர்வேசுரன் அவர்களைச் சோதிக்கும்படி பசாசுக்கு உத்தரவு கொடுக்கிறார். சோதனையானது கெட்டவர்களுக்குத் தண்டனையாகவும் அவர்களுடைய ஆங்காரத்தைத் தாழ்த்தவும் நல்லவர்களுக்குப் பயனாகவும் உதவுகிறபடியினாலே பசாசு அவர்களைச் சோதிக்கும்படி ஆண்டவர் விடை கொடுக்கிறார்.

32. இவ்வாக்கியத்தினாலே அர்ச். இராயப்பர் திருச்சபைக்குத் தலைவராயிருந்து மற்ற அப்போஸ்தலர்களையும் நடப்பிக்க அதிகாரம் பெற்றவரென்று தெளிவாய் அறிந்துகொள்ளலாம்.

36. அவர்கள் : ஒன்றும் குறைவாயிருந்ததில்லை என்றார்கள். அப்பொழுது அவர் அவர்களை நோக்கி: இப்பொழுதோ, பணப்பையை உடையவன் அதை எடுத்துக்கொள்வானாக; அப்படியே சாமான் பையையும் எடுத்துக்கொள்வானாக; பட்டயம் இல்லாதவனும் தன் அங்கியை விற்று, ஒன்றை வாங்கிக்கொள்ளக்கடவான்.

37. ஏனெனில் அக்கிரமிகளோடு எண்ணப்பட்டாரென்று எழுதப்பட்டிருக்கிற இந்த வாக்கியமும் என்னிடத்தில் நிறைவேறவேண்டுமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்; அதேதெனில் என்னைப்பற்றியவைகள் முடிவடைகின்றன என்றார். (இசை. 53-12.)

38. அப்பொழுது அவர்கள் : ஆண்டவரே, இதோ இங்கே இரண்டு பட்டயமிருக்கின்றது என்றார்கள். அவரோ : போதும் என்று அவர்களுக்குச் சொன்னார்.

39. பின்னும் அவர் வெளியே புறப்பட்டுத் தம்முடைய வழக்கத்தின்படியே ஒலிவ மலைக்குப்போனார். சீஷர்களும் அவரைப் பின்சென்று போனார்கள். (மத். 26-36; மாற். 14-32; அரு. 18-1.)

40. அவர் அவ்விடத்தில் சேர்ந்தபோது அவர்களை நோக்கி : நீங்கள் சோதனைக்குட்படாதபடிக்கு ஜெபம் பண்ணுங்கள் என்று சொல்லி,

41. தாம் அவர்களிடத்தினின்று கல்லெறிதூரம் பிரிந்துபோய், முழந்தாட்படியிட்டு வேண்டிக்கொண்டதாவது : (மத். 26-36; மாற். 14-35.)

42. பிதாவே, தேவரீருக்குச் சித்தமானால் இந்தப்பாத்திரம் என்னைவிட்டு நீங்கப்பண்ணியருளும்; ஆகிலும் என் மனதின்படியல்ல, உம்முடைய மனதின்படியே ஆகட்டும் என்றார்.

43. அப்பொழுது பரலோகத்தினின்று ஒரு தேவதூதன் அவருக்குத் தோன்றி, அவரைத்தேற்றினார். அவரோ அவஸ்தையாகி, வெகுநேரம் ஜெபித்துக்கொண்டிருக்கையில்,

44. அவருடைய வேர்வை இரத்தத் துளிகளைப்போல நிலத்தில் விழுந்தது.

45. பிற்பாடு அவர் ஜெபத்தினின்று எழுந்து, தம்முடைய சீஷர்களிடத்தில் வந்து, அவர்கள் துக்கத்தினாலே நித்திரை செய்கிறதைக்கண்டு,

46. அவர்களை நோக்கி : நீங்கள் நித்திரை செய்வானேன்? எழுந்திருந்து, சோதனைக்குட்படாதபடிக்கு ஜெபஞ் செய்யுங்கள் என்றார்.

47. அவர் இன்னம் பேசிக்கொண்டிருக்கையில் இதோ, ஜனக்கூட்டந் தோன்றினது. அன்றியும் பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ் என்பவன் அவர்களுக்கு முன்னாக நடந்து, யேசுநாதரை முத்தஞ்செய்யும்படி அவரிடத்தில் நெருங்கினான். (மத். 26-47; மாற். 14-43; அரு. 18-3.)

48. யேசுநாதரோ அவனைப் பார்த்து: யூதாஸே, முத்தமிட்டோ மனுமகனைக் காட்டிக்கொடுக்கிறாய் என்றார்.

49. அப்பொழுது அவரைச் சுற்றியிருந்தவர்கள் சம்பவிக்கப்போகிறதைக் கண்டு: ஆண்டவரே, வாளால் வெட்டுவோமா? என்று கேட்க,

50. அவர்களில் ஒருவர் பெரிய குருவினுடைய ஊழியனைத் தாக்கி, அவனுடைய வலது காதற வெட்டினார்.

51. ஆனால் யேசுநாதர் மாறுத்தாரமாக: இம்மட்டில் நிறுத்துங்கள் என்றுசொல்லி, அவனுடைய காதைத் தொட்டு அவனைச் சொஸ்தமாக்கினார்.

36. லூக். 10-ம் அதி. 4-ம் வசன வியாக்கியானம் காண்க.

52. பிற்பாடு யேசுநாதர் தம்மைப் பிடிக்கவந்த பிரதான ஆசாரியர்களை யும் தேவாலயத்தின் அதிகாரிகளையும் மூப்பர்களையும் பார்த்து: ஒரு கள்ள னைப் பிடிக்கவருவதுபோலக் கத்திக ளோடும் தடிகளோடும் வந்தீர்களோ?

53. நான் நாள்தோறும் தேவாலயத் தில் உங்களோடிருக்கையில், நீங்கள் என்னைப்பிடிக்கும்படி கைநீட்டவில்லை. ஆனால் இதுவே உங்கள் நேரமும் இரு ளின் வல்லமையுமாயிருக்கிறது என் ருர்.

54. அவர்கள் அவரைப்பிடித்து, பெரிய குருவின் வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு போனார்கள். இராயப்பரோ தூரத்திலே பின்சென்ருர். (மத். 26-57; மாற். 14-53; அரு.18-24.)

55. பின்பு அவர்கள் முற்றத்தின் நடுவிலே நெருப்பைமூட்டி, அதைச் சுற்றிலும் உட்கார்ந்துகொண்டிருக் கையில், இராயப்பரும் அவர்கள் மத்தி யிலிருந்தார். (மத். 26-69; மாற். 14-66; அரு. 18-25.)

56. அவர் நெருப்பண்டையில் உட் கார்ந்திருக்கிறதை ஒரு வேலைக்காரி கண்டு, அவரை உற்றுப்பார்த்து: இவ னும் அவனோடிருந்தான் என்ருள்.

57. அதற்கு அவர்: ஸ்திரீயே அவனை அறியேனென்று சொல்லி மறுதலித் தார்.

58. சற்றுநேரத்துக்குப் பின்பு, வே ருெருவன் அவரைக் கண்டு: நீயும் அவர்களில் ஒருவன் என்ருன். ஆனால் இராயப்பர்: ஓ மனிதனே, நான் அல்ல என்ருர்.

59. அதற்குமேல் இடையில் ஏறக் குறைய ஒருமணி நேரமானபின்பு வே ருெருவன்: நிச்சயமாய் இவனும் அவ னோடிருந்தவன், ஏனெனில் இவன் கலி லேயன் என்று சாதித்தான்.

60. அதற்கு இராயப்பர்: மனிதனே, நீ சொல்லுகிறதை அறியேன் என்ருர். அவர் இன்னம் அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கையிலே சாவல் கூவிற்று.

61. அப்பொழுது கர்த்தர் திரும்பி, இராயப்பரைக் கண்ணோக்கிப் பார்த் தார். இராயப்பரும்: சாவல் கூவுமுன் மும்முறை என்னை மறுதலிப்பாயெ ன்று ஆண்டவர் சொல்லியிருந்த வாக் கியத்தை நினைத்துக்கொண்டு, (மத். 26-34; மாற். 14-30; அரு. 13-38.)

62. உடனே வெளியிற் புறப்பட்டுப் போய், மனங்கசந்து அழுதார்.

63. யேசுநாதரைப் பிடித்த மனிதர் களோவெனில் அவரை அடித்துப் பரி யாசம் பண்ணினார்கள்.

64. அவருடைய கண்களையுங்கட்டி அவரை முகத்திலும் அறைந்து: உன் னை அடித்தவன் யாரென்று தீர்க்கதரி சனமாய்ச் சொல்லென்று அவரை வினவி,

65. இவை முதலான அநேக காரிய ங்களை அவருக்கு விரோதமாய்ச்சொல் லி, தூஷணித்துக்கொண்டிருந்தார்கள்.

66. மீளவும் பொழுது விடிந்தவுடனே ஜனத்தின் மூப்பர்களும் பிரதான ஆசா ரியர்களும் வேதபாரகர்களுங் கூடி, அவரைத் தங்கள் சங்கத்தின் முன்பா கக் கொண்டுபோய்: நீ கிறீஸ்துவானல், எங்களுக்குச் சொல் என்ருர்கள். (மத். 27-1; மாற். 15-1.)

67. அதற்கு அவர்: நான் உங்களு க்குச் சொல்வேனுகில், நீங்கள் என்னை விசுவசிக்கவுமாட்டீர்கள்;

53. இருள் என்னும் வார்த்தையினலே அக்கிரமிகளும், பசாசுகளும் குறிக்கப் படுகிருர்கள்.

68. நான் உங்களை வினவுவேனாகில் எனக்குப் பதில்சொல்லவுமாட்டீர்கள்; என்னைப் போகவிடவுமாட்டீர்கள்.

69. ஆகிலும் இதுமுதல் மனுமகன் சர்வேசுரனுடைய வல்லப வலதுபாரிசத்திலே உட்கார்ந்திருப்பார் என்றார்.

70. அப்பொழுது எல்லாரும் அவரைப் பார்த்து: ஆகையால் நீ சர்வேசுரனுடைய சுதனோ என்று கேட்க, யேசுநாதர்: நீங்களே சொல்லுகிறீர்கள் என்றார்.

71. அதற்கு அவர்கள்: இன்னம் நமக்குச் சாட்சிவேண்டுவதென்ன? அவன் வாயாலே நாம் கேட்டோமே என்றார்கள்.

## 23-ம். அதிகாரம்.

கிறீஸ்துநாதருடைய பாடுகளின் தொடர்ச்சி.

1. அப்பொழுது அவர்களுடைய கூட்டமெல்லாம் எழுந்திருக்க, அவர்கள் அவரைப் பிலாத்துவினிடத்தில் கூட்டிக்கொண்டுபோய்:

2. இவன் எங்களுடைய ஜனத்தை அடியோடு கலக்குகிறதையும், செசாருக்கு வரி செலுத்தவேண்டாமென்று விலக்குகிறதையும், தன்னைக் கிறீஸ்துவாகிய இராஜா என்று சொல்லுகிறதையுங் கண்டோம் என்று அவர்மேல் குற்றஞ்சாட்டத் தொடங்கினார்கள்.

3. பிலாத்து அவரைப் பார்த்து: நீ யூதருடைய இராஜாவோ என்று கேட்டான். அவரோ மறுமொழியாக: நீரே சொல்லுகிறீர் என்றார். (அரு. 18-33.)

4. அப்பொழுது பிலாத்து பிரதான ஆசாரியர்களையும், ஜனங்களையும் நோக்கி: நான் இந்த மனுஷனிடத்திலே ஒரு குற்றத்தையுங் காணேன் என்று சொல்ல,

5. அவர்கள் அதிக உக்கிரமத்தோடு: இவன் கலிலேயாநாடு தொடங்கி இவ்விடம் மட்டும், யூதேயாதேசமெங்கும் போதித்துக்கொண்டு, ஜனத்தைக் கலகப்படுத்துகிறான் என்றார்கள்.

6. ஆனால் கலிலேயா என்பதைப் பிலாத்து கேட்டவுடனே, இந்த மனிதன் கலிலேயனோ என்று வினவி,

7. அவர் எரோதின் அதிகாரத்துக்கு உட்பட்டவரென்று அறிந்து, அந்நாட்களிலே எருசலேமில் வந்திருந்த எரோதினிடத்திற்கு அவரை அனுப்பினான்.

8. எரோது யேசுநாதரைக் கண்டு மிகவுஞ் சந்தோஷப்பட்டான். ஏனெனில் அவரைக் குறித்து அநேக காரியங்களைக் கேள்விப்பட்டிருந்ததினாலும், அவர் ஏதேனும் புதுமை செய்வதைக் காணலாமென்று நம்பியிருந்ததினாலும், அவரைப் பார்க்கும்படி நெடுநாளாய் ஆசித்திருந்தான்.

9. ஆதலால் அவன் அநேகவிஷயங்களைக் குறித்து அவரிடத்தில் கேட்டான். ஆயினும் அவர் அவனுக்கு ஒரு பதிலுஞ்சொல்லவில்லை.

10. பிரதான ஆசாரியரும், வேதபாரகரும் ஓயாமல் அவர்மேல் குற்றஞ் சாட்டிக்கொண்டே நின்றார்கள்.

11. அப்பொழுது எரோது தன் இராணுவத்தோடுகூட அவரை நிந்தித்து, அவருக்கு ஒரு வெள்ளை வஸ்திரத்தை உடுத்திப் பரியாசம் பண்ணி, அவரைத் திரும்பப் பிலாத்துவினிடத்தில் அனுப்பினான்.

2. செசாருக்கு வரி:—லூக். 20-ம் அதி. 25-ம் வசன வியாக்கியானம் காண்க.

12. முன் ஒருவருக்கொருவர் பகைவர்களாயிருந்த எரோதும், பிலாத்தும் அன்றைக்கே சிநேகிதரானார்கள்.

13. அப்பொழுது பிலாத்து பிரதான ஆசாரியர்களையும், அதிகாரிகளையும், ஜனங்களையும் கூட்டமாயழைத்து,

14. அவர்களை நோக்கி: ஜனங்களைக் கலகப்படுத்துகிறவனாக இந்த மனிதனை என் வசத்தில் ஒப்புவித்தீர்கள். ஆயினும் இதோ, நான் உங்கள் முன்பாக விசாரணை செய்தும், நீங்கள் இவன் மேலே சாட்டுகிற குற்றங்களில் ஒன்றையும் இவனிடத்தில் காணவில்லை. (அரு. 18-38 ; 19-4.)

15. எரோது முதலாய் ஒன்றும் காணவில்லை ; அவரிடத்தில் உங்களை நான் அனுப்பினேன். ஆயினும் இதோ, மரணத்துக்குரியதொன்றும் இவனுக்குச் செய்யப்படவில்லை.

16. ஆதலால் இவனைத் தண்டித்து விடுதலையாக்குவேன் என்றான்.

17. எனெனில் பண்டிகைதோறும் அவர்களுக்கு ஒருவனை விடுதலையாக்குவது அவனுக்கு அவசியமாயிருந்தது.

18. அப்படியிருக்க: இவனை நீக்கி, பரபாஸை எங்களுக்கு விடுதலையாக்கும் என்று ஜனக்கூட்டமெல்லாம் ஒருப்படக் கூவினது.

19. அந்தப் பரபாஸென்பவன் பட்டணத்திலே நடந்த ஓர் கலாபத்தையும் கொலைபாதகத்தையும் பற்றிச் சிறையில் போடப்பட்டிருந்தான்.

20. ஆயினும் பிலாத்து யேசுநாதரை விடுதலையாக்க மனதாயிருந்து, மறுபடியும் அவர்களிடத்தில் பேசினான்.

21. ஆனால் அவர்கள்: இவனைச் சிலுவையில் அறையும், சிலுவையில் அறையும் என்று திரும்பத் திரும்பக் கூக்குரலிட்டார்கள்.

22. அவன் மூன்றாமுறையும் அவர்களைப்பார்த்து: இவன் என்ன பொல்லாப்புச் செய்தான்? மரணத்துக்கு ஏதுவான ஒரு குற்றமும் இவனிடத்தில் காணேனே. ஆகையால் இவனைத் தண்டித்து விடுதலையாக்குவேன் என்றான். (மத். 27-23 ; மாற். 15-14.)

23. என்றாலும், அவர்கள் பேரிரைச்சலிட்டு, அவரைச் சிலுவையில் அறைய வேண்டுமென்று சலஞ்சாதித்துக் கேட்டுக்கொண்டு நின்றார்கள். அவர்களுடைய கூக்குரல்களும் மென்மேலும் உக்கிரமமானது.

24. ஆகையால் அவர்களுடைய விண்ணப்பம் நிறைவேறவேண்டுமென்று பிலாத்துத் தீர்மானித்து,

25. கலாபத்தையும் கொலைபாதகத்தையும்பற்றிச் சிறைச்சாலையில் போடப்பட்டிருந்தவனை அவர்கள் கேட்டுக்கொண்டபடியே விடுதலையாக்கி, யேசுநாதரை அவர்களுடைய இஷ்டத்துக்குக் கையளித்தான்.

26. அவர்கள் அவரைக் கூட்டிக்கொண்டுபோகும்போது, கிராமத்திலிருந்து வருகிற சிரேனையூரானாகிய சீமோன் என்னப்பட்ட ஒருவனைப்பிடித்து, யேசுநாதருக்குப்பின்னால் சிலுவையைச் சுமக்கும்படி அதை அவன் மேல் வைத்தார்கள். (மத். 27-32 ; மாற். 15-21.)

27. அப்பொழுது ஜனங்களும் அவரைப்பற்றிப் புலம்பி அழுகிற ஸ்திரீகளும் பெருங்கும்பலாய் அவரைப் பின் சென்றுபோனார்கள்.

28. யேசுநாதரோவெனில் அவர்கள் முகமாய்த் திரும்பி, திருவுளம்பற்றினதாவது: எருசலேம் குமாரத்திகளே, என்னைப்பற்றி அழாமல், உங்களையும் உங்கள் மக்களையும்பற்றி அழுங்கள்.

29. அதேனென்றால் மலடிகள் பாக்கியவதிகளென்றும், பிள்ளை பெறாத உதரங்களும் பாலூட்டாத கொங்கைகளும் பாக்கியம் பெற்றவைகளென்றுஞ் சொல்லப்படும் நாட்கள் இதோ வரும்.

30. அப்பொழுது மலைகளை நோக்கி: எங்கள்மேல் விழுங்களென்றும், குன்றுகளைநோக்கி: எங்களை மூடிக்கொள்ளுங்களென்றும் சொல்லத் துவக்குவார்கள். (இசை. 2-19; ஒசே. 10-8; காட்சி. 6-16.)

31. ஏனெனில் பச்சை மரத்துக்கு இவைகளைச் செய்தால், பட்ட மரத்துக்கு என்ன ஆகும் என்றார்.

32. அன்றியும் குற்றவாளிகளாகிய வேறே இரண்டுபேரும் அவரோடுகூடக் கொலைப்படும்படி கூட்டிக்கொண்டு போகப்பட்டார்கள்.

33. அவர்கள் கபால ஸ்தலமென்னும் இடத்திலே சேர்ந்தபின், அங்கே அவரையும், அவருடைய வலது பக்கத்தில் ஒருவனும் இடது பக்கத்தில் ஒருவனுமாக இரண்டு கள்ளர்களையுஞ் சிலுவையில் அறைந்தார்கள். (மத். 27-33; மாற். 15-22; அரு. 19-17.)

34. அப்பொழுது யேசுநாதர்: பிதாவே! இவர்களுக்கு மன்னித்தருளும், ஏனெனில் தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியாதிருக்கிறார்கள் என்றார். அவர்களோ அவருடைய வஸ்திரங்களைப் பங்கிட்டு, அவைகளின் மேல் சீட்டுப்போட்டார்கள். (மத். 5-44.)

35. அப்போது ஜனங்கள் நின்று பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்களோடுகூட அதிகாரிகளும் அவரைப் பரியாசஞ் செய்து: இவன் மற்றவர்களை இரட்சித்தானே, இவன் சர்வேசுரனால் தெரிந்துகொள்ளப்பட்ட கிறீஸ்துவானால், தன்னைத்தானே இரட்சித்துக்கொள்ளட்டும் என்றார்கள்.

36. போர்ச் சேவகரும், அவரிடத்தில் நெருங்கி, அவருக்குக் காடியைக் கொடுத்து,

37. நீ யூதருடைய இராஜாவானால் உன்னை இரட்சித்துக்கொள் என்று சொல்லி, அவரைப் பரியாசம்பண்ணினார்கள்.

38. இவன் யூதருடைய இராஜா என்று கிரேக், லத்தீன், எபிரேய எழுத்துகளில் எழுதப்பட்ட பட்டயமும் அவருக்கு மேலாக வைக்கப்பட்டிருந்தது.

39. அல்லாமலுஞ் சிலுவையில் தொங்கின கள்ளர்களில் ஒருவன் அவரைத் தூஷணித்து: நீ கிறீஸ்துவானால் உன்னையும் எங்களையும் இரட்சித்துக்கொள் என்றான்.

40. மற்றவனோ மறுமொழியாக அவனைக் கண்டித்து: நீயும் இந்த ஆக்கினைத்தீர்ப்புக்குள்ளாயிருந்தும், சர்வேசுரனுக்குப் பயப்படுகிறதில்லையோ?

41. நமக்கு இது நியாயந்தான். நம்முடைய செய்கைகளுக்குத் தக்க சம்பாவனையைப் பெறுகிறோம். இவரோ ஒரு பொல்லாப்புஞ் செய்தவரல்ல என்று சொல்லி,

42. யேசுநாதரை நோக்கி: சுவாமீ, தேவரீர் உம்முடைய இராச்சியத்தில் சேரும்போது அடியேனை நினைத்தருளும் என்று விண்ணப்பம் பண்ணினான்.

43. யேசுநாதர் அவனை நோக்கி: இன்றே நீ என்னோடு கூடப் பரகதியிலிருப்பாயென்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

44. அப்பொழுது ஏறக்குறைய ஆறாம் மணி நேரமாயிருந்தது. ஒன்பதாம் மணிவரையில் பூமண்டலமெங்கும் அந்தகாரம் உண்டாயிற்று.




*"பிதாவே! இவர்களுக்கு மன்னித்தருளும்; ஏனெனில் தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியாதிருக்கிறார்கள்."*

(லூக். 23-34)

*"சுவாமீ! தேவரீர் உம்முடைய இராச்சியத்தில் சேரும்போது அடியேனை நினைத்தருளும்."*

(லூக். 23-42.)

45. அப்பொழுது சூரியனும் இருண்டுபோயிற்று, தேவாலயத்தின் திரைச்சீலையும் நடுவில் இரண்டாகக் கிழிந்தது.

46. யேசுநாதரோ உரத்த சத்தமாய்க்கூப்பிட்டு: பிதாவே, என் ஆத்துமத்தை உம்முடைய கரங்களிலே ஒப்புக்கொடுக்கிறேன் என்றார். இவைகளைச்சொல்லி உயிர்விட்டார். (சங். 30-6.)

47. அப்பொழுது சம்பவித்ததைச் செந்தூரியன் கண்டு: மெய்யாகவே, இந்த மனுஷன் நீதிமானாயிருந்தானென்று சர்வேசுரனை ஸ்துதித்தான்.

48. இந்தக் கண்ணராவியைப் பார்க்கும்படி வந்திருந்த ஜனங்களெல்லாரும் நடந்தவைகளைக் கண்டு, தங்கள் மார்பில் அறைந்துகொண்டு, திரும்பிப் போனார்கள்.

49. அவருக்கு அறிமுகமாயிருந்த சகலரும், கலிலேயாவிலிருந்து அவரைப் பின்சென்றுவந்த ஸ்திரீகளும் தூரத்தில் நின்று, இவைகளைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

50. அப்பொழுது இதோ, யோசேப்பு என்னும் ஒருவரிருந்தார். இவர் சங்கத்தைச் சேர்ந்தவரும் நல்லவரும் நீதிமானுமாயிருந்தார். (மத். 27-57; மாற். 15-43; அரு. 19-38.)

51. இவர் யூதர்களுடைய ஆலோசனைக்கும் செய்கைகளுக்கும் உடன்பட்டவரல்ல; யூதேயாவின் ஒரு பட்டணமாகிய அரிமத்தியாவிலிருந்து வந்தவரும், சர்வேசுரனுடைய இராச்சியத்துக்கு எதிர்பார்த்திருந்தவருமாகிய இவர்,

52. பிலாத்துவினிடத்தில் போய், யேசுநாதருடைய சரீரத்தைக் கேட்டு,

53. அதை இறக்கிப் பரிவட்டத்தினால் சுற்றிப் பாறையில் வெட்டப்பட்டதும் அதுவரையில் ஒருவனும் ஜேமிக்கப்படாதுமான ஒரு கல்லறையில் அவரை ஜேமித்தார்.

54. அந்த நாள் ஆயத்த நாளாயிருந்தது; ஓய்வுநாளும் ஆரம்பிக்கிற வேளையாயிருந்தது.

55. கலிலேயாவிலிருந்து அவருடனே கூட வந்திருந்த ஸ்திரீகளும் பின்தொடர்ந்து, கல்லறையையும் அதிலே சரீரம் வைக்கப்பட்ட விதத்தையும் பார்த்துக்கொண்டிருந்து,

56. திரும்பிப்போய், கந்தவர்க்கங்களையும் பரிமள தைலங்களையும் முஸ்திப்புச் செய்து, ஓய்வுநாளில் கற்பனையின்படியே ஓய்ந்திருந்தார்கள்.

## 24-ம். அதிகாரம்.

கிறீஸ்துநாதர் உயிர்த்து, அநேகருக்குத் தரிசனையானதும், பரலோகத்துக்கு ஆரோகணமானதும்.

1. வாரத்தின் முதல் நாள் அதிகாலையிலே அவர்கள் தாங்கள் ஆயத்தம் பண்ணின பரிமள வர்க்கங்களை எடுத்துக்கொண்டு கல்லறைக்கு வந்து, (மத். 28-1: மாற். 16-2; அரு 20-11.)

2. கல்லறையினின்று கல் புரட்டப்பட்டிருக்கிறதைக் கண்டார்கள்.

3. ஆனால் உள்ளே பிரவேசித்தபோது ஆண்டவராகிய யேசுநாதருடைய சரீரத்தை அவர்கள் காணவில்லை.

4. பின்னும் சம்பவித்ததேதெனில், அவர்கள் இதைப்பற்றி மனக்கலக்கமாயிருக்கையில், இதோ பிரகாசமுள்ள உடையணிந்த இரண்டுபேர் அவர்களருகே நின்றார்கள்.

5. அவர்கள் பயப்பட்டுத் தலையை நோக்கி முகங்கவிழ்ந்து நிற்கையில், அவ்விருவரும் அவர்களைப் பார்த்து: நீங்கள் உயிரோடிருக்கிறவரை மரித்தோரிடத்தில் தேடுவானேன்?

6. அவர் இங்கேயில்லை, உயிர்த்தெழுந்தார். அவர் இன்னம் கலிலேயாவிலிருந்தகாலத்தில் உங்களுக்கு எவ்விதஞ் சொல்லியிருந்தாரென்று நினைவுகூருங்கள்.

7. மனுமகன் பாவிகளான மனிதர் கையில் ஒப்புக் கொடுக்கப்படவும் சிலுவையிலே அறையப்படவும் மூன்றாம் நாள் உயிர்க்கவும் வேண்டியதென்று உரைத்தாரல்லோ, என்றார்கள்.

8. அப்பொழுது அவர்கள் அவருடைய வார்த்தைகளை நினைவுகூர்ந்து,

9. கல்லறையைவிட்டுத் திரும்பிப் போய், இவைகளையெல்லாம் பதினொருவருக்கும் மற்ற அனைவருக்கும் அறிவித்தார்கள்.

10. அப்போஸ்தலர்களுக்கு இவைகளைச் சொன்னவர்கள் மரியமதலேனம்மாளும் யோவன்னாளும் யாகப்பருடைய தாயாராகிய மரியம்மாளும் அவர்களோடிருந்த மற்ற ஸ்திரீகளுமாமே.

11. ஆனால் இந்த வார்த்தைகள் அவர்களுக்குப் பித்தப் பிதற்றென்று தோன்றினபடியால், அவர்கள் இவைகளை விசுவசிக்கவில்லை.

12. ஆகிலும் இராயப்பர் எழுந்து, கல்லறைக்கு ஓடிப்போய்க் குனிந்துபார்த்தபொழுது, பரிவட்டங்கள் மாத்திரம் கிடக்கிறதைக்கண்டு, சம்பவித்தவைகளின்பேரில் தன் உள்ளத்திலே ஆச்சரியப்பட்டுக்கொண்டு, அவ்விடம் விட்டுப்போனார்.

13. அல்லாமலும் அன்றையத்தினமே இதோ, சீஷர்களில் இருவர் எருசலேமுக்கு அறுபது ஸ்தாது தூரத்திலுள்ள எம்மாவுஸ் என்னும் ஊருக்குப் போனார்கள்

14. போகையில், சம்பவித்த இவை எல்லாவற்றையுங்குறித்து அவர்கள் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டு நடந்தார்கள்.

15. இப்படி அவர்கள் தங்களுக்குள்ளே சம்பாஷித்துக்கொண்டு போகையில்,சம்பவித்ததேதென்றால், யேசுநாதர்தாமே அவர்களிடம் நெருங்கி, அவர்களோடுகூட நடந்து போனார்.

16. ஆகிலும் அவரை அறிந்துகொள்ளாத பேரையாய் அவர்களுடைய கண்கள் மறைபட்டிருந்தன.

17. அப்பொழுது அவர் அவர்களை நோக்கி: நீங்கள் துக்கமாயிருக்கிறீர்களே. நீங்கள் என்ன சங்கதிகளைக் குறித்து உங்களுக்குள்ளே பேசிக்கொண்டு வழிநடந்து போகிறீர்கள் என்றார்.

18. அவர்களில் ஒருவராகிய கிலேயோப்பாஸ் என்கிறவர் அவருக்கு மாறுத்தரமாக: நீர் மாத்திரம் எருசலேமில் அந்நியராயிருந்து, இந்நாட்களில் அதில் சம்பவித்தவைகளை அறியீரோ என்றார்.

19. அப்பொழுது அவர் அவர்களை நோக்கி: எவைகள் என்றார். அதற்கு அவர்கள்: நசரேனுவாகிய யேசுநாதரைப்பற்றித்தான். அவர் சர்வேசுரனுக்கும் சகல ஜனங்களுக்கும் முன்பாகக் கிரியையிலும் வாக்கிலும் வல்லமையுள்ள தீர்க்கதரிசியாயிருந்தார்.

20. நம்முடைய குருக்களும் அதிகாரிகளும் அவரை எப்படி மரணத் தீர்வைக்கு ஒப்புக்கொடுத்துச் சிலுவையில் அறைந்தார்கள் என்பதைக் குறித்துப் (பேசிக்கொண்டு போகிறோம்).

13. **அறுபது ஸ்தாது:**—ஏறக்குறைய 8 மயில் தூரம். ஒரு ஸ்தாது சுமார் அரைக் கால் மயிலாகும்.

21. நாங்களோவென்றால் இஸ்ராயேலை மீட்டிரட்சிப்பவர் அவர்தானென்று நம்பியிருந்தோம். ஆனால் இவையெல்லாம் இப்படியிருக்க, இப்போது இவைகள் நடந்து இன்று மூன்றாம் நாளாகிறது.

22. ஆகிலும் எங்கள் கூட்டத்தாராகிய சில ஸ்திரீகளும் எங்களைப் பயப்படுத்திவிட்டார்கள். இவர்கள் உதயத்துக்குமுன் கல்லறைக்குப்போய்,

23. அவருடைய சரீரத்தைக் காணாமல் திரும்பி வந்து, அவர் உயிரோடிருக்கிறாரென்று சொல்லிய தேவதூதரை முதலாய்த் தாங்கள் தரிசித்ததாகச் சொன்னார்கள்.

24. எங்களைச் சேர்ந்தவர்களில் சிலரும் புறப்பட்டுக் கல்லறைக்குப்போய், ஸ்திரீகள் சொன்னபடியே கண்டார்கள். ஆயினும் அவரைக் காணவில்லை என்றார்கள்.

25. யேசுநாதர் அவர்களை நோக்கி: ஓ மதியீனரே, தீர்க்கதரிசிகள் வசனித்த யாவையும் விசுவசிப்பதற்கு மந்த இருதயமுள்ளவர்களே,

26. கிறீஸ்துநாதர் இந்தப் பாடுகளைப் படவும், இவ்விதமாய்த் தமது மகிமையில் பிரவேசிக்கவும் வேண்டியதில்லையோ என்று சொல்லி,

27. மோயீசன் முதல் சகல தீர்க்கதரிசிகளாலும் தம்மைப்பற்றிச் சொல்லப்பட்ட சகல வேதவாக்கியங்களையும் அவர்களுக்கு விவரித்துக்காண்பித்தார்.

28. அப்பொழுது அவர்கள் தாங்கள் போகிற ஊருக்குச் சமீபமானார்கள். அவரோ இன்னம் அதிக தூரம் போகிறவர்போல் காண்பித்தார்.

29. ஆனால் அவர்கள்: அந்திநேரமாகிப் பொழுதுஞ் சாய்ந்துபோயிற்றே, எங்களோடு வந்து தங்கியிரும் என்று அவரை வருந்திக் கேட்டுக்கொண்டார்கள். ஆதலால் அவர்களோடுகூட ஊரில் பிரவேசித்தார்.

30. பின்னும் சம்பவித்ததேதெனில், அவர்களோடுகூட அவர் பந்தியிலிருக்கையில் அவர் அப்பத்தை எடுத்து, ஆசீர்வதித்து, அதைப்பிட்டு அவர்களுக்குக் கொடுத்தார்.

31. உடனே அவர்களுடைய கண்கள் திறக்கப்பட, அவர்கள் அவரை அறிந்துகொண்டார்கள். ஆனால் அவர் அவர்கள் கண்களுக்கு மறைந்துபோனார்.

32. அப்பொழுது அவர்கள் ஒருவரொருவரை நோக்கி: வழியிலே அவர் நம்மோடு பேசி, வேத வாக்கியங்களை நமக்குத் தெளிவிக்கும்போது, நம்முடைய இருதயம் நமக்குள் பற்றியெரிந்துகொண்டிருந்ததல்லவோ என்றார்கள்.

33. மீளவும் அந்நேரமே அவர்கள் எழுந்து, எருசலேமுக்குத் திரும்பி வந்து, பதினொருவரும், அவர்களோடிருந்தவர்களும் ஒன்றாய்க் கூடியிருக்கிறதையும்:

34. சுவாமி மெய்யாகவே உயிர்த்து, சீமோனுக்குத் தரிசனையானார் என்று அவர்கள் சொலுகிறதையும் கண்டார்கள்.

30. இந்தச் சமயத்தில் யேசுநாதர் சுவாமி தேவநற்கருணையை உண்டாக்கி அவர்களுக்குக் கொடுத்தாரென்று வேதபாரகர் நிச்சயிக்கிறார்கள்.

35. அப்பொழுது அவர்களும் வழியில் சம்பவித்தவைகளையும், அவர் அப்பத்தைப் பிட்கையில், தாங்கள் அவரை அறிந்துகொண்ட விதத்தையும் வெளிப்படுத்தினார்கள்.

36. இவைகளைக் குறித்து அவர்கள் பேசிக்கொண்டிருக்கையில், யேசுநாதர் அவர்கள் நடுவிலே நின்று, அவர்களை நோக்கி: உங்களுக்குச் சமாதானம் உண்டாகக்கடவது! நான்தான் பயப்படாதேயுங்கள் என்றார். (மாற். 16-14; அரு. 20-19.)

37. ஆனால் அவர்கள் கலங்கிப் பயந்து, தாங்கள் ஓர் பூதத்தைக் காண்கிறதாக எண்ணிக்கொண்டிருந்தார்கள்.

38. ஆதலால் அவர் அவர்களை நோக்கி: நீங்கள் கலங்குவானேன்? உங்கள் இருதயங்களில் விசாரங்கள் எழும்புவதென்ன?

39. நான்தான் என்று அறியும்படி, என் கரங்களையும் பாதங்களையும் பாருங்கள். என்னைத் தொட்டுப்பாருங்கள். ஏனெனில் மாமிசமும் எலும்புகளும் எனக்கு இருக்கிறதாக நீங்கள் காண்கிறதுபோல ஓர் பூதத்துக்குக் கிடையாது என்றார்.

40. அவர் இவ்விதம் சொன்னபின்பு, தம்முடைய கரங்களையும் பாதங்களையும் அவர்களுக்குக் காண்பித்தார்.

41. அவர்கள் இன்னம் விசுவசியாமல் சந்தோஷத்தினால் பிரமித்துக்கொண்டிருக்கையில்: ஏதாகிலுஞ் சாப்பிடத்தக்கது இங்கே உங்களிடத்தில் உண்டோ என்றார்.

42. அவர்களோ சுட்ட மச்சத்துண்டையும், தேனிறாட்டையும் அவருக்குக் கொடுக்க,

43. அவர்களுக்கு முன்பாக அவர் சாப்பிட்டு, மீதியானவைகளை எடுத்து அவர்களுக்குக் கொடுத்தார்.

44. மேலும் அவர் அவர்களை நோக்கி: மோயீசனுடைய வேதப்பிரமாணத்திலும் தீர்க்கதரிசிகளுடைய ஆகமங்களிலும் சங்கீதங்களிலும் என்னைக் குறித்து எழுதப்பட்டிருக்கிற யாவும் நிறைவேறவேண்டுமென்று நான் உங்களோடிருக்கையில் உங்களுக்குச் சொன்ன வாக்கியங்கள் இவைகளே என்றார்.

45. அப்பொழுது வேதவாக்கியங்களை உணர்ந்துகொள்ளும்படியாக அவர்களுடைய புத்தியைத் தெளிவித்து,

46. அவர்களைநோக்கி (வேதத்திலே) இவ்விதமாய் எழுதப்பட்டிருக்கிறபடியினாலே, கிறீஸ்துநாதர் இவ்விதமாய்ப் பாடுபடவும், மூன்றாம் நாள் மரித்தோரிலிருந்து மறுபடியும் உயிர்க்கவும், (சங். 18-6.)

47. எருசலேம் முதற்கொண்டு, சகல ஜனங்களுக்குந் தவமும் பாவப்பொறுத்தலும் அவருடையநாமத்தினாலே பிரசங்கிக்கப்படவும் வேண்டியதாயிருந்தது.

48. நீங்களோ இவைகளுக்குச் சாட்சிகளாயிருக்கிறீர்கள். (அப். 1, 8, 2, 32; 1 அரு. 1-1.)

49. அன்றியும் என் பிதாவானவர் வாக்குத்தத்தம் பண்ணினதை நான் உங்களுக்கு அனுப்புகிறேன். நீங்கள் உன்னதத்திலிருந்து வரும் வல்லபத்தைப் பூண்டுகொள்ளும் வரையில் பட்டணத்திலே தங்கியிருங்கள் என்று திருவுளம்பற்றினார். (அரு. 24-26; அப். 1-4; 2-1.)

50. பின்பு அவர்களை வெளியே பெத்தானியாவுக்குக் கூட்டிக்கொண்டு போய், தம்முடைய கரங்களை உயர்த்தி அவர்களை ஆசீர்வதித்தார்.

51. அப்பொழுது சம்பவித்ததேதெனில் அவர்களை அவர் ஆசீர்வதிக்கும்போது, அவர்களிடத்திலிருந்து பிரிந்து, பரலோகத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டார்.

52. அவர்களோ, அவரை ஆராதித்து மிகுந்த சந்தோஷத்துடனே எருசலேமுக்கு திரும்பிவந்து,

53. எப்பொழுதும் தேவாலயத்தில் சர்வேசுரனைத் துதித்துப் புகழ்ந்து கொண்டிருந்தார்கள். ஆமென்.



# பாயிரம்.

சுவிசேஷகராகிய அர்ச். அருளப்பர் பன்னிரண்டு அப்போஸ்தலர்களில் ஒருவரும், செபதேயுவின் குமாரனும், அர்ச். பெரிய யாகப்பருக்குத் தம்பியும், யேசுநாதரால் விசேஷவிதமாய்ச் சிநேகிக்கப்பட்டவருமாய் இருந்தார். யேசுநாதர் சிலுவையில் அறையுண்டிருக்கும்போது, பன்னிரண்டு அப்போஸ்தலர்களுக்குள் அவர் மாத்திரஞ் சிலுவையடியில் தேவமாதாவோடேகூட நின்றார். அப்போது யேசுநாதர் தம்முடைய திருத்தாயாரை அவர் வசமாய் ஒப்புக்கொடுத்தார். அவர் நமக்குறைய கர்த்தர் அவதாரத்தின் 96-ம். வருஷத்தில் எபேசுநகரத்தில் தமது சுவிசேஷத்தைக் கிரேக்பாஷையில் எழுதினார். மற்ற மூன்று சுவிசேஷகர்களுக்குப் பிறகு அவர் இதை எழுதினபடியால், மற்றவர்கள் எழுதிவைத்த அநேக காரியங்களை இவர் விட்டுவிட்டு, அவர்கள் எழுதாத சில பிரதான காரியங்களை எழுதினார். அவர்நாளிலே சில பதிதர் யேசுநாதருக்குத் தேவசுபாவம் இல்லையென்று சொல்லத் துணிந்தபடியால், யேசுநாதருடைய தேவசுபாவத்தைத் துலங்கப்பண்ணுவது அவருடைய பிரதான கருத்தாயிருந்ததென்று தோன்றுகிறது. அவர் சுவிசேஷத்தை எழுதுகிறதற்கு ஒரு வருஷத்திற்கு முந்திப் பத்மோஸ் என்னும் தீவிலே காட்சி ஆகமத்தை எழுதினார். அப்போஸ்தலர்கள் எல்லோருக்கும் கடைசியாய் நூறு பிராயமுள்ளவராய் எபேசு நகரத்தில் பாக்கியமான மரணத்தையடைந்தார்.



# அர்ச். அருளப்பர் எழுதிய

# யேசுக்கிறீஸ்துநாதருடைய

# பரிசுத்த சுவிசேஷம்.

## முதல் அதிகாரம்.

யேசுக்கிறீஸ்துநாதருடைய தேவத்துவமும், மனுஷத்துவமும், அர்ச். ஸ்நாபக அருளப்பர் அவரைக்குறித்துச் சொல்லிய சாட்சியமும், கிறீஸ்துநாதருடைய முதல் சீஷர்களும்.

1. ஆதியிலே வார்த்தையிருந்தார். அந்த வார்த்தை சர்வேசுரனிடத்திலிருந்தார். அந்த வார்த்தை சர்வேசுரனாகவும் இருந்தார்.

2. அவர் ஆதியிலே சர்வேசுரனிடத்தில் இருந்தார்.

3. அவர் மூலமாய்ச் சகலமும் உண்டாக்கப்பட்டதொழிய உண்டாக்கப்பட்டவைகளில் எதுவும் அவராலேயன்றி உண்டாக்கப்படவில்லை.

4. அவருக்குள் சீவனிருந்தது. அந்தச் சீவன் மனிதருக்கு ஒளியாயிருந்தது.

5. அந்த ஒளி இருளில் பிரகாசிக்கின்றது. ஆயினும் இருளானது அதை ஒப்புக்கொள்ளவில்லை.

6. சர்வேசுரனாலே அனுப்பப்பட்ட ஒருமனிதன் இருந்தார். அவருக்கு அருளப்பர் என்று பேர்.

7. அவர் தமது வழியாய்ச் சகலரும் விசுவசிக்கும்பொருட்டு, ஒளியைக் குறித்துச் சாட்சியஞ் சொல்லுவதற்குச் சாட்சியாகவந்தார்.

8. அவர் அந்த ஒளியல்ல. ஆனால் அந்த ஒளியைக்குறித்துச் சாட்சியஞ் சொல்ல வந்தவராமே.

1. அர்ச். திரித்துவத்தின் இரண்டாம் ஆளாகிய சுதனாகிய சர்வேசுரன் பிதாவின் வார்த்தை என்னப்படுகிறார். வார்த்தையானது மனதினின்று உற்பத்தியாகிறதுபோல, சுதனும் தேவ பிதாவினின்று உற்பத்தியாகிறார். (மெனேக்கியுஸ்)

3. பிதாவாகிய சர்வேசுரன் சகலத்தையும் தமது வார்த்தையினாலே சிருஷ்டித்தார். ஆனால் பிதாவின் வார்த்தையும் சுதனும் ஒன்றென்பதனால், சகலமும் சுதனால் சிருஷ்டிக்கப்பட்டதென்று சொல்லப்படுகிறது.

9. (வார்த்தையாகிய அவர்) இவ்வுலகத்திலே வருகிற எந்த மனுஷனையும் பிரகாசிப்பிக்கிற மெய்யான ஒளியாயிருந்தார்.

10. அவர் உலகத்திலிருந்தார். உலகம் அவர்மூலமாய் உண்டாக்கப்பட்டது. ஆகிலும் உலகம் அவரை அறிந்துகொள்ளவில்லை. (எபி. 11-3.)

11. அவர் தமது ஆதீனத்தில் வந்தார். அவருடையவர்களோ அவரை ஏற்றுக்கொள்ளவில்லை.

12. யாரார் அவரை ஏற்றுக்கொண்டு, அவருடைய நாமத்தின்மேல் விசுவாசமுள்ளவர்களானார்களோ, அவர்கள் தேவபுத்திரராகும்படி அவர்களுக்கு வல்லமையைக் கொடுத்தார். (உரோ. 8-14.)

13. அவர்கள் இரத்தத்தினாலுமல்ல, மாம்ச இச்சையினாலுமல்ல, புருஷனுடைய சித்தத்தினாலுமல்ல, ஆனால் சர்வேசுரனாலே பிறந்தவர்கள்.

14. வார்த்தையானவர் மாம்சமாகி, இஷ்டப்பிரசாதமும் சத்தியமும் நிறைந்தவராய் நமக்குள்ளே வாசமாயிருந்தார். அவருடைய மகிமையைக் கண்டோம்; அது பிதாவின் ஏக சுதனுக்குரிய மகிமைக்கு நிகராயிருந்தது. (மத். 1-16.)

15. அருளப்பர் அவரைக்குறித்துச் சாட்சியஞ்சொல்லி: எனக்குப்பின் வருகிறவர் எனக்குமுன் இருந்தவர், ஆகையால் என்னிலும் மேன்மையுள்ளவரென்று நான் சொல்லியிருந்தேனே, அவர் இவர்தானென்று கூவிச் சொல்லுகிறார்.

16. நாம் எல்லோரும் அவருடைய சம்பூரணத்திலிருந்து அருளுக்குமேல் அருளைப் பெற்றுக் கொண்டோம். (கொலோ. 2-9.)

17. எப்படியெனில் மோயீசனால் வேதப்பிரமாணங் கொடுக்கப்பட்டது. அருளும் சத்தியமும் யேசுக்கிறீஸ்துநாதரால் உண்டாயிற்று.

18. சர்வேசுரனை ஒருவனும் ஒருபோதுங் கண்டதில்லை. பிதாவின் மடியிலிருக்கிற ஏக சுதனே அவரை வெளிப்படுத்தினார். (1 தீமோ. 6-16; 1 அரு. 4-12.)

---

9. சூரியன் உலகத்திலுள்ள சகல வஸ்துக்களுக்கும் ஒளியைத் தருகிறதுபோல, தேவ பிதாவின் வார்த்தையாகிய சுதனும் சகல மனிதருக்குந் தமது பிதாவின் ஞானமாகிய ஒளியை வீசி, நித்திய மோக்ஷ வழியைக் காட்டித் தமது வரப்பிரசாதத்தால் சகலரும் அவ்வழி நடக்கும்படி ஏவுகிறார்.

12-13. தந்தை தாய் முகச்சாயல் பிள்ளைகளுடைய முகத்தில் தோன்றுவதுபோல, மனுஷனுடைய மனது தேவ சித்தத்துக்கு ஒத்ததாயிருக்கும்போது, தேவ சாயல் அந்த மனுஷனுடைய மனதில் தோன்றும். இப்படித் தோன்றுவதினால் மனுஷன் சர்வேசுரனுடைய பிள்ளையாயிருக்கிறானென்று ஒரு விதத்தில் சொல்லலாம். ஆனால் மனுஷன் யேசுநாதரைத் தேவசுதனென்று அங்கீகரித்து அவரை விசுவசித்துச் சிநேகிக்கும்போது, தேவ இஷ்டப்பிரசாதத்தால் சுவாபத்துக்கு மேலான ஞான சீவியத்தை அடைந்து சர்வேசுரனுடைய சுவிகாரப் புத்திரனாகிறான்.

14. இவ்வாக்கியத்தைக்கொண்டு தேவ பிதாவின் வார்த்தையாகிய சுதனிடத்தில் தேவ சுபாவமும், மனுஷசுபாவமுமாகிய இரண்டு சுபாவமுண்டென்று ஒப்பிக்கப்படுகிறது. மாம்சமென்பது வேத வாக்கியங்களில் வழக்கமாய் ஆத்துமமுஞ் சரீரமுமுள்ள மனுஷ சுபாவத்தைக் குறிக்கிறது. ஆகையால் சுதனாகிய சர்வேசுரன் மாம்சமானபொழுதும், அவர் ஒரே ஆளாய் மெய்யான சர்வேசுரனும் மெய்யான மனுஷனுமாய் இருக்கிறாரென்றறிக.



"இதோ, சர்வேசுரனுடைய செம்மறிப்புருவையானவர்; இதோ, உலகத்தின் பாவத்தைப் போக்குகிறவர்."

(அருள. 1-29.)

19. யூதர்கள் எருசலேமிலிருந்து ஆசாரியரையும் லேவித்தரையும் அருளப்பரிடத்தில் அனுப்பி: நீர் யாரென்று கேட்டபோது, அவர் சொன்ன சாட்சியமாவது:

20. நான் கிறீஸ்துவானவர் அல்ல என்று அறிக்கையிட்டு, அதை மறுதலிக்காமல் வெளிப்படுத்தினார்.

21. அவர்கள் மறுபடியும் அவரை வினவி: பின்னை நீர் யார்? நீர் எலியாசோ என்று கேட்க, அவர்: நான் அல்ல என்றார். நீர் தீர்க்கதரிசியோ என, அதற்கும் அவர்: நான் அல்ல என்று மறுமொழிசொன்னார்.

22. ஆகையால் அவர்கள்: எங்களை அனுப்பினவர்களுக்கு நாங்கள் மாறுத்தாரஞ் சொல்லும்படி நீர் யார்? உம்மைக்குறித்து என்ன சொல்லுகிறீர் என்றார்கள்.

23. அதற்கு அவர்: கர்த்தருடைய வழியைச் செவ்வையாக்குங்களென்று இசையாஸ் தீர்க்கதரிசி வசனித்தபடியே வனாந்தரத்தில் கூப்பிடுகிறவனுடைய குரலொலி நானே என்றார். (இசை. 40-3; மத். 3-3; மாற். 1-3; லூக். 3-4)

24. அனுப்பப் பட்டவர்களோ பரிசேயராயிருந்தார்கள்.

25. மீளவும் அவர்கள் அவரை நோக்கி: நீர் கிறீஸ்துவுமல்ல, எலியாசுமல்ல, தீர்க்கதரிசியுமல்லவென்றால், பின்னை ஏன் ஞானஸ்நானங் கொடுக்கிறீர் என்று கேட்டார்கள்.

26. அருளப்பர் அவர்களுக்கு மாறுத்தாரமாக: நான் ஜலத்தினால் ஞானஸ்நானங்கொடுக்கிறேன். ஆனால் நீங்கள் அறியாத ஒருவர் உங்கள் மத்தியில் நிற்கிறார். (மத். 3-11.)

27. எனக்குப்பின் வரவேண்டியவரும், என்னிலும் மேன்மையாக்கப் பட்டவரும் அவரே; அவருடைய பாதரட்சையின் வாரை அவிழ்ப்பதற்கு நான் பாத்திரவானல்ல என்றார். (மாற். 1-7; லூக். 3-16: அப். 1-15, 11-16.)

28. இவைகள் யோர்தான் நதிக்கு அக்கரையில் அருளப்பர் ஞானஸ்நானங் கொடுத்துவந்த பெத்தானியாவில் சம்பவித்தன.

29. மறுநாளிலே அருளப்பர் தம்மிடத்தில் யேசுநாதர் வருகிறதைக்கண்டு, உரைத்ததாவது: இதோ, சர்வேசுரனுடைய செம்மறிப்புருவையானவர்; இதோ, உலகத்தின் பாவத்தைப்போக்குகிறவர்.

19. யாக்கோப்பின் மக்களில் ஒருவராகிய லேவி என்பவருடைய வம்சத்தில் பிறந்தவர்கள் தேவாலயப் பணிவிடைக்குக் குறிக்கப்பட்டிருந்தார்கள். அவர்களுக்கு லேவித்தரென்று பேருண்டாயிருந்தது இந்த லேவித்தர்களில் மோயீசனுடைய சகோதரனாகிய ஆரோன் வம்சத்தார் மாத்திரம் பூரண குருப்பட்டத்துக்கு உரியவர்களாயிருந்தார்கள். ஆகையால் இவ்வாக்கியத்தில் ஆசாரியரென்கும்போது ஆரோன் வம்சத்தாரையும், லேவித்தரென்கும்போது லேவி கோத்திரத்தில் பிறந்த மற்றவர்களையும் பிரித்துக் காட்டியிருக்கிறது. (கால்மேத்து)

28. இவ்வசனத்தில் பெத்தானியாவென்று லத்தீன் பாஷைப் புஸ்தகங்களில் கண்டிருந்தாலும், பூர்வீக கிரேக்குக் கையெழுத்துப் பிரதிகளில் பெத்பாரா என்றிருக்கக் காண்கிறோம்.

29. பாஸ்காப் பண்டிகையில் ஒரு செம்மறிப் புருவையைப் பலியிடவேண்டுமென்று யூதர்களுக்குக் கற்பிக்கப்பட்டிருந்தது. அந்தச் செம்மறிப் புருவை யேசுநாதருக்கு ஓர் அடையாளமாயிருந்ததொழிய அந்தப் பலியினாலே, யூதர்களுக்குப் பாவம் நீங்கி இரட்சணியமுண்டானதில்லை. யேசுநாதரோ சகல மனுஷருடைய பாவங்களையும் போக்கும்படி சாதுவான ஆட்டுக்குட்டியைப்போல தம்மைத்தாமே பலியாக ஒப்புக்கொடுத்ததினாலே, அர்ச். அருளப்பர் அவரைப் பார்த்து: இதோ! உலகத்தின் பாவங்களைப் போக்குகிற சர்வேசுரனுடைய செம்மறிப் புருவையென்று சகலரும் அறியும்படி கூறினார்.

30. எனக்குப்பின் ஒருவர் வருகிறு ரொன்றும், அவர் எனக்குமுன்னிருந்த படியால், என்னிலும் மேன்மையானவ ரொன்றும் நான் சொன்னேனே, அவர் இவர்தான்.

31. நானும் இவரை அறியாதிருந் தேன்; ஆனால் இவர் இஸ்ராயேலருக்கு வெளிப்படும்பொருட்டு நான் ஜலத் தினால் ஞானஸ்நானங்கொடுக்க வந்தே ன் என்றார்.

32. மீளவும் அருளப்பர் சாட்சியஞ் சொல்லி வசனித்ததாவது: இஸ்பிரீ த்து சாந்துவானவர் புறாவைப்போல் பரலோகத்திலிருந்து இறங்குவதை யும், இவர்மேல் நிற்பதையுங் கண் டேன். (மத். 3-16; மாற். 1-10: லூக். 3-22.)

33. நானும் இவரை அறியாதிருந் தேன். ஆனால் ஜலத்தினால் ஞானஸ் நானங் கொடுக்கும்படி என்னை அனுப் பினவர்: நீ எவர்மேல் இஸ்பிரீத்து சாந்து இறங்கி வரவும், தங்கி நிற்கவும் காண்பாயோ, அவரே இஸ்பிரீத்து சாந்துவினால் ஞானஸ்நானங் கொடுக் கிறவரொன்று எனக்குத் திருவுளம்பற் றினார்.

34. அப்படியே நானும் கண்டு: தேவ சுதன் இவர்தானென்று சாட்சியஞ் சொன்னேன் என்றார்.

35. மறுநாளிலே அருளப்பரும், அவருடைய சீஷர்களில் இரண்டுபே ரும் திரும்ப அவ்விடத்தில் நிற்கும் போது,

36. யேசுநாதர் நடந்துபோகிறதை அவர் கண்டு: இதோ, சர்வேசுரனு டைய செம்மறிப் புருவையானவர் என்றார்.

37. அவர் சொன்னதை அவ்விரு சீஷருங் கேட்டு, யேசுநாதரைப் பின் சென்றார்கள்.

38. யேசுநாதர் திரும்பி, அவர்கள் தம்மைப் பின்செல்லுகிறதைக் கண்டு: என்ன தேடுகிறீர்களென்று அவர்களு க்குச்சொல்ல, அவர்கள்: ரபீ, நீர் எங் கே தங்குகிறீரொன்று அவரைக்கேட் டார்கள். (ரபீ என்பதற்குக் குருவே என்றர்த்தமாம்.)

39. அவர்: நீங்கள் வந்து பாருங்க ளென்று அவர்களுக்குத் திருவுளம்பற் றினார். அப்படியே அவர்களும் வந்து, அவர் தங்கியிருந்த இடத்தைக்கண்டு, அன்றையத்தினம் அவரோடு தங்கினா ர்கள். அப்பொழுது ஏறக்குறைய பத்துமணி வேளையாயிருந்தது.

40. அருளப்பர் சொன்னதைக் கே ட்டு, யேசுநாதரைப் பின்சென்ற அவ் விருவரில் சீமோன் இராயப்பருடைய சகோதரனாகிய பிலவேந்திரர் ஒருவரா யிருந்தார்.

41. அவர் தன்னுடைய சகோதரனா கிய சீமோனை முந்த முந்தக் கண்டு: மெசியாவைக் கண்டுகொண்டோமெ ன்று அவருக்குச் சொன்னார். (மெசி யாஸ் என்பதற்குக் கிறீஸ்து என்றர்த் தமாம்.)

33. யேசுநாதர் பிறந்து உலகத்தில் சஞ்சரிக்கிறாரென்று ஸ்நாபக அருளப்பர் தேவ ஞான திருஷ்டியால் அறிந்திருந்தாலும், யேசுநாதர் சுவாமி தம்மிடத்தில் ஞானஸ்நானம் பெற வந்தபோதுதான் அவரை முதல்விசைத் தம்முடைய கண்களால் கண்டு அறிந்து கொண்டார்.

39.* அக்காலத்தில் சூரியனுதிக்கிற நேரத்தை முதல் மணியென்று கணித்து வந்தத னாலே, இங்கே குறித்திருக்கிற பத்தாம்மணி என்பது இக்காலத்தின் கணக்கின்படி சாயங் காலம் நாலுமணியாகும்.

42. பின்னும் அவரை யேசுநாதரிடத்தில் கூட்டிக்கொண்டு வந்தார். யேசுநாதர் அவரை நோக்கி: நீ யோனுவின் மகனுகிய சீமோனல்லோ. இனி நீ கெபாஸ் என்று அழைக்கப்படுவாய் என்றூர். (கெபாஸ் என்பதற்கு இராயப்பன் என்றர்த்தமாம்.)

43. மறுநாளிலே யேசுநாதர் கலிலேயாவுக்குப் புறப்பட்டுப்போக மனதாயிருக்கையில், பிலிப்பு என்பவரைக் கண்டு: என்னைப் பின்செல்லென்று அவருக்குச்சொன்னூர்.

44. இந்தப் பிலிப்பு, பிலவேந்திரர், இராயப்பர் என்பவர்களுடைய ஊராகிய பெத்சாய்தா நகரத்தாருயிருந்தார்.

45. பிலிப்பு நத்தனயேலைக் கண்டு: வேதப்பிராமணத்திலே மோயிசனும், தீர்க்கதரிசிகளும் குறித்தெழுதினவரைக் கண்டுகொண்டோம். அவர் நசரேத்தூர் சூசையப்பருடைய குமாரனுகிய யேசுநாதர்தாம் என்றூர். (ஆதி. 49-10; உபா. 18-15; இசை. 40-10; 45-8; ஜெரே. 23-5; எசே. 34-23; தானி. 9-24.)

46. அதற்கு நத்தனயேல்: நசரேத்தூரிலிருந்து யாதொரு நன்மை வரக்கூடுமோ என்று அவருக்குச் சொல்ல, பிலிப்பு: நீயே வந்துபார் என்றூர்.

47. யேசுநாதர் தம்மிடத்தில் நத்தனயேல் வருகிறதைக்கண்டு, அவனைக் குறித்து: இதோ கபடற்ற உண்மையான இஸ்ராயேலன் என்றூர்.

48. நத்தனயேல் அவரைநோக்கி: எவ்வாறு என்னை அறிந்தீர் என்க, யேசுநாதர் மறுமொழியாக: பிலிப்பு உன்னை அழைக்குமுன்னே நீ அத்திமரத்தின் கீழிருக்கும்போது உன்னைக் கண்டேன் என்றூர்.

49. நத்தனயேல் அவருக்குப் பிரத்தியுத்தாரமாக: ரபீ, நீர் சர்வேசுரனுடைய குமாரன், இஸ்ராயேலின் இராஜா என்றுன்.

50. யேசுநாதர் அவனுக்கு மறுமொழியாக: நான் அத்தி மரத்தின்கீழே உன்னைக் கண்டேனென்று உனக்குச் சொன்னதினுல் விசுவசிக்கிறுயே; இவைகளிலும் பெரிதானவைகளைக் காண்பாய் என்றூர்.

51. மீண்டும் அவர் அவனைநோக்கி: பரமண்டலந் திறக்கப்படுவதையும், சர்வேசுரனுடைய சம்மனசுகள் ஏறுவதையும், மனுமகன் மேல் இறங்குவதையும் காண்பீர்களென்று மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று திருவுளம்பற்றினுர்.

## 2-ம். அதிகாரம்.

யேசுநாதர் தண்ணீரைத் திராட்ச ரசமாக மாற்றினதும், தேவாலயத்திலிருந்து வியாபாரிகளைத் துரத்தினதும், அநேகர் அவரை விசுவசித்ததுமாகிய வர்த்தமானங்கள்.

1. மீளவும் மூன்றும நாளிலே கலிலேயா நாட்டிலுள்ள கானுவூரிலே ஓர் கலியாணம் நடந்தது. யேசுநாதருடைய தாயாரும் அங்கேயிருந்தாள்.

2. யேசுநாதரும், அவருடைய சீஷர்களும் அந்தக் கலியாணத்துக்கு அழைக்கப்பட்டிருந்தார்கள்.

42. கெபாஸ் என்பது இராய் அல்லது கல், பாறையென்றர்த்தமாகும்.

49. இங்கே சொல்லப்படுகிற நத்தனயேல்தான் அப்போஸ்தலரான அர்ச். பர்த்தலோமை என்று வேதசாஸ்திரிகள் சொல்லுகிறுர்கள்.

3. அப்பொழுது திராட்ச ரசம் அவர்களுக்குக் குறைவாய்ப் போனதினாலே, யேசுநாதருடைய தாயார் அவரை நோக்கி: அவர்களுக்கு ரசமில்லை என்றாள்.

4. அதற்கு யேசுநாதர்: ஸ்திரீயே எனக்கும் உமக்கும் என்ன? என்னுடையகாலம் இன்னும் வரவில்லையே என்று அவளுக்குத் திருவுளம்பற்றினார்.

5. ஆயினும் அவருடைய தாயார் பணிவிடைக்காரரை நோக்கி: அவர் உங்களுக்கு என்ன சொல்லுகிறாரோ, அதின்படி செய்யுங்கள் என்றாள்.

6. அப்படியிருக்க, யூதர் சுத்திகரஞ் செய்கிற முறைமையின்படியே, ஒவ்வொன்று இரண்டு மூன்று குடந் தண்ணீர் பிடிக்கத்தக்க ஆறு கற்சாடிகள் அங்கே வைக்கப்பட்டிருந்தன.

7. யேசுநாதர் அவர்களை நோக்கி: சாடிகளைத் தண்ணீரால் நிரப்புங்களென்றுசொல்ல, அவர்கள் அவைகளை வாய்மட்டாக நிரப்பினார்கள்.

8. பின்பு யேசுநாதர் அவர்களைப் பார்த்து: இப்பொழுது நீங்கள் மொண்டு, பந்தித்தலைவனிடத்தில் கொண்டுபோய்க் கொடுங்கள் என்க, அவர்களும்கொண்டுபோய்க்கொடுத்தார்கள்.

9. அது எங்கேயிருந்து வந்ததென்று தண்ணீர் மொண்ட பணிவிடைக்காரர் அறிந்திருந்தார்களேயன்றி, பந்தித்தலைவன் அறியாதிருந்தபடியால், அவன் திராட்சரசமாய் மாறின தண்ணீரைச் சுவைபார்த்தமாத்திரத்தில், மணவாளனை அழைத்து:

10. எந்த மனிதனும் முந்த நல்ல ரசத்தைப் பரிமாறுவான். ஜனங்கள் திருப்தியாகப் பானஞ்செய்ததின்மேல், கீழ்த்தரமானதைக் கொடுப்பான். நீரோ நல்ல ரசத்தை இதுவரைக்கும் வைத்திருந்தீரே என்றான்.

11. இவ்வண்ணமே யேசுநாதர் கலிலேயா நாட்டிலுள்ள கானாவூரிலே, தம்முடைய அற்புதங்களுக்கு ஆரம்பமாக, இதைச்செய்து, தமது மகிமையை வெளிப்படுத்தினார். அவருடைய சீஷர்கள் அவர்மேல் விசுவாசம் வைத்தார்கள்.

12. அதற்குப் பிற்பாடு, அவரும், அவருடைய தாயாரும், சகோதரரும், சீஷர்களும், கப்பர்நவூமூருக்குப் போய், அங்கே சிலநாள்மாத்திரந் தங்கியிருந்தார்கள்.

13. பின்பு யூதர்களுடைய பாஸ்காப் பண்டிகை அடுத்திருக்கையில் யேசுநாதர் எருசலேம் நகருக்கு ஏறிப்போய்,

4. "எனக்கும் உமக்கும் என்ன" என்னும் இந்த வாக்கியத்தை "என்னோடு உனக்குக் காரியமென்ன" என்பதாகச் சிலர் அர்த்தம்பண்ணி, இவ்விதமாய் யேசுநாதர் தம்முடைய தாயாரை இகழ்ந்ததாகச் சொல்லிக்காட்டுகிறார்கள். ஆனால் இந்த வாக்கியத்தை மூல பாஷையாகிய எபிரேய பாஷையில் பார்க்குமிடத்தில் கலியாணக்காரர் விஷயத்தில் கலந்துகொள்வது "நம்மிருவருக்குங் காரியமில்லையே" என்கிற அர்த்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறதாக நிச்சயமாயிருக்கிறது.

அன்றியும் தாயை நோக்கி: ஸ்திரீயே என்பது கிரேக்கருக்குள்ளும் கீழ்த்திசைகளிலும் மரியாதையான வார்த்தையேயொழியத் தாழ்மையான வார்த்தையல்ல. மேலும் யேசுநாதர் தம்மைப்பெற்ற பரிசுத்த தாயின் விண்ணப்பத்துக்கு இரங்கித் தமதுகாலம் வருமுன்னே தண்ணீரை இரசமாக மாற்றின புதுமையைச் செய்தபடியால், அவர் அந்த ஆண்டவளைச் சங்கித்துக் கனம்பண்ணினாரொன்று சொல்லவேணுமொழிய அவளுக்குக் கனக்குறை செய்தாரொன்று எவரும் நினைப்பதற்கு இடமில்லை.

14. அங்கே தேவாலயத்தில் ஆடு, மாடு, புறா விற்கிறவர்களையும், காசுக் காரர் உட்கார்ந்திருக்கிறதையுங்கண்டு,

15. சிறு கயறுகளால் ஒருசாட்டை போல் பின்னி, அவர்களெல்லாரையும் ஆடு மாடுகளையும் தேவாலயத்துக்கு வெளியே துரத்தி, காசுக்காரருடைய காசுகளையுங் கொட்டிப் பலகைகளையுங் கவிழ்த்தார்.

16. புறா விற்கிறவர்களை நோக்கி: இவைகளை இவ்விடத்திலிருந்து வெளியே கொண்டு போங்கள். என் பிதாவின் வீட்டை வியாபார வீடாக்காதேயுங்கள் என்றார்.

17. உமது வீட்டின்மேல் எனக்குள்ள ஆவல் என்னைப் பட்சித்ததென்று எழுதியிருக்கிறதை அப்பொழுது அவருடைய சீஷர்கள் நினைத்துக்கொண்டார்கள். (சங். 69-9.)

18. யூதர்களோ அவரைப்பார்த்து: நீர் இவைகளைச் செய்கிறீரே, இதற்கு என்ன அடையாளத்தை எங்களுக்குக் காண்பிக்கிறீர் என்றார்கள்.

19. யேசுநாதர் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக: இத்தேவாலயத்தை இடித்துப் போடுங்கள். நான் இதை மூன்று தினத்துக்குள் திரும்பவும் எழுப்புவேன் என்றார்.

20. அதற்கு யூதர்கள்: நாற்பத்தாறு வருஷமாய் இத்தேவாலயங் கட்டப்பட்டதே, நீர் இதை மூன்று நாளைக்குள்ளே எழுப்புவீரோ, என்றார்கள்.

21. அவரோவெனில், தம்முடைய சரீரமாகிய ஆலயத்தைக் குறித்துச் சொல்லியிருந்தார்.

22. அவர் இப்படிச் சொல்லியிருந்தாரென்று அவர் மரித்தோரினின்று உயிர்த்தபின்பு, அவருடைய சீஷர்கள் நினைவு கூர்ந்து, வேதாகமத்தையும் யேசுநாதர் சொன்னவாக்கியத்தையும் விசுவசித்தார்கள். (சங். 3-6; 56-8.)

23. பாஸ்காப் பண்டிகை நாளிலே அவர் எருசலேமிலிருக்கையில், அவர் செய்த புதுமைகளை அநேகர் கண்டு, அவருடைய நாமத்தின்மேல் விசுவாசமானார்கள்.

24. ஆகிலும், யேசுநாதர் எல்லாரையும் அறிந்திருந்தபடியால், தம்மை அவர்களுக்கு நம்பி ஒப்பியாதிருந்தார்.

25. ஏனெனில், மனிதனுக்குள்ளிருப்பது ஏதென்று அவர் அறிந்திருந்தபடியால், மனிதனைக்குறித்து எவனும் அவருக்குச் சாட்சிகொடுப்பது அவசியமில்லாதிருந்தது.

## 3-ம். அதிகாரம்.

*யேசுநாதர் இரவிலே தம்மிடத்தில் வந்த நீக்கோதேமு என்பவனுக்குச் சொன்ன உபதேசமும், ஸ்நாபக அருளப்பர் அவரைக் குறித்துச் சொல்லிய சாட்சியமும்.*

1. யூதர்களுக்குள்ளே பிரபுவான நிக்கோதேமு என்னப்பட்ட பரிசேயன் ஒருவனிருந்தான்.

2. அவன் இரவிலே யேசுநாதரிடத்தில் வந்து: குருவே, நீர் சர்வேசுரனிடத்திலிருந்து போதகராய் வந்திருக்கிறீரென்று அறிவோம். ஏனெனில் ஒருவனும் தன்னோடு சர்வேசுரன் இருந்தாலொழிய, நீர் செய்கிற இந்த அற்புதங்களைச் செய்யமாட்டான் என்றான்.

3. யேசுநாதர் அவனுக்கு மறுமொழியாக: ஒருவன் மறுபடியும் பிறவாதிருந்தால், சர்வேசுரனுடைய இராச்சியத்தைக் காணமாட்டானென்று மெய்யாகவே, மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

14. இங்கே குறிக்கப்பட்டிருக்கிற நாலு விதமான வியாபாரங்களும் தேவாலயத்திலே பலி, காணிக்கை, நேர்ச்சிகளைச் செலுத்தவரும் விசுவாசிகளுக்கு உதவியாக நடந்தனவாம்.

4. நிக்கோதேமு அவரை நோக்கி: மனுஷன் முதிர் வயதாயிருக்கையில், எப்படிப் பிறக்கக்கூடும்? அவன் தன் தாய் வயிற்றில் திரும்பவும் பிரவேசித்து, மறுபடி பிறக்கக்கூடுமோ என்றான்.

5. யேசுநாதர் பிரத்தியுத்தாரமாக: ஒருவன் ஜலத்தினாலும், இஸ்பிரீத்து சாந்துவினாலும் மறுபிறப்பு அடையாதிருந்தால், சர்வேசுரனுடைய இராச்சியத்தில் பிரவேசிக்கமாட்டானென்று மெய்யாகவே, மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன்.

6. மாம்சத்தினால் பிறந்தது மாம்சமாம்; இஸ்பிரீத்துவினால் பிறந்தது இஸ்பிரீத்துவாமே.

7. நீங்கள் மறுபடியும் பிறக்கவேண்டுமென்று நான் உனக்குச் சொன்னதைப்பற்றி ஆச்சரியப்படவேண்டாம்.

8. காற்றானது தனக்கு இஷ்டமான பக்கத்தில் வீசுகின்றது. அதின் சத்தத்தைக் கேட்கிறாய்; ஆயினும் அது எங்கேயிருந்து வருகிறதென்றும், எங்கே போகிறதென்றும் அறியாய். இஸ்பிரீத்துவினால் பிறந்த எவனும் அத்தன்மையே இருக்கிறான் என்று திருவுளம்பற்றினார். (சங். 134-7.)

9. அதற்கு நீக்கோதேமு: இவைகள் எப்படி ஆகக்கூடும் என்று கேட்க,

10. யேசுநாதர் அவனுக்கு மறுமொழியாக: நீ இஸ்ராயேலில் போதகனாயிருந்தும், இவைகளை அறியாயோ?

11. நாங்கள் அறிந்திருக்கிறதைப் பேசி, கண்டதற்குச் சாட்சியஞ் சொல்லுகிறோமென்று மெய்யாகவே, மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன். ஆயினும் எங்கள் சாட்சியத்தை நீங்கள் ஏற்றுக்கொள்வதில்லை.

12. பூலோகத்துக்கடுத்த காரியங்களை நான் உங்களுக்குச் சொல்லியும், நீங்கள் விசுவசிக்கவில்லையே; பரலோகத்துக்கடுத்த காரியங்களைச் சொல்வேனாகில், எப்படி விசுவசிப்பீர்கள்?

13. பரலோகத்தினின்று இறங்கினவரும், பரலோகத்திலிருக்கிறவருமான மனுமகனைத் தவிர, பரலோகத்துக்கு ஏறினவர் ஒருவருமில்லை.

14. மோயீசன் கானகத்திலே சர்ப்பத்தை உயர்த்தினதுபோல, மனுமகனும்

15. தம்மை விசுவசிக்கிற எவனும் சேதமாகாமல், நித்திய சீவனை அடையும்படி உயர்த்தப்படவேண்டும். (எண். 21-9.)

4-5. மனுஷரெல்லோரும் ஜன்மதோஷத்தோடு உற்பவிக்கிறதினாலே பிறக்கிறபோது சரீர உயிரடைந்திருந்தாலும், ஆத்தும உயிராகிற இஷ்டப்பிரசாதமில்லாமல் பிறக்கிறார்கள். ஆகையால் ஜன்மதோஷத்தைக் கழுவுகிற ஞானஸ்நானத்தை அவசியமாய்ப் பெற்றுத் தேவ இஷ்டப்பிரசாதமாகிற ஞான உயிரையும், ஞானப் பிறப்பையும் அடையவேண்டியது. கர்த்தர் இவ்விடத்தில் குறிக்கிற மறுபிறப்பும், ஞானப்பிறப்பும் இதுவேயன்றி, சரீரப் பிறப்புமல்ல, மறு ஜெனனமுமல்ல என்றறியவும்.

8. கண்ணுக்குக் காணப்படாத காற்றானது, அதின் அசைவினால் காணப்படுவதுபோல, ஞானஸ்நானத்தால் ஆத்துமம் அடைகிற ஞானப் பிறப்பும் கண்ணுக்குப் புலப்படாதிருந்தாலும், அது நிறைவேற்றுகிற புண்ணியக் கிரியைகளால் புலப்படலாகுமென்று இதிலே கர்த்தர் காண்பிக்கிறார்.

14-15. இவ்வாக்கியங்களின் கருத்து வெளியாகும்படி எண்ணாகமம் 21-ம் அதிகாரம், 5-ம் வசனமுதல் 9-ம் வசனம் வரையில் காண்க. விஷ சர்ப்பந் தீண்டினவர்கள் வெண்கலச் சர்ப்பத்தைப் பார்த்தவுடனே சுகமடைந்ததுபோல, நரக சர்ப்பத்தின் விஷமாகிய பாவ விஷந் தீண்டினவர்கள் பாடுபட்ட சுரூபத்தைப் பார்த்து, பாவத்தின் விஷம் இன்னதென்று காட்டுகிற கர்த்தருடைய பாடுகளைத் தியானித்தால், அவர்கள் இரட்சணியம் அடைவார்கள். ஆதலால் பாடுபட்ட சுரூபத்தைச் செய்து தங்களிடத்தில் பூச்சியமாய் வைத்துக்கொள்வது நன்மையான காரியம். அது ஆகாதென்று போதிப்பது சுவிசேஷ வாக்கியத்துக்கு விரோதமாயிருக்கின்றது.

16. சர்வேசுரன் உலகத்தை எவ்வளவாக நேசித்தாரென்றால் தம்முடைய ஏக சுதனைத் தந்து, அவர்மேல் விசுவாசமாயிருக்கிற எவனும் கெட்டுப் போகாமல் நித்திய சீவனை அடையும்படி அருளியிருக்கிறார். (1. அரு. 4-9.)

17. உலகத்துக்கு ஆக்கினைத் தீர்வையிடும்படிச் சர்வேசுரன் தம்முடைய குமாரனை உலகத்தில் அனுப்பாமல், உலகம் அவராலே இரட்சிக்கப்படுவதற்காகவே அவனை அனுப்பினார்.

18. அவனை விசுவசிக்கிறவன் தீர்வையிடப்படான்; அவனை விசுவசியாதவனோ கடவுளின் ஏக குமாரனுடைய நாமத்தின்மேல் விசுவாசமாயிராததினால் ஏற்கனவே தீர்வையிடப்பட்டிருக்கிறான்.

19. ஒளியானது உலகத்திலே வந்திருந்தும், மனுஷர் தங்கள் கிரியைகள் கெட்டவைகளாயிருந்தபடியினாலே ஒளியைவிட்டு, இருளையே தாவிளையென்று விரும்பினார்கள்; இதுவே அவர்களுடைய தீர்வைக்குக் காரணம். (அரு. 1-5.)

20. ஏனெனில் தின்மையைச் செய்கிற எவனும் ஒளியைப் பகைக்கிறான். தன் கிரியைகள் கண்டிக்கப்படாதபடிக்கு ஒளியினிடத்திலும் வராதிருக்கிறான்.

21. உண்மையைச் செய்கிறவனோ, தன் கிரியைகள் சர்வேசுரனிடத்தில் செய்யப்பட்டபடியால், அவைகள் வெளிப்படும்பொருட்டு ஒளியினிடத்தில் வருகிறான் என்றார்.

22. இவைகளுக்குப் பின்பு, யேசுநாதரும் அவருடைய சீஷரும் யூதேயா தேசத்துக்கு வந்தார்கள். அங்கே அவர் அவர்களோடுகூட வாசம்பண்ணி, ஞானஸ்நானங்கொடுத்துவந்தார். (அரு. 4-1.)

23. அப்பொழுது அருளப்பரும் சாலிம் ஊருக்கடுத்த என்னோன் என்னும் இடத்தில் ஞானஸ்நானங்கொடுத்துக்கொண்டிருந்தார். ஏனெனில் அவ்விடத்தில் ஜலமும் மிகுதியாயிருந்தது, ஜனங்களும் வந்து ஞானஸ்நானம் பெறுவார்கள்.

24. அதேனென்றால் அருளப்பர் இன்னும் காவலிலே வைக்கப்படாதிருந்தார்.

25. அப்படியிருக்க, அருளப்பருடைய சீஷர்களில் சிலருக்கும் யூதர்களுக்கும் சுத்திகரிப்பைக்குறித்து ஓர் தர்க்கமுண்டாயிற்று.

17. உலகத்தை இரட்சிக்கும்பொருட்டாகவே பிதாவாகிய சர்வேசுரன் தம்முடைய திவ்விய சுதனை இவ்வுலகத்தில் அனுப்பினார். இந்த அனுப்புதலைப்பற்றியே திவ்விய கர்த்தர் இவ்விடத்தில் பேசுகிறார். உலக முடிவிலோ, அவர் சகல மனுஷரையும் நடுத்தீர்க்க இரண்டாந்தரம் வருவார். இதின் விவரம். மத். 24-ம் அதி. 30-ம் வசன முதல் காண்க.

18. இந்த வாக்கியத்திலே யேசுநாதரை விசுவசிக்கிறவன் தீர்வையிடப்படானென்று சொல்லியிருப்பதினாலே இரட்சணியம் அடைவதற்கு யேசுநாதரை விசுவசிக்கிறதொன்றே போதுமென்று அர்த்தமல்ல; இரட்சணியம் அடையும்படி வேத கற்பனைகளைக் கைக்கொண்டு அநுசரிக்கவும் வேண்டுமென்று திவ்விய கர்த்தர் மத். 19-ம் அதி. 17-ம் வசனத்தில் தெளிவாய்ப் போதிக்கிறார்.

19. இவ்வாக்கியத்தில் ஒளியென்பது மனுமக்களுக்குச் சத்தியத்தைத் தெளிவிக்க இவ்வுலகத்தில் ஞானச் சுடராய் வந்த யேசுநாதர் தாமே.

21. உண்மையைச் செய்வதேதெனில் தேவ கட்டளைகளை அநுசரித்து, மெய்யான புண்ணியத்தைச் செய்வதாமே.

26. அவர்கள் அருளப்பரிடத்திலே வந்து : குருவே, உம்மோடுகூட யோர்தான்நதிக்கு அக்கரையில் ஒருவர் இருந்தாரே, அவரைக்குறித்து நீரும் சாட்சியஞ்சொன்னீரே; இதோ, அவர் ஞானஸ்நானங்கொடுக்கிறார். எல்லாரும் அவரிடத்திலே போகிறார்கள் என்று சொன்னார்கள்.

27. அதற்கு அருளப்பர் பிரத்தியுத்தாரமாக: பரலோகத்திலிருந்து மனுஷனுக்குக் கொடுக்கப்பட்டாலொழிய, அவன் ஒன்றையும் பெற்றுக்கொள்ளமாட்டான்.

28. நான் கிறீஸ்துநாதரல்ல, அவருக்கு முன்னாக அனுப்பப்பட்டவன் என்று நான் சொன்னதற்கு நீங்களே எனக்குச் சாட்சிகளாயிருக்கிறீர்கள். (அரு. 1-20.)

29. மணவாட்டியை உடையவனே மணவாளன்; மணவாளனுக்குச் செவிதந்து நிற்கிற அவனுடைய சிநேகிதனோ, மணவாளனுடைய குரலொலியினிமித்தம் மகிழ்ந்து சந்தோஷிக்கிறான். ஆகையால் என்னுடையதாகிய இந்தச் சந்தோஷம் பூர்த்தியாயிற்று. (2 கொ. 11-2.)

30. அவர் வளரவும், நான் குறுகவும் வேண்டும்.

31. உன்னதத்திலிருந்து வருகிறவர் யாவரிலும் மேலானவர். மண்ணிலிருந்து உண்டானவன் மண்ணாயிருந்து, மண்ணுக்கடுத்தவைகளைப்பேசுகிறான்; பரலோகத்திலிருந்து வருகிறவர் யாவரிலும் மேலானவர். (உரோ. 9-5.)

32. அவர் தாம் கண்டதையும், கேட்டதையும் சாட்சியாகச் சொல்லுகிறார். ஆயினும் அவருடைய சாட்சியத்தை ஒருவனும் ஏற்றுக்கொள்ளுகிறதில்லை.

33. அவருடைய சாட்சியத்தை ஏற்றுக்கொண்டவன் சர்வேசுரன் சத்தியமுள்ளவரென்று முத்திரையிட்டு நிச்சயப்படுத்தினான். (உரோ. 3-4.)

34. அதெப்படியெனில் சர்வேசுரனால் அனுப்பப்பட்டவர் சர்வேசுரனுடைய வாக்கியங்களைப் பேசுகிறார். ஏனெனில் சர்வேசுரன் இஸ்பிரீத்து (சாந்துவை) அளவில்லாமல் கொடுத்திருக்கிறார்.

35. பிதாவானவர் சுதனை நேசித்து எல்லாவற்றையும் அவர் கையில் ஒப்புக்கொடுத்திருக்கிறார். (மத். 11-27.)

36. சுதனை விசுவசிக்கிறவனுக்கு நித்திய சீவியமுண்டு. ஆனால் சுதன் பேரில் அவிசுவாசமாயிருக்கிறவன் சீவியத்தைக் காணாதிருப்பதுந்தவிர, தேவகோபமும் அவன்மேல் நிலைநிற்கும் என்றார். (1. அரு. 5-10.)

## 4-ம். அதிகாரம்.

*யேசுநாதர் சமாரிய ஸ்திரீயோடு சம்பாஷித்ததும், சமாரியர்களில் அநேகர் அவரை விசுவசித்ததும், ஓர் சிற்றரசனுடைய மகனைக் குணமாக்கினதுமாகிய விசேஷங்கள்.*

1. அருளப்பரைவிட யேசுநாதர் அநேகம் பேர்களைச் சீஷர்களாக்கி, ஞானஸ்நானங் கொடுக்கிறாரென்று பரிசேயர் கேள்விப்பட்டதாக யேசுநாதர் அறிந்தபோது,

---

29. இதில் சொல்லப்பட்ட மணவாளன், கிறீஸ்துநாதரென்றும், மணவாட்டி திருச்சபையென்றும், மணவாளனுடைய சிநேகிதன் ஸ்நாபக அருளப்பரென்றும் அறிக.

1-2. யேசுநாதர்சுவாமியின் ஸ்தானபதிகளாக அப்போஸ்தலர்கள் ஞானஸ்நானங் கொடுத்துவந்ததினாலே, அவர்கள் கொடுத்த ஞானஸ்நானம் யேசுநாதர்சுவாமியால் கொடுக்கப்பட்டதென்று இவ்விடத்தில் சொல்லியிருக்கிறது. இந்தப் பிரகாரமாய் அப்போது துவக்கி உலக முடியுமட்டும் அப்போஸ்தலர்களும் அவர்கள் வழியாக விடாத தொடர்போடு ஏற்பட்டுவருகிற திருச்சபைக் குருமார்களும் கொடுத்து வருகிற ஞானஸ்நானம்,

2. ஞானஸ்நானம் யேசுநாதருடைய சீஷர்கள் கொடுத்ததேயல்லாமல், அவர் கொடாதிருந்தாலும்,

3. அவர் யூதேயா தேசத்தைவிட்டு, மறுபடியும் கலிலேயா நாட்டுக்குப் போனார்.

4. அவர் சமாரியா நாட்டின் வழியாகப் போகவேண்டியதாயிருந்தது.

5. ஆகையால் யாக்கோபு என்பவர் தமது குமாரனாகிய யோசேப்புக்குக் கொடுத்த நிலத்துக்கு அருகேயிருந்த ஊராகிய சிக்காரென்னும் சமாரியா நாட்டிலுள்ள ஊருக்கு வந்தார். (ஆதி. 33-19; 48-22; யோசு. 24-32.)

6. அங்கே யாக்கோபுடைய கிணறு இருந்தது; யேசுநாதர் பிரயாணத்தால் களைத்து, அப்படியே அந்தக் கிணற்றின்மேல் உட்கார்ந்தார். அப்பொழுது ஏறக்குறைய ஆறும்மணி வேளையாயிருந்தது.

7. அந்நேரத்தில் சமாரியா நாட்டாளாகிய ஒரு ஸ்திரி தண்ணீர்மொள்ள வந்தாள்; யேசுநாதர் அவளைநோக்கி: எனக்குத் தாகத்துக்குக் கொடு என்றார்.

8. அவருடைய சீஷர்களோவெனில் உணவுகளை வாங்கும்படி ஊருக்குள்ளே போயிருந்தார்கள்.

9. சமாரிய ஸ்திரியாகிய அவள் அவரை நோக்கி: நீர் யூதனாயிருக்க, சமாரிய ஸ்திரியாகிய என்னிடத்தில் தாகத்துக்குக் கேட்கிறதெப்படி? என்றாள். ஏனெனில் யூதர் சமாரியரோடுகூடப் புழங்குவதில்லை.

10. அதற்கு யேசுநாதர்: நீ சர்வேசுரனுடைய வரத்தையும், எனக்குத் தாகத்துக்குத் தாவென்று உன்னிடத்தில் கேட்கிறவர் இன்னாரென்பதையும் அறிந்திருந்தால், நீயே அவரிடத்தில் ஒருவேளை கேட்டிருப்பாய். அவரும் உனக்குச் சீவ ஜலத்தைக் கொடுத்திருப்பார் என்றார்.

11. அதற்கு அந்த ஸ்திரி: ஆண்டவரே, மொண்டுகொள்வதற்கு உம்மிடத்தில் ஒன்றும் இல்லையே, கிணறும் ஆழமாயிருக்கிறதே; எங்கேயிருந்து சீவ ஜலம் உமக்குக் கிடைக்கும்?

12. இந்தக் கிணற்றை எங்களுக்குத் தந்த எங்கள் பிதாவாகிய யாக்கோபைப் பார்க்கிலும் நீர் பெரியவரோ? இந்தக் கிணற்றில் அவரும் அவருடைய பிள்ளைகளும் அவருடைய மந்தைகளும் தண்ணீர் குடித்தார்களே என்றாள்.

13. யேசுநாதர் அவளுக்குப் பிரதியுத்தாரமாக: இந்தத் தண்ணீரில் பானம்பண்ணுகிற எவனுக்கும் மறுபடியும் தாகமுண்டாகும். நான் கொடுக்கும் தண்ணீரில் பானம்பண்ணுகிறவனுக்கோ, என்றென்றைக்கும் தாகமுண்டாகாது.

14. ஆனால் நான் அவனுக்குக் கொடுக்கும் ஜலம் அவனிடத்தில் நித்திய சீவியத்துக்குப் பாய்கிற நீரூற்றாகும் என்றார்.

15. அப்பொழுது அந்த ஸ்திரி அவரை நோக்கி: ஆண்டவரே, எனக்குத் தாகமுண்டாகாமலும், நான் தண்ணீர் மொள்ள இங்கே வராமலுமிருக்கும்படி, அந்தத் தண்ணீரை எனக்குத் தந்தருளும் என்றாள்.

---

பச்சாத்தாப முதலிய தேவத்திரவிய அநுமானங்களை யேசுநாதரே நிறைவேற்றுகிறாரென்று சொல்லத்தகும்.

9. சமாரியர்கள் ஆதியிலே யூதர்களோடு சேர்ந்து ஒரே வேத முறைமைகளை அநுசரித்திருந்தும், பின்னால் வேத பிரிவினைக்காரர்களானார்கள். அதினிமித்தம் யூதர் அவர்களை வெறுத்து, அவர்களோடு போஜனபான முதலாய்ச் செய்யாதிருந்தார்கள்.

16. யேசுநாதர் அவளை நோக்கி: நீ போய், உன் புருஷனை இங்கே அழைத்துக்கொண்டு வா என்றார்.

17. அந்த ஸ்திரீ மறுமொழியாக: எனக்குப் புருஷனில்லை என்றாள். அதற்கு யேசுநாதர்: உனக்குப் புருஷனில்லையென்று நன்றாய்ச் சொன்னாய்.

18. ஏனெனில் உனக்கு ஐந்து புருஷர்கள் இருந்தார்கள். இப்பொழுது உனக்கு இருக்கிறவனும் உன்னுடைய புருஷன் அல்ல; இதை உள்ளபடியே சொன்னாய் என்றார்.

19. அப்பொழுது அந்த ஸ்திரீ: ஆண்டவரே, நீர் தீர்க்கதரிசியென்று காண்கிறேன்.

20. எங்கள் பிதாக்கள் இந்த மலையிலே ஆராதனை செய்துவந்தார்கள்; நீங்களோ ஆராதனை செய்யவேண்டிய இடம் எருசலேமிலிருக்கிறது என்கிறீர்கள் என்றாள். (உபா. 12-5.)

21. அதற்கு யேசுநாதர்: ஸ்திரீயே, என்னை நம்பு. இதோ காலம்வருகிறது, அப்பொழுது இந்த மலையிலாவது எருசலேமிலாவது நீங்கள் பிதாவை ஆராதிக்கமாட்டீர்கள்.

22. நீங்கள் அறியாததை ஆராதிக்கிறீர்கள், நாங்கள் அறிந்திருக்கிறதை ஆராதிக்கிறோம். ஏனெனில் இரட்சணியம் யூதரிடத்திலின்று வருகிறது. (4 இராசா. 17-41.)

23. உண்மையாக ஆராதிப்பவர்கள் ஞானத்திலும் சத்தியத்திலும் ஆராதிக்குங்காலம் வருகிறது; இப்போதே வந்திருக்கிறது. ஏனெனில் பிதாவானவரும் தம்மை இப்படி ஆராதிக்கிறவர்களைத் தேடுகிறார்.

24. சர்வேசுரன் ஞானவஸ்துவாயிருக்கிறார். ஆதலால் அவரை ஆராதிக்கிறவர்கள் ஞானத்திலும் உண்மையிலும் ஆராதிக்கவேண்டும் என்றார். (1 கொ. 3-17.)

25. அப்பொழுது அந்த ஸ்திரீ அவரை நோக்கி: கிறிஸ்துநாதர் என்னப்படுகிற மெசியாஸ் வருகிறாரென்று அறிவேன். அவர் வரும்போது எல்லாவற்றையும் எங்களுக்கு அறிவிப்பார் என்றாள்.

26. அதற்கு யேசுநாதர்: உன்னோடு பேசுகிற நானே அவர் என்று அவளுக்குத் திருவுளம்பற்றினார்.

20. சமாரியர்கள் பிரிவினைக்காரராய்ப் போனபின், வெகுகாலம்வரையில் தேவாலயங் கட்டாதிருந்ததாகத் தோன்றுகிறது. ஆனால் அலெக்சாந்தர் இராஜா யூதேயா தேசத்துக்கு வந்து, சமாரிய நாட்டைப் பிடித்தபோது, அவனுடைய உத்தரவு பெற்று, காரீசிம் என்னும் மலையின்மேல் ஒரு பிரிவினைக் கோவிலைக் கட்டி அதில் பூசை பிரார்த்தனை நடத்திவந்தார்கள். (கால்மேத்) ஆகையால் இந்த வாக்கியத்தில் சமாரிய ஸ்திரீ குறித்துப் பேசுகிற மலை காரீசிம் மலைதான்.

21-24. சலோமோன் இராஜா எருசலேமில் கட்டின தேவாலயத்தில் மாத்திரம் அந்நாள் பலிகளெல்லாம் செலுத்தப்பட வேண்டியதாயிருந்தது. பிரிவினைக்காரரான சமாரியர்கள் எருசலேமில் பலியிடப்போகாமல், அவர்கள் பட்டணத்துக்கு அருகேயிருந்த காரீசிம் என்ற மலையின்மேல் சர்வேசுரனுடைய கற்பனைக்கு விரோதமாய்ப் பலிகளைச் செலுத்திக் கொண்டிருந்தார்கள். இந்தப் பலிகளெல்லாம் தெய்வபக்தியில்லாமல் யூதர்கள் வெறுஞ் சடங்குகளாக நிறைவேற்றிவந்ததினாலே அவைகளுக்கு முடிவுகாலம் வந்ததென்றும், இது முதற்கொண்டு ஞானமாயிருக்கப்பட்ட சர்வேசுரனை ஞானமும் உண்மையும் அடங்கிய தேவ விசுவாசம் தேவ நம்பிக்கை தேவ சிநேகத்தினாலே ஆராதிக்கிற காலம் வந்திருக்கிறதென்றும் யேசுநாதர்சுவாமி படிப்பிக்கிறார்.

27. அந்நேரமே சீஷர்கள் வந்து, அவர் அந்த ஸ்திரீயோடே சம்பாஷிக்கிறதைப்பற்றி ஆச்சரியப்பட்டார்கள். ஆகிலும் நீர் என்ன தேடுகிறீரென்றாவது, ஏன் அவளோடு பேசுகிறீரென்றாவது ஒருவரும் கேட்கவில்லை.

28. அப்பொழுது அந்த ஸ்திரீ தன் குடத்தை வைத்துவிட்டு ஊருக்குள்ளே போய், அவ்விடத்து ஜனங்களை நோக்கி:

29. ஒரு மனிதனை வந்துபாருங்கள், நான் செய்ததெல்லாவற்றையும் அவர் எனக்குச் சொன்னார்; ஒருவேளை அவர்தான் கிறீஸ்துநாதரோ என்றாள்.

30. அப்பொழுது அவர்கள் ஊரிலிருந்து புறப்பட்டு, அவரிடத்தில் வந்தார்கள்.

31. அதற்குள்ளாகச் சீஷர்கள்: குருவே, சாப்பிடும் என்று அவரை மன்றாட,

32. யேசுநாதர் அவர்களை நோக்கி: நான் சாப்பிடுவதற்கு நீங்கள் அறியாத ஒரு போஜனம் எனக்கு உண்டு என்றார்.

33. ஆகையால் சீஷர்கள் ஒருவர் ஒருவரை நோக்கி: யாராகிலும் அவருக்குச் சாப்பிடக் கொண்டுவந்தாரோ என்றார்கள்.

34. யேசுநாதர் அவர்களை நோக்கி: என்னை அனுப்பினவருடைய சித்தத்தின்படி செய்து, அவருடைய வேலையைச் சரிவர முடிப்பதே எனக்குப் போஜனமாயிருக்கிறது.

35. அறுப்புக்காலம் வர இன்னும் நாலுமாதம் உண்டென்று சொல்லுகிறீர்களல்லவா? இதோ, நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்: உங்கள் கண்களை ஏறெடுத்து நாடெல்லாம் அறுப்புக்கு வெளுத்திருக்கிறதைப் பாருங்கள். (மத். 9-37; லூக். 10-2.)

36. ஆகையால் அறுக்கிறவன் தன் கூலியைப்பெற்று நித்திய சீவியத்துக்குப் பலனைச் சேர்க்கிறான். இதினால் விதைக்கிறவனும் அறுக்கிறவனும் ஒருமிக்கச் சந்தோஷப்படும்படியாகிறது.

37. எப்படியெனில்: விதைக்கிறவன் ஒருவன், அறுக்கிறவன் ஒருவன் என்னும் பழமொழி இதிலே மெய்யாகின்றது.

38. நீங்கள் பிரயாசப்படாததை அறுக்க நான் உங்களை அனுப்பினேன்; மற்றவர்கள் பிரயாசப்பட்டார்கள்; நீங்களோ, அவர்கள் பிரயாசப்பட்டதில் பிரவேசித்தீர்கள் என்றார்.

39. இப்படியிருக்க: நான் செய்த எல்லாவற்றையும் எனக்குச் சொன்னாரென்று சாட்சிசொன்ன அந்த ஸ்திரீயினுடைய வார்த்தையினிமித்தம், அந்தப் பட்டணத்திலுள்ள சமாரியரில் அநேகர் அவர்மேல் விசுவாசமுள்ளவர்களானார்கள்.

40. ஆதலால் சமாரியர் அவரிடத்திலே வந்து: தங்களிடத்தில் தங்கவேண்டுமென்று அவரை மன்றாடினார்கள். அவரும் அவ்விடத்தில் இரண்டுநாள் தங்கினார்.

38. உலகமுண்டான நாள் துவக்கி, அப்போஸ்தலர் காலம் வரையில் பிதாப்பிதாக்களும், தீர்க்கதரிசிகளும், வேதபாரகரும் தங்கள் போதகத்திலும், வேண்டுதலினாலும், தர்ம நடக்கையினாலும், மனுக்குலத்தோரை இரட்சகருடைய வருகைக்கு ஆயத்தம்பண்ணினார்கள். ஆகையால் யேசுநாதர் தம்முடைய அப்போஸ்தலர்களை உலகமெங்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க அனுப்பும்போது, மற்றவர்கள் உழைத்துப் பிரயாசப்பட்டதை அறுக்க நான் உங்களை அனுப்புகிறேன் என்றார்.

41. அப்பொழுது அவருடைய போதகத்தினிமித்தம் முன்னிலும் அநேகம்பேர் அவரை விசுவசித்து,

42. அந்த ஸ்திரீயை நோக்கி : இப்பொழுது நாங்கள் விசுவசிக்கிறது உன்னுடைய வார்த்தையைப்பற்றியல்லவே, நாங்களே அவருடைய வாக்கைக் கேட்டு, அவர் மெய்யாகவே உலக இரட்சகரென்று அறிந்திருக்கிறோம் என்றார்கள்.

43. ஆனால் அவர் இரண்டு நாளைக்குப்பிறகு, அவ்விடம் விட்டுப் புறப்பட்டுக் கலிலேயா நாட்டுக்குப் போனார்.

44. ஒரு தீர்க்கதரிசி தன் சொந்த நாட்டிலே மகிமையடையானென்று யேசுநாதர்தாமே சாட்சிசொல்லியிருந்தார். (மத். 13-57; மாற். 6-4; லூக். 4-24.)

45. ஆகையால் அவர் கலிலேயா நாட்டுக்கு வந்தபோது, கலிலேயர் எருசலேமில் திருநாளிலே அவர் செய்த யாவற்றையும் கண்டிருந்தபடியினாலே அவரை ஏற்றுக்கொண்டார்கள். அவர்களும் திருநாளுக்குப் போயிருந்தார்கள். (மத். 4-12; மாற். 1-14; லூக். 4-14.)

46. பின்பு அவர் தண்ணீரைத் திராட்ச ரசமாக்கின கலிலேயாவிலுள்ள கானாவூருக்கு மறுபடியும் வந்தார். அப்பொழுது ஒரு சிற்றரசன் இருந்தான். அவனுடைய மகன் கப்பர்நாவும் ஊரிலே வியாதியாயிருந்தான். (அரு. 2-9.)

47. யேசுநாதர் யூதேயாவிலிருந்து கலிலேயாவுக்கு வருகிறாரென்று அந்த மனுஷன் கேள்விப்பட்டவுடனே, அவரிடத்திற்போய். அவர் வந்து தன் குமாரனைக் குணமாக்கவேண்டுமென்று மன்றாடினான். ஏனெனில் அவன் சாகக் கிடந்தான்.

48. அப்பொழுது யேசுநாதர் அவனைநோக்கி : நீங்கள் அற்புதங்களையும் ஆச்சரியங்களையும் கண்டாலொழிய, விசுவசிக்கமாட்டீர்கள் என்றுசொல்ல,

49. அந்தச் சிற்றரசன் அவரை நோக்கி : சுவாமீ, என் மகன் சாகிறதற்குமுன்னே வரவேண்டும் என்றான்.

50. யேசுநாதர் அவனை நோக்கி : நீ போகலாம், உன் மகன் பிழைத்திருக்கிறான் என்றார். அந்த மனிதன் யேசுநாதர் தனக்குச் சொன்ன வார்த்தையை நம்பிப் போனான்.

51. அவன் போகையில், அவனுடைய ஊழியர் அவனுக்கு எதிர்கொண்டுவந்து : உம்முடைய குமாரன் பிழைத்திருக்கிறான் என்று அறிவித்தார்கள்.

52. அப்பொழுது அவன் : எந்நேரத்தில் அவனுக்கு வியாதி குணமானதென்று அவர்களிடத்தில் விசாரிக்க, அவர்கள் : நேற்று ஏழுமணிக்குக் காய்ச்சல் அவனைவிட்டு நீங்கினது என்றார்கள்.

53. உன் மகன் பிழைத்திருக்கிறானென்று யேசுநாதர் தனக்குச் சொன்னநேரம் அதுதான் என்று தகப்பன் அறிந்து, அவனும் அவன் வீட்டாரனைவரும் விசுவசித்தார்கள்.

54. யேசுநாதர் யூதேயா தேசத்திலிருந்து கலிலேயா நாட்டுக்குத் திரும்பி வந்தபின், அவர் செய்தருளிய இரண்டாம் அற்புதம் இதுவே.

44. • யேசுநாதர் சமாரியா நாட்டை விட்டுக் கலிலேயா நாட்டுக்குப் போகும்போது, தமது சொந்த ஊராகிய நசரேத்தூரில் போய்த் தங்காமல், கப்பர்நாவும் ஊரில் வாசஞ்செய்யப் போனதற்குக் காரணம் இங்கே சொல்லப்படுகிறது.

## 5-ம். அதிகாரம்.

யேசுநாதர் முப்பத்தெட்டு வருஷம் வியாதியாய்க் கிடந்தவனைச் சொஸ்தமாக்கினதும், அவர் பிதாவோடு சகலத்தையும் செய்கிறாரென்பதும், சகலருக்கும் நடுத்தீர்ப்பவராக ஏற்படுத்தப்பட்டிருக்கிறாரென்பதும்.

1. இவைகளுக்குப்பின்பு, யூதருடைய பண்டிகையாயிருந்தது. அப்பொழுது யேசுநாதர் எருசலேமுக்கு ஏறிப்போனார். (எஸ்தெ. 16-22.)

2. எருசலேமில் ஐந்து மண்டபங்களுள்ள புரோபாத்திக்கா என்னும் ஒரு குளமிருக்கிறது. அதுக்கு எபிரேய பாஷையில் பெத்சயிதா என்னும் காரணப்பெயர் வழங்குகிறது.

3. இந்த மண்டபங்களில் வியாதியஸ்தரும், குருடரும், முடவரும், அவயவஞ் சூம்பினவர்களும் திரண்ட கூட்டமாய்ப் படுத்திருந்து, எப்பொழுது ஜலம் அசையுமென்று காத்துக்கொண்டிருந்தார்கள்.

4. ஏனெனில் ஆண்டவருடைய தூதன் சமயம்போல் குளத்தில் இறங்கவே, ஜலம் அசைபடும். ஜலம் அசைந்தபின் குளத்திலே முந்தி இறங்குகிறவன் எவ்வித வியாதிப்பட்டவனாயிருந்தாலும், சொஸ்தமாவான்.

5. அப்படியிருக்க, அங்கே முப்பத்தெட்டு வருஷமாய்ப் பிணிகொண்ட ஓர் மனிதன் இருந்தான்.

6. அவன் படுத்திருக்கிறதை யேசுநாதர் கண்டு, வெகுநாளாய் அப்படிக் கிடக்கிறானென்று அறிந்து அவனை நோக்கி: நீ சொஸ்தமாகவேண்டுமோ என்றார்.

7. பிணியாளி அவருக்கு மறுமொழியாக: ஆண்டவரே, ஜலம் கலக்கப்படும்போது என்னைக் குளத்திலே கொண்டுவிடுகிறதற்கு எனக்கு ஆளில்லை. நான் வருவதற்குள்ளே வேறொருவன் எனக்கு முன்னே இறங்கிவிடுகிறான் என்றான்.

8. யேசுநாதர் அவனை நோக்கி: நீ எழுந்து, உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நட என்றார்.

9. என்றவுடனே அந்த மனிதன் சொஸ்தமாகி, தன் படுக்கையை எடுத்துக்கொண்டு நடந்துபோனான். அன்று ஓய்வு நாளாயிருந்தது.

10. ஆதலால் யூதர்கள் சொஸ்தமாக்கப்பட்டவனைப் பார்த்து: இது ஓய்வு நாளாயிருக்கின்றதே, நீ உன் படுக்கையை எடுத்துக்கொண்டு போகவொண்ணாது என்றார்கள். (யாத். 20-10.)

11. அவர்களுக்கு அவன் மறுமொழியாக: என்னைச் சொஸ்தமாக்கினவர்: உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நடவென்று எனக்குச்சொன்னார் என்றான்.

---

2. புரோபாத்திக்கா என்பது ஆட்டுக்குளம் என்று சொல்லப்படுகிறது. ஏனெனில் பலியிடப்பட்ட ஆடுகள் அக்குளத்தில் குளிப்பாட்டப்பட்டதினாலோ அல்லது அக்குளத்தினருகே ஆட்டு வாசல் என்ற ஓர் வாசற்படி இருந்ததினாலோ இந்தப் பெயர் அதற்கு உண்டாயிற்று.

4. இவ்விடத்தில் சொல்லியிருக்கிற குளத்தின் ஜலத்துக்கு வியாதிக்காரரைச் சௌக்கியப்படுத்த சுபாவ பலனிருந்ததில்லை. ஆயினும், சர்வேசுரனால் அனுப்பப்பட்ட சம்மனசானவர் அதைக் கலக்குகிற நேரத்திலே சர்வேசுரன் அதற்கு அந்தச் சக்தியைக் கொடுத்தார்.

12. அப்பொழுது அவர்கள்: உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நட வென்று உனக்குச் சொன்ன அந்த மனிதன் யார் என்று அவனிடத்தில் கேட்டார்கள்.

13. ஆனால் சொஸ்தமாக்கப்பட்டவன் அவர் இன்னாரென்று அறியாதிருந்தான். ஏனெனில் யேசுநாதர் அவ்விடத்தில் கூடிநின்ற ஜனக்கும்பலை விட்டு, மறைவாய்ப் போய்விட்டார்.

14. பின்பு யேசுநாதர் அவனைத் தேவாலயத்திலே கண்டு: இதோ, நீ சொஸ்தமாயிருக்கிறாய்; அதிக கேடானதொன்றும் உனக்கு நேரிடாதபடி, இனிப் பாவம் செய்யாதே என்றார்.

15. அப்பொழுது அந்த மனிதன் போய், தன்னைச் சொஸ்தமாக்கினவர் யேசுநாதர்தான் என்று யூதர்களுக்கு அறிவித்தான்.

16. யேசுநாதர் இவைகளை ஓய்வுநாளிலே செய்ததைப்பற்றி யூதர்கள் அவரை உபத்திரவப்படுத்தினார்கள்.

17. யேசுநாதரோவென்றால் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக: என் பிதாவானவர் இதுவரைக்கும் கிரியை செய்து வருகிறார். நானும் கிரியை செய்து வருகிறேன் என்றார்.

18. ஆகையால் அவர் ஓய்வுநாளை மீறினதுமல்லாமல், தம்மைச் சர்வேசுரனுக்குச் சமமாக்கி, சர்வேசுரனைத் தம்முடைய பிதாவென்று சொன்னதினாலே, யூதர்கள் அவரைக் கொலைசெய்யும்படி மென்மேலும் வழி தேடிக் கொண்டிருந்தார்கள். இதினிமித்தம் யேசுநாதர் மீளவும் அவர்களுக்கு வசனித்ததாவது: (அரு. 10-30; மத். 20-63.)

19. மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்: பிதாவானவர் செய்கிறதாகச் சுதன் காண்கிற காரியங்களையேயன்றி வேறொன்றையும் தாமாய்ச் செய்யமாட்டார். அவர் எவைகளைச் செய்கிறாரோ, அவைகளைச் சுதனும் அப்படியே செய்கிறார்.

20. பிதாவானவர் சுதனைச் சிநேகித்து, தாம் செய்கிற யாவையும் அவருக்குக் காண்பிக்கிறார். நீங்கள் ஆச்சரியப்படும்படியாக இவைகளிலும் பெரிதான செயல்களையும் அவருக்குக் காண்பிப்பார்.

21. அவ்வண்ணமே பிதாவானவர் மரித்தவர்களை எழுப்பி உயிர்ப்பிக்கிறதுபோல, சுதனும் தமக்கு இஷ்டமானவர்களை உயிர்ப்பிக்கிறார்.

22-23. ஏனெனில் பிதாவானவர் எவனுக்கும் தீர்வையிடுகிறதில்லை. ஆனால் சகலரும் பிதாவைச் சங்கிக்கிறதுபோல, சுதனையும் சங்கிக்கும்படியாக நியாயத் தீர்ப்பு முழுமையும் சுதனுக்கு ஒப்பித்தருளினார். சுதனைச் சங்கியாதவன் அவரை அனுப்பின பிதாவையும் சங்கியாதவனாயிருக்கிறான். (மத். 25-31.)

14. உலகத்திலே மனுஷருக்கு வருகிற வியாதிகள் சில சமயங்களில் அவர்கள் செய்த பாவத்துக்கு ஆக்கினையாக வருகிறது. வேறேசமயங்களில் அருளப்பர் சுவிசேஷம் 9-ம் அதி. 3-ம் வசனத்தில் சொல்லியிருக்கிறபடியே வெவ்வேறு காரணங்களாலும் வருகிறது. ஆயினும் உலகத்துக்கு வருகிற துன்பங்களெல்லாம் மொத்தத்திலே பாவத்துக்கு ஆக்கினையென்று சொல்லவேண்டியதுதான். என்றாலும் இன்னானின்னான் செய்த பாவத்துக்கு இது ஆக்கினை என்று சொல்லுவது தப்பிதம். ஏனெனில் இது சர்வேசுரனுக்கு மாத்திரம் தெரிந்த காரியம்.

24. என் வார்த்தையைக் கேட்டு, என்னை அனுப்பினவரை விசுவசிக்கிறவனுக்கு நித்திய சீவியம் உண்டு. அவன் ஆக்கினைத் தீர்வைக்குள்ளாகாமல் மரணத்தினின்று நீங்கி, சீவியத்துக்குள் சேருகிருனென்று மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். (அரு. 8-51.)

25. மரித்தோர் தேவசுதனுடைய குரலொலியைக் கேட்குங் காலம் வருகிறதென்றும், அது இப்பொழுதே வந்திருக்கிறதென்றும், அதைக் கேட்கிறவர்கள் பிழைப்பார்களென்றும் மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். (லூக். 7-14; அரு. 11-43.)

26. ஏனெனில் பிதாவானவர் தம்மில் தாமே சீவனுடையவராயிருக்கிறதுபோல, சுதனும் தம்மிலே தாமே சீவனுடையவராயிருக்கும்படி அவருக்குத் தந்தருளினர்.

27. அவர் மனுமகனுயிருக்கிறபடியினுலே நியாயத் தீர்வையிடும் அதிகாரத்தையும் அவருக்குக் கொடுத்திருக்கிறூர்.

28. இதைக்குறித்து நீங்கள் ஆச்சரியப்படவேண்டாம். ஏனெனில் கல்லறைகளிலுள்ள யாவரும் தேவசுதனுடைய குரலொலியைக் கேட்குங்காலம் வருகிறது.

29. அப்பொழுது நற்கிரியைகளைச் செய்தவர்கள் உயிர்த்துச் சீவியத்துக்கும், துர்க்கிரியைகளைச் செய்தவர்கள் உயிர்த்து, ஆக்கினைத் தீர்வைக்கும் புறப்படுவார்கள். (மத். 25-46.)

30. நாஞக எதுவும் செய்யக்கூடாது. நான் கேட்கிறபடியே நியாயத் தீர்ப்பிடுகிறேன். என் தீர்ப்பு நீதியுள்ளது. ஏனெனில் நான் என்னை அனுப்பினவருடைய சித்தத்தைக் தேடுகிறேனேயன்றி, என் சித்தத்தைத் தேடுகிறதில்லை.

31. என்னைக்குறித்து நானே சாட்சியஞ்சொன்னுல், என்னுடைய சாட்சியம் உண்மையாயிராது.

32. என்னைக்குறித்துச் சாட்சியஞ் சொல்லுகிறவர் வேறொருவர் இருக்கிறூர். அவர் என்னைக் குறித்துச் சொல்லுஞ் சாட்சியம் உண்மையானதென்று அறிந்திருக்கிறேன். (மத். 3-17; அரு. 1-15.)

33. நீங்கள் அருளப்பரிடத்தில் ஆள் அனுப்பினீர்கள்; அவரும் சத்தியத்துக்குச் சாட்சியஞ் சொன்னூர்.

34. ஆயினும் மனுஷ சாட்சியம் எனக்கு வேண்டுவதில்லை. ஆனுல் நீங்கள் இரட்சிக்கப்படும்பொருட்டு இவைகளை உங்களுக்குச் சொல்லுகிறேன்.

35. அவர் சுடர்விட்டுப் பிரகாசிக்கிற விளக்காயிருந்தார். நீங்களும் அவருடைய வெளிச்சத்தில் சொற்பக் காலம் களிகூர விரும்பினீர்கள்.

36. ஆனுல் அருளப்பருடைய சாட்சியத்திலும் மேலான சாட்சியம் எனக்கு உண்டு. அதென்னவெனில் நான் நிறைவேற்றும்படி பிதாவானவர் எனக்குத் தந்தருளின கிரியைகளாம். நான் செய்துவருகிற இந்தக் கிரியைகளே பிதாவானவர் என்னை அனுப்பினூரென்று என்னைப்பற்றிச் சாட்சியஞ் சொல்லுகின்றன.

37. என்னை அனுப்பின பிதாவானவரும் என்னைக்குறித்துச் சாட்சியஞ் சொல்லியிருக்கிறூர். நீங்களோ அவருடைய குரலொலியைக் கேட்டதுமில்லை, அவருடைய ரூபத்தைக் கண்டதுமில்லை.

31. என்னைக் குறித்து நானே சாட்சியஞ் சொன்னுல், என் சாட்சியம் இயல்பிலே உண்மை என்பது நிச்சயமானுலும், யூதர்களுடைய தூர்ப்புத்தியினிமித்தம், அது அவர்களுக்கு உண்மையாகத் தோன்ருது என்பதாகக் கர்த்தர் சொல்லுகிருரென்றறியவும்.

38. அவர் அனுப்பினவனை நீங்கள் விசுவசியாதபடியால், அவருடைய வார்த்தையை உங்களிடத்தில் தரிக்கும்படி நீங்கள் வைத்துக்கொள்ளுகிறதுமில்லை.

39. வேதாகமத்தில் உங்களுக்கு நித்திய சீவியம் உண்டென்று எண்ணுகிறீர்களே; அவைகளை ஆராய்ந்துபாருங்கள். அவைகளே என்னைக்குறித்துச் சாட்சியஞ் சொல்லுகின்றன.

40. அப்படியிருந்தும், நீங்கள் சீவனை அடையும்பொருட்டு என்னிடத்தில் வர மனதில்லாதிருக்கிறீர்கள்.

41. மனிதரால் பிரபல்லியம் எனக்கு அவசரமில்லை.

42. ஆனால் நீங்கள் தேவசிநேகமற்றவர்களாயிருக்கிறதாக நான் உங்களை அறிந்திருக்கிறேன்.

43. நான் என் பிதாவின் நாமத்தினாலே வந்திருந்தும், நீங்கள் என்னை ஏற்றுக்கொள்ளுகிறதில்லை. வேறொருவன் தன் சுய நாமத்தினாலே வந்தால், அவனை ஏற்றுக்கொள்வீர்கள்.

44. சர்வேசுரனாலேமாத்திரம் வருகிற மகிமையைத்தேடாமல், ஒருவருக்கு ஒருவரால் உண்டாகும் மகிமையைத் தேடிக்கொள்ளுகிற நீங்கள் எப்படி விசுவசிக்கக்கூடும்?

45. பிதாவினிடத்தில் நான் உங்கள்மேல் குற்றஞ்சாட்டுவேனென்று நீங்கள் நினைக்கவேண்டாம். நீங்கள் நம்பிக்கை வைத்திருக்கிற மோயீசனே உங்கள்மேல் குற்றஞ்சாட்டுகிறவர்.

46. நீங்கள் மோயீசனை விசுவசித்தீர்களேயானால், ஒருவேளை என்னையும் விசுவசித்திருப்பீர்கள். ஏனெனில் அவர் என்னைக்குறித்து எழுதியிருக்கிறார். (ஆதி. 3-15; 22-18; அரு. 1-45.)

47. அவருடைய எழுத்துக்களை நீங்கள் விசுவசியாமலிருந்தால், என்னுடைய வார்த்தைகளை எப்படி விசுவசிக்கப் போகிறீர்கள் என்று திருவுளம் பற்றினார்.

## 6-ம். அதிகாரம்.

கிறீஸ்துநாதர் ஐந்து அப்பங்களையும் இரண்டு மச்சங்களையுங்கொண்டு ஐயாயிரம் பேர்களுக்குப் போஜனங்கொடுத்ததும், தாம் சீவிய அப்பமென்றும் தமது மாம்சம் மெய்யான போஜனமும், தமது இரத்தம் மெய்யான பானமுமென்றும் போதித்ததும்.

1. இவைகளுக்குப்பின்பு, யேசுநாதர் திபேரியாக் கடலாகிய கலிலேயாக் கடலின் அக்கரைக்குப் போனார். (மத். 14-13; மாற். 6-30; லூக். 9-10.)

2. திரளான ஜனங்களும் வியாதிப்பட்டவர்களிடத்தில் அவர் செய்தருளிய அற்புதங்களைக் கண்டதினாலே, அவரைப் பின்சென்றார்கள்.

3. ஆகையால் யேசுநாதர் ஓர் மலையின்மேல் ஏறி, அவ்விடத்தில் தம்முடைய சீஷர்களோடுகூட உட்கார்ந்தார்.

4. அப்பொழுது யூதருடைய பண்டிகை நாளாகிய பாஸ்கா சமீபித்திருந்தது.

39. யூதர்கள் பழைய ஏற்பாட்டைப் படித்து, ஆழ்ந்து ஆராய்ந்துபார்த்தால், யேசுநாதர்தான் உலக இரட்சகனென்று அவர்கள் அவசியமாய் ஒத்துக்கொள்ள வேண்டியிருக்குமென்பது இவ்வாக்கியத்தின் கருத்து. ஆகையால் சுவிசேஷத்தை மேலெழுந்த வாரியாய் வாசிக்கிறது ஆகாதென்பது இதன் உட்கருத்தாகும்.

5. அப்படியிருக்க, யேசுநாதர் தம்முடைய கண்களை ஏறெடுத்து, மிகுதியான ஜனக்கும்பல் தம்மிடத்தில் வந்திருக்கிறதைக் கண்டு, பிலிப்பென்பவனை நோக்கி: இவர்கள் சாப்பிடும்படி எங்கேயிருந்து அப்பங்களை வாங்குவோம் என்றார்.

6. தாம் செய்யப்போகிறதை அறிந்திருந்தும், அவனைச் சோதிக்கும்படி இப்படிச் சொன்னார்.

7. பிலிப்பு அவருக்கு மறுமொழியாக: இவர்களில் ஒவ்வொருவரும் கொஞ்சங்கொஞ்சம் எடுத்துக்கொண்டாலும், இருநூறு பணத்து அப்பங்களும் இவர்களுக்குப் போதாதே என்றார்.

8. அப்பொழுது அவருடைய சீஷர்களில் ஒருவரும், சீமோன் இராயப்பருடைய சகோதரனுமாகிய பெலவேந்திரர் அவரை நோக்கி:

9. இங்கே ஒரு பையனிருக்கிறான்; அவனிடத்தில் ஐந்து வாற்கோதும்பை அப்பங்களும் இரண்டு மீன்களும் இருக்கின்றது. ஆனாலும் அவைகள் இத்தனைபேர்களுக்கு எம்மாத்திரம் என்றார்.

10. யேசுநாதர்: ஜனங்களைப் பந்தியமரச்செய்யுங்கள் என்றார். அவ்விடத்தில் புல் மிகுதியாயிருந்தது. அப்படியே பந்தியமர்ந்த புருஷர்கள் சுமார் ஐயாயிரம் பேராயிருந்தார்கள்.

11. அப்பொழுது யேசுநாதர் அப்பங்களை எடுத்து, நன்றியறிந்த தோத்திரஞ்சொன்னபின், பந்தியமர்ந்தவர்களுக்குப் பரிமாறினார். அவ்வண்ணமே மீன்களிலும் அவர்களுக்கு வேண்டிய மட்டும் கொடுத்தார்.

12. அவர்கள் திருப்தியடைந்த பின்பு, அவர் தம்முடைய சீஷர்களை நோக்கி: மீதியான துண்டுகள் சேதமாகாதபடிக்கு அவைகளைச் சேர்த்து வையுங்கள் என்றார்.

13. அப்படியே அவர்கள் சேர்த்து, ஐந்து வாற்கோதும்பை அப்பங்களிலே சாப்பிட்டவர்களுக்கு மீதியான துண்டுகளால் பன்னிரண்டு கூடைகளை நிரப்பினார்கள்.

14. யேசுநாதர் செய்த அற்புதத்தை அந்த மனிதர்கள் கண்டு: மெய்யாகவே உலகத்தில் வரவேண்டிய தீர்க்கதரிசி இவர்தான் என்றார்கள்.

15. ஆகையால் அவர்கள் தம்மை இராஜாவாக்கும்படிப் பலவந்தமாய்த் தம்மைப் பிடிக்க வரப்போகிறார்களென்று யேசுநாதர் அறிந்து, மறுபடியும் தனியே மலையின்மேல் ஏறி, விலகிப் போனார். (மத். 14-23; மாற். 6-46.)

16. அவருடைய சீஷர்களோ சாயங்காலமானபோது கடற்கரைக்கு வந்து,

17. ஓர் படகிலேறிக் கடலுக்கு அக்கரையிலுள்ள கப்பர்நாவும் ஊருக்குச் சென்றார்கள். அப்பொழுது இருட்டிப்போயிற்று; யேசுநாதரும் அவர்களிடத்தில் வந்து சேராதிருந்தார்.

18. கடலோ பெருங்காற்று அடித்ததினாலே, கொந்தளித்துக் கொண்டிருந்தது.

19. ஆயினும் ஏறக்குறைய மூன்று நாலுமைல் தூரம் அவர்கள் தண்டுவலித்துக்கொண்டு போகையில், யேசுநாதர் கடலின்மேல் நடந்து, படகுக்குச் சமீபமாய் வருகிறதைக் கண்டு, பயந்தார்கள்.

20. அவரோவெனில், அவர்களை நோக்கி: நான்தான் பயப்படாதேயுங்கள் என்றார்.

21. அப்பொழுது அவர்கள் அவரைப் படகில் ஏற்றிக்கொள்ள விரும்பினார்கள். அக்ஷணமே படகு அவர்கள் போகிற கரை சேர்ந்தது.

22. மறுநாள் கடலின் அக்கரையில் நின்ற ஜனங்கள் அங்கே ஒரு படகேயன்றி, வேறே படகு இருந்ததில்லையென்றும், யேசுநாதர் தம்முடைய சீஷர்களோடுகூடப் படகில் ஏறாமல், சீஷர்கள் மாத்திரம் போனார்களென்றும் அறிந்துகொண்டார்கள்.

23. கர்த்தர் நன்றியறிந்த தோஸ்திரஞ்செய்ததின்மேல், ஜனங்கள் அப்பம் சாப்பிட்ட இடத்துக்குச் சமீபமாய், அச்சமயத்தில் வேறே படகுகள் திபேரியாவிலிருந்து வந்தன.

24. அப்பொழுது, யேசுநாதரும் அவருடைய சீஷர்களும் அங்கேயில்லையென்று ஜனங்கள் கண்டு, உடனே படகுகளில் ஏறி, யேசுநாதரைத் தேடிக்கொண்டு கப்பர்நாவும் ஊருக்கு வந்தார்கள்.

25. அவர்கள் கடலுக்கு அப்பால் அவரைக் கண்டபோது: சுவாமீ, நீர் எப்போது இங்கே வந்தீர் என்று அவரைக் கேட்டார்கள்.

26. யேசுநாதர் அவர்களுக்கு மறுமொழியாகத் திருவுளம்பற்றினதாவது: மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்: நீங்கள் அற்புதங்களைக் கண்டதினாலல்லவே, அப்பங்களைப் புசித்துத் திருப்தியடைந்ததினாலல்லோ என்னைத் தேடுகிறீர்கள்.

27. அழிந்துபோகிற போஜனத்துக்காக அல்ல, நித்திய சீவியத்திற்காக நிலைநிற்கிற போஜனத்துக்காகவே பிரயாசப்படுங்கள்; மனுமகன் அதை உங்களுக்குத் தந்தருளுவார். ஏனெனில் பிதாவாகிய சர்வேசுரன் அவரையே முத்திரித்திருக்கிறார் என்றார். (மத். 3-17; 17-5; அரு. 1-32.)

28. அதற்கு அவர்கள்: சர்வேசுரனுக்கு ஏற்ற கிரியைகளை நடத்தும்படி நாங்கள் என்னசெய்யவேண்டும் என்று அவரைக்கேட்டார்கள்.

29. யேசுநாதர் அவர்களுக்குப் பிரத்தியுத்தரமாக: சர்வேசுரன் அனுப்பினவரை நீங்கள் விசுவசிப்பதே அவருக்கு ஏற்றகிரியை என்றார்.

30. மீளவும் அவர்கள்: அப்படியானால், நாங்கள் உம்மை விசுவசிக்கும் பொருட்டு நாங்கள் காணத்தக்கதாக நீர் என்ன அற்புதத்தைச் செய்கிறீர்? நீர் செய்கிறதென்ன?

31. பரமண்டலத்திலிருந்து அவர்களுக்கு அப்பத்தைப் புசிக்கக் கொடுத்தார் என்று எழுதியிருக்கிறபிரகாரம் எங்கள்பிதாக்கள் வனாந்தரத்திலே மன்னாவைப் புசித்தார்களே என்றார்கள். (யாத். 16-14; எண். 11-7: சங். 77-24; ஞான. 16-20.)

32. யேசுநாதர் அவர்களை நோக்கி: மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்: பரமண்டலத்திலிருந்து வந்த அப்பத்தை மோயீசன் உங்களுக்குக் கொடுக்கவில்லை. என் பிதாவே பரமண்டலத்திலிருந்து வந்த மெய்யான அப்பத்தை உங்களுக்குக் கொடுக்கிறார்.

---

27. இராஜாவினால் அனுப்பப்பட்ட ஸ்தானாபதியானாலும், யாதோர் கற்பனை கட்டளையானாலும் இராஜ முத்திரையால் நிச்சயிக்கப்படுவதுபோல, யேசுநாதர் தாம் பிதாவாகிய சர்வேசுரனால் அனுப்பப்பட்டவரென்று தேவ முத்திரையாகிய தெய்வீக வல்லமை அற்புதங்களைக்கொண்டு தம்மை உலகத்துக்கு நிச்சயப்படுத்துகிறார் என்றறியவும்.

32. இந்த முப்பத்திரண்டாம் வசன முதல் இந்த அதிகாரத்தின் முடிவுவரைக்கும் யேசுநாதர் திருவுளம்பற்றியிருக்கிற வாக்கியங்கள் மேலான பரம ரகசியமாகிய தேவநற்கருணையைக் குறிக்கிறதென்று கவனமாய் வாசிக்கிற எவனும் கண்டுகொள்ளுவான். இந்த வாக்கியங்களைக்கொண்டு தமது திருச் சரீரத்தையும் திரு இரத்தத்தையும் மெய்யாகவே மனுஷனுக்கு நித்திய சீவியத்தைத் தரும் போஜனமாகத் தந்தருளுகிறாரென்று எவரும் தெளிவாய்க் கண்டுபிடிக்கலாம்.

33. ஏனெனில் பரலோகத்திலிருந் திறங்கி, உலகத்துக்குச் சீவன் கொடுக்கிற அப்பமே சர்வேசுரனுடைய அப்பம் என்றார்.

34. அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி: ஆண்டவரே, இந்த அப்பத்தை எப்போதும் எங்களுக்குத் தந்தருளும் என்று சொல்ல,

35. யேசுநாதர் அவர்களைநோக்கித் திருவுளம் பற்றினதாவது: சீவியத்தின் அப்பம் நானே; என்னிடத்தில் வருகிறவன் பசியடையான்; என்னை விசுவசிக்கிறவனும் ஒருக்காலும் தாகமடையான். (எக்கி. 24-29; அரு. 4-14.)

36. ஆனால் நீங்கள் என்னைக் கண்டிருந்தும், விசுவசியாமலிருக்கிறீர்கள் என்று உங்களுக்குச் சொன்னேன்.

37. பிதாவானவர் எனக்குத்தந்தருளுகிற யாவும் என்னிடத்திலே வரும்; என்னிடத்தில் வருகிறவனையோ நான் வெளியே தள்ளுவதில்லை.

38. ஏனெனில் என் சித்தத்தை அல்ல, என்னை அனுப்பினவருடைய சித்தத்தையே நிறைவேற்றும்படி பரலோகத்தினின்று இறங்கிவந்தேன்.

39. என்னை அனுப்பின பிதாவின் சித்தம் ஏதெனில், அவர் எனக்குத் தந்தருளின யாவற்றிலும், நான் ஒன்றையும் இழந்துபோகாமல், கடைசி நாளில் அதை உயிர்ப்பிக்க வேண்டுமென்பது தான்.

40. சுதனைக் கண்டு, அவர்பேரில் விசுவாசமாயிருக்கிற எவனும் நித்திய சீவியத்தை அடையவேண்டுமென்பது என்னை அனுப்பின என் பிதாவின் சித்தமாயிருக்கிறது. நானும் கடைசி நாளிலே அவனை உயிர்ப்பிப்பேன் என்றார். (பிலிப். 3-21.)

41. ஆனால் நான் பரலோகத்தினின்று இறங்கின சீவிய அப்பம் என்று அவர் சொன்னதினிமித்தம் யூதர்கள் அவர்பேரில் முறு முறுத்து:

42. இவன் சூசையின் மகனாகிய யேசு அல்லவா? இவனுடைய பிதாமாதாவை நாம் அறிவோமே; அப்படியிருக்க பரலோகத்தினின்று இறங்கி வந்தேன் என்று இவன் எப்படிச் சொல்லுகிறான் என்றார்கள். (மத். 13-55; மாற். 6-3.)

43. யேசுநாதர் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக: நீங்கள் உங்களுக்குள்ளே முறு முறுக்க வேண்டாம்.

44. என்னை அனுப்பின பிதாவானவர் ஒருவனை இழுத்துக்கொள்ளா விட்டால், அவன் என்னிடத்தில் வரமாட்டான். கடைசி நாளிலே நான் அவனை உயிர்ப்பிப்பேன்.

45. ஆயினும் எல்லாரும் சர்வேசுரனாலே போதிக்கப்பட்டிருப்பார்கள் என்று தீர்க்கதரிசிகளின் ஆகமத்தில் எழுதப்பட்டிருக்கிறதே. ஆகையால் பிதாவினிடத்தில் கேட்டுக் கற்றுக்கொண்ட எவனும் என்னிடத்தில் வருகிறான். (இசை. 54-13; ஜெரே. 31-34.)

46. சர்வேசுரனிடத்திலிருந்து வருகிறவரேயல்லாது, பிதாவைக் கண்டவர் ஒருவருமில்லை; அவரே பிதாவைக் கண்டவர். (மத். 11-27.)

47. என்பேரில் விசுவாசமாயிருக்கிறவனுக்கு நித்திய சீவியம் உண்டென்று மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

48. சீவிய அப்பம் நானே.

49. உங்கள் பிதாக்கள் வனாந்தரத்தில் மன்னாவைப் புசித்திருந்தும், மரித்தார்கள்.

50. இதிலே புசிக்கிறவன் சாகாதிருக்கும்படி பரலோகத்திலிருந்து இறங்குகிற அப்பம் இதுவே.

51. நானே பரலோகத்திலிருந்து இறங்கின சீவிய அப்பம்.

52. இந்த அப்பத்தில் யாதொருவன் புசிப்பானேயாகில், என்றென்றைக்கும் பிழைப்பான். நான் கொடுக்கும் அப்பம் உலகத்தின் சீவியத்திற்காக (நான் கொடுக்கும்) என் மாம்சமே என்றார். (மத். 26-26.)

53. அதைப்பற்றி யூதர் ஒருவரோடொருவர் வாக்குவாதஞ்செய்து: இவன் தன்னுடைய மாம்சத்தை எப்படி நமக்குப் புசிக்கக் கொடுக்கக்கூடும் என்றார்கள்.

54. ஆகையால் யேசுநாதர் அவர்களைநோக்கி: மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்; நீங்கள் மனுமகனுடைய மாம்சத்தைப் புசியாமலும், அவருடைய இரத்தத்தைப் பானம்பண்ணாமலும் இருந்தால், உங்களிடத்தில் சீவனைக் கொண்டிருக்கமாட்டீர்கள்.

55. என் மாம்சத்தைப் புசித்து, என் இரத்தத்தைப் பானம்பண்ணுகிறவனுக்கு நித்திய சீவியம் உண்டு. கடைசிநாளிலே நான் அவனை உயிர்ப்பிப்பேன்.

56. ஏனெனில் என் மாம்சம் மெய்யாகவே போஜனமும், என் இரத்தம் மெய்யாகவே பானமுமாயிருக்கின்றது. (1 கொ. 11-27; அரு. 15-4.)

57. என் மாம்சத்தைப் புசித்து, என் இரத்தத்தைப் பானம்பண்ணுகிறவன் என்னில் வசிக்கிறான், நானும் அவனில் வசிக்கிறேன்.

58. சீவியராகிய பிதா என்னை அனுப்பினதுபோலவும், நான் பிதாவினால் பிழைக்கிறதுபோலவும், என்னைப் புசிக்கிறவனும் என்னால் பிழைப்பான்.

59. பரலோகத்திலிருந்து இறங்கின அப்பம் இதுவே. இது உங்கள் பிதாக்கள் மன்னாவைப் புசித்ததுபோல் அல்ல; அவர்கள் மரித்தார்களே; இந்த அப்பத்தைப் புசிக்கிறவன் என்றென்றைக்கும் பிழைப்பான் என்றார்.

60. அவர் கப்பர்நாவும் ஊரிலே ஜெப ஆலயத்தில் உபதேசிக்கையில் இவைகளைத் திருவுளம்பற்றினார்.

61. அவருடைய சீஷர்களில் அநேகர் இவைகளைக்கேட்டு: இது கடினவாக்காயிருக்கிறது; இதை யார் கேட்கக்கூடும் என்றார்கள்.

62. இவ்வண்ணமாய், சீஷர்கள் இதைப்பற்றி முறுமுறுத்துக் கொண்டிருக்கிறார்களென்று யேசுநாதர் தமக்குள் அறிந்து, அவர்களைப் பார்த்துத் திருவுளம்பற்றினதாவது: இது உங்களுக்கு இடறலாயிருக்கிறதோ?

63. அப்படியானால், மனுமகன் தான் முன்னிருந்த இடத்துக்கு ஆரோகணமாகிறதை நீங்கள் கண்டாலோ (என்னமாயிருக்கமாட்டாது)? (அரு. 3-13; மாற். 16-19.)

64. உயிர் கொடுப்பது ஆத்துமமே; மாம்சமானது ஒன்றுக்கும் ஆகாது. நான் உங்களுக்குச் சொன்ன வாக்கியங்கள் ஞானமும் உயிருமாயிருக்கின்றன.

65. ஆகிலும் உங்களில் சிலர் விசுவசியாதவர்களாயிருக்கிறார்கள் என்றார். ஏனெனில் யேசுநாதர் ஆதிமுதற்கொண்டு தம்மை விசுவசியாதவர்கள் இன்னாரென்றும், தம்மைக் காட்டிக்கொடுக்கிறவன் இன்னானென்றும் அறிந்திருந்தார். (அரு. 2-25.)

---

52. இந்த வாக்கியத்தைக்கொண்டு வசீகரம் பண்ணப்பட்ட அப்பத்தின் வகையிலே, யேசுநாதர் சுவாமியுடைய திருச் சரீரமும் இரத்தமும் இருக்கிறதென்றும், ஆகையால் அந்த அப்பத்தை உட்கொள்ளுகிற கிறீஸ்துவர்கள் யேசுநாதர் சுவாமியுடைய திருச் சரீரத்தையும் திரு இரத்தத்தையுங் கூட உட்கொள்ளுகிறார்களென்றும், ரசத்தின் வகையில் தேவ நற்கருணை வாங்குவது அவசரமில்லையென்றுந் தெளிவாய் அறிந்துகொள்ளலாம்.

66. மீளவும் அவர் திருவுளம்பற்றி னதாவது: ஒருவன் என் பிதாவினால் வரம்பெற்றாலன்றி, அவன் என்னிடத்தில் வரமாட்டானென்று இதினிமித்தமே உங்களுக்குச் சொன்னேன் என்றார்.

67. அது முதல் அவருடைய சிஷர்களில் அநேகர் பின்வாங்கி, அதன் பின் அவரோடு சேர்ந்துபோகாதிருந்தார்கள்.

68. ஆதலால் யேசுநாதர் பன்னிருவரையும் நோக்கி: நீங்களும் போய்விட மனதாயிருக்கிறீர்களோ என்று கேட்க,

69. சீமோன் இராயப்பர் அவருக்குப்பிரத்தியுத்தாரமாக: ஆண்டவரே, நாங்கள் யாரிடத்தில் போவோம், நித்திய சீவிய வார்த்தைகள் உம்மிடத்திலிருக்கின்றதே;

70. தேவ சுதனாகிய கிறீஸ்துநாதர் நீர்தான் என்று நாங்கள் விசுவசித்தும், அறிந்தும் இருக்கிறோம் என்றார். (மத். 16-16; மாற். 8-20; லூக். 9-20.)

71. யேசுநாதர் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக: பன்னிருவராகிய உங்களை நான் தெரிந்துகொண்டேனல்லோ? ஆயினும் உங்களில் ஒருவன் பசாசாயிருக்கிறான் என்றார்.

72. யேசுநாதர் சீமோன் குமாரனாகிய யூதாஸ் இஸ்க்காரியோத்தென்பவனைக் குறித்து இதைச் சொன்னார். ஏனெனில் அவன் பன்னிருவரில் ஒருவனாயிருந்தும், அவனைக் காட்டிக் கொடுப்பவனாயிருந்தான்.

இந்த அதிகாரத்திலே யேசுநாதர் இனித் தாம் ஏற்படுத்தப்போகிற தேவநற்கருணையைக் குறித்து வாக்குத்தத்தஞ்செய்கிறார். எப்படியெனில் அவர் வனாந்தரத்திலே ஐந்து அப்பங்களை அற்புதமாய்ப் பலுகச் செய்து, ஐயாயிரம்பேருக்குத் திருப்தியாகப் போஜனங் கொடுத்தபின், அந்தப் போஜனத்தைச் சாப்பிட்டவர்களில் அநேகர் கர்த்தரை ஆவலோடு தேடிக்கொண்டு கப்பர்நாவும் ஊர் ஜெப ஆலயத்திற்கு வந்தவிடத்தில், கர்த்தர், அவர்கள் சாப்பிட்ட அந்த அப்பத்தைவிட மேன்மையான அப்பத்தைத் தந்தருளுவோமென்று வாக்குத்தத்தஞ்செய்தருளினார்.

இதைத் தெளிவாய் அறியும்படிக்கு, இந்த அதிகாரத்தை மூன்று பாகமாகப் பிரிக்கலாம். முதல் பாகத்தில் சுவிசேஷகர் அப்பம் பலுகின அற்புதத்தை வருணிக்கிறார்.

2-ம் பாகத்தில் யேசுநாதர் தம்முடையபேரில் ஜனங்கள் வைக்கவேண்டிய விசுவாசத்தைத் தூண்டி எழுப்பிப் போதிக்கிறார்.

3-ம் பாகத்தில் தேவநற்கருணையைப்பற்றி வாக்குத்தத்தம் பண்ணுகிறார்.

இந்த மூன்றாம் பாகத்திலே, யேசுநாதர் தாம் இனித் தந்தருளப் போகிற ஒரு புதிதான அப்பத்தைப்பற்றிப் பேசுகிறாரே அல்லாது, சிலர் சாதிக்கிறதுபோல விசுவாசத்தைப் பற்றிப் பேசுகிறதில்லை. ஏனெனில் 1-வது ஞானப் போஜனமென்கும்போது விசுவாசத்தைக் குறித்திருந்தால், அது முன்னில்லாத ஒரு புதுக்காரியமாயிருந்திருக்கவேண்டியது. ஆனால் அர்ச் சின்னப்பர் சொல்லுவதுபோல விசுவாசமானது பழைய ஏற்பாட்டிலும், புதிய ஏற்பாட்டிலும் எக்காலத்துக்கும் பொதுவாயிருக்கின்றது. அன்றியும் அநேகர் இதற்கு முந்தியே யேசுநாதர் மேல் விசுவாசமாயிருந்தார்கள். ஆகையால் யேசுநாதர் தாம் ஒரு புதிதான அப்பத்தைத் தந்தருளுவோம் என்கும்போது விசுவாசத்தைப்பற்றிப் பேசாமல் தேவநற்கருணையைப் பற்றிப் பேசுகிறாரென்பது நிச்சயம்.

2-வது. அன்றியும் இரண்டாம் பாகமாகிய 27-ம் வசன முதல் 52-ம் வசனம் வரையில் யேசுநாதர்: நானே பரலோகத்தினின்று இறங்கி வந்த சீவிய அப்பம் என்கும்போது அவர் உருவகமாய்ப் பேசினாரென்றும், விசுவாசத்தைப்பற்றிப் பேசினாரென்றும் அறிந்துகொள்ளுவது எளிதாயிருந்தது. ஜனங்களும் அப்படியே கண்டுபிடித்தார்கள்.

அப்படியிருக்க மூன்றாம் பாகத்தில் திவ்விய கர்த்தர்: என் மாம்சம் மெய்யாகவே போஜனமும், என் இரத்தம் மெய்யாகவே பானமுமாயிருக்கின்றது. என் மாம்ஸத்தைப் புசிக்கிறவன் எனக்குள் தங்குகிறான், என்றபோது அவர் விசுவாசத்தைப் பற்றிப் பேசாமல் தம்முடைய திருச் சரீரத்தையும் திரு இரத்தத்தையும் போஜனமாகப் புசிப்பதைப்பற்றி

## 7-ம். அதிகாரம்.

கிறீஸ்துநாதர் கூடாரப் பண்டிகைக்குப் போய், தேவாலயத்தில் யூதர்களுக்குப் போதித்ததும், தமதுமேல் அவதூறு பேசினவர்களை மறுத்துக் கண்டித்ததுமாகிய விசேஷங்கள்.

1. இவைகளுக்குப் பிற்பாடு, யூதர் யேசுநாதரைக் கொலைசெய்யத்தேடின படியால், அவர் யூதேயாவில் சஞ்சரிக்க மனமில்லாமல், கலிலேயாவில் சஞ்சரித்து வந்தார்.

2. இப்படியிருக்க, யூதருடைய கூடாரப் பண்டிகை அடுத்திருந்தது. (லேவி. 23-34.)

3. அப்பொழுது அவருடைய சகோதரர் அவரை நோக்கி: நீர் செய்கிற அற்புதங்களை உம்முடைய சீஷர்களும் காணும்படியாக இவ்விடம்விட்டு யூதேயாவுக்குப் போம். (மத். 13-55.)

உருவகமின்றிப் பேசினார். ஜனங்களும் இப்படியே கண்டுபிடித்தார்கள். ஆகையால் இந்தக் கருத்து அவர்களுக்கு அரோசகத்தை எழுப்பினதினாலே, அவர்கள் சகிக்கமாட்டாமல்: இவன் தன் மாம்ஸத்தை நமக்கு எப்படி புசிக்கக் கொடுக்கக் கூடும் என்றார்கள். சீஷர்களில் அநேகரும், இது கடின வாக்காயிருக்கிறதே; இதை யார் கேட்பானென்று சொல்லி அவரைவிட்டுப் பிரிந்து போனார்கள்.

யேசுநாதர் சொன்னதை ஜனங்களும் சீஷரும் சரியாய்க்கண்டுபிடியாதிருந்தால், அவர் நியாயத்தின்படியே அவர்களுடைய அறியாமையை நீக்கி, அவர்களுக்கு உண்மையைத் தெளிவித்திருக்கவேண்டியது. அவர்கள் சரியாய்க் கண்டுபிடித்ததினாலேதான் அவர் தாம் சொன்னதை மாற்றாமல், இன்னும் அதிக உறுதியாக நிச்சயித்து: நீங்கள் மனுமகனுடைய மாம்ஸத்தைப் புசியாமலும், அவருடைய இரத்தத்தைப் பானம்பண்ணாமலுமிருந்தால், உங்களிடத்தில் சீவனைக்கொண்டிருக்க மாட்டீர்களென்று மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

3-வது. ஆயினும் புசிக்கவேண்டிய வகையை அவர்கள் கண்டுபிடியாமல் மற்ற மாம்ஸங்களைப்போல சமைத்துப் புசிப்பதாக்குமென்று தப்பான எண்ணங்கொண்டதை அவர் அறிந்து, அந்தத் தப்பிதமான எண்ணத்தைத் தமது வழக்கப்படி திருத்துகிறார். வகையைப்பற்றிய தப்பெண்ணத்தைத் திருத்தும்போதே, தாம் சொன்ன காரியத்தின் உண்மையை நிலைநிறுத்துகிறார். எப்படியெனில் நான் வாக்குத்தத்தம் பண்ணினபடியே என் மாம்ஸத்தையும் இரத்தத்தையும் போஜனபானமாக உண்மையாகவே கொடுப்பேனென்று நீங்கள் விசுவசிக்கவேண்டுமேயொழிய எவ்விதமாய்க் கொடுப்பேனென்று அறிவது உங்கள் புத்திக்கெட்டாது. எவ்விதங் கொடுப்பேனென்பது என்னைச் சார்ந்தது. விசுவாசத்தால் ஒத்துக்கொள்ளவேண்டியதொழிய சுபாவ புத்தியால் இதில் ஒன்றும் ஆகாதென்று தெரிவித்தார்.

4-வது. கடைசியாய் ஜனங்கள் போனபின், யேசுநாதர் அப்போஸ்தலர்களோடுகூடத் தனித்திருக்கும்போது, தாம் சொன்னதை அவர்கள் சரியாய்க் கண்டுபிடிக்காதிருந்தால், அப்பொழுதாவது அவர்களுக்குக் காரியத்தைத் உள்ளபடி தெளிவித்திருக்கவேண்டுமே. அப்படிக்கில்லாமல், தாம் சொன்னதை அவர்கள் சரியாய்க் கண்டுபிடித்திருந்ததினாலே தான் யேசுநாதர் அவர்களை நோக்கி: நீங்களும் போய்விட மனதாயிருக்கிறீர்களோ என்று அவர்களைக் கேட்க, அர்ச். இராயப்பர் அவர்கள் எல்லார்பேராலும் மறுமொழியாக: ஆண்டவரே, நித்திய சீவிய வார்த்தைகள் உம்மிடத்திலிருக்க, நாங்கள் (உம்மைவிட்டு) யாரிடத்தில் போவோம் என்றார். இவ்விதமாக அவர் மெய்யான சர்வேசுரனென்றும் அவராலே எல்லாங் கூடுமென்றும் அவர் வாக்குத்தத்தம் செய்தபடி நிறைவேற்றுவாரென்றும் அவர்கள் நம்பி அவர்மேல் விசுவாசமாயிருந்தார்கள்.

2. யூதர்கள் பார்வோன் அடிமைத்தனத்திலிருந்து மீட்கப்பட்டதைக்குறித்துப் பாஸ்காப் பண்டிகையும், அதற்குப் பின் 50-ம் நாள் மோயீசன் சீனா மலையில் பத்துக்கற்பனைகளைக் கற்பலகைகளில் பெற்றுக்கொண்டதைக் குறித்துப் பெந்தக்கோஸ்து என்ற திருநாளும், அவர்கள் முன்னோர்கள் நாற்பது வருஷமாய் வனாந்தரத்தில் கூடாரங்களிலே சஞ்சரித்து வந்ததைக் குறித்து, கூடாரத் திருநாளும் ஆக மூன்று பிரதான திருநாட்கள் ஒவ்வொன்றும் எவ்வெட்டு நாளாக யூதர்களால் கொண்டாடப்பட்டு வந்தது. (லேவி. 23-34.)

4. ஏனெனில் வெளியரங்கமாயிருக்கத் தேடுகிற எவனும் அந்தரங்கத்திலே ஒன்றையும் செய்யமாட்டான். நீர் இவைகளைச் செய்தால், உம்மை உலகத்துக்கு வெளிப்படுத்தும் என்றார்கள்.

5. அதேதெனென்றால் அவருடைய சகோதரரும் அவர்பேரில் விசுவாசமில்லாதிருந்தார்கள்.

6. யேசுநாதர் அவர்களை நோக்கி: என்னுடையநேரம் இன்னும் வரவில்லை. உங்களுடைய நேரமோ எப்போதும் ஆயத்தமாயிருக்கின்றது.

7. உலகம் உங்களைப் பகைக்கமாட்டாது; ஆனால் அதின் கிரியைகள் கெட்டவைகளென்று நான் அதின் மேல் சாட்சி சொல்லுகிறபடியால் அது என்னைப் பகைக்கின்றது.

8. இந்தப் பண்டிகைக்கு நீங்கள் போங்கள். நானோ என்னுடைய நேரம் இன்னம் நிறைவேறாததினாலே, இந்தப் பண்டிகைக்குப் போகிறதில்லை என்றார்.

9. அவர் இவைகளைச்சொன்னபின் கலிலேயாவிலே தங்கினார்.

10. ஆயினும் அவருடைய சகோதரர்கள் போனபின்பு, அப்பால் அவரும் பிரசித்தமில்லாமல் இரகசியமாய்ப் போனாற்போல பண்டிகைக்குப் போனார்.

11. திருநாளிலோ யூதர் அவரைத் தேடி: அவர் எங்கேயிருக்கிறார் என்று சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

12. ஆதலால் ஜனங்களுக்குள்ளே அவரைக்குறித்து வெகு முணுமுணுப் புண்டாகி: சிலர் அவரை நல்லவர் என்றார்கள். வேறுசிலர்: அப்படியல்ல, அவர் ஜனங்களை மயக்குகிறார் என்று சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

13. ஆயினும் யூதருக்குப் பயந்திருந்ததினாலே அவரைக்குறித்து ஒருவனும் பிரசித்தமாய்ப் பேசவில்லை.

14. பண்டிகை பாதியாகிறபோது, யேசுநாதர் தேவாலயத்துக்கு ஏறிப் போய்ப் போதித்துக்கொண்டிருந்தார்.

15. அப்பொழுது யூதர்கள் ஆச்சரியப்பட்டு: இவர் படியாதவராயிருக்க, இவருக்குக் கல்வி உண்டானதெப்படி என்றார்கள்.

16. யேசுநாதர் அவர்களுக்கு மறுமொழியாக: என் போதகம் என்னுடையதல்ல, என்னை அனுப்பினவருடையதாயிருக்கின்றது.

5. இவ்விடத்தில் அவருடைய சகோதரர் என்பது மரிய சலோமையம்மாள், கிளோயோப்பா மரியம்மாள் முதலியவர்களுடைய பிள்ளைகளாம். அவர்கள் தேவமாதாவுக்குச் சொந்தக்காரராகையால், அவர்களுடைய பிள்ளைகள் யேசுநாதருக்கு இந்நாட்டின் வழக்கப்படி சகோதரர் முறையாயிருந்தார்கள். (மத். 13-55.)

8. மூல பாஷையின் அர்த்தத்தைப் பார்த்தால், நீங்கள் இந்தத் திருநாளுக்குப் போங்கள், நான் இன்னும் இந்தத் திருநாளுக்குப் போகிறதில்லை என்றிருக்கிறது. (மெனோக்கியுஸ்) யேசுநாதர் சுவாமி இரகசியமாய்ப் போக நினைத்திருந்ததால் உங்களோடு நாம் பிரசித்தமாய் வருகிறதில்லையென்று சொல்லி, அவர்களை முந்தி அனுப்பிவிட்டார்.

14. பண்டிகை பாதியாகிறபோது என்பது: ஷெ பண்டிகை எட்டு நாளாகக் கொண்டாடப்பட்டபடியினாலே யேசுநாதர் அந்தப் பண்டிகையின் மத்தியிலே போனாரென்று கண்டுகொள்க.

15. இவர் படியாதிருக்க இவருக்குக் கல்வியுண்டானதெப்படி என்று யூதர் ஆச்சரியப்பட்டதேதெனில், யேசுநாதர் பரிசேயருடைய பள்ளிக்கூடங்களுக்குப் போய், அவர்களிடத்தில் வேதாகமங்களைக் கற்றுக்கொள்ளாதிருந்தாலும், அவர் வேதாகம வாக்கியங்களை எடுத்துரைக்கக் கண்டு, இவ்விதம் ஆச்சரியப்பட்டுப் பேசினார்கள்.

17. எவனாகிலும் அவருடைய சித்தத்தை நிறைவேற்ற மனதாயிருந்தால், இந்தப் போதகம் சர்வேசுரனால் உண்டானதோ அல்லது நானாகப் பேசுகிறேனோ என்று அறிந்துகொள்ளுவான்.

18. தானாகப் பேசுகிறவன் தன் சுய மகிமையைத் தேடுகிறான். தன்னை அனுப்பினவருடைய மகிமையைத் தேடுகிறவனோ, உண்மையுள்ளவனாயிருக்கிறான்; அவனிடத்தில் அநீதயில்லை. (அரு. 8-50.)

19. மோயீசன் உங்களுக்கு வேதப் பிரமாணத்தைத் தந்தாரல்லோ? அப்படியிருந்தும் உங்களில் ஒருவனும் அந்த வேதப் பிரமாணத்தின்படி நடக்கிறதில்லை. (யாத். 24-3.)

20. நீங்கள் ஏன் என்னைக் கொலை செய்யத் தேடுகிறீர்கள் என்றார். ஜனங்கள் அவருக்கு மறுமொழியாக: நீ பேய் பிடித்தவன், உன்னை எவன் கொலைசெய்யத் தேடுகிறான் என்றார்கள். (அரு. 5-18.)

21. யேசுநாதர் பிரத்தியுத்தரமாக அவர்களை நோக்கி: நான் ஓர் (அற்புதக்) கிரியையைச்செய்தேன். அதற்கு எல்லாரும் ஆச்சரியப்படுகிறீர்கள்.

22. விருத்தசேதனம் மோயீசனால் உண்டாகாமல் பிதாப்பிதாக்களால் உண்டாயிருந்தும், மோயீசன் அதை உங்களுக்கு நியமித்துத் தந்ததினாலே நீங்கள் ஓய்வு நாளிலும் மனிதனுக்கு விருத்தசேதனஞ் செய்கிறீர்கள். (லேவி. 12-3; ஆதி. 17-10.)

23. மோயீசனுடைய வேதப்பிரமாணம் மீறப்படாதபடிக்கு, ஓய்வுநாளிலே முதலாய் ஒரு மனிதன் விருத்தசேதனம் பெறலாமென்றால், ஓய்வுநாளிலே நான் ஒரு மனிதனை முழுதும் சௌக்கியப் படுத்தினதினாலே நீங்கள் என்மேல் எரிச்சலாயிருக்கிறீர்களோ?

24. நீங்கள் முகத்தைப் பார்த்துத் தீர்க்காமல், நீதியின்படியே தீர்ப்புத் தீருங்கள் என்று திருவுளம்பற்றினார். (உபா. 1-16.)

25. அப்பொழுது எருசலேம் நகரத்தாரில் சிலர்: இவனையல்லவா அவர்கள் கொல்லத் தேடுகிறார்கள்.

26. இதோ, இவன் பிரசித்தமாய்ப் பேசுகிறான். ஆயினும் அவர்கள் இவனுக்கு ஒன்றும் சொல்லாமலிருக்கிறார்களே. இவன்தான் மெய்யாகவே கிறீஸ்துநாதரென்று அதிகாரிகள் அறிந்து கொண்டார்களோ?

27. ஆனால், இவன் எவ்விடத்திலிருந்து வந்தானென்று நமக்குத்தெரியும். கிறீஸ்துநாதர் வரும்போதோ அவர் இன்ன இடத்திலிருந்து வருகிறவரென்று ஒருவனுக்கும் தெரியாதே என்றார்கள். (எசா. 53-7, 8; அப்.8-33.)

28. அதைப்பற்றி யேசுநாதர் தேவாலயத்தில் உரத்த சத்தமாய் உபதேசித்துக் திருவுளம்பற்றினதாவது: நீங்கள் என்னையும் அறிவீர்கள்; நான் எங்கேயிருந்து வருகிறேனென்றும் அறிவீர்கள்; ஆயினும் நானாக வரவில்லை; என்னை அனுப்பினவர் சத்தியமுள்ளவர்; அவரை நீங்கள் அறியாதிருக்கிறீர்கள்.

17. சர்வேசுரனுடைய சித்தத்தின்படி நடக்க விரும்புகிறவன் யேசுநாதருடைய உபதேசம் சர்வேசுரனாலே உண்டானதென்று எளிதாய்க் கண்டு பிடிப்பான். ஆகையால் யூதர்கள் பாவ வழியை விட்டுச் சர்வேசுரனுடைய கற்பனைகளின்படியே நடக்க மனமில்லாமலிருந்ததினாலே, யேசுநாதருடைய திவ்விய உபதேசத்தின் பேரில் அவிசுவாசிகளாயிருந்தார்கள். சத்திய வேதத்தைக் கைக்கொள்ளாத அஞ்ஞானிகளும், அதைப் புரட்டுகிற பதிதர்களும், அதின் பேரில் பிரியமில்லாத கெட்ட கிறீஸ்துவர்களும் அந்த யூதர்களுக்கு ஒப்பானவர்களென்று சொல்லத்தகும்.

21. இதிலே யேசுநாதர் குறிக்கிற அற்புத கிரியை முப்பத்தெட்டு வருஷம் வியாதியாயிருந்தவனைத் தாம் குணமாக்கின கிரியை தான். (அரு. 5-5, 9.) காண்க.

29. நான் அவரிடத்தினின்று உண்டாயிருக்கிறதினாலும், அவரே என்னை அனுப்பினதினாலும், நான் அவரை அறிந்திருக்கிறேன் என்றார்.

30. ஆதலால் அவர்கள் அவரைப் பிடிக்க வகைதேடிக் கொண்டிருந்தார்கள்; ஆயினும் அவருடைய நேரம் இன்னும் வராததினாலே ஒருவனும் அவர்மேல் கை போடவில்லை.

31. ஜனக்கூட்டத்திலோ அநேகர் அவரை விசுவசித்து: கிறீஸ்துநாதர் வரும்போது, இவர் செய்கிற அற்புதங்களைவிட அதிகமாய்ச் செய்வாரோ என்றார்கள்.

32. ஜனங்கள் அவரைக்குறித்து இப்படி முணு முணுவெனப் பேசிக்கொள்ளுகிறதைப் பரிசேயர் கேட்டபொழுது, அவரைப்பிடித்துக்கொண்டு வரும்படிக்கு அதிகாரிகளும் பரிசேயரும் சேவகரை அனுப்பினார்கள்.

33. அப்பொழுது யேசுநாதர் அவர்களைநோக்கி: இன்னுங் கொஞ்சக்காலம் உங்களோடு இருக்கிறேன்; பின்னும் என்னை அனுப்பினவரிடத்தில் போகிறேன்.

34. அப்பொழுது என்னைத் தேடுவீர்கள்; ஆயினும் என்னைக் காணமாட்டீர்கள். நானிருக்கிற இடத்துக்கு வரவும் உங்களாலே கூடாது என்றார். (அரு. 13-33.)

35. ஆகையால் யூதர்கள் தங்களுக்குள்ளே பேசிக்கொண்டதாவது: இவர் எங்கே போகப்போகிறார்? நாம் காணமாட்டோமாமே. புறஜாதியாருக்குள்ளே சிதறி இருக்கிறவர்களிடத்தில் போய், அஞ்ஞானிகளுக்குப் போதிக்கப்போகிறாரோ?

36. என்னைத் தேடியும், காணமாட்டீர்கள்; நானிருக்கிற இடத்துக்கு வரவும் உங்களாலே கூடாது என்கிறாரே; இந்தவாக்கியத்தின் கருத்தென்ன என்றார்கள்.

37. பின்பு பண்டிகையின் முடிவாகிய பெரியநாளிலே யேசுநாதர் நின்று சத்தமிட்டு: யாதொருவன் தாகமாயிருந்தால் என்னிடத்திலேவந்து பானம் பண்ணுவானாக. (லேவி. 23-27; இசை. 12-3; 55-1.)

38. வேதவாக்கியம் சொல்லுகிறபடியே என்னிடத்தில் விசுவாசமாயிருக்கிறவனுடைய வயிற்றினின்று சீவஜல நதிகள் பாய்ந்தோடும் என்றார். (உபா. 18-15; இசை. 12-3; 44-3.)

39. தம்மை விசுவசிக்கிறவர்கள் அடையப்போகிற இஸ்பிரீத்துசாந்துவைக்குறித்து இதைத் திருவுளம்பற்றினார். அதேதென்றால் யேசுநாதர் இன்னம் மகிமைப்படாதிருந்ததினாலே, இஸ்பிரீத்துசாந்துவானவர் இன்னம் தந்தருளப்படாதிருந்தார்.

40. ஜனக்கூட்டத்தில் அநேகர் இந்த வாக்கியங்களைக் கேட்டபோது: மெய்யாகவே இவர் தீர்க்கதரிசியாயிருக்கிறார் என்றார்கள்.

41. வேறுசிலர்: இவர் கிறீஸ்துநாதர்தான் என்றார்கள்; இன்னுஞ்சிலர்: கிறீஸ்துநாதர் கலிலேயாவிலிருந்தோ வருவார்.

42. தாவீதின் சந்ததியிலும், தாவீது இருந்த பெத்லகேம் ஊரிலுமிருந்து கிறீஸ்துநாதர் வருகிறாரென்று வேதாகமம் சொல்லுகிறதில்லையோ என்றார்கள். (மிக். 5-2; மத். 2-6.)

38. இஸ்பிரீத்துசாந்துவினிடமிருந்து வருகிற வரப்பிரசாதம் சீவிய ஜலம் என்னப்படும். தேவ விசுவாசமுள்ளவன் தான் அடைந்திருக்கிற வரப்பிரசாத ஜலம் மற்றவர்களுடைய இருதயத்திலும் பாயும்படி முயற்சி செய்வான்.

43. இவ்விதமாக அவரைக் குறித்து ஜனங்களுக்குள்ளே பிரிவினையுண்டாயிற்று.

44. அப்படியிருக்க, அவர்களில் சிலர் அவரைப் பிடிக்க மனதாயிருந்தார்கள்; ஆனால் ஒருவனும் அவர் மேல் கைபோடவில்லை.

45. ஆகையால் அந்தச் சேவகர் பிரதான ஆசாரியர்களிடத்திலும், பரிசேயரிடத்திலும் திரும்பிவந்தார்கள். அப்பொழுது இவர்கள்: நீங்கள் ஏன் அவனைக் கொண்டுவரவில்லை என்று அவர்களைக் கேட்டதற்கு:

46. சேவகர் மறுமொழியாக: இந்த மனுஷனைப்போல ஒருபோதும் எவனும் பேசினதில்லை என்றார்கள்.

47. ஆகையால் பரிசேயர் அவர்களுக்கு மறுமொழியாக: ஏது, நீங்களும் (அவனுடைய) மாய்கையில் அகப்பட்டீர்களோ?

48. அதிகாரிகளிலாகிலும் பரிசேயரிலென்கிலும் எவனாவது அவன்பேரில் விசுவாசமானானோ?

49. வேதமறியாத இந்த ஜனங்கள் சபிக்கப்பட்டவர்களாய் இருக்கிறார்கள் என்றார்கள்.

50. அப்பொழுது யேசுநாதரிடத்தில் இரவில் வந்தவனும், அவர்களில் ஒருவனுமாகிய நிக்கோதேமு என்பவன் அவர்களை நோக்கி:

51. ஒரு மனிதனுடைய வாக்குமூலத்தைக் கேட்டு, அவன் செய்கிறது ஏதென்று அறிகிறதற்கு முன்னே நம்முடைய வேத சட்டம் அவனுக்குத் தீர்வையிடுமோ என்றான். (உபா. 17-8; 19-15.)

52. அதற்கு அவர்கள்: நீரும் கலிலேயனோ? கலிலேயாவிலிருந்து தீர்க்கதரிசிகள் தோன்றுகிறதில்லையென்று நீரோ வேதாகமங்களை ஆராய்ந்துபாரும் என்று சொல்லி,

53. அவரவர் தங்கள் தங்கள் வீட்டுக்குப் போய்விட்டார்கள்.

## 8-ம். அதிகாரம்.

யேசுநாதர் பரிசேயரிடத்திலிருந்து ஓர் விபசார ஸ்திரீயைத் தப்புவித்து, அவர்களைக் கண்டித்ததும், யூதர்களுக்கு உபதேசித்து எதிர் நியாயங்காட்டினதும், தம்மைக் கல்லாலெறியவந்தவர்களிடத்தினின்று மறைந்ததுமாகிய வர்த்தமானங்கள்.

1. அப்பொழுது யேசுநாதர் ஒலிவமலைக்குப் போனார்.

2. (மறுநாள்) அதிகாலமே அவர் தேவாலயத்துக்கு மறுபடியும் வந்தபோது, ஜனங்களெல்லாரும் அவரிடத்தில் வந்தார்கள். அவர் உட்கார்ந்து அவர்களுக்கு உபதேசித்துக்கொண்டிருந்தார்.

3. அப்பொழுது விபசாரத்தில் பிடிபட்ட ஓர் ஸ்திரீயை வேதபாரகரும் பரிசேயரும் அவரிடத்தில் கொண்டுவந்து, அவளை நடுவே நிறுத்தி:

4. போதகரே, இந்த ஸ்திரீ இப்பொழுதுதான் விபசாரத்தில் பிடிபட்டவள்.

5. இப்படிப்பட்டவர்களைக் கல்லால் எறிந்து கொல்லவேண்டும் என்று மோயீசன் வேதப்பிரமாணத்தில் எங்களுக்குக் கட்டளையிட்டிருக்கிறார். அப்படியிருக்க, நீர் என்ன சொல்லுகிறீர் என்று அவரிடத்தில் கேட்டார்கள். (லேவி. 20-10.)



"உங்களுக்குள்ளே பாவமில்லாதவன் இவள் மேலே முதலாவது கல்லெறியக்கடவான்." (அருள. 8-7.)

6. ஏனெனில் அவர்மேல் குற்றஞ் சாட்டுவதற்கு ஏதுவாகும்படி அவளைச் சோதிக்கத்தக்கதாக இப்படிக் கேட்டார்கள். யேசுநாதரோ கீழே குனிந்து, தமது விரலால் தரையில் எழுதிக்கொண்டிருந்தார்.

7. ஆயினும் அவர்கள் ஓயாமல் அவரைக் கேட்டுக்கொண்டிருந்தபடியால், அவர் நிமிர்ந்து பார்த்து: உங்களுக்குள்ளே பாவமில்லாதவன் இவள் மேலே முதலாவது கல்லெறியக்கடவான் என்று அவர்களுக்குச் சொல்லி,

8. மறுபடியும் குனிந்து, தரையில் எழுதிக்கொண்டிருந்தார்.

9. அவர்கள் இந்த வார்த்தையைக் கேட்டு, மூப்பர் முதற்கொண்டு ஒருவருக்குப்பின் ஒருவராய்ப் போய்விட்டார்கள். யேசுநாதர் மாத்திரமிருந்தார்; அந்த ஸ்திரீயும் நடுவே நின்றாள்.

10. அப்பொழுது யேசுநாதர் நிமிர்ந்து: ஸ்திரீயே, உன்பேரில் குற்றஞ் சாட்டினவர்கள் எங்கே? ஒருவரும் உனக்கு ஆக்கினைத் தீர்வையிடவில்லையோ என்க,

11. அவள்: சுவாமீ, ஒருவனும் ஆக்கினைத் தீர்வையிடவில்லை என்றாள். அப்பொழுது யேசுநாதர்: நானும் உனக்கு ஆக்கினைத் தீர்வையிடவில்லை; நீ போ, இனிப் பாவஞ்செய்யாதே என்று திருவுளம்பற்றினார்.

12. யேசுநாதர் மீளவும் ஜனங்களோடு பேசி, அவர்களைநோக்கி: நான் உலகத்துக்கு ஒளியாயிருக்கிறேன். என்னைப் பின் செல்லுகிறவன் இருளிலே நடவாமல், ஜீவியத்தின் ஒளியைக்கொண்டிருப்பான் என்றார். (1 அரு. 1-4.)

13. அப்பொழுது பரிசேயர் அவரைநோக்கி: நீயே உன்னைக் குறித்துச் சாட்சியஞ்சொல்லுகிறாய், உன்னுடைய சாட்சியம் உண்மையானதல்ல என்றார்கள்.

14. யேசுநாதர் அவர்களுக்கு மறுமொழியாக: என்னைக்குறித்து நான் சாட்சியஞ் சொன்னாலும், என் சாட்சியம் உண்மையாயிருக்கின்றது. ஏனெனில் நான் எங்கேயிருந்து வந்தேனென்றும், எங்கே போகிறேனென்றும் அறிவேன்; நீங்களோ, நான் எங்கேயிருந்து வருகிறேனென்றும், அல்லது எங்கே போகிறேனென்றும் அறியீர்கள்.

15. நீங்கள் மாம்சத்துக்கு ஒத்தபடி நியாயந் தீர்க்கிறீர்கள். நான் ஒருவனையும் நியாயந் தீர்க்கிறதில்லை.

16. நான் நியாயந் தீர்த்தாலும், என் தீர்ப்பு உண்மையானது: ஏனெனில் நான் தனிமையாயிருக்கிறதில்லை. நானும் என்னை அனுப்பின பிதாவுமாக இருக்கிறோம்.

17. இரண்டுபேருடைய சாட்சியம் உண்மையென்று உங்கள் வேதப்பிரமாணத்தில் எழுதியிருக்கின்றதே. (உபா. 17-6.)

18. என்னைக்குறித்து நான் சாட்சி சொல்லுகிறவனாயிருக்கிறேன். என்னை அனுப்பின பிதாவும் என்னைக் குறித்துச் சாட்சியஞ்சொல்லுகிறார் என்றார்.

---

6. யேசுநாதர் அவளைக் கல்லாலெறியச் சொன்னால், கொடூரமுள்ளவரென்றும், ஜனங்களை இரட்சிக்கவேயன்றி நடுத்தீர்க்கத் தாம் வரவில்லை என்று சொன்னவர், இப்பொழுது இந்தக் கடின தீர்வையிட்டால் பொய்யரென்றும் ஜனங்களுக்குக் காண்பித்து, அவர்மேல் பகையை மூட்டவும், அவளை ஆக்கினையின்றி விடுதலை செய்தால், தேவ கட்டளையை மீறுகிறவரென்று சங்கத்தார் முன்பாக அவர்மேல் குற்றஞ்சாட்டவும், வழியாகுமென்று எண்ணி, இந்தத் தந்திரம் பண்ணினார்கள்.

19. அப்பொழுது அவர்கள்: உம்முடைய பிதா எங்கேயிருக்கிறார் என்று அவரைக் கேட்க, யேசுநாதர் பிரத்தியுத்தாரமாக: என்னையும் அறியீர்கள்; என் பிதாவையும் அறியீர்கள். நீங்கள் என்னை அறிந்திருந்தால், ஒருவேளை என் பிதாவையும் அறிந்திருப்பீர்கள் என்றார்.

20. யேசுநாதர் தேவாலயத்தில் உபதேசித்துக்கொண்டிருக்கும்போது, காணிக்கைப் பெட்டியிருந்த இடத்தில் இந்த வாக்கியங்களைத் திருவுளம்பற்றினார். ஆயினும் அவருடைய நேரம் இன்னும் வராததினாலே ஒருவனும் அவரைப் பிடிக்கவில்லை.

21. மீண்டும் யேசுநாதர் அவர்களை நோக்கி: நான் போகிறேன், நீங்கள் என்னைத் தேடுவீர்கள்: மேலும் உங்கள் பாவத்திலே சாவீர்கள்: நான் போகிற இடத்திற்கு வரவும் உங்களாலே கூடாது என்றார்.

22. அதற்கு யூதர்கள்: நான் போகிற இடத்திற்கு வரவும் உங்களாலே கூடாது என்கிறானே; தன்னைத்தான் கொலைசெய்துகொள்ளுவானோ என்றார்கள்.

23. அப்பொழுது அவர் அவர்களை நோக்கி: நீங்கள் கீழேயிருந்து உண்டானவர்கள். நான் மேலேயிருந்து வந்திருக்கிறேன். நீங்கள் இவ்வுலகத்தாராயிருக்கிறீர்கள்; நான் இவ்வுலகத்தான் அல்ல.

24. இதைப்பற்றியே நீங்கள் உங்கள் பாவங்களிலே சாவீர்களென்று உங்களுக்குச் சொன்னேன். நானே அவரென்று நீங்கள் விசுவசியாவிட்டால், உங்கள் பாவத்திலே சாவீர்கள் என்றார்.

25. அதற்கு அவர்கள்: நீர் யார் என்று கேட்க, யேசுநாதர் அவர்களுக்கு மறுமொழியாக: உங்களிடத்தில் பேசுகிற நானே ஆதி.

26. உங்களைக்குறித்துப் பேசவும், நியாயந்தீர்க்கவும் எனக்கு அநேகங் காரியங்களுண்டு. ஆனால் என்னை அனுப்பினவர் சத்தியர். நானும் அவரிடத்தில் கேள்விப்பட்டவைகளையே உலகத்தில் பேசுகிறேன் என்றார். (உரோ. 3-4.)

27. அவர் சர்வேசுரனைத் தம்முடைய பிதாவென்று சொன்னதாக அவர்கள் கண்டுபிடிக்கவில்லை.

28. ஆகையால் யேசுநாதர் மறுபடியும் அவர்களை நோக்கி: நீங்கள் மனுமகனை உயர்த்தினபின்பு, நானே அவரென்றும், நானாக ஒன்றுஞ் செய்யாமல் என் பிதா எனக்குப் படிப்பித்தபடி இவைகளைப் பேசுகிறேனென்றும் அறிந்துகொள்ளுவீர்கள்.

29. என்னை அனுப்பினவர் என்னோடுகூட இருக்கிறார்; அவர் என்னைத் தனியே விட்டுவிடவில்லை; ஏனெனில் நான் எப்பொழுதும் அவருக்குப் பிரியமானவைகளைச் செய்துவருகிறேன் என்றார்.

30. யேசுநாதர் இவைகளைச்சொல்லுகையில் அநேகர் அவர்மேல் விசுவாசமானார்கள்.

31. ஆகையால் யேசுநாதர் தம்மை விசுவசித்த யூதர்களைநோக்கி: நீங்கள் என் வாக்கியத்திலே நிலைத்திருந்தால், மெய்யாகவே என்னுடைய சீஷர்களாயிருப்பீர்கள்.

25. நானே ஆதி என்பதை இந்த வசனத்தில்: நானே உங்களிடத்தில் ஆதிமுதல் பேசுகிறவர் என்றும் மொழிபெயர்க்கலாம். இதற்கு: நான் துவக்க முதல் உங்களுக்குச் சொல்லிக்கொண்டு வந்ததுபோல, நானே உலகத்துக்கெல்லாம் ஆதியும் ஒளியுமாய் இருக்கிறேன் என்றர்த்தமாகும்.

32. சத்தியத்தையும் அறிந்துகொள்வீர்கள்; சத்தியம் உங்களைச் சுயாதீனராக்கும் என்றார்.

33. அப்பொழுது அவர்கள் அவருக்கு மறுமொழியாக: நாங்கள் அபிரகாமின் சந்ததியார், நாங்கள் ஒருபோதும் எவனுக்கும் அடிமைப்பட்டிருந்ததில்லையே. இப்படியிருக்கச் சுயாதீனராவீர்களென்று நீர் சொல்லுவதெப்படி என்றார்கள்.

34. யேசுநாதர் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக: மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்: பாவத்தைச் செய்கிற எவனும் பாவத்துக்கு அடிமைப்பட்டவனாய் இருக்கிறான். (உரோ. 6-15; 2 இரா. 2-19.)

35. அடிமையானவன் என்றென்றைக்கும் வீட்டில் நிலைக்கொள்ளான். குமாரனோ என்றென்றைக்கும் நிலைக்கொள்ளுகிறான்.

36. ஆகையால் குமாரன் உங்களை விடுதலையாக்கினால், மெய்யாகவே நீங்கள் சுயாதீனராயிருப்பீர்கள். (உரோ. 8-2; கலா. 4-6.)

37. நீங்கள் அபிரகாமுடைய புத்திரரென்று அறிவேன். ஆனாலும் என் வாக்கியத்துக்கு நீங்கள் இடங்கொடாததினாலே, என்னைக் கொலைசெய்யத் தேடுகிறீர்கள்.

38. நான் என் பிதாவினிடத்தில் கண்டதைப் பேசுகிறேன். நீங்களும் உங்கள் பிதாவினிடத்தில் கண்டவைகளைச் செய்கிறீர்கள் என்றார்.

39. அவர்கள் அவருக்குப் பிரத்தியுத்தாரமாக: அபிரகாமே எங்கள் பிதா என்றார்கள். யேசுநாதர் அவர்களைநோக்கி: நீங்கள் அபிரகாமுடைய புத்திரரானால், அபிரகாமுடைய செய்கைகளைச் செய்யுங்கள். (உரோ. 9-7.)

40. இப்பொழுதோ, சர்வேசுரனிடத்தில் கேட்ட சத்தியத்தை உங்களுக்குச் சொன்ன மனிதனாகிய என்னைக் கொலைசெய்யத் தேடுகிறீர்கள். அபிரகாம் இப்படிச் செய்யவில்லையே.

41. நீங்கள் உங்கள் பிதாவின் செய்கைகளைச் செய்கிறீர்கள் என்றார். அதற்கு அவர்கள்: நாங்கள் வேசித்தனத்தில் பிறந்தவர்கள் அல்ல; கடவுள் ஒருவரே எங்களுக்குப் பிதா என்றார்கள்.

42. அப்பொழுது யேசுநாதர் அவர்களைநோக்கி: கடவுள் உங்கள் பிதாவானால், என்னை மெய்யாகவே நேசித்திருப்பீர்கள். ஏனெனில் நான் கடவுளிடத்திலிருந்து புறப்பட்டு வந்திருக்கிறேன். ஆயினும் நான் என் சுயமாய் வரவில்லை; அவரே என்னை அனுப்பினார்.

43. நீங்கள் ஏன் என் வாக்கை அறியாதிருக்கிறீர்கள்? என் உபதேசத்தைக் கேட்க மாட்டாததினாலல்லோ.

44. நீங்கள் உங்கள் தகப்பனாகிய பசாசினால் உண்டானவர்கள். மேலும் உங்கள் தகப்பனுடைய இச்சைகளை நிறைவேற்ற விரும்புகிறீர்கள். ஆதிமுதற்கொண்டு அவன் கொலைபாதகனாயிருந்தான். சத்தியம் அவனிடத்தில் இல்லாததினாலே, அவன் சத்தியத்தில் நிலைக்கவில்லை. அவன் பொய்யனும், பொய்க்கு அப்பனுமாயிருக்கிறபடியினாலே அவன் பொய் சொல்லும்போது தன் உற்பத்தியாகச் சொல்லுகிறான். (1 அரு. 3-8.)

33. யூதர்கள் எஜிப்துத் தேசத்திலும், பபிலோன் பட்டணத்திலும் அடிமைகளாயிருந்ததுந்தவிர, யேசுநாதர்சுவாமியுடைய காலத்திலே ரோமானருடைய அரசாட்சிக்கு உட்பட்டிருந்தார்கள். அப்படியிருக்க நாங்கள் ஒருக்காலும் அடிமைகளாய் இருந்ததில்லையென்று பரிசேயர் சொன்னது சுத்தப் பிசகு.

45. ஆயினும் நான் உங்களுக்குச் சத்தியத்தைச் சொல்லுகிறதினால், நீங்கள் என்னை விசுவசிக்கிறதில்லை.

46. என்னிடத்திலே பாவம் உண்டென்று உங்களில் எவன் என்னைக் குற்றப்படுத்தக்கூடும்? நான் உங்களுக்குச் சத்தியத்தைச் சொல்லியிருக்க, நீங்கள் ஏன் என்னை விசுவசிக்கிறதில்லை?

47. சர்வேசுரனால் உண்டானவன் சர்வேசுரனுடைய வாக்கியங்களுக்குச் செவிகொடுக்கிறான். நீங்கள் சர்வேசுரனால் உண்டாகாதவர்களாகையால், செவி கொடாதிருக்கிறீர்கள் என்றார். (1 அரு. 4-6.)

48. அப்பொழுது யூதர்கள் அவருக்குப் பிரத்தியுத்தாரமாக: நீ சமாரியனென்றும், பேய்பிடித்தவனென்றும் நாங்கள் சொல்லுகிறது சரியல்லவோ என்றார்கள். (அரு. 10-20; மத். 9-34.)

49. அதற்கு யேசுநாதர் மறுமொழியாக: நான் பேய்பிடித்தவனல்ல; நான் என் பிதாவைச் சங்கிக்கிறேன். நீங்களோ என்னைச் சங்கையீனப்படுத்தினீர்கள்.

50. ஆயினும் நான் எனக்கு மகிமையைத் தேடுகிறதில்லை; அதைத் தேடுகிறவரும், நியாயம் தீர்க்கிறவருமாகிய ஒருவர் இருக்கிறார்.

51. யாதொருவன் என் வார்த்தையைக் கைக்கொண்டால், என்றென்றைக்கும் சாவைக் காண்பதில்லை என்று மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

52. அப்பொழுது யூதர்கள் அவரை நோக்கி: நீ பேய்பிடித்தவன் என்று இப்பொழுது அறிந்துகொண்டோம். அபிரகாமும், தீர்க்கதரிசிகளும் மரித்தார்கள்; நீயோ: யாதொருவன் என் வார்த்தையைக் கைக்கொண்டால், என்றென்றைக்கும் மரணச் சுவையாரான் என்கிறாயே.

53. எங்கள் பிதாவாகிய அபிரகாமிலும் நீ பெரியவனோ? அவர் மரித்தார்; தீர்க்கதரிசிகளும் மரித்தார்களே; உன்னை நீ எப்படிப்பட்டவனாக்குகிறாய் என்றார்கள்.

54. யேசுநாதர் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக: நானே என்னை மகிமைப்படுத்தினால், என் மகிமை ஒன்றுமில்லை. என் பிதாவே என்னை மகிமைப்படுத்துகிறவர். அவரையே நீங்கள் உங்கள் தெய்வம் என்கிறீர்கள்.

55. ஆயினும் நீங்கள் அவரை அறியவில்லை; நானோ அவரை அறிந்திருக்கிறேன். நான் அவரை அறியேன் என்பேனாகில், உங்களைப்போல நானும் பொய்யனாயிருப்பேன். அவரை நான் அறிந்து, அவருடைய வாக்கியத்தை அநுசரிக்கிறேன்.

56. உங்கள் பிதாவாகிய அபிரகாம் என்னுடைய நாளைக் காணவேண்டுமென்று ஆவலோடு ஆசித்தார்; (அதைக்) கண்டு களிகூர்ந்தார் என்றார். (ஆதி. 22-18.)

57. அப்பொழுது யூதர்கள் அவரை நோக்கி: உனக்கு இன்னும் ஐம்பது வயதில்லையே; நீ அபிரகாமைக் கண்டாயோ என்றார்கள்.

56. சர்வேசுரன் அபிரகாமை நோக்கி: உன் சந்ததியில் இரட்சகர் பிறப்பாரென்று வாக்குத்தத்தஞ் செய்தபொழுதே, அந்த இரட்சகருடையத் திருப் பிறப்பை அவருக்குக் காட்சியில் காண்பித்து, அவரைக் கண்டு மகிழச் செய்தாரென்று வேதபாரகர்கள் சொல்லுகிறார்கள்.

58. யேசுநாதர் அவர்களை நோக்கி: அபிரகாம் உண்டாவதற்கு முன்னமே நான் இருக்கிறேன் என்று மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

59. அப்பொழுது அவர்கள் அவர் மேல் எறியும்படிக் கல்லுகளை எடுத்தார்கள். யேசுநாதரோ மறைந்து, தேவாலயத்தினின்று வெளியே போனார்.

## 9-ம். அதிகாரம்.

*கர்த்தர் பிறவிக்குருடனுக்குப் பார்வையளித்த அற்புதம்.*

1. அவர் அப்புறம் போகையில், பிறவிக்குருடனை ஒரு மனிதனைக் கண்டார்.

2. அப்பொழுது அவருடைய சீஷர்கள் அவரைநோக்கி: சுவாமீ, இவன் குருடனைப் பிறந்தது யார் செய்த பாவம்? இவன் செய்த பாவமா, இவனைப் பெற்றவர்கள் செய்த பாவமா? என்று கேட்க,

3. யேசுநாதர் மறுமொழியாக: அது இவன் செய்த பாவமும் அல்ல, இவனைப் பெற்றவர்கள் செய்த பாவமும் அல்ல; இவனிடத்தில் சர்வேசுரனுடைய செயல் விளங்கும்பொருட்டே (இவன் குருடனாய்ப் பிறந்தான்).

4. பகல் உள்ளமட்டும் நான் என்னை அனுப்பினவருடைய கிரியைகளைச் செய்யவேண்டும். ஒருவனும் வேலை செய்யக்கூடாத இராக்காலம் வருகின்றது.

5. நான் உலகத்தில் இருக்குந்தனையும் உலகத்துக்கு ஒளியாயிருக்கிறேன் என்றார். (அரு. 1-4.)

6. இவைகளைச் சொன்னபின்பு, அவர் தரையிலே துப்பி, உமிழ்நீரால் சேறுக்கி, அந்தச்சேற்றை அவனுடைய கண்களின்மேல் பூசி: (மாற். 8-23.)

7. அவனை நோக்கி: நீ போய், சீலோவே என்னும் குளத்திலே கழுவு என்றார். சீலோவே என்பதற்கு அனுப்பப்பட்டவன் என்று அர்த்தமாம். அப்படியே அவனும் போய்க் கழுவி, பார்வையடைந்தவனாய்த் திரும்பிவந்தான்.

8. அப்பொழுது அயலகத்தாரும், அவன் பிச்சைக்காரனாயிருந்ததை முன் கண்டிருந்தவர்களும்: இவன் உட்கார்ந்து, பிட்சை வாங்கிக்கொண்டிருந்தவன் அல்லவா என்க, சிலர்: அவன் தான் என்றார்கள்.

9. வேறு சிலர்: பரிச்சேதமில்லை; ஆனால் அவனுடைய சாயலாயிருக்கிறான் என்றார்கள். அவனோ: நான் தான் அவன் என்றான்.

10. அப்பொழுது அவர்கள்: உனக்குக் கண்கள் திறக்கப்பட்டதெப்படி? என்று அவனைக் கேட்க,

2. சரீரத்துக்கடுத்த குறைகள் முதலிய லௌகீக துன்பங்கள் அநேக சமயங்களில் முன்னோர் செய்த பாவங்களுக்கு ஆக்கினையாகச் சம்பவிக்கிறது. (யாத். 20-5.) ஆயினும் எப்பொழுதுமல்ல. சர்வேசுரன் ஒருவருக்கே தெரியலான வேறநேக முகாந்தரங்களைப் பற்றியும் அந்தக் குறைகள் உண்டாகலாம். ஆனால் மறு பிறப்பு உண்டென்றும், அவனவன் செய்த பாவ புண்ணியத்துக்குத் தக்கது அந்த மறு பிறப்பிலே மேன்மையாய் அல்லது நிசிதமாய்ப் பிறந்து சீவிப்பானென்றும் அஞ்ஞானிகள் சொல்லுவது அபத்தமென்று கர்த்தர் சொன்ன வாக்கியத்தால் தெளிவாய்த் துலங்குகிறது.

7. அரு. 5-ம் அதி. 4-ம் வசன வியாக்கியானம் காண்க. ஜலத்துக்குச் சுபாவமாயில்லாத இந்த மேலான சக்தி யேசுநாதர் சுவாமியுடைய வாக்கினால் அதற்கு உண்டானது போல, ஞானஸ்நான முதலிய தேவத்திரவிய அநுமானங்களுக்குள்ள சக்தியும் இவ்விய கர்த்தருடைய வாக்கினால் உண்டாகிறதென்றறியவும்.

11. அவன் பிரத்தியுத்தாரமாக: யேசு என்னப்படுகிற அந்த மனுஷன் சேறுண்டாக்கி, என் கண்களிலே பூசி: நீ போய், சிலோவேக் குளத்தில் கழுவு என்று எனக்குச் சொன்னார். அப்படியே நான் போய்க் கழுவினேன், பார்வையடைந்தேன் என்றான்.

12. மீளவும் அவர்கள்: அவர் எங்கேயிருக்கிறார் என்று அவனைக் கேட்க, அவன்: நான் அறியேன் என்றான்.

13. குருடனாயிருந்த அவனைப் பரிசேயரிடத்தில் கூட்டிக்கொண்டுபோனார்கள்.

14. யேசுநாதர் சேறுண்டாக்கி, அவனுடைய கண்களைத் திறந்த நாள் ஓய்வு நாளாயிருந்தது.

15. ஆகையால் பரிசேயர்: அவன் பார்வையடைந்தது எப்படியென்று மறுபடியும் அவனைக் கேட்டார்கள். அவன் அவர்களை நோக்கி: அவர் என் கண்களின்மேல் சேற்றைப் பூசினார். பின்பு நான் கழுவினேன்; காண்கிறேன் என்றான்.

16. அப்பொழுது பரிசேயரில் சிலர்: ஓய்வுநாளை அநுசரியாத இந்த மனுஷன் சர்வேசுரனிடத்திலிருந்து வந்தவனல்ல என்றார்கள். வேறு சிலரோ: பாவியான மனுஷன் இந்த அற்புதங்களை எப்படிச் செய்யக்கூடும் என்றார்கள். இத்தன்மையாக அவர்களுக்குள்ளே பிரிவினையுண்டாயிற்று.

17. ஆகையால் அவர்கள் மறுபடியும் குருடனை நோக்கி: உன் கண்களைத் திறந்தவனைப்பற்றி நீ என்ன சொல்லுகிறாய் என்றார்கள். அதற்கு அவன்: அவர் தீர்க்கதரிசி என்றான்.

18. அப்படியிருக்க, யூதர்கள் பார்வையடைந்தவனுடைய தாய் தந்தைகளை அழைப்பிக்கும்வரையில், அவன் குருடனாயிருந்து பார்வையடைந்தானென்று, அவன் மட்டில் விசுவாசமில்லாமல்,

19. அவர்களை நோக்கி: உங்கள் மகன் குருடனாய்ப் பிறந்தான் என்று சொல்லுகிறீர்களே, அவன் இவன்தானா? அப்படியானால் இப்பொழுது எப்படிப் பார்வையடைந்திருக்கிறான் என்று கேட்டார்கள்.

20. அவனுடைய தாய் தந்தைகள் அவர்களுக்கு மறுமொழியாக: இவன் எங்கள் குமாரன்தானென்றும், குருடனாய்ப் பிறந்தானென்றும் எங்களுக்குத் தெரியும்.

21. இப்பொழுது எப்படிப் பார்வையடைந்திருக்கிறான் என்று எங்களுக்குத் தெரியாது; இவன் கண்களைத் திறந்தவர் யாரென்றும் நாங்கள் அறியோம். இவனையே கேளுங்கள்; இவனுக்குப் பிராயமுண்டு; இவனே தன்னைக் குறித்துச் சொல்லட்டும் என்றார்கள்.

22. அவனுடைய தாய் தந்தைகள் யூதர்களுக்குப் பயந்திருந்ததினிமித்தம் இப்படிச் சொன்னார்கள். ஏனெனில் எவனாவது அவரைக் கிறீஸ்துநாதரென்று அறிக்கைபண்ணினால், அவன் ஜெப ஆலயத்துக்குப் புறம்பாக்கப்படுவானென்று ஏற்கனவே யூதர்கள் கட்டுப்பாடு செய்திருந்தார்கள்.

23. அதினிமித்தமே: இவனுக்குப் பிராயமுண்டு, இவனையே கேளுங்கள் என்று அவனுடைய தாய் தந்தைகள் சொன்னார்கள்.

24. ஆதலால் அவர்கள் குருடனாயிருந்த மனிதனை மறுபடியும் வரவழைத்து: நீ சர்வேசுரனை மகிமைப்படுத்து: அந்த மனிதன் பாவியென்று நாங்கள் அறிந்திருக்கிறோம் என்று அவனுக்குச்சொன்னார்கள்.

25. அவனோ அவர்களை நோக்கி: அவர் பாவியோ எனக்குத்தெரியாது; நான் குருடனயிருந்தேன், இப்பொழுது காண்கிறேன்; இது ஒன்றே எனக்குத்தெரியும் என்றான்.

26. மீளவும் அவர்கள் அவனை நோக்கி: அவன் உனக்கு என்ன செய்தான்? உன் கண்களை எப்படித் திறந்தான் என்று கேட்டார்கள்.

27. அவன் பிரத்தியுத்தாரமாக: முன்னமே நான் உங்களுக்குச் சொன்னேன், நீங்களும் கேட்டீர்களே. மறுபடியும் கேட்க வேண்டியதென்ன? நீங்களும் அவருக்குச் சீஷராக விரும்புகிறீர்களோ என்றான்.

28. அவர்கள் அவனை வைது: நீயே அவனுடைய சீஷனயிரு; நாங்கள் மோயீசனுடைய சீஷர்களாயிருக்கிறோம்.

29. சர்வேசுரன் மோயீசனேடு பேசினதொன்று அறிவோம். இவன் எவ்விடத்திலிருந்து வந்தவனென்று நாங்கள் அறியோம் என்றார்கள்.

30. அதற்கு அந்த மனிதன் மறுமொழியாக: அவர் என் கண்களைத் திறந்திருக்க, அவர் எவ்விடத்தாரென்று நீங்கள் அறியாதிருக்கிறீர்கள் என்பதிலே சந்தேகமற ஓர் ஆச்சரியமிருக்கிறது.

31. சர்வேசுரன் பாவிகளுக்குச் செவிகொடுக்கிறதில்லை என்று அறிவோம்; ஆனால் ஒருவன் தேவ பக்தனயிருந்து, அவருடையசித்தத்தை நிறைவேற்றினல், அவனுடைய மன்றாட்டைக் கேட்டருளுகிறார்.

32. பிறவிக்குருடனுடைய கண்களை ஒருவன் திறந்தானென்று உலகத்தின் ஆதி முதற்கொண்டு கேள்விப்பட்டதில்லையே.

33. இவர் சர்வேசுரனிடத்திலிருந்து வராதிருந்தால், ஒன்றுஞ் செய்யமாட்டாரோ என்றான்.

34. அவர்கள் அவனுக்கு மறுமொழியாக: நீ முழுதும் பாவத்தில் பிறந்தவன், நீயோ எங்களுக்குப் போதிக்கிறாய் என்று சொல்லி, அவனைப் புறம்பே தள்ளிவிட்டார்கள்.

35. அவனைப் புறம்பே தள்ளி விட்டார்களென்று யேசுநாதர் கேள்விப்பட்டு, அவனைக் கண்டபோது: நீ சர்வேசுரனுடைய சுதன்பேரில் விசுவாசமாயிருக்கிறாயோ என்று அவனைக் கேட்க,

36. அவன் பிரத்தி யுத்தாரமாக: ஆண்டவரே, அவர்பேரில் அடியேன் விசுவாசமாயிருக்கும்படி அவர் யார் என்றான்.

37. அதற்கு யேசுநாதர்: நீ அவரைக் கண்டிருக்கிறாய்; உன்னேடு பேசுகிறவரும் அவர்தாமே என்றார்.

38. உடனே அவன்: ஆண்டவரே, விசுவசிக்கிறேன் என்று சொல்லித் தீர்க்கதண்டனுகை விழுந்து, அவரை ஆராதித்தான்.

39. அப்பொழுது யேசுநாதர்: காணுதவர்கள் காணவும், காண்கிறவர்கள் குருடராகவும் நியாயத் தீர்ப்புக்காக நான் இவ்வுலகத்துக்கு வந்தேன் என்றார்.

39. வேத சத்தியத்தைத் தெளிவாய் அறிந்திருந்த யூதர்கள் யேசுநாதர்சுவாமியை ஏற்றுக்கொள்ளாததினலே, சர்வேசுரன் அவர்களை ஞானக் குருடர்களாகும்படி விட்டுவிட்டாரென்றும், சத்தியத்தை அறியாமல் குருடர்போலிருந்த அக்கியானிகள் யேசுநாதர் சுவாமியை ஏற்றுக்கொண்டபடியால், சர்வேசுரன் அவர்களுக்கு ஞான ஒளியைக் கொடுத்தாரென்றும் அர்த்தமாம்.

40. அவருடன்கூட இருந்த பரிசேயரில் சிலர் இதைக்கேட்டு, அவரை நோக்கி: நாங்களும் குருடரோ என்றார்கள்.

41. யேசுநாதர் அவர்களைநோக்கி: நீங்கள் குருடராயிருந்தால், பாவமில்லாதிருப்பீர்கள். இப்பொழுதோ காண்கிறோமென்று நீங்கள் சொல்லுகிறபடியால் உங்கள் பாவம் நிலைநிற்கின்றது என்றார்.

## 10-ம். அதிகாரம்.

யேசுநாதர் நல்ல மேய்ப்பன் யாரென்றும் கூலிக்காரன் யாரென்றுந் தெரிவித்ததும், அவர் தம்மைத் தேவசுதனென்றதினால் யூதர்கள் அவரைக் கல்லால் எறியப் புறப்பட்டதும்.

1. மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்: வாசல்வழியாக ஆட்டுக் கிடைக்குள் பிரவேசியாமல், வேறுவழியாய் ஏறுகிறவன் கள்ளனும் கொள்ளைக்காரனுமாயிருக்கிறான்.

2. வாசல் வழியாய்ப் பிரவேசிக்கிறவனே ஆடுகளின் ஆயனாயிருக்கிறான்.

3. வாசலைக் காக்கிறவன் அவனுக்குத் திறக்கிறான்; ஆடுகளும் அவனுடைய குரல் சத்தத்துக்குச் செவிகொடுக்கின்றன; அவனும் தன் சொந்த ஆடுகளைப் பேர்சொல்லிக் கூப்பிட்டு, வெளியே ஓட்டிக்கொண்டுபோகிறான்.

4. அவன் தன்னுடைய ஆடுகளை வெளியே விட்டபிறகு, அவைகளுக்கு முன் நடந்துபோக, ஆடுகள் அவன் குரலை அறிந்திருக்கிறதினால், அவன் பிறகே செல்லுகின்றன.

5. ஆனால் அந்நியருடைய குரலை ஆடுகள் அறியாதபடியினாலே அவைகள் அந்நியன் பிறகே செல்லாமல், அவனைவிட்டு ஓடிப்போம் என்றார்.

6. யேசுநாதர் இந்த உவமையை அவர்களுக்குச் சொன்னார். ஆயினும் அவர்கள் தங்களுக்கு அவர் சொன்னதை இன்னதென்று அறிந்துகொள்ளவில்லை.

7. ஆகையால் யேசுநாதர் மீளவும் அவர்களைநோக்கி: நானே ஆடுகளுக்கு வாசல் என்று மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

8. எனக்குமுன் வந்தவர்களெல்லாரும் கள்ளரும், கொள்ளைக்காரருமாயிருக்கிறார்கள். ஆதலால் ஆடுகள் அவர்களுக்குச் செவிகொடுக்கவில்லை.

9. நானே வாசல்; என் வழியாக ஒருவன் உட்பிரவேசித்தால் இரட்சணியம் அடைவான். அவன் உள்ளே வருவான், வெளியே போவான், மேய்ச்சலையுங் கண்டடைவான்.

10. திருடன் திருடவும், கொல்லவும், சேதப்படுத்தவும் வருகிறானேயொழிய மற்றப்படி வருகிறதில்லை. நானோ ஆடுகள் சீவனடையவும் அதை மென்மேலும் ஏராளமாய் அடையவும் வந்தேன்.

11. நானே நல்ல ஆயன்: நல்ல ஆயன் தன் ஆடுகளுக்காகத் தன் பிராணனைக் கொடுக்கிறான். (இசை. 40-11; எசே. 34-23.)

---

41. நீங்கள் முற்றும் அறிவீனராய் வேதாகமங்களை வாசியாமலும், என் புதுமைகளைக் காணாமலும் இருந்தால், பாவமில்லாதிருப்பீர்கள். ஆனால் வேதாகமங்களையெல்லாம் கற்றறிந்தவர்களென்று வீம்புபாராட்டுவதினாலும், சத்தியத்தை அறிய உங்களுக்கு மனமில்லாததினாலும் உங்கள் பாவத்துக்குப் போக்குச்சொல்ல இடமில்லை என்பதே இவ்வாக்கியத்தின் கருத்து.

12. மேய்ப்பனாயிராத கூலியாளோ ஆடுகள் தனக்குச் சொந்தமல்லாததினாலே, ஓநாய் வருகிறதைக் கண்டு, ஆடுகளை விட்டுவிட்டுத் தப்பி ஓடிப் போகிறான். அப்பொழுது ஓநாய் ஆடுகளைப் பாய்ந்து பிடித்துச் சிதறடிக்கும்.

13. கூலியாள் கூலிக்காரனாயிருக்கிறபடியினாலும், ஆடுகளின்மேல் அவனுக்கு அக்கறையில்லாததினாலும் ஓடிப்போகிறான்.

14. நானே நல்ல மேய்ப்பன்; நான் என் ஆடுகளை அறிவேன்; என் ஆடுகளும் என்னை அறியும்.

15. என் பிதா என்னை அறிந்திருக்கிறதுபோல, நானும் பிதாவை அறிந்திருக்கிறேன். என் உயிரையும் என் ஆடுகளுக்காகக் கொடுக்கிறேன். (மத். 11-27; லூக். 10-22.)

16. இந்த ஆட்டுக்கிடையைச் சேராத வேறே ஆடுகளும் எனக்குண்டு; அவைகளையும் நான் கொண்டு வரவேண்டும். அவைகளும் என் குரல் சத்தத்தைக்கேட்கும்; அப்பொழுது ஒரே ஆட்டுக்கிடையும் ஒரே மேய்ப்பனும் ஆகும்.

17. என் சீவனை மறுபடியும் கைக்கொள்ளும்படிக்கு நான் அதைக்கொடுக்கிறபடியால் என்பிதா என்னை நேசிக்கிறார். (இசை. 53-7; மத். 16-21.)

18. என்னிடத்திலிருந்து அதைப் பறிக்கிறவன் ஒருவனுமில்லை. ஆனால் நானாக அதைக்கொடுக்கிறேன். அதைக் கொடுக்கவும் எனக்கு அதிகாரமுண்டு; மறுபடி அதைக் கைக்கொள்ளவும் எனக்கு அதிகாரமுண்டு. இந்தக் கட்டளையை என் பிதாவினிடத்தில் பெற்றுக்கொண்டேன் என்று திருவுளம்பற்றினார்.

19. இவ்வாக்கியங்களைப்பற்றி யூதர்களுக்குள்ளே மறுபடியும் பிரிவினை உண்டாயிற்று.

20. அவர்களில் அநேகர்: இவன் பேய்பிடித்தவன், பித்துக்கொண்டவன், இவன் பேச்சை ஏன் கேட்கிறீர்கள்? என்றார்கள்.

21. வேறு சிலரோ: இவைகள் பேய் பிடித்தவனுடைய வார்த்தைகள் அல்லவே. பேயானது குருடர்களுடைய கண்களைத் திறக்கக் கூடுமோ? என்றார்கள்.

22. பின்பு எருசலேமிலே தேவாலயப் பிரதிஷ்டைப் பண்டிகை வந்தது; அப்பொழுது மாரிகாலமுமாய் இருந்தது. (1 மக்க. 4-56; 5-9.)

23. யேசுநாதர் தேவாலயத்திலே சலோமோன் மண்டபத்தில் உலாவிக்கொண்டிருந்தார்.

24. அப்பொழுது யூதர்கள் அவரைச் சூழ்ந்துகொண்டு, அவரை நோக்கி: எதுவரைக்கும் எங்கள் மனதைத் தயங்கவிடுவீர்? நீர் கிறீஸ்துவானால் எங்களுக்குத் தெளிவாய்ச் சொல்லும் என்றார்கள்.

25. யேசுநாதர் அவர்களுக்கு மாறுத்தாரமாக: உங்களுக்குச் சொல்லுகிறேன், நீங்கள் விசுவசிக்கிறதில்லை. என் பிதாவின் நாமத்தினாலே நான் செய்துவருகிற கிரியைகளே என்னைக் குறித்துச் சாட்சிசொல்லுகின்றன.

---

16. இந்த அதிகாரத்தில் ஒன்றுமுதல் பதினாறும் வாக்கியம் வரையில் யேசுநாதர் சுவாமி ஏற்படுத்திய சத்திய திருச்சபையின் குணகுணங்கள் விளக்கப்படுகிறது. திருச்சபையில் சேர்ந்தவர்களெல்லாரும் ஒரு பட்டியிலிருக்கும் ஆட்டுமந்தையாகவும் அதை ஆளுகிறவர் மேய்ப்பராகவும் இவ்விடத்தில் காட்டப்படுகிறது. பொய்ம்மதப் போதகர் கள்ளரைப்போலும் கூலியாட்களைப்போலவும் சத்தியவேதத்தில் சேர்ந்தவர்களைக் கலைத்துக் கெடுக்கிறார்களென்று இந்த வாக்கியங்களில் விவரிக்கிறார்.

26. ஆனால் நீங்கள் என் ஆடுகளல்லாததினாலே விசுவசியாமலிருக்கிறீர்கள்.

27. என் ஆடுகள் என் சத்தத்துக்குச் செவிகொடுக்கின்றன; நானும் அவைகளை அறிவேன்; அவைகளும் என்னைப் பின்செல்லுகின்றன.

28. நான் அவைகளுக்கு நித்திய சீவியத்தைக் கொடுக்கிறேன். அவைகள் என்றென்றைக்குஞ் சேதமாய்ப்போவதுமில்லை, என் கைகளினின்று அவைகளை ஒருவனும் பறித்துக்கொள்ளுவதுமில்லை.

29. என் பிதாவினால் எனக்குக் கொடுக்கப்பட்டது சர்வத்திலும் மேன்மையானதாய் இருக்கின்றது. என் பிதாவின் கையினின்று அதைப் பறித்துக்கொள்ள ஒருவனாலுங் கூடாது.

30. நானும் பிதாவும் ஒன்றாயிருக்கிறோம் என்றார்.

31. அதினிமித்தம் யூதர்கள் அவரைக் கல்லால் எறியும்படி, கல்லுகளை எடுத்தார்கள்.

32. அப்பொழுது யேசுநாதர் அவர்களைநோக்கி: என் பிதாவினிடத்திலிருந்து அநேக நற்கிரியைகளை உங்களுக்குக் காண்பித்தேன். அவைகளிலே எந்தக் கிரியையினிமித்தம் என்னைக் கல்லால் எறிகிறீர்கள் என்று கேட்க,

33. யூதர்கள் அவருக்குப் பிரத்தியுத்தாரமாக: நற்கிரியைப்பற்றி அல்ல; தேவதூஷணத்தைப்பற்றியே உன்னைக் கல்லால் எறிகிறோம். ஏனெனில் நீ மனுஷனாயிருக்க, உன்னைத்தான் தெய்வமாக்குகிறாயே என்றார்கள்.

34. யேசுநாதர் அவர்களுக்கு மறுமொழியாக: நீங்கள் தேவர்களாயிருக்கிறீர்களென்று நான் சொன்னேன் என்பது உங்கள் வேதப்பிரமாணத்தில் எழுதியிருக்கிறதல்லவோ? (சங். 81-6).

35. கடவுளுடைய வாக்கு யாருக்கு உண்டானதோ, அவர்களைத் தேவர்களென்று அவரும் சொல்லியிருக்க, வேதாகமமும் தவறக்கூடாததாயிருக்க,

36. பிதாவினால் அர்ச்சிக்கப்பட்டவரும், உலகத்தில் அனுப்பப்பட்டவருமாகிய நான் என்னைச் சர்வேசுரனுடைய குமாரன் என்று சொன்னதினாலே தேவ தூஷணஞ் சொல்லுகிறாய் என்று நீங்கள் சொல்லுகிறதென்ன?

37. நான் என் பிதாவின் கிரியைகளைச் செய்யாதிருந்தால், நீங்கள் என்னை விசுவசிக்கவேண்டாம்.

38. அவைகளைச் செய்கிறேனாகில், என்னை விசுவசிக்க உங்களுக்கு மனமில்லாதபோதிலும், பிதா என்னிலும் நான் பிதாவிலும் இருக்கிறதை நீங்கள் அறிந்து, விசுவசிக்கத்தக்கதாக அந்தக் கிரியைகளை விசுவசியுங்கள் என்றார்.

39. இதினிமித்தம் அவர்கள் மீண்டும் அவரைப் பிடிக்கத் தேடினார்கள்; அவரோ அவர்கள் கைகளினின்று விலகி,

---

38. புதுமையானது படைப்புண்ட வல்லமையெல்லாங் கடந்த செய்கையாகையால், மெய்யான புதுமை ஆண்டவருடைய வல்லமையால் ஆகுமொழிய சம்மனசுக்களாலாவது பசாசுகளாலாவது மனிதராலாவது ஒருபோதும் செய்யப்படக் கூடாதென்பது நிச்சயம். ஆகையால் புதுமையானது சர்வேசுரனுடைய முத்திரை என்னப்படும். அப்படியிருக்க யேசுநாதர்சுவாமி தாம் தேவகுமாரனென்று ஒப்பிக்கும்படி, சர்வேசுரனால் மாத்திரம் செய்யக்கூடிய இவ்வற்புத கிரியைகளைச் செய்து, தம்மிடத்திலுள்ள தேவசுபாவத்தை ஒப்பிக்கிறார்.

40. யோர்தான் நதிக்கு அப்பால், முந்த அருளப்பர் ஞானஸ்நானங் கொடுத்துக்கொண்டிருந்த இடத்துக்குத் திரும்பிப்போய், அங்கே தங்கினார்.

41. அநேகர் அவரிடத்தில் வந்து: அருளப்பர் ஓர் அற்புதத்தையுஞ் செய்யவில்லையென்பது மெய்தான்.

42. ஆயினும் இவரைக்குறித்து அருளப்பர் வசனித்த யாவும் உண்மையாயிருந்தது என்று சொன்னார்கள். ஆதலால் வெகுபேர் யேசுநாதரை விசுவசித்தார்கள்.

## 11-ம். அதிகாரம்.

*மரித்து அடக்கஞ்செய்யப்பட்டிருந்த லாசரைக் கர்த்தர் உயிர்ப்பித்ததும், அதினாலே யூதருடைய அதிகாரிகள் கர்த்தரைக்கொல்லத் தீர்மானித்ததுமாகிய வர்த்தமானங்கள்.*

1. அப்பொழுது மரியம்மாளும் அவளுடைய சகோதரியாகிய மார்த்தம்மாளும் வாசம்பண்ணின பெத்தானியா ஊரிலே லாசார் என்னப்பட்ட ஒருவன் வியாதியாயிருந்தான்.

2. அந்த மரியம்மாள் ஆண்டவரைப் பரிமளதைலத்தால் பூசி, தன் தலைமயிரால் அவருடைய பாதங்களைத் துடைத்தவளாமே. வியாதியாயிருந்த லாசார் அவளுடைய சகோதரன். (மத். 26-7: லூக். 7-37; அரு. 12-3.)

3. ஆகையால் அவனுடைய சகோதரிகள்: ஆண்டவரே, இதோ நீர் சிநேகிக்கிறவன் வியாதியாயிருக்கிறான் என்று அவருக்குச் சொல்லியனுப்பினார்கள்.

4. யேசுநாதர் இதைக்கேட்டு: இந்த வியாதி மரணத்துக்கல்ல, தேவகுமாரன் அதினால் மகிமைப்படும்பொருட்டு தேவதோத்திரத்துக்காக வந்ததென்று அவர்களுக்குச் சொல்லுவித்தார்.

5. யேசுநாதர் மார்த்தம்மாளையும் அவள் சகோதரியாகிய மரியம்மாளையும் லாசாரையும் நேசித்து வந்தார்.

6. அப்படியிருக்க, அவன் வியாதிப்பட்டானென்று அவர் கேள்விப்பட்ட போது, தாமிருந்த இடத்திலே இன்னும் இரண்டுநாள் தங்கினார்.

7. அதின்பின்பு தம்முடைய சீஷர்களைப்பார்த்து: யூதேயாவுக்கு மறுபடியும் போவோமாக என்க,

8. சீஷர்கள் அவரைநோக்கி: சுவாமீ, இப்பொழுதுதானே யூதர்கள் உம்மைக் கல்லால் எறியத் தேடினார்கள்; திரும்பவும் அங்கே போகிறீரோ என்றார்கள்.

9. யேசுநாதர் பிரத்தியுத்தாரமாக: பகலுக்குப் பன்னிரண்டு மணிநேரம் உண்டல்லோ? பகலிலே ஒருவன் நடந்தால், அவன் இவ்வுலகத்தின் வெளிச்சத்தைக் காண்கிறபடியினாலே இடறமாட்டான்.

10. ஆனால் அவன் இரவிலே நடந்தால், அவனிடத்தில் வெளிச்சமில்லாததினாலே இடறுவான் என்றார்.

11. இவைகளை அவர் உரைத்தபின்பு மீளவும் அவர்களை நோக்கி: நமது சிநேகிதனாகிய லாசார் நித்திரைசெய்கிறான்; அவனை நித்திரையினின்று எழுப்பப்போகிறேன் என்றார். (மத். 9-24.)

9-10. இந்த இரண்டு வசனங்களுக்கும் அர்த்தமேதெனில்: தாம் பாடுபடக் குறிக்கப்பட்ட காலம் வரும்வரையில் தமக்குப் பகலாயிருக்கிறதாகவும், தாம் பாடுபடுகிற காலம் தமக்கு இரவாயிருக்கிறதாகவும் யேசுநாதர் சுவாமி இவ்விடத்தில் சொல்லுகிறார். பகலில் நடக்கிறவன் இடறி விழமாட்டானென்பதுபோல யேசுநாதர் சுவாமி பாடுபட வேண்டிய காலம் வருமளவும் எவரும் அவருக்கு யாதொரு பொல்லாப்பும் செய்ய முடியாதென்று அர்த்தமாம்.

12. அப்பொழுது அவருடைய சீஷர்கள்: ஆண்டவரே, அவன் நித்திரை செய்தால், சொஸ்தமாவான் என்றார்கள்.

13. யேசுநாதர் அவனுடைய மரணத்தைக்குறித்துச் சொல்லியிருந்தார். அவர்களோ தூக்கமாகிய நித்திரையைக்குறித்துச் சொன்னாரென்று எண்ணினார்கள்.

14. அப்பொழுது யேசுநாதர் அவர்களோடு வெளிப்படையாய்ப் பேசி: லாசார் இறந்துபோனான்.

15. ஆகிலும் நீங்கள் விசுவசிக்கும் பொருட்டு நான் அங்கே இராததினாலே உங்களினிமித்தம் சந்தோஷப்படுகிறேன். அவனிடத்திற்குப் போவோமாக என்றார்.

16. அப்பொழுது திதிமு என்னப்பட்ட தோமையார் தம்முடைய உடன்சீஷர்களைப்பார்த்து: அவரோடு கூட மரிப்பதற்கு நாமும் போவோமாக என்றார்.

17. அப்படியே யேசுநாதர் வந்து, அவன் கல்லறையில் வைக்கப்பட்டு, நாலு நாள் ஆயிற்றென்று கண்டார்.

18. பெத்தானியா ஊர் எருசலேமுக்குச் சமீபமாய் ஏறக்குறைய இரண்டு மைல் தூரத்திலிருந்தது.

19. அப்படியிருக்க, யூதர்களில் அநேகர் மார்த்தம்மாள் மரியம்மாள் என்பவர்களுடைய சகோதரன் நிமித்தம் அவர்களுக்கு ஆறுதல் சொல்லும்படி அவர்களிடத்திற்கு வந்திருந்தார்கள்.

20. யேசுநாதர் வருகிறாரென்று மார்த்தம்மாள் கேள்விப்பட்டவுடனே, அவருக்கு எதிர்கொண்டு போனாள். மரியம்மாளோ வீட்டில் உட்கார்ந்திருந்தாள்.

21. ஆகையால் மார்த்தம்மாள் யேசுநாதரை நோக்கி: ஆண்டவரே, நீர் இங்கே இருந்தீரானால், என் சகோதரன் மரித்திருக்கமாட்டான்.

22. ஆயினும் இப்பொழுதும் நீர் சர்வேசுரனிடத்தில் எதைக் கேட்டாலும், அதைச் சர்வேசுரன் உமக்குத் தந்தருளுவாரென்று அறிந்திருக்கிறேன் என்றாள்.

23. யேசுநாதர் அவளை நோக்கி: உன் சகோதரன் உயிர்த்தெழுந்திருப்பான் என்றார்.

24. அதற்கு மார்த்தம்மாள்: கடைசிநாளிலே, உத்தானத்தில் இவனும் உயிர்ப்பானென்று எனக்குத் தெரியும் என்றாள். (லூக். 14-14; அரு. 5-29.)

25. யேசுநாதர் அவளை நோக்கி: உத்தானமும், உயிரும் நானே; என்னில் விசுவாசமாயிருக்கிறவன் இறந்தாலும், பிழைப்பான். (அரு. 6-40.)

26. உயிரோடிருக்கையில் என்னை விசுவசிக்கிறவன் எவனும் நித்தியத்துக்கும் சாகமாட்டான். இதை விசுவசிக்கிறாயோ? என்றார்.

27. அதற்கு அவள்: ஆம், ஆண்டவரே, நீர் கிறீஸ்துநாதரென்றும், இவ்வுலகத்திற்கு எழுந்தருளி வந்த சீவிய கடவுளின் குமாரனென்றும் விசுவசித்திருக்கிறேன் என்றாள்.

28. இவைகளைச் சொன்னபின்பு அவள் போய், தன் சகோதரியாகிய மரியம்மாளைச் சத்தமில்லாமல் அழைத்து: சுவாமி வந்திருக்கிறார், உன்னை அழைக்கிறார் என்றாள்.

29. அவள் இதைக் கேட்டவுடனே தீவிரமாய் எழுந்து அவரிடத்தில் வந்தாள்.

30. ஏனெனில் யேசுநாதர் இன்னும் கிராமத்துக்குள் வராமல், மார்த்தம்மாள் தம்மைச் சந்தித்த இடத்திலே இருந்தார்.

31. அப்பொழுது மரியம்மாளுடனேகூட வீட்டிலிருந்து அவளுக்கு ஆறுதல் சொல்லிக்கொண்டிருந்த யூதர்கள், அவள் தீவிரமாய் எழுந்து வெளியே போனதைக் கண்டு, அவள் கல்லறையினிடத்தில் அழப் போகிறாளென்று சொல்லி, அவள் பிறகே போனார்கள்.

32. மரியம்மாள் யேசுநாதரிருந்த இடத்தில் வந்து, அவரைக் கண்டவுடனே அவருடைய பாதத்தில் விழுந்து: ஆண்டவரே! நீர் இங்கே இருந்தீரானால், என் சகோதரன் மரித்திருக்கமாட்டான் என்று அவரிடத்தில் சொன்னாள்.

33. அவள் அழுகிறதையும், அவளுடன்கூட வந்த யூதர்கள் அழுகிறதையும் யேசுநாதர் கண்டபோது தமது உள்ளத்தில் பதைத்துத் தம்மைக் கலங்கும்படி செய்து:

34. அவனை எங்கே வைத்தீர்கள் என்றார். அதற்கு அவர்கள்: ஆண்டவரே, தேவரீர் வந்து, பாரும் என்றார்கள்.

35. அப்போது யேசுநாதர் கண்ணீர்விட்டு அழுதார்.

36. ஆகையால் யூதர்கள்: இதோ, இவர் அவனை எவ்வளவாய் நேசித்திருந்தார் என்றார்கள்.

37. அவர்களில் சிலர்: பிறவிக் குருடனுடைய கண்களைத் திறந்த இவர் அவனைச் சாகாதிருக்கச் செய்யக் கூடாதோ? என்றார்கள். (அரு. 9-6.)

38. யேசுநாதர் மறுபடியும் தம்முள் பதைத்து, கல்லறையின் கிட்ட வந்தார்; அது ஒரு குகையாயிருந்தது; அதின்மேல் ஒரு கல்லும் வைக்கப்பட்டிருந்தது.

39. கல்லை எடுத்துப்போடுங்கள் என்று யேசுநாதர் கட்டளையிட, மரித்தவனுடைய சகோதரியாகிய மார்த்தம்மாள் அவரை நோக்கி: ஆண்டவரே, நாறுமே; இதோ, நாலு நாளாயிற்றே என்றாள்.

40. யேசுநாதர் அவளை நோக்கி: நீ விசுவசித்தால், சர்வேசுரனுடைய மகிமையைக் காண்பாய் என்று நான் உனக்குச் சொல்லவில்லையோ? என்றார்.

41. அப்போது கல்லை எடுத்துவிட்டார்கள். யேசுநாதர் தம்முடைய கண்களை ஏறெடுத்து: பிதாவே, தேவரீர் என் (மன்றாட்டைக்) கேட்டருளினபடியால் உமக்கு ஸ்தோத்திரம்பண்ணுகிறேன்.

42. தேவரீர் என்னை எப்போதும் கேட்டருளுகிறீரென்று நான் அறிந்திருக்கிறேன்; ஆனாலும் நீர் என்னை அனுப்பினீரென்று சூழ நிற்கிற ஜனங்கள் விசுவசிக்கும்பொருட்டு, இவர்களினிமித்தமே இதைச் சொன்னேன் என்றார்.

43. அவர் இவைகளை வசனித்த பின்பு: லாசாரே, வெளியே வா என்று உரத்த சத்தமாய்க் கூப்பிட்டார்.

44. உடனே, செத்தவன் வெளியே வந்தான்; அவன் கைகளும் கால்களும் கச்சைகளால் கட்டவும், அவன் முகம் பரிவட்டத்தால் மூடவும்பட்டிருந்தது. அப்பொழுது, யேசுநாதர்: இவனைக் கட்டவிழ்த்துப் போகவிடுங்கள் என்று அவர்களுக்குச் சொன்னார்.

45. ஆகையால் மரியம்மாள் மார்த்தம்மாள் என்பவர்களிடத்தில் வந்திருந்தவர்களும், யேசுநாதர் செய்ததைகளைக் கண்டவர்களுமாகிய யூதர்களில் அநேகர் அவரை விசுவசித்தார்கள்.

46. அவர்களில் சிலர் பரிசேயரிடத்தில்போய், யேசுநாதர் செய்தவைகளை அவர்களுக்குச் சொன்னார்கள்.

47. ஆகையால் பிரதான ஆசாரியரும் பரிசேயரும் ஆலோசனைச் சங்கத்தைக் கூட்டி: நாம் என்ன செய்வோம்? இதோ, இந்த மனுஷன் அநேகம் புதுமைகளைச் செய்கிறானே!

48. நாம் இவனை இப்படியே விட்டுக்கொண்டிருந்தால், எல்லாரும் இவன் பேரில் விசுவாசமாவார்கள். அப்பொழுது உரோமையர் வந்து, நமது இடத்தையும், ஜனத்தையும் அழித்துப்போடுவார்களே என்று சொல்ல,

49. அவர்களில் ஒருவனாகிய கைப்பாஸ் என்பவன் அந்த வருஷத்தில் பெரிய குருவாயிருந்ததினாலே அவர்களை நோக்கி: உங்களுக்கு ஒன்றுந் தெரியாது. (அரு. 18-14.)

50. ஜனமெல்லாம் சேதமாகாதபடிக்கு, ஒரு மனுஷன் ஜனத்துக்காகச் சாவது உங்களுக்கு நன்மையென்று நினையாதிருக்கிறீர்களே என்றான்.

51. இந்த வார்த்தைகளை அவன் தற்சுபாவமாய்ச் சொன்னவன் அல்ல. ஆனால் அந்த வருஷத்திற்கு அவன் பெரிய குருவாயிருந்ததினாலே யேசுநாதர் தங்கள் ஜனத்துக்காகச் சாகப் போகிறாரென்றும்,

52. அந்த ஜனத்துக்காக மாத்திரமல்ல, சிதறியிருந்த சர்வேசுரனுடைய பிள்ளைகளை ஒன்றாய்ச் சேர்க்கிறதற்காகவும், அவர் சாகப் போகிறாரென்றும் தீர்க்கதரிசனமாய்ச் சொன்னான்.

53. அதைப்பற்றி அந்நாள் முதல் அவரைக் கொலைசெய்யும்படிக்கு ஆலோசனைபண்ணினார்கள்.

54. ஆகையால் யேசுநாதர் அதின்பின் வெளியரங்கமாய் யூதர்களுக்குள்ளே சஞ்சரியாமல், அவ்விடத்தைவிட்டு வனாந்தரத்துக்குச் சமீபமான நாட்டில் எபிரேம் என்னும் ஊருக்குப்போய் அங்கே தம்முடைய சீஷர்களோடுகூடத் தங்கியிருந்தார்.

55. அப்பொழுது, யூதர்களுடைய பாஸ்கா பண்டிகை சமீபித்திருந்தது. ஆனதால் பாஸ்காவுக்குமுன் நாட்டுப்புறத்தினின்று அநேகர் தங்களைச் சுத்திகரிக்கும்படி எருசலேமுக்கு ஏறிப் போனார்கள்.

56. அங்கே அவர்கள் யேசுநாதரைத்தேடிக்கொண்டு தேவாலயத்தில் நிற்கையில், ஒருவர் ஒருவரைப் பார்த்து: அவர் இந்தப் பண்டிகைக்கு வராதிருக்கிறது உங்களுக்கு என்னமாய்த் தோன்றுகிறது என்று பேசிக்கொண்டிருந்தார்கள். பிரதான ஆசாரியரும் பரிசேயரும் அவர் இருக்கிற இடத்தை எவனாவது அறிந்திருந்தால், அவரைப் பிடிக்கும்படி அதைத் தெரிவிக்கவேண்டுமென்று கட்டளையிட்டிருந்தார்கள்.

47-48. இந்த வாக்கியங்களில் யூத ஆலோசனை சங்கத்தாருடைய கருத்தென்னவெனில்: யேசுநாதர் சுவாமி செய்த புதுமைகளைக் கண்டு, யூத ஜனமெல்லாம் அவரை உலக இரட்சகரென்று விசுவசித்தால், அவரைத் தங்களுடைய ராஜாவென்று கொண்டாடுவார்களென்றும், அப்படியானால் யூதர்தேசம் உரோமையருடைய அரசாட்சிக்கு உட்பட்டிருந்ததால், உரோமையர் தங்களுக்கு எதிராய் எழும்பின இப்படிப்பட்ட ராஜாவோடே யுத்தம் பண்ணி யூத ஜாதியாரைச் சங்கரிப்பார்களென்றும், இந்த பொல்லாப்பு வராதபடி யேசுநாதர்சுவாமியைக் கொல்லவேணுமென்றும் கபடமாய்ப் பேசித் தீர்மானித்தார்கள்.

50. யூத ஜனங்கள் உரோமையர் கையிலகப்பட்டுச் சாகாதபடி யேசுநாதர் ஒருவர் சாகிறது தாவிளையென்று கைப்பாஸ் சுபாவப் புத்தியால் சொல்லியிருந்தாலும், யேசுநாதருடைய மரணமானது மனுக்குலத்திற்கு இரட்சணியமாகுமென்று அவன் வாயால் இஸ்பிரீத்துசாந்துவானவர் வெளியாக்கினார்.

## 12-ம். அதிகாரம்.

*யேசுநாதருடைய பாதத்தில் மரியம்மாள் பரிமள தைலத்தைப் பூசினதும், அவர் எருசலேமில் ஒட்டோலகமாய்ப் பிரவேசித்து, அங்கே சில நல்லுணர்ச்சிகளைத் திருவுளம்பற்றினதுமாகிய வர்த்தமானங்கள்.*

1. அப்படியிருக்க, பாஸ்காப் பண்டிகைக்கு ஆறுநாளைக்குமுன் யேசுநாதர் தாம் மரணத்தினின்று உயிர்ப்பித்த லாசார் இருந்த பெத்தானியாவுக்கு வந்தார். (மத். 26-6; மாற். 14-3.)

2. அங்கே அவருக்கு இராவிருந்து செய்தார்கள். மார்த்தம்மாள் பணிவிடை செய்துகொண்டிருந்தாள். லாசாரோவென்றால் அவரோடு பந்தியமர்ந்தவர்களில் ஒருவனாயிருந்தான்.

3. அப்பொழுது மரியம்மாள் விலையேறப்பெற்ற சுத்த இலாமிச்சந் தைலத்தில் ஒரு இராத்தல் தைலங்கொண்டு வந்து, அதை யேசுநாதருடைய பாதங்களில் பூசி, தன் கூந்தலால் அவருடைய பாதங்களைத் துடைத்தாள். அந்த வீடும் தைல வாசனையால் நிரம்பிற்று.

4. அப்பொழுது அவருடைய சீஷர்களில் ஒருவனும் அவரைக் காட்டிக்கொடுக்கப் போகிறவனுமாகிய யூதாஸ் இஸ்காரியோத்து சொன்னதாவது:

5. இந்தத் தைலத்தை முந்நூறு வெள்ளிக்காசுக்கு விற்று, ஏழைகளுக்குக் கொடாமல் போனதென்ன என்றான்.

6. ஆனால் அவன் ஏழைகள்மேல் கவலைப்பட்டு இப்படிச் சொன்னவன் அல்ல; திருடனும் பணப்பையை வைத்திருந்து, அதிலே போடப்பட்டதைக் கொண்டு வருகிறவனுமாய் இருந்தபடியினாலே இப்படிச்சொன்னான்.

7. அதற்கு யேசுநாதர் திருவுளம் பற்றினதாவது: என் அடக்கத்தின் நாளுக்கென்று இதை வைத்துக்கொள்ளும்படி அவளை விட்டுவிடுங்கள்.

8. ஏனெனில் ஏழைகள் எப்போதும் உங்களோடு இருக்கிறார்கள்; நானோ எப்போதும் உங்களோடு இருக்கிறதில்லை என்றார்.

9. அப்பொழுது யேசுநாதர் அவ்விடத்தில் இருக்கிறாரென்று யூதர்களில் திரளான ஜனங்கள் அறிந்து, அவரைப் பற்றிமாத்திரமல்ல, அவர் மரித்தோரிலிருந்து உயிர்ப்பித்த லாசாரையும் பார்க்கும்படியாக வந்தார்கள்.

10. பிரதான ஆசாரியர்களோவெனில் லாசாரையும் கொலைசெய்யவேண்டுமென்று ஆலோசனைபண்ணினார்கள்.

11. ஏனெனில், அவன் நிமித்தம் யூதர்களில் அநேகர் அவர்களைவிட்டுப் பிரிந்து, யேசுநாதர்பேரில் விசுவாசமானார்கள்.

12. அப்படியிருக்க, மறுநாளில் யேசுநாதர் எருசலேம் நகருக்கு வருகிறாரென்று திருநாளுக்கு வந்திருந்த திரளான ஜனங்கள் கேள்விப்பட்டபோது,

---

6. இவ்விடத்தில் மரியமதலேனம்மாள் செய்த நற்கிருத்தியத்தைப்பற்றி யூதாஸ் முறையிட்டதாகவும், அர்ச். மத். 26-ம் அதி. 8-9 வசனங்களில் சீஷர்கள் முறையிட்டதாகவும், அர்ச். மாற். 14-ம் அதி. 4-5 வசனங்களில் சீஷர்களில் சிலர் முறையிட்டதாகவும் சொல்லியிருக்கிறது. ஆகையால் யூதாஸ் முதலாவது கபடுள்ள கருத்தோடு முறையிடத் துவக்கினானென்றும் மற்றவர்கள் நிஷ்கபடமாய் அவன் சொன்னது எதார்த்தமென்று எண்ணி முறையிட்டதாகவும் நினைக்கவேண்டியது.

7. மூலபாஷையில்: என்னை அடக்கம் பண்ணும் நாளுக்காக இதை வைத்திருந்தாள் என்று இறந்த காலத்தில் சொல்லியிருக்கிறது. லத்தீன் பாஷையிலோ நிகழ்காலத்திலிருக்கிறது. ஆகையால் சுவாமி தாம் இறக்கும் நாளில் அவள் செய்யக் கூடாதிருந்த இந்த நற்கிருத்தியத்தை அதின் ஞாபகமாக அவள் செய்தாளென்று யாவரும் எண்ணிக்கொள்ளும்படியாகச் சொல்லுகிறார்.

13. குருத்தோலைகளைக் கையில் பிடித்துக்கொண்டு, அவருக்கு எதிர்கொண்டுபோய்: ஓசன்னா! சர்வேசுரனுடைய நாமத்தினாலே வருகிற இஸ்ராயேல் இராஜா ஸ்தோத்தரிக்கப்பட்டவர் என்று ஆர்ப்பரித்தார்கள்.

14. யேசுநாதர் ஒரு வேசரிக்குட்டிவரக் கண்டு, அதின்மேல் ஏறிப்போனார். (மாற்.11-7; லூக். 19-35.)

15. இதற்கு ஒத்தவண்ணம்: சீயோன் குமாரத்தியே, நீ பயப்படாதே; இதோ உன் அரசன் வேசரிக்குட்டியின்மேல் ஏறி வருகிறானென்று எழுதப்பட்டிருக்கிறது. (சக். 9-9.)

16. இவைகளை அவருடைய சீஷர்கள் துவக்கத்தில் அறியாதிருந்தார்கள். ஆனால் யேசுநாதர் மகிமைப்படுத்தப்பட்டபின்பு, இப்படியாய் அவரைக் குறித்து எழுதியிருக்கிறதையும், தாங்கள் அவருக்கு இப்படிச்செய்ததையும் நினைவுகூர்ந்தார்கள்.

17. அன்றியும் யேசுநாதர் லாசாரைக் கல்லறையினின்று கூப்பிட்டு, மரித்தோரிலிருந்து அவனை எழுப்பினபோது அவரோடேகூட இருந்த ஜனங்கள் இதைப்பற்றிச் சாட்சிசொன்னார்கள்.

18. ஆகையால் அவர் இந்தப் புதுமையைச் செய்தாரென்று ஜனங்கள் கேள்விப்பட்டதினாலே, அதினிமித்தமாக அவருக்கு எதிர்கொண்டு போனார்கள்.

19. அப்பொழுது பரிசேயர் ஒருவர் ஒருவரை நோக்கி: நாம் செய்வதில் ஒன்றும் பிரயோசனப்படவில்லையென்று நீங்கள் பார்க்கிறதில்லையா? இதோ, உலகமெல்லாம் அவன் பிறகே போயிற்றே என்றார்கள்.

20. அப்படியிருக்க, திருநாளில் தேவ ஆராதனை செய்ய வந்தவர்களுக்குள்ளே சில புறஜாதியார் இருந்தார்கள்.

21. அவர்கள் கலிலேயாநாட்டுப் பெத்சாயிதா ஊரானாகிய பிலிப்புவினிடத்தில் வந்து: ஐயா, யேசுநாதரைக் காண விரும்புகிறோம் என்று அவரை மன்றாடினார்கள்.

22. பிலிப்பு வந்து, அதைப் பிலவேந்திரருக்கு அறிவித்தார். அதின்மேல் பிலவேந்திரரும் பிலிப்புவும் அதை யேசுநாதரிடத்தில் அறிவித்தார்கள்.

23. அப்போது யேசுநாதர் அவர்களை நோக்கி: மனுமகன் மகிமைப்படும்படியான வேளை வந்தது.

24. மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்: கோதுமைமணி நிலத்திலே விழுந்து மடியாவிட்டால், அது தனியே கிடக்கும். மடிந்ததானால், மிகுந்த பலனைத்தரும்.

25. தன் சீவனை நேசிக்கிறவன் அதை இழந்துபோவான். இவ்வுலகத்தில் தன் சீவனைப் பகைக்கிறவனோ சதாதமான சீவியத்துக்கு அதைக் காப்பாற்றிக்கொள்ளுகிறான். (மத். 10-39; 16-26; மாற். 8-35; லூக். 9-24; 17-33.)

26. ஒருவன் எனக்கு ஊழியஞ்செய்தால், என்னைப் பின்பற்றக்கடவான். நான் எங்கே இருக்கிறேனோ, அங்கே என் ஊழியனும் இருப்பான். ஒருவன் எனக்கு ஊழியஞ்செய்தால், என் பிதா அவனைக் கனப்படுத்துவார்.

27. இப்போது என் ஆத்துமமானது கலக்கமுற்றிருக்கிறது; நான் என்ன சொல்லுவேன்! பிதாவே, இந்த வேளையினின்று என்னை இரட்சியும். ஆனாலும் இதனிமித்தமாகவே இவ்வேளைக்கென்று வந்தேன்.

25. இதற்கு அர்ச. மத். 10-ம் அதி. 39-ம் வசன வியாக்கியானம் காண்க.

28. பிதாவே, உம்முடைய நாமத்தை மகிமைப்படுத்தியருளும் என்றார். அப்பொழுதே வானத்திலிருந்து ஓர் குரலொலி உண்டாகி: அதை மகிமைப்படுத்தினேன், இன்னமும் மகிமைப்படுத்துவேன் என்று சத்தித்தது.

29. அங்கே நின்று, இதைக்கேட்டுக்கொண்டிருந்த ஜனங்கள்: இடி முழக்கம் உண்டாயிற்று என்றார்கள். வேறு சிலர்: தேவ தூதன் அவரோடு பேசினார் என்றார்கள்.

30. யேசுநாதரோ, அவர்களைப் பார்த்து: இந்தக் குரலொலி என்னைப் பற்றியல்ல, உங்களைப்பற்றியே உண்டாயிற்று.

31 இப்பொழுதே உலகத்துக்கு நியாயத்தீர்ப்பாகின்றது. இப்பொழுதே இவ்வுலகத்துத் தலைவன் புறம்பே தள்ளப்படுவான். (லூக். 10-18.)

32. அன்றியும், நான் பூமியினின்று உயர்த்தப்படுவேனாகில், எல்லாவற்றையும் என்னிடத்தில் இழுத்துக்கொள்ளுவேன் என்றார்

33. தாம் எவ்வித மரணமடையப் போகிறாரென்பதைக் குறிக்கும்படி இப்படிச் சொன்னார்.

34. ஜனங்கள் அவருக்கு மாறுத்தரமாக: கிறீஸ்துநாதர் என்றென்றைக்கும் இருக்கிறாரென்று நாங்கள் வேதப்பிரமாணத்தில் கேட்டிருக்கிறோம். அப்படியிருக்க, மனுமகன் உயர்த்தப்படவேண்டும் என்று நீர் சொல்வதெப்படி? அந்த மனுமகன் யார் என்றார்கள். (சங். 109-4; 111-2; இசை. 40-8; எசேக். 37-25.)

35. அதற்கு யேசுநாதர்: இன்னங் கொஞ்சக்காலம் உங்களுக்கு வெளிச்சம் உண்டு. ஆதலால் இருள் உங்களை வந்து மூடாதபடி உங்களுக்கு வெளிச்சம் உள்ளபோதே நடந்துகொள்ளுங்கள். ஏனெனில் இருளில் நடக்கிறவன் தான் போகிறது எங்கேயென்று அறியான்.

36. நீங்கள் ஒளியின் புத்திரராகும்பொருட்டு, உங்களுக்கு ஒளியுள்ளபோதே, ஒளியின்மேல் விசுவாசமாயிருங்கள் என்றார். யேசுநாதர் இவைகளைச் சொன்னபின்பு அவர்களைவிட்டு மறைந்துபோனார்.

37 அவர் அவர்களுக்கு முன்பாக அவ்வளவு பெரிதான அற்புதங்களைச் செய்திருந்தாலும், அவர்கள் அவரை விசுவசிக்கவில்லை.

38. ஆண்டவரே, எங்கள் சொல்லைக் கேட்டு விசுவசித்தவன் யார்? ஆண்டவருடைய கையின் வல்லபம் யாருக்கு வெளிப்பட்டது என்று இசையாஸ் தீர்க்கதரிசி சொன்ன வாக்கியம் இவ்விதமாய் நிறைவேறும்படியாயிற்று. (இசை. 53-1; உரோ. 10-16.)

39. இதின் நிமித்தம் அவர்கள் விசுவசிக்கமாட்டாமற் போனார்கள். ஏனெனில் இசையாஸ் மீண்டும் (வசனித்ததாவது):

40. அவர்கள் கண்ணால் காணாமலும், இருதயத்தால் உணராமலும், மனந்திரும்பாமலும் இருக்கும்படிக்கும், நான் அவர்களைக் குணப்படுத்தாதபடிக்கும் அவர்களுடைய கண்களையும் குருடாக்கினார், அவர்கள் இருதயத்தையும் கடினமாக்கினார் என்பதேயாம். (இசை. 6-9; மத். 13-14; மாற். 4-12; அப். நட. 28-26; ரோ. 11-8.)

41. இசையாஸ் அவருடைய மகிமையைக் கண்டு, அவரைப்பற்றிப் பேசுகிறபோது இவைகளைச் வசனித்தார்.

40. அர்ச் மத். 13-ம் அதி. 14-ம் வசன வியாக்கியானம் காண்க.

42. ஆயினும் தலைமையானவர்களில் முதலாய் அநேகர் அவரை விசுவசித்தார்கள். அப்படியிருந்தும், ஜெப ஆலயத்துக்குப் புறம்பாக்கப்படாதபடி, பரிசேயர்நிமித்தம் அதை வெளியில் காட்டாதிருந்தார்கள்.

43. ஏனெனில் சர்வேசுரனுடைய மகிமையைவிட மனிதருடைய மகிமையை அவர்கள் அதிகமாய் விரும்பினார்கள்.

44. அப்பொழுது யேசுநாதர் உரத்த சத்தமாய் வசனித்ததாவது: என்னில் விசுவாசமாயிருக்கிறவன் என்னில் அல்ல, என்னை அனுப்பினவரில் விசுவாசமாயிருக்கிறான்.

45. என்னைக் காண்கிறவன் என்னை அனுப்பினவரைக் காண்கிறான்.

46. பின்னும் என்னில் விசுவாசமாயிருக்கிற எவனும் இருளில் நிலைக்கொள்ளாதபடிக்கு நான் உலகத்துக்கு ஒளியாக வந்தேன்.

47. ஒருவன் என் வார்த்தைகளைக் கேட்டும், அவைகளை அநுசரியாமற்போனால், நான் அவனுக்குத் தீர்வையிடுகிறதில்லை. ஏனெனில் நான் உலகத்துக்குத் தீர்வையிடுவதற்கு அல்ல, உலகத்தை இரட்சிப்பதற்கே வந்தேன்.

48. என்னைப் புறக்கணித்து, என் வாக்கியத்தை ஏற்றுக்கொள்ளாதவனுக்குத் தீர்வையிடுகிற நடுவர் உண்டு. நான் சொன்ன வாக்கே கடைசி நாளில் அவனுக்குத் தீர்வையிடும். (மாற். 16-16.)

49. ஏனெனில் நான் சுயமாய்ப் பேசவில்லை. என்னை அனுப்பின பிதாவே நான் பேசுவது இன்னதென்றும், உபதேசிப்பது இன்னதென்றும் எனக்குக் கட்டளையிட்டார்.

50. அவருடைய கட்டளை நித்திய சீவியமாயிருக்கிறதென்று அறிவேன். ஆகையால் நான் பேசுகிறவைகளைப் பிதாவானவர் எனக்குச் சொன்னபடியே பேசுகிறேன் என்றார்.

## 13-ம். அதிகாரம்.

*யேசுநாதர் தம்முடைய சீஷர்களின் கால்களைக் கழுவினதும், அன்னியோன்னிய சிநேகத்தின் புதுக்கற்பனை கொடுத்ததும்.*

1. பாஸ்குத் திருநாளுக்கு முந்தின நாளிலே யேசுநாதர் தாம் இவ்வுலகத்தை விட்டுப் பிதாவினிடத்திற்குப்போகவேண்டிய தம்முடைய காலம் வந்ததென்று அறிந்து, இவ்வுலகத்திலே இருந்த தம்முடையவர்களைத் தாம் சிநேகித்திருக்கையில் அவர்களை முடிவுபரியந்தம் சிநேகித்தார். (மத். 26-2; மாற். 14-1; லூக். 22-1.)

2. சீமோன் குமாரனாகிய யூதாஸ் இஸ்காரியோத்தென்பவன் அவரைக் காட்டிக்கொடுக்கும்படி, பசாசானது அவனுடைய இருதயத்தில் முன்னமே ஏவியிருக்க, அவர்கள் அசனம்பண்ணும்வேளையில்,

3. அவர், தம்முடைய கையில் பிதாவானவர் சகலத்தையும் ஒப்படைத்திருக்கிறதையும், தாம் சர்வேசுரனிடத்திலிருந்து வந்ததையும், சர்வேசுரனிடத்திற்குப் போகிறதையும் அறிந்து,

4. பந்தியைவிட்டு எழுந்து, தம்முடைய வஸ்திரங்களைக் களைந்து, ஒரு துண்டை எடுத்து இடையில் கட்டிக்கொண்டு,

1. **பாஸ்குத் திருநாளுக்கு முன்:**—இவ்விடத்தில் அர்ச். அருளப்பர் நிசான் மாதத்தின் 14-வயாகிய வியாழக்கிழமையை யூதருடைய முறைமைப்படி வெள்ளிக்கிழமையோடு சேர்க்காமல், கிரேக்கர் முதலிய மற்ற ஜாதியாருடைய முறைமைப்படி திருநாளுக்கு முந்தின நாள் என்கிறார். மத். 26-17. காண்க.

5. பின்பு ஒரு அகன்ற பாத்திரத்தில் தண்ணீர்வார்த்து, சீஷர்களுடைய கால்களைக் கழுவவும், தாம் இடையில் கட்டியிருந்த துண்டால் துடைக்கவும் தொடங்கினார்.

6. அப்படியே அவர் சீமோன் இராயப்பரிடத்திலே வந்தபோது, இராயப்பர் அவரை நோக்கி: ஆண்டவரே, நீரோ என் கால்களைக் கழுவுகிறது என்றார்.

7. யேசுநாதர் அவருக்கு மாறுத்தாரமாக: நான் செய்கிறதை இப்பொழுது நீ அறியாய்; இனிமேல் அறிந்து கொள்வாய் என்றார்.

8. இராயப்பர் அவரை நோக்கி: நீர் என்றென்றைக்கும் என் கால்களைக் கழுவப்படாதென்று சொல்ல, யேசுநாதர் அவருக்கு மறுமொழியாக: நான் உன்னைக் கழுவாவிட்டால் என்னோடு உனக்குப் பங்கில்லை என்றார்.

9. சீமோன் இராயப்பர் அவரை நோக்கி: ஆண்டவரே, என் கால்களை மாத்திரமல்ல, கைகளையும், சிரசையுங் கூடக் (கழுவியருளும்) என்றார்.

10. யேசுநாதர் அவரை நோக்கி: ஸ்நானம்பண்ணினவன் கால்களையேயன்றி மற்றொன்றையுங் கழுவவேண்டுவதில்லை. மற்றப்படி அவன் முழுதும் சுத்தமாயிருக்கிறான். நீங்களும் சுத்தமாயிருக்கிறீர்கள்; ஆகிலும் எல்லாரும் அல்ல என்றார்.

11. ஏனெனில் அவர் தம்மைக் காட்டிக்கொடுக்கிறவன் இன்னானென்று அறிந்திருந்தார். அதினிமித்தமே நீங்களெல்லாரும் சுத்தமுள்ளவர்கள் அல்ல என்றார்.

12. அவ்வண்ணமே யேசுநாதர் அவர்களுடைய கால்களைக் கழுவினபிற்பாடு தம்முடைய வஸ்திரங்களைத் தரித்துக் கொண்டு, திரும்பவும் பந்தியில் உட்கார்ந்து, அவர்களுக்குத் திருவுளம்பற்றினதாவது: நான் உங்களுக்குச் செய்ததை அறிந்திருக்கிறீர்களோ?

13. நீங்கள் என்னைக் குருவென்றும், ஆண்டவரென்றும் அழைக்கிறீர்கள்; நீங்கள் சொல்லுவது சரியே; ஏனெனில் நான் அவர்தான்.

14. ஆகையால் ஆண்டவரும் குருவுமாகிய நான் உங்கள் கால்களைக் கழுவினேனாகில், நீங்கள் ஒருவர் ஒருவருடைய கால்களைக் கழுவக்கடவீர்கள்.

15. ஏனெனில் நான் உங்களுக்கு எவ்விதம் செய்தேனோ, அவ்விதமே நீங்களும் செய்யும்படியாக உங்களுக்கு மாதிரிகை காண்பித்தேன்.

16. மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்: ஊழியன் தன் எஜமானிலும் பெரியவன் அல்ல, அப்போஸ்தலன் தன்னை அனுப்பினவரிலும் பெரியவன் அல்ல. (மத். 10-24; லூக். 6-40; அப். 15-20.)

17. இவைகளை நீங்கள் அறிந்து கொண்டால், இவ்விதம் செய்தாலல்லோ பாக்கியவான்களாயிருப்பீர்கள்.

18. உங்களெல்லாரையுங்குறித்து நான் பேசுகிறதில்லை; நான் தெரிந்துகொண்டவர்களை அறிவேன்; ஆனால் என்னோடுகூட அப்பஞ் சாப்பிடுகிறவன் எனக்கு விரோதமாய்த் தன் குதிங்காலைத்தூக்குவான் என்ற வேதவாக்கியம் நிறைவேறவேண்டும். (சங். 40-10.)

19. அது நடக்கும்போது, நானே அவரென்று நீங்கள் விசுவசிக்கும் பொருட்டு, அது நடப்பதற்குமுன்னே இப்பொழுதே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

20. நான் அனுப்புகிறவனை ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக்கொள்ளுகிறான். என்னை ஏற்றுக்கொள்ளுகிறவனோ, என்னை அனுப்பினவரை ஏற்றுக்கொள்ளுகிறான் என்று மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார். (மத். 10-40.)

21. யேசுநாதர் இவைகளைத் திருவுளம்பற்றின பின்பு, மனதில் கலங்கி: மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்: உங்களில் ஒருவன் என்னைக் காட்டிக்கொடுப்பான் என்று பிரசித்தமாய்ச் சொன்னார். (மத். 26-21; மாற். 14-18; லூக். 22-4.)

22. சீஷர்களோ அவர் யாரைக் குறித்துப் பேசுகிறாரென்று ஐயமுற்று, ஒருவர் ஒருவரைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

23. அப்பொழுது யேசுநாதருடைய சீஷர்களுக்குள்ளே அவர் சிநேகித்திருந்த ஒருவர் யேசுநாதருடைய மார்பில் சாய்ந்திருக்க,

24. சீமோன் இராயப்பர் இவருக்குச் சயிக்கினை காட்டி: அவர் சொன்னது யாரைக்குறித்தென்று இவரிடத்தில் கேட்டார்.

25. அவ்விதமே இவர் யேசுநாதருடைய மார்பில் சாய்ந்துகொண்டிருக்கையில் அவரை நோக்கி: ஆண்டவரே, அவன் யார் என்றார்.

26. யேசுநாதர் மறுமொழியாக: நான் (இந்த) அப்பத்தைத் தோய்த்து, யாருக்குக் கொடுக்கிறேனோ, அவன்தான் என்று சொல்லி, அப்பத்தைத் தோய்த்துச் சீமோன் குமாரனாகிய யூதாஸ் இஸ்காரியோத்துக்குக் கொடுத்தார்.

27. அவன் துணிக்கையை வாங்கினவுடனே, சாத்தான் அவனுக்குள் புகுந்தான். அப்போது யேசுநாதர் அவனைநோக்கி: நீ செய்கிறதை அதி சீக்கிரமாய்ச் செய் என்றார்.

28. ஆனால் அவர் ஏதுக்காக இதை அவனுக்குச் சொன்னாரென்று பந்தியிலிருந்தவர்களில் ஒருவருக்கும் தெரியவில்லை.

29. ஏனெனில் யூதாஸ் பணப்பையை வைத்திருந்தபடியால், யேசுநாதர் அவனை நோக்கி: திருநாளுக்கு நமக்கு வேண்டியவைகளை வாங்கிக்கொண்டுவா என்கிறதாக அல்லது அவன் ஏழைகளுக்கு ஏதாவது கொடுக்கும்படியாக அவனுக்குச் சொல்லியிருப்பாரென்று சிலர் நினைத்திருந்தார்கள்.

30. அவன் அந்தத் துணிக்கையை வாங்கினவுடனே, வெளியே புறப்பட்டுப்போனான். அப்பொழுது இராக்காலமாயிருந்தது.

31. அவன் புறப்பட்டுப் போனபின்பு, யேசுநாதர் திருவுளம் பற்றினதாவது: இப்போது மனுமகன் மகிமைப்படுத்தப்பட்டிருக்கிறார், சர்வேசுரனும் அவரிடத்தில் மகிமைப்படுத்தப் பட்டிருக்கிறார்.

---

27. நீ செய்கிறதை அதி சீக்கிரமாய்ச் செய் என்றதினால் யூதாஸ் இஸ்காரியோத்தென்பவனுடைய துரோகத்திற்கு யேசுநாதர் உத்தரவுகொடுத்தவருமல்ல, கட்டளையிட்டவருமல்ல. ஆனால் அவன் தன் மனதில் தீர்மானித்திருந்த சதிமானத்துக்குத் தடைசெய்யாமல், மனுமக்களுக்காகத் தாம் பாடுபட்டு உயிரைக்கொடுக்கத் தாம் ஆவலோடு காத்திருக்கிறதாக இதினால் விளங்கச்செய்யச் சித்தமானார்.

30. துணிக்கையை வாங்கின உடனே என்பதற்கு அர்த்தமென்னவென்றால்: யூதர்களுக்குள்ளே விருந்து முடிந்ததென்பதற்கு அடையாளமாக விருந்தாடிகளுக்கு ஒரு உரொட்டித் துண்டு கொடுப்பது வழக்கம்; அந்த வழக்கத்தை ஒத்தே யேசுநாதர் யூதாஸுக்குக் கொடுத்தார்.

32. சர்வேசுரன் அவரிடத்தில் மகிமைப்படுத்தப்பட்டிருந்தால், அவனையும் சர்வேசுரன் தம்மிடத்தில் மகிமைப்படுத்துவார்; அதி சீக்கிரத்தில் அவனை மகிமைப்படுத்துவார்.

33. என் பிள்ளைகளே, இன்னம் சொற்பக்காலம் உங்களோடேகூட இருக்கிறேன்; என்னைத் தேடுவீர்கள், ஆனால் நான் போகிற இடத்துக்கு நீங்கள் வரக்கூடாதென்று முன் யூதர்களுக்குச் சொன்னதுபோல இப்பொழுது உங்களுக்குஞ் சொல்லுகிறேன்.

34. நீங்கள் ஒருவனை ஒருவர் சிநேகிக்கும்படியாக உங்களுக்குப் புதிய கட்டளையைக் கொடுக்கிறேன். நான் உங்களைச் சிநேகித்ததுபோல நீங்களும் ஒருவர் ஒருவனைச் சிநேகிக்கக்கடவீர்கள். (லேவி. 19-18; மத். 22-36; அப். 15-12.)

35. நீங்கள் ஒருவனை ஒருவர் சிநேகித்தாலல்லோ, நீங்கள் என் சீஷர்களென்று எல்லாரும் இதினாலே அறிந்துகொள்வார்கள் என்றார்.

36. அப்போது சீமோன் இராயப்பர் அவனை நோக்கி: ஆண்டவரே, தேவரீர் எங்கே போகிறீர் என, யேசுநாதர் மறுமொழியாக: நான் போகிற இடத்துக்கு இப்போது நீ என்னைப் பின்செல்லமாட்டாய்; ஆனால் இனிமேல் பின்செல்லுவாய் என்றார்.

37. அதற்கு இராயப்பர்: ஏன் இப்பொழுதே நான் உம்மைப் பின்செல்லக்கூடாது? உமக்காக என் சீவனைக் கொடுப்பேன் என்றார். (மத். 26-35; லூக். 22-33.)

38. யேசுநாதர் அவருக்குப் பிரத்தியுத்தாரமாக: எனக்காக உன் சீவனைக் கொடுப்பாயோ? நீ என்னை மும்முறை மறுதலிக்கும் வரையில் சேவல் கூவாது என்று மெய்யாகவே, மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

## 14-ம். அதிகாரம்.

யேசுநாதர் கடைசி இராப்போசனத்துக்குப் பின் செய்தருளின பிரசங்கமாவது:

1. உங்கள் இருதயம் கலங்காதிருப்பதாக; சர்வேசுரனிடத்தில் விசுவாசமாயிருக்கிறீர்கள்; என்னிடத்திலும் விசுவாசமாயிருங்கள்.

2. என் பிதாவின் வீட்டிலே அநேக வாசஸ்தலங்கள் உண்டு; அப்படியில்லாதிருந்தால் உங்களுக்குச் சொல்லியிருப்பேன்; ஏனெனில் உங்களுக்கு ஒரு ஸ்தலத்தை ஆயத்தஞ்செய்யப் போகிறேன்.

---

34. ஒருவனை ஒருவர் சிநேகிக்க வேண்டுமென்கிற இந்தக் கற்பனையானது புதுக் கற்பனையல்ல. ஆனால் நான் உங்களைச் சிநேகித்து வந்ததுபோல நீங்களும் ஒருவரொருவனைச் சிநேகித்து வாருங்கள் என்பது புதுக் கற்பனையாயிருக்கிறது. ஏனெனில் யேசுநாதர் சுவாமி அற்பரும் தமக்குச் சத்துராதிகளுமான மனுஷரை அளவின்றிச் சிநேகிக்கிறார். அவ்விதமே அவருடைய சீஷர்களும் பெரியவர் சிறியவரென்றும், மித்திரர், அமித்திரரென்றும் பாராமல் எல்லோரையும் யேசுநாதர் சுவாமியைக் குறித்துச் சிநேகிக்க வேண்டும் என்பதுதான் ஒரு புதுக் கற்பனையாகிறது.

2. அப்போஸ்தலர்களுக்கும் தெரிந்துகொள்ளப்பட்ட புண்ணியாத்துமாக்களுக்கும் மோட்சத்திலே நித்தியமாய் வாசஸ்தலம் தயாராயிருந்தாலும், கர்த்தர் பரலோகத்துக்கு எழுந்தருளும் வரையில் பரகதியின் வாசல் அடைபட்டிருந்ததால், அவர் அதைத் திறந்து, அவரவருடைய பேறுபலன்களுக்கு அளவாய் பேரின்ப மகிமையைத் தயாராக்குவாரென்பது இவ்வாக்கியத்தின் கருத்து.

3. நான் போய், உங்களுக்கு ஒரு ஸ்தலத்தை ஆயத்தஞ்செய்தபின்பு, நான் இருக்கிற ஸ்தலத்திலே நீங்களும் இருக்கத்தக்கதாக, நான் திரும்பிவந்து உங்களை என்னிடத்தில் அழைத்துக் கொள்வேன்.

4. நான் எவ்விடம் போகிறேனென்றும் அறிந்திருக்கிறீர்கள், வழியையும் அறிந்திருக்கிறீர்கள் என்க,

5. தோமையார் அவரை நோக்கி: ஆண்டவரே, நீர் போகிறது எவ்விடமென்று அறியோமே; வழியை நாங்கள் எப்படி அறியக்கூடும் என்றார்.

6. யேசுநாதர் அவரை நோக்கி: வழியும், சத்தியமும், சீவனும் நானே. என் வழியாய் அல்லாதே பிதாவினிடத்தில் சேருகிறவன் ஒருவனுமில்லை.

7. நீங்கள் என்னை அறிந்திருந்தால், என் பிதாவையும் அறிந்திருப்பீர்கள். ஆனால் இதுமுதல் அவரை அறிந்து கொள்வீர்கள்; அவரைக் கண்டுமிருக்கிறீர்கள் என்றார்.

8. அப்பொழுது பிலிப்பு அவரை நோக்கி: ஆண்டவரே, பிதாவை எங்களுக்குக் காண்பித்தருளும், அதுவே எங்களுக்குப் போதும் என்றார்.

9. யேசுநாதர் அவருக்குத் திருவுளம்பற்றினதாவது: இவ்வளவு காலமாய் நான் உங்களுடனேகூட இருந்தும், நீங்கள் என்னை அறிந்துகொள்ளவில்லையோ? பிலிப்புவே, என்னைக் காண்கிறவன் என் பிதாவையுங் காண்கிறான்; அப்படியிருக்க, பிதாவை எங்களுக்குக் காண்பித்தருளும் என்று நீ சொல்லுவதெப்படி?

10. நான் பிதாவிலும், பிதா என்னிலும் இருக்கிறதாக நீங்கள் விசுவசிக்கிறதில்லையோ? நான் உங்களோடு பேசுகிற வார்த்தைகளை நானாகப் பேசுகிறதில்லை. பிதாவானவர் எனக்குள் வசித்து, அவரே கிரியைகளைச் செய்கிறார்.

11. நான் பிதாவிலும், பிதா என்னிலும் இருக்கிறதாக நீங்கள் விசுவசிக்கமாட்டீர்களோ?

12. இல்லாவிட்டால் கிரியைகளின் நிமித்தமாவது விசுவசியுங்கள். மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்: என்னை விசுவசிக்கிறவன் நான் செய்கிற கிரியைகளைத் தானும் செய்வான்; இவைகளில் அதிக பெரிதானவைகளையும் செய்வான். ஏனெனில் நான் பிதாவினிடத்தில் போகிறேன்.

13. நீங்கள் என் நாமத்தினாலே பிதாவை ஏதேது கேட்பீர்களோ, சுதனிடத்தில் பிதா மகிமைப்படும்பொருட்டு, நான் அதைச் செய்தருளுவேன். (மத். 7-7; மாற். 11-24; அரு. 16-23.)

14. என் நாமத்தினாலே நீங்கள் ஏதேனும் என்னைக் கேட்பீர்களாகில், நான் அதைச் செய்தருளுவேன்.

15. நீங்கள் என்னைச் சிநேகித்தால், என் கற்பனைகளை அநுசரியுங்கள்.

3. சீஷர்களுடைய மரணத்தறுவாயில் அவர்கள் ஆத்துமங்களை மோட்சத்துக்கு அழைத்துக்கொண்டுபோக வருவாரென்றும், பின்னும் நடுத்தீர்க்கிற நாளையில் அவர்களை ஆத்தும சரீரத்தோடே கூட அழைத்துக்கொண்டு போக வருவாரென்றும் அர்த்தமாம்.

12. தாம் உலகத்திலிருக்கும்போது செய்த புதுமைகளைவிட அதிக அதிசயமான புதுமைகளைத் தம்முடைய சீஷர்கள் செய்யும்படி யேசுநாதர்சுவாமி அவர்களுக்கு வல்லமைகொடுப்பார் என்பது இதன் கருத்து. விசேஷமாய் உலகத்திலுள்ள சகல ஜாதி ஜனங்களையும் வேதத்தில் உட்படுத்துவதாகிய பெரிய அற்புதத்தைச் செய்வார்கள் என்று அர்த்தமாம்.

16. நானும் பிதாவை மன்றாடுவேன்; அவர் என்றென்றைக்கும் உங்களோடுகூட வசிக்கும்படியாகத் தேற்றுகிறவராகிய வேறொருவரை உங்களுக்குத் தந்தருளுவார். (லூக். 24-19.)

17. அவரோ சத்திய இஸ்பிரீத்துவானவர்; உலகம் அவரை ஏற்றுக்கொள்ளமாட்டாது. ஏனெனில் அது அவரைக் காண்கிறதுமில்லை, அறிந்துகொள்ளுகிறதுமில்லை. நீங்களோ அவரை அறிந்துகொள்வீர்கள். ஏனெனில் அவர் உங்களிடம் வசிப்பார், உங்கள் உள்ளத்திலும் இருப்பார்.

18. நான் உங்களை அநாதர்களாய் விட்டுவிடுகிறதில்லை; உங்களிடத்தில் வருவேன்.

19 இன்னுங்கொஞ்சக்காலம்போக, உலகம் என்னைக் காணமாட்டாது; நீங்களோ என்னைக் காண்பீர்கள்; ஏனெனில் நான் உயிரோடிருக்கிறேன்; நீங்களும் உயிரோடிருப்பீர்கள்.

20. நான் என் பிதாவிலும், நீங்கள் என்னிலும், நான் உங்களிலும் இருக்கிறதை அந்நாளில் அறிந்துகொள்வீர்கள்.

21. என் கற்பனைகளைக் கைக்கொண்டு அவைகளை அநுசரிக்கிறவன் எவனோ, அவனே என்னைச் சிநேகிக்கிறவன். என்னைச் சிநேகிக்கிறவனோ என் பிதாவினால் சிநேகிக்கப்படுவான். நானும் அவனைச் சிநேகித்து, அவனுக்கு என்னைத்தானே வெளிப்படுத்துவேன் என்றார்.

22. அப்போது இஸ்காரியோத்தல்லாத யூதா என்பவர் யேசுநாதரை நோக்கி: ஆண்டவரே, உம்மை உலகத்துக்கு வெளிப்படுத்தாமல், எங்களுக்கு உம்மை வெளிப்படுத்தப்போவதற்கு ஏது காரணமாயிற்று என்க,

23. யேசுநாதர் அவருக்கு மறுமொழியாக: ஒருவன் என்னைச் சிநேகித்தால், என் வாக்கியத்தை அநுசரிப்பான்; என் பிதாவும் அவனைச் சிநேகிப்பார். நாங்கள் அவனிடத்தில் வந்து அவனுக்குள் வாசம்பண்ணுவோம்.

24. என்னைச் சிநேகியாதவன் என் வாக்கியங்களை அநுசரியான். நீங்கள் கேட்டிருக்கிற வாக்கியம் என்னுடையதல்ல; என்னை அனுப்பின பிதாவின் வாக்கியமாமே.

25. நான் உங்களிடத்தில் தங்கியிருக்கையிலே, இவைகளை உங்களுக்குச் சொன்னேன்.

26. ஆனால் என் நாமத்தினாலே பிதாவானவர் அனுப்பப்போகிற தேற்றுகிறவராகிய இஸ்பிரீத்துசாந்துவானவர் சகலத்தையும் உங்களுக்குப் படிப்பித்து, நான் உங்களுக்குச் சொன்ன யாவற்றையும் உங்களுக்கு நினைப்பூட்டுவார்.

27. சமாதானத்தை உங்களுக்கு வைத்துவிட்டுப் போகிறேன்: என் சமாதானத்தை உங்களுக்குத் தருகிறேன். உலகம் கொடுக்கிறதைப்போல நான் (அதைக்) கொடுக்கிறதில்லை. உங்கள் இருதயம் கலங்காமலும், அஞ்சாமலும் இருப்பதாக.

16. தேற்றுகிறவர் இஸ்பிரீத்துசாந்துவானவர் தாமே. தேற்றுகிறவரென்று இஸ்பிரீத்து சாந்துவைப்பற்றி வேதாகமங்களில் அடிக்கடி சொல்லியிருக்கக் காண்கிறோம். இவ்வாக்கியத்தினால் இஸ்பிரீத்துசாந்துவானவர் அப்போஸ்தலர்களோடு மாத்திரமல்லீ, அவர்களிடமாய்ச் சத்திய வேதத்தைப் போதிக்க அதிகாரம் பெற்றவர்களோடும் உலகம் முடியுமட்டும் இருப்பாரென்று விளங்குகிறது.

28. நான் போய், மீண்டும் உங்களிடத்தில் வருகிறேனென்று நான் உங்களுக்குச் சொன்னதைக் கேட்டீர்களே. நீங்கள் என்னைச் சிநேகித்தால், நான் பிதாவினிடத்தில் போகிறதைப்பற்றி மெய்யாகவே சந்தோஷப்படுவீர்கள். ஏனெனில் பிதா என்னிலும் பெரியவராயிருக்கிறார்.

29. மேலும் இது நடக்கும்போது நீங்கள் விசுவசிக்கும்படியாக, நடப்பதற்குமுன் இப்பொழுதே உங்களுக்குச் சொன்னேன்.

30. இனி நான் உங்களோடு அநேக காரியங்களைப் பேசுவதில்லை. அதேதெனில் இவ்வுலகத்தின் தலைவன் வருகிறான்; ஆகிலும் என்னிடத்தில் அவனுக்கு ஒன்றுமில்லை. (அரு. 12-31; லூக். 22-53.)

31. ஆனால் நான் பிதாவைச் சிநேகிக்கிறேனென்றும், அவர் எனக்குக் கற்பித்தபடி செய்கிறேனென்றும் உலகம் அறிந்துகொள்ளும்படி (இப்படியாகும்). எழுந்திருங்கள், இவ்விடம்விட்டுப் போவோமாக. (அப். 2-23.)

## 15-ம். அதிகாரம்.

யேசுநாதர் கடைசி இராப்போசனத்துக்குப் பின் செய்தருளின பிரசங்கத்தின் இரண்டாம் பங்கு.

1. நான் மெய்யான திராட்சச்செடி, என் பிதா அதைப் பயிரிடுகிறவர்.

2. என்னிடத்தில் கனி கொடாத சகல கிளைகளையும் அவர் தறித்துப் போடுவார். மேலும் கனிகொடுக்கிறயாவும் அதிகக் கனி கொடுக்கும் பொருட்டு அவைகளைக் கழிப்பார். (மத். 7-19.)

3. நான் உங்களுக்குச் சொன்ன வாக்கியத்தினிமித்தம் நீங்கள் இப்போதே சுத்தமாயிருக்கிறீர்கள். (அரு. 13-10.)

4. என்னில் நிலைத்திருங்கள், நானும் உங்களில் நிலைத்திருப்பேன். கொடியானது திராட்சச்செடியில் நிலைத்திராவிட்டால், தானாகக் கனி கொடாததுபோல, நீங்களும் என்னில் நிலைத்திராவிட்டால் கனி தர மாட்டீர்கள்.

28. பிதா என்னிலும் பெரியவரென்று யேசுநாதர்சுவாமி தமது மனுஷ சுபாவத்தை மாத்திரம் உத்தேசித்துச் சொல்லுகிறார். அவர் தேவசுபாவத்தை முன்னிட்டுப் பேசும்போதெல்லாம், தாமும் பிதாவும் சரிசமானம் என்கிறார். (பிலிப். அதி. 2-ம் வச. 6.) ஆகையால் தேவசுபாவத்திலே பிதாவுக்கும் சுதனுக்கும் எவ்வளவும் வித்தியாசமில்லையென்பது சத்தியம்.

30. பாவத்தினாலே பசாசுக்கு மனுஷர்பேரில் ஆதிக்கம் உண்டானபடியினாலே யேசுநாதர்சுவாமி பசாசை உலகத்தின் தலைவன் என்கிறார். யேசுநாதரிடத்தில் பாவமில்லாததினாலே அவர்மேல் பசாசுக்கு எவ்வளவும் ஆதிக்கமில்லை. ஆயினும் அவர் மனிதருடைய பாவங்களைத் தமதுமேல் சுமந்துகொண்டபடியால், பூங்காவனத்தில் அவர் சொன்னதுபோல, அவரை உபாதிக்கும்படி தற்காலத்துக்கான அதிகாரம் அதுக்குக் கொடுக்கப்பட்டது.

3. நான் உங்களுக்குச் சொன்ன வாக்கியத்தினிமித்தம் நீங்கள் சுத்தமாயிருக்கிறீர்கள் என்பதற்கு, நான் உங்களுக்குச் சொன்ன திராட்சச் செடியின் உவமைப்படி நீங்கள் என்னோடு ஒன்றித்திருப்பதினாலும், என்னுடைய வார்த்தைகளை விசுவசித்து நம்பியிருப்பதினாலும், நீங்கள் சுத்தமாயிருக்கிறீர்கள் என்றர்த்தமாம்.

5. நான் திராட்சச் செடி, நீங்கள் கொடிகள்; ஒருவன் என்னிலும், நான் அவனிலும் நிலைத்திருந்தால், அவன் மிகுதியான கனியைத்தருவான். ஏனெனில் நான் இல்லாமல் உங்களாலே ஒன்றுஞ் செய்யக்கூடாது.

6. ஒருவன் என்னில் நிலைத்திராவிட்டால், கொடியைப்போல புறம்பே எறியப்பட்டு, உலர்ந்துபோவான். அவனைச் சேர்த்தெடுத்து, அக்கினியில் போடுவார்கள், அவனும் எரிவான்.

7. நீங்களும் என்னில் நிலைத்து, என் வார்த்தைகளும் உங்களில் நிலைத்திருக்குமாகில், நீங்கள் ஏதேதை விரும்பிக் கேட்பீர்களோ, அது உங்களுக்கு அருளப்படும்.

8. நீங்கள் மிகுந்த கனியைத் தந்து, என் சீஷர்களாயிருப்பதால் என் பிதா மகிமைப்பட்டிருக்கிறார்.

9. பிதா என்னைச் சிநேகித்ததுபோல நானும் உங்களைச் சிநேகித்திருக்கிறேன். என் சிநேகத்தில் நிலைத்திருங்கள்.

10. நான் என் பிதாவின் கற்பனைகளை அநுசரித்து, அவருடைய சிநேகத்தில் நிலைத்திருக்கிறதுபோல, நீங்களும் என் கற்பனைகளை அநுசரிப்பீர்களானால் என் சிநேகத்தில் நிலைக்கொள்வீர்கள்.

11. என் சந்தோஷம் உங்களில் இருக்கவும், உங்கள் சந்தோஷம் பூரணமாகவும் இவைகளை உங்களுக்குச் சொன்னேன்.

12. நான் உங்களைச் சிநேகித்ததுபோல, நீங்களும் ஒருவர் ஒருவரைச் சிநேகிக்கவேண்டுமென்பதே என்னுடைய கற்பனையாயிருக்கிறது. (அரு. 13-34; எபே. 5-2; 1. தெச. 4-9.)

13. ஒருவன் தன் சிநேகிதர்களுக்காகத் தன் பிராணனைக்கொடுக்கிறதைவிட அதிகமான சிநேகம் எவனிடத்திலும் இல்லை. நான் உங்களுக்குக் கற்பிக்கிறவைகளைச் செய்வீர்களாகில் என் சிநேகிதராய் இருப்பீர்கள். (1 அரு. 3-16.)

14. இனி நான் உங்களை ஊழியனொன்று சொல்லுவதில்லை. ஏனெனில் ஊழியன் தன் எஜமான் செய்கிறதை அறியான்.

15. உங்களை என்னுடைய சிநேகிதர் என்றேன். ஏனெனில் என் பிதாவினிடத்தில் நான் கேள்விப்பட்ட எல்லாவற்றையும் உங்களுக்கு அறிவித்தேன்.

16. நீங்கள் என்னைத் தெரிந்துகொள்ளவில்லை. நானே உங்களைத் தெரிந்துகொண்டேன்; நீங்கள் என் நாமத்தினால் பிதாவை ஏதேது கேட்டாலும், அதை அவர் உங்களுக்குக் கொடுக்கத்தக்கதாக, நீங்கள் போய், பலனைத்தரும்படிக்கும், உங்கள் பலன் நிலைத்திருக்கும்படிக்கும் நான் உங்களை ஏற்படுத்தினேன். (மத். 18-28.)

17. நீங்கள் ஒருவரை ஒருவர் சிநேகிக்கும்பொருட்டே இவைகளை உங்களுக்குக் கற்பிக்கிறேன். (1 அரு. 3-11.)

18. உலகம் உங்களைப் பகைத்தால், உங்களைப் பகைக்குமுன்னே என்னைப் பகைத்ததென்று அறிந்துகொள்ளுங்கள்.

19. நீங்கள் உலகத்தாராய் இருந்தால், உலகம் தன்னுடையதைச் சிநேகித்திருக்கும். ஆனால் நீங்கள் உலகத்தார் அல்லாததினாலும், நானே உலகத்தினின்று உங்களைத் தெரிந்துகொண்டதினாலும் உலகம் உங்களைப் பகைக்கிறது.

20. ஊழியன் தன் எஜமானிலும் பெரியவன் அல்லவென்று நான் உங்களுக்குச் சொன்ன என் வாக்கியத்தை நினைத்துக் கொள்ளுங்கள். என்னை அவர்கள் துன்பப்படுத்தினால், உங்களையும் துன்பப்படுத்துவார்கள். என் வாக்கை அவர்கள் அநுசரித்தால், உங்கள் வாக்கையும் அநுசரிப்பார்கள். (அரு. 13-6; மத். 10-24; 24-9.)

21. ஆனால் என்னை அனுப்பினவரை அவர்கள் அறியாததினாலே, என் நாமத்தின் நிமித்தம் இவையெல்லாம் உங்களுக்குச் செய்வார்கள்.

22. நான் வராமலும், அவர்களோடு பேசாமலும் இருந்தேனாகில், அவர்களுக்குப் பாவமிராது. ஆனால் இப்போது தங்கள் பாவங்களைக் குறித்து அவர்களுக்குப் போக்குச்சொல்ல இடமில்லை.

23. என்னைப் பகைக்கிறவன் என் பிதாவையும் பகைக்கிறான்.

24. வேறெவனும் செய்யாத (அற்புத) கிரியைகளை நான் அவர்களுக்குள்ளே செய்யாதிருந்தால், அவர்களுக்குப் பாவமிராது. இப்போதோ அவர்கள் கண்டிருந்தும், என்னையும் என் பிதாவையும் பகைக்கிறார்கள்.

25. ஆனால் இலவசமாய் என்னைப் பகைத்தார்களென்று அவர்களுடைய வேதப்பிரமாணத்தில் எழுதியிருக்கிற வாக்கியம் நிறைவேறும்படியாக இப்படிச் செய்கிறார்கள். (சங். 24-19.)

26. ஆகிலும் பிதாவினிடத்திலிருந்து நான் உங்களுக்கு அனுப்பப்போகிறவரும், பிதாவினிடத்தினின்று புறப்படுகிறவருமாகிய சத்திய இஸ்பிரீத்துவான தேற்றுகிறவர் வரும்போது, அவர் என்னைப்பற்றிச் சாட்சிசொல்லுவார். (லூக். 24-49.)

27. நீங்களும் ஆதிமுதல் என்னோடுகூட இருக்கிறபடியால் (எனக்குச்) சாட்சி சொல்லுவீர்கள்.

## 16-ம். அதிகாரம்.

*யேசுநாதர் கடைசி இராப்போசனத்துக்குப் பின் செய்தருளின பிரசங்கத்தின் முடிவு.*

1. நீங்கள் இடறல்படாதபடிக்கு இவைகளை உங்களுக்குச் சொன்னேன்.

2. உங்களை ஜெப ஆலயத்துக்குப் புறம்பாக்குவார்கள். அன்றியும் உங்களைக் கொலைசெய்பவன் தான் சர்வேசுரனுக்கு (உகந்த) ஊழியஞ் செய்வதாக நினைக்குங் காலம் வருகின்றது. (அப். 6-11.)

3. அவர்கள் பிதாவையும் என்னையும் அறியாததினாலே உங்களுக்கு இவைகளைச் செய்வார்கள்.

4. ஆகிலும் அந்தக் காலம் வரும்போது, நான் இவைகளை உங்களுக்கு வசனித்தேனென்று நீங்கள் நினைத்துக் கொள்ளும்படி இவைகளை உங்களுக்குச் சொன்னேன்.

5. நான் உங்களோடேகூட இருந்தபடியினாலே இவைகளைத் துவக்கமுதல் உங்களுக்குச் சொல்லவில்லை. இப்பொழுது என்னை அனுப்பினவரிடத்திற்குப் போகிறேன். ஆயினும் எங்கே போகிறீரென்று உங்களில் ஒருவனும் என்னைக் கேட்கவில்லை.

6. ஆனாலும் நான் இவைகளை உங்களுக்கு அறிவித்ததினாலே உங்கள் இருதயம் துக்கத்தால் நிறைந்திருக்கிறது.

7. அப்படியானாலும் உங்களுக்கு உண்மையைச் சொல்லுகிறேன். நான் போவது உங்களுக்கு நலமாயிருக்கின்றது. ஏனெனில் நான் போகாதிருந்தால், தேற்றுகிறவர் உங்களிடத்தில் வாரார். நான் போவேனாகில், அவரை உங்களிடத்தில் அனுப்புவேன்.

8. அவர் வந்து, பாவத்தைக் குறித்தும், நீதியைக் குறித்தும், நியாயத் தீர்ப்பைக் குறித்தும் உலகத்தைக் கண்டித்து உணர்த்துவார்.

9. எப்படியெனில் அவர்கள் என்னை விசுவசியாததினாலே, பாவத்தைக் குறித்தும்,

10. நான் பிதாவினிடத்திற்குப் போவதினாலும், நீங்கள் இனி என்னைக் காணமாட்டீர்களானதாலும் நீதியைக் குறித்தும்,

11. இவ்வுலகத் தலைவன் ஏற்கனவே தீர்வையிடப்பட்டதால், நியாயத் தீர்ப்பைக் குறித்தும் (கண்டித்து உணர்த்துவார்.)

12. நான் இன்னும் உங்களுக்குச் சொல்லவேண்டிய அநேககாரியங்கள் உண்டு. ஆனால் இப்பொழுது அவைகளைத் தாங்கமாட்டீர்கள்.

13. சத்திய இஸ்பிரீத்துவாகிய அவர் வரும்போது, சகல சத்தியத்தையும் உங்களுக்குப் படிப்பிப்பார். ஏனெனில் அவர் தாமாகப் பேசாமல், கேள்விப்பட்ட யாவையும் பேசி, வரப்போகிறவைகளையும் உங்களுக்கு அறிவிப்பார்.

14. அவர் என்னை மகிமைப்படுத்துவார். ஏனெனில் என்னுடையதினின்று பெற்றுக்கொண்டு உங்களுக்கு அறிவிப்பார்.

15. பிதாவினுடையவைகள் யாவும் என்னுடையவைகள். ஆகையால் அவர் என்னுடையதினின்று பெற்றுக்கொண்டு, உங்களுக்கு அறிவிப்பார் என்றேன்.

16. இன்னும் கொஞ்சக்காலம், அதின்பின் என்னைக் காணமாட்டீர்கள். மீண்டும் கொஞ்சக்காலம்; அதின்பின் என்னைக் காண்பீர்கள். ஏனெனில் நான் பிதாவினிடத்திற்குப் போகிறேன் என்றார்.

17. ஆகையால் அவருடைய சீஷர்களில் சிலர் ஒருவர் ஒருவரை நோக்கி: இன்னுங் கொஞ்சக்காலம், அதின்பின் என்னைக் காணமாட்டீர்கள்; மீண்டுங் கொஞ்சக்காலம், அதன்பின் என்னைக் காண்பீர்கள்; ஏனெனில் நான் பிதாவினிடத்திற்குப் போகிறேன் என்று நமக்குச் சொல்லுகிறாரே. இது என்ன?

18. இன்னுங் கொஞ்சக்காலமென்று அவர் சொல்வது ஏது? இன்னது சொல்லுகிறாரென்று நமக்கு விளங்கவில்லையே என்றார்கள்.

---

9-10-11. இம்மூன்று வசனங்களுக்கும் கருத்து ஏதென்றால், இஸ்பிரீத்து சாந்துவானவர் எழுந்தருளி வரும்போது உலக மனுஷர் யேசுநாதரும், அப்போஸ்தலரும், செய்த பிரசங்கங்களாலும், அற்புத புதுமைகளாலும் கிறீஸ்துநாதரை விசுவசியாமற் போனது அவர்களுக்கு மகா பாவமென்று அவர்கள் உணரச் செய்வார். மேலும் யேசுநாதர்சுவாமியை யூதர் அநியாயமாய்ப் பகைத்துக் குற்றவாளியைப்போல் கொலைப்படுத்தியிருந்தாலும், தேவபிதா அவரை மகிமைப்படுத்தித் தமது வலதுபாரிசத்தில் உட்காரச் செய்ததால் அவர் பரிசுத்தரென்றும் நீதிபரரென்றும் இஸ்பிரீத்துசாந்துவானவர் வெளியாக்குவார். அன்றியும் பாவத்தால் மனிதரை மயக்கித் தனக்கு அடிமைகளாக்கின இவ்வுலகத் தலைவனாகிய பசாசானது திவ்விய இரட்சகருடைய மரணத்தாலும், சுவிசேஷப் போதனையாலும் நடுத்தீர்க்கப்பட்டுத் தன் கொடுங்கோல் அரசை இழந்து நரகத்தில் தள்ளப்பட்டதென்றும், அதின் துர் மார்க்கத்தை அநுசரிக்கிறவர்கள் கடினதீர்வைக்கு உள்ளாவார்களென்றும் அறியப் பண்ணுவார் என்க.

19. ஆகையால் அவர்கள் தம்மை வினவ விரும்புகிறார்களென்று யேசுநாதர் அறிந்து, அவர்களை நோக்கி: இன்னுங் கொஞ்சக்காலம், அதின்பின் என்னைக் காணமாட்டீர்களென்றும், மீண்டுங் கொஞ்சக்காலம், அதின்பின் என்னைக் காண்பீர்களென்றும் நான் சொன்னதினால், அதைக் குறித்து உங்களுக்குள்ளே வினவிக்கொள்ளுகிறீர்கள்.

20. மெய்யாகவே, மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்: நீங்கள் புலம்பி அழுவீர்கள்; உலகமோ சந்தோஷப்படும்; நீங்கள் துக்கப்படுவீர்கள், ஆனால் உங்கள் துக்கம் சந்தோஷமாக மாறிப்போம். (லூக். 22-28.)

21. ஸ்திரீயானவள் பிரசவிக்கும்போது தன் (பேறு) காலம் வந்ததினாலே துக்கப்படுகிறாள். ஆனால் அவள் பிள்ளையைப் பெற்றபின், ஒரு மனுஷன் உலகத்திலே பிறந்தானென்கிற சந்தோஷத்தினாலே அப்புறம் அம்பாயத்தை நினைக்கமாட்டாள்.

22. அப்படியே நீங்களும் இப்போது துக்கமாயிருக்கிறீர்கள். ஆனால் மறுபடியும் நான் உங்களைக் காண்பேன். அப்போது உங்கள் இருதயஞ் சந்தோஷிக்கும். உங்கள் சந்தோஷத்தை உங்களிடத்தினின்று ஒருவனும் பறித்துக்கொள்ளமாட்டான்.

23. அந்த நாளில் நீங்கள் என்னிடத்தில் எதையும் கேட்பதில்லை. என் நாமத்தினாலே நீங்கள் பிதாவினிடத்தில் எதாகிலும் கேட்பீர்களேயாகில் அதை அவர் உங்களுக்குத் தந்தருளுவார் என்று மெய்யாகவே, மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். (மத். 7-7; 21-22; மாற். 11-24; லூக். 11-9; அரு. 11-13; இயா. 1-15.)

24. இதுவரைக்கும் நீங்கள் என் நாமத்தினாலே ஒன்றையும் கேட்கவில்லை. கேளுங்கள், உங்கள் சந்தோஷம் பூரணமாகும்பொருட்டுப் பெற்றுக்கொள்வீர்கள்.

25. இவைகளை உங்களுக்கு உவமைகளால் சொன்னேன். இதோ காலம் வருகிறது; இனி உவமைகளால் பேசாமல், வெளிப்படையாய்ப் பிதாவின் காரியங்களை உங்களுக்குத் தெரிவிப்பேன்.

26. அந்த நாளிலே என் நாமத்தினாலே விண்ணப்பஞ் செய்வீர்கள். ஆயினும் உங்களைப்பற்றி நான் பிதாவை மன்றாடுவேன் என்று உங்களுக்குச் சொல்லுகிறதில்லை.

27. ஏனெனில் நீங்கள் என்னைச் சிநேகித்து, நான் சர்வேசுரனிடத்தினின்று புறப்பட்டேனென்று விசுவசித்திருக்கிறபடியால், பிதாதாமே உங்களைச் சிநேகிக்கிறார்.

28. நான் பிதாவினிடத்திலிருந்து புறப்பட்டு இவ்வுலகத்துக்கு வந்தேன். மறுபடியும் உலகத்தை விட்டுப் பிதாவினிடத்திற்குப் போகிறேன் என்றார்.

29. அப்பொழுது அவருடைய சீஷர்கள் அவரை நோக்கி: இதோ, இப்பொழுது வெளிப்படையாய்ப் பேசுகிறீர்; உவமை ஒன்றுஞ் சொல்லுகிறதில்லை.

30. உமக்கு எல்லாம் தெரியுமென்றும், ஒருவனும் உம்மை வினவவேண்டுவதில்லையென்றும் இப்பொழுது அறிந்திருக்கிறோம். இதினிமித்தமே தேவரீர் சர்வேசுரனிடத்திலிருந்து வந்திருக்கிறீரென்று விசுவசிக்கிறோம் என்றார்கள்.

31. யேசுநாதர் அவர்களுக்குப் பதில் மொழியாக: இப்பொழுது நீங்கள் விசுவசிக்கிறீர்களோ?

32. ஆனால் இதோ காலம் வருகிறது, இப்போதே வந்திட்டது ; நீங்கள் என்னைத் தனியே விட்டுவிட்டு, ஒவ்வொருவரும் தன் தன் இடத்துக்குச் சிதறிப் போகும்படியாகும். ஆகிலும் நான் தனிமையாயிருக்கிறதில்லை; ஏனெனில் பிதா என்னோடுகூட இருக்கிறார். (மத். 26-31 ; மாற். 14-27.)

33. என்மட்டில் நீங்கள் சமாதானத்தைக் கொண்டிருக்கும்பொருட்டு இவைகளை உங்களுக்குச் சொன்னேன். இவ்வுலகத்தில் உங்களுக்கு நெருக்கிடை உண்டாகும் ; ஆயினும் திடமாயிருங்கள். நான் உலகத்தை ஜெயித்தேன் என்று திருவுளம்பற்றினார்.

## 17-ம். அதிகாரம்.

*யேசுநாதர் தமது சீஷர்களுக்காகவும், அவர்கள்மூலமாய்த் தம்மை விசுவசிக்கப்போகிறவர்களுக்காகவும் தமது பிதாவை நோக்கிச் செய்த ஜெபம்.*

1. யேசுநாதர் இவைகளை உரைத்தபின்பு, தம்முடைய கண்களை வானத்தை நோக்கி ஏறெடுத்து வசனித்ததாவது :

2. பிதாவே, நேரம் வந்தது ; நீர் உம்முடைய சுதனுக்கு ஒப்பித்தருளின யாவருக்கும் அவர் நித்திய சீவியத்தைக் கொடுக்கத்தக்கதாக எல்லா மனிதர்பேரிலும் அவருக்கு அதிகாரந் தந்தருளினீரோ. அப்படியே உம்முடைய சுதனை மகிமைப்படுத்தியருளும். (மத். 28-18.)

3. ஏக மெய்யான கடவுளாகிய உம்மையும், நீர் அனுப்பினவராகிய யேசுக்கிறீஸ்துவையும் அவர்கள் அறிந்துகொள்வதே நித்திய சீவியம்.

4. பூமியிலே நான் உம்மை மகிமைப்படுத்தினேன், நான் செய்யும்படி நீர் தந்தருளின வேலையைச் செய்துமுடித்தேன்.

5. பிதாவே, உலகம் உண்டாகுமுன்னே உம்மிடத்தில் எனக்கிருந்த மகிமையால் இப்போது நீர் என்னை உம்மிடத்தில் மகிமைப்படுத்தியருளும்.

6. நீர் உலகத்திலிருந்து தெரிந்தெடுத்து எனக்குத் தந்தருளின மனிதர்களுக்கு உம்முடைய நாமத்தை வெளிப்படுத்தினேன். அவர்கள் உம்முடைய வாக்கியத்தைக் கைக்கொண்டிருக்கிறார்கள்.

7. நீர் எனக்குத் தந்தருளினதெல்லாம் உம்மிடத்திலிருந்து எனக்கு வந்தவைகளென்று இப்பொழுது அறிந்துகொண்டார்கள்.

8. ஏனெனில் நீர் எனக்குத் தந்தருளின வாக்கியங்களை நான் அவர்களுக்குக் கொடுத்தேன். அவர்களும் அவைகளை ஏற்றுக்கொண்டு, நான் உம்மிடத்திலிருந்து புறப்பட்டுவந்தேனென்று நிச்சயமாய் அறிந்து, நீர் என்னை அனுப்பினீரென்று விசுவசித்திருக்கிறார்கள்.

9. நான் இவர்களுக்காக வேண்டிக்கொள்ளுகிறேன். நீர் எனக்குக் கொடுத்தவர்கள் உம்முடையவர்களானதையால், நான் இவர்களுக்காகவேயன்றி, உலகத்துக்காக வேண்டிக்கொள்ளுகிறதில்லை.

9. மனுஷர்களுக்குள்ளே யார் தம்மை விசுவசிப்பார்களென்றும், யார் தம்மை விசுவசியாமல் உலகமே கெதி என்று மரணபரியந்தம் தங்கள் மனம்போல் நடப்பார்களென்றும், யேசுநாதர் சுவாமி அறிந்திருந்தார். ஆகையால் நான் உலகத்துக்காக வேண்டிக்கொள்ளுகிறதில்லையென்று யேசுநாதர் சொல்லும்போது மனுஷர்கள் ஆஸ்தி, பெருமை முதலியவைகளை அடைந்து இவ்வுலகத்திலே சுகமாய் வாழ்ந்திருக்க வேணுமென்று மன்றாடுகிறதில்லை என்று அர்த்தமாம்.

10. என்னுடையவைகளெல்லாம் உம்முடையவைகள். உம்முடையவைகளும் என்னுடையவைகள். மேலும் இவர்களில் நான் மகிமைப்பட்டிருக்கிறேன்.

11. இனி நான் உலகத்தில் இரேன்; இவர்கள் உலகத்தில் இருக்கிறார்கள். நானோ உம்மிடத்திற்கு வருகிறேன். பரிசுத்த பிதாவே, நீர் எனக்குத் தந்தருளினவர்கள் நம்மைப்போல ஒன்றாயிருக்கும்படிக்கு உம்முடைய நாமத்தினாலே அவர்களைக் காத்தருளும்.

12. நான் அவர்களுடன் இருக்கும்போது உம்முடைய நாமத்தினாலே அவர்களைக் காப்பாற்றிவந்தேன். நீர் எனக்குக் கொடுத்தவர்களைக் காத்துவந்தேன். வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாக, கேட்டின் மகனேயன்றி அவர்களில் ஒருவனும் கெட்டுப்போகவில்லை. (அரு. 18-19; சங். 108-8.)

13. இப்பொழுதோ நான் உம்மிடத்திற்கு வருகிறேன். என் சந்தோஷத்தை அவர்கள் தங்களிடத்தில் பூரணமாய்க் கொண்டிருக்கும்படி நான் உலகத்தில் இருக்கையில் இவைகளைச் சொல்லுகிறேன்.

14. நான் அவர்களுக்கு உம்முடைய வாக்கியத்தைக் கொடுத்தேன். நான் உலகத்தான் அல்லாததுபோல, அவர்களும் உலகத்தார் அல்ல. ஆதலால் உலகம் அவர்களைப் பகைத்தது.

15. தேவரீர் அவர்களை உலகத்தினின்று எடுத்துக்கொள்ளும்படிக்கு நான் வேண்டிக்கொள்ளாமல், தின்மையினின்று அவர்களைக் காப்பாற்றும்படி (வேண்டிக்கொள்ளுகிறேன்.)

16. நான் உலகத்தான் அல்லாததுபோல, அவர்களும் உலகத்தார் அல்ல.

17. அவர்களைச் சத்தியத்தில் அர்ச்சித்தருளும். தேவரீருடைய வாக்கியம் சத்தியமாமே.

18. தேவரீர் என்னை உலகத்தில் அனுப்பினதுபோல, நானும் அவர்களை உலகத்தில் அனுப்பினேன்.

19. அவர்களும் சத்தியத்தில் அர்ச்சிக்கப்பட்டவர்களாய் இருக்கும்படிக்கு, அவர்களுக்காக நானும் என்னைத்தானே அர்ச்சிக்கிறேன்.

20. மேலும் நான் இவர்களுக்காக மாத்திரமல்ல, இவர்களுடைய வாக்கியத்தின்வழியாய் என்னை விசுவசிப்பவர்களுக்காகவும் வேண்டிக்கொள்ளுகிறேன்.

21. அவர்கள் எல்லாரும் ஒன்றாயிருக்கவும், பிதாவே, தேவரீர் என்னை அனுப்பினீரென்று உலகம் விசுவசிக்கவும், நீர் என்னிலும், நான் உம்மிலும் இருக்கிறதுபோல அவர்களும் நம்மிடத்தில் ஒன்றாயிருக்கவும் (வேண்டிக்கொள்ளுகிறேன்.)

22. நாம் ஒன்றாயிருக்கிறதுபோல, அவர்களும் ஒன்றாயிருக்கும்படிக்குத் தேவரீர் எனக்குத் தந்தருளின மகிமையை அவர்களுக்குக் கொடுத்தேன்.

---

12. கேட்டின் மகனென்பது கெட்டவனென்று அர்த்தமாகும். அவன் யூதாஸ்இஸ்காரியோத்தென்பவன் தான்.

19. **என்னைத்தானே அர்ச்சிக்கிறேன்** என்பதற்கு அர்த்தம் ஏதெனில்:---1-வது. யேசுநாதர் சுவாமி தம்மிடத்தில் இயல்பாயிருக்கிற பரிபூரண அர்ச்சியசிஷ்டதனத்தைத் தமது கிரியைகளினாலே உலகத்துக்கு நன்மாதிரிகையாகக் காண்பித்து வருகிறதினிமித்தம் என்னை அர்ச்சித்துக்கொண்டு வருகிறேனென்று சொல்லுகிறார்.

• 2-வது. என்னைத்தானே அர்ச்சிக்கிறேன் என்பது, என்னைப் பலியாக ஒப்புக்கொடுக்கிறேனென்று அர்த்தங்கொள்ளும்.

23. அவர்கள் ஒற்றுமையில் சம்பூரணராயிருக்கவும் நீர் என்னை அனுப்பினீரென்றும், என்னை நீர் சிநேகித்ததுபோல அவர்களையும் சிநேகித்தீரென்றும் உலகம் அறிந்துகொள்ளவும், நான் அவர்களிலும், நீர் என்னிலும் இருக்கவேண்டும்.

24. பிதாவே, உலக சிருஷ்டிப்புக்கு முன் நீர் என்னைச் சிநேகித்ததினாலே, நீர் எனக்குத் தந்தருளின மகிமையை நீர் எனக்குத் தந்தருளினவர்களும் காணும்படியாக, நான் இருக்கிற இடத்தில் அவர்களும் என்னோடிருக்கவேண்டுமென்று மனதாயிருக்கிறேன்.

25. நீதியுள்ள பிதாவே, உலகம் உம்மை அறியவில்லை, நானோ உம்மை அறிந்திருக்கிறேன். இவர்களும் நீர் என்னை அனுப்பினதாக அறிந்திருக்கிறார்கள்.

26. நீர் என்னைச் சிநேகித்த சிநேகம் இவர்களிடத்தில் இருக்கும்படியாகவும், நானும் இவர்களில் இருக்கும்படியாகவும் உம்முடைய நாமத்தை இவர்களுக்கு வெளிப்படுத்தினேன்; இன்னும் வெளிப்படுத்துவேன் என்றார்.

## 18-ம். அதிகாரம்.

*யேசுநாதருடைய பாடுகளின் வரலாறு.*

1. யேசுநாதர் இவைகளைத் திருவுளம்பற்றினபிற்பாடு, தம்முடைய சீஷர்களோடுகூடப் புறப்பட்டுச் செதிரோன் என்னும் அருவிக்கு அப்பால் போனார். அங்கே ஒரு தோட்டம் இருந்தது. அதிலே அவரும் அவருடைய சீஷர்களும் பிரவேசித்தார்கள். (2 இரா. 15-23; மத். 26-36; மாற். 14-32; லூக். 22-39.)

2. யேசுநாதர் தம்முடைய சீஷர்களோடுகூட அடிக்கடி அங்கே வந்திருந்ததினாலே அவரைக் காட்டிக்கொடுத்த யூதாசும் அந்த இடத்தை அறிந்திருந்தான்.

3. ஆதலால் யூதாஸ் போர்ச்சேவகர் கூட்டத்தையும் குருக்களிடத்திலும் பரிசேயர்களிடத்திலுமிருந்து ஊழியர்களையும் கூட்டிக்கொண்டு விளக்குக் கூண்டுகளோடும், பந்தங்களோடும், ஆயுதங்களோடும் அவ்விடத்திற்கு வந்தான். (மத். 26-47; மாற். 14-43; லூக். 22-47.)

4. யேசுநாதரோவெனில் தமக்கு வரப்போகிற யாவற்றையும் அறிந்து அவர்களுக்குமுன் சென்று, அவர்களை நோக்கி: நீங்கள் யாரைத் தேடுகிறீர்கள் என்றார்.

5. அவர்கள் அவருக்குப் பதில்மொழியாக: நசரேயனாகிய யேசுவைத்தேடுகிறோம் என்க, யேசுநாதர் அவர்களை நோக்கி: நான்தான் என்றார். அப்பொழுது அவரைக் காட்டிக்கொடுத்த யூதாசும் அவர்களோடு நின்றுகொண்டிருந்தான்.

6. நான்தான் என்று யேசுநாதர் அவர்களுக்குச் சொன்னவுடனே, அவர்கள் பின்னிட்டுப்போய் தரையிலே விழுந்தார்கள்.

7. மீண்டும் யேசுநாதர் அவர்களை நோக்கி: யாரைத் தேடுகிறீர்கள் என்க, அவர்கள்: நசரேயனாகிய யேசுவை என்றார்கள்.

8. யேசுநாதர் பதில்மொழியாக: நான்தானென்று உங்களுக்குச் சொன்னேனே. ஆகையால் என்னைத் தேடுகிறீர்களானால், இவர்களைப் போகவிடுங்கள் என்றார்.

9. நீர் எனக்குத் தந்தருளினவர்களில் நான் ஒருவனையும் இழந்து போகவில்லையென்று அவர் திருவுளம்பற்றின வாக்கியம் நிறைவேறும்படியாக (இப்படிச் சொன்னார்.) (அரு. 17-12.)

10. அப்போது சீமோன் இராயப்பர் தான் வைத்திருந்த பட்டயத்தை உருவி, பெரிய குருவினுடைய ஊழியனைத்தாக்கி அவனுடைய வலது காதற வெட்டினார். அந்த ஊழியனுக்குப் பேர் மால்க்கூஸ் என்பதாம்.

11. ஆகையால் யேசுநாதர் இராயப்பரை நோக்கி: உன் பட்டயத்தை உறையில் போடு; பிதாவானவர் எனக்குக் கொடுத்த பாத்திரத்தை நான் பானம்பண்ணுதிருப்பேனே என்றார்.

12. அப்படியிருக்கச் சேவகர் கூட்டமும் சேனைபதியும் யூதருடைய ஊழியர்களும் யேசுநாதரைப் பிடித்துக் கட்டி,

13. அந்த வருஷத்திலே பெரிய குருவாயிருந்த கைப்பாஸ் என்பவனுக்கு மாமனாகிய அன்னாஸ் என்பவனிடத்திற்கு முந்த முந்த அவரைக் கூட்டிக் கொண்டுபோனார்கள். (லூக். 3-2.)

14. இந்தக் கைப்பாஸ்தான்: ஒரு மனிதன் ஜனத்துக்காகச் சாகிறது தாவிளையென்று யூதர்களுக்கு ஆலோசனைகொடுத்தவன். (அரு. 11-49.)

15. அப்பொழுது சீமோன் இராயப்பரும் வேறொரு சீஷனும் யேசுநாதரைப் பின்தொடர்ந்துபோனார்கள். அந்தச் சீஷன் பெரிய குருவுக்கு அறிமுகமாயிருந்ததினாலே, யேசுநாதரோடுகூடப் பெரிய குருவின் அரமனை முற்றத்துக்குட் பிரவேசித்தார்.

16. இராயப்பரோவெனில் வெளியே தலைவாசலில் நின்றுகொண்டிருந்தார். ஆனால் பெரிய குருவுக்கு அறிமுகமாயிருந்த அந்த வேறு சீஷன் வெளியே வந்து, வாசல் காக்கிறவளிடத்தில் பேசி, இராயப்பரை உள்ளே கூட்டிக்கொண்டுபோனார். (மத். 26-58; மாற். 14-54.)

17. அப்பொழுது வாசல் காக்கிற ஊழியக்காரி இராயப்பரை நோக்கி: நீயும் இந்த மனுஷனுடைய சீஷர்களில் ஒருவனல்லவோ என்றுசொல்ல, அவர் நான் அல்ல என்றார்.

18. அப்போது குளிராயிருந்தமையால், ஊழியரும், சேவகரும் தணலண்டையில் நின்று குளிர்காய்ந்துகொண்டிருந்தார்கள். இராயப்பரும் அவர்களோடுகூட நின்று குளிர்காய்ந்துகொண்டிருந்தார்.

19. அப்படியிருக்க, பெரிய குரு யேசுநாதரிடத்தில் அவருடைய சீஷர்களைக்குறித்தும், அவருடைய போதகத்தைக்குறித்தும் விசாரித்தான்.

20. யேசுநாதர் அவனுக்குப் பதில் மொழியாக: நான் உலகத்துக்கு வெளியரங்கமாய்ப் பேசினேன். நான் எப்போதும் ஜெப ஆலயத்திலும், யூதர்களெல்லாரும் கூடிவருகிற தேவாலயத்திலும் உபதேசித்தேனேயொழிய அந்தரங்கத்தில் ஒன்றும் பேசினதில்லை.

21. நீர் என்னிடத்தில் விசாரிப்பானேன்? நான் சொன்னவைகளைக் கேட்டவர்களிடத்தில் அவர்களுக்கு நான் சொன்னது என்னவென்று விசாரியும். இதோ, நான் சொன்னவைகள் அவர்களுக்குத் தெரியுமே என்றார்.

22. அவர் இவைகளைச் சொன்னவுடனே, அங்கேநின்ற சேவகர்களில் ஒருவன்: இவ்விதமோ பெரிய குருவுக்குப் பதில் சொல்லுகிறாய் என்று யேசுநாதரைக் கன்னத்தில் அறைந்தான்.

23. யேசுநாதர் அவனுக்கு மறுமொழியாக: நான் தப்பிதமாய்ப் பேசினேனாகில், தப்பிதத்தை ருசுப்படுத்து; சரியாய்ப் பேசியிருந்தால், நீ என்னை அடிப்பானேன் என்றார்.

24. அன்னாஸ் என்பவன் பெரிய குருவாகிய கைப்பாசிடத்தில் அவரைக் கட்டுண்டவராகவே அனுப்பியிருந்தான்.

25. அப்பொழுது சீமோன் இராயப்பர் நின்று குளிர்காய்ந்துகொண்டிருந்தார். அப்படியிருக்க: நீயும் அவனுடைய சீஷர்களில் ஒருவனல்லவோ என்று அவருக்குச் சொன்னார்கள். அவரோ மறுதலித்து: நான் அல்ல என்றார். (மத். 26-69; மாற். 14-67; லூக். 22-55.)

26. அன்றியும் பெரிய குருவின் ஊழியர்களில் இராயப்பர் காதற வெட்டினவனுக்கு இனத்தானாகிய ஒருவன் அவரைநோக்கி: நான் அவனோடு உன்னைத் தோட்டத்தில் காணவில்லையோ? என்றான்.

27. இராயப்பர் மறுபடியும் மறுதலித்தார். உடனே சேவல் கூவிற்று.

28. பின்பு யேசுநாதரைக் கைப்பாசிடத்தினின்று தேசாதிபதியின் அரமனைக்குக் கூட்டிக்கொண்டு போனார்கள். அப்பொழுது விடியற்காலமாய் இருந்தது. அவர்களோ பாஸ்காவைப் புசிக்கவேண்டியதைப்பற்றித் தீட்டுப்படாதபடி அந்த அரமனைக்குள் பிரவேசிக்கவில்லை. (மத். 27-2; மாற். 15-1; லூக். 23-1; அப். 10-28; 11-3.)

29. ஆதலால் பிலாத்தென்பவன் அவர்களிடத்தில் வெளியே வந்து: இந்த மனிதன்பேரில் என்ன குற்றங் கொண்டுவருகிறீர்கள் என்று கேட்க,

30. அவர்கள் மறுமொழியாக: இவன் குற்றவாளியல்லாதிருந்தால், இவனை உமக்குக் கையளிக்க மாட்டோம் என்றார்கள்.

31. பிலாத்து அவர்களை நோக்கி: அப்படியானால், நீங்களே இவனை ஒப்புக்கொண்டு உங்கள் வேதசட்டத்தின்படி இவனுக்குத் தீர்ப்புச்செய்யுங்கள் என்க, யூதர்கள்: எவனையும் கொலைப்படுத்த எங்களுக்கு உத்தரவில்லை என்று அவனுக்குச் சொன்னார்கள்.

---

23. ஒருவன் ஒரு கன்னத்தில் அடித்தால் மறு கன்னத்தைக் காட்டென்று சொன்ன ஆண்டவர் இந்தச் சமயத்தில் என்னை ஏன் அடிக்கிறாயென்று கேட்டதற்குக் காரணம்: சர்வேசுரனுடைய ஸ்தானத்திலிருந்த பெரிய குருவுக்குத் தாம் சங்கைக்குறைவான வார்த்தை பேசினதுபோல் சொல்லி அடித்ததினாலே இப்படிக் கேட்டார். இவ்விதங்கேளாதிருந்தால் பெரிய குருவுக்கு மெய்யாகவே அவர் அவசங்கைபண்ணினாரென்று மற்றவர்கள் நினைக்க இடமாயிருந்திருக்கும்.

24. சரித்திரத்தொடர்பாயிருக்கும்படி 13-ம் வசனத்துக்குப்பின் இந்த 24-ம் வசனம் வரவேண்டியது. ஏனெனில் 14-ம் வசன முதல் 28-ம் வசனம் வரையில் சொல்லப்படுவதெல்லாம் பெரிய குருவின் மாளிகையில் நடந்ததாக மற்ற மூன்று சுவிசேஷகரைப்போல அர்ச். அருளப்பருஞ் சொல்லுகிறார். 13-ம் வசனத்தில் கைப்பாஸென்பவன் அந்த வருஷத்திலே பெரிய குருவாயிருந்தான் என்கிறார். ஆகையால் யேசுநாதரைப் பிடித்தவர்கள் அவரை முந்த முந்த அன்னாஸ் என்பவனுடைய மாளிகைக்குக் கொண்டு போனபோது அவன் அவரைத் தன்னிடத்தில் நிறுத்தாமல் உடனே கைப்பாசிடம் அனுப்பினானென்று நிச்சயிக்கத்தகும்.

31-32. யேசுநாதரைக் கொலைசெய்ய வேண்டுமென்று யூதர் அநேகஞ் சமயங்களில் துணிந்திருந்தார்கள். கொஞ்ச நாளைக்குப்பின் அர்ச். முடியப்பரைக் கல்லால் எறிந்து

32. யேசுநாதர் தாம் என்ன சாவு சாகப் போகிறாரென்பதைக் குறிப்பிட்டுச் சொன்னவாக்கியம் நிறைவேறும்படிக்கு இப்படிச் சம்பவித்தது. (மத். 20-19.)

33. ஆகையால் பிலாத்து மறுபடியும் தன் அரமனையில் பிரவேசித்து, யேசுநாதரைத் தன்னிடத்தில் வரவழைத்து: நீ யூதர்களுடைய இராஜாவோ என்று அவரைக் கேட்டான்.

34. யேசுநாதர் பதில் மொழியாக: நீராய் இதைச் சொல்லுகிறீரோ அல்லது மற்றவர்கள் என்னைக்குறித்து (இதை) உமக்குச் சொன்னார்களோ என்றார்.

35. பிலாத்து பிரத்தியுத்தரமாக: நான் யூதனோ? உன் ஜனமும், பிரதான ஆசாரியரும் உன்னை எனக்குக் கையளித்தார்கள். நீ என்ன செய்தாய் என்றான்.

36. யேசுநாதர் பதில் மொழியாக: என் இராச்சியம் இவ்வுலகத்துக்கு அடுத்ததல்ல; என் இராச்சியம் இவ்வுலகந்துக்கு அடுத்ததானால் நான் யூதர்களுக்குக் கையளிக்கப்படாதபடி என் சேவகர் மெய்யாகவே போராடியிருப்பார்கள். இப்படியிருக்க, என் இராச்சியம் இவ்வுலகத்துக்கு அடுத்ததல்ல என்றார்.

37. ஆகையால் பிலாத்து அவரை நோக்கி: அப்படியானால், நீ இராஜாவோ என்றான். யேசுநாதர் மாறுத்தாரமாக: நான் இராஜா என்று நீரே சொல்லுகிறீர்; நான் சத்தியத்துக்குச் சாட்சி சொல்லும்படியாகப் பிறந்தேன், அதற்காகவே உலகத்துக்கு வந்தேன்; சத்தியத்தைச் சார்ந்தவன் எவனும் என் சத்தத்துக்குக் காதுகொடுக்கிறான் என்றார்.

38. அப்பொழுது பிலாத்து அவரை நோக்கி: சத்தியமாவது என்ன என்றான். அப்படிச் சொன்னவுடனே மறுபடியும் யூதர்களிடத்தில் வெளியே வந்து, அவர்களை நோக்கி: நான் அவனிடத்தில் ஒரு குற்றமும் காணேன்.

39. ஆகிலும் பாஸ்குத் திருநாளில் நான் உங்களுக்கு ஒருவனை விடுதலையாக்குவது உங்களுக்கு வழக்கமாயிருக்கிறதே; ஆகையால் யூதர்களுடைய இராஜாவை நான் உங்களுக்கு விடுதலையாக்க விரும்புகிறீர்களோ என்றான்.

40. அப்பொழுது அவர்கள் எல்லோரும்: அவனையல்ல, பரபாசை விடுதலையாக்கும் என்று திரும்பவும் கூக்குரலிட்டார்கள். பரபாசோ கள்ளனாயிருந்தான்.

## 19-ம். அதிகாரம்.

கிறீஸ்துநாதருடைய பாடுகளின் தொடர்ச்சி; அவருடைய மரணமும் அடக்கமும் வருமாறு.

1. அப்பொழுது பிலாத்து யேசுநாதரைப்பிடித்துச் சாட்டைகளால் அடிப்பித்தான். (மத். 27-22)

2. பின்னும் போர்ச்சேவகர் முள்ளுகளால் ஓர் முடியைப்பின்னி, அவருடைய சிரசில் வைத்தழுத்தி, தூமிர வஸ்திரத்தையும் அவருக்குப் போர்த்தினார்கள். (மாற். 15-17.)

3. மீண்டும் அவரிடத்தில் வந்து: யூதருடைய இராஜாவே, வாழ்க என்று சொல்லி அவரைக் கன்னத்தில் அறைந்தார்கள்.

கொன்றார்கள். ஆகையால் ஒருவனைக் கொலைசெய்ய எங்களுக்கு அதிகாரம் இல்லையென்கும்போது: இவரைச் சிலுவையிலே அறைந்து கொல்லவேண்டும். சிலுவை ஆக்கினையிட உரோமாபுரி இராயனுடைய ஸ்தானாபதிக்கு மாத்திரம் அதிகாரம் உண்டேயன்றித் தங்களுக்கு அதிகாரமில்லாததினாலே யூதர் இவ்விதமாய்ச் சொன்னார்கள்.



இதோ, மனிதன். (அருள. 19-5.)

4. அப்பொழுது பிலாத்து மறுபடியும் வெளியில் வந்து, அவர்களை நோக்கி: இவனிடத்தில் நான் ஒரு குற்றமும் காணேனென்று நீங்கள் அறியும்படிக்கு இதோ, இவனை உங்களிடத்தில் வெளியே கூட்டிக்கொண்டு வருகிறேன் என்றான்.

5. ஆகையால் யேசுநாதர் முள்முடியையும், தூமிரப்போர்வையையும் தரித்தவராக வெளியே வந்தார். அப்போது பிலாத்து அவர்களைநோக்கி: இதோ, மனிதன் என்றான்.

6. ஆனால் பிரதான ஆசாரியரும் (அவர்களுடைய) சேவகரும் யேசுநாதனைக் கண்டவுடனே: இவனைச் சிலுவையில் அறையும், சிலுவையில் அறையும் என்று கூவினார்கள். பிலாத்து அவர்களை நோக்கி: நீங்களே இவனை ஒப்புக்கொண்டு, சிலுவையிலே அறையுங்கள். ஏனெனில் நான் இவனிடத்தில் ஒரு குற்றமும் காணேன் என்றான்.

7. யூதர்கள் அவனுக்கு மாறுத்தாரமாக: எங்களுக்கு வேதசட்டமுண்டு. அந்தச் சட்டத்தின்படியே இவன் சாகவேண்டும். ஏனெனில் தன்னைச் சர்வேசுரனுடைய குமாரனுக்குகிறான் என்றார்கள்.

8. இந்த வாக்கியத்தைப் பிலாத்து கேட்டபோது அதிகமாய்ப் பயந்து,

9. திரும்பவும் தன் அரமனைக்குள் போய், யேசுநாதனை நோக்கி: நீ எவ்விடமிருந்து வந்தவன் என்றான். யேசுநாதரோ அவனுக்குப் பதில் ஒன்றுஞ் சொல்லவில்லை.

10. ஆகையால் பிலாத்து அவனை நோக்கி: என்னிடத்தில் பேசமாட்டாயோ? உன்னைச் சிலுவையில் அறைய எனக்கு அதிகாரம் உண்டென்றும், உன்னை விடுதலையாக்க எனக்கு அதிகாரம் உண்டென்றும் நீ அறியாயோ? என்றான்.

11. யேசுநாதர் பதில் மொழியாக: மேலாவிலிருந்து உமக்குக் கொடுக்கப்படாதிருந்தால், என்மேல் உமக்கு ஓர் அதிகாரமும் இராது. அதினிமித்தம் என்னை உமக்குக் கையளித்தவனுக்கு அதிக பெரிய பாவமுண்டு என்றார்.

12. ஆகையால் அதுமுதல் பிலாத்து அவனை விடுதலையாக்கும்படி வழி தேடிக்கொண்டிருந்தான். யூதர்களோ அவனை நோக்கி: நீர் இவனை விடுதலையாக்கினால் சேசார் இராயனுக்கு நீர் சிநேகிதனல்ல. ஏனெனில் தன்னை இராஜாவாக்குகிற எவனும் சேசார் இராயனுக்கு விரோதியாயிருக்கிறான் என்று சொல்லிச் சத்தமிட்டார்கள்.

13. இந்த வார்த்தைகளைப் பிலாத்து கேட்ட பிற்பாடு யேசுநாதனை வெளியே அழைத்துவந்து, லித்தோஸ்திரோத்தோஸ் என்றும், எபிரேய பாஷையில் கபத்தா என்றுஞ் சொல்லப்படுகிற ஸ்தலத்திலே நியாயாசனத்தில் உட்கார்ந்தான்.

14. (அந்த நாள்) பாஸ்குப் பண்டிகைக்கு ஆயத்தநாளும், அப்போது ஏறக்குறைய ஆறும்மணி நேரமுமாயிருந்தது. அப்பொழுது பிலாத்து யூதர்களைப் பார்த்து: இதோ, உங்கள் இராஜா என்றான்.

15. அதற்கு அவர்கள்: அவனைக் கொன்றுபோடும், கொன்றுபோடும், சிலுவையில் அறையும் என்று கூவினார்கள். மறுபடியும் பிலாத்து அவர்களை நோக்கி: உங்கள் இராஜாவை நான் சிலுவையில் அறைவேனோ என்க, பிரதான ஆசாரியர்கள் மறுமொழியாக: சேசார் அல்லாதே எங்களுக்கு வேறே இராஜா இல்லை என்றார்கள்.

13. லித்தோஸ்திரோத்தோஸ் என்பது கற்கள் பாவின மேடை என்றர்த்தமாம்.

16. அப்போது அவர் சிலுவையில் அறையப்படும்படிக்கு அவரை அவர்களுக்குக் கையளித்தான். அவர்களும் அவரை ஒப்புக்கொண்டு வெளியே கூட்டிக்கொண்டு போனார்கள்.

17. அப்படியே அவர் தமது சிலுவையைச் சுமந்துகொண்டு, எபிரேய பாஷையில் கொல்கொத்தா என்னப்பட்ட கபாலஸ்தலம் என்னும் இடத்துக்குப் புறப்பட்டுப் போனார். (மத். 27-33; மாற். 15-22; லூக். 23-26.)

18. அங்கே அவரைச் சிலுவையில் அறைந்தார்கள். அவரோடு வேறிரண்டு பேரையும் இப்பக்கத்திலும் அப்பக்கத்திலும், யேசுநாதரை நடுவிலுமாகச் சிலுவைகளில் அறைந்தார்கள்.

19. அன்றியும் பிலாத்து ஓர் அறிக்கைப் பத்திரம் எழுதிச் சிலுவையின் மேல் வைத்தான். அதிலே **நசரேயனாகிய யேசு யூதர்களுடைய இராஜா** என்று எழுதப்பட்டிருந்தது.

20. யேசுநாதர் சிலுவையிலே அறையுண்ட ஸ்தலம் பட்டணத்துக்குச் சமீபமாயிருந்தபடியினாலே யூதர்களில் அநேகர் அந்த அறிக்கையை வாசித்தார்கள். அது எபிரேய, கிரேக்கு, லத்தீன் பாஷைகளில் எழுதப்பட்டிருந்தது.

21. ஆனதால் யூதர்களுடைய பிரதான ஆசாரியர்கள் பிலாத்துவை நோக்கி: யூதருடைய இராஜா என்று நீர் எழுதாமல், நான் யூதருடைய இராஜா என்று அவனே சொன்னதாக எழுதும் என்றார்கள்.

22. அதற்குப் பிலாத்துப் பிரத்தியுத்தாரமாக: நான் எழுதினதே எழுதினது என்றான்.

23. போர்ச்சேவகர் அவரைச் சிலுவையில் அறைந்தபின்பு அவருடைய வஸ்திரங்களை எடுத்து, ஒவ்வொரு சேவகனுக்கு ஒவ்வொரு பங்காக அவைகளை நாலு பங்கு போட்டார்கள். அவருடைய அங்கியையும் எடுத்தார்கள். அந்த அங்கி தையலில்லாமல் மேலே துடங்கி முழுவதும் நெய்யப்பட்டதாயிருந்தது. (மத். 27-35; மாற். 15-24; லூக். 23-34.)

24. அதினிமித்தம் அவர்கள் ஒருவர் ஒருவரை நோக்கி: இதை நாம் கிழியாமல், யாருக்குக் கிடைக்குமென்று இதின்மேல் சீட்டுப் போடுவோம் என்று பேசிக்கொண்டார்கள். என் வஸ்திரங்களையும் தங்களுக்குள்ளே பங்கிட்டார்கள், என் சட்டையின்மேலும் சீட்டுப் போட்டார்கள் என்ற வேத வாக்கியம் அவ்வண்ணமே நிறைவேறிற்று. போர்ச்சேவகர் இப்படியுஞ்செய்தார்கள். (சங். 21-19.)

25. அத்தறுவாயில் யேசுநாதருடைய சிலுவையின் அருகே அவருடைய தாயாரும், அவர் தாயாரின் சகோதரியாகிய கிலேயோப்பா மரியம்மாளும், மரிய மக்தலேனம்மாளும் நின்றுகொண்டிருந்தார்கள்.

26. ஆகையால் யேசுநாதர் தமது தாயாரையும், அங்கு நின்ற தம்மால் சிநேகிக்கப்பட்ட சீஷனையும் கண்டபோது, தம்முடைய தாயாரை நோக்கி: ஸ்திரீயே, இதோ, உன் மகன் என்றார்.

27. பின்னும் சீஷனை நோக்கி: இதோ உன் தாய் என்றார். அந்நேரமுதல் அந்தச் சீஷன் அவளைத் தன் இல்லத்தில் ஏற்றுக்கொண்டார்.

27. மெய்யான கிறீஸ்துவர்களெல்லாரும் யேசுநாதரால் சிநேகிக்கப்பட்டு அவருக்குச் சீஷர்களாயிருக்கிறார்கள். ஆகையால் அவர் தம்மால் சிநேகிக்கப்பட்ட சீஷனை நோக்கி, இதோ! உன் தாயென்று சொல்லும்போது, தம்முடைய திரு மாதாவை எல்லாக் கிறீஸ்துவர்களுக்கும் தாயாராக ஒப்புக்கொடுத்தாரென்பது மெய்.

28. மீளவும் யேசுநாதர் எல்லாம் முடிந்ததென்று அறிந்து, வேதவாக்கியம் முற்றும் நிறைவேறத்தக்கதாக: தாகமாயிருக்கிறேன் என்றார்.

29. அப்படியிருக்க, காடி நிறைந்த ஓர் பாத்திரம் (அங்கே) வைக்கப்பட்டிருந்தது. அவர்கள் கடற்காளானைக் காடியில் நிறையத் தோய்த்து, அதை ஈசோப்புத் தண்டில் மாட்டி, அவர் வாயில் உயர்த்திக் கொடுத்தார்கள்.

30. யேசுநாதர் அந்தக் காடியை வாங்கிக்கொண்டபின்பு: எல்லாம் முடிந்தது என்று சொல்லித் தலைகுனிந்து பிராணனைக் கொடுத்தார்.

31. யூதர்களோ, அன்று ஓய்வுநாளுக்கு ஆயத்த நாளாயிருந்ததினாலும், அந்த ஓய்வுநாள் பெருநாளாயிருந்ததினாலும், அந்த நாளிலே சரீரங்கள் சிலுவையில் இராதபடி, அவர்களுடைய கணைக்கால்களை முறித்து, அவைகளை எடுத்துப்போடவேண்டுமென்று பிலாத்துவினிடத்தில் கேட்டுக்கொண்டார்கள். (உபா. 21-22.)

32. ஆதலால் போர்ச்சேவகர் வந்து முந்தினவனுக்கும், அவனோடு சிலுவையில் அறையப்பட்டிருந்த மற்றவனுக்கும் கணைக்கால்களை முறித்தார்கள்.

33. யேசுநாதரிடத்தில் வந்தபொழுதோ, அவர் ஏற்கனவே மரித்தாரென்று கண்டு, அவருடைய கணைக்கால்களை முறிக்கவில்லை.

34. ஆனால் போர்ச்சேவகரில் ஒருவன் ஈட்டியினாலே அவருடைய விலாவைக் (குத்தி) திறந்தான். உடனே அதினின்று இரத்தமும் தண்ணீரும் புறப்பட்டது.

35. இதைக் கண்டவனே இதற்குச் சாட்சி சொல்லியிருக்கிறான். அவனுடைய சாட்சியும் உண்மையாயிருக்கின்றது. நீங்கள் விசுவசிக்கும்பொருட்டு, தான் உண்மையானவைகளைச் சொல்லுகிறதாக அறிந்திருக்கிறான்.

36. அவரிடத்தில் எலும்பை முறிக்கமாட்டார்கள் என்கிற வேதவாக்கியம் நிறைவேறும்படி இவைகள் சம்பவித்தது. (யாத். 12-46.)

37. மீளவும், தாங்கள் குத்தி ஊடுருவினவரை நோக்கிப் பார்ப்பார்களென்று வேறொரு வேதவாக்கியமும் வசனிக்கின்றது. (சக்க. 12-10.)

38. இவைகளுக்குப் பின்பு அரிமத்தியா ஊராகிய யோசேப்பு என்பவர் (யூதர்களுக்குப் பயந்ததினிமித்தம் இரகசியத்திலென்றாலும் யேசுநாதருக்குச் சீஷனாயிருந்ததினாலே) பிலாத்துவினிடத்தில் போய், யேசுநாதருடைய சரீரத்தை இறக்கும்படி கேட்டார். பிலாத்து அவருக்கு உத்தரவு கொடுக்கவே, அவர் வந்து, யேசுநாதருடைய சரீரத்தை இறக்கினார். (மத். 27-57; மாற். 15-43; லூக். 23-50.)

39. அப்பொழுது முன்னொருநாள் இரவிலே யேசுநாதரிடத்தில் வந்தவராகிய நீக்கோதேம் என்பவர் வெள்ளைப் போளமும் கரிய போளமும் கலந்து ஏறக்குறைய நூறு இராத்தல் கொண்டுவந்தார். (அரு. 3-2.)

40. ஆகையால் அவர்கள் யேசுநாதருடைய சரீரத்தை எடுத்து, யூதர் அடக்கம்பண்ணும் முறைமையின்படியே, அதைப் பரிமளவர்க்கங்களோடு பரிவட்டச் சீலைகளினாலே சுற்றிக் கட்டினார்கள்.

41. அவர் சிலுவையிலே அறையுண்ட இடத்தில் ஒரு தோட்டமும், அந்தத் தோட்டத்தில் இன்னும் எவனும் அடக்கம்பண்ணப்படாத ஒரு புதுக்கல்லறையும் இருந்தது.

42. அந்தக் கல்லறை சமீபமாயிருந்தபடியினாலே, யூதர்களுடைய ஆயத்த நாளினிமித்தம் யேசுநாதரை அதிலே அடக்கம்பண்ணினார்கள்.

## 20-ம். அதிகாரம்.

*கர்த்தர் உயிர்த்தெழுந்தருளி, மரியமக்தலேனம்மாளுக்கும் சீஷர்களுக்கும் பலமுறை தரிசனையான வரலாறு.*

1. ஓய்வுநாளுக்குப்பின் முதல்நாள் அதிகாலமே இன்னும் இருட்டாயிருக்கும்போதே, மரியமக்தலேனம்மாள் கல்லறைக்கு வந்து, கல்லறையினின்று படலைக் கல் புரட்டிவைக்கப்பட்டிருக்கிறதைக் கண்டாள். (மத். 28-1; மாற். 16-1; லூக். 24-1.)

2. ஆகையால் அவள் சீமோன் இராயப்பரிடத்திலும், யேசுநாதர் சிநேகித்திருந்த மற்றச் சீஷனிடத்திலும் ஓடிவந்து: ஆண்டவரைக் கல்லறையினின்று எடுத்திருக்கிறார்கள்; அவரை எங்கே வைத்தார்களோ, அறியோம் என்று அவர்களுக்குச் சொன்னாள்.

3. அப்போது இராயப்பரும், அந்த மற்றச் சீஷனும் புறப்பட்டு, கல்லறையை நோக்கி வந்தார்கள்.

4. அவர்கள் இருவரும் ஒருமிக்க ஓடிவருகையில், அந்த மற்றச் சீஷன் இராயப்பரைவிட அதிக விரைவாய் முந்தி ஓடி, முந்தினவராய்க் கல்லறைக்கு வந்து,

5. குனிந்து பார்க்கையில், பரிவட்டச்சீலைகள் வைக்கப்பட்டிருக்கிறதைக் கண்டார்; ஆனாலும் அவர் உள்ளே பிரவேசிக்கவில்லை.

6. சீமோன் இராயப்பர் அவருக்குப் பின்னாக வந்து, கல்லறைக்குள் புகுந்து, பரிவட்டச் சீலைகள் வைக்கப்பட்டிருக்கிறதையும்,

7. அவர் தலையின்மேல் போர்த்தியிருந்த உருமாலை பரிவட்டச் சீலைகளோடு வைத்திராமல், துண்டாய்ச் சுருட்டி, ஓரிடத்தில் வைத்திருக்கிறதையுங் கண்டார்.

8. அப்படியிருக்க, முந்திக் கல்லறையினிடத்திற்கு வந்த அந்த வேறு சீஷனும் அப்பொழுது உள்ளே பிரவேசித்து, தானும் கண்டு விசுவசித்தான்.

9. ஏனெனில் அவர் மரித்தோரிடத்தினின்று உயிர்த்தெழுந்தருளவேண்டும் என்கிற வேத வாக்கியத்தை அவர்கள் இன்னும் அறியாதிருந்தார்கள்.

10. பின்னும் அந்தச் சீஷர்கள் தங்கள் இடத்துக்குத் திரும்பிப்போனார்கள்.

11. மரியம்மாளோவென்றால் கல்லறை வாசலில் நின்று அழுதுகொண்டிருந்தாள். அப்படி அழுகையில், குனிந்து கல்லறைக்குள் பார்த்தாள். (மத். 28-1; மாற். 16-5; லூக். 24-4.)

12. அப்போது தூய வெள்ளுடையணிந்த இரண்டு தேவ தூதர் யேசுநாதருடைய சரீரம் வைக்கப்பட்டிருந்த இடத்தில் தலைமாட்டில் ஒருவரும், கால்மாட்டில் ஒருவருமாக உட்கார்ந்திருக்கக் கண்டாள்.

13. அவர்கள்: ஸ்திரீயே, ஏன் அழுகிறாய் என்று அவளைக் கேட்க, அவள்: என் ஆண்டவரை எடுத்துக்கொண்டுபோய்விட்டார்கள்; அவரை எங்கே வைத்தார்களோ அறியேன் என்று அவர்களுக்குச் சொன்னாள்.

14. அவள் இவைகளைச் சொல்லிப் பிறகே திரும்புகையில், யேசுநாதர் நிற்கிறதைக் கண்டாள். ஆனாலும் அவர் யேசுநாதரென்று அவளுக்குத் தெரியவில்லை.

---

1. ஓய்வுநாளுக்குப்பின் முதல் நாளென்றால் ஞாயிற்றுக்கிழமை என்றறிக.

15. யேசுநாதர் அவளை நோக்கி: ஸ்திரீயே, ஏன் அழுகிறாய்? யாரைத் தேடுகிறாய்? என்று கேட்க, அவள் அவரைத் தோட்டக்காரனென்று எண்ணி: ஐயா, நீர் அவரை எடுத்ததுண்டானால், அவரை எங்கே வைத்தீரென்று எனக்குச் சொல்லும். நான் அவரை எடுத்துக்கொண்டு போவேன் என்றாள்.

16. யேசுநாதர் அவளை நோக்கி: மரியாயே என்று உரைக்க, அவள் திரும்பிப் பார்த்து: இரபோனி என்றாள். அதற்கு: குருவே என்று அர்த்தமாம்.

17. யேசுநாதர் அவளை நோக்கி: நீ என்னைத் தொடவேண்டாம். ஏனெனில் நான் இன்னும் என் பிதாவினிடத்தில் ஏறிப்போகவில்லை. ஆனால் நீ என் சகோதரரிடத்திற்குப் போய்: நான் என் பிதாவும், உங்கள் பிதாவும், என் சர்வேசுரனும், உங்கள் சர்வேசுரனுமா யிருக்கிறவரிடத்திற்கு ஏறிப் போகிறேன் என்று அவர்களுக்குச் சொல்லு என்றார்.

18. ஆதலால் மரியமக்தலேனம்மாள் வந்து, கர்த்தரைக் கண்டேனென்றும், இவைகளை எனக்குச் சொன்னாரென்றும் சீஷர்களுக்கு அறிவித்தாள்.

19. ஓய்வுநாளுக்குப் பின் முதல் நாளாகிய அன்று, சாயரட்சையுமாகி சீஷர்கள் கூடியிருந்த இடத்திலே யூதர்களுக்குப் பயந்து, கதவுகளும் பூட்டப்பட்டிருக்கையிலே, யேசுநாதர் வந்து அவர்கள் நடுவே நின்று: உங்களுக்குச் சமாதானம் உண்டாவதாக! என்று அவர்களுக்குச் சொன்னார். (மாற். 16-14; லூக்.24-36; 1. கொ. 15-5.)

20. அவர் இப்படிச் சொன்னபின், தம்முடைய கரங்களையும் விலாவையும் அவர்களுக்குக் காண்பித்தார். ஆகையால் சீஷர்கள் ஆண்டவரைக் கண்டு, சந்தோஷப்பட்டார்கள்.

21. மீளவும் யேசுநாதர் அவர்களை நோக்கி: உங்களுக்குச் சமாதானம் உண்டாவதாக! பிதா என்னை அனுப்பினதுபோல நானும் உங்களை அனுப்புகிறேன் என்றார்.

22. இவைகளைச் சொல்லி, அவர்கள் மேல் ஊதி: இஸ்பிரீத்துசாந்துவைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

23. எவர்களுடைய பாவங்களை மன்னிப்பீர்களோ, அவர்களுக்கு அவைகள் மன்னிக்கப்படும்; எவர்களுடைய பாவங்களை மன்னியாதிருப்பீர்களோ, அவர்களுக்கு அவைகள் மன்னியாதிருக்கப்படும் என்றார். (மத். 18-18.)

24. யேசுநாதர் வந்தபோது பன்னிருவரில் ஒருவராகிய திதீம் என்னப்படுகிற தோமையார் அவர்களோடுகூட இருக்கவில்லை.

23. இவ்வாக்கியத்தால் யேசுநாதர் பாவங்களைப் பொறுக்கவும் பொறுதிருக்கவும் தம்முடைய சீஷர்களுக்கும் அவர்களைத் தொடர்ந்து வரும் குருக்களுக்கும் அதிகாரத்தைத் தந்தருளினதினால், பாவங்களை மன்னிக்கவும் மன்னிக்காதிருக்கவும் அவர்களை நடுவராக ஏற்படுத்தினாரென்பதற்குச் சந்தேகமில்லை. நீதி செலுத்தும்படி ஏற்படுத்தப்பட்ட நியாயாதிபதி குற்றவாளிகளுடைய பாதகங்களையும் அவைகளைச் சார்ந்த வரலாற்றையும் அறிந்தாலொழிய, அவைகளைச் சரியாய் வகையறுத்து நீதிசெலுத்தக் கூடாததுபோல, குருவானவரும் தம்முடைய ஞான அதிகாரத்தைச் செலுத்துவதற்குத் தம்மிடத்தில் பாவப்பொறுத்தலடைய வருகிறவர்களுடைய பாவங்களையும் அவைகளைச்சார்ந்த விஷயங்களையும் அறியவேண்டியது அவசியமாமே. அவைகளை அறிவதற்குப் பாவசங்கீர்த்தனத்தைத் தவிர, வேறுவழி இல்லாததினாலே, பாவங்களை மன்னிக்கவும் மன்னியாதிருக்கவும் யேசுநாதர் அதிகாரங் கொடுத்தபோதே, பாவசங்கீர்த்தனத்தையும் கற்பித்தாரென்பது நிச்சயம்.

25. ஆகையால் மற்றச் சீஷர்கள்: சுவாமியைக் கண்டோமென்று அவருக்குச்சொன்னபோது, அவர்: நான் அவருடைய கரங்களிலே ஆணிகள் அறைந்த துவாரத்தையும் கண்டு, ஆணிகள் இருந்த இடங்களிலே என் விரலையும் விட்டு, அவருடைய விலாவில் என் கையையும் இட்டாலொழிய நான் விசுவசிக்கமாட்டேன் என்று அவர்களுக்குச் சொன்னார்.

26. எட்டு நாளைக்குப்பின், மறுபடியும் அவருடைய சீஷர்கள் வீட்டுக்குள்ளே இருக்கையில் அவர்களோடு தோமையாரும் இருந்தார். அப்பொழுது கதவுகள் பூட்டியிருக்க, யேசுநாதர் வந்து, நடுவில் நின்று: உங்களுக்குச் சமாதானம் உண்டாவதாக என்றார்.

27. பின்னும் அவர் தோமையாரை நோக்கி: இங்கே உன்விரலை இடு, என் கரங்களைப் பார், உன் கையை நீட்டி என் விலாவிலே வை, அவிசுவாசியாய் இராமல், விசுவாசியாய் இரு என்று திருவுளம்பற்றினார்.

28. தோமையார் அவருக்கு மறுமொழியாக: என் ஆண்டவரே, என் தேவனே என்றார்.

29. யேசுநாதர் அவரை நோக்கி: தோமாஸ், நீ என்னைக் கண்டதினாலல்லோ விசுவசித்தாய். காணாதிருந்தும், விசுவசித்தவர்கள் பாக்கியவான்கள் என்றார்.

30. அன்றியும் இந்தப் புஸ்தகத்தில் எழுதப்படாத வேறநேக அற்புதங்களையும் யேசுநாதர் தம்முடைய சீஷர்கள் முன்பாகச் செய்தருளினார். (அரு 21-25.)

31. ஆனால் யேசுநாதர் சர்வேசுரனுடைய சுதனாகிய கிறீஸ்துநாதரென்று நீங்கள் விசுவசிக்கும்பொருட்டும், விசுவசித்து, அவருடைய நாமத்தினாலே (நித்திய) சீவியத்தை அடையும் பொருட்டும் இவைகள் எழுதப்பட்டிருக்கின்றன.

## 21-ம். அதிகாரம்.

யேசுநாதர் திபேரியாத் என்னும் கடலோரத்தில் தம்முடைய சீஷர்களுக்குத் தரிசனையாகி, இராயப்பரைத் திருச்சபைக்குப் பிரதான மேய்ப்பனாக ஏற்படுத்தின வரலாறு.

1. இவைகளுக்குப்பின் யேசுநாதர் திபேரியாத் என்னுங் கடலோரத்தில் மறுபடியும் தம்முடைய சீஷர்களுக்குத் தம்மைக் காண்பித்தார். அவர் காண்பித்த விதமாவது:

2. சீமோன் இராயப்பரும், திதீம் என்னப்படுகிற தோமையாரும், கலிலேயா நாட்டுக் கானாவூரானாகிய நத்தனயேலும், செபதேயுவின் குமாரரும், அவருடைய சீஷர்களில் வேறு இரண்டுபேரும் கூடியிருக்கையில்,

3. இராயப்பர் அவர்களை நோக்கி: மீன்பிடிக்கப் போகிறேன் என்றார். அதற்கு அவர்கள்: நாங்களும் உம்மோடுகூட வருகிறோம் என்றார்கள். அவர்கள் புறப்பட்டு, படகேறினார்கள்; ஆயினும் அந்த இராத்திரி அவர்கள் ஒன்றும் பிடிக்கவில்லை.

4. ஆனால் விடியற்காலமானபோது யேசுநாதர் கரையிலே நின்றார். ஆகிலும் அவர் யேசுநாதர் என்று சீஷர்கள் அறியாதிருந்தார்கள்.

---

29. யேசுநாதர்சுவாமி உலகத்திலிருந்தபோது அவரைக் கண்டு, அவர்பேரில் விசுவாசமாயிருந்தவர்களைவிட யேசுநாதர்சுவாமி மோக்ஷத்துக்கு ஆரோகணமானபின், அப்போஸ்தலர்களும் அவருடைய ஸ்தானத்திலிருக்கிற குருப்பிரசாதிகளும் போதிக்கிற உபதேசத்தைக்கேட்டு, யேசுநாதர்சுவாமியைக் காணாதிருந்தாலும் அவர்மேல் விசுவாசமாயிருக்கிறவர்கள் அதிக பாக்கியவான்களென்று இதனால் அறிந்துகொள்ளலாம்.

5. அப்பொழுது யேசுநாதர் அவர்களைநோக்கி: பிள்ளைகளே, உங்களிடத்தில் ஏதாகிலும் கறிபதார்த்தம் உண்டோ என்றுகேட்டார். அதற்கு அவர்கள்: ஒன்றும் இல்லை என்றார்கள்.

6. அப்பொழுது அவர் அவர்களை நோக்கி: படகின் வலது பக்கத்திலே வலையை வீசுங்கள், உங்களுக்கு அகப்படும் என்றார். அப்படியே அவர்கள் வலையை வீச, அகப்பட்ட மீன் மிகுதியினாலே அதை இழுக்கமாட்டாதிருந்தார்கள்.

7. அப்பொழுது யேசுநாதர் சிநேகித்திருந்த அந்தச் சீஷன் இராயப்பரைப்பார்த்து: அவர் சுவாமிதான் என்றார். சுவாமிதானென்று சீமோன் இராயப்பர் கேட்டமாத்திரத்தில், உடையில்லாதிருந்ததினாலே, தன் வஸ்திரத்தை இடையில் சுற்றிக்கொண்டு, கடலிலே குதித்தார்.

8. மற்றச் சீஷர்கள் மச்சங்களுள்ள வலையை இழுத்துக்கொண்டு, படகோடே கரைக்குச் சேர்ந்தார்கள். ஏனெனில் அவர்கள் இருந்தது கரைக்கு இருநூறு முழமேயொழியத் தூரமல்ல.

9. அவர்கள் கரையில் இறங்கினவுடனே, தணல்மூட்டி அதின்மேல் ஒரு மீன் வைத்திருக்கிறதையும் அப்பத்தையுங் கண்டார்கள்.

10. யேசுநாதர் அவர்களைநோக்கி: நீங்கள் பிடித்த மீன்களில் கொஞ்சங் கொண்டுவாருங்கள் என்றுசொல்ல,

11. சீமோன் இராயப்பர் படகிலேறி, நூற்றைம்பத்துமூன்று பெரிய மச்சங்களால் நிறைந்த வலையைக் கரையில் இழுத்துக்கொண்டுவந்தார். அத்தனை மச்சங்களிருந்தபோதிலும் வலை கிழியவில்லை.

12. அப்பொழுது யேசுநாதர் அவர்களைநோக்கி: வாருங்கள், சாப்பிடுங்கள் என்றார். அவர் சுவாமிதானென்று அவர்கள் அறிந்திருந்ததினாலே பந்தியமர்ந்தவர்களில் ஒருவரும்: நீர் யார் என்று அவரை வினவத் துணியவில்லை.

13. மேலும் யேசுநாதர் வந்து, அப்பத்தை எடுத்து, அவர்களுக்குக் கொடுத்தார். அதுபோலவே மச்சத்தையுங் கொடுத்தார்.

14. யேசுநாதர் மரித்தோரிடத்திலிருந்து உயிர்த்தெழுந்தபின்பு இது மூன்றும் விசையாகத் தம்முடைய சீஷர்களுக்குத் தரிசனையானார்.

15. அவர்கள் அசனஞ்செய்த பின்பு, யேசுநாதர் சீமோன் இராயப்பரைப் பார்த்து: யோவானின் குமாரனாகிய சீமோனே, இவர்களிலும் நீ என்னை அதிகமாய் நேசிக்கிறாயோ என, அவர்: ஆம் ஆண்டவரே, நான் உம்மை நேசிக்கிறேனென்று உமக்குத் தெரியுமே என்று அவருக்குச் சொன்னார். அப்பொழுது அவர் அவரை நோக்கி: என் ஆட்டுக்குட்டிகளை மேய்ப்பாயாக என்றார்.

16. மறுபடியும் அவர்: யோவானின் குமாரனாகிய சீமோனே, என்னை நேசிக்கிறாயோ என்று அவருக்குச் சொல்ல, அவர்: ஆம், ஆண்டவரே, நான் உம்மை நேசிக்கிறேனென்று உமக்குத் தெரியுமே என்றார். அப்பொழுது அவர் அவரை நோக்கி: என் ஆட்டுக்குட்டிகளை மேய்ப்பாயாக என்றார்.

17. அவர் மூன்றும் முறையும் அவரை நோக்கி: யோவானின் குமாரனாகிய சீமோனே, என்னை நேசிக்கிறாயோ என்றார். என்னை நேசிக்கிறாயோ என்று அவர் மூன்றுந் தரம் தன்னைக் கேட்டபடியினாலே, இராயப்பர் விசனப்பட்டு: ஆண்டவரே, உமக்கு எல்லாந் தெரியுமே. நான் உம்மை நேசிக்கிறேனென்று நீர் அறிவீரே என்றார். அப்பொழுது யேசுநாதர் அவருக்குத் திருவுளம்பற்றினதாவது: என் ஆடுகளை மேய்ப்பாயாக.

18. நீ இளம்பிராயமாயிருக்கையில், உன் இடையை நீயே கட்டிக்கொண்டு, உனக்கு இஷ்டமான இடங்களில் நடந்து திரிந்தாய். ஆனால் முதிர்ந்த வயதாளியாகும்போது, நீ உன் கரங்களை நீட்ட, வேறொருவன் உன் இடையைக் கட்டி, உனக்கு இஷ்டமில்லாத இடத்துக்கு உன்னைக் கூட்டிக்கொண்டு போவான் என்று மெய்யாகவே, மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்றார். (2. இராய. 1-14.)

19. எவ்வித மரணத்தினாலே அவர் சர்வேசுரனை மகிமைப்படுத்தப் போகிறாரென்பதைக் குறிக்கும்படி இப்படிச் சொன்னார். இதை அவர் சொன்ன பின்பு அவனை நோக்கி: என்னைப் பின் சென்று வா என்றார்.

20. இராயப்பர் திரும்பிப்பார்த்து: யேசுநாதரால் சிநேகிக்கப்பட்டவரும், இராப்போசனத்தில் அவருடைய மார்பில் சாய்ந்துகொண்டு: சுவாமீ, உம்மைக்காட்டிக்கொடுப்பவன் யாரென்று கேட்டவருமாகிய அந்தச் சீஷன் பின்னால் வருகிறதைக் கண்டார். (அரு. 13-22.)

21. ஆகையால் அவரைக் கண்டபோது, யேசுநாதரை நோக்கி: சுவாமீ, இவர் காரியம் என்ன என்று கேட்க,

22. யேசுநாதர் பிரத்தியுத்தாரமாக: நான் வருந்தனையும் இவன் இப்படியே இருக்கச் சித்தமாயிருக்கிறேன், உனக்கு என்ன? நீ என் பிறகே வா என்றார்.

23. ஆகையால் அந்தச் சீஷன் மரிப்பதில்லையென்கிற பேச்சு சகோதரர்களுக்குள்ளே பரம்பிற்று. ஆயினும் நான் வருந்தனையும் அவன் இப்படியே இருக்கச் சித்தமாயிருக்கிறேன், உனக்கு என்ன என்று யேசுநாதர் சொன்னாரொழிய, அவன் மரிப்பதில்லை என்று சொல்லவில்லை.

24. அந்தச் சீஷனே இவைகளைக் குறித்துச் சாட்சி சொல்லி, இவைகளையும் எழுதினவன். அவன் சாட்சியும் உண்மையென்று அறிவோம்.

25. யேசுநாதர் செய்தருளிய வேறு அநேகங் காரியங்களும் உண்டு. அவைகள் ஒவ்வொன்றாக எழுதப்படுமானால், எழுதவேண்டிய புஸ்தகங்களை உலகமே கொள்ளமாட்டாதென்று எண்ணுகிறேன். (அரு. 20-30.)

---

18. வேறொருவன் உன் இடையைக் கட்டி உனக்கு இஷ்டமில்லாத இடத்துக்கு உன்னைக் கூட்டிக்கொண்டு போவானென்பதற்கு அர்த்தமேதெனில், வேத விரோதிகள் உன்னைப்பிடித்துக் கட்டிச் சுபாவத்துக்குப் பிரியமற்ற வகையாய் உன்னைச் சிலுவையிலறைந்து கொல்லும்படி கொலைக்களத்துக்குக் கொண்டுபோவார்கள் என்பதேயாம்.



# பாயிரம்.

---

இந்த ஆகமம் அப்போஸ்தலருடைய நடபடி என்று பெயர்கொண்டிருந்தாலும், இது உலகமெங்கும் பிரிந்துபோன எல்லா அப்போஸ்தலர்களுடைய சரித்திரம் அல்ல. பிரதான அப்போஸ்தலராகிய அர்ச். இராயப்பர், சின்னப்பர் இவர்களுடைய நடபடி என்கலாம். இதிலே திருச்சபையானது ஸ்தாபிக்கப்பட்ட வர்த்தமானத்தின் சுருக்கமும், தலையான அப்போஸ்தலராகிய அர்ச். இராயப்பருடைய சில பிரசங்கங்களும் நடபடிகளும் 1 முதல் 12 அதிகாரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அதின்பின் அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர் கர்த்தர் அவதாரத்தின் 61-ம். வருஷம் உரோமாபுரிக்கு முதல்விசை போய்ச் சேரும் வரையில் அவருடைய பிரதான நடபடிகள் மற்ற 16 அதிகாரங்களில் எழுதப்பட்டிருக்கின்றன. நாலு சுவிசேஷகர்களில் ஒருவருமாய், அர்ச். சின்னப்பருக்குச் சீஷனுமாயிருந்த அர்ச். லூக்காஸ் என்பவர் தமது சுவிசேஷத்தை 55-ம். வருஷத்திலும், இந்தப் பிரபந்தத்தை 63-ம். வருஷத்திலும் கிரேக்கப் பாஷையில் எழுதினாரே.



# அப்போஸ்தலருடைய

# நடபடிகள்.

## முதல் அதிகாரம்.

*யேசுநாதர் பரலோகத்துக்கு ஆரோகணமானதும், யூதாசுக்குப் பதிலாக மத்தியாஸ் அப்போஸ்தலப்பட்டத்துக்கு ஏற்படுத்தப்பட்டதும்.*

1-2. ஓ, தெயோபிலே, யேசுநாதர் தாம் தெரிந்துகொண்ட அப்போஸ்தலர்களுக்கு இஸ்பிரீத்துசாந்துவின் பேரால் கட்டளையிட்டு, (பரலோகத்துக்கு) ஆரோகணமான நாள்வரையில் அவர் செய்யவும் போதிக்கவும் தொடங்கின யாவற்றையுங்குறித்து நான் முந்தின பிரபந்தத்தை உண்டுபண்ணினது மெய்யே.

3. அவர் பாடுபட்டபின்பு, நாற்பது நாளளவும் அவர்களுக்குத் தரிசனையுமாகி, சர்வேசுரனுடைய இராச்சியத்தைக்குறித்தும் பேசி, அநேகந் திருஷ்டாந்தங்களால் அவர்களுக்குத் தம்மை உயிரோடிருக்கிறவராகக் காண்பித்தார்.

4. மேலும் அவர்களோடு அவர் போஜனம் பண்ணுகையில், அவர்கள் எருசலேம் நகரை விட்டுப் போகாமல், பிதாவின் வாக்குத்தத்தத்திற்காகக் காத்திருக்கும்படி, அவர்களுக்குக் கட்டளையிட்டுத் திருவுளம் பற்றினதாவது : இந்த வாக்குத்தத்தத்தை என் வாய்ப்படக் கேட்டீர்களே. (மத். 3-2; லூக். 24-49.)

5. அதேதெனில் அருளப்பர் ஜலத்தால் ஞானஸ்நானங்கொடுத்தார். நீங்களோ இந்த நாட்களுக்குக் கொஞ்சத்துக்குப்பின், இஸ்பிரீத்துசாந்துவினால் ஞானஸ்நானம் பெறுவீர்கள் என்றார். (லூக். 24-21.)

6. ஆகையால் கூடிவந்திருந்தவர்கள் அவரைநோக்கி : ஆண்டவரே, இக்காலத்திலே இஸ்ராயேல் இராச்சியத்தைத் திரும்பவும் ஏற்படுத்துவீரோ என்று கேட்டார்கள்.

---

1. **தேயோபிலே** என்பதற்கு தெய்வபக்தன் என்றர்த்தமாம். அர்ச். லூக்காஸ் என்பவரே இந்த ஆகமத்தை எழுதினவர். அவர் எழுதின சுவிசேஷத்தைத் தம்முடைய முந்தின பிரபந்தமென்று இவ்வசனத்தில் குறிக்கிறார் என்றறிக.

4. இங்கே சொல்லப்பட்ட பிதாவின் வாக்குத்தத்தம் 2-ம் அதி. 17-ம் வசன முதல் 21-ம் வசனங்கள் வரையிலும், இசையாஸ் 44-ம் அதி. 3-ம் வசனத்திலும் யோவேல் 3-ம் அதி. 8-ம் வசனத்திலும் சொல்லப்பட்டபடி இஸ்பிரீத்துசாந்துவின் வருகை என்றறியவும்.

7. அதற்கு அவர்: பிதாவானவர் தம்முடைய ஆதிக்கத்தில் வைத்திருக்கிற காலங்களையாவது நிமிஷங்களையாவது அறிவது உங்கள் காரியமல்ல.

8. ஆனால் உங்கள்மேல் எழுந்தருளி வரப்போகிற இஸ்பிரீத்துசாந்துவின் வல்லமையை நீங்கள் அடைந்து, எருசலேமிலும் யூதேயா முழுவதிலும் சமாரியாவிலும் பூமியின் கடைசிமட்டும் எனக்குச் சாட்சிகளாயிருப்பீர்கள் என்றார். (அப். 2-2; லூக். 24-48.)

9. அவர் இவைகளைச் சொன்ன பின்பு, அவர்கள் பார்த்துக்கொண்டிருக்க, உயர எழுந்தருளினார். அப்பொழுது ஓர் மேகம் வந்து அவர்களுடைய கண்களுக்கு அவரை மறைத்தது.

10. அவர் பரலோகத்துக்கு எழுந்தருளிப்போகிறதை அவர்கள் கூர்ந்து பார்த்துக்கொண்டிருக்கையில், இதோ வெள்ளுடையணிந்தவர்களாகிய இரண்டுபேர் அவர்கள் அருகே வந்து நின்று,

11. அவர்களை நோக்கி: கலிலேய மனிதரே, நீங்கள் ஏன் வானத்தை அண்ணார்ந்துபார்த்துக்கொண்டு நிற்கிறீர்கள்? உங்களிடத்தினின்று பரலோகத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட இந்த யேசுநாதர் எப்படிப் பரலோகத்துக்கு எழுந்தருளிப்போகக் கண்டீர்களோ, அப்படியே திரும்பவும் வருவார் என்றார்கள்.

12. அப்பொழுது அவர்கள் எருசலேமுக்குச் சமீபமாய் ஓர் ஓய்வுநாள் பிரயாணத்துக்குள் இருக்கிற ஒலிவமலை என்னப்பட்ட மலையிலிருந்து, எருசலேமுக்குத் திரும்பிப் போனார்கள்.

13. அவர்கள் அவ்விடத்தில் சேர்ந்து, மேல்வீட்டில் ஏறினார்கள். அதிலே இராயப்பரும், அருளப்பரும், யாகப்பரும், பெலவேந்திரரும், பிலிப்புவும், தோமையாரும், பர்த்தலோமேயும், மத்தேயும், அல்பேயுவின் குமாரனாகிய யாகப்பரும், செலோத்தெஸ் என்னும் சீமோனும், யாகப்பருடைய சகோதரனாகிய யூதாவும் தங்கியிருந்தார்கள். (மத். 10-2; மாற். 3-16; 6-14.)

14. இவர்கள் எல்லாரும் ஸ்திரீகளோடும், யேசுநாதருடைய தாயாராகிய மரியம்மாளோடும் அவருடைய சகோதரரோடும் ஒரே மனமாய் ஜெபத்தில் நிலைத்திருந்தார்கள். (மாற். 6-3)

15. அந்நாட்களில் ஏறக்குறைய நூற்றிருபதுபேர் ஒருமிக்கக் கூடியிருக்கையில், இராயப்பர் சகோதரர் நடுவே எழுந்துநின்று சொன்னதாவது:

16. சகோதரரானவர்களே, யேசுநாதரைப் பிடித்தவர்களுக்கு வழிகாட்டியாயிருந்த யூதாஸெனபவனைக்குறித்துத் தாவீதின் வாக்கினால் இஸ்பிரீத்துசாந்துவானவர் ஏற்கனவே வசனித்த வாக்கியம் நிறைவேறவேண்டும். (சங். 40-10; அரு. 13-18.)

10. இரண்டுபேர் என்பது அர்ச். அருளப்பர் சுவிசேஷம் 20-ம் அதி. 12-ம்வசனத்தில் கண்டபடி மனித ரூபமாய்த் தோன்றிய இரண்டு சம்மனசுக்கள் என்றறிக.

12. ஓர் ஓய்வுநாட் பயணமென்பது, ஏறக்குறைய முக்கால் நாழிகை வழித் தூரமென்று சொல்லப்படும் ஓய்வு நாட்களில் யூதர்கள் தாங்களிருக்கிற இடத்துக்கு முக்கால் நாழிகைத் தூரத்துக்கு அதிகமாய்ப் போக உத்தரவு இருந்ததில்லை.

14. இதில் சொல்லப்பட்ட ஸ்திரீகள் கலிலேயா நாட்டிலிருந்து வந்து, யேசுநாதருக்கும் அப்போஸ்தலர்களுக்கும் ஊழியஞ் செய்து தங்கள் சொந்தச் செலவினால் அவர்களைப் பராமரித்துக்கொண்டு வந்த புண்ணியவதிகளாம். மத். 27-ம் அதி. 55-56-ம் வசனங்களிலும், மாற். 15-ம் அதி. 41-ம் வசனங்களிலும் காண்க.



"அவர் பரலோகத்துக்கு எழுந்தருளிப்போகிறதை அவர்கள் கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்கையில், இதோ, வெள்ளுடையணிந்தவர்களாகிய இரண்டுபேர் அவர்கள் அருகே வந்து நின்றார்கள்."

(அப். 1-10.)



*"இவர்களெல்லாரும், ஸ்திரீகளோடும், யேசுநாதருடைய தாயாராகிய மரியம்மாளோடும், அவருடைய சகோதரரோடும் ஒரேமனமாய் ஜெபத்தில் நிலைத்திருந்தார்கள்."*

(அப். 1-14.)

17. அவன் நமக்குள் ஒருவனாக எண்ணப்பட்டிருந்ததுமன்றி இந்த ஊழியத்திலே ஓர் பங்கு அடையவும் அதிர்ஷ்டம் பெற்றிருந்தான்.

18. ஆயினும் அவன் அநீதத்தின் கூலியைக்கொண்டு ஓர் நிலத்தைச் சம்பாதித்து, நான்றுகொண்டான். அவன் வயிறு வெடித்து, அவன் குடல்களெல்லாஞ் சிதறிவிழுந்தன. (மத். 27-7.)

19. இது எருசலேமிலுள்ள குடிகள் யாவருக்கும் தெரியலாயிருக்கிறது. இதினிமித்தம் அந்த நிலத்துக்கு அவர்களுடைய பாஷையிலே இரத்த நிலம் என்று அர்த்தமுள்ள அசெல்தமா என்று பெயருண்டாயிற்று.

20. சங்கீத ஆகமத்திலே, அவர்கள் இல்லிடம் பாழாக, அதில் குடியிருக்க ஆளற்றுப்போக என்றும், அவனுடைய மேற்றிராசனத்தை மற்றொருவன் கைக்கொள்ள என்றும் எழுதியிருக்கிறது. (சங். 68-26; 108-8.)

21. ஆகையால் ஆண்டவராகிய யேசுநாதர் நமக்குள் வந்து போன காலமெல்லாம் நம்மோடு சேர்ந்திருந்த இந்த மனிதர்களில்

22. ஒருவன் அருளப்பருடைய ஞானஸ்நானம் தொடங்கி, யேசுநாதர் நம்மிடத்தினின்று எழுந்தருளிப் போன நாள்வரையில் நம்மோடுகூட (இருந்தவனாய்) அவருடைய உத்தானத்திற்குச் சாட்சியாய் இருக்கவேண்டியது என்றார்.

23. அப்பொழுது அவர்கள் யுஸ்துஸ் என்னும் காரணப்பெயரையுடைய பர்சபா என்னப்பட்ட யோசேப்பும், மத்தியாசும் ஆகிய இருவரையும் குறிப்பிட்டு,

24. ஜெபித்துச் சொன்னதாவது: சகலருடைய இருதயங்களையும் அறிந்திருக்கிற ஆண்டவரே,

25. யூதாஸ் என்பவன் தனக்குரிய இடத்துக்குப் போகும்படி தன் குற்றத்தால் தவறவிட்ட இந்த ஊழியத்துக்கும் அப்போஸ்தலத்துவத்துக்கும் இவ்விருவரில் தேவரீர் தெரிந்துகொண்ட ஒருவரை எங்களுக்குக் காண்பித்தருளும் என்றார்கள்.

26. பின்னும் அவர்கள்மேல் சீட்டுப்போட, சீட்டு மத்தியாஸ் பேருக்கு விழுந்தது. ஆதலால் அவர் பதினொரு அப்போஸ்தலர்களோடுகூடச் சேர்த்துக்கொள்ளப்பட்டார்.

17. தேவ ஊழியமாகிற அப்போஸ்தலப் பட்டமும் குருப் பட்டமும் அவனவனுடைய புண்ணிய பேறுகளுக்குச் சம்பாவனையாக அல்ல; ஆரோனைப்போலச் சர்வேசுரனுடைய விசேஷ கிருபையால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களுக்கு மாத்திரம் கிடைக்குமென்கிறதினாலே அப்படிப்பட்ட பாக்கியமான அழைத்தலை அதிர்ஷ்டமென்று சொல்லலாகும்.

22. யேசுநாதர் அர்ச். இராயப்பரைத் தம்முடைய திருச்சபைக்கு அஸ்திவாரக் கல்லாகவும், தலைவராகவும், பிரதான மேய்ப்பராகவும் ஸ்தாபித்தபடியால், யேசுநாதர் இவ்வுலகத்தைவிட்டுப் பரலோகத்துக்கு எழுந்தருளினபின் அத்திருச்சபை கூடின முதல் கூட்டத்திலேயே அர்ச். இராயப்பர் அந்த மேலான அதிகாரத்தையும் உத்தியோகத்தையும் செலுத்துகிறதைக் காண்கிறோம். எப்படியென்றால் யேசுநாதர்தாமே ஏற்படுத்தின அப்போஸ்தலப் பட்டத்தில் யூதாசுக்குப் பதிலாக வேறொருவரை ஏற்படுத்துவது திருச்சபையில் நடக்கும் அதிகாரச் செய்கைகளுக்குள்ளே மேலான அதிகாரச்செய்கை என்கிறதற்குச் சந்தேகமில்லை. இதற்கு அர்ச். இராயப்பரே முயற்சி பண்ணுகிறதையும், அவர் செய்கிற முயற்சிக்கு மற்ற அப்போஸ்தலர்களும், திருச்சபையைச் சேர்ந்த சகலரும் இணங்குகிறதையும் காண்கிறோம்.

## 2-ம். அதிகாரம்.

இஸ்பிரீத்துசாந்துவானவர் சீஷர்கள்மேல் இறங்கினதும், இராயப்பர் பண்ணின முதல் பிரசங்கத்தில் மூவாயிரம்பேர் மனந் திரும்பினதும், முதல் கிறீஸ்துவர்களுடைய சுகிர்த ஒழுக்கமும்.

1. பின்னும் பெந்த்தேகோஸ்தே என்னும் நாட்கள் முடிவாகையில் அவர்கள் எல்லாரும் ஓரே இடத்தில் ஒருமித்திருந்தார்கள்.

2. அப்பொழுது பலத்த காற்றடித்தாற்போல, திடீரென வானத்திலின்று ஓர் முழக்கமுண்டாகி, அவர்கள் உட்கார்ந்திருந்த வீடு முழுமையும் நிரப்பிற்று.

3. அல்லாமலும், அக்கினிமயம்போன்ற பிரிந்த நாவுகள் அவர்களுக்குத் தோன்றி, அவர்களில் ஒவ்வொருவர் மேலும் வந்து தங்கினது.

4. அவர்கள் எல்லாரும் இஸ்பிரீத்துசாந்துவினால் நிரப்பப்பட்டு, பேசும்படிக்கு இஸ்பிரீத்துசாந்துவானவர் அவர்களுக்குக் கொடுத்த வரத்தின்படியே பற்பல பாஷைகளில் பேசத் தொடங்கினார்கள். (மத். 3-11 ; அப். 11-16 ; 1 கொ. 12-10.)

5. அப்பொழுது வானத்தின் கீழுள்ள சகல தேசத்தாரிலுமிருந்து வந்த பத்திமான்களான யூதர்கள் எருசலேமில் வாசம்பண்ணினார்கள்.

6. இந்தச் சத்தம் உண்டாகவே, திரளான ஜனங்கள் கூடிவந்து, அவனவன் தன் தன் பாஷையில் அவர்கள் பேசுவதைக் கேட்டு, மனதில் மயங்கினார்கள்.

7. ஆதலால் எல்லாரும் பிரமித்து ஆச்சரியப்பட்டுச் சொன்னதாவது : இதோ, பேசுகிற இவர்கள் எல்லாரும் கலிலேயரல்லவோ ? (மாற். 14-70.)

8. அப்படியிருக்க, நம்மில் ஒவ்வொருவரும் நமது ஜென்மப் பாஷைகளில் இவர்கள் பேசுகிறதைக் கேட்கிறோமே. இதெப்படி ?

9. பார்த்தரும், மேதியரும், எலாமித்தாரும், மெசபொத்தோமியா, யூதேயா, கப்பதோசியா, பொந்து, ஆசியா,

10. பிரிஜியா, பம்பீலியா, எஜிப்து என்னும் தேசங்களிலும், சிரேனுக்குச் சமீபமான லீபியா நாடுகளில் வசிக்கிறவர்களும், புற தேசத்தாரான உரோமையரும்,

11. யூதர்களும், யூதர்மார்க்கத்தைக் கைப்பற்றினவர்களும், கிரேத்தரும், அரபியருமாகிய நாமெல்லோரும் நம்முடைய பாஷைகளில் இவர்கள் சர்வேசுரனுடைய மகத்துவமான காரியங்களைப் பேசக் கேட்கிறோமே என்றார்கள்.

12. அப்படியே எல்லாரும் பிரமித்து ஆச்சரியப்பட்டு, ஒருவன் ஒருவனை நோக்கி : இதற்கு அர்த்தமேது என்றார்கள்.

13. ஆனால் மற்றவர்கள் நகைத்து : இவர்கள் மதுபானத்தால் நிறைந்திருக்கிறார்கள் என்றார்கள்.

1. பெந்த்தேகோஸ்தே நாளென்பது இஸ்ராயேல் ஜனங்கள் எஜிப்துநாட்டை விட்டுப் புறப்பட்ட ஐம்பதாம் நாள் சீனாய்மலையில் சர்வேசுரன் மோயீசனுக்கு வேதகற்பனை கொடுத்த நாளாமே. அந்நாளை யூதர்கள் முக்கியமான திருநாளாகக் கொண்டாடி வருவார்கள். இந்தத் திருநாளுக்குப் பற்பல தூர தேசங்களிலிருந்து யூதர்களும், வேதத்தை அநுசரிக்கும் புறஜாதியாரும் திரளாய்க் கூடிவருவது வழக்கமாம்.

14. அப்பொழுது இராயப்பர், பதினொரு பேரோடுங்கூட நின்று, தமது சத்தத்தை உயர்த்தி அவர்களுக்கு வசனித்ததாவது: யூதர்களே, எருசலேமில் வசிக்கும் சமஸ்த ஜனங்களே, இதை நீங்கள் அறியக்கடவீர்கள்; என் வார்த்தைகளையும் உங்கள் காதுகளில் வாங்கிக்கொள்ளுங்கள்.

15. இப்பொழுது விடிந்து மூன்றும் மணியாயிருக்க, நீங்கள் எண்ணுகிறது போல இவர்கள் வெறிகொண்டவர்களல்லவே.

16. ஆனால் இது யோவேல் என்னும் தீர்க்கதரிசியால் சொல்லப்பட்ட காரியமாயிருக்கின்றது.

17. (அதாவது) கடைசி நாட்களிலே சகல மாம்சத்தின்மேலும் என்னுடைய இஸ்பிரீத்துவினின்று எடுத்துப் பொழிவேன். அப்பொழுது உங்கள் குமாரர்களும் உங்கள் குமாரத்திகளும் தீர்க்கதரிசனஞ்சொல்லுவார்கள். உங்கள் வாலிபர்கள் காட்சிகளைக் காண்பார்கள். உங்கள் மூப்பர்கள் சொற்பனங்களை அடைவார்கள். (இசை. 44-3; யோவெல். 2-28.)

18. மெய்யாகவே அந்நாட்களிலே என் அடியார்பேரிலும் என் அடியாள்கள்பேரிலும் என் இஸ்பிரீத்துவினின்று எடுத்துப்பொழிவேன். அவர்களும் தீர்க்கதரிசனஞ்சொல்லுவார்கள்.

19. அன்றியும் உயர வானத்திலே அற்புதங்களையும், தாழ பூமியிலே இரத்தம், அக்கினி, புகையாவியாகிய அதிசயங்களையும் காட்டுவேன்.

20. ஆண்டவருடைய பெரிதும் பிரபல்லியமுமான நாள் வருமுன்னே சூரியன் இருளாகவும், சந்திரன் இரத்தமயமாகவும் மாறிப்போம்.

21. அப்பொழுது சம்பவிப்பதேதெனில், ஆண்டவருடைய நாமத்தைத் தொழுதுகொள்ளுகிற எவனும் இரட்சிக்கப்படுவான் என்று கர்த்தர் திருவுளம்பற்றுகிறார் என்பதே. (யோவெல். 2-32; ரோ. 10-13.)

22. இஸ்ராயேல் ஜனங்களே, இந்த வார்த்தைகளைக் கேளுங்கள்; நீங்களும் அறிந்திருக்கிறபடியே, சர்வேசுரன் உங்கள் மத்தியில் நசரேயனாகிய யேசுநாதரைக்கொண்டு செய்தருளிய வல்லப செய்கையினாலும், புதுமைகளினாலும், அதிசயங்களினாலும் உங்களுக்குள்ளே அவர் சர்வேசுரனால் அங்கீகரிக்கப்பட்ட மனிதனாயிருக்க,

15. விடிந்து மூன்றும் மணி என்பது இக்காலத்தின் கணக்கின்படி காலை ஒன்பது மணியாகும். அன்று யூதர்களுக்குப் பெந்தேக்கோஸ்தே என்னும் பெரிய பண்டிகை நாளாயிருந்தது. அவர்களுக்குள்ள ஆசாரத்தின்படியே அப்படிப்பட்ட பண்டிகை நாட்களில் மத்தியானத்துக்கு முந்தி ஒருவனும் விருந்தாடுவதில்லை. ஆகையால் அப்போஸ்தலர்கள் இன்னும் புசிக்கவுமில்லை குடிக்கவுமில்லையென்றும், ஆகையால் அவர்கள் வெறியால் பேசுவதில்லையென்றும் அர்ச். இராயப்பர் அவர்களுக்கு நியாயஞ்சொல்லுகிறார்.

16-20. இதிலே அர்ச். இராயப்பர் எடுத்துக் காட்டுகிற தீர்க்கதரிசனத்தில் இரண்டு பங்குண்டு. அதாவது: திருச்சபையின் துவக்கத்தில் அதற்கு இஸ்பிரீத்துசாந்துவானவர் கொடுத்தருளப்பட்டு, அவரால் நடக்கும் அற்புதங்களும்; உலக முடிவில் நடக்கும் அற்புத அதிசயங்களுமாமே. முதற்பங்கு அன்றுதானே நிறைவேறியிருக்கிறதென்று அர்ச். இராயப்பர் காண்பிக்கிறார். 2-ம் பங்கோவெனில் உலகமுடிவில் இருக்கப்போகிறவர்கள் காண்பார்களென்றறியவும்.

23. சர்வேசுரனுடைய திட்டமான ஆலோசனைக்கும் முன்னறிவுக்கும் ஒத்தபடி (உங்களுக்குக்) கையளிக்கப்பட்டவராகிய அவரை நீங்கள் அக்கிரமிகளின் கைகளால் சிலுவையில் அறைந்து, கொலைசெய்தீர்கள். (லூக். 21-22.)

24. அவர் பாதாளத்தில் நிறுத்தப்படுவது கூடாததைப் பற்றிச் சர்வேசுரன் அதின் உபத்திரவங்களை நீக்கி, அவரை உயிர்ப்பித்தார்.

25. ஏனெனில் தாவீது அவரைக் குறித்து வசனிக்கிறதாவது: நான் அசைக்கப்படாதபடிக்குக் கர்த்தர் என் வலதுபாரிசத்திலே இருக்கிறபடியால் அவரை நான் எப்போதும் என் கண் முன்பாக நோக்கிக்கொண்டிருந்தேன். (சங். 15-8.)

26. அதின் நிமித்தம் என் இருதயம் மகிழ்ந்தது; என் நாவும் களிகூர்ந்தது; இன்னமும் என் மாம்சமும் நம்பிக்கையில் இளைப்பாறும்.

27. ஏனெனில் என் ஆத்துமத்தைப் பாதாளத்தில் விடமாட்டீர்; உமது பரிசுத்தரையும் அழிவைக் காணவொட்டீர்;

28. சீவிய நெறிகளை எனக்குத் தெரியப்படுத்தினீர்; உம்முடைய முகதரிசனையில் என்னை இன்பத்தால் நிரப்புவீர் என்கிறார்.

29. சகோதரர்களே, பிதாப்பிதாவாகிய தாவீதென்பவர் மரித்து அடக்கஞ்செய்யப்பட்டதுமன்றி, இந்நாள் வரைக்கும் அவருடைய கல்லறை நம்மிடத்தில் இருக்கிறதென்றும் உங்களுக்குத் தைரியமாய்ச் சொல்ல எனக்கு உத்தரவு கொடுங்கள். (3 அரச. 2-10.)

30. அவர் தீர்க்கதரிசியாயிருந்தபடியினாலும், தமது சந்ததியில் ஒருவர் தம்முடைய சிம்மாசனத்தில் உட்காருவாரென்று சர்வேசுரன் ஆணையிட்டுத் தமக்கு வாக்களித்ததை அறிந்திருந்தபடியினாலும், (2 அரச. 7-12; சங். 131-11.)

31. கிறீஸ்துவின் உத்தானத்தைக் குறித்து: அவர் பாதாளத்தில் விடப்பட்டதில்லையென்றும், அவருடைய மாம்சம் அழிவைக்கண்டதில்லையென்றும் தூரதிர்ஷ்டியாய்க் கண்டு சொன்னார். (சங். 15-10; அப். 13-35.)

32. யேசுநாதராகிய இவரைச் சர்வேசுரன் உயிர்ப்பித்தார்; இதற்கு நாங்களெல்லாரும் சாட்சிகளாயிருக்கிறோம்.

33. அவர் சர்வேசுரனுடைய வலது கரத்தால் உயர்த்தப்பட்டு, இஸ்பிரீத்துசாந்துவைப்பற்றிய வாக்குத் தத்தத்தைப் பிதாவினிடத்தில் பெற்றுக்கொண்டு, நீங்கள் காண்கிறவைரும், கேட்கிறவைருமாகிய இவரைப் பொழிந்தருளினார்.

34. ஆயினும் தாவீதென்பவர் பரமண்டலத்திற்கு ஏறினவரல்ல; என்றாலும் அவரே வசனித்திருக்கிறதேதென்றால்:

23. யேசுநாதர் பாவிகளுடைய கையால் கொல்லப்படுவாரென்று பிதாவாகிய சர்வேசுரன் அநாதிகாலமாய் அறிந்து, அந்த வழியாய் மனிதர்களுடைய இரக்ஷணியம் நிறைவேறும்படி அதுக்குச் சம்மதித்திருந்தார். ஆகிலும் அதினாலே அவரைக் கொலைசெய்தவர்களுடைய பாவம் குறைந்துபோனதல்ல. ஏனெனில் அவர்கள் அதைச் சர்வேசுரனுடைய கட்டாயத்தினால் செய்யவில்லை; தங்கள் துர்மனதைக்கொண்டே செய்தார்கள். தின்மையினின்று-முதலாய் நன்மையைப் பெறுவிக்க வல்லவராகிய சர்வேசுரன் பாவிகள் செய்த அக்கிரமத்தின் வழியாய் மனிதர்களுக்கு இரட்சணியம் உண்டாகும்படி செய்தாரென்றறிக.

35. நான் உம்முடைய சத்துருக்களை உமக்குப் பாதப்படியாகப் போடுமட்டும் நீர் என்னுடைய வலது பாரிசத்தில் உட்கார்ந்திரும் என்று ஆண்டவர் என் ஆண்டவருக்குச் சொன்னார் என்றார். (சங். 109-1; மத். 22-44.)

36. ஆகையால் நீங்கள் சிலுவையில் அறைந்த இந்த யேசுநாதனையே சர்வேசுரன் ஆண்டவரும் கிறீஸ்துவுமாக்கினாரென்று இஸ்ராயேல் கோத்திரத்தார் யாவரும் அதிமிக நிச்சயமாய் அறிந்துகொள்ளக்கடவார்கள் என்றார்.

37. இவைகளை அவர்கள் கேட்டமாத்திரத்தில் இருதயங் குத்துண்டவர்களாய், இராயப்பரையும் மற்ற அப்போஸ்தலர்களையும் நோக்கி: சகோதரரே, நாங்கள் என்ன செய்யவேண்டும் என்றார்கள்.

38. இராயப்பர் அவர்களைநோக்கி: நீங்கள் தவஞ்செய்து, உங்கள் பாவங்களின் மன்னிப்புக்காக உங்களில் ஒவ்வொருவனும் யேசுக்கிறீஸ்துநாதருடைய நாமத்தினாலே ஞானஸ்நானம் பெறக்கடவான்; அப்பொழுது இஸ்பிரீத்துசாந்துவின் வரத்தைப் பெற்றுக்கொள்வீர்கள்.

39. ஏனெனில் வாக்குத்தத்தமானது உங்களுக்கும், உங்கள் புத்திரருக்கும், நமது ஆண்டவராகிய சர்வேசுரன் வரவழைக்கும் தூரத்திலுள்ள யாவருக்கும் உண்டாயிருக்கிறது என்று சொல்லி,

40. இன்னும் அநேக வார்த்தைகளால் அத்தாட்சியுங்கொடுத்து, இந்தத் தீய சந்ததியினின்று விலகி, உங்களை இரட்சித்துக்கொள்ளுங்கள் என்று அவர்களுக்குப் புத்திமதி சொன்னார்.

41. அவருடைய வார்த்தையை ஏற்றுக்கொண்டவர்கள் ஞானஸ்நானம் பெற்றார்கள். அப்படியே அன்றையத்தினம் ஏறக்குறைய மூவாயிரம் பேர் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள்.

42. அவர்கள் அப்போஸ்தலர்களுடைய போதகத்திலும், அப்பத்தைப் பகிர்ந்து ஒருமிக்க உண்பதிலும், ஜெபத்திலும் நிலைத்திருந்தார்கள்.

43. அப்பொழுது எல்லாருக்கும் அச்சமுண்டாயிருந்தது. அப்போஸ்தலர்களால் எருசலேமில் அநேக அற்புதங்களும் அதிசயங்களும் நடந்தது. அதினாலே சகலரிடத்திலும் மிகுந்த பயங்கரமுண்டாயிற்று.

44. அன்றியும், விசுவாசிகளான எல்லாரும் ஒருமித்திருந்ததுந் தவிர, சகல பொருட்களையும் தங்களுக்குப் பொதுவாக வைத்திருந்தார்கள்.

39. இதில் சொல்லப்பட்ட வாக்குத்தத்தம் இவ்வதிகாரத்தின் 17-ம் வசனமுதல் 21-ம் வசனம் வரையில் கூறியபடி யோவேல் தீர்க்கதரிசியால் அறிவிக்கப்பட்டதாமே.

40. இதிலேயும் அர்ச். இராயப்பர் யேசுநாதரிடத்தில் தாம் பெற்றுக்கொண்ட திருச்சபைத் தலைமைப்பட்டத்தின் உத்தியோகத்தை நிறைவேற்றக் காண்கிறோம். அவரே மற்ற எல்லா அப்போஸ்தலர்களுக்காகவும் பரிந்து பேசுகிறார்; அவரே நடந்த அற்புதத்துக்கு விபரஞ் சொல்லுகிறார்; அவரே யேசுநாதரைப் பற்றின சுவிசேஷத்தை முந்த முந்த ஜனங்களுக்குப் பிரசங்கிக்கிறார்; மனந்திரும்புகிறவர்கள் செய்யவேண்டியதையும் அவரே கற்பிக்கிறார்.

42. இவ்வாக்கியத்தில் சொல்லப்படுகிற அப்பம் தேவநற்கருணையாமே. அக்காலத்திலே சகல கிறீஸ்தவர்களும் பிரதிதினமும் தேவநற்கருணை உட்கொண்டு வந்தார்களென்றறிக. அன்றியுஞ் சீரிய பாஷைச் சுவிசேஷத்தில் அப்பமென்னும் சொல்லுக்குப் பதிலாய்த் தேவநற்கருணை என்ற சொல்லே எழுதப்பட்டிருக்கிறது.

45. அவர்கள் தங்கள் காணியாட்சிகளையும், பொருட்களையும் விற்று, அவனவனுடைய அவசியத்துக்குத் தக்கபடி அவைகளைச் சகலருக்கும் பகிர்ந்து வருவார்கள்.

46. அல்லாமலும் அவர்கள் ஒரேமனமாய் அநுதினமும் தேவாலயத்தில் நிலைத்து, வீடுவீடாய் அப்பமும் பகிர்ந்து, ஆனந்த அக்களிப்போடும், கபடில்லாத இருதயத்தோடும் போசனம் பண்ணி,

47. சர்வேசுரனை ஸ்துதித்து, சகல ஜனங்களுக்கும் பிரியமுள்ளவர்களாயிருப்பார்கள். ஆண்டவரோவெனில் இரட்சிக்கப்படத்தக்கவர்களை அநுதினமும் அந்தச் சபையில் அதிகரிக்கப் பண்ணிவருவார்.

## 3-ம். அதிகாரம்.

இராயப்பர் பிறவிச் சப்பாணியாகிய ஒருவனைக் குணமாக்கி, அந்த அற்புதத்தைத் தாம் யேசுநாதருடைய நாமத்தினாலே செய்ததென்றும், அவரே பிதாப்பிதாக்களுக்கு வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட இரட்சகரென்றும் யூதர்களுக்குப் பிரசங்கித்த வரலாறு.

1. அப்படியிருக்க, ஒன்பதாம் மணி ஜெபவேளையில் இராயப்பரும், அருளப்பரும் தேவாலயத்துக்கு ஏறிப்போனார்கள்.

2. அப்பொழுது தன் தாயின் வயிற்றிலிருந்து சப்பாணியாய்ப் பிறந்த ஒருவனைச் சுமந்து கொண்டுவந்தார்கள். தேவாலயத்துக்குள் பிரவேசிக்கிறவர்களிடத்திலே அவன் பிட்சை கேட்கும்படி நாள்தோறும் அவனைத் தேவாலயத்தின் அலங்கார வாசல் என்னப்பட்ட இடத்திலே வைப்பார்கள்.

3. இராயப்பரும், அருளப்பரும் தேவாலயத்துக்குள் பிரவேசிக்கப்போகிறதை அவன் கண்டு, அவர்களிடத்திலே பிட்சை கேட்டான்.

4. அப்பொழுது இராயப்பர் அருளப்பரோடுகூட அவனை உற்றுப்பார்த்து: எங்களை நோக்கிப்பார் என்றார்.

5. அவன் ஏதாவது அவர்களிடத்திலே பெற்றுக்கொள்ளலாமென்று நம்பி, அவர்களை நோக்கிப் பார்த்தான்.

6. அப்பொழுது இராயப்பர்: என்னிடத்திலே வெள்ளியும் பொன்னும் இல்லை. ஆகிலும் என்னிடத்தில் உள்ளதை உனக்குத் தருகிறேன்; நசரேயனாகிய யேசுக்கிறீஸ்துவின் நாமத்தினாலே நீ எழுந்து நட என்று சொல்லி,

7. அவனுடைய வலது கரத்தைப் பிடித்து, அவனைத் தூக்கிவிட்டார். அக்ஷணமே அவனுடைய உள்ளங்கால்களும் பாதங்களும் பலப்பட்டன.

46-47. அப்பொழுது புதுக்கிறீஸ்துவர்களுக்குச் சொந்தமான கோவில்களில்லாமையாலும், யூதருடைய விரோதத்தைப்பற்றியும் திருச்சபையிலுட்பட்டவர்கள் திவ்விய பூசை காணவும், தேவநற்கருணை வாங்கவும் ஏகமாய் ஓரிடத்தில் கூடிவரக் கூடாதிருந்ததைப்பற்றி, அங்கங்கே வெவ்வேறு வீடுகளில் கூடி, அந்த ஞானக்கிருத்தியங்களையும் நிறைவேற்றி அந்நியோந்நிய சிநேகத்தின் அடையாளமாகப் பொதுவில் விருந்து உண்பார்களென்பதே கருத்து.

1. ஒன்பதாம் மணி ஜெப வேளை என்பது மத்தியானத்துக்குமேல் மூன்றும் மணி நேரமாம். யூதர்கள் ஜெபத்துக்காக நாள்தோறும் காலையில் ஒன்பது மணிக்கும், மத்தியானத்திற்கும், மத்தியானத்துக்குமேல் மூன்று மணிக்கும் தேவாலயத்தில் கூடுவார்கள். இந்த வழக்கத்தை முன்னிட்டே திருச்சபையில் குருக்கள் ஜெபிக்கவேண்டிய சங்கீதமாலைக்கும் வெவ்வேறு நேரம் குறிக்கப்பட்டிருக்கின்றது.

8. அவன் குதித்து, எழுந்துநின்று நடந்தான். அப்படியே நடந்து, துள்ளி, சர்வேசுரனை ஸ்துதித்துக்கொண்டு அவர்களோடுகூடத் தேவாலயத்திற்குள் பிரவேசித்தான்.

9. அவன் நடக்கிறதையும், சர்வேசுரனை ஸ்துதிக்கிறதையும் சகல ஜனங்களும் கண்டு,

10. அலங்கார வாசலிலே பிச்சைக்காக உட்கார்ந்திருந்தவன் இவன்தான் என்று அறிந்து, இவனுக்குச் சம்பவித்ததைப்பற்றி, ஆச்சரியப்பட்டுப் பிரமிப்படைந்தார்கள்.

11. அன்றியும், அவன் இராயப்பரையும் அருளப்பரையும் பற்றிப்பிடித்துக்கொண்டிருக்கையில், ஜனங்களெல்லாரும் அதிசயித்துச் சலோமோன் மண்டபம் என்னும் இடத்தில் அவர்களண்டையில் ஓடிவந்தார்கள்.

12. இராயப்பர் அதைக்கண்டு, ஜனங்களை நோக்கி: இஸ்ராயேல் ஜனங்களே, இதற்கு நீங்கள் அதிசயப்படுவானேன்? எங்கள் சுய புண்ணியத்தினாலாவது, வல்லமையினாலாவது இவனை நாங்கள் நடக்கச்செய்தாற்போல நீங்கள் எங்களை உற்றுப் பார்ப்பதேன்?

13. அபிரகாமின் தேவன், ஈசாக்கின் தேவன், யாக்கோப்பின் தேவனாகிய நம்முடைய பிதாக்களின் தேவன் தம்முடைய சுதனாகிய யேசுநாதரை மகிமைப்படுத்தினார். நீங்களோ அவரைக் கையளித்தீர்கள். பிலாத்து அவரை விடுதலையாக்கத் தீர்மானித்தபோது, நீங்கள் அவனுடைய முகதாவில் அவரை மறுதலித்தீர்கள்.

14. பரிசுத்தரும் நீதிமானுமாகிய அவரை நீங்கள் மறுதலித்து, கொலைபாதகனை மனுஷனை உங்களுக்கு விடுதலையாக்கக் கேட்டுக்கொண்டு, (மத். 27-20.)

15. சீவிய கர்த்தாவைக் கொலைசெய்தீர்கள். ஆனால் சர்வேசுரன் அவரை மரித்தோரினின்று உயிர்ப்பித்தார். அதற்கு நாங்களே சாட்சிகளாயிருக்கிறோம். (அரு. 10-10.)

16. அவருடைய நாமத்தின் பேரிலுள்ள விசுவாசத்தினாலே, நீங்கள் கண்டும், அறிந்துமிருக்கிற இவனை அவருடைய நாமமே பலப்படுத்தினது; அவரால் உண்டான விசுவாசமே உங்கள் எல்லோருடைய முகதாவில் இந்தப் பூரண சௌக்கியத்தைக் கொடுத்தது.

17. ஆயினும் சகோதரரே, உங்கள் தலைவர்களைப்போலவே நீங்களும் அறியாமையினால் செய்தீர்களென்று அறிந்திருக்கிறேன். (லூக். 23-24; 1 கொரி. 2-8.)

18. சர்வேசுரனோவெனில் தம்முடைய கிறீஸ்துவானவர் பாடுபடவேண்டுமென்று எல்லாத் தீர்க்கதரிசிகளுடைய வாக்கினாலும் முன்னறிவித்ததைகளை இவ்விதமாய் நிறைவேற்றினார். (லூக். 24-44.)

19. ஆகையால் உங்கள் பாவங்கள் அழிக்கப்படும்படி மனஸ்தாபப்பட்டு மனந்திரும்புங்கள்.

20. அப்போது உங்களுக்குப் பிரசங்கிக்கப்பட்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரை ஆண்டவர் அனுப்பி, அவருடைய பிரசன்னத்தில் இளைப்பாற்றியின் காலங்கள் வரும்போது, நீங்கள் (இரட்சணியம் அடைவீர்கள்.)

20. இளைப்பாற்றியின் காலமென்பது நீதிமான்கள் மோக்ஷத்தில் அனுபவிக்கும் பேரின்பத்தின் காலமாம்.

21. ஆகிலும் சர்வேசுரன் உலகத்தின் ஆதிமுதற்கொண்டு தம்முடைய பரிசுத்த தீர்க்கதரிசிகளின் வாக்கால் திருவுளம்பற்றின எல்லாவற்றையும் மறுபடி சீராக்கும் காலங்கள் வரும் வரையில், பரலோகம் அவரை ஏற்றுக் கொள்ளவேண்டும்.

22. ஏனெனில், மோயீசன் வசனித்ததாவது: உங்கள் தேவனாகிய கர்த்தர் என்னைப்போல ஒரு தீர்க்கதரிசியை உங்கள் சகோதரரிடத்தினின்று உங்களுக்கு எழுப்புவார். அவர் உங்களுக்குச் சொல்வதெல்லாவற்றிலும் அவருக்குச் செவிகொடுப்பீர்களாக. (உபா. 18-15.)

23. ஆனால் அந்தத் தீர்க்கதரிசிக்குச் செவிகொடாத எந்த ஆத்துமமும் ஜனத்தினின்று நிர்மூலமாக்கப்பட நேரிடும் என்றார்.

24. சாமுவேல் என்பவர் முதற்கொண்டு பின்பு தொடர்ச்சியாய்ப் பேசினவர்களாகிய சகல தீர்க்கதரிசிகளும் இந்த நாட்களை முன்னறிவித்தார்கள்.

25. நீங்கள் அந்தத் தீர்க்கதரிசிகளுக்கும் புத்திரராயிருக்கிறீர்கள்; சர்வேசுரன் அபிரகாம் என்பவரை நோக்கி: உன் சந்ததியிலே பூமியிலுள்ள வமிசங்களெல்லாம் ஆசீர்வதிக்கப்படும் என்று சொல்லி, நம்முடைய பிதாக்களோடு செய்தருளிய உடன்படிக்கைக்கும் புத்திரராயிருக்கிறீர்கள். (ஆதி. 12-3.)

26. உங்களில் ஒவ்வொருவனும் தன் தன் துன்மார்க்கத்தினின்று தன் மனதைத் திருப்பத்தக்கதாக, சர்வேசுரன் முந்த முந்த உங்களுக்காகவே தம்முடைய குமாரனை உயிர்ப்பித்து, உங்களை ஆசீர்வதிக்கும்படி அவரை அனுப்பினார் என்றார்.

## 4-ம். அதிகாரம்.

*யேசுக்கிறீஸ்துநாதர் ஒருவரிடத்திலேயே இரட்சணியமுண்டென்பதும், அப்போஸ்தலருடைய தைரிய உறுதியும், சீஷர்களில் ஒருவரும் யாதொன்றையும் தங்களுக்குச் சொந்தமாக வைத்துக்கொள்ளாதிருந்ததுமாகிய விசேஷங்கள்.*

1. அவர்கள் ஜனங்களோடு பேசிக்கொண்டிருக்கையில் குருக்களும், தேவாலயத்தின் அதிகாரியும், சதுசேயரும் திடீரென அவர்களிடத்தில் வந்து,

2. அவர்கள் ஜனங்களுக்கு உபதேசித்ததினாலும், யேசுநாதரிடமாய் மரித்தோரின் உத்தானத்தைப் பிரசங்கித்ததினாலும் விசனப்பட்டு,

3. அவர்களைப் பிடித்து, சாயங்காலமானபடியினாலே மறுநாள்வரைக்கும் அவர்களைக் காவலிலே வைத்தார்கள்.

---

21. எல்லாவற்றையும் மறுபடியுஞ் சீர்ப்படுத்துங் காலமென்பது நடுத்தீர்வையின் காலமாம்.

1. தேவாலயத்தின் அதிகாரியென்பது தேவாலயத்தைக் காக்கும்படி நியமிக்கப்பட்டிருந்த லேவித்தர்களுக்கு மேல் அதிகாரியாகிய சேர்வைக்காரனும். (3. அரசர். 35-8.)

2. சதுசேயர்கள், மரித்தவர்கள் உயிர்க்கிறதில்லையென்று போதித்துவந்திருக்க, அப்போஸ்தலர்கள் யேசுநாதர் உயிர்த்ததை உதாரணமாகக் காட்டி, அவர் உயிர்த்தது எவ்வண்ணமோ, அவ்வண்ணமே மரித்தவர்களும் உயிர்ப்பார்களென்று ஒப்பித்து வந்தார்கள். இது சதுசேயருக்குக் கோபத்தை மூட்டினது.

4. தேவ வாக்கியத்தைக் கேட்டவர்களில் அநேகர் விசுவசித்தார்கள்; புருஷர்களுடைய தொகை ஐயாயிரமாயிற்று.

5. மறுநாளில் சம்பவித்ததேதெனில் ஜனங்களின் அதிகாரிகளும், மூப்பர்களும், வேதபாரகர்களும்

6. பெரிய குருவாகிய அன்னுசும், கைப்பாசும், யோவானும், அலெக்சாந்தரும், ஆசாரிய வகுப்பைச் சேர்ந்தவர்களான சகலரும் எருசலேமில் கூட்டங்கூடி,

7. அவர்களை நடுவே நிறுத்தி: நீங்கள் எந்த வல்லமையினுலே அல்லது எந்த நாமத்தினுலே இதைச் செய்தீர்கள் என்று கேட்டார்கள்.

8. அப்பொழுது இராயப்பர் இஸ்பிரீத்துசாந்துவினுலே நிரப்பப்பட்டு, அவர்களைநோக்கி: ஜனத்தின் அதிகாரிகளே, மூப்பர்களே, கேளுங்கள். (மத். 10-19.)

9. இந்த நோவாளி மனுஷனுக்கு அளிக்கப்பட்ட உபகாரத்தைக்குறித்து, இவன் எவ்விதமாய்ச் சௌக்கியமானுனென்று நாங்கள் இன்றைக்கு விசாரிக்கப்பட்டால்,

10. உங்களால் சிலுவையில் அறையப்பட்டவரும் சர்வேசுரனுல் மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்டவருமாயிருக்கிற நசரேயனுகிய யேசுக்கிறீஸ்துவின் நாமத்தினுலே இவன் உங்களுக்கு முன்பாகச் சௌக்கியமாய் நிற்கிறுனென்று உங்கள் எல்லாருக்கும், இஸ்ராயேல் ஜனங்கள் அனைவருக்கும் தெரிந்திருக்கக்கடவது.

11. வீடு கட்டுகிறவர்களாகிய உங்களாலே தள்ளுண்ட கல்லாகிய இவரே மூலைக்கு முதன்மைக் கல்லானுர். (இசை. 28-16; மத். 21-42; மாற். 12-10.)

12. (இவராலன்றி) வேறொருவனுலும் இரட்சணியமில்லை; ஏனெனில் நாம் இரட்சணியம் அடையவேண்டியதற்கு வானத்தின் கீழ் (அவருடைய நாமமல்லாது) வேறே நாமம் மனுஷருக்குக் கொடுக்கப்படவில்லை என்றுர்.

13. இராயப்பருக்கும் அருளப்பருக்கும் உண்டாயிருந்த தைரியத்தை அவர்கள் கண்டு, அவர்கள் படிப்பும், அறிவுமில்லாத மனிதர்களென்று அறிந்து ஆச்சரியப்பட்டதுமன்றி, அவர்கள் யேசுநாதரோடுகூட இருந்தவர்களென்றும் அறிந்துகொண்டார்கள்.

14. மேலும் சொஸ்தமாக்கப்பட்ட மனுஷனும் அவர்களோடுகூட நிற்கிறதைக் கண்டதினுல் மறுத்துப்பேச அவர்களால் கூடாதிருந்தது.

15. ஆதலால் அவர்கள் சங்கத்தை விட்டுவிலகி, வெளியேபோகும்படி கட்டளையிட்டுத் தங்களுக்குள்ளே ஆலோசனை செய்து:

4. **புருஷர்களுடைய தொகை ஐயாயிரமாயிற்று:**—இவ்வாகமம் 2-ம் அதி. 41-ம் வசனத்தில் கண்டபடி அர்ச். இராயப்பருடைய முதல் பிரசங்கத்திற்குப் பின் ஸ்திரீ பூமான்களாகிய மூவாயிரம் ஜனங்கள் விசுவசித்து ஞானஸ்நானம் பெற்றிருக்க, அவருடைய இரண்டாம் பிரசங்கத்திற்குப் பின், புருஷர்களுடைய தொகைமட்டும் ஐயாயிரமாயிற்றென்று அறிக.

6. **யோவான்:**—இவன் அன்னுஸென்ற குருப்பிரசாதியின் ஐந்து மக்களில் ஒருவனும்.

**அலெக்சாந்தர்:**— அக்காலத்திலிருந்த யூதர்களுக்குள்ளே இவன் தான் மகா ஆஸ்திக்காரனுன அலெக்சாந்தர் லிசிமாக்கென்று வேதசாஸ்திரிகள் நினைக்கிறுர்கள். (காலமேத்.)

11. அர்ச். மத். 21-ம் அதி. 42-ம் வசன வியாக்கியானம் காண்க.

16. இந்த மனிதர்களை நாம் என்ன செய்வோம்? மெய்யாகவே எருசலேம் பட்டணத்தார் எல்லாருக்கும் அறியலான ஓர் அற்புதம் இவர்களால் செய்யப்பட்டிருக்கிறது; இது பிரசித்தமாயிருக்கிறதினாலே இதை இல்லையென்று சொல்லவும் நம்மால் முடியாதே.

17. ஆனால் இது ஜனங்களுக்குள்ளே அதிகமாய்ப் பிரஸ்தாபமாகாதபடிக்கு இது முதல் எந்த மனிதனோடும் இந்த நாமத்தினாலே பேசக் கூடாதென்று அவர்களை மிரட்டிப் பயமுறுத்துவோமாக என்று சொல்லி,

18. அவர்களை வரவழைத்து, அவர்கள் யேசுநாதருடைய நாமத்தினாலே பரிச்சேதம் பேசவும், போதிக்கவும் படாது என்று கட்டளையிட்டார்கள்.

19. அப்பொழுது இராயப்பரும் அருளப்பரும் அவர்களுக்கு மாறுத்தாரமாக: சர்வேசுரனுக்குக் கீழ்ப்படிகிறதைவிட உங்களுக்குக் கீழ்ப்படிகிறது சர்வேசுரனுடைய சந்நிதியில் நியாயமோ என்று நீங்களே நிதானித்துப்பாருங்கள்.

20. நாங்கள் கண்டவைகளையும், கேட்டவைகளையும் பேசாதிருக்கக் கூடாதே என்றார்கள்.

21. இந்தச் சங்கதியில் நடந்த காரியங்களைப்பற்றி ஜனங்களெல்லாரும் சர்வேசுரனை ஸ்துதித்துக்கொண்டிருந்தபடியினாலே, ஜனங்கள் நிமித்தம் அவர்களைத் தண்டிக்கிறதற்கு வழிகாணாமல், அவர்களைப் பயமுறுத்தி அனுப்பிவிட்டார்கள்.

22. இப்படி அற்புதமாய்ச் சௌக்கியமடைந்த மனிதன் நாற்பது வயதுக்கு மேற்பட்டவனாயிருந்தான்.

23. அவர்கள் விடுதலையானபின்பு தங்களைச் சேர்ந்தவர்களிடத்தில் வந்து பிரதான ஆசாரியரும், மூப்பரும் தங்களுக்குச் சொன்ன யாவற்றையும் அவர்களுக்கு அறிவித்தார்கள்.

24. அவர்கள் இதைக்கேட்டு ஏகோமனமாய்ச் சர்வேசுரனை நோக்கிப் பேரொலியிட்டு: ஆண்டவரே, பரலோகத்தையும் பூலோகத்தையும் சமுத்திரத்தையும் அவைகளிலுள்ள யாவற்றையும் உண்டாக்கினவர் நீரே.

25. தேவரீர் இஸ்பிரீத்துசாந்துவைக்கொண்டு உம்முடைய தாசனும் எங்கள் பிதாவுமாகிய தாவீதின் வாக்கினாலே: புற ஜாதிகள் கொந்தளித்து, ஜனங்கள் வியர்த்தமானவைகளைச் சிந்தித்ததென்ன என்றும்,

26. ஆண்டவருக்கு விரோதமாகவும் அவருடைய கிறீஸ்துவுக்கு விரோதமாகவும் பூலோக இராஜாக்களும் எழும்பி நின்று, அதிகாரிகளும் ஏகமாய்க் கூட்டங்கூடினார்கள் என்றும் திருவுளம்பற்றினீரே.

27-28. அப்படியே உம்முடைய கரமும் ஆலோசனையும் தீர்மானித்தவைகளைச் செய்யும்படி எரோதும் போஞ்சுபிலாத்தும் புறஜாதியாரோடும் இஸ்ராயேல் ஜனங்களோடுங்கூட நீர் அபிஷேகம் பண்ணின உம்முடைய பரிசுத்த பிள்ளையாகிய யேசுநாதருக்கு விரோதமாய் இந்தப் பட்டணத்திலே கூட்டங்கூடினார்கள்.

29. ஆதலால் ஆண்டவரே, தேவரீர் இப்பொழுது அவர்களுடைய மிரட்டல்களைப்பார்த்து,

30. உம்முடைய பரிசுத்த குமாரனாகிய யேசுவின் நாமத்தினாலே சௌக்கியங்களும், அற்புதங்களும், புதுமைகளும் நடக்கும்படியாக உமது கரத்தை நீட்டி, இவ்விதமாய் உம்முடைய தாசர்கள் உம்முடைய வாக்கியத்தைச் சர்வதைரியத்தோடும் பேசும்படி அநுக்கிரகித்தருளும் என்றார்கள். (மாற். 16-17.)

31. அப்படி அவர்கள் பிரார்த்தித்த பொழுது அவர்கள் கூடியிருந்த இடம் அதிர்ந்தது; அன்றியும், அவர்கள் எல்லாரும் இஸ்பிரீத்துசாந்துவினால் நிரப்பப்பட்டுத் தேவ வாக்கியத்தைத் தைரியத்தோடு பிரசங்கித்துவந்தார்கள்.

32. விசுவாசிகளுடைய திரளான கூட்டத்தார் ஒரே இருதயமும் ஒரே ஆத்துமமுமாய் இருந்ததுமன்றி, அவர்களில் ஒருவனும் தனக்குள்ளவைகளில் எதையும் தன்னுடையதென்று சொல்லவில்லை. சகலமும் அவர்களுக்குப் பொதுவாயிருந்தது.

33. அப்போஸ்தலர்களும் நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்து நாதருடைய உத்தானத்தைக் குறித்து வெகு பலமாய்ச் சாட்சிசொல்லிவந்தார்கள். அவர்களெல்லார்மேலும் மிகுந்த அருள் உண்டாயிருந்தது.

34. அவர்களில் எவனும் தரித்திரப்படவில்லை; ஏனெனில், யாராருக்குக் காணிகள், வீடுகள் இருந்ததோ, அவர்கள் அவைகளை விற்று, தாங்கள் விற்றவைகளின் கிரயத்தைக் கொண்டுவந்து, (லூக். 12-33.)

35. அப்போஸ்தலருடைய பாதத்திலே வைப்பார்கள். பின்னும் அவனவனுடைய அவசியத்துக்குத் தக்கது அது ஒவ்வொருவனுக்கும் பகிர்ந்து கொடுக்கப்படும்.

36. அவ்வண்ணமே லேவித்தரும், சிப்புரு தீவில் பிறந்தவரும் அப்போஸ்தலர்களால் ஆறுதலின் புத்திரன் என்று அர்த்தங்கொள்ளும் பர்னபாஸ் என்னும் காரணப்பெயர் பெற்றவருமாகிய யோசேப் என்பவர் (அப். 9-27.)

37. தமக்கிருந்த நிலத்தை விற்று, அதின் கிரயத்தைக் கொண்டுவந்து, அப்போஸ்தலர்களுடைய பாதத்திலே வைத்தார்.

## 5-ம். அதிகாரம்.

அனனியாவும் அவன் மனைவியாகிய சாப்பிராளும் சொன்ன பொய்யினிமித்தம் சடுதிமரணமடைந்ததும், அப்போஸ்தலர் சிறையில் வைக்கப்பட்டுத் தேவதூதனால் விடுதலையாகி, யேசுக்கிறீஸ்துநாதரைப்பிரசங்கித்ததும், அவருடைய நாமத்தைக்குறித்து அவர்கள் அடிபட்டதினால் சந்தோஷித்ததுமாகிய விசேஷங்கள்.

1. அப்படியிருக்க, அனனியா என்னும் ஓர் மனிதன் தன் மனைவியாகிய சாப்பிராளோடு சேர்ந்து தன் நிலத்தை விற்று,

2. அந்த நிலக் கிரயத்திலே தன் மனைவி அறிய ஒருபங்கை வஞ்சகமாய் வைத்துக்கொண்டு, ஒரு பங்கைக் கொண்டுவந்து அப்போஸ்தலர்களுடைய பாதத்திலே வைத்தான்.

3. அப்பொழுது இராயப்பர் அவனை நோக்கி: அனனியாவே, நீ இஸ்பிரீத்துசாந்துவுக்குப் பொய் சொல்லவும், உன் நிலக்கிரயத்தில் வஞ்சகமாய் எடுத்து வைத்துக்கொள்ளவும் சாத்தான் உன் இருதயத்தைச் சோதித்ததென்ன? (அரு. 8-44.)

4. அது இருக்கையில் உனக்குச் சொந்தமாயிருந்ததல்லவோ? அதை விற்ற கிரயமும் உன்வசத்தில் இருந்ததல்லவோ? இந்தக் காரியத்தை உன் இருதயத்திலே நீ கருதினதென்ன? மனுஷருக்கு அல்ல, சர்வேசுரனுக்கே நீ பொய்சொன்னாய் என்றார்.

5. அனனியா இந்தவார்த்தைகளைக் கேட்கவே, தரையில் விழுந்து, உயிர் விட்டான். இதைக்கேட்ட சகலருக்கும் மிகுந்த பயங்கரமுண்டாயிற்று.

6. அப்பொழுது (சில) வாலிபர் எழுந்து, அவனை எடுத்து, வெளியே கொண்டுபோய் அடக்கம் பண்ணினார்கள்.

7. ஏறக்குறைய மூன்று மணிநேரமானபின்பு அவனுடைய மனைவி நடந்ததை அறியாமல் உள்ளே வந்தாள்.

8. அப்பொழுது இராயப்பர் அவளை நோக்கி: ஸ்திரீயே, நிலத்தை இவ்வளவுக்குத்தானா விற்றீர்கள்? என்னிடத்திலே சொல்லு என்றார். அவளோ: ஆம் இவ்வளவுக்குத்தான் என்றாள்.

9. இராயப்பர் அவளை நோக்கி: நீங்கள் இப்படியாக ஆண்டவருடைய இஸ்பிரீத்துவைச் சோதிக்கும்படி ஒரு மனப்பட்டதென்ன? உன் புருஷனை அடக்கம் பண்ணினவர்களுடைய காலடிகளை இதோ, வாசற்படியில் பார். உன்னையும் அவர்கள் தூக்கிக்கொண்டு போவார்கள் என்றார்.

10. உடனே அவள் அவருடைய பாதத்துக்கு முன்பாக விழுந்து, உயிர் விட்டாள். வாலிபரும் உள்ளே வந்து, அவள் செத்துக்கிடக்கிறதைக் கண்டு, அவளைத் தூக்கிக்கொண்டுபோய், அவளுடைய புருஷன்பக்கமாய் அடக்கம் பண்ணினார்கள்.

11. ஆகையால் சமஸ்த திருச்சபைக்கும், இவைகளைக் கேள்விப்பட்ட மற்ற யாவருக்கும் மிகுந்த பயமுண்டாயிற்று.

12. பின்னும் அப்போஸ்தலருடைய கரங்களினாலே அநேகம் புதுமைகளும், அற்புதங்களும் ஜனங்களுக்குள்ளே நடந்துவந்தன. எல்லாரும் ஒரே மனமாய்ச் சலோமோனுடைய மண்டபத்தில் கூடியிருந்தார்கள்.

13. மற்றவர்களிலோவெனில் ஒருவனும் அவர்களோடே சேரத் துணியவில்லை. ஆகிலும் ஜனங்கள் அவர்களைக் கொண்டாடுவார்கள்.

14. ஆண்டவர்பேரில் விசுவாசங்கொள்ளுகிற ஸ்திரீ பூமான்களுடைய கூட்டம் அதிகமாய்ப் பெருகிக்கொண்டுவந்தது.

---

11. அனனியாவுக்கும் அவன் மனைவிக்கும் அப்படிச் சடுதி மரணம் நேரிட்டாலும் அவர்கள் ஆத்துமம் நரகத்துக்குப் போயிற்றென்று நிச்சயமாய்ச் சொல்லக்கூடாது. ஏனெனில் அவர்கள் செய்த குற்றம் அவர்கள் மனச்சாட்சிக்கு அற்பக்குற்றமாயிருந்திருக்கலாம். ஆயினும் இது அற்பமாயிருந்தாலும் இதையும் சர்வேசுரன் எம்மாத்திரம் அருவருக்கிறாரென்று அவர்களுக்கு வந்த தண்டனையால் அறியலாம்.

12. **சலோமோன் மண்டபம்:**—இந்த மண்டபம் யூதர் நீங்கலாக மற்றப் புறஜாதியார் தங்கும்படி எருசலேம் பட்டணத்துத் தேவாலயத்தின் ஓர் பாகத்திலே கட்டப்பட்டிருந்தது. இது மற்ற மண்டபங்களை விட அதிக விசாலமாயிருந்ததுமன்றி, இதின் வாசல்தான் அலங்கார வாசலென்று 3-ம் அதி. 2-ம் வசனத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மண்டபம் புறஜாதியாருக்குத் தங்கும் இடமாயிருந்ததினாலே ஞானஸ்நானம் பெற்ற புதுக் கிறீஸ்துவர்களெல்லாரும் பயமில்லாமல் இங்கே வந்து கூடுவார்கள். (கொர்னேலியுஸ்.)

13. இவ்விடத்தில் மற்றவர்களென்கும்போது யூதரல்லாத புறஜாதியாராகிய அஞ்ஞானிகளென்று அர்த்தங்கொள்ளலாம். ஏனெனில் அந்த மண்டபம் புற ஜாதியாருக்காகக்குறிக்கப்பட்ட இடமாயிருந்தது.

ஜனம் அவர்களைக் கொண்டாடுமென்பதில் ஜனம் என்கும்போது யூத ஜனமென்று அர்த்தமாகும்.

14. இவ்விடத்தில் குறிக்கப்படுகிற ஸ்திரீ பூமான்கள் யூதஜாதியாரொழிய புறஜாதியாரல்ல.



இராயப்பர் அவளைநோக்கி: "நீங்கள் இப்படியாக ஆண்டவருடைய இஸ்பிரீத்துவைச் சோதிக்கும்படி ஒருமனப்பட்டதென்ன? உன் புருஷனை அடக்கம்பண்ணினவர்களுடைய காலடிகளை இதோ, வாசற்படியில் பார். உன்னையும் அவர்கள் தூக்கிக்கொண்டு போவார்கள்" என்றார். (அப். 5-9.)

15. அதினாலே இராயப்பர் வரும்போது, அவருடைய நிழலாகிலும் வியாதிக்காரரில் எவன்பேரிலாவது பட்டு, அவர்கள் தங்கள் வியாதிகளினின்று குணமாகும்பொருட்டு அவர்களைக் கட்டில்களிலும், சிறு படுக்கைகளிலுங் கொண்டுவந்து, வீதிகளிலே வைப்பார்கள்.

16. சுற்றுப் பட்டணங்களினின்றும் திரளான ஜனங்கள் பிணியாளிகளையும், அசுத்த அரூபிகளால் உபாதிக்கப்பட்டவர்களையும் எருசலேமுக்குக் கொண்டுவருவார்கள். அவர்கள் எல்லாரும் சௌக்கியம் அடைவார்கள்.

17. அப்பொழுது, பெரிய குருவும் அவனோடிருந்த சதுசேயர் மதத்தாராகிய சகலரும் எழும்பிக் கோப வைராக்கியம் நிறைந்தவர்களாய்,

18. அப்போஸ்தலர்களைப் பிடிப்பித்து, பொதுச் சிறைச்சாலையிலே அவர்களைப் போட்டார்கள்.

19. ஆனால் கர்த்தருடைய தூதன் இரவில் சிறைச்சாலையின் கதவுகளைத் திறந்து, அவர்களை வெளியே அழைத்துவந்து:

20. நீங்கள் போய், தேவாலயத்தில் நின்று இந்தச் சீவ வாக்கியங்கள் யாவையும் ஜனங்களுக்குச் சொல்லுங்கள் என்றார்.

21. அவர்கள் அதைக்கேட்டு, அதிகாலமே தேவாலயத்தில் பிரவேசித்து, உபதேசம் பண்ணினார்கள். அப்படியிருக்க, பெரிய குருவும் அவனோடிருந்தவர்களும் வந்து, ஆலோசனை சங்கத்தையும் இஸ்ராயேல் புத்திரரில் மூப்பர்களெல்லாரையும் கூட்டி வைத்து, அப்போஸ்தலர்களைக் கொண்டுவரும்படி சேவகரைச் சிறைச்சாலைக்கு அனுப்பினார்கள்.

22. சேவகர் போய், சிறைச்சாலையைத் திறக்கவே, அவர்களைக் காணாமல், திரும்பிவந்து அறிவித்ததாவது:

23. சிறைச்சாலை மிகுந்த பத்திரமாய்ப் பூட்டப்பட்டிருக்கிறதையும், காவற்காரர் வாசல்களுக்குமுன் நின்றுகொண்டிருக்கிறதையும் கண்டோம். திறந்தபொழுதோ உள்ளே ஒருவனையும் காணவில்லை என்றார்கள்.

24. இந்த வாக்கியங்களைத் தேவாலயத்தின் சேனைத் தலைவனும் பிரதான அசாரியர்களும் கேட்டு, என்ன நடந்திருக்குமோ என்று அவர்களைக் குறித்து ஐயப்பட்டுக்கொண்டிருந்தார்கள்.

25. அப்பொழுது ஒருவன் வந்து: இதோ, நீங்கள் சிறைச்சாலையில் போட்ட மனிதர் தேவாலயத்தில் நின்று ஜனங்களுக்கு உபதேசித்துக்கொண்டிருக்கிறார்களே என்று அவர்களுக்கு அறிவித்தான்.

26. அப்பொழுது சேனைத்தலைவன் சேவகர்களோடுகூடப் போய், ஜனங்கள் கல்லால் எறிவார்களோவென்று பயமுண்டாயிருந்ததினாலே, பலவந்தமின்றி அவர்களை அழைத்துக்கொண்டு வந்தான்.

27. அப்படியே அவர்களை அழைத்துக்கொண்டுவந்து, சங்கத்துக்கு முன்பாக அவர்களை நிறுத்தினார்கள். அப்பொழுது பெரிய குரு அவர்களை நோக்கி:

15. அர்ச். இராயப்பர் யேசுநாதருடைய ஸ்தானத்திலே திருச்சபைக்குப் பிரத்தியக்ஷ தலைவராயிருந்தபடியினாலே மற்ற அப்போஸ்தலர்களை விட அவர் அதிசயமான புதுமைகளைச் செய்ய வல்லபம் அடைந்திருந்தாரென்று தோன்றுகிறது. அன்றியும் யேசுநாதர் தம்மை விசுவசிக்கிறவர்கள் தாம் செய்ததைவிட அதிக பெரிய அற்புதங்களைச் செய்வார்களென்று (அரு. 14-12ல்) சொன்னது இவ்விடத்தில் வெளியாகிறது.

28. இந்த நாமத்தை முன்னிட்டுப் போதிக்கவேண்டாம் என்று உங்களுக்குப் படித்துப் படித்துக் கட்டளையிட்டோமே. ஆயினும் இதோ, உங்கள் போதனையினால் எருசலேம் பட்டணத்தை நிரப்பி, அந்த மனிதனுடைய இரத்தப்பழியையும் எங்கள்மேல் சுமத்தப்பார்க்கிறீர்களே என்றான். (மத். 17-25.)

29. அதற்கு இராயப்பரும் மற்ற அப்போஸ்தலர்களும் பதில்மொழியாகச் சொன்னதாவது: மனிதர்களுக்குக் கீழ்ப்படிகிறதைவிடச் சர்வேசுரனுக்கல்லோ முக்கியமாய்க் கீழ்ப்படிய வேண்டும்.

30. நீங்கள் மரத்திலே தூக்கிக் கொலைசெய்த யேசுநாதரை நம்முடைய பிதாக்களின் தேவன் உயிர்ப்பித்திருக்கிறார்.

31. இஸ்ராயேல் ஜனத்துக்குப் பச்சாத்தாபத்தையும், பாவ மன்னிப்பையும் தந்தருளும்படி, சர்வேசுரன் அவரை அதிபதியாகவும் இரட்சகராகவும் தமது வலது கரத்தால் உயர்த்தியிருக்கிறார். (அப். 2-32.)

32. நாங்களும், சர்வேசுரனுக்குக் கீழ்ப்படிகிற சகலருக்கும் அவர் தந்தருளின இஸ்பிரீத்துசாந்துவானவரும் இந்தச் சங்கதிகளுக்குச் சாட்சிகளாயிருக்கிறோம் என்றார்கள்.

33. அவர்கள் இதைக்கேட்டு, கோப மூர்க்கங்கொண்டவர்களாய் அவர்களைக் கொலைசெய்யவேண்டும் என்று ஆலோசனைபண்ணினார்கள்.

34. அப்பொழுது சகல ஜனங்களுக்குள்ளும் மகிமைபெற்றிருந்த வேத சாஸ்திரியான கமாலியேல் என்னும் பரிசேயன் சங்கத்தின் நடுவில் எழுந்து நின்று, அப்போஸ்தலர்களைச் சற்று நேரம் வெளியே கொண்டுபோகக் கட்டளையிட்டு, (1 அப். 22-3.)

35. சங்கத்தாரை நோக்கிச் சொன்னதாவது: இஸ்ராயேல் ஜனங்களே, இந்த மனிதர்கள்மட்டில் நீங்கள் செய்யப்போகிறதைக்குறித்து எச்சரிக்கையாயிருங்கள்.

36. ஏனெனில் சில காலத்துக்கு முன்னே தெயோதாஸ் என்பவன் எழும்பி; தன்னை ஏதோ பெரியவன் என்று சொல்லிவந்தான். ஏறக்குறைய நானூறுபேர்கள் வரையில் அவன் பாரிசமானார்கள். அவன் கொலையுண்டுபோகவே, அவனை நம்பியிருந்த யாவரும் சிதறுண்டு, ஒன்றுமில்லாமற்போனார்கள்.

37. அவனுக்குப்பிறகு, ஜனக்கணித நாட்களிலே கலிலேயனான யூதாஸ் என்பவன் எழும்பி, ஜனங்களைத் தன் பாரிசமாய் மடக்கினான். அவனும் மடிந்தான்; யாரார் அவனுக்குச் சார்பாயிருந்தார்களோ, அவர்களெல்லாரும் சிதறிப்போனார்கள்.

34. இந்தக் கமாலியேல் என்பவர் பேர்போன வாய்ச்சாலக சாஸ்திரியாயிருந்ததுந் தவிர அர்ச். சின்னப்பர், முடியப்பர், பர்னபாஸ் முதலானவர்களுக்கு வேத சாஸ்திரம் படிப்பித்த உபாத்தியாயராகவும் இருந்தார். அவர் பிற்காலத்தில் ஞானஸ்நானம் பெற்று, பிரசித்தமாய்ச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, வேதசாட்சியாக மரித்தாரென்று சாஸ்திரிகள் எண்ணுகிறார்கள்.

37. இங்கே சொல்லப்படுகிற குடிக்கணக்கு கர்த்தர் பிறந்த ஏறக்குறைய ஆறும் வருஷத்தில் ரோமானரால் எடுக்கப்பட்டது. ஏனென்றால் எரோதரசன் மகனாகிய அர்க்கலாவுஸ் என்பவன் தன் இராச்சியத்தினின்று பிராஞ்சுதேசத்தின் வியன்னா பட்டணத்துக்குப் பரதேசியாய்த் துரத்தப்பட்டபொழுது அவன் இராச்சியம் ரோமானர்களால் பிடிக்கப்பட்டது. அந்தக் கலாபத்துக்குப்பின் ரோமானர்கள் குடிக்கணக்கு எடுத்தார்களென்றறிக.

38. ஆகையால் இப்பொழுது நான் உங்களுக்குச் சொல்லுகிறது என்னவென்றால்: நீங்கள் இந்த மனிதர்களைத் தொடாமல் விலகி, அவர்கள் பாட்டுக்கு விட்டுவிடுங்கள். இந்த யோசனை அல்லது இந்த அலுவல் மனிதரால் உண்டாயிருந்தால், பிரிந்து அழிந்து போம்.

39. இது சர்வேசுரனால் உண்டாயிருந்தால், நீங்கள் சர்வேசுரனையே எதிர்த்து விரோதிக்கிறவர்களாக எண்ணப்படுவீர்களல்லாதே, இதை அழிக்க உங்களாலே கூடாது என்றான். அவன் சொன்னதை அவர்களும் ஒப்புக்கொண்டார்கள்.

40. ஆகையால் அப்போஸ்தலர்களைக் கூப்பிட்டு, அவர்களை அடிப்பித்து, யேசுநாதருடைய நாமத்தினாலே பரிச்சேதம் பேசாதிருக்கும்படி கட்டளையிட்டு, அவர்களை விடுதலையாக்கினார்கள்.

41. அவர்களோவென்றால் யேசுநாதருடைய நாமத்தைப்பற்றித் தாங்கள் அவமானப்படப் பாத்திரவான்களாக எண்ணப்பட்டதினிமித்தம் சந்தோஷித்துச் சங்கத்தைவிட்டுப் புறப்பட்டுப் போனார்கள். (மத். 5-10.)

42. அன்றியும் அவர்கள் தினந்தோறும் ஓயாமல் தேவாலயத்திலும், வீடுகளிலும் உபதேசித்து, யேசுநாதர் தாமே கிறீஸ்து என்று பிரசங்கித்துவந்தார்கள்.

## 6-ம். அதிகாரம்.

*அப்போஸ்தலர்கள் ஏழு தியாக்கோன்மார்களை ஏற்படுத்தினதும், அவர்களில் தைரியத்தாலும், அற்புதங்களாலும் விளங்கின அர்ச். முடியப்பர்மேல் யூதர் பொய்க்குற்றஞ் சாட்டினதுமாகிய வர்த்தமானங்கள்.*

1. அந்நாட்களிலே சீஷர்களுடைய தொகை பெருகிவருகையில், கிரேக்கர்கள் அநுதின விசாரணையிலே தங்களுடைய விதவைகள் கவனிக்கப்படவில்லையென்று எபிரேயர்மேல் முறைப்பட்டார்கள்.

2. அப்பொழுது பன்னிருவரும் சீஷர்களுடைய கூட்டத்தை ஒருமிக்க வரவழைத்துச் சொன்னதாவது: நாங்கள் தேவ வாக்கியத்தை விட்டு விட்டு, பந்தி விசாரிக்கிறது தகுதியல்ல.

3. ஆகையால் சகோதரரே, இஸ்பிரீத்துசாந்துவினாலும் ஞானத்தினாலும் நிறைந்தவர்களாய் நற்சாட்சியமுடைய ஏழு பேரை உங்களில் பார்த்துத் தெரிந்துகொள்ளுங்கள். அவர்களை இந்த அலுவலுக்கு ஏற்படுத்துவோம்.

4. நாங்களோ ஜெபத்திலும், தேவ வாக்கியத்தைப் பிரசங்கிக்கிற ஊழியத்திலும் விடாமுயற்சியாயிருப்போம் என்றார்கள்.

5. கூடியிருந்த சமஸ்தருக்கும் இந்த வாக்கியம் பிரியமாயிருந்தது. அப்பொழுது விசுவாசத்தாலும் இஸ்பிரீத்து சாந்துவினாலும் நிறைந்தவராகிய முடியப்பரையும், பிலிப்புவையும், புரோக்கோரையும், நிக்கானோரையும், தீமோனையும், பார்மேனாவையும் அந்நியனான அந்தியோக்கியாபுரி நிக்கோலாவையும் தெரிந்துகொண்டு,

1. **கிரேக்கர்கள்** :— யூதேயாதேசத்துக்குப் புறம்பான நாடுகளில் பிறந்து, கிரேக்குப் பாஷை பேசிவந்த யூதர்கள் இவ்விடத்தில் கிரேக்கரென்று சொல்லப்படுகிறார்கள்.

**எபிரேயர்** :— யூதேயா நாட்டிற் பிறந்து அந்நாட்டில் வழங்கிய பாஷையைப்பேசின யூதர்களாம்.

6. அவர்களை அப்போஸ்தலர்கள் முன்பாக நிறுத்தினார்கள். இவர்களோ ஜெபஞ்செய்து, அவர்கள்மேல் கைகளை நீட்டிவைத்தார்கள்.

7. மேலும் ஆண்டவருடைய வாக்கியம் மென்மேலும் பரம்பிற்று. எருசலேமில் சீஷருடைய தொகையும் வெகுவாய்ப் பெருகினது. குருப்பிரசாதிகளிலும் முதலாய் அநேகர் விசுவாசத்துக்குக் கீழ்ப்படிந்தார்கள்.

8. முடியப்பரோவெனில் இஷ்டப்பிரசாதமும், திடனும் நிறைந்தவராய் ஜனங்களுக்குள்ளே அற்புதங்களையும் அதிசயங்களையும் செய்துகொண்டுவருவார்.

9. ஆனால் சுயாதீனம் பெற்றவர்களுடையது என்னப்பட்ட ஜெப ஆலயத்தைச் சேர்ந்தவர்களிலும், சிரேன் பட்டணத்தாரிலும், அலெக்சாந்திரியா பட்டணத்தாரிலும், சிலிசியாவிலும், ஆசியாவிலுமிருந்து வந்தவர்களிலும் சிலர் முடியப்பரோடு தர்க்கஞ்செய்ய எழும்பினார்கள்.

10. ஆகிலும் அவருடைய ஞானத்துக்கும் அவரிடத்தில் பேசின இஸ்பிரீத்துசாந்துவுக்கும் எதிர்த்து நிற்க அவர்களால் கூடாமற்போயிற்று. (லூக். 21-15.)

11. அப்பொழுது அவர்கள்: இவன் மோயீசனுக்கும் சர்வேசுரனுக்கும் விரோதமாய்த் தூஷண வார்த்தைகளைச் சொல்லக்கேட்டோம் என்று சொல்லும்படியான மனிதர்களைக் கபடமாய் ஏற்படுத்தி,

12. இவ்விதமாய் ஜனத்தையும் மூப்பர்களையும் வேதபாரகரையும் மூட்டிவிட்டுக் கூட்டமாய் ஓடிப் பலவந்தமாய் அவரைப்பிடித்து, ஆலோசனை சங்கத்துக்குமுன்பாக இழுத்துக்கொண்டுபோய்விட்டு,

13. பொய்ச்சாட்சிகளையும் கொண்டுவந்து நிறுத்தினார்கள். இவர்கள் சொன்னதேதென்றால்: இந்த மனிதன் பரிசுத்த ஸ்தலத்துக்கும் வேதப்பிரமாணத்துக்கும் விரோதமான வார்த்தைகளை ஓயாமற் பேசுகிறான்.

14. எப்படியெனில் நசரேயனாகிய அந்த யேசு இந்த இடத்தையும் இடித்து, மோயீசன் நமக்குக் கொடுத்த பாரம்பரை முறைமைகளையும் மாற்றுவான் என்று இவன் சொல்லுகிறதைக் கேட்டோம் என்றார்கள்.

15. அப்பொழுது ஆலோசனை சங்கத்தில் உட்கார்ந்திருந்த யாவரும் அவரை உற்றுப்பார்க்கையில், அவருடைய முகம் ஓர் சம்மனசுவின் முகம்போலிருக்கிறதைக் கண்டார்கள்.

---

5-6. திருச்சபையில் வழங்கிவருகிற தியாக்கோன் என்னும் பட்டத்தின் ஆரம்பம் இவ்விடத்தில் காட்டப்படுகிறது. இந்தப் பட்டம் பெற்றவர்கள் துவக்கத்தில் ஆகப்பை என்று சொல்லப்பட்ட அன்பின் விருந்தையும் தேவநற்கருணையையும் ஜனங்களுக்குப் பரிமாறி, மற்றத் தரும உதவிகளையும் ஏழைகளுக்குப் பகிர்ந்து கொடுத்து வந்தார்கள். பிற்காலத்தில் அன்பின் விருந்து நிறுத்தப்பட்டபடியினால், இப்பொழுது தியாக்கோன்மார்கள் ஞானஸ்நானம் கொடுக்கவும், பிரசங்கிக்கவும் தேவநற்கருணையைப் பரிமாறவும் சுதந்தரமுள்ளவர்களாயிருப்பதுமன்றி, குருப்பட்டத்துக்கும் ஏற்படுத்தப்படுகிறார்கள்.

அந்நியனான என்னும் இந்த வார்த்தைக்கு அர்த்தம் அஞ்ஞானியாயிருந்து யூத வேதத்திலுட்பட்டவன் என்று அறிக.

9. சுயாதீனம் பெற்றவர்களுடையது என்னப்பட்ட ஜெப ஆலயம். கர்த்தரவதாரத்துக்குமுன் 63-ம் வருஷத்தில் பொம்ப்பேயு என்பவனால் ரோமாபுரிக்குச் சிறையாகக் கொண்டுபோகப்பட்ட யூதர்கள் கொஞ்சக்காலத்துக்குப்பின் விடுதலையானார்கள். இவர்களுக்குள் சிலர் எருசலேம் நகரில் குடியேறி, தங்களுக்குத் தண்டாய் ஒரு ஜெப ஆலயம் கட்டியிருந்தார்கள். இந்த வகை யூதர்கள்தான் இங்கே சுயாதீனம் பெற்றவர்களென்று சொல்லப்படுகிறார்கள். (கொர்னேலியுஸ்).

## 7-ம். அதிகாரம்.

*அர்ச். முடியப்பர் ஆலோசனைச் சங்கத்தின் முன்பாகச் செய்த நெடும் பிரசங்கமும், அவர் கல்லால் எறிந்து கொல்லப்பட்டதும்.*

1. அப்பொழுது பெரியகுரு அவரை நோக்கி: காரியம் இப்படித்தானே என்றான்.

2. அதற்கு அவர் சொன்னதேதெனில்: சகோதரர்களே, பிதாக்களே, கேளுங்கள்: நம்முடைய பிதாவாகிய அபிரகாம் காரானூரில் வசிக்குமுன்னே மெசோப்பொத்தாமியா நாட்டிலிருக்குங் காலத்தில், மகிமைப் பிரதாபக் கடவுள் அவருக்குத் தரிசனையாகி:

3. நீ உன் தேசத்தையும் உன் பந்துஜனத்தையும் விட்டுப் புறப்பட்டு, நாம் உனக்குக் காண்பிக்கும் தேசத்துக்கு வா என்று அவருக்குத் திருவுளம்பற்றினார். (ஆதி. 12-1.)

4. அப்பொழுது அவர் கல்தேயருடைய தேசத்தினின்று புறப்பட்டுக் காரானூரில் வந்து வாசம்பண்ணினார். மேலும் அவருடைய தந்தை இறந்தபின்பு, அவரை அவ்விடத்தினின்று புறப்பட்டு, நீங்கள் இப்பொழுது குடியிருக்கிற இந்தத் தேசத்திற்குப் பெயர்ந்து வரும்படி செய்தார்.

5. இதிலே அவருக்கு ஒரு காணியாட்சியையும், ஒரு காலடி நிலத்தையு முதலாய்த் தராதிருந்தார். ஆயினும் அவருக்குப் புத்திர சந்தான மில்லாதிருக்கையிலே அவருக்கும், அவருக்குப்பின் அவருடைய சந்ததியாருக்கும் இந்தத் தேசத்தைச் சுதந்தரமாய்த் தருவதாக அவருக்கு வாக்குத்தத்தம் பண்ணினார்.

6. எப்படியெனில் சர்வேசுரன் அவரோடு பேசி: அவருடைய சந்ததியார் அந்நிய தேசத்தில் குடியிருப்பார்களென்றும், அந்தத் தேசத்தார் அவர்களை அடிமைப்படுத்தி, நானூறு வருஷமாகத் துன்பப்படுத்துவார்களென்றும் அவருக்குத் திருவுளம்பற்றினார். (ஆதி. 15-13.)

7. மேலும் அவர்களை அடிமைப் படுத்தும் புற ஜாதியாரை நாம் நியாயந் தீர்ப்போமென்றும் அதன்பிறகு அவர்கள் புறப்பட்டு வந்து, இவ்விடத்தில் நம்மைச் சேவிப்பார்களென்றும் ஆண்டவர் அருளிச்செய்தார்.

8. விருத்தசேதன உடன்படிக்கையும் அவருக்குக் கொடுத்தருளினார். அப்படியே அவர் ஈசாக்கைப் பெற்று, எட்டாம் நாளிலே அவருக்கு விருத்தசேதனம் பண்ணினார். ஈசாக்கு யாக்கோப்பையும், யாக்கோபு பன்னிரண்டு பிதாப்பிதாக்களையும் பெற்று, விருத்தசேதனஞ்செய்தார்கள்.

9. பிதாப்பிதாக்களோவெனில் பொறாமைப்பட்டு, யோசேப்பை எஜிப்துத் தேசத்திற்குக் (கொண்டு போகும்படி) விற்றுப் போட்டார்கள். ஆகிலும் சர்வேசுரன் அவருடனே இருந்து, (ஆதி. 37-28.)

10. அவருடைய சகல உபத்திரவங்களினின்றும் அவரை விடுவித்து, எஜிப்துத் தேசத்து அரசனாகிய பாரவோனுடைய சமுகத்தில் அவருக்கு அருளையும் ஞானத்தையும் தந்தருளினார். அரசனே எஜிப்துத் தேசத்தின்மேலும், தன் வீடு அனைத்தின்மேலும் அவரை அதிகாரியாக ஏற்படுத்தினான். (ஆதி. 41-37.)

11. பின்பு எஜிப்து, கானான் என்னுந் தேசங்களெங்கும் பஞ்சமும், மிகுந்த நெருக்கிடையும் உண்டாகவே, நம்முடைய பிதாக்களுக்கு ஆகாரவர்க்கங்கள் கிடையாமற்போயிற்று.

12. அப்பொழுது எஜிப்துத் தேசத்திலே தானியம் உண்டென்று யாக்கோபு கேள்விப்பட்டு, நம்முடைய பிதாக்களை முதல் விசை அனுப்பினார்.

13. இரண்டாம் விசையோவெனில் யோசேப்பு தன் சகோதரரால் அறியப்பட்டார்; அவருடைய கோத்திரமும் பாரவோனுக்குத் தெரியலாயிற்று.

14. அப்பொழுது யோசேப்பு ஆட்களை அனுப்பி தன் பிதாவாகிய யாக்கோபையும், எழுபத்தைந்து பேராகிய தன் பந்து ஜனங்கள் யாவரையும் வருவித்தார்.

15. யாக்கோபும் எஜிப்துத் தேசத்துக்குப் புறப்பட்டுவந்து, அதிலே அவரும் நம்முடைய பிதாக்களும் மரித்து, (ஆதி. 46-5; 49-32.)

16. அங்கிருந்து சிக்கேம் என்னும் ஊருக்குக் கொண்டுவரப்பட்டு, சிகேமின் குமாரனாகிய எமோருடைய மக்களிடத்தில் ரொக்கக் கிரயத்துக்கு அபிரகாம் என்பவர் வாங்கியிருந்த கல்லறையில் வைக்கப்பட்டார்கள். (ஆதி. 23-16; யோசு. 24-32.)

17. ஆனால் சர்வேசுரன் அபிரகாம் என்பவருக்கு ஆணையிட்டுச் செய்தருளின வாக்குத்தத்தம் நிறைவேறவேண்டிய காலஞ் சமீபித்தபோது,

18. யோசேப்பை அறியாத வேறொரு அரசன் எஜிப்தில் எழும்பின காலமளவும், ஜனங்கள் எஜிப்தில் பலுகிப் பெருகிவந்தார்கள். (யாத்தி. 1-7.)

19. அவன் நம்முடைய கோத்திரத்தாரை வஞ்சித்து, நம்முடைய பிதாக்கள் தங்கள் குழந்தைகளை உயிர்பிழைக்கவொட்டாமல் அவைகளை வெளியில் எறிந்துவிடும்படி அவர்களை உபத்திரவப்படுத்தினான்.

20. அக்காலத்திலே மோயீசன் பிறந்து, சர்வேசுரனுக்குப் பிரியமுள்ளவராயிருந்து, மூன்றுமாதமளவும் தன் தகப்பன் வீட்டிலே வளர்க்கப்பட்டார். (யாத். 2-2; எபி. 11-23.)

21. பின்பு அவர் வெளியில் எறியப்படவே, அவரைப் பாரவோன் குமாத்தி எடுத்துத் தனக்கு அவரைப் பிள்ளையாக வளர்த்தாள்.

22. ஆதலால் மோயீசன் எஜிப்தாருடைய சகல ஞானத்திலும் படிப்பிக்கப்பட்டுத் தன் வார்த்தைகளிலும் செய்கைகளிலும் வல்லவராயிருந்தார்.

23. அவருக்கு நாற்பது வயதான போது தன் சகோதரராகிய இஸ்ராயேல் மக்களைப் போய்ப் பார்க்கவேண்டுமென்று அவருக்கு மனதில் ஆசையுண்டாயிற்று.

24. அப்பொழுது (அவர்களில்) ஒருவன் அநீத வாதைப்படுகிறதைக் கண்டு, அவனைக் காப்பாற்றி, எஜிப்தானை வெட்டி, துன்பப்பட்டவனுக்குச் சனுவாகப் பழிவாங்கினார். (யாத்தி. 2-12.)

25. அப்பொழுது தன்னுடைய கையினாலே சர்வேசுரன் தங்களுக்கு இரட்சணியம் கொடுப்பாரென்பதைத் தன்னுடைய சகோதரர் அறிந்துகொள்வார்களென்று அவர் நினைத்தார். அவர்களோ அதை அறிந்துகொள்ளவில்லை.

26. மறுநாள் அவர்களில் (இரண்டு பேர்) சண்டை செய்துகொண்டிருக்கையில் அவர்களுக்கு அவர் எதிர்ப்பட்டு: மனிதரே, நீங்கள் சகோதரராயிருக்கிறீர்கள். ஒருவருக்கொருவர் ஏன் தீங்கு செய்கிறீர்கள் என்று சொல்லி, அவர்களைச் சமாதானப்படுத்தப் பார்த்தார்.

20. சர்வேசுரனுக்குப் பிரியமுள்ளவராயிருந்து என்கிற இந்தவாக்கியம் மூலபாஷைகளில் சர்வேசுரனுடைய கண்களுக்குச் சவுந்திரியமுள்ளவராயிருந்தாரென்று எழுதப்பட்டிருக்கிறது. (கிராம்போன்.)

27. தன் பிறனுக்கு அநியாயஞ் செய்தவன் அவனைப் பிடித்துத் தள்ளி: எங்கள்மேல் உன்னைத் தலைவனாகவும், நடுவனாகவும் ஏற்படுத்தினவன் யார்?

28. நேற்று நீ எஜிப்தானைக் கொன்றதுபோல, என்னையும் கொன்றுபோடப்பார்க்கிறாயோ என்றான்.

29. மோயீசனோவெனில் இந்த வார்த்தையின் நிமித்தம் ஓடிப்போய், மாதியான் நாட்டில் பரதேசியாய்ச் சஞ்சரித்து, அங்கே இரண்டு புத்திரரைப் பெற்றார்.

30. மேலும் நாற்பது வருஷஞ் சென்றபின்பு சீனாய் மலையின் வனாந்தரத்திலே எரிகிற முட்செடியின் அக்கினிச் சுவாலையிலே ஒரு தேவதூதன் அவருக்குத் தரிசனையானார். (யாத். 3-2.)

31. மோயீசனோ அந்தக் காட்சியைக் கண்டு அதிசயித்து, அதை உற்றுப் பார்க்கும்படி நெருங்கிப் போகையில்:

32. நாமே உன் பிதாக்களுடைய தேவன்; அபிரகாமின் தேவன், ஈசாக்கின் தேவன், யாக்கோப்பின் தேவன் என்று ஆண்டவர் சொல்லுகிற சத்தம் அவருக்குண்டாயிற்று. ஆதலால் மோயீசன் நடுநடுங்கி, உற்றுப்பார்க்கத் துணியாதிருந்தார்.

33. அப்பொழுது ஆண்டவர் அவரை நோக்கி: உன் பாதரட்சைகளைக் கழற்றிப்போடு; ஏனெனில் நீ நிற்கிற ஸ்தலம் பரிசுத்த ஸ்தலமாயிருக்கின்றது.

34. எஜிப்துத் தேசத்திலிருக்கிற நம்முடைய பிரஜைகளின் துன்பத்தைக் கண்கொண்டு பார்த்தோம்; அவர்களுடைய பெருமூச்சையும் கேட்டோம்; அவர்களை இரட்சிக்கவும் இறங்கி வந்திருக்கிறோம். ஆகையால் இப்பொழுதே வா, உன்னை எஜிப்துத் தேசத்துக்கு அனுப்புவோம் என்றார்.

35. உன்னைத் தலைவனாகவும் நடுவனாகவும் ஏற்படுத்தினவன் யார் என்று அவர்கள் தள்ளிவிட்ட அந்த மோயீசனைத்தானே, சர்வேசுரன் முட்செடியில் அவருக்குத் தரிசனையான தேவதூதனுடைய கையால் தலைவனாகவும், இரட்சகனாகவும் அனுப்பினார்.

36. இவரே அவர்களை வெளியேற்றி, எஜிப்துத் தேசத்திலும், செங்கடலிலும் நாற்பது வருஷமாய்க் கானகத்திலும் அற்புத அதிசயங்களைச் செய்து அவர்களைக் கூட்டிக்கொண்டு போனவர். (யாத்தி. 7-17.)

37. இஸ்ராயேல் புத்திரரை நோக்கி: உங்கள் சகோதரர்களுக்குள்ளே என்னைப்போல ஒரு தீர்க்கதரிசியை உங்களுக்குச் சர்வேசுரன் எழுப்புவார்; அவருக்குச் செவிகொடுப்பீர்களாக என்று வசனித்தவரும் இந்த மோயீசனே. (உபா. 18- 5.)

38. சீனாய் மலையில் தம்முடனே பேசின தேவதூதனோடும், கானகத்தில் நம்முடைய பிதாக்களோடும் சபை நடுவில் இருந்தவரும், நமக்குக் கொடுக்கும்படி சீவிய வாக்கியங்களைக் கைக்கொண்டவரும் இவரே. (யாத். 19-3.)

39. இவருக்கு நம்முடைய பிதாக்கள் கீழ்ப்படிய மனமில்லாமல் இவரை வெறுத்து, தங்கள் இருதயங்களால் எஜிப்துக்குத் திரும்பி,

40. ஆரோனை நோக்கி: எங்களுக்கு முன் நடக்கும்படி தேவர்களை எங்களுக்கு உண்டாக்கித் தாரும்; எஜிப்துத் தேசத்திலிருந்து எங்களை அழைத்துக் கொண்டுவந்த அந்த மோயீசனுக்கு என்ன சம்பவித்ததோ அறியோம் என்றார்கள். (யாத்தி. 32-1.)

---

39. இருதயங்களால் எஜிப்துக்குத் திரும்பி என்பதற்கு எஜிப்துத் தேசத்தின்மேல் தங்கள் ஆசைப்பற்றுதல்களை வைத்து என்பது கருத்து.

41. மேலும் அந்நாட்களிலே அவர்கள் ஓர் கன்றுக் குட்டியை உண்டாக்கி, அந்த விக்கிரகத்துக்குப் பலியிட்டு, தங்கள் கைவேலைப்பாட்டின்மேல் சந்தோஷித்தார்கள்.

42. ஆகையால் சர்வேசுரன் அவர்களைவிட்டு விலகி, அவர்களை வான இராணுவத்திற்கு அடிமைகளாக்கினார். அப்படியே தீர்க்கதரிசிகளின் ஆகமத்தில்: இஸ்ராயேல் வீட்டாரே, வனாந்தரத்தில் நாற்பது வருஷமாய் எனக்குப் பலிபூசைகளையும் காணிக்கைகளையும் ஒப்புக் கொடுத்தீர்களோ என்றும், (ஆமோஸ். 5-25.)

43. ஆராதிக்கும்படி நீங்கள் செய்த உருவங்களாகிய மோலோக்குடைய கூடாரத்தையும், இரம்பாம் என்னும் உங்கள் நட்சத்திரத் தெய்வத்தையும் சுமந்துகொண்டு போனீர்களே; ஆகையால் உங்களைப் பபிலோனுக்கு அப்பால் பெயர்ந்து போகச் செய்வேன் என்றும் எழுதியிருக்கிறது.

44. சர்வேசுரன் மோயீசனோடு பேசி, அவர் கண்ட வடிவாய் ஓர் சாட்சியக் கூடாரம் செய்யக் கட்டளையிட்டு, நம்முடைய பிதாக்களுக்கு ஏற்படுத்தியது போல, அப்படிப்பட்ட கூடாரம் வனாந்தரத்தில் அவர்களோடு கூட இருந்தது. (யாத்தி. 25-40.)

45. அதை யோசுவேயுடனேகூட நம்முடைய பிதாக்கள் எடுத்து, சர்வேசுரன் நம்முடைய பிதாக்களுக்கு முன்பாகத் துரத்திவிட்ட புறஜாதியாருடைய தேசத்திலே கொண்டுவந்து, தாவீதின் காலம்வரையில் வைத்திருந்தார்கள். (யோசு. 3-14. எபி. 8-9).

46. இவர் சர்வேசுரனுடைய சந்நிதியில் கிருபையடைந்து, யாக்கோபின் தேவனுக்கு ஒரு வாசஸ்தலத்தை உண்டுபண்ண வேண்டுமென்று மன்றாடினார். (1 அர. 16-13; சங். 131-5.)

47. சலோமோனோவெனில் அவருக்கு ஓர் ஆலயத்தைக் கட்டினார். (3 அர. 6-1.)

48. ஆகிலும் உன்னதமானவர் கைவேலைப்பாடான ஆலயங்களில் வசிக்கிறதில்லை. (அப். 17-24; 3 அர. 8-27.)

49. இதற்கொத்தபடி: வானம் எனக்குச் சிம்மாசனம், பூமியோ எனக்குப் பாதப்படி, எனக்கு என்ன ஆலயத்தைக் கட்டுவீர்கள்? நான் தங்குவதற்கு ஸ்தலம் ஏது?

---

42-43. இவ்வசனங்களுக்கு அர்த்தமேதெனில்: நீங்கள் சர்வேசுரனாகிய நமக்குச் செய்யவேண்டிய ஆராதனையை விட்டுவிட்டு, உங்களிஷ்டப்படி விக்கிரகங்களைச் செய்து அவைகளை ஆராதித்ததினால், நாம் உங்களைப் பபிலோன் இராஜாவுக்குக் கையளிப்போம். அவன் உங்களை அடிமைகளாகத் தன் தேசத்துக்குக் கொண்டுபோக, அத்தேசத்தார் வணங்கிவரும் நட்சத்திரங்களை நீங்களும் வணங்குவீர்களென்று ஆமோஸ் தீர்க்கதரிசி யாகமம் 5-ம் அதி. 25-ம் வசனத்தில் கர்த்தர் திருவுளம்பற்றினபடி அவர்களுக்குச் சம்பவித்ததென்றர்த்தமாம்.

48-49-50. எந்த எல்லையிலும் மட்டிலும் அடங்காமல் சர்வவியாபகமாயிருக்கிற சர்வேசுரன் மனிதர் கையால் கட்டப்பட்ட ஆலயத்திலாவது மற்றெந்த வாசஸ்தலத்திலாவது மோட்சத்திலு முதலாய் அடங்கினவரல்லவென்பது சத்தியம். என்றாலும் அவர் மோட்சத்திலே தம்மைச் சம்மனசுக்களுக்கும் அர்ச்சியசிஷ்டவர்களுக்கும் பிரத்தியக்ஷமாகக் காண்பிக்கிறபடியால், மோட்சமானது தேவஸ்தலமென்றும், சர்வேசுரனுடைய வாசஸ்தலமென்றுஞ் சொல்லப்படுகிறது. அவ்விதமே இவ்வுலகத்திலும் சர்வேசுரன் தமக்குக் கிறீஸ்துவர்கள் பலிபூசை ஆராதனை செய்யவும், தம்மை நோக்கிப் பிரார்த்திக்கவும் கோவில்களைத் தமக்கு யோக்கிய ஸ்தலமாகக் குறித்திருக்கிறார். இதைப்பற்றியே வேதத்தில் கோவில்களைத் தேவாலயமென்றும், சர்வேசுரனுடைய வீடென்றுஞ் சொல்லியிருக்கிறதறிவோம். யேசு



"அவர்கள் முடியப்பனைக் கல்லால் எறியும்போது, அவர் ஆண்டவராகிய யேசுவே! என்னுத்துமத்தை ஏற்றுக்கொள்ளும் என்று மன்றாடி, முழங்காலில் நின்று உரத்த சத்தமாய் : ஆண்டவரே ! இந்தப் பாவத்தை இவர்கள் மேல் சுமத்தாதேயும் என்றார்."

(அப். 7. 58-59.)

50. இவைகள் எல்லாவற்றையும் என் கரங்கள் செய்யவில்லையோ என்று கர்த்தர் சொல்லுகிறார் என்று தீர்க்கதரிசியானவர் உரைத்திருக்கிறாரல்லவோ? (இசை. 66-1.)

51. திமிர்க் கழுத்தும், விருத்தசேதனப்படாத இருதயங்களும், செவிகளுமுடையவர்களே, நீங்கள் இஸ்பிரீத்துசாந்துவை எப்பொழுதும் எதிர்க்கிறீர்கள். உங்கள் பிதாக்கள் எப்படியோ, அப்படியே நீங்களும் செய்கிறீர்கள்.

52. தீர்க்கதரிசிகளில் யாரை உங்கள் பிதாக்கள் துன்பப் படுத்தாதிருந்தார்கள்? நீதிபரருடைய வருகையை முன்னறிவித்தவர்களையும் கொலைசெய்தார்கள். இப்பொழுது நீங்கள் அவருக்குச் சதிகாரரும், கொலை பாதகருமானீர்கள். (மத். 23-24.)

53. தேவதூதர் வழியாக நீங்கள் வேதப் பிரமாணத்தைப் பெற்றிருந்தும், அதை அநுசரியாமற்போனீர்கள் என்றார். (கலாத். 3-13.)

54. அவர்கள் இவைகளைக் கேட்கையில் கோபாவேஷம் அவர்கள் மனதைப் பிளக்க, அவரைப் பார்த்துப் பல்லை நெறுநெறெனக் கடித்துக்கொண்டிருந்தார்கள்.

55. அவரோ, இஸ்பிரீத்துசாந்துவினால் நிறையப்பட்டவராய் வானத்தை அண்ணாந்து பார்த்து: சர்வேசுரனுடைய மகிமையையும், சர்வேசுரனுடைய வலது பாரிசத்திலே யேசுநாதர் நிற்கிறதையும் கண்டு: இதோ, பரமண்டலம் திறந்திருக்கிறதையும் மனுமகன் சர்வேசுரனுடைய வலது பாரிசத்திலே நிற்கிறதையும் காண்கிறேன் என்றார்.

56. அப்பொழுது அவர்கள் உரத்த சத்தமாய்க் கூப்பிட்டுத் தங்கள் செவிகளை மூடிக்கொண்டு, ஒருமிக்க அவர்மேல் பாய்ந்து,

57. அவரைப் பட்டணத்துக்குப் புறம்பே தள்ளிக்கொண்டுபோய்க் கல்லால் எறிந்தார்கள். அப்பொழுது சாட்சிகள் தங்கள் வஸ்திரங்களைக் கழற்றிச் சவுலென்னப்பட்ட ஓர் வாலிபனுடைய பாதத்தினருகே வைத்தார்கள்.

58. அப்படி அவர்கள் முடியப்பரைக் கல்லால் எறியும்போது, அவர்: ஆண்டவராகிய யேசுவே, என்னாத்துமத்தை ஏற்றுக்கொள்ளும் என்று மன்றாடி,

59. முழங்காலில் நின்று உரத்த சத்தமாய்: ஆண்டவரே, இந்தப் பாவத்தை இவர்கள்மேல் சுமத்தாதேயும் என்றார். இப்படிச் சொன்னவுடனே ஆண்டவரிடத்தில் மரண நித்திரையானார். சவுலோவென்றால் அவர் கொலையுண்பதற்குச் சம்மதித்திருந்தார்.

## 8-ம். அதிகாரம்.

சவுல் என்பவர் திருச்சபையை உபத்திரவப் படுத்தினதும், மாயவித்தைக்காரனான சீமோனை அர்ச். இராயப்பர் கண்டித்ததும், காந்தாசி இராணியின் அண்ணகன் ஞானஸ்நானம் பெற்றதுமாகிய விசேஷங்கள்.

1. அன்றியும் அத்தினமே எருசலேமிலுள்ள திருச்சபைக்கு விரோதமாய்ப் பெருங்கலகம் உண்டாயிற்று. ஆதலால் அப்போஸ்தலர்கள் தவிர மற்றெல்லாரும் யூதேயா, சமாரியா என்னும் நாடுகளில் சிதறிப்போனார்கள்.

நாதர்சுவாமி தேவ சுபாவத்தோடு மனுஷ சுபாவமுடையவராகையால் தேவனாகியமட்டும் அவர் எங்கும் வியாபகராயிருக்கிறார். மனுஷனாகியமட்டும் மோட்சத்திலும் தேவநற்கருணையிலும் இருக்கிறார் என்பது சத்தியம்.

59. சவுல் என்ற இவரே பேர்போன அப்போஸ்தலராகிய அர்ச். சின்னப்பர். இவர் மனந்திரும்பின வரலாற்றைப் பின்வரும் 9-ம் அதிகாரத்தில் காண்க.

2. அப்படியிருந்தும், பயபக்தியுள்ள மனிதர்கள் முடியப்பனை எடுத்து அடக்கஞ்செய்து, அவருக்காக மிகுந்த துக்கங்கொண்டாடினார்கள்.

3. சவுல் என்பவர் வீடுகள்தோறும் நுழைந்து, ஸ்திரீ பூமான்களை இழுத்துக்கொண்டுபோய்ச் சிறைச்சாலையில் போடுவித்து, திருச்சபையைப் பாழாக்கிவந்தார்.

4. ஆனால் சிதறிப் போனவர்கள் அங்கங்கே திரிந்து, சர்வேசுரனுடைய வாக்கியத்தைச் சுவிசேஷித்துக்கொண்டுவந்தார்கள்.

5. அப்பொழுது பிலிப்பு என்பவர் சமாரியாவின் ஒரு பட்டணத்துக்குப் போய், அதிலுள்ளவர்களுக்குக் கிறீஸ்துநாதரைப் பிரசங்கித்தார்.

6. ஜனங்கள் பிலிப்புவினால் சொல்லப்பட்டவைகளை ஒருமனமாய்க் கேட்கவும், அவர் செய்த அற்புதங்களைக் காணவும் மிகவும் சிந்தனையாயிருந்தார்கள்.

7. ஏனெனில் அவர்களுக்குள் அநேகரிடத்தில் ஆவேஷமாயிருந்த அசுத்த அரூபிகள் உரத்த சத்தமாய்க் கதறிக்கொண்டு, அவர்களைவிட்டுப் புறப்பட்டன.

8. அநேக திமிர்வாதக்காரரும் முடவரும் சௌக்கியப்பட்டார்கள்.

9. ஆதலால் அந்தப் பட்டணத்தில் மிகுந்த சந்தோஷம் உண்டாயிற்று. அப்படியிருக்க, அந்தப் பட்டணத்தில் முன்னே மாயக்காரனாயிருந்த சீமோன் என்ற ஓர் மனிதன் சமாரியா நாட்டு ஜனத்தையும் மயக்கித் தன்னையும் ஏதோ பெரியவனென்று சொல்லிக்கொண்டிருந்தான்.

10. சிறியோர் முதல் பெரியோர்மட்டும் எல்லாரும் அவனுக்குக் காதுகொடுத்து: பெரிதென்னப்படுகிற தெய்வவல்லமை இவன்தான் என்று சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

11. அவன் நெடுங்காலமாய்த் தன் மாய்கை வித்தைகளால் அவர்களை மயக்கினபடியால், அவர்கள் அவனை மதித்துவந்தார்கள்.

12. ஆனால் பிலிப்பென்பவர் சர்வேசுரனுடைய இராச்சியத்தைக் குறித்துப் பிரசங்கித்ததை அவர்கள் விசுவசித்தபோது, ஸ்திரீகளும் பூமான்களும் யேசுக்கிறீஸ்துநாதருடைய நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றார்கள்.

13. அப்போது சீமோன் என்பவனும் விசுவசித்து, ஞானஸ்நானம்பெற்று, பிலிப்பென்பவரைப் பின்பற்றி, அவரால் செய்யப்படுகிற அதிசயங்களையும் மிகவும் பெரிதான அற்புதங்களையும் கண்டு, பிரமித்து ஆச்சரியப்பட்டான்.

14. சமாரியர் சர்வேசுரனுடைய வாக்கியத்தைக் கைப்பற்றிக்கொண்டார்களென்று எருசலேமிலிருந்த அப்போஸ்தலர்கள் கேள்விப்பட்டு, இராயப்பரையும் அருளப்பரையும் அவர்களிடத்தில் அனுப்பினார்கள்.

15. இவர்கள் வந்து, இஸ்பிரீத்துசாந்துவை அவர்கள் பெற்றுக்கொள்ளும்படி அவர்களுக்காக வேண்டிக்கொண்டார்கள்.

16. ஏனெனில் அவர்களுக்குள் ஒருவனிடத்திலாவது அவர் இன்னும் இறங்கிவராதிருந்தார். ஆனால் அவர்கள் ஆண்டவராகிய யேசுநாதருடைய நாமத்தினாலே ஞானஸ்நானம் மாத்திரம் பெற்றிருந்தார்கள்.

17. அப்பொழுது அவர்கள் தங்கள் கரங்களை நீட்டி இவர்கள்மேல் வைக்கவே, இவர்கள் இஸ்பிரீத்துசாந்துவைப் பெற்றுக்கொண்டார்கள்.

18. ஆகையால் அப்போஸ்தலருடைய கர நீட்டுதலினாலே இஸ்பிரீத்துசாந்து கொடுக்கப்படுகிறதைச் சீமோன் என்பவன் கண்டு அவர்களுக்குப் பணத்தைக் கொடுத்து :

19. நான் எவன் மேல் கரம் நீட்டுவேனோ, அவன் இஸ்பிரீத்துசாந்துவைப் பெற்றுக்கொள்ளும்படி இந்த வல்லமையை எனக்குத் தாருங்கள் என்றான். அப்பொழுது இராயப்பர் அவனை நோக்கி :

20. சர்வேசுரனுடைய வரத்தைப் பணத்தால் கைக்கொள்ளலாமென்று நீ எண்ணினபடியால், உன்னுடைய பணம் உன்னோடுகூட நாசமாய்ப்போக!

21. இந்த விஷயத்திலே உனக்குப் பங்கும், பாகமும் கிடையாது. ஏனெனில் உன்னுடைய இருதயம் சர்வேசுரனுடைய சமுகத்திலே நேர்மையானதல்ல.

22. ஆகையால் உன்னுடைய இந்தத் துர்க்குணத்தை விட்டு, நீ மனஸ்தாபப்பட்டுச் சர்வேசுரனை மன்றாடு. உன் இருதயத்திலுள்ள இந்தச் சிந்[illegible] ஒரு வேளை உனக்கு மன்னிக்கப்படலாம்.

23. ஏனெனில் நீ கசப்பான பிச்சிலும் பாவாக்கிரமப் பந்தனத்திலும் இருக்கக் காண்கிறேன் என்றார்.

24. அதற்குச் சீமோன் பதில் மொழியாக : நீங்கள் சொன்னவைகளில் ஒன்றும் என்மேல் வராதபடி, நீங்களே ஆண்டவரிடத்தில் எனக்காகப் பிரார்த்தித்துக்கொள்ளுங்கள் என்றான்.

25. அவர்களோவெனில், ஆண்டவருடைய வாக்கியத்துக்குச் சாட்சியும் கொடுத்து, அதைப் பிரசங்கித்த பின்பு, சமாரியா நாட்டின் பற்பல இடங்களில் சுவிசேஷத்தைப் பிரசங்கித்துக்கொண்டு எருசலேமுக்குத் திரும்பிப் போனார்கள்.

26. அப்படியிருக்க, ஆண்டவருடைய தூதன் பிலிப்பு என்பவரோடு பேசி : நீ எழுந்திருந்து, தென் மார்க்கமாய் எருசலேமிலிருந்து காசாப் பட்டணத்துக்கு இறங்குகிற பாதைக்குப் போ ; அது வனாந்தரமாயிருக்கிறது என்றார்.

17. இவ்விடத்தில் அறியவேண்டியதாவது : 1-வது ஞானஸ்நானம் பெற்றவர்களெல்லோரும் கூடிய சீக்கிரத்தில் உறுதிபூசுதலையும் பெற்றுக்கொள்ள வேண்டியதவசியம். அப்படிக்கில்லாதிருந்தால் அர்ச். இராயப்பரும் அருளப்பரும் எருசலேமிலிருந்து சமாரியாவுக்குப் போயிருக்கமாட்டார்கள். 2.வது உறுதிபூசுதலை அப்போஸ்தலர் கொடுத்துவந்ததுபோல இக்காலத்தில் அவர்களிடமாயிருக்கிற மேற்றிராணிமார்கள் மாத்திரஞ் சாதாரணமாய்க் கொடுக்கக்கூடும். ஏனெனில் இவ்வாகமம் 6-ம் அதி. 5-ம் வசனத்தில் கண்டிருக்கிறபடி பிலிப்பென்பவருக்கு அப்போஸ்தலப்பட்டமாவது மேற்றிராணப்பட்டமாவது இல்லாததினால் அவர் சமாரியர்களுக்கு ஞானஸ்நானங் கொடுத்திருந்தும் உறுதிபூசுதலைக் கொடுக்கக் கூடாதவராய் இருந்தாரென்று தெரியவருகிறது.

24. இதிலே சீமோனென்ற மாயவித்தைக்காரன் அப்போஸ்தலர்களை நோக்கித் தனக்காக மன்றாடவேணுமென்று கேட்டுக்கொண்டாலும், அனனியா, சாப்பிராள் என்பவர்களுக்கு நேரிட்டதுபோல, தனக்குஞ் சடுதிமரணம் வருமோ என்று அஞ்சிக் கேட்டதேயன்றி, எதார்த்தமாய் அவன் துர்க்குணத்தை விட்டு மனந்திரும்பினவனல்ல. எப்படியெனில் அது முதல் அவன் திருச்சபையை அழிக்க முயன்று மாய்கை வித்தைகளைச் செய்துவந்ததுந்தவிர உரோமாபுரிமட்டும் அர்ச். இராயப்பரைப் பின்தொடர்ந்துபோய் அங்குள்ள அஞ்ஞானிகள் அவருடைய பிரசங்கத்தைக் கேட்டு, விசுவசியாதபடிக்கு அவருக்கு விரோதமாய் எதிர்த்து நின்றான். கடைசியாய் ஒருநாள் அவன் பரலோகத்துக்குப் போவதாகச் சொல்லி, ஆகாசத்தில் உயர்ந்து போகும்போது, அர்ச். இராயப்பர் சுவாமியை நோக்கிப் பிரார்த்திக்க, அவனைத் தூக்கிக்கொண்டுபோன பசாசுகள் அவனைக் கைவிட்டுவிடவே, அவன் கீழே விழுந்து, இருகாலும் முறிந்து அவலமாய்ச் செத்தான்.

27. அப்படியே அவர் எழுந்துபோனூர். அப்பொழுது இதோ, காந்தாகி யென்னும் எத்தியோப்பிய இராக்கினியின் வல்லப அண்ணகனும், அவளுடைய கஜனுக்களுக்கெல்லாம் அதிகாரியுமான எத்தியோப்பியன் ஒருவன் எருசலேமில் ஆராதிக்க வந்திருந்தான்.

28. அவன் தன் இரதத்தில் உட்கார்ந்து, திரும்பிப் போகையில் இசையாஸ் தீர்க்கதரிசியின் ஆகமத்தை வாசித்துக்கொண்டுபோனுன்.

29. அப்பொழுது இஸ்பிரீத்துவானவர் பிலிப்புவை நோக்கி: நீ நெருங்கி, அந்த இரதத்தின்கிட்டச் சேர்ந்துபோ என்றூர்.

30. பிலிப்புவும் ஓடிச்சேர்ந்து, அவன் இசையாஸ் தீர்க்கதரிசியின் ஆகமத்தை வாசிக்கிறதைக் கேட்டு: நீர் வாசிக்கிறதைக் கண்டுபிடிக்கிறதாக நினைக்கிறீரோ என்று கேட்டார்.

31. அதற்கு அவன்: ஒருவன் எனக்குத் தெரிவிக்காவிட்டால், எப்படி என்னுல் கூடும் என்று சொல்லி, பிலிப்புவைத் தன்னேடு ஏறி உட்காரும்படி மன்றூடினுன்.

32. வேதாகமத்தில் அவன் வாசித்துக்கொண்டிருந்த பாகம் என்னவென்றூல்: ஓர் செம்மறியாட்டைப்போலக் கொல்லப்படுவதற்குக் கூட்டிக்கொண்டுபோகப்பட்டார். தன் மயிரைக் கத்தரிக்கிறவனுக்கு முன்பாகச் சத்தமிடாத ஆட்டுக்குட்டியைப்போல அவர் தமது வாயைத் திறவாதிருந்தார். (இசை. 53-7.)

33. அவருடைய தாழ்மையில் அவருடைய தீர்ப்பு எடுபட்டுப்போயிற்று. அவருடைய ஜென்மத்தை விவரிப்பவன் யார்? அவருடைய சீவன் பூமியினின்று எடுத்துக்கொள்ளப்படும் என்பதேயாம்.

34. அப்போது அண்ணகன் பிலிப்புவை நோக்கி: தீர்க்கதரிசி இதை யாரைக்குறித்துச் சொல்லுகிறூர்? தன்னைக்குறித்தோ? வேறொருவரைக் குறித்தோ என்று (சொல்லும்படி) உம்மை மன்றூடிக் கேட்கிறேன் என்றூன்.

35. அப்பொழுது பிலிப்பு தமது வாய்மலர்ந்து, இந்த வேதவாக்கியத்தினின்று தொடங்கி, யேசுநாதரைக் குறித்து அவனுக்குப் பிரசங்கித்தார்.

36. அப்படியே அவர்கள் வழிநெடுகப் போகையில், தண்ணீருள்ள ஓரிடத்துக்கு வந்தார்கள். அப்பொழுது அண்ணகன்: இதோ, தண்ணீர் இருக்கிறதே; நான் ஞானஸ்நானம் பெறுகிறதற்குத் தடையென்ன என்று சொல்ல,

37. பிலிப்பு: நீர் முழு இருதயத்தோடு விசுவசித்தால், பெறலாம் என்றூர். அவன் பிரத்தியுத்தாரமாக: யேசுக்கிறீஸ்துநாதரைச் சர்வேசுரனுடைய குமாரனென்று விசுவசிக்கிறேன் என்று சொல்லி,

38. இரதத்தை நிறுத்தக் கட்டளையிட்டான். அப்பொழுது பிலிப்புவும், அண்ணகனும் இருவருமாகத் தண்ணீரில் இறங்க, பிலிப்பு அவனுக்கு ஞானஸ்நானங்கொடுத்தார்.

39. அவர்கள் ஜலத்தினின்று (கரையில்) ஏறினபொழுது ஆண்டவருடைய இஸ்பிரீத்து பிலிப்புவை எடுத்துக்கொண்டதினுல், அண்ணகன் அவரை மறுபடி காணவில்லை. ஆயினும் அகமகிழ்ச்சியோடு தன் வழியே போனுன்.

29. இவ்விடத்தில் இஸ்பிரீத்துவானவரென்பது பிலிப்புவினேடு பேசின சம்மனசானவரென்று எண்ணத்தகும்.

35. இங்கே சொல்லப்பட்ட அண்ணகனுகிய அதிகாரி படித்தவனுயிருந்தாலும் பிலிப்பென்பவருடைய உதவியில்லாமல், வேதாகமத்தின் அர்த்தத்தைக் கண்டுபிடியாதிருக்க, எவனும் வேதாகமங்களை வாசித்து, அவைகளின் பொருளை அறிந்துகொள்ளவேண்டுமென்று பதிதமார்க்கத்தார் சொல்லுவது பிசகாயிருக்கிறது.



"பிலிப்புவும் ஓடிச்சேர்ந்து, அவன் இசையாஸ் தீர்க்கதரிசியின் ஆகமத்தை வாசிக்கிறதைக்கேட்டு நீர் வாசிக்கிறதைக் கண்டுபிடிக்கிறதாக நினைக்கிறீரோ என்று கேட்டார். அதற்கு அவன்: ஒருவன் எனக்குத் தெரிவிக்காவிட்டால், எப்படி என்னால் கூடும் என்று சொல்லி, பிலிப்புவைத் தன்னோடு ஏறி உட்காரும்படி மன்றாடினான்." (அப். 8-30, 31.)

40. பிலிப்புவோவெனில் அசோத்தென்னும் ஊரில் காணப்பட்டு, செசாரியா நகரத்தில் சேருந்தனையும், வழியிலுள்ள சகல பட்டணங்களிலும் சுற்றிப்போய்ச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்துக்கொண்டுவந்தார். (அப். 21-8.)

## 9-ம் அதிகாரம்.

சவுல் என்பவர் அற்புதமானவிதமாய் மனந்திரும்பினதும், இராயப்பர் லிதாப் பட்டணத்தில் ஏனேயாஸ் என்ற திமிர்வாதக்காரனைக் குணமாக்கினதும், ஜோப்பை நகரத்தில் மரித்த தபித்தாள் என்பவளை உயிர்ப்பித்ததுமாகிய வர்த்தமானங்கள்.

1. சவுல் என்பவர் இன்னும் ஆண்டவருடைய சீஷர்களைப் பயமுறுத்திக் கொலைசெய்யும்படி, சீறிக்கொண்டு பெரிய குருவினிடத்தில் போய்,

2. இந்த மார்க்கத்தாரான எந்த ஸ்திரீ புருஷனையாகிலும் தான் கண்டால், அவர்களைக் கட்டி எருசலேமுக்குக் கொண்டுவரும்படி தமாஸ்குவிலுள்ள ஜெப ஆலயங்களுக்கு நிருபங்களைக் கேட்டார்.

3. அப்படியே அவர் பிரயாணமாய்ப் போய், தமாஸ்கு நகரத்துக்குச் சமீபித்தபோது நடந்ததேதெனில்: திடீரென வானத்திலிருந்து ஓர் ஒளி அவரைச் சூழ்ந்து பிரகாசிக்கவே, (அப். 22-6. 1. கொ. 15-8; 2. கொ. 12-2.)

4. அவர் தரையிலே விழுந்து: சவுலே, சவுலே, என் என்னைத் துன்பப்படுத்துகிறாய் என்று தன்னை நோக்கிச் சொல்லுகிற சத்தத்தைக் கேட்டார்.

5. அப்பொழுது அவர்: ஆண்டவரோ, நீர் யார் என்று கேட்க, அவர்: நீ உபத்திரவப்படுத்துகிற யேசுநாதர் நாமே; தாற்றுக்கோலை எதிர்த்து உதைக்கிறது உனக்குக் கடினமாம் என்றார்.

6. இதைக் கேட்டு அவர் நடுநடுங்கிப் பிரமித்து: ஆண்டவரோ, நான் என்ன செய்யும்படி சித்தமாயிருக்கிறீர் என்றார்.

7. ஆண்டவர் அவருக்கு மாறுத்தாரமாக: நீ எழுந்து பட்டணத்துக்குள்ளேபோ; நீ செய்யவேண்டியது இன்னதென்று அங்கே உனக்குச் சொல்லப்படும் என்றார். அப்பொழுது அவரோடு கூடப் பிரயாணஞ்செய்த மனிதர்கள் சத்தத்தைக் கேட்டாலும், ஒருவரையும் காணாமல், பிரமித்து நின்றார்கள்.

8. அப்பொழுது சவுல் தரையினின்று எழுந்து, தன் கண்களைத் திறந்தும், ஒன்றும் காணாதிருந்தார். ஆகையால் அவரைக் கையைப் பிடித்துத் தமாஸ்குப் பட்டணத்துக்குக் கூட்டிக்கொண்டுபோனார்கள்.

9. அங்கே அவர் மூன்று நாளளவாக, கண்தெரியாதவராய்ச் சாப்பிடாமலும், குடியாமலும் இருந்தார்.

10. அப்பொழுது தமாஸ்குப் பட்டணத்தில் அனனியா என்னும் பேருள்ள ஓர் சீஷனிருந்தார். ஆண்டவர் ஓர் தரிசனத்திலே அவரை நோக்கி: அனனியாவே என்க, அவர்: ஆண்டவரோ, இதோ அடியேன் என்றார்.

11. அப்பொழுது ஆண்டவர் அவரை நோக்கி: நீ எழுந்திருந்து, நேர் வீதி என்னும் தெருவுக்குப் போய், தார்சு நகரத்தானாகிய சவுல் என்பவனை யூதாவின் வீட்டிலே விசாரி. ஏனெனில் இதோ, அவன் ஜெபஞ்செய்கிறான் என்றார்.

12. (அப்பொழுது சவுல்) அனனியா என்னும் ஒருமனிதன் உள்ளே பிரவேசிக்கிறதையும், தான் பார்வையடையும்பொருட்டுத் தன்மேல் கரங்களை நீட்டிவைக்கிறதையும் தரிசித்தார்.

5. சவுலென்பவர் திருச்சபையை உபாதித்துத் துன்பப்படுத்தியிருக்க, யேசுநாதர் தம்மையே அவர் உபாதிக்கிறாரென்று சொல்வதினாலே, திருச்சபைக்கும் யேசுநாதருக்கும் உள்ள ஆச்சரியமான ஐக்கியம் நன்றாய் விளங்குகிறது.

13. அனனியா பதில் மொழியாக: ஆண்டவரே, இந்த மனிதன் எருசலேமில் உம்முடைய அர்ச்சியசிஷ்டவர்களுக்கு எத்தனையோ பொல்லாங்குகளைச் செய்தானென்று அநேகரால் கேள்விப்பட்டிருக்கிறேன்.

14. இங்கேயும் உமது நாமத்தைத் தொழுகிற சகலரையும் பிடித்துக் கட்டும்படி பிரதான ஆசாரியர்களிடத்தில் இவன் அதிகாரம் பெற்றிருக்கிறானே என்றார்.

15. அதற்கு ஆண்டவர்: நீ போ; ஏனெனில் இவன் புற ஜாதிகளுக்கும், இராஜாக்களுக்கும், இஸ்ராயேல் புத்திரருக்கும் முன்பாக நம்முடைய நாமத்தைக் கொண்டுபோவதற்கு நாம் தெரிந்துகொண்ட பாத்திரமாயிருக்கிறான். (எப். 3-8.)

16. நமது நாமத்தினிமித்தம் அவன் எம்மாத்திரம் பாடுபடவேண்டுமென்று நாம் அவனுக்குக் காண்பிப்போம் என்றார்.

17. ஆகையால் அனனியா என்பவர் போய், அந்த வீட்டில் பிரவேசித்து, அவர்மேல் கைகளை வைத்து: சவுல் சகோதரரே, நீர் வந்த வழியில் உமக்குத் தரிசனையான ஆண்டவராகிய யேசுநாதர், நீர் பார்வையடையவும், இஸ்பிரீத்துசாந்துவினால் நிரப்பப்படவும் என்னை அனுப்பினார் என்றார்.

18. உடனே அவருடைய கண்களிலிருந்து செதிள்கள் போன்றவைகள் விழவே, அவர் பார்வையடைந்து, எழுந்து, ஞானஸ்நானம் பெற்றார்.

19. பின்னும் அவர் போஜனம்பண்ணிப் பலமடைந்தார்; மேலும் அவர் தமாஸ்குப் பட்டணத்திலிருந்த சீஷர்களோடு சிலநாள் தங்கியிருந்து,

20. தாமதமில்லாமல், யேசுநாதரே சர்வேசுரனுடைய சுதன் என்று ஜெப ஆலயங்களில் பிரசங்கித்துவந்தார்.

21. அவர் பிரசங்கிக்கிறதைக் கேட்ட யாவரும் பிரமித்து: இந்த நாமத்தைத் தொழுகிறவர்களை எருசலேமில் உபத்திரவப்படுத்தினவன் இவனல்லோ? இங்கேயும் அப்படிப்பட்டவர்களைக் கட்டி, பிரதான ஆசாரியர்களிடத்திற்கு இழுத்துக்கொண்டுபோகும்படி வந்தவனல்லோ என்றார்கள்.

22. சவுலோ மென்மேலும் திடன்கொண்டு, கிறீஸ்துவானவர் இவரேயென்று உறுதிப்படுத்தி, தமாஸ்குப் பட்டணத்தில் வசித்திருந்த யூதரைக் கலங்கடித்தார்.

23. மேலும் அநேக நாள் சென்றபின்பு, யூதர்கள் அவரைக் கொலைசெய்யவேண்டுமென்று ஒருமித்து ஆலோசனைசெய்தார்கள்.

13. **உம்முடைய அர்ச்சியசிஷ்டவர்களுக்கு:**—புதிய ஏற்பாட்டில் இவ்விடத்தில்தான் முதல்விசையாக அர்ச்சியசிஷ்டவர்கள் அதாவது சர்வேசுரனுக்கு வசீகரமாக்கப்பட்டவர்கள் என்ற சொல் சீஷர்களையும் கிறீஸ்துவர்களையும் குறிக்கும்படி உபயோகிக்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம்.

23. இவ்விடத்தில் சொல்லப்படுகிற சரித்திரத்தொடர்ச்சியைப் பார்த்தால், அர்ச். சின்னப்பர் மனந்திரும்பின பிறகு அநேக நாளாய்த் தமாஸ்குப் பட்டணத்திலிருந்து யேசுநாதரைக்குறித்துப் பிரசங்கித்தாரென்றும், அப்பொழுது அங்குள்ள யூதர்கள் அவரைக் கொல்ல எத்தனித்தார்களென்றும், சீஷர்களால் அவர் தப்பித்து விடப்பட்டு எருசலேமுக்குப் போனாரென்றும் நினைக்க இடமுண்டு. ஆகிலும் அவர் மனந்திரும்பினவுடனே அரபிய தேசத்துக்குப்போய்ச் சிலகாலமிருந்து, திரும்பித் தமாஸ்குப் பட்டணத்துக்கு வந்து, சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கையில், அதாவது அவர் மனந்திரும்பி மூன்று வருஷங்களானபின்பு, யூதர்கள் இந்தச் சதியோசனை செய்தார்களென்று அவர் கலாத்தியருக்கு எழுதிய நிருபம் முதல் அதிகாரம் பதினேழாம் வசனத்தால் அறிகிறோம். ஆகையால் இவ்விடத்தில் அநேக நாள் என்பது வருஷங்களைக் குறிக்கிறது.

24. ஆனால் அவர்களுடைய சர்ப்பனைகள் சவுல் என்பவருக்குத் தெரியவந்தது. அவனைக் கொல்லும்படி அவர்கள் அல்லும் பகலுமாய்ப் பட்டணத்தின் வாசல்களைக் காத்துக்கொண்டிருந்தார்கள்.

25. அப்படியிருக்க, சீஷர்கள் இரவிலே அவனைத் தூக்கி, ஓர் கூடையில் வைத்து மதில்வழியாக வெளியே இறக்கிவிட்டார்கள். (2 கொரி. 11-32.)

26. மேலும் அவர் எருசலேமுக்கு வந்து, சீஷர்களோடு சேர்ந்துகொள்ளப் பிரயத்தனம்பண்ணினார். ஆயினும் அவர்கள் எல்லாரும் அவனைச் சீஷனென்று நம்பாமல், அவருக்குப் பயந்திருந்தார்கள்.

27. அப்பொழுது பர்னபா என்பவர் அவனை ஏற்றுக்கொண்டு, அப்போஸ்தலர்களிடத்தில் அவனைக் கூட்டிக்கொண்டுபோய், வழியிலே அவர் ஆண்டவனைக் கண்ட விதத்தையும், ஆண்டவர் அவருடனே பேசினதையும், தமாஸ்குப் பட்டணத்திலே அவர் யேசுநாதருடைய நாமத்தைப்பற்றித் தைரியமாய்ப் பிரசங்கித்ததையும் அவர்களுக்கு விவரித்துச் சொன்னார். (கலாத். 1-18.)

28. அதுமுதல் அவர் எருசலேமிலே அவர்களிடத்தில் போக்கும், வரத்துமாயிருந்து, ஆண்டவருடைய நாமத்தினாலே தைரியமாய்ப் பிரசங்கிப்பார்.

29. புறஜாதியாரோடும் பேசுவார், கிரேக்கரோடும் தர்க்கிப்பார். அவர்களோ அவனைக் கொலைசெய்யும்படி வகை தேடிக்கொண்டிருந்தார்கள்.

30. சகோதரர் இதை அறிந்து, அவனைச் செசாரையாவுக்குக் கூட்டிக்கொண்டுபோய், தார்சு நகருக்கு அனுப்பிவிட்டார்கள்.

31. அக்காலத்திலே யூதேயா, சமாரியா, கலிலேயா நாடுகளெங்கும் திருச்சபை சமாதானத்தோடிருந்து, தேவபயத்தில் நடந்து, வர்த்தித்து இஸ்பிரீத்து சாந்துவின் ஆறுதலால் நிறைந்திருந்தது.

32. அப்பொழுது சம்பவித்ததேதெனில்: இராயப்பர் போய், எல்லாரையும் விசாரித்து வருகையில், லித்தா நகரத்தில் குடியிருந்த பரிசுத்தவான்களிடத்திற்கும் போனார்.

33. அப்பொழுது அங்கே எட்டு வருஷமாய்க் கட்டிலிலே திமிர்வாதமுள்ளவனாய்க் கிடந்த ஏனேயா என்னப்பட்ட ஒரு மனிதனைக் கண்டார்.

34. இராயப்பர் அவனை நோக்கி: ஏனேயா, ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர் உன்னைச் சௌக்கியப்படுத்துகிறார். நீ எழுந்திருந்து, உன் படுக்கையை ஒழுங்காய்ப் போடு என்றார். உடனே அவன் எழுந்திருந்தான். (அப். 3-6.)

35. லித்தாவிலும், சாரோனிலும் குடியிருந்தவர்களெல்லாரும் அவனைக் கண்டு, ஆண்டவரிடமாய் மனந்திரும்பினார்கள்.

36. அன்றியும் ஜோப்பைப் பட்டணத்தில் தொர்க்காஸ் என்று அர்த்தமுள்ள, தபித்தாள் என்னும் பெயரையுடைய ஒரு சீஷியிருந்தாள். அவள் நற்கிரியைகளையும் தர்மங்களையும் ஏராளமாய்ச் செய்துவந்தாள்.

32. என் ஆடுகளையும் என் ஆட்டுக்குட்டிகளையும் மேய்ப்பாயாக என்று யேசுநாதர் அர்ச். இராயப்பருக்குக் கொடுத்த தலைமை உத்தியோகத்தை அவர் நிறைவேற்றுகிறதை இவ்விடத்திலும் காண்கிறோம். ஏனெனில் ஊருக்கு ஊர் தேசத்துக்குத் தேசம்சுற்றிப்போய்த்திருச்சபையைச் சந்தித்துவருவது திருச்சபையின் மேலான விசாரணையல்லோ.

35. மெய்யான வேதத்தார் அல்லாத இதரமதஸ்தரும் கடவுளுக்குப்பயந்து, தங்கள் மனசாட்சியின்படி நடந்துவந்தால் அவர்களும் சத்திய வேதத்தைக் கைக்கொள்ளவும் கரையேறவும் சர்வேசுரன் அவர்களுக்கு உதவிசெய்வாரென்று இவ்வாக்கியத்தால் கண்டுகொள்ளலாம்; இங்கே சொல்லப்பட்டவர்களெல்லோரும் அதற்கு ஓர் அத்தாட்சியாமே.

37. அந்நாட்களில் சம்பவித்ததே தெனில்: அவள் வியாதிப்பட்டு, மரணமடைந்தாள். அப்போது அவளைக் குளிப்பாட்டி, மேல் வீட்டில் கிடத்திவைத்தார்கள்.

38. அன்றியும் லித்தா நகரம் ஜோப்பைப் பட்டணத்துக்குச் சமீபமாயிருந்தபடியினாலே, இராயப்பர் அவ்விடத்திலிருக்கிறாரென்று சீஷர்கள் கேள்விப்பட்டு, இரண்டு மனிதர்களை அனுப்பி: நீர் எங்களிடமட்டும் வரத் தாமதிக்க வேண்டாம் என்று மன்றாடினார்கள்.

39. ஆதலால் இராயப்பர் புறப்பட்டு, அவர்களுடனேகூட வந்தார். வந்து சேர்ந்தவுடனே, அவரை மேல்வீட்டுக்குக் கூட்டிக்கொண்டுபோனார்கள். அங்கே விதவைகளெல்லாரும் அவரைச் சூழ்ந்து அழுதுகொண்டு, தொர்க்காளென்பவள் தங்களுக்குச் செய்துகொடுத்த சட்டைகளையும், வஸ்திரங்களையும் அவருக்குக் காண்பித்தார்கள்.

40. அப்பொழுது இராயப்பர் எல்லாரையும் அப்புறப்படுத்தி, முழங்காற்படியிட்டு, ஜெபஞ்செய்து, அந்தப் பிரேதத்தை நோக்கி: தபித்தாளே, எழுந்திரு என்றார். உடனே அவள் தன் கண்களைத் திறந்து, இராயப்பரைக் கண்டு, எழுந்து உட்கார்ந்தாள். (மாற். 5-41.)

41. அவரோவெனில் அவளுக்குக் கைகொடுத்து, எழுந்துநிற்கச் செய்தார். மேலும் பரிசுத்தவான்களையும் விதவைகளையும் வரவழைத்து, அவளை உயிரோடு அவர்களிடம் ஒப்புவித்தார்.

42. இந்தச்செய்தி ஜோப்பைப் பட்டணமெங்கும் தெரியலாயிற்று. அநேகரும் ஆண்டவரில் விசுவாசமானார்கள்.

43. பின்பு இராயப்பர் ஜோப்பைப் பட்டணத்தில் தோல் பதனிடுகிறவனாகிய சீமோன் என்னும் ஒருவனுடைய வீட்டிலே அநேக நாள் தங்கியிருக்கலாயிற்று.

## 10-ம். அதிகாரம்.

கொர்னெலியூ என்னும் செந்தூரியன் இராயப்பரைத் தன்னிடம் அழைத்ததும், இராயப்பருடைய வாக்கியங்களைக் கேட்ட சகலர்பேரிலும் இஸ்பிரீத்துசாந்துவானவர் இறங்கினதும்.

1. செசாரையாப் பட்டணத்திலே இத்தாலிக்கு என்னப்பட்ட பட்டாளத்தில் கொர்னெலியூ என்னும் பெயரையுடைய ஓர் செந்தூரியனிருந்தான்.

2. அவன் தேவபக்தனாய், தன் வீட்டாரனைவரோடும் சர்வேசுரனுக்குப் பயந்து, ஜனங்களுக்கு அநேக தர்மங்களைச்செய்து, எப்போதும் சுவாமியை நோக்கிப் பிரார்த்தித்து வருவான்.

3. அவன் சுமார் பகல் ஒன்பதாம் மணிவேளையில் ஓர் தேவதூதன் தன்னிடத்தில் வரவும், கொர்னெலியூவே என்று தன்னைக் கூப்பிடவும் பிரத்தியட்சமாய்த் தரிசனத்தில் கண்டான்.

4. அவன் அவரை உற்றுப்பார்த்துப் பயங்கரமடைந்து: ஆண்டவரே, என்ன என்று கேட்க, அவர்: உன்னுடைய ஜெபங்களும், தான தர்மங்களுஞ் சர்வேசுரன் உன்னை நினைக்கும்படி அவர் சமுகத்தில் ஏறிப்போயிருக்கின்றன.

5. ஆகையால் இப்பொழுதே நீ ஜோப்பைப் பட்டணத்திற்கு ஆட்களை அனுப்பி, இராயப்பரென்னும் காரணப் பெயரையுடைய சீமோன் என்னும் ஒருவரை வரவழைப்பாயாக.

6. அவர் தோல் பதனிடுகிறவனாகிய சீமோன் என்கிற ஒருவனிடத்தில் தங்கியிருக்கிறார். அவனுடைய வீடு கடலோரத்திலிருக்கிறது. நீ செய்யவேண்டியது இன்னதென்று அவரே உனக்குச் சொல்லுவார் என்றார். (அப். 9-43.)

7. தன்னோடு பேசின தேவதூதன் அகன்றபின்பு அவன் தன் வீட்டாரில் இருவரையும், தன் சேவகத்திலிருந்த போர்ச்சேவகரில் தெய்வபயமுள்ள ஒருவனையும் அழைத்து,

8. எல்லாவற்றையும் அவர்களுக்கு விவரித்து, அவர்களை ஜோப்பைப் பட்டணத்துக்கு அனுப்பினான்.

9. அவர்கள் வழிநடந்து, மறுநாள் அந்தப் பட்டணத்துக்குச் சமீபமாய் வருகையில், ஏறக்குறைய ஆறும் மணி நேரத்தில் இராயப்பர் ஜெபஞ்செய்யும்படி மேல்வீட்டில் ஏறினார்.

10. பின்னும் அவர் பசியடைந்து சாப்பிட மனதாயிருந்தார். அதற்காக அவர்கள் முஸ்திப்புச் செய்கையில், அவர் பரவசமாகி:

11 வானம் திறக்கப்பட்டிருக்கிறதாகவும், நாலுமுனையிலும் (கட்டப்பட்ட) பெரிய துப்பட்டியைப் போன்ற ஓர் பாத்திரம் வானத்தினின்று தாழவிடப்பட்டு, பூமியில் இறங்குகிறதாகவும் கண்டார்.

12. அதிலே பூமியிலுள்ள சகலவிதமான நாற்கால் ஜீவன்களும், தரையில் ஊரும் ஜெந்துக்களும், ஆகாயத்துப் பறவைகளும் இருந்தன.

13 அப்பொழுது: இராயப்பா, நீ எழுந்திருந்து, அடித்துச் சாப்பிடு என்று அவருக்கு ஓர் சத்தமுண்டாயிற்று.

14. அதற்கு இராயப்பர்: ஆண்டவரே, வேண்டாம். தீட்டும், அசுத்தமுமாயிருக்கிற எதையும் நான் ஒருபோதும் பொசித்ததில்லை என்றார்.

15. அப்பொழுது: சர்வேசுரன் சுத்தமாக்கினதை நீ தீட்டுள்ளதென்று சொல்லாதே என்று இரண்டாந்தரமும் அவருக்குச் சத்தமுண்டாயிற்று.

16. அவ்விதமே மூன்றுந்தரமும் சம்பவித்தபின், அந்தப் பாத்திரம் திரும்பவும் வானத்துக்குள் எடுத்துக்கொள்ளப்பட்டது.

17. இராயப்பரோவெனில் தாம் கண்ட காட்சி ஏதோவென்று தமக்குள்ளே தத்தளித்துக்கொண்டிருக்கையில், இதோ, கொர்னெலியூ என்பவனால் அனுப்பப்பட்ட மனிதர் சீமோனுடைய வீட்டை விசாரித்துக்கொண்டு வந்து வாசற்படியில் நின்று கூப்பிட்டு:

18. இராயப்பர் என்னுங் காரணப் பெயருள்ள சீமோன் என்பவர் இங்கே தங்கியிருக்கிறாரோ என்று கேட்டார்கள்.

19 இராயப்பர் அந்தக் காட்சியின் பேரில் சிந்தித்துக்கொண்டிருக்கையில், இஸ்பிரீத்துவானவர் அவரை நோக்கி: இதோ, மூன்றுபேர் உன்னைத் தேடுகிறார்கள்.

20. நீ எழுந்து, புறப்பட்டுச் சற்றும் ஐயப்படாமல் அவர்களுடனேகூடப் போ: ஏனெனில் நாமே அவர்களை அனுப்பினோம் என்றார்.

21. ஆகையால் இராயப்பர் அந்த மனிதர்களிடத்தில் இறங்கி வந்து: இதோ, நீங்கள் தேடுகிறவன் நான்தான். நீங்கள் வந்த காரணமென்ன என்றார்.

22. அதற்கு அவர்கள்: நீதிமானும், தெய்வ பயமுள்ளவரும், யூதஜாதியார் அனைவரிடத்திலும் நல்ல பெயர்பெற்றிருக்கிறவருமாகிய கொர்னெலியூ என்னும் செந்தூரியன் உம்மைத் தம்முடைய வீட்டுக்கு வரவழைத்து, உம்மிடத்தில் தேவவாக்கியத்தைக் கேட்கும்படி பரிசுத்த தேவதூதனால் விடைபெற்றிருக்கிறார் என்றார்கள்.

23. அவர்களை அவர் உள்ளே அழைத்துக்கொண்டுபோய், அவர்களுக்கு இல்லிடங் கொடுத்தார். மறுநாள் அவர் எழுந்து, அவர்களோடுகூடப் புறப்பட்டார். அப்பொழுது ஜோப்பைப் பட்டணத்திலுள்ள சகோதரரில் சிலரும் அவரோடுகூடப் போனார்கள்.

24. மறுதினத்தில் அவர்கள் செசாரையாப் பட்டணத்தில் பிரவேசித்தார்கள். கொர்னெலியூ என்பவனோ தன் பந்துக்களையும் கனிஷ்ட சிநேகிதர்களையும் வரவழைத்து, அவர்களுக்காகக் காத்துக்கொண்டிருந்தான்.

25. பின்னும் இராயப்பர் உள்ளே பிரவேசித்தபோது, கொர்னெலியூ அவருக்கு எதிர்கொண்டுவந்து, அவர் பாதத்தில் சாஷ்டாங்கமாக விழுந்து, நமஸ்கரித்தான்.

26. இராயப்பரோ அவனைத் தூக்கிவிட்டு: எழுந்திரும், நானும் ஓர் மனுஷன்தான் என்று சொல்லி,

27. அவனோடு பேசிக்கொண்டு வீட்டில் பிரவேசித்து, (அங்கே) கூடிவந்திருந்த அநேகரைக் கண்டு,

28. அவர்களை நோக்கிச் சொன்னதாவது: அந்நிய ஜாதியானோடு கூட்டுறவாகிறதும், அவனிடத்தில் நெருங்குகிறதும் யூதனானவனுக்கு எவ்வளவு அருவருப்பாயிருக்கிறதென்று நீங்கள் அறிவீர்களே. ஆனால் எந்த மனிதனையும் தீட்டுள்ளவன் அல்லது அசுத்தன் என்று சொல்லாதபடிக்குச் சர்வேசுரன் எனக்குக் காண்பித்தருளினார்.

29. அதைப்பற்றி நான் ஐயப்படாமல், நீங்கள் அழைத்தவுடனே வந்தேன்; ஆகையால் எது முகாந்தரமாக என்னை அழைத்தீர்களென்று கேட்கிறேன் என்றார்.

30. அதற்குக் கொர்னெலியூ சொன்னதாவது: இந்நேரத்துக்கு நாலுநாளைக்கு முன்னே, ஒன்பதாம் மணி வேளையில், நான் வீட்டிலே ஜெபஞ்செய்துகொண்டிருந்தேன். அப்பொழுது இதோ, வெள்ளுடையணிந்த ஒருவர் எனக்கு முன்பாக நின்று:

31. கொர்னெலியூவே, உன் மன்றாட்டும் கேட்டருளப்பட்டு, உன் தான தர்மங்களும் சர்வேசுரனுடைய சமுகத்தில் நினைத்தருளப்பட்டன.

32. ஆகையால் ஜோப்பைப் பட்டணத்துக்கு ஆளனுப்பி இராயப்பரென்னும் காரணப்பெயருள்ள சீமோனென்பவனை வரவழைப்பாயாக. அவர் கடற்கரையில் தோல் பதனிடுகிறவனாகிய சீமோன் வீட்டிலே தங்கியிருக்கிறார் என்றார்.

33. ஆனதைப்பற்றி, உடனே உம்மிடத்துக்கு ஆளனுப்பினேன். அப்படியே நீர் வந்தது நல்லதாயிற்று. ஆகையால் ஆண்டவரால் உமக்குக் கற்பிக்கப்பட்ட எல்லாவற்றையும் கேட்பதற்கு இப்போது நாங்கள் அனைவரும் இங்கே உம்முடைய சமுகத்தில் ஆஜராயிருக்கிறோம் என்றான்.

34. அப்பொழுது இராயப்பர் வாய் மலர்ந்து சொன்னதாவது: சர்வேசுரன் பாரபட்சம் இல்லாதவரென்றும், (உபாக. 10-17; ஞாஞ. 6-8; கலா. 2-6.)

35. எந்த ஜனத்திலும் அவருக்குப் பயந்து, தர்மத்தைச் செய்கிறவன் அவருக்கு உகந்தவனாயிருக்கிறானென்றும் உண்மையாகவே அறிந்திருக்கிறேன்.

36. சர்வேசுரன் ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரைக்கொண்டு சகலருக்கும் சமாதானத்தைக் கூறி இஸ்ராயேல் புத்திரருக்குத் தம்முடைய வார்த்தையை அனுப்பினார்.

37. அருளப்பர் பிரசங்கித்த ஞானஸ்நானத்துக்குப்பின், கலிலேயா நாடு முதற்கொண்டு யூதேயா தேசமெங்கும் நடந்ததேதென்று அறிவீர்களே. (லூக். 4-14.)

38. சர்வேசுரன் நசரேயனாகிய யேசுநாதனை எப்படி இஸ்பிரீத்துசாந்துவினாலும், வல்லமையினாலும் அபிஷேகம் பண்ணினாரென்று அறிந்திருக்கிறீர்கள். சர்வேசுரன் அவரோடுகூட இருந்ததினாலே, அவர் எங்கும் சுற்றிப்போய் நன்மையைச்செய்து, பசாசினால் உபாதிக்கப்பட்ட யாவரையும் குணப்படுத்தினார். (மத். 9-35.)

39. மேலும் அவர் யூதர்களுடைய நாட்டிலும் எருசலேமிலும் செய்தருளின யாவற்றிற்கும் நாங்கள் சாட்சிகளாயிருக்கிறோம். அவரை மரத்தில் தூக்கிக் கொன்றுபோட்டார்கள்.

40. அவரைச் சர்வேசுரன் மூன்றாம் நாள் உயிர்ப்பித்து, பிரத்தியட்சமாய்க் காணும்படி செய்தருளினார்.

41. ஆயினும் எல்லா ஜனத்துக்குமல்ல, சர்வேசுரனால் முன்னியமிக்கபட்ட சாட்சிகளும், அவர் மரித்தோரினின்று எழுந்தபின்பு அவரோடுகூடப் போஜனபானம் பண்ணினவர்களுமாகிய எங்களுக்கே (பிரத்தியட்சமாகும்படி) செய்தருளினார். (லூக். 24-43.)

42. அவரே சீவியர்களுக்கும் மரித்தவர்களுக்கும சர்வேசுரனால் ஏற்படுத்தப்பட்ட நடுவரென்று ஜனங்களுக்குப் பிரசங்கிக்கவும், சாட்சியாக ஒப்புவிக்கவும் எங்களுக்குக் கட்டளையிட்டார்.

43. அவர் பேரில் விசுவாசமுள்ள யாவரும் அவருடைய நாமத்தினாலே பாவப் பொறுத்தலை அடைவார்களென்று சகல தீர்க்கதரிசிகளும் அவரைக் குறித்துச் சாட்சிசொல்லுகிறார்கள் என்றார். (ஜெரே. 31-34; மிக். 7-18.)

44. இராயப்பர் இந்த வார்த்தைகளை இன்னும் பேசிக்கொண்டிருக்கையில், வாக்கியத்தைக் கேட்டுக்கொண்டிருந்த யாவர்மேலும் இஸ்பிரீத்துசாந்துவானவர் இறங்கினார். (அப். 4-31.)

45. இஸ்பிரீத்துசாந்துவானவருடைய வரப்பிரசாதம் புற ஜாதியார் மேலும் பொழியப்பட்டதென்று இராயப்பரோடுகூட வந்திருந்த விருத்தசேதனமுள்ள விசுவாசிகள் பிரமித்தார்கள்.

46. ஏனெனில் அவர்கள் பல பாஷைகளைப் பேசுகிறதையும், சர்வேசுரனை ஸ்துதித்துக் கொண்டாடுகிறதையும் அவர்கள் கேட்டார்கள்.

47. அப்பொழுது இராயப்பர் நம்மைப்போல இஸ்பிரீத்துசாந்துவைப் பெற்றுக்கொண்ட இவர்கள் ஞானஸ்நானம்பெறாதபடி யாராகிலும் விலக்கக்கூடுமோ என்று சொல்லி,

48. ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய நாமத்தினாலே அவர்களுக்கு ஞானஸ்நானங்கொடுக்கும்படி கட்டளையிட்டார். பின்னும் அவர் சில நாள் தங்களோடு தங்கியிருக்கும்படி அவரை மன்றாடினார்கள்.

## 11-ம். அதிகாரம்.

புற ஜாதியாரைத் திருச்சபையில் சேர்த்துக் கொண்டதற்கு அர்ச். இராயப்பர் நியாயஞ்சொன்னதும், அந்தியோக்கியாவில் அநேகம்பேர் மனந்திரும்பினதும்.

1. இப்படியிருக்க, புற ஜாதியாரும் தேவ வாக்கியத்தைக் கைக்கொண்டார்களென்று யூதேயாவிலிருந்த அப்போஸ்தலர்களும, சகோதரரும் கேள்விப்பட்டார்கள்.

2. ஆகையால் இராயப்பர் எருசலேமுக்குத திரும்பிவந்தபோது, விருத்தசேதனமுள்ளவர்கள் அவரோடுகூட வாக்குவாதம்பண்ணி,

3. விருத்தசேதனமில்லாத மனிதர்களிடத்திலே நீர் போய், அவர்களோடு கூடப் போஜனம்பண்ணினதென்ன என்றார்கள்.

4. அப்போது இராயப்பர் நடந்ததை அவர்களுக்கு வரிசையாய் விவரிக்கத் தொடங்கி:

5. நான் ஜோப்பை நகரத்தில் ஜெபஞ்செய்துகொண்டிருக்கையிலே, பரவசத்தில் ஓர் காட்சியைக் கண்டேன். எப்படியெனில்: நாலு மூனைகளுங் கட்டப்பட்ட பெரிய துப்பட்டியைப்போன்ற ஒரு பாத்திரம் வானத்தினின்று என்னிடமட்டும் இறங்கிவந்தது. (அப். 10-9.)

6. அதிலே நான் உற்றுப்பார்த்துக் கவனிக்கையில், அதிலே பூமியின் நாற்கால் ஜீவன்களையும், காட்டு மிருகங்களையும், ஊரும் ஜெந்துக்களையும், ஆகாயத்துப் பறவைகளையும் கண்டேன்.

7. அல்லாமலும்: இராயப்பா, நீ எழுந்திருந்து, அடித்துச் சாப்பிடு என்று எனக்குச் சொல்லுகிற சத்தத்தையுங் கேட்டேன்.

8. அதற்கு நான்: ஆண்டவரே! வேண்டாம்; தீட்டானது அல்லது அசுத்தமானது எதுவும் ஒருக்காலும் என் வாய்க்குள் இறங்கினதில்லை என்றேன்.

9. ஆனால் வானத்தினின்று மறுபடியும் சத்தம் உண்டாகி: சர்வேசுரன் சுத்தமாக்கினதை நீ தீட்டென்று சொல்லாதே என்று மறுமொழி சொல்லிற்று.

10. இப்படி மூன்று முறையும் சம்பவித்தது. மேலும் அவையெல்லாம் வானத்துக்குள் எடுத்துக்கொள்ளப்பட்டது.

11. அந்நேரமே இதோ, செசாரையாப் பட்டணத்திலிருந்து என்னிடத்திற்கு அனுப்பப்பட்ட மூன்றுபேர் நானிருந்த வீட்டில் வந்து நின்றார்கள்.

12. அப்பொழுது நான் சற்றும் ஐயப்படாமல் அவர்களோடேகூடப் போகும்படி இஸ்பிரீத்துவானவர் எனக்குச்சொன்னார். இந்த ஆறு சகோதரரும் என்னுடனேகூட வந்தார்கள். நாங்கள் அந்த மனிதனுடைய வீட்டுக்குள் பிரவேசித்தோம்.

13. அவனோ: ஒரு சம்மனசு தன் வீட்டில் நிற்கக் கண்டதையும் அவர் தன்னை நோக்கி: நீ ஜோப்பை நகரத்துக்கு ஆளனுப்பி, இராயப்பன் என்னும் காரணப்பெயருள்ள சீமோனை அழைப்பிக்கக் கடவாய்.

14. நீயும் உன் வீட்டாரனைவரும், இரட்சிக்கப்படுவதற்கான வார்த்தைகளை அவன் உனக்குச் சொல்லுவான் என்று சொன்னதையும் எங்களுக்கு விவரித்தான்.

15. பின்பு நான் பேசத் தொடங்கின மாத்திரத்தில் இஸ்பிரீத்துவானவர் துவக்கத்திலே நமதுமேல் இறங்கினது போல, அவர்கள்மேலும் இறங்கினார்.

16. அப்பொழுது: அருளப்பர் ஜலத்தால் ஞானஸ்நானங் கொடுத்தார், நீங்களோ இஸ்பிரீத்துசாந்துவினால் ஞானஸ்நானம் பெறுவீர்கள் என்று, ஆண்டவர் திருவுளம்பற்றினபடியே அவருடைய வார்த்தையை நினைவுகூர்ந்தேன். (மத். 3-11; அப். 1-5; 19-4.)

17. ஆதலால் ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரை விசுவசித்த நமக்குச் சர்வேசுரன் தந்தருளினதுபோல அவர்களுக்கும் இந்த வரப்பிரசாதத்தைக் கொடுத்திருக்கையில் சர்வேசுரனைத் தடுக்க நான் யார்? நான் எம்மாத்திரம்? என்றார்.

18. இவைகளைக் கேட்டு அவர்கள் அமர்ந்திருந்து: இப்படியாக, சீவியத்துக்கேற்ற பச்சாதாபத்தைச் சர்வேசுரன் புறஜாதியாருக்கும் கொடுத்தருளினாரென்று சொல்லி, சர்வேசுரனை ஸ்துதித்தார்கள்.

19. அப்படியிருக்க, முடியப்பருடைய நாட்களில் எழும்பின வேதகலாபத்தினால் சிதறிப்போனவர்கள் யூதர்களுக்கேயன்றி வேறெவருக்கும் வாக்கியத்தை அறிவிக்காமல், பெனிக்கை நாடு, சிப்புருதீவு, அந்தியோக்கியாப் பட்டணம்வரைக்கும் சுற்றித்திரிந்தார்கள். (அப். 8-1.)

20. ஆயினும் அவர்களில் சிப்புருதீவாரும், சிரேனே ஊராருமாகிய சிலர் அந்தியோக்கியாப் பட்டணத்தில் பிரவேசித்து, கிரேக்கரோடு பேசி, யேசுநாதசுவாமியை அவர்களுக்கு அறிவித்தார்கள்.

21. ஆண்டவருடைய கரமும் அவர்களுடன் இருந்தது ; அநேகரும் விசுவசித்து, ஆண்டவரிடத்தில் மனந்திரும்பினார்கள்.

22. ஆதலால் இவைகளைப் பற்றிய செய்தி எருசலேமிலுள்ள திருச்சபைக்குக் கேள்வியாகவே, அவர்கள் பர்னபாவை அந்தியோக்கியாப் பட்டணம் வரைக்கும் போகும்படி அனுப்பினார்கள்.

23. அப்படியே அவர் போய்ச்சேர்ந்து, சர்வேசுரனுடைய வரப்பிரசாதத்தைக் கண்டபோது சந்தோஷப்பட்டு : அவர்கள் எல்லாரும் தங்கள் இருதயத் தீர்மானத்திலே ஆண்டவரிடத்தில் நிலைத்திருக்கும்படி புத்திசொன்னார்.

24. ஏனெனில் அவர் நல்லவரும், இஸ்பிரீத்துசாந்துவினாலும், விசுவாசத்தினாலும் நிறைந்தவருமாயிருந்தார். மீளவும் திரளான ஜனங்கள் ஆண்டவரிடத்தில் சேர்ந்தார்கள்.

25. பின்பு பர்னபா சவுலென்பவரைத் தேடும்படி தார்ஸ் நகரத்திற்குப் புறப்பட்டுப்போய், அவரைக் கண்டு, அந்தியோக்கியாவுக்கு அவரைக் கூட்டிக்கொண்டு வந்தார்.

26. அவ்விடத்தில் அவர்கள் ஒரு வருஷமுழுமையும் திருச்சபையாரோடு சஞ்சரித்து, அநேகம் ஜனங்களுக்கு உபதேசித்தார்கள். இதினாலே சீஷர்களுக்குக் கிறீஸ்துவர்கள் என்னும் காரணபெயர் முந்தமுந்த அந்தியோக்கியாவில் வழங்கிற்று.

27. அந்நாட்களில் சில தீர்க்கதரிசிகள் எருசலேமிலிருந்து அந்தியோக்கியாவுக்கு வந்தார்கள்.

28. அவர்களில் ஒருவராகிய அகாபு என்பவர் எழுந்து, பூவுலகமெங்கும் கடும்பஞ்சம் உண்டாகுமென்று இஸ்பிரீத்துசாந்துவினாலே அறிவித்தார். அந்தப் பஞ்சம் கிளவுதியூ ராயனுடைய காலத்திலே சம்பவித்தது.

29. ஆகையால சீஷர்களில் அவனவன் தன்தன் சக்திக்குத் தக்கதாய் யூதேயாவில் வசித்திருந்த சகோதரர்களுக்குத் தர்ம உதவி அனுப்பத் தீர்மானித்து,

30. அப்படியே செய்து, பர்னபா, சவுல் என்பவர்களின் கைவசமாய் மூப்பர்களிடத்திற்கு அனுப்பினார்கள்.

20. இங்கே கிரேக்கர் என்பது அஞ்ஞானிகளான கிரேக்கு ஜாதியாரைக் குறிக்கிறதென்றறிக.

28. கிளவுதியூ என்பவன் உரோமாபுரியில் கர்த்தர் பிறந்த 41-ம் வருஷ முதல் 54-ம் வருஷம் வரையில் அரசு புரிந்து வந்தான். இங்கு சொல்லப்பட்ட பஞ்சம், கி. பி. 43-ம் அல்லது 44-ம் வருஷத்தில் சம்பவித்தது.

## 12-ம். அதிகாரம்.

யாகப்பர் வேதசாட்சியானதும், இராயப்பர் தேவ தூதனால் சிறை மீட்கப்பட்டதும், எரோதுக்கு வந்த ஆக்கினையுமாவன.

1. அக்காலத்திலே எரோதரசன் திருச்சபையாரில் சிலரைத் துன்பப்படுத்தத் தலைப்பட்டு,

2. அருளப்பருடைய சகோதரனை யாகப்பரை வாளால் சாகடித்தான்.

3. அது யூதர்களுக்குப் பிரியமாயிருக்கிறதென்று அறிந்து, இராயப்பரையும் பிடிக்க ஏற்பட்டான். அப்பொழுது புளியாத அப்பப் பண்டிகை நாட்களாயிருந்தது.

4. அவரைப் பிடித்துச் சிறைச்சாலையில் போடுவித்து, பாஸ்காப் பண்டிகைக்குப் பிறகு அவரை ஜனங்களுக்கு முன் வெளியேற்றலாமென்று கருதி, அவரைக் காக்கும்படி நவ்வாலுபேர் அடங்கிய நாலு வகுப்புச் சேவகர்களுக்கு ஒப்புவித்தான்.

5. அப்படியே இராயப்பர் சிறைச்சாலையில் காக்கப்பட்டிருக்கையில், அவருக்காக இடைவிடாமல் சர்வேசுரனை நோக்கி ஜெபம் நடந்துவந்தது.

6. அப்படியிருக்க, எரோது அவரை வெளியேற்றலாம் என்றிருக்கும்போது, அந்த இராத்திரியிலே இராயப்பர் இரண்டு சங்கிலிகளால் கட்டுண்டு, இரண்டு சேவகர் நடுவில் நித்திரைசெய்துகொண்டிருந்தார். வாசலுக்கு முன் காவற்காரரும் சிறையைக் காத்துக்கொண்டிருந்தார்கள்.

7. அப்பொழுது இதோ, ஆண்டவருடைய தூதன் அங்கே வந்து நிற்க, அந்தச்சாவடியில் ஓர் பிரகாசம் துலங்கிற்று. அவர் இராயப்பரை விலாவிலே தட்டி: சீக்கிரமாய் எழுந்திரு என்று சொல்லி அவரை எழுப்பினார். உடனே அவருடைய கைகளினின்று சங்கிலிகள் கீழே விழுந்தது.

8. பின்னும் தேவதூதன் அவரை நோக்கி: உன் இடைக்கச்சையை வரிந்துகொண்டு, உன் பாதரட்சைகளையும் தொடுத்துக்கொள் என்றார். அவரும் அப்படியே செய்தார். பின்னும் அவர் அவரை நோக்கி: உன் வஸ்திரத்தையும் போர்த்திக்கொண்டு என் பிறகே வா என்றார்.

9. அவ்விதமே அவர் புறப்பட்டு, அவரைப் பின்தொடர்ந்தார். ஆயினும் தேவதூதனால் செய்யப்பட்டது மெய்யென்று அவர் அறியாமல், தான் ஒரு தரிசனங்காண்கிறதாக எண்ணிக்கொண்டிருந்தார்.

10. அவர்கள் முதல் காவலையும் இரண்டாம் காவலையும் கடந்து, பட்டணத்துக்குப்போகிற (வாசலின்) இருப்புக் கதவண்டையில் வந்து சேரவே, அது தானாய் அவர்களுக்குத் திறக்கப்பட்டது. அவ்வழியாய் அவர்கள் வெளிப்பட்டு, ஓர் வீதிநெடுக நடந்துபோகையில், இருந்தாற்போல் தேவதூதன் அவரைவிட்டு மறைந்துபோனார்.

11. அப்போது இராயப்பர் (நித்திரை மயக்கம்) தெளிந்து: ஆண்டவர் தம்முடைய தூதனை அனுப்பி, எரோதனுடைய கைகளினின்றும், யூத ஜனங்கள் எண்ணியிருந்த எண்ணங்களினின்றும் என்னை விடுவித்தாரென்று இப்பொழுது எனக்கு மெய்யாகவே தெரியலாயிற்று என்றார்.

12. பின்னும் யோசித்துக்கொண்டு, மாற்கு என்னும் காரணப்பெயர்கொண்ட யோவானுடைய தாயாகிய மரியம்மாளுடைய வீட்டுக்குவந்தார். அவ்விடத்தில் அநேகர் கூடி, ஜெபம்பண்ணிக்கொண்டிருந்தார்கள். (அப். 13-5; கொலோ. 4-10; 2 தீமோ. 4-11.)

2. மத். 2-ம் அதி. 1-ம் வசன வியாக்கியானம் காண்க.

13. அவர் வாசற்கதவைத் தட்டின போது, ரோதே என்னும் பெயருள்ள ஓர் மங்கை வந்து ஒட்டுக்கேட்டு,

14. இராயப்பருடைய குரல்சத்தத்தை அறிந்து, சந்தோஷத்தினாலே கதவைத் திறவாமல், உள்ளே ஓடிப் போய்: இராயப்பர் வாசலுக்குமுன்னே நிற்கிறார் என்று அறிவித்தாள்.

15. அதற்கு அவர்கள்: நீ பிதற்றுகிறாய் என்றார்கள். அவளோ தான் சொன்னது உண்மையென்று சாதிக்கவே, அவர்கள்: அது அவருடைய சம்மனசாக்கும் என்றார்கள்.

16. இராயப்பரோ விடாமல் தட்டிக்கொண்டிருந்தார். அப்பொழுது அவர்கள் கதவைத் திறந்து, அவரைக் கண்டு, பிரமித்தார்கள்.

17. ஆனால் அவர்கள் பேசாதிருக்கும்படி அவர் கைச்சயிக்கினைசெய்து, சிறையினின்று ஆண்டவர் தன்னை விடுவித்த விதத்தை அவர்களுக்கு விவரித்து, இந்தச் செய்தியை யாகப்பருக்கும் சகோதரர்களுக்கும் அறிவியுங்கள் என்று சொல்லி, புறப்பட்டு வேறோரிடத்துக்குப் போனார்.

18. பொழுது விடிந்தபின்பு, இராயப்பர் என்னமாய்ப் போனார் என்பதின் பேரில் சேவகர்களுக்குள்ளே உண்டான கலக்கம் கொஞ்சமல்ல.

19. எரோது என்பவன் அவரைத் தேடியும், காணாததினாலே காவற்காரர்களை விசாரணைசெய்து, அவர்களைக் கொலைக்களத்துக்குக் கொண்டுபோகக் கட்டளையிட்டான். பின்னும் அவன் யூதேயாவை விட்டுச் செசாரையாப் பட்டணத்துக்குப் போய், அங்கே வாசம்பண்ணினான்.

20. அக்காலத்திலே அவன் தீர் நகரத்தார்பேரிலும் சீதோன் நகரத்தார் பேரிலும் கோபங்கொண்டவனாயிருந்தான். ஆனால் அவர்களுடைய நாடுகள் அந்த அரசனுடைய நாட்டிலிருந்து அன்னவாக்கங்களைப் பெற்றுவந்தபடியால், அவர்கள் ஒருமித்து அவனிடத்தில் வந்து, அரமனை விசாரணைக்காரனாகிய பிளாஸ்தென்பவனை வசப்படுத்திச் சமாதானம் கேட்டுக்கொண்டார்கள்.

21. ஆதலால் குறிக்கப்பட்ட நாளிலே எரோதென்பவன் இராஜ உடையணிந்து சிம்மாசனத்தில் உட்கார்ந்து, அவர்களுக்குப் பிரசங்கஞ்செய்தான்.

22. அப்பொழுது ஜனங்கள்: இது தெய்வ குரலேயொழிய மனுஷகுரல் அல்ல என்று ஆர்ப்பரித்தார்கள்.

23. ஆனால் அவன் சர்வேசுரனை மகிமைப்படுத்தாத நிமித்தம் அக்ஷணமே தேவதூதன் அவனை அடித்தார்; அவனும் புழுத்துச் செத்தான்.

24. அப்படியிருக்க, ஆண்டவருடைய வாக்கியம் வர்த்தித்துப் பலுகி வந்தது.

25. பார்னபாவும், சவுலும் தங்கள் அலுவலை நிறைவேற்றின பின்பு, மாற்கு என்னும் காரணப் பெயர்கொண்ட யோவானைக் கூட்டிக்கொண்டு, எருசலேம் நகரத்தைவிட்டுத் திரும்பினார்கள் (அப. 11-30.)

15. ஒவ்வொருவருக்கும் ஒரு சம்மனசு காவலாயிருக்கிறாரென்கிற சத்தியத்தை அக்காலத்துக் கிறீஸ்துவர்களும் அறிந்து, விசுவசித்தார்களென்பதற்கு இவ்வாக்கியம் அத்தாட்சியாயிருக்கிறது.

## 13-ம். அதிகாரம்.

பர்னபாவும், சவுலும் பிரசங்கிப்பதற்குத் தெரிந்துகொள்ளப்பட்டதும், இவர்கள் சிப்புரு தீவிலும் பிஜிதியாவிலுள்ள அந்தியோக்கியாவிலும் பிரசங்கித்ததும்.

1. அந்தியோக்கியா நகரத்திலுள்ள திருச்சபையிலே தீர்க்கதரிசிகளும், வேதபாரகர்களும் இருந்தார்கள். அவர்களில் பர்னபாவும் நீகரென்னப்பட்ட சீமோனும், சீரேன் ஊராகிய லூகியும், சதுர்த்தபாகபதியாகிய எரோதோடு உடன்செவிலிப் பிள்ளையாயிருந்த மனயனும், சவுலும் இருந்தார்கள்.

2. அவர்கள் கர்த்தருக்குத் தேவாராதனை செய்து உபவாசித்துவருகையில், சவுலையும், பர்னபாவையும் நாம் நியமித்து அழைத்த ஊழியத்திற்காக நமக்குப் பிரித்துவிடுங்கள் என்று இஸ்பிரீத்துசாந்து அவர்களுக்குத் திருவுளம்பற்றினார்.

3. அப்பொழுது அவர்கள் உபவாசித்து, ஜெபஞ்செய்து இவர்கள்மேல் கரங்களை வைத்து, இவர்களைப் போக விடைகொடுத்தார்கள்.

4. அப்படியே இவர்கள் இஸ்பிரீத்துசாந்துவினால் அனுப்பப்பட்டுச் செலுசியாவுக்குப் புறப்பட்டுப் போய், அங்கிருந்து சிப்புருதீவுக்குக் கப்பல் யாத்திரை செய்தார்கள்.

5. பின்னும் சலாமினா என்னும் பட்டணத்துக்குப் போய், யூதர்களுடைய ஜெப ஆலயங்களில் தேவ வாக்கியத்தைப் பிரசங்கித்தார்கள். யோவானும் இவர்களுக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தான்.

6. இவர்கள் அந்தத் தீவெங்கும் சுற்றித்திரிந்து, பாப்போஸ் என்னும் பட்டணத்துக்கு வந்தபோது, மாயவித்தைக்காரனும் கள்ளத் தீர்க்கதரிசியுமாகிய பார்யேசு என்னும் பெயருள்ள ஓர் யூதனைக் கண்டார்கள்.

7. அவன் விவேகமுள்ள மனிதனாகிய ஜெர்ஜியு பவுல் என்னும் அதிபதியோடுகூட இருந்தான். அந்த அதிபதி பர்னபாவையும், சவுலையும் அழைப்பித்து, அவர்களிடத்தில் தேவ வாக்கியத்தைக் கேட்க ஆசித்தான்.

8. ஆனால் மந்திரவாதியென்னும் பொருள்படும் பெயரையுடைய அந்த எலிமா என்பவன் அதிபதியை விசுவாசத்தினின்று விலக்கும்படி வழி தேடிக்கொண்டு, அவர்களோடு எதிர்த்து நின்றான்.

9. அப்பொழுது சின்னப்பரென்றுஞ் சொல்லப்படுகிற சவுல் இஸ்பிரீத்துசாந்துவினால் நிறைந்தவராய் அவனை உற்றுப்பார்த்து :

10. ஓ, எவ்வித கபடமும், எவ்வித வஞ்சனையும் நிறைந்தவனே, பேயின் மகனே, நீதிக்கெல்லாம் பகைஞனே, நீ ஆண்டவருடைய செவ்வையான வழிகளை ஓயாமல் புரட்டுகிறாயே !

---

1. இந்த எரோதுதான் ஸ்நாபக அருளப்பரைத் தலை வெட்டுவித்து, யேசுநாதருக்கும் பரியாசமாக வெள்ளைச் சட்டையைத் தொடுவித்தவன்.

3. இந்தச் சடங்கினாலே அர்ச். சின்னப்பரும், பர்னபாவும் மேற்றிராணப்பட்டத்துக்கு ஏற்படுத்தப்பட்டார்கள். அதுமுதற்கொண்டு கத்தோலிக்கு ரோமான் திருச்சபையில் குருப்பட்டமும், மேற்றிராணப்பட்டமும் உபவாசம், ஜெபம், கைநீட்டுதல் என்கிற மூன்று திருச்சடங்குகளோடு கொடுக்கப்படுகிறது. அதற்காகவே வருஷத்தில் சதுர்காலங்களுங் குறிக்கப்பட்டிருக்கிறது. இதுமுதல் அர்ச். சின்னப்பர் யூதேயா தேசத்தைவிட்டுப் புறஜாதிகளான அஞ்ஞானிகள் நடுவில் வேதத்தைப் போதித்த வரலாறு சொல்லப்படுகிறது.

11. இப்பொழுது, இதோ ஆண்டவருடைய கரம் உன்மேலிருக்கிறது. நீ குருடனாய்ச் சிலகாலம் சூரியனைக் காணாதிருப்பாய் என்றார். உடனே மாசும் இருளும் அவன்மேல் விழவே, அவன் தனக்குக் கைலாகு கொடுக்கும்படியான ஒருவனைச் சுற்றிலும் தடவித் தேடிக்கொண்டிருந்தான்.

12. அப்பொழுது அதிபதி சம்பவித்ததைக் கண்டு, ஆண்டவருடைய போதகத்தைக் குறித்து ஆச்சரியப்பட்டு விசுவாசியானான்.

13. பின்பு சின்னப்பரும் அவரோடிருந்தவர்களும் பாப்போஸ் பட்டணத்தைவிட்டு, கப்பல் யாத்திரைசெய்து பம்பீலியா நாட்டிலுள்ள பெர்க்கே நகரத்துக்கு வந்தார்கள். யோவான் அவர்களை விட்டுப் பிரிந்து, எருசலேமுக்குத் திரும்பிப்போனான்.

14. அவர்கள் பெர்க்கே நகரத்தை விட்டுப் பிஜிதியா நாட்டிலுள்ள அந்தியோக்கியாபுரிக்கு வந்தார்கள். அங்கே அவர்கள் ஓய்வுநாளிலே ஜெப ஆலயத்தில் பிரவேசித்து உட்கார்ந்தார்கள்.

15. நியாயப்பிரமாணமும், தீர்க்கதரிசிகளுடைய ஆகமமும் வாசித்துமுடிந்தபின்பு, ஜெப ஆலயத்தலைவர்கள் அவர்களிடத்தில் ஆளனுப்பி: சகோதரரே, நீங்கள் ஜனங்களுக்கு யாதொரு புத்தி, பிரசங்கம் சொல்லும்படியாயிருந்தால் சொல்லுங்கள் என்றார்கள்.

16. அப்பொழுது சின்னப்பர் எழுந்திருந்து, கையால் மௌனங்கற்பித்துச் சொன்னதாவது: இஸ்ராயேல் பூமான்களே, தெய்வ பயமுள்ள ஜனங்களே, கேளுங்கள்.

17. இஸ்ராயேல் ஜனத்தின் தேவன் நம்முடைய பிதாக்களைத் தெரிந்துகொண்டு, எஜிப்துத் தேசத்திலே அவர்கள் பரதேசிகளாய்ச் சஞ்சரித்தபோது அந்த ஜனத்தை மேன்மைப்படுத்தி, தமது உன்னத கரத்தால் அவர்களை அதிலிருந்து வெளியேற்றினார். (யாத். 1-13-2.)

18. நாற்பது வருஷகாலமாய் வனாந்தரத்தில் அவர்களுடைய நடபடிக்கைகளைச் சகித்து, (யாத். 16-3.)

19. கானான் தேசத்திலுண்டான ஏழு ஜாதியாரான ஜனங்களையும் சங்கரித்து, அந்தத் தேசத்தை அவர்களுக்குச் சீட்டுப்போட்டுப் பகிர்ந்துகொடுத்தார். (யோசு. 14-2; 24-11.)

20. இது ஏறக்குறைய நானூற்றைம்பது வருஷமானபின்பு சம்பவித்தது. மீளவும் அதின்பின் சாமுவேல் தீர்க்கதரிசிவரைக்கும் அவர்களுக்கு நடுவர்களைக்கொடுத்தார். (நடு. 3-9.)

21. அதுமுதல் அவர்கள் தங்களுக்கு ஓர் ராஜா வேண்டுமென்று கேட்டார்கள். ஆகையால் சர்வேசுரன் பெஞ்ஜமீன் கோத்திரத்தானும், கிசின் குமாரனுமாகிய சவுல் என்பவனை நாற்பது வருஷகாலமாய் அவர்களுக்குக் கொடுத்தார். (1 அரச. 8-10.)

22. பின்பு அவனைத் தள்ளி, தாவீதை அவர்களுக்கு ராஜாவாக ஏற்படுத்தி: ஏசையின் குமாரனாகிய தாவீதை நமது இருதயத்துக்கு ஏற்ற மனிதனாகக் கண்டோம்! அவன் நமது சித்தத்தையெல்லாம் நிறைவேற்றுவான் என்று அவனைக்குறித்துச் சாட்சியமும் கொடுத்தார். (1 அரச. 13-14; 16-13; சங். 88-21.)

14. இங்கே குறிக்கப்படுகிற அந்தியோக்கியா அர்ச். இராயப்பர் பத்திராசனம் ஸ்தாபித்த அந்தியோக்கியாபுரியல்லவென்றறிக. இது சின்ன ஆசியாவின் ஒரு பாகமாகிய பிஜிதியா நாட்டின் பிரதான பட்டணமாம்.

18. இவ்வசனம் கிரேக்குப் பாஷைப் பிரதியில், நாற்பது வருஷமாய் வனாந்தரத்தில் அவர்களைக் காப்பாற்றி ஆதரித்தாரென்றிருக்கக் காண்கிறோம்.

23. அவருடைய சந்ததியினின்று சர்வேசுரன் தமது வாக்குத்தத்தத்தின்படியே இஸ்ராயேலருக்கு இரட்சகராக யேசுநாதனை எழும்பச் செய்தார். (இசை. 11-1.)

24. இவருடைய வருகைக்கு முன்னே அருளப்பர் இஸ்ராயேல் ஜனங்கள் அனைவருக்கும் தவத்தின் ஞானஸ்நானத்தைப் பிரசங்கித்துவந்தார். (மத். 3-2.)

25. மீளவும் அருளப்பர் தமது அயனத்தை முடித்துவருகையில், ஜனங்களைநோக்கி: நீங்கள் நினைக்கிறவர் நான் அல்ல. இதோ, அவர் எனக்குப்பின் வருகிறார்; அவருடைய பாதரட்சைகளை அவிழ்க்க நான் பாத்திரவானல்ல என்றார். (மத். 3-11.)

26. சகோதர பூமான்களே, அபிரகாமின் வம்ச புத்திரரே, தெய்வ பயமுள்ளவர்களே, இந்த இரட்சணிய வாக்கியம் உங்களுக்கு அனுப்பப்பட்டிருக்கிறது.

27. எருசலேம நகரத்தில் வசித்திருநதவர்களும, அவர்களுடைய தலைவர்களும் அவரையும், ஓய்வுநாள்தோறும் வாசிக்கப்படுகிற தீர்க்கதரிசனங்களையும் அறிந்துகொள்ளாமல், அவருக்கு ஆக்கினைத் தீர்வையிட்டதினால் (அந்த வாக்கியங்களை) நிறைவேற்றினார்கள்.

28. மரணாக்கினைக்கு ஏதுவான ஒரு முகாந்தரத்தையும் அவரிடத்தில் காணாதிருந்தும், அவரைக் கொலைசெய்யும்படி பிலாத்துவினிடத்தில் கேட்டுக்கொண்டார்கள். (மத். 28-20.)

29. அவரைக்குறித்து எழுதப்பட்டிருந்த எல்லாவற்றையும் அவர்கள் நிறைவேற்றினபின்பு, அவரை மரத்திலிருந்து இறக்கி, அவரைக் கல்லறையில் வைத்தார்கள்.

30. ஆனால், மூன்றாம் நாளில் சர்வேசுரன் அவரை மரித்தோரிலிருந்து உயிர்ப்பித்தார். (மத். 28-1.)

31. அவர் தம்மோடு கூடக் கலிலேயாவிலிருந்து எருசலேமுக்கு வந்தவர்களுக்கு அநேக நாள் தரிசனமானார். அவர்கள் இதுவரைக்கும் ஜனங்களுக்குமுன்பாக அவருக்குச் சாட்சிகளாயிருக்கிறார்கள். (மத். 28, மாற். 16.)

32-33. நீர் என் குமாரனாயிருக்கிறீர், இன்று உம்மைச் செனிப்பித்தேன் என்று இரண்டாம் சங்கீதத்திலே எழுதப்பட்டபடியே, சர்வேசுரன் யேசுநாதரை மரித்தோரினின்று உயிர்ப்பித்ததினாலே அவர் நம்முடைய பிதாக்களுக்குச் செய்தருளிய வாக்குத்தத்தத்தை அவர்களுடைய பிள்ளைகளாகிய நமக்கு நிறைவேற்றினார் என்று நாங்களும் உங்களுக்கு அறிவிக்கிறோம். (சங். 2-7.)

34. இனி அவர் அழிவுக்குள்ளாகாதபடி, அவரை மரித்தோரினின்று எழுப்பினாரென்பதைக் குறித்து: தாவீதுக்கு அருளிய பரிசுத்தமானவைகளைப் பிரமாணிக்கமாய் உங்களுக்குக் கொடுப்பேன் என்றார். (இசை 55-3.)

35. இதைப்பற்றியே வேறோரிடத்திலும்: உம்முடைய பரிசுத்தர் அழிவைக் காணவொட்டீர் என்றார். (சங். 15- .)

36. தாவீதோவெனில் தன்னாயுசு நாட்களில் சர்வேசுரனுடைய சித்தத்தை நிறைவேற்றினபின்பு, மரண நித்திரையடைந்து, தம்முடைய பிதாக்களோடு சேர்க்கப்பட்டு, அழிவைக்கண்டார். (3 அரச. 2-10.)

37. மரித்தோரினின்று சர்வேசுரனாலே உயிர்ப்பிக்கப்பட்டவரோ அழிவைக் கண்டவரல்ல.

38. ஆகையால் சகோதர பூமான்களே, இவர் மூலமாய் உங்களுக்குப் பாவ மன்னிப்பும், மோயீசனுடைய நியாயப் பிரமாணத்தில் உங்களை நீதிமான்களாக்கக் கூடாத சகல விஷயங்களிலுமின்று (விடுதலையும்) அறிவிக்கப்படுகிறதென்று உங்களுக்குத் தெரிந்திருக்கக்கடவது.

39. இவரில் விசுவாசம் வைக்கிற எவனும் நீதிமானாக்கப்படுகிறான் (ரோ. 8-3.)

40. ஆகையால் தீர்க்கதரிசிகளின் ஆகமங்களிலே சொல்லப்பட்டிருப்பது உங்கள்மேல் வராதபடி பார்த்துக் கொள்ளுங்கள். அதாவது :

41. புறக்கணிக்கிறவர்களே பாருங்கள், பிரமித்து அழிந்துபோங்கள ; ஏனெனில் உங்கள் நாட்களில் நான் ஒரு கிரியையை நடப்பிப்பேன். அந்தக் கிரியையை யாதொருவன் உங்களுக்கு விவரித்துச் சொன்னாலும் விசுவசிக்கமாட்டீர்கள் என்பதே என்றார். (அபகூக். 1-5.)

42. அவர்கள் வெளியே புறப்படுகையில், அடுத்த ஓய்வுநாளிலே இந்த வாக்கியங்களைத் தங்களுக்குத் திரும்பவுஞ் சொல்லும்படி அவர்களை மன்றாடினார்கள்.

43. மீளவும் சபை கலைந்துபோன பின்பு யூதர்களிலும், யூதர்மார்க்கத்தில் சேர்ந்த பக்தியுள்ளவர்களிலும் அநேகர், சின்னப்பனையும், பானபாவையும் பின்தொடர்ந்தார்கள். இவர்கள் அவர்களோடு பேசி, சர்வேசுரனுடைய வரப்பிரசாதத்தில் நிலைத்திருக்கும்படி அவர்களுக்குப் புத்திசொன்னார்கள்.

44. மறு ஓய்வுநாளிலே சற்றுக்குறைய பட்டணத்தார் அனைவரும் தேவ வாக்கியத்தைக் கேட்கும்படி வந்து கூடியிருந்தார்கள்.

45. ஜனக்கும்பலைக் கண்டு, யூதர்கள் பொறாமை நிறைந்தவர்களாய், சின்னப்பரால் சொல்லப்படுகிறவைகளுக்கு விரோதமாய்ப்பேசித் தூஷித்துக்கொண்டிருந்தார்கள்.

46. அப்பொழுது சின்னப்பரும், பானபாவும் தைரியத்தோடு அவர்களை நோக்கி : சர்வேசுரனுடைய வாக்கியத்தை முந்தி உங்களுக்குப் பிரசங்கிக்க வேண்டியதாயிருந்தது. நீங்களோ இதை வெறுத்துத் தள்ளி, நித்திய சீவியத்துக்கு உங்களை அபாத்திரவான்களாகத் தீர்த்துக்கொள்ளுகிறீர்கள். ஆகையால் இதோ, (உங்களைவிட்டு) புறஜாதியாரிடத்திற்குப் போகிறோம்.

47. ஏனெனில்: நீர் பூமியின் கடைசி எல்லைமட்டும் இரட்சிப்பாயிருக்கும்படிக்கு உம்மைப் புறஜாதியாருக்கு ஒளியாக ஏற்படுத்தினேன், என்றபடி ஆண்டவர் எங்களுக்கு இவ்விதமாய்க் கட்டளையிட்டிருக்கிறார் என்றார்கள்.

48. புறஜாதியார் இதைக்கேட்டுச் சந்தோஷப்பட்டு, ஆண்டவருடைய வாக்கியத்தை மகிமைப்படுத்தினார்கள். நித்திய சீவியத்துக்கு முன்னியமம் பெற்றிருந்த யாவரும் விசுவாசிகளானார்கள்.

49. அப்பொழுது ஆண்டவருடைய வாக்கியம் அந்த நாடெங்கும் பரம்பிற்று.

43. யூதர் மார்க்கத்தில் சேர்ந்த பத்தியுள்ளவர்களென்பது அஞ்ஞானிகளாயிருந்து யூதருடைய வேதத்தில் சேர்ந்தவர்களான புறதேசத்தாரென்றறிக.

47. இதில் சொல்லப்பட்ட வாக்கியம் இசையாஸ் தீர்க்கதரிசனம் 49-ம் அதி. 6-ம் வசனத்தில் சர்வேசுரன் மெசியாவையும், அவரிடமாய் அவருடைய தூதர்களாகிய அப்போஸ்தலர்களையும் குறிப்பிட்டுச் சொன்னதாமே.

50. அப்படியிருக்க, யூதர்கள் பக்தியும் சங்கையும் பொருந்திய ஸ்திரீகளையும், பட்டணத்தில் முதன்மையானவர்களையும் ஏவிவிட்டு, சின்னப்பருக்கும் பர்னபாவுக்கும் விரோதமாய் ஓர் கலகத்தை மூட்டி, அவர்களைத் தங்கள் எல்லைகளுக்கு அப்பால் துரத்திவிட்டார்கள்.

51. ஆதலால் அவர்கள் தங்கள் கால்களில் படிந்த தூசியை அவர்களுக்கு எதிராக உதறிவிட்டு, இக்கோனியா நகரத்துக்குப் போனார்கள். (மத். 10-12.)

52. ஆயினும் சீஷர்கள் சந்தோஷத்தினாலும் இஸ்பிரீத்துசாந்துவினாலும் நிரப்பப்பட்டார்கள்.

## 14-ம். அதிகாரம்.

இக்கோனியா நகரத்தில் அர்ச். சின்னப்பரும் பர்னபாவும் பிரசங்கித்ததும், அந்தியோக்கியாவுக்குத் திரும்பிவந்ததுமாகிய வரலாறுகள்.

1. இக்கோனியா நகரத்தில் சம்பவித்ததேதெனில்: அவர்கள் இருவரும் ஒருமித்து, யூதர்களுடைய ஜெப ஆலயத்தில் பிரவேசித்துப் பிரசங்கித்த தன்மையால் யூதரிலும் கிரேக்கரிலும் திரளான ஜனங்கள் விசுவசித்தார்கள்.

2. ஆனால் அவிசுவாசிகளாயிருந்த யூதர்கள் சகோதரருக்கு விரோதமாய்ப் புற ஜாதியாருடைய மனதைத் தூண்டியெழுப்பிக் கோபத்தை மூட்டினார்கள்.

3. அப்படியிருந்தும், அவர்கள் அங்கே வெகுகாலம் தங்கியிருந்து, கர்த்தரை முன்னிட்டுத் தைரியமாய் முயன்று வந்தார்கள்; அவரும் தம்முடைய வரப்பிரசாத வாக்கியத்துக்குச் சாட்சியாக அதிசயங்களும் அற்புதங்களும் அவர்கள் கைகளால் செய்யப்படும்படி வரமளித்தார்.

4. ஆகையால் பட்டணத்து ஜனங்கள் பிரிந்து, சிலர் யூதர்பக்கத்திலும் சிலர் அப்போஸ்தலர்பக்கத்திலுமாகச் சேர்ந்திருந்தார்கள்.

5. அதைப்பற்றிப் புற ஜாதியாரும் யூதரும் தங்கள் தலைவர்களோடு கூட எழும்பி, அவர்களை அவமானப்படுத்திக் கல்லாலெறிய வேண்டுமென்று மும்முரமாயிருக்கையில்,

6. அவர்கள் இதை அறிந்து, விலகி, லிக்காவோனியா நாட்டின் பட்டணங்களாகிய லிஸ்திராவுக்கும், தெர்ப்பைக்கும், அவைகளைச் சுற்றிலுமுள்ள சகல கிராமங்களுக்கும் போய், அங்கே சுவிசேஷத்தைப் பிரசங்கித்துவந்தார்கள்.

7. அப்பொழுது லிஸ்திராப் பட்டணத்தில் கால் வழங்காத ஒருவன் உட்கார்ந்திருந்தான். அவன் தன் தாயின் வயிற்றிலிருந்து (பிறந்தது முதல்) சப்பாணியாய்க் கால் எடுத்து வைத்தவனல்ல.

8. அவன் சின்னப்பர் பேசுவதைக் கேட்டான். அவர் இவனை உற்றுப்பார்த்து, சௌக்கியமடைவதற்கான விசுவாசம் அவனிடத்தில் உண்டென்று கண்டு,

9. உரத்த சத்தமாய்: நீ எழுந்து, உன் காலை ஊன்றி நில்லு என்றார். அப்படியே அவன் குதித்து, நடந்தான்.

10. ஆதலால் ஜனங்கள் சின்னப்பர் செய்ததைக் கண்டமாத்திரத்தில் உரத்த சத்தமாய்க் கூப்பிட்டு: தேவர்கள் மனித ரூபமாய் நம்மிடத்தில் இறங்கிவந்திருக்கிறார்கள் என்று லிக்காவோனியா பாஷையிலே சொல்லி, (அப். 28-6.)

11. பர்னபாவை யூபித்தேர் என்றும், சின்னப்பர் பிரதான பிரசங்கியானதால் அவரை மெர்க்கூரி என்றும் கூப்பிட்டார்கள்.

12. இதுவுமன்றி, பட்டணத்து வாசலண்டையிலிருந்த யூபித்தேருடைய கோவில் பூசாரி எருதுகளையும் பூமாலைகளையும் வாசலண்டையில் கொண்டு வந்து, ஜனங்களோடுகூட அவர்களுக்கு ஓர் பலியிட மனதாயிருந்தான்.

13. அப்போஸ்தலர்களாகிய பர்னபாவும், சின்னப்பரும் இதைக்கேட்டுத் தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, ஜனக்கும்பலுக்குள்ளே பாய்ந்து, உரத்த சத்தமாய்ச் சொன்னதாவது:

14. மனிதர்களே, ஏன் இப்படிச் செய்கிறீர்கள்? நாங்களும் உங்களைப்போல சாவுக்குரிய மனுஷர்களல்லோ; நீங்கள் வியர்த்தமான இந்தத் தேவர்களை விட்டு, பரலோகத்தையும் பூலோகத்தையும் சமுத்திரத்தையும் அவைகளிலுள்ள எல்லாவற்றையும் உண்டாக்கின சுயஞ்சீவியரான சர்வேசுரனிடத்தில் மனந்திரும்பும்பொருட்டு உங்களுக்குப் பிரசங்கிக்கிறோம்.

15. சென்ற காலங்களில் அவர் சகல புற ஜாதிகளையும் தங்கள்தங்கள் வழிகளில் நடக்கவிட்டிருந்தும்,

16. அவர் நன்மை செய்து, வானத்திலிருந்து மழைகளையும் செழிப்பான காலங்களையுந் தந்து, போஜனத்தினாலும் மகிழ்ச்சியினாலும் நம்முடைய இருதயங்களை நிரப்பி, இவ்விதமாய்த் தம்மைக் குறித்துச் சாட்சி விளங்கப் பண்ணாதிருக்கவில்லை என்றார்கள்.

17. அவர்கள் இப்படிச் சொல்லியும், தங்களுக்கு ஜனங்கள் பலியிடாதபடி தடுப்பது அரிதாயிருந்தது.

18. அப்படியிருக்க, அந்தியோக்கியாவிலும், இக்கோனியாவிலுமிருந்து சில யூதர்கள் திடீரென வந்து, ஜனங்களைத் தங்கள் வசப்படுத்தி, சின்னப்பரைக் கல்லாலெறிந்து, அவர் மரித்தாரென்று எண்ணிப் பட்டணத்துக்கு வெளியே அவரை இழுத்துக்கொண்டு போனார்கள்.

19. ஆயினும் சீஷர்கள் அவரைச் சூழ்ந்து நிற்கையில், அவர் எழுந்து, பட்டணத்துக்குள் பிரவேசித்து, மறுநாள் பர்னபாவோடுகூடத் தெர்பைக்குப் புறப்பட்டுப்போனார்.

20. அந்தப் பட்டணத்திலே அவர்கள் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து அநேகருக்கு உபதேசித்தபின் லீஸ்திராவுக்கும், இக்கோனியாவுக்கும், அந்தியோக்கியாவுக்கும் திரும்பிவந்து,

21. சீஷர்களுடைய மனதை உறுதிப்படுத்தி, விசுவாசத்தில் நிலைமையாயிருக்கும்படி புத்திசொல்லி: நாம அநேக உபத்திரவங்களின் வழியாய்ச் சர்வேசுரனுடைய இராச்சியத்தில் பிரவேசிக்கவேண்டும என்றார்கள். (மத். 16-24.)

22. அல்லாமலும் ஒவ்வொரு சபைகளிலும அவர்களுக்குக் குருக்களை ஏற்படுத்தி, உபவாசித்து ஜெபம்பண்ணி, அவர்கள் விசுவசித்த ஆண்டவருடைய அடைக்கலத்தில் அவர்களை ஒப்புவித்தார்கள்.

23. பின்னும் பிஜிதியா நாட்டைக் கடந்து, பம்பீலியா நாட்டுக்கு வந்தார்கள்.

24. மீண்டும் பெர்க்கே நகரத்தில் ஆண்டவருடைய வாக்கியத்தைப் பிரசங்கித்து, அத்தாலியாப் பட்டணத்துக்குப் போனார்கள்.

11. யூபித்தேர் என்பது கிரேக்கருக்கும் ரோமானருக்கும் முதல் தெய்வமாயிருந்தது. மெர்க்கூரி என்பது அவர்களுக்கு வாய்ச்சாலக தெய்வமாம்.

25. அவ்விடத்திலிருந்து கப்பலேறி, அந்தியோக்கியாவுக்குப் புறப்பட்டார்கள். இவ்விடத்திலிருந்துதான் அவர்கள் தாங்கள் முடித்துவந்த வேலையின் நிமித்தம் சர்வேசுரனுடைய வரப்பிரசாதத்துக்கு ஒப்புவிக்கப்பட்டிருந்தார்கள். (அப். 13-1.)

26. அவர்கள், அங்கே சேர்ந்தபின், சபையைக்கூட்டி, சர்வேசுரன் தங்களைக்கொண்டு எவ்வளவு பெரிதானவைகளைச் செய்தாரென்றும், புறஜாதியார்களுக்கு விசுவாச வாசலைத் திறந்தாரென்றும் அறிவித்து, (தீத்து. 1-5.)

27. அங்கே சீஷர்களோடு பலநாள் சஞ்சரித்தார்கள்.

## 15-ம். அதிகாரம்.

*விருத்தசேதனத்தைக் குறித்து உண்டான தர்க்கமும், எருசலேம் பட்டணத்துச் சங்கத்தின் தீர்மானமும் வருமாறு.*

1. அப்படியிருக்க, சிலர் யூதேயாவிலிருந்து வந்து: நீங்கள் மோயீசனுடைய முறைமையின்படி விருத்தசேதனம் பெறாவிட்டால், இரட்சிக்கப்படமாட்டீர்கள் என்று சகோதரர்களுக்குப் போதித்தார்கள். (கலா. 5-2.)

2. அதின் நிமித்தம் அவர்களுக்கும், சின்னப்பர், பர்னபா என்பவர்களுக்கும் மிகுந்த வாக்குவாதம் உண்டானதால், இவ்விஷயத்தைக்குறித்துச் சின்னப்பரும், பர்னபாவும், எதிர்ப்பக்கத்தில் சிலரும் எருசலேமிலுள்ள அப்போஸ்தலர்களிடத்திற்கும், குருக்களிடத்திற்கும் போகவேண்டும் என்று தீர்மானித்தார்கள்.

3. அந்தப்படி, அவர்கள் சபையாரால் வழியனுப்பப்பட்டு, பெனிக்கே, சமாரியா என்னும் நாடுகளின் வழியாய்ச் சென்று, புறஜாதியார்கள் மனந்திரும்பின செய்தியைப் பிரசித்தப்படுத்தி, சகோதரரெல்லாருக்கும் மிகுந்த சந்தோஷத்தை வருவித்தார்கள்.

4. அவர்கள் எருசலேமில் சேர்ந்தபோது சபையாராலும், அப்போஸ்தலர்களாலும், மூப்பர்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டு, சர்வேசுரன் தங்களைக்கொண்டு எவ்வளவு கனத்த காரியங்களைச் செய்தருளினாரென்று அறிவித்தார்கள்.

5. அப்பொழுது பரிசேயர் மார்க்கத்திலிருந்து விசுவாசிகளான சிலர் எழுந்து: அவர்கள் விருத்தசேதனம் பெறவும், மோயீசனுடைய நியாயப்பிரமாணத்தை அநுசரிக்கவும் கற்பிக்கப்படுவது அவசியம் என்றார்கள்.

6. ஆகையால் அப்போஸ்தலர்களும் மூப்பர்களும் இந்தக் காரியத்தை ஆராய்ந்துபார்க்கும்படி கூடினார்கள்.

7. நீண்ட தர்க்கமுண்டானதின்பேரில், இராயப்பர் எழுந்திருந்து அவர்களை நோக்கி: சகோதரரே, புறஜாதியார் என் வாயினால் சுவிசேஷ வாக்கியத்தைக் கேட்டு, விசுவசிக்கும்படி சர்வேசுரன் வெகு காலத்துக்குமுன்னே நமக்குள் (என்னைத்) தெரிந்துகொண்டாரென்று அறிந்திருக்கிறீர்களே. (அப். 10-20.)

8. இருதயங்களை அறிந்திருக்கிற சர்வேசுரன் நமக்குத் தந்தருளினதுபோல, அவர்களுக்கும் இஸ்பிரீத்துசாந்துவைத் தந்தருளி, அத்தாட்சி கொடுத்திருக்கிறார். (அப். 10-45.)

9. அன்றியும் அவர் விசுவாசத்தினாலே அவர்களுடைய இருதயங்களைச் சுத்தமாக்கி, அவர்களுக்கும் நமக்கும் ஓர் வித்தியாசமுஞ் செய்யாதிருக்கிறார்.

25. **சர்வேசுரனுடைய வரப்பிரசாதத்துக்கு ஒப்புவிக்கப்பட்டிருந்தார்கள்:**— சின்னப்பரும், பர்னபாவும் அந்தியோக்கியாவிலிருக்கையில் அஞ்ஞானிகளுக்குப் பிரசங்கிக்கும்படியாய் இஸ்பிரீத்துசாந்துவின் ஏவலின்படி அங்கிருந்த சபையின் மூப்பர்களால் அனுப்பப்பட்டார்கள். அப். நட. 13 அதி. 2 வச. காண்க.

10. அப்படியிருக்க, நம்முடைய பிதாக்களாலும், நம்மாலும் சுமக்கக் கூடாதிருந்த நுகத்தடியை இப்போது சீஷர்களுடைய கழுத்திலே சுமத்துவதினால் நீங்கள் சர்வேசுரனைச் சோதிப்பானேன்?

11. ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்து நாதருடைய வரப்பிரசாதத்தினாலே இரட்சிக்கப்படுவோமென்று நாம் விசுவசிக்கிறோமே; அவர்களும் அப்படியே விசுவசிக்கிறார்கள் என்றார். (எபே. 2-8.)

12. அப்பொழுது கூடியிருந்த யாவரும் மௌனமாயிருந்து, பர்னபாவும், சின்னப்பரும் தங்களைக்கொண்டு சர்வேசுரன் புற ஜாதியாருக்குள்ளே எப்படிப்பட்ட அதிசயங்களையும், அற்புதங்களையும் செய்தருளினார் என்று விவரித்துச் சொல்லுவதைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

13. இவர்கள் பேசி முடிந்தபிறகு, யாகப்பர் பேசத்தொடங்கி: சகோதரரே, நான் சொல்லுகிறதைக் கேளுங்கள்.

14. சர்வேசுரன் புற ஜாதிகளிலிருந்து தம்முடைய நாமத்திற்காக ஓர் ஜனத்தைத் தெரிந்துகொள்ளும்படி எவ்விதம் அவர்களை முந்தமுந்தக் கடாட்சித்தருளினார் என்று சீமோன் விவரித்தாரே.

15. எழுதப்பட்டிருக்கிறபடியே தீர்க்கதரிசிகளுடைய வாக்கியங்களும் அதற்கு ஒத்திருக்கின்றன: (எப்படியெனில்)

16. இதற்குப்பின் நாம் திரும்பிவந்து, விழுந்துபோன தாவீதின்கூடாரத்தை மறுபடியும் எழுப்பி, அதில் இடிந்துபோனவைகளை மறுபடியுங் கட்டி, அவைகளை உயர்த்தி ஸ்தாபிப்போம். (ஆமோஸ். 9-11, 12.)

17. இதினாலே மீதியான மனுஷரும், நமது நாமத்தைத் தரித்திருக்கும் சகல ஜாதிகளும் ஆண்டவரைத் தேடும்படியாகுமென்று இவைகளைச் செய்கிற ஆண்டவர் சொல்லுகிறார் என்பதே.

18. உலகாதிமுதல் ஆண்டவருக்குத் தம்முடைய செய்கை அறியப்பட்டிருக்கிறது.

19. ஆகையால் புற ஜாதியாரிலிருந்து ஆண்டவரிடமாய் மனந்திரும்புகிறவர்களைக் கலங்கடிக்கலாகாதென்றும்,

20. ஆயினும் விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்ட அசுசியானவைகளுக்கும், வேசித்தனத்திற்கும், மூச்சடைத்துச் செத்தவைகளுக்கும், இரத்தத்திற்கும் அவர்கள் விலகியிருக்கும்படி அவர்களுக்கு எழுதவேண்டுமென்றும் எண்ணுகிறேன். (ஆதி. 9-4; லேவி. 3-17; 1 கொ. 8-1; தெச. 4-3.)

21. ஏனெனில் பூர்வீகமுதல் எல்லாப் பட்டணங்களிலுமுள்ள ஜெப ஆலயங்களில் மோயீசனுடைய ஆகமங்களைப் பிரசங்கிக்கிறவர்கள் உண்டு. அவைகளில் ஓய்வு நாட்கள்தோறும் (அவருடைய ஆகமங்கள்) வாசிக்கப்படுகின்றதே என்றார்.

---

11. இதிலே அவர்களும் என்கிற வார்த்தையினால் அஞ்ஞானத்திலிருந்து ஞானஸ்நானம் பெற்றவர்கள் என்று அறிக.

13. இந்த யாகப்பர் அக்காலத்தில் எருசலேம் பட்டணத்தில் மேற்றிராணியாராயிருந்தார். (அப். நட. 12. அதி. 17. வச.)

14. இவ்விடத்தில் சர்வேசுரன் கெட்டுப்போன யூதஜனங்களுக்குப் பதிலாய் அஞ்ஞான தேசத்தாரிலிருந்து தமக்கு ஓர் ஜனத்தைத் தெரிந்துகொண்டதாகக் காட்டப்படுகிறது. (கோர்னேலியுஸ்)

22. அப்பொழுது தங்களில் சிலரைத் தெரிந்துகொண்டு, சின்னப்பரோடும், பர்னபாவோடும் அந்தியோக்கியாவுக்கு அனுப்புவது அப்போஸ்தலருக்கும், மூப்பருக்கும், சபையாரெல்லாருக்கும் நலமாகத் தோன்றிற்று. ஆகையால் சகோதரர்களுக்குள் பிரதான மனிதர்களாகிய பர்சபா என்ற காரணப்பேர் கொண்ட யூதாவையும், சீலாவையும் (தெரிந்துகொண்டார்கள்).

23. ஆதலால் அவர்களுடைய கைப்பட எழுதியனுப்பினதாவது: அப்போஸ்தலரும், மூத்தோரும், சகோதரருமாகிய நாங்கள் அந்தியோக்கியாவிலும், சீரியாவிலும், சிலிசியாவிலும் இருக்கிறவர்களாகிய புற ஜாதியினின்றுவந்த சகோதரருக்குச் சௌபாக்கிய (வாழ்த்துதல் சொல்லி, எழுதுவது):

24. எங்களுடைய கட்டளையில்லாமல், எங்களிடத்திலிருந்து சிலர் புறப்பட்டுவந்து, வார்த்தைகளால் உங்களைக் கலக்கி, உங்கள் ஆத்துமங்களை வாதைப்படச் செய்தார்களென்று நாங்கள் கேள்விப்பட்டதினாலே,

25-26. நமது கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய நாமத்தின் நிமித்தம் தங்கள் உயிர்களை ஒப்புக்கொடுக்கத் துணிந்தவர்களும், எங்களுக்கு மிகவும் பிரியமானவர்களுமாகிய பர்னபாவோடும், சின்னப்பரோடும் சில மனிதரைத் தெரிந்து உங்களிடத்திற்கு அனுப்புவது ஒன்றாய்க்கூடின எங்களுக்கு நலமாகத் தோன்றிற்று.

27. ஆதலால் யூதாவையும், சீலாவையும் அனுப்பியிருக்கிறோம். அவர்களும் இவைகளை உங்களுக்கு வாய்மொழியாக அறிவிப்பார்கள்.

28. அதேதெனில் பின்வரும் அவசியமான காரியங்களையல்லாதே மற்றொரு பாரத்தையும் உங்கள்மேல் சுமத்தப்படாதென்று இஸ்பிரீத்துசாந்துவுக்கும் எங்களுக்கும் (நலமாகத்) தோன்றிற்று.

29. எவையெனில் விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளுக்கும், இரத்தத்திற்கும், மூச்சடைத்துச் செத்தவைகளுக்கும், வேசித்தனத்திற்கும் நீங்கள் விலகியிருக்க வேண்டுமென்பதே. இவைகளை விலக்கி, உங்களைக் காத்துக் கொள்வீர்களானால் நன்மையாயிருக்கும். சுகமேயிருங்கள் என்று எழுதினார்கள்.

30. அப்படியே அவர்கள் அனுப்பப்பட்டு, அந்தியோக்கியாநகருக்கு வந்து, சபையைக்கூட்டி, நிருபத்தைக் கொடுத்தார்கள்.

31. அதை அவர்கள் வாசித்து, ஆறுதலடைந்து, சந்தோஷப்பட்டார்கள்.

32. மேலும் யூதா, சீலா என்பவர்களும் தீர்க்கதரிசிகளாயிருந்தபடியினாலே அநேக வாக்கியங்களால் சகோதரரைத்தேற்றித் திடப்படுத்தினார்கள்.

33. அங்கே சிலகாலஞ்சென்றபின்பு, அவர்கள் தங்களை அனுப்பினவர்களிடத்திற்குச் சகோதரர்களாலே சமாதான வாழ்த்துதலுடன் அனுப்புவிக்கப்பட்டார்கள்.

34. ஆயினும் சீலா என்பவருக்கு அங்கே தங்குவது நலமென்று தோன்றினபடியால், யூதா மாத்திரம் எருசலேமுக்குத் திரும்பிப்போனார்.

35. அப்படியிருக்க, சின்னப்பரும், பர்னபாவும் அந்தியோக்கியா நகரத்தில் தங்கியிருந்து, வேறே அநேகரோடுகூட ஆண்டவருடைய வாக்கியத்தைப் போதித்துப் பிரசங்கித்துக்கொண்டிருந்தார்கள்.

32. இவ்விடத்திலும் வேத புஸ்தகத்தின் அநேக இடங்களிலும் தீர்க்கதரிசிகளென்கிற வார்த்தையினால் வேதபாரகர்களும் போதகர்களும் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கிறவர்களும் குறிக்கப்படுகிறார்கள் என்றறிக.

36. சில நாட்களுக்குப் பின்பு, சின்னப்பர் பர்னபாவை நோக்கி: நாம் ஆண்டவருடைய வாக்கியத்தைப் பிரசங்கித்த சமஸ்த பட்டணங்களுக்கும் திரும்பிப்போய், சகோதரர்களைச் சந்தித்து, அவர்கள் எப்படியிருக்கிறார்களென்று பார்ப்போமாக என்றார்.

37. அப்பொழுது பர்னபா மாற்கு என்னுங் காரணப் பெயருள்ள யோவானையும் தங்களோடு கூட்டிக்கொண்டு போக மனதாயிருந்தார்.

38. ஆனால் அவன் பம்பீலியா நாட்டிலே அவர்களை விட்டுப் பிரிந்து, அவர்களோடு அலுவலுக்கு வராததினாலே அவனை ஏற்றுக்கொள்ளத் தகாது என்று சின்னப்பர் பர்னபாவை மன்றாடினார். (அப. 13-13.)

39. இதைப்பற்றி அவர்களுக்குள்ளே விகற்பமுண்டானதினால், அவர்கள் ஒருவர் ஒருவரைவிட்டுப் பிரிந்தார்கள். பர்னபா மாற்குவை அழைத்துக்கொண்டு, சீப்புரு தீவுக்கு யாத்திரையானார்.

40. சின்னப்பரோ சீலாவைத் தெரிந்துகொண்டு, சகோதரரால் தேவ கிருபைக்கு ஒப்பிக்கப்பட்டுப் புறப்பட்டார்.

41. அவர் சீரியா, சிலிசியா நாடுகளில் சுற்றித்திரிந்து, சபைகளை உறுதிப்படுத்தி, அப்போஸ்தலரும் மூப்பரும் இட்ட கட்டளைகளை அநுசரித்து வரும்படி கற்பித்தார்.

## 16-ம். அதிகாரம்.

சின்னப்பர் சபைகளைச் சந்தித்ததும், மக்கேதோனியாவில் பிரசங்கிக்கும்படி தரிசனத்தில் அழைக்கப்பட்டதும், பிலிப்பி நகரத்தில் மிலாறுகளால் அடிபட்டதுமாகிய வர்த்தமானங்கள்.

1. பின்பு அவர் தெர்பைக்கும், லீஸ்திராவுக்கும் வந்தார். அவ்விடத்தில் விசுவாசியான ஓர் யூத ஸ்திரீயின் மகனாகிய தீமோத்தேயு என்னும் ஒரு சீஷனிருந்தான்; அவனுடைய தகப்பன் அக்கியானி.

2. லீஸ்திராவிலும் இக்கோனியாவிலும் இருந்த சகோதரர்கள் அவனைக் குறித்து நற்சாட்சி சொன்னார்கள்.

3. சின்னப்பர் அவனைத் தம்மோடு கூட்டிக்கொண்டு போக விரும்பி, அவனை அழைத்து, அவ்விடங்களிலிருந்த யூதர்களின் நிமித்தம் அவனுக்கு விருத்தசேதனம்பண்ணினார். ஏனெனில் அவனுடைய தகப்பன் அக்கியானியென்று எல்லோரும் அறிந்திருந்தார்கள்.

---

39. இவ்விரு அர்ச்சியசிஷ்டவர்களும் நல்ல கருத்துக்காக வெவ்வேறு சித்தமானதைப்பற்றிப் பிரிந்து வெவ்வேறு தேசங்களிற் போய்ச் சத்தியவேதத்தைப் போதித்ததினால் திருச்சபைக்கு அதிக நன்மையானதொழிய அவர்களுக்குக் குற்றமானதல்ல.

1. தீமோத்தேயு என்பவர் லீஸ்திராப் பட்டணத்தில் பிறந்து தன் தாயாகிய எயுனிஸ் என்பவளோடு அர்ச். சின்னப்பரால் விசுவாசத்தைக் கைக்கொண்டிருந்தார் (அப். 14-6; 2 தீமோ 1-5) காண்க. அக்கியானி என்பது இவ்விடத்தில் கிரேக்கன் என்று அறிக.

3. முந்தின அதிகாரத்தில் சொல்லியபடி மனந்திரும்பிக் கிறீஸ்துவர்களாகிற புறஜாதியாருக்கு விருத்தசேதனஞ் செய்வது அவசரமல்லவென்று அர்ச். சின்னப்பர் எருசலேமில் கூடிய அப்போஸ்தலர் சங்கத்தில் தீர்மானிக்கும்படி செய்திருக்க, இப்போது தமது சீஷனாகிய தீமோத்தேயுவுக்கு விருத்தசேதனஞ் செய்வித்தது ஏனெனில் யூதரினிமித்தம் இப்படிச் செய்தாரென்று இவ்விடத்தில் சொல்லியிருக்கிறது. ஏனெனில் தீமோத்தேயுவினுடைய தகப்பன் புறஜாதியானானாலும், தாய் யூத ஸ்திரீயாயிருந்தாள். இவருக்கு விருத்தசேதனம் அவசரமில்லையென்றால், யூதருக்குள்ளும் விருத்தசேதனத்தை அழிக்கிறாரென்று யூதர்கள் நினைத்து, தம்மை அதிகமாய் விரோதிப்பார்களென உத்தேசித்து, விருத்தசேதனம் தன்னிலே குற்றமில்லாத காரியமாகையால் யூதர் தம்மை வீணாகை விரோதியாதபடி இவருக்கு விருத்தசேதனம் செய்வித்தாரென்றறிக.

4. பின்னும் அவர்கள் பட்டணங்கள்தோறுஞ் சுற்றிவருகையில், எருசலேமிலிருக்கும் அப்போஸ்தலர்களாலும் மூத்தோர்களாலும் விதிக்கப்பட்ட சட்டங்களை அநுசரிக்கும்படி அவர்களுக்குக் கற்பிப்பார்கள்.

5. இவ்விதமாய்ச் சபைகள் விசுவாசத்தில் உறுதிப்பட்டு, நாளுக்கு நாள் எண்ணிக்கையிலும் பெருகி வந்தது.

6. அவர்கள் பிரிஜியாவையும் கலாத்தியா நாட்டையுங் கடந்தபின்பு, ஆசியா தேசத்தில் சர்வேசுரனுடைய வாக்கியத்தைப் பிரசங்கியாதபடி இஸ்பிரீத்துசாந்துவினால் தடுக்கப்பட்டு,

7. மீசியா நாட்டிற்கு வந்து, பித்தினியா நாட்டில் பிரவேசிக்க எத்தனித்தார்கள். அதற்கும் யேசுநாதருடைய இஸ்பிரீத்துவானவர் உத்தரவளிக்கவில்லை.

8. அப்பொழுது அவர்கள் மீசியா நாட்டைக் கடந்து, துரோவா நாட்டிற்கு வந்திறங்கினார்கள். (அப். 20-6; 2 கொ. 2-12.)

9. அங்கே சின்னப்பருக்கு இரவில் ஓர் காட்சி காண்பிக்கப்பட்டது. அதாவது: மக்கேதோனியா தேசத்தாராகிய ஓர் மனிதன் வந்து நின்று, அவரை மன்றாடி: நீர் மக்கேதோனியாவுக்கு வந்து, எங்களுக்கு உதவிசெய்யும் என்று சொல்லக் (கண்டார்.)

10. அவர் அந்தக் காட்சியைக் கண்டபோது, அவர்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படி சர்வேசுரன் எங்களை அழைத்தாரென்று நிச்சயித்துக்கொண்டு, உடனே மக்கேதோனியாவுக்குப் புறப்படப் பிரயத்தனஞ் செய்தோம்.

11. ஆதலால் துரோவாவிலிருந்து கப்பல்யாத்திரை செய்து, நேரோட்டமாய்ச் சமோத்திராசியா தீவுக்கும், மறுநாளில் நேயாப்போலிக்குஞ் சென்று,

12. அங்கேயிருந்து பிலிப்பி நகரத்துக்கு வந்தோம். அது மக்கேதோனியா தேசத்தின் ஓர் பங்குக்குத் தலைமையான பட்டணமும், ரோமையர் குடியேறின ஸ்தலமுமாயிருந்தது. இந்தப் பட்டணத்திலே சில நாள் தங்கிப் பிரசங்கித்துக்கொண்டிருந்தோம்.

13. ஓய்வுநாளிலே நாங்கள் பட்டணத்தின் வாசலுக்கு வெளியேபோய், ஆற்றோரத்தில் வழக்கமாய் ஜெபம் நடக்கிறதாகத் தோன்றின இடத்தில் உட்கார்ந்து, அங்கே கூடிவந்த ஸ்திரீகளுக்கு உபதேசித்தோம்.

---

6. இங்கே சொல்லப்பட்ட ஆசியா தேசம் ஆசியாக்கண்டத்தின் வடமேற்கிலுள்ள சின்ன ஆசியா என்றறிக. இதினுடைய பிரதான பட்டணம் எபேஸ்; அதில் சுவிசேஷக அருளப்பர் வெகுகாலம் மேற்றிராணியாராயிருந்தார். அர்ச். சின்னப்பர் தற்காலத்துக்கு அங்கே போகக்கூடாதென்று இஸ்பிரீத்துசாந்து விலக்கினார்.

10. இந்த ஆகமத்தை எழுதிய அர்ச். லூக்காஸ் இதுவரையில் சரித்திரத்தைப் படர்க்கையிடமாய் எழுதியபின், இப்பொழுது திடீரென தன்மையிடமாய் எழுதுவதினால், இச்சமையத்திலேதான் அவர் அர்ச். சின்னப்பருடைய பயணத் துணைவராக அவரோடு சேர்ந்ததாகத் தெரியவருகிறது.

13. யூதர்கள் வெகு சொற்பப்பேராய்க் குடியிருந்த பட்டணங்களிலே ஜெப ஆலயங் கட்டக் கூடாதிருக்கும்போது, பட்டணத்துக்கு வெளியே அஞ்ஞானிகளுடைய வீடுகளுக்குத் தூரமாக ஒரு சிறு ஜெபக்கூடங் கட்டுவார்கள். அவர்களுடைய வேதாசார முறைமைப்படி ஸ்நான முதலியவை செய்யும்படி இந்த ஜெபக்கூடங்கள் கடலோரத்திலாவது ஆற்றோரங்களிலாவது கட்டப்பட்டிருக்கும்.

14. அப்போது தியத்தீரா நகரத்தாளும், தூமிரம் விற்பவளும், சர்வேசுரனை ஆராதிக்கிறவளுமாகிய லீதியாள் என்னும் ஓர் ஸ்திரீ கேட்டுக்கொண்டிருந்தாள். அவள் சின்னப்பரால் சொல்லப்பட்டவைகளைக் கவனிக்கும்படி, ஆண்டவர் அவளுடைய இருதயத்தைத் திறந்தருளினார்.

15. அவளும் அவளுடைய வீட்டாரும் ஞானஸ்நானம் பெற்றபிறகு, அவள் எங்களை மன்றாடி: நீங்கள் என்னை ஆண்டவருக்குப் பிரமாணிக்கமுள்ளவளென்று மதிப்பீர்களாகில், என் வீட்டில் வந்து, தங்கியிருங்கள் என்று எங்களை வருந்திக் கேட்டுக்கொண்டாள்.

16. பின்பு சம்பவித்ததேதெனில்: நாங்கள் ஜெபக்கூடத்திற்குப் போகையில், குறிசொல்லுகிற ஆவேஷமுள்ளவளும் குறிசொல்லுவதினால் தன் எஜமான்களுக்கு வெகு ஆதாயம் வருவித்தவளுமான ஓர் பெண் எங்களுக்கு எதிர்ப்பட்டாள்.

17. அவள் சின்னப்பனையும் எங்களையும் பின்தொடர்ந்து வந்து: இந்த மனிதர் உன்னத கடவுளின் ஊழியர், இவர்கள் உங்களுக்கு இரட்சணிய நெறியை அறிவிக்கிறவர்கள் என்றுகூவிச் சொன்னாள்.

18. இப்படி அவள் அநேக நாளாய்ச் செய்துகொண்டுவந்தாள். ஆகையால் சின்னப்பர் வருத்தப்பட்டுத் திரும்பிப்பார்த்து: நீ இவளைவிட்டுப் புறப்படும்படி யேசுக்கிறீஸ்துநாதருடைய நாமத்தினாலே உனக்குக் கட்டளையிடுகிறேன் என்று அந்த அரூபியைநோக்கிச் சொன்னார். அந்நேரமே அது புறப்பட்டுப் போயிற்று.

19. அப்போது அவளுடைய எஜமான்கள் தங்கள் ஆதாயத்தின் நம்பிக்கை அற்றுப்போயிற்றென்று கண்டு, சின்னப்பனையும், சீலாவையும் பிடித்து, சந்தைவெளியில் தலைவர்களிடத்திற்குக் கூட்டிக்கொண்டுபோனார்கள்.

20. பின்னும் அவர்களை அதிகாரிகளிடத்தில் ஒப்புவித்து: யூதர்களாகிய இந்த மனிதர்கள் நம்முடைய பட்டணத்தைக் கலகப்படுத்தி,

21. ரோமையராகிய நாம் ஏற்றுக்கொள்ளவும், அநுசரிக்கவுந் தகாத முறைமையைப் போதிக்கிறார்கள் என்று சொன்னார்கள்.

22. அப்பொழுது ஜனங்கள் அவர்களுக்கு விரோதமாய் எழும்பிவந்தார்கள். அதிகாரிகள் அவர்களுடைய வஸ்திரங்களைக் கிழித்து, மிலாறுகளால் அவர்களை அடிக்கக் கட்டளையிட்டார்கள். (2 கொ. 11-25; 1 தெச. 2-2.)

23. அப்படியே அவர்களை அநேகம் அடி அடித்தபின்பு, சிறைச்சாலையில் போட்டு, அவர்களைப் பத்திரமாய்க் காக்கும்படி காவற்காரனுக்குக் கட்டளையிட்டார்கள்.

24. அவன் இவ்வித கட்டளையைப் பெற்று, அவர்களைச் சிறைச்சாலையின் உட்கூடத்திலே போட்டு, அவர்களுடைய கால்களையும் கட்டையில் இறுக்கிமாட்டினான்.

25. நடு ராத்திரியில் சின்னப்பரும், சீலாவும் ஜெபஞ்செய்து, சர்வேசுரனை ஸ்துதித்தார்கள். சிறையிலிருந்தவர்களும் அதைக்கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

26. அப்பொழுது திடீரெனச் சிறைச்சாலையின் அஸ்திவாரங்கள் அசையும்படியாய்ப் பலத்த பூமியதிர்ச்சியுண்டாயிற்று. அக்ஷணமே கதவுகளெல்லாம் திறந்துபோனதுமன்றிச் சகலருடைய விலங்குகளும் கழன்று விழுந்தன.

27. அப்பொழுது சிறைக்காவற்காரன் நித்திரை தெளிந்து, சிறைச்சாலையின் கதவுகள் திறந்திருக்கிறதைக் கண்டு, விலங்குக்காரர் ஓடிப்போனார்களென்று எண்ணி, தன் பட்டயத்தை உருவித் தன்னைக் கொலைசெய்துகொள்ளப் பார்த்தான்.

28. சின்னப்பரோ உரத்த சத்தமிட்டு: உனக்கு ஒரு பொல்லாங்குஞ் செய்துகொள்ளாதே; நாங்கள் எல்லோரும் இங்கேதானிருக்கிறோம் என்றார்.

29. அப்பொழுது அவன் தீபங் கொண்டுவரச் சொல்லி, உள்ளே பிரவேசித்து, நடுநடுங்கிக்கொண்டு, சின்னப்பர் சீலா என்பவர்களுடைய பாதங்களில் விழுந்து,

30. அவர்களை வெளியே அழைத்து வந்து: சுவாமிமார்களே, இரட்சணியம் அடையும்படி நான் செய்யவேண்டியதென்ன என்றான்.

31. அதற்கு அவர்கள்: ஆண்டவராகிய யேசுநாதரை விசுவாசி. அப்போது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் என்று சொல்லி,

32. அவனுக்கும் அவன் வீட்டிலுள்ள யாவருக்கும் ஆண்டவருடைய வாக்கியத்தை உபதேசித்தார்கள்.

33. அவர்களை அவன் இரவின் அந்நேரத்திலேயே கூட்டிக்கொண்டு போய், அவர்களுடைய காயங்களைக் கழுவினான். மேலும் அவனும் அவன் வீட்டாரனைவரும் தக்ஷணமே ஞானஸ்நானம் பெற்றார்கள்.

34. பின்பு அவன் அவர்களைத் தன் வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய், அவர்களுக்குப் போஜனம் பரிமாறி, தன் வீட்டார் அனைவரோடுங்கூடச் சர்வேசுரன்பேரில் விசுவாசமுள்ளவனாய்ச் சந்தோஷித்திருந்தான்.

35. பொழுது விடிந்தபின்பு அதிகாரிகள்: அந்த மனிதர்களை விட்டுவிடுங்கள் என்று சொல்லிக் கட்டளைச்சேவகர்களை அனுப்பினார்கள்.

36. சிறைச்சாலைக் காவற்காரன் இந்த வார்த்தைகளைச் சின்னப்பருக்கு அறிவித்து: உங்களை விடுதலையாக்கும்படி அதிகாரிகள் கட்டளையனுப்பியிருக்கிறார்கள். ஆகையால் நீங்கள் இப்பொழுது புறப்பட்டுச் சமாதானத்துடனே போங்கள் என்றான்.

37. சின்னப்பரோ, அவர்களை நோக்கி: ரோமையராகிய எங்களை அவர்கள் நியாயம்விசாரியாமல் பிரசித்தமாய் அடித்துச் சிறைச்சாலையிலே போட்டார்கள். இப்போது எங்களை இரகசியமாய் வெளியிலே தள்ளுகிறார்களோ? அப்படியல்ல; அவர்களே வந்து, எங்களை வெளியே தள்ளட்டும் என்றார்.

38. கட்டளைச்சேவகர் இந்த வார்த்தைகளை அதிகாரிகளுக்கு அறிவித்தார்கள். ரோமையராயிருக்கிறார்களென்று கேள்விப்படவே அவர்கள் பயந்து,

39. அவர்களிடத்தில் வந்து மன்னிப்புக்கேட்டு, அவர்களை வெளியே அழைத்துக்கொண்டுபோய், பட்டணத்தை விட்டுப் புறப்பட்டுப் போகும்படி அவர்களைக் கேட்டுக்கொண்டார்கள்.

37. ரோமையர் என்ற பட்டப் பெயருள்ளவர்களுக்கு அதிக மகிமையும் அதிக சுதந்தரமும் உண்டாயிருந்ததினாலே, அவர்களைக் கட்டியடிக்கிறதும் சிறையில் வைக்கிறதுமாகிய எவ்வித சிட்சையும் விசாரணையில்லாமல் செய்யப்படாதென்று ரோமானருடைய சட்டமாயிருந்தது. அர்ச். சின்னப்பர் பிறந்த தார்சு நகரத்தின் குடிகளுக்கு ரோமையர் என்ற பட்டப் பெயர் இருந்ததினாலே தம்மை விசாரணையின்றி அவர்கள் தண்டித்தது நியாய விரோதமென்று காட்டுகிறார்.

40. அப்படியே அவர்கள் சிறைச்சாலையிலிருந்து வெளிப்பட்டு, லீதியாளிடத்திற்குப் போய், சகோதரர்களையுங் கண்டு அவர்களுக்கு ஆறுதலுஞ் சொல்லிப் புறப்பட்டுப் போனார்கள்.

## 17-ம். அதிகாரம்.

*சின்னப்பர் தெசலோனியருக்கும், பேரோயா நகரத்தாருக்கும், அத்தேனியருக்கும் பிரசங்கித்ததும், தியோனிசியாரை மனந்திருப்பினதும்.*

1. அவர்கள் அம்பிப்போலி நகரத்தையும், அப்பொலோனியா என்கிற பட்டணத்தையும் கடந்து, தெசலோனிக்கா நகரத்துக்கு வந்தார்கள். அதிலே யூதர்களுடைய ஜெப ஆலயம் ஒன்றிருந்தது.

2. சின்னப்பர் தமதுவழக்கம்போல, அவர்களிடத்தில் போய், மூன்று ஓய்வு நாட்களில் வேத வாக்கியங்களைப்பற்றி அவர்களுக்கு உபந்நியாசஞ் செய்து,

3. கிறீஸ்துநாதர் பாடுபடவும், மரித்தோரினின்று உயிர்த்தெழுந்திருக்கவும் வேண்டியதென்றும், நான் உங்களுக்கு அறிவிக்கிற யேசுக்கிறீஸ்துநாதர் அவர்தான் என்றும் வெளியாக்கிக் கொஞ்சம் கொஞ்சமாய் (அவர்கள் மனதில்) புகட்டினார். (லூக். 24-46.)

4. அப்பொழுது அவர்களில் சிலரும், பக்தியுள்ளவர்களான புற ஜாதியார்களில் திரளான மனுஷர்களும், உயர்ந்த கோத்திரத்தாரான அநேக ஸ்திரீகளும் விசுவாசித்து, சின்னப்பரையும் சீலா என்பவரையும் சேர்ந்து கொண்டார்கள்.

5. ஆனால் யூதர்கள் வைராக்கியங் கொண்டு, ஈன ஜனங்களுக்குள்ளே சில துஷ்டர்களைச் சேர்த்துக் கும்பல்கூட்டிப் பட்டணத்தில் அமளியுண்டாக்கினார்கள். பின்னும் யாசோன் என்பவனுடைய வீட்டைச் சூழ்ந்துகொண்டு, அவர்களை ஜனங்களின் நடுவில் வெளியே இழுத்துவரப் பார்த்தார்கள்.

6. அவர்களைக் காணாததினாலே, யாசோனையும், சில சகோதரர்களையும் பட்டணத்தின் அதிகாரிகளிடத்தில் இழுத்துக்கொண்டு போய்: ஊரிலே அமளியுண்டாக்குகிறவர்கள் இங்கேயும் வந்திருக்கிறார்கள்.

7. யாசோன் அவர்களுக்கு விடுதி கொடுத்திருக்கிறான்; அவர்கள் எல்லாரும் யேசுவென்னும் வேறொரு அரசனிருக்கிறார் என்று சொல்லி, செசாருடைய சட்டத்திற்கு விரோதஞ்செய்கிறார்கள் என்று கூக்குரலிட்டார்கள். (அரு. 19-12.)

8. இந்தப்பிரகாரமாய் இவைகளைக் கேட்டுக்கொண்டிருந்த ஜனங்களையும் ஊர் அதிகாரிகளையும் ஆக்கிரமூட்டிவிட்டார்கள்.

9. ஆகிலும் இவர்கள் யாசோனிடத்திலும் மற்றவர்களிடத்திலும் வேண்டிய பிணை வாங்கிக்கொண்டு, அவர்களை விட்டுவிட்டார்கள்.

10. சகோதரரோவெனில் தக்ஷணமே சின்னப்பரையும் சீலாவையும் இரவில் பேரோயா நகரத்துக்கு அனுப்பிவிட்டார்கள். அவர்கள் அங்கே சேர்ந்து, யூதர்களுடைய ஜெப ஆலயத்தில் பிரவேசித்தார்கள்.

40. அர்ச். லூக்காஸ் இவ்வதிகாரத்தில் பத்தாம் வசனமுதல் பதினேழாம் வசனம் வரையில் தன்மையிடமாய்ச் சரித்திரத்தை எழுதியபின் இவ்வசனத்தில் அவர்கள் புறப்பட்டுப் போனார்களென்று படர்க்கையிடமாய்ப் பேசுவதால், அவர் தீமோத்தேயுவோடு பிலிப்பி நகரத்தில் புதுக் கிறீஸ்துவர்களுக்கு உதவியாயிருந்தாரென்று எண்ணத்தகும்.

11. இவர்கள் தெசலோனிக்காவி லுள்ளவர்களைவிட அதிக மேன்மையானவர்களாய் இருந்தபடியினாலே மகா அபேக்ஷையோடு வாக்கியத்தை ஏற்றுக்கொண்டு, இவைகள் இப்படித்தானோ என்று அநுதினமும் வேதாகமங்களை ஆராய்ந்துகொண்டுவந்தார்கள். (அரு. 5-39.)

12. ஆதலால், அவர்களில் அநேகரும், புறஜாதியாரான அநேக மேற்குல ஸ்திரீகளும், பூமான்களில் பலரும் விசுவசித்தார்கள்.

13. ஆனால் சர்வேசுரனுடைய வாக்கியம் பேரோயா நகரத்திலும் சின்னப்பரால் பிரசங்கிக்கப்பட்டதென்று தெசலோனிக்காவிலிருந்த யூதர்கள் அறிந்தபோது, அங்கேயும் வந்து, ஜனங்களை எழுப்பிக் கலக்கினார்கள்.

14. ஆகையால் சகோதரர் சின்னப்பரைச் சமுத்திரமட்டும் போகும்படி அனுப்பிவிட்டார்கள் ஆகிலும் சீலாவும் தீமோத்தேயும் அவ்விடத்தில் தங்கியிருந்தார்கள். (அப். 16-1.)

15. சின்னப்பரை வழிகூட்டிக்கொண்டு போனவர்கள், அவரை அத்தேன் பட்டணமட்டும் அழைத்துக்கொண்டு போய்: சீலாவும், தீமோத்தேயும் அதிசீக்கிரமாய்த் தம்மிடத்திற்கு வரும்படியாக அவரிடத்திலிருந்து அவர்களுக்குக் கட்டளை வாங்கிக்கொண்டு, புறப்பட்டு வந்தார்கள்.

16. சின்னப்பர் அத்தேன்பட்டணத்திலே அவர்களுக்காகக் காத்துக்கொண்டிருக்கும்போது, அந்தப் பட்டணமுழுவதும் விக்கிரக ஆராதனையில் அமிழ்ந்தியிருக்கிறதைக் கண்டு, அவருடைய மனம் அவருக்குள் பொங்கியெழும்ப,

17. அவர் அநுதினமும் ஜெப ஆலயங்களில் யூதர்களோடும், பக்தர்களோடும், சந்தைவெளிகளில் எதிர்ப்படுகிறவர்களோடும் தர்க்கித்துக்கொண்டு வந்தார்.

18. அப்பொழுது எப்பிக்கூரரும், ஸ்தோயிக்கருமாகிய சில ஞானிகள் அவரோடு வாக்குவாதம்பண்ணினார்கள். சிலரோ: இந்த வாய்ப்பிரசங்கி என்ன சொல்லப்பார்க்கிறான் என்பார்கள். வேறு சிலர்: நூதனமான தேவர்களைப் பிரசங்கிக்கிறவனைப்போல் தோன்றுகிறதே என்பார்கள். ஏனெனில் அவர் யேசுநாதரையும், உத்தானத்தையுங்குறித்து அவர்களுக்குப் பிரசங்கித்து வந்ததினாலே (அப்படிச் சொன்னார்கள்.)

19. ஆகையால் அவர்கள் அவரை அரையோப்பாகு என்னும் நீதி சங்கத்துக்கு முன்பாக அழைத்துக்கொண்டு போய்: உம்மால் சொல்லப்படுகிற இந்த நூதன உபதேசம் இன்னதென்று நாங்கள் அறியலாமா?

20. சில நூதனமானவைகளை எங்கள் காதுகளில் விழும்படி செய்கிறீரோ; அவைகளுக்கு அர்த்தம் இன்னதென்று அறிய விரும்புகிறோம் என்றார்கள்.

15. அத்தேன் என்கிற பட்டணம் கிரேசியா இராச்சியத்தின் மிகவும் பிரபல்லியமான இராஜதானிப் பட்டணமாயிருந்ததுந்தவிர அதில் விளங்கிய சாஸ்திரிகளாலும் வித்தியாசாலைகளாலும் பேர்போனதுமாயிருந்தது. அதினால் தூரதேசத்தார் முதலாய் அங்கே சாஸ்திரம் படிக்கப் போவார்கள்.

18. **எப்பிக்கூரர் யாரெனில்:**—இவ்வுலகத்தில் சரீர சுகபோகத்தை அனுபவிப்பதே மனுஷனுக்குப் பாக்கியமல்லாது வேறில்லையென்று போதித்துவந்த கிரேக்குச் சாஸ்திரிகளாம். **ஸ்தோயிக்கர்:** இவர்கள் இவ்வுலகத்தில் சுகத்தையானாலும் துக்கத்தையென்கிலும் உணராதிருப்பதே மனுஷனுக்குப் பாக்கியமென்று பிதற்றின வேறொருவகை கிரேக்குச் சாஸ்திரிகளாம்.

21. அதேதென்றால் அத்தேன் பட்டணத்தார் யாவரும், அவ்விடத்தில் சஞ்சரிக்கிற அன்னியரும் நூதனமான யாதொன்றைச் சொல்லுவதிலும், கேட்பதிலுமேயொழிய வேறொன்றிலும் நேரம் போக்கார்கள்.

22. சின்னப்பரோவெனில் அரையோப்பாகு என்னும் சங்கத்தின் நடுவே நின்று உரைத்ததாவது: அத்தேனிய பூமான்களே, நீங்கள் எவ்விதத்திலும் மிஞ்சின மதமயக்கமுள்ளவர்கள் என்று காண்கிறேன்.

23. எப்படியெனில் நான் உங்கள் விக்கிரகங்களைக் கவனமாய்ப் பார்த்துக்கொண்டுபோகையில் "அறியப்படாத தேவனுக்கு" என்று எழுதியிருந்த ஒரு பீடத்தைக் கண்டேன். ஆகையால் நீங்கள் அறியாமல் ஆராதிக்கிறது ஒன்று உண்டே, அதை நான் உங்களுக்கு அறிவிக்கிறேன்.

24. உலகத்தையும் அதிலுள்ள யாவற்றையும் சிருஷ்டித்த கடவுளானவர் பரலோகத்துக்கும் பூலோகத்துக்கும் ஆண்டவராயிருக்கிறபடியால் கையினால் கட்டப்பட்ட ஆலயங்களில் வசிக்கிறதில்லை.

25. எல்லாருக்கும் உயிரையும் சுவாசத்தையும் இன்னும் சகலத்தையும் தந்தருளுகிற அவர் தமக்கு ஏதாவது வேண்டியதுபோல மனிதருடைய கையால் பணிவிடைகொள்ளுகிறவருமல்ல.

26. மேலும் பூமியின்மீது எங்கும் குடியிருக்கும்படி மனுக்குலம் அனைத்தையும் அவர் ஒருவனைக்கொண்டு உண்டுபண்ணி, திட்டமான காலங்களையும் அவர்கள் குடியிருப்பின் எல்லைகளையும் தீர்மானித்தார்.

27. கடவுளாகிய தம்மை அவர்கள் தடவியாவது ஒருவேளை கண்டுபிடிப்பார்களென்று தம்மைத் தேடும்படிக்கு இவ்விதம் செய்தார். ஆயினும் அவர் நம்மில் ஒவ்வொருவருக்கும் தூரமாயிருக்கிறவரல்ல.

28. ஏனெனில் நாம் அவருக்குள் சீவிக்கிறோம்; அவருக்குள் அசைகிறோம்; அவருக்குள் இருக்கிறோம். அப்படியே உங்கள் புலவர்களிலும் சிலர்: நாம் அவருடைய வம்சமுமாயிருக்கிறோம் என்று சொல்லியிருக்கிறார்கள்.

29. ஆகையால் நாம் சர்வேசுரனுடைய வம்சமாயிருக்கக்கொள்ள, மனுஷருடைய வேலையினாலும், மனுஷ யுத்தியினாலும் உருவாக்கப்பட்ட பொன், வெள்ளி, கல் இவைகளைப்போல் தெய்வத்துவம் இருக்குமென்று நினைக்கலாகாது.

30. ஆகிலும் இந்த அறியாமையின் காலங்களைச் சர்வேசுரன் பராமுகமாய்ப் பார்த்து, இப்போது எங்கும் எல்லா மனிதரும் தவஞ்செய்யும்படிக்கு அறிவிக்கிறார்.

31. ஏனெனில் அவர் ஒரு நாளைக் குறித்திருக்கிறார். அதிலே தாம் நியமித்த மனிதனைக்கொண்டு உலகத்துக்கு நீதியோடு நடுத்தீர்ப்பார். அவனை மரித்தோரினின்று எழுப்பினதால், எல்லாருக்கும் நம்பிக்கை கொடுத்திருக்கிறார் என்றார்.

32. மரித்தோரின் உத்தானத்தைப் பற்றி அவர்கள் கேட்டபோது, அவர்களில் சிலர் நகைத்தார்கள்; வேறு சிலரோ: இதைக் குறித்து நீர் இன்னொருவிசை சொல்லக் கேட்போம் என்றார்கள்.

26-27. சுதனாகிய சர்வேசுரன் மனுஷாவதாரம் எடுத்து நமக்குப் போதிக்க வருந்தனையும் மனுஷர்கள் தங்கள் சுபாவ புத்தியைக்கொண்டு சர்வேசுரனைத் தெளிவுள்ள பிரகாரமாய் அறிந்துகொள்வது அருமையாயிருந்ததென்றாலும், அவர்கள் சர்வேசுரனை எவ்விதமாகிலும் அறியும்படிக்குத் தேவையான அத்தாட்சிகள் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்தது.

33. அப்படியே சின்னப்பர் அவர்கள் மத்தியினின்று வெளியேபோனார்.

34. ஆயினும் சிலபேர் அவரிடத்தில் சேர்ந்து, விசுவாசிகளானார்கள். அவர்களில் அரையோப்பாகு சங்கத்தைச் சேர்ந்த தியோனிசியுஸ் என்பவரும், தாமரிஸ் என்னும் ஓர் ஸ்திரீயும் இவர்களுடன் வேறு சிலரும் இருந்தார்கள்.

## 18-ம். அதிகாரம்.

*சின்னப்பர் கொரிந்து நகரில் திருச்சபையை ஸ்தாபித்ததும், எபேசு நகரத்திலும் மற்ற அநேக இடங்களிலும் பிரசங்கித்ததும், அப்போலோ என்பவர் யேசுநாதரே கிறீஸ்துநாதரென்று யூதர்களுக்குப் பிரசங்கிக்கத் துவக்கினதும்.*

1. இவைகளுக்குப்பின், சின்னப்பர் அத்தேன் பட்டணத்தை விட்டுப் புறப்பட்டுக் கொரிந்து நகரத்துக்கு வந்தார்.

2. மேலும் யூதரெல்லாரையும் ரோமாபுரியை விட்டுப் போகும்படி கிளவுதியுராயன் கட்டளையிட்டபடியினாலே, இத்தாலியாவிலிருந்து புதிதாய் வந்திருந்த போந்து தேசத்தானாகிய அக்கில்லா என்னும் பேர்கொண்ட ஓர் யூதனையும், அவன் மனைவியாகிய பிரிசில்லாளையும் அவர் கண்டு, அவர்களிடத்திற்குப் போனார்.

3. அவர்கள் கூடாரஞ்செய்கிற தொழிலாளிகளாய் இருந்தார்கள். அவரும் அதே தொழில் செய்கிறவரானபடியி
னாலே அவர்களிடத்தில் தங்கி, ே
செய்துகொண்டு வந்தார். (அ
24; 2. கொ. 11-19.) அவ்லெ

4. அன்றியும் ஓய்வு ...ரங்'20-
ஜெப ஆலயத்தில் உபந்நி
தராகிய யேசுநாதருநாள்தோறும்
ஊடே கலந்துபேசி, ...சித்து, கர்த்
கிரேக்கர்களுக்கும் புது நாமத்தை
வந்தார். தர்களுக்கும்

5. சீலாவும் தீமோத்தி சொல்லி
தோனியாவிலிருந்து வ...
னப்பர் ஊக்கமாய்ப் பேசி... மக்கே
ரோ கிறீஸ்து என்று யூதர்களு, சின்
தாட்சி சொன்னார்.

6. ஆனால் அவர்கள் எதிர்வாத பேசித் தூஷணித்ததினாலே, அவர் தமமுடைய வஸ்திரங்களை உதறி: உங்கள் இரத்தப்பழி உங்கள் தலைமேலிருக்கட்டும்; என்மேல் குற்றமில்லை. இதுமுதல் புற ஜாதியாரிடம் போகிறேன் என்று சொல்லி,

7. அங்கிருந்து புறப்பட்டுச சாவேசுரனை வணங்குகிறவனாகிய தீத்துயுஸ்து என்னும் பேருள்ள ஒருவனுடைய வீட்டிற்கு வந்தார். அவன் வீடு ஜெப ஆலயத்திற்கு அடுத்ததாயிருந்தது.

8. ஆனால் ஜெப ஆலயத் தலைவனாகிய கிறீஸ்பு என்பவன் தன் வீட்டாரனைவரோடுங்கூட ஆண்டவர்மேல் விசுவாசமுள்ளவனானான். கொரிந்தியரில் அநேகரும் அவர் சொல்வதைக் கேட்டு விசுவசித்து, ஞானஸ்நானம் பெற்றார்கள்.

---

34. இதிலே சொல்லப்பட்ட தியோனிசியுஸ் என்கிறவர் யேசுநாதர் சிலுவையிலே மரித்த சமயத்தில் சூரியன் மூன்றுமணி நேரம் இருண்டு போனதைக் கண்டபோது: இன்று பவுர்ணமி நாளாகக்கொள்ள, இது சுபாவமான சூரிய கிராணமல்ல; இன்று ஒன்றில் உலகம் முடியவேண்டும்; ஒன்றில் உலகத்தைப் படைத்தவர் பாடுபடவேண்டும் என்று உரைத்தவராமே.

1. கொரிந்து நகரமானது அத்தேனுக்கு மேற்கில் அக்காயா தேசத்தின் மிகவும் பிரபல்லியமான பட்டணமாம்.

2. ரோமாபுரியிலே யூத ஜனங்களால் ஓர் கலகம் வந்ததினாலே கர்த்தர் பிறந்த 51-ம். வருஷத்தில் கிளவுதியுஸ் என்னும் ரோமாபுரி இராயன் யூதர்களெல்லாரும் ரோமாபுரியை விட்டுப் போகவேண்டுமென்று கட்டளையிட்டான்.

9. அன்றியும் ஆண்டவர் இரவிலே சின்னப்பருக்குக் காட்சியில் திருவுளம் பற்றினதாவது : நீ பயப்படாமல் பேசு ; மௌனமாயிராதே.

10. ஏனெனில் நான் உன்னுடனே இருக்கிறேன். உனக்குப் பொல்லாப்புச் செய்யும்படி ஒருவனும் உன்மேல் கையை நீட்டமாட்டான். ஏனென்றால் இந்தப் பட்டணத்திலே எனக்கு அநேக ஜனங்களுண்டு என்றார்.

11. ஆதலால் அவர் ஒரு வருஷமும் ஆறு மாதமும் அங்கே தங்கி, தேவ வாக்கியத்தை அவர்களுக்குள்ளே போதித்துக்கொண்டு வந்தார்.

12. அப்படியிருக்க, கல்லியோன் என்பவன் அக்காயா நாட்டிற்கு அதிபதியானபோது யூதர்கள் ஒருமித்து, சின்னப்பருக்கு விரோதமாய் எழும்பி, அவரை நியாயாசனத்துக்கு முன்பாக இழுத்துக்கொண்டுபோய் :

13 இவன் வேதப்பிரமாணத்துக்கு ஒவ்வாத விதமாய்த் தேவனை வணங்க வேண்டுமென்று மனிதர்களுக்குப் போதிக்கிறான் என்றார்கள் :

14. சின்னப்பர் பேசும்படி வாயெடுக்கையில், கல்லியோன் என்பவன் யூதர்களை நோக்கி : ஓ, யூதர்களே இது ஒரு அநீதமாய் அல்லது ஒரு மகா அக்கிரம நடக்கையாய் இருந்தால், நியாயப்படி உங்களுக்குப் பொறுமையோடு காதுகொடுப்பேன்.

15. ஆனால் இது சொல்லையும், நாமங்களையும், உங்கள் வேதப்பிரமாணத்தையுஞ் சார்ந்த தர்க்கங்களானால், நீங்களே பார்த்துக்கொள்ளுங்கள் ; இப்படிப்பட்டவைகளில் நடுவனாயிருப்பதற்கு எனக்கு இஷ்டமில்லை என்று சொல்லி,

16. அவர்களை நியாய ஸ்தலத்தினின்று துரத்திவிட்டான்.

17. அப்போது எல்லாரும் ஜெப ஆலயத்தலைவனாகிய சொஸ்தேனென்பவனை நியாயாசனத்துக்கு முன்பாகப் பிடித்து அடித்தார்கள். ஆயினும் கல்லியோன் இவைகளில் ஒன்றையுஞ் சட்டைபண்ணவில்லை. (1. கொ. 1-1.)

18. சின்னப்பரோவெனில் அங்கே இன்னும் அநேகநாள் தங்கியிருந்தபின், சகோதரரிடத்தில் செலவுபெற்றுக்கொண்டு, தமக்கு ஓர் நேர்த்திக்கடனிருந்தமையால், கெங்கிறைத் துறையில் சிரச்சவரஞ்செய்து, சீரியாவுக்குப்போகக் கப்பலேறினார். அக்கில்லாவும், பிரிசில்லாளும் அவருடனேகூடப் போனார்கள். (எண். 6-18 ; அப். 20-24.)

19. அவர் எபேசு நகரத்திற்கு வந்தபோது, அங்கே அவர்களைவிட்டு, ஜெப ஆலயத்தில் பிரவேசித்து, யூதர்களோடு தர்க்கஞ்செய்துவந்தார்.

20. அவர் இன்னமுஞ் சிலகாலம் தங்களோடு இருக்கவேண்டுமென்று அவர்கள் மன்றாடியும் அவர் சம்மதியாமல்,

18. எண்ணாகமம் 6-ம் அதி. 18-ம். வசனத்தில் சொல்லியிருக்கிறதுபோல யூதர்களுக்குள்ளே நசரையரென்ற வேண்டுதல்காரர் இருப்பார்கள். அவர்கள் செய்துகொள்ளும் வேண்டுதல்களில் தபசாகத் தலைமயிரை எடுக்காமல் வளர்க்கிறதும், குறித்தகாலம் முடிந்தபின் கோவிலிலேபோய்க் காணிக்கைசெலுத்தி, தலைச்சவரஞ் செய்துகொள்வதும், மாம்சமும், மதுபானமும் விலக்குகிறதும், நார்முடி வஸ்திரந்தரிக்கிறதும் இவை முதலான பற்பல தப ஆசாரங்களை அனுசரிப்பதும் வழக்கம். புதுக்கிறீஸ்துவர்களாயிருந்த யூதர்களுக்குள்ளேயும் அநேகநாள் இப்படிப்பட்ட வேண்டுதல்கள் நடந்துவந்தது. அர்ச். சின்னப்பரும் இப்படிப்பட்ட வேண்டுதல் செய்திருந்தார். அந்த வேண்டுதலின் நாள் அப்போது முடிந்தபடியால் கப்பல் ஏறுவதற்குமுன்னே அதை நிறைவேற்றினார்.

கெங்கிறை என்பது கொரிந்து நகருக்கு அருகாண்மையிலிருந்த ஒரு துறைமுகமாம்.

21. அவர்களுக்கு வாழ்த்துதல் சொல்லி: சர்வேசுரனுக்குச் சித்தமானால் மறுபடியும் உங்களிடத்தில் திரும்பிவருவேன் என்று வசனித்து, எபேசு நகரத்தை விட்டுப் புறப்பட்டு,

22. செசாரையாவில் இறங்கி, (எருசலேமுக்குப்) போய்த் திருச்சபையைச் சந்தித்தபின்பு அந்தியோக்கியாப் பட்டணத்துக்கு வந்தார்.

23. அங்கே அவர் சிலகாலம் இருந்தபின், புறப்பட்டுக் கிரமமாய்க் கலாத்தியா நாட்டிலும், பிரிஜியா நாட்டிலும் சுற்றித்திரிந்து, சீஷர்கள் எல்லோரையும் உறுதிப்படுத்தினர்.

24. அப்போது அலெக்சாந்திரியாப்பட்டணத்தில் பிறந்தவரும், சாதுரியரும், வேதாகமங்களில் வல்லவருமாகிய அப்போலோ என்னப்பட்டவோர் யூதர் எபேசு நகரத்துக்கு வந்தார். (1 கொ. 1-12.)

25. அவர் அருளப்பருடைய ஞானஸ்நானத்தைமாத்திரம் அறிந்தவராயினும், ஆண்டவருடைய நெறியில் படிப்பிக்கப்பட்டு, பத்தி பற்றுதலுள்ள மனதோடு பேசி, யேசுநாதரைப்பற்றியவைகளைச் சுமுத்திரையாய்ப் போதிப்பார்.

26. அவ்விதமாய் அவர் ஜெப ஆலயத்தில் வெகு திடனாய்ப் பேசத்தொடங்கினபோது, அக்கில்லாவும், பிரிசில்லாளும் அவர் பேசுகிறதைக் கேட்டு, அவரைத் தங்களோடு சேர்த்துக்கொண்டு, ஆண்டவருடைய நெறியை அவருக்கு அதிக தீர்க்கமாய்த் தெளிவித்தார்கள்.

27. பின்னும் அவர் அக்காயா நாட்டுக்குப் போகவேண்டுமென்று விரும்பினபோது, சகோதரர் அவரை உற்சாகப்படுத்தி, அவரை ஏற்றுக்கொள்ளும்படி சீஷர்களுக்கு எழுதினர்கள். அவர் அங்கே சேர்ந்து, விசுவாசிகளுக்கு மிகவும் உதவியாயிருந்தார்.

28. ஏனெனில் அவர் மிகுந்த திடத்தோடு யூதர்களைப் பிரசித்தமாய் மறுத்து, யேசுநாதரே கிறீஸ்துவானவரென்று வேதாகமங்களைக்கொண்டு ஒப்பித்தார்.

## 19-ம். அதிகாரம்.

சின்னப்பர் எபேசு நகரத்தில் திருச்சபையை ஸ்தாபித்த வகையும், அதிலே அவருக்கு விரோதமாய் நடந்த கலாபனையும்.

1. பின்பு சம்பவித்ததேதென்றால் அப்போலோ என்பவர் கொரிந்து நகரத்திலிருக்கையில், சின்னப்பர் மேட்டுப் பாகங்களைச் சுற்றிப்பார்த்தபின், எபேசு நகரத்திற்கு வந்தார். அங்கே அவர் சில சீஷர்களைக் கண்டு: (அப். 18-19, 27.)

2. நீங்கள் விசுவாசிகளானபோது, இஸ்பிரீத்துசாந்துவைப் பெற்றுக்கொண்டீர்களோ என்று அவர்களைக் கேட்டார். அதற்கு அவர்கள்: இஸ்பிரீத்துசாந்து உண்டென்று முதலாய் நாங்கள் கேள்விப்படவில்லை என்றார்கள்.

3. ஆகையால் அவர்: அப்படியானால், நீங்கள் எந்த ஞானஸ்நானம் பெற்றீர்கள் என்று கேட்க, அவர்கள்: அருளப்பருடைய ஞானஸ்நானம் என்றார்கள்.

4. அப்பொழுது சின்னப்பர் சொன்னதாவது: அருளப்பர் தமக்குப்பின் வருபவராகிய யேசுநாதரை விசுவசிக்க வேண்டுமென்று ஜனங்களுக்குச் சொல்லி, அவர்களுக்குத் தவத்தின் ஞானஸ்நானங் கொடுத்தார் என்றார். (அப். 11-16.)

21. இவ்வசனத்தில் அவர்களுக்கு வாழ்த்துதல் சொல்லி என்பதற்குப்பின் "தாம் எருசலேமில் பண்டிகைக்கு அவசியமாயிருக்கவேண்டும்" என்கிற வார்த்தைகள் சில கிரேக்குப் பிரதிகளிலிருந்தாலும் வேறநேக பிரதிகளிலும் லத்தீன் வுல்காத்துப் பிரதியிலுமில்லை.

5. அவர்கள் இதைக்கேட்டு, ஆண்டவராகிய யேசுநாதருடைய நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றார்கள்.

6. அன்றியும் சின்னப்பர் அவர்கள்மேல் கரங்களை நீட்டி வைத்தபோது, இஸ்பிரீத்துசாந்துவானவர் அவர்கள்மேல் எழுந்தருளிவந்தார்; அவர்கள் பல பாஷைகளிலும் பேசித் தீர்க்கதரிசனமுஞ் சொன்னார்கள்.

7. அந்த மனிதர்கள் எல்லோரும் ஏறக்குறைய பன்னிரண்டுபேராமே.

8. பின்பு அவர் ஜெப ஆலயத்தில் பிரவேசித்துத் தைரியமாய்ப் பேசி, மூன்றுமாதபரியந்தம் சம்பாஷித்து, சர்வேசுரனுடைய இராச்சியத்தைக் குறித்துப் புத்திசொல்லிவந்தார்.

9. சிலர் கல்நெஞ்சராகி விசுவசியாமல், ஜனக்கூட்டத்திற்குமுன் ஆண்டவருடைய மார்க்கத்தைத் தூஷணித்தபடியால், அவர் அவர்களைவிட்டு விலகி, சீஷர்களையும் அவர்களிடத்தினின்று பிரித்து, தீரான்என்னும் ஒருவனுடைய கல்விச்சாலையில் அனுதினமும் சம்பாஷித்துவந்தார்.

10. இப்படி இரண்டுவருஷகாலமாய் நடந்துவந்ததினாலே ஆசியாவில் வாசம்பண்ணின யூதர்களும், புற ஜாதியாருமாகிய எல்லாரும் ஆண்டவருடைய வாக்கியத்தைக் கேட்கும்படியாயிற்று.

11. அன்றியும் சின்னப்பருடைய கரங்களினால் சர்வேசுரன் செய்துவந்த அற்புதங்களுஞ் சாமானியமல்ல.

12. எப்படியெனில் அவர் சரீரத்தில் பட்ட உறுமாலைகளையும், முன்தாங்கி வஸ்திரங்களையும் கொண்டுவந்து, வியாதிக்காரர்மேல் போடவே, வியாதிகளும் அவர்களைவிட்டு நீங்கும், கெட்ட அரூபிகளும் புறப்பட்டுப்போம்.

13. அப்படியிருக்க, பேயோட்டிகளாய்ச் சுற்றித்திரிந்த யூதர்களில் சிலர், கெட்ட அரூபிகள் பிடித்தவர்கள்மேல் யேசுநாதசுவாமியுடைய நாமத்தைப் பிரார்த்திக்கத் துணிந்து: சின்னப்பர் பிரசங்கிக்கிற யேசுநாதர்மேல் ஆணையிட்டு உங்களுக்குக் கட்டளையிடுகிறேன் என்பார்கள்.

14. இப்படிச் செய்துவந்தவர்கள் யாரெனில், யூதனும், பிரதான ஆசாரியனுமாகிய ஸ்கேவா என்பவனுடைய ஏழு புத்திரராமே.

15. ஆனால் கெட்ட அரூபி அவர்களைநோக்கி: யேசுநாதரையும் அறிவேன், சின்னப்பரையும் அறிவேன், நீங்கள் யார் என்று சொல்லி,

16. மிகவும் கெட்ட அரூபியைக் கொண்டிருந்த அந்த மனிதன் அவர்கள்மேல் பாய்ந்து, அவர்களில் இருவரை விழத்தாட்டி, அவர்களை மேற்கொண்டதினால், அவர்கள் நிருவாணிகளும், காயம்பட்டவர்களுமாய் அவ்வீட்டினின்று ஓடிப்போனார்கள்.

17. எபேசு நகரத்திலே குடியிருந்த யூதர்களும் அஞ்ஞானிகளுமாகிய சகலருக்கும் இது தெரியலாகவே, அவர்கள் அனைவருக்கும் பயங்கரமுண்டாயிற்று; யேசுநாதசுவாமியுடைய நாமமும் மகிமைப்பட்டது.

18. விசுவசித்தவர்களில் அநேகரும் வந்து, தங்கள் கிரியைகளை வெளிப்படுத்தி, அறிவிப்பார்கள்.

19. மாயவித்தைக்காரரில் அநேகர் தங்கள் புஸ்தகங்களைக் கொண்டுவந்து, சகலருக்கும் முன்பாகச் சுட்டெரித்தார்கள். அவைகளின் கிரயத்தொகை பார்க்கும்போது, ஐம்பதினாயிரம் தெனியரொன்று கண்டார்கள்.

19. தெனியர் என்பது ஏறக்குறைய பத்துத் துட்டுப் பெறுமதியுள்ளது. ஆனபடியால் அன்றைக்குச் சுட்டெரிக்கப்பட்ட சுவடிகளும் புத்தகங்களும் ஏறக்குறைய பதினாயிரம் ரூபாய்க்குமேல் பெறுமானவைகள்.

20. இவ்விதமாய்ச் சர்வேசுரனுடையவாக்கியம் திடமாய்ப்பரம்பி ஸ்திரப்பட்டுவந்தது.

21. இவைகள் நடந்தேறியபின், சின்னப்பர் மக்கேதோனியாவையும் அக்காயாவையுங்கடந்து, எருசலேமுக்குப் போகவேண்டும் என்று இஸ்பிரீத்துவின் ஏவலால் தீர்மானித்து: நான் அங்கே போனபின் ரோமாபுரியையும் காணவேண்டும் என்றார்.

22. ஆதலால் தமக்கு உதவிசெய்தவர்களில் இருவராகிய தீமோத்தேயுவையும் எராஸ்தையும் மக்கேதோனியாவுக்கு அனுப்பிவிட்டுத் தாம் இன்னுஞ் சிலகாலம் ஆசியாவில் தங்கினார்.

23. ஆனால் அக்காலத்தில் ஆண்டவருடைய மார்க்கத்துக்கு விரோதமாய் ஓர் பெருங்கலகம் உண்டாயிற்று.

24. எப்படியெனில், தெமேத்திரியு என்னப்பட்ட ஒரு தட்டான் தியானாளின் கோவில் வடிவாய் வெள்ளியினால் செய்து, அத்தொழிலாளிகளுக்கு மிகுந்த ஆதாயம் வருவித்துக்கொண்டிருந்தான்.

25. அவன் இவர்களையும் இப்படிப்பட்ட தொழிலாளிகளாகிய மற்றவர்களையும் ஒருமிக்க வரவழைத்துச் சொன்னதாவது: மனிதர்களே, இந்தத் தொழிலால் நமக்குச் சம்பாத்தியம் உண்டென்று அறிவீர்களே.

26. இப்படியிருக்க, கைவேலையால் செய்யப்பட்ட தேவர்கள் தேவர்கள் அல்லவென்று இந்தச் சின்னப்பன் சொல்லி, எபேசிலே மாத்திரமல்ல, சற்றுக்குறைய ஆசியா முழுமையிலும் போதித்துத் திரளான ஜனங்களைக் கலைத்தானென்று கண்டும், கேட்டுமிருக்கிறீர்களே.

27. இதனாலே நமக்குத் தொழிலற்றுப்போகும்படியான அபாயம் நேரிட்டிருப்பதுமல்லாமல், மகா தேவியான தியானாளுடைய கோவில் மதிப்பற்றுப் போகவும், ஆசியா முழுமையும், பூச்சக்கரமும் ஆராதிக்கிற அவளுடைய மகத்துவம் அழிபடவும் ஏதுவாகிறது என்றான்.

28. இவைகளைக் கேட்டு, அவர்கள் கோபம் நிறைந்தவர்களாய்: எபேசியருடைய தியானாளே பெரியவள் என்று கூக்குரலிட்டார்கள்.

29. உடனே பட்டணம் கலகத்தால் நிறைந்ததுமன்றி, சின்னப்பருக்கு வழித்துணையாய் வந்த மக்கேதோனியரான காயுவையும், அரிஸ்தார்க்கையும் அவர்கள் இழுத்துக்கொண்டு, ஒரே மனமாய் நாடகசாலைக்குள் பாய்ந்து ஓடினார்கள்.

30. அப்போது சின்னப்பர் ஜனக் கூட்டத்துக்குள் போக மனதாயிருந் தபோது, சீஷர்கள் அவரைப் போகவொட்ட வில்லை.

31. அன்றியும் ஆசியா தே[illegible] அதிகாரிகளில் அவருக்குச் சிநே[illegible] யிருந்த சிலரும் அவரிடத்தில் [illegible] னுப்பி, நாடகசாலைக்குள் அவர் [illegible]க வேண்டாம் என்று மன்றாடினார்கள்.

32. கூட்டத்தில் அமளி [illegible]ான தினால், ஒருவன் ஒன்றையும், [illegible]ருவன் மற்றொன்றையும் சொல்[illegible] தமிட்டார்கள். தாங்கள் கூடி[illegible] காரணம் இன்னதென்று [illegible] அநேகர் அறியாதிருந்தார்கள்.

33. அப்பொழுது யூதர் [illegible] க்சாந்தர் என்பவனை முன்னு[illegible] ளுகையில், சிலர் அவனைக் கூட்டத்தி னின்று இழுத்து (அப்பால்) விட்டார் கள். அலெக்சாந்தர் மௌனமாயிருக்கும்படி கைச்சயிக்கினை காட்டி, ஜனங்களுக்கு நியாயஞ்சொல்லக் கருத்தாயிருந்தான்.

34. ஆனால் இவன் யூதனென்று அவர்கள் அறிந்தவுடனே எல்லாரும் ஏக சத்தமாய்: எபேசியருடைய தியானாளே பெரியவள் என்று ஏறக்குறைய இரண்டு மணிநேரம்வரையில் கத்திக் கொண்டிருந்தார்கள்.

35. கடைசியாய், பட்டணத்துச் சம்பிரதியானவன் ஜனங்களை அமர்த்திச் சொன்னதாவது: எபேசியரே, எபேசியருடைய பட்டணமானது மகாதேவியும், யூப்பித்தேருடைய குமாரத்தியுமாகிய தியானாளை ஆராதிக்கிறதென்று அறியாத மனிதன் யார்?

36. இவைகளை மறுத்துப்பேச ஏவனாலும் கூடாதபடியால், நீங்கள் ஒன்றையும் பதறிச்செய்யாமல், அமரிக்கையாயிருக்கவேண்டும்.

37. இந்த மனுஷரை இங்கே கூட்டிக்கொண்டு வந்தீர்கள்; இவர்கள் கோவில் கொள்ளைக்காரருமல்ல; உங்கள் தேவதையைத் தூஷணிக்கிறவர்களுமல்ல.

38. தெமெத்திரிக்கும் அவனைச்சேர்ந்த தொழிலாளிகளுக்கும் யார்பேரிலாவது வழக்குண்டானால், கச்சேரிகள் திறந்திருக்கின்றது, தேசாதிபதிகளும் இருக்கிறார்கள் ஒருவர்மேல் ஒருவர் வழக்காடிக்கொள்ளட்டும்.

39 உங்களுக்கு வேறே யாதோர் காரியத்தைக்குறித்து விசாரிக்கவேண்டுமானால், கிரமமாய்க் கூடின சபையிலே அதைத் தீர்த்துக்கொள்ளலாம்.

40. ஆனால் இந்தச் சந்தடிக்குக் காரணமாக ஒருவனையும் நாம் குற்றவாளியாகக் காண்பிக்கக் கூடாததினாலே, இன்றைக்கு உண்டான கலாபத்தைக் குறித்து நாமே குற்றஞ்சுமத்தப்படுவதற்கு ஏதுவான ஆபத்திலிருக்கிறோம் என்றான். இவைகளைச் சொல்லியபின் ஜனக்கூட்டத்தை அனுப்பிவிட்டான்.

## 20-ம். அதிகாரம்.

சின்னப்பர் எபேசு நகரத்தைவிட்டு மக்கேதோனியா, கிரேசியா தேசங்களைச் சுற்றிப்போனதும், துரோவா நகரில் மரித்த ஓர் வாலிபனை உயிர்ப்பித்ததும், மிலேத்து நகரத்திலிருந்து எபேசிலுள்ள குருமார்களை அழைப்பித்துப் புத்திமதி சொன்னதும்.

1. கலகம் அமர்ந்தபின்பு, சின்னப்பர் சீஷர்களை வரவழைத்து, அவர்களுக்குப் புத்திமதியுஞ் சொல்லி வாழ்த்துதலும் உரைத்து மக்கேதோனியாவுக்குப் போகப் புறப்பட்டார்.

2. அவர் அந்த நாடுகளில் சுற்றிப்போய், சீஷர்களுக்கு அநேகம் புத்திபிரசங்கங்களைச் சொல்லியபின் கிரேசியா தேசத்துக்கு வந்தார்.

3. அவர் அங்கே மூன்று மாதங் கழித்த பின்பு கப்பல்யாத்திரையாய்ச் சீரியாவுக்குப் போகிறதாயிருக்கையில் யூதர்கள் அவருக்குப் பதிவிடை பண்ணினார்கள். ஆதலால் அவர் மக்கேதோனியா தேசத்தின் வழியாய்த் திரும்பிப்போகத் தீர்மானித்தார்.

4. அன்றியும் பேரோயா நகரத்துப் பீரு குமாரனாகிய சொப்பத்தரும், தெசலோனிக்கையரில் அரிஸ்தார்க்கும், செக்குந்தரும், தெர்பை நகரத்தானாகிய காயுவும், திமோத்தேயும் ஆசியா தேசத்தாரில் திக்கிக்கரும், திரோப்பிமும் அவருக்கு வழித்துணையாகப் போனார்கள்.

5. இவர்கள் முன்னாகப் போய்த் துரோவா பட்டணத்திலே எங்களுக்காகக் காத்திருந்தார்கள்.

5. இச்சமையத்தில் அர்ச். சின்னப்பர் தமது சீஷனாகிய அர்ச் லூக்காவைப் பிலிப்பிப் பட்டணத்திலிருந்து திரும்பத் தம்மோடு அழைத்துக்கொண்டாரென்று இவ்வசனத்தால் தெரியவருகிறது. ஏனெனில் இதுமுதல் இச்சரித்திரம் முடியும்வரையில் நடந்த சங்கதிகளை முன் 15-ம் அதிகாரம் 10-ம் வசனமுதல் 39-ம் வசன வரையில் எழுதியதுபோல் தன்மைப்பன்மையில் எழுதியிருக்கக் காண்கிறோம்.

6. புளியாத அப்பப்பண்டிகை நாட்களுக்குப் பின்பு நாங்கள் பிலிப்பி நகரத்திலிருந்து கப்பலேறி, ஐந்து நாளைக்குள்ளே துரோவா பட்டணத்துக்கு அவர்களிடத்தில் வந்து, அங்கே ஏழு நாள் தங்கியிருந்தோம்.

7. வாரத்தின் முதல்நாளிலே அப்பம் பிட்கும்படி நாங்கள் கூடியிருக்கையில், மறுநாள் பிரயாணமாயிருந்த சின்னப்பர் சீஷர்களோடு சம்பாஷித்து, நடு ராத்திரிமட்டும் நீண்ட பிரசங்கஞ் செய்தார்.

8. அப்போது நாங்கள் கூடியிருந்த மேல் வீட்டிலே அநேக தீபங்கள் இருந்தது.

9. அப்படியே சின்னப்பர் நெடுநேரம் பிரசங்கித்துக்கொண்டிருக்கையில், சன்னலிலே உட்கார்ந்திருந்த எயுத்திக்கு என்னும் பேருள்ள ஓர் வாலிபன் அயர்நதநித்திரையில் அமிழ்ந்தி, தூக்க மயக்கத்தால் சாய்ந்து மூன்றும் மெத்தையிலிருந்து கீழேவிழுந்து, மரித்தவனாக எடுக்கப்பட்டான்.

10. உடனே சின்னப்பர் கீழே இறங்கிப்போய், அவன்மேல் சாய்ந்து, அவனை அணைத்துக்கொண்டு: கலங்காதேயுங்கள், இவனுடைய உயிர் இவனுக்குள்ளே இருக்கிறது என்றார்.

11. பின்பு மேலே ஏறி அப்பமும் பிட்டு, போஜனமும் அருந்தி, விடியற்காலம் வரைக்கும் அவர்களோடு நெடுநேரஞ் சம்பாஷணை செய்துகொண்டிருந்து, பின்பு புறப்பட்டுப்போனார்.

12. அப்போது அவர்கள் அந்த வாலிபனை உயிருள்ளவனாகக் கூட்டிக்கொண்டுவந்து, மிகுந்த ஆறுதலடைந்தார்கள்.

13. நாங்கள் கப்பலேறி அஸ்சோனூரில் சின்னப்பரை (கப்பலில்) ஏற்றிக்கொள்ளும்படி அவ்விடத்திற்கு யாத்திரைபண்ணினோம். அவரோ இவ்விதம் திட்டம்பண்ணித் தாம் கரை வழியாய் அவ்விடத்திற்கு வரத்தீர்மானித்திருந்தார்.

14. அவர் அஸ்சோனூரில் எங்களிடஞ் சேர்ந்தபோது, அவரைக் கப்பலில் ஏற்றிக்கொண்டு மித்திலேனே பட்டணத்திற்கு வந்தோம்.

15. அங்கிருந்து யாத்திரை தொடர்ந்து, மறுநாளிலே கியுதீவுக்கு நேராக வந்து, மூன்றும் நாளிலே சாமுதீவின் கரை பிடித்து, அடுத்த நாளிலே மிலேத்து நகரத்துக்கு வந்தோம்.

16. ஏனெனில் கூடுமானால் பெந்தேக்கோஸ்தே திருநாளை எருசலேமில் கொண்டாட வேண்டுமென்று சின்னப்பர் தீவிரப்பட்டதினால், ஆசியாவிலே தமக்குத் தாமதமுண்டாகாதபடிக்கு எபேசு நகரத்தில் தங்காமல், அதைக் கடந்து போகவேண்டுமென்று தீர்மானித்திருந்தார்.

7. இவ்வாக்கியத்தில் சொல்லிய அப்பம் வேதபாரகர் நிச்சயித்திருக்கிறபடியே தேவநற்கருணையாகிற திவ்விய அப்பமாமே. வாரத்தின் முதல்நாள் ஞாயிற்றுக்கிழமைதான். அத்தினத்தில் விசேஷமாய் அக்காலத்துக் கிறீஸ்துவர்கள் தேவநற்கருணை வாங்குவதற்கும் திவ்விய பூசை பிரசங்கங்களுக்கும் கூடிவந்ததினால், அப்போஸ்தலருடைய காலமுதற்கொண்டு அதுவே ஒய்வுநாளாயிற்று என்பதற்குத் திர்ஷ்டாந்தமாமே. யேசுநாதசுவாமியுடைய அதிகாரத்தைக்கொண்டு அப்போஸ்தலர்களும் அவர்களோடு திருச்சபையும் சனிக்கிழமை ஒய்வின்கடமையை ஒழித்து, ஞாயிற்றுக்கிழமையை ஒய்வுநாளாக நியமித்தார்கள். யேசுநாதர் உயிர்த்ததும், இஸ்பிரீத்து சாந்துவானவர் எழுந்தருளிவந்ததும் ஞாயிறு வாரமானதினாலும், கிறீஸ்துவர்களுக்கும், யூதர்களுக்கும் ஒய்வுநாளிலும் வித்தியாசமிருக்கவேண்டுமென்பதினாலும் அக்கிழமை நியமிக்கப்பட்டது.

15. இவ்வசனத்தில் சாமுதீவின் கரைபிடித்து என்பதற்குப்பின் "துரோக்கிய துறையில் இராத்தங்கி" என்ற வசனம் அநேக கிரேக்குப் பிரதிகளிலும் லத்தீன்வுல்காத்துப் பிரதியிலும் விடுபட்டிருக்கிறது.

17. ஆயினும் மிலேத்திலிருந்து அவர் எபேசுக்கு ஆளனுப்பித் திருச் சபையின் மூப்பர்களை வரவழைத்தார்.

18. அவர்கள் தம்மிடத்தில் வந்து ஒன்றாய்க் கூடினபோது, அவர்களை நோக்கி அவர் சொன்னதாவது: நான் ஆசியாவில் பிரவேசித்த முதல் நாள் தொடங்கி, எக்காலத்திலும் உங்கள் நடுவில் இன்னபடி இருந்தேனென்பதை நீங்கள் அறிந்திருக்கிறீர்களே.

19. சர்வ தாழ்ச்சியோடும், கண்ணீரோடும், யூதர்களுடைய சாப்பனைகளால் எனக்கு நேரிட்ட சோதனைகளோடும் நான் ஆண்டவருக்கு ஊழியஞ்செய்தேன்.

20. பிரயோசனமானவைகளில் ஒன்றையும் நான் உங்களுக்கு மறைத்து வைக்காமல், பிரசித்தமாயும் அந்தந்த வீடுகளிலும் உங்களுக்கு அறிவித்துப் போதித்தேன்.

21. சர்வேசுரனிடத்தில் மனந்திரும்புதலையும் நமது ஆண்டவராகிய யேசுக் கிறீஸ்துநாதரிடத்தில் விசுவாசத்தையும் யூதர்களுக்கும் புறஜாதியார்களுக்கும் (கூறி) அத்தாட்சி கொடுத்தேன்.

22. இப்போதோவெனில் நான் இஸ்பிரீத்துவினால் கட்டப்பட்டவனாய் இதோ எருசலேமுக்குப் போகிறேன்; அங்கே எனக்கு என்ன நடக்கப்போகிறதென்று அறியேன்.

23. விலங்குகளும் உபத்திரவங்களும் எனக்கு எருசலேமில் காத்திருக்கின்றது என்று இஸ்பிரீத்துசாந்துவானவர் பட்டணங்கள் தோறும் எனக்கு நிச்சயிக்கிறதொன்றே எனக்குத் தெரியும்.

24. ஆயினும் அவைகளில் யாதொன்றிற்கும் நான் பயப்படுகிறதுமில்லை: என்னைப்பார்க்கிலும் என் உயிரைப் பெரிய காரியமாக எண்ணுகிறதுமில்லை. சர்வேசுரனுடைய கிருபையின் சுவிசேஷத்துக்குச் சாட்சியஞ் சொல்லும்படி ஆண்டவராகிய யேசுநாதரிடத்தில் நான் பெற்றுக்கொண்ட பிரசங்கத் தொழிலையும் நிறைவேற்றி, என் சீவிய அயனத்தையும் முடிப்பேனாகில் அதுவே போதும்.

25. இதோ, நான் உங்களுக்குள் சஞ்சரித்துச் சர்வேசுரனுடைய இராச்சியத்தைக்குறித்துப் பிரசங்கித்துவந்தேனே. நீங்கள் எல்லாரும் இனி என் முகத்தைக் காணமாட்டீர்களென்று அறிந்திருக்கிறேன்.

26. ஆகையால் எல்லாருடைய இரத்தத்தின் மட்டிலும் நான் குற்றமில்லாதவனாயிருக்கிறேனென்று இன்றைய தினம் உங்களைச் சாட்சிகளாக வைக்கிறேன்.

27. ஏனெனில் சர்வேசுரனுடைய சித்தத்தில் ஒன்றையும் உங்களுக்கு மறைக்காமல் எல்லாவற்றையும் அறிவித்திருக்கிறேன்.

28. ஆதலால் உங்கள் மட்டிலும், சர்வேசுரன் தம்முடைய இரத்தத்தினால் தமக்குச் சொந்தமாக்கின தமது திருச்சபையை ஆளுவதற்கு இஸ்பிரீத்துசாந்துவானவர் உங்களை மேற்பிராணிமார்களாக ஸ்தாபித்து (ஒப்பித்த) சாவ மந்தையின் மட்டிலும் எச்சரிக்கையாயிருங்கள்.

---

22. இஸ்பிரீத்துவினால் கட்டப்பட்டவனாய் என்பதற்கு இஸ்பிரீத்துசாந்துவினால் பலமாய் ஏவப்பட்டவனாய் என்பது கருத்து.

26. இந்த வசனத்துக்கு அர்த்தமாவது. உங்களுக்குள் யாராவது கெட்டுப்போனால் அவன் தன் குற்றத்தினால் கெட்டுப்போவானொழிய அவன் கேட்டுக்கு நான் காரணமல்லவென்று அர்ச். சின்னப்பர் சொல்லுகிறார்.

29. நான் போனபின்பு இரக்கமின்றி மந்தையைப் பறிக்கும் ஓநாய்கள் உங்களுக்குள்ளே நுழையும் என்று அறிவேன். (மத். 7-15.)

30. உங்களுக்குள்ளும் சிலர் எழும்பி, சீஷர்களைத் தங்கள் பாரிசமாய் இழுத்துக்கொள்ளும்படி மாறுபாடானவைகளைப் போதிப்பார்கள். (1. தீமோ. 4-1.)

31. ஆகையால் நான் மூன்று வருஷகாலமாய் இரவும் பகலும் இடைவிடாமல் உங்களில் ஒவ்வொருவனுக்கும் அழுகையோடு புத்திமதி சொல்லிவந்ததை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, விழிப்பாயிருங்கள்.

32. ஞான விர்த்தியையும் அர்ச்சிக்கப்பட்ட சகலரோடும் உங்களுக்குச் சுதந்தரத்தையும் தந்தருள வல்லவராயிருக்கிற சர்வேசுரனுக்கும் அவருடைய வரப்பிரசாத வாக்குக்கும் இப்போது உங்களை ஒப்படைக்கிறேன்.

33. ஒருவனுடைய வெள்ளியையாவது பொன்னையாவது வஸ்திரத்தையாவது நான் இச்சிக்கவில்லை.

34. உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடியே எனக்கும் என்னோடிருந்தவர்களுக்கும் அவசரமானவைகளையெல்லாம் இந்தக் கைகளே சம்பாதித்தன. (1. கொ. 4-12.)

35. இவ்விதமாய் நீங்கள் வேலை செய்து, பலவீனரைத் தாங்கவும், வாங்குகிறதைவிடக் கொடுக்கிறதே பாக்கியமென்று யேசுநாதசுவாமி திருவுளம்பற்றின வாக்கியத்தை நினைத்துக் கொள்ளவும் வேண்டுமென்று சகலத்தையும் உங்களுக்குக் காண்பித்தேன் என்றார்.

36. இவைகளைச் சொன்ன பின்பு அவர் முழந்தாட்படியிட்டு, அவர்களெல்லாரோடும் வேண்டிக்கொண்டார்.

37. அப்பொழுது அவர்கள் எல்லோரும் மிகவும் அழுது: நீங்கள் இனி என் முகத்தைக் காணமாட்டீர்கள் என்று அவர் சொன்னதைக்குறித்து விசேஷமாய்த் துக்கப்பட்டு,

38. அவருடைய கழுத்தைக் கட்டியணைத்து முத்தஞ்செய்து, கப்பல்மட்டும் அவருடனேகூடப் போனார்கள்.

## 21-ம். அதிகாரம்.

*சின்னப்பர் எருசலேமுக்குப் போனதும், தேவாலயத்தில் யூதர்களால் பிடிபட்டதுமாகிய விசேஷங்கள்.*

1. நாங்கள் அவர்களைவிட்டுப் பலவந்தமாய்ப்பிரிந்து, துறைபெயர்ந்தபின், நேரோட்டமாய்க் கோஸ் தீவையும், மறுநாளில் ரோதுவையுஞ் சேர்ந்து, அவ்விடம்விட்டுப் பத்தரா நகருக்கு வந்தோம்.

2. பெனிக்கே தேசத்திற்குப் போகிற ஒரு கப்பலை அங்கே கண்டு அதிலேயேறி யாத்திரைசெய்தோம்.

3. சீப்புரு தீவைக் கண்டபோது அதை இடதுபுறமாக விட்டு, சீரிய நாட்டிற்குக் கப்பலை நடத்தி, தீரு பட்டணத்துத் துறையில் இறங்கினோம். கப்பலிலுள்ள சரக்குகளை அங்கே இறக்க வேண்டியதாயிருந்தது.

4. மேலும் அவ்விடத்திலுள்ள சீஷர்களைக்கண்டு, அங்கே ஏழுநாள் தங்கினோம். அவர்கள் இஸ்பிரீத்துவின் ஏவுதலினால் எருசலேமுக்குப்போகவேண்டாமென்று சின்னப்பருக்குச் சொன்னார்கள்.

---

4. சின்னப்பர் எருசலேம் நகருக்குப் போனால் வெகு துன்பம் அனுபவிப்பாரென்று சீஷர்கள் தேவ ஏவுதலால் அறிந்து, அவர் அங்கே போகிறது நல்லதல்லவென்று தங்கள் புத்தியாய்ச் சொன்னார்கள். ஆயினும் அவர் அவ்விடம் போவது தேவ சித்தமாயிருந்ததென்று முந்தின அதிகாரம் 22-ம் வசனத்தில் காண்கிறோம்.

5. அந்நாட்கள் கழிந்தபின்பு, நாங்கள் புறப்பட்டுப் போகையில் அவர்களெல்லோரும் தங்கள் பெண்ஜாதி பிள்ளைகளோடும் பட்டணத்தின் வெளிப்புறம்வரையில் வந்து, எங்களை வழிவிட்டனுப்பினார்கள். அப்பொழுது கடற்கரையில் முழந்தாட்படியிட்டு வேண்டிக்கொண்டோம்.

6. பிறகு ஒருவருக்கொருவர் மங்கள வார்த்தை சொல்லிக்கொண்டு நாங்கள் கப்பல் ஏறினோம்; அவர்கள் தங்கள் வீட்டுக்குத் திரும்பிப்போனார்கள்.

7. நாங்களோ தீர் நகரத்திலிருந்து பித்தோலேமாய்தா பட்டணத்துக்கு வந்திறங்கி, கப்பல்யாத்திரையை முடித்தோம். அங்கே சகோதரர்களுக்கு வாழ்த்துதல் சொல்லி, ஒருநாள் அவர்களிடத்தில் தங்கினோம்.

8. மறுநாளில் புறப்பட்டுச் செசாரையா பட்டணத்துக்கு வந்துசேர்ந்து, ஏழுபேர்களில் ஒருவராகிய பிலிப்பென்னும் சுவிசேஷகருடைய வீட்டில் பிரவேசித்து, அவரிடத்தில் தங்கினோம்.

9. தீர்க்கதரிசனஞ்சொல்லும் கன்னிகைகளாகிய நாலு குமாரத்திகள் அவருக்கு இருந்தார்கள்.

10. நாங்கள் சிலநாள் அங்கே தங்கியிருக்கும்போது, அகாபு என்னும் பேருள்ள ஓர் தீர்க்கதரிசி யூதேயாவிலிருந்து வந்தார். (அப. 11-28.)

11. அவர் எங்களிடத்தில் வந்தபோது, சின்னப்பருடைய இடைக்கச்சையை எடுத்துத் தன் கால்களையும் கைகளையும் கட்டிக்கொண்டு: இந்தக் கச்சையையுடைய மனிதனை யூதர்கள் எருசலேமில் இவ்விதமாய்க் கட்டி, புறஜாதியாருக்குக் கையளிப்பார்கள் என்று இஸ்பிரீத்துசாந்துவானவர் சொல்லுகிறார் என்றார்.

12. இதைக் கேட்டபோது, எருசலேமுக்குப் போகவேண்டாமென்று நாங்களும் அவ்விடத்தாரும் அவரை மன்றாடினோம்.

13. அப்பொழுது சின்னப்பர் பிரத்தியுத்தரமாக: நீங்கள் அழுது, என் நெஞ்சம் பிளந்துபோகச் செய்கிறதென்ன? நான் யேசுநாதசுவாமியுடைய நாமத்தின் நிமித்தம் எருசலேமிலே கட்டப்படுவதற்கு மாத்திரமல்ல, மரிப்பதற்கும் ஆயத்தமாயிருக்கிறேனென்றார்.

14. அவர் உடன்படாததனாலே கூடாதபடியால், கர்த்தருடைய சித்தம் ஆகட்டும் என்று சொல்லி, பேசாதிருந்தோம்.

15. அந்நாட்களுக்குப் பின்பு, பயணத்துக்கு வேண்டிய முஸ்திப்புச்செய்து, எருசலேமுக்குப் போனோம்.

16. செசாரையா பட்டணத்திலுள்ள சீஷர்களில் சிலர் எங்களுடனேகூட வந்ததுந்தவிர, சீப்புரு தீவானாகிய மினாசோன் என்னும் ஓர் பழைய சீஷனிடத்தில் நாங்கள் தங்கும்படியாக அவனையும் தங்களோடு கூட்டிக்கொண்டு வந்தார்கள்.

17. நாங்கள் எருசலேமில் சேர்ந்தபோது, சகோதரர் எங்களைச் சந்தோஷமாய் ஏற்றுக்கொண்டார்கள்.

---

8. இங்கு சொல்லப்படுகிற பிலிப்பென்பவர் சுவிசேஷத்தை எழுதாதவராயினும், அதை அனுகூலமாய்ப் போதித்ததினாலே சுவிசேஷகனென்ற பெயர் அவருக்குக் கொடுக்கப்பட்டது. இவர் ஏழு தியாக்கோன்மார்களில் ஒருவரும், காந்தாசி அரசியின் அண்ணகனுக்கு ஞானஸ்நானங் கொடுத்தவருமாம். அப். நட. 8. அதி. காண்க.

12. அவ்விடத்தாரென்பது செசாரையா பட்டணத்துக் கிறீஸ்துவர்களென்றறிக.

18. அப்படியிருக்க, மறுநாளிலே சின்னப்பர் எங்களோடேகூட யாகப்பரிடத்திற்குப்போனார். மூப்பரெல்லோரும் அங்கே கூடி வந்தார்கள்.

19. அவர்களுக்கு அவர் மங்களஞ் சொன்னபிறகு, தமது பணிவிடையைக்கொண்டு சர்வேசுரன் புற ஜாதியாருக்குள் செய்தவைகளை ஒவ்வொன்றாய் விவரித்துச்சொன்னார்.

20. அவர்களும் அதைக் கேட்டு, சர்வேசுரனை ஸ்துதித்தார்கள். பின்னும் அவர்கள் அவரை நோக்கி: சகோதரரே, யூதர்களில் விசுவசித்தவர்கள் எத்தனையோ ஆயிரம் பேரென்று உமக்குத் தெரியுமே. அவர்கள் எல்லோரும் வேதப்பிரமாணத்தின்மேல் மெத்தவும் வைராக்கியராயிருக்கிறார்கள்.

21. ஆயினும் புறஜாதியார் நடுவில் வசிக்கிற யூதர்கள் தங்கள் பிள்ளைகளுக்கு விருத்தசேதனம் செய்யவும், முறைமைப்படி நடக்கவும் வேண்டுவதில்லையென்று நீர் சொல்லி, அவர்கள் மோயீசனைவிட்டுப் பிரியும்படி போதிக்கிறீர் என்று இவர்கள் உம்மைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறார்கள்.

22. ஆகையால் செய்ய வேண்டியதென்ன? நீர் வந்திருக்கிறீரென்று அவர்கள் கேள்விப்படுவார்கள்; அகத்தியமாய் ஒரு கூட்டமுங்கூடுவார்கள்.

23. ஆகையால் நாங்கள் உமக்குச் சொல்லுகிறதைச் செய்யும். அதென்னவெனில்: எங்களுக்குள் நேர்த்திக்கடன்காரர் நாலுபேர் இருக்கிறார்கள்.

24. நீர் அவர்களைக் கூட்டிக்கொண்டு, அவர்களுடன் உம்மைச் சுத்திகரித்து, அவர்கள் சிரச்சவரஞ் செய்துகொள்வதற்கு அவர்களுக்காகச் செலவுசெய்யும். அப்பொழுது உம்மைக்குறித்துக் கேள்விப்பட்டவைகள் அபத்தமென்றும், நீரும் வேதப்பிரமாணத்தை அநுசரித்தே நடந்துவருகிறீரென்றும் எல்லாரும் அறிந்துகொள்வார்கள்.

25. விசுவாசிகளான புறஜாதியாரைப்பற்றிய விஷயத்தில், அவர்கள் விக்கிரகங்களுக்குப் படைத்ததற்கும், இரத்தத்திற்கும், மூச்சடைத்துச் செத்ததிற்கும், விபசாரத்திற்கும் விலகியிருக்க வேண்டுமென்று நாம தீர்மானித்து எழுதியனுப்பினோமே என்றார்.

26. அப்போது சின்னப்பர் அநத மனிதர்களை அழைத்துக்கொண்டு, மறுநாள் அவர்களோடேகூடத் தாமும் சுத்திகரஞ்செய்து, தேவாலயத்தில் பிரவேசித்து, அவர்களில் ஒவ்வொருவனுக்காகவும் பலிசெலுத்தப் படுமளவும் சுத்திகரிப்புநாட்களை நிறைவேற்றுவோம் என்று அறிவித்தார்.

27. அப்படியே ஏழு நாட்களும் நிறைவேறிவருகையில், ஆசியா நாட்டிலிருந்து வநத யூதர்கள் அவரைத் தேவாலயத்தில் கண்ட மாத்திரத்தில், எல்லா ஜனத்தையும் எழுப்பிவிட்டு, அவர்மேல் கைபோட்டுப் பிடித்து:

28. இஸ்ராயேலரே, உதவிக்கு வாருங்கள்; நம்முடைய ஜனத்துக்கும், வேதப் பிரமாணத்துக்கும், இநத ஸ்தலத்துக்கும் விரோதமாய் எங்கும், எல்லாருக்கும் போதிக்கிற மனுஷன் இவன்தான்; இன்னமும் தேவாலயத்துக்குள்ளே அக்கியானிகளையும் கூட்டிக்கொண்டுவந்து, இந்தப் பரிசுத்த ஸ்தலத்தையும் தீட்டாக்கினான் என்று சத்தமிட்டார்கள்.

18. பன்னிரு அப்போஸ்தலர்களில் ஒருவராகிய சின்னயாகப்பர் எருசலேம் நகருக்குமேற்றிராணியாராயிருந்ததினாலே சின்னப்பர் அவரைச் சந்திக்கப்போனார்.

24. அப். நட. அதி. 18 வச. 18 வியாக்கியானங்காண்க.

29. ஏனெனில் எபேசு நகரத்தானாகிய துரோப்பிமு என்பவனை அவர்கள் பட்டணத்திலே சின்னப்பரோடேகூட கண்டிருந்ததினாலே, அவர் தேவாலயத்துக்குள்ளே அவனைக் கூட்டிக்கொண்டு வந்திருப்பார் என்று நினைத்திருந்தார்கள்.

30. ஆகையால் உடனே பட்டணமெல்லாம் கலகமாயிற்று; ஜனங்களும் திரண்டு ஓடிவந்து, சின்னப்பரைப் பிடித்துத் தேவாலயத்துக்குப்புறம்பே இழுத்துக்கொண்டு போனார்கள். உடனே கதவுகளும் சாத்தப்பட்டது.

31. அவர்கள் அவரைக் கொன்றுபோட எத்தனித்திருக்கையிலே, எருசலேம் பட்டணமெல்லாம் கலகமாயிருக்கிறதென்று சேனாபதிக்கு அறிவிக்கப்பட்டது.

32. உடனே அவன் போர்ச்சேவகரையும், சேர்வைக்காரரையும் அழைத்துக்கொண்டு, அவர்களிடத்திற்கு ஓடிவந்தான். அவர்கள் சேனாபதியையும் போர்ச்சேவகரையும் கண்டவுடனே, சின்னப்பரை அடிக்கிறதை நிறுத்திவிட்டார்கள்.

33. அப்போது சேனாபதி கிட்டவந்து, அவரைப்பிடித்து, இரண்டு சங்கிலிகளால் அவரைக்கட்டும்படி கட்டளையிட்டு, அவர் யாரென்றும், என்னசெய்தாரென்றும் விசாரித்தான்.

34. ஜனக் கும்பலுக்குள்ளே ஒவ்வொருவர் ஒவ்வொன்றைச் சொல்லிச் சத்தமிட்டார்கள். சந்தடியின் நிமித்தம் அவன் உண்மையை அறியக்கூடாமல், அவரைக் கோட்டைக்குள்ளே கொண்டுபோகும்படி கட்டளையிட்டான்.

35. அப்படியே அவர் படிமட்டுஞ் சேர்ந்தபோது, ஜனங்கள் செய்த பலவந்தத்தின் நிமித்தம் போர்ச்சேவகர் அவரைத் தூக்கிக்கொண்டு போகவேண்டியதாயிற்று.

36. ஏனெனில் ஜனங்கள்: இவனைத் தொலையும் என்று கூவிக்கொண்டு கும்பலாய்ப் பின்தொடர்ந்து வந்தார்கள்.

37. அவர்கள் சின்னப்பரைக் கோட்டைக்குள்ளே கொண்டுபோகிற சமயத்தில், அவர் சேனாபதியைநோக்கி: நான் உம்மோடு ஒரு வார்த்தை பேசலாமா என்று கேட்க, சேனாபதி அவரைப் பார்த்து: உனக்குக் கிரேக்குப் பாஷை தெரியுமா?

38. சிலநாளைக்குமுன்னே ஓர் கலகத்தையுண்டாக்கி, நாலாயிரம் கொலைபாதகரை வனாந்தரத்துக்குக் கூட்டிக்கொண்டுபோன எஜிப்துத்தேசத்தான் நீயல்லவோ? என்றான்.

39. அப்போது சின்னப்பர் அவனைநோக்கி: நான் சிலிசியாநாட்டிலுள்ள தார்ஸ்பட்டணத்துச் சுயாதீன யூதன்; அது உங்களுக்குத்தெரியப்படாத பட்டணமல்லவே. ஜனங்களை நோக்கிப் பேசும்படி எனக்கு உத்தரவாகவேண்டும் என்று உம்மை மன்றாடுகிறேன் என்றார்.

40. அவன் உத்தரவு கொடுக்கவே, சின்னப்பர் படியின்மேல் நின்று ஜனங்களுக்குக் கைச்சயிக்கினை காட்டினார். அப்பொழுது மிகுந்த அமரிக்கை உண்டாயிற்று. அவர் எபிரேயபாஷையிலே பேசிச் சொன்னதாவது:

39. தார்ஸ் என்னும் பட்டணத்தில் பிறந்தவர்கள் ரோமையரைப்போல் சுயாதீனமுள்ளவர்களானதால், சின்னப்பர் நான் எஜிப்துத் தேசத்தானுமல்ல; கொலைபாதகனுமல்ல; ரோமையன் என்னும் சுயாதீனப்பட்டமுடையவன் என்று அறிவிக்கிறார்.

## 22-ம். அதிகாரம்.

*சின்னப்பர் தாம் மனந்திரும்பின வர்த்தமானத்தை விவரித்து, தாம் ரோமை பிரஜையென்று அறிவித்துத் தண்டனைக்குத் தப்பின விவரமாவது.*

1. சகோதரர்களே, பிதாக்களே, இப்போது நான் உங்களுக்குச் சொல்லும் பிரதி நியாயங்களைக் கேளுங்கள் என்றார்.

2. அவர் தங்களை நோக்கி எபிரேய பாஷையில் பேசுகிறதை அவர்கள் கேட்டபோது, அதிக மௌனமாயிருந்தார்கள்.

3. அப்பொழுது அவர் சொன்னதாவது: நான் யூதன், சிலிசியா நாட்டிலுள்ள தார்ஸ் நகரத்தில் பிறந்து, இந்தப்பட்டணத்திலே வளர்ந்தவன். கமாலியேல் என்பவருடைய பாதத்தினருகே நம்முடைய பிதாக்களின் வேதசட்டங்களைத் திட்டமாய்ப் படிப்பிக்கபட்டு, இன்று நீங்களெல்லாரும் வேதவைராக்கியமுள்ளவர்களாய் இருக்கிறதுபோலவே, நானும் வேதவைராக்கியமுள்ளவனாய் இருந்தேன்.

4. நானே இந்த மார்க்கத்தைச் சாகடிக்கவேண்டுமென்று துணிந்து, (இதிலுட்பட்ட) ஸ்திரீகளையும் பூமான்களையும் கட்டிச் சிறைச்சாலைகளில் போடுவித்தேன்.

5. இதைப்பற்றிப் பிரதான ஆசாரியனும், மூப்பர்களனைவரும் எனக்குச் சாட்சி சொல்வார்கள். அவர்களிடத்திலிருந்து நான் சகோதரருக்கு நிருபங்களையும் வாங்கிக்கொண்டு, தமாஸ்கு நகரத்திலிருக்கிறவர்களும் தண்டிக்கப்படும்படிக்கு, அவர்களைக் கட்டி, எருசலேமுக்குக் கொண்டுவரத்தக்கதாக அவ்விடத்திற்குப் பயணமாய்ப் போனேன்.

6. அப்படியே நான் பிரயாணஞ்செய்து, மத்தியானவேளையில் தமாஸ்கு நகரத்தின்கிட்டச் சேர்ந்தபோது, சம்பவித்ததேதென்றால்: திடீரென வானத்தினின்று மகா பிரகாசம் என்னைச் சுற்றிப் பிரகாசித்தது.

7. நான் தரையிலே விழுந்தேன், அப்போது: சவுலே, சவுலே, என் என்னை உபாதிக்கிறாய் என்று எனக்குச் சொல்லுகிற ஓர் குரலொலியைக் கேட்டு,

8. ஆண்டவரே; நீர் யார் என்றேன். அதற்கு அவர்: நீ துன்பப்படுத்துகிற நசரேயனாகிய யேசு நானே என்றார்.

9. என்னோடுகூட இருந்தவர்கள் பிரகாசத்தைக் கண்டார்கள்: ஆயினும் என்னோடு பேசினவருடைய குரல் சத்தத்தை அவர்கள் கேட்கவில்லை.

10. மீளவும் நான்: ஆண்டவரே, நான் என்ன செய்யவேண்டும் என்றேன். அதற்கு ஆண்டவர்: நீ எழுந்திருந்து தமாஸ்கு நகருக்குப் போ: நீ செய்யவேண்டிய யாவற்றையுங் குறித்து அங்கே உனக்குச் சொல்லப்படும் என்றார்.

---

1. அர்ச். சின்னப்பர் மனந்திரும்பின வரலாற்றை இவ்வாகமம் 9-ம் அதிகாரம் 3-ம் வசனமுதல் அர்ச். லூக்காஸ் விவரமாய் எழுதியிருந்தாலும், அதில் சொல்லப்படாத சில விசேஷங்களைச் சமயோஜிதமாய் அர்ச். சின்னப்பர் இவ்விடத்தில் தெளிவிக்கிறார். தாம் எவ்வித மாய்கைக்குள்ளாகவில்லையென்றும், தமக்கு நடந்தவைகள் பட்டப்பகலில் நடந்தவைகளென்றும் 6-ம் வசனத்தில் காண்பிக்கிறார். 14-ம் 15-ம் 16-ம் வசனங்களில் அனனியா என்பவரால் சொல்லப்பட்ட அநேக வாக்கியங்களையும், 18-ம் வசனத்தில் திவ்விய கர்த்தர்தாமே தமக்குத் தரிசனையாகி அறிவித்த விசேஷங்களையும் தெளிவிக்கிறார்.

9. இவ்விடத்தில் சத்தத்தைக்கேட்கவில்லை யென்பதற்கு: என்னோடு பேசினவர் சொல்லிய வார்த்தைகளைக் கண்டுபிடிக்கத் தக்கவிதமாகக்கேட்கவில்லை என்றர்த்தமாகும்.

11. அந்தப் பிரகாசத்தின் காந்தியால் எனக்குக் கண் தெரியாதிருந்ததினாலே, என் துணைவர்களால் கைலாகு கொடுத்து வழிநடத்தப்பட்டு, தமாஸ்கு நகரத்துக்கு வந்தேன்.

12. அப்போது, வேதப்பிரமாணத்துக்கு ஒத்த நடக்கையுள்ளவரும், அங்கே குடியிருந்த சகல யூதர்களிடத்திலும் நற்சாட்சியம் பெற்றிருந்தவருமாகிய அனனியாஸ் என்னும் ஒருவர்

13. என்னிடத்தில் வந்து நின்று: சகோதரனாகிய சவுலே, ஏறெடுத்துப் பாரும் என்றார். அந்நேரமே நானும் (பார்வையடைந்து) அவரை ஏறெடுத்துப் பார்த்தேன்.

14. அவர் எனக்குச் சொன்னதாவது: நம்முடைய பிதாக்களின் தேவன் தம்முடைய திருச் சித்தத்தை நீர் அறியவும், நீதிபரரைத் தரிசிக்கவும், அவருடைய * திருவாய் மொழியைக் கேட்கவும் உம்மை முன்னியமகம் பண்ணியிருக்கிறார்.

15. ஏனெனில் நீர் கண்டவைகளையும், கேட்டவைகளையுங்குறித்துச் சகல மனிதர்களிடத்திலும் அவருக்குச் சாட்சியாயிருப்பீர்.

16. ஆகையால் இப்போது நீர் தாமதிப்பானேன்? எழுந்திருந்து, அவருடைய நாமத்தை மன்றாடி, ஞானஸ்நானம்பெற்று, உம்முடைய பாவங்களைக் கழுவும் என்றார்.

17. பிற்பாடு சம்பவித்ததேதெனில்: நானே எருசலேமுக்குத் திரும்பிவந்து, தேவாலயத்தில் ஜெபித்துக்கொண்டிருக்கையில் பரவசமாகி, அவரைத் தரிசித்தேன்.

18. அவர் என்னை நோக்கி: நீ தாமதம்பண்ணாமல் சீக்கிரமாய் எருசலேமை விட்டுப் புறப்பட்டுப்போ; ஏனெனில் நீ என்னைக் குறித்துச் சொல்லும் சாட்சியத்தை (இவர்கள்) ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் என்றார்.

19. அப்போது நான்: ஆண்டவரே, உமது பேரில் விசுவாசங்கொண்டிருந்தவர்களைச் சிறைச்சாலையில் அடைத்தவனும், ஜெப ஆலயங்களில் அடிப்பித்தவனும் நான்தான் என்றும்,

20. உம்முடைய சாட்சியாகிய முடியப்பருடைய இரத்தம் சிந்தப்பட்டபோது, நான் கூட நின்று அதற்குச் சம்மதித்திருந்தேன் என்றும், அவரைக் கொலை செய்தவர்களுடைய வஸ்திரங்களைக் காத்துக்கொண்டிருந்தேன் என்றும் அவர்கள் அறிந்திருக்கிறார்களே என்றேன்.

21. அவர் என்னை நோக்கி: நீ போ; நாம் உன்னைத் தூரமாய்ப் புறஜாதியாரிடத்திற்கு அனுப்புவோம் என்று திருவுளம்பற்றினார் என்றார்.

22. இந்த வார்த்தை வரைக்கும் அவருக்குக் காதுகொடுத்தார்கள்; பின்னும் அவர்கள் உரத்த சத்தமாய்க் கூப்பிட்டு: இப்படிப்பட்டவனைப் பூமியினின்று தொலையும்; இவன் உயிரோடிருக்கிறது நியாயமல்ல என்றார்கள்.

23. அவர்கள் கூக்குரலிட்டுத் தங்கள் வஸ்திரங்களை எறிந்து, புழுதியை வாரி ஆகாயத்திலே தூற்றிக்கொண்டிருக்கையில்,

24. அவர்கள் என்ன முகாந்திரத்தைப்பற்றி அவருக்கு விரோதமாய் இப்படிக் கூக்குரலிடுகிறார்களென்று அறியும்படி, சேனாபதி அவரைக் கோட்டைக்குள்ளே கொண்டுபோகவும், சாட்டைகளால் அடித்து, உபாதிக்கவும் கட்டளையிட்டான்.

14. நீதிபரர் என்பது உலகஇரட்சகர். இசை. 51-ம் அதி. 5-ம் வசனமும் 53-ம் அதி. 2-ம் வசனமும், அப். நடபடி 7-ம் அதி. 52-ம் வசனமுங்காண்க.

25. அந்தப்படி அவர்கள் சின்னப்பரை வார்களால் இறுகக் கட்டினபோது, அவர் தமக்குச் சமீபமாய் நின்ற சேர்வைக்காரனை நோக்கி: குற்றவாளியென்று தீர்க்கப்படாத ரோமையனை அடிப்பதற்கு உங்களுக்கு உத்தாரவுண்டோ என்றார்.

26. சேர்வைக்காரன் இதைக்கேட்டு, சேனாபதியிடத்திற்போய், இதை அவனுக்கு அறிவித்து: என்ன செய்யப்போகிறீர்? இந்த மனிதன் ரோமைச் சுயாதீனன் என்றான்.

27. ஆதலால் சேனாபதி அவரிடத்திலே வந்து: நீ ரோமையனோ? என்னிடத்தில் சொல்லு என்று கேட்க, அவர்: ஆம், என்றார்.

28. அப்பொழுது சேனாபதி மாறுத்தாரமாக: நான் இந்த நகர் உரிமையை மிகுந்த திரவியத்தினாலே சம்பாதித்தேன் என்றான். அதற்குச் சின்னப்பர்: இது எனக்குப் பிறப்பின் உரிமை என்றார்.

29. ஆகையால் அவரை உபாதிக்க எத்தனித்திருந்தவர்கள் உடனே அவரைவிட்டு விலகினார்கள். சேனாபதியும் அவரை ரோமையனென்று அறிந்ததின்மேல், தான் அவரைக் கட்டுவித்ததற்காகப் பயந்தான்.

30. அப்படியிருக்க, அவர் என்ன முகாந்தரத்தைப்பற்றி யூதர்களால் குற்றஞ் சாட்டப்பட்டாரென்று அதிகத் திட்டமாய் அறியவிரும்பி, மறுநாளில் அவரைக் கட்டவிழ்த்து, ஆசாரியரையும், சங்கத்தாரனைவரையுங் கூடிவரும்படிகட்டளையிட்டு, அவரைக் கூட்டிக்கொண்டுபோய் அவர்கள் நடுவில் நிறுத்தினான்.

## 23-ம். அதிகாரம்.

சின்னப்பர் ஆலோசனை சங்கத்துக்குமுன்பாக நியாயஞ்சொன்னதும், யூதர்களுடைய சதியோசனை வெளிப்பட்டதினால் அவர் செசாரையா பட்டணத்துக்கு அனுப்பப்பட்டதும்.

1. சின்னப்பர் ஆலோசனை சங்கத்தாரை நோக்கி: சகோதரரே, நான் இந்நாள்மட்டும் சர்வேசுரனுடைய சமுகத்தில், முழுதும் நல்ல மனச்சாட்சியோடு நடந்து வந்தேன் என்றார்.

2. அப்பொழுது பெரிய குருவாகிய அனனியா என்பவன் அவரை வாயில் அறையும்படி தன்னருகில்நின்றவர்களுக்குக் கட்டளையிட்டான்.

3. அப்பொழுது சின்னப்பர் அவனைப்பார்த்து: வெள்ளையடிக்கப்பட்ட சுவரே, சர்வேசுரன் உன்னை அடிப்பார். வேதப் பிரமாணத்தின்படி எனக்கு நடுத்தீர்க்கிறவனாய் உட்கார்ந்திருக்கிற நீ வேதப் பிரமாணத்துக்கு விரோதமாய் என்னை அடிக்கக் கட்டளையிடுகிறாயோ என்றார்.

4. சமீபத்தில் நின்றவர்கள்: சர்வேசுரனுடைய பெரிய குருவைத் தூஷணிக்கிறாயோ என்றார்கள்.

28. ரோமைப்பிரஜையென்னும் சுயாதீனமடைந்தவர்களுக்குக் கிடைத்த உரிமையேதெனில் அவர்களை விசாரணையின்றி அடிக்கவாவது, விலங்கிடவாவது, சிலுவையில் அறையவாவது கூடாதென்பதாம். இதுவுமன்றிப் போர்ச்சேவகத்தில் அமருகிறதும், தோக்கா என்னும் உடுப்பையணிந்துகொள்ளுகிறதும் இவை முதலிய விசேஷங்கள் அவர்களுக்கு உரிமையாயிருந்தது.

3. பூர்வீக சரித்திர நூலாசிரியனான யோசேப் என்பவன் எழுதியிருக்கிறபடி இந்த அனனியாவென்னும் பிரதான ஆசாரியன், கர்த்தர் பிறந்த 47-ம் வருஷ முதல் 59-ம் வருஷம் வரையில் பன்னிரண்டு வருஷமாய் உலோபித்தனங் கொடுமை முதலிய துர்க்குணங்களால் கெட்ட பேரெடுத்திருந்தான். சர்வேசுரன் உன்னை அடிப்பாரென்று அர்ச்.சின்னப்பர் அவனுக்குச் சொன்ன வாக்கியப்படி கி. பி. 66-ம் வருஷத்தில் அவன் தன் விரோதிகளிலொருவனால் வாளுக்கு இரையாகி மடிந்தான்.

5. அதற்குச் சின்னப்பர்: சகோதரர்களே, அவர் பெரிய குருவென்று எனக்குத்தெரியாமல் போயிற்று. உன் ஜனத்தின் தலைவரைத் தூஷணியாதிருப்பாயாக என்று எழுதப்பட்டிருக்கிறதே என்றார்.

6. அல்லாமலும அவர்களில் சதுசேயர் ஒருபங்கும், பரிசேயர் ஒரு பங்குமாயிருக்கிறார்கள் என்று சின்னப்பர் அறிந்து, சங்கத்தின் நடுவில் உரத்த சத்தமிட்டு: சகோதரர்களே, நான் பரிசேயனும், பரிசேயனுடைய மகனுமாயிருக்கிறேன். மரித்தோருடைய உத்தானத்தையும், அதின் நம்பிக்கையையுங்குறித்து, நான் நியாயம் விசாரிக்கப்படுகிறேன் என்றார்.

7. இப்படி அவர் சொன்னவுடனே, பரிசேயருக்கும் சதுசேயருக்கும் வாக்குவாதம் உண்டாயிற்று; கூட்டமும் பிரிவினைப்பட்டது.

8. என்னத்தினாலென்றால், சதுசேயர் உத்தானமும், சம்மனசும் அரூபியும் இல்லையென்று சொல்லுகிறார்கள். பரிசேயரோ அவ்விரண்டும் உண்டென்று ஒத்துக்கொள்ளுகிறார்கள்.

9. ஆகையால் பெரிய கூக்குரலுண்டாயிற்று. அப்பொழுது பரிசேயரில் சிலர் எழுந்து: இந்த மனிதனிடத்தில் ஒரு குற்றமும் காணேம்; ஓர் அரூபியாவது ஓர் சம்மனசாவது இவனோடு பேசியிருந்தால் என்ன என்று சொல்லித் தர்க்கித்தார்கள்

10. அப்படியே கலகம் அதிகரித்ததினால், அவர்கள் சின்னப்பரைப் பிடித்துச் சின்னபின்னமாக்கிப் போடுவார்கள் என்று சேனாபதி பயந்து, போர்ச் சேவகர்கள் இறங்கிப் போய், அவர்கள் மத்தியிலிருந்து அவரை இழுத்துக் கோட்டைக்குள்ளே கொண்டுபோகக் கட்டளையிட்டான்.

11. அன்று இரவில் ஆண்டவர் அவருக்கு முன் நின்று: தைரியமாயிரு; ஏனெனில் நீ என்னைக்குறித்து எருசலேமில் சாட்சிசொன்னதுபோல் ரோமாபுரியிலும் சாட்சிசொல்லவேண்டும் என்றார்.

12. ஆனால் விடிந்தபின், யூதரில் சிலர் ஒன்றாய்க் கூடி, சின்னப்பரைக் கொலை செய்யுமட்டும் தாங்கள் சாப்பிடுவதுமில்லை, குடிப்பதுமில்லை என்று ஆணையிட்டுச் சபதம் பண்ணிக்கொண்டார்கள்.

13. இப்படிக் கட்டுப்பாடு செய்துகொண்டவர்கள் நாற்பதுபேருக்கு அதிகமாயிருந்தார்கள்.

14. அவர்கள் பிரதான ஆசாரியனிடத்திலும், மூப்பர்களிடத்திலும் போய்: நாங்கள் சின்னப்பனைக் கொலை செய்யுமட்டும் யாதொன்றையும் உண்பதில்லை என்று ஆணைமேல் ஆணையிட்டுக்கொண்டோம்.

15. ஆதலால் இப்பொழுது நீங்கள் ஆலோசனை சங்கத்தாரோடுகூட அவனைக் குறித்து ஏதோ ஒரு விஷயத்தை அதிக நிச்சயமாய் விசாரித்தறிய மனதுள்ளவர்கள்போல் காண்பித்து, அவனை உங்களிடத்தில் கூட்டிக்கொண்டு வரும்படிக்குச் சேனாபதிக்கு அறிவியுங்கள். அவன் சமீபமாய் வருவதற்கு முன்னே நாங்கள் அவனைக் கொலை செய்ய ஆயத்தமாயிருக்கிறோம் என்றார்கள்

16. இந்தச் சாபத்தையைச் சின்னப்பருடைய சகோதரியின் குமாரன் கேள்விப்பட்டு, கோட்டைக்குள்ளே போய்ச் சின்னப்பருக்கு அறிவித்தான்.

17. ஆகையால் சின்னப்பர் சேர்வைக்காரரில் ஒருவனைத் தம்மிடத்தில் வரவழைத்து: இந்த வாலனைச் சேனாபதியிடத்தில் கூட்டிக்கொண்டுபோ; அவரிடத்தில் இவன் அறிவிக்கவேண்டிய காரியம் ஒன்றுண்டு என்றார்.

18. அப்படியே அவன் சேனபதியிடத்தில் இவனை அழைத்துக்கொண்டு போய்: விலங்கிடப்பட்டிருக்கிற சின்னப்பன் உமக்கு ஏதோ சொல்லவேண்டுமென்றிருக்கிற இந்த வாலனை உம்மிடத்தில் கூட்டிக்கொண்டு வரும்படி என்னை மன்றாடினான் என்றான்.

19. அப்பொழுது சேனபதி அவனுடைய கையைப் பிடித்து, அவனோடு தனிமையான ஓரிடத்தில் போய்: நீ என்னிடத்தில் அறிவிக்கவேண்டிய சங்கதி என்ன? என்று கேட்டான்.

20. அதற்கு அவன்: யூதர் சின்னபலாக்குறித்து ஏதோ ஒரு சங்கதியை அதிக நிச்சயமாய் விசாரித்தறிய மனதுள்ளவர்கள்போல, நாளையத்தினம நீர் ஆலோசனைச் சங்கததிற்கு முன்பாக அவனைக் கொண்டுவர வேண்டுமென்று உம்மை மன்றாடும்படி உடன்பட்டிருக்கிறார்கள்.

21. ஆனால் நீர அவாகளை நமபாதேயும்; ஏனெனில் அவர்களில் நாற்பதுபேருக்கு அதிகமானவர்கள் அவனைக் கொலைசெய்யுமளவும் சாப்பிடுவதுமில்லை, குடிப்பதுமில்லை என்று ஆணையிட்டுச் சபதம்பண்ணி, அவருக்கு விரோதமாய்ச் சதியோசனை செய்து, உம்முடைய உத்தரவுக்காகக் காத்துக்கொண்டு தயாராயிருக்கிறார்கள் என்றான்.

22. ஆகையால், சேனபதி தனக்கு இவைகளை அறிவித்ததாக எவனுக்குஞ் சொல்லவேண்டாமென்று வாலனுக்குக் கட்டளையிட்டு, அவனை அனுப்பிவிட்டான்.

23. பின்பு அவன் இரண்டு சேனைக்காரரை அழைத்து, அவர்களுக்குச சொன்னதாவது: செசாரையா பட்டணத்துக்குப் போகும்படி இருநூறு போர்ச்சேவகரையும், எழுபது குதிரை வீரரையும், இருநூறு ஈட்டிக்காரரையும் இராத்திரி மூன்றாம் மணிக்கு முஸ்திப்புச் செய்யுங்கள்.

24. அன்றியும் சின்னப்பனை ஏற்றி, தேசாதிபதியாகிய பெலிக்ஸிடத்திற்குப் பத்திரமாய்க் கொண்டுபோகும்படிக்கு வாகன மிருகங்களையும் ஆயத்தப்படுத்துங்கள் என்றான்.

25. ஏனெனில் ஒருவேளை யூதர் அவனைப பலவநதமாய்ப் பிடித்துக் கொலைசெய்வார்களென்றும், பின்னால் தான் பணம் வாங்கியிருப்பதாகத் தன்பேரில கோள்கூமத்தப்படுமென்றும் அஞ்சினான்.

26. அல்லாமலும அவன் பின் வருமாறு ஒரு காகிதமும எழுதினான். அதாவது: மகா கனம்பொருந்திய தேசாதிபதியாகிய பெலிக்ஸ் என்பவருக்குக் கிளவுதியு லீசியாஸ் வாழ்த்துதல் சொல்லி எழுதுவது:

27. இந்த மனுஷன் யூதாகளால் பிடிபட்டுக் கொலையுண்ணப்போகிற தருணத்தில், நான் போர்ச்சேவகர்களோடு கூடப் போய், இவன் ரோமையனென்று அறிந்து, இவனை விடுவித்தேன்.

28. பின்னும அவர்கள் இவன்மேல சாட்டின குற்றத்தை அறியவேண்டுமென்று இவனை அவர்களுடைய ஆலோசனை சங்கததுக்குக் கூட்டிக் கொண்டு போனேன்.

29. ஆனால் அவர்களுடைய வேததார்க்கத்துக்கடுத்த விஷயங்களில் இவன் குற்றஞ் சாட்டப்பட்டதொழிய, மரணத்துக்காவது, விலங்குக்காவது ஏதுவான ஓர் குறறமும் இவனிடத்தில் இல்லையென்று கண்டறிந்தேன்.

---

24. வாகனமிருகங்கள் என்னும் இந்தச்சொல் கிரேக்குப்பிரதிகளில் குதிரைகளென்றிருக்கிறது. அர்ச் சின்னப்பர் அதிசீக்கிரமாய்ப் போகும்படி மாற்றுக் குதிரைகளிருக்கும்படி இவ்வித கட்டளைகொடுக்கப்பட்டது.

27. லீசியாஸ் எழுதிய காகிதத்தில் உண்மைப்படி சொல்லாமல், தான் அர்ச். சின்னப்பருக்குச்செய்த அநீதங்களை மறைத்துத் தனக்குச் சாதகமாய் எழுதினான்.

30. பின்னும் அவர்கள் இவனுக்கு விரோதமாய் எத்தனித்த சதியோசனையைப்பற்றி எனக்குச் செய்திவந்த தினால், இவனை உம்மிடத்திற்கு அனுப்பினேன். இவன்மேல் குற்றஞ்சாட்டுகிறவர்கள் உமக்குமுன்பாக வந்து பேசலாமென்று அவர்களுக்கு அறிவித்திருக்கிறேன். சுகமேயிரும் என்று எழுதினான்.

31 ஆதலால் போர்சேவகர் தங்களுக்குக் கட்டளையிட்டபடியே, சின்னப்பனை அழைத்துக்கொண்டு இரவில் அந்திப்பத்திரி ஊருக்குப் போய்,

32. மறுநாளில் குதிரை வீரரை அவரோடுகூடப் போகும்படி நிறுத்திவிட்டு, கோட்டைக்குத் திரும்பிவந்தார்கள்.

33. அவர்கள் செசாரேயா பட்டணத்தில் சேர்ந்து, தேசாதிபதியிடத்தில் நிருபத்தையும் கொடுத்து, சின்னப்பனையும் அவன் முன்பாக நிறுத்தினார்கள்.

34. அவன் அதை வாசித்தபின்பு, இவன் எத்தேசத்தான் என்று கேட்டு, சிலிசிய தேசத்தான் என்று அறிந்துகொண்டு:

35. உன்பேரில் குற்றஞ் சாட்டுகிறவர்கள் வந்தபின் உன் காரியத்தைக் கேட்பேன் என்று சொல்லி, எரோதனுடைய நீதியாசனசாலையில் அவரைக் காபந்துபண்ணும்படி கட்டளையிட்டான்.

## 24-ம் அதிகாரம்.

*சின்னப்பர் பெலிக்ஸ் என்னும் தேசாதிபதி முன்பாகத் தமதுமேல் சாட்டப்பட்ட குற்றங்களை மறுத்து, அவனுக்குச் சுவிசேஷத்தைப்போதித்தது.*

1. அப்படியிருக்க, ஐந்து நாளைக்குப்பின், பெரிய குருவாகிய அனனியா என்பவன், சில மூப்பர்களோடும், தெர்த்துலன் என்னும் ஓர் வாசாலகனோடும் அவ்விடத்துக்கு வந்தான். அவர்கள் சின்னப்பருக்கு விரோதமாய் (பிராது செய்ய) தேசாதிபதியினிடத்தில் போனார்கள்.

2. சின்னப்பர் அழைக்கப்பட்டு, ஆஜரானவுடனே தெர்த்துலன் அவர் பேரில் குற்றஞ்சாட்டத் தொடங்கிச் சொன்னதாவது: உத்தம பெலிக்ஸே, உம்மாலே நாங்கள் மிகுந்த சமாதான சௌக்கியத்தை அனுபவிக்கிறதினாலும், உம்முடைய பராமரிப்பினாலே அநேக காரியங்கள் சீராக்கப்படுகிறதினாலும்,

3. நாங்கள் எப்போதும் எங்கும் (இந்தச் சீர்திருந்தங்களை) மிகுந்த நன்றியறிதலுடனே அங்கீகரித்துக்கொள்ளுகிறோம்.

4. இப்போது நான் உம்மை அதிக நேரம் நிறுத்தாமல், நாங்கள் சுருக்கமாய்ச் சொல்லுவதை நீர் தயவாய்க்கேட்கவேண்டுமென்று பன்றுகிறேன்

5. (என்னவெனில்) இந்த மனிதன் சனியனாகவும், உலகமெங்குமுள்ள சகல யூதருக்குள்ளும் கலாபங்களை மூட்டுகிறவனாகவும், நசரேயருடைய மதக் கலாபனைக்குக் காரணனாகவும் இருக்கக் கண்டோம்.

6. தேவாலயத்தை முதலாய் இவன் தீட்டுப்படுத்த எத்தனித்தான்; நாங்கள் இவனைப்பிடித்து, எங்கள் வேதப் பிரமாணப்படி நியாயந்தீர்க்க மனதாயிருந்தோம்.

7. ஆனால் லீசியாஸ் என்னும் சேனாபதி சடுதியில் வந்து, மிகுந்த பலாத்காரமாய் இவனை எங்கள் கையினின்று பறித்துக்கொண்டு, (அப். 21-31)

8 இவன்மேல் குற்றஞ்சாட்டுகிறவர்கள் உம்மிடத்தில் வரும்படி கட்டளையிட்டார் நாங்கள் இவன்மேல் சாட்டுகிற சகல குற்றங்களையும்பற்றி நீரே இவனிடத்தில் விசாரித்து அறிந்துகொள்ளலாம் என்றான்.

9. யூதர்களும் அதற்கிசைவாக ஒத்துக்கொண்டு, இவைகள் எதார்த்தந்தான் என்றார்கள்.

10. அப்போது தேசாதிபதி சின்னப்பர் பேசும்படி அவருக்குச் சயிக்கினை காட்டினபடியால், அவர் பதில்மொழியாகச் சொன்னதாவது: நீர் அநேக வருஷகாலமாய் இந்தத் தேசத்தாருக்கு நியாயாதிபதியாயிருக்கிறீர் என்று அறிந்து, நான் அதிக நம்பிக்கையோடு என் காரியங்களைப்பற்றி மாறுத்தாரஞ்சொல்லுகிறேன்.

11. நான் ஆராதிக்கும்படி எருசலேமுக்குப்போய், இப்போது பன்னிரண்டு நாளைக்கு அதிகமில்லையென்று நீர் அறிந்துகொள்ளலாம் (அப். 23-13.)

12. தேவாலயத்திலே நான் யாதொருவனோடு தர்க்கம் பண்ணினதையாவது ஜெபக்கூடங்களிலே அல்லது பட்டணத்திலே ஜனங்களுக்குள்ளே யாதொரு கும்பலைக் கூட்டினதையாவது இவர்கள் கண்டதுமில்லை;

13. இப்போது இவர்கள் என் பேரில் சாட்டுகிற குற்றங்களை உமக்கு ருசுப்படுத்தவுமாட்டார்கள்.

14. ஆயினும் இந்த ஒரு காரியத்தை உமக்கு முன்பாக ஒத்துக்கொள்ளுகிறேன்: என்னவென்றால், இவர்கள் பகிதத்தனம் என்று சொல்லுகிற மார்க்கத்தின்படி, நான் பிதாவையும் என் சர்வேசுரனையுஞ் சேவித்து, வேதப்பிரமாணத்திலும் தீர்க்கதரிசன ஆகமங்களிலும் எழுதப்பட்டிருக்கிற யாவற்றையும் விசுவசித்து,

15. நீதிமான்களுக்கும் அநீதர்களுக்கும் உண்டாகும் உத்தானத்தை இவர்கள் எதிர்பார்த்திருக்கிறதுபோல நானும் சர்வேசுரனிடத்தில் நம்பி, எதிர்பார்த்திருக்கிறேன்.

16. இதினாலே நான் எப்போதும் சர்வேசுரனுக்கும் மனிதருக்கும் முன்பாகக் குற்றமற்ற மனச்சாட்சியுள்ளவனாயிருக்கப் பிரயாசப்படுகிறேன்.

17. அநேக வருஷங்களுக்குப் பின்பு நான் என் ஜனங்களுக்குத் தருமங்களைச் செய்யவும், நேர்ச்சிக்கடனையும் காணிக்கைகளையும் செலுத்தவும் வந்தேன்.

18. நான் சுத்திகரிக்கப்பட்டவனாய்த் தேவாலயத்தில் கூட்டமும் கலகமுமின்றி இவைகளைச் செய்கையில்,

19. ஆசியா தேசத்தினின்று வந்திருந்த சில யூதர்கள் என்னைக்கண்டார்கள். அவர்களுக்கு என்பேரில் ஏதாவது விரோதமான காரியமிருந்தால், அவர்களே உம்முடைய முன்னுக்கு ஆஜராகி குற்றஞ்சாட்டியிருக்கவேண்டும்.

20-21. அல்லது நான் அவர்கள் நடுவில் நின்று: மரித்தோருடைய உத்தானத்தைக்குறித்து இன்று உங்களால் நியாயந்தீர்க்கப்படுகிறேன் என்று நான் சொன்ன ஒரு சொல்லினிமித்தம் குற்றஞ்சொன்னாலொழிய, நான் ஆலோசனை சங்கத்திற்கு முன்பாக நிற்கும்போது அவர்கள் என்னிடத்தில் யாதொரு அநீதத்தைக் கண்டது உண்டானால் இவர்களே சொல்லட்டும் என்றார்.

22. ஆனால் இந்த மார்க்கத்தின் விஷயங்களை மிகவும் நன்றாய் அறிந்திருந்த பெலிக்ஸ் என்பவன் அவர்களுக்குக் கெடு கொடுத்து, சேனாபதியாகிய லீசியாஸ் வரும்போது உங்கள் காரியங்களை விசாரிப்பேன் என்று சொல்லி,

23. சின்னப்பரைக் காவலுக்கொள்ளவும், அவர் கஷ்டமில்லாதிருக்கவும், அவருடைய ஜனத்தில் ஒருவனையும் அவருக்கு ஊழியஞ்செய்யத் தடைசெய்யாதிருக்கவும் சேர்வைக்காரனுக்குக் கட்டளையிட்டான்.

24. அப்படியிருக்க, சிலநாட்களுக்குப்பின் பெலிக்ஸ் என்பவன், யூதஸ்திரீயான தன் மனைவி துருசில்லாளோடு வந்து, சின்னப்பரை அழைப்பித்து, யேசுக்கிறீஸ்துநாதரைப்பற்றிய விசுவாசத்தைக்குறித்து அவர் சொல்லக் கேட்டான்.

25. அப்படியே அவர் நீதியையும் கற்பையும் இனிவரும் தீர்வையையுங் குறித்துப் பேசுகையில், பெலிக்ஸ் என்பவன் திகிலடைந்து: இப்போதைக்கு நீ போகலாம்; எனக்குச் சமயமிருக்கும்போது மறுபடி உன்னை அழைப்பிப்பேன் என்றான்.

26. மேலும் சின்னப்பர் தனக்குப் பணம் கொடுப்பாரென்றும் நம்பியிருந்தான். ஆனதைப்பற்றி அவரை அடிக்கடி அழைப்பித்து அவரோடு பேசுவான்

27. இந்தப்பிரகாரமாய் இரண்டு வருஷம் சென்ற பிறகு, பெலிக்ஸ் என்பவனுக்குப்பதிலாக, பொர்சியுஸ் பெஸ்துஸ் என்பவன் வந்தமையால், பெலிக்ஸ் யூதர்களுக்குப் பிரியப்பட விரும்பி, சின்னப்பரைச் சிறையில் வைத்துவிட்டுப்போனான். (மாற். 15-15.)

## 25-ம். அதிகாரம்.

சின்னப்பர் செசாரிடம் போகும்படி அபயமிட்டதும், அகிரிப்பா என்ற அரசன் அவரை விசாரிக்க விரும்பினதும்.

1. பெஸ்துஸ் என்பவன் அந்நாட்டிற்கு வந்துசேர்ந்த மூன்று நாளைக்குப்பின், செசாரையாவிலிருந்து எருசலேமுக்குப் போனான்.

2. பிரதான ஆசாரியரும், யூதர்களுக்குள் தலைமையானவர்களும் சின்னப்பருக்கு விரோதமாய் அவனிடத்தில் போய், பிராதுபண்ணி,

3. அவரை வழியில் கொன்றுபோடும்படி பதிவிடைசெய்யக் கருதி, தங்களுக்குத் தயவுசெய்து அவரை எருசலேமுக்கு அழைப்பிக்கக் கட்டளையிடவேண்டுமென்று அவருக்கு விரோதமாய் விண்ணப்பஞ்செய்து மன்றாடினார்கள். (அப். 23-15.)

4. அதற்குப் பெஸ்துஸ் மாறுத்தாரமாக, சின்னப்பர் செசாரையாவில் காவல் பண்ணப்பட்டிருப்பதாகவும், தான் அதிசீக்கிரமாய்ப் புறப்படுவதாவும் சொல்லி:

5. அந்த மனிதன் பேரில் யாதொரு பாதகம் உண்டானால், உங்களில் வல்லவர்கள் என்னோடேகூட வந்து, அவன் மேல் குற்றஞ்சாட்டட்டும் என்றான்.

6. அவன் அவர்களுக்குள்ளே எட்டு அல்லது பத்து நாளைக்குமேல் தங்காமல், செசாரையாவுக்கு வந்து, மறுநாளிலே நியாயாசனத்தில் உட்கார்ந்து, சின்னப்பரைக் கொண்டுவரக் கட்டளையிட்டான்

7. அவர் கொண்டுவரப்பட்டபோது, எருசலேமிலிருந்து வந்த யூதர்கள் அவரைச் சூழ்ந்து நின்று தங்களால் ரூபிக்கக்கூடாத அநேக கனமான குற்றங்களை அவர்மேல் சாட்டினார்கள்.

8. அதற்கு சின்னப்பர் எதிர்நியாயமாக: நான் யூதர்களுடைய வேதப்பிரமாணத்துக்காகிலும், தேவாலயத்துக்கெங்கிலும், செசாருக்காகிலும் விரோதமாக யாதொருகுற்றமுஞ் செய்யவில்லை என்றார்.

9. ஆயினும பெஸ்துஸ் யூதர்களுக்குத் தயைசெய்ய விரும்பி, சின்னப்பருக்கு மறுமொழியாக: நீ எருசலேமுக்குப்போய், அவ்விடத்தில் எனக்கு முன்பாக இவைகளைக்குறித்து நியாயம் விசாரிக்கப்பட உனக்குச் சம்மதியா என்றான்.

10. அதற்குச் சின்னப்பர்: செசாருடைய நியாயாசனத்துக்கு முன்பாக நிற்கிறேன், இவ்விடத்திலே எனக்கு நியாயத்தீர்ப்புக் கிடைக்கவேண்டியது. உமக்கு நன்றாய்த் தெரிந்திருப்பதுபோல, நான் யூதர்களுக்கு ஓர் பொல்லாங்கும் செய்யவில்லை.

11. நான் பொல்லாங்கு செய்திருந்தால் அல்லது மரணத்துக்குப் பாத்திரமான யாதொன்றை நடத்தியிருந்தால் நான் சாகப் பின்வாங்குகிறதில்லை. ஆனால் இவர்கள் என்மேல் சாட்டுகிறவைகளில் ஒன்றும் என்னிடத்தில் இல்லாதிருந்தால், ஒருவனும் என்னை இவர்களுக்குக் கையளிக்கக்கூடாது. செசாரை நோக்கி அபயமிடுகிறேன் என்றார்.

12. அப்போது பெஸ்துஸ் தன் ஆலோசனைக்காரரோடே பேசி: நீ செசாரை நோக்கி அபயமிடுகிறாய், செசாரிடத்தில் போவாய் என்றான்.

13. சிலநாள் சென்றபின்பு, அகிரிப்பா ராஜாவும், பெர்னிக்கையாளும் பெஸ்துவைச் சந்திக்கும்படி செசாரியாவுக்கு வந்தார்கள்.

14. அவர்கள் அங்கே பலநாள் தங்கியிருக்கையில், பெஸ்துஸ் சின்னப்பரைக்குறித்து ராஜாவுக்கு விவரித்துச் சொன்னதாவது: பெலிக்ஸ் என்பவன் காவலிலே வைத்துவிட்டுப்போன ஒரு மனிதன் இருக்கிறான்.

15. நான் எருசலேமிலிருந்தபோது, பிரதான ஆசாரியரும், யூதருடைய மூப்பரும் அவனைக்குறித்து என்னிடத்தில் பிராதுசெய்து அவனுக்கு விரோதமாய் ஆக்கினைத்தீர்வையிட வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள்.

16. நான் அவர்களுக்குப் பிரத்தியுத்தாரமாக: குற்றஞ்சாட்டப்பட்ட மனுஷன் குற்றஞ் சாட்டினவர்களுக்கு முகமுகமாய் நின்று, சாட்டின குற்றத்தை நீக்கும்படி பிரதி வாதிப்பதற்கு அவனுக்கு இடங்கிடைக்குமுன்னே அவனுக்கு ஆக்கினைத் தீர்வையிடுவது ரோமையருக்கு வழக்கமல்லவே என்றேன்.

17. ஆகையால் அவர்கள் இங்கே கூடிவந்தபோது நான் எவ்வளவும் தாமதம்பண்ணாமல், மறுநாள் நியாயாசனத்தில் உட்கார்ந்து, அந்த மனுஷனைக் கூட்டிவரும்படி கட்டளையிட்டேன்.

18. ஆனால் குற்றஞ்சாட்டினவர்கள் வந்து நின்றபோது, நான் தீங்கென்று நினைத்திருந்தவைகளில் ஒன்றையும் அவன்மேல் சாட்டாமல்,

19. தங்களுடைய மத ஆசாரங்களைக்குறித்தும, மரித்துப்போன யேசு என்னும ஒருவர் உயிரோடிருக்கிறதாகச் சின்னப்பர் சாதிக்கிறதைக்குறித்தும, சில தர்க்க விஷயங்களை அவனுக்கு விரோதமாய்ச் சொன்னார்கள்.

20. இப்படிப்பட்ட தர்க்க விஷயங்களைக்குறித்து நான் சந்தேகித்து: நீ எருசலேமுக்குப்போய், அங்கே இவைகளைக்குறித்து நியாயம்விசாரிக்கப்பட உனக்குச் சம்மதியா என்று அவனைக் கேட்டேன்.

21. அதற்குச் சின்னப்பன்: அகுஸ்து ராயனுடைய நியாய விசாரணைக்குத் தான் நிறுத்திவைக்கப்படும்பொருட்டு அபயமிட்டதினால், நான் அவனை ராயனிடத்தில் அனுப்புமளவும் காவல்செய்யும்படி கட்டளையிட்டேன் என்றான்.

13. இதிலே சொல்லப்பட்ட அகிரிப்பா ராஜா யாரென்றால், அர்ச். பெரிய இயாகப்பரைக் கொன்றுபோட்ட எரோது ராஜாவினுடைய குமாரனும், 24-ம் அதிகாரம். 24-ம் வசனத்தில் காணப்பட்ட துருசில்லாளென்பவளோடும் இதிலே சொல்லப்பட்ட பெர்னிக்கையென்பவளோடும் கூடப்பிறந்த சகோதரனுமே. இவனுக்கு மரியாமினே என்று இன்னொரு சகோதரியும் இருந்தாள்.

22. அப்பொழுது அகிரிப்பா பெஸ் துவை நோக்கி: அந்த மனிதன் சொல்லுகிறதை நானும் கேட்க மனதாயிருக்கிறேன் என்றான். அதற்கு அவன்: நாளைக்கு நீர் கேட்கலாம் என்றான்.

23. ஆகையால் மறுநாள் அகிரிப்பாவும், பெர்னிக்கை என்பவளும் மிகுந்த ஆடம்பரத்தோடு வந்து, சேனைத் தலைவர்களோடும் பட்டணத்துப் பிரதான மனிதர்களோடும் நியாயவிசாரணைசாலையில் பிரவேசித்தார்கள். உடனே பெஸ்துஸ் கட்டளையிட்டபடி சின்னப்பர் கூட்டிக்கொண்டுவரப்பட்டார்.

24. அப்போது பெஸ்துஸ் சொன்னதாவது: அகிரிப்பா அரசனே, எங்களோடு இங்கே வந்திருக்கிற சமஸ்த ஜனங்களே, நீங்கள் காண்கிற இந்த மனுஷனைப்பற்றி எருசலேமில் யூதஜனங்களெல்லாரும் என்னிடத்திலே வந்து, முறையிட்டு: இவன் இனி உயிரோடிருக்கப்படாதென்று கூக்குரலிட்டு என்னைக் கேட்டுக்கொண்டார்கள்.

25. நானோ இவன் மரணத்துக்குப் பாத்திரமான யாதொன்றையுஞ் செய்யவில்லை என்று கண்டுபிடித்தேன். ஆயினும் அகுஸ்து ராயனிடத்திற்குப் போகும்படி இவனே அபயமிட்டதினால், அவரிடத்திற்கு இவனை அனுப்பத் தீர்மானித்தேன்.

26. ஆனால் இவனைக் குறித்து ஆண்டவனுக்கு எழுதுவதற்கு நிச்சயமான தொன்றையுங் காணேன். ஆனதைப்பற்றி இவனை விசாரித்துக் கேட்டபின்பு எழுதத்தக்க விசேஷம் ஏதாகிலும் எனக்கு விளங்கும்படி, உங்கள் முன்பாகவும், விசேஷமாய் அகிரிப்பா அரசனே, உமது முன்பாகவும் இவனைக் கொண்டுவந்திருக்கிறேன்.

27. ஏனெனில் காரணத்தைக் காட்டாமல், ஒருவனை விலங்கிட்டு அனுப்புவது புத்தியற்ற காரியமென்று எனக்குத் தோன்றுகின்றது என்றான்.

## 26-ம். அதிகாரம்.

சின்னப்பர் தாம் மனந்திரும்பின வரலாற்றை அகிரிப்பா ராஜாவின் முன்பாகச் சொல்லியதும், அகிரிப்பா அவர்மேல் குற்றமில்லையென்று அறிந்து வெளியாக்கினதும்.

1. அப்படியிருக்க அகிரிப்பா சின்னப்பனை நோக்கி: உனக்காக நீ பேசும்படி உத்தரவாகின்றது என்றான். அப்பொழுது சின்னப்பர் கையை நீட்டிப் பிரதிநியாயஞ்சொல்லத் தொடங்கினார். (எப்படியெனில்):

2. அகிரிப்பா ராஜாவே, யூதர்கள் என்மேல் சாட்டுகிற சகல காரியங்களையுங்குறித்து நான் உம்முடைய முன்பாக இன்றைக்கு என்னுடைய பிரதிநியாயங்களைச் சொல்லப்போகிறபடியால் என்னைப் பாக்கியவானென்று எண்ணுகிறேன்.

3. முக்கியமாய் நீர் யூதர்களுக்குள்ளே உண்டாயிருக்கிற முறைமைகள், தர்க்கங்கள் முதலிய யாவற்றையும் அறிந்தவராயிருக்கிறதினாலே (நான் அப்படி எண்ணுகிறேன்) ஆகையால் நான் சொல்வதைப் பொறுமையோடு கேட்கும்படி மன்றாடுகிறேன்.

4. என் இளம்பிராயம் முதற்கொண்டு நான் எருசலேமில் என்னுடைய ஜனங்களுக்குள்ளே இருந்தபடியால், அப்போது முதல் என் நடக்கையை யூதர்களெல்லாரும் அறிந்திருக்கிறார்கள்.

5. நமது வேதத்தின் மிகவுங்கண்டிப்பான மார்க்கத்தின்படி நான் பரிசேயனாக நடந்துவந்தேனென்று துவக்க முதல் அவர்கள் அறிந்திருக்கிறதினாலே, சாட்சிசொல்ல அவர்களுக்கு மனதிருந்தால் (சொல்லலாம்).

6. நம்முடைய பிதாக்களுக்குச் சர்வேசுரனால் செய்தருளப்பட்ட வாக்குத்தத்தத்தின் நம்பிக்கையைப்பற்றி நான் இப்போது தீர்ப்புக்கு ஆளாய் நிற்கிறேன்

7. இந்த வாக்குத்தத்தம் நிறைவேறுமென்றே நம்முடைய பன்னிரு கோத்திரத்தாரும் அல்லும் பகலும் சர்வேசுரனைச் சேவித்துவருகிறார்கள். ராஜாவே, இந்த நம்பிக்கையைப்பற்றியே யூதர்களால் குற்றஞ்சாட்டப்படுகிறேன்.

8. சர்வேசுரன் மரித்தோரை எழுப்புகிறாரென்றால் அது நம்பக்கூடாத காரியமென்று நீங்கள் எண்ணுகிறதென்ன?

9. முன்னே நானும் நசரேயனாகிய யேசுவின் நாமத்துக்கு விரோதமாய் அநேக எதிரிடையான காரியங்களைச் செய்யவேண்டுமென்று நினைத்திருந்தேன்.

10. அப்படியே எருசலேமிலும் செய்தேன். பிரதான ஆசாரியர்களிடத்திலே அதிகாரம் பெற்று, அர்ச்சிக்கப்பட்டவர்களில் அநேகரை நானே சிறைச்சாலையில் அடைத்தேன்; அவர்கள் கொல்லப்படும்போது நானும் என் சம்மதங்கொடுத்தேன்.

11. சகல ஜெப ஆலயங்களிலும் நான் அநேகந்தரம் அவர்களைத் தண்டித்து, தேவதூஷணஞ்சொல்லக் கட்டாயப்படுத்தினேன். இன்னும் அவர்கள் பேரில் அதிக கோபவெறிகொண்டவனாய் அந்நிய பட்டணங்கள்வரைக்கும் அவர்களைத்தொடர்ந்து உபாதித்தேன்.

12. இப்படிச் செய்துவருகையில், நான் பிரதான ஆசாரியர்களிடத்தில் அதிகாரமும், உத்தரவும் பெற்று, தமாஸ்கு நகரத்துக்குப் போகும்போது,

13. ராஜாவே, வழியில் நடு மத்தியானவேளையிலே சூரியனுடைய பிரகாசத்திலும் அதிகமான ஒளி வானத்திலிருந்து என்னையும் என்னுடனே கூட இருந்தவர்களையும் சூழ்ந்து, பிரகாசிக்கக் கண்டேன்.

14. நாங்களெல்லாரும் தரையிலே விழுந்தபோது: சவுலே, சவுலே, நீ ஏன் என்னை உபாதிக்கிறாய்? குதிமுள்ளை எதிர்த்து உதைப்பது உனக்குக் கடினமாம் என்று எபிரேய பாஷையில் எனக்குச் சொல்லுகிற ஒரு சத்தத்தைக் கேட்டேன்.

15. அப்பொழுது நான்: ஆண்டவரே, நீர் யார் என்றேன். அதற்கு ஆண்டவர்: நீ உபாதிக்கிற யேசு நானே.

16. ஆனால் நீ எழுந்து உன் காலூன்றி நில்; ஏனெனில் நீ கண்டவைகளையும், நான் உனக்குத்தரிசனமாகிக்காண்பிக்கப்போகிறவைகளையும்பற்றி உன்னை ஊழியனாகவும், சாட்சியாகவும் ஏற்படுத்துவதற்காக உனக்குத் தரிசனையானேன்.

17. உன் ஜனத்தினின்றும் புற ஜாதியாரினின்றும் நான் உன்னை இரட்சித்து,

18. அவர்கள் இருளினின்று பிரகாசத்துக்கும், சாத்தானுடைய அதிகாரத்தினின்று சர்வேசுரனிடத்திற்கும் திரும்பவும், அவ்விதமாய் என்னைப்பற்றும் விசுவாசத்தினாலே பாவ மன்னிப்பையும், அர்ச்சிக்கப்பட்டவர்களுக்குள் சுதந்தரத்தையும் பெற்றுக்கொள்ளவும், நீ அவர்களுடைய கண்களைத் திறக்கும்படி இப்பொழுது உன்னை அவர்களிடத்திற்கு அனுப்புகிறேன் என்றார்.

19. ஆகையால் அகிரிப்பா ராஜாவே, நான் அந்தப் பரம தரிசனைக்கு அவிசுவாசியாயிராமல்,

20. முந்தத் தமாஸ்கு நகரிலும், எருசலேமிலும், யூதேயா தேசமெங்குமுள்ளவர்களிடத்திலும், பின்பு புற ஜாதியாரிடத்திலும் போய், அவர்கள் தவம்பண்ணவும் தக்க தவக் கிரியைகளைச் செய்து சர்வேசுரனிடத்தில் மனந்திரும்பவும் வேண்டுமென்று அறிவித்தேன். (அப் 9-20.)

21. இது காரணமாகவே நான் தேவாலயத்திலிருந்தபோது யூதர்கள் என்னைப் பிடித்துக் கொலைசெய்யப் பிரயத்தனம்பண்ணினார்கள். (அப். 21-31.)

22. ஆகிலும் நான் தேவானுக்கிரக உதவிபெற்று இந்நாள்வரைக்கும் நிலை நின்று, தீர்க்கதரிசிகளும் மோயீசனும் இனி நடக்கப்போகிறதாக முன்னறிவித்தவைகளையே நானும் சிறியோருக்கும் பெரியோருக்கும் சாட்சியாகக் கூறுகிறேனொழிய வேறொன்றையும் சொல்லவில்லை. (1. கொ. 1-23.)

23. அவையேதென்றால்: கிறீஸ்துநாதர் பாடுபட வேண்டியதென்றும், மரித்தோருடைய உத்தானத்தில் அவர் முந்தினவராகி தமது ஜனத்துக்கும் புற ஜாதியாருக்கும் ஒளியை வெளிப்படுத்துவாரென்றும (சொல்லுகிறேன்) என்றார்.

24. இவ்விதமாய் அவர் தனக்காகப் பிரதிநியாயஞ்சொல்லிப் பேசும்போது, பெஸ்துஸ் என்பவன்: உரத்தசத்தமாய்ச் சொன்னதாவது: சின்னப்பா நீ பிதற்றுகிறாய், அதிகக் கல்வி உன்னைப் பைத்தியனாக்குகிறது என்றான்.

25. அதற்குச சின்னப்பர்: உத்தம பெஸ்துவே, நான் பிதற்றுகிறதில்லை. சத்தியமும், தெளிந்த புத்தியுமுள்ள வார்த்தைகளைப் பேசுகிறேன்.

26. இந்தச் சங்கதிகளைப்பற்றி ராஜா அறிந்திருக்கிறார். ஆகையால் அவருக்கு முன்பாகத் தைரியமாய்ப் பேசுகிறேன். இவைகளில் ஒன்றும் அவருக்கு மறைவாயிராதென்று நினைக்கிறேன். ஏனெனில் இவைகளில் எதுவும் ஒரு மூலையில் நடந்த காரியமல்ல.

27. அகிரிப்பா ராஜாவே, தீர்க்கதரிசிகளை விசுவசிக்கிறீரோ? விசுவசிக்கிறீர் என்று அறிந்திருக்கிறேன் என்றார்.

28 அப்பொழுது அகிரிப்பா சின்னப்பரைப்பார்த்து: நான் கிறீஸ்துவனாகிறதற்குக் கொஞ்சங்குறைய என்னை உடன்படுத்துகிறாய் என்றான்.

29. அதற்குச் சின்னப்பர்: நீர் மாத்திரமல்ல; இன்று எனக்குச் செவிகொடுக்கிற எல்லோரும் கொஞ்சத்திலும் மிகுதியிலும் இந்த விலங்குகள் நீங்கலாக,நான் எப்படி இருக்கிறேனோ அப்படியே ஆகவேண்டுமென்று தேவசமூகத்தில் ஆசிக்கிறேன் என்றார்.

30. உடனே ராஜாவும், தேசாதிபதியும், பெர்னிக்கை என்பவளும், அவர்களோடு உட்கார்ந்திருந்தவர்களும் எழுந்திருந்து,

31. தனித்துப்போய்: இந்த மனிதன் மரணத்துக்காகிலும் விலங்குகளுக்காகிலும ஏதுவான யாதொன்றையும் செய்யவில்லை என்று சொல்லித் தங்களுக்குள்ளே பேசிக்கொண்டார்கள்.

32. அப்போது அகிரிப்பா பெஸ்துவைப்பார்த்து: இந்த மனிதன் செசாரிடத்திற்கு அபயமிடாதிருந்தால், இவனை விடுதலையாக்கியிருக்கலாம் என்றான்.

## 27-ம். அதிகாரம்.

சின்னப்பர் ரோமாபுரிக்குப் போகக் கப்பலேறினதும், கப்பல் சேதமாகி, தேவாதீனமாய்க் காப்பாற்றப்பட்டதுமான வர்த்தமானம்.

1. சின்னப்பர் இத்தாலியாவுக்குக் கப்பலேறிப்போகவும், அவரும் மற்ற விலங்குக்காரரும் அகுஸ்து பட்டாளத்தின் சேர்வைக்காரனை யூலியுஸ் என்பவன் வசமாய் ஒப்பிக்கப்படவும் தீர்மானிக்கப்பட்டபோது,

2. மக்கேதோனியா தேசத்துத் தெசலோனிக்காப் பட்டணத்தானை அரிஸ்தார்க்கு என்பவன் எங்களோடிருக்க, நாங்கள் அதிராமெத்தியம் ஊர்க்கப்பலிலேறி, ஆசியா நாட்டின் கரையோரமாய் யாத்திரைபோக நங்கூரந் தூக்கினோம்.

3. மறுநாளில் சீதோன்பட்டணத்தின் துறைபிடித்தோம். யூலியுஸ் சின்னப்பரைத் தயவோடு நடப்பித்து, அவர் தம்முடைய சிநேகிதரிடத்தில் போகவுந் தமது சவுக்கியத்தைப் பார்த்துக்கொள்ளவும் உத்தரவுகொடுத்தான்.

4. அதிலிருந்து துறைபெயர்ந்து எதிர்க்காற்றாயிருந்ததினாலே, சீப்புருதீவின் ஒதுக்கிலே ஓடினோம்.

5. பின்பு சிலிசியா, பம்பீலியா நாடுகளின் கடல்வழியாய் ஓடி, லீசியாதேசத்தின் நகரமாகிய லீஸ்திராப் பட்டணத்தில் சேர்ந்தோம்.

6. இத்தாலியாவுக்கு யாத்திரையாய்ப்போகிற அலெக்சாந்திரியாப் பட்டணத்துக் கப்பலை சேர்வைக்காரன் அங்கே கண்டு, அதிலே எங்களை ஏற்றினான்.

7. அநேக நாள் மெதுவாய்ச் சென்று வருத்தத்தோடு கினிது நகருக்கு எதிரே வந்தபோது, காற்று இன்னம் எங்களைத் தடுத்ததினாலே, சால்மோன் என்னும் ஊரண்டையில் கிரேத்தா தீவின் கரையோரமாய் ஓடினோம்.

8. பின்னும் வருத்தத்தோடு கரையோரமாகவே சென்று நல்லதுறைமுகமென்னப்பட்ட ஓர் இடத்தில் சேர்ந்தோம். அதற்குத் தலாசா நகரம் சமீபமாயிருந்தது.

9. வெகுகாலமுஞ் சென்று, ஒருசந்தி நாட்களும் கடந்துபோனதால், இனிக் கப்பல்யாத்திரை செய்வது அபாயமாயிருந்ததைப்பற்றி, சின்னப்பர் கப்பற்காரர்களுக்கு எச்சரித்துச் சொன்னதாவது:

10. ஜனங்களே, இந்த யாத்திரையானது கப்பலுக்கும், சரக்குகளுக்கும் மாத்திரமல்ல, நமது பிராணனுக்கும் முதலாய் ஆபத்தும், வெகுசேதமுமுள்ளதாகத் துவக்குகிறதென்று காண்கிறேன் என்றார்.

11. ஆகிலும் சேர்வைக்காரன் சின்னப்பரால் சொல்லப்பட்டதைவிட மாலுமியையுங் கப்பல் அதிகாரியையும் அதிகமாய் நம்பினான்.

12. ஆகிலும் அந்தத் துறைமுகம் மாரிகாலத்தில் தங்குவதற்கு வசதியாயிராதபடியினாலே, அவ்விடம் விட்டு யாத்திரைசெய்து, தென்மேற்கையும் வடமேற்கையும் நோக்கியிருக்கும் துறைமுகமாகிய கிரேத்தா தீவிலுள்ள பெனிசையூர்த் துறைமுகத்துக்குக் கூடுமானால் எவ்விதமும் சேர்ந்து, மாரிகாலத்துக்குத் தங்கவேண்டுமென்று அநேகர் ஆலோசனை சொன்னார்கள்.

5. வுல்காத்தென்னும் லத்தீன் பிரதியிலும், சிறியத்திக், அலெக்சாந்தரின் என்னும் பிரதிகளிலும், லீஸ்திராப் பட்டணமென்றிருந்தாலும் பூர்வீக பிரதிகளில் மீராப்பட்டணமென்றிருக்கக் காண்கிறோம். (கிராம்போன்)

13. அப்போது தென்றல் மெதுவாய் வீசிக்கொண்டிருந்ததினாலே, தங்கள் கருத்து அனுகூலமானதென்று எண்ணி, அஸ்சோன் துறையைவிட்டு நங்கூரந்தூக்கிக் கிரேத்தாத் தீவின் கரையோரமாய் ஓடினார்கள்.

14. ஆனால் கொஞ்சத்துக்குள்ளே வாடைக்கொண்டலென்னும் கடுங்காற்று அதிலே மோதிற்று.

15. கப்பல் அதிலே அகப்பட்டுக் காற்றுக்கு எதிர்த்துப்போகக் கூடாமையால், காற்றோடே அடித்துக்கொண்டு போகப்பட்டோம்.

16. அப்படியே கவுதா என்னப்பட்ட ஓர் சிறு தீவின் பக்கத்தில் ஓடுகையில், படகை வசப்படுத்துவது எங்களுக்கு வெகு வருத்தமாயிருந்தது.

17. அதை அவர்கள் தூக்கி எடுத்தபின்பு, கப்பல் சொரிமணலிலே மோதுமோ என்று அஞ்சி, பல உபாயங்களைச் செய்து, அதை இறுகக்கட்டிப் பாய்களை இறக்கி இவ்விதமாய்க் கொண்டுபோகப்பட்டார்கள்.

18. அன்றியும் நாங்கள் கடும்புசலிலே வெகுவாய் அடிபட்டபடியினால், மறுநாளிலே சரக்குகளை (சமுத்திரத்தில்) எறிந்துபோட்டார்கள்.

19. மூன்றாம் நாளில் கப்பலின் தளவாடங்களையும் எங்கள் கைகளினால் எடுத்து எறிந்தோம்.

20. இப்படியிருக்க, பல நாளாய்ச் சூரியனாவது நட்சத்திரங்களாவது காணப்படாமல், அகோரபுசல் அடித்துக்கொண்டிருந்ததினாலே இனித் தப்பிப் பிழைப்போமென்கிற நம்பிக்கை முழுமையும் அற்றுப்போயிற்று.

21. இதினிமித்தம் அவர்கள் வெகுநாள் பட்டினியாயிருக்கையிலே, சின்னப்பர் அவர்கள் நடுவிலே நின்று: ஓ ஜனங்களே, இந்த ஆபத்தும் சேதமும் வராதபடிக்கு என் சொல்லைக் கேட்டுக் கிரேத்தாத் தீவைவிட்டு நங்கூரம் தூக்காதிருக்கவேண்டியதாயிருந்தது.

22. ஆகிலும் இப்போது நீங்கள் திடமனதாய் இருக்கவேண்டும் என்று உங்களுக்குப் புத்தி சொல்லுகிறேன். ஏனெனில் கப்பலுக்கல்லாதே உங்களில் ஒருவனுக்கும் உயிர்ச்சேதம் வரமாட்டாது.

23. ஏனென்றால் என்னை ஆட்கொள்ளுகிறவரும், நான் சேவிக்கிறவருமாகிய கடவுளுடைய தூதன் இன்று இராத்திரியிலே என் அருகில் வந்து நின்று:

24. சின்னப்பா, நீ பயப்படாதே; செசார் இராயன் முன்பாக நீ நிற்கவேண்டும். அன்றியும் இதோ, உன்னுடனேகூட யாத்திரைபண்ணுகிற யாவரையுஞ் சர்வேசுரன் உன் கையில் ஒப்படைத்தார் என்றார்.

25. ஆதலால் ஜனங்களே, மனத்திடமாயிருங்கள். எனக்குச் சொல்லப்பட்ட பிரகாரமே நடக்குமென்று சர்வேசுரனை நம்பியிருக்கிறேன்.

26. ஆயினும் நாம் ஏதாவது ஒரு தீவிலே சேரவேண்டும் என்றார்.

27. பின்பு பதினாலாம் நாள் இராத்திரியாகி, நாங்கள் அதிரியாச் சமுத்திரத்தில் யாத்திரை செய்கையில், ஏறக்குறைய நடுச்சாமவேளையிலே கப்பற்காரர் ஏதோ தங்களுக்கு ஒரு கரை தோன்றுகிறதாக எண்ணினார்கள்.

28. உடனே அவர்கள் விழுதுவிட்டுப் பார்க்கையில் இருபது பாகமென்று கண்டார்கள். சற்று அப்பால் போனபிறகு பதினைந்து பாகமென்று கண்டார்கள்.

29. ஆகையால் கரடுமுரடான இடங்களில் மோதிவிழுமோ என்று அஞ்சி, கப்பல் பின்னணியத்தில் நின்று நாலு நங்கூரங்களைப் போட்டு, பொழுது எப்போது விடியுமோ என்று காத்திருந்தார்கள்.

30. அப்போது கப்பலாட்கள் முன்னணியத்திலிருந்து நங்கூரங்களைப் போடப்போகிற பாவனையாய்ப் படகைக் கடலிலே இறக்கி, ஓடிப்போகப் பார்க்கையில்,

31. சின்னப்பர் சேர்வைக்காரனையும், போர்ச்சேவகர்களையும், நோக்கி: இவர்கள் கப்பலிலே தரிக்காவிட்டால், நீங்கள் தப்பிப் பிழைக்கமாட்டீர்கள் என்றார்.

32. அப்போது போர்ச்சேவகர் படகின் வடங்களை அறுத்து அதைக் கீழே விழும்படி விட்டுவிட்டார்கள்.

33 பொழுது விடிந்து வருகையில், சின்னப்பர் எல்லாரையும் சாப்பிடும்படி கோரி: இன்று பதினாலுநாளாய் நீங்கள் ஒன்றும சாப்பிடாமல் பட்டினியாயிருக்கிறீர்களே.

34. ஆகையால் உங்கள உயிர பிழைக்கும்படி போஜனம்பண்ண உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். ஏனெனில் உங்களில் ஒருவனுடைய தலையிலிருந்தும் ஒரு உரோமமாவது சேதமாகமாட்டாது என்றார்.

35. அவர் இப்படிச் சொல்லியபின், உரொட்டியை எடுத்து, எல்லாருக்கும முன்பாகச் சர்வேசுரனுக்குத் தோத்திரஞ்செய்து, அதைப் பிட்டுச் சாபபிடத் துவக்கினார்.

36. அப்போது அவர்களெல்லோரும் மனத்திடங்கொண்டு சாப்பிட்டார்கள்.

37. நாங்கள் எல்லோருமாகக் கபபலில் இருநூற்று எழுபத்தாறு பேர் இருநதோம.

38. அவர்கள் திருப்தியாய்ச் சாப்பிட்டபின்பு, கோதும்பையைக் கடலிலே தள்ளிவிட்டுக் கப்பலை இலகுவாக்கினார்கள்.

39. பொழுது விடிந்தபின்பு, அது இன்னகரையென்று அறியாமல், கரையுள்ள ஒரு குடாவைக் கண்டு, கூடுமானால் அதற்குள்ளே கப்பலை ஓட்டலாமென்று யோசித்தார்கள்.

40. ஆதலால் நங்கூரங்களைத் தூக்கினபின்பு, சுக்கான் கட்டுகளை ஒருமிக்கத் தளர்த்திவிட்டுப் பெரும்பாயைக் காற்று முகமாய் விரித்து, காற்றுப் போக்கிலே விட்டுக்கொண்டு கரையை நோக்கிச் சென்றார்கள்.

41. அப்படியே இருபுறமும் கடல் மோதிய ஓரிடத்தில்சேர்ந்து, கப்பலைத் தட்டவிட்டார்கள். ஆகையால் முன்னணியம் (தரையில்) ஊன்றி அசையாமல் நிற்க, பின்னணியம் அலைகளின் வலுமையால் உடைநதுபோயிற்று.

42. அப்படியிருக்க, விலங்குக்காரர்களில் ஒருவனும் நீந்தி ஓடிப்போகாதபடிக்கு, அவர்களைக் கொன்றுபோடவேண்டுமென்று போர்ச்சேவகர்கள் யோசனையாயிருநதார்கள்

43. சேர்வைக்காரனோ சின்னபபரைக் காப்பாற்றும்படி மனதுள்ளவனாயிருந்தபடியினாலே அவர்களுடைய யோசனையைத் தடுத்து, நீநதக் கூடுமானவர்கள் முந்திக் கடலிலே குதித்து, தப்பிக் கரையேறக் கட்டளையிட்டான்.

44. மற்றவர்களையோ பலகைகளின் மேல் சிலரையும, கபபல் துண்டுகளின் மேல் சிலரையும், வைத்து கொண்டு போனார்கள். இவ்விதமாய் எல்லாருந தப்பித்துக் கரைசேரலாயிற்று.

## 28-ம். அதிகாரம்.

*சின்னப்பர் மெலித்தாதீவில் மூன்று மாதம் தங்கியிருந்தபின் ரோமாபுரிக்குப்போய்ச் சேர்ந்ததும், அங்கே யூதர்களுக்குப் பிரசங்கித்ததும்.*

1. நாங்கள் தப்பிக் கரைசேர்ந்தபின்பு அந்தத் தீவின்பேர் மெலித்தா என்று அறிந்தோம். அன்னியராகிய அந்தத்தீவார் எங்களுக்குக் காண்பித்த உபசாரம் கொஞ்சமல்ல.

2. அதெப்படியென்றால்: அப்பொழுது பெய்த மழையையும் உண்டான குளிரையும்பற்றி அவர்கள் பெருநெருப்பை மூட்டி எங்களெல்லாரையும் தேற்றினார்கள்.

3. அப்போது சின்னப்பர் கொஞ்சம் விறகுகளை வாரி, நெருப்பிலே போடுகையில், ஓர் விரியன்பாம்பு சூடு தட்டிப் புறப்பட்டு அவருடைய கையைக் கவ்விக்கொண்டது.

4. அந்த ஜெந்து அவர் கையில் தொங்குகிறதை அன்னியராகிய அந்தத் தீவார் கண்டு, ஒருவன் ஒருவனை நோக்கி: சந்தேகமின்றி இந்த மனுஷன் கொலை பாதகன். இவன் சமுத்திரத்துக்குத் தப்பித்துக்கொண்டாலும், பழியானது இவனைப் பிழைக்கவிடுகிறதில்லை என்றார்கள்.

5. ஆனால் அவர் அந்த ஜெந்துவை அக்கினியில் உதறிவிட்டு, ஓர் பொல்லாப்பும் இல்லாதிருந்தார்.

6. அவர்களோ அவர் உடனே வீக்கங்கண்டு, தரையிலே திடீரென விழுந்து சாவார் என்று எண்ணிக்கொண்டிருந்தார்கள். நெடுநேரமாக அவர்கள் அப்படிக் காத்திருந்தும், அவருக்கு எவ்வளவும் பொல்லாப்பு வராததைக் கண்டு, கருத்து மாறி: இவர் தெய்வம் என்றார்கள்.

7. அந்தத் தீவின் பிரபுவாகிய புப்லியு என்னப்பட்டவனுடைய காணி பூமி அவ்விடத்துக்குச் சமீபமாயிருந்தது. அவன் எங்களை ஏற்றுக்கொண்டு, மூன்று நாளளவாகப் பட்சத்தோடே விசாரித்தான்.

8. அப்போது புப்லியு என்பவனுடைய தகப்பன் சுரத்தினாலும், வயிற்றுளைவினாலும் வருத்தப்பட்டுக்கிடந்தபடியால், சின்னப்பர் அவனிடத்தில் போய், ஜெபஞ்செய்து அவன்மேல் கைகளை வைத்து, அவனைச் சௌக்கியப்படுத்தினார்.

9. இது நடந்தபின், அத்தீவில் வியாதியாயிருந்த சகலரும் வந்து, சௌக்கியமடைந்தார்கள்.

10. அவர்கள் அநேக வெகுமானங்களையுங் கொண்டுவந்து, எங்களுக்கு மரியாதை செய்ததுந்தவிர நாங்கள் கப்பலேறுந்தருணத்தில் எங்களுக்கு வேண்டியவைகளையும் கொடுத்தனுப்பினார்கள்.

11. மூன்று மாதஞ் சென்றபிறகு அந்தத் தீவிலே மாரிகாலத்துக்குத் தங்கியிருந்த அலெக்சாந்திரியாப் பட்டணத்துக் கப்பலிலே ஏறிப் புறப்பட்டோம். அதுக்கு மிதுனம் என்னும் குறி இருந்தது

12. பின்னும் சிரக்கூஸ் என்னும் நகரத்தில் சேர்ந்து, அங்கே மூன்று நாள் தங்கினோம்.

13. அவ்விடத்தைவிட்டுக் கரைபிடித்தோடி ரெகியு துறைக்கு வந்துசேர்ந்தோம். ஒரு நாள் பொறுத்து, தென்றல் வீசவே, புறப்பட்டு இரண்டாம் நாளில் புத்தேயோலி பட்டணத்துக்கு வந்தோம.

14. அங்கே நாங்கள் சகோதரர்களைக் கண்டபோது, அவர்கள் தங்களிடத்தில் ஏழுநாள் தங்கும்படிக்கு எங்களைக் கேட்டுக்கொண்டார்கள். அதின்பின் உரோமாபுரிக்கு வந்து சேர்ந்தோம்.

15. அவ்விடத்திலுள்ள சகோதரர் (நாங்கள் வருகிற) செய்தியைக் கேள்விப்பட்டு (சிலர்) அப்பியன் சந்தைவரையிலும், (சிலர்) முச்சத்திரம் என்னும் இடம் வரையிலும் எங்களுக்கு எதிர்கொண்டுவந்தார்கள். சின்னப்பர் அவர்களைக் கண்டு, சர்வேசுரனுக்கு நன்றியறிந்த தோத்திரஞ் செய்து, தைரியமடைந்தார்.

16. நாங்கள் உரோமாபுரியில் சேர்ந்தபோது, சின்னப்பா தம்மைக் காத்திருக்கிற போர்ச்சேவகனோடு தமக்கு இஷ்டமான இடத்தில் தங்கலாமென்று உத்தரவாயிற்று.

17. மூன்று நாள் ஆனபின்பு அவர் யூதர்களில் தலைமையானவர்களை ஒருமிக்க வரவழைத்தார். அவர்கள் ஒருமித்து வந்திருக்கையில், அவர் அவர்களை நோக்கி: சகோதரரே, நான் நம்முடைய ஜனத்துக்காவது நம்முடைய முன்னோர்களுடைய முறைமைக்காவது விரோதமான யாதொன்றையுஞ் செய்யாதிருந்தும், விலங்கிடப்பட்டவனாய் எருசலேமிலிருந்து உரோமையருக்குக் கையளிக்கப்பட்டிருக்கிறேன்.

18. அவர்கள் என்னை விசாரணை செய்தபோது, மரணத்துக்கு ஏதுவான யாதொரு குற்றமும் என்னிடத்தில் காணாதபடியினாலே என்னை விடுதலையாக்க மனதாயிருந்தார்கள்.

19. ஆனால் யூதர்கள் அதற்கு விரோதமாய்ப் பேசவே, நான் செசாரை நோக்கி அபயமிடும்படி அவசியமாயிற்று. ஆயினும் நான் என் ஜனத்தார் மேல் யாதொரு குற்றஞ்சாட்ட வேண்டுமென்று அப்படிச் செய்யவில்லை. (அப். 25-11.)

20. இந்தக் காரணமாகவே, நான் உங்களைக் காணவும் உங்களோடு பேசவுங் கேட்டுக்கொண்டேன். இஸ்ராயேலருடைய நம்பிக்கையைப்பற்றி இந்தச் சங்கிலியினால் கட்டப்பட்டிருக்கிறேன் என்றார். (அப். 26-6; எபே. 6-20.)

21. அவர்களோ அவரை நோக்கி: உம்மைக்குறித்து யூதேயாவிலிருந்து எங்களுக்கு யாதொரு நிருபம் வரவுமில்லை; இங்கே வந்த சகோதரர்களில் ஒருவனும் உம்மைக்குறித்து யாதொரு தீங்கும் அறிவிக்கவுமில்லை, பேசவுமில்லை.

22. ஆகிலும் எங்கும் இந்த மார்க்கத்துக்கு எதிரிடையாய்ப் பேசப்படுகிறதாக நாங்கள் அறிந்திருக்கிறபடியால், இதின் விஷயத்தில் நீர் என்ன அபிப்பிராயங்கொண்டிருக்கிறீர் என்று நீர் சொல்வதைக் கேட்கக் கோருகிறோம் என்றார்கள். (லூக். 11-34.)

23. ஆதலால் அவர்கள் அவருக்கு ஓர் நாளை நியமித்து, அவர் தங்கியிருந்த விடுதியிலே வெகுபேர் அவரிடத்தில் வந்து கூடினார்கள். அவர், காலமே தொடங்கி சாயுங்காலமட்டுஞ் சர்வேசுரனுடைய இராச்சியத்தைப் பிரசங்கித்து, யேசுநாதரைக் குறித்து மோயீசனுடைய பிரமாணத்திலும் தீர்க்கதரிசிகளின் ஆகமங்களிலுமிருந்து அத்தாட்சிகளை எடுத்துக் காட்டி, வியாக்கியானஞ்செய்தார்.

24. அவரால் சொல்லப்பட்டவைகளைச் சிலர் விசுவசித்தார்கள். சிலர் விசுவசிக்கவில்லை.

25. இந்தப் பிரகாரமாய் அவர்கள் ஒருவரோடு ஒருவர் ஒத்திராமல், புறப்பட்டுப் போகையில், சின்னப்பர் அவர்களை நோக்கிச் சொன்ன ஒரு வாக்கியமாவது: நமது பிதாக்களுக்கு இசையாஸ் தீர்க்கதரிசிமூலமாய் இஸ்பிரீத்துசாந்துவானவர் நன்றாய் வசனித்திருக்கிறார். அதாவது:

26. நீ இந்த ஜனங்களிடம் போய்: நீங்கள் காதால் கேட்டும், உணராதிருப்பீர்கள்; கண்ணால் கண்டும், பாராதிருப்பீர்கள்;

27. ஏனெனில் இந்த ஜனங்கள் ஒருவேளை கண்ணுலுங்கண்டு, காதாலுங் கேட்டு, இருதயத்தாலும் உணர்ந்து மனந்திரும்பாதபடிக்கும், நான் அவர்களைக் குணமாக்காதபடிக்கும் அவர்கள் இருதயமும் கொழுத்துப்போயிற்று, காதும் கேட்பதில் மந்தமாயிற்று. தங்கள் கண்களையும் கெட்டியாய் மூடிக்கொண்டார்கள் என்று அவர்களுக்குச் சொல்லு என்பதே.

28. ஆதலால் சர்வேசுரன் தந்தருளின இந்த இரட்சணியம் புற ஜாதியாருக்கு அனுப்பப்பட்டதென்றும், அவர்கள் அதுக்குச் செவிகொடுப்பார்களென்றும் அறியக்கடவீர்கள் என்றார்.

29. அவர் இவைகளைச் சொன்ன பின்பு, யூதர்கள் தங்களுக்குள்ளே மிகவுந் தர்க்கித்துக்கொண்டு, அவரை விட்டு வெளியே போனார்கள்.

30. பின்பு அவர் தமக்காக வாங்கின வாடகை வீட்டில் இரண்டு வருஷ முழுமையும் தங்கி, தம்மிடத்தில் வந்த யாவரையும் ஏற்றுக்கொண்டு,

31. முழுத் தைரியத்தோடு யாதொரு தடையுமின்றி, சர்வேசுரனுடைய இராச்சியத்தைப் பிரசங்கித்து, கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துவைப பற்றிய விஷயங்களைப் போதித்துக்கொண்டு வந்தார்.



# பாயிரம்.

---

கர்த்தர் மனுஷாவதாரமான 58-ம். வருஷத்தில் அர்ச். சின்னப்பர் கிரேசியா நாட்டின் ராஜதானியாகிய கொரிந்து நகரத்திலிருந்து இந்த நிருபத்தை எழுதினர். இதை எழுதின முகாந்தரம் என்னவென்றால், அக்காலத்திலே உரோமாபுரியிலிருந்த புதுக் கிறீஸ்துவர்களுக்குள்ளே சிலர் யூதவேதத்திலும் சிலர் அஞ்ஞானத்திலுமிருந்து மனந்திரும்பினவர்களாயிருந்தார்கள். அப்படியிருக்க, யூதர்கள் தாங்களே மோயீசன் வேதத்தைக் கைக்கொண்ட பூர்வீக வேதக்காரர்களென்றும், தேவப்பிரஜைகளென்றும், தங்களுக்கே கிறீஸ்துநாதர் வாக்குத்தத்தம் பண்ணப்பட்டாரென்றும், அந்த இரட்சகர் தங்கள் கோத்திரத்தில் பிறந்தவரென்றும் தங்களைக் கொண்டாடி, அஞ்ஞானத்திலிருந்து மனந்திரும்பினவர்களைப் புறக்கணித்துவந்தார்கள். இவர்களோவென்றால், யூதர்கள் அநியாயமாய் யேசுநாதரைச் சிலுவையிலே அறைந்து கொன்றதினலே, சர்வேசுரன் அந்த யூதர்களைத் தள்ளி, தங்களைத் தெரிந்துகொண்டாரென்று தங்களைப் பாராட்டிப்பேசுவார்கள்.

ஆகையால் அந்தச் சபையாருக்குள் வாக்குவாதமும், அந்நியோந்நிய சமாதானத்துக்கு விரோதமான பொறாமையும் பொல்லாங்கும் விளைந்துகொண்டுவந்ததை அர்ச். சின்னப்பர் அறிந்து, இருதிறத்தாருடைய சடுத்தத்தையும் அடக்கும்பொருட்டு, யூதர்கள் மோயீசனுடைய வேதப்பிரமாணத்தை அநுசரியாததினலே, அது அவர்களுக்குப் பிரயோசனமில்லாதிருந்ததன்றியே, அத்தால் அவர்கள் அதிகக் குற்றவாளிகளாய்ப் போனர்களென்றும், அஞ்ஞானிகளோவெனில் தங்களைப் படைத்த சர்வேசுரனைத் தற்சுபாவமாய் அறிந்திருந்தும், அவரை வணங்கி ஆராதிக்காததினலே அவர்களும் குற்றவாளிகள்தானென்றும், ஆகையால் இருதிறத்தாரும் சுவிசேஷத்துக்கு அழைக்கப்பட்டதினல் வீம்பு பாராட்டுவதற்கு முகாந்தரமில்லை என்றும், யேசுக்கிறீஸ்துநாதர் தமது விலைமதியாத திரு இரத்தத்தினலே உலகத்தை இரட்சித்துச் சகலரையும் இலவசமாய் அழைக்கிறாரென்று விளக்கிக்காட்டும்படி இந்த நிருபத்தை எழுதினர்.



# அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர்

## உரோமாபுரியாருக்கு

# எழுதிய நிருபம்.

### முதல் அதிகாரம்.

*சின்னப்பர் தம்முடைய அப்போஸ்தல பட்டத்தை மெய்ப்பித்து, உரோமாபுரியிலுள்ள திருச்சபையை ஆசீர்வதித்து, தாம் அவர்களைக் காணவிரும்புகிறதாகச் சொல்லி, உலகத்தாருடைய பாவங்களின்மேல் சர்வேசுரன் கோபமாயிருக்கிறாரென்றும், அந்தப் பாவங்கள் எவையென்றும் வெளிப்படுத்துகிறார்.*

1. யேசுக்கிறீஸ்துநாதருடைய ஊழியனும், அப்போஸ்தலனாக அழைக்கப்பட்டவனும், சர்வேசுரனுடைய சுவிசேஷத்தைப் போதிக்கும்படி பிரித்தெடுக்கப்பட்டவனுமாகிய சின்னப்பன் (உரோமாபுரியாருக்கு எழுதுவது.) (அப். 13-2.)

2. சர்வேசுரன் தம்முடைய சுதனைப் பற்றிய சுவிசேஷத்தை அருளிச்செய்வோமென்று ஏற்கனவே தீர்க்கதரிசிகள் மூலமாய்ப் பரிசுத்த வேதாகமங்களில் வாக்குத்தத்தம் பண்ணியிருந்தார். (ஆதி 49-10; இசை. 40-10; அரு. 1-45.)

3. இவர் மாம்சமானமட்டில் தாவீதின் சந்ததியில் அவருக்கு உண்டானவர்.

4. இவர்தான் நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர். இவர் வல்லமையினாலும், அர்ச்சிக்கிற இஸ்பிரீத்துசாந்துவின்படியே மரித்தவர்களிடத்தினின்று உயிர்த்தெழுந்ததினாலும் தேவசுதனென்று முன்குறிப்பிடப்பட்டார்.

3. **தாவீதின் சந்ததியில் அவருக்கு உண்டானவர்:**—இந்த வாக்கியத்தினால் பிதாவாகிய சர்வேசுரனுடைய ஏகசுதனானவர் மெய்யாகவே மனுஷ சுபாவமெடுத்தாரென்றும், அந்தச்சுபாவத்தோடு தேவசுபாவமும் ஒன்றிருந்ததென்றும், ஆகையால் அவர் மனுஷனாகவும் தேவகுமாரனாகவுமிருந்தாரென்றும் காண்பிக்கப்படுகிறது. யேசுநாதசுவாமி தாவீதனுக்கு உண்டான பிள்ளையென்கும்போது சர்வேசுரனுக்கும் உண்டான பிள்ளையென்று சொல்லப்படுகிறார்.

4. **தேவசுதனென்று முன் குறிக்கப்பட்டவர்:**—1-வது. யேசுநாதசுவாமி இவ்வுலகத்திலிருக்கும்போது கணக்கில்லாத அற்புதங்களைச் செய்ததினாலே அவருடைய தேவவல்லமை விளங்கினது. 2-வது. அவர் சகல புண்ணியங்களையும் உத்தமமான விதமாய் அநுசரித்து, மாசற்றவராய் நடந்துவந்ததினாலே அவரிடத்திலே அர்ச்சிக்கிற இஸ்பிரித்துசாந்துவின் வரங்களெல்லாம் சம்பூரணமாயிருந்தன. 3-வது. அவர் ஒருவரே தம்முடைய வல்லமையினாலே மரித்தபின் உயிர்த்தெழுந்தார். இந்த மூன்று விஷயங்களும் மனிதர் அறியக்கூடியவைகளாயிருந்தன. இந்த மூன்று விஷயங்களைக்கொண்டு யேசுநாதசுவாமி மனுஷரூபமாய்த் தோன்றுமுன்னே அவர் தெய்வகுமாரனாயிருந்தாரென்று யாவரும் அறிந்துகொள்ளலாம். ஆகையால் முன்குறிக்கப்பட்டவர்என்ற வார்த்தைக்கு அர்த்தமேதெனில்: யேசுநாதர் தெய்வகுமாரனென்று மனிதர் அறியுங்குறிப்புகளால் சுட்டிக்காட்டப்பட்டவரென்று அறிக.

5. அவர் நாமத்தினிமித்தம் சகல ஜாதி ஜனங்களும் வேத விசுவாசத்துக்குப் பணிந்துவரச்செய்யும்படி அவர் வழியாக வரப்பிரசாதமும் அப்போஸ்தலர் தொழிலும் பெற்றுக்கொண்டோம். (அப். 9-15.)

6. யேசுக்கிறீஸ்துநாதரால் அழைக்கப்பட்டவர்களாகிய நீங்களும் அவர்களுக்குள் அடங்கினவர்களாயிருக்கிறீர்கள்.

7. (இப்படி) சர்வேசுரனால் நேசிக்கவும், அர்ச்சிக்கப்பட்டவர்களாக அழைக்கவும்பட்டு, உரோமாபுரியில் வசிக்கிற உங்களெல்லாருக்கும் நம்முடைய பிதாவாகிய சர்வேசுரனாலும், ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவினாலும் வரப்பிரசாதமும், சமாதானமும் உண்டாவதாக.

8. உங்கள் விசுவாசம் உலகமெங்கும் பிரபலியமாயிருக்கிறதினாலே, முந்தமுந்த நான் உங்கள் எல்லார்பேராலும், என் சர்வேசுரனுக்கு யேசுக்கிறீஸ்துநாதர் மூலமாய் நன்றியறிந்த தோத்திரம் பண்ணுகிறேன்.

9. பின்னும் நான் என்னுடைய ஜெபங்களில் உங்களை இடைவிடாமல் நினைத்துக்கொண்டுவருகிறேன் என்பதற்குத் தேவசுதனுடைய சுவிசேஷத்தின் வழியாய் நான் என் உள்ளத்தில் சேவித்துவருகிற சர்வேசுரனே எனக்குச் சாட்சியாயிருக்கிறார்.

10. நான் எப்படியாவது தேவதிருவுளத்தால் ஒருநாள் உங்களிடம் வந்துசேரும்படிக்கு க்ஷேமமான பயணம் எனக்குக் கிடைக்க வேண்டுமென்று என்னுடைய ஜெபங்களில் எப்பொழுதும் பிரார்த்தித்துக்கொண்டுவருகிறேன். (அப். 19-24.)

11. ஏனெனில் ஞான வரப்பிரசாதத்தில் ஏதாகிலும் உங்களுக்கு அளித்து உங்களை உறுதிப்படுத்தும்படியாக உங்களைப் பார்க்க விரும்புகிறேன்.

12. அதாவது உங்களுக்கும் எனக்கும் பொதுவாயிருக்கிற அந்நியோந்நிய விசுவாசத்தின் மூலமாய் நானும் உங்களோடுகூட ஆறுதலடையும்படியாக உங்களைக் காண ஆசிக்கிறேன்.

13. அதேதென்றால், சகோதரரே, மற்றத்தேசத்தாருக்குள்ளே நான் பலனை அடைந்ததுபோல, உங்களுக்குள்ளேயும் சிலபலனை அடையும்பொருட்டு உங்களிடத்தில் வந்துசேரப் பலமுறை மனதாயிருந்தாலும், இதுவரையில் எனக்குத் தடையுண்டாயிருந்ததென்று நீங்கள் அறியும்படி விரும்புகிறேன்.

5. **சகல ஜாதி ஜனங்களும்:**—யூதவேதத்தாரல்லாத அஞ்ஞானிகளெல்லாரும் இவ்வாக்கியத்தால் குறிக்கப்படுகிறார்கள். இவர்களைச் சத்தியவேதத்தில் திருப்பும்படி அர்ச். சின்னப்பர் விசேஷபிரகாரமாய்க் குறிக்கப்பட்டிருந்தார். இதைப்பற்றியே சுவிசேஷத்துக்கென்று பிரித்தெடுக்கப்பட்டவரென்று முதல் வாக்கியத்தில் சொல்லியிருக்கிறது.

7. **அர்ச்சிக்கப்பட்டவர்களாக:**—பழைய ஏற்பாட்டில் சர்வேசுரனாலே தெரிந்துகொள்ளப்பட்ட இஸ்ராயேல் ஜனங்கள் அர்ச்சிக்கப்பட்டவர்கள் என்னப்படுகிறதுபோல, புதிய ஏற்பாட்டிலும் அப்போஸ்தலர் காலத்தில் விசுவாசிகளாகத் தெரிந்துகொள்ளப்பட்டவர்கள் துவக்கத்திலே அர்ச்சிக்கப்பட்டவர்களென்று சொல்லப்பட்டார்கள். சிலகாலத்துக்குப்பின் அவர்களுக்குக் கிறீஸ்துவர்களென்று பேர் வழங்கத்துவக்கிற்று. கிறீஸ்துவன் என்பது அபிஷேகம்பண்ணப்பட்டவனென்றும், யேசுக்கிறீஸ்துநாதரைச்சேர்ந்தவனென்றும் அர்த்தங்கொள்ளும். (கிராம்போன்)

**உரோமாபுரியில் வசிக்கிற உங்களெல்லாருக்கும்:**—உரோமாபுரியில் குடியிருந்த யூதரில் பலரும், அஞ்ஞானிகளில் பலரும் கிறீஸ்துவர்களானதின்மேல், அவர்கள் இருதிறத்தார்க்குள்ளும் சில விவாதங்கள் உண்டானதால், அர்ச். சின்னப்பர் இந்த நிருபத்தை அவர்களுக்கு எழுதியனுப்பினார். (கொர்நெலியுஸ்)

14. கிரேக்கருக்கும், அந்நியதேசத் தாருக்கும், அறிவுடையோருக்கும், அறிவீனருக்கும் நான் கடனாளியாயி ருக்கிறேன்.

15. அப்படியே உரோமாபுரியிலிரு க்கிற உங்களுக்கும் என்னால் இயன்ற மட்டும் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க ஆத்திரப்படுகிறேன்.

16. ஏனெனில் சுவிசேஷத்தைப் பற்றி நான் கூச்சப்படேன். ஏனென் றால் முந்த யூதரிலும், பின்பு கிரேக்க ரிலும் விசுவசிக்கிற எவனுக்கும் அது இரட்சணியமாகிய தேவ வல்லபமா யிருக்கின்றது. (மத். 10-32; 1. கொ. 1-23; அப். 13-46.)

17. எப்படியெனில் நீதிமான் விசு வாசத்தினால் சீவிக்கிறான் என்று எழு தப்பட்டிருக்கிறபடியே, விசுவாசத்தி னின்று விசுவாசத்தில் (வளருவதால்) தேவநீதி அதிலே விளங்குகின்றது. (அபகூக். 2-4; கலா. 3-11; எபி. 10-38.)

18. அன்றியும் சர்வேசுரனுடைய சத்தியத்தைத் தங்கள் அநீதத்தினாலே தடுத்துக்கொண்டுவருகிற மனிதரு டைய அவபக்தி, அநியாயம் யாவற் றிற்கும் விரோதமாய் மோட்சத்தினி ன்று (வரும்) தேவகோபமும் (அதில்) வெளியாக்கப்படுகின்றது.

19. ஏனெனில் சர்வேசுரன்தாமே தம்மைக்குறித்து அறியலான விஷயங் களை அவர்களுக்கு வெளியாக்கினபடி யால் அவைகள் அவர்களுக்குத் துலக் கமாயிருந்தன.

20. எவ்வாறெனில், கண்ணுக்கெட் டாத அவருடைய இலட்சணங்கள் உலகமுண்டானதுமுதல் சிருஷ்டிக்கப் பட்ட பொருட்களாலே புத்திக்கெட் டும்படியாகி, அவருடைய நித்திய வல் லமையையும், தெய்வீகத்தையுங் கூட விளங்கப்பண்ணுவதால் அவர்கள் போ க்குச்சொல்வதற்கு இடமேயில்லை.

14. **கிரேக்கருக்கும் அந்நியதேசத்தாருக்கும்:**—தாய்ப்பாஷையாகிய கிரேக்குப்பாஷை பேசினவர்களெல்லாரும் கிரேக்கரென்றும், அப்படிப்பேசாத மற்ற எல்லாரையும் அந்நிய ரென்றும் மகா நாகரீகம் அடைந்திருந்த கிரேக்குத் தேசத்தார் சொல்லிவந்தார்கள். கிரேக் குத் தேசத்தாருக்குண்டான நாகரீகமும் படிப்பும் அந்நிய தேசத்தாருக்கு இல்லையென்று அவர்கள் எண்ணியிருந்ததினாலே, அவர்களுக்குள்: அந்நியதேசத்தார் என்கிற வார்த்தைக்கு நாகரீகமற்றவர்கள் என்று அர்த்தமுண்டாயிற்று. உரோமானரும் இந்த அந்நிய தேசத் தார்க்குள் அடங்கினவர்களாயிருந்தார்கள். (கொர்நெலியுஸ்)

16. **யூதருக்கும் கிரேக்கருக்கும்:**—கிரேக்குத்தேசத்தார் சாதாரணமாய் அக்கியானிக ளாயிருந்ததினாலும், அவர்கள் பலதேசங்களில் பரவியிருந்ததினாலும், இவ்விடத்திலும், இன்னும் பல இடங்களிலும் கிரேக்கர் என்பது அக்கியானிகளென்று அர்த்தங்கொள்ளு கிறது. சில சமயங்களில் யூதர்களல்லாத இதர ஜாதிகளென்றும் அர்த்தங்கொள்ளும். (மெனோக்கியுஸ்)

17. **விசுவாசத்தினின்று விசுவாசத்தில் வளருவதால்:**—சுவிசேஷ போதகமானது ஒருவன் தேவரகசிய விசுவாசத்தைக்கொண்டு, தருமவழியிலே நடக்கத்துவக்கி, அந்த வழியிலே ஆயுசுகாலமுழுதும் நெறிதவறாமல் சென்று கடைசியாய் உத்தமனாகும்படிசெய்கி றது. ஆகையால் விசுவாசத்தினின்று என்பது விசுவாசத்தில் துவக்கி என்றும், விசுவாசத் தில் வளருவதால் என்பது விசுவாச நெறிதவறாமல் அதில் ஸ்திரப்பட்டு முடிவுபரியந்தம் நிலைநிற்கிறதென்றும் அர்த்தமாம்.

**அதில் விளங்குகிறது:**—சுவிசேஷத்தில் விளங்குகிறது என்றர்த்தமாம்.

18. **வெளியாக்கப்படுகிறது:**—சுவிசேஷத்தில் வெளியாக்கப்படுகிறது என்பது பயன். (மெனோனியுஸ்)

19. மனுஷர் சுபாவ புத்தியினாலே சர்வேசுரனிருக்கிறாரென்றும், அவருக்குள்ள இலக்ஷணங்கள் இன்னவென்றும் அறியக்கூடியவர்களாயிருக்கிறார்கள்.

21. அதெப்படியென்றல், அவர்கள் சர்வேசுரனை அறிந்திருந்தும், அவனைத் தேவனுக ஸ்துதித்ததுமில்லை; அவருக்கு நன்றியறிந்த தோத்திரஞ்செலுத்தினதுமில்லை. ஆனுல் அவர்கள் வீண் சிந்தனைகளில் உழன்று அலைந்து, மதிகெட்ட அவர்களுடைய இருதயம் இருண்டுபோக, (எபே. 4-17.)

22. தங்களை ஞானிகளென்று பாராட்டியும், மதியீனராகி,

23. அழிவனுகாத கடவுளின் மகிமையை அழிவுள்ள மனுஷன், பறவை, மிருகம், சர்ப்பங்களைப் போன்ற ரூபமாக மாற்றினார்கள். (சங். 105-20; ஜெரே. 11-10.)

24. இதினிமித்தம் அவர்கள் தங்கள் சரீரங்களைத் தங்களுக்குள்ளேதானே இழிவாக்கும்படி சர்வேசுரன் அவர்களைத் தங்கள் இருதயங்களின் இச்சைகளாகிய அசுசிக்குக் கையளித்தார். (கலாத். 5-19; எப். 4-19.)

25. ஏனெனில் அவர்கள் சர்வேசுரனுடைய சத்தியத்தைப் பொய் ரூபங்களாக மாற்றி, சிருஷ்டிகனைவிட்டு, சிருஷ்டிப்புக்களே தாவிளையென்று அவைகளைத்தொழுது சேவித்தார்கள். ஆனுல் சிருஷ்டிகரல்லோ சதாகாலமும் துதிபெற்றவர் ஆமென்.

26. ஆகையால் சர்வேசுரன் அவர்களை இழிவான துரிச்சைகளுக்குக் கையளிக்கவே, அவர்களுடைய பெண்கள் சுபாவ அநுபோகத்தைச் சுபாவத்துக்கு விரோத அநுபோகமாக மாற்றினார்கள்.

27. அப்படியே ஆண்களும் பெண்களின் சுபாவ அநுபோகத்தை விட்டு, ஒருவரோடொருவர் காமத்தால் பற்றியெரிந்து, ஆண்களுடனே ஆண்கள் பங்கமானவைகளை நிறைவேற்றி, தங்கள் மதியீனத்துக்குத் தகுதியான கூலியைத் தங்களுக்குள்ளே பெற்றுக்கொண்டார்கள்.

28. இந்தப்பிரகாரமாய் அவர்கள் சர்வேசுரனுடைய அறிவைக் கைக்கொள்ள மனதில்லாதிருந்ததினுலே, சர்வேசுரன் அவர்களைக் கேட்டுக்குரிய புத்திக்குக் கையளிக்கவே, அவர்கள் அடாத காரியங்களைச் செய்யும்படியாயிற்று.

29. அவர்கள் எவ்வித அக்கிரம துர்க்குணத்திலும், காமம், லோபம், துஷ்டத்தனத்திலும் மூழ்கினவர்களாய், பொருமை, கொலை, சண்டை, வஞ்சனை, தீங்குணம் நிறைந்தவர்களாய், காதுக்குள் தூற்றுகிறவர்களாய்,

30. புறணிசொல்பவர்களாய், தெய்வத்துக்கு வெறுப்பானவர்களாய், இடும்புக்காரராய், அகங்காரிகளாய், அகந்தையுள்ளவர்களாய், தீங்கு உண்டுபண்ணுகிறவர்களாய், பெற்றோருக்கு அடங்காதவர்களாய், *

31. மதியீனராய், அவையடக்கமற்றவர்களாய், பற்றுதலற்றவர்களாய், பிரமாணிக்கந் தவறுகிறவர்களாய், இரக்கமற்றவர்களாய்ப் போனார்கள்.

* 23. ஞானகமம் 13-ம் அதி. 2-ம் வசனமும் 14-ம் அதி. 15-ம் வசனமுதல் 20-ம் வசனம் வரையில் காண்க.

26. **கையளிக்கவே:**—சர்வேசுரன் பாவிகளைத் துர் இச்சைகளுக்குக் கையளிக்கிருரென்று வேதவாக்கியஞ்சொல்லும்போது அவர்கள் பாவஞ்செய்யும்படி அவர் தாற்பரியமாயிருக்கிருரென்று அர்த்தமல்ல. ஆனுல் அவர்கள் பாவத்தைத் தவிர்க்கும்படி அவர்களுக்குக் கொடுத்த முதல் ஞான உதவியை அவர்கள் சட்டைபண்ணுமல் பாவவழியில் நிலை நின்றதினுலே சர்வேசுரன் அப்பால் அவர்களுக்கு வேறுதவி செய்யாமல் அவர்களைக் கைவிடுகிருரென்றர்த்தமாம்.

32. அவர்கள் சர்வேசுரனுடைய நீதியை அறிந்திருந்தும், இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்களும், இவைகளைச் செய்கிறவர்கள் மாத்திரமல்ல, இவைகளைச் செய்கிறவர்களுக்கு இணங்குகிறவர்களும், சாவுக்குப் பாத்திரமாய் இருக்கிறார்களென்று கண்டுபிடியாமற்போனார்கள்.

## 2-ம். அதிகாரம்.

*ஒருவனுக்கும் மற்றவர்கள்மேல் குற்றஞ்சாட்டுவதற்கு ஏதுவில்லையென்றும், மற்றவர்கள் மேல் குற்றஞ் சாட்டுகிறவனும் குற்றவாளிதான் என்றுஞ் சொல்லி, யூதரும் புற ஜாதியாரும் தங்கள் தங்கள் கிரியைகளுக்குத் தக்கபடி நியாயந்தீர்க்கப்படுவார்கள் என்று காட்டுகிறார்.*

1. அப்படியிருக்க, (பிறனுக்குத்) தீர்ப்பிடுகிற மனுஷனே, நீ யாராயிருந்தாலுஞ்சரி, போக்குச் சொல்லுவதற்கு உனக்கு இடமில்லை. ஏனெனில் நீ பிறனுக்குத் தீர்ப்பிடுகிற விஷயத்தில் உனக்கே நீ ஆக்கினைத் தீர்ப்பிட்டுக்கொள்ளுகிறாய். எவைகளைப்பற்றித் தீர்ப்பிடுகிறாயோ, அவைகளை நீயே செய்கிறாய். (மத். 7-2.)

2. இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்களின்மேல் சர்வேசுரன் இடுந் தீர்ப்புச் சத்தியத்துக்கொத்ததாயிருக்கிறதென்று அறிந்திருக்கிறோம்.

3. ஆதலால் இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்களுக்குத் தீர்ப்புச் சொல்லியும், அவைகளையே செய்து வருகிற மனுஷனே, நீ தேவ நீதிக்குத் தப்பித்துக்கொள்ளுவாயென்று நினைக்கிறாயோ ?

4. அவருடைய நன்மைத்தனம், பொறுமை, நீடிய சாந்தம் இவைகளை இகழுகிறாயோ ? சர்வேசுரனுடைய சாந்தமானது உன்னைப் பச்சாத்தாபத்துக்கு ஏவுகிறதென்று அறியாயோ ?

5. அப்படியானால் உன் கல்நெஞ்சத்தனத்துக்கும், பச்சாத்தாபப்படாத இருதயத்துக்கும் ஏற்றபடி சர்வேசுரனுடைய முனிவும், நீதித் தீர்ப்பும் வெளியாகும் நாளிலே உன்பேரில் கோபாக்கினையைக் குவித்துக் கொள்ளுகிறாய். (மத். 16-27.)

32. சர்வேசுரன் பிதாப்பிதாக்களுக்குத் தரிசனையினாலும், இஸ்ராயேல் பிரஜைகளுக்கு மோயீசனுடைய வேதப்பிரமாணத்தினாலும் தம்மைத் தெரியப்படுத்தினது போல அஞ்ஞானிகளுக்கு இந்த இரண்டு வகையாய்த் தெரிவிக்காததினாலே, அஞ்ஞானிகள் மெய்யான சர்வேசுரனைச் சற்றும் அறியாதிருந்தார்களென்று சொல்லலாமோ? அல்லவே. அஞ்ஞானிகள் தங்கள் சுபாவ புத்தியைக்கொண்டு அவரை அறிந்துகொள்ளக் கூடுமான மட்டும் உலக சிருஷ்டிகளைக்கொண்டு சர்வேசுரன் தம்மை அவர்களுக்கு வெளிப்படுத்தினார். பதினெட்டாம் சங்கீதத்தில் சொல்லியபடி அவைகள் சர்வேசுரனை அறிவிக்கிற பார்வைக் கண்ணாடியுமாய், அவரைப்பிரசங்கிக்கிற புஸ்தகமுமாயிருக்கின்றன. உலகத்தையும் அதிலடங்கிய சமஸ்த வஸ்துக்களையும், அவைகளில் விளங்கும் ஒழுங்குக்கிரமத்தையும், அலங்கார சிறப்பையும், செல்வத்தையும் பார்க்கிறவன் எவ்வளவுதான் படிப்பறியாத மூடனானாலும், இவைகளெல்லாவற்றையும் உண்டாக்கிக் காப்பாற்றி நடத்திவருகிறவர் அவசியமாய் ஒருவர் இருக்கவேண்டுமென்றும், அவர் சர்வ வல்லவரும், சர்வ ஞானமுள்ளவரும், சர்வ நன்மை சுரூபியுமாயிருக்கவேண்டுமென்று நிச்சயிக்காதிருப்பதெப்படி ? பிறகே இருக்கிறவனுடைய ரூபம் முன்வைக்கப்பட்ட கண்ணாடியிலே தோன்றுகிறதினாலே அவனுடைய சாயலைக் கண்டு அவனை நிச்சயமாய் அறிவதுபோல, சொல்லப்பட்ட சிர்ஷ்டிப்புகளைக் காண்கிறவன் அவைகளை உண்டாக்கின சிருஷ்டிகரை அவசியமாய் அறிந்திருக்கவேண்டும்.

1. **தீர்ப்பிடுகிற மனுஷனே:**—தீர்வையிடுகிறது அல்லது தீர்ப்பிடுகிறது என்னும் பதங்கள் வேதாகமத்தில் பிறர்மேல் குற்றம் நினைக்கிறது என்கிற அர்த்தத்தில் அநேக இடங்களில் உபயோகிக்கப்பட்டுவருகிறது. இவ்விடத்திலும் அப்படியே என்று கண்டுகொள்க. அர்ச். சின்னப்பர் இந்த அர்த்தத்திலேயே இந்த வார்த்தைகளை வழக்கமாய்ப் பிரயோகிக்கிறார்.

**மனிதனே** என்பது யூத ஜனங்களைக்குறிக்கிறது.(கிராம்போன்)

6. அவனவனுடைய கிரியைகளுக்
குத் தக்கபடியே சர்வேசுரன் அவனவ
னுக்குப் பதிலளிப்பார். (மத். 1-27.)

7. நற்கிரியைகளில் பொறுமையோ
டு நிலைத்து, மகிமையையும், சங்கையை
யும் அழியாமையையும் தேடுகிறவர்க
ளுக்கு நித்திய சீவியத்தைக் கொடுப்
பார்.

8. எதிர்வாதம் பண்ணிச் சத்தியத்
துக்கு இணங்காமல், அக்கிரம கொள்
கைகளை அங்கீகரிக்கிறவர்களுக்கோ
(தேவ) கோபமும் முனிவுந்தான் கிடை
க்கும். (மத். 16-27.)

9. ஆகையால் தீங்குபுரிகிற எந்த
மனிதனுக்கும், யூதனுல் முந்தியும்,
கிரேக்கனுல் பிந்தியுமாக, துன்பமும்
நெருக்கிடையும் உண்டாகும்.

10. அப்படியே நன்மை புரிகிறவ
னுக்கும், யூதனுல் முந்தியும், கிரேக்
கனுல் பிந்தியுமாகச் சங்கையும் சமா
தானமும் உண்டாகும்.

11. ஏனெனில் கடவுளிடத்தில் பார
பட்சமில்லை. (உபா. 10-17; லேவி.
19-17; அப். 10-34.)

12. ஆகையால் எவர்கள் வேதப்
பிரமாணமில்லாதவர்களாய்ப் பாவஞ்
செய்தார்களோ, அவர்கள் வேதப்பிர
மாணமில்லாமல் கேட்டுக்குள்ளாவார்
கள். எவர்கள் வேதப்பிரமாணத்துக்
குட்பட்டவர்களாய்ப் பாவஞ்செய்தார்
களோ, அவர்கள் வேதப்பிரமாணத்
தைக் கொண்டே தீர்வையிடப்படுவார்
கள்.

13. ஏனெனில் சர்வேசுரன் சமுகத்
தில் நீதிமான்களாகிறவர்கள் வேதப்
பிரமாணத்தைக் காதால் கேட்கிறவர்க
ளல்லவே; அதை நிறைவேற்றுகிறவர்
களல்லோ நீதிமான்களாக்கப் படுகிறார்
கள். (மத். 7-21; இயா. 1-22.)

14. அவ்வண்ணமே வேதப்பிரமாண
மில்லாதிருக்கிற புற ஜாதிகள் சுபாவ
மாய் வேதப்பிரமாணத்தின்படி நடக்கி
றபோது, வேதப்பிரமாணமில்லாதிருந்
தும், தங்களுக்குத் தாங்களே வேதப்
பிரமாணமாயிருக்கிறார்கள்.

15. அவர்களுடைய மன அறிவே
அவர்களுக்குச் சாட்சி கொடுக்கிறபடி
யினுலும், அவர்களுடைய சிந்தனைகள்
குற்றமுண்டென்றும், குற்றமில்லையெ
ன்றும் தங்களுக்குள்ளே தீர்க்கிறதினு
லும், அவர்கள் தங்கள் இருதயங்க
ளிலே வேதப்பிரமாணத்தின் ஏற்பாடு
எழுதப்பட்டிருக்கிறதென்று காண்பிக்
கிறார்கள்.

9. இவ்வாக்கியத்தில் கிரேக்கர் என்பதினுல் அஞ்ஞானிகளென்றறிக. அஞ்ஞானிக ளுக்கு முன் யூதர்கள் சர்வேசுரனுல் தெரிந்தெடுக்கப்பட்டு விசேஷவரங்களையடைந்திருந்த தினுலே, தீர்வைநாளில் அஞ்ஞானிகளைவிடக் கெட்டுப்போன யூதர்களுக்கு அதிகக் கண் டிப்பாயிருக்குமென்ற அர்த்தத்திலே அர்ச். சின்னப்பர் முந்தி யூதருக்கும் பிந்தி கிரேக்கருக் கும் என்று சொல்லுகிறார். (மேனேக்கியூஸ்) இதற்கொத்தவண்ணம் அர்ச். இராயப்பர் தேவதீர்வை முந்தி அப்போஸ்தலர்களோடு துவக்குமென்று உரைக்கிறார். (1 இராய. அதி. 4. வ.17.)

12. **வேதப்பிரமாணமில்லாமல்:**—வேதப்பிரமாணம் அல்லது பிரமாணமென்கிற பதங்கள் பழைய ஏற்பாட்டையும் அதில் விசேஷமாய் மோயீசன் எழுதின வேதசட்டங் களையும் குறிக்கும்படி இப்புஸ்தகத்தில் பிரயோகிக்கப்படுகின்றன.

14. **புற ஜாதிகள்:**—அஞ்ஞானிகள்.

**சுபாவமாய்:**—சுபாவ அறிவினுலே

**நியாயப்பிரமாணம்:**—அஞ்ஞானிகளுடைய மனச்சாட்சிக்கு பாவம் புண்ணியம் என்று தோன்றுகிறவைகளைக்கொண்டு அவர்கள் மனதில் சர்வேசுரனுடைய வேதசட்டம் பதிக் கப்பட்டிருக்கிறதென்று தெளிவாகிறது.

16. என் சுவிசேஷத்தின்படியே யேசுக்கிறீஸ்துநாதனைக்கொண்டு சர்வேசுரன் மனுஷருடைய இரகசியமானவைகளை நடுத்தீர்க்கிற நாளிலே (அது துலங்கும்.) (அரு. 5-22; அப். நட. 17-31.)

17. நீ யூதனென்று பட்டப்பெயர் பெற்று, வேதப்பிரமாணத்தின்மேல் ஊன்றிநின்று, கடவுளைக்குறித்துப் பெருமைபாராட்டுகிறாய்.

18. வேதப்பிரமாணத்தின் வழியாய் உபதேசமடைந்தவனாய், அவருடைய சித்தத்தை அறிந்து, அதிக நன்மையானவைகளையும் பகுத்தறிந்துகொள்ளுகிறாய்.

19. நீ உன்னைக் குருடருக்கு வழிகாட்டியாகவும், அந்தகாரத்திலிருக்கிறவர்களுக்கு ஒளியாகவும், (மத். 15-14.)

20. அறிவீனருக்குப் போதகனாகவும், பாலர்களுக்கு உபாத்தியாயராகவும், வேதப்பிரமாணத்தில் அறிவு, உண்மை, இவைகளின் சட்டத்தையுடையவனாகவும் திடமாய் நம்புகிறாய்.

21. ஆகிலும் மற்றவர்களுக்குப் போதிக்கிற நீ உனக்குத்தானே போதிக்காமலிருக்கிறாய். களவு செய்யக்கூடாதென்று பிரசங்கிக்கிற நீயே களவு செய்கிறாய்.

22. விபசாரம் பண்ணப்படாதென்று சொல்லுகிற நீயே விபசாரம் பண்ணுகிறாய். விக்கிரகங்களை அருவருக்கிற நீயே தேவ காரியங்களை அவமதிக்கிறாய்.

23. வேதப்பிரமாணத்தைக் குறித்து மகிமைபாராட்டுகிற நீயே வேதப்பிரமாணத்தை மீறிச் சர்வேசுரனுக்கு அவசங்கைபண்ணுகிறாய்.

24. ஆகையால் எழுதியிருக்கிறபடியே, சர்வேசுரனுடைய நாமம் உங்களாலே அஞ்ஞானிகளுக்குள்ளே தூஷணிக்கப்படுகின்றது. (இசை. 15-5; எசெ. 36-20.)

25. வேதப்பிரமாணத்தை அநுசரித்துவருவாயாகில், விருத்தசேதனம் பிரயோசனமுள்ளதென்பது மெய்யே. ஆனால் வேதப்பிரமாணத்தை மீறி நடப்பாயாகில், உன் விருத்தசேதனம் விருத்தசேதனமல்லவென்பதாயிற்றே.

26. அப்படியிருக்க, விருத்தசேதனமில்லாதவன் வேதப்பிரமாணத்தின் முறைமைகளை அநுசரிப்பானாகில், அவனுடைய விருத்தசேதனமின்மை விருத்தசேதனமாக எண்ணப்படுமல்லோ?

27. ஆகையால் சுபாவத்தின்படி விருத்தசேதனமில்லாதவன் வேதப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறவனாயிருந்தால், அவன் வேத எழுத்துகளையும் விருத்தசேதனத்தையுங் கொண்டிருந்தும், வேதப்பிரமாணத்துக்குத் துரோகஞ்செய்கிற உன்னை நடுத்தீர்ப்பானல்லோ?

28. ஏனெனில் வெளிப்படையாக யூதனாயிருக்கிறவனும் யூதனல்ல; வெளிப்படையாக மாம்சத்தில் செய்யப்பட்ட விருத்தசேதனமும் விருத்தசேதனமல்ல.

29. ஆனால் உள்ளத்தில் யூதனாயிருப்பவனே யூதன்; அவனுடைய இருதயத்தில் இஸ்பிரீத்துசாந்துவினால் ஆனதே விருத்தசேதனமொழிய எழுத்தின்படி ஆனது விருத்தசேதனமல்ல. அவனுடைய புகழ்ச்சி மனுஷரால் அல்ல, சர்வேசுரனால் உண்டாகிறது. (உபா. 10-16; பிலி. 3-3.)

---

16. **என் சுவிசேஷம்:**—யேசுநாதர் பேராலே நான் போதித்துவருகிற சத்தியங்கள். **அது துலங்கும்:** —அது = நான் அஞ்ஞானிகளைக்குறித்து இவ்விடத்தில் சொல்லியது.

26. அஞ்ஞானியாய்ப்பிறந்தவன் தன் மனச்சாட்சியின்படி பத்துக்கற்பனையை அநுசரித்துவந்தால், அவன் விருத்தசேதனம் பெறாதிருந்தாலும் விருத்தசேதனம் பெற்ற யூதர்களுக்குக்கொடுக்கப்பட்ட வாக்குத்தத்தங்களுக்கு அவனும் உரிமைக்காரனாகிறான்.

## 3-ம். அதிகாரம்.

*அஞ்ஞானிகளைவிட யூதர் எதிலே மேன்மை யடைந்திருக்கிறார்கள் என்பதும், சகல மனுஷரும் பாவிகளாயினும் யேசுக்கிறிஸ்துநாதர்மேலுள்ள விசுவாசத்தினாலொழிய வேதப்பிரமாணத்தின் கிரியைகளால் நீதிமான்களாவதில்லை என்பதும்.*

1. இப்படியானால் யூதனுக்கு அதிகமாயிருக்கிறதென்ன? விருத்தசேதனத்தினாலே பிரயோசனமென்ன?

2. எவ்விதத்திலும் நிரம்பத்தான்; ஏனெனில் எல்லாத்துக்கும் மேலாகத் தேவ வாக்கியங்கள் அவர்கள் கையில் ஒப்பிக்கப்பட்டதே முந்தின பிரயோசனம்.

3. அவர்களில் சிலர் விசுவசியாமற்போனாலும், அதினால் ஆவதென்ன? அவர்களுடைய அவிசுவாசம் சர்வேசுரனுடைய பிரமாணிக்கத்தை அவமாக்குமோ? ஒருபோதுமில்லை. (2. திமொ. 2-13.)

4. ஏனெனில் "உம்முடைய வாக்கியங்களில் நீர் நீதிபரராகவும், நீர் நியாயங் கேட்கப்படும்போது வெல்லும்படியாகவும்" என்று எழுதப்பட்டிருக்கிறதல்லோ? அதுபோல, சர்வேசுரனே சத்திய சுரூபி; மனுஷன் எவனும் பொய்யனுமே. (அரு. 3-33; சங். 115-12; 50-6.)

5. ஆனால் நம்முடைய அக்கிரமம் சர்வேசுரனுடைய நீதியை விளங்கப்பண்ணுமாகில், என்னசொல்லுவோம்? தமது முனிவைக்காட்டுகிற சர்வேசுரன் அநீதராயிருக்கிறாரோ?

6. (நான் இந்தக் கேள்வியில் மனுஷர் பாவனையாகப் பேசுகிறேன்) ஒருக்காலும் அநீதரல்ல. அநீதரானால் அவர் இவ்வுலகத்தை நடுத்தீர்ப்பதெப்படி?

7. என்னுடைய பொய்யினிமித்தம் சர்வேசுரனுடைய உண்மையானது அவருடைய மகிமை விளங்குவதற்கு ஏதுவானால், இன்னும நான் பாவியென்று தீர்வையிடப்படுவானேன்?

8. நன்மை வரும்படி தின்மை செய்யாமலேன்? இப்படியும நாங்கள் போதிக்கிறதாகச் சிலர் எங்களைத் தூஷணித்துச் சொல்லுகிறார்களே. அப்படிச் சொல்லுகிறவர்கள அவலத் தீர்வையிடப்படுவது நியாயம.

9. ஆகையால் என்ன? அவர்களிலும் நாங்கள் உயர்ந்தியோ? பரிச்சேதமில்லை. ஏனெனில் யூதருஞ்சரி, கிரேக்கருஞ்சரி, எல்லாரும பாவத்துக்குட்பட்டவர்கள் என்று ஒப்பித்தோமே. (கலாத். 3-22.)

10. (வேதத்தில்) எழுதப்பட்டிருக்கிறதுபோல நீதிமான் ஒருவனுமில்லை. (சங். 13-3.)

4. **நியாயம் கேட்கப்படும்போது:**—இவ்வுலகத்திலே சர்வேசுரன், மனுஷரை நடத்துகிற வகையில் தோன்றும் நீதி அநீதியை யாராவது விசாரிக்கத்துணிந்தால் சர்வேசுரன் நீதி பரரென்று கண்டுகொள்ளும்படியாயிருக்கும். சங். 50-6 (மெனேக்கியூஸ்.)

**மனிதனெவனும் பொய்யனுமே:**—மனுஷசுபாவம் கெட்டுப்போனதினாலே மனுஷன் இயல்பிலே இலௌகீக மனமுள்ளவனாயிருக்கிறான். ஆயினும் அதினாலே அவன் எப்போதும் பொய்யே பேசுகிறானென்பது இந்த வாக்கியத்தின் கருத்தல்ல. மனுஷன் சுபாவமாய்ப் பொய்க்கு ஆளாயிருக்கிறான் என்பதே கருத்து.

6. **மனிதன் பாவனையாகப் பேசுகிறேன்:**—இவ்விடத்தில் அர்ச். சின்னப்பர், 5, 7, 8 இந்த வாக்கியங்களில் அடங்கியிருக்கிற கேள்விகளை ஞானமில்லாத இலௌகீக மனிதர் கேட்கிறார்களென்று காட்டும்படி மனுஷர் பாவனையாகப் பேசுகிறேன் என்கிறார்.

11. புத்திமானும் கிடையாது; சர்வேசுரனைத்தேடுகிறவனும் கிடையாது.

12. எல்லாரும் வழி பிசகிப்போனார்கள்; ஒருங்குடன் ஒன்றுக்கும் உதவாமற்போனார்கள்; நன்மைசெய்கிறவனைக் காணோம். ஒருவனென்கிலும் இல்லை

13. அவர்களுடைய தொண்டை திறக்கப்பட்ட கல்லறை; தங்கள் நாவால் வஞ்சனை பண்ணுவார்கள்; அவர்களுடைய உதடுகளின் கீழே சர்ப்பத்தின் விஷமிருக்கிறது. (சங். 5-11; 139-4.)

14. அவர்களுடைய வாய்நிறையச் சாபமும், கசப்புந்தான் இருக்கிறது. (சங். 9-7.)

15. இரத்தத்தைச் சிந்துவதற்கு அவர்கள் கால்கள் வேகமாய் நடக்கும். (இசை. 59-7; பழ 1-16)

16. அவர்கள்போகிற பாதைகளில் நாசமும் நிர்ப்பாக்கியமுமிருக்கிறது.

17. சமாதான நெறியை அவர்கள் அறியமாட்டார்கள்.

18. அவர்கள் கண்களுக்கு முன்பாகத் தெய்வ பயமில்லை (சங். 35-2)

19. அப்படியிருக்க, எல்லா வாயும் அடைபட்டு, உலகமனைத்தும் கடவுளுக்குக் கீழ்ப்பட்டிருக்கும் பொருட்டு, வேதப்பிரமாணம் உரைக்கிறதெல்லாம் வேதப்பிரமாணத்துக்கு உட்பட்டவர்களுக்கே உரைக்கிறதென்று அறிந்திருக்கிறோம். (சங். 35-2.)

20. ஏந்த மனுஷனும் வேதப்பிரமாணத்தின் கிரியைகளால் தேவசமுகத்தில் நீதிமானாக்கப்படுவதில்லை. ஏனெனில் வேதப்பிரமாணத்தின் வழியாய்ப் பாவத்தின் அறிவுண்டாகிறது. (கலா. 2-16.)

21. இப்பொழுதோ, சர்வேசுரனுடைய நீதியானது வேதப்பிரமாணமின்றி வெளியாக்கப்பட்டிருக்கிறது. வேதப்பிரமாணமும் தீர்க்கதரிசனமும் அதற்குச் சாட்சியாக நிற்கின்றது.

22. யேசுக்கிறீஸ்துநாதர்பேரிலுள்ள விசுவாசத்தினாலுண்டாகும் சர்வேசுரனுடைய நீதியானது யாதோர் வித்தியாசமுமின்றி அவரை விசுவசிக்கிற எல்லாருக்கும், எல்லார்மேலும் வருகிறது. (கலா. 3-2.)

23. எல்லாரும் பாவஞ்செய்து, கடவுளின் மகிமையற்றவர்களாகி,

24. அவருடைய கிருபையால் கிறீஸ்து யேசுநாதரிடத்திலுள்ள இரட்சணியத்தால் இலவசமாய் நீதிமான்களாக்கப்படுகிறார்கள்.

19. இவ்விடத்தில் பத்தாம் வாக்கியமுதல் பதினெட்டாம் வாக்கியம் வரையில் குறிப்பிடப்பட்டிருக்கிற துற்குணங்கள் அஞ்ஞானிகளைக் குறிக்கிறதொழிய தங்களைக்குறிக்கிறதில்லையென்று யூதர்கள் எண்ணும்படிக்கு அவைகள் வேதப்பிரமாணத்துக்குட்பட்ட யூதர்களையும் குறிக்கிறதென்று அர்ச். சின்னப்பா அறிவிக்கிறார்.

20-21 நியாயப்பிரமாணத்தின் வழியாய்ப் பாவத்தின் அறிவு உண்டாகிறது —மோயீசன் வழியாய்ச் சர்வேசுரன் கட்டளையிட்ட பத்துக்கற்பனைகளினாலும் சடங்குகளினாலும் பாவமிது புண்ணியமிதென்று யூதர்கள் அறிந்துகொண்டார்களேயொழிய பழைய ஏற்பாட்டின் சடங்குகளை அனுசரித்ததினாலே மாத்திரம் அவர்கள் நீதிமான்களாக்கப்படவில்லை. ஆனால் புதிய ஏற்பாட்டில் யேசுநாதசுவாமி ஏற்படுத்திய தேவத்திரவிய அனுமானங்களால் மனிதன் நீதிமானாக்கப்படுகிறான். இந்தத் தேவத்திரவிய அனுமானங்களெல்லாம் பழைய ஏற்பாட்டின் சடங்குகளை வியர்த்தமாக்கிப்போட்டன.

21-22. சர்வேசுரனுடையநீதி, தேவநீதி:—இவ்வார்த்தைகள் சர்வேசுரனால் நீதிமானாகும் தன்மையென்று அர்த்தங்கொள்ளும்.

25. அவருடைய இரத்தத்தின்மேல் வைக்கப்படும் விசுவாசத்தின் வழியாய்ச் சர்வேசுரன் அவரைக் கிருபாதாரப்பலியாக ஏற்படுத்தி, இவ்விதமாய்ச் சர்வேசுரன் சென்ற காலங்களின் பாவங்களை மன்னித்த விஷயத்தில் தமது நீதியைக் காண்பிக்கச் சித்தமானார். (எபி. 9-15.)

26. இன்னமும் சர்வேசுரன் அவைகளைச் சகித்துக்கொண்டுவந்ததில் தம்முடைய நீதியை இக்காலத்திலே விளங்கும்படி செய்தார். ஆகையால் அவர் நீதிபரராயிருப்பதுமன்றி, யேசுக்கிறீஸ்துநாதர்பேரில் விசுவாசம் வைக்கிறவனையும் நீதிமானாக்குகிறாரென்று வெளியாகிறது.

27. அப்படியிருக்க, நீ மேன்மை பாராட்டுகிறதெங்கே? ஒழிந்துபோயிற்றே. எந்தப் பிரமாணத்தினாலே? கிரியைகளின் பிரமாணத்தினாலோ? அல்ல, விசுவாசத்தின் பிரமாணத்தினாலேதான்.

28. ஆதலால் வேதப்பிரமாணத்தின் கிரியைகளில்லாமல், விசுவாசத்தினாலே மனிதன் நீதிமானாக்கப்படுகிறான் என்பதே நம்முடைய முடிவான கொள்கையாமே.

25-26 சர்வேசுரனானவர் யேசுநாதர் படவேண்டியிருந்த பாடுகளை முன்னிட்டு அவருடைய மனுஷவதாரத்துக்குமுன் சகல ஜாதி ஜனங்களும் செய்த பாவங்களைச் சகித்துக்கொண்டுவரச் சித்தமாயிருந்ததினாலே அவருடைய நீதியும் தயவும் ஒருப்பட விளங்குகிறது.

28. மனிதர் நீதிமான்கள் ஆவதின்பேரில் அர்ச். சின்னப்பர் போதிக்கிற தன்மையாவது: 1-வது. உலகத்தில் பிறக்குஞ் சமஸ்த மனிதரும் பாவத்திற்குட்பட்டவர்களாய்க் கோபாக்கினையின் புத்திரர்களாய்ப் பிறக்கிறார்கள்; 2-வது. சர்வேசுரனாலே மாத்திரம் மனிதர் நீதிமான்கள், அதாவது பரிசுத்தவான்களாக்கப்படுகிறார்கள். 3-வது யேசுக்கிறீஸ்துநாதரைப்பற்றும் விசுவாசத்தைக்கொண்டு நீதிமான்களாக்கப்படுகிறார்கள். 4-வது. வேற்றுமையொன்றின்றி யேசுக்கிறீஸ்துநாதரை விசுவாசிக்கிற யூதர்களும் அஞ்ஞானிகளும் நீதிமான்களாக்கப்படுகிறார்கள். 5-வது. இலவசமாய் முழுதுஞ் சர்வேசுரனுடைய இரக்கத்தினாலேயே நீதிமான்களாக்கப்படுகிறார்கள். 6-வது. நமக்காகப் பாடுபட்ட யேசுக்கிறீஸ்துநாதருடைய பேறுபலன்களைப் பார்த்துச் சர்வேசுரன் மனிதர்களுக்கு இலவசமாய் இரக்கஞ்செய்கிறார். 7-வது. யேசுக்கிறீஸ்துநாதராலே உண்டாகிற இரட்சணியம் இரத்தஞ்சிந்தின கிருபாதாரப்பலி மேரையாயிருக்கின்றது. 8-வது. அந்தக் கிருபாதாரப்பலியின் பலனை அவருடைய இரத்தத்தின்மேல் நாம் வைக்கும் விசுவாசத்தினாலே நமக்குச் சொந்தமாக்கிக்கொள்ளுகிறோம். 9-வது. அந்தத் திரு இரத்தப்பலன் பூர்வீக காலந்தொடங்கி நடந்துவருகிறது. இரட்சகர்பேரிலுள்ள விசுவாசத்தால் பூர்வீகத்தாருடைய பாவங்களைச் சர்வேசுரன் மன்னித்தார். ஆதலால் உலகமுண்டான நாள்முதற்கொண்டு யேசுநாதர் பிறந்தநாள்மட்டும் உலகத்தில் சீவித்த மனிதர்களுடைய இரட்சணியத்துக்கும், அவர் பிறந்ததுமுதல் உலகமுடியுமட்டும் உள்ள விசுவாசிகளுடைய இரட்சணியத்துக்கும் அற்ப வித்தியாசமுமில்லை. அவர்கள் வரவேண்டியிருந்த இரட்சகரை விசுவாசித்தபடியினாலே அந்த விசுவாசத்தின் முகாந்தரமாகச் சர்வேசுரன் இலவசமான இரக்கத்தினால் அவர்களை நீதிமான்களாக்கியிரட்சித்தார். இவர்கள் வந்த இரட்சகரை விசுவாசிக்கிறபடியினாலே அந்த விசுவாசத்தினிமித்தஞ் சர்வேசுரன் இலவசமான இரக்கத்தினால் இவர்களை நீதிமான்களாக்கியிரட்சிக்கிறார். ஆகையால் இரு திறத்தாருடைய விசுவாசத்துக்கும் ஆதாரமொன்று, காரணமொன்று, முகாந்தரமொன்று, பேறுபலனுமொன்றுதான். 10-வது. மனிதர்களுக்காக மரித்த யேசுக்கிறீஸ்துநாதர்பேரிலுள்ள விசுவாசத்தினிமித்தம் மனிதர்களை நீதிமான்களாக்குகிற சர்வேசுரன் தம்முடைய நேசகுமாரன்தானே பாவிகளுக்காகப் பாடுபட்டு மரிக்கவேண்டுமென்று தீர்மானித்ததினால், சரியான பரிகாரமில்லாமல் பாவத்தை மன்னிக்கிறதில்லையென்கிற தம்முடைய அளவிலாத நீதியையும், பாவிகளை இரட்சிக்க அவரைப் பலியாகக் கொடுக்கச் சம்மதித்ததினால் தாம் மனிதர்கள் பேரில் வைத்த அளவில்லாத இரக்கத்தையும் பிரத்தியட்சமாய்க் காண்பித்ததுந்தவிரப் பாவத்தின்பேரில் தாம் வைத்த நிகரில்லாத பகையையும் விளங்கப்பண்ணுகிறார். 11-வது. விசுவாசத்தினால் உண்டாகிறதாகச் சொல்லப்பட்ட நீதியானது எக்காலத்திலும் உண்டாயிருந்து, மோயீசன் வேதப்பிரமாணத்தினாலுந் தீர்க்கதரிசிகளாலும் மறைவுள்ள பிரகாரமாகக் குறிக்கப்பட்டு இக்காலத்தில் சுவிசேஷத்தினாலே பிரத்தியட்சமாய் விளங்குகிறதென்றும் போதிக்கிறார்.

29. சர்வேசுரன் யூதர்களுக்கு மாத்திரமோ தேவன்? புறஜாதிகளுக்கும் தேவன் அல்லவா? ஆம், சந்தேகமறப் புறஜாதிகளுக்கும் அவர் தேவன்தான்.

30. ஏனென்றால் விருத்தசேதனமுள்ளவர்களை விசுவாசத்தின் மூலமாகவும், விருத்தசேதனமில்லாதவர்களை விசுவாசத்தினாலும், நீதிமான்களாக்குகிற சர்வேசுரன் ஒருவரே.

31. அப்படியிருக்க, விசுவாசத்தினாலே வேதப்பிரமாணத்தை அழித்துப் போடுகிறோமோ? ஒருபோதுமில்லை. பிரமாணத்தை நிலை நிறுத்துகிறோம். (மத். 5-17.)

## 4-ம். அதிகாரம்.

*அபிரகாம் வேதப்பிரமாணத்தின் கிரியைகளினால் அல்ல, வரப்பிரசாதத்தினாலும் தேவவிசுவாசத்தினாலும் நீதிமானாக்கப் பட்டார் என்பதும், புற ஜாதியார் விசுவாசத்தினாலே சர்வேசுரனுக்குப் பிள்ளைகளாகிறார்கள் என்பதும்*

1. அப்படியானால், நம்முடைய பிதாவாகிய அபிரகாம் மாம்சத்தின்படி என்னத்தைக் கண்டடைந்தாரென்று சொல்லுவோம்?

2. அபிரகாம் கிரியைகளினாலே நீதிமானாக்கப்பட்டிருப்பாராகில், அது அவருக்கு மகிமைதான்; ஆயினும் சர்வேசுரனுடைய சமுகத்தில் அல்ல.

3. ஏனெனில் வேதவாக்கியஞ் சொல்லுவதென்ன? அபிரகாம் சர்வேசுரனை விசுவசித்தார், அதுவே அவருக்கு நீதியாக எண்ணப்பட்டதென்றல்லோ சொல்லுகின்றது. (ஆதி. 15-6; கலா. 3-6; இயா. 2-23.)

4. ஆனால் வேலைசெய்கிறவனுக்குக் கிடைக்கிற கூலி கிருபையினால் அல்லவே, கடமைப்படி கணிக்கப்படுகிறது.

5 அப்படியே ஒருவன் கிரியைகளைச் செய்யாதிருந்தும, அவபக்தனை நீதிமானாக்குகிறவர்மேல் விசுவாசம் வைப்பானாகில், தேவகிருபையின் தீர்மானத்தின்படி அவனுடைய விசுவாசமே அவனுக்கு நீதியாக மதிக்கப்படும்.

---

30. ஒரு காரியத்தின் மூலமானது மரத்தின் வேரைப்போல் மறைவானதாயிருக்கிறது. வழி என்பதோ கண்ணுக்கு வெட்டவெளியாய்த் தெரிந்த காரியம். அப்படியே, பழைய ஏற்பாட்டு யூதர்கள் வெளிப்படையாய் இருந்த விருத்தசேதனச் சடங்கினால் நீதிமான்கள் ஆகாமல் தங்களுக்கு வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட உலக இரட்சகர்மேல் விசுவாசமாயிருந்ததினாலே நீதிமான்களானார்கள். ஆனால் இந்த விசுவாசம் மறைந்திருககிற வேர்போல் அவர்கள் நீதியடைகிறதுககு மூல காரணமாயிருந்தது. உலக இரட்சகர் வந்தபின் அவர்மேல் விசுவாசம் வைத்து நீதிமான்களாகிறவர்களோ எல்லாருக்கும் வெட்டவெளியான பாதையிலே நடககிறவர்களுக்குச் சமானமானவர்கள். ஏனெனில் யேசுநாதசுவாமி உலக இரட்சகரென்று தெளிவாய் அறிந்து விசுவசிக்கக் கூடியவர்களாயிருக்கிறாகள்.

31. மத். 5 அதி. 6 வச. வியாக்கியானங்காண்க.

2. **நீதிமானாக்கப்பட்டிருப்பாராகில்:**—மனிதர் அவரை நீதிமானென்று எண்ணினால்.

3. **வேதவாக்கியம்:**—அபிரகாமுக்குக் கணக்கற்ற சந்ததியை உண்டாககுவோமென்று சர்வேசுரன் அவருக்கு வார்த்தைப்பாடு கொடுத்தபோது அபிரகாம் சர்வேசுரனுடைய வாக்கைப் பூரணமாய் விசுவசித்தாரென்றும் அந்த விசுவாசம் அவருக்கு நீதியாக எண்ணப்பட்டதென்றும் மோயீசன் வசனிக்கிறார். (ஆதி. அ. 15. வச. 6.) அப்போஸ்தலர் அந்த வாக்கியத்தை எடுத்துக் கூறும்போது அபிரகாம் ஒரு சமயமாத்திரமல்ல, தன் ஆயுசுபரியந்தம் சர்வேசுரன் வாக்கை நம்பி, அவர் சித்தத்தின்படியே நடந்துவந்ததினாலே அவர் நீதிமானானென்கிற கருத்தோடே பேசுகிறார். (கிராம்போன்.)

5. **நீதிமானாக்குகிறவர்மேல் விசுவாசம்:**—வேத புஸ்தகத்தில் ஒருவர்மேல் அல்லது ஒருத்தரில் விசுவாசமாயிருக்கிறது என்று சொல்லும்போது: ஒருத்தர் வாக்கியத்தை விசுவசித்து அவர்பேரில் நம்பிக்கையும் நேசமும் வைக்கிறதென்று அர்த்தங்கொள்ளும். (கொர்னேலியூஸ்).

6. அவ்விதமே கிரியைகளில்லாமல் சர்வேசுரனுக்கு ஏற்கையாகி, அவரால் நீதிமானாக மதிக்கப்படுகிற மனுஷனுடைய பாக்கியத்தின்மேல் தாவீது என்பவர் சொல்லுவதாவது :

7. எவர்களுடைய அக்கிரமங்கள் மன்னிக்கப்பட்டதோ, எவர்களுடைய பாவங்கள் மூடப்பட்டதோ, அவர்கள் பாக்கியவான்கள். (சங். 31-1.)

8. கர்த்தர் எவன்மேல் அவனுடைய பாவங்களைச் சாட்டாதிருக்கிறாரோ, அவனும் பாக்கியவான் (என்கிறார்).

9. ஆதலால் இந்தப் பாக்கியம் விருத்தசேதனமுள்ளவனுக்கு மாத்திரமோ, விருத்தசேதனமில்லாதவனுக்குங் கூட உண்டோ? அபிரகாமுக்கு விசுவாசமே நீதியாக மதிக்கப்பட்டதென்று சொல்லுகிறோமே.

10. அது எவ்விதமாய் அப்படி மதிக்கப்பட்டது? விருத்தசேதனத்திலோ? விருத்தசேதனமின்மையிலோ? விருத்தசேதனத்தில் அல்ல; விருத்தசேதனமின்மையிலேதான் மதிக்கப்பட்டது.

11. அவர் விருத்தசேதனமில்லாமல், விசுவாசத்தினாலே அடைந்த நீதிக்கு முத்திரையாக விருத்தசேதன அடையாளத்தைப் பெற்றுக்கொண்டார். இவ்விதமாய் விருத்தசேதனமில்லாமல், விசுவசிக்கிறவர்களெல்லாருக்கும் அவர் தகப்பனாயிருக்கிறார். ஆகையால் அவர்களுடைய விசுவாசம் அவர்களுக்கு நீதியாக எண்ணப்படுகிறது. (ஆதி. 17-17.)

12. (அப்படியே) விருத்தசேதனக்காரருக்குமல்லாமல், நம்முடைய பிதாவாகிய அபிரகாம் விருத்தசேதனமில்லாதிருந்த காலத்தில் அவரிடத்திலிருந்த விசுவாசத்தின் தடத்திலே நடக்கிறவர்களுக்குங்கூட அவர் விருத்தசேதனத் தகப்பனாயிருக்கும்படி (அந்த முத்திரையைப் பெற்றார்).

13. அல்லாமலும், உலகமானது அவருக்குக் காணியாட்சியாக இருக்கும் என்கிற வாக்குத்தத்தம அபிரகாமுக்காவது, அவர் சந்ததிக்காவது நியாயப்பிரமாணத்தின் முகாந்தரத்தைப் பற்றியல்ல, விசுவாசத்தினாலாகிற நீதியைப பற்றியே கொடுக்கப்பட்டது. (கலா. 3-18; எபி. 11-9.)

14. ஏனெனில் பிரமாணத்தைக் கொண்டிருக்கிறவர்களே சுதந்தரவாளிகளானால், விசுவாசமும் வீணாய்ப் போம; வாக்குத்தத்தமும அழிந்துபோம்.

9. அபிரகாம் எண்பத்தாறு வயதுள்ளவராயிருக்கும்போது இஸ்மாயேலைப் பெற்றார் (ஆதி. 6-16.)

10. அதற்கு முந்தியே உன் சந்ததியைக் கணக்கின்றிப் பலுகச் செய்வோமென்று சர்வேசுரன் அவருக்கு வாக்குத்தத்தஞ்செய்திருந்தார். அந்த வாக்குத்தத்தத்தை அபிரகாம் விசுவசித்து, நடந்து வந்ததினாலே அவருடைய விசுவாசம் அவரை நீதிமானாக்கினதென்று மோயீசன் சொல்லுகிறார். (ஆதி. 15-7.) விருத்தசேதனச் சடங்கோவெனில் அபிரகாம் தொண்ணூற்றொன்பது வயதாயிருக்கும்போது அவருக்குக் கற்பிக்கப்பட்டது. (ஆதி.17-24.) ஆகையால் அவர் விருத்தசேதனமில்லாமல் விசுவாசத்தால் நீதிமானானாரென்று தெளிவாகிறது. (கிராம்போன்.)

12. விருத்தசேதனம் பெற்ற யூதர்களுக்கு மாத்திரமல்ல, அதைப் பெறாமல் அபிரகாமைப்போல சர்வேசுரன் பேரில் விசுவாசம் வைத்து நடக்கிற அஞ்ஞானிகளுக்கும் அவர் தகப்பனாகிறாரென்பதும் அப்படிப்பட்டவர்களுக்கும் தேவ வார்த்தைப்பாடு பலிக்கிறதென்பதும் இவ்வாக்கியத்தின் கருத்து. (தோமாஸ்.)

15. நியாயப்பிரமாணமோ கோபாக்கினையை உண்டாக்குகின்றது. ஏனெனில் நியாயப்பிரமாணம் இல்லாதவிடத்தில் அதின் மீறுதலுமிராது.

16. ஆகையால் (சுதந்தரமானது) விசுவாசத்தினின்று வருகிறது. அதின் நிமித்தம் வாக்குத்தத்தமானது நம்மெல்லாருக்கும் பிதாவாகிய அபிரகாமுக்கு நியாயப்பிரமாணத்தினால் மாத்திரமல்ல, விசுவாசத்தினாலும் புத்திரராகிய சகலருக்கும் கிருபை வரத்தால் உறுதிப்பட்டிருக்கிறது.

17. அநேகம் ஜாதிகளுக்கு உன்னைப் பிதாவாக ஏற்படுத்தினேன் என்று எழுதியிருக்கிறபடியே, அவர் மரித்தோரை உயிர்ப்பிக்கிறவருமாய், இல்லாதவைகளை இருக்கிறவைகளைப்போல அழைக்கிறவருமாகிய சர்வேசுரனை விசுவசித்து, அவர் சமுகத்திலே நம்மெல்லாருக்கும் பிதாவானார். (ஆதி. 17-4.)

18. அவர் அநேகம் ஜாதி ஜனங்களுக்குத் தகப்பனாவாரென்று நம்புகிறதுக்குத் தடையிருந்தும், நம்பியே விசுவசித்தார். ஏனெனில் உன் சந்ததி அவ்விதமே ஆகுமென்று அவருக்குச் சொல்லப்பட்டிருந்தது. (ஆதி. 15-5.)

19. அவர் விசுவாசத்திலே பலவீனராகவுமில்லை; தான் ஏறக்குறைய நூறு வயதுள்ளவராகக்கொள்ள, தன் சரீரமுஞ் செத்து, சாராளுடைய கர்ப்பமும் வறண்டுபோயிற்றென்று யோசித்தவருமல்ல.

20. சர்வேசுரனுடைய வாக்குத்தத்தத்தின்மேல் அவர் சந்தேகப்பட்டுத் தத்தளிக்கவுமில்லை. ஆனால் சர்வேசுரனைக் கொண்டாடி விசுவாசத்தில் உறுதிப்பட்டிருந்தார்.

21. ஏனெனில் அவர் என்னென்ன வாக்குத்தத்தம்பண்ணுவாரோ, அதை நிறைவேற்ற வல்லவராயிருக்கிறார் என்று சம்பூரணமாய் அறிந்திருந்தார்.

22. ஆகையால் அது அவருக்கு நீதியாக மதிக்கப்பட்டது.

23. மேலும் அது அவருக்கு நீதியாக மதிக்கப்பட்டதென்று அவரைக் குறித்துமாத்திரம் எழுதப்பட்டதல்ல; நம்மைக்குறித்தும் எழுதப்பட்டிருக்கிறது.

24. ஏனெனில் நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரை மரித்தோரிலிருந்து உயிர்ப்பித்தவர்மேல் நாம் விசுவாசமாயிருந்தால், நமக்கும் அது நீதியாக மதிக்கப்படும்.

25. ஏனெனில் அவர் நம்முடைய பாவங்களுக்காகக் கையளிக்கப்பட்டு, நம்மை நீதிமான்களாக்கும்படி உயிர்த்தெழுந்தருளினார்.

15. இராஜ கட்டளையை அறிந்து மீறுகிறவன் கோபாக்கினைக்கு ஆளாகிறான். இராஜ கட்டளை இல்லாவிட்டால் மீறுகிறவனுமில்லை, ஆக்கினையுமில்லை என்கவேண்டும். அப்படிப்போல தேவகட்டளையை அறிந்து மீறுகிறவன் தேவமுனிவுக்குள்ளாகிறான். தேவகட்டளை இல்லாவிட்டால், மீறுகிறவனுமில்லை, தேவ முனிவுமில்லை. ஆகையால் விருத்தசேதனக் கட்டளையைப் பெறாத அஞ்ஞானிகள் கிறீஸ்துவர்களாகும்போது விருத்தசேதனமில்லாமல் நீதிமான்களாகிறார்களென்று ஒப்புக்கொள்ளவேண்டியது. (கிராம் போன்).

25. அர்ச். சின்னப்பர் 3-ம் அதிகாரத்தில் மனுஷன் யேசுநாதரைப் பற்றும் விசுவாசத்தினாலே இலவசமாய் நீதிமானாக்கப்படுகிறானென்று போதித்தப் பிற்பாடு, இவ்வதிகாரத்தில் அதற்கு அத்தாட்சியாக அபிரகாமென்பவர் கிரியைகளினாலே அல்ல, விசுவாசத்தினாலேயே இலவசமாய் நீதிமானானாரென்று அநேக திஷ்டாந்தரங்களினாலும் நியாயங்களினாலுங் காண்பிக்கிறார். அப்போஸ்தலராகிய அர்ச். இயாகப்பரோவென்றால், தம்முடைய நிருபத்தின் இரண்டாம் அதிகாரம் பதினாலாம் வசனந் தொடங்கி இருபத்துநாலாம் வசனமட்டுக்கும் மனுஷன் விசுவாசத்தினாலே மாத்திரமல்ல, விசுவாசத்தைக்கொண்டு செய்யப்

## 5-ம். அதிகாரம்.

*யேசுநாதரைப்பற்றும் விசுவாசத்தினாலே உண்டாகிற நீதியின் பலன்களை இதிலே சின்னப்பர் விவரிக்கிறார்.*

1. ஆகையால் நாம் விசுவாசத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டிருப்பதால், நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர் மூலமாகச் சர்வேசுரனோடு சமாதானத்தைக் கொண்டிருப்போமாக.

2. அவர் மூலமாய் விசுவாசத்தைக் கொண்டு நாம் இந்த வரப்பிரசாத (ஸ்திதியில்) பிரவேசிக்கக் கிருபைபெற்று, இதிலே நிலைத்துச் சர்வேசுரனுடைய பிள்ளைகளுக்குரிய மகிமையின் நம்பிக்கையால் மேன்மை பாராட்டுகிறோம். (எபே. 2-18.)

3. இதுமாத்திரமல்ல; துன்பங்களிலே முதலாய் மேன்மை பாராட்டுகிறோம். ஏனெனில் துன்பம் பொறுமையையும், பொறுமை பரீட்சையையும், (யாக. 1-3.)

4. பரீட்சை நம்பிக்கையையும் உண்டாக்குகிறதென்று அறிந்திருக்கிறோம்.

5. நம்பிக்கையோவென்றால் நம்மை வெட்கிப்போகப்பண்ணாது. ஏனெனில் நமக்கு அளிக்கப்பட்ட இஸ்பிரீத்துசாந்துவினாலே தேவசிநேகம் நம்முடைய இருதயங்களில் எப்பக்கத்திலும் பொழியப்பட்டிருக்கிறது.

6. இல்லாவிட்டால், நாம் இன்னும் பலவீனராயிருக்கும்போது, குறித்த காலத்திலே அக்கிரமிகளுக்காகக் கிறீஸ்துநாதர் மரிப்பானேன்? (எபி. 9-14; 1. இரா. 3-18.)

7. நீதிமானுக்காக ஒருவன் மரிக்கிறதே அரிது. ஆகிலும் நல்லவனுக்காக ஒருவேளை ஒருவன் மரிக்கத் துணியலாம்.

---

பட்ட கிரியைகளினாலே நீதிமானாக்கப்படுகிறானென்றும், அப்படியே அபிரகாமென்பவருடைய கிரியைகளினாலே அவருடைய விசுவாசம் அவருக்கு நீதியாக எண்ணப்பட்டதென்றுங் காண்பிக்கிறார். அதினாலே அர்ச். சின்னப்பருடைய போதகமும், அர்ச். இயாகப்பருடைய போதகமும் ஒன்றுகொன்று எதிராய் இருக்கிறதென்போமோ? ஒருபோதுமில்லை. இதிலே அர்ச். சின்னப்பர் மோயீசனுடைய பிரமாணத்தின் கிரியைகளினாலே மனுஷன் நீதிமானாக்கப்படுகிறானென்று எண்ணிக்கொண்டிருந்த யூதர்களை மறுத்து, அந்தப் பிரமாணத்தின் கிரியைகளினாலே மனுஷன் நீதிமானாக்கப்படுகிறதில்லை, யேசுநாதரைப்பற்றும் விசுவாசத்தினாலேயே இலவசமாய் நீதிமானாக்கப்படுகிறானென்று காண்பிக்கிறார்.

அர்ச். இயாகப்பரோவென்றால், மனுஷன் நீதிமானாகும்படிக்கு யேசுநாதரைப்பற்றும் விசுவாசமாத்திரம் போதுமென்றும், விசுவாசத்தோடுகூட புண்ணியக் கிரியைகள் அவசரமல்லவென்றுஞ் சாதித்துக்கொண்டு வந்த சில பேர்களை மறுத்து, விசுவாசத்தினால் பண்ணப்படுகிற தர்மக்கிரியைகள் இல்லாவிட்டால், அந்த விசுவாசஞ் செத்த விசுவாசமென்றும், பிரயோசனமில்லாத விசுவாசமென்றும், அந்த வெறும் விசுவாசத்தினாலே மனுஷன் நீதிமானாக்கப்படமாட்டானென்றுங் காண்பித்து, அபிரகாம் தன் குமாரனைப் பலியிடத் துணிந்த கிரியையினாலே நீதிமானாக்கப்பட்டார், இதினாலே அந்தக கிரியை அபிரகாமுடைய விசுவாசத்தோடுகூட முயற்சி செய்து, அவருடைய விசுவாசத்தைப் பூரணமாக்கினதென்று காண்பிக்கிறார். ஆகையால் 3-ம் அதி. கடைசி வியாக்கியானத்தில் சொன்னதுபோல், மனுஷன் நீதிமானாகும்படிக்குக் கிரியைகள் வேண்டியதில்லை என்று அர்ச். சின்னப்பர் சொல்லுகிறபோதெல்லாம் பழைய ஏற்பாட்டிலே கற்பிக்கப்பட்டிருந்த விருத்தசேதன ஆசாரம் பலி முதலிய சடங்குகளைப்பற்றி அதைச் சொல்லுகிறாரொழிய, விசுவாசத்தினால் உண்டாகிற தர்மக்கிரியைகள் அவசரமில்லையென்று அவர் போதித்ததாகச் சொல்லவும் எண்ணவுங் கூடாது; அந்த விசுவாசத்தினால் உண்டாகிற தர்மக்கிரியைகள் அவசியமாய் வேண்டுமென்று அவரே போதித்துக்கொண்டு வருகிறார். ஆகையால் அர்ச். சின்னப்பர் போதகத்துக்கும் அர்ச். இயாகப்பர் போதகத்துக்கும் அற்பமெனிலும் பின்னபேதமில்லையென்று அறிக.

8. ஆனால் நாம் இன்னும் பாவிகளாயிருக்கும்போதே, குறிக்கப்பட்ட காலத்தில் நமக்காகக் கிறீஸ்துநாதர் மரித்ததினாலே சர்வேசுரன் நமது பேரில் வைத்திருக்கிற அன்பை விளங்கப்பண்ணுகிறார்.

9. ஆகையால் இப்போது நாம் அவருடைய இரத்தத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டிருக்க, கோபாக்கினைக்குள்ளாகாமல், அவரால் இரட்சிக்கப்படுவது அதிக நிச்சயமாமே.

10. நாம் சர்வேசுரனுக்குச் சத்துருக்களாயிருக்கையிலே, தேவ சுதனுடைய மரணத்தினால் அவரோடு சமாதானமாக்கப்பட்டிருக்க, சமாதானமாக்கப்பட்டபின்பு அவருடைய ஜீவனால் நாம் இரட்சிக்கப்படுவது அதிக நிச்சயமாமே.

11. இதுவுமல்லாமல், நாம இப்பொழுது சமாதானத்தையடையும்படி செய்த நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர்பேரால் நாம் சர்வேசுரனிடத்தில் மகிமை பாராட்டுகிறோம்.

12. இவ்வண்ணமாக ஒரே மனிதனாலே பாவமும், பாவத்தினாலே மரணமும் இவ்வுலகத்தில் எப்படிப் பிரவேசித்ததோ, அப்படியே அந்த ஒரு மனிதனாலே சகலரும் பாவிகளானபடியினாலே, சாவும் சகல மனிதருக்குள்ளும் பாய்நதது. (ஆதி. 3-19; 1 கொ. 15-21.)

13. (ஆதிமுதல்) நியாயப்பிரமாண காலம் வரையில் உலகத்திலே பாவமிருநதது உள்ளதுதான். ஆயினும் நியாயப்பிரமாணமில்லாதிருந்தபடியினாலே, அது குற்றமாக (மனிதர்மேல்) சாட்டப்படவில்லை.

14. ஆகிலும் வரவேண்டியவராயிருந்தவருக்குக் குறிப்பாயிருந்த ஆதாம் முதல் தொடங்கி, மோயீசன் வரைக்கும் ஆதாமின் மீறுதலுக்கொப்பாய்ப் பாவஞ்செய்யாதவர்களையும் மரணமானது ஆண்டுகொண்டுவநதது.

15. ஆனால் வரப்பிரசாதத்தின் அளவு குற்றத்தின் அளவைப்போல் அல்லவே; எப்படியெனில் ஒரே மனிதனுடைய குற்றத்தினாலே அநேகர் மரித்தார்களென்றால், அவர்களிலும் அதிகமானபேர்களிடத்தில் யேசுக்கிறீஸ்துநாதராகிய ஒருவருடைய கிருபையினாலே சர்வேசுரனுடைய வரப்பிரசாதமும், கொடையும் எவ்வளவோ மிகுதியாய்ப் பெருகியிருக்கிறது.

16. வரப்பிரசாதத்தினாலே (விளைந்த பலன்) ஒரு பாவத்தினாலே வநத பலனைப்போல் அல்லவே. ஒரே குற்றத்தினாலே நாம் சாபத் தீர்வைக்குள்ளானோம். வரபபிரசாதமோ, அநேக பாவங்களினின்று நம்மை நீதிமான்களாக்குகின்றது.

13. பாவம் குற்றமாகச் சாட்டப்படவில்லை என்பதின் அர்த்தமாவது மோயீசனாலே வேதங்கொடுக்கப்படுமுன், மனிதர்களுக்கு எழுதப்பட்ட கற்பனையில்லாதிருந்தபடியினாலே, அவர்கள் வேசித்தனம், துர் இச்சை இவை முதலிய பாவங்களைப் பெரிய குற்றமாக எண்ணாமல், பயமின்றிக் கட்டிக்கொண்டார்கள். வேதப்பிரமாணங் கொடுக்கப்பட்டபின்பு அந்தப் பாவங்கள் வேத கற்பனைகளுக்கு விரோதமென்று அவர்கள் தெளிவாய்க் கண்டுணர்ந்தாலும், அவைகளை விட்டொழிப்பதற்கான விசேஷ உதவியைக் கற்பனைகளால் அடையவில்லை. அப்படி அதிக தெளிவுள்ள அறிவோடு செய்த பாவம் அதிக பெரிய குற்றமாக அவர்கள்மேல் சாட்டப்பட்டது. ஆகையால் வேதப்பிரமாணம் கொடுக்கப்படுமுன் அறியாமல் பாவத்தைக் கட்டிக்கொண்டவர்கள் அந்தப் பிரமாணங் கொடுககப்பட்டபின் பாவத்தை அறிந்தே கட்டிக்கொண்டார்கள். இதுவே வேதப்பிரமாணத்துக்குமுன்னிருந்தவர்களுடைய பாவத்துக்கும் பின் வந்தவர்களுடைய பாவத்துக்கும் உள்ள வித்தியாசமொழிய சர்வேசுரனுடைய சமுகத்திலே முன்னும் பின்னும் பாவம் பாவந்தானென்றறிக.

17. எப்படியெனில், ஒருவனுடைய குற்றத்தினாலே, அந்த ஒரு குற்றத்தின் நிமித்தமாக மரணம் அரசாட்சிசெய்து வந்தால், வரப்பிரசாதத்தையும், வரங்களையும், நீதியையும் ஏராளமாய்ப் பெற்றுக்கொள்ளுகிறவர்கள் யேசுக்கிறீஸ்துநாதர் ஒருவராலே சீவியத்தில் அரசாண்டு வருவார்களென்பது எவ்வளவோ அதிக நியாயமாயிருக்கின்றது.

18. ஆகையால் ஒருவனுடைய குற்றத்தினாலே சகல மனிதர்பேரிலும் ஆக்கினைத்தீர்ப்பு உண்டானதுபோல, ஒருவருடைய நீதியினாலே சகல மனிதருக்கும் உயிர்தரும் நீதி உண்டாகின்றது.

19. ஏனென்றால் ஒரே மனுஷனுடைய கீழ்ப்படியாமையினாலே அநேகர் பாவிகளாக்கப்பட்டதுபோல, ஓரே ஒருவருடைய கீழ்ப்படிதலினாலே அநேகர் நீதிமான்களாக்கப்படுவார்கள். (பிலிப். 2-8.)

20. குற்றம் பெருகும்படி நியாயப்பிரமாணம் இடையில் நுழைந்தது. ஆனாலும் குற்றம் பெருகின இடத்தில் வரப்பிரசாதம் அதிமிகப் பெருகிற்று.

21. எப்படியெனில் பாவமானது சாவைக் கொண்டுவந்து விட்டு ஆண்டதுபோல, வரப்பிரசாதமானது நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர் மூலமாய் நீதிவழியாக நித்திய சீவியத்தைத் தந்து, ஆளும்படியாயிற்று.

---

21. இந்த அதிகாரத்தின் அபிப்பிராயத்தைத் தொகுத்துக் காட்டுந்தன்மையாவது: மனுஷன் யேசுக்கிறீஸ்துநாதரைப்பற்றிய விசுவாசத்தினாலே இலவசமாய் நீதிமானாக்கப்படுகிறானென்று மூன்றாம் நாலாம் அதிகாரங்களில் அர்ச். சின்னப்பர் போதித்தபிறகு அப்படிப்பட்ட நீதியின் மேன்மையையும் பிரயோசனத்தையும் இதிலே காட்டுகிறார். 1-வது. நம்முடைய இரட்சகராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய பேறுபலன்களினாலே சர்வேசுரனோடு சமாதானமாய்ப் போகிறோம். 2-வது. நாம் சர்வேசுரனுக்குப் பிள்ளைகளாகிறதுந் தவிர, அவர் தம்முடைய பிள்ளைகளுக்குக் கொடுக்கும் நித்திய பாக்கியத்தை அடைவோமென்றும் நம்பிக்கையாயிருக்கிறோம். 3-வது. கஸ்தி துன்பங்கள் அந்தப் பாக்கியத்துக்கு வழியாயிருப்பதால், அவைகளிலே சந்தோஷப்படுகிறோம். 4-வது. அந்த நம்பிக்கையின் மூகாந்திரமேதென்றால், நாம் இன்னம் பாவிகளாயிருக்கையிலே யேசுக்கிறீஸ்துநாதர் நமக்காகப் பாடுபட்டு மரித்திருக்க, அவருடைய திரு இரத்தத்தினால் நாம் நீதிமான்களாக்கப்பட்டபிறகு, எவ்வளவோ அதிகமாய்த் தேவ கோபாக்கினையினின்று நம்மை இரட்சித்து, நித்தியசீவியத்தைக் கொடுப்பாரென்பதாம். 5-வது. யேசுக்கிறீஸ்துநாதராலே நமக்குப் பெறுவிக்கப்பட்ட நீதியின் அவசரத்தையும், மேன்மையையுங் காண்பிக்கத்தக்கதாக நம்முடைய கேட்டுக்குக் காரணமாயிருந்த ஆதாமையும், நம்முடைய இரட்சணியத்துக்குக் காரணமாயிருந்த யேசுக்கிறீஸ்துநாதரையும் ஒருவர்க்கொருவரை எதிராகக் காண்பித்து, முந்தின ஆதாம் எல்லா மனிதருடைய கேட்டுக்குக் காரணமாயிருந்ததுபோல, இரண்டாம் ஆதாமாகிய யேசுக்கிறீஸ்துநாதர் எல்லா மனிதருடைய இரட்சணியத்துக்குங் காரணமாயிருக்கிறார் என்கிறார். பின்னும் முந்தின ஆதாமுக்கும் 2-ம் ஆதாமாகிய யேசுக்கிறீஸ்துநாதருக்கும் உள்ள வேற்றுமைகளைத் தொகுத்துக் காட்டி, ஆதாம் ஒரேபாவத்தை நமக்குக் கொடுத்திருக்க, யேசுக்கிறீஸ்துநாதர் அந்த ஜென்மப்பாவத்தினின்றுமாத்திரமல்ல, சகலமான பாவங்களினின்றும் நம்மை இரட்சித்தாரென்றும், ஆதாம் தனது பாவத்தால் நம்மிடத்தில் ஜென்ம நீதியை அழித்துப்போட்டிருக்க, யேசுக்கிறீஸ்துநாதர் அந்த ஜென்ம நீதியிலும் மிகவும் மேன்மையான நீதியையுஞ், சகலமான நன்மைகளையும் நமக்குப் பெறுவித்தாரென்றும் விஸ்தரித்துக் காண்பிக்கிறார். அப்படியிருக்க, ஆதித்தகப்பன் உண்டாக்கப்பட்ட ஜென்ம நீதியின் அந்தஸ்தைப்பார்க்கிலும், யேசுக்கிறீஸ்துநாதராலே இரட்சிக்கப்பட்டவர்களாயிருக்கிற நம்முடைய அந்தஸ்து அதிக மேன்மையாயிருக்கிறதென்று சொல்லக்கூடுமோ? சந்தேகமறச் சொல்லக்கூடும். அந்த அந்தஸ்திலே ஆதித் தாய் தந்தைகள் ஜென்ம நீதியோடும் இஷ்டப்பிரசாதத்தோடும் இருந்தார்களென்பது மெய்யே. ஆனால் இதின் பதினேழாம் வசனத்தில் சொல்லியிருக்கிறதுபோல, யேசுநாதர் நமக்கு நீதியையும் இஷ்டப்பிரசாதத்தையுஞ் சம்பூரணமாய்ப் பெறுவித்தார். அந்த அந்தஸ்திலே ஆசா

## 6-ம். அதிகாரம்.

*கிறீஸ்துவர்கள் பாவத்துக்கு மரித்துச் சர்வேசுரனுக்காகச் சீவிக்கவேண்டும் என்பது.*

1. அப்படியிருக்க, என்னசொல்லுவோம்? வரப்பிரசாதம் பெருகும்படி பாவத்திலே நிலைக்கொள்ளுவோமோ? (1. இரா. 2-24.)

2. சுவாமி இரட்சிக்க! பாவத்துக்கு மரித்தவர்களாகிய நாம் இன்னும் அதிலே சீவிக்கிறதெப்படி?

3. யேசுக்கிறீஸ்துநாதர் பேராலே நமமில் ஞானஸ்நானம் பெற்றவர்கள் எல்லாரும் அவருடைய மரணத்தினாலே ஞானஸ்நானம்பெற்றோம் என்று அறியாதிருக்கிறீர்களோ?

4. அதெப்படியெனில், பிதாவின் மகிமையினாலே கிறீஸ்துநாதர் மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்ததுபோல, நாமும் புதிதான சீவியமுள்ளவர்களாய் நடந்துவரும்பொருட்டு ஞானஸ்நானத்தினாலே (பாவத்துக்குச்) சாகும்படி அவரோடுகூட நாமும் அடக்கம்பண்ணப்பட்டோம். (கலா. 3-27; கொலோ. 2-12; எபி. 12-1.)

5. ஆகையால் நாம் அவருடைய மரணத்துக்கு ஒப்பாக அவரோடு ஒட்ட வைக்கப்பட்டவர்களானால், உத்தானத்துக்கும் அவரோடு ஒத்தவர்களாக அவரில் ஒட்டவைக்கப்படுவோம்.

6. ஏனெனில் பாவச் சரீரம் அழிந்து, நாம் இனிப் பாவத்துக்கு அடிமைகளாகாதபடிக்கு, நம்முடைய பழைய மனிதன் அவரோடுகூடச் சிலுவையில் அறையப்பட்டிருக்கிறானென்று அறிந்திருக்கிறோம்

7. மரித்தவனேவெனில் பாவத்தினின்று (விலகி) நீதிமானாக்கப்பட்டிருக்கிறான்.

8. ஆகையால் கிறீஸ்துநாதரோடுகூட மரித்தோமாகில், கிறீஸ்துநாதரோடுகூட நாமும் சீவிப்போமென்று விசுவசிக்கிறோம்.

9. ஏனெனில் மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்த கிறீஸ்துநாதர் இனி மரிக்கமாட்டாரென்று அறிந்திருக்கிறோம். மரணம இனி அவரை ஆளத்தக்கதில்லை.

---

பாசங்கள் இல்லாதிருந்தது மெய்யே. ஆனால் இந்த அந்தஸ்திலே நாம் யேசுக்கிறீஸ்துநாதருடைய பேறுபலன்களைக்கொண்டு அவைகளுடனே யுத்தம்பண்ணி ஜெயங்கொண்டு அதினால் அளவில்லாத நன்மைகளைச் சம்பாதித்துக்கொள்ளுகிறோம். 6-வது. அந்த அந்தஸ்திலே சீவிய விருக்ஷம் இருந்தது மெய்யே. ஆனால் அதற்குப் பதிலாக நித்திய சீவியத்தைத் தருகிற சீவிய அப்பத்தை யேசுக்கிறீஸ்துநாதர் நமக்கு ஏற்படுத்தினார். 7-வது. அந்த அந்தஸ்திலே இல்லாத மரணம் இப்போது நமக்கு உண்டு. இந்தச் சரீர மரணத்தினின்று யேசுக்கிறீஸ்துநாதர் நம்மை மீட்கவில்லை என்பது மெய்யே. ஆனால் யேசுக்கிறீஸ்துநாதர் தம்முடைய திருமரணத்தினாலே நம்முடைய ஆத்துமத்துக்குச் சததமான சீவியத்தைப் பெறுவித்ததுமன்றித் தமது உயிர்த்தலினாலே நமது சரீரங்களுக்கும் உலக முடிவிலே வரப்போகிற உயிர்த்தலைத் தம்முடைய மகிமையான உயிர்த்தலுக்கு ஒப்பாக ஏற்படுத்தினாரென்று அறியவும்.

3. மரணத்தினால் என்பதற்கு மரணததின் சாயலாக என்று அர்த்தங்கொள்க. யேசுநாதர்சுவாமி மரித்துக் கல்லறைக்குள் வைக்கப்பட்டதுபோல, நாமும் தண்ணீருக்குள் ஞானஸ்நானத்தினாலே அமிழ்த்தப்படுகிறோம். ஆதி துவக்கத்தில் ஞானஸ்நானங் கொடுக்கும்போது தண்ணீரில் ஒரு முழுக்குப் போடும்படி செய்தார்கள்.

6. பழைய மனிதன் என்பதும், பாவச் சரீரம் என்பதும் என்னவெனில் ஜென்ம பாவத்தினாலே, தர்ம குணங்கெட்டு, பாவத்துக்குச் சார்பான பற்றுதலையுடைய மனுஷனுடைய சுபாவமாம். புது மனிதனேவென்றால் வரப்பிரசாதத்தினாலே புதிதான ஞான சீவியத்தை அடைந்த சுபாவமென்றறியவும்.

10. அவர் மரித்ததோ, பாவத்துக் கென்று ஒரே விசை மரித்தார். அவர் சீவிக்கிறதோவெனில், சர்வேசுரனுக் கென்று (எந்நாளும்) சீவிக்கிறார். (எபி. 9-25.)

11. அவ்வண்ணமே நீங்களும் பாவ த்துக்கு மெய்யாகவே மரித்தீர்களென் றும், நம்முடைய ஆண்டவராகிய யேசு க்கிறீஸ்துநாதரிடமாய்ச் சர்வேசுரனுக் காகவே சீவிக்கிறீர்களென்றும் எண் ணிக்கொள்ளுங்கள்.

12. சரீரத்தின் இச்சைகளுக்கு நீங் கள் கீழ்ப்படியாமலிருக்கும்படி, சாவுக் குரிய உங்கள் சரீரத்திலே பாவத்தை அரசாள விடாதேயுங்கள்.

13. அவ்வண்ணமே உங்கள் அவய வங்களை அநீதத்தின் எத்தனங்களாகப் பாவத்துக்கு ஒப்புக்கொடாமல், மரித் தோரிலிருந்து உயிர்த்தவர்களாக உங் களைச் சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுத் து, உங்கள் அவயவங்களையும் நீதியின் நடக்கைக்குரிய எத்தனங்களாகச் சுவாமிக்குக் (கையளியுங்கள்).

14. பாவமானது உங்களை மேற்கொ ள்ளமாட்டாது. ஏனெனில் நீங்கள் நியாயப்பிரமாணத்துக்கு அல்ல, வரப் பிரசாதத்துக்கே கீழ்ப்பட்டிருக்கிறீர் கள்.

15. அப்படியானால் என்ன? நாம் நியாயப்பிரமாணத்துக்குக் கீழ்ப்பட்டி ராமல், வரப்பிரசாதத்துக்குக் கீழ்ப்பட் டிருப்பதால் பாவஞ் செய்வோமோ? சுவாமி இரட்சிக்க!

16. சாவுக்கு ஏதுவான பாவத்துக் கானாலும், நீதிக்கு ஏதுவான சிரவணத் துக்கென்கிலும், எதுக்கு நீங்கள் பணி ந்துநடக்கும்படி உங்களை அடிமைகளாக் கக் கையளிப்பீர்களோ, அதற்கே நீங் கள் அடிமைகளாகப் பணிகிறீர்கள் என்று அறியாதிருக்கிறீர்களோ? (அரு. 8-34; 2. இரா. 2-19.)

17. ஆகிலும் முன்னமே பாவத்துக்கு அடிமைகளாயிருந்த நீங்கள் இப்போ து உங்களுக்கு அளிக்கப்பட்ட உபதே சத்தின் சட்டத்துக்கேற்றபடி மனந் திரும்பிக் கீழ்ப்படிந்துவருகிறீர்களெ ன்கிறதினாலே சர்வேசுரனுக்குத் தோ த்திரமுண்டாவதாக!

18. அப்படியே நீங்கள் பாவத்தினி ன்று விடுதலையாகி, நீதிக்கு அடிமைக ளானீர்கள்.

19. உங்கள் மாம்சப் பலவீனத்தின் நிமித்தம் மனுஷர் பேசும் பாவனையாய் இதைச் சொல்லுகிறேன்: முன்னே நீங்கள் அக்கிரமத்தின்மேல் அக்கிரமத் துக்கும், அசுத்தத்துக்கும் உங்கள் அவயவங்களை அடிமைகளாக ஒப்புக் கொடுத்ததுபோல, இப்போது பரிசுத் தத்தனத்தை அடையும்படி உங்கள் அவ யவங்களை நீதிக்கு ஒப்புக்கொடுங்கள்.

20. ஏனெனில் நீங்கள் பாவத்துக்கு அடிமைகளாயிருந்த காலத்தில் நீதி யின் ஆதீனத்துக்கு உட்படாதிருந்தீர் கள்.

21. இப்போது உங்களுக்கு வெட் கக்கேடாயிருக்கிற கிரியைகளினாலே அப்போது உங்களுக்கு வந்த பலன் என்ன? அவைகளின் முடிவு மரணந் தானல்லோ.

22. இப்பொழுதோவெனில், பாவத் தினின்று விடுதலையாக்கப்பட்டுச் சர் வேசுரனுக்கு அடிமைகளானதினாலே, உங்களுக்குப் பலனாகப் பரிசுத்தத்தன மும், முடிவாக நித்தியசீவியமும் கிடை க்கின்றது.

23. எப்படியெனில் பாவத்துக்குக் கூலி மரணமாம். சர்வேசுரனுடைய வரப்பிரசாதமோ நம்முடைய ஆண்டவராகிய கிறீஸ்து யேசுநாதராலே நித்திய சீவியமாயிருக்கின்றது.

## 7-ம். அதிகாரம்.

*நியாயப்பிரமாணக் கடமையினின்றும், பாவத்தின் தோஷத்தினின்றும் கிறீஸ்துநாதராலே விடுதலையாகிறோம்என்பதும், பாவச்சார்பானது சோதனைக்குக் காரணமாயிருக்கிறது என்பதும்.*

1. சகோதரரே, நியாயப்பிரமாணத்தை அறிந்தவர்களாகிய உங்களுடன் பேசுகிறேன். நியாயப்பிரமாணம் உயிரோடிருக்குமட்டுந்தான் மனுஷனை ஆளுகிறதென்று அறியாதிருக்கிறீர்களோ?

2. அதெப்படியென்றால், புருஷனையுடைய ஸ்திரீ புருஷன் உயிரோடிருக்குமளவும் பிரமாணத்தால் கட்டுண்டிருக்கிறாள். ஆனால் அவளுடைய புருஷன் மரித்தானாகில், அவள் புருஷனைப்பற்றிய பிரமாணத்தினின்று விடுதலையாக்கப்படுகிறாள். (1. கொ. 7-39.)

23. இந்த அதிகாரத்தில் அர்ச். சின்னப்பர் ஞானஸ்நானத்தின் மேன்மையையும், அதிலடங்கிய அதிசயத்துக்குரிய பிரயோசனத்தையும், பேறுபலன்களையும் மிகவுந் துலக்கமாகவுஞ் சிறந்த மேனாயாகவுங் காட்டுகிறார். அதாவது:

யேசுநாதர் நம்முடைய பாவங்களுக்காக மரித்ததுபோல, நாமும் ஞானஸ்நானம் பெறுகிறபோது பாவத்துக்கும், உலகத்துக்கும், ஆசாபாசத்துக்கும் மரிக்கிறோம். யேசுநாதருடைய திருச்சரீரம் அடக்கம்பண்ணப்பட்டதுபோல, நாமும் ஞானஸ்நானத்தினாலே பாவத்திலும் உலகத்திலும் நின்று பிரிக்கப்பட்டு, மறைக்கப்படுகிறோம். யேசுநாதர் மூன்றாம் நாள் புது உயிரடைந்து உயிர்த்தெழுந்ததுபோல, நாமும் ஞானஸ்நானத்தில் புது உயிர் அடைந்து உயிர்க்கிறோம். யேசுநாதர் தம்முடைய மரணத்தினால் நம்முடைய பாவங்களுக்காகப் பிதாவின் நீதிக்கு உத்தரித்து, நமக்குப் பெறுவித்த பாவப் பொறுத்தலை ஞானஸ்நானத்தினால் சம்பூரணமாய் அடைகிறோம். யேசுநாதருடைய திருச் சரீரம் அடக்கம் பண்ணப்பட்டதினால், நாம் உலகத்துக்கு மறைந்தவர்களாய் அந்தரங்க சீவியமாய் நடக்க வரப்பிரசாதம் அடைகிறோம். யேசுநாதருடைய உத்தானத்தால், புது உயிராகிய இஷ்டப்பிரசாத சீவியமாய் நடக்கப் பேறுபெற்றவர்களாகிறோம். அப்படியே யேசுநாதர் ஒருவிசை மரித்து, மரணத்தை ஜெயித்தபின் இனி என்றென்றைக்கும் மரிக்கமாட்டாரென்கிறதுபோல, ஞானஸ்நானம்பெற்ற நாமும் ஒருவிசை யேசுநாதருக்குள் பாவத்துக்கு மரித்து, இஷ்டப்பிரசாதமாகிய ஞானசீவியத்துக்கு உயிர்த்தபிறகு, இனிப் பாவத்தால் மரிக்காதிருக்கக்கடவோம்.

இப்படியே ஞானஸ்நானத்தினால் நித்திய பிதாவின் புத்திரராகவும், யேசுக்கிறீஸ்துநாதருடைய திருச் சரீரத்தோடும் ஆத்துமத்தோடும் நம்முடைய சரீரமும் ஆத்துமமும் ஒன்றிப்பதால், இஸ்பிரீத்துசாந்துவுக்கு ஆலயமாகவும் இருக்கும்படி, யேசுக்கிறீஸ்துநாதரால் பேறுபெற்றவர்களாகி, அவருடைய ஊழியத்துக்கு நம்மை முழுதும் வலிய மனதோடு ஒப்புக்கொடுத்திருக்கிறதினால் இனி நாம் ஒருபோதும் பாவத்துக்குடன்படாமல், யேசுநாதருடைய உயிர்த்த சீவியத்துக்கு ஒப்பாய் நடக்கக்கடவோம். ஏனெனில் பாவத்தின் கூலி மரணமும், அதின் முடிவு நித்திய நரகாக்கினையும், ஞான சீவியத்தின் முடிவு சததமான சீவியமும், அதின் சம்பாவனை நித்திய மோட்சமும் என்று போதிக்கிறார்.

2-4. முதல் வசனத்தில் நியாயப்பிரமாணம் உயிரோடிருக்கிறமட்டுந்தான் மனுஷனை ஆளுகிறதென்று அர்த்தங்கொள்ளலாம். மனுஷன் உயிரோடிருக்கிறமட்டும் நியாயப்பிரமாணம் அவனை ஆளுகிறதென்று சிலர் அர்த்தங்கொள்ளுகிறார்கள். ஆனால் அது பிசகு. ஏனெனில் 2-ம் வசனத்திலே அர்ச். சின்னப்பர் நியாயப்பிரமாணத்தைப் புருஷனாகவும், அதற்குக் கீழ்ப்பட்டவர்களை மனைவியாகவும் உவமித்து, புருஷன் செத்தபோது மனைவி விடுதலையாக்கப்பட்டிருக்கிறாளென்று சொல்லுகிறதுபோல, நியாயப்பிரமாணமுங் கிறீஸ்துநாதருடைய மரணத்தைக்கொண்டு சாகடிக்கப்பட்டு, அதற்குக் கீழ்ப்பட்டிருந்த யூதர்கள் அவரைப்பற்றிக்கொண்ட விசுவாசத்தினால் அவருக்குச் சொந்தமாகி, நியாயப்பிரமாணத்தினின்று விடுதலையாக்கப்பட்டிருக்கிறார்கள் என்று தெளிவாய்க் காட்டுகிறார். ஆகிலும் இந்த

3. ஆகையால் புருஷன் உயிரோடிருக்கையிலே, அவள் வேறொரு புருஷனோடிருந்தால், விபசாரி என்னப்படுவாள். அவனுடைய புருஷன் மரித்தால், புருஷனைப்பற்றிய பிரமாணத்தினின்று அவள் விடுதலையானபடியால், வேறொரு புருஷனோடிருந்தாலும் விபசாரியல்ல.

4. அத்தன்மையே, என் சகோதரரே, நீங்களும் கிறிஸ்துநாதருடையசரீரத்தின் மூலமாய் நியாயப்பிரமாணத்துக்கு மரித்தவர்களாயிருக்கிறீர்கள். ஆனபடியினாலே சர்வேசுரனுக்குக் கனி கொடுக்கும்படி மரித்தவர்களிடத்தினின்று உயிர்த்தவராகிய வேறொரு ஆளுக்குச் சொந்தமாயிருக்கிறீர்கள்.

5. எவ்வாறெனில், நாம் மாம்சத்துக்காளாயிருந்த காலத்தில் நியாயப்பிரமாணத்தினாலே உண்டான ஆசாபாசங்கள் சாவுக்கேதுவான கனிகளைக் கொடுக்கத்தக்கதாக, நம்முடைய அவயவங்களில் முயன்று அலுவலாயிருந்தது.

6. இப்பொழுதோவெனில், நம்மைக் கட்டியிருந்த சாவுக்குரிய பிரமாணத்தினின்று விடுதலையாக்கப்பட்டிருக்கிறோம். ஆனதால் எழுத்தைப்பார்த்து நடந்த பழைய முறைமைப்படியல்ல, உட்கருத்தைப் பார்க்கிற புதிய முறைமைப்படி (சுவாமிக்கு) நாம் பணிபுரியக்கடவோம்.

7. ஆதலால் என்னசொல்லுவோம்? நியாயப்பிரமாணம் பாவமா? இல்லை, இல்லை. ஆனாலும், நியாயப்பிரமாணத்தின் வழியாயன்றி, நான் பாவத்தை அறியேனே. எப்படியெனில்: இச்சைப்படாதே என்று நியாயப்பிரமாணம் சொன்னதினாலேயொழிய நான் இச்சை என்பதை அறியாதிருந்தேன். (யாத். 20-17; உபா. 5-21.)

8. கற்பனை வழியாய்ப் பாவத்துக்குத் தருணம் வாய்த்தபடியால், பாவம் என்னிடத்தில் எவ்வித இச்சையையும் மூட்டிவிட்டது. நியாயப்பிரமாணமில்லாதபோது, பாவம் செத்துக்கிடந்தது.

9. ஒரு காலத்திலே நான் நியாயப்பிரமாணமில்லாதவனாக உயிர்வாழ்ந்திருந்தேன். கற்பனை வந்தபோதோ, பாவத்துக்குத் திரும்ப உயிருண்டாயிற்று.

10. அதினாலே நான் செத்தவனானேன். உயிருக்கு ஏதுவான கற்பனையே எனக்கு மரணத்துக்கு ஏதுவானதாகக் காணப்பட்டது.

11. ஏனெனில் கற்பனையின் வழியாய்ப் பாவத்துக்குச் சமயம் வாய்க்கவே, பாவமானது என்னை வஞ்சித்திழுத்துக் கற்பனை வழியாய் என்னைக் கொன்றது.

12. ஆகையால் நியாயப்பிரமாணம் பரிசுத்தமுள்ளதுதான்; கற்பனையும் பரிசுத்தம், நீதி, நன்மையுமுள்ளதுதான். (1. திமோ. 1-8.)

13. இப்படியானால், நன்மையானது எனக்கு மரணமாயிற்றோ? இல்லை, இல்லை. ஆனால் பாவமானது பாவமென்று தோன்றும்படி நன்மையின் வழியாக எனக்கு மரணத்தை வருவித்தது. இவ்விதமாய்ப் பாவமானது கற்பனை வழியாய் மிதமிஞ்சின பாவவாளியானது.

14. நியாயப்பிரமாணம் ஞானமுள்ளதாயிருக்கிறதென்று அறிந்திருக்கிறோம். நானோ மாம்ச சம்பந்தனாய்ப் பாவத்துக்கு அடிமையாக விற்கப்பட்டிருக்கிறேன்.

---

நாலாம் வசனத்தில் நீங்களும் நியாயப்பிரமாணத்துக்கு மரித்தவர்களாயிருக்கிறீர்களென்று சொல்லுகிறார்; அதுவும் உண்மையாயிருக்கிறது. விசுவாசத்தினாலே யேசுநாதரைப் பற்றிக்கொண்டவர்களுக்குப் பழைய ஏற்பாட்டின் பிரமாணம் செத்ததாயிருக்கிறது. அவர்களும் யேசுநாதரிடத்தில் பெற்றுக்கொண்ட புது உயிரால் நியாயப்பிரமாணத்துக்கு மரித்தவர்களாயிருக்கிறார்களென்பது பயனாம்.

3. வேறே புருஷனோடிருந்தால் = வேறு புருஷனை விவாகஞ்செய்தால் என்றர்த்தமாம்.

15. நான் செய்கிறது நான் கருதுகிறதல்ல. ஏனெனில் நான் விரும்புகிற நன்மையுண்டே, அதை நான் செய்கிறதில்லை; ஆனால் நான் பகைக்கிற தின்மை இருக்கிறதே, அதையல்லோ நான் செய்கிறேன்.

16. இப்படி நான் வேண்டாமென்கிறதைச் செய்தால், நியாயப்பிரமாணம் நல்லதென்று நான் ஒத்துக்கொள்ளுகிறேனல்லோ?

17. ஆகையால் இப்போது நான் அல்ல, எனக்குள்ளே வாசம்பண்ணுகிற பாவமே அதைச் செய்கின்றது.

18. என்னிடத்தில் அதாவது என் மாம்சத்திலே நன்மையானது வாசம் பண்ணுகிறதில்லையென்று அறிந்திருக்கிறேன். அதெப்படியென்றால் நன்மையை விரும்ப என்னால் ஆகின்றது; அதைச்செய்து முடிக்கவோ என்னால் ஏலாதிருக்கின்றது.

19. ஏனெனில், நான் வேண்டுமென்கிற நன்மையைச் செய்யாமல், நான் வேண்டாமென்கிற தின்மையைச்செய்கிறேன்.

20. ஆனால் நான் வேண்டாமென்கிறதைச் செய்கிறேனாகில், அதை நானல்ல, என்னிடத்தில் குடியிருக்கிற பாவமே அதைச் செய்கிறது.

21. ஆதலால் நன்மையைச் செய்ய விரும்புகிற என்னிடத்திலே தின்மையுங்கூடக் குடியிருக்கிறதினாலே ஒரு எதிர்ச்சட்டத்தைக் காண்கிறேன்.

22. எப்படியெனில் உள்ளரங்க மனிதனைப் பார்த்தால், நான் தேவகட்டளையின்மேல் பிரியப்படுகிறவனாய் இருக்கிறேன்.

23. ஆனால் என் மனதிலிருக்கிற இந்தத் (தேவ) சட்டத்தோடுபோராடுகிற வேறொரு சட்டத்தை என் அவயவங்களில் காண்கிறேன். அது என் அவயவங்களிலிருக்கிற இந்தப் பாவச் சட்டத்துக்கு என்னை அடிமையாக்குகிறது.

24. நிர்ப்பாக்கியப்பட்ட மனிதன் நானே! என்னை யார் இப்படிப்பட்ட பாழ்ஞ் சரீரத்தினின்று விடுவிப்பார்?

25. தேவ வரப்பிரசாதந்தான் நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர்பேராலே (என்னை விடுவிக்கும்). ஆகையால் நானே என் மனதினால் தேவப் பிரமாணத்துக்கும், என் மாம்சத்தினால் பாவப் பிரமாணத்துக்கும் ஊழியம் பண்ணுகிறேன். (கலா. 5-7.)

25. இந்த அதிகாரத்திலே அர்ச். சின்னப்பர் ஞானஸ்நானம் பெற்ற யூதர்களைப் பார்த்து: ஞானஸ்நானத்தினாலே யேசுநாதரோடுகூட மரித்து, அவரோடு நித்திய சீவியத்துக்கு உயிர்த்திருக்கிறீர்களென்றும், ஆகையால் பழைய ஏற்பாட்டின் பிரமாணத்தினின்று விடுதலையாக்கப்பட்டிருக்கிறீர்களென்றும், அந்தப் பிரமாணம் பரிசுத்தமுள்ளதுமாய், தேவ கிருபையால் கொடுக்கப்பட்டதுமாயிருந்தாலும், பாவத்தைக் காண்பித்து விலக்கினதினால், பாவம் அதிகரிக்கும்படிக்கு ஏதுவாயிருந்ததொழிய பாவத்தைத் தவிர்த்தொழிக்க உதவவில்லையென்றும், அதினாலே நீங்கள் அதிக குற்றவாளிகளாய்ப் போகும்படிக்கு வழியாயிருந்ததென்றுங் காண்பிக்கிறார். அதின்பிறகு விசுவாசிகள் யேசுக்கிறீஸ்துநாதருடைய பேறுபலன்களினாலே நீதிமான்களாக்கப்பட்டுப் புதுமனிதர்களாய் அவரோடுகூட ஞான சீவியத்துக்கு உயிர்த்திருந்தாலும், இன்னும் பழைய மனுஷனுகிய கீழாங்கிஷம் அவர்களிடத்தில் சீவிக்கிறதினாலே, இஷ்டப்பிரசாதத்தால் சீவிக்கிற புதுமனுஷனும், ஆசாபாசத்தினாலே உயிரோடிருக்கிற பழைய மனுஷனும் அவர்களிடம் வாசம்பண்ணி, புது மனுஷன் சர்வேசுரனுக்கு ஏற்றவைகளையும், பழைய மனுஷன் மாம்சத்துக்கேற்றவைகளையும் விரும்புவதினால் இருவரும் ஓயாமல் போராடுகிறார்களென்றும் இந்த யுத்தத்தில் புது மனுஷன் தோர்வையடையாதபடிக்கு வரப்பிரசாதம் நம்மைக் காப்பாற்றிவருகிறதென்றும் போதிக்கிறார். ஆகையால் விழித்திருத்தல், போராடல், ஜெயங்கொள்ளல் என்னும் மூவித கடமைகள்

## 8-ம். அதிகாரம்.

*மாம்ச வழியைவிட்டு, ஞானவழியாய் நடக்கிறவர்கள் யேசுக்கிறீஸ்துநாதராலே நீதிமான்களாக்கப்படுகிறார்கள் என்பது.*

1. ஆதலால் இப்போது கிறீஸ்து யேசுநாதருக்கு உட்பட்டவர்களாயிருந்து, மாம்சத்தின்படி நடவாதவர்களுக்கு ஆக்கினைத்தீர்ப்பு யாதேனுமில்லை.

2. ஏனெனில் கிறீஸ்து யேசுநாதரிடத்திலுள்ள ஞான சீவியத்துக்குரிய பிரமாணமானது பாவத்துக்கும் மரணத்துக்குமுரிய பிரமாணத்தினின்று என்னை விடுதலையாக்கினது.

3. எப்படியெனில், மாம்சத்தினால் பலவீனமடைந்த நியாயப் பிரமாணத்தினாலே கூடாதிருந்ததை முடிக்கும்படி சர்வேசுரன் தமது குமாரனைப் பாவ மாம்சத்தின் சாயலாக அனுப்பி, பாவத்தினிமித்தம் மாம்சத்தில் பாவத்தை ஆக்கினைக்குள்ளாக்கினார். (அப். 3-38; எபி. 9-15.)

4. இவ்விதமாய் மாம்சத்தின்படி நடவாமல் ஞானத்தின்படி நடக்கிற நம்மிடத்தில் நியாயப் பிரமாணத்தின் நீதி நிறைவேறும்படி அவ்வண்ணஞ் செய்தார்.

5. மாம்சத்தின்படி நடக்கிறவர்களுக்கு மாம்சத்துக்குரியவைகள் தான் சுவையாயிருக்கின்றது; ஞானத்தின்படி நடக்கிறவர்களுக்கு ஞானத்துக்குரியவைகள் சுவையாயிருக்கின்றது.

6. மாம்ச சிந்தை மரணமாம். ஞானத்தின் சிந்தையோ சீவியமும், சமாதானமுமாம். (கலாத். 6-8.)

7. எப்படியெனில், மாம்சத்துக்குரிய புத்தி சர்வேசுரனுக்குச் சத்துருவாயிருக்கின்றது. ஏனெனில் அது சர்வேசுரனுடைய கற்பனைகளுக்கு அடங்குகிறதுமில்லை, அடங்கவும் அதால் கூடாது. (1 கொ. 2-14.)

---

கிறீஸ்துவன்மேல் சுமந்திருக்கிறதென்று காட்டுகிறார். 1-வது. கிறீஸ்துவன் அயராமல் விழித்திருக்கவேண்டும். ஏனெனில் அவனைக் கெடுக்கத்தேடுகிற ஆசாபாசமென்னும் பழைய மனிதனாகிய சத்துரு அவனுக்குள் குடிகொண்டிருக்கிறது.

2-வது. கிறீஸ்துவன் பழைய மனிதனாகிய அந்த ஆசாபாசத்தோடு மரணபரியந்தம் இடைவிடாது போராடவேண்டும். ஏனெனில் அந்தச் சத்துரு அவனை ஓயாமல் எதிர்த்து அவனைத் தன் இச்சைகளுக்கு இணங்கச்செய்ய வழிதேடிக்கொண்டு வருகிறது.

3-வது. கிறீஸ்துவன் அவசியமாய் வெற்றியடையவேண்டும். ஏனெனில் இப்படிப்பட்ட போராட்டத்தில் ஜெயமாவது, தோல்வியாவது, இரண்டிலொன்று சித்திக்கும். ஜெயங்கொண்டால் நித்திய சீவியத்தையடைகிறான். தோல்விப்பட்டால், நித்திய நரக நிர்ப்பந்தங்களுக்குள்ளாகிறான். ஆகையால் கிறீஸ்துவனே, இந்த நீடிய போராட்டத்தில் நீ அவதைரியப்பட்டு, மனஞ் சோர்ந்து போகாதே. உன்னால் கூடாதது யேசுநாதருடைய வரப்பிரசாதத்தால் கூடுமென்றும், இந்த வரப்பிரசாதம் நம்மை எவ்வளவோ ஆச்சரியமானவிதமாய் ஆண்டு, நம்மைப் பலப்படுத்தி, எவ்வித துன்பங்களிலும் நம்மைக் காப்பாற்றி நம்முடைய தலைவரோடு நாம் ஒன்றித்திருக்கச் செய்கிறதென்றும் இதற்கடுத்த எட்டாம் அதிகாரத்தில் தெளிவிக்கிறார்.

1. இவ்வாக்கியத்தின் அர்த்தமாவது: பழைய ஏற்பாட்டின் பிரமாணம் பரிசுத்தமுள்ளதாயிருந்தாலும், மாம்ச இச்சைகளுக்கு இன்னம் அடிமைப்பட்டவர்களாயிருந்த யூதர்களுக்கு அது கொடுக்கப்பட்டதினாலே, அவர்களுடைய மாம்சப் பலவீனத்தினாலே அந்தப் பிரமாணமும் பலவீனப்பட்டு, அதின் நீதியை அவர்கள் நிறைவேற்றுவதற்கு அவர்களுக்குப் பலன் கொடுக்கச் சத்துவமில்லாதிருந்தது. ஆகையால் சர்வேசுரன் தம்முடைய குமாரனைப் பாவ மாம்சத்தின் சாயலாய் அனுப்பி, அவர் திரு மாம்சத்திலே பாவத்தை நடுத்தீர்த்துத் தண்டித்து, நிர்மூலமாக்கினதினால், மாம்ச இச்சைகளுக்கு அடிமைப்பட்டிருந்த பழைய மனிதனை உரிந்துபோட்டு, இஸ்பிரீத்துசாந்துவினாலாகிய புது மனுஷனைத் தரித்துக்கொண்டிருக்கிற நமக்குச் சர்வேசுரனுடைய கற்பனைகளை அநுசரிப்பதற்குவேண்டிய திராணி உண்டாயிருக்கிறதென்று அர்த்தமாம்.

8. ஆகையால் மாம்சத்துக்குட்பட்டவர்கள் சர்வேசுரனுக்குப் பிரியப்படக்கூடாது.

9. நீங்களோவெனில் மாம்சத்துக்குட்படாமல், ஞானத்துக்குட்பட்டிருக்கிறீர்கள். ஆயினும் அதற்குச் சர்வேசுரனுடைய இஸ்பிரீத்து உங்களிடத்தில் வாசமாயிருப்பது அவசியம். எவனிடத்தில் கிறீஸ்துநாதருடைய இஸ்பிரீத்து இல்லையோ, அவன் அவருடையவன் அல்ல.

10. கிறீஸ்துநாதர் உங்கள் உள்ளத்திலிருப்பாராகில், உங்கள் சரீரம் பாவத்தின் நிமித்தம் மரித்தது மெய்யானாலும், உங்கள் ஆத்துமம் நீதியுள்ளதாக்கப்பட்டதினாலே உயிர் வாழ்ந்திருக்கும். (உரோ. 6-11.)

11. அல்லாமலும் யேசுநாதரை மரித்தோரிலிருந்து உயிர்ப்பித்தவருடைய இஸ்பிரீத்து உங்களிடத்தில் வாசம்பண்ணுமேயாகில், யேசுக்கிறீஸ்துநாதரை மரித்தோரினின்று உயிர்ப்பித்தவர் உங்களிடத்தில் வாசமாயிருக்கிற தம்முடைய இஸ்பிரீத்துவின் நிமித்தம் மரணத்துக்கு ஏதுவான உங்கள் சரீரங்களையும் உயிர்ப்பிப்பார். (அப். 3-15; 1. கொ. 6-14.)

12. ஆகையால் சகோதரரே, நாம் மாம்சத்துக்கு ஏற்கையாகச் சீவிக்கும்படி நாம் மாம்சத்துக்குக் கடனாளிகள் அல்லவே.

13. ஏனெனில் மாம்சத்துக்கு ஏற்கையாகச் சீவிப்பீர்களேயாகில், சாவீர்கள். ஆனால் ஞானத்தினாலே மாம்ச செய்கைகளைச் சாகடிப்பீர்களேயாகில் உயிர்வாழ்வீர்கள்.

14. எப்படியெனில், எவர்கள் சர்வேசுரனுடைய ஞானத்தால் நடத்தப் படுகிறார்களோ, அவர்களே சர்வேசுரனுடைய பிள்ளைகள்.

15. அப்படியே நீங்கள் திரும்பவும் பயத்தோடுகூடிய அடிமைத்தனத்தின் புத்தியைப் பெறாமல், "அப்பா பிதாவே, என்று கூப்பிடுகிற சுவீகாரப் பிள்ளைகளுக்குரிய புத்தியைப் பெற்றுக்கொண்டீர்கள்." (2. தீமோ. 1-7.)

16. நாம் சர்வேசுரனுடைய பிள்ளைகளாயிருக்கிறோம் என்று இஸ்பிரீத்து சாந்துவானவரே நம்முடைய புத்திக்கு அத்தாட்சி கொடுக்கிறார்.

17. அப்படியே நாம் பிள்ளைகளென்றால், சுதந்தரக்காரராகவும் இருக்கிறோம். அதாவது: சர்வேசுரனுடைய சுதந்தரக்காரரும், கிறீஸ்துநாதருக்கு உடன் சுதந்தரக்காரராகவும் இருக்கிறோம். ஆயினும் அவரோடுகூட மகிமையடையும்படிக்கு அவரோடுகூடப் பாடுபட்டால்தான் அப்படி இருப்போம் (2. தீமோ. 2-11.)

18. ஆகிலும் இக்காலத்தின் துன்பதுரிதங்கள் இனி நம்மிடத்தில் வெளிப்படப்போகிற மகிமைக்குச் சரிசமையானதல்ல என்று எண்ணுகிறேன்.

19. ஏனெனில் சர்வேசுரனுடைய பிள்ளைகள் வெளிப்படுங் காட்சியைக் காணப் படைப்புகளெல்லாம் ஆவலோடு காத்துக்கொண்டிருக்கின்றன.

20. எப்படியெனில், சிருஷ்டிப்பு தன் சுய இஷ்டத்தினாலே அல்ல, தனக்கு ஒரு நம்பிக்கையைக் கொடுத்து, மாய்கைக்குக் கீழ்ப்படுத்தினவரைப்பற்றி, அந்த மாய்கைக்குக் கீழ்ப்பட்டிருக்கிறது.

21. ஏனெனில் சர்வேசுரனுடைய பிள்ளைகளின் மகிமைச் சுயாதீனத்துக்கு உள்ளாகும்படி சிருஷ்டியானது அழிவின் அடிமைத்தனத்தினின்று விடுதலையாக்கப் படுமென்கிற நம்பிக்கை அதுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

22. அது வரைக்கும் எல்லாச் சிருஷ்டிப்புகளும் விம்மிப் பிரசவ வேதனைப் படுகிறதென்று அறிந்திருக்கிறோம்.

23. அவைகள் மாத்திரமல்ல; இஸ்பிரீத்துவின் முந்தின பலனைப்பெற்றவர்களாகிய நாமுங்கூட நம்முடைய மீட்பாகிய தேவபுத்திர சுவீகாரத்துக்குக் காத்திருந்து, நமக்குள் பிரலாபித்துப் பெருமூச்சுவிடுகிறோம். (எபே. 1-14.)

24. ஏனெனில் நம்பிக்கையினால் நாம் இரட்சிக்கப்பட்டிருக்கிறோம். ஆனால் காணப்படுகிற நம்பிக்கை நம்பிக்கையல்ல; ஒருவன் தான் காண்கிறதை நம்புவானேன்?

25. ஆனால் நாம் காணாததை நம்பினால், அதுக்கும் பொறுமையோடே காத்துக்கொண்டிருக்கிறோம்.

26. அவ்வண்ணமே, இஸ்பிரீத்துவானவரும் நமதுபலவீனத்தைத் தாங்கிக் கொண்டுவருகிறார். எவ்வாறெனில் நாம் தக்கபடி மன்றாடிக் கேட்கிறதென்னவென்று அறியாமலிருக்கிறோம். ஆனால் இஸ்பிரீத்துவானவரே நமக்காக வாக்குக்கெட்டாத பெருமூச்சுகளோடு பிரார்த்திக்கிறார்.

27. இருதயங்களைப் பரிசோதிக்கிறவரோ இஸ்பிரீத்துவானவர் விரும்புகிறதை அறிந்திருக்கிறார். ஏனெனில் இவர் சர்வேசுரனுடைய சித்தத்துக்கு இசைவாக அர்ச்சிக்கப்பட்டவர்களுக்காக மன்றாடிக் கேட்கிறார்.

28. அன்றியும் சர்வேசுரனைச் சிநேகிக்கிறவர்களுக்குச் சகலமும் நன்மைக் கேதுவாக உதவுகிறதென்று அறிந்திருக்கிறோம். அவர்கள் (தேவ) தீர்மானத்தின்படி அர்ச்சியசிஷ்டவர்களாக அழைக்கப்பட்டவர்களாமே.

29. ஏனெனில் தம்முடைய குமாரன் அநேக சகோதரருக்குள்ளே தலைச்சனாயிருக்கும்படி சர்வேசுரன் தாம் எவர்களை முன்னறிந்தாரோ, அவர்களைத் தமது குமாரனுடைய சாயலுக்கு ஒத்தவர்களாவதற்கு முன்னியமகம் பண்ணினார்.

30. எவர்களை அவர் முன்னியமகம் பண்ணியிருக்கிறாரோ, அவர்களையே அழைத்தும் இருக்கிறார். எவர்களை அழைத்திருக்கிறாரோ, அவர்களை நீதிமான்களாக்கியிருக்கிறார். எவர்களை நீதிமான்களாக்கியிருக்கிறாரோ, அவர்களை மகிமைப் படுத்தியிருக்கிறார்.

31. இவைகளைப்பற்றி நாம் என்ன சொல்லுவோம்? சர்வேசுரன் நம்முடைய பாரிசமாயிருந்தால் நமக்கு விரோதமாயிருப்பவன் யார்?

32. தமது சொந்தக் குமாரன்மேல் முதலாய் இரக்கமில்லாமல், நம்மெல்லாருக்காகவும் அவரை ஒப்புக்கொடுத்தவர் மற்றெல்லாவற்றையும் அவரோடு நமக்குத் தானம் பண்ணாதிருப்பதெப்படி? (அரு. 3-16.)

33. சர்வேசுரனாலே தெரிந்துகொள்ளப்பட்டவர்கள் மேல் குற்றஞ்சாட்டுகிறவன் யார்? அவர்களை நீதிமான்களாக்குவது சர்வேசுரனல்லோ?

34. அவர்களுக்கு ஆக்கினைத்தீர்ப்பிடுகிறவன் யார்? கிறீஸ்துநாதரோ? அவரே (நமக்காக) மரித்தவர். பின்னும் அவரே உயிர்த்தெழுந்தவர்; அவரே சர்வேசுரனுடைய வலதுபாரிசத்திலிருக்கிறவர்; நமக்காகப் பரிந்துபேசுகிறவரும் அவரே.

35. அப்படியிருக்கக் கிறீஸ்துநாதருடைய சிநேகத்தைவிட்டு நம்மைப் பிரிக்கப்போகிறது யார்? துன்பமோ? நெருக்கிடையோ? நிர்வாணமோ? ஆபத்தோ? கலாபனையோ? பயமோ?

36. அப்படியே வேதத்திலும்: உமது நிமித்தம் நாள்தோறும் சாகடிக்கப்படுகிறோம், கொல்லப்படும் ஆடுகளுக்கு ஒப்பாய் எண்ணப் பட்டிருக்கிறோம் என்று சொல்லியிருக்கிறதே. (சங். 43-22.)

37. ஆயினும் இவைகளெல்லாவற்றிலும் நம்மைச் சிநேகித்தவரைப்பற்றி நாம் வெற்றிகொள்ளுகிறவர்களாயிருக்கிறோம்.

38. ஏனெனில் சாவானாலும், ஜீவனானாலும், தேவதூதரானாலும் சத்துவகரானாலும், நிகழ்காரியங்களானாலும், வருங்காரியங்களானாலும், பராக்கிரமமானாலும்,

39. உயர்வானாலும், தாழ்வானாலும், வேறெந்தச் சிருஷ்டியானாலும் நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர்மேல் நமக்குள்ள தேவசிநேகத்தைவிட்டு நம்மை விலக்கமுடியாதென்று எனக்கு நிச்சயமாயிருக்கிறது.

## 9-ம். அதிகாரம்.

சின்னப்பர் யூதர்களைப்பற்றி விசாரப்பட்டது.

1. கிறீஸ்துநாதரிடத்தில் உண்மையைச் சொல்லுகிறேன். நான் சொல்லுகிறது பொய்யல்ல என்று இஸ்பிரீத்துசாந்துவினிடத்தில் என் நெஞ்சே எனக்குச் சாட்சியாயிருக்கிறது.

2. அதென்னவென்றால், எனக்கு மிகுந்த துக்கமும் என்னிருதயத்துக்கு இடையறாத கிலேசமும் உண்டாயிருக்கின்றது

3. மாம்ச உறவின்படி எனக்குப் பந்துக்களாகிய என் சகோதரருக்காக நானே கிறீஸ்துநாதரைவிட்டுச் சபிக்கப்பட்டவனாயிருக்க விரும்புவேனே.

4. அவர்கள் இஸ்ராயேலராயிருக்கிறார்கள். புத்திர சுவீகாரமும், மகிமையும், உடன்படிக்கையும், நியாயப் பிரமாணமும், தேவாராதனையும், வாக்குத்தத்தமும் அவர்களுக்கு உடையவைகள்.

5. பிதாப்பிதாக்களும அவர்களுடைய (பிதாக்களாமே). கிறீஸ்துநாதரும் மாம்ச ஐக்கியத்தின்படி அவர்களிடத்திலிருந்து வந்தவர். அவரோ எல்லாத்துக்கும் மேலாக என்றென்றைக்கும் ஸ்துதிக்கப்பட்டிருக்கிற கடவுள் ஆமென்.

6. ஆயினும் தேவ வாக்கியம் வழுவிப்போனதாக எண்ணத்தக்கதல்ல. ஏனெனில் இஸ்ராயேலரிடமாய்ப்பிறந்தவர்கள் எல்லாரும் இஸ்ராயேலரும் அல்ல;

7. அபிரகாமுடைய சந்ததியாயிருக்கிறவர்களும் எல்லாரும் பிள்ளைகளல்லவே. ஏனெனில் ஈசாக்கினின்றே உனக்குச் சந்ததி அழைக்கப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. (ஆதி. 21-12.)

8. அதாவது: மாம்சத்தின்படி பிள்ளைகளானவர்கள் சர்வேசுரனுடைய பிள்ளைகள் அல்ல. வாக்குத்தத்தத்தின்படி பிள்ளைகளானவர்களே அவருடைய சந்ததியென்று எண்ணப்படுகிறார்கள். (கலா. 4-28.)

9. அந்த வாக்குத்தத்தத்தின் வார்த்தை என்னவெனில்: நான் மறுபடி இந்தக் காலத்திலேயே வருவேன்; அப்போது சாராளுக்கு ஒரு புத்திரன் இருப்பான் என்பதே. (ஆதி. 18-10.)

10. அவள்மட்டும்அல்லவே; இரபேக்காளும் நமதுபிதாவாகிய ஈசாக்கென்பவரால் ஒரே சமயத்தில் (இரு குழந்தைகளைக்) கர்ப்பந்தரித்தபோது, (ஆதி. 25-24.)

11. குழந்தைகள் இன்னும் பிறவாமலும், யாதொரு நல்வினை, தீவினை செய்யாமலும் இருக்கையில்,

12. சர்வேசுரனுடைய தீர்மானம் கிரியைகளின்படியல்ல, அழைக்கிறவரால் அவர் தெரிந்துகொள்ளுதலின் படியே நிலைநிற்கும்பொருட்டு,

13. மூத்தவன் இளையவனுக்கு ஊழியஞ்செய்வான் என்று அவளுக்குச் சொல்லப்பட்டது. அப்படியே யாக்கோபைச் சிநேகித்து ஏசாவை வெறுத்தேன் என்று எழுதியிருக்கிறது. (ஆதி. 25-23; மலக். 1-2.).

14. ஆகையால் நாம் என்ன சொல்லுவோம? சர்வேசுரனிடத்தில் அநீதம் உண்டோ? ஒருபோதுமில்லை.

15. அவரோ மோயீசனை நோக்கி: எவன்மேல் இரக்கமாயிருக்கச் சித்தமோ, அவன்மேல் இரக்கமாயிருப்பேன்; எவனுக்கு இரங்குவேனே அவனுக்கு இரக்கத்தைக் காண்பிப்பேன் என்றார். (யாத். 33-19.)

16. ஆகையால் விரும்புகிறவனாலுமல்ல, ஓடுகிறவனாலுமல்ல; மனதிரங்குகிற சர்வேசுரனாலே காரியமாகின்றது.

17. அப்படியே வேதவாக்கியமும் பரவோனை நோக்கி: என் வல்லமையை உன்னிடத்தில் காண்பிக்கவும், என்னுடைய நாமம் பூமியெங்கும் அறிவிக்கப்படவும் வேண்டுமென்ற நிமித்தமாகவே உன்னை உயர்த்தினேன் என்று சொல்லியிருக்கிறது. (யாத். 9-16.)

18. ஆகையால் அவர் தமது இஷ்டம்போல் எவன்மேலும் இரங்குகிறார்; தமது இஷ்டம்போல் எவனையும் மனமிறுகிப்போகவிடுகிறார்.

19. அப்படியானால், அவர் இன்னமும் முறைப்படுவதேன்? அவருடைய சித்தத்துக்கு எதிர்த்துநிற்கிறவன் யார் என்று எனக்குச் சொல்லுவாயாக்கும்?

20. ஓ மனிதனே, சர்வேசுரனுக்கு எதிர்த்துச்சொல்ல நீ யார்? உருவாக்கப்பட்ட வஸ்து தன்னை உருவாக்கினவனைப் பார்த்து: நீ ஏன் என்னை இப்படி உண்டாக்கினாய் என்று சொல்லுமோ? (ஞானு. 15-7.)

21. குயவன் திரட்டிவைத்திருக்கிற களிமண்ணாலே மேன்மையான காரியத்துக்கு ஒரு பாத்திரத்தையும், ஈனமான காரியத்துக்கு ஒரு பாத்திரத்தையும் செய்ய அவனுக்கு அதிகாரமில்லையோ?

22. சர்வேசுரன் தமது கோபத்தைக்காண்பிக்கவும், தமது வல்லமையை விளங்கப்பண்ணவுஞ் சித்தமாகி,

23. தாம் மகிமைக்காக எத்தனம் பண்ணின கிருபாபாத்திரங்களின்மேல் தமது மகிமைப்பிரதாப திரவியத்தைக் காண்பிக்கும்பொருட்டு, கேட்டுக்கேதுவாக்கப்பட்ட கோபாக்கினைப் பாத்திரங்களை மிகுந்த பொறுமையோடு சகித்துவந்திருந்தால், அதினாலே என்ன?

24. (கிருபாபாத்திரங்களாகிய) நம்மை அவர் யூதஜாதியாரிடத்திலிருந்து மாத்திரமல்ல, புறஜாதியாரிடத்திலிருந்தும் அழைத்திருக்கிறார்.

25. அப்படியே அவர் ஓசேயின் தீர்க்கதரிசனத்தில் சொல்லியிருக்கிறதாவது: என் ஜனமாயிராததை என் ஜனமென்றும், எனக்குப்பிரியமில்லாதவர்களைப் பிரியமுள்ளவர்களென்றும், இரக்கமடையாதவர்களை இரக்கமடைந்தவர்கள் என்றும் அழைப்பேன். (ஓசே. 2-24; 1. இரா. 2-10.)

26. நீங்கள் என் ஜனங்கள் அல்ல என்று அவர்களுக்குச் சொல்லப்பட்ட அந்த இடத்திலேயே அவர்கள் சீவிய கடவுளின் பிள்ளைகள் என்னப்படுவார்கள் என்கிறார். (ஓசே. 1-10.)

27. இசையாஸ் என்பவரும் இஸ்ராயேலைக்குறித்து அபயமிட்டுச் சொல்லுகிறதாவது: இஸ்ராயேல் புத்திரரின் தொகை சமுத்திரத்தின் மணலத்தனையானாலும், மீதியாயிருக்கிறவர்கள்தான் இரட்சிக்கப்படுவார்கள். (இசை. 10-22.)

28. ஏனெனில் அவர் தம்முடைய வார்த்தையை நிறைவேற்றி நீதியோடு தீர்ப்பார். கர்த்தர் பூமியின்மேல் துரிதமாய்த் தமது வார்த்தையை நிறைவேற்றுவாரென்று சொல்லுகிருர். (இசை. 10-12.)

29. மேலும் இசையாஸ் முன்னமே சொன்னதுபோல, சேனைகளின் கர்த்தர் நமக்கு ஓர் வித்தைக் காப்பாற்றி வைக்காதிருந்தால், நாம் சோதோமைப்போலாகி, கொமோராவுக்கு ஒப்பாயிருப்போம். (இசை. 1-9.)

30. அப்படியிருக்க, என்னசொல்லுவோம்? நீதியைத் தேடிச்செல்லாத புற ஜாதியார் நீதியைக் கண்டடைந்தார்கள். இது விசுவாசத்தில் உற்பத்தியாகிற நீதியே.

31. இஸ்ராயேலரோ நீதியின் பிரமாணத்தைப் பின்தொடர்ந்தும், நீதியின் பிரமாணத்தில் வந்துசேரவில்லை.

32. ஏன் அப்படி? அவர்கள் விசுவாசத்தினுலல்ல, கிரியைகளினுலே நீதிமான்களாகலாமென்ருற்போல நடந்ததினுலே, இடறுகல்லில் போய் மோதியுடைந்தார்கள்.

33. இதற்கொத்தவண்ணம்: இதோ, சீயோன்நகரில் இடறுகல்லையும், தவறுதற்கான பாறையையும் போடுகிறேன். அதின்மேல் விசுவாசமாயிருக்கிற எவனும் வெட்கப்பட மாட்டானென்று எழுதப்பட்டிருக்கிறது. (இசை. 8-14; 1. இரா. 4-7.)

## 10-ம். அதிகாரம்.

*நியாயப்பிரமாணத்தினுல் முன்னறிவிக்கப்பட்டவராகிய யேசுநாதரை இரட்சகரென்று அறிந்துகொள்ளாத யூதர்களுக்காக அர்ச். சின்னப்பர் வேண்டிக்கொள்ளுகிருர். நியாயப்பிரமாணத்தின் கிரியைகளாலுண்டாகும் நீதிக்கும், விசுவாசத்தாலாகும் நீதிக்கும் உள்ள வித்தியாசத்தை எடுத்துக் காண்பிக்கிருர்.*

1. சகோதரரே, (இஸ்ராயேலராகிய) அவர்கள் இரட்சணியமடைய வேண்டுமென்பதே என் இருதயத்தின் விருப்பமும், சர்வேசுரனை நோக்கி (நான் செய்யும்) பிரார்த்தனையுமாயிருக்கிறது.

2. சர்வேசுரனைப்பற்றி அவர்களுக்கு வைராக்கியம் உண்டென்று நான் அவர்களைக்குறித்துச் சாட்சியஞ்சொல்லுகிறேன். ஆனுலும் அந்த வைராக்கியம் அறிவுக்கு ஏற்றதல்ல.

3. எப்படியெனில், அவர்கள் தேவ நீதியை அறியாமல், தங்கள் சுயநீதியை ஸ்தாபிக்கத்தேடி, தேவ நீதிக்குத் தங்களைக் கீழ்ப்படுத்தாதிருக்கிருர்கள்.

4. ஏனெனில் விசுவசிக்கிற எவனும் நீதிமானுகும்படிக்குக் கிறீஸ்துநாதர் நியாயப் பிரமாணத்தின் கதியாயிருக்கிருர்.

5. நியாயப்பிரமாணத்தினுலுண்டாகிற நீதியை அநுசரிக்கிறவன் அதினுலே சீவிப்பானென்று மோயீசன் எழுதியிருக்கிருர். (லேவி. 18-5; எசெக். 20-11.)

6. விசுவாசத்தினுலுண்டாகிற நீதியைக்குறித்து அவர் சொல்லுவதாவது: கிறீஸ்துநாதரை இறங்கிவரப்பண்ணுவதற்குப் பரலோகத்துக்கு ஏறினவன் யாரென்றும், (உபா. 30-12.)

7. அல்லது கிறீஸ்துநாதரை மரித்தோரிலிருந்து ஏறிவரப் பண்ணுவதற்குப் பாதாளத்தில் இறங்கினவன் யாரென்றும் உன்னிருதயத்தில் சொல்லாதிருப்பாயாக என்கிருர்.

8. ஆனுல் வேதாகமம் சொல்லுகிறதென்ன? இந்த வார்த்தையானது உனக்குச் சமீபமாய் உன் வாயிலும், உன் இருதயத்திலும் இருக்கிறதென்றல்லோ (சொல்லுகிறது). நாங்கள் பிரசங்கிக்கிற விசுவாசத்தின் வார்த்தை இதுவே. (உபாக. 30-14.

9. எப்படியெனில், ஆண்டவராகிய யேசுநாதரை உன் வாயினால் அறிக்கையிட்டு, சர்வேசுரன் அவரை மரித்தோரிலிருந்து உயிர்ப்பித்தார் என்று உன் இருதயத்தில் விசுவசிப்பாயாகில் இரட்சிக்கப்படுவாய்.

10. எவ்வாறெனில், நீதியை அடைய இருதயத்தால் விசுவசிக்கிறோம். இரட்சணியமடைய வாயால் அறிக்கையிடுகிறோம்.

11. அப்படியே அவரை விசுவசிக்கிற எவனும் வெட்கிப்போகமாட்டான் என்றுவேதவாக்கியஞ் சொல்லுகிறது. (இசை. 28-16.)

12. யூதனென்றும், கிரேக்கனென்றும் வித்தியாசமில்லை. ஏனென்றால் எல்லாருக்கும் ஆண்டவர் ஒருவரே; அவர் தம்மை மன்றாடுகிற யாவர் மட்டிலும் ஐசுவரிய சம்பன்னராயிருக்கிறார்.

13. ஆகையால் ஆண்டவருடைய நாமத்தை மன்றாடுகிற எவனும் இரட்சிக்கப் படுவான். (ஜோயெல். 2-32; அப். 2-21.

14. ஆகிலும் தாங்கள் விசுவசியாதவரை எப்படி மன்றாடுவார்கள்? தாங்கள் கேள்விப்படாதவரை எப்படி விசுவசிப்பார்கள்? பிரசங்கிக்கிறவன் இல்லாவிட்டால், எப்படிக் கேள்விப்படுவார்கள்?

10. நியாயப் பிரமாணத்தின் சடங்குகளை அநுசரிப்பதினால் நீதிமான்களாவோம் என்று யூதர்கள் எண்ணியிருந்தார்கள். ஆனால் அது அவர்களுடைய தப்பிதமான எண்ணமாயிருந்ததொழிய, சர்வேசுரனாலே உண்டாகிற நீதி அவைகளிலடங்கினதல்ல. நியாயப் பிரமாணத்தின் முடிவாகிய யேசுநாதரைப்பற்றும் விசுவாசமாத்திரமே சர்வேசுரனால் உண்டாகிற நீதியைப்பெறுவிக்கிறது. பிரமாணத்தின் கிரியைகளை அநுசரிக்கிறவன் அதினாலே பிழைப்பானென்று மோயீசன் எழுதினது உள்ளது தானே. ஆனால் அதினாலே மனுஷன் நீதிமானாவானென்று மோயீசன் சொல்லுகிறதில்லை. பிரமாணத்தை அநுசரிப்பதினாலே இவ்வுலக நன்மைகள் யூதர்களுக்கு வாக்குத்தத்தம் பண்ணப்பட்டிருந்ததொழிய, அத்தால் நீதிமான்களாவார்களென்று ஒருக்காலும் வாக்குத்தத்தம் பண்ணப்படவில்லை. மூன்றாம் அதிகாரத்தின் கடைசி வியாக்கியானத்தில் விரிவாய்க் காண்பிக்கப்பட்டதுபோல் எக்காலத்திலும் இரட்சகரைப்பற்றும் விசுவாசத்தினாலே மாத்திரம் மனிதன் சர்வேசுரனுடைய சமுகத்தில் நீதிமானாக்கப்படுகிறான். இதுவே அப்போஸ்தலர் நடபடி 2-ம் அதிகாரம். 12-ம். வசனத்திலே அர்ச். இராயப்பர் யூதர்களுக்குத் தெளிவாய்க் காண்பித்து, அவராலேயன்றி மற்றெவராலும் இரட்சணியமில்லை, ஏனெனில் நாம் இரட்சிக்கப்படும்படிக்கு வானத்தின் கீழ் எவ்விடத்திலும் அவருடைய நாமமல்லாதே வேறே நாமம் மனிதர்களுக்குக் கொடுக்கப்படவில்லையென்று சொல்லுகிறார். பின்னும் யேசுநாதரைப்பற்றும் விசுவாசத்தினாலுண்டாகிற நீதி அருமையான காரியமோ? யேசுநாதரைப் பற்றிக்கொள்ளும்படிக்கு மோட்சத்திற்கு ஏறவும், பாதாளத்திலிறங்கவும் வேண்டுமோ? இல்லையே. அது அவனவன் இருதயத்திலும் வாயிலுமிருக்கிறது. ஒருவன் யேசுநாதரைத் தன் இருதயத்திலே விசுவசித்து, வாயினால் அறிக்கை பண்ணுவானாகில் அத்தாலே சர்வேசுரனுடைய சமுகத்திலே நீதிமானாவான். யேசுநாதரைப்பற்றும் விசுவாசமோவென்றால் பிரசங்கிக்கப்படுகிற சுவிசேஷ வாக்கியத்தினால் உண்டாகும். ஆனால் இவ்விடத்திலும் இன்னும் பலவிடங்களிலும் சொல்லப்பட்ட இரட்சணியத்துக்கு அவசரமான விசுவாசம் யேசுநாதரையும் யேசுநாதரைச் சேர்ந்த சகலத்தையும் அங்கீகரிக்கிற விசுவாசமாகையால், அப்படிப்பட்ட விசுவாசத்தை மெய்யாகவே கொண்டிருக்கிறவன் யேசுநாதர் போதித்த எல்லாச் சத்தியங்களையும் விசுவசித்து, அவர் கற்பித்த எல்லாக் கற்பனைகளையும் அநுசரித்துக்கொண்டு வருவானென்றறிக.

15. அனுப்பப்படாவிட்டால், எப்படிப் பிரசங்கிப்பார்கள்? இதைப்பற்றியே சமாதான சுவிசேஷத்தையும், நன்மையின் சுவிசேஷத்தையும் அறிவிக்கிறவர்களுடைய பாதங்கள் எவ்வளவோ அழகாயிருக்கின்றன என்று எழுதப்பட்டிருக்கின்றது. (இசை. 52-7; நாகூம். 1-15.)

16. ஆயினும் எல்லாரும் சுவிசேஷத்துக்குக் கீழ்ப்படிகிறதில்லை. ஏனெனில் இது விஷயமாய் இசையாஸ் என்பவர்: ஆண்டவரே, எங்களைக் கேட்டு, விசுவசித்தவன் யார் என்கிறார். (இசை. 53-1; அரு. 12-38.)

17. ஆதலால் விசுவாசமானது கேள்வியால் வரும்; கேள்வியோ, கிறீஸ்துநாதருடைய வாக்கியத்தால் ஆகிறது.

18. ஆனால் அவர்கள் கேள்விப்படவில்லையோ என்று கேட்கிறேன்? கேள்விப்பட்டார்கள். உலகமெங்கும் அவர்களுடைய சத்தமும், பூமண்டலத்தின் கடைசி எல்லைவரையில் அவர்களுடைய வார்த்தைகளும் சென்றதல்லோ? (சங். 18-5.)

19. இன்னமும் இதை இஸ்ராயேலர் அறியவில்லையோ என்று கேட்கிறேன். (அறிந்தார்கள்.) முந்த மோயீசன் உரைக்கிறதாவது: எனக்கு ஜனமாகாதவர்கள்மேல் உங்களிடத்தில் காய்மகாரத்தை மூட்டுவேன்; மூட ஜனத்தின்மேல் உங்களிடத்தில் கோபமூட்டுவேன் என்கிறார். (உபாக. 23-21.)

20. பின்னும் இசையாஸ் சொல்லுகிறதாவது: என்னைத் தேடாதவர்கள் கண்ணிலே தென்பட்டேன். என்னைப் பற்றி விசாரியாதவர்களுக்கு வெளியரங்கமாய்க் காணப்பட்டேன் என்று துணிவாய்ச் சொல்லுகிறார். (இசை. 45-1.)

21. இஸ்ராயேலரைக் குறித்தோ: விசுவசியாமல், மறுத்துப் பேசுகிற ஜனங்களைநோக்கி நாள்முழுதும் என் கரங்களை விரித்தேன் என்று சொல்லியிருக்கிறார்.

15. சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கிறவர்கள் அவசியமாய் அனுப்பப்பட்டவர்களாயிருக்கவேண்டுமென்று இதிலே அர்ச். சின்னப்பர் போதிக்கிறார். யேசுநாதர் முதலாய்த் தம்முடைய பிதாவினாலே இதற்காக அனுப்பப்பட்டேனென்று சொல்லியிருக்கிறதுமன்றி, என் பிதாவானவர் என்னை அனுப்பினது போல, நானும் உங்களை அனுப்புகிறேனென்று தம்முடைய அப்போஸ்தலர்களுக்குத் திருவுளம்பற்றியிருக்கிறாரென்று அர்ச். அருளப்பர் 20-ம். அதிகாரம். 21-ம். வசனத்தில் காண்கிறோம். அப்போஸ்தலர்கள் தங்களிடமாக வேறே போதகர்களை ஏற்படுத்தினதை அப்போஸ்தலர் நடபடியின் பற்பல இடங்களில் காண்கிறோம். அவர்களால் அனுப்பப்பட்டவர்கள் தங்களிடமாக வேறே போதகர்களை அனுப்பிவருவதினால், அப்போஸ்தலர்கள் நாள் தொடங்கி இந்நாள்வரைக்குந்தொடர்புவிடாமல் திருச்சபைத்தலைவர்களாலே அனுப்பப்பட்ட போதகர்கள் சுவிசேஷத்தைப் பிரசங்கித்துவருகிறார்கள். திருச்சபை போதகர்களை அனுப்பும்போது யேசுநாதர்தாமே அவர்களை அனுப்புகிறாரென்று சொல்லக்கடவோம். ஏனெனில், இதோ, எந்நாளும் உலகமுடியுந்தனையும் உங்களோடே கூட இருக்கிறேனென்று தம்முடைய அப்போஸ்தலர்களுக்குத் திருவுளம்பற்றினார். ஆகையால் எந்நாளும் தம்முடைய திருச்சபையோடு இருக்கிற யேசுநாதர் அநுதினமுந் திருச்சபை அனுப்புகிறவர்களைத் தாமுங்கூட அனுப்புகிறாரென்பது சத்தியமாமே. ஆகையினாலே திருச்சபையினாலே அனுப்பப்படாமல், தாங்களாய் வருகிற போதகர்களெல்லாருஞ் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க யேசுநாதராலே அனுப்பப்பட்டவர்களுமல்ல, அதிகாரம் பெற்றவர்களுமல்ல. ஏனெனில் யேசுநாதர்தாமே அருளப்பர் 10-ம். அதிகாரம் முதல் வசனத்தில். வாசல் வழியாய் மந்தையில் நுழையாமல், வேறு வழியாய் அதிலே ஏறுகிறவர்கள் கள்ளரும், கொள்ளைக்காரருமாயிருக்கிறார்கள் என்று திருவுளம்பற்றியிருக்கிறார்.

## 11-ம். அதிகாரம்.

யூதர்களில் எல்லாரும் தள்ளுண்டு போன தில்லையென்பதும், புற ஜாதியார் தாங்கள் தேவ கிருபையால் தெரிந்துகொள்ளப்பட்டதினிமித்தம் அகங்கரிக்கப்படாதென்பதும்.

1. இப்படியிருக்க, சர்வேசுரன் தம்முடைய பிரஜைகளைத் தள்ளிவிட்டாரோ என்று கேட்கிறேன். ஒருபோதுமில்லை. எப்படியெனில் நானும் இஸ்ராயேலன், அபிரகாமின் சந்ததியில் பெஞ்சமீன் கோத்திரத்தில் பிறந்தவன்.

2. சர்வேசுரன் தாம் முன்னறிந்துகொண்ட தம்முடைய பிரஜைகளைத் தள்ளிவிடவில்லை. எலியாஸ் என்பவர் இஸ்ராயேலருக்கு விரோதமாய் எவ்விதமாய்ச் சர்வேசுரனை நோக்கி முறையிட்டாரென்று வேதாகமம் அவரைப்பற்றிச் சொல்லுவதை அறியீர்களோ?

3. ஆண்டவரே, உம்முடைய தீர்க்கதரிசிகளை அவர்கள் கொலைசெய்தார்கள்; உம்முடைய பீடங்களைத் தகர்த்துப்போட்டார்கள்; நான் ஒருவன் மாத்திரம் மீதியாயிருக்கிறேன்; என் பிராணனையும் வாங்கத் தேடுகிறார்கள் என்று முறையிட்டாரே. (3. அர்ச். 19-10, 18.)

4. அவருக்குச் சொல்லப்பட்ட தெய்வ உத்தரத்தில் என்ன? பாஹாலுக்கு முன்பாக முழந்தாட்படியிடாத ஏழாயிரம்பேரை எனக்கு மீதியாக வைத்திருக்கிறேன் என்று சொன்னதல்லோ?

5. அப்படியே இக்காலத்திலும் கிருபையின் தெரிந்துகொள்கைப்படி மீதியானவர்கள் இரட்சிக்கப்பட்டிருக்கிறார்கள்.

6. ஆகிலும் கிருபையினால் (இரட்சிக்கப்பட்டவர்கள்) என்றால், கிரியைகளினால் அல்லவே; இல்லாவிடில் கிருபையானது கிருபையாயிராதே.

7. ஆகையினால் என்ன? இஸ்ராயேல் தேடினதை அடையவில்லை, தெரிந்துகொள்ளப்பட்டவர்கள் அதை அடைந்தார்கள்; மற்றவர்கள் குருடராக்கப்பட்டார்கள்.

8. மந்தப் புத்தியையும், காணாதிருக்கும்படியான கண்களையும், கேளாதிருக்கும்படியான செவிகளையும் இந்நாள்வரைக்கும் சர்வேசுரன் அவர்களுக்குக் கொடுத்திருக்கிறாரென்று எழுதப்பட்டபடியே ஆயிற்று. (இசை. 6; 29-10; மத். 13-14.)

9. தாவீதென்பவரோ: அவர்கள் பந்தி அவர்களுக்குக் கண்ணியாகவும், பொறியாகவும், இடறலாகவும், பிரதி தண்டனையாகவும் இருக்கக்கடவது. (சங். 68-23.)

10. அவர்கள் பாராதபடி அவர்கள் கண்கள் இருண்டுபோகவும், அவர்கள் முதுகு எந்நாளும் கூனிப்போகவுங் கடவது என்கிறார்.

11. இப்படியிருக்க, அவர்கள் விழுந்து கிடக்கவோ இடறினார்களென்று கேட்கிறேன்; அல்லவே. ஆனால் அவர்கள் புற ஜாதியாரால் உரோசங்கொள்ளும்படி அவர்களுடைய குற்றத்தினாலே அந்தப் புற ஜாதியாருக்கு இரட்சணியங் கிடைத்தது.

---

11. யூதருக்கு உரோசங் கிளம்பி, அத்தால் அவர்கள் மனந்திரும்பும்படிக்கு யேசுநாதரை அவர்கள் புறக்கணித்துத்தள்ளின குற்றம் அஞ்ஞானிகளுடைய அழைத்தலுக்குக் காரணமாயிருந்ததென்று அர்ச். சின்னப்பர் சொல்லிக்காட்டுகிறார். இதற்கு வியாக்கியானமாக வேதபாரகர் சொல்லுகிற உவமையாவது: பட்சமுள்ள தகப்பன் தன் நேச மகனை மடிமேல் வைத்து அணைத்துக்கொள்ளக் கூப்பிடும்போது, அந்தப் பிள்ளை வரமாட்டேனென்று அகலப்போவதைக் கண்ட தகப்பன் ஓர் அன்னியனுடைய மகனைக் கூப்பிட, அந்தப் பிள்ளை அவனிடத்துக்கு ஓடிவரவே, அவனை அந்தத் தகப்பன் பட்சத்துடனே மடியில் அணைத்துக்

12. ஆனால் அவர்களுடைய தவறு உலகத்துக்குச் செல்வமும், அவர்களுடைய (தொகைக்) குறைவு புற ஜாதியாருக்குத் திரவியமுமானால், அவர்களுடைய (தொகை) நிறைவு எவ்வளவோ அதிக செல்வமாயிருக்கும்?

13. புற ஜாதியாராகிய உங்களுக்கு நான் சொல்லுகிறதாவது. நான் புற ஜாதியாருடைய அப்போஸ்தலனாயிருக்கிறமட்டும், (அப். 9-15: கலா. 2-1.)

14. எப்படியாவது என் மாம்ச இனத்தாருக்கு உரோசத்தையுமூட்டி, அவர்களில் சிலரை இரட்சிக்கலாமோவென்று என் அலுவலைப் பாராட்டுகிறேன்.

15. ஏனெனில் அவர்கள் சேதம் உலகத்தை ஐக்கியப்படுத்தினால், அவர்கள் ஏற்றுக்கொள்ளப்படுதல் என்னமாயிராது? மரித்தோரினின்று உயிர்த்ததுபோலாகுமே.

16. ஏனெனில் முதற்பலன் பரிசுத்தமாயிருந்தால், குவியல் முழுமையும் அப்படியேயிருக்கும். அந்தன்மையே வேர் பரிசுத்தமாயிருந்தால், கிளைகளும் அப்படியேயிருக்கும்.

17. ஆகிலும் சில கிளைகள் முறிபட்டுப்போயிருக்க, காட்டு ஒலிவ மரமாகிய நீ அவைகளிடமாய் ஒட்டவைக்கப்பட்டு, ஒலிவ மரத்தின் வேருக்கும் சாரத்துக்கும் பங்காளியானாயென்றால்,

18. நீ அந்த கிளைகளுக்கு விரோதமாய்ப் பெருமை பாராட்டாதே. பெருமை பாராட்டுவாயானால், நீ வேரைத் தாங்காமல், வேர் உன்னைத் தாங்குகிறதென்று அறிவாயாக.

19. நான் ஒட்டவைக்கப்படும்படிக்கு அந்தக் கிளைகள் முறிபட்டன என்பாயோ?

20. நல்லது, அவிசுவாசத்தினாலே அவைகள் முறிபட்டன. நீயோ விசுவாசத்தினால் நிற்கிறாய். ஞானத்தில் உயர்ந்தவனென்று எண்ணிக்கொள்ளாமல், பயந்து நட.

21. ஏனெனில் சுபாவக் கிளைகளுக்கே சர்வேசுரன் மன்னியாதிருக்க, உனக்கும் ஒருவேளை மன்னிக்கமாட்டாராக்கும.

22. ஆகையால் சர்வேசுரனுடைய தயவையும கண்டிப்பையும் பார். விழுந்துபோனவர்கள் மட்டில் சர்வேசுரனுடைய கண்டிப்பையும், உன்மட்டில் அவருடைய தயவையும் பார். ஆயினும நீ நன்மையில் நிலைநின்றால்தான் (உனக்குத் தயவு நிலைக்கும) இல்லாவிடில் நீயும வெட்டுண்டு போவாய்

23. ஆனால் அவர்களும தங்கள் அவிசுவாசத்தில் நிலைகொள்ளாவிட்டால், ஒட்டவைக்கப்படுவார்கள். அவர்களை மறுபடியும ஒட்டவைப்பதற்குச் சர்வேசுரன் வல்லவராயிருக்கிறார்

24. எப்படியெனில், நீ சுபாவமாயக் காட்டு ஒலிவ மரமாயிருந்தும, அதினின்று வெட்டி எடுக்கப்பட்டு, உன் சுபாவத்துக்கு இசையாத நல்ல ஒலிவ மரத்தில் ஒட்டவைக்கப்பட்டிருக்கிறாயாகில், சுபாவப்படி (ஒலிவக்கிளைகளாகிய) அவர்கள் தங்கள சுய ஒலிவமரத்தில் எவ்வளவோ அதிக சுளுவாய் ஒட்டவைக்கப்படுவார்கள்.

கொள்ளுகிறதைக் கண்டு, மகன் உரோசப்பட்டுத் தானுந் தன் தகப்பன் மடியில் ஓடிவந்து விழுகிறதுபோல, சர்வேசுரனுந் தமது சொந்தப் பிரஜைகளாகிய யூதர்களை இரட்சணியத்துக்கு அழைத்தபோது, அவர்கள் வராமற்போனதைப்பற்றித் தமக்கு அந்நியர்களாயிருக்கிற அஞ்ஞானிகளை யூதர்களுக்குப் பதிலாகக் கூப்பிட்டு அழைக்க, அவர்கள் சந்தோஷமாக வந்து சர்வேசுரனுடைய வரப்பிரசாதத்தையும் நன்மைகளையும் அடைந்தார்களென்று யூதர்கள் கண்டு, கடைசியிலே ஞான உரோசங்கொண்டு யேசுக்கிறீஸ்துநாதரை விசுவசிப்பார்களென்று அர்த்தமாம்.

16. முதற்பலன். ஒரு குவியல் நெல் முதலிய தானியங்களில் கொஞ்சம் அள்ளி மச்சமாகக் காட்டுகிறபோது கையிலெடுக்கப்பட்ட அந்த நெல் முதற்பலமென்று சொல்லப்படும்.

25. ஏனெனில் சகோதரரே, நீங்களே உங்களை ஞானிகளென்று எண்ணிக்கொள்ளாதபடிக்கு, நீங்கள் ஒரு இரகசியத்தை அறிய வேண்டுமென்றிருக்கிறேன். அதாவது: புறஜாதியாருடைய நிறைவான தொகை உட்படுமளவாக்கும் இஸ்ராயேலில் ஒருபங்கு குருட்டாட்டத்துக்குள்ளாயிருக்கின்றது.

26. ஆகையால் இவ்விதமாய் இஸ்ராயேலனைவரும் இரட்சணியம் அடையும்படியாகும். இதற்கொத்தபடி: யாக்கோபிடத்திலிருந்து அவபக்தியை அகற்றித் தள்ளும்படியான ஒருவர் சீயோனிலிருந்து வருவாரென்றும, (இசை. 59-20)

27 அவர்களுடைய பாவத்தை நான் நீக்கும்போது, இதுவே நான் அவர்களுடன் செய்த உடன்படிக்கையென்றும எழுதியிருக்கின்றது

28. அவர்கள் உங்கள் நிமித்தம் சுவிசேஷத்தின்மட்டில் பகைஞராயிருக்கிறார்களென்பது மெய்யே. ஆயினும் தெரிந்துகொள்ளுதலின்மட்டில பிதாக்களின் நிமித்தம அவர்கள் மிகவும் நேசத்துக குரியவர்களாயிருக்கிறார்கள். (உபா. 6-31-37)

29. ஏனெனில சர்வேசுரனுடைய கொடைகளும், அவர் அழைத்த அழைபபும், (அவருக்கு) விசனமாயிராது.

30 அப்படியிருக்க, முற்காலத்திலே சர்வேசுரன் பேரில் விசுவாசமில்லாதிருந்த நீங்கள் இபபோது அவர்களுடைய அவிசுவாசத்தினிமித்தம கிருபையை அடைந்ததுபோல,

31. அவர்களும் இப்போது நீங்கள் இரக்கமடையும்பொருட்டு அவிசுவாசிகளாய் இருக்கிறார்களென்றாலும், பின்னால் அவர்களும இரக்கமடையும்படியாகும்.

32. ஏனெனில் எல்லார்மேலும் இரக்கமாயிருக்கத்தக்கதாகச் சர்வேசுரன் எல்லாரையும் அவிசுவாசத்துக்குள் அடைத்துப்போட்டார்.

33. ஆ, தெய்வ ஞானம், அறிவு இவைகளின் திரவிய பொக்கிஷம் எவ்வளவோ ஆழமானது! அவருடைய நியாயத் தீர்ப்புகள் எவ்வளவோ புத்திக்கெட்டாதவைகளுமாய், அவருடைய வழிகள் எவ்வளவோ ஆராய்ந்தறியக் கூடாதவைகளுமாயிருக்கின்றன.

34. ஆண்டவருடைய கருத்தை அறிந்தவன் யார்? அவருக்கு ஆலோசனைக்காரனாயிருந்தவன் யார்? (ஞான. 9-13; இசை. 40-15.)

35. தனக்குப் பதில் கிடைக்கும்படி அவருக்கு ஏதேனும் முந்தக் கொடுத்தவன் யார்?

36. சகலமும் அவராலும, அவரைக் கொண்டும், அவரிலும் உண்டாயிருக்கின்றது. அவருக்கே என்றென்றைக்கும மகிமையுண்டாவதாக ஆமென்

## 12-ம். அதிகாரம்.

*கிறீஸ்துவர்களுக்குரிய புண்ணியங்கள் இன்னவென்ற இதிலே கற்பிக்கிறார்.*

1. ஆகையால் சகோதரரே, நான் கடவுளின் இரக்கத்தைக் குறித்து உங்களை மன்றாடிக் கேட்கிறதென்னவென்றால், நீங்கள் உங்கள் சரீரங்களைப் பரிசுத்தமும், சர்வேசுரனுக்குப் பிரியமுமான உயிருள்ள பலியாக ஒப்புக்கொடுங்கள். இதுவே நீங்கள் செய்யத்தக்க புத்தியுள்ள ஆராதனை. (பிலி. 4-18.)

2. நீங்கள் இப்பிரபஞ்சத்துக்கு ஏற்றபடி நடவாமல், சர்வேசுரனுடைய சித்தத்துக்கு இன்னது நலமாகவும், பிரியமாகவும், உத்தமமாகவும் இருக்கிறதென்று அறிந்துகொள்ளும்படி உங்கள் மனதைப் புதுப்பித்து, உங்களைச் சீர் திருத்திக்கொள்ளுங்கள். (எபே. 5-17; 1. தெச. 4-3)

3. எனக்கு அளிக்கப்பட்ட வரத்தி
ஞலே நான் உங்கள் எல்லாருக்குஞ்
சொல்லுகிறதாவது : வேண்டிய ஞான
த்துக்கு மிஞ்சின ஞானமுள்ளவர்களா
கவேண்டாம். அளவு மட்டோடும்,
அவனவனுக்குக் கடவுள் பகிர்ந்த விசு
வாசத்தின் அளவுக்கேற்றப்போலும்,
உங்கள் ஞானமிருக்கட்டும். (1. கொ.
2-11 ; எபே. 4-7.)

4. அதெப்படியென்றல், நமக்குள்
ளே ஒரே சரீரத்தில் பல அவயவங்க
ளிருந்தும், எல்லா அவயவங்களுக்கும்
ஒரே தொழில் அல்லாததுபோல,

5. பலபேராகிய நாமும் கிறிஸ்து
நாதருக்குள் ஒரே சரீரமாகவும், தனித்
தனியே பார்த்தால் ஒருவருக்கொரு
வர் உறுப்புகளாகவும் இருக்கிறோம்.

6. நமக்கு அளிக்கப்பட்ட வரப்பிர
சாதத்தின்படியே நாம் வெவ்வேறான
வரங்களை உடையவர்களாகையால், நம்
மில் தீர்க்கத்தரிசன வரமுடையவன்
விசுவாசப் பிரமாணப்படி (பிரசங்கிக்
கக்கடவான்). (1. கொ. 12-4; 14-3.)

7. அவ்விதமே திருப்பணிவிடைக்
காரன் பணிவிடைசெய்வதிலும், உப
தேசிப்பவன் உபதேசிப்பதிலும், (அப்.
6-1.)

8. புத்திமதிசொல்லுகிறவன் புத்தி
மதி சொல்லுவதிலும், பங்கிடுகிறவன்
நேர்மையிலும், தலைமையாய் இருக்கிற
வன் கவலையிலும், இரங்குபவன் முகம
லர்ச்சியிலும், தன்தன் வரத்தைச்
செலுத்திக்கொண்டுவரக்கடவான்.

9. உங்கள் சிநேகம் பாசாங்கற்றிரு
ப்பதாக ; தின்மையை வெறுத்து, நன்
மையைக் கைப்பற்றிக்கொள்ளுங்கள்.
(அமோஸ். 5-15.)

10. சகோதர சிநேகத்தோடு அன்னி
யோன்னிய நேசமாயிருங்கள். கனம்
பண்ணுவதில் ஒருவரையொருவர் முந்
திக்கொள்ளுங்கள். (எபே. 4-3 ; 1.
இரா. 2-17.)

11. உங்கள் அலுவலில் அசதியாயி
ராமல் மனதில் வேகமாயிருங்கள்; ஆண்
டவருக்கு ஊழியஞ்செய்யுங்கள்.

12. நம்பிக்கையில் அகமகிழுங்கள் ;
துன்பத்தில் பொறுமையாயிருங்கள் ;
ஜெபத்தில் நிலைத்திருங்கள்.

13. அர்ச்சிக்கப்பட்டவர்களுடைய
அவசரங்களில் (உங்களுக்குள்ளதைப்)
பகிர்ந்து கொடுங்கள். அந்நியருக்கு
இடங்கொடுத்து உபசரியுங்கள். (எபி.
13-2 ; 1. இரா. 4-9.)

14. உங்களை உபத்திரவப்படுத்து
கிறவர்களை ஆசீர்வதியுங்கள். ஆசீர்வ
திக்கவேண்டியதேயன்றிச் சபியாதே
யுங்கள். (மத். 5-44.)

15. மகிழுவாரோடு மகிழ்ந்து, அழு
வாரோடு அழுங்கள்.

16. ஒருவரோடொருவர் ஏகசிந்தனை
யுள்ளவர்களாய் இருங்கள். பெருமை
யானவைகளைச் சிந்தியாமல், தாழ்மை
யானவர்களோடு ஒத்துநடங்கள். உங்
களையே புத்திசாலிகளென்று எண்ணு
திருங்கள்.

17. எவனுக்கும் தின்மைக்குப் பதில்
தின்மைசெய்யாதேயுங்கள். தேவசமு
கத்திலுமன்றி, சகல மனிதர் முன்பாக
வும் நன்மையைக்கோரி நடங்கள். (2.
கொரி. 8-21.)

6. வேதத்திலே தீர்க்கதரிசிகளென்றும், தீர்க்கதரிசனமென்றும் பேசும்போது வருங் காரியங்களை முன்னறிந்து சொல்பவர்களைமாத்திரமல்ல, சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கிறவர்களையும், அதின் பொருளுக்கு வியாக்கியானஞ் செய்கிறவர்களையும் குறிக்கிறதென்று அறியவும். அப்படியே மத்தேயு 7-ம் அதி. 15-ம் வசனத்தில்: உங்கள் நடுவில் ஆட்டுத் தோலைப் போர்த்திக்கொண்டு வருகிற கள்ளத் தீர்க்கதரிசிகள்மட்டில் எச்சரிக்கையாயிருங்களென்று சொல்லும்போது கள்ளப்போதகர்களைப்பற்றியே சொல்லியிருக்கிறது.

18. கூடுமானால் உங்களாலானமட்டும் சகல மனிதரோடும் சமாதானமாயிருங்கள். (எபி. 12-14.)

19. மிகவும் பிரியமானவர்களே, பழிவாங்காமல், கோபத்துக்குத் தணிந்துபோங்கள். ஏனெனில் பழிவாங்குதல் எனக்கு உரியது; நானே பதில்செய்வேன் என்று கர்த்தர் சொல்லுவதாக(வேதத்தில்) எழுதியிருக்கின்றது. (எக்கி. 28-1; உபா. 32-35.)

20. உன் சத்துரு பசித்திருந்தால், அவனுக்கு அன்னம் இடு; தாகித்திருந்தால், அவனுக்குப் பானங்கொடு. இப்படியே நீ செய்வதால், அவன்தலையின் மேல் அக்கினித்தணலைக் குவிப்பாய். (பழ. 25-21.)

21. தின்மையானது உன்னை ஜெயிக்கவிடாதே. ஆனால் நீயே தின்மையை நன்மையால் ஜெயிப்பாயாக.

## 13-ம். அதிகாரம்.

அதிகாரிகளுக்குக் கீழ்ப்படியவேண்டுமென்றும், பிறரைச் சிநேகிக்கவேண்டுமென்றும் கற்பிக்கிறார்.

1. எந்த மனுஷனும் மேலான அதிகாரங்களுக்குப் பணிந்துநடக்கக்கடவான். ஏனெனில் சர்வேசுரனாலே உண்டாயிராத அதிகாரமில்லை. ஆகையால் உண்டாயிருக்கிற அதிகாரங்கள் சர்வேசுரனால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. (ஞானா. 6-4; 1. இரா. 2-13.)

2. அப்படியிருக்க, அதிகாரத்தை எதிர்த்துநிற்கிறவன் சர்வேசுரன் ஸ்தாபித்த ஏற்பாட்டை எதிர்த்துநிற்கிறான். அப்படி எதிர்த்துநிற்கிறவர்கள் தங்களுக்குத்தாங்களே ஆக்கினைத் தீர்வையை வருவித்துக்கொள்ளுகிறார்கள்.

3. அன்றியும் அதிகாரிகள் நன்மை செய்கிறவர்களுக்கல்ல, தின்மை செய்கிறவர்களுக்கே பயங்கரத்துக்குரியவர்களாயிருக்கிறார்கள். ஆகையால் நீ அதிகாரத்துக்குப் பயப்படாதிருக்க வேண்டுமோ? நன்மையைச் செய். அப்போது அதினால் புகழ்ச்சியை அடைவாய்.

4. ஏனெனில் அவன் உன் நன்மைக்காகவே, தேவ ஊழியனாயிருக்கிறான். ஆனால் நீ தின்மையைச்செய்தால், அச்சத்தோடிரு. ஏனெனில் அவன் பட்டயத்தை விருதாவில் ஏந்திக்கொண்டிருக்கிறவனல்ல. அவன் தேவ ஊழியன். கெடுதிசெய்கிறவனைக் கோபத்தோடு பழிவாங்குகிறவன்.

5. ஆகையால் நீங்கள் கோபாக்கினையினிமித்தம் மாத்திரமல்ல, மனச்சாட்சியினிமித்தமும் அவசியமாய்ப் பணிந்திருங்கள்.

6. இதற்காகவே நீங்கள் பகுதியுஞ் செலுத்திவருகிறீர்கள். ஏனெனில் அவர்கள் இந்த வேலையைப்பார்ப்பதிலே சர்வேசுரனுடைய ஊழியர்களாயிருக்கிறார்கள்.

7. ஆகையால் சகலருக்கும் செல்லவேண்டியவைகளைச் செலுத்துங்கள்; பகுதிக்குரியவனுக்குப் பகுதி; தீர்வைக்குரியவனுக்குத் தீர்வை; அச்சத்துக்குரியவனுக்கு அச்சம்; சங்கைக்குரியவனுக்குச் சங்கை. (மத். 22-21.)

8. நீங்கள் ஒருவரையொருவர் சிநேகிக்கவேண்டிய கடன் நீங்கலாக, மற்ற எந்த விஷயத்திலும் கடன்காரராகாதேயுங்கள். ஏனெனில் பிறனைச் சிநேகிக்கிறவன் எவனோ, அவனே வேதகற்பனையை நிறைவேற்றினவன்.

20. உன் சத்துராதிக்கு நீ செய்கிற நன்மைகள் அவன் உன்னைச் சிநேகிக்கும்படிக்கு அவன் இருதயத்தில் மூட்டிவிடுகிற அக்கினியாயிருக்கும். அப்படியே அந்தச் சிநேகாக்கினியால் அவன் வேகாதிருப்பானாகில், கடைசிநாளிலே அது அவனைச் சுட்டெரிக்கும் நராக்கினியாக மாறிப்போமென்று அர்த்தமாம்.

9. அதெப்படியென்றால், விபசாரம் பண்ணாதிருப்பாயாக, கொலைசெய்யாதிருப்பாயாக, களவாடாதிருப்பாயாக, பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக, இச்சைப்படாதிருப்பாயாக (என்ற கற்பனைகளும்) இன்னும் வேறெந்தக் கற்பனை உண்டானாலும், அவையாவும் உன்னை நீ சிநேகிக்குமாப்போல, உன் பிறனையுஞ் சிநேகிப்பாயாக என்கிற ஒரே வாக்கியத்தில் தொகுக்கப்பட்டிருக்கின்றது. (யாத். 20-14; லேவி. 19-18; மத். 21-39.)

10. பிறசிநேகம் ஒரு பொல்லாங்கையுஞ்செய்யாது; ஆகையால் சிநேகமானது வேத கற்பனைகளின் பூரண நிறைவேற்றமாமே.

11. இன்னும இவையெல்லாம காலத்தை அறிந்து நிறைவேற்றுங்கள். ஏனெனில் இதோ, நாம் நித்திரையை விட்டு எழுந்திருக்க நேரமாயிற்று. ஏனெனில் நமது இரட்சணியம நாம் விசுவசிக்கத்தொடங்கின காலத்தை விட இப்போது அதிக சமீபத்திலிருக்கின்றது. (லூக். 12-51; எபே. 5-14.)

12. இரவு ஏற்கனவே சென்றுபோயிற்று; பகலோ சமீபமாயிற்று. ஆகையால் இருளின் கிரியைகளைத் தள்ளிவிட்டு, ஒளியின் ஆயுதங்களைத் தரித்துக்கொள்ளுவோமாக.

13 பகலில் நடப்பதுபோல யோக்கியசாலிகளாய் நடப்போமாக, விருந்துகளிலும், குடிவெறிகளிலும, படுக்கைகளிலும, நாணக்கேடுகளிலும், வாதாட்டத்திலும், பொறாமையிலும் செல்லாமலும், (லூக். 21-34.)

14. இச்சைகளுக்கு ஏதுவாகச் சரீரத்தைப் போஷியாமலும், ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரைப் பூண்டுகொள்ளுங்கள். (காலாத். 5 16: 1 இரா. 2-11.)

## 14-ம். அதிகாரம்.

விசுவாசத்தில் பலவான்கள் பலவீனரை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்பதும், பிறருக்கு இடறலாயிருக்கப்படாதென்பதும்.

1. விசுவாசத்தில் பலவீனமாயிருக்கிறவனுடைய எண்ணங்களைப்பற்றித் தர்க்கியாமல், அவனை ஏற்றுக்கொள்ளுங்கள்.

2. ஏனெனில், ஒருவன் எந்தப் பதார்த்தத்தையும் உண்கலாமென்றெண்ணுகிறான். பலவீனனோ மரக்கறிகளைப் புசிப்பான்.

3. புசிக்கிறவன் புசியாதிருப்பவனைப் புறக்கணியாதிருப்பானாக. புசியாதிருப்பவனும் புசிக்கிறவனைத் தீர்வையிடாதிருப்பானாக. ஏனெனில் சர்வேசுரன் அவனை ஏற்றுக்கொண்டிருக்கிறார்.

4. மற்றொருவனுடைய ஊழியக்காரன்மேல் தீர்ப்பிடுகிறதற்கு நீ யார்? அவன் நின்றாலுஞ் சரி, விழுந்தாலுஞ் சரி எஜமானுக்கென்றே. ஆயினும் அவன் நிற்பான்; சர்வேசுரன் அவனை நிலைநிறுத்த வல்லவராயிருக்கிறார். (யாக. 4-13.)

5. அவ்வண்ணமே ஒருவன் நாள் வித்தியாசம் பார்க்கிறான். இன்னொருவன் எல்லா நாளையும் ஒரே சீராய் மதிப்பான். அவனவன் தன் எண்ணத்தில் பூரணமாய் நிற்கக்கடவான்.

6. நாள் வித்தியாசம் பார்க்கிறவன் ஆண்டவரைக் குறித்துப் பார்க்கிறான். சாப்பிடுகிறவனும் சர்வேசுரனுக்குத் தோஸ்திரஞ்செலுத்துவதினால், ஆண்டவரைக்குறித்துச் சாப்பிடுகிறான். சாப்பிடாதவனும ஆண்டவரைக்குறித்துச் சாப்பிடாதிருந்து, கடவுளுக்குத் தோஸ்திரஞ்செய்கிறான்.

7. ஏனெனில் நம்மில் ஒருவனும் தனக்கென்று ஜீவிக்கிறதுமில்லை, ஒருவனும் தனக்கென்று மரிக்கிறதுமில்லை.

8. ஆனால் நாம் சீவித்தாலும், ஆண்டவருக்கென்றே சீவிக்கிறோம்; மரித்தாலும், ஆண்டவருக்கென்றே மரிக்கிறோம். ஆகையால் நாம் சீவித்தாலுஞ் சரி, மரித்தாலுஞ்சரி ஆண்டவருக்கே சொந்தமாயிருக்கிறோம்.

9. இப்படியே கிறீஸ்துநாதரும் மரித்தோருக்கும் சீவியருக்கும் கர்த்தராயிருக்கும்பொருட்டே மரித்து, உயிர்த்திருக்கிறார். (2. கொ. 5-10.)

10. அப்படியிருக்க, நீ உன் சகோதரன்மேல் தீர்ப்பிடுகிறதென்ன? அல்லது உன் சகோதரனைப் புறக்கணிக்கிறதென்ன? நாமெல்லாரும் கிறீஸ்துநாதருடைய நியாயாசனத்துக்கு முன்பாக நிற்போமே.

11. ஏனெனில், சீவஞ்சீவியர் நாமே, எல்லா முழங்கால்களும் நமக்கு முன்பாக முடங்கும், எல்லா நாவும் சர்வேசுரனை ஸ்துதிக்கும் என்று ஆண்டவர் சொல்லுகிறாரென்று எழுதியிருக்கிறது. (இசை. 65-24; பிலோ. 2-10.)

12. ஆகையால் நம்மில் ஒவ்வொருவனும் தன்னைப்பற்றிச் சர்வேசுரனுக்குக் கணக்கு ஒப்பிப்பான்.

13. இதினாலே நாம் இனிமேல் ஒருவருக்கொருவர் தீர்ப்பிடாதிருப்போமாக; ஆனால் நீங்கள் உங்கள் சகோதரனுக்கு இடறலாய் அல்லது துர்மாதிரிகையாயிருக்கப்படாதென்று முக்கியமாய்த் தீர்மானித்துக்கொள்ளுங்கள்.

14. ஒரு பொருளைத் தீட்டென்று எண்ணிக்கொள்ளுகிறவனுக்கு அது தீட்டாயிருக்கிறதொழிய தன்னிலே தீட்டுள்ளது ஒன்றுமில்லையென்று கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துநாதரிடத்தில் அறிந்து நிச்சயித்திருக்கிறேன். (மத். 15-11.)

15. ஆகிலும் போஜனத்தினிமித்தம் உன் சகோதரன் கஸ்திப்படும்படியானால், நீ பிறசிநேகத்தின்படி நடக்கிறவனல்ல. கிறீஸ்துநாதர் அவனுக்காக மரித்திருக்கையிலே, நீ உன் போஜனத்தினிமித்தம் அவனைக் கெடுக்காதே. (1. கொ. 8-11.)

16. ஆகையால் நம்முடைய நன்மை தூஷணிக்கப்படாதிருப்பதாக.

17. சர்வேசுரனுடைய இராச்சியம் அன்னமும் பானமும் அல்ல; அது நீதியும், சமாதானமும், இஸ்பிரீத்துசாந்துவினிடத்தில் அகமகிழ்ச்சியுமாய் இருக்கின்றது.

18. இவ்விதமாய்க் கிறீஸ்துநாதரைச் சேவிக்கிறவன் சர்வேசுரனுக்கு உகந்தவனும், மனிதரால் அங்கிகரிக்கப்பட்டவனுமாயிருக்கிறான்.

19. ஆகையால் சமாதானத்துக்குரியவைகளை நாடி, நல்விருத்திக்குரியவைகளை அன்னியோன்னியமாய்க் காத்துவருவோமாக.

20. போஜனத்தினிமித்தம் சர்வேசுரனுடைய வேலையை அழித்துப்போடாதே. எந்தப் பதார்த்தமும் சுத்தமுள்ளதென்கிறது உள்ளதுதான். ஆயினும் இடறலுக்கேதுவாகப் புசிக்கிறவனுக்கு அது தீங்காகும். (தீத்து. 1-15.)

16. கிறீஸ்துவர்கள் ஒருவரோடொருவர் தர்க்கிக்கிறதையும், பொறாமைப்படுகிறதையும் ஒருவன் செய்கிறதை மற்றொருவன் நடுத்தீர்க்கிறதையும், ஒருவன்மேல் ஒருவன் குற்றஞ் சாட்டுகிறதையும் வேதத்துக்குப் புறம்பாயிருக்கிறவர்கள் காணும்போது, வெறுப்படைந்து வேதக்காரர்கள் ஒருவரோடொருவர் ஒற்றுமையில்லாமலிருக்கிறார்களே, பாருங்களென்று சொல்லி, நமக்குச் சகல நன்மையின் சம்பூரணமாயிருக்கிற நம்முடைய வேதத்தைத் தூஷணிப்பார்கள். அந்தத் தூஷணத்துக்கு இடங்கொடாதிருங்களென்று அர்த்தமாம்.

21. உன் சகோதரன் இடறுவதற்காவது, தவறுவதற்காவது, பலவீனப்படுவதற்காவது ஏதுவாயிராதபடிக்கு மாம்சம்சாப்பிடாதிருப்பதும்,திராட்சரசம் பானம்பண்ணுதிருப்பதும், இதைப்போன்ற வேறெதுவுஞ் செய்யாதிருப்பதும் நலமாமே. (1. கொ. 8-13.)

22. உன்னிடத்தில் விசுவாசமிருக்கிறதோ? அது சர்வேசுரனுக்கு முன்பாக உன்மட்டுக்கும் இருக்கட்டும். தான் (நல்லதென்று) ஒப்புக்கொள்ளுகிற காரியத்திலே தனக்குத்தானே தீர்ப்பிட்டுக்கொள்ளாதவன் பாக்கியவான்.

23. ஆனுல் வித்தியாசம் பார்த்தும், சாப்பிட்டானுகில், தன் விசுவாசத்துக்கு ஏற்றபடி செய்யாததினுலே, அவலத்தீர்வைக்குள்ளானுன். ஏனெனில் தன் விசுவாசத்துக்கு ஒவ்வாத எதுவும் பாவமாயிருக்கின்றது.

## 15-ம். அதிகாரம்.

உரோமானர் எல்லாரும் ஒரேமனமாயிருக்க வேண்டுமென்று கற்பித்து, தாம் அவர்களைக் காண ஆசிக்கிறதாகத் தெரிவிக்கிருர்.

1. இதுவுமன்றி, பலமுள்ளவர்களாகிய நாம் நமக்கே பிரியப்படத்தேடாமல், பலவீனருடைய துர்ப்பலனைத் தாங்கக்கடவோம்.

2. உங்களில் ஒவ்வொருவனும் நல்விருத்திக்கேதுவான நன்மையுண்டாகும்படி பிறனுக்குப் பிரியமாக நடக்கக்கடவான்.

3. ஏனென்றுல், கிறீஸ்துநாதரும் தமக்கே பிரியப்படத்தேடாமல்: உம்மைத் தூஷணிக்கிறவர்களுடைய தூஷணங்கள் என்மேல் விழுந்தன என்று எழுதியிருக்கிறபடியே நடந்தார். (சங். 48-10.)

4. வேதாகமங்களால் உண்டாகிற பொறுமையினுலும், ஆறுதலினுலும் நாம் நம்பிக்கையுள்ளவர்களாகும்படி (அவைகளில்) எழுதப்பட்டதெல்லாம் நம்முடைய படிப்பினைக்காகவே எழுதப்பட்டிருக்கிறது.

5. பொறுமையையும், ஆறுதலேயும் தந்தருளுகிற சர்வேசுரன் யேசுக்கிறீஸ்துநாதருக்கு ஒத்தவண்ணம் நீங்கள் ஒருவருக்கொருவர் ஏக சிந்தையுள்ளவர்களாகும்படி உங்களுக்குக் (கிருபை) செய்வாராக. (1. கொ. 1-10.)

6. இவ்விதமாய் நீங்கள் ஏகோபித்து நம்முடைய கர்த்தர்யேசுக்கிறீஸ்துநாதருடைய பிதாவாகியசர்வேசுரனை ஒருவாய்ப்பட மகிமைப்படுத்துவீர்கள்.

7. ஆகையால் சர்வேசுரனுடைய மகிமைக்காகக் கிறீஸ்துநாதர் உங்களை ஏற்றுக்கொண்டதுபோல, நீங்களும் உங்களில் ஒருவனையொருவர் ஏற்றுக்கொள்ளுங்கள்.

8. எப்படியெனில், பிதாப்பிதாக்களுக்குப் பண்ணப்பட்ட வாக்குத்தத்தங்களை உறுதியாக்கும்படி, சர்வேசுரனுடைய சத்தியத்தின் நிமித்தம் யேசுக்கிறீஸ்துநாதர் விருத்தசேதனமுள்ளவர்களுக்குப் போதகரானுரென்றும்,

9. புறஜாதியாரோ, (தாங்களடைந்த) இரக்கத்தின் நிமித்தம் சர்வேசுரனை மகிமைப்படுத்துகிருர்களென்றுஞ்சொல்லுகிறேன். இதினிமித்தம்: ஆண்டவரே, புறஜாதிகள் நடுவில் உம்மை அறிக்கையிட்டு, உம்முடைய நாமத்தைக்குறித்துக் கீர்த்தனை பாடுவேன் என்று எழுதப்பட்டிருக்கிறது. (2. அர. 22-50; சங். 17-50.)

---

22. இதற்கு அர்த்தமேதென்றுல் வெளிப்படையாய் நல்லதென்று தான் ஒத்துக்கொள்ளுகிற காரியத்தைத் தன் உள்ளத்தில் தகாதென்று எண்ணுதவன் பாக்கியவானுமே. அதாவது: தன் மனச்சாட்சிக்கு விரோதமானதொன்றுஞ் செய்யாதவன் பாக்கியவானென்று பயனும்.

10. பின்னும் வேறோரிடத்தில்: புறஜாதிகளே, ஆண்டவருடைய பிரஜைகளோடு நீங்களும் அகமகிழுங்கள் என்றும், (சங். 66-5.)

11. மீண்டும்: புறஜாதிகளே, ஆண்டவரை ஸ்துதியுங்கள், சமஸ்த ஜனங்களே, அவரைப் புகழுங்கள் என்றும் எழுதப்பட்டிருக்கிறது. (சங். 116-1.)

12. மேலும் புறஜாதிகளை ஆள்பவராகிய ஜெஸ்ஸே என்பவருடைய வேரானவர் எழும்புவார்; புறஜாதியார் அவர்மேல் நம்பிக்கைவைப்பார்கள் என்று இசையாஸ் என்பவர் சொல்லுகிறார். (இசை. 11-10.)

13. நீங்கள் நம்பிக்கையிலும், இஸ்பிரீத்துசாந்துவின் வல்லமையிலும், பெருகும்படிக்கு நம்பிக்கையின் தெய்வம் விசுவசிப்பதினாலுண்டாகும் எவ்வித சந்தோஷத்தினாலும் உங்களை நிரப்புவாராக.

14. என் சகோதரரே, நீங்கள் அன்பில் நிறைந்தவர்களுமாய், பூர்த்தியான அறிவுள்ளவர்களுமாய் இருக்கிறீர்களென்றும், அதினாலே ஒருவருக்கொருவர் புத்தி சொல்லக் கூடுமாயிருக்கிறீர்களென்றும் நான் நிச்சயித்திருக்கிறேன்.

15. ஆகிலும் சகோதரரே, இவைகளை உங்களுக்கு நினைப்பூட்டுவதற்கே சற்றுத் துணிவாய் எழுதினேன்.

16. புறஜாதியாருக்குள் நான் யேசுக்கிறீஸ்துநாதருடைய ஊழியனாயிருக்கும்படி சர்வேசுரனால் எனக்கு அளிக்கப்பட்ட வரப்பிரசாதத்தின் நிமித்தம் அந்தப் புறஜாதியாராகிய காணிக்கை இஸ்பிரீத்துசாந்துவினால் அர்ச்சிக்கப்பட்டுக் (கடவுளுக்கு) உகந்ததாகும்படி சர்வேசுரனுடைய சுவிசேஷத்தை அர்ச்சித்து வருகிறேன்.

17. ஆகையால் சர்வேசுரனைச்சார்ந்தவைகளில் யேசுக்கிறீஸ்துநாதர் வழியாய் எனக்கு மகிமையுண்டாயிருக்கிறது.

18. ஏனெனில் புறஜாதியாரை வார்த்தையினாலும், கிரியையினாலும் கீழ்ப்படியப்பண்ணும்படிக்கு அற்புத அடையாளங்களின் பலத்தினாலும், இஸ்பிரீத்துசாந்துவின் சக்தியினாலும் கிறீஸ்துநாதர் என்வழியாய்ச் செய்யாத விஷயம் ஒன்றையும்பற்றி நான் பேசத் துணிகிறதில்லை. (2 கொ. 3-5.)

19. இப்படி நான் எருசலேம் நகர் தொடங்கிச் சுற்றுப்புறத்திலும், இல்லீரிக்கம் சீமைவரைக்கும் கிறீஸ்துநாதருடைய சுவிசேஷத்தைப் பூரணமாய் நிரப்பினேன். (அப். 14-3.)

20. ஆயினும் இன்னொருவர் போட்ட அஸ்திவாரத்தின்மேல் நான் கட்டாதபடிக்குக் கிறீஸ்துநாதருடைய பேர் சொல்லப்படாத இடங்களிலே நான் இந்தச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்துவந்தேன்.

21. ஏனெனில் அவரைப்பற்றிய செய்தியை அறியாதிருந்தவர்கள் காண்பார்கள்; கேள்விப்படாதவர்கள் கேள்விப்படுவார்கள் என்று எழுதப்பட்டிருக்கிற பிரகாரம் (நானும் இப்படிப்பிரசங்கித்தேன்.) (இசை. 52-15.)

22. இதின் நிமித்தமே உங்களிடம் வருவதற்குப் பெரும்பாலும் தடைபட்டேன். இதுவரையிலும் விக்கினமாகவேயிருக்கின்றது.

23. இப்போதோ, இந்தச் சீமையில் எனக்கு இடமில்லாமையினாலும், உங்களிடம் வரும்படி ஏற்கனவே அநேக வருஷங்களாய் எனக்கு ஆசையாயிருப்பதினாலும்,

24. நான் இஸ்பானியா தேசத்துக்குப் பயணப்படத் துவக்கும்போது, போகிற வழியிலே உங்களைக் கண்டு, உங்களுடன் சந்தோஷமாய்க் கொஞ்சநாளிருந்தபின்பு, அந்தத் தேசத்துக்கு உங்களாலே கூட்டிக்கொண்டு போகப்படுவேனென்று நம்புகிறேன்.

25. இப்பொழுதோ, நான் அர்ச்சிக்கப்பட்டவர்களுக்குத் தர்ம உதவி செய்யுங் காரியமாக எருசலேமுக்குப் புறப்பட்டுப்போகிறேன்.

26. ஏனெனில் மக்கேதோனியாவிலும், அக்காயாவிலும் உள்ளவர்கள் எருசலேமிலிருக்கிற பரிசுத்தவான்களுக்குள்ளே ஏழைகளானவர்களுக்குக் கொஞ்சந் தர்ம உதவி சேர்த்துக் கொடுக்க மனதானார்கள்.

27. இப்படிச் செய்வது அவர்களுக்குப் பிரியமாயிருந்தது. அவர்கள் மட்டில் இப்படிச் செய்யவும் கடனாளிகளாயிருக்கிறார்கள். எப்படியெனில் அவர்களுடைய ஞான நன்மைகளில் புற ஜாதியார் பங்கடைந்தவர்களாயிருக்கையிலே, சரீரத்துக்கடுத்த காரியங்களில் அவர்களுக்கு இவர்கள் உதவி செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்கள். (1. கொ. 9-11.)

28. ஆகையால் நான் இந்தக் காரியத்தை முடித்து, இந்தப் பலனை அவர்கள் வசம் ஒப்படைத்தபின்பு, உங்களூர் மார்க்கமாய் இஸ்பானியாவுக்குப் புறப்படுவேன்.

29. நான் உங்களிடத்தில் வரும்போதோ, கிறீஸ்துநாதருடைய சுவிசேஷத்தின் சம்பூரண ஆசீர்வாதத்தோடு வருவேனென்று அறிந்திருக்கிறேன்.

30. ஆகையால் சகோதரரே, நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரைக் குறித்தும், இஸ்பிரீத்துசாந்துவின் சிநேகத்தைக் குறித்தும் நீங்கள் எனக்காகச் செய்யும் ஜெபங்களால் எனக்கு உதவியாயிருக்கும்படி உங்களை மன்றாடுகிறேன்.

31. என்ன கருத்துக்கென்றால்: யூதேயாவிலுள்ள அவிசுவாசிகள் கையினின்று நான் காப்பாற்றப்படவும், எருசலேம் பட்டணத்திலிருக்கிற அர்ச்சிக்கப்பட்டவர்கள் என் தர்ம தான ஊழியத்தைப் பிரியமாய் ஏற்றுக்கொள்ளும்படியாகவும்,

32. தேவ சித்தத்தினாலே நான் உங்களிடம் சந்தோஷமாய் வந்து உங்களோடு இளைப்பாறும்படியாகவுந்தான்.

33. சமாதானத்தின் கடவுள் உங்கள் அனைவரோடுங்கூட இருப்பாராக. ஆமென்.

## 16-ம். அதிகாரம்.

பற்பலபேருக்கு மங்களஞ் சொல்லும்படி கேட்டுக்கொண்டு, சிலரை நீக்கிவைக்கக் கட்டளையிட்டு நிருபத்தை முடிக்கிறார்.

1. கெங்கிரையூரில் திருச்சபை ஊழியத்திலிருக்கிற நம்முடைய சகோதரியாகிய பெபேயாளை உங்கள் அடைக்கலத்திலே வைக்கிறேன்.

2. நீங்கள் அவளை ஆண்டவரிடத்தில் அர்ச்சிக்கப்பட்டவர்களுக்கான விதமாய் ஏற்றுக்கொண்டு, உங்கள் உதவி அவளுக்குத் தேவையாயிருக்கிற சகல காரியங்களிலும் அவளுக்கு உதவியாயிருங்கள். ஏனெனில் அவள் அநேகருக்கும், எனக்கும் முதலாய் உதவியாயிருந்தவள்.

3. கிறீஸ்துநாதருடைய ஊழியத்திலே என்னுடன் உழைத்தவர்களாகிய பிரிஸ்க்காளுக்கும் அக்குயிலாவுக்கும் மங்களஞ் சொல்லுங்கள். (அப். 18-2.)

4. அவர்கள் என் பிராணனைக் காப்பாற்றத்தக்கதாகத் தங்கள் சிரசைக் கொடுக்கத் துணிந்தவர்கள். அவர்களுக்கு நான் மாத்திரமல்ல, புற ஜாதியாரிலுள்ள சபையாரெல்லாரும் நன்றியறிந்தவர்களாயிருக்கிறார்கள்.

5. அவர்களுடைய வீட்டில் கூடி வருகிற சபையாருக்கும் மங்களஞ்சொல்லுங்கள்; கிறிஸ்துநாதரிடத்தில் ஆசியாவின் முதற்பலனாகிய என் பிரியமுள்ள எப்பினேத்துக்கும் மங்களஞ்சொல்லுங்கள்.

6. உங்களுக்காக மிகவும் பிரயாசப்பட்ட மரியாளுக்கும் மங்களஞ்சொல்லுங்கள்.

7. அப்போஸ்தலரிடத்தில் பேர்பெற்றவர்களும், எனக்குமுன் கிறிஸ்துநாதருக்குச் சொந்தமானவர்களும், என் இனத்தாரும், என்னுடன் சிறைப்பட்டவர்களுமான அந்திரோனிக்கனுக்கும், யூனியானுக்கும் மங்களஞ்சொல்லுங்கள்.

8. கர்த்தரிடத்தில் எனக்கு மிகவும் நேசமுள்ள அம்பிலியாத்தனுக்கு மங்களஞ்சொல்லுங்கள்.

9. யேசுக்கிறிஸ்துநாதருக்காக (உழைப்பதில்) எனக்குத் துணைவனாகிய ஊர்பானுக்கும், எனக்குப் பிரியமுள்ள ஸ்தாக்கியனுக்கும் மங்களஞ்சொல்லுங்கள்.

10. கிறிஸ்துநாதரிடத்தில் பிரமாணிக்கமுள்ளவனாகிய அபபெல்லனுக்கு மங்களஞ்சொல்லுங்கள்.

11. அரிஸ்தோபுலன் வீட்டாருக்கு மங்களஞ்சொல்லுங்கள்; என் இனத்தானாகிய எரோதியோனுக்கு மங்களஞ்சொல்லுங்கள். கர்த்தருக் குட்பட்டவர்களாகிய நர்சீஸ் வீட்டாருக்கு மங்களஞ்சொல்லுங்கள்.

12. ஆண்டவரைக்குறித்து உழைக்கிறவர்களாகிய திரிபேனாளுக்கும், திரிபோசாளுக்கும் மங்களஞ் சொல்லுங்கள். ஆண்டவரைக்குறித்து மிகவும் உழைத்தவளாகிய என் மிகவும் பிரியமுள்ள பேர்சித்தாளுக்கு மங்களஞ்சொல்லுங்கள்.

13. ஆண்டவரில் தெரிந்தெடுக்கப்பட்ட ரூப்பனுக்கும், அவனுடைய தாய்க்கும் மங்களஞ்சொல்லுங்கள். அவள் எனக்கும் தாய்தான். (மாற். 15-21.)

14. அசிங்கிரித்தனுக்கும், பிலேக்கோனுக்கும், எர்மாவுக்கும், பத்ரோபாவுக்கும், எர்மேனுக்கும், அவர்களோடிருக்கிற சகோதரர்களுக்கும் மங்களஞ்சொல்லுங்கள்.

15. பிலோலோகனுக்கும், ஜீலியாளுக்கும், நெரேயுவுக்கும், அவன் சகோதரிக்கும், ஒலிம்பியாதனுக்கும், அவர்களோடிருக்கிற அர்ச்சிக்கப்பட்ட அனைவருக்கும் மங்களஞ்சொல்லுங்கள்.

16. ஒருவருக்கொருவர் பரிசுத்த முத்தமிட்டு மங்களஞ்சொல்லிக்கொள்ளுங்கள். கிறீஸ்துநாதருடைய சபையில் உட்பட்ட சகலரும் உங்களுக்கு மங்களஞ்சொல்லுகிறார்கள்.

17. அன்றியும் சகோதரரே, நீங்கள் கற்றுக்கொண்ட உபதேசத்துக்கு ஒவ்வாத பிரிவினைகளையும், இடறல்களையும் உண்டாக்குகிறவர்களைக் கண்ணோக்கியிருந்து, நீங்கள் அவர்களை விட்டு விலகவேண்டுமென்று உங்களை மன்றாடுகிறேன். (2. தெச. 3-14; 2 அரு. 10.)

18. ஏனெனில், அப்படிப்பட்டவர்கள் நம்முடைய ஆண்டவராகிய கிறீஸ்துநாதருக்கல்ல, தங்கள் வயிற்றுக்கே ஊழியஞ் செய்து, நய வசனத்தினாலும், புகழ்ச்சியினாலும், சூதற்றவர்களுடைய இருதயங்களை வஞ்சிக்கிறார்கள். (பிலோ. 3-18.)

19. உங்கள் சிரவணம் எவ்விடங்களிலும் பிரபல்லியமாயிருக்கிறது. ஆகையால் நான் உங்களைப்பற்றிச் சந்தோஷப்படுகிறேன். ஆகிலும் நீங்கள் நன்மையில் ஞானிகளாகவும், தின்மையில் பேதைகளாகவும் இருக்கவேண்டுமென்று விரும்புகிறேன்.

20. சமாதானத்தின் கடவுள் சாத்தானை உங்கள் காலின்கீழ்த் தீவிரமாய் நசுக்கிப்போடுவாராக. நம்முடைய கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய இஷ்டப்பிரசாதம் உங்களோடு இருக்கக்கடவது.

21. என் உடன்வேலையாளாகிய திமோத்தேயும், என் இனத்தார்களாகிய லூகியனும், யாசோனும், சோசிப்பாத்தரும் உங்களுக்கு மங்களஞ்சொல்லுகிறார்கள். (அப். 16-1.)

22. இந்த நிருபத்தை எழுதின தெர்சியூனாகிய நான் ஆண்டவர் பேரால் உங்களுக்கு மங்களஞ்சொல்லுகிறேன்.

23. எனக்கு விடுதி கொடுத்திருக்கிற காயனும் இவ்விடத்திலுள்ள திருச்சபையடங்கலும் உங்களுக்கு மங்களஞ்சொல்லுகிறார்கள். பட்டணத்தின் பொக்கிஷக்காரனாகிய எராஸ்தனும், சகோதரனாகிய குவார்த்தனும் உங்களுக்கு மங்களஞ்சொல்லுகிறார்கள். (அப். 19-22; 20-4.)

24. நம்முடையகர்த்தராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய இஷ்டப்பிரசாதம் உங்கள் அனைவரோடும் இருப்பதாக. ஆமென்.

25. நித்தியமாய் மறைந்திருந்த பரம இரகசியம் வெளிப்பட்ட பிரகாரம், என் சுவிசேஷத்துக்கும், யேசுக்கிறீஸ்துநாதருடைய போதகத்துக்கும் ஏற்றபடி உங்களை உறுதிப்படுத்த வல்லபரான (சுவாமிக்குத் தோஸ்திரம்).

26. (நித்தியமாய் மறைந்திருந்த) இந்தப் பரம இரகசியம் இப்பொழுது தீர்க்கதரிசிகளின் ஆகமங்களால் அநாதி சர்வேசுரனுடைய கட்டளைப்படியே வெளியாக்கப்பட்டு, சகல ஜாதிகளும் விசுவாசத்துக்குக் கீழ்ப்படியும்படி அவர்களால் அறியப்பட்டிருக்கிறதாமே.

27. ஆகையால் ஞான சுரூபியாகிய ஏக கடவுளுக்கு யேசுக்கிறீஸ்துநாதர் மூலமாய் அநவரத காலமும் வணக்கமும் மகிமையும் உண்டாவதாக. ஆமென்.




6538 (7896)

# பாயிரம்.

---

கொரிந்து நகரமானது கிரேசியா ராச்சியத்தின் தென்பாகமாகிய அக்காயா நாட்டின் ராஜதானிப் பட்டணமாம். அப்பட்டணத்தார் அக்காலத்தில் மிகுந்த செல்வமும், கற்றறிவும் உள்ளவர்கள். அப்போஸ்தலர் நடபடி 18-ம் அதிகாரத்தில் கண்டிருக்கிறபடி அர்ச். சின்னப்பர் அந்நகருக்கு வந்து, அதிலே சஞ்சரித்த ஒன்றரை வருஷத்துக்குள்ளே அநேகம் பேர்களுக்கு ஞானஸ்நானங்கொடுத்தார். பின்பு அவ்விடத்தைவிட்டுச் சின்ன ஆசியாவிலுள்ள பிரதான பட்டணமாகிய எபேசுக்கு வந்து, மூன்றுவருஷமளவும் அங்கே சுவிசேஷத்தைப் பிரசங்கித்தார். அவ்விடத்திலிருக்கையில் கர்த்தர் அவதாரமான 57-ம். வருஷத்திலே இந்த முதல் நிருபத்தை எழுதினார்.

இதை எழுதுவதற்கு உண்டான முகாந்தரம் ஏதென்றால், கொரிந்து நகரத்தாரிடத்தில் முன்னிருந்த பத்தி விசுவாசமும், புண்ணிய ஒழுக்கமும் கொஞ்சம் குறைந்துபோனதையும், அவர்கள் தங்கள் போதகர்கள்பட்டில் ஒருவரோடொருவர் வீணைதர்க்கஞ் செய்துகொண்டிருந்ததையும், அவர்களுக்குள் ஒருவன் எவரும் அறிய துர்மார்க்கமாய் நடந்ததையும் அவர் கேள்விப்பட்டிருந்தார். மேலும் விவாகத்தையும், கன்னிமையையுங் குறித்தும், விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகள், பெண்பிள்ளைகள் கோவிலிலிருக்கவேண்டிய விதம், திவ்வியநற்கருணை, இஸ்பிரீத்துசாந்துவின் வரங்கள், மரித்தோருடைய உத்தானம் ஆகிய இவைகளைக்குறித்தும் பற்பல விஷயங்களை அறியும்படி அந்தச் சபையார் அவரிடத்தில் எழுதிக் கேட்டிருந்தார்கள். அவைகளுக்குப் பதில் சொல்லும்படி இந்த நிருபத்தை எழுதினார்.

---



# அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர்

# கொரிந்தியருக்கெழுதிய

# முதல் நிருபம்.

## முதல் அதிகாரம்.

*சின்னப்பர் கொரிந்தியரை வாழ்த்தி, அவர்களுடைய போதகர்களைப்பற்றி எழும்பிய விவாதத்தைக் கண்டித்து, உலகமானது மனிதருடைய ஞானத்தால் இரட்சிக்கப்படாமல், சிலுவையால் இரட்சிக்கப்படவேண்டியதாயிருந்ததென்று காண்பிக்கிறார்.*

1. சர்வேசுரனுடைய சித்தத்தினாலே யேசுக்கிறீஸ்துநாதருடைய அப்போஸ்தலனாக அழைக்கப்பட்ட சின்னப்பனும், சகோதரனாகிய சொஸ்தேனும்

2. கொரிந்து நகரத்தில் யேசுக்கிறீஸ்துநாதரில் அர்ச்சிக்கப்பட்டவர்களும், அர்ச்சியசிஷ்டவர்களாகும்படி அழைக்கப்பட்டவர்களுமாகிய சர்வேசுரனுடைய திருச்சபையாருக்கும், தாங்களும் நாமும் இருக்கிற இடமெல்லாம நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவின் நாமத்தை மன்றாடுகிறவர்களுமாகிய அனைவருக்கும் (எழுதுவதாவது):

3. நமமுடைய பிதாவாகிய சர்வேசுரனாலும், கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துவினாலும் உங்களுக்கு இஷ்டப்பிரசாதமும, சமாதானமும் உண்டாவதாக.

4. உங்களுக்கு யேசுக்கிறீஸ்துநாதர் வழியாய் அளிக்கப்பட்ட தேவப்பிரசாதத்தினிமித்தம் உங்கள் பேராலே என் தேவனுக்கு இடையறாத தோஸ்திரம் பண்ணுகிறேன்.

5-6. ஏனெனில் கிறீஸ்துநாதரைப் பற்றிய சாட்சியம் உங்களுக்குள் ஸ்திரப்படுத்தப்பட்டபடியே, நீங்கள் அவரிடத்தில் எல்லா வாக்கியத்திலும், எல்லா அறிவிலும், இன்னும் மற்றெல்லாவற்றிலும் ஐசுவரியராக்கப்பட்டிருக்கிறீர்கள்.

7. இவ்விதமாக, நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர் வெளிப்படுவதற்கு எதிர்பார்த்திருக்கிற உங்களுக்கு எந்த வரப்பிரசாதத்திலும யாதொரு குறைவுமில்லை.

8 ஆகையால நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர் வரும் நாளிலே நீங்கள் குற்றமில்லாதவர்களாயிருக்கும்படி அவரே உங்களைக் கடைசிமட்டும் ஸ்திரப்படுத்துவார்

9. சர்வேசுரன் பிரமாணிககமுள்ளவர். அவர் மூலமாகவே தம்முடைய குமாரனும், நம்முடைய கர்த்தருமாகிய யேசுக்கிறீஸ்துவின் ஐக்கியத்துக்கு அழைக்கப்பட்டிருக்கிறீர்கள். (1. தெச. 5-24.)

10. சகோதரரே, உங்களுக்குள்ளே பிரிவினைகளில்லாமல், நீங்களனைவரும் ஒரே காரியத்தைப் பேசவும், ஒரே மனமும் ஒரே அபிப்பிராயமுமுள்ள உத்தமராயிருக்கவும் வேண்டுமென்று நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவின் நாமத்தினாலே நான் உங்களை மன்றாடுகிறேன்.

11. ஏனென்றால் என் சகோதரரே, உங்களுக்குள்ளே வாக்குவாதங்கள் உண்டென்று குலோவேயாளின் வீட்டாரால் உங்களைப்பற்றி எனக்கு அறிவிக்கப்பட்டது.

12. உங்களில் ஒவ்வொருவனும்: நான் சின்னப்பனுக்குச் சீஷன், நான் அப்பொல்லோவுக்குச் சீஷன், நான் கேபாவுக்குச் சீஷன், நான் கிறீஸ்து நாதருக்குச் சீஷன் என்று சொல்லுவதால் நான் இப்படிச் சொல்லுகிறேன். (அப். 18-24.)

13. கிறீஸ்துநாதர் பிரிவுபட்டிருக்கிறாரோ? சின்னப்பன் உங்களுக்காகச் சிலுவையில் அறையுண்டானோ? அல்லது சின்னப்பனுடைய நாமத்தினாலே நீங்கள் ஞானஸ்நானம்பெற்றீர்களோ?

14. உங்களுக்குள்ளே கிறீஸ்பூவுக்கும், காயிவுக்குமன்றி வேறொருவனுக்கும் நான் ஞானஸ்நானங்கொடாதபடியினாலே,

15. என் நாமத்தினால் (உங்களில்) ஏவனும் ஞானஸ்நானம் பெற்றதாகச் சொல்லக்கூடாததைப்பற்றி நான் சர்வேசுரனுக்குத் தோஸ்திரஞ்செய்கிறேன். (அப். 18-8.)

16. இன்னமும் ஸ்தேவானுடைய வீட்டாருக்கும் ஞானஸ்நானங்கொடுத்திருக்கிறேன். அப்பால் வேறேயாருக்காகிலும் நான் ஞானஸ்நானங் கொடுத்ததாக எனக்குத் தெரியவில்லை.

17. அதேனென்றால், ஞானஸ்நானங்கொடுப்பதற்கல்ல, சுவிசேஷத்தைப் பிரசங்கிப்பதற்கே கிறீஸ்துநாதர் என்னை அனுப்பினார். அதுவும் கிறீஸ்து நாதருடைய சிலுவை வீணாய்ப்போகாதபடிக்குச் சாதுரிய வாக்கியமில்லாமல் பிரசங்கிக்க அனுப்பினார். (2. பெ. 1-16; 1. கொ. 2-1; 4-13; உரோ. 1-16.)

18. சிலுவையைப்பற்றிய வாக்கியம் கெட்டுப் போகிறவர்களுக்கே பைத்தியமாயிருக்கிறது; இரட்சணியம் அடைகிறவர்களாகிய நமக்கோ, அது தேவ பலமாயிருக்கிறது. (உரோ. 1-16.)

19. இதினாலல்லோ வேதாகமத்திலே: ஞானிகளுடைய ஞானத்தை அழிப்பேன், விவேகிகளுடைய விவேகத்தை மறுத்துத்தள்ளுவேன். (இசை. 29-14.)

20. ஞானி எங்கே? வேதபாரகன் எங்கே? பிரபஞ்சலோகத்தை ஆராய்ந்து அறிபவன் எங்கே? இவ்வுலகத்தின் ஞானத்தைக் கடவுள் பைத்தியமாக்கவில்லையோ என்று எழுதப்பட்டிருக்கிறது. (இசை. 33-18.)

17. யேசுநாதர் தம்முடைய அப்போஸ்தலர்களை உலகமெங்குஞ் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க அனுப்பும்போது, விசுவசிப்பவர்களுக்கு ஞானஸ்நானங் கொடுக்கக் கற்பித்தாரே. அப்படியே அர்ச். சின்னப்பரையுஞ் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க அப்போஸ்தலராகத் தெரிந்துகொண்டபோது, விசுவசிப்பவர்களுக்கு ஞானஸ்நானங் கொடுக்கவும் அவரை அனுப்பினாரென்பதற்குச் சந்தேகமில்லை. ஆனால் அவரும் மற்ற அப்போஸ்தலர்களும் தாங்களே தங்கள் கையினால் எல்லாருக்கும் ஞானஸ்நானங் கொடுக்கவேண்டுமென்று கற்பிக்கப்படவில்லை. தங்களுக்குக் கீழ்ப்பட்ட மற்றக் குருமார்களைக்கொண்டு கொடுத்தாலும் அவர்களே கொடுத்தார்களென்று சொல்லலாம். அப்படியே அர்ச். அருளப்பர் சுவிசேஷம் 4-ம் அதி. 1-ம் 2-ம் வசனங்களில் அப்போஸ்தலர்களால் கொடுக்கப்பட்ட ஞானஸ்நானம் யேசுநாதர்தாமே கொடுத்துவந்ததுபோல் சொல்லியிருக்கிறதைக் காண்க.

21. அதெப்படியென்றால், தேவ ஞானத்திற்கேற்க உலகமானது தன் ஞானத்தைக்கொண்டு சர்வேசுரனை அறிந்துகொள்ளாததினாலே, பைத்தியமான பிரசங்கத்தைக்கொண்டு விசுவசிக்கிறவர்களை இரட்சிக்கும்படி சர்வேசுரனுக்குப் பிரியமாயிற்று.

22. எவ்வாறெனில், யூதர்களும் அற்புதங்களைக் கேட்கிறார்கள், கிரேக்கரும் ஞானத்தைத் தேடுகிறார்கள்.

23. நாங்களோ சிலுவையில் அறையுண்ட கிறீஸ்துநாதரைப் பிரசங்கிக்கிறோம். அவர் யூதர்களுக்கு இடறலும், அஞ்ஞானிகளுக்குப் பைத்தியமுமாயிருக்கிறார்.

24. ஆனாலும் யூதரிலும் கிரேக்கரிலும் அழைக்கப்பட்டவர்களுக்குத் தெய்வ பலமும், தெய்வ ஞானமுமாயிருக்கிற அந்தக் கிறீஸ்துநாதரைப் பிரசங்கிக்கிறோம்.

25. ஏனெனில் சர்வேசுரனுடைய பைத்தியம் என்னப்படுவது மனுஷருடைய ஞானத்திலும் அதிக ஞானமாயிருக்கிறது. சர்வேசுரனுடைய பலவீனம் என்னப்படுவது மனுஷருடைய பலத்திலும் அதிகப்பலமாயிருக்கிறது.

26. ஏனெனில் சகோதரரே, நீங்கள் அழைக்கப்பெற்ற அழைப்பைப் பாருங்கள். உங்களுக்குள் மாம்சத்தின்படி ஞானிகளும் அநேகரில்லை, பராக்கிரமரும் அநேகரில்லை, பிரபுக்களும் அநேகரில்லை.

27. ஞானிகளை நாணச்செய்யச் சர்வேசுரன் உலகத்தின் பைத்தியமானவைகளைத் தெரிந்துகொண்டார். பலமானவைகளை நாணச்செய்யச் சர்வேசுரன் பலவீனமானவைகளைத் தெரிந்துகொண்டார்.

28. உள்ளவைகளை அழிக்கும்படி சர்வேசுரன் உலகத்தில் இழிவானவைகளையும், நீசமானவைகளையும், இல்லாதவைகளையும் தெரிந்துகொண்டார்.

29. ஏனெனில் மாம்சமான எவனும் அவருடைய சமுகத்தில் பெருமை பாராட்டாதபடிக்கு அப்படிச் செய்தருளினார்.

21. தேவ ஞானத்திற்கேற்க உலகமானது தன் ஞானத்தைக்கொண்டு சர்வேசுரனை அறிவதெப்படி? உரோமர் நிருபம் முதல் அதிகாரத்தின் கடைசியில் சொல்லியிருக்கிறபடியே வானம், பூமி, இவை முதலான படைப்புக்களிடத்தில் சர்வேசுரன் தம்முடைய ஞானத்தையும் வல்லப முதலான மற்ற இலக்ஷணங்களையும் மிகவுந் துலக்கமாய் விளங்கப் பண்ணியிருக்கிறார். அதினாலே அந்தச் சிர்ஷ்டிப்புகள் சர்வேசுரனை இடைவிடாமல் பிரசங்கித்துக்கொண்டுவரும் புஸ்தகமென்று சொல்லப்படும். இவ்வுலக ஞானிகள் தங்கள் சுபாவ ஞானத்தையும், புத்தி விவேகத்தையுங்கொண்டு அந்தப் புஸ்தகத்திலே வாசிக்கிறாப்போலே படைப்புண்ட வஸ்துக்களில் விளங்குகிற சர்வேசுரனுடைய ஞான முதலான இலக்ஷணங்களைக் கண்டு, அந்த இலக்ஷணங்களையுடையவர் மெய்யான கடவுளென்று நிச்சயித்து, அவரை ஆராதித்து வரவேண்டியதாயிருந்தது. ஆனால் அவ்விதம் மனிதர் அறிந்துகொள்ளாததினாலே சர்வேசுரன் தம்மை அறிவிக்கும் இந்த வகையை விட்டு, இனி உலோகத்தாருடைய புத்திக்குப் பைத்தியமாகத்தோன்றும் சிலுவையின் பிரசங்கத்தினாலே தம்மை அவர்களுக்கு அறிவிக்கச் சித்தமானாரென்று அர்ச். சின்னப்பர் தெரிவிக்கிறார்.

22. பழைய ஏற்பாட்டிலும், புதிய ஏற்பாட்டிலும் யூதர்கள் நடுவில் சர்வேசுரன் எண்ணிக்கைக்குள்ளடங்காத அற்புதங்களைச்செய்து வந்தபடியால், அந்தப் பழக்கத்தினிமித்தம் யூதர்கள் சுவிசேஷத்தை விசுவசிக்கும்படிக்கு அதை அவர்களுக்குப் பிரசங்கிக்கிறவர்களிடத்தில் அற்புதங்களைக் காண விரும்பினார்கள். அக்காலத்திலிருந்த அஞ்ஞானசாஸ்திரிகளோவென்றால், சாஸ்திர சாதுரியமாய்ப் பேசுவதிலே பழகியிருந்தபடியால், அவர்கள் தங்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க வருகிறவர்களும் சாஸ்திர சாதுரிய சாமார்த்தியமாகவே பிரசங்கிக்கவேண்டுமென்று விரும்பினார்கள்.

30-31. அவர் மூலமாகவே நீங்கள் யேசுக்கிறீஸ்துநாதரிடத்தில் அழைக்கப்பட்டவர்களாயிருக்கிறீர்கள். (வேதத்தில்) எழுதியிருக்கிறதுபோல மேன்மைபாராட்டுகிறவன் கர்த்தரிடம்மேன்மைபாராட்டும்படிக்கு இவர் சர்வேசுரனாலே நமக்கு ஞானமும், நீதியும், அர்ச்சிப்பும், இரட்சிப்புமாயிருக்கிறார். (எரே. 23-5, 9-23, 24; 2. கொ. 10-17.)

## 2-ம். அதிகாரம்.

*சின்னப்பர் சிலுவையில் அறையுண்ட யேசுநாதரைப்பற்றிக் கொரிந்தியருக்கு தாம் இயல்பான வார்த்தைகளால் பிரசங்கித்ததாகச் சொல்லுகிறார்.*

1. அப்படியே, சகோதரரே, நான் உங்களிடத்தில் வந்தபோது கிறீஸ்துநாதரைப்பற்றிய சாட்சியத்தைச் சிறந்தோங்கிய வாக்கியத்தினாலும், ஞானத்தினாலும் அறிவிக்கிறவனாக வரவில்லை. (1. கொ. 1-17.)

2. எப்படியெனில், உங்களுக்குள்ளே நான் யேசுக்கிறீஸ்துநாதரை, சிலுவையில் அறையப்பட்ட அவரையேயன்றி வேறொன்றையும் அறிந்தவனாயிருக்க வேண்டுமென்று எண்ணவில்லை.

3. அல்லாமலும் நான் உங்களிடத்தில் பலவீனத்தோடும், பயத்தோடும், மிகுந்த நடுக்கத்தோடும் இருந்தேன். (அப். 18-1.)

4-5. உங்கள் விசுவாசம் மனிதருடைய ஞானத்தில் அல்ல, சர்வேசுரனுடைய வல்லமையில் ஊன்றிநிற்கும்படிக்கு என் பேச்சும், பிரசங்கமும், மனிதருடைய ஞானத்துக்குரிய நயமான வார்த்தைகளில் அல்ல, இஸ்பிரீத்துவையும், வல்லமையையுங்காண்பிப்பதில் அடங்கியிருந்தது. (2. இரா. 1-16.)

6. அப்படியிருந்தும், நாங்கள் உத்தமர்களுக்குள்ளே ஓர் ஞானத்தைப் போதிக்கிறோம். அது இந்த உலகத்தின் ஞானமும் அல்ல, அழிந்துபோகிறவர்களாகிய இவ்வுலக பிரபுக்களுடைய ஞானமும் அல்ல.

7. உலக ஆரம்பத்துக்குமுன்னே சர்வேசுரன் நம்முடைய மகிமைக்காக முன்னியமித்ததும், மறைக்கப்பட்டதுமாயிருந்த இரகசியமான தேவஞானத்தையே போதிக்கிறோம். (எபே. 8-5.)

8. இந்த ஞானத்தை இப்பிரபஞ்சத்தின் பிரபுக்களில் ஒருவனும் அறியவில்லை. அறிந்திருந்தால், மகிமையின் கர்த்தரை ஒருபோதுஞ் சிலுவையில் அறைந்திருக்கமாட்டார்கள். (அப். 3-15.)

9. ஆனால் எழுதப்பட்டிருக்கிறபடியே சர்வேசுரன் தம்மை நேசிக்கிறவர்களுக்கு ஆயத்தம்பண்ணியிருக்கிறவைகளைக் கண் கண்டதுமில்லை; காது கேட்டதுமில்லை; மனிதருடைய இருதயத்திற்கு அவைகள் எட்டினதுமில்லை. (இசை. 64-4.)

7. உலக ஆரம்பத்துக்கு முன்னே சர்வேசுரன் தம்முடைய தோத்திரத்துக்காகவும் நம்முடைய மகிமைக்காகவும் ஏற்படுத்தினதும் இரகசியத்தில் மறைக்கப்பட்டதுமாயிருந்த தேவஞானமேதென்றால், ஏக திரித்துவத்தின் இரண்டாம் ஆளாகிய அவதரித்த சுதனாகிய சர்வேசுரன் நம்மை இரட்சிக்கிறதற்கும் நீதிமான்களாக்குகிறதற்கும் மோட்சத்தில் நம்மை மகிமைப்படுத்துகிறதற்கும் மாம்ச ஐக்கியம் எடுக்கவேணுமென்று அர்ச். தமதிரித்துவம் அநவரதகாலமாய்த் தீர்மானித்திருந்தது. ஆகிலும் இது நிறைவேறுந்தனையும் உலகத்துக்கு முழுதும் மறைக்கப்பட்டிருந்ததன்றியே பிதாப்பிதாக்களுக்கு முதலாய் மறைவான பொருளாக அறிவிக்கப்பட்டிருந்தது. அந்த மாம்ச ஐக்கிய தேவரகசியத்தில் அடங்கியிருக்கிற அநேக மேலான பரம ரகசியங்களை உத்தமதனத்தை யடைந்தவர்களுக்கு மாத்திரம் அர்ச். சின்னப்பர் பிரசங்கித்துக்கொண்டுவந்தார். அந்தத் தேவ ரகசியத்திலே நிறைவேறவேண்டியிருந்த திருப்பாடுகளையும், அதினால் மனுஷர் மோட்சத்தில் அடையப்போகிற உன்னதமகிமை பாக்கியத்தையும், உலக பிரபுக்களும் பசாசுகளுமுதலாய் முந்தி அறியாதிருந்தார்கள். அறிந்திருந்தால் பிரபுக்கள் அவரைச் சிலுவையிலே அறைந்திருக்கமாட்டார்கள், பசாசுகளும் அதற்கு அவர்களை ஏவுதல் பண்ணியிருக்கமாட்டாதென்று அர்த்தமாமே.

10. நமக்கோ சர்வேசுரன் (அவைகளைத்) தம்முடைய இஸ்பிரீத்துவைக் கொண்டு வெளிப்படுத்தியிருக்கிறார். ஏனெனில் இஸ்பிரீத்துவானவர் எல்லாவற்றையும், சர்வேசுரனிடத்தில் ஆழ்ந்திருப்பவைகளை முதலாய் ஊடுருவிப் பார்க்கிறார்.

11. எப்படியெனில், மனிதனுக்குரியவைகளை மனிதனிடத்திலுள்ள அவனுடைய ஆத்துமமேயன்றி மனிதருக்குள் எவன் அறிவான்? அப்படியே சர்வேசுரனுக்குரியவைகளைச் சர்வேசுரனுடையஇஸ்பிரீத்துவானவரேயன்றி வேறெவனும் அறியான்.

12. நாமோ இவ்வுலகஞானத்தைப் பெற்றுக்கொள்ளாமல் சர்வேசுரனாலே நமக்கு அளிக்கப்பட்டவைகளை அறிந்துகொள்ளும்படிக்குச் சர்வேசுரனிடத்திலிருந்து வருகிற இஸ்பிரீத்துவையே பெற்றிருக்கிறோம்.

13. அவைகளையே நாம் பேசுகிறோம். ஆகிலும் மனுஷ ஞானத்தின் உயர்ந்த வார்த்தைகளினாலல்ல, இஸ்பிரீத்து (சாந்துவானவர்) நம்மைப் படிப்பிக்கிறபடியே ஞானமானவைகளை ஞானமானவைகளோடு ஒப்பிட்டுப் பேசுகிறோம். (1. கொ. 1-17 ; 27-14; 2. இரா. 1-16.)

14. மிருக சார்பான மனுஷனோ தேவ இஸ்பிரீத்துவானவருக்குச் சம்பந்தப்பட்டவைகளைக் கண்டுபிடியான். அவைகள் அவனுக்குப் பைத்தியமாகத் தோன்றும். அவைகள் ஞானத்துக்கேற்றதன்மையாய் ஆராயப்படுவதால், அவன் அவைகளைக் கண்டுபிடிக்கமாட்டான்.

15. ஆனால் இஸ்பிரீத்துவையுடையவன் எல்லாவற்றையும் நிதானிக்கிறான். ஆயினும் அவன் மற்றொருவனாலும் நிதானிக்கப்படுகிறதில்லை.

16. ஏனெனில் கர்த்தருக்குப் போதிக்கும்படி அவருடைய சிந்தனையை அறிந்தவன் யார்? எங்களுக்கோ கிறீஸ்துநாதருடைய சிந்தை உண்டாயிருக்கிறது. (ஞா. 9-13; இசை. 40-13; உரோ. 11-34.)

## 3-ம். அதிகாரம்.

தேவ ஊழியரும் சர்வேசுரனுக்குக் கணக்குக் கொடுக்க வேண்டியவர்களுமாகிய போதகர்களைப்பற்றிக் கொரிந்தியர் தர்க்கித்ததைக்குறித்துச் சின்னப்பர் அவர்களைக்கண்டித்ததும், கிறீஸ்துநாதர் விசுவாசத்துக்கு அஸ்திவாரமென்றும், கிறீஸ்துவன் சர்வேசுரனுடைய ஆலயமென்றுங் காண்பித்ததும்.

1. அன்றியும் சகோதரரே, நான் உங்களை ஞானிகளாகப் பாவித்துப் பேசக்கூடாமல், மாம்சத்துக்குரியவர்களாகவும், கிறீஸ்துநாதரிடத்தில் குழந்தைகளாகவும் எண்ணிப் பேசவேண்டியதாயிற்று.

2. உங்களுக்குப்போஜனத்தையல்ல, பாலையே குடிக்கக்கொடுத்தேன். ஏனெனில் அப்போது உங்களுக்குச் சக்தியில்லாமலிருந்தது. இன்னமும் நீங்கள் மாம்சத்துக்குரியவர்களாய் இருக்கிறதினாலே இப்பொழுதும் உங்களுக்குச் சக்தியில்லை.

14-15-16. இஸ்பிரீத்துசாந்துவின் வரப்பிரசாதத்தினாலே பிரகாசிக்கப்படாத லௌகீகச் சிந்தனையுள்ள மனிதர்கள் ஞானக்காரியங்களைக் கண்டுபிடியார்கள். அவைகள் அவர்களுக்குப் பைத்தியம் போல் தோன்றும். இஸ்பிரீத்துசாந்துவின் வரப்பிரசாதத்தை அடைந்தவனோவென்றால், ஞானக்காரியங்களைத் தெளிவாய்க் கண்டுபிடிக்கிறதுமல்லாமல் அவனிடத்திலே நடக்கிற தேவ ஏவுதலை உலகப் புத்தியுள்ள மனிதர் கண்டுபிடிக்கமாட்டார்கள். ஏனெனில், அவனுள்ளத்தில் முயற்சி செய்கிற ஆண்டவருடைய வரப்பிரசாதத்தை அவர்கள் அறிந்துகொள்ளவில்லை. நாங்களோ கிறீஸ்துநாதருடைய வரப்பிரசாதத்தை அடைந்து அவர்களைப்போதிக்கத்தக்க வகையறிந்தவர்களாயிருக்கிறோமென்று அர்த்தமாம்.

3. உங்களுக்குள்ளே பொறாமையும், சடுத்தமும் உண்டாயிருக்கிறபடியினாலே நீங்கள் மாம்சத்துக்குரியவர்களாயிருந்து, மனுஷனுக்கு இயற்கையான படி நடக்கிறீர்களல்லவா?

4. உங்களில் ஒருவன்: நான் சின்னப்பனுக்கும், வேறொருவன்: நான் அப்பொல்லோவுக்கும் சீஷனாயிருக்கிறேன் என்று சொல்லும்போது நீங்கள் (மாம்சத்துக்குரிய) மனுஷர்களல்லவோ? ஆகிலும் அப்பொல்லோதான் என்ன? சின்னப்பன்தான் என்ன?

5. கர்த்தர் அவனவனுக்குக் கொடுத்தருளின வரத்தின்படியே இவர்கள் நீங்கள் விசுவசித்திருக்கிறவருடைய ஊழியர்தானே.

6. நான் நட்டேன், அப்பொல்லோ நீர் பாய்ச்சினான். ஆனால் சர்வேசுரனே விளைவைத் தந்தார். (அப். 18-1, 27)

7. ஆதலால் நட்டவனும், நீர் பாய்ச்சினவனும் காரியமில்லை. விளையப்பண்ணுகிற சர்வேசுரனாலே காரியமாகிறது.

8. நடுகிறவனும், நீர் பாய்ச்சுகிறவனும் ஒன்றுதான். ஆயினும் அவனவன் தன்தன் வேலைக்குத்தக்க கூலியைப் பெற்றுக்கொள்ளுவான். (சங். 61-13; மத். 16-27: உரோ. 2-6; கலாத். 6-5.)

9. நாங்கள் சர்வேசுரனுடைய உதவியாட்களாயிருக்கிறோம். நீங்களோ சர்வேசுரனுடைய வெள்ளாண்மையும், சர்வேசுரனுடைய கட்டிடமுமாயிருக்கிறீர்கள்.

10. எனக்கு அளிக்கப்பட்ட தேவவரப்பிரசாதத்தின்படியே புத்தியுள்ள சிற்பாசாரியைப்போல நான் அஸ்திவாரம் போட்டேன். வேறொருவன் அதின்மேல் கட்டியெழுப்புகிறான். ஆதலால் அவனவன் தான் இன்னவித மாய்க் கட்டுகிறானென்று பார்த்துக் கொள்ளக்கடவான்.

11. போடப்பட்டிருக்கிற அஸ்திவாரமாகிய யேசுக்கிறீஸ்துநாதரையல்லாமல் வேறே எந்த அஸ்திவாரத்தையும் எவனும் போடவொண்ணாது.

12. ஒருவன் அந்த அஸ்திவாரத்தின்மேல் பொன், வெள்ளி, விலையேறப்பெற்ற கல், மரம், புல், வைக்கோல் இவைகளைக் கட்டினால்,

9. நீங்கள் சர்வேசுரனுடைய கட்டிடமாயிருக்கிறீர்களென்று அர்ச். சின்னப்பர் 9-ம் வசனத்தில் சொன்னபிறகு அந்த உவமையைத் தொடர்ந்து, விவேகமுள்ள சிற்பாசாரியைப்போல நான் அந்த ஞான மாளிகையின் அஸ்திவாரத்தைப் போட்டேன்; அதாவது: கிறீஸ்துநாதரைப் பற்றும் விசுவாசத்தில் உங்களை உட்படுத்தி, ஞானஸ்நானத்தினாலே உங்களைச் சர்வேசுரனுடைய பிள்ளைகளாக்கினேன். அந்த அஸ்திவாரத்தின்மேல் ஆண்டவருடைய ஞான மாளிகையானது நாளுக்கு நாள் உயர்ந்து சிறப்பான வேலைப்பாடாகவேண்டும். அதாவது: நீங்கள் கிறீஸ்துநாதரைப்பற்றும் விசுவாசத்தில் நாளுக்கு நாள் அதிகரித்து ஞான அறிவிலும், புண்ணிய முயற்சியிலும், வளர்ந்து அந்த ஞான உப்பரிகையின் கொடுமுடியாகிய அர்ச்சியசிஷ்டதனத்தை அடையும்வரைக்கும் பிரயாசப்படவேண்டும்.

12. ஆனால் நான் போட்ட அஸ்திவாரத்தின்மேல் கட்டிடங் கட்டுகிற வேலைக்காரர் எவர்களாகிலுஞ் சரி, அதின்மேல் தாங்கள் சேகரித்துக் கட்டுகிற பொருள் பொன்னோ, வெள்ளியோ, இரத்தினங்களோ, அல்லது மரமோ, புல்லோ, கூளமோ, எதைக்கொண்டு அதைக் கட்டுகிறார்களென்று பார்த்துக்கொள்ளக்கடவார்கள். அதாவது: நான் உங்களுக்குப் போதித்த உபதேசத்தின்மேல் எனக்குப்பிறகு வந்த உங்கள் போதகர்கள் தூய தங்கத்துக்குஞ் சுத்த வெள்ளிக்கும் விலையுயர்ந்த இரத்தினங்களுக்கு ஒப்பான மெஞ்ஞான உபதேசத்தை உங்களுக்குப் போதிக்கிறார்களோ, அல்லது மரம், புல், கூளத்துக்கொப்பான லௌகீகத்துக்குரிய வீண் பெருமை சலாக்கியத்தைத் தேடி உலகத்துக்கடுத்த சாதுரிய

13. அவனவனுடைய வேலைப்பாடு வெளியாகும். ஆண்டவருடைய நாளானது அதை விளங்கப்பண்ணும். ஏனெனில் அது அக்கினியினாலே வெளிப்படுத்தப்படும். அவனவனுடைய வேலைப்பாடு எத்தன்மையுள்ளதென்று அக்கினியே பரிசோதிக்கும்.

14. அதின்மேல் ஒருவன் கட்டின வேலைப்பாடு நிலைத்தால், அவன் சம்பாவனையடைவான்.

15. ஒருவனுடைய வேலைப்பாடு எரிந்துபோனால், அவன் நஷ்டப்படுவான். அவனோ இரட்சிக்கப்படுவான், என்றாலும் அக்கினியில் அகப்பட்டுத் தப்பினதுபோலாகும்.

16. நீங்கள் சர்வேசுரனுடைய ஆலயமாயிருக்கிறீர்களென்றும், சர்வேசுரனுடைய இஸ்பிரீத்துசாந்துவானவர் உங்களுக்குள்ளே வாசம் பண்ணுகிறாரென்றும் அறியீர்களோ? (உரோ. 8-2; எபே. 2-21.)

17. ஒருவன் சர்வேசுரனுடைய ஆலயத்தைப் பங்கப்படுத்தினால், சர்வேசுரன் அவனை நிர்மூலமாக்குவார். சர்வேசுரனுடைய ஆலயம் அர்ச்சிக்கப்பட்டதாயிருக்கின்றது; நீங்களே அந்த ஆலயம். (1. கொ. 6-19.)

18. ஒருவனும் தன்னைத்தான் ஏய்க்க வேண்டாம். இப்பிரபஞ்சத்தில் உங்களில் ஒருவன் தன்னை ஞானியென்று நினைத்தால், அவன் ஞானியாயிருக்கும்படிக்குப் பைத்தியகாரனாகக்கடவான்.

வசனங்களால் உங்களுக்குப் போதிக்கிறார்களோவென்று அவர்களே பார்த்துக்கொள்ளட்டும். நீங்களும் என்னிடத்தில் பற்றிக்கொண்ட அந்தவிசுவாசத்தின்மேல் தூய தங்கஞ் சுத்தவெள்ளி விலையுயர்ந்த இரத்தினங்களுக்கு ஒப்பான உத்தம புண்ணியமுயற்சிகளில் வளர்ந்துவருகிறீர்களோ, அல்லது உங்கள் புண்ணியக் கிரியைகளில் மரம், புல், கூளங்களுக்கொப்பான லௌகீக வீண் பாராட்டுதலையும் பெருமை சலாக்கியத்தையுந் தேடுகிறீர்களோ என்று பாருங்கள்.

13. ஏனெனில், ஆண்டவருடைய நாளிலே அவனவனுடைய வேலைப்பாடெல்லாம் அக்கினியினாலே சோதிக்கப்படும். எவனுடைய வேலைப்பாடு நிலைநிற்குமோ அவன் சம்பாவனை அடைவான். எவனுடைய வேலைப்பாடு வெந்துபோகுமோ அவன் நஷ்டமடைவான். ஆகிலும் அவன் பிழைப்பான். ஆனால் நெருப்பிலகப்பட்டுத் தப்பினாற்போலாகும். அதாவது: தனித்தீர்வைநாளிலே, அவனவன் செய்த புண்ணியக் கிரியைகளெல்லாம் ஆத்துமங்களைச் சோதித்துப் பரிசுத்தமாக்குகிற உத்தரிப்புஸ்தலத்தின் அக்கினியினாலே பரிசோதிக்கப்பட்டு, உயிருள்ள விசுவாசத்துக்குரிய சுகிர்த கருத்தோடேயுந் தீப்பொறிக்கொத்த சுறுசுறுப்போடேயும் புண்ணியங்களைச் செய்துகொண்டுவந்தவன் உத்தரிப்புஸ்தலத்தின் நெருப்பினால் சுட்டெரிக்கப்படத்தக்கதொன்றுமில்லாமல் அந்தப் புண்ணியபேறுக்கேற்ற சம்பாவனையை உடனே மோட்சத்திலே அடையப்போவான். சொல்லப்பட்ட பெருமை சலாக்கிய முதலிய வீண் முகாந்திரங்களைப்பற்றிப் புண்ணியங்களைச் செய்தவனோ உத்தரிப்புஸ்தலத்தின் நெருப்பினால் சோதிக்கப்படும்போது, அந்தக் குறையுள்ள புண்ணியங்களினிமித்தம் வேதனைப்படுவானொழிய, அதுக்குச் சம்பாவனையொன்றும் அடையான். ஆகிலும் அவன் மரணபரியந்தங் கிறீஸ்துநாதரைப் பற்றும் விசுவாசத்தில் நிலைத்திருந்ததினாலும், அவிசுவாசத்தினாலேயாவது சாவான பாவத்தினாலேயாவது தேவ இஷ்டப்பிரசாதத்தைப் போக்கடியாததினாலும் அவன் மோட்சத்திலே சேருவான் என்கிறதற்குச் சந்தேகப்பட இடமில்லையென்றர்த்தமாம்.

17. யாதாமொருவன் துர்ப்போதகத்தினாலே உங்களை விசுவாசத்தில் தவறப்பண்ணுவானாகில், அப்படிப்பட்டவன் பரிசுத்த தேவாலயமாகிற உங்கள் ஆத்துமத்தைக் கெடுக்கிறபடியினாலே சர்வேசுரன் அவனைப் பழிவாங்கி நரகாக்கினைக்குத் தீர்வையிடுவாரென்று அர்த்தமாம்.

19. ஏனெனில் இவ்வுலகத்தின் ஞானம் சர்வேசுரனுடைய சமுகத்தில் பைத்தியமாயிருக்கின்றது. இதற்கொத்தவண்ணம்: ஞானிகளை அவர்களுடைய சூட்சத்திலே பிடிப்பேன் என்றும், (யோப். 5-13.)

20. மற்றோரிடத்தில்: ஞானிகளுடைய சிந்தனைகள் விழலாயிருக்கிறதென்று கர்த்தர் அறிந்திருக்கிறார் என்றும் எழுதப்பட்டிருக்கின்றது. (சங்.9-12.)

21. இப்படியிருக்க, ஒருவனும் மனிதனைப்பற்றி மேன்மைபாராட்டாதிருப்பானாக.

22. ஏனெனில் எல்லாம் உங்களுடையவைகளே; சின்னப்பனாகிலும், அப்பொல்லோவாகிலும், கேபாவாகிலும், உலகமாகிலும், உயிராகிலும், மரணமாகிலும், நிகழ்காரியங்களாகிலும், வருங்காரியங்களானாலும் எல்லாம் உங்களுடையவைகளே.

23. நீங்களோ கிறீஸ்துநாதருடையவர்கள். கிறீஸ்துநாதரோ சர்வேசுரனுடையவர்.

## 4-ம். அதிகாரம்.

தங்கள் போதகர்களைக் குறையாக எண்ணவொண்ணாதென்றும், தாங்கள் பெற்றுக்கொண்டவைகளைப்பற்றி மேன்மை பாராட்டவேண்டாமென்றும் சின்னப்பர் போதிக்கிறார்.

1. இப்படியாக எந்த மனுஷனும் எங்களைக் கிறீஸ்துநாதருடைய ஊழியக்காரர்களாகவும், சர்வேசுரனுடைய பரம இரகசியங்களைப் பகிருகிறவர்களாகவும் எண்ணிக்கொள்ளக்கடவான். (2. கொ. 6-4.)

2. இப்பொழுதோ, பரிமாறுகிறவர்களுக்குள்ளே பிரமாணிக்கனாகக் காணப்படுகிறவன் யாரென்று விசாரிக்கப்படுகிறது.

---

19-20. உங்களில் சிலர் லௌகீக சாஸ்திரங்களில் தேறினவர்களாய் ஞானிகளென்று பேரடைந்தபடியால், சுவிசேஷ சத்தியங்களைத் தங்கள் லௌகீக சாஸ்திர சாமார்த்தியப்படிக்குக் கண்டுபிடிக்கவும் போதிக்கவுந் துணிகிறார்கள். அப்படிப்பட்டவர்கள் சர்வேசுரனுடைய சமுகத்தில் மெய்யான சாஸ்திரிகளும், மெய்யான ஞானிகளுமாயிருக்க விரும்பினால் அந்த லௌகீக சாஸ்திர சாதுரியங்களை எல்லாம் விட்டுவிட்டு ஒன்றுமறியாத சிறுபிள்ளைகளைப்போல் அந்த வேத சத்தியங்களை ஏற்றுக்கொண்டு விசுவாசித்து, அவைகளைத் தாழ்ச்சியோடும் அடக்கவொடுக்கத்தோடும் போதிக்கக்கடவார்களென்று அர்த்தமாம்.

22. ஆகையால் உங்களில் ஒருவன் எந்தப் போதகனைக் குறித்தும் மேன்மைப்பாராட்டுவானேன்? சின்னப்பனாவது, அப்பொல்லோவாவது, இராயப்பராவது, உலகமாவது, உயிராவது, மரணமாவது, நிகழ்காலமாவது, வருங்காலமாவது, எல்லாம் உங்கள் ஈடேற்றத்துக்கு உதவும்படிக்குச் சொந்தமாகக் கொடுக்கப்பட்டது. நீங்களோ, யேசுநாதருக்கும், யேசுநாதர் சர்வேசுரனுக்குஞ் சொந்தமானவர்கள். ஆகையால் எல்லாத்தையும் உங்களுக்குக் கொடுத்த சர்வேசுரனை மட்டும் மேன்மை பாராட்டி, அவருக்கு நன்றியறிந்த தோத்திரஞ் சொல்லுங்களென்று அர்த்தமாம்.

1-2. திருச்சபையின் மேற்றிராணிமார்களும், குருமார்களும் கிறீஸ்துநாதருடைய ஊழியக்காரருமாய்ச் சர்வேசுரனுடைய திரவிய அநுமானங்கள் முதலிய ஞான நன்மைகளை விசுவாசிகளுக்குப் பங்கிடுகிற உக்கிராணக்காரர்களுமாய் இருக்கிறார்கள். அவர்களிடத்திலிருக்க வேண்டிய பிரதான இலக்ஷணம் பிரமாணிக்கந்தான். அதாவது: தங்கள் சொந்தப் பிரயோசனத்தையாவது மகிமையையாவது தேடாமல் சர்வேசுரனுடைய தோத்திரத்தையும் ஆத்துமங்களின் பிரயோசனத்தையுந் தேடி நடக்கக்கடவார்கள் என்றர்த்தமாம்.

3. ஆயினும் நான் உங்களாலேயாவது, மனிதருடைய நியாயநாளின் விசாரணையினாலாவது தீர்ப்பிடப்படுவது ஒரு பொருட்டல்ல. நானும் என்னைத் தீர்ப்பிட்டுக்கொள்ளுகிறதில்லை.

4. என்மனசார என்னிடத்திலே ஒரு குற்றத்தையுங் காணேன். ஆகிலும் இதினாலே நான் நீதிமானாவதில்லை. என்னை நடுத்தீர்க்கிறவர் ஆண்டவர் தான்.

5. ஆதலால் ஆண்டவர் வருவதற்குள்ளாக நீங்கள் காலத்திற்கு முந்தித் தீர்ப்பிடாதேயுங்கள். அவர் இருளில் மறைந்திருக்கிறவைகளைத் துலக்கி, இருதயச் சிந்தனைகளையும் வெளியாக்குவார். அப்பொழுது அவனவனுக்கு உரிய புகழ்ச்சி சர்வேசுரனாலே உண்டாகும்.

6. சகோதரரே, நீங்கள் எழுதப்பட்டதற்குமேல் (போகாமலும்) இங்கே ஒருவன் நிமித்தம் ஒருவனொருவனோடு வீம்பு பாராட்டாமலும் இருக்கும்படி நீங்கள் எங்களிடத்திலே கற்றுக்கொள்ளவேண்டுமென்று, உங்கள் நிமித்தம் என்னையும் அப்பொல்லோவையும் உருவகமாய்ச் சாட்டிப் பேசினேன்.

7. ஏனெனில் உன்னை விசேஷமாக்கினவர் யார்? நீ பெற்றுக்கொள்ளாததேதேனும் உன்னிடத்தில் உண்டோ? நீ பெற்றுக்கொண்டவனாகில், பெற்றுக்கொள்ளாதவனைப்போல நீ மேன்மை பாராட்டுகிறதென்ன?

8. இதோ, நீங்கள் திர்ப்தியடைந்திருக்கிறீர்கள். இதோ, ஐசுவரியர்களாயிருக்கிறீர்கள். எங்களையல்லாமல் அரசாளுகிறீர்களே. நாங்களும் உங்களோடுகூட ஆளும்படியான விதமாய் நீங்கள் அரசாண்டாலல்லோ தாவிளை.

9. ஏனெனில் அப்போஸ்தலர்களாகிய எங்களைச் சர்வேசுரன் மரணத்தீர்ப்புக்குக் குறிக்கப்பட்டவர்களைப்போல எல்லாரிலும் கடையராகக் காண்பித்தாரென்று எண்ணுகிறேன். இதோ, நாங்கள் உலகத்துக்கும் சம்மனசுக்களுக்கும் மனிதருக்கும் வேடிக்கையானோம்.

10. நாங்கள் கிறீஸ்துநாதரைப்பற்றிப் பைத்தியகாரரானோம், நீங்களோ கிறீஸ்துநாதரிடத்தில் விவேகிகளானீர்கள்; நாங்கள் பலவீனர், நீங்கள் பலவான்கள்; நீங்கள் மேலானவர்கள், நாங்கள் கீழானவர்கள்.

11. இந்நேரம் வரைக்கும் பசியும் தாகமும் அநுபவிக்கிறோம். நிர்வாணிகளாகவும், குட்டுப்பட்டவர்களாகவும், இல்லிடமற்றவர்களாகவும் இருக்கிறோம்.

12. எங்கள் கைகளினாலே உழைத்துப் பாடுபடுகிறோம். எங்களைத் திட்டுகிறார்கள், நாங்கள் ஆசீர்வதிக்கிறோம். எங்களைத் துன்பப்படுத்துகிறார்கள், நாங்கள் சகித்துக்கொள்ளுகிறோம். (மத். 5-44; அப். 20-34; 1. தெச. 2-9.)

6. நான் நாட்டினேன், அப்பொல்லோ நீர் பாய்ச்சினான். சின்னப்பன் யார்? அப்பொல்லோ யார்? கிறீஸ்துநாதருடைய ஊழியரல்லாமல் வேறல்லவென்று நான் எழுதியிருந்தாலும், சகோதரரே, எங்கள் இருவரைக்குறித்து மாத்திரம் நான் பேசுகிறேனென்று நீங்கள் நினைக்க வேண்டாம். உங்களுக்குள்ளே உண்டான சடுத்தங்களுக்குக் காரணமாயிருக்கிற உங்களிடத்திலுள்ள மற்றப் போதகரைக் குறித்துஞ் சொல்லியிருக்கிறேன். உங்களுக்குக் கஸ்தி வராதிருக்கும்படியாகவே, இதிலே அவர்களைப் பேர் பேராகக் குறிக்கவில்லை. ஆனால் எங்கள் இருவரையுங்குறித்துச் சொன்னதை அவர்களைக்குறித்துஞ் சொன்னதாகப் பாவித்துக்கொண்டு, அவர்களும் யேசுநாதருடைய ஊழியக்காரரொழிய வேறொன்றுமல்லவென்று நீங்கள் அறிந்து அவர்களைப்பற்றி உங்களுக்குள்ளே உண்டாயிருக்கிற சடுத்தங்களை விட்டுவிடுங்களென்று அர்த்தமாம்.

13. எங்களைத் தூஷணிக்கிறார்கள், நாங்கள் பிரார்த்திக்கிறோம். இந்நாள் வரையிலும் நாங்கள் இவ்வுலகத்தின் குப்பைபோலவும், கழிவுபோலவுமானோம்.

14. உங்களை வெட்கப்படுத்தும்படிக்கு நான் இதை எழுதவில்லை. ஆனால் எனக்கு மிகவும் பிரியமான பிள்ளைகளைப்போல உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.

15. ஏனெனில் கிறிஸ்துநாதர்பேரால் உங்களுக்கு உபதேசிகள் பதினாயிரமிருக்கலாயினும், உங்களுக்குத் தந்தைகள் பலரல்லவே. ஏனெனில் உங்களை நானே சுவிசேஷத்தின் வழியாய் யேசுக்கிறிஸ்துநாதரிடத்தில் பெற்றேன். (கலாத். 4-19.)

16. ஆதலால் நான் கிறிஸ்துநாதரைக் கண்டுபாவிக்கிறதுபோல நீங்களும் என்னைக் கண்டுபாவிக்க உங்களை மன்றாடுகிறேன்.

17. இதினிமித்தம் எனக்கு மிகவும் பிரியமான குமாரனும், கர்த்தரிடத்தில் பிரமாணிக்கனுமாகிய திமோத்தேயுவை உங்களிடத்தில் அனுப்பினேன். நான் எங்கும் எந்தச் சபையிலும் போதித்து வருகிறபிரகாரம் யேசுக்கிறிஸ்துநாதரிடத்தில் நடந்துவருகிறேனென்று அவர் உங்களுக்கு ஞாபகப்படுத்துவார்.

18. நான் உங்களிடத்தில் திரும்பி வரப்போகிறதில்லையென்றாற்போலச் சிலர் இப்படி வீம்பு பாராட்டுகிறார்கள்.

19. ஆகிலும் ஆண்டவருக்குச் சித்தமானால், சீக்கிரத்தில் உங்களிடத்தில் வருவேன். அப்போது வீம்புக்காரருடைய பேச்சையல்ல, அவர்களுடைய வல்லமையை அறிந்துகொள்ளுவேன்.

20. ஏனெனில் சர்வேசுரனுடைய இராச்சியம் பேச்சுவார்த்தைகளிலல்ல, பலத்தில் அடங்கியிருக்கிறது.

21. உங்களுக்கு என்னவேண்டும்? நான் உங்களிடத்தில் பிரம்புடனே வரவேண்டுமோ, அன்போடும் சாந்தமனதோடும் வரவேண்டுமோ (சொல்லுங்கள்.) (2. கொ. 13-10.)

## 5-ம். அதிகாரம்.

பிரசித்தமான காமாதுரனை அவர்கள் விலக்காமலிருந்ததை முன்னிட்டு அவர்களைக் கண்டித்ததும், அப்படிப்பட்டவர்களோடு புழங்காதிருக்கக் கற்பித்ததும்.

1. உங்களுக்குள்ளே விபசாரமுண்டென்று பிரசித்தமாய்க் கேள்வியாகிறதே. அதுவும் அஞ்ஞானிகளுக்குள்ளேமுதலாய்க் கேள்விப்படாத விபசாரமாயிருக்கின்றது. அதாவது: ஒருவன் தன் தகப்பனுடைய மனைவியை வைத்திருக்கிறானே. (லேவி. 18-7.)

2. இப்படிப்பட்ட கிரியையைச் செய்தவனை உங்களைவிட்டகற்றி, நீங்கள் துக்கப்படுவதற்குப்பதிலாய் வீம்பு பாராட்டுகிறீர்கள்.

3. நான் சரீரத்தால் தூர இருந்தாலும், என் மனது உங்களோடிருப்பதால், நான் உங்கள் நடுவிலிருந்தாற்போல இவ்விதக்கிரியையைச் செய்தவன்மேல் தீர்ப்புச் சொல்லியிருக்கிறேன். (கொலோ. 2-5.)

---

13. 7-ம் வசன முதல் 13-ம் வசனம் வரைக்கும் அர்ச். சின்னப்பர் கொரிந்தியர் சபை நடுவில் தங்களை மேன்மைப் பாராட்டி அவரை இகழ்ச்சியாய்ப் பேசிவந்த சில போதகர்களை நோக்கி அவர்களைப் பரியாசமாகப் புகழ்ந்து தம்மைத் தாழ்த்துகிற வகையினாலே அவர்களைக் கண்டிக்கிறார்.

21. 14-ம் வசனந் துவக்கி 20-ம் வசனம் வரைக்கும் சபையாரைத் தானே நோக்கிப் பேசுகிறார். 20-ம் வசன முதல் கடைசிவரைக்கும் முன் சொல்லப்பட்ட போதகர்களை நோக்கிப் பேசுகிறாரென்றறிக.

4. நீங்களும் என் மனதும் நமது ஆண்டவராகிய யேசுநாதருடைய வல்லமையோடு ஒன்றாய்க் கூடியிருக்க, நான் நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய பேரால்

5. இவ்வித மனிதனுடைய ஆத்துமம் நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடையநாளிலே இரட்சணியம் அடையும்படி, அவனுடைய மாம்சத்துக்குக்கேடாக அவனைச் சாத்தானுக்குக் கையளிக்கத் தீர்மானித்தேன்.

6. நீங்கள் மேன்மைபாராட்டுகிறது சரியல்ல. புளிப்பான கொஞ்சம் மாவு பிசைந்த மாவு முழுமையையும் புளிப்பாக்குமென்று அறியீர்களோ? (கலாத். 5-9.)

7. நீங்கள் புளியாத மாவாயிருக்கக்கொள்ள, புதிதாய்ப் பிசைந்த மாவாயிருக்கும்படிக்குப் பழைய புளித்தமாவைக் கழித்துத் தள்ளுங்கள். ஏனெனில் நம்முடைய பாஸ்காவாகிய கிறீஸ்துநாதர் பலியிடப்பட்டிருக்கிறார்.

8. ஆகையால் புளித்தமாவையுமல்ல, துர்க்குணம், அக்கிரமமென்கிற புளித்த மாவையுமல்ல; நேர்மையும் சத்தியமுமாகிய புளியாத அப்பத்தைப் புசித்து விருந்தாடுவோமாக.

9. விபசாரக்காரரோடு புழங்கக்கூடாதென்று ஒரு நிருபத்தில் உங்களுக்கு எழுதினேன்.

10. ஆகிலும் நான் எழுதினது இவ்வுலகத்தாராகிய விபசாரக்காரர், பொருளாசைக்காரர், கொள்ளைக்காரர், விக்கிரக ஆராதனைக்காரர்களாகிய இவர்களைக்குறித்தல்ல; இல்லாவிட்டால் நீங்கள் இவ்வுலகத்தைவிட்டு அப்பால் போய்விட வேண்டியதாயிருக்குமே.

11. ஆனால் சகோதரன் என்னப்பட்ட ஒருவன் விபசாரக்காரனாயாவது, பொருளாசைக்காரனாயாவது, விக்கிரக ஆராதனைக்காரனாயாவது, உதாசனப்பேச்சுக்காரனாயாவது, குடிவெறியனாயாவது, கொள்ளைக்காரனாயாவது இருப்பானாகில், அப்படிக்கொத்தவனோடு புழங்கப்படாதென்றும், போஜனமுதலாய்ப் பண்ணப்படாதென்றும் உங்களுக்கு எழுதினேன்.

5. மூர்க்கரான பெரும் பாவிகளைச் சபிக்கும் முறைமை இதிலே காண்பிக்கப்படுகிறது. எப்படியெனில் 1-வது. அந்த முறைமை அப்போஸ்தலர்களாலே ஸ்தாபிக்கப்பட்டுத் திருச்சபையில் மேலான அதிகாரமுடையவர்களால் நடத்தப்படுகிறது. 2-வது. அந்தச் சாபம் நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய நாமத்தினாலே இடப்படுகிறது. 3-வது. கூடின திருச்சபையின் சமுகத்திலிடப்படுகிறது. 4-வது. அழுகின அவயவத்தால் சரீரத்துக்குச் சேதமுண்டாகாதபடிக்கு அதை வெட்டியெறிந்து போடுகிறதுபோல, அப்படிப்பட்ட பாவி திருச்சபையினின்று விலக்கப்பட்டுச் சர்வேசுரனுடைய பிள்ளை என்கிற பட்டத்தையிழந்து சாத்தானுடையவனாய்ப் போகிறான். 5-வது. அப்படிப்பட்ட கேட்டைக்கண்டு, அவன் புத்தி தெளிந்து மனந்திரும்பி அவன் ஆத்துமம் இரட்சிக்கப்படும்படியாகச் சபிக்கப்படுகிறானென்றறிக.

8. யூதர்கள் பாஸ்கா ஆட்டுக்குட்டியைப் பலியிடுகிற நாளிலே புளியாத அப்பத்தைச் சாப்பிடவேண்டியதாயிருந்தது. அந்த அப்பம் அவர்கள் பாஸ்கா ஆட்டுக்குட்டியைப் புசிக்கிறதற்கு யோக்கியமான பரிசுத்தர்களாய் இருக்கிறார்களென்பதற்கு அடையாளமாயிருந்தது. அர்ச். சின்னப்பர் அந்தச் சடங்கை உவமையாக எடுத்துக்காட்டி: நம்முடைய பாஸ்கா ஆட்டுக்குட்டியாகிய கிறீஸ்துநாதர் உங்களுக்காகப் பலியிடப்பட்டிருக்கிறார்; நீங்களோ ஞானஸ்நானத்தினாலே பரிசுத்தமாக்கப்பட்டுப் புளிப்பற்ற அப்பத்துக்கு ஒப்பாயிருக்கிறீர்கள்; அப்படியே எப்போதும் நீங்கள் புளிப்பற்ற புதிய அப்பத்துக்கு ஒப்பாயிருக்கும்பொருட்டும், புளியாத அப்பத்தின் குணங்களுக்குள்ளே பலியிடப்படுகிற யேசுக்கிறீஸ்துநாதரை உட்கொள்ள எப்போதும் பாத்திரவான்களாயிருக்கும்பொருட்டும் பாவமென்கிற பழைய புளித்தமா உங்களைக் கெடுத்துப்போடாதபடிக்கு அதை உங்கள் நடுவிலிருக்கவொட்டாமல் தூர எறிந்துபோடுங்களென்று கற்பிக்கிறார்.

12. புறம்பாயிருக்கிறவர்களைப் பற்றித் தீர்ப்புச்செய்கிறது என்காரியமா? உள்ளே இருக்கிறவர்கள்மேலல்லோ நீங்கள் தீர்ப்பிடுகிறீர்கள்.

13. புறம்பே இருக்கிறவர்கள்மேல் சர்வேசுரனே தீர்ப்பிடுவார். நீங்களோ, உங்களைவிட்டு அந்தப் பொல்லாதவனை நீக்கிப்போடுங்கள்.

## 6-ம். அதிகாரம்.

கொரிந்தியர் அஞ்ஞான நடுவர் முன்பாக வியாச்சியமாடுகிறதினிமித்தம் அவர்களைக் கண்டித்து, மோட்ச இராச்சியத்தை இழந்துபோகப் பண்ணுகிற பிரதான பாவங்களைத் தொகுத்து அவைகளை விலக்கக் கற்பிக்கிறார்.

1. உங்களில் ஒருவனுக்கு வேறொருவனோடு வியாச்சியமிருக்கும்போது, அவன் அர்ச்சிக்கப்பட்டவர்களைவிட்டு அநீதரிடத்தில் தீர்ப்புக்குப் போகத் துணிகிறதென்ன?

2. அர்ச்சிக்கப்பட்டவர்கள் இவ்வுலகத்துக்குத் தீர்ப்பிடுவார்கள் என்று அறியீர்களோ? உலகம் உங்களால் தீர்வையிடப்படுவதாயிருக்க, அற்ப வழக்குகளைத் தீர்க்க நீங்கள் அபாத்திரரோ? (மத். 19-28.)

3. நாம் தேவதூதர்களையும் நடுத்தீர்ப்போமென்று அறியீர்களோ? அப்படியானால், இப்பிரபஞ்ச காரியங்களைப்பற்றித் தீர்க்காமலேன்?

4. ஆதலால் பிரபஞ்ச வழக்குகள் உங்களுக்கு உண்டானால், தீர்ப்புச்செய்வதற்குச் சபையில் அற்பமாய் எண்ணப்பட்டவர்களை நியமித்துக்கொள்ளுங்கள்.

5. உங்களுக்கு வெட்கமுண்டாகும்படி இதைச்சொல்லுகிறேன். இவ்விதமாய்த் தன் சகோதரர்களுக்குள்ளே உண்டான வழக்கைத் தீர்க்கக்கூடிய புத்திமான் ஒருவனாகிலும் உங்களுக்குள்ளே இல்லையோ?

6. ஆனால் சகோதரனோடே சகோதரன் வழக்காடுகிறான்; அதுவும் அவிசுவாசிகளிடத்திலல்லோ!

7. உங்களுக்குள் வழக்குண்டாயிருப்பதே எவ்விதத்திலும் உங்களுக்குக் குற்றமாயிருக்கிறது. அப்படிச் செய்வதைவிட அநீதத்தை ஏற்றுக்கொள்ளாமலேன்? மாறுபாட்டைச் சகித்துக்கொள்ளாமலேன்? (மத். 5-39; உரோ. 13-17; தெச. 4-6.)

8. ஆனால் நீங்களே அநீதம்பண்ணுகிறீர்கள், மாறுபாடு செய்கிறீர்கள்; அதுவுஞ் சகோதரர்மட்டில் அப்படிச் செய்கிறீர்கள்.

9. அநீதர்கள் சர்வேசுரனுடைய இராச்சியத்தைச் சுதந்தரித்துக்கொள்வதில்லை என்று அறியீர்களோ? மோசம்போகாதேயுங்கள். வேசிமார்க்கத்தாரும், விக்கிரக ஆராதனைக்காரரும், விபசாரக்காரரும்,

10. சிற்றின்பரும், ஆணும் ஆணுமாய் மோகிக்கிறவர்களும், திருடரும், உலோபிகளும், குடிவெறியரும், உதாசனரும், கொள்ளைக்காரரும் சர்வேசுரனுடைய இராச்சியத்தைச் சுதந்தரிப்பதில்லை.

11. உங்களில் சிலராயினும் இப்படிப்பட்டவர்களாய் இருந்தீர்கள். ஆனாலும் நம்முடைய கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துவின் நாமத்தினாலும் நம்முடைய தேவனுடைய இஸ்பிரீத்துவினாலும் கழுவப்பட்டிருக்கிறீர்கள், பரிசுத்தமாக்கப்பட்டிருக்கிறீர்கள், நீதிமான்களாக்கப்பட்டிருக்கிறீர்கள்.

2. அர்ச். மத். 19-ம் அதி. 28-ம் வசனத்தில் சொல்லப்பட்டிருக்கிறபடி அர்ச்சிக்கப்பட்டவர்கள் யேசுநாதர்சுவாமியோடுகூட பொதுத்தீர்வைநாளில் உலகத்துக்குத் தீர்வையிடுவார்கள்.

3. இவ்விடத்தில் தேவதூதர்களென்பது கெட்டுப்போன சம்மனசுகளாகிய பசாசுகளென்றறிக.

12 எல்லாவற்றிற்கும் எனக்கு உத்தரவுண்டு; ஆனாலும் எல்லாம் தகுந்ததல்ல எல்லாவற்றிற்கும் எனக்கு உத்தரவுண்டு; ஆயினும் நான் ஒன்றிற்கும் என்னை அடிமையாக்கிக்கொள்ள மாட்டேன்.

13. போஜனம் வயிற்றுக்கும், வயிறு போஜனத்துக்கும் ஏற்கும். ஆனால் சர்வேசுரன் இதையும் அதையும் அழித்துப்போடுவார். சரீரமோ காமத்துக்கல்ல, கர்த்தருக்கே உரியது: கர்த்தரும் சரீரத்துக்கு உரியவர்.

14. சர்வேசுரன் கர்த்தரை உயிர்ப்பித்தார். ஆனதால் நம்மையும் தம்முடைய வல்லபத்தினாலே உயிர்ப்பிப்பார்.

15. உங்கள் சரீரங்கள் கிறீஸ்துநாதருக்கு அவயவங்களென்று அறியீர்களோ? அப்படியிருக்க, கிறீஸ்துவின் அவயவங்களை எடுத்து, வேசியின் அவயவங்களாக்குவேனோ? பரிச்சேதமில்லை.

16. வேசியோடு இசைந்திருக்கிறவன் அவளோடே ஒரே சரீரமாகிறான் என்று அறியீர்களோ? எனெனில் இருவரும் ஒரே சரீரமாயிருப்பார்கள் என்று (வேதாகமத்தில்) சொல்லியிருக்கிறதே. (ஆதி. 2-24; மத. 19-5.)

17. கர்த்தரோடே சேர்ந்திருக்கிறவன் அவரோடே ஒரே ஞானரூபியாகிறான்.

18. விபசாரத்துக்கு விலகி நடங்கள். மனுஷன் செய்யலான (வேறே) எந்தப்பாவமும் சரீரத்துக்குப் புறம்பாயிருக்கின்றது. வேசித்தனஞ்செய்கிறவனோ தன் சொந்தச் சரீரத்துக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்கிறான்.

19. உங்கள் சரீரம் உங்களிடத்திலிருக்கிறவரும், சர்வேசுரனிடத்தில் நீங்கள் பெற்றுக்கொண்டவருமாகிய இஸ்பிரீத்துசாந்துவின் ஆலயமென்றும், நீங்கள் உங்களுக்குச் சொந்தமல்லவென்றும் அறியீர்களோ? (உரோ. 8-11; 2. கொ. 6-16.)

20. உயர்ந்த கிரயத்துக்குக் கொள்ளப்பட்டிருக்கிறீர்களே. ஆகையால் சர்வேசுரனை உங்கள் சரீரத்தில் கொண்டிருந்து, மகிமைப்படுத்துங்கள்.

## 7-ம். அதிகாரம்.

*மெய்விவாக அந்தஸ்தின் மேன்மையையும், விரத்தத்துவம் கன்னிமை அந்தஸ்தின் மேன்மையையுங்குறித்து மிகவும் சிறந்த மேரையாய்ப் போதிக்கிறார்*

1. நீங்கள் எனக்கு எழுதிய காரியங்களைக்குறித்து நான் சொல்லுகிறதாவது: ஸ்திரீயைத் தொடாதிருப்பது மனுஷனுக்கு நலமாம்.

12. அஞ்ஞான நடுவனிடத்தில் கிறீஸ்துவர்கள் வியாச்சியமாடக் கூடாதாவென்று சிலர் கேட்பார்களாகக்கும். உத்தாரவுதான், என்றாலும் அப்படிச்செய்வது கிறீஸ்துவனுக்கு யோக்கியமல்ல. வேறுவழியாய் அதாவது, திருச்சபையாரைக்கொண்டு நியாயம் பெற்றுக்கொள்ளக் கூடுமாகில் அப்படிச் செய்வதே நலம். ஏனென்றால் கிறீஸ்துவன் சர்வேசுரனுடைய பிள்ளையாயிருக்கிறபடியினாலே, பசாசுக்கடிமையாயிருக்கிற அஞ்ஞானிகளுடைய அதிகாரத்துக்கு மனம்பொருந்தித் தன்னைக் கீழ்ப்படுத்தப் போவது சரியல்லவென்று சொல்லத்தகும்.

13. போஜனம் வயிற்றுக்கு அவசரமாயிருக்கிறது ஏனென்றால் போஜனம் வயிற்றுக்காகவும், வயிறு போஜனத்துக்காகவும் உண்டாக்கப்பட்டது. ஆனால் போஜனம் வயிற்றுக்கு அவசரமாயிருக்கிறதுபோல விபசாரமும் உங்கள் சரீரத்துக்கு அவசரமாயிருக்கிறதென்று நினையாதேயுங்கள். ஏனென்றால் விபசாரத்துக்காக அல்ல, நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருக்காக உங்கள் சரீரம் உண்டாக்கப்பட்டது. அவரோ அதற்கு எஜமானும் தலையுமாயிருக்கிறார். அவருக்கே உங்கள் சரீரம் ஊழியம் பண்ணவேண்டுமொழிய விபசாரத்துக்கு அடிமையாய் இருக்கவொண்ணாதென்பதே இவ்வாக்கியத்தின் கருத்து.

2. ஆயினும் வேசித்தனத்தை விலக்கும்பொருட்டு அவனவன் தன் மனைவியையும், அவளவள் தன் புருஷனையும் உடையவர்களாயிருக்கட்டும்.

3. புருஷன் தன் மனைவிக்குத் தன் கடமையைச் செலுத்துவானாக. அவ்விதமே மனைவியும் தன் புருஷனுக்குச் செய்யக்கடவாள். (1. இரா. 3-7.)

4. மனைவியின் சரீரத்தின்மேல் புருஷனுக்கேயன்றி அவளுக்கு அதிகாரமில்லை. அப்படியே புருஷனுடைய சரீரத்தின்மேல் மனைவிக்கன்றி அவனுக்கு அதிகாரமில்லை.

5. வேண்டுமானால், செபத்தியானஞ் செய்வதற்காகச் சிலகாலம் இருவரும் சம்மதித்தாலொழிய மற்றப்படி ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாதிருங்கள். அன்றியும் உங்களுடைய இச்சையடக்கமில்லாமையைப்பற்றிச் சாத்தான் உங்களைச் சோதிக்காதபடிக்குத் திரும்பவுங் கூடிவாழுங்கள்.

6. ஆகிலும் நான் இதை உங்களுக்குக் கட்டளையாகச் சொல்லாமல், இளக்காரமாகச் சொல்லுகிறேன்.

7. ஏனெனில் நீங்கள் எல்லாரும் என்னைப்போலிருக்க விரும்புகிறேன். ஆகிலும் அவனவன் சர்வேசுரனிடத்திலிருந்து தனக்குரிய வரத்தைப் பெற்றுக்கொள்ளுகிறான். அது ஒருவனுக்கு ஒருவிதமாயும், மற்றொருவனுக்கு வேறுவிதமாயும் இருக்கின்றது.

8. விவாகம் இல்லாதவர்களுக்கும், விதவைகளுக்கும் நான் சொல்லுகிறதாவது: நானிருக்கிறது போலவே அவர்களும் இருந்துவிட்டால் அவர்களுக்கு நலமாமே.

9. தங்களை அடக்கிக்கொள்ளாதவர்கள் விவாகம்பண்ணிக்கொள்ளட்டும். ஏனெனில் வேகிறதைவிட விவாகம் பண்ணிக்கொள்ளுகிறது நலமாம்.

10. ஆனால் விவாகபந்தனமாயிருக்கிறவர்களுக்கு நானல்ல, கர்த்தர்தாமே கட்டளையிடுகிறதேதென்றால்: மனைவி புருஷனைவிட்டுப் பிரிந்துபோகக்கூடாது. (மத். 5-32.)

11. அப்படிப் பிரிந்துபோனால், ஒன்றில் விவாகமில்லாதிருக்க வேண்டும்; ஒன்றில் தன் புருஷனோடே ஒப்புரவாகவேண்டும். புருஷனும் தன் மனைவியைத் தள்ளிவிடாதிருப்பானாக.

12. மற்றவர்களுக்கோவெனில் ஆண்டவரல்ல, நானே சொல்லுகிறதாவது: சகோதரனை ஒருவனுடைய மனைவி அவிசுவாசியாயிருந்தும், அவனுடன் வாழ்ந்திருக்கச் சம்மதிப்பாளாகில், அவன் அவளைத் தள்ளிவிடாதிருப்பானாக.

13. அப்படியே விசுவாசியான ஒரு ஸ்திரீயினுடைய புருஷன் அவிசுவாசியாயிருந்தும், அவளுடன் வாழ்ந்திருக்கச் சம்மதிப்பானேயாகில், அவள் அவனைத் தள்ளிவிடாதிருப்பாளாக.

2. இந்த வாக்கியத்தில் விவாகஞ் செய்துகொண்ட ஸ்திரீ பூமான்களைப்பற்றிப் பேசியிருக்கிறதல்லாதே சகலரையுங்குறித்துப் பொதுப்படையாகப் பேசவில்லை. சகலரும் விவாகஞ் செய்துகொள்வது அர்ச். சின்னப்பருடைய நோக்கமானால், 8-ம் வசனத்தில் கலியாணஞ் செய்யாத வாலர்களையும் கன்னிகைகளையுங் குறித்து அவர்கள் தம்மைப்போல் இருக்கவேண்டுமென்று அவர் ஆசிப்பதேன்? அப்படியானால் தாம் சொன்னதைத் தாமே மறுத்துப் பேசுகிறாரென்கவேண்டும். ஆகையால் இந்த வசனத்தில் கலியாணஞ் செய்துகொண்டவர்களாகிய ஸ்திரீ பூமான்கள் தத்தம் பதிகளோடு இருக்கவேண்டியதைப்பற்றி மாத்திரம் பேசுகிறாரென்று அறியவும்.

14. ஏனெனில் அவிசுவாசியாயிருக்கிற புருஷன் விசுவாசியாயிருக்கிற மனைவியினால் சுத்தமாக்கப்படுகிறான். அவிசுவாசியாயிருக்கிற மனைவியும் விசுவாசியாயிருக்கிற புருஷனாலே சுத்தமாக்கப்படுகிறாள். இல்லாவிட்டால், உங்கள் பிள்ளைகள் அசுத்தராயிருப்பார்கள்; இப்பொழுதோவெனில் அவர்கள் சுத்தராயிருக்கிறார்கள்.

15. ஆகிலும் அவிசுவாசியாயிருக்கிறவன் பிரிந்துபோனால், பிரிந்துபோகட்டும்; ஏனெனில் இப்படிப்பட்ட விஷயத்தில் சகோதரனாவது சகோதரியாவது அடிமைப்பட்டவர்களல்ல. சர்வேசுரன் நம்மைச் சமாதானத்தில் அழைத்திருக்கிறார்.

16. ஏனெனில் ஸ்திரீயே, நீ உன் புருஷனை இரட்சிப்பாயென்று உனக்கு எப்படித் தெரியும்? அல்லது புருஷனே, நீ உன் மனைவியை இரட்சிப்பாய் என்று உனக்கு எப்படித்தெரியும்?

17. ஆதலால் ஆண்டவர் அவனவனுக்குப் பகிர்ந்தது எப்படியோ, சர்வேசுரன் அவனவனை அழைத்தது எப்படியோ, அப்படியே அவனவன் நடக்கக்கடவான். எல்லாச் சபைகளிலும் நான் இந்தப்பிரகாரமே போதித்துக் கொண்டுவருகிறேன்.

18. விருத்தசேதனம் பெற்றவனாக ஒருவன் அழைக்கப்பட்டிருக்கிறானோ, அவன் விருத்தசேதனமில்லாதவனாகத் தன்னைக் காட்டவேண்டியதில்லை. விருத்தசேதனமில்லாத ஒருவன் அழைக்கப்பட்டிருக்கிறானோ, அவன் விருத்தசேதனம் பெறாதிருப்பானாக.

19. விருத்தசேதனமும் ஒன்றுமில்லை, விருத்தசேதனமில்லாமையும் ஒன்றுமில்லை. சர்வேசுரனுடைய கற்பனைகளை அநுசரித்துவருவதே காரியம்.

20. அவனவன் தான் எந்த ஸ்திதியிலே அழைக்கப்பட்டானோ, அந்த ஸ்திதியிலே நிலைநிற்பானாக. (எபே. 4-1.)

21. அடிமையாயிருந்த நீ அழைக்கப்பட்டாயோ, கவலைப்படாதே. நீ சுயாதீனனாகக்கூடுமானாலும், அதை நலமாக உபயோகித்துக்கொள்.

22. கர்த்தருக்குள் அழைக்கப்பட்டவனாகிய அடிமை கர்த்தருடைய சுயாதீனனாயிருக்கிறான். அவ்வண்ணமே அழைக்கப்பட்ட சுயாதீனன் கிறீஸ்துவின் அடிமையாயிருக்கிறான்.

23. நீங்கள் கிரயத்துக்குக் கொள்ளப்பட்டிருக்கிறீர்கள், மனிதருக்கு அடிமைகளாகாதிருங்கள். (1. இரா. 1-18.)

24. சகோதரரே, அவனவன் தான் எந்தஸ்திதியிலே அழைக்கப்பட்டானோ, அந்த ஸ்திதியிலே சர்வேசுரனுடைய சமுகத்தில் நிலைத்திருக்கக்கடவான்.

25. கன்னிகைகளைக் குறித்தோவெனில், கர்த்தர் எனக்குக் கட்டளை கொடுக்கவில்லை; ஆகிலும் நான் பிரமாணிக்கமுள்ளவனாயிருக்கும்படிக்கு ஆண்டவரிடம் கிருபை பெற்றுக்கொண்டது போல ஆலோசனையாகச் சொல்லுகிறேன்.

26. அதாவது: நம்மை அடர்ந்து வருகிற துன்பத்தினிமித்தம் இப்படியே (விவாகமில்லாமல்) இருக்கிறது மனுஷனுக்கு நலமாயிருக்குமென்று எண்ணுகிறேன்.

27. நீ மனைவியோடு பந்திக்கப்பட்டிருக்கிறாயோ, பந்தனத்தை அவிழ்க்கத் தேடாதே; நீ மனைவியில்லாதிருக்கிறாயோ, மனைவியைத் தேடாதே.

28. ஆகிலும் நீ ஒரு மனைவியைக்கொண்டிருந்தால், பாவமல்ல. ஒரு குமரி விவாகம் பண்ணினாலும் பாவமல்ல. ஆனாலும் அப்படிப்பட்டவர்கள் சரீரத்திலே உபாதைப்படுவார்கள். நீங்கள் இவைகளுக்கு உள்ளாகாதபடி ஆசிக்கிறேன்.

29. ஆதலால் சகோதரரே, நான் சொல்லுகிறதாவது: காலமானது குறுகினதாயிருக்கிறது; ஆகையால் மனைவியை உடையவர்கள் இல்லாதவர்களைப் போலவும்,

30. அழுகிறவர்கள் அழாதவர்களைப் போலவும், சந்தோஷிக்கிறவர்கள் சந்தோஷியாதவர்களைப்போலவும், விலைக்குக் கொள்ளுகிறவர்கள், ஒன்றையும் சுதந்தரியாதவர்களைப்போலவும்,

31. இவ்வுலகத்தை அனுபவிக்கிறவர்கள் அதை அனுபவியாதவர்களைப் போலவும் இருக்கவேண்டும். இவ்வுலகத்தின் கோலம் மாயமாய்ப் போகின்றது.

32. ஆதலால் நீங்கள் கவலையற்றவர்களாயிருக்க விரும்புகிறேன். மனைவியில்லாதவன் ஆண்டவருக்கு எப்படிப் பிரியப்படலாமென்று கர்த்தருக்குரியவைகளின்மேல் கவலையுற்றிருக்கிறான்.

33. மனைவியோடிருக்கிறவனோ, தன் மனைவிக்கு எப்படிப் பிரியப்படலாமென்று உலகத்துக்குரியவைகளில் கவலையுற்று, இருமனப்பட்டிருக்கிறான்.

34. அத்தன்மையே விவாகமில்லாத கன்னிகை கர்த்தருக்குரியவைகளைச் சிந்தித்து, சரீரத்திலும் ஆத்துமத்திலும் பரிசுத்தமுள்ளவளாயிருக்கப் பிரயாசப்படுகிறாள். விவாக ஸ்திரீயோவென்றால், தன் புருஷனுக்கு எப்படிப் பிரியப்படலாமென்று உலகத்துக்குரியவைகளைக்குறித்துக் கவலைப்படுகிறாள்.

35. ஆகிலும் நான் உங்களுக்குக் கண்ணிவைக்கிறதற்கல்ல, யோக்கியமாயிருக்கிறதையும், தடையன்னியில் ஆண்டவருக்கு ஊழியஞ்செய்ய வழிப்பாடாயிருக்கிறதையும் உங்கள் பிரயோசனத்துக்காகச் சொல்லுகிறேன்.

36. ஆனால் ஒருவன் தன் குமரியின் வயது முற்றினதைப்பற்றித் தனக்கு வெட்கமாயிருக்கிறதென்றும், அவளுக்கு மணம் முடிப்பது அவசியமென்றும் எண்ணினால், அவன் மனம்போல் செய்துகொள்ளட்டும். அவள் விவாகம் பண்ணினால் பாவமில்லை.

37. ஆயினும் அப்படிக்கு அவசியமில்லாதிருக்கையில், அவன் தன் மனதின்படி செய்ய அதிகாரமுடையவனாயிருந்து, தன் இருதயத்தில் உறுதியாய்த் திடம்பண்ணி, தன் கன்னிகையை அப்படியே காப்பாற்றிக்கொள்ள மனதில் தீர்மானித்தால், அவன்செய்வது நல்ல காரியந்தான்.

38. ஆதலால் தன் குமரியை விவாகம்பண்ணிக்கொடுக்கிறவன் நல்ல காரியஞ்செய்கிறான். அவளை விவாகம்பண்ணிக்கொடாதிருக்கிறவன் அதிக நல்ல காரியஞ்செய்கிறான்.

39. மனைவியானவள் தன் புருஷன் உயிரோடிருக்குங் காலமளவும் பிரமாணத்துக்குக் கட்டுப்பட்டவளாயிருக்கிறாள். அவளுடைய புருஷன் இறந்துபோனால், விடுதலையாகிறாள். அவள் தனக்கு இஷ்டமானவனை விவாகம்பண்ணிக்கொள்ளட்டும். ஆயினும் அவன் கர்த்தருக்குட்பட்டவனாய் இருக்கவேண்டும். (உரோ. 7-2.)

40. ஆகிலும் என் ஆலோசனைப் பிரகாரம் அவள் அப்படியே இருந்துவிட்டால், அதிக பாக்கியவதியாயிருப்பாள். என்னிடத்திலும் தேவ ஞான சிந்தை உண்டென்று எண்ணுகிறேன்.

40. "நீங்கள் எனக்கு எழுதின காரியங்களைக் குறித்து," என்று அர்ச். சின்னப்பர் இந்த அதிகாரத்தின் ஆரம்பத்தில் சொல்லுகிறபடியினாலே கொரிந்தியர் அவருக்கு எழுதியிருந்த கேள்விகளுக்கு இதில் மாறுத்தரஞ் சொல்லுகிறாரென்று விளங்குகிறது. இந்த அதிகாரத்தில் விவாக சம்பந்தமான ஆறு கேள்விகளுக்கு மாறுத்தரஞ் சொல்லுகிறார். ஆகையால் கொரிந்தியர் அந்த ஆறு கேள்விகளைப்பற்றி அவருக்கு எழுதியிருக்கவேண்டும்.

## 8-ம். அதிகாரம்.

விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகள் மனச்சாட்சிக்கு விரோதமாயும் பிறருக்கு இடறலாயுமிருப்பதால், அவைகளைப் பொசிக்கவொண்ணதென்று போதிக்கிருர்.

1. விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளின் விஷயத்தில் நம்மெல்லோருக்கும் அறிவுண்டென்று நமக்குத் தெரியும். அறிவு கர்வமுண்டாக்கும்; பரம அன்போ நல்விர்த்தியைப் பயக்கும்.

2. தான் ஒன்றை அறிந்தவனென்று யாதாமொருவன் எண்ணினல், ஒன்றையும் அறியவேண்டிய விதமாய் அவன் இன்னும் அறிந்துகொள்ளவில்லை.

3. சர்வேசுரனைச் சிநேகிக்கிறவன் எவனே, அவன் அவராலே அறியப்பட்டிருக்கிறன்.

4. விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளைப் பொசிக்கிற விஷயத்தைப்பற்றி, உலகத்திலே விக்கிரகமானது ஒருபொருட்டல்லவென்றும், கடவுள் ஒருவரேயன்றி வேறில்லையென்றும் அறிவோம்.

5. ஏனென்ருல் (தேவர்களும் கர்த்தாக்களுமென்று அநேகர் இருக்கிருர்கள்). அப்படியே வானத்திலும் பூமியிலும் தேவர்களென்று சொல்லப்படுகிறது உண்டானலும்,

6. உள்ளபடி பிதாவாகிய ஒரே தெய்வம் நமக்கு உண்டு. அவராலே சகலமும் உண்டானது. அவருக்கென்று நாமும் உண்டாயிருக்கிறேம். யேசுக்கிறீஸ்துநாதராகிய ஒரே கர்த்தரும் உண்டு. அவர்மூலமாய்ச் சகலமும் படைக்கப்பட்டிருக்கிறது. நாமும் அவர் மூலமாய்ப் படைக்கப்பட்டிருக்கிறேம். (அரு. 1-3; உரோ. 14-14.)

7. ஆனலும் இந்த அறிவு எல்லாரிடத்திலும் இல்லை; ஏனெனில் சிலர் இன்னமும் விக்கிரகத்தின்மேல் மதிப்புள்ளவர்களாய்(படைக்கப்பட்டதைப்)பிரசாதமாகப் பொசிக்கிருர்கள். அவர்களுடைய மனச்சாட்சி பலவீனமாயிருப்பதால் அசுத்தப்படுகின்றது.

8. போஜனமானது நம்மைச் சர்வேசுரனுக்கு உகந்தவர்களாக்குவதில்லை. ஏனெனில் நாம் பொசித்ததினலே நமக்கு ஒன்றுங் கூடிவந்ததுமில்லை; பொசியாததினலே நமக்கு ஒன்றுங் குறைந்துபோவதுமில்லை.

9. ஆனல் இது காரியத்திலே உங்களுக்குள்ள உத்தரவு எவ்விதத்திலும் பலவீனருக்கு இடறலாகாதபடிக்குப் பார்த்துக்கொள்ளுங்கள். (1. கொ. 10-32.)

10. ஏனெனில் அறிவுள்ளவன் விக்கிரகக் கோவிலிலே பந்தியமர்ந்திருக்கிறதை ஒருவன் கண்டால், அவனுடைய மனச்சாட்சி பலவீனமாயிருக்கக்கொள்ள, விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளைப் பொசிக்கும்படி அவனுக்குத் துணிவுண்டாகுமல்லவா?

---

அந்த 6 கேள்விகளாவன: 1-வது. கலியாணக்காரர்களாயிருக்கிற கிறீஸ்துவர்கள் சமுசார வாழ்க்கையில் இருக்கலாமா? அதை விலக்கவேண்டுமா? 2-வது. கலியாணமில்லாத கிறீஸ்துவர்கள் கலியாணம் பண்ணுகிறது நல்லதா, கலியாணம் பண்ணுதிருக்கிறது நல்லதா? 3-வது. கிறீஸ்துவர்கள் தங்கள் மனைவிகளைத் தள்ளி, வேறே விவாகம் பண்ணக்கூடுமா, கூடாதா? 4-வது. ஞானஸ்நானம் பெற்றவள் அஞ்ஞானியாயிருக்கிற தன் புருஷனைத் தள்ளிவிடலாமா, தள்ளாதிருக்க வேண்டுமா? 5-வது. கன்னிமை அல்லது சந்நியாச அந்தஸ்து கிறீஸ்துவர்களுக்குள்ளே நல்லதா, நல்லதில்லையா? 6-வது. கைம்பெண்கள் மறுபடி கலியாணஞ் செய்யலாமா, செய்யப்படாதா? என்கிற இந்த ஆறு கேள்விகளாம். இவைகளுக்கு அர்ச். சின்னப்பர் எவ்வித பதில் சொல்லுகிருரென்று இவ்வதிகாரத்தைக் கவனமாய் வாசிக்கிறவர்களுக்குத் தெளிவாக விளங்கும்.

11. பலவீனமுள்ள உன் சகோதரன் உன் அறிவினிமித்தம் கெட்டுப்போக லாமா? அவனுக்காகக் கிறீஸ்துநாதர் மரித்தாரே. (உரோ. 14-15.)

12. இப்படி நீங்கள் சகோதரருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்து, பலவீன மான அவர்களுடைய மனச்சாட்சி யைக் குத்துகிறதினாலே கிறீஸ்துநாத ருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்கி றீர்கள்.

13. இப்படியிருக்க, போஜனமானது என் சகோதரனுக்கு இடறலுண்டா க்குமாகில், என் சகோதரனுக்கு இட றலுண்டாகாதபடிக்கு நான் என்றென் றைக்கும் மாம்சம் பொசியாதிருப் பேன். (உரோ. 14-21.)

## 9-ம். அதிகாரம்.

சின்னப்பர் கொரிந்தியருக்குப் பிரசங்கிக்கையில், ஜீவனத்துக்கு வேண்டியதை முதலாய் அவர்களிடத்தில் கேட்கவில்லை என்பதும், சகலரையும் மனந்திருப்பச் சகலருக்கும் சகலருமானார் என்பதும்.

1. நான் சுயாதீனனல்லவா? நான் அப்போஸ்தலனல்லவா? நம்முடைய கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துநாதரை நான் தரிசிக்கவில்லையா? கர்த்தரிடத் தில் நீங்களே என் வேலைப்பாடல்லவா?

2. மற்றவர்களுக்கு நான் அப்போஸ் தலன் அல்லவென்றாலும், உங்களுக்கா கிலும் அப்போஸ்தலனாயிருக்கிறேன். ஏனெனில் ஆண்டவரிடத்தில் நீங்கள் என் அப்போஸ்தலத்துவத்தின் முத்தி ரையாயிருக்கிறீர்கள்.

13. இந்த அதிகாரத்திலே விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்ட பதார்த்தங்களின் பேரில் அர்ச். சின்னப்பர் போதிக்கிறதாவது: அஞ்ஞானிகளுக்குள்ளே அநேக தேவர்க ளும், தேவர்களுடைய விக்கிரகங்களும் இருந்தாலும், எல்லாவற்றையும் படைத்த சர்வே சுரன் ஒருவரே உண்டென்றும், நம்மை இரட்சித்த யேசுக்கிறீஸ்துவாகிய ஆண்டவர் ஒருவரே யென்றுஞ் சகல கிறீஸ்துவர்களும் அறிந்திருக்கிறார்கள். ஆகையால் விக்கிரகமென்னப்பட்ட தெல்லாம் ஒன்றுமில்லை என்பதும், அந்த விக்கிரகங்களுக்கு படைக்கப்பட்டப் பொருட்கள் மற்றப் பொருட்களைப்போலிருக்கிறதல்லாதே, விக்கிரகங்களுக்குப் படைத்ததினாலே எவ் விதத்திலும் அவைகள் திருப்பொருளாய் அல்லது பிரசாதமாய்ப் போகிறதில்லை என்பதும் நிச்சயமாம். ஆகையால் அப்படிப் படைக்கப்பட்ட பொருட்களைப் படைக்கப்படாத மற் றப் பொருட்களைப்போலே யாதொரு வித்தியாசமுமின்றி, அற்பக் குற்றமுமில்லாமல் பொ சிக்கலாம்; என்றாலும், இந்த நியாயத்தை அறிவுடையோரல்லாமல், சாமானிய கிறீஸ்து வர்களும் விசேஷமாய்ப் புதிதாய் ஞானஸ்நானம்பெற்ற படிப்பில்லாத கிறீஸ்துவர்களும் கண்டுபிடியாமல், அவைகளை ஏதோ திருப்பொருளாகவும், பிரசாதமாகவும் எண்ணுகிறார்கள். அந்த எண்ணத்தை முன்னிட்டு அந்தப் பொருட்களைப் பிரசாதமாகப் பொசிக்கத் துணிவார் களானால், தங்கள் மனச்சாட்சிக்கு விரோதமாய் நடக்கிறதினாலே குற்றவாளிகளாய்ப் போகி றார்கள். ஆகையால் அப்படிப்பட்ட பொருட்கள் அவர்களுக்கு முழுதும் விலக்கப்பட்ட பொருட்களாயிருக்கிறது. அந்தப் பொருட்களைத் திருப்பொருட்கள் அல்லவென்று அறி கிற அறிவுடையோர் அந்த அறிவின் நிமித்தம் அவைகளை யாதொரு குற்றமுமின்றிப் பொசிக்கத்தக்க மற்றப் பதார்த்தங்களைப்போல் சாப்பிடக்கூடுமானாலும், மேற்சொல்லப் பட்ட அறிவீனருக்கு இடறலுண்டாகாதபடி இவர்களும் அதை ஒருபோதும்பொசிக்கவொ ண்ணாது. ஆகையால் திருச்சபை எங்கும் ஒரே தன்மையாய்ப் போதிக்கிறதுபோலக் கிறீ ஸ்துவர்களில் ஒருவரும் விக்கிரகங்களுக்குப் படைத்த சோறு தேங்காய் முதலான பதார்த் தங்களை அஞ்ஞானிகளிடத்தில் தாக்ஷணியத்தைப்பற்றியாவது மற்ற எந்த முகாந்தரத் தைப்பற்றியாவது வாங்கவும் பொசிக்கவுங் கூடாதென்று அர்ச். சின்னப்பர் போதிக்கிறார். அவர் இன்னம் இதற்கு வேறே முகாந்தரங்களை இந்த நிருபத்தின் 10-ம் அதி. 20-ம் வசன முதல் துவக்கிக் கடைசிமட்டுஞ் சொல்லிக்கொண்டு வருகிறார். அவைகளையும் அதில் 23-ம் வசனத்தின் வியாக்கியானத்தையும் காண்க.

3. என்னை வினவிக்கேட்பவர்களுக்கு நான் சொல்லும் உத்தரவாதம் இதுவே.

4. சாப்பிடவும் பானம்பண்ணவும் எங்களுக்கு அதிகாரமில்லையா?

5. மற்ற அப்போஸ்தலர்களும், கர்த்தருடைய சகோதரரும், கெபாவும் செய்கிறதுபோல, சகோதரியாகிய ஒரு மனுஷியைக்கூடக் கூட்டிக்கொண்டு போக எங்களுக்கு அதிகாரமில்லையா?

6. அல்லது இப்படிச் செய்வதற்கு எனக்கும், பர்னபாவுக்கும் மாத்திரமோ உத்தரவில்லை?

7. எக்காலத்திலாவது சொந்தச் செலவுசெய்துகொண்டு பாளையத்திலே சேவிப்பவன் யார்? எவன் திராட்சத் தோட்டத்தை உண்டாக்கி, அதின் கனியைப் புசியாதிருப்பான்? எவன் மந்தையை மேய்த்து, அதின் பாலைச் சாப்பிடாதிருப்பான்? (மத். 10-9.)

8 இவைகளை நான் மனிதர் முறைமைப்படி சொல்லுகிறேனே? வேதப் பிரமாணமும் இவ்வண்ணமே சொல்லுகிறதில்லையா?

9. போரடிக்கிற மாட்டுக்கு வாயைக் கட்டாதிருப்பாயாக என்று மோயீசனுடைய நியாயப் பிரமாணத்தில் எழுதியிருக்கிறதே. சர்வேசுரனுக்கு மாடுகளின்மேல் கவலையுண்டோ? (உபாக. 25-4; 1. தீமோ. 5-18.)

10. அல்லது உள்ளபடியே இதை நம்மைக்குறித்துச்சொல்லுகிறாரோ? உழுகிறவன் நம்பிக்கையோடே உழவும், போரடிக்கிறவன் பலனடையலாமென்கிற நம்பிக்கையோடே போரடிக்கவும் வேண்டுமென்பதினால், இவைகள் நம்மைப்பற்றியே எழுதப்பட்டிருக்கிறது.

11. நாங்கள் உங்களுக்கு ஞானக்காரியங்களை விதைத்திருக்க, உங்கள் சரீர நன்மைகளை அறுத்தால் அது பெரிய காரியமோ? (உரோ. 15-27; கலாத். 6-6.)

12. உங்கள்மேல் இந்த அதிகாரத்தை மற்றவர்கள் செலுத்துவார்களானால், நாங்கள் ஏன் அதிகமாய்ச் செலுத்தப்படாது? ஆயினும் கிறீஸ்துநாதருடைய சுவிசேஷத்துக்கு ஓர் தடையும் வருவிக்காதபடி நாங்கள் இந்த அதிகாரத்தைச் செலுத்தாமல், எல்லாப் பாடும்படுகிறோம்.

5-6. மற்ற அப்போஸ்தலரைப்போல எங்களுக்குப் போஜனஞ் சமைத்துக் கொடுக்கச் சகோதரியாகிய ஒரு பெண்பிள்ளையை, அதாவது கிறீஸ்தவளாகிய ஒரு புண்ணியவதியை எங்களோடு அழைத்துக்கொண்டு போகவும், எங்கள் சீவனத்திற்கு உங்கள் கையிலே செலவு வாங்கவும் நியாயமுண்டாமே. ஆயினுங் கிறீஸ்துவின் சுவிசேஷத்தைத் தடையின்றிப் போதிக்கவும், உங்களுக்குச் செலவு நேரிடாதிருக்கவும் வேண்டுமென்றே இப்படிச் செய்யாதிருந்தோமென்று அர்ச். சின்னப்பர் சொல்லுகிறதாக அர்த்தங்கொள்ளலாமொழிய மற்றப்படியல்லவென்று இந்த அதிகாரம் முழுதும் வாசித்து ஆராய்ந்த யாவருக்கும் உச்சி மத்தியானம் ஒப்ப விளங்கும். இதிலே அர்ச். சின்னப்பர் குறிக்கிற சகோதரிகளாகிய பெண்பிள்ளைகள் யாரெனில், திவ்விய கர்த்தர் தம்முடைய சீஷர்க்களோடு ஊருக்கு ஊர் போய்ப் பிரசங்கிக்கும்போது, அர்ச். இயாகப்பர், அர்ச். அருளப்பர், யூதா, சிமையோன், என்பவர்களுடைய தாய்மார்களும், வேறே சில புண்ணிய ஸ்திரீகளும் அவர்களோடேகூடச் சென்று, அவர்களுக்குச் சமையல் முதலான பணிவிடைகளைச் செய்துவருவார்களென்று சுவிசேஷத்தின் பற்பல இடங்களில் எழுதியிருக்கிறதல்லவோ? அர்ச். மாற்கு 15-ம் அதிகாரம் 41-ம் வசனத்திலும், அர்ச். லூக்கா 8-ம் அதிகாரம் 23-ம் வசனத்திலும் காண்க. கர்த்தர் பரலோகத்துக்கு எழுந்தருளின பிற்பாடு அப்போஸ்தலர்கள் தூரதேசத்துக்குப் பிரிந்துபோகுமட்டும் மேற்சொன்ன புண்ணிய ஸ்திரீகள் அவர்களுக்கு முன்போல் ஊழியம்பண்ணிக்கொண்டு வந்தார்கள். இவர்களைப்போலொத்த புண்ணிய ஸ்திரீகளைப்பற்றியே அர்ச். சின்னப்பர் பேசுகிறார். இக்காலத்திலேமுதலாய் ஐரோப்பா இராச்சியங்களில் ஆண்பிள்ளைகள் சமையல் செய்வது வழக்கமில்லாததினாலே வயதுசென்ற புண்ணிய ஸ்திரீகளே குருமார்களுக்குச் சமையல்செய்து வருகிறார்கள்.

13. கோவில் பணிவிடைக்காரர் கோவிலுக்குரியவைகளில் போசிக்கிறார்களென்றும், பீடத்தின் பரிசாரகர் பீடத்திலுள்ளவைகளில் பங்கடைகிறார்களென்றும் அறியீர்களோ? (உபா. 18-1.)

14. அத்தன்மைபோல, சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கிறவர்களும் சுவிசேத்தினாலே பிழைக்கும்படி ஆண்டவரும் ஏற்பாடு செய்திருக்கிறார். (மத். 10-10.)

15. அப்படியிருந்தும், அவைகளில் ஒன்றையும் நான் பிரயோகிக்கவில்லை. என் விஷயமாய் இப்படி நடக்கவேண்டுமென்று நான் இதை எழுதவுமில்லை. என் மகிமை எவனாலாகிலும் வியர்த்தமாகிறதைவிட நான் சாகிறது எனக்கு அதிக நலம்.

16. எப்படியெனில் நான் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தாலும், மகிமை பாராட்டக்கூடாது. அது என்மேல் சுமந்த கடமையாயிருக்கிறது. சுவிசேஷத்தை நான் பிரசங்கியாதிருந்தால், எனக்கு ஐயோ கேடாம்!

17. இதை நான் மனப்பூர்வமாய்ச் செய்வேனாகில், எனக்குச் சம்பாவனையுண்டு. மனப்பிரியமின்றிச் செய்வேனாகில், இது எனக்கு ஒப்புவிக்கப்பட்ட உக்கிராணவேலையைச் செய்கிறதாகும்.

18. அப்படியானால் எனக்குப் பலனென்ன? நான் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கையில் எனக்குள்ள அதிகாரத்தைச் சுவிசேஷத்துக்குக் கேடாகப் பிரயோகிக்காமல், இலவசமாய்ச் சுவிசேஷத்தைப் பிரசங்கிப்பதே எனக்குப் பலன்.

19. ஆகையால் நான் எல்லா மனிதர் மட்டிலும் சுயாதீனனாயிருந்தும், அநேகரை ஆதாயமாக்கிக்கொள்ளும்படி என்னைச் சகலருக்கும் அடிமையாக்கினேன்.

20. அப்படியே யூதரை ஆதாயப்படுத்திக்கொள்ளும்படிக்கு யூதருக்கு யூதனைப் போலானேன். (அப். 16-3 21-26.)

21. நியாயப்பிரமாணத்துக்குட்பட்டவர்களை ஆதாயப்படுத்திக்கொள்ளும்படி (நான் பிரமாணத்துக்குட்படாதவனாயிருந்தும்) பிரமாணத்துக்குட்பட்டவர்களுக்கு நானும் பிரமாணத்துக்குட்பட்டவன்போலானேன். பிரமாணமில்லாதவர்களை ஆதாயப்படுத்தும்படி (நான் நியாயப் பிரமாணமில்லாதவனாகாமல் கிறிஸ்துநாதருடைய பிரமாணத்துக்கு உள்ளானவனாயிருந்தாலும்) பிரமாணமில்லாதவர்களுக்கு நானும் பிரமாணமில்லாதன் போலானேன்.

22. பலவீனரை ஆதாயப்படுத்திக்கொள்ளும்படிக்குப் பலவீனருக்குப் பலவீனனானேன். எல்லாரையும் கரையேற்றும்படிக்கு எல்லாருக்கும் எல்லாமுமானேன்.

23. சுவிசேஷத்திலே எனக்குப் பங்கு கிடைக்கும்படி சுவிசேஷத்தைப்பற்றியே எல்லாவற்றையுஞ் செய்கிறேன்.

24. பந்தைய சாலையிலே ஓடுகிறவர்களெல்லாரும் ஓடுகிறார்கள்; ஆகிலும் ஒருவனே பந்தயத்தைப் பெற்றுக்கொள்ளுகிறான் என்று அறியீர்களோ? நீங்களும் பெற்றுக்கொள்ளத்தக்கதாக ஓடுங்கள்.

25. பந்தயக் களரியிலே மல்லுக்கட்டுகிறவர்கள் எல்லாக் காரியங்களிலும் இச்சையை அடக்குகிறார்கள். அவர்கள் அழிந்துபோகிற முடியைப் பெற்றுக்கொள்ளவேண்டுமென்றே அப்படிச் செய்கிறார்கள். நாங்களோ அழியாத முடியைப் பெற்றுக்கொள்ளும்படி பிரயாசப்படுகிறோம்.

26. ஆகையால் நான் ஓடுகிறேன், இலக்குத் தெரியாதவன் போலல்ல. நான் போராடுகிறேன், ஆனால் ஆகாயத்தில் சிலம்பம் அடிக்கிறவன்போலல்ல.

27. ஆனால் மற்றவர்களுக்குப் பிரசங்கித்தபிறகு நானே ஒருவேளை தள்ளுண்டவனாய்ப் போகாதபடிக்கு, என் சரீரத்தைத் தண்டித்துக் கீழ்ப்படுத்துகிறேன்.

## 10-ம். அதிகாரம்.

*மனிதருக்குத் தந்திரங்கள் நேரிட்டாலும், தந்திரங்களைச் செயிக்கத் தேவ உதவி கிடைக்குமென்று போதிக்கிறார்.*

1. இப்படியாகையில் சகோதரரே, நீங்கள் அறியாதிருக்கப்படாதென்று நான் விரும்புகிறதேதென்றால்: நம்முடைய பிதாக்கள் எல்லாரும் மேகத்தின் கீழிருந்தார்கள். எல்லாரும் சமுத்திரத்தின் வழியாய் நடந்துவந்தார்கள். (யாத். 13-21, 14-22.)

2. எல்லாரும் மோயீசனிடத்தில் மேகத்திலும், சமுத்திரத்திலும் ஞானஸ்நானஞ் செய்யப்பட்டார்கள்.

3. எல்லாரும் ஒரே ஞானப்போஜனத்தைப் பொசித்தார்கள். (யாத். 16-15.)

4. எல்லாரும் ஒரே ஞானப்பானத்தைப் பருகினார்கள். எப்படியெனில் அவர்களோடுகூடச் சென்ற ஞானக்கற்பாறையினின்று (ஊறின ஜலத்தைப்) பானம்பண்ணினார்கள். அந்தக் கற்பாறையோ கிறீஸ்துநாதர்தான். (யாத். 17-6; எண். 20-11.)

5. அப்படியிருந்தும், அவர்களுக்குள்ளே அதிகமானபேர்களிடத்தில் சர்வேசுரன் பிரியப்படவில்லை. ஆதலால் அவர்கள் வனாந்தரத்திலே விழுந்து மடிந்தார்கள்.

6. அவர்கள் இச்சித்ததுபோல, நாமும் தகாதவைகளை இச்சியாதபடிக்கு இவைகள் நமக்குத் திருஷ்டாந்தங்களாகச் சம்பவித்தன. (சங். 105-14.)

7. ஜனங்கள் பொசிக்கவும் குடிக்கவும் உட்கார்ந்து, விளையாட எழுந்தார்கள் என்று எழுதப்பட்டபடியே அவர்களில் சிலரைப்போல் நீங்களும் விக்கிரகஆராதனைக்காரராய்ப் போகாதிருங்கள். (யாத். 32-6.)

8. அவர்களிலே சிலர் வேசித்தனம் பண்ணி, ஒரே நாளில் இருபத்துமூவாயிரம்பேர் செத்துவிழுந்தார்கள். அதுபோல நாமும் வேசித்தனம்பண்ணாதிருப்போமாக. (எண். 25-1.)

9. அவர்களிலே சிலர் சோதித்துச் சர்ப்பங்களினாலே மடிந்தார்கள்; அதுபோல நாமும் கிறீஸ்துநாதரைச் சோதியாதிருப்போமாக. (எண். 21-5.)

10. அவர்களிலே சிலர் முறுமுறுத்து, சங்கரிப்பவனாலே அழிக்கப்பட்டார்கள். அதுபோல நீங்களும் முறுமுறுக்காதிருங்கள். (எண். 11-1.)

11. இவைகளெல்லாம் அவர்களுக்குத் திருஷ்டாந்தங்களாகச் சம்பவித்தன. உலகத்தின் முடிவுகாலத்திலிருக்கிற நமக்கு இவைகள் படிப்பினையாக எழுதப்பட்டிருக்கின்றன.

2-3-4. இவ்வசனங்களில் இஸ்ராயேலர் யாவரும் மேகத்திலும் சமுத்திரத்திலும் ஞானஸ்நானம் பண்ணப்பட்டார்களென்பதும், எல்லாரும் ஒரே ஞானப் போஜனத்தை உண்டு ஒரே பானத்தைப் பருகினார்களென்பதும் அவர்கள் ஞான விதமாயும், உருவகமாயும் ஞானஸ்நானம் பெற்று, ஞானப் போஜன பானம் அருந்தினார்களென்று எண்ணத்தகும். ஏனெனில் பகலிலே அவர்களுக்குக் குடைநிழலாகவும், இரவிலே வெளிச்சஸ்தம்பமாகவுமிருந்த மேகமானது ஆசாபாசத்தின் உக்கிரமத்தைத் தணித்து, புத்தியின் அந்தகாரத்தை நீக்கி ஞான வெளிச்சந் தருகிற ஞானஸ்நானத்தின் வரப்பிரசாதத்துக்கு அடையாளமாய் இருந்தது. அவர்கள் கடலைக் கடந்து அக்கரை சேர்ந்தார்களே, அந்தக் கடல் ஞானஸ்நானத் தீர்த்தத்துக்கு உருவகமாயிருந்தது. அவர்களுக்கு வானத்திலிருந்து அற்புதமாய் வருஷித்த மன்னா என்னும் போஜனமும், கற்பாறையில் சுரந்த ஜலமும் யேசுநாதருடைய திருச் சரீரமும் இரத்தமுமாகிய தேவநற்கருணைக்கு அடையாளமாயிருந்தது.

12. ஆகையால் நிற்கிறதாக எண்ணு கிறவன் விழாதபடிக்குப் பார்த்துக் கொள்ளுவானாக.

13. மனுஷ சுபாவத்துக்குரிய சோதனையேயன்றி வேறொன்றும் உங்களுக்கு நேரிடாதிருப்பதாக. சர்வேசுரன் பிரமாணிக்கமுள்ளவர்; உங்கள் திராணிக்கு மேலாக நீங்கள் சோதிக்கப்படுவதற்கு அவர் இடங்கொடார். ஆனால் நீங்கள் சோதனையைத் தாங்கும்படி சோதனையோடு வழியும் பண்ணுவார்.

14. ஆதலால் எனக்கு மிகவும் பிரியமானவர்களே, விக்கிரக ஆராதனைக்கு விலகியோடுங்கள்.

15. உங்களை விவேகிகளென்று எண்ணிப் பேசுகிறேன். நான் சொல்லுகிறதை நீங்களே நிதானித்துப்பாருங்கள்.

16. நாம் ஆசீர்வதிக்கிற ஆசீர்வாதத்தின் பாத்திரமானது கிறீஸ்துநாதருடைய இரத்தத்தை ஐக்கியமாய்ப் பகிர்ந்து உட்கொள்ளுதலல்லவா? நாம் பிட்கிற அப்பமானது கர்த்தருடைய சரீரத்தைப் பகிர்ந்து உட்கொள்ளுதலல்லவா?

17. ஏனெனில் அப்பம் ஒன்றாயிருக்க, அந்த ஒரே அப்பத்தைப் பகிர்ந்து உட்கொள்ளுகிற நாமெல்லாரும் அநேகராயிருந்தாலும், ஒரே சரீரமாயிருக்கிறோம்.

18. மாம்ச சம்பந்தப்படி இஸ்ராயேலைப் பாருங்கள். பலிகளைப் பொசிக்கிறவர்கள் பலிபீடத்தோடு ஐக்கியப்பட்டவர்களல்லவா?

19. இதினாலே நான் சொல்லுவதென்ன? விக்கிரகங்களுக்குப் பலியிடப்பட்டதை ஒரு காரியமென்கிறேனோ? அல்லது விக்கிரகந்தான் ஒரு காரியமென்கிறேனோ? (அல்லவே).

20. அஞ்ஞானிகள் பலியிடுகிறவைகளைச் சர்வேசுரனுக்கல்ல, பேய்களுக்கே பலியிடுகிறார்களென்று சொல்லுகிறேன். நீங்கள் பேய்களோடே ஐக்கியப்பட எனக்கு மனதில்லை. நீங்கள் ஆண்டவருடைய பாத்திரத்திலும், பேய்களுடைய பாத்திரத்திலும்பானம் பண்ணக்கூடாது. (யாத். 32-10.)

21. நீங்கள் ஆண்டவருடைய பந்தியிலும், பேய்களுடைய பந்தியிலும் பங்குள்ளவர்களாயிருக்கக்கூடாது.

22. நாம் கர்த்தருக்குக் கோபத்தை எழுப்பலாமா? அவரைவிட நாம் பலவான்களா? எல்லாவற்றிற்கும் எனக்கு உத்தரவுண்டு. ஆனால் எல்லாம் செய்வது தகுதியன்று.

23. எல்லாவற்றிற்கும் எனக்கு உத்தரவுண்டு. ஆனால் எல்லாம் நல் விர்த்தியை உண்டாக்காது. (1 கொ. 6-12.)

16. அப்போஸ்தலர்கள் திவ்விய பூசை செய்து, தேவநற்கருணை உண்டாக்கிவந்தார்களென்றும், அந்தத் தேவநற்கருணையில் யேசுநாதருடைய மெய்யான திருச் சரீரமுந் திரு இரத்தமுந் தேவசுபாவமும் அடங்கியிருக்கிறதென்றும், அதைப் பூசை காண்கிற விசுவாசிகளுக்குப் பரிமாறினார்களென்றும், அந்தத் தேவநற்கருணையை உட்கொள்ளுகிற விசுவாசிகள் யேசுநாதருடைய மெய்யான திருச் சரீரத்தோடும் திரு இரத்தத்தோடும் ஐக்கியப்படுகிறார்களென்றும் இந்த வாக்கியத்தினாலே எவ்வளவோ தெளிவாய்க் காணப்படுகிறது.

20. 8-ம் அதி. 4-ம் வசனத்தில் சொல்லியிருக்கிறதுபோல் விக்கிரகமென்பது ஒன்றுமில்லை என்கிறதினாலே ஒரு பதார்த்தம் விக்கிரகத்துக்குப் படைத்திருந்தாலும் அதுவும் ஒன்றுமில்லை என்று அறிவுடையோர் நிச்சயித்து, அப்படிப்பட்ட பதார்த்தங்களை வித்தியாசம் ஒன்றின்றிப் பொசிக்கலாமென்பார்கள். ஆனால் அதிலேதானே 7-ம் வசனத்தில் சொல்லியிருக்கிறதுபோல விசுவாசத்தில் பலவீனமுள்ள சிலர் அப்படிப்பட்ட பதார்த்தங்களைப் பொசித்தால் பாவமாயிருக்குமென்று எண்ணுகிறதினாலே அறிவுடையோர் அவர்களுக்கு முன்பாக அதைப் பொசித்தால் அவர்களுந் தங்கள் மனச்சாட்சிக்கு விரோதமாய்ப் பொசிப்பதற்கு வழி காண்பித்ததாகுமென்பதினாலே அறிவுடையோர் முதலாய் அப்படிப்பட்ட பதார்த்தங்களைப் பொசிக்கக்கூடாதென்று அறிக.

24. அவனவன் தன் சுய பிரயோசனத்தைத் தேடாமல், பிறனுடைய பிரயோசனத்தைத் தேடக்கடவான்.

25. மனச்சாட்சியினிமித்தம் ஒன்றையும் விசாரியாமல், கடையில் விற்கப்படுகிற எதையும் வாங்கிப் பொசியுங்கள்.

26. பூமியும் அதில் நிறைந்த யாவும் ஆண்டவருடையதாமே. (சங். 23-1.)

27. அஞ்ஞானிகளில் ஒருவன் உங்களை விருந்துக்கு அழைக்கும்போது, உங்களுக்குப் போகப்பிரியமானால், மனச்சாட்சியினிமித்தம் ஒன்றையும் விசாரியாமல் உங்களுக்குமுன் வைக்கப்படுகிற எதையும் பொசியுங்கள்.

28. ஆனால் இது விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டதென்று யாராகிலும் சொல்லுவானாகில், அப்படி அறிவித்தவனைப்பற்றியும், மனச்சாட்சியைப் பற்றியும் அதைப் பொசியாதிருங்கள்.

29. மனச்சாட்சியைப்பற்றி என்கிறேன். ஆனால் அது உன்னுடைய மனச்சாட்சியைப்பற்றியல்ல, மற்றொருவனுடைய மனச்சாட்சியைப்பற்றியே சொல்லுகிறேன். ஏனெனில் எனக்குள்ள சுயாதீனம் மற்றொருவனுடைய மனச்சாட்சியினால் குற்றமாக எண்ணப்படவேண்டியதென்ன ?

30. அன்றியும் நான் நன்றியறிந்த தோஸ்திரஞ்செய்து பொசிக்கிறேனாகில், நன்றியறிதல் செலுத்துகிற காரியத்தைப்பற்றி நான் தூஷணிக்கப்படுவானேன் ?

31. ஆகையால் நீங்கள் சாப்பிட்டாலும், குடித்தாலும், வேறெதைச் செய்தாலும், எல்லாவற்றையும் சர்வேசுரனுடைய தோஸ்திரத்துக்காகச் செய்யுங்கள். (கோலோ. 3-17.)

32. யூதருக்கானாலும், அஞ்ஞானிகளுக்கென்கிலும், சர்வேசுரனுடைய திருச்சபைக்கானாலும் நீங்கள் இடறலாயிருக்கவேண்டாம்.

33. நானும் எனக்குப் பிரயோசனமானதைத் தேடாமல், அநேகருக்குப் பிரயோசனமானதைத்தேடி, அவர்கள் இரட்சிக்கப்படும்படி எவ்விதத்திலும் எல்லாருக்கும் பிரியப்படுகிறப்போல (நீங்களும் நடந்துகொள்ளுங்கள்.)

## 11-ம். அதிகாரம்.

ஸ்திரீ பூமான்கள் ஜெபம்பண்ணவேண்டிய விதத்தைக் கற்பித்துத் தேவநற்கருணை ஸ்தாபிக்கப்பட்ட விதத்தையும், அபாத்திரமாய் அதனை உட்கொள்ளுகிறவர்கள் கட்டிக்கொள்ளுகிற துரோகத்தையும் விளக்கிக்காட்டுகிறார்.

1. நான் கிறீஸ்துநாதரைக் கண்டு பாவிக்கிறதுபோல, நீங்களும் என்னைக் கண்டுபாவித்து நடங்கள்.

2. சகோதரரே, நீங்கள் எல்லாவற்றிலும் என்னை நினைவுகூர்ந்து, நான் உங்களுக்குப் படிப்பித்தபடி நீங்கள் என் கற்பனைகளை அநுசரித்துவருகிறதினிமித்தம் உங்களைப் புகழுகிறேன்.

3. இப்போது நீங்கள் அறியவேண்டுமென்று நான் விரும்புகிறதாவது : எந்தப் புருஷனுக்கும் கிறீஸ்துநாதர் தலைமையாயிருக்கிறார். ஸ்திரீக்கோ புருஷன் தலைமை. கிறீஸ்துநாதருக்கோவெனில் சர்வேசுரன் தலைமையாயிருக்கிறார். (எபே. 5-23.)

29. உன் மனச்சாட்சியைப்பற்றியல்ல, இதைச் சாப்பிடக்கூடாதென்று நினைக்கிற பிறனுடைய மனச்சாட்சியைப்பற்றித்தான். ஏனெனில், நான் குற்றமின்றி அதைப் பொசிக்கக்கூடுமானாலும் அதை நான் பொசிப்பதினாலே அவன் என்பேரில் குற்றமுண்டென்று நினைப்பானாகில் அந்த நினைப்புக்கு நான் இடங்கொடுத்து அதைப் பொசிப்பானேன் ? நான் போஜனம் பண்ணும்போதெல்லாஞ் சர்வேசுரனுக்குத் தோத்திரமாகப் பண்ணுகிறேன். ஆகையால் நான் சர்வேசுரனுக்குத் தோத்திரஞ்செய்து பொசிக்கிற போஜனத்தின் நிமித்தம் நான் விக்கிரகங்களுக்கு ஏதோ சங்கை செய்கிறேனென்று யாராகிலும் நினைக்கும்படி நான் இடங்கொடுப்பானேன் என்றர்த்தமாம்.

4. ஜெபம்பண்ணும்போதாவது தீர்க்கதரிசனம் சொல்லும்போதாவது தன் சிரசை மூடிக்கொண்டிருக்கிற எந்தப் புருஷனும் தன் சிரசை அவமானப்படுத்துகிறான்.

5. ஜெபம்பண்ணும்போதாவது தீர்க்கதரிசனஞ்சொல்லும்போதாவது தன் சிரசை மூடாதிருக்கிற எந்த ஸ்திரீயும் தன் சிரசை அவமானப்படுத்துகிறாள். ஏனெனில் அது அவளுக்குத் தலையை மொட்டையடித்ததுக்குச் சமானமாம்.

6. ஆதலால் ஸ்திரீயானவள் முக்காடிட்டுக்கொள்ளாவிட்டால், தலைமயிரையுங் கத்தரித்துப் போடக்கடவாள். ஆனால் தலைமயிரைக் கத்தரிக்கிறதும், மொட்டையடிக்கிறதும் ஸ்திரீக்கு வெட்கமானால், முக்காடிட்டுக்கொள்ளவேண்டும்.

7. புருஷனோ தன் சிரசை மூடிக்கொண்டிருக்கக்கூடாது. ஏனெனில் அவன் சர்வேசுரனுடைய சாயலும், மகிமையுமாயிருக்கிறான். ஸ்திரீயோ புருஷனுடைய மகிமையாயிருக்கிறாள்.

8. அதெப்படியென்றால், புருஷன் ஸ்திரீயினிடத்தினின்றல்ல; ஸ்திரீயே புருஷனிடத்தினின்று உண்டாக்கப்பட்டாள்.

9. ஆகையால் ஸ்திரீயைப்பற்றிப் புருஷன் உண்டாக்கப்பட்டவனல்ல; ஆனால் புருஷனுக்காகவே ஸ்திரீ உண்டாக்கப்பட்டவள். (ஆதி. 2-18.)

10. ஆகக்கொள்ள, தேவதூதர்களினிமித்தம் ஸ்திரீயானவள் சிரசின்மேல் முக்காட்டைப் போட்டுக்கொண்டிருக்கவேண்டும்.

11. ஆகிலும் ஆண்டவரிடத்தில் ஸ்திரீயில்லாமல் மனுஷனுமில்லை, மனுஷனில்லாமல் ஸ்திரீயுமில்லை.

12. எவ்வாறெனில், ஸ்திரீயானவள் மனுஷனிலிருந்து உண்டானதுபோல மனுஷனும் ஸ்திரீயின் வழியாய் உண்டாகிறான். ஆகிலும் எல்லாம் சர்வேசுரனிடத்திலிருந்து வருகிறது.

13. ஸ்திரீயானவள் முக்காடில்லாமல் சர்வேசுரனை வேண்டிக்கொள்ளுகிறது இலக்ஷணமாவென்று நீங்களே நிதானித்துப்பாருங்கள்.

14. மனிதன் கூந்தல் வளர்த்தால், அது அவனுக்கு ஈனமாயிருக்கிறதென்று சுபாவமே உங்களுக்குப் போதிக்கிறதில்லையா?

15. ஸ்திரீயோவென்றால் கூந்தலை வளர்க்கிறது அவளுக்கு மகிமையாயிருக்கிறது. ஏனெனில் கூந்தல் முக்காடாக அவளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறதல்லோ.

10. இங்கே சொல்லப்பட்ட முக்காடு மூல பாஷைகளில் அதிகாரமென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஏனென்றால் கலியாணஞ்செய்த ஸ்திரீகள் புருஷனுடைய அதிகாரத்துக்கு உட்பட்டவர்களென்றும், அப்படிப்பட்ட அதிகாரத்தை ஸ்திரீகள் தங்கள் தலைமேல் கொண்டிருக்கிறார்களென்றும் அர்த்தமாக ஸ்திரீகள் முக்காடு தரித்துக்கொள்வது வழக்கமாயிருந்தது. தேவதூதர் அல்லது சம்மனசுக்களின் நிமித்தம் என்பதேதெனில் கிறீஸ்துவர்கள் ஜெபம் பண்ணும்போதும் விசேஷமாய்த் தேவாலயத்தில் ஒன்றாய்க்கூடி வரும்போதும் அவர்களுடைய ஜெபத்தைச் சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுக்கும்படிக்கு அவர்களோடே கூட அவர்களுடைய காவல் சம்மனசுகளும் இருப்பதினாலே அவர்களுக்குச் சங்கையாக ஸ்திரீகள் முக்காடிடவேண்டும் என்றறிக.

16. ஆகிலும் யாதாமொருவன் இதைப்பற்றித் தர்க்கிக்க மனதாயிருந்தால், எங்களுக்கும் சர்வேசுரனுடைய சபைக்கும் அப்படிப்பட்ட வழக்கமில்லை. (1. தீமோ. 6-4.)

17. நீங்கள் கூட்டங்கூடுவது நன்மைக்கு ஏதுவாயிராமல், தின்மைக்கு ஏதுவாயிருப்பதால், உங்களைப் புகழாமல் உங்களுக்கு நான் கற்பிக்கிறதாவது :

18. முந்தமுந்த நீங்கள் ஒன்றாய்க் கூடிக்கோவிலுக்கு வரும்போது உங்களுக்குள்ளே கட்சிப் பிரிவுகள் உண்டாயிருக்கிறதாகக் கேள்விப்படுகிறேன். அதையும் பாதி நம்புகிறேன். (1. கொ. 1-11.)

19. ஏனெனில் உங்களுக்குள்ளே புண்ணியத்தில் திடமானவாகள் இன்னாரென்று வெளியாகும்படி பதிதத்தனங்கள் உண்டாயிருக்கவேண்டியதுதான்.

20. ஆகையால் நீங்கள் ஒன்றாகக் கூடிவருவது ஆண்டவருடைய இராப் போஜனம் உண்பதற்கல்ல.

21. ஏனெனில் அவனவன் தன் போஜனத்தை முந்திப் பொசிக்கத் துவக்குகிறான். அப்படியே ஒருவன் பட்டினியாயிருக்க, வேறொருவன் குடிவெறியாகிறான்.

22. பொசிக்கவும் குடிக்கவும் உங்களுக்கு வீடுகளில்லையா? அல்லது சர்வேசுரனுடைய ஆலயத்தைப்புறக்கணித்து, ஒன்றுமில்லாதவர்களை வெட்கப்படுத்துகிறீர்களோ? இதிலே நான் உங்களுக்கு என்ன சொல்லுவேன்? உங்களைப் புகழுவேனோ? இதிலே உங்களைப் புகழேன்.

23. ஆண்டவரிடத்தில் நான் பெற்றுக்கொண்டதையே உங்களுக்குக் கையளித்தேன். அதென்னவெனில், ஆண்டவராகிய யேசுநாதர் தாம் காட்டிக்கொடுக்கப்பட்ட அந்தஇராத்திரியிலே அப்பத்தை எடுத்து,

24. தோத்திரம்பண்ணி, அதைப் பிட்டு: நீங்கள் இதை வாங்கிப் பொசியுங்கள்; இது உங்களுக்காகக் கையளிக்கப்படும் என் சரீரமாயிருக்கிறது. என் ஞாபகமாக இதைச் செய்யுங்கள் என்றார். (மத். 26-26; மாற். 14-22; லூக். 22-19.)

16. ஆண்பிள்ளைகளும் பெண்பிள்ளைகளும் கோவிலிலே அநுசரிக்க வேண்டிய மேரை மரியாதையைக்குறித்து இதுவரைக்கும் நான் சொன்னதின் பேரில் யாதொருவன் தர்க்கிக்க விரும்புவானுகில் அவனோடு சடுத்தஞ் செய்யத் தேவையில்லை. ஆனால் எங்களுக்குள்ளேயும் உலகமெங்கும் இருக்கிற சர்வேசுரனுடைய திருச்சபைக்குள்ளேயும் நான் சொன்ன முறைமையொழிய வேறே முறைமை நடக்கிறதில்லையென்று அறியக்கடவான் என்றர்த்தமாம்.

22. நடபடி ஆகமம் 2-ம் அதி. 42-ம் வசனத்தில் சொல்லப்பட்டிருக்கிறவண்ணம் சபையார் கோவிலுக்கு ஒன்றாய்க் கூடிவரும்போது, அவனவன் தன் தன் ஐவேசுக்குத்தக்கது சில போஜன பதார்த்தங்களைக் கொண்டுவந்து, பூசை கண்டு, திவ்வியநற்கருணை உட்கொண்ட பிற்பாடு எல்லாரும் ஒன்றாய் உட்கார்ந்து அவரவர் கொண்டுவந்த பதார்த்தங்களைச் சகலருமாகப் பகிர்ந்து சாப்பிடுவது அக்காலத்திலே வழங்கிவந்தது. இந்தவகை விருந்தை ஆண்டவருடைய போஜனமென்றும் அன்பின் விருந்தென்றுஞ் சொல்லுவார்கள். ஆனால் இது கற்பனையாக அல்ல, அக்காலத்திலே புதிதாய் மனந்திரும்பினவர்களுக்குள்ளே அன்னியோன்னிய சிநேகமுண்டாயிருக்கும்படிக்கு இஸ்பிரீத்துசாந்துவின் ஏவுதலால் இந்த வழக்கம் உண்டுபண்ணப்பட்டிருந்தது. ஆயினும் அது எப்போதும் நடந்தேறினதல்ல. அப்படியே அக்காலத்தில் மனந்திரும்புகிறவர்களெல்லாரும் தங்கள் வீடுவாசல் நிலபலங்கள் முதலியவற்றை விலைக்கிரயப்படுத்தி ரொக்கத்தை அப்போஸ்தலர் பாதங்களிலே வைப்பது வழக்கமாயிருந்தது. அந்த வழக்கமும் அப்போஸ்தலர் காலத்திலேயே நின்று போனதாகக் காண்கிறோம். இதிலே அர்ச். சின்னப்பர் 23-ம் வசனந்துவக்கி 32-ம் வசனம் வரைக்குந் தேவநற்கருணையைக் குறித்துப் பேசினபிறகு 33-34-ம் வசனங்களில் இந்த அன்பின் போஜனத்தைக் குறித்து மறுபடியும் பேசுகிறார்.

25. அசனம் பண்ணின பின்பு அந்தப்பிரகாரமே அவர் பாத்திரத்தையும் எடுத்து: இந்தப்பாத்திரம் என் இரத்தத்தில் புதிய உடன்படிக்கையாயிருக்கின்றது. இதை நீங்கள் பானம்பண்ணும்போதெல்லாம் என் ஞாபகமாகச் செய்யுங்கள் என்றார்.

26. ஆகையால் ஆண்டவர் வருமளவும் நீங்கள் இந்த அப்பத்தைப்பொசித்து, இந்தப் பாத்திரத்திலே பானம்பண்ணும்போதெல்லாம் அவருடைய மரணத்தை அறிவிப்பீர்கள்.

27. இப்படியிருக்க, யாதாமொருவன் அபாத்திரமாய் இந்த அப்பத்தை பொசிப்பானாகில் அல்லது ஆண்டவருடைய பாத்திரத்தில் பானம்பண்ணுவானாகில், ஆண்டவருடைய சரீரத்தின் மட்டிலும், இரத்தத்தின்மட்டிலுங் குற்றவாளியாவான். (அரு. 6-59.)

28. ஆதலால் எந்த மனிதனும் தன்னைத்தானே பரிசோதித்தபின்பு இந்த அப்பத்தில் பொசித்து, இந்தப் பாத்திரத்தில் பானம்பண்ணுவானாக. (2. கொ. 13-5.)

29. என்னத்தினாலெனில், ஆண்டவருடைய சரீரம் என்று நிதானித்துணராமல், எவன் அபாத்திரமாய்ப் பொசித்துப்பானம்பண்ணுகிறானோ, அவன் தன் ஆக்கினைத்தீர்ப்பைப் பொசித்துப் பானம்பண்ணுகிறான்.

30. இதினிமித்தம் உங்களுக்குள்ளே பலவீனரும், நோவாளிகளும் அநேகருண்டு. அநேகரும் (மரண) நித்திரையடைந்திருக்கிறார்கள்.

31. நமக்கு நாமே தீர்வையிட்டுக்கொண்டால், நாம் தீர்வையிடப்படமாட்டோம்.

32. நாம் நியாயந்தீர்க்கப்படும்போது, இவ்வுலகத்தோடுகூட நாம் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படாதபடிக்கு ஆண்டவராலே சிட்சிக்கப்படுகிறோம்.

33. ஆகையால் என் சகோதரரே, நீங்கள் அசனம்பண்ணக் கூடிவரும்போது ஒருவர் ஒருவருக்காகக் காத்திருங்கள்.

34. நீங்கள் கூடிவருவது குற்றத்துக்கு ஏதுவாகாதபடிக்கு ஒருவனுக்குப் பசியிருந்தால், அவன் தன்வீட்டிலே சாப்பிடக்கடவான். மற்றக்காரியங்களை நான் வரும்போது திட்டம்பண்ணுவேன்.

## 12-ம். அதிகாரம்.

*யேசுநாதர் தம்முடைய ஞானச் சரீரமாகிய திருச்சபையிலே இஸ்பிரீத்துசாந்துவின் பற்பல வரங்களுடையவர்களை ஏற்படுத்தியிருக்கிறாரென்று காண்பிக்கிறார்.*

1. இப்போது சகோதரரே, இஸ்பிரீத்துசாந்துவின் வரங்களைப்பற்றி நீங்கள் அறியாதிருக்க எனக்கு மனதில்லை.

30. நித்திரையடைந்திருக்கிறதென்பது வேதாகமங்களிலே மரணமாய்ப்போனதுக் கர்த்தமாம்.

32. அபாத்திரமான விதமாய் அதாவது சாவான பாவத்தோடே தேவநற்கருணையை உட்கொள்ளுகிறவன் யேசுநாதருடைய திருச் சரீரத்தை உட்கொள்ளுகிறேனென்று நினையாமல், அதை அவசங்கைப்படுத்துகிறபடியினாலே நரகாக்கினைக்கேதுவாகத் தன்சாபத்தைத்தானே உட்கொள்ளுகிறான். அப்படிப்பட்ட தேவ துரோகத்துக்குத் தண்டனையாக இவ்வுலகத்திலே சர்வேசுரன் அநேகர்களுக்கு வியாதி துன்பஞ் சரீரப் பலவீனத்தையும், மரணத்தையும் முதலாய் அனுப்புகிறாரென்று கண்டு வருகிறோம். தேவநற்கருணையை வாங்குமுன் அவனவன் தன் ஆத்துமத்தை நன்றாய்ப் பரிசோதித்து, பாவமுண்டானால் நல்ல பாவசங்கீர்த்தனத்தினாலேயும் மெய்யான உத்தம மனஸ்தாபத்தினாலேயும் ஆத்துமத்தைச் சுத்திகரித்துத் தேவநற்கருணையை வாங்கினால் சொல்லப்பட்ட தண்டனைகளுக்கு ஆளாய்ப்போகமாட்டான்.

2. நீங்கள் அஞ்ஞானிகளாயிருந்த போது, நீங்கள் ஏவி நடத்தப்பட்ட படிக்கு, ஊமையான விக்கிரகங்களிடத்திற்குப் போனீர்களென்று அறிந்திருக்கிறீர்கள்.

3. சர்வேசுரனுடைய இஸ்பிரீத்துவினாலே பேசுகிற எவனும்: யேசுநாதருக்குச் சாபம் என்கானென்றும், இஸ்பிரீத்துவினாலேயன்றி, யேசுநாதர் கர்த்தரென்று ஒருவனும் சொல்லமுடியாதென்றும் உங்களுக்குத் தெரிவிக்கிறேன். (1. அரு. 4-1.)

4. வரங்களிலே வித்தியாசங்களுண்டு; ஆயினும் இஸ்பிரீத்துவானவர் ஒருவர்தான்.

5. அலுவல்களிலும் வித்தியாசங்களுண்டு; ஆயினும் ஆண்டவர் ஒருவரே. (மாற். 9-38.)

6. செய்கைகளிலும் வித்தியாசங்களுண்டு; ஆயினும் எல்லாரிடத்திலும், எல்லாவற்றையும் நடப்பிக்கிற கடவுள் ஒருவரே.

7. ஒவ்வொருவனிடத்திலே இஸ்பிரீத்துவானவர் வெளிப்படுகிற வரமானது (பொது) நன்மைக்காக அளிக்கப்படுகின்றது.

8. அப்படியே இஸ்பிரீத்துவினாலே ஒருவனுக்கு ஞானத்தின்வாக்கும், ஒருவனுக்கு அந்த ஒரே இஸ்பிரீத்துவினாலே கலைக்கியானத்தின் வாக்கும்,

2-3. சகோதரரே! இஸ்பிரீத்துசாந்துவின் வரங்களைக்குறித்து உங்களுக்குப் போதிக்க விரும்புகிறேன். நீங்கள் அஞ்ஞானிகளாயிருக்கும்போது வழக்கத்தினாலும் மற்றவர்களுடைய மாதிரிகையினாலும் பசாசின் ஏவுதலினாலும் அடிக்கடி ஊமையான விக்கிரகங்களிடத்திலேபோய், அதிலே பேய் ஆவேஷமுள்ளவர்கள் காண்பிக்கிற பற்பல மாய்கையின் சேஷ்டைகளைக் கண்டீர்கள்.

இப்படிப்பட்ட பேய் ஏவுதல்களையும் இஸ்பிரீத்துசாந்துவின் வரங்களையும் நீங்கள் பகுத்தறியும்படிக்கு ஒருகாரியம் அறிந்துகொள்ளுங்கள். அதாவது: இஸ்பிரீத்துசாந்துவின் ஏவுதலினாலே பேசுகிற எவனும் யேசுநாதர்பேரில் தூஷணஞ் சொல்லான். அன்றியும் இஸ்பிரீத்துசாந்துவின் அனுக்கிரகமின்றி அந்தத் திருநாமத்தை வணக்கத்தோடு உச்சரிக்கக்கூடாததினாலே விசுவாசத்தோடும் பத்தியோடும்: என் ஆண்டவராகிய யேசுவேஎன்று உச்சரிக்கிற எவனும் இஸ்பிரீத்துசாந்துவை அடைந்திருக்கிறவனென்று அறிந்துகொள்ளுங்களென்று அர்த்தமாம்.

7. அறியாத பாஷைகளைப் பேசுவதும், வியாதிக்காரரைப் புதுமையாகச் சுகப்படுத்துவதும், மரித்தோரை எழுப்புவதும், இனிவருங்காரியங்களைத் தீர்க்கதரிசனமாக அறிவிக்கிறதும் இவைமுதலான அற்புதங்களை ஒருவன் செய்யும்படி இஸ்பிரீத்துசாந்து வரங்கொடுக்கும்போது, எப்போதும் அந்த வரங்கள் சர்வேசுரனுடைய தோத்திரத்துக்காகவுந் திருச்சபையின் பிரயோசனத்துக்காகவும், பிறருடைய சரீரத்தின் அல்லது ஆத்துமத்தின் நன்மைக்காகவும் உபயோகிக்கப்படுமொழிய, பேய்களால் பண்ணப்படுகிற மாய்கையான கிரியைகளைப்போல வீணானதும் வேடிக்கைக்குரியதுமான அற்புதங்களைச் செய்கிறதுக்குக் கொடுக்கப்படுகிறதில்லை. இதுவே இஸ்பிரீத்துசாந்துவினால் பண்ணப்படுகிற புதுமைகளுக்கும் பசாசின் மாய்கையினால் நடக்கிற அதிசயக்கிரியைகளுக்கும் உண்டாயிருக்கிற பிரதான வித்தியாசம். பேயாவேஷமுள்ளவர்கள் ஒருவேளை அறியாத பாஷைகளைப் பேசுவார்கள், மனுஷரால் தூக்கக்கூடாத பாரமான வஸ்துக்களைத் தூக்குவார்கள், சீமோனென்பவனைப்போல தாங்களாய் ஆகாசத்தில் ஏறுவார்கள்; மாய்கைவித்தையினால் ஒருவனைப் பாவத்துக்கு இணங்கப்பண்ணுவார்கள்; திடீரென புலி, சிங்கம், பாம்பு, கோட்டை, கொத்தளமுதலானவைகளைத் தோன்றப்பண்ணுவார்கள். ஆனால் இவையெல்லாம் வீண் வேடிக்கைக்காவது மனிதர்களைக் கெடுக்கிறதற்காவது பாவ அக்கிரமத்துக்காவது பண்ணப்படுகிறதொழிய ஒரு நன்மையான காரியத்துக்காக அல்ல. சிலவிசை பசாசின் ஏவலினாலே வந்த வியாதி பசாசினாலே தீருமென்று சொன்னாலும் அது உண்மையல்ல. பசாசின் ஆவேஷம் அல்லது ஏவல் நீங்கினால் ஆவேஷங்கொண்டவன் அல்லது ஏவப்பட்டவன் தன் சுபாவ அந்தஸ்தை அடைகிறதினால் சௌக்கியமாகிறான். ஆனால் அந்தச் சௌக்கியம் பசாசினாலே கொடுக்கப்பட்டதென்று சொல்லக்கூடாது. காலிலே தைத்த முள்ளினால்

9. ஒருவனுக்கு அந்த இஸ்பிரீத்துவினாலே விசுவாசமும், ஒருவனுக்கு அந்த ஒரே இஸ்பிரீத்துவினாலே ஆரோக்கிய வரமும்,

10. ஒருவனுக்கு அற்புதங்களைச் செய்கிற வரமும், ஒருவனுக்குத் தீர்க்கதரிசன வரமும், ஒருவனுக்கு அரூபிகளைப் பகுத்தறியும் வரமும், ஒருவனுக்குப் பலபாஷை வரமும், ஒருவனுக்குப் பாஷைகளை வியாக்கியானஞ் செய்யும் வரமும் கொடுக்கப்படுகிறது.

11. இப்படியிருந்தாலும், இவையெல்லாவற்றையும் அந்த ஒரே இஸ்பிரீத்துவே நடப்பித்துத் தமதிஷ்டப்படி ஒவ்வொருவனுக்கும் பகிர்ந்துகொடுக்கிறார். (உரோ. 12-3; எபேசி. 4-15.)

12. எப்படியெனில் சரீரம் ஒன்றானாலும், அதற்கு அவயவங்கள் அநேகம். சரீரத்தின் அவயவங்கள் பலவாயிருந்தாலும், அவைகள் ஒரே சரீரமாகவேயிருக்கின்றன. அப்படியே கிறீஸ்துநாதருமிருக்கிறார்.

13. அதெப்படியென்றால், நாம் யூதரானாலும், புற ஜாதியாரானாலும், அடிமைகளென்றாலும், சுயாதீனரானாலும் எல்லாரும் ஒரே இஸ்பிரீத்துவினாலே ஒரே சரீரமாயிருக்கும்படிக்கு ஞானஸ்நானம்பெற்று, எல்லாரும் ஒரே இஸ்பிரீத்துவில் தாகந்தீர்க்கப்பட்டிருக்கிறோம். (கலாத். 3-28.)

14. எவ்வாறெனில், சரீரமானது ஒரே உறுப்பாயிராமல், பற்பல உறுப்புகளாயிருக்கின்றது.

15. காலானது, நான் கையாயிராததினாலே, நான் சரீரத்தின் உறுப்பல்லவென்றால், அதினாலே அது சரீரத்தின் உறுப்பாயிராதோ?

16. காதானது நான் கண்ணாயிராதபடியினாலே, நான் சரீரத்தின் உறுப்பல்லவென்றால், அதினாலே அது சரீரத்தின் உறுப்பாயிராதோ?

17. சரீரமெல்லாம் கண்ணாயிருந்தால், கேள்வி எங்கே? எல்லாம் செவியாயிருந்தால், மோப்பம் எங்கே?

18. ஆனால் சர்வேசுரன் உறுப்புகளில் ஒவ்வொன்றையும் தமது சித்தத்தின்படி சரீரத்தில் வைத்திருக்கிறார்.

19. அவையெல்லாம் ஒரே உறுப்பாயிருந்தால் சரீரம் எங்கே?

20. உறுப்புகள் அநேகமாயினும் சரீரம் ஒன்றே.

வலியும் நோவுமுண்டாகிறது; முள்ளைப் பிடுங்கினால் சௌக்கியமாகிறது. ஆகையால் அந்தச் சௌக்கியம் முள்ளினாலுண்டாகிறதென்று சொல்லுவாருண்டோ? இல்லையே. பசாசு நீங்குவதற்காகிலும், வியாதி குணமாவதற்கென்கிலும் பசாசை மன்றாடி, பசாசுக்குப் பூசை, பலி, பொங்கலிட்டு, கோணங்கி முதலானவர்களைக்கொண்டு பிரயாசப்படலாமோ? பரிச்சேதங் கூடாது. ஏனென்றால், அந்தக் கிரியைகளெல்லாம் பசாசின்பேரில் பத்தி நம்பிக்கை வைக்கிற விலக்கப்பட்ட கிரியைகளாயிருக்கிறபடியினாலே அவைகளைக்கொண்டு சரீர சௌக்கியத்தையடையத்தேடுகிறவன் தன் ஆத்துமத்தைப் பசாசுக்கு அடிமையாக்கிக் கொள்ளுகிறானென்றறிக.

12. கிறீஸ்துநாதருடைய ஞானச்சரீரமாகிற திருச்சபையிலே அப்போஸ்தலர், வேதபாரகர், மேய்ப்பர், தீர்க்கதரிசிகள் முதலான கிறீஸ்துவர்கள் அந்த ஞானச்சரீரத்துக்குப் பற்பல அவயவங்களாயிருக்கிறார்கள். யேசுநாதரோ அந்த ஞானச்சரீரத்துக்குத் தலையாயிருக்கிறார் என்றர்த்தமாம்.

13. எல்லாரும் ஒரே இஸ்பிரீத்துவில் தாகந்தீர்க்கப்பட்டிருக்கிறோமென்பதற்கு அர்த்தமாவது: இஸ்பிரீத்துசாந்து ஆத்துமத்திலே பாய்ந்தோடுகிற ஜீவ ஜலமாயிருக்கிறாரென்று அப்போஸ்தலர் நடபடி 2-ம் அதிகாரம் 17-18-ம் வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இஸ்பிரீத்துசாந்துவில் தாகந்தீர்க்கப்படுகிறதென்கிறது இஸ்பிரீத்துசாந்துவின் வரங்களால் நிரப்பப்படுகிறதென்றறிக.

21. கண்ணானது கரத்தை நோக்கி: உன் உதவி எனக்கு வேண்டியதில்லை யென்றும், தலையானது கால்களை நோக்கி: நீங்கள் எனக்கு அவசரமில்லை யென்றுஞ் சொல்லக்கூடாதே.

22. ஆனால் சரீரத்தின் அவயவங்களுக்குள்ளே எவைகள் அதிகப் பலவீனமாகக் காணப்படுகிறதோ, அவைகளே அதிக அவசியமாயிருக்கின்றன.

23. மேலும் நமக்கு அதிக ஈனமாகத் தோன்றுகிற சரீரத்தின் அவயவங்களை அதிகக் கனம் பண்ணுகிறோம். நம்மில் மானமற்றவைகளையும் அதிக யோக்கியமாக நடத்துகிறோம்.

24. நம்மில் மகிமையான அவயவங்களுக்கு ஒன்றும் வேண்டுவதில்லை. ஆனால் சர்வேசுரன் இலக்ஷணங்குன்றிய உறுப்புக்கு அதிக மகிமையைக் கொடுத்துச் சரீரத்தைச் சீர்ப்படுத்தினார்.

25. சரீரத்தில் பிரிவினை உண்டாகாமல் உறுப்புகள் ஒன்றையொன்று கரிசனமாய்ப் பார்க்கும்படி இவ்விதஞ் செய்தார்.

26. ஆதலால் ஒரு அவயவம் ஏதாகிலும் வருத்தப்பட்டால் அத்தோடுகூட எல்லா அவயவங்களும் வருத்தப்படும். ஒரு அவயவம் பெருமையடைந்தால் அத்தோடுகூட எல்லா அவயவங்களும் மகிழுகின்றன.

27. நீங்களோ கிறீஸ்துநாதருடைய சரீரமும், அவயவத்தின் அவயவங்களுமாயிருக்கிறீர்கள்.

28. அவ்வண்ணமே சர்வேசுரன் திருச்சபையிலும் சிலரை ஏற்படுத்தியிருக்கிறார். முதலாவது அப்போஸ்தலர்கள், இரண்டாவது தீர்க்கதரிசிகள், மூன்றாவது வேதபாரகர், பிறகு புதுமை வரங்கள், அதன்பின் ஆரோக்கிய வரங்கள், தர்ம உதவிகள், ஆளுகை வரங்கள், பாஷை வரங்கள், வியாக்கியானம்பண்ணும் வரங்களுமாம். (எபே. 4-11.)

29. எல்லாரும் அப்போஸ்தலர்களோ? எல்லாரும் தீர்க்கதரிசிகளோ? எல்லாரும் வேதபாரகரோ?

30. எல்லாரும் அற்புதங்களைச் செய்கிறவர்களோ? எல்லாரும் வியாதிகளைக்குணமாக்குகிற வரத்தையுடையவர்களோ? எல்லாரும் பாஷைகளைப் பேசுகிறவர்களோ? எல்லாரும் வியாக்கியானம் பண்ணுகிறவர்களோ?

31. இப்படியிருக்க, அதிகமேலான வரங்களை நாடித் தேடுங்கள்; இன்னமும் இதோ, அதி உத்தமமான வழியை உங்களுக்குக் காண்பிக்கிறேன்.

## 13-ம். அதிகாரம்.

சின்னப்பர் சிநேகத்தின் அவசியத்தையும், கடமையையும், நிலைமையையும், மேன்மையையும் போதிக்கிறார்.

1. மனிதருடைய பாஷைகளையும், தேவதூதர்களுடைய பாஷைகளையும் நான் பேசினாலும், என்னிடத்திலே தேவசிநேகமில்லாவிட்டால் ஓசையிடுகிற வெண்கலம் போலவும், கிண் கிணீரென்கிற கைத்தாளம்போலவும் ஆனேன்.

2. நான் தீர்க்கதரிசன வரத்தைக் கொண்டிருந்தாலும், எல்லா இரகசியங்களையும், எல்லாக் கல்விகளையும் அறிந்தவனாயிருந்தாலும், மலைகளைப் பெயர்க்கத்தக்க எவ்வித விசுவாசத்தையுமுடையவனாயிருந்தாலும் என்னிடத்திலே தேவசிநேகமில்லாவிட்டால் நான் ஒன்றுமில்லை. (மத். 31-21.)

3. அன்றியும் என் ஆஸ்திபாஸ்திகளெல்லாவற்றையும் நான் ஏழைகளுக்குப் போஜனமாகப் பகிர்ந்தாலும், என் சரீரத்தைச் சுட்டெரிக்கும்படி கையளித்தாலும் என்னிடத்தில் தேவசிநேகமில்லாவிட்டால், எனக்குப் பிரயோசனம் ஒன்றுமில்லை.

4. தேவசிநேகமோ பொறுமையுள்ளது, தயவுள்ளது. தேவசிநேகம் பொறாமைப்படாது, துடுக்காய்ச் செய்யாது, அகங்காரப்படாது.

5. பெருமையைத்தேடாது, சுயநலத்தைவிரும்பாது, கோபங்கொள்ளாது, தீங்கு நினையாது.

6. அநியாயத்தில் சந்தோஷப்படாமல், சத்தியத்திலே சந்தோஷப்படும்.

7. சகலத்தையும் சகிக்கும், சகலத்தையும் விசுவாசிக்கும், சகலத்தையும் நம்பும், சகலத்தையும் தாங்கிக்கொள்ளும்.

8. சிநேகம் ஒருக்காலும் ஒழியாது. தீர்க்கதரிசனங்கள் ஒழிந்தாலும், பலபாஷைபேசுகிறது நின்றுபோனாலும், கல்வி நிர்மூலமானாலும், சிநேகம் ஒருக்காலும் ஒழியாது.

9. எப்படியெனில் நமது அறிவும் அரைகுறையானது. நமது தீர்க்கதரிசனமும் அரைகுறையானது.

10. ஆனால் உத்தமமானது வரும்போது, அரைகுறையானது அற்றுப்போம்.

11. நான் குழந்தையாயிருக்கும்போது குழந்தைபோல் பேசி, குழந்தைபோல் உணர்ந்து, குழந்தைபோல் நினைத்துவந்தேன். பெரியவனானபின்போ, குழந்தைக்குரியவைகளை ஒழித்துவிட்டேன்.

12. இப்பொழுது நாம் கண்ணாடியில் மங்கலாய்க் காண்கிறோம். அப்பொழுது முகமுகமாய்க் காண்போம். இப்பொழுது அரைகுறையாய் அறிகிறேன். அப்பொழுது நான் எப்படி அறியப்பட்டிருக்கிறேனோ, அப்படியே அறிந்துகொள்ளுவேன்.

13. இப்போது விசுவாசம், நம்பிக்கை, தேவசிநேகம் இம்மூன்றும் நிலைக்கொண்டிருக்கிறது. ஆகிலும் இவைகளில் தேவசிநேகமே சிரேஷ்டமானது.

## 14-ம். அதிகாரம்.

பாஷைவரம் தீர்க்கதரிசன வரத்துக்குத் தாழ்ந்ததென்பதும், ஸ்திரீகள் தேவாலயங்களில் உபதேசிக்கக் கூடாதென்பதும்.

1. சிநேகத்தை நாடுங்கள்; ஞான வரங்களையும், விசேஷமாய்த் தீர்க்கதரிசன வரத்தையும் வேகமாய்த் தேடுங்கள்.

2. அதேனென்றால் பாஷை பேசுகிறவன் சர்வேசுரனிடத்தில் பேசுகிறானேயன்றி, மனிதர்களிடத்தில் பேசுகிறதில்லை. ஏனெனில் அவன் சொல்லுகிறது ஒருவனுக்கும் தெரியாது. அவன் இஸ்பிரீத்துவினால் இரகசியங்களைப் பேசுகிறான்.

---

7. சகலத்தையும் விசுவாசிக்குமென்பது வேத விசுவாச சத்தியத்துக்கடுத்தவைகளையல்ல; பிறர் பேசுவதின்பேரில் அசுகை சந்தேகப்படாமல், அதை உண்மையென்று எளிதாய் ஏற்றுக்கொள்ளுகிறது. எல்லாத்தையும் நம்புகிறதென்பது பிறரிடத்தில் ஒன்றிலும் அவநம்பிக்கைப்படாமல், கெட்டவனாயிருக்கிறவன்முதலாய் நல்லவனாய்ப்போவானென்று நம்பிக்கொள்ளுகிறது.

8. தீர்க்கதரிசனவரம், பாஷை பேசுகிற வரம், சாஸ்திரங்கள் முதலியவைகள் இவ்வுலகத்திலே மாத்திரஞ் செல்லுமொழிய மறுலோகத்திலே அவைகளுக்கு இடமிராது. சிநேகமோவென்றால் மோட்சத்திலே மோட்சவாசிகளுக்குள் என்றென்றைக்கும் நிலைக்கொண்டிருக்கும்.

2. பாஷை பேசுகிறவன் யாரெனில் தாவீதென்பவர் சங்கீதங்களைப் பாடினதுபோல இஸ்பிரீத்துசாந்துவின் ஏவுதலால் தேவ தோத்திரங்களை அறியாத பாஷையில் பாடினவர்களாம். அந்த வரம் திருச்சபையின் ஆரம்பத்திலே விசுவாசிகளுக்கு முக்கியமாய்க் கொடுக்கப்பட்டது.

3. தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறவன் நல்விர்த்திக்காகவும், புத்திமதிக்காகவும், ஆறுதலுக்காகவும் மனிதர்களிடத்தில் பேசுகிறான்.

4. பாஷை பேசுகிறவன் சுய நல்விர்த்திக்காகப் பேசுகிறான். தீர்க்கதரிசனஞ்சொல்லுகிறவனோ, சர்வேசுரனுடைய சபையின் நல் விர்த்திக்காகப் பேசுகிறான்.

5. நீங்கள் எல்லாரும பாஷைகளைப பேசவேண்டுமென்று விரும்புகிறேன். ஆனாலும் நீங்கள் தீர்க்கதரிசனங்களைச் சொல்லவேண்டுமென்று அதிகமாய் விரும்புகிறேன். ஏனெனில் பாஷைகளைப் பேசுகிறவன் திருச்சபை நல் விர்த்தியடையும்பொருட்டு (தான் பேசுவதற்கு) அர்த்தமுஞ் சொன்னாலொழிய, தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறவன் அவனிலும் மேற்பட்டவன்.

6. அன்றியும் சகோதரரே, நான் வேத இரகசியங்களை வெளிப்படுத்துதலிலாவது, நான் அறிந்தவைகளிலாவது, தீர்க்கதரிசனங்களிலாவது, போதகங்களிலாவது உங்களை உபதேசிக்காமல் உங்களிடத்தில் வந்து, பாஷைகளைப் பேசுவதால் உங்களுக்கு என்னாலே என்ன பிரயோசனம்?

7. உயிரற்ற வாத்தியங்களாகிய சுரமண்டலமுதலியவைகள் சத்திக்கும்போது, விபரீதத் தொனிகளைக் கொடுத்தாலொழிய, குழலால் பாடப்படுகிறதும், சுரமண்டலத்தால் வாசிக்கப்படுகிறதும் இன்னதென்று எப்படித்தெரியும்?

8. அவ்வண்ணமே எக்காளமும் விளங்காத சத்தமிட்டால், எவன் யுத்தத்துக்கு ஆயத்தம்பண்ணுவான்?

9. அதுபோலவே நீங்களும் உங்கள் நாவினால் வெளிப்படையான வாக்கியங்களைப் பேசாவிட்டால், சொல்லுகிறதென்னவென்று எப்படித் தெரியும்? ஆகாயத்தில் பேசுகிறவர்களாயிருப்பீர்கள்.

10. அப்படியே இவ்வுலகத்தில் எத்தனையோவகைப் பாஷைகள் உண்டு. ஆயினும் அவைகளில் அர்த்தசப்தமில்லாதது ஒன்றுமில்லை.

11. ஆதலால் சப்தத்தின் சாரத்தை நான் அறியாதிருந்தால், எவனோடு பேசுகிறேனோ, அவனுக்கு நான் அன்னியனாயிருப்பேன். என்னோடு பேசுகிறவனும் எனக்கு அன்னியனாயிருப்பான்.

12. அப்படியே நீங்களும் ஞானவரங்களை ஆவலாய்த் தேடுகிறவர்களானதால், திருச்சபையின் நல் விர்த்திக்காக அவைகளை ஏராளமாய்ப்பெற்றுக் கொள்ளும்படி தேடுங்கள்.

13. இதினிமித்தம் பாஷையிலே பேசுகிறவன் அதற்கு வியாக்கியானஞ்செய்யும் வரத்தைக் கேட்டுக்கொள்ளுவானாக.

14. ஏனெனில் நான் பாஷையிலே ஜெபித்தால் என் ஆத்துமம் ஜெபிக்கிறது. என் புத்தியோ பலனற்றதாயிருக்கிறது.

15. ஆகையால் செய்யவேண்டியதென்ன? நான் ஆத்துமத்தோடும் வேண்டிக்கொள்ளுவேன்; புத்தியோடும் வேண்டிக்கொள்ளுவேன்; ஆத்துமத்தோடும் பாடுவேன், புத்தியோடும் பாடுவேன்.

16. மேலும் நீ ஆத்துமத்தோடுமாத்திரம் சர்வேசுரனை ஸ்துதித்தால், கல்லாத ஜனத்தினிடமாயிருக்கிறவன் நீ சொல்லுகிறதைக் கண்டுபிடியாதிருக்க, உன் ஸ்துதிக்கு எப்படி ஆமென் என்று சொல்லுவான்.

3. இங்கே தீர்க்கதரிசன வரமென்பது விசுவாசத்துக்கடுத்த பரம ரகசியங்களை வெளிப்படையாக வியாக்கியானஞ்செய்கிற வரமுள்ளவர்களென்று அர்த்தமாம்.

17. நீ நன்றாய்த் தோத்திரம்பண்ணு கிறாயென்பது மெய்யே. ஆனாலும் (கல்லாத) அவன் அதினாலே நல்விர்த்தி யடையான்.

18. உங்களில் எல்லாருடைய பாஷை யையும் நான் பேசுகிறேனென்பதைப் பற்றி என் சர்வேசுரனுக்குத் தோஸ்தி ரம்பண்ணுகிறேன்.

19. ஆகையால் கூடின திருச்சபை யிலே அறியாதபாஷையில் பதினாயிரம் வார்த்தைகளைப் பேசுகிறதைவிட, மற் றவர்களுக்கு நான் போதிக்கும்படிக்கு என் அறிவோடு ஐந்து வார்த்தைகளைப் பேசுவது எனக்குப் பிரியமாயிருக் கிறது.

20. சகோதரரே, அறிவிலே நீங்கள் குழந்தைகளாகாதேயுங்கள்; துற்குண விஷயத்திலேதான் குழந்தைகளாயிரு ங்கள். அறிவின் விஷயத்திலோ தேர்ந் தவர்களாயிருங்கள். (மத் 18-3; உரோ. 16-19.)

21. வெவ்வேறு நாவினாலும் வெவ் வேறு உதடுகளாலும் இந்த ஜனத்துடன் பேசுவேன். அவர்கள் என்னைக்கேட்டு இணங்கமாட்டார்களென்று கர்த்தர் சொல்லுகிறார் என்று வேதத்திலே வரைந்திருக்கின்றது. (இசை. 28-11.)

22. ஆதலால் பாஷைகள் விசுவாசி களுக்கு அடையாளமாயிராமல், விசு வாசமில்லாதவர்களுக்கு அடையாள மாயிருக்கின்றது. தீர்க்கதரிசனமோ விசுவாசமில்லாதவர்களுக்கு அடை யாளமாயிராமல், விசுவாசிகளுக்கு அ டையாளமாயிருக்கின்றது.

23. அப்படியிருக்கத் திருச்சபை ஒன்றாய்க் கூடியிருக்கையிலே எல் லாரும் பற்பல பாஷைகளைப் பேசு வார்களாகில், கல்லாதவர்கள் அல்லது விசுவாசமில்லாதவர்கள் உள்ளே வந் தால், பைத்தியங்கொண்டிருக்கிறீர்க ளென்று சொல்லுவார்களல்லவோ? (அப். 2-13.)

24. ஆனால் எல்லாரும் தீர்க்கதரி சனஞ்சொல்லுவார்களாகில், ஒரு அவி சுவாசி அல்லது கல்லாதவன் உள்ளே வந்தால், அவன் எல்லாராலும் உண்மை யில் உணர்த்தப்பட்டு, எல்லாராலும் நிதானிக்கப்படுவான்.

25. அவன் இருதயத்தில் மறைந்தி ருக்கிறவைகள் வெளியரங்கமாகும். அப்போது சர்வேசுரன் மெய்யாகவே உங்களுக்குள் இருக்கிறாரென்று அவன் உச்சரித்து, முகங்குப்புற விழுந்து சர் வேசுரனைத்தொழுவான்.

26. அப்படியிருக்க சகோதரரே, செய்ய வேண்டியதென்ன? நீங்கள் சபையில் கூடிவரும்போது, உங்களில் ஒருவன் சங்கீதம் பாடுகிறான், ஒரு வன் உபதேசிக்கிறான், ஒருவன் இரக சியத்தை வெளிப்படுத்துகிறான், ஒரு வன் பாஷை பேசுகிறான், ஒருவன் வியாக்கியானம்பண்ணுகிறான். இதெ ல்லாம் நல்விர்த்திக்கேதுவாக நடக்கக் கடவது.

27. யாராவது அன்னியபாஷை பேசு கிறதானால், இரண்டுபேர், மிஞ்சினால் மூன்றுபேர் முறைமுறையாய்ப் பேசக் கடவார்கள். ஒருவன் அதற்கு வியாக் கியானஞ்சொல்லக்கடவான்.

28. வியாக்கியானஞ்சொல்லுகிறவன் இல்லாத பட்சத்தில் சபைக்கூட்டத் தில் அவன் பேசாதிருந்து தன்னோடும் சர்வேசுரனோடும் பேசிக்கொள்ளட் டும்.

18. கிரேக்குப் பிரதியில் உங்களெல்லாரையும் விட நான் அதிக பாஷைகளில் பேசு கிறேன் என்றிருக்கிறது. பற்பல ஜாதி ஜனங்களுக்குப் போதிக்க வேண்டிய அப்போஸ் தலருக்குப் பற்பல பாஷை வரம் அவசியமே.

29. தீர்க்கதரிசிகள் இருவர் அல்லது மூவர் பேசட்டும்; மற்றவர்கள் ஆராய்ந்து பார்ப்பார்களாக.

30. அங்கே உட்கார்ந்திருக்கிறவர்களுக்குள் யாதொருவனுக்கு ஏதேனும் வெளிப்படுத்தப்பட்டால், முந்திப்பேசினவன் பேசாதிருக்கக்கடவான்.

31. ஏனெனில் எல்லாரும் கற்றுக்கொள்ளுவதற்கும், எல்லாரும் தேறுதலடைவதற்கும் ஏதுவாக நீங்கள் அனைவரும் முறைமுறையாய்த் தீர்க்கதரிசனஞ்சொல்லலாம்.

32. தீர்க்கதரிசிகளுடைய இஸ்பிரீத்தானது தீர்க்கதரிசிகளுக்கு அடங்கியிருக்கின்றது.

33. ஏனெனில் அர்ச்சிக்கப்பட்டவர்களுடைய சகல சபைகளிலும் நான் போதித்துவருகிறபடியே, சர்வேசுரன் கலாபத்துக்குத் தேவனாயிராமல், சமாதானத்திற்குத் தேவனாயிருக்கிறார்.

34. சபைகளிலே ஸ்திரீகள் மவுனமாயிருக்கக் கடவார்கள். ஏனெனில் பேசுவதற்கு அவர்களுக்கு உத்தரவில்லை. அவர்கள் அடங்கியிருக்கக்கடவார்கள்; நியாயப்பிரமாணமும் அப்படியே சொல்லுகிறது. (ஆதி. 3-16.)

35. அவர்கள் ஏதாகிலும் அறிந்துகொள்ள விரும்பினால் வீட்டிலே தங்கள் புருஷர்களிடத்தில் வினவிக் கேட்டுக்கொள்ளட்டும். ஏனெனில் ஸ்திரீகள் சபையிலே பேசுவது அயோக்கியமாயிருக்கின்றது.

36. தேவ வாக்கியம் உங்களிடத்திலிருந்தோ புறப்பட்டது? அல்லது உங்களுக்குமாத்திரமோ வந்தது?

37. உங்களில் யாதாமொருவன் தீர்க்கதரிசியாய் அல்லது ஞானவரமுள்ளவனாய்த் தோன்றினால், நான் உங்களுக்கு எழுதுகிறவைகள் ஆண்டவருடைய கற்பனைகளென்று அறிந்துகொள்ளக்கடவான்.

38. இதை யாதாமொருவன் அறியாதிருப்பானாகில், அவன் அறியப்படாதவனாயிருப்பான்.

39. ஆகையால் சகோதரரே, தீர்க்கதரிசனஞ்சொல்ல ஆவலாயிருங்கள். ஆகிலும் பாஷைகளைப் பேசுகிறதற்கும் தடைபண்ணாதேயுங்கள்.

40. ஆனால் சகலமும் ஒழுக்கத்தோடும், கிரமத்தோடும் நடக்கக்கடவது.

## 15-ம். அதிகாரம்.

நமது ஆண்டவராகிய கிறீஸ்துநாதருடைய உத்தானத்தின் பேரிலும், நம்முடைய உத்தானத்தின் பேரிலும்.

1. அன்றியும் சகோதரரே, நான் உங்களுக்குப் பிரசங்கிக்கிற சுவிசேஷத்தை மறுபடியும் உங்களுக்குத் தெரியப்படுத்துகிறேன். நீங்களும் அதை ஏற்றுக்கொண்டு அதிலே நிலைத்திருக்கிறீர்கள். (கலாத். 1-11.)

2. நான் உங்களுக்குப் பிரசங்கித்த பிரகாரம் நீங்கள் அதைக் கைக்கொண்டு நடந்தால், அதினாலே இரட்சிக்கப்படுவீர்கள். இல்லாதிருந்தால், நீங்கள் விசுவசித்தது வீணாயிருக்கும்.

3. நான் அறியப்பெற்றதும் உங்களுக்கு விசேஷமாய்ப் போதித்ததும் ஏதென்றால், கிறீஸ்துநாதர் வேதவாக்கியத்தின்படி நம்முடைய பாவங்களுக்காக மரித்து, (இசை. 53-5.)

4. அடக்கம்பண்ணப்பட்டு, வேதவாக்கியங்களின்படி மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தருளி, (யோனா. 2-1.)

5. முந்த இராயப்பருக்கும் பின்பு பதினொருபேருக்கும் தரிசனமானார். (அருள. 20-10.)

6. அதற்குப்பின் அவர் ஐஞ்ஞூறுபே ருக்கு அதிகமான சகோதரர்களுக்கு ஓரே வேளையில் தரிசனையானார். அவர் களில் அநேகர் இந்நாள்வரையில் உயி ரோடிருக்கிறார்கள். சிலரோ சயனித் திருக்கிறார்கள்.

7. பின்பு யாகப்பருக்கும், அதின் பிறகு அப்போஸ்தலரெல்லாருக்கும் தரிசனையானார்.

8. மேலும் எல்லாருக்கும் கடைசியி லே அகாலப்பிறவியான எனக்கும் தரி சனையானார்.

9. நான் அப்போஸ்தலர்களெல்லா ரிலும் மிகவுஞ் சிறியவன். அப்போஸ் தலன் என்று அழைக்கப்படுகிறதற்கு நான் பாத்திரனல்ல. ஏனெனில் சர்வே சுரனுடைய திருச்சபையை நான் துன்பப்படுத்தினவன். (அப். 9-3; எபே. 3-8.)

10. ஆகிலும் நானிருக்கும் இந்த இருப்பில் தேவ வரப்பிரசாதத்தால் இருக்கிறேன். அவருடைய வரப்பிரசா தமும் என்னிடத்தில் வீணாயிருந்த தில்லை. அவர்கள் எல்லாரிலும் நான் அதிகமாய்ப் பிரயாசப்பட்டிருக்கிறே ன். ஆனாலும் நானல்ல; என்னோடு சர்வேசுரனுடைய வரப்பிரசாதமே அப்படிச் செய்தது.

11. ஆகையால் நானாகிலும் சரி, அவர்களாகிலும் சரி, இப்படியே பிர சங்கித்து வருகிறோம்; நீங்களும் இப்ப டியே விசுவாசித்திருக்கிறீர்கள்.

12. கிறீஸ்துநாதர் மரித்தோரிலி ருந்து உயிர்த்தெழுந்தருளினார் என்று பிரசங்கிக்கப்பட்டால், மரித்தோரு டைய உத்தானம் இல்லையென்று உங்க ளில் சிலர் சொல்லுகிறதெப்படி?

13. மரித்தோருடைய உத்தான மில்லையென்றால், கிறீஸ்துநாதரும் உயி ர்த்தெழுந்திருக்கவில்லையே.

14. கிறீஸ்துநாதர் உயிர்த்தெழுந்தி ருக்கவில்லை என்றால், எங்கள் போதக மும்வீண், உங்கள் விசுவாசமும் வீண்.

15. அன்றியும் மரித்தோருக்கு உத் தானமில்லாவிட்டால், சர்வேசுரன் உயி ரோடே எழுப்பாத கிறீஸ்துநாதரை அவர் எழுப்பினாரென்று நாங்கள் சர் வேசுரனுக்கு விரோதமாய்ச் சாட்சி சொல்லுகிறபடியால், அவருடைய பொய்ச்சாட்சிகளாகக் காணப்படுவோ மே.

16. ஏனெனில் மரித்தோர் உயிர்க் கிறதில்லையென்றால், கிறீஸ்துநாதரும் உயிர்த்தெழுந்திருக்கவில்லை.

17. கிறீஸ்துநாதர் எழுந்திராவிட் டால், உங்கள் விசுவாசம் வீணாயிருக் கின்றது அப்படியானால் நீங்கள் இன் னும் உங்கள் பாவங்களில் கிடக்கிறீர் கள்.

18 கிறீஸ்துநாதரிடமாய்ச் சயனித் தவர்களும் சிதைந்துபோனார்கள்.

19. இம்மைக்காகமாத்திரம் நாம் கிறீஸ்துவின்மேல் நம்பிக்கையுள்ளவர் களாயிருந்தால், எல்லா மனிதர்களி லும் நாம் அதிகப பரிதாபத்துக்குரியவ ர்களாயிருப்போம்.

20. இப்பொழுதோ, மரண நித்திரை யடைந்தவர்களுக்குள்ளே கிறீஸ்துநா தர் முந்தின பலனாக மரித்தோரிடத் திலிருந்து உயிர்த்தெழுந்தருளியிருக் கிறார்

21. ஏனெனில் மனிதனாலே மரண முண்டானபடியால், மனிதனாலேயே மரித்தோருடைய உத்தானமும் உண் டாயிருக்கிறது. (கோலோ. 1-18; காட் சி. 1-5.)

22. அன்றியும் ஆதாமில் எல்லாரும் மரிக்கிறதுபோல, கிறீஸ்துநாதரில் எல் லாரும் உயிர்ப்பிக்கப்படுவார்கள்.

23. ஆகிலும் அவனவன் தன்தன் வரிசைப்படிக்கு உயிர்ப்பிக்கப்படுவான். முதற்பலனானவர் கிறீஸ்துநாதர். பின்பு அவருடையவர்களாய் அவருடைய வருகையை விசுவாசித்தவர்கள் (உயிர்ப்பிக்கப்படுவார்கள்). (1.தெச.4-15.)

24. அதின்பின், அவர் எல்லாத் துரைத்தனத்தையும், அதிகாரத்தையும், வல்லமையையும் ஒழித்து, தமது இராச்சியத்தைப் பிதாவாகிய சர்வேசுரன் கையில் ஒப்புக்கொடுக்கும்போது, முடிவுண்டாகும்.

25. ஆயினும் அவர் எல்லாச் சத்துருக்களையும் அவருடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தும்வரையில் அவர் இராச்சியபாரம் பண்ணவேண்டியது. (சங். 109-1; எபி. 1-13; 10-13.)

26. நிர்மூலமாக்கப்படும் கடைசிச் சத்துரு மரணமாம். ஏனெனில் (சர்வேசுரன்) சகலத்தையும் அவருடைய பாதங்களுக்குக்கீழ்ப்படுத்தினார். (சங். 8-8; எபி. 2-8.)

27. ஆகிலும் அவருக்குச் சகலமும் கீழ்ப்படுத்தப்பட்டதென்று (வேதவாக்கியம்) சொல்லும்போது சகலத்தையும் அவருக்குக் கீழ்ப்படுத்தினவர் நீங்கலாக என்பதற்குச் சந்தேகமில்லை.

23. தமது ஞான சரீரமாகிய திருச்சபைக்குத் தலைவராகிய கிறீஸ்துநாதர் முந்தினவராய் மரணத்தை ஜெயித்துக் கல்லறையை விட்டு உயிர்த்தெழுந்தருளித் தம்முடைய உயிர்த்தலினால் தம்முடைய ஞான அவயவங்களாகிற சகல கிறீஸ்துவர்களுக்குஞ் சீவிய உத்தானத்தைப் பெறுவித்தார். அவர் உயிர்த்தெழுந்தருளின அன்றைக்கே அர்ச்சியசிஷ்டவர்களுடைய உத்தானமும் துவக்கினதாக மத். 27-ம் அதி. 53-ம் வசனத்தில் வாசித்துவருகிறோம். இதிலே அவருடையவர்களாய் அவருடைய வருகையை விசுவாசித்தவர்கள் என்று சொல்லும்போது, அவருடைய வருகைக்கு முந்தி அவர் வருவாரென்று விசுவாசித்தவர்களும், அவர் வருகைக்குப்பின் அவர் வந்தாரென்று விசுவாசித்தவர்களுமாகிய இருதிறத்தாரும் அடங்கியிருக்கிறார்கள். ஆதலால் அவருடைய வருகையை விசுவாசியாதவர்களும், அவருக்குச் சொந்தமற்றவர்களுமாகிய அஞ்ஞானிகள் உயிர்க்கமாட்டார்கள் என்பவோ? அல்லவே. எல்லாரும் உயிர்ப்பார்களென்று இந்த அதிகாரத்தின் 51-ம் வசனத்தில் அர்ச். சின்னப்பர் சொல்லுகிறார். ஆனால் யேசுநாதருக்குச் சொந்தமில்லாதவர்கள் நித்திய சீவியத்துக்கு உயிர்க்காமல் நித்திய நரகாக்கினைக்கு உயிர்ப்பார்கள் என்கிறதினால் அது மெய்யான உத்தானமல்லவென்று அறியவும்.

24. உலக முடிவிலே மரித்தோருடைய உத்தானமும் நடுத்தீர்வையும் நடந்தபிறகு யேசுநாதர் தமது எல்லாச் சத்துருக்கள் மீதும் வெற்றியடைந்த ஜெயசீலராய்த் தம்முடைய திருச்சபையோடே ஒட்டோலகமாய்ப் பரலோகத்துக்கு ஆரோகணமாகித் தம்முடைய திருச்சபையைத் தம்முடைய பிதாவின் திருப்பாதத்திலே ஒப்புவிக்கும்போது, அவர் பூவுலகத்திலே தம்முடைய திருச்சபையின்மேல் செய்துவந்த இராச்சியபாரம் முடிவு அடைந்து லூக். 1-ம் அதி. 33-ம் வசனத்தில் சொல்லியபடி மோட்சத்திலே என்றென்றைக்கும் முடியாத அரசாட்சி செய்யத்துவக்குவார்.

25. இங்கே சொல்லப்பட்ட இராச்சியபாரம் இவ்வுலகத்திலே யேசுநாதர் தம்முடைய திருச்சபையை ஆண்டுவருகிற இராச்சியபாரமாம். யேசுநாதர் தம்முடைய சிலுவையினாலேயும் மரணத்தினாலேயும் பாவம், பசாசு, உலகம், மரணமென்கிற தம்முடைய சத்துருக்களையெல்லாம் வென்று அவைகளிடத்தினின்று ஜெயசீலராய்க் கல்லறையை விட்டு உயிர்த்தெழுந்தருளினாரென்று கொலோசியர் 2-ம் அதி. 14-15-ம் வசனங்களில் அர்ச். சின்னப்பர் சொல்லியிருக்கையிலே, அவர் அந்தச் சத்துருக்களைத் தம்முடைய காலின்கீழே போடும்வரைக்கும் இவ்வுலகத்திலே இராச்சியபாரம் பண்ணவேண்டுமென்று சொல்லுவானேன்? ஏனெனில் அந்தச் சத்துருக்கள் இனித் தம்மைத் துன்பப்படுத்தாதபடிக்கு அவர்களைத் தம்முடைய மரணத்தினால் மெய்யாகவே ஜெயித்து அடக்கினார். ஆனால் தமது ஞான சரீரமாகிய திருச்சபையை உலகமுடியும்வரைக்கும் துன்பப்படுத்த இன்னமும் அவைகளுக்குத் திறமையிருக்கிறது. தம்முடைய திருச்சபையை முழுதும் இவ்வுலகத்திலேநின்று பரலோகத்துக்கு அழைத்துக்கொள்ளும்போதுதான் அதைத் துன்பப்படுத்தின சத்துருக்களின்பேரில் முழுதும் வெற்றியடைவாரென்றறிக.

28. சகலமும் அவருக்குக் கீழ்ப்பட்டிருக்கும்போது, சர்வேசுரனே சகலத்திலும் சகலமுமாயிருக்கும்படிக்குச் சுதனும் தமக்கு எல்லாவற்றையுங் கீழ்ப்படுத்தினவராகிய அவருக்குக் கீழ்ப்பட்டிருப்பார்.

29. அன்றியும் மரித்தோர் எவ்விதத்திலும் உயிர்ப்பதில்லையென்றால், மரித்தோருக்காக ஞானஸ்நானம் பெறுகிறவர்கள் என்ன செய்வார்கள்? அவர்களுக்காக ஏன் ஞானஸ்நானம் பெறுகிறார்கள்?

30. நாங்களும் ஏன் எந்த வேளையிலும் ஆபத்திலகப்படத்திரிகிறோம்?

31. சகோதரரே, நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரிடத்தில் உங்களால் எனக்கு உண்டாகிற மகிமையை முன்னிட்டு நான் தினமும் உயிரைவிடுகிறேன்.

32. மரித்தோர் உயிர்க்காவிட்டால், எபேசுநகரத்திலே நான் (மனுஷநோக்கப்படி) மிருகங்களோடே போராடினதற்குப் பிரயோசனமென்ன? நாளைக்குச் சாவோமென்கிறதால், இன்றைக்குச் சாப்பிடுவோம், குடிப்போமே. (இசை. 22-13; 46-12.)

33. மோசம்போகாதேயுங்கள்; ஆகாத சம்பாஷணைகள் நல்லொழுக்கங்களைக் கெடுக்கின்றன.

34. நீதிமான்களே, பாவஞ்செய்யாமல் விழிப்புள்ளவர்களாயிருங்கள். சிலர் சர்வேசுரனைப்பற்றிய அறிவில்லாதிருக்கிறார்களே. இதை உங்களுக்கு வெட்கமுண்டாகச் சொல்லுகிறேன்.

35. ஆகிலும் மரித்தோர் எப்படி உயிர்ப்பார்கள்? எவ்வித சரீரத்தோடே வருவார்களென்று ஒருவன் சொல்லுவானாக்கும்;

36. மதியீனனே, நீ விதைக்கிற விதை முந்திச் செத்தாலொழிய உயிரடையமாட்டாதே.

37. நீ விதையை விதைக்கிறபோது அதினின்று உண்டாகும் மேனியை விதைக்கிறதில்லையே. அப்படியே கோதுமை அல்லது மற்றெந்தத் தானியத்தின் வெறும் வித்தையல்லோ விதைக்கிறாய்.

38. சர்வேசுரன் தமது இஷ்டப்படிக்கு அதுக்கு ஒருமேனியை கொடுக்கிறார். ஒவ்வொரு வித்துக்கும் அதற்குரிய மேனியைக்கொடுக்கிறார்.

39. மாம்சமெல்லாம் ஒரே மாம்சமல்லவே. மனுஷருடைய மாம்சம் வேறே, மிருகங்களின் மாம்சம் வேறே; பறவைகளின் மாம்சம் வேறே, மச்சங்களின் மாம்சம் வேறே.

40. அப்படியே வானத்துக்குரிய சடலங்களுமுண்டு, பூமிக்குரிய சடலங்களுமுண்டு. ஆகிலும் வானத்துக்குரியவைகளின் மகிமை வேறே, பூமியைச் சேர்ந்தவைகளின் மகிமை வேறே.

---

32. இசையாஸ் 22-ம் அதி. 13-ம் வசனத்தில் நாளைக்குச் சாவோம். ஆகையால் இன்று பொசிப்போம் குடிப்போம் என்று மறுலோக சீவியத்தை விசுவசியாத பாவிகள் சொல்லும் வார்த்தைகளை அர்ச் சின்னப்பர் இங்கே வைத்ததின் கருத்தேதெனில். மரித்தோருடைய உத்தானமில்லாதேபோனால் மறு உயிருமில்லை. மனுஷன் சாகிறபோது எல்லாம் முடிந்துபோகிறது. ஆகையால் மறுலோகத்தைப்பற்றி ஏன் கவலைப்படவேண்டும்! சாவு வரும்போது வரும். அதுவரையிலும் உண்டு குடித்துச் சந்தோஷமாயிருப்போமாக என்று அவிசுவாசிகள் சொல்லுவதுபோல நாமுஞ் சொல்லலாமே. ஆனால் இது ஒவ்வாதென்று காண்பிக்கிறார்.

34. உங்களில் சிலர் சர்வேசுரனை அறியாதிருக்கிறார்கள் என்பதற்கு அர்த்தமேதெனில், மண்ணாய்ப்போன சரீரம் மறுபடி எப்படி உயிர்க்கக்கூடுமென்று அந்த விசுவாசிகளுக்குள்ளே சிலர் சந்தேகப்பட்டுக்கொண்டிருந்தபடியால் அவர்கள் சர்வேசுரனுடைய அளவில்லாத வல்லமையைச் சரியாய் அறியாதிருந்தார்கள். சர்வேசுரனுடைய சர்வ வல்லமையைச் சரியாய் அறியாதிருக்கிறது சர்வேசுரனையே அறியாதிருக்கிறதுக்கு ஒக்கும்.

41. சூரியனுடைய பிரகாசம் வேறே, சந்திரனுடைய பிரகாசம் வேறே, நட்சத்திரங்களினுடைய பிரகாசம் வேறே. பிரகாச விஷயத்தில் நட்சத்திரத்துக்கு நட்சத்திரம் வித்தியாசமாயிருக்கின்றது.

42. மரித்தோருடைய உத்தானமும் அத்தன்மையாகவேயிருக்கும். அழிவுள்ளதாய் விதைக்கப்படுகிறது அழிவில்லாததாய் எழுந்திருக்கும்.

43. ஈனமுள்ளதாய் விதைக்கப்படுகிறது மகிமையுள்ளதாய் எழுந்திருக்கும். பெலனற்றதாய் விதைக்கப்படுகிறது பெலனுள்ளதாய் எழுந்திருக்கும்.

44. ஸ்தூல சரீரமாய் விதைக்கப்படுகிறது சூட்சம சரீரமாய் எழுந்திருக்கும். ஸ்தூல சரீரம் உண்டானால், சூட்சம சரீரமும் உண்டு.

45. ஏனெனில் எழுதப்பட்டபடியே முந்தின மனிதனை ஆதாம் ஜீவாத்துமமாக உண்டாக்கப்பட்டான். பிந்தின ஆதாமோ உயிர்ப்பிக்கிற ஞான ஆத்துமமாக உண்டாக்கப்பட்டார்.

46. ஆனாலும் ஞான ஆத்துமத்துக்குரிய (சரீரம்) முந்தினதல்ல. ஜீவ ஆத்துமத்துக்குரியதே முந்தினது. ஞான ஆத்துமத்துக்குரியது பிந்தினது.

47. முந்தின மனிதன் மண்ணினின்று உண்டாக்கப்பட்டதால், அவன் மண்ணுக்குரியவன். இரண்டாம் மனிதன் மோக்ஷத்தினின்று வந்தவராகையால் அவர் மோக்ஷத்துக்குரியவர்.

48. மண்ணுக்குரியவன் எப்படியோ, மண்ணுக்குரியவர்களும் அப்படிப்பட்டவர்கள்தான். மோக்ஷத்துக்குரியவர் எப்படியோ மோக்ஷத்துக்குரியவர்களும் அப்படிப்பட்டவர்கள்தான்.

49. ஆகையால் நாம் மண்ணுக்குரியவனுடைய சாயலைத் தரித்துக்கொண்டதுபோல, மோக்ஷத்துக்குரியவருடைய சாயலையுந் தரித்துக்கொள்ளுவோமாக.

50. சகோதரரே, நான் உங்களுக்குச் சொல்லுகிறதேதெனில்: மாம்சமும், இரத்தமும் சர்வேசுரனுடைய இராச்சியத்தைச் சுதந்தரிக்கமாட்டாது. அழிவுள்ளது அழியாமையைச் சுதந்தரிக்கவுமாட்டாது.

51. இதோ, உங்களுக்கு ஒரு ரகசியத்தை அறிவிக்கிறேன். எல்லாரும் உயிர்ப்போமென்பது உள்ளதுதான். ஆகிலும் எல்லாருக்குள்ளும் மாற்றமுண்டாகமாட்டாது.

52. ஒரு க்ஷணப்பொழுதில், ஒரு கண்சிமிட்டில், கடைசி எக்காளந் தொனிக்கவே(ஆம், எக்காளந்தொனிக்கும்) மரித்தவர்கள் அட்சயமாய் உயிர்ப்பார்கள், நாமும் மறுரூபமாவோம்.

53. அதெப்படியென்றால் அழிவுக்குரிய இது அழியாமையைத் தரித்துக்கொள்ளவும் சாவுக்குரிய இது சாகாமையைத் தரித்துக்கொள்ளவும் வேண்டியது.

52-53. உலகமுண்டான நாள் முதல் உலக முடிவுபரியந்தம் உலகத்தில் பிறந்த எல்லா மனிதர்களும் நடுத்தீர்க்கிற நாளிலே ஆத்தும சரீரத்தோடே எழுப்பப்படுவார்கள். ஆனால் எல்லாரும் அலங்காரமான மறுரூபத்தை அடைந்துகொள்ளமாட்டார்கள். யேசுநாதனை விசுவாசித்து அவருடைய ஞான சரீரமாகிய திருச்சபையிற் சேர்ந்து, சாவான பாவமில்லாமல் இஷ்டப்பிரசாதத்தோடே மரித்து, மோட்ச பாக்கியத்துக்குப் பாத்திரவான்களாயிருக்கிறவர்கள்மாத்திரம் மோட்சத்துக்குரிய மகிமையான சரீரத்தோடு உயிர்ப்பார்கள். அஞ்ஞானிகளும் சாவான பாவத்தோடே செத்த கிறீஸ்துவர்களும் பசாசுகளுக்குச் சொந்தமானபடியினாலே அவர்கள் பசாசுகளுக்கொப்பாய் அருவருப்பும் அவலட்சணமான சரீரத்தோடு உயிர்ப்பார்கள் என்றறிக.

54. சாவுக்குரிய இது சாகாமையைத் தரித்துக்கொண்ட பின்போவெனில், சாவானது ஜெயத்தால் விழுங்கப்பட்டதென்று எழுதப்பட்ட வாக்கியம் நிறைவேறும். (ஓசி. 13-14; எபி. 2-14.)

55. மரணமே, உன் வெற்றி எங்கே? மரணமே, உன் கொடுக்கு எங்கே?

56. மரணத்தின் கொடுக்கு பாவந்தான், பாவத்தின் வீறோ நியாயப்பிரமாணமாம்.

57. நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரைக்கொண்டு நமக்கு ஜெயந் தந்தருளின சர்வேசுரனுக்குத் தோஸ்திரம். (1. அருள. 5-5.)

58. ஆகையால் நமக்குப்பிரியமான சகோதரரே, ஆண்டவரிடத்தில் நீங்கள் படுகிற பிரயாசம் வீணாய்ப்போகிறதில்லையென்று அறிந்து, நிலைமையுள்ளவர்களாயும், அசையாதவர்களாயும், இடைவிடாமல் ஆண்டவருக்குரிய கிரியைகளில் அதிமிகுத்தவர்களாயும் இருப்பீர்களாக.

## 16-ம். அதிகாரம்.

*எருசலேமிலுள்ள தரித்திரரான கிறீஸ்துவர்களுக்காகத் தர்மப்பணங்களைச் சேகரித்துவைக்கவும், தம்மால் அனுப்பப்பட்ட தீமோத்தேயுவையும் வேறு சிலரையும் நன்றாய்ப் பராமரிக்கக் கேட்டுக்கொண்டு பற்பல வாழ்த்துதல்களோடு நிருபத்தை முடிக்கிறார்.*

1. அர்ச்சிக்கப்பட்டவர்களுக்காக வாங்கப்படும் யாசகத்தைக் குறித்து நான் கலாத்தியா நாட்டுச் சபைகளுக்குள்ளே ஸ்தாபித்த ஒழுங்கின்படி நீங்களும் செய்யுங்கள். (அப். 11-29; கலாத். 5-6.)

2. நான் வருகிற சமயத்திலே யாசகத்தை வாங்கிச் சேர்த்துக்கொண்டிராதபடி உங்களில் அவனவன் தனக்குப் பிரியமானதை ஒரு உண்டியில் போட்டு வாரத்தின் முதல் நாள்தோறும் தன்னிடத்தில் துண்டாய் வைத்துக் கொள்ளட்டும்.

3. நான் உங்களிடத்திலே வரும்போது, உங்கள் உபகாரத்தை எருசலேமுக்குக் கொண்டுபோகும்படி நீங்கள் தெரிந்துகொள்ளுகிறவர்களை என் நிருபங்களோடே அனுப்புவேன்.

4. நானும் போகத்தக்கதானால், அவர்கள் என்னோடுகூட வருவார்கள்.

5. நான் மக்கேதோனியா நாட்டின் வழியாய்ப் போகிறபடியால், மக்கேதோனியாவைக் கடந்தபின்பு உங்களிடம் வருவேன்.

6. நான் எங்கேபோனாலும் நீங்கள் என்னை வழி நடத்திக்கொண்டு போகும்படிக்கு உங்களோடே ஒருவேளை சில காலம் தங்குவேன் அல்லது மாரிகாலம் முழுவதும் உங்களோடிருப்பேன்.

7. போகிற போக்கிலே இப்போது உங்களை வந்துபார்க்க எனக்கு மனமில்லை. ஆண்டவருக்குச் சித்தமானால் உங்களிடத்திலே சிலகாலம் தங்கியிருக்கலாமென்று நம்புகிறேன்.

8. ஆகிலும் பென்த்தேகோஸ்தே பண்டிகை வரைக்கும் எபேசு பட்டணத்திலிருப்பேன்.

---

56. பாவத்தின் வீறு நியாயப் பிரமாணமென்பதுக்கு அர்த்தமாவது: நியாயப் பிரமாணமானது பாவத்தை விலக்குகிறபடியினாலே அதற்கு விரோதமாய்ச் செய்யப்படுகிற பாவமானது பிரமாணத்தை அறியாதவர்களுடைய பாவத்தின் தோஷத்தையும் பிரமாணத்தையறிந்து மீறுகிற தோஷத்தையும் ஆக இரட்டிப்பான தோஷத்தைக்கொண்டிருக்கிறது. அதைப்பற்றித்தான் பிரமாணம் பாவத்தின் வீறென்று அர்ச். சின்னப்பர் சொல்லுகிறார்.

9. ஏனெனில் அங்கே எனக்கு அகலமான வாசல் நிச்சயமாய்த் திறந்திருக்கின்றது. விரோதிகளும் அநேகர் உண்டு.

10. தீமோத்தேயு உங்களிடத்தில் வருவாராகில், அவர் உங்களிடத்திலே அச்சமில்லாமலிருக்கும்படி பார்த்துக்கொள்ளுங்கள். ஏனெனில் என்னைப்போல் அவரும் ஆண்டவருடைய வேலையைப்பார்க்கிறார்.

11. ஆதலால் ஒருவனும் அவரைப் புறக்கணியாதிருப்பானாக. அவர் என்னிடத்திலே வரும்படி சமாதானத்தோடே அவரை வழிவிட்டனுப்புங்கள். ஏனெனில் சகோதரர்களுடனேகூட அவருடைய வருகைக்கு எதிர்பார்த்திருக்கிறேன்.

12. சகோதரனாகிய அப்போலோவைக் குறித்தோவெனில், அவர் உங்களிடத்திலே சகோதரரோடு வரும்படிக்கு நான் அவரை மிகவும் கேட்டுக்கொண்டேன் என்று உங்களுக்குத் தெரிவிக்கிறேன். ஆகிலும் அவருக்கு இப்பொழுது வர மனமில்லை. அவருக்கு சமையங் கிடைக்கும்போது வருவார்.

13. விழிப்பாயிருங்கள்; விசுவாசத்திலே நிலைமையாயிருங்கள்; வீரராய் நடந்துகொள்ளுங்கள், திடமாயிருங்கள்.

14. உங்கள் காரியமெல்லாம் பரம அன்போடு செய்யப்படக்கடவது.

15. சகோதரரே, நான் உங்களைக் கேட்டுக்கொள்ளுகிற தென்னவென்றால்: ஸ்தேவான், பொர்த்துனாத்து, அக்காயுக்கு என்பவர்களுடைய வீட்டார் அக்காயா நாட்டிலே முதற்பலனானவர்களென்றும், அர்ச்சிக்கப்பட்டவர்களுக்கு ஊழியஞ் செய்யும்படிக்குத் தங்களை ஒப்புக்கொடுத்திருக்கிறார்களென்றும் அறிந்திருக்கிறீர்களே.

16. அவர்களுக்கும் அவர்களைப்போலே உழைத்துப் பிரயாசப்படுகிறவர்களுக்கும் நீங்கள் கீழ்ப்படிந்துநடங்கள்.

17. ஸ்தேவான், பொர்த்துனாத்து அக்காயுக்கு என்பவர்கள் என்னிடத்திலே வந்திருக்கிறதைப்பற்றிச் சந்தோஷமாயிருக்கிறேன். ஏனெனில் (நீங்கள் செய்யக்கூடாததினால்) உங்களுக்குக் குறைவாயிருந்ததை அவர்கள் தீர்த்து,

18. எனக்கும் உங்களுக்கும் மனம் குளிரப்பண்ணினார்கள். இப்படிப்பட்டவர்களுடைய ஞாபகம் உங்களிடத்திலிருக்கட்டும்.

19. ஆசியாவிலுள்ள சபைகள் உங்களுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறார்கள். எனக்கு விடுதி கொடுத்துவருகிற அக்கில்லாவும் பிரிசில்லாளும் தங்கள் வீட்டிலுள்ள சபையோடு ஆண்டவரிடத்தில் உங்களுக்கு மிகுந்த வாழ்த்துதல் சொல்லுகிறார்கள்.

20. சகோதரர் எல்லாரும் உங்களை வாழ்த்துகிறார்கள். ஒருவரையொருவர் பரிசுத்த முத்தமிட்டு வாழ்த்துங்கள்.

21. சின்னப்பனாகிய நான் என் கையெழுத்தால் உங்களுக்கு மங்களஞ் சொல்லுகிறேன்.

22. ஒருவன் நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரைச் சிநேகியாதிருப்பானாகில் சபிக்கப்பட்டவனாயிருக்கக்கடவான்! மாரன் அத்த (அதாவது) கர்த்தர் வருகிறார்.

23. நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய இஷ்டப்பிரசாதம் உங்களோடேகூட இருப்பதாக.

24. என் அன்பு கிறீஸ்துநாதரிடத்தில் உங்கள் எல்லாரோடுங்கூட இருப்பதாக. ஆமென்.

22. மாரன் அத்த என்பது நம்முடைய ஆண்டவர் வருகிறாரென்று அர்த்தங்கொள்ளுகிற எபிரேய பாஷையின் வார்த்தைகளாம். அது அந்தப் பாஷையில் வழங்கிய ஒரு சாபமாம். ஓ! கிறீஸ்துவனே, நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரைச் சிநேகியாதவன் சபிக்கப்பட்டவனென்று அர்ச். சின்னப்பர் தொனிக்கிற இடிமுழக்கத்தைக் கேட்டாயா? இந்தப் பயங்கரமான சாபத்துக்கு நீ ஆளாய்ப் போகாதபடிக்கு நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரை மெய்யாகவே நேசித்துக்கொண்டிரு. ஆனால் அவரை மெய்யாகவே நேசிக்கிறவன் அவருடைய கற்பனையையும் நேசித்து அநுசரிப்பான். அவரை மெய்யாகவே நேசிக்கிறவன் அவருடைய சுவிசேஷத்தில் அடங்கிய சத்தியங்களை எல்லாம் விசுவாசித்து நேசிப்பான். அவரை மெய்யாகவே நேசிக்கிறவன் அவருடைய அவயவங்களாகிய தரித்திரர்களையும் நேசித்து அவர்களுக்கு இரங்குவான். அவரை மெய்யாகவே நேசிக்கிறவன் அவருடைய திருச் சிலுவையையும் நேசித்து அணைத்துக்கொள்ளுவான். அவரை மெய்யாகவே நேசிக்கிறவன் அவருடைய ஞான சரீரமாகிய திருச்சபையையும் நேசித்து அதற்குக் கீழ்ப்படிவான் என்றறிக.



# பாயிரம்.

உ

அர்ச். சின்னப்பர் கொரிந்தியருக்கு எழுதின முதல் நிருபத்திலே கண்டித்த குறைகளையெல்லாம் அவர்கள் மிகுந்த பயத்தோடுஞ் சாக்கிரதையோடும் நீக்கிப் பரிகரித்து, அதிக நல்லவர்களானார்கள். ஆகையால் இந்த இரண்டாம் நிருபத்தில் அவர்களைக் கொண்டாடுகிறாரொழிய, அவர்களைநோக்கி அதிகக் கண்டிப்புள்ள வார்த்தைகளை இதிலே பிரயோகிக்கக் காணோம். ஆனால் முதல் நிருபத்திலே கண்டபடியே அந்தச் சபையாருக்குள் உண்டான பிரிவினைகளுக்கும் வாக்குவாதங்களுக்குங் காரணமாயிருந்த போதகர்களுக்குள்ளே சிலர் அந்த நிருபத்தினாலே மனக்குரோதங்கொண்டு, அர்ச். சின்னப்பர்பேரில் பொறாமையடைந்து அவரை நிந்திக்கவும், அவர் அப்போஸ்தலர் அல்லவென்றும், தூரத்திலே தைரியங் காண்பித்தாலும், சமீபத்தில் வரும்போது கோழைத்தனமுள்ளவரென்றும், இவைமுதலான குறைகளை அவர்பேரில் சொல்லவும் ஏற்பட்டிருந்தார்கள். ஆகையால் இந்த நிருபத்திலே அர்ச். சின்னப்பர் அப்படிப்பட்டவர்களுடைய அங்காரத்தைத் தணித்து, தம்முடைய அப்போஸ்தலத்துவத்தை மேன்மைப்படுத்துகிறார். மக்கெதோனியா நாட்டின் தலைமைப்பட்டணமாகிய பிலிப்பி நகரிலிருந்து கர்த்தர் மனுஷாவதாரமான 57-ம் ஆண்டில் இதை எழுதினார்.



# அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர் கொரிந்தியருக்கெழுதிய 2-ம். நிருபம்.

## முதல் அதிகாரம்.

*ஆசியாவில் தமக்கு நேரிட்ட துன்பங்களை வெளிப்படுத்தி, அவர்களிடத்தில் தாம் வராததற்குக் காரணஞ் சொல்லுகிறார்.*

1. சர்வேசுரனுடைய சித்தத்தினாலே யேசுக்கிறீஸ்துநாதருடைய அப்போஸ்தலனாகிய சின்னப்பனும், சகோதரனாகிய தீமோத்தேயும், கொரிந்து நகரத்திலுள்ள சர்வேசுரனுடைய திருச்சபைக்கும், அக்காயா நாடெங்குமுள்ள அர்ச்சிக்கப்பட்ட சமஸ்தருக்கும் எழுதுவதாவது :

2. நம்முடைய பிதாவாகிய சர்வேசுரனாலும் ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதராலும் வரப்பிரசாதமும் சமாதானமும் உங்களுக்கு உண்டாவதாக.

3. சர்வேசுரனும் நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய பிதாவும், இரக்கங்களின் தகப்பனும், சர்வ ஆறுதலின் தெய்வமுமாயிருக்கிறவர் ஸ்துதிக்கப்படுவாராக. (எபே. 1-3 ; 1. இரா. 1-3.)

4. நாங்களே சர்வேசுரனிடத்தில் பெற்றுக்கொள்ளுகிற ஆறுதலைக்கொண்டு எவ்வித இடையூறுகளிலும் அகப்பட்டிருக்கிறவர்களுக்கு நாங்களும் ஆறுதல் வருவிக்கத் திராணியுள்ளவர்களாயிருக்கும்படிக்கு எங்களுக்கு நேரிடும் எல்லாத் துன்பங்களிலும் அவரே எங்களைத் தேற்றிவருகிறார்.

5. அதெப்படியென்றால், கிறீஸ்துநாதருடைய பாடுகள் எங்களிடத்தில் பெருகுகிறதுபோல, கிறீஸ்துநாதர் வழியாக எங்களுக்கு ஆறுதலும் பெருகிவருகிறது.

6. நாங்கள் துன்பப்பட்டால் அது உங்களுடைய ஆறுதலுக்காகவும், இரட்சணியத்துக்காகவுந்தான். நாங்கள் ஆறுதலடைந்தால், அதுவும் உங்களுடைய ஆறுதலுக்காகத்தான். நாங்கள் தென்படைந்தால், அது உங்களுடைய தென்புக்காகவும் இரட்சணியத்துக்காகவுந்தான். அந்த இரட்சணியமானது நாங்கள் எவ்வித பாடுகளைப்படுகிறோமோ, அவைகளை நீங்களும் பட்டனுபவிக்கும்படி செய்கிறது.

7. பாடுகளுக்கு நீங்கள் பங்காளிகளாயிருக்கிறதுபோல, ஆறுதலுக்கும் பங்காளிகளாயிருப்பீர்களென்று நாங்கள் அறிந்திருக்கிறதினாலே, உங்கள் மேல் எங்களுக்கு உறுதியான நம்பிக்கையுண்டாயிருக்கிறது.

8. ஆகையால் சகோதரரோ, ஆசியாவில் எங்களுக்கு நேரிட்ட உபத்திரவத்தை நீங்கள் அறியாதிருக்க எங்களுக்கு மனமில்லை. அதேதென்றால் உயிரோடிருக்கிறதே சலிப்பாகும்படி எங்கள் சக்திக்குமேல் மிதமிஞ்சினவிதமாய் நாங்கள் துன்பத்தில் அமிழ்ந்தினோம். (அப். 19-23.)

9. அதினாலே நாங்கள் எங்கள்மேல் நம்பிக்கையாயிராமல், மரித்தோரை எழுப்புகிற சர்வேசுரன்மேல் நம்பிக்கையுள்ளவர்களாய் இருக்கத்தக்கதாக எங்களுக்குள்ளே மரணத் தீர்வை கேட்டாற்போலிருந்தது.

10. அப்படிப்பட்ட பெரிய ஆபத்துகளினின்று அவர் எங்களைத் தப்புவித்தார். இப்பொழுதும் தப்புவிக்கிறார்; இன்னமும் தப்புவிப்பாரென்று அவர்மேல் நம்பிக்கையாயிருக்கிறோம்.

11. அநேகரைப்பற்றி எங்களுக்கு (அளிக்கப்பட்ட) உபகாரத்துக்காக அநேகரால் எங்களினிமித்தம் நன்றியறிந்ததோஸ்திரஞ்செலுத்தப்படும்பொருட்டு, நீங்களும் உங்கள் ஜெபங்களால் எங்களுக்கு உதவியாயிருங்கள்.

12. நாங்கள் உலகத்திலும், விசேஷமாய் உங்கள்நடுவிலும் மாம்சத்திற்கேற்ற ஞானத்தோடு நடவாமல், சர்வேசுரனுடைய வரப்பிரசாதத்தால் இருதய நேர்மையோடும், தெய்வீக உண்மையோடும் நடந்தோமென்று எங்கள் மனம் எங்களுக்குச்சொல்லுஞ் சாட்சியமே எங்களுக்குப் பெருமையாயிருக்கின்றது.

13. ஏனெனில் நீங்கள் வாசித்தும் அறிந்துமிருக்கிற காரியங்களையே அல்லாமல் வேறொன்றையும் நாங்கள் உங்களுக்கு எழுதவில்லை.

14. இவ்விதமாய் ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய நாளிலே நீங்கள் எங்களுக்குப் பெருமையாயிருக்குமாப்போல, நாங்களும் உங்களுக்குப் பெருமையாயிருக்கிறோமென்று நீங்கள் ஒருவாறு அறிந்துகொண்டது போல இன்னம் முடிவுபரியந்தம் அறிந்துகொள்ளுவீர்களென்று நம்புகிறேன்.

15. இந்த நம்பிக்கையினாலே உங்களுக்கு இரண்டாந்தரமும் பிரயோசனமுண்டாகும்படிக்கு முந்த முந்த உங்களிடத்திற்கு வரவும்,

16. உங்கள் வழியாய் மக்கேதோனியாவுக்குப்போகவும், மக்கேதோனியாவை விட்டுத்திரும்பி உங்களிடத்திற்கு வரவும், உங்களாலே யூதேயாவுக்கு வழியனுப்பப்படவும் ஆலோசித்திருந்தேன். (1. கொ. 16-4.)

17. அப்படி நான் யோசித்தது பாரசிந்தையில்லாமல் யோசித்தேனோ? அல்லது ஒரே வேளையில் ஆம் என்பதும் அல்ல என்பதும் என்னிடத்திலிருக்கத்தக்கதாக நான் யோசிக்கிறதை மாம்ச இச்சையின்படி யோசிக்கிறேனோ?

17. கடைசியான இந்த 8 வசனங்களுக்கு அபிப்பிராயமாவது: நான் உங்களிடத்தில் வருவேனென்று முதல் நிருபத்திலே வார்த்தைப்பாடு கொடுத்திருந்தும், வராததினாலே என்னிடத்தில் ஆமென்றும், இல்லையென்றும் நிலையற்ற மனமுண்டென்று உங்களில் சிலர் என்னைத் தூற்றுகிறார்கள். இது எப்படியிருந்தாலும் நாங்கள் உங்களுக்குப் பிரசங்கித்த சுவிசேஷம் ஆமென்றும், இல்லையென்றும் இருக்கிறதில்லை. ஏனெனில் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க எங்களை ஏற்படுத்தின சர்வேசுரன் உண்மையுள்ளவராயிருக்கிறார். அவருடைய ஏவுதலின்படியே தேவசுதனாகிய யேசுக்கிறீஸ்துவை உங்களுக்குப் பிரசங்கிக்கும்போது அவரைக்குறித்து ஆமென்றும், இல்லையென்றும், அதாவது: இன்றைக்கு ஒருவிதமாய் நாளைக்கு வேறுவிதமாய் மாற்றிப்போதித்ததில்லை. ஒரே நிலைமையாகவே அவரை உங்களுக்குப் பிரசங்கித்தேன். அவர் தேவ சுதனானதினாலே சத்திய சுரூபியாயிருக்கிறார். அவ

18. நாங்கள் உங்களுக்குச்சொன்ன வார்த்தையில் ஆம் அல்ல என்று இருந்ததில்லை. இதற்கு உண்மையுள்ளவராகிய சர்வேசுரனே (சாட்சி).

19. எங்களாலே (அதாவது) என்னாலும், சில்வான் என்பவராலும், தீமோத்தேயுவினாலும் உங்களுக்குள் பிரசங்கிக்கப்பட்டிருக்கிற தேவகுமாரனாகிய யேசுக்கிறீஸ்துநாதரிடத்தில் ஆமென்பதும் அல்லவென்பதுமாயிராமல், ஆமென்பதே அவரிடத்திலிருந்தது. (அப். 18-5.)

20. சர்வேசுரன் என்னென்ன வாக்குத்தத்தங்களைச் செய்தாலும் அவையெல்லாம் யேசுநாதரிடத்தில் ஆமென்பதாயிருக்கின்றன. இதினிமித்தமாகவே அவர்பேராலே சர்வேசுரனுக்கு ஆமென் என்கிறோம். அது நமக்கு மகிமையாகின்றது.

21. உங்களோடு எங்களையும் கிறீஸ்துநாதரிடத்தில் உறுதிப்படுத்துகிறவரும் எங்களை அபிஷேகம் பண்ணினவரும் சர்வேசுரன்தான்.

22. அவரோ எங்களை முத்திரையிட்டு, எங்கள் இருதயங்களில் இஸ்பிரீத்துவின் அச்சாரத்தைக் கொடுத்திருக்கிறார். (எபே. 1-13.)

23. இதுவரையில் நான் கொரிந்துக்கு வராதிருப்பதற்கு உங்கள் பேரிலுள்ள தயவுதான் காரணமென்று என்னுள்ளத்திலே சர்வேசுரனைச் சாட்சியாக அழைக்கிறேன். ஏனெனில் நாங்கள் உங்கள் விசுவாசத்தின்மேல் அதிகாரம் செலுத்துகிறவர்களாக அல்ல, ஆனால் நீங்கள் விசுவாசத்திலே நிலைத்திருக்கிறதைப்பற்றி உங்கள் சந்தோஷத்துக்கு உதவியாயிருக்கிறோம்.

## 2-ம். அதிகாரம்.

*தாம் அவர்களிடத்தில் வராததற்குக் காரணத்தைக் காட்டி, விபசாரக்காரனுக்குத் தாம் பொறுத்தல் கொடுப்பதுபோல அவர்களும் பொறுத்தல் கொடுக்கும்படி கற்பிக்கிறார்.*

1. நான் துக்கத்திற்கு ஏதுவாக உங்களிடத்தில் மறுபடியும் வராதபடிக்கு என்னுள்ளத்தில் இவ்விதமாய்த் தீர்மானித்தேன்.

2. ஏனென்றால், நான் உங்களைத் துக்கப்படுத்தினால், என்னாலே துக்கம் அடைந்தவனொழிய என்னைச் சந்தோஷப்படுத்தப் போகிறவன் யார்?

3. என்னுடைய சந்தோஷம் உங்களெல்லாருக்கும் சந்தோஷமாயிருக்குமென்று உங்களெல்லார்பேரிலும் நான் நம்பிக்கையாயிருக்கிறதினாலே, நான் வரும்போது எனக்குச் சந்தோஷம் வருவிக்கவேண்டியவர்களால் துக்கத்துக்குமேல் துக்கப்படாதபடிக்கு இதை நான் உங்களுக்கு எழுதினேன்.

*ரிடத்தில் சர்வேசுரனுடைய வாக்குத்தத்தங்கள் எல்லாம் நிறைவேறப்பட்டன. அவரால் சர்வேசுரனுக்கு ஆமென் அதாவது: தோத்திரமென்று சொல்லுகிறோம். சர்வேசுரனை விசுவாசிக்கிறோம். அந்த விசுவாசமே எங்களுக்கு மகிமையும் நித்திய சீவியமுமாயிருக்கின்றது. நான் கிறீஸ்துநாதரில் உங்களுக்கு அப்போஸ்தலனாகச் சர்வேசுரனாலே அபிஷேகம் பண்ணப்பட்டதற்கும், உறுதிப்படுத்தப்பட்டிருக்கிறதற்கும் இன்னம் வேறொரு அத்தாட்சியுண்டு. அதாவது: என் அப்போஸ்தலப்பட்டத்தின் முத்திரையாக என் இருதயத்தில் இஸ்பிரீத்துசாந்துவின் வரங்களைப் பதியப்பண்ணியிருக்கிறார். நான் உங்களிடத்தில் வராமலிருக்கிறதற்குக் காரணமேதென்றால், உங்கள்மேல் எனக்கு உண்டாயிருக்கிற தயவுதான் காரணமென்று சர்வேசுரன் சாட்சியாயிருக்கிறார். அதெப்படியெனில் உங்களிடத்தில் நான் வந்திருந்தால் அதிகக் கண்டிப்புச் செய்யவேண்டியதாயிருந்தது. ஆனால் உங்கள் விசுவாசத்தின்மேல் கொடுங்கோன்மையான இராச்சியபாரம்பண்ண எனக்கு மனதில்லை. விசுவாசத்தில் உங்களுக்குள்ள உறுதியைப்பற்றி உங்கள் சந்தோஷத்துக்கு உதவியாயிருக்க விரும்புகிறேனென்று அர்த்தமாகும் என்றறிக.*

4. அல்லாமலும் நீங்கள் துக்கப்படும்படிக்கு நான் எழுதாமல், உங்கள் பேரில் எனக்குள்ள அன்பின் மிகுதியை நீங்கள் அறிந்துகொள்ளவேண்டுமென்றே நான் மிகுந்த வியாகுலத்தோடும், மனக் கிலேசத்தோடும், வெகு கண்ணீர்களோடும் உங்களுக்கு எழுதினேன்.

5. ஆயினும் ஒருவன் துக்கப்படுத்தினனென்றால் என்னை (மாத்திரம்) அல்ல; உங்கள் எல்லார்பேரிலும் நான் குற்றஞ் சுமத்தாதபடி அவன் ஒருவிதத்தில் உங்களெல்லாரையும் துக்கப்படுத்தினன். (1. கொரி. 5-2.)

6. அப்படிப்பட்டவனுக்கு அநேகரால் உண்டாயிருக்கிற இந்தக் கண்டனையே போதும்.

7. ஆகையால் அப்படிக்கொத்தவன் ஒருவேளை அதிகமான துக்கத்தில் அமிழ்ந்திப் போகாதபடிக்கு அதற்கு எதிர்மாறாக அவனுக்கு மன்னித்து அவனை விசேஷமாய்த் தேற்றுவீர்களாக.

8. ஆகையால் அவன்மேல் உங்கள் சிநேகத்தை எண்பிக்கும்படியாக உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

9. இன்னமும் நீங்கள் எல்லாக்காரியங்களிலும் கீழ்ப்படிந்திருக்கிறீர்களோ என்று பரீட்சித்தறியும்படியாகவும் இதை உங்களுக்கு எழுதினேன்.

10. எவனுக்கு நீங்கள் ஒருகாரியத்தை மன்னிக்கிறீர்களோ, நானும் மன்னிக்கிறேன். நானும் ஏதாகிலும் மன்னித்திருக்கிறேனாகில், அதை உங்களைப் பற்றிக் கிறீஸ்துநாதருடைய ஆளாக மன்னித்திருக்கிறேன்.

11. சாத்தானுடைய கண்ணியிலே நாம் அகப்படாதபடிக்கு அப்படிச் செய்தேன். அவனுடைய தந்திரங்கள் நமக்குத் தெரியாதவைகளல்லவே.

12. நான் கிறீஸ்துநாதருடைய சுவிசேஷத்தைப்பற்றித் துரோவாப்பட்டணத்தில் வந்தபோது, அதிலே எனக்கு ஆண்டவரால் வாசல்திறந்திருந்தாலும், (அப். 16-8.)

13. அங்கே என் சகோதரனாகிய தீத்துவை நான் காணாததினாலே என் மனம் ஆறுதலடையாமல், அவ்விடத்திலிருந்தவர்களுக்கு மங்களஞ்சொல்லிக்கொண்டு, மக்கேதோனியாவுக்குப் புறப்பட்டு வந்தேன்.

5. கொரிந்தியருக்குள் ஒருவன் துர்மார்க்கமாய் நடந்ததைப்பற்றி முதல் நிருபம் 5-ம் அதிகாரத்தில் அவர்களுக்கு மிகுந்த கண்டிப்பாய் எழுதியிருந்தார். அதினாலே அவர்கள் வெகு கஸ்தியடைந்து அந்தக் குற்றவாளியைக் கண்டித்து, அவன் திருந்தும்படி செய்தார்கள். ஆகையால் இந்த நிருபத்தில் அர்ச். சின்னப்பர் அவர்களுக்கு ஆறுதல் சொல்லி, அப்படிப்பட்ட பாவி எனக்கு மாத்திரமல்ல, உங்களெல்லாருக்கும் ஒருவிதத்தில் கஸ்தி வருவித்தான். அதினாலே நீங்கள் அவனுடைய குற்றத்தைப் பார்த்துக்கொண்டு சும்மா இராமல், அவனைக் கண்டித்துத் திருத்தினதினாலே இப்போது என் சமுகத்தில் குற்றமற்றவர்களாயிருக்கிறீர்கள். உங்கள் பேரில் குற்றஞ்சாட்டுகிறதற்கு இடமில்லையென்கிறாரென்றறிக.

11. மேலே சொல்லப்பட்ட பாவிக்குப் புத்தி வந்ததினாலே அவன் குற்றத்தை முழுதும் மன்னித்து அவனுக்கு ஆறுதல் செய்யுங்கள். முந்தின நிருபத்திலே என் மனம் உங்களோடேகூட இருந்து கிறீஸ்துநாதருடைய நாமத்தினாலே அவனைச் சபித்து, சாத்தானுக்கு ஒப்பித்ததுபோல இப்பொழுதும் நீங்கள் அவனுக்கு மன்னிக்கும்போது என் மனம் உங்களோடேகூட இருந்து உங்களைப்பற்றிக் கிறீஸ்துநாதருடைய நாமத்தினாலே அவனுக்கு மன்னிக்கிறேன். அதிகக் கண்டிப்பினாலே சாத்தானுக்கு இடங்கொடுக்கவேண்டாம். சாத்தானுடைய கருத்து இன்னதென்று அறிவோம். எப்படியென்றால் அதிகக் கண்டிப்பு செய்வது அதிக நன்மையென்றாற்போல் காண்பித்து அப்படிச் செய்ய நம்மை ஏவிவிட்டு அந்த ஆத்துமம் அவநம்பிக்கையினால் கெட்டு, வேதத்தை விட்டுவிடவும் பாவப்பாதாளத்திலே விழவும் வழி தேடுகிறதென்று சொல்லுகிறாரென்றறிக.

14. கிறீஸ்து யேசுநாதரிடத்தில் எங்களுக்கு எப்போதும் ஜெயங்கொடுக்கிறவருமாய் எல்லாவிடத்திலும் தம்முடைய அறிவின் பரிமளத்தை எங்களாலே பரிமளிக்கப்பண்ணுகிறவருமாகிய சர்வேசுரனுக்குத் தோஸ்திரம்.

15. ஏனெனில், நாங்கள் இரட்சிக்கப்படுகிறவர்களுக்குள்ளும், கெட்டுப் போகிறவர்களுக்குள்ளும் சர்வேசுரன் முன்பாக கிறீஸ்துநாதருடைய சுகந்த பரிமளமாயிருக்கிறோம்.

16. இவர்களுக்கு மரணத்துக்கு ஏதுவான மரணவாசமும், அவர்களுக்கோவெனில், சீவியத்துக்கேதுவான சீவியவாசமுமாய் இருக்கிறோம். இப்படிப்பட்ட ஊழியத்துக்கு அவ்வளவு தகுதியானவன் யார்?

17. ஏனெனில், அநேகர் செய்கிறப்போல நாங்களும் தேவவாக்கியத்தை மாறுபாடாய்ப் பேசாமல், கிறீஸ்துவினிடத்தில் நேர்மையாகவும், சர்வேசுரனால் அருளப்பட்டபிரகாரமும், தேவ சந்நிதானத்திலும் பேசுகிறோம்.

## 3-ம். அதிகாரம்.

*சின்னப்பர் தமக்கு யாதொரு சிபாரிசும் வேண்டியதில்லையென்றும், கொரிந்தியரே தமக்குச் சிபாரிசுக்காகிதம்போலிருக்கிறார்களென்றும், பழைய ஏற்பாட்டின் ஊழியத்தைவிடப் புதிய ஏற்பாட்டின் ஊழியம் மேன்மையானதென்றும் காண்பிக்கிறார்.*

1. நாங்களே எங்களை மறுபடியும் புகழ்ந்துகொள்ளத் துவக்குகிறோமா? அல்லது சிலருக்கு வேண்டியதுபோல சிபாரிசு நிருபங்களை உங்களிடத்தில் கொண்டுவரவென்கிலும் உங்களிடத்தில் பெற்றுக்கொள்ளவாகிலும் எங்களுக்கு அவசரமா?

2. எங்கள் இருதயங்களில் எழுதப்பட்டதும், எல்லா மனிதர்களாலும் அறிந்து வாசிக்கப்படுகிறதுமாகிய எங்கள் நிருபம் நீங்கள்தானே.

3. ஏனெனில் நீங்கள் எங்கள் ஊழியத்தினால் எழுதப்பட்ட கிறீஸ்துவின் நிருபமென்று வெளியரங்கமாயிருக்கின்றது. இது மையினாலல்ல, ஜீவியராகிய சர்வேசுரனுடைய இஸ்பிரீத்துவினாலும், கற்பலகைகளிலல்ல, உங்கள் இருதயங்களாகிய சதைப் பலகைகளிலும் எழுதப்பட்டிருக்கிறது.

4. நாங்கள் சர்வேசுரன் முன்பாகக் கிறீஸ்துநாதர் மூலமாய் இப்படிப்பட்ட நம்பிக்கையைக்கொண்டிருக்கிறோம்.

5. ஆகிலும் ஏதேனும் எங்களால் உற்பத்தியாவதுபோல நாங்கள் ஒரு காரியத்தை நினைப்பதற்குத் தகுதியானவர்களல்ல. ஆனால் எங்கள் தகுதி சர்வேசுரனால் உண்டாயிருக்கிறது.

6. அவரோ எங்களைப் புதிய ஏற்பாட்டுக்குத் தகுதியான ஊழியராயிருக்கும்படி செய்தார். அதுவும் எழுத்தினாலல்ல, இஸ்பிரீத்துவினாலேதான். ஏனெனில் எழுத்தானது கொல்லுகிறது. இஸ்பிரீத்துவோ உயிர் தருகிறது. (உ-ரோ. 8-2.)

2-16. **மரண வாசனை.** அர்ச். சின்னப்பருடைய போதகமானது தன் சுகந்த வாசனையால், அதாவது, அதைக் கேட்ட நல்லோருடைய புத்தி நியாயத்துக்கு ஒத்திருந்து, மனதைத் திருப்தியாக்கினதால் அவர்கள் சீவியத்தையடைவதற்கு ஏதுவாயிருந்தது. ஆனால் சத்தியத்தை ஒப்புக்கொள்ளாமல், தேவ ஏவுதலை மீறிநடந்தவர்களுடைய கல்நெஞ்சத்தனத்தின் நிமித்தம் அது அவர்களுக்கு மரணத்துக்கு ஏதுவானதாயிருந்ததென்க.

6 சர்வேசுரன் எங்களைத் தெரிந்துகொண்டு புதிய ஏற்பாட்டிற்குத் தகுதியான ஊழியர்களாக்கினார். இந்தப் புதிய ஏற்பாடு மோயீசன் கையில் கொடுக்கப்பட்ட பிரமாணத்தைப்போல எழுத்தின் பிரமாணமாயிராமல், இஸ்பிரீத்துசாந்துவைப் பயக்கும் இஷ்டப்பிரசாத பிரமாணமாயிருக்கிறது. எழுத்துப் பிரமாணம் இஸ்பிரீத்துசாந்துவைப் பயக்காமல்

7. எழுத்துகளால் கற்களில் வரையலாகி மரணத்தைக் கொண்டுவந்த (வரிவேத) ஊழியமானது மோயீசனை ஒளிவுள்ளவனாக்கினதால், அவன் முகத்தின் ஒளியினிமித்தம் இஸ்ராயேல் புத்திரர் அவனுடைய முகத்தை ஏறெடுத்துப் பார்க்கக் கூடாதிருந்தார்களே. ஆயினும் அது ஒழிந்துபோகிற மகிமைக்குரியதாயிருந்தது. (யாத். 34-29.)

8. அப்படியானால், இஸ்பிரீத்துசாந்துவைப் பெறுவிக்கிற ஊழியம் எவ்வளவோ அதிக மகிமைக்குரியதாயிராது?

9. ஏனெனில் ஆக்கினைத் தீர்ப்பைப் போதிக்கும் ஊழியம் மகிமையுள்ளதானால், நீதியைப் பெறுவிக்கும் ஊழியம் எவ்வளவோ அதிமிக மகிமையுள்ளதாயிருக்கும்! (கலாத். 3-10.)

10. இன்னமும் இந்தவிஷயத்தில்முன் மகிமைப்படுத்தப்பட்ட அந்த ஊழியம் இந்த ஊழியத்தின் சிறந்த மகிமைக்கு முன்பாக மகிமைப்பட்டதல்ல.

11. ஏனெனில் ஒழிந்துபோகிற காரியமே மகிமையுள்ளதாயிருந்ததானால், நிலைநிற்கிற காரியம் அதிமிக மகிமையுள்ளதாயிருக்குமே.

12. இவ்வித நம்பிக்கை எங்களுக்கு உண்டாயிருப்பதினாலே நாங்கள் மிகுந்த தென்பு காட்டுகிறோம்.

13. மோயீசன் ஒழிந்துபோகிற தனது முகக் காந்தியை இஸ்ராயேல் புத்திரர் பாராவண்ணம், தன் முகத்தை முக்காட்டால் மறைத்துக்கொண்டதுபோல நாங்கள் செய்வதில்லை.

14. ஆயினும் அவர்களுடைய புலன்கள் சுணையற்றுப்போயிற்று. இந்நாள் வரையிலும் அவர்கள் பழைய ஏற்பாட்டை வாசிக்கையில் அந்தத் திரையானது எடுபடாமல் அவர்களை மூடிக்கொண்டிருக்கிறது. ஏனெனில் அது கிறீஸ்துநாதர் வழியாய் எடுபடும்.

15. இந்நாள்வரைக்கும் அவர்கள் மோயீசன் ஆகமங்களை வாசிக்கும்போது, அவர்கள் இருதயத்தின்மேல் திரை போடப்பட்டிருக்கிறது.

16. ஆகிலும் அவர்கள் ஆண்டவரிடத்தில் மனந்திரும்புங்காலத்தில் அந்தத் திரைச்சீலை எடுபட்டுப்போம்.

17. ஆண்டவரோ இஸ்பிரீத்துவாயிருக்கிறார்; ஆண்டவருடைய இஸ்பிரீத்து எங்கே உண்டோ, அங்கே சுயாதீனமுமுண்டு. (அரு. 4-24.)

18. நாங்களெல்லாரும் ஆண்டவருடைய பிரதாப மகிமையைத் திறந்த முகமாய்த் தரிசித்து ஆண்டவருடைய இஸ்பிரீத்துவின் செயலால் ஒளிக்குமேல் ஒளிபெற்று, அந்தச் சாயலாக மறுரூபமாகிறோம்.

---

மீறுதலினிமித்தம் மரணத்தைப் பயக்கினது. (உரோ. 17-ம் அதி. 7-ம் வசனந்துவக்கி 16-ம் வசனவரைக்குங் காண்க.) இஸ்பிரீத்துசாந்துவோ இருதயத்திலே இஷ்டப்பிரசாதமாகிய ஞான உயிரைப் பயக்குகிறார்.

18. 12-முதல் கடைசிமட்டுமுள்ள வசனங்களின் அர்த்தமாவது: புதிய ஏற்பாட்டின் ஊழியருக்குண்டாயிருக்கிற நிகரற்ற மகிமையை நாங்கள் உத்தேசித்து மோயீசன் இஸ்ராயேல் பிரஜைகளோடு பேசும்போது தன் முகத்தை மூடினதுபோல் நாங்கள் மூடாமலும் கூச்சப்படாமலும் சுவிசேஷத்தை மிகுந்த தைரியத்தோடே பிரசங்கிக்கிறோம். மோயீசன் முகத்தின்மேல் போடப்பட்ட முக்காடு இஸ்ராயேல் பிரஜைகளின் இருதயக் கடினத்துக்கும் குருட்டாட்டத்துக்கும் அடையாளமாயிருந்தபடியால், அவர்கள் மோயீசன் ஆகமங்களை வாசிக்கும்போதெல்லாம் அந்த முக்காடு அவர்கள் இருதயங்களின்மேல் இந்நாள்வரைக்கும் இருக்கிறாப்போலே மோயீசன் ஆகமங்களில் கிறீஸ்துநாதரைக்குறித்துச் சொல்லியிருக்கிற சாட்சியை அவர்கள் கண்டுபிடியாமல், அவரை இந்நாள்வரைக்கும் விசுவாசியாதிருக்கிறார்கள். அவரை அவர்கள் விசுவாசிக்கும்போது அந்த முக்காடு எடுபடும். அதுவும் யேசுக்கிறீஸ்துநாதரால்தான் ஆகவேண்டும். எங்கள் இருதயமோ அப்படிப்பட்ட முக்காட்டினால் மூடப்

## 4-ம். அதிகாரம்.

அவர் தாம் எவ்வளவு உண்மையோடும் ஊக்கத்தோடும் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தாரென்றும், அதற்காக அனுதினமும் தாம் பட்ட துன்ப உபத்திரவங்கள் தேவவல்லமைக்குத் தோத்திரமாகவும், திருச்சபைக்குப் பிரயோசனமாகவும், தமக்கு நித்திய மகிமைக்கு ஏதுவாகவும் இருக்கிறதென்றுங் காண்பிக்கிறார்.

1. ஆகையால் இவ்வித (தேவ) ஊழியத்தைக் கைக்கொண்டவர்களாகிய நாங்கள் இரக்கம் அடைந்திருப்பதால், சோர்ந்துபோகிறதில்லை.

2. ஆனால் வெட்கத்துக்குரிய அந்தரங்க காரியங்களை நாங்கள் வெறுத்துத்தள்ளி, தந்திரமாய் நடவாமலுஞ் சர்வேசுரனுடைய வாக்கியத்தைப் புரட்டாமலும், சத்தியத்தை வெளிப்படுத்துவதினால் சர்வேசுரனுக்கு முன்பாகச் சகல மனிதரும் எங்களைத் தங்கள் மனச்சாட்சியிலே மதிக்கும்படியாக நடக்கிறோம்.

3. ஆகையால் எங்கள் சுவிசேஷம் இன்னம் மூடப்பட்டதாயிருந்தால், கெட்டுப்போகிறவர்களுக்கே அது மூடப்பட்டதாயிருக்கும்.

4. ஏனெனில் தேவரூபமாகிய கிறீஸ்துநாதருடைய சோதிப்பிரதாபமான சுவிசேஷத்தின் ஒளி அவிசுவாசிகளாகிய அவர்களுக்குப் பிரகாசியாதபடி அவர்களுடைய மனக் கண்களை இப்பிரபஞ்சத்தேவன் பொட்டையாக்கினான். (கொலோ. 1-15.)

5. நாங்கள் எங்களைப் பிரசங்கியாமல், நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரைப் பிரசங்கிக்கிறோம். எங்களையோ யேசுநாதரைப்பற்றி உங்கள் ஊழியர் என்கிறோம்.

6. ஏனெனில் இருளிலிருந்து வெளிச்சத்தைப் பிரகாசிக்கச் சொன்ன சர்வேசுரன்தாமே யேசுக்கிறீஸ்துநாதருடைய முகத்திலே விளங்குகிற தெய்வப்பிரதாபத்தின் அறிவாகிய ஒளியை நாங்கள் தோன்றப்பண்ணும்படி எங்களிருதயங்களில் பிரகாசித்தார்.

7. ஆயினும் இந்தப் பொக்கிஷத்தை மண்பாண்டங்களிலே கொண்டிருக்கிறோம். இந்த உன்னத (சுவிசேஷ) மகத்துவம் எங்களால் ஆகாமல், தெய்வ வல்லமையால் ஆனதென்று விளங்கும்படியாமே. (1. கொ. 2-5.)

8. நாங்கள் எவ்விதத்திலும் நெருக்கப்படுகிறோம்; ஆயினும் நசுங்கிப்போகிறதில்லை. திகைக்கிறோம், ஆனாலும் தென்பற்றுப்போகிறதில்லை.

9. உபாதிக்கப்படுகிறோம்; ஆயினும் கைவிடப்படுகிறதில்லை. தள்ளுண்டு விழுந்தாலும், சாகிறதில்லை.

10. யேசுவின் சீவியம் எங்கள்மேனிகளில் தோன்றும்படி எங்கள் மேனியைச் சுற்றிலும் யேசுவின் மரணப் பாடுகளைப் பதித்துக்கொண்டிருக்கிறோம்.

---

படாமல், இஸ்பிரீத்துசாந்துவின் வரப்பிரசாதமாகிய ஞான வெளிச்சத்தைக்கொண்டு ஞானப்பிரகாசத்தை நாளுக்குநாள் அதிகமதிகமாய் அடைந்து அந்தப் பிரகாசத்தினால் ஆண்டவருடைய மகிமையைத் தரிசிக்கிறதுபோல் இவ்வுலகத்திலே தரிசித்து மறுலோகத்திலே அதற்கு ஒப்பானவர்களாவோம் என்று அர்த்தமாம்.

2. முந்தின அதிகாரத்திலே சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும் உத்தியோகத்தின் மகிமையைக் காண்பித்த பிறகு அர்ச். சின்னப்பர் கள்ளப்போதகர்கள் தமதுபேரில் சொன்ன அவதூறுகளை மறுக்கத் துவக்கி, சர்வேசுரனாலே அழைக்கப்படாமல் தங்கள் வயிற்றின் பிரயோஜனத்தைப்பற்றித் தாங்களாய் அந்த ஞானத் தொழிலிலே பிரவேசித்த கள்ளப்போதகர்கள் துன்பங்களைக்கண்டு, சோர்ந்து பின்வாங்குகிறதுபோல நாங்கள் சோர்ந்துபோகாமல் அந்தத் தொழிலை நிறைவேற்றிக்கொண்டு வருகிறோமென்றும், அந்தக் கள்ளப்போதகரைப்போல அந்தரங்கத்தில் ஒருவிதமாயும் வெளியரங்கத்தில் ஒருவிதமாயும் நடவாமல் எப்போதும் எதார்த்தமாய் நடக்கிறோமென்றும் காண்பிக்கிறார்.

11. ஏனென்றால் யேசுவின் சீவியமும் சாவுக்குரிய எங்கள் மாம்சத்தில் விளங்கும்படி உயிரோடிருக்கிற நாங்கள் யேசுவைப்பற்றிச் சாவுக்கு எப்போதும் எங்களைக் கையளிக்கிறோம்.

12. ஆகையால் மரணம் எங்களிடத்திலும், உயிர் உங்களிடத்திலும் முயற்சியாயிருக்கின்றது.

13. விசுவாசித்தேன், அதினிமித்தம் பேசினேன் என்று எழுதியிருக்கிற பிரகாரம் நாங்களும் அந்த விசுவாச இஸ்பிரீத்துவையே கொண்டவர்களாய் விசுவாசிக்கிறோம்; ஆகையால் பேசுகிறோம். (சங். 115-1.)

14. ஏனெனில் யேசுவை உயிர்ப்பித்தவர் யேசுவோடேகூட எங்களையும் உயிர்ப்பித்து, உங்களோடே எங்களையும் நிலைநிறுத்துவாரென்று நாங்கள் அறிந்திருக்கிறோம்.

15. சர்வேசுரனுடைய மகிமை விளங்குவதற்கு ஏதுவாக வரப்பிரசாதமானது அநேகருடைய தோஸ்திரத்தினாலே பெருகும்படிக்கு இவையெல்லாம் உங்கள் நிமித்தம் உண்டாயிருக்கிறது.

16. இதினிமித்தம் நாங்கள் மனங்களைக்கிறதில்லை. ஏனெனில் நமது புறத்து மனிதன் அழிந்தாலும், உள்ளத்து மனிதன் நாளுக்குநாள் புதுப்பிக்கப்படுகிறான்.

17. ஏனெனில் இம்மையில் இலகுவாயும் ஒரு நொடிப்பொழுதுக்குமாத்திரமிருக்கிற நமது துன்பமானது நித்திய கனத்தையுடைய மகிமைப் பிரதாப மகுத்துவத்தை அளவின்றிப் பெறுவிக்கும். (உரோ. 8-18.)

18. நாங்கள் காணப்படுகிறவைகளையல்ல, காணப்படாதவைகளையே நோக்கிக்கொண்டிருக்கிறோம். ஏனெனில் காணப்படுகிறவைகள் அநித்தியமானவை; காணப்படாதவைகளோ நித்தியமானவை.

13-14. 1-வது. தீர்க்கதரிசியாகிய தாவீதென்பவர் கொண்டிருந்த விசுவாசத்தையே நாமும் கொண்டிருக்கிறோம் என்று அர்ச். சின்னப்பர் இதிலே சொல்லுகிறபடியினாலே யேசுநாதருடைய வருகைக்கு முன்னும் அவருடைய வருகைக்குப் பின்னும் விசுவாசம் ஒன்றுதானென்று அறிந்துகொள்ளுகிறோம். பிதாப்பிதாக்கள் வரவேண்டிய இரட்சகனை விசுவாசித்தார்கள். நாம் வந்த இரட்சகனை விசுவாசிக்கிறோம்.

2-வது. விசுவாசிக்கிறவன் தான் விசுவாசிக்கிறதைப் பேசக் கூச்சப்பட்டால், மெய்யாகவே விசுவாசிக்கிறவன் அல்ல. நீதிமானாகிறதற்கு இருதயத்திலே விசுவாசிக்கவும் இரட்சணியத்தை அடைவதற்கு வாயினாலே அதைப் பிரசித்தப்படுத்தவும் வேண்டும். (உரோ. 10-10.)

மனிதர் முன்பாக என்னையும் என் வாக்கியத்தையும்பற்றிக் கூச்சப்படுகிறவன் எவனோ, அவனைப்பற்றி நானும் என் பிதாவின் முன்பாகவும், அவருடைய தூதர் முன்பாகவும் கூச்சப்படுவேன். லூக்கா 9-26. அப்போஸ்தலர்களும் வேதசாட்சிகளும் மெய்யாகவே விசுவாசித்தார்கள். ஆகையால் பேசத்துணிந்தார்கள். பேசத்துணிந்து இவ்வுலகத்திலே சீவனை இழந்தார்கள். ஆனால் அதற்குப் பதிலாய் நித்திய சீவனை அடைந்தார்கள்.

3-வது. அப்போஸ்தலர்களிடத்திலும் வேதசாட்சிகளிடத்திலும் நித்திய சீவியத்தைப் பெறுவித்த விசுவாசம் நம்மிடத்திலும் நித்திய சீவியத்தைப் பெறுவிக்கிறது. அதெப்படியென்றால் விசுவாசத்தினால் நீதிமான்களானார்கள். பேசினதினால் தங்களுக்கு நித்திய சீவியத்தைப் பெறுவித்தார்கள். நமக்கோ விசுவாசத்தின் வாசலைத் திறந்தார்கள். கேள்வியினால் விசுவாசம் உண்டாகிறதென்று உரோமர் 10-17-ம் வசனங் காண்க.

## 5-ம். அதிகாரம்.

நித்திய மகிமையின் நம்பிக்கையினாலே இந்தச் சரீரத்தினின்று விடுதலையாகும்படி ஆசித்து, கிறீஸ்துநாதருடைய ஸ்தானாபதிக்கத்தை நிறைவேற்றுகிறதாகச் சொல்லுகிறார்.

1. இந்த இல்லிடமாகிய நமது மண் வீடு கரைந்துவிழுந்தால், மோட்சத்திலே சர்வேசுரனால் கட்டப்பட்ட கை வேலையல்லாத நித்திய மனை நமக்குக் கிடைக்குமென்று அறிவோம்.

2. ஏனெனில் பரலோகத்திலிருக்கிற நமது வீடு நமக்கு மேலுடையாக வேண்டுமென்று ஆசைப்பட்டு இதிலே பெருமூச்செறிகிறோம்.

3. ஆகிலும் நிர்வாணிகளாயிராமல், வஸ்திரந்தரிக்கப்பட்டவர்களாய்க் காணப்பட்டால்தான் இது ஆகும். (காட்சி. 16-15.)

4. இந்தக் கூடாரத்திலிருக்கிற நாம் இதின் பாரத்தால் வருந்திப் பிரலாபிக்கிறோம். ஏனெனில் இந்தப் போர்வையை உரிந்துபோட வேண்டுமென்று விரும்பாமல், மரணத்துக்கு ஏதுவானது சீவனால் விழுங்கப்படும்படி மேலே (பரம) போர்வையைத் தரித்துக்கொள்ள ஆசிக்கிறோம்.

5. இதற்கு நம்மை ஆயத்தப்படுத்துகிறவர் சர்வேசுரன்தாமே. அவரே தமது இஸ்பிரீத்துவையும் நமக்கு அச்சாரமாகத் தந்திருக்கிறார்.

6-7. ஆகையால் எப்பொழுதும் தென்பாயிருக்கிறோம். நாம் பிரத்தியக்ஷமாய்த் தரிசித்து நடவாமல், விசுவசித்து நடப்பதினாலே, இந்தச் சரீரத்திலிருக்குமட்டும், கர்த்தரைவிட்டுப் பரதேசிகளாய்த் திரிகிறோமென்று அறிந்திருந்தும்,

8. தென்புள்ளவர்களாயிருந்து இந்தத் தேகத்தைவிட்டு அகலவும், கர்த்தரிடத்தில் குடியிருக்கவும் அதிகமாய் ஆசிக்கிறோம்.

9. இதினிமித்தம் நாம் இந்தச்சரீரத்தில் குடியிருந்தாலும், இதைவிட்டு அகன்றாலும் ஆண்டவருக்குப் பிரியப்படவருந்துகிறோம்.

1-5. மண் வீடாகிய இந்தச்சரீரத்திலிருக்குந்தனியும் மோட்சத்திலே புது வீடாகிய அழியாமையையும் நித்திய மகிமையையுங்கொண்டிருக்கிற உத்தான சரீரத்தை உடுத்திக்கொள்ள எல்லாரும் ஆசைப்படுகிறோம். ஆகிலும் எல்லாருக்கும் அந்தப் பாக்கியங் கிடைக்க மாட்டாது. அது யாருக்குக்கிடைக்கும்? மரணத்தருணத்திலே விசுவாசத்தினாலும் இஷ்டப்பிரசாதத்தினாலும் யேசுக்கிறீஸ்துநாதரை ஆடையாகத் தரித்திருக்கிறவர்களுக்கே கிடைக்கும். இதுவே கலியாண விருந்துக்கு அழைக்கப்பட்டவர்கள் தரித்திருக்கவேண்டிய கலியாண வஸ்திரம். அந்த வஸ்திரமில்லாதவன் சர்வேசுரன் சமுகத்திலே நிர்வாணமாயிருக்கிறவன். அப்படிப்பட்டவன் இருளும் பற்கடிப்புமுள்ள நரகமென்கிற சிறைச்சாலையிலே அடைக்கப்படுவான். இந்த இழிவுள்ள சரீரத்தின் பாரத்தால் தவித்து, பெருமூச்சுவிடுகிறோம். ஆகிலும் மரணமானது சுபாவத்துக்குப் பொருந்தாததாயிருக்கிறதினாலே கூடுமாகில் மரணத்தையடையாமல் நித்திய உயிரைத் தரித்துக்கொள்ள எல்லாரும் விரும்புகிறோம். எல்லாராலேயும் ஆசிக்கப்பட்ட அந்த நித்திய சீவியத்துக்காகச் சர்வேசுரன் நம்மை உண்டாக்கினார். ஜென்மப் பாவத்தினாலே நாம் அதின் சுதந்தரத்தை இழந்துபோனோமென்றாலும்,யேசுநாதர் தம்முடைய மரணத்தினால் அதை நமக்கு மறுபடியும் பெறுவித்தார். நாம் ஞானஸ்நானம் பெறும்போது சர்வேசுரனுடைய பிள்ளைகளுமாய் யேசுநாதரோடே கூட அந்த நித்திய சீவியத்திற்கு உடன் சுதந்தரக்காரருமாய்ப் போனதுந் தவிர அந்தச் சுதந்தரத்துக்கு அச்சாரமாக இஸ்பிரீத்துசாந்துவானவர் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறார் என்றர்த்தமாகும்.

10. ஏனெனில் அவனவன் செய்த நன்மை தின்மைக்குத் தக்கதுபோல் தன்தன் சரீரத்துக்குரியதைப் பெற்றுக்கொள்ளும்படி நாமெல்லாரும் கிறீஸ்துநாதருடைய நியாயாசனத்திற்கு முன்பாக வெளியாக வேண்டியது. (உரோ. 14-10.)

11. ஆதலால் கர்த்தருக்குப் பயப்படவேண்டுமென்று அறிந்து, நாங்கள் மனிதர்களுக்குப் புத்திமதி சொல்லுகிறோம். சர்வேசுரனே எங்களை நன்றாய் அறிவார். உங்கள் மனச்சாட்சியும் எங்களை நன்றாய் அறிந்திருக்கிறதென்று நம்புகிறேன்.

12. இதனாலே நாங்கள் உங்கள் முன்பாக எங்களை மறுபடியும் மெச்சிக்கொள்வதில்லை. ஆனால் இருதயத்தினுள்ளதைப்பற்றி மேன்மைபாராட்டக்கூடாமல், வெளித்தோற்றத்தைப்பற்றி மேன்மை பாராட்டுகிறவர்களுக்கு எதிரே நீங்கள் எங்களைக்குறித்து மேன்மை பாராட்டும்படிக்கு உங்களுக்கு ஏதுவுண்டாக்குகிறோம்.

13. நாங்கள் புத்தி தவறினவர்களென்றால், அது சர்வேசுரனுக்காகத்தான்; நாங்கள் தெளிந்த புத்தியுள்ளவர்களென்றால் அது உங்களுக்காகத்தான்.

14. கிறீஸ்துநாதருடைய சிநேகம் எங்களை நெருக்கி ஏவுகின்றது. ஏனெனில் ஒருவரே எல்லாருக்காகவும் மரித்தாரென்றால் எல்லாரும் மரித்தார்களென்றும்,

15. கிறீஸ்துநாதர் எல்லாருக்காகவும் மரித்திருக்க, உயிரோடிருக்கிறவர்கள் இனித் தங்களுக்காக அல்ல, தங்களுக்காக மரித்து உயிர்த்தவருக்காகச் சீவிக்கவேண்டியதென்றும் நிச்சயித்திருக்கிறோம்.

16. ஆனதால் இதுமுதல் நாங்கள் ஒருவனையும் மாம்சத்தின்படி அறியோம். நாங்கள் கிறீஸ்துநாதரை மாம்சத்தின்படி அறிந்திருந்தாலும், இனி ஒருபோதும் அவரை அப்படி அறியோம்.

17. ஆகையால் ஒருவன் கிறீஸ்துநாதரிடத்தில் இருந்தால் அவன் புதுச்சிருஷ்டியாயிருக்கிறான். பழையவைகள் ஒழிந்துபோயின. இதோ, எல்லாம் புதிதாக்கப்பட்டன. (இசை. 43-19; காட்சி. 21-5.)

18. எல்லாம் சர்வேசுரனிடத்திலிருந்து வருகின்றது. அவரே கிறீஸ்துநாதர்மூலமாய் நம்மைத் தம்மோடு மறுஉறவாக்கி, மறு உறவாக்குகிற தொழிலையும் எங்களுக்கு அளித்தார்.

13. நாங்கள் மதியீனரைப்போலே எங்களைப் புகழ்ந்தாலும் ஆண்டவருடைய தோத்திரத்தைப்பற்றித்தான் அப்படிச் செய்கிறோம். புத்தியுள்ளவர்களாய் எங்களைத் தாழ்த்தினாலும் உங்களைப்பற்றிதான் அப்படிச் செய்கிறோம். எப்படியெனில், கிறீஸ்துவர்களுக்குரிய தாழ்ச்சியை உங்களுக்குப் படிப்பிக்கிறோம்.

17. நாம் மரித்தவர்களாயிருக்கையிலே தமக்காக நாம் சீவிக்கும்படிக்கு யேசுநாதர் நமக்காக மரித்து உயிர்த்தெழுந்தபடியால், அவரிடத்தில் நாம் புதுச்சீவியத்தை அடைந்திருக்கிறோமாகில், பழைய மனிதனுக்குரியவைகளையெல்லாம் ஒழித்துவிட்டு, இந்தப் புது சீவியத்துக்கு யோக்கியமான விதமாய் எல்லாக்காரியங்களிலும் நடக்கக்கடவோம். ஆகையால் இதுமுதல் ஒருவனையும் உறவின் முறையானே, அன்னியனே, மேன்குலத்தானே, தாழ்குலத்தானே, ஆஸ்திக்காரனே, தரித்திரனே என்று மாம்ச சம்பந்தப்படி அவனை அறியாமலுஞ் சிநேகியாமலும், கிறீஸ்துநாதரைப்பற்றி மாத்திரம் அவனை அறியவுஞ் சிநேகிக்கவுங்கடவோம். கிறீஸ்துநாதரை முதலாய் மாம்சத்துக்குரிய தன்மையாய் அறியாமலுஞ் சிநேகியாமலும், அவரை நம்முடைய ஆண்டவராகவும் இரட்சகராகவும் நித்திய சீவியத்தை நமக்குப் பெறுவிக்கிறவராகவும் அவரை அறிந்து, சிநேகித்துச் சேவிக்கக்கடவோம்.

19. அதெப்படியென்றால் சர்வேசுரன் உலகத்தாருடைய பாவங்களை அவர்கள்பேரில் சாட்டாமல், அவர்களைக் கிறீஸ்துநாதர்வழியாய்த் தம்மோடு மறு உறவாக்கி, அந்த மறு உறவாக்குதலின் வாக்கியத்தை எங்களிடம் ஒப்புவித்தார்.

20. ஆனபடியினாலே சர்வேசுரன் எங்களைக்கொண்டு புத்தி சொன்னாற்போல, நாங்கள் கிறீஸ்துநாதருடைய ஸ்தானாபதிகளாயிருந்து: சர்வேசுரனோடே திரும்பவும் உறவாகுங்கள் என்று கிறீஸ்துநாதருடைய நாமத்தினாலே உங்களை மன்றாடுகிறோம்.

21. அவரிடமாய் நாம் சர்வேசுரனுடைய நீதியாகும்படிக்குச் சர்வேசுரன் பாவமறியாத அவரை நமக்காகப் பாவமாக்கினார்.

## 6-ம். அதிகாரம்.

*தாங்கள் பெற்றுக்கொண்ட வரப்பிரசாதத்தை வீணாக்கப்படாதென்றும், அவிசுவாசிகளுடைய சகவாசத்தைவிலக்கி நடக்க வேண்டுமென்றும் கொரிந்தியருக்குக் கற்பிக்கிறார்.*

1. ஆகையால், தேவவரப்பிரசாதத்தை நீங்கள் விருதாவாய்ப் பெறாதபடி உதவி வேலையாட்களாகிய நாங்கள் உங்களுக்குப் புத்திசொல்லுகிறோம்.

2. ஏனென்றால், அனுக்கிரக காலத்திலே நான் உனக்குச் செவிகொடுத்தேன்; இரட்சணிய நாளிலே உனக்கு உதவியாயிருந்தேன் என்று சொல்லியிருக்கிறாரே. இதோ, இப்பொழுதே அந்த அனுக்கிரக காலம். இதோ, இப்பொழுதே இரட்சணியத்தின் நாள். (இசை. (49-8.)

3. எங்கள் உத்தியோகத்தை யாரும் பழிக்காதபடி ஒருவருக்கும் நாங்கள் இடறலாய் இராததுமன்றி, (1. கொ. 10-32.)

4. சகலத்திலும் எங்களைத் தேவ ஊழியர்களாகக் காண்பிக்கும்பொருட்டு மிகுந்த பொறுமையிலும், துன்பங்களிலும், இக்கட்டுகளிலும், நெருக்கிடைகளிலும், (1. கொ. 4-1.)

5. அடிகளிலும், சிறைச்சாலைகளிலும், கலகங்களிலும், பிரயாசங்களிலும், கண்விழிப்புகளிலும், உபவாசங்களிலும்,

6. கற்பிலும், கல்வியிலும், நீடியசாந்தத்திலும் இனிமையிலும், இஸ்பிரீத்துசாந்துவிலும்,பாசாங்கற்ற நேசத்திலும்,

7. சத்தியவாக்கிலும், தேவ வல்லமையிலும், வலத்திலும் இடத்திலும் நீதியின் ஆயுதங்களைக்கொண்டிருப்பதிலும்,

8. மகிமையிலும், இழிவிலும், அபகீர்த்தி சுபகீர்த்தியிலும், வஞ்சகரென்னப்பட்டாலும், நிஜஸ்தராகவும், அறியப்படாதவர்கள் என்னப்பட்டாலும், அறியப்பட்டவர்களாகவும் இருக்கிறோம்.

9. இன்னமும் செத்தவர்கள் என்னப்பட்டாலும், இதோ, உயிரோடிருக்கிறவர்களாகவும், அடிபட்டவர்களாக எண்ணப்பட்டாலும், கொல்லப்படாதவர்களாகவும்,

10. துக்கிக்கிறவர்கள் என்னப்பட்டாலும், எப்போதும் மகிழ்ச்சியுள்ளவர்களாகவும், தரித்திரர் என்னப்பட்டாலும், அநேகம்பேர்களைச் சம்பன்னராக்கிறவர்களாகவும், ஒன்றுமில்லாதவர்களாக எண்ணப்பட்டாலும், எல்லாம் உடையவர்களாகவும் இருக்கிறோம்.

---

21. பாவமாக்கினாரென்பதற்குப் பாவப்பலியாக்கினாரென்பது கருத்து. ஏனெனில் எபிரேயபாஷையில் பாவப்பரிகாரமாக ஒப்புக்கொடுக்கப்படுகிற பலியைப் பாவமென்று சொல்வது வழக்கமாம்.

11. ஓ கொரிந்தியரே, உங்கள் முகமாய் எங்கள் வாய் திறந்திருக்கின்றது; எங்கள் இருதயமும் மலர்ந்து விரிந்திருக்கின்றது.

12. உங்கள் மட்டில் எங்கள் மனது சுருங்கிப்போவதில்லை. உங்கள் மனமே சுருங்கிப்போகின்றது.

13. ஆகையால் சரிக்குச் சரியான கைம்மாறாகும்படி, உங்கள் உள்ளமும் மலர்ந்து விரியக்கடவதென்று பிள்ளைகளுக்குச் சொல்லுவதுபோல் உங்களுக்கும் சொல்லுகிறேன்.

14. அவிசுவாசிகளோடு ஒரு நுகத்தில் இணைக்கப்படாதிருங்கள். நீதிக்கும் அநீதிக்கும் சம்பந்தமேது? ஒளிக்கும் இருளுக்கும் கூட்டேது?

15. கிறீஸ்துநாதருக்கும் பெலியாலுக்கும் ஒப்பந்தமென்ன? விசுவாசியுடனே அவிசுவாசிக்குப் பங்கேது? (1. கொ. 10-20.)

16. சர்வேசுரனுடைய ஆலயத்துக்கும் விக்கிரகங்களுக்கும் பொருத்தமேது? ஏனெனில்: நான் அவர்களுக்குள் வாசம்பண்ணுவேன்; அவர்கள் நடுவில் உலாவுவேன்; நான் அவர்களுடைய தெய்வமாயிருப்பேன், அவர்கள் என்னுடைய ஜனமாயிருப்பார்கள் என்று சர்வேசுரன் உரைத்ததுக்கொத்த வண்ணம் நீங்கள் சுயஞ்சீவிய கடவுளின் ஆலயமாயிருக்கிறீர்கள். (1. கொ. 4-19; லேவி. 21-12.)

17. ஆனபடியினாலே நீங்கள் அவர்கள் மத்தியிலிருந்து பிரிந்து, புறப்பட்டுப்போவதுமன்றி, அசுத்தமானதைத் தொடாதிருங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார். (இசை. 52-2.)

18. அப்போது நான் உங்களை ஏற்றுக்கொண்டு, உங்களுக்குப் பிதாவாயிருப்பேன். நீங்கள் எனக்குக் குமாரரும் குமாரத்திகளுமாயிருப்பீர்கள் என்று சர்வ வல்லமையுள்ள [illegible]ரான கர்த்தர் சொல்லுகிறார். (எரே. 31-9.)

## 7-ம். அதிகாரம்.

*சின்னப்பர் கொரிந்தியர்மேல் தமக்குள்ள நேசத்தின் மிகுதியை விவரித்துக் காட்டுகிறார்.*

1. இந்த வாக்குத்தத்தங்கள் நமக்கு உண்டாயிருக்கிறபடியினாலே, மிகவும் பிரியமானவர்களே, மாம்சத்திலும் மனதிலும் உள்ள எவ்வித அழுக்குகளும் நீங்க நம்மைச் சுத்திகரித்து, தெய்வபயத்தை முன்னிட்டு நமது அர்ச்சியசிஷ்டதனத்தின் வேலையைப் பூரணமாய் முடிக்கக்கடவோம்.

2. எங்களை அங்கிகரித்துக்கொள்ளுங்கள். நாங்கள் ஒருவனுக்கும் அநியாயஞ்செய்யவில்லை, ஒருவனையும் கெடுக்கவில்லை, ஒருவனையும் வஞ்சிக்கவில்லை.

3. உங்களைக் குற்றவாளிகளாக்கும் பொருட்டு நான் இதை உங்களுக்குச் சொல்லுகிறதில்லை. ஏனெனில் நாங்கள் உங்களுடன் மரிக்கவும், சீவிக்கவுந் தக்கதாக நீங்கள் எங்கள் இருதயங்களிலிருக்கிறீர்களென்று உங்களுக்குச் சொல்லியிருக்கிறோமே.

13. ஓ! கொரிந்தியரே, உங்களுக்குப் பிரசித்தமாகவும் தைரியமாகவும் பேசுகிறேன். ஏனெனில் என் இருதயத்தின் பட்சம் உங்கள் பேரில் மிகுதியாயிருக்கிறது. உங்கள் இருதயப்பட்சமோ என் பேரில் அத்தனை மிகுதியாயிருக்கிறதில்லை. ஆகையால் என் மக்களே, என் இருதயம் உங்களிடமாய் விசாலமான பட்சம் வைத்திருப்பதுபோல நீங்களும் கைம்மாறாக என்பேரில் அன்புள்ளவர்களாய் இருக்கவேண்டுமென்று உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன் என்றர்த்தமாகும்.

4. உங்கள்மட்டில் எனக்கு மிகுந்த திடனுண்டு ; உங்களைப்பற்றி நான் மிக வும் மேன்மைபாராட்டுகிறேன் ; ஆறு தலால் நிறைந்திருக்கிறேன். எங்களு க்கு நேரிடும் சகல உபத்திரவ துன்பங் களுக்குள்ளும் சந்தோஷப் பூரிப்பாயி ருக்கிறேன்.

5. எப்படியெனில் நாங்கள் மக்கே தோனியா தேசத்துக்கு வந்தபோது எங்கள் சரீரத்துக்கு யாதோர் இளைப் பாற்றியும் கிடையாமற்போனதுமன்றி அகத்தில் அச்சமும், புறத்தில் போரா ட்டமுமாக எவ்வித துன்பமும்பட்டு வருந்தினோம்.

6. ஆனால் தாழ்மையுள்ளவர்களைத் தேற்றுகிறவராகிய சர்வேசுரன் தீத்து என்பவருடைய வருகையினாலே எங் களைத் தேற்றினார்.

7. அவர் வந்ததினாலேமாத்திரமல்ல, உங்கள் வாஞ்சையையும், உங்கள் அழு கையையும், என்னைப்பற்றி உங்களுக் குண்டான பத்திவைராக்கியத்தையும் கண்டு அவர் உங்களாலே அடைந்த ஆறுதலை எங்களுக்குத் தெரியப்படுத் தினதினாலும் நான் ஆறுதலையடைந்து, அதிகமாய்ச் சந்தோஷப்பட்டேன்.

8. ஏனெனில் என் நிருபத்தினால் உங்களுக்குத் துக்கம் வருவித்திருந்தா லும், அந்த நிருபம் கொஞ்சவேளைக் கென்றாலும் உங்களைத் துக்கப்படுத்தி னதென்று கண்டு நான் மனவருத்தப் பட்டிருந்தாலும், இப்பொழுது மன வருத்தப்படுகிறதில்லை.

9. இப்பொழுது சந்தோஷமாயிருக் கிறேன். ஏனெனில் நீங்கள் துக்கப்பட் டதினாலேயல்ல, தபத்திற்கேதுவாக நீங்கள் துக்கப்பட்டதினாலே நான் சந் தோஷமாயிருக்கிறேன். எங்களாலே உங்களுக்கு ஒன்றிலும் நஷ்டமுண்டா காதபடி நீங்கள் கடவுளுக்குப்பொருந் திய துக்கப்பட்டீர்களே.

10. சர்வேசுரனுக்குப் பொருந்திய துக்கமானது இரட்சணியத்துக்குரிய நிலைமையான தபத்தை விளைவிக்கின் றது. லௌகீக துக்கமோ மரணத்தைப் பிறப்பிக்கின்றது. (1. இரா. 2-19.)

11. இப்படி நீங்கள் கடவுளுக்குப் பொருந்தியபடி மனஸ்தாபப்பட்டீர்க ளே. இதோ, அந்த மனஸ்தாபம் உங் களிடத்தில் எவ்வளவோ கவலையை உண்டாக்குகிறது. இன்னமும் நியா யச் சலுகையையும், வெறுப்பையும், பயத்தையும், ஆசையையும், உரோச த்தையும், பரிகாரத்தையும், உங்களிட த்திலே உண்டாக்குகின்றதே. இந்த விஷயத்திலே நீங்களும் ஒருவகையி லும் மாசுபடவில்லையென்று காண்பித் திருக்கிறீர்கள்.

11. 8-ம் வசனமுதல் 11-ம் வசனவரைக்கும் அபிப்பிராயமாவது : என் முந்தின நிரு பத்தில் உங்களுக்கு அதிகக் கண்டிப்புச்செய்ததினாலே உங்களைக் கஸ்திப்படுத்தினேன். ஆகிலும் அந்தக்கஸ்தியினாலே வந்த ஞான நன்மையை நான் பார்க்கும்போது உங்களைக் கஸ்திப்படுத்தினதற்காகச் சந்தோஷப்படுகிறேன். நான் சந்தோஷப்படுவது உங்களைக் கஸ்திப்படுத்தினதற்காக அல்ல. அந்தக்கஸ்தியானது நீங்கள் புண்ணிய முயற்சிகளை அநு சரிப்பதற்கு ஏதுவாயிருந்ததினாலே சந்தோஷிக்கிறேன். அந்தக்கஸ்தி சர்வேசுரனைப்பற்றி உண்டானதினாலே உங்களுக்குப் புண்ணியமுயற்சியாயிருந்தது. உலகத்தாருடைய கஸ் தியோ ஆத்துமத்துக்குப் பிரயோசனமில்லாமற்போவதுந்தவிர சரீரத்துக்கு முதலாய்க் கெடுதியாமே. மெய்யாகவே சர்வேசுரனை முன்னிட்டு நீங்கள் பட்ட மனஸ்தாபத்தினாலே எத்தனையோ புண்ணிய முயற்சிகள் உண்டாகக் காரணமாயிருந்தது. உங்கள் குற்றத்தைப் பரிகரிப்பதற்கு எத்தனையோ சுறுசுறுப்பு, குற்றக்காரர்பேரில் எத்தனையோ சினம், அந்தக் குற்றங்களினிமித்தஞ் சர்வேசுரன் உங்களைத் தெண்டிப்பாரென்று எத்தனையோ பயம், இனிக் குற்றமற்றவர்களாய் நடக்கிறதற்கு எத்தனையோ ஆசை, எல்லாரும் புண்ணிய நெறியில் நடக்கிறதற்கு எத்தனையோ உரோசம் குற்றக்காரனுக்கு எத்தனையோ கண் டனை நடத்தப்பட்டது என்பது கருத்தாம்.

12. ஆகையால் நான் உங்களுக்கு நிருபம் எழுதினபோதிலும், அது உங்கள்மட்டில் சர்வேசுரனுக்கு முன்பாக நமக்குண்டான கவலையைக் காட்ட வேண்டுமென்று அல்லாதே, மற்றப்படி அக்கிரமஞ்செய்தவனைப்பற்றியும் அல்ல, அந்த அக்கிரமத்தால் வருத்தப்பட்டவனைப்பற்றியும் அல்ல.

13. ஆகையால் ஆறுதலடைந்திருக்கிறோம். ஆனால் உங்கள் அனைவராலும் தீத்தென்பவருடைய மனங்குளிர்ந்ததினாலே அவருடைய மனோகரத்தைப் பார்த்து மென்மேலும் எங்கள் ஆறுதலும், சந்தோஷமும் பெருகிற்று.

14. ஆகையால் நான் அவரோடு பேசி, உங்களைக்குறித்து மகிமைபாராட்டியிருந்தால், அதைப்பற்றி நான் வெட்கப்படவில்லை. ஆனால் நாம் உங்களுக்குச் சகலத்தையும் சத்தியத்துக்கொத்தபடி சொன்னதுபோல, தீத்தென்பவரிடத்தில் நாம் உங்களைக்குறித்துப் புகழ்ச்சியாய்ப் பேசினதும் சத்தியத்துக்கொத்தபடியென்று வெளியாயிற்று.

15. அவர் உங்கள் எல்லாருடைய சிரவணத்தையும்,நீங்கள் அச்சநடுக்கத்தோடு அவரை உபசரித்தமாதிரியையும் நினைவுகூர்கையில் அவர் நெஞ்சம் உங்கள்மட்டில் பூரிப்படைந்திருக்கின்றது.

16. ஆகையால் எல்லா விஷயத்திலும் நான் உங்களை உறுதியாய் நம்பலாமென்று சந்தோஷிக்கிறேன்.

## 8-ம். அதிகாரம்.

*எருசலேமிலுள்ள தரித்திரரான கிறீஸ்துவர்களுக்காகத் தர்மப்பணங்களைத் தங்களுக்குள்ளே சேகரித்துவைக்கும்படி கொரிந்தியரைக் கேட்டுக்கொள்ளுகிறார்.*

1. இப்போது சகோதரரே, மக்கேதோனியா நாட்டுத் திருச்சபைகளுக்குச் சர்வேசுரன் அளித்த கிருபையை உங்களுக்கு அறிவிக்கிறோம்.

2. எப்படியெனில், அவர்கள் பட்ட துன்பஉபத்திரவசோதனைகளிலே அவர்களுடைய சந்தோஷம் பூரணமாயிருந்ததுமன்றி, அவர்களுடைய அட்டத்தரித்திரமும் அவர்களுடைய இயல்பான உதாரத்துவ செல்வமாய்ப் பெருகிற்று.

3. அதெப்படியென்றால், அவர்கள் தங்கள் திராணிக்குத்தக்கதாகவும், திராணிக்கு மேலாகவும் வலியக் கொடுக்க மனதாயிருந்தார்கள் என்று நானே அவர்களுக்குச் சாட்சியாயிருக்கிறேன்.

4. தாங்கள் செய்யும் உபகாரத்தையும், அர்ச்சிக்கப்பட்டவர்களுக்குச் செய்யப்படும் ஊழியத்தின் பங்கையும் நாங்கள் ஏற்றுக்கொள்ளும்படி அவர்கள் எங்களை மிகவும் மன்றாடினார்கள்.

5. அன்றியும் அவர்கள் நாங்கள் எண்ணியிருந்ததுபோல் மாத்திரம் செய்யாமல், தேவ ஏவுதலின்படி முந்த முந்தத் தங்களைக் கர்த்தருக்கும், பின்பு எங்களுக்கும் ஒப்புக்கொடுத்தார்கள்.

6. ஆனதால் தீத்து என்பவர் இந்தத் தர்மக்கிரியையை முன் உங்களிடத்தில் துவக்கினபடியே, அதை முடிக்கவும் வேண்டுமென்று அவரைக் கேட்டுக்கொண்டோம்.

7. இதன்றியே நீங்கள் விசுவாசத்திலும்,வாக்கிலும், அறிவிலும், எவ்வித ஜாக்கிரதையிலும், எங்கள்மேல் உங்களுக்குள்ள அன்பிலும், இன்னும் மற்றச் சகலத்திலும் விசேஷித்திருக்கிறதுபோல, இந்தத் தர்ம காரியத்திலும் விசேஷித்திருப்பீர்களாக.

8. இதை நான் உங்களுக்குக் கட்டளையாகச் சொல்லாமல், மற்றவர்களுடைய ஜாக்கிரதையின் வழியாய் உங்களுடைய அன்பின் எதார்த்த குணத்தைச் சோதிக்கும்பொருட்டுச் சொல்லுகிறேன்.

9. நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய கிருபையை அறிந்திருக்கிறீர்களே. அவர் ஐசுவரியராயிருந்தும், அவருடைய தரித்திரத்தால் நீங்கள் ஐசுவரியராகும்பொருட்டு, அவர் உங்கள் நிமித்தம் தரித்திரரானர். (மத். 8-20.)

10. இவ்விஷயத்திலே நான் உங்களுக்குக் கொடுக்கிற ஆலோசனையேதென்றால், நீங்கள் இந்தத் தர்ம காரியத்தைச் செய்வதற்குமாத்திரமல்ல, செய்யவேண்டுமென்று சென்ற வருஷமுதல் மன உற்சாகங்கொள்ளத் துவக்கினவர்களாகையால், இது உங்களுக்குத் தகுதியாயிருக்கும்.

11. ஆகையால் இப்போது இதைச் செய்து நிறைவேற்றுங்கள். இவ்வண்ணமாய்க்கொடுக்கவேண்டுமென்று உங்களுக்கு மன உற்சாகமிருப்பதுபோல உங்களுக்குள்ளவைகளில் எடுத்துக் கொடுத்து, நிறைவேற்றவும் உற்சாகமிருக்கக்கடவது.

12. கொடுக்கும்படி ஒருவனுக்கு நல்ல மனமிருந்தால், அவன் சக்திக்கு மிஞ்சினதல்ல, அவன் சக்திக்குத் தக்கது (கொடுப்பது) அங்கிகரிக்கப்படும்.

13. ஏனெனில் மற்றவர்களுக்குச் சகாயமும் உங்களுக்குக் கஷ்டமும் உண்டாக்கும்படி அல்ல; சரிசமானம் உண்டாயிருக்கும்படியாகவே இதைச் சொல்லுகிறேன்.

14-15. ஆகையால் அதிகமாய்ச் சேர்த்தவனுக்கு மிச்சமானதுமில்லை; கொஞ்சமாய்ச் சேர்த்தவனுக்குக் குறைவானதுமில்லை என்று எழுதியிருக்கிறபடியே இந்தச் சரிசமானம் உண்டாகும்படி அவர்களுடைய செல்வப்பெருக்கம் உங்களுடைய வறுமைக்கு உதவத்தக்கதாக இக்காலத்திலே உங்களுடைய செல்வம் அவர்களுடைய வறுமைக்கு உதவக்கடவது. (யாத். 16-18.)

16. உங்களைப்பற்றித் தீத்துவின் இருதயத்திலும் இப்படிப்பட்ட கவலையுண்டாகச் செய்தருளின சர்வேசுரனுக்குத் தோஸ்திரம்.

17. ஏனெனில் நான் கேட்டுக்கொண்டதை அவர் ஏற்றுக்கொண்டதுமல்லாமல், அவரோ இதைப்பற்றி அதிக ஜாக்கிரதையுள்ளவராயிருந்து தமது விருப்பத்தின்படியே உங்களிடம் வரப் பயணப்பட்டார்.

18. அவரோடுகூட ஒரு சகோதரனையும் அனுப்பியிருக்கிறோம்; இவர் சுவிசேஷத்தினிமித்தம் எல்லாச் சபைகளிலும் புகழ்பெற்றிருக்கிறார்.

19. இதுவுமன்றிக் கர்த்தருக்குத் தோஸ்திரமாகவும் எங்கள் நல்ல மனதிற்கு அத்தாட்சியாகவும் நாங்கள் செய்துவருகிற இந்தத் தர்மகாரியத்திலே இவர் எங்களுடைய பயணத்துக்குத் துணையாகத் திருச்சபையால் நியமிக்கப்பட்டவராகவும் இருக்கிறார். (1. கொ. 16-3.)

20. ஏனெனில் எங்கள் ஊழியத்தால் சேர்க்கப்படுகிற மிகுதியான இந்தத் தர்மத்தைப்பற்றி ஒருவனும் எங்கள்மேல் குற்றஞ்சாட்டாதபடிக்கு நாங்கள் எச்சரிக்கையாயிருந்து,

21. கர்த்தருக்கு முன்பாகமாத்திரமல்ல, மனிதர்களுக்குமுன்பாகவும் நன்மையானவைகளை முன்னிட்டு நடக்கிறோம். (உரோ. 12-17.)

22. மேலும் அநேக காரியங்களில் ஜாக்கிரதையுள்ளவனென்று நாங்கள் பலமுறை கண்டறிந்தவனும், இப்போது உங்கள்மேலுள்ள மிகுந்தநம்பிக்கையினாலே அதிக ஜாக்கிரதையுள்ளவனுமாகிய மற்றொரு சகோதரனையும் அவர்களோடு அனுப்பியிருக்கிறோம்.

23. இவ்விதமாகத் தீத்து என்பவர் எனக்குத் துணைவரும், உங்களுக்காக என்னோடு உடன்வேலையாளுமாயிருக்கிறார். மற்றச் சகோதரர்களோ திருச்சபைகளால் அனுப்பப்பட்டவர்களும், கிறிஸ்துநாதருடைய மகிமையுமாயிருக்கிறார்கள்.

24. ஆகையால் சபைகளின் முன்பாக உங்கள் அன்பையும், உங்களைப் பற்றி நாங்கள்கொண்ட பெருமையையும் அவர்களுக்கு அத்தாட்சியாகக் காண்பியுங்கள்.

## 9-ம். அதிகாரம்.

*தர்மங் கொடுக்கச் சொல்லி அதின் பலன்களை வர்ணித்துக் காட்டுகிறார்.*

1. பரிசுத்தவான்களுக்குச் செய்யப்படுகிற தர்ம உதவியைக் குறித்தோவெனில், நான் உங்களுக்கு அதிகமாய் எழுதுவது அவசியமில்லை.

2. ஏனென்றால் நான் உங்கள் மன உற்சாகத்தை அறிந்திருக்கிறேன். இதினாலே அக்காயா நாட்டிலுள்ளவர்கள் போனவருஷந்தொடங்கி (இந்தத் தர்ம காரியத்துக்கு) ஆயத்தமாயிருக்கிறார்களென்று நான் மக்கேதோனியரிடத்தில் உங்களைக்குறித்துப் பெருமையாகப் பேசுகிறேன். உங்களிடத்திலுள்ள இந்த வேகமானப் பற்றுதல் அநேகரைத் தூண்டிவிட்டது.

3. இப்படியிருக்க, நாங்கள் உங்களைக் குறித்துப் பாராட்டுகிற பெருமை இது காரியத்திலே வீணாய்ப்போகாமல், நான் சொன்னபடிக்கு நீங்கள் தயாராயிருக்கத்தக்கதாக இந்தச் சகோதரர்களை உங்களிடத்தில் அனுப்புகிறேன்.

4. அன்றியும் மக்கேதோனியர் எங்களுடனேகூட வந்து, நீங்கள் தயாரில்லாதிருக்கக் கண்டால், இது காரியத்திலே நீங்கள் வெட்கப்படுவீர்களென்று நான் சொல்லாதபடி நாங்களே வெட்கப்பட வேண்டியதாயிருக்குமே.

5. இதினிமித்தம் உங்களாலே வாக்குத்தத்தம் பண்ணப்பட்டிருக்கிற உங்கள் தானதர்மம் பிசினித்தனமாயல்ல, உதாரத்துவமாய்க் கொடுக்கப்பட்டதாயிருக்கும்படி அதைத் தயாரித்து ஆயத்தஞ்செய்வதற்காகச் சகோதரர் முன்னிதாக உங்களிடத்தில் வரும்படி அவர்களைக் கேட்டுக்கொள்ளுவது அவசியமென்று எண்ணினேன்.

6. பின்னும் நான் சொல்லுகிறதாதாவது: சிறுக விதைக்கிறவன் சிறுக அறுப்பான். பெருக விதைக்கிறவன் பெருக அறுப்பான். (கலாத். 6-9.)

7. ஆகிலும் மனவருத்தத்தோடுமல்ல, கட்டாயத்தினாலுமல்ல, அவனவன் தன் இருதயத்தில் தீர்மானித்தபடியே கொடுக்கக்கடவான். ஏனென்றால் முகமலர்ந்து கொடுக்கிறவனிடத்தில் சர்வேசுரன் பிரியப்படுகிறார். (பிரச. 35-11.)

8. மேலும் நீங்கள் எல்லாவற்றிலும் எப்பொழுதும் உங்களுக்குப் போதுமான யாவற்றையுங் கொண்டிருந்து, எவ்வித நற்கிரியைகளிலும் சம்பூரணமுள்ளவர்களாகும்படி சர்வேசுரன் உங்களிடத்தில் எவ்வித நன்மைகளையும் பெருகச்செய்ய வல்லவராயிருக்கிறார்.

9. இதற்கொத்தவண்ணம்: வாரி இறைத்தான்; தரித்திரர்களுக்குக் கொடுத்தான். அவனுடைய நீதி காலாகாலத்துக்கும் நிலைநிற்கிறது என்று எழுதியிருக்கின்றது. (சங். 111-9.)

10. ஆகையால் விதைக்கிறவனுக்கு விதையைக் கொடுக்கிறவர் உங்களுக்குப் போசிப்பதற்கு அப்பத்தையுங் கொடுத்து, உங்கள் விதையையும்பெருகப்பண்ணி, உங்கள் நீதியின் பலன்களையும் வர்த்திக்கப்பண்ணுவார்.

11. இந்தப்பிரகாரமாய் நீங்கள் சகலத்திலும் சம்பன்னராகி, எங்களாலே சர்வேசுரனுக்குத் தோஸ்திரமுண்டாவதற்கு ஏதுவாகச் சகல நேர்மையான தர்மத்திலும் பெருகி வளருவீர்கள்.

12. ஏனெனில் இந்தத் தர்ம ஊழியத்தின் பணிவிடையானது பரிசுத்தவான்களுடைய குறைகளை நிவர்த்தியாக்குகிறதுமல்லாமல், கர்த்தருக்கு அநேகாநேக தோஸ்திரஞ் செய்யப்படுவதற்கும் பூரண வழியாயிருக்கின்றது.

13. அவர்கள் இந்தத் தர்ம ஊழியத்தின் நன்மையை அநுபவித்து, நீங்கள் கிறீஸ்துநாதருடைய சுவிசேஷத்தின் மட்டில் பிரசித்தமாய்க் காண்பிக்கிற கீழ்ப்படிதலைப்பற்றியும், தங்களுக்கும் மற்றெல்லோருக்கும் நீங்கள் நேர்மையாய்ச் செய்கிற தர்மத்தைப்பற்றியும் சர்வேசுரனை மகிமைப்படுத்தி,

14. உங்களுக்காக வேண்டிக்கொள்வதுந்தவிர, சர்வேசுரன் உங்களுக்கு அளித்த உன்னத வரப்பிரசாதத்தினிமித்தம் உங்கள்மேல் மிகவும் பிரியப்படுவார்கள்.

15. சர்வேசுரன் செய்தருளின வாக்குக்கெட்டாத உபகாரத்துக்காக அவருக்குத் தோஸ்திரமுண்டாகக்கடவது.

## 10-ம். அதிகாரம்.

*சின்னப்பர் தம்மைப் புறக்கணித்த கள்ளப் போதகர்களுடைய ஆங்காரத்தை மறுத்து, தம்முடைய அப்போஸ்தலத்துவத்தின் ஞானவல்லமையை விளக்கிக் காட்டுகிறார்.*

1. உங்கள் நடுவிலிருக்கும்போது தாழ்மையாயும், தூரத்திலிருக்கும்போது உங்கள்மேல் துணிவாயுமிருக்கிற சின்னப்பனாகிய நான் கிறீஸ்துநாதருடைய சாந்தத்தையும், பொறுமையையும் முன்னிட்டு உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறதாவது: (1. கொ. 4-18.)

2. எங்களை மாம்சத்தின்படி நடக்கிறவர்களென்று எண்ணுகிற சிலருக்கு விரோதமாய் நான் கண்டிப்பாயிருக்கிறதாக எண்ணப்படுகிறேனே; அந்தக் கண்டிப்பை நான் உங்களிடத்தில் வரும்போது பிரயோகிக்காதபடி நீங்கள் நடந்துகொள்ள உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

3. ஏனெனில் நாங்கள் மாம்சத்தில் நடக்கிறவர்களாயிருந்தும், மாம்சத்துக்கொத்தபடி போராடுகிறவர்களல்ல.

4. எங்களுடைய போராயுதங்கள் மாம்சத்துக்குரியவைகளல்ல: கொத்தளங்களை நிர்மூலமாக்குவதற்குத் தேவசமுகத்தில் வல்லமையுள்ளதாயிருக்கின்றது. (எபே. 6-13.)

5. அவைகளைக்கொண்டு நாங்கள் யுக்திகளையும், சர்வேசுரனை அறியும் அறிவுக்கு விரோதமாய் எழும்புகிற எவ்விதப் பெருமையையும் நிர்மூலமாக்கி, எல்லா அறிவையும் கிறீஸ்துநாதருக்குக் கீழ்ப்படியச் சிறைப்படுத்துகிறோம்.

6. அன்றியும் உங்கள் கீழ்ப்படிதல் நிறைவேறியபின், எல்லாக் கீழ்ப்படியாமைக்கும் நீதியுள்ள ஆக்கினையிடவும் ஆயத்தமாயிருக்கிறோம்.

7. வெளிப்பார்வைக்குத் தோன்றுகிறபடி பாருங்கள். ஒருவன் தன்னைக் கிறீஸ்துவுக்குள்ளானவன் என்று நம்புவானாகில், தான் கிறீஸ்துவுக்குள்ளாயிருக்கிறதுபோல, நாங்களும் கிறீஸ்துவுக்குள்ளாயிருக்கிறோம் என்று தனக்குள்ளே மறுபடி சிந்தித்துக்கொள்ளக்கடவான்.

8. ஏனெனில் உங்களை இடித்துத் தள்ளுவதற்கல்ல; உங்களைக் கட்டியெழுப்புவதற்கு ஆண்டவர் எங்களுக்குத் தந்தருளின அதிகாரத்தைப் பற்றி நான் சற்றே அதிகமாய் மேன்மைபாராட்டினாலும், அதற்காக நான் வெட்கப்படமாட்டேன்.

9. நான் நிருபங்களால் உங்களைப் பயமுறுத்துகிறதாக நீங்கள் நினைக்க வேண்டுவதில்லை.

10. சிலரோ: அவனுடைய நிருபங்கள் பாரயோசனையும், பலமுமுள்ளவைகள், சரீரத்தின் தோற்றமோ பலவீனமானதென்றும், வாக்கு புறக்கணிப்புக்குரியதென்றும் சொல்லுகிறார்களே.

11. அப்படிச் சொல்லுகிறவன், நாங்கள் தூரத்திலிருக்கும்போது நிருபங்களின்வழியாய் வாக்கியத்தில் எப்படியிருக்கிறோமோ, அப்படியே முகதாவிலிருக்கும்போது கிரியையிலும் இருப்போமென்று நினைத்துக்கொள்ளக்கடவான்.

12. அப்படியிருந்தும், தங்களைத் தாங்களே மெச்சிக்கொள்ளுகிற சிலருக்கு எங்களை இணையாக்கவும், ஒப்பிடவும் துணியமாட்டோம். ஆனால் எங்களைக்கொண்டே எங்களை அளந்து, எங்களோடு எங்களை ஒப்பிட்டுக்கொள்ளுகிறோம்.

13. அப்படியும் நாங்கள் அளவுக்கு மிஞ்சி மேன்மைபாராட்டுகிறதில்லை. உங்களிடம் வரைக்கும் வந்து சேரத்தக்கதாகச் சர்வேசுரன் எங்களுக்கு அளந்து பகிர்ந்த அளவுப்பிரமாணத்தின்படியே மேன்மைபாராட்டுகிறோம். (எபே. 4-7.)

14. உங்களிடத்தில் வந்து சேராதவர்களைப்போல நாங்கள் அளவுக்கு மிஞ்சிப்போகிறதில்லை. நாங்கள் கிறிஸ்துவின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து உங்களிடம் வரைக்கும் வந்தோமே.

15. மற்றவர்களுடைய வேலைகளினிமித்தம் எங்கள் அளவைக் கடந்து மேன்மை பாராட்டமாட்டோம். ஆனால் உங்கள் விசுவாசம் விர்த்தியாகும்போது, உங்களால் எங்கள் எல்லை மிகவும் பெருகி விர்த்தியடைவோமென்றும்,

16. இன்னும் மற்றவர்களுடைய எல்லைகளுக்குள்ளே அவர்களால் ஆயத்தம் செய்யப்பட்டவைகளினிமித்தம் நாங்கள் பெருமை பாராட்டாமல், உங்களுக்கு அப்பாலிருக்கும் இடங்களில் சுவிசேஷத்தைப் பிரசங்கிப்போமென்றும் நம்பியிருக்கிறோம். (உரோ. 15-18.)

17. எப்படியிருந்தும், மேன்மை பாராட்டுகிறவன் கர்த்தரிடத்திலே மேன்மைபாராட்டுவானாக. (எரே. 9-23; 1 கொ. 1-31.)

18. ஏனெனில் தன்னைத்தானே புகழுகிறவன் புகழ்ச்சிக்குரியவனல்ல. சர்வேசுரனாலே புகழப்படுகிறவனே புகழ்ச்சிக்குரியவன்.

## 11-ம். அதிகாரம்.

*சின்னப்பர் தாம் கொரிந்தியரிடத்தில் ஒன்றும் பெற்றுக்கொள்ளாமல் சுவிசேஷத்தைப் பிரசங்கித்த முகாந்தரத்தையும் அவர்களுக்குள் தாம் பட்டபாடுகளையும் வெளியாக்குகிறார்.*

1. என் புத்தியீனத்தைச் சற்றே சகித்துக்கொள்வீர்களேயாகில், நலமாயிருக்குமே. அப்படியே என்னையும் சகித்துக்கொள்ளுங்கள்.

2. நான் உங்களுக்காகத் தேவ வைராக்கியத்தோடு வைராக்கியமாயிருக்கிறேன். ஏனெனில் நான் உங்களைக் கற்புள்ள கன்னிகையாகக் கிறீஸ்து என்னும் ஏக மணவாளனுக்கு ஒப்புக்கொடுக்க நியமித்திருக்கிறேன்.

3. ஆகிலும், சர்ப்பமானது தன்னுடைய உபாய தந்திரத்தால் ஏவாளை வஞ்சித்துக் கெடுத்தது எவ்விதமோ, அவ்விதமே உங்கள் சிந்தைகளுங்கெட்டுக் கிறீஸ்துநாதர்மட்டிலுள்ள நேர்மையான குணத்தினின்று தவறுமோவென்று அஞ்சுகிறேன். (ஆதி. 3-4.)

4. ஏனெனில் ஒருவன் உங்களிடத்திலே வந்து, நாங்கள் பிரசங்கியாத வேறொரு கிறிஸ்துவை உங்களுக்குப் பிரசங்கித்தானாகில், அல்லது நீங்கள் பெற்றுக்கொள்ளாத வேறொரு இஸ்பிரீத்துவை, அல்லது நீங்கள் கைக்கொள்ளாத வேறொரு சுவிசேஷத்தை (அவனால்) பெற்றுக்கொள்ளுகிறதாயிருந்தால், சரிதானென்று சகித்துக்கொள்வீர்களாக்கும். (கலாத். 1-6.)

5. ஆனால் பெரிய அப்போஸ்தலர்களிலும் நான் யாதொன்றிலும் அற்பமானவன் அல்லவென்று எண்ணுகிறேன்.

6. ஏனெனில் நான் வாக்கிலே தீரனல்லாதிருந்தாலும், அறிவில் அப்படியல்லவே. எல்லா விஷயத்திலும் உங்களுக்குள்ளே வெளிப்பட்டவர்களாயிருக்கிறோம்.

7. நீங்கள் உயர்த்தப்படும்படி நான் என்னையே தாழ்த்திக்கொண்டு, சர்வேசுரனுடைய சுவிசேஷத்தை உங்களுக்கு இலவசமாய்ப் பிரசங்கித்ததினாலே குற்றஞ்செய்தேனோ?

8. உங்களுக்கு ஊழியஞ்செய்யும்படிக்கு மற்றச் சபைகளிடத்திலே செலவுவாங்கி, அவைகளை வறுமையாக்கினேன்.

9. நான் உங்களிடத்திலிருந்து வறுமைப்பட்டபோதும் (உங்களில்) ஒருவருக்கும் நான் பாரமாயிருந்ததில்லை. மக்கேதோனியாவிலிருந்துவந்த சகோதரர்கள் எனக்குக் குறைவுபட்டவைகளை நிவர்த்திசெய்தார்கள். அப்படியே எவ்விதத்திலும் உங்களுக்குப் பாரமாயிராதபடி எச்சரிக்கையாயிருந்தேன். இன்னமும் எச்சரிக்கையாயிருப்பேன்.

10. அக்காயாநாட்டின் திசைகளிலெங்கும் இந்தப் புகழ்ச்சி என்னைவிட்டு அகலாதென்று என்னிலுள்ள கிறீஸ்துநாதருடைய சத்தியத்தை முன்னிட்டுச் சொல்லுகிறேன்.

11. என்னத்தினாலே இப்படிச்சொல்லுகிறேன்? நான் உங்களை நேசியாததினாலேயோ? சுவாமிக்குத்தெரியும்.

12. அன்றியும் எங்களைப்போலே காணப்படவும், அதிலே தங்களுடைய மகிமையைப்பாராட்டவும் சமயந்தேடுகிறவர்களுக்குச் சமயம் வாய்க்காதபடி தடுப்பதற்காக நான் இப்போது என்னசெய்கிறேனோ, அதையே இனிமேலும் செய்துவருவேன்.

13. ஏனெனில் அப்படிக்கொத்தவர்கள் கள்ள அப்போஸ்தலர்கள், கபடமுள்ள வேலையாட்கள், கிறீஸ்துநாதருடைய அப்போஸ்தலர்களாக வேஷம் போடுகிறவர்கள்.

14. அதுவும் அதிசயமல்ல. ஏனெனில் சாத்தான் முதலாய்ப் பிரகாசத்தின் தூதனுக வேஷம்போட்டுக்கொள்ளுகிறானே!

15. ஆகையால் அவனுடைய ஊழியர் நீதியின் ஊழியராக வேஷந்தரித்துக்கொண்டால் அது அதிசயமல்லவே. அவர்களுடைய முடிவு அவர்களுடைய செய்கைகளுக்குத் தக்கதாயிருக்கும்.

16. நான் மறுபடியும் சொல்லுகிறேன்: ஒருவனும் என்னைப் புத்தியீனனென்று எண்ணவேண்டாம். அப்படி எண்ணினால், கொஞ்சமாகிலும் நான் மேன்மைபாராட்டும்படிக்குப் புத்தியீனனைப்போலேயாகிலும் என்னைச் சகித்துக்கொள்ளுங்கள்.

17. இந்த மேன்மை பாராட்டுகிற விஷயத்திலே நான் பேசுகிறபோது, சர்வேசுரனுக்கேற்றபடி பேசாமல், பைத்தியம்பிடித்தவனைப்போல் பேசுகிறேன்.

18. அநேகர் மாம்சத்துக்கொத்தபடி மேன்மைபாராட்டுகிறார்களென்றால், நானும் மேன்மைபாராட்டுவேன்.

19. நீங்கள் புத்திமான்களாயிருந்தும், புத்தியில்லாதவர்களைச் சந்தோஷமாய்ச் சகித்துக்கொள்ளுகிறீர்களே.

20. ஒருவன் உங்களை அடிமையாக்கினாலும், ஒருவன் உங்களை விழுங்கினாலும், ஒருவன் பறித்தாலும், ஒருவன் தன்னை உயர்த்தினாலும், ஒருவன் உங்களை முகத்திலே அறைந்தாலும் சகித்துக்கொண்டுவருகிறீர்கள்.

21. இந்த விஷயத்திலே நாங்கள் பலவீனராயிருந்தாற்போல எங்களுக்குக் கனவீனமாக இதைச்சொல்லுகிறேன். ஒருவன் எதிலே மகிமைபாராட்டத் துணிகிறானோ, அதிலே நானும் துணிவுள்ளவனாயிருக்கிறேன் என்று புத்தியீனனைப்போல் சொல்லுகிறேன்.

22. அவர்கள் எபிரேயரோ, நானும் எபிரேயன். அவர்கள் இஸ்ரயேலரோ, நானும் இஸ்ரயேலன். அவர்கள் அபிரகாமின் சந்ததியாரோ, நானும் அபிரகாமின் சந்ததியான்.

23. அவர்கள் கிறிஸ்துநாதருடைய ஊழியரோ, நானும் பைத்தியனைப்போல் பேசவேண்டுமானால், அவர்களிலும் மேலாக (கிறிஸ்துநாதருடைய ஊழியன்). வேலைகளில் மிச்சமாயும், காவல்களில் மிகுதியாயும், அடிகளில் மட்டுக்குமிஞ்சியும், மரண ஆபத்துகளில் அடிக்கடியும் உட்பட்டவன்.

24. யூதர்களால் ஒன்று குறைய நாற்பது அடியாக ஐந்துதரம் அடிபட்டேன். (உபாக. 25-3.)

25. மூன்றுதரம் பிரம்புகளால் அடிபட்டேன். ஒருதரம் கல்லால் எறியப்பட்டேன். மூன்றுதரம் கப்பல் சேதத்தில் அகப்பட்டேன். ஒரு இரவும் ஒரு பகலும் ஆழ்ந்தகடலில் போக்கினேன். (அப். 16-22; 14-18; 27-41.)

26. அடிக்கடி பயணஞ்செய்ததிலே ஆறுகளின் ஆபத்துகளிலும், கள்ளரின் ஆபத்துகளிலும், என் ஜாதி ஜனத்தால் வந்த ஆபத்துகளிலும், அன்னிய ஜனங்களால் வந்த ஆபத்துகளிலும், பட்டணங்களில் நேரிட்ட ஆபத்துகளிலும், வனாந்தரத்தில் உண்டான ஆபத்துகளிலும், சமுத்திர ஆபத்துகளிலும், கள்ளச் சகோதரர்களால் வந்த ஆபத்துகளிலும்,

27. பிரயாசைகளிலும், துன்பங்களிலும், அநேகமுறை கண்விழிப்பிலும், பசி தாகத்திலும், அநேகமுறை உபவாசங்களிலும், குளிரிலும், நிர்வாணத்திலும் இருந்தேன்.

28. புறத்திப்பட்ட இவைகளையுமல்லாமல், எல்லாச் சபைகளையும்பற்றிய கவலையானது என்னை அநுதினமும் பீடிக்கின்றது.

29. ஒருவன் பலவீனனானால், நானும் பலவீனனாகிறதில்லையோ? ஒருவன் இடறினால், என் மனம் எரிகிறதில்லையோ?

30. நான் மேன்மை பாராட்டவேண்டியதானால், என் பலவீனத்திற்கடுத்தவைகளைப்பற்றி மேன்மை பாராட்டுவேன்.

31. நான் பொய் சொல்லுகிறதில்லையென்று என்றென்றைக்கும் ஸ்தோத்தரிக்கப்பட்டவராகிய கடவுளும், நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய பிதாவுமாயிருக்கிறவர் அறிவார்.

32. தமாஸ்கு நகரத்தில் அரேத்தா இராஜாவின் சேனைத்தலைவன் தமாஸ்குப் பட்டணமெங்கும் காவல்களை வைத்து, என்னைப்பிடிக்கப் பார்த்தான். (அப். 9-24.)

33. அப்போது நான் ஒரு கூடையிலே வைக்கப்பட்டு, ஜன்னலிலிருந்து மதில் வழியாய் இறக்கிவிடப்பட்டு, இவ்விதமாய் அவன் கைக்குத் தப்பினேன்.

---

21. முன் சொல்லிய நிஷ்டூரங்களையெல்லாம் உங்களிடத்தில் நிறைவேற்றிய கள்ளப் போதகர்களை நீங்கள் மேன்மைபாராட்டி அவைகளைச்செய்யாத என்னைத் தாழ்வாய் எண்ணிக்கொண்டிருக்கிறீர்கள். அப்படிச்செய்கிறது உங்களுக்கு வெட்கக்கேடல்லவா என்றர்த்தமாம்.

## 12-ம். அதிகாரம்.

*சின்னப்பர் சர்வேசுரனிடத்தில் தாம் அடைந்து கொண்ட உன்னத வரங்களையும் காட்சிகளையும் வெளிப்படுத்துகிறார்.*

1. மேன்மை பாராட்டுவது தகுதியல்ல என்றாலும், பாராட்ட வேண்டுமானால், ஆண்டவர் அருளின தரிசனைகளையும் வெளிப்படுத்தல்களையும் இப்போது சொல்லிக்காட்டுவேன்.

2. கிறீஸ்துவினிடமான ஒரு மனுஷனை நான் அறிவேன். அவன் பதினாலு வருஷத்துக்குமுந்தி மூன்றாம் வானமண்டலமட்டும் உயர்த்தப்பட்டானென்று அறிந்திருக்கிறேன். அது சரீரத்தோடேயோ சரீரத்தை விட்டோ எனக்குத்தெரியாது; சர்வேசுரனுக்குத் தெரியும். (அப். 9-3, 22-17.)

3-4. அப்படிப்பட்ட மனுஷன் பரகதிக்குக் கொண்டுபோகப்பட்டானென்றும், அங்கே அவன் மனுஷனாலே பேசக்கூடாததும், வாக்குக்கெட்டாததுமான ரகசிய வாக்குகளைக் கேட்டானென்றும் அறிவேன்.

5. அப்படிப்பட்ட மனிதனைப்பற்றி நான் மேன்மைபாராட்டுவேன். என்னைப்பற்றியோ என் பலவீனங்களைப் பற்றியல்லாமல், மற்றொரு காரியத்தையும் பற்றி நான் மேன்மை பாராட்ட மாட்டேன்.

6. ஆகிலும் நான் மேன்மைபாராட்ட விரும்பினாலும், உண்மையைச்சொல்லுவேனாகையால் புத்தியீனனாக மாட்டேன். ஆனாலும் ஒருவனும் என்னிடத்தில் காண்கிறதற்கும், என் வழியாய்க் கேட்கிறதற்கும் மேலாக என்னை எண்ணாதபடிக்கு இப்படிப்பட்ட பேச்சுகளை நிறுத்துகிறேன்.

7. இப்படிப்பட்ட காட்சிகளின் மகத்துவத்தால் என்னை நான் உயர்த்தாதபடிக்கு என்னைக்கொட்டும பேய்த்தூதனாகிய ஒரு கொடுக்கு என் மாம்சத்துக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

8. ஆகையால் இது என்னைவிட்டு அகலும்படிக்கு மும்முறை ஆண்டவரை நோக்கி மன்றாடினேன்.

---

2. இந்த வசனத்திலே சொல்லப்பட்ட மனுஷன் அர்ச். சின்னப்பர் தான். ஆனால் தமக்கு மகிமையானதைத் தாமே சொல்லிக்காட்ட மனதில்லாததினாலும், இங்கே அது அவசரமில்லாததினாலும் அந்த மனுஷன் தான்தானென்று சொல்லாதிருக்கிறார்.

3-4. இந்த வசனங்களில் சொல்லப்பட்ட பரலோகம் அல்லது வானமண்டலம் மூன்றுண்டு. 1-வது மேகங்களும் பறவைகளுஞ் சஞ்சரிக்கிறதும் பூமிக்குச் சமீபமானதுமாகிய மண்டலமாம்.

2-வது சூரிய சந்திர நட்சத்திரங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற மேல் மண்டலமாம்.

3-வது சம்மனசுகளுக்கும் அர்ச்சியசிஷ்டவர்களுக்குஞ் சர்வேசுரன் தம்முடைய தரிசனையைக் கொடுக்கிற உந்நத மண்டலமாம். அந்த உந்நத பரலோகம் வரைக்கும் தாம் உயர்த்தப்பட்டதாக அர்ச். சின்னப்பர் சொல்லுகிறார்.

7. இதிலே சொல்லப்பட்ட கொடுக்கென்பது: பசாசின் சோதனையால் அவர் சரீரத்திலுண்டான மீறுதலென்னப்படும். அதுவே அவருடைய முகத்தில் அறைகிறதுபோல் அவருக்கு வெட்கம் வருவிக்கிற சோதனையாயிருந்தது. அதை அவர் எத்தனை அருவருத்தாலும், தள்ளினாலும் நீங்காதிருக்கிறதைக்கண்டு, அதை நீக்கித்தள்ள ஆண்டவரைப்பார்த்து மிகுந்த அழுகையோடே மூன்று விசைப் பிரார்த்தித்துக்கொண்டார். ஆகிலும் அதினாலே அவருடைய புண்ணிய பேறுபலன் அதிகரிக்க வழியானதினாலே, சர்வேசுரன் அந்தச்சோதனையை நீக்காமல் அந்தப் போராட்டத்தில் அவர் எப்போதும் ஜெயங்கொள்ளும்படி தமது வரப்பிரசாதத்தை அவருக்கு அதிகமாய்க் கொடுத்துவந்தார் என்க.

9. அதற்கு அவர் மறுமொழியாக: என் வரப்பிரசாதமே உனக்குப் போதும். ஏனெனில் பலவீனத்திலே என் வல்லமை பூரணமாய் விளங்குகின்றது என்றார். ஆகையால் கிறீஸ்துவின் வல்லமை என்னிடத்திலே வாசம்பண்ணும்படிக்கு என் பலவீனங்களிலே சந்தோஷமாய் மேன்மைபாராட்டுவேன்.

10. இதினிமித்தம் எனக்கு உண்டாகும் பலவீனங்களிலும், அவமானங்களிலும், இக்கட்டுகளிலும், கலாபங்களிலும், நெருக்கிடைகளிலும், கிறீஸ்துவைப் பற்றி நான் பிரியப்படுகிறேன். ஏனெனில் எப்போது பலவீனப்படுகிறேனோ, அப்போது வல்லவனாயிருக்கிறேன்.

11. புத்தியீனனானேன். நீங்களே இதற்கு என்னைப் பலவந்தப்படுத்தினீர்கள். எல்லாத்துக்கும் மேலாக அப்போஸ்தலர்களாயிருக்கப்பட்டவர்களுக்கு நான் எவ்வளவும் தாழ்ந்தவனல்ல என்பதினால் உங்களால் நான் புகழப்படவேண்டியிருந்ததே.

12. என் அப்போஸ்தலத்துவத்தின் அடையாளங்கள் எவ்வித பொறுமையிலும், அதிசய அற்புதங்களிலும், வல்லமைகளிலும் உங்களுக்குள்ளே காணப்பட்டதே. (உரோ. 15-18.)

13. மற்றச் சபைகளைவிட உங்களுக்குண்டாயிருந்த குறை என்ன? நான் உங்களை வருத்தப்படுத்தாதிருந்ததே குறையன்றி வேறில்லையே. இந்த அநியாயத்தை எனக்கு மன்னித்துக்கொள்ளுங்கள்.

14. இதோ, மூன்றாந்தரம் உங்களிடத்திற்கு வர ஆயத்தமாயிருக்கிறேன். உங்களுக்குப் பாரமாய் இருக்கமாட்டேன். உங்கள் பொருட்களையல்ல, உங்களைத்தானே தேடுகிறேன். ஏனெனில் பிள்ளைகள் பெற்றோருக்கல்ல, பெற்றோர் பிள்ளைகளுக்குப் பொக்கிஷம் சேர்த்துவைக்கவேண்டும்.

15. நான் உங்களை அதிகமாய் நேசித்துவர, நீங்கள் என்னைக் குறைவாய் நேசித்தாலும், உங்கள் ஆத்துமங்களுக்காக மிகவுஞ் சந்தோஷமாய் நான் என்னைச் செலவழிப்பேன்; நானே செலவழிக்கவும்படுவேன். (உரோ. 9-3.)

16. அப்படியே ஆகட்டும். நான் உங்களுக்குப் பாரமாயிருக்கவில்லை. ஆனால் நான் யூகமுள்ளவனாயிருந்து, உங்களை உபாயமாய்ப் பிடித்தேனாம்.

17. நான் உங்களிடம் அனுப்பினவர்களில் யாரைக்கொண்டாவது உங்களிடம் ஏதேனும் வஞ்சித்து வாங்கினதுண்டோ?

18. தீத்துவை உங்களிடத்தில் வரும்படி மன்றாடி, அவருடனேகூட வேறொரு சகோதரனையும் அனுப்பினேன். தீத்து என்பவர் உங்களிடத்தில் ஏதேனும் வஞ்சித்து வாங்கினாரோ? அவரும் நானும் ஒரேமனதாயிருந்து, ஒரே தடமாய் நடக்கிறதில்லையா?

19. இன்னமும் உங்களிடத்தில் போக்குச் சொல்லுகிறோமென்று நினைக்கிறீர்களோ? மிகவும் பிரியமானவர்களே, உங்கள் நல்விர்த்திக்காக இவையெல்லாம் கிறீஸ்துநாதரில் சர்வேசுரனுடைய சமுகத்திலே சொல்லுகிறோம்.

20. ஏனெனில், நான் வரும்போது ஒருவேளை நான் விரும்புகிற தன்மையாய் நீங்களிருக்கிறதில்லையென்று காண்பேனோவென்றும் நானும் நீங்கள் விரும்பாத விதமாய் உங்களுக்குக் காணப்படுவேனோவென்றும், ஒருவேளை வாக்குவாதம், போராட்டம், விரோதம், பிரிவினை, புறணிகள், புறங்கூறல், ஆங்காரம், கலகம் உங்களுக்குள்ளே உண்டாயிருக்குமோவென்றும் பயப்படுகிறேன்.

11. கிரேக்கப் பிரதியில் மேன்மை பாராட்டிப் புத்தியீனனானேனென்று சொல்லியிருக்கிறது.

21. இன்னமும் நான் வரும்போது உங்கள் நடுவில் சர்வேசுரன் என்னைத் தாழ்த்துவாரோவென்றும், முன் பாவிகளாயிருந்தவர்களுக்குள்ளே அநேகர் தாங்கள் கட்டிக்கொண்ட அசுத்தத்துக்கும், வேசித்தனத்துக்கும், காமவிகாரத்துக்கும் விலகி, மனந்திரும்பாமலிருப்பதைப்பற்றி நான் துக்கித்து அழவேண்டியிருக்குமோவென்றும் பயப்படுகிறேன்.

## 13-ம். அதிகாரம்.

*பாவத்தைச் செய்தவர்கள் தவஞ்செய்யும்படியாகச் சின்னப்பர் கண்டித்துப் புத்தி சொல்லுகிறார்.*

1. இதோ, மூன்றாந்தரம் உங்களிடத்திற்கு வருகிறேன். சகல காரியங்களும் இரண்டு மூன்று சாட்சிகளின் வாக்கினால் நிலைவரமாகும். (உபா. 19-15; மத். 18-16.)

2. முந்தியும் சொல்லியிருக்கிறேன்; இப்பொழுதும் தூரமாயிருந்தும், உங்கள் நடுவிலிருந்தாற்போல முன் குற்றஞ்செய்தவர்களுக்கும் மற்ற அனைவருக்கும் மறுபடியும் சொல்லுகிறேன்.

3. என் உள்ளத்தில் பேசுகிற கிறீஸ்துநாதனைப் பரீட்சைபண்ணக் கருத்தாயிருக்கிறீர்களோ? அவர் உங்கள்மட்டில் பலவீனரல்ல, உங்கள்மட்டில் வல்லவராகவேயிருக்கிறார்.

4. அதெப்படியென்றால்: அவர் பலவீனராகச் சிலுவையில் அறையப்பட்டிருந்தும், சர்வேசுரனுடைய வல்லபத்தைக்கொண்டு பிழைத்திருக்கிறார். அப்படியே நாங்களும் அவரில் பலவீனராயிருந்தும், அவருடனேகூட சர்வேசுரனுடைய வல்லபத்தைக்கொண்டு உங்களுக்காகப் பிழைத்திருப்போம். (பிலி. 2-7.)

5. நீங்கள் விசுவாசத்தில் நிற்கிறீர்களோவென்று நீங்களே உங்களைச் சோதித்தறியுங்கள். நீங்களே உங்களைப் பரீட்சித்துக்கொள்ளுங்கள். ஒருவேளை நீங்கள் தள்ளுண்டவர்களாயிருந்தாலொழிய யேசுக்கிறீஸ்துநாதர் உங்களுக்குள் இருக்கிறாரென்று உங்களையே நீங்கள் அறிந்துகொள்ள மாட்டீர்களோ?

6. நாங்கள் தள்ளுண்டவர்களல்லவென்று நீங்கள் அறிந்துகொள்வீர்களென்று நம்புகிறேன்.

7. நீங்கள் யாதொரு தின்மையும் செய்யாதபடிக்குச் சர்வேசுரனை வேண்டிக்கொள்ளுகிறோம். அதுவும் நாங்கள் அங்கீகரிக்கப்பட்டவர்களென்று காணப்படும்படியாக அல்ல, நாங்கள் தள்ளுண்டவர்கள் போலாயினும் நன்மையானதை நீங்கள் செய்யவேண்டுமென்றே விண்ணப்பம் பண்ணுகிறோம்.

8. சத்தியத்திற்கு ஒத்தபடியல்லாது சத்தியத்திற்கு விரோதமாய் நாங்கள் ஒன்றும் செய்யக்கூடாதவர்களாயிருக்கிறோம்.

9. நாங்கள் பலவீனரும், நீங்கள் பலமுள்ளவர்களுமாய் இருக்கிறதைப்பற்றிச் சந்தோஷப்படுகிறோம். அப்படியே நீங்கள் முற்றுமுடிய நிற்கும்படி வேண்டிக்கொள்ளுகிறோம்.

10. இடிக்கிறதற்கல்ல, கட்டுகிறதற்கே ஆண்டவர் எனக்கு அருளின அதிகாரத்தின்படியே நான் வரும்போது, அதிகக் கண்டனை பண்ணாதபடிக்குத் தூரத்திலிருந்து இவைகளை எழுதுகிறேன்.

11. மற்றப்படி சகோதரரே, சந்தோஷமாயிருங்கள், உத்தமராயிருங்கள், தேறுதலடையுங்கள், ஒரே சிந்தனையாயிருங்கள், சமாதானமாயிருங்கள். அப்போது சமாதானத்துக்கும் அன்புக்கும் கர்த்தாவாகிய சர்வேசுரன் உங்களோடே இருப்பார்.

12. பரிசுத்த முத்தமிட்டு ஒருவரு
க்கொருவர் மங்களஞ்சொல்லிக்கொ
ள்ளுங்கள். அர்ச்சிக்கப்பட்டவர்கள்
யாவரும் உங்களுக்கு மங்களஞ்சொல்
லுகிறார்கள்.

13. நம்முடைய ஆண்டவராகிய யேசு
க்கிறீஸ்துநாதருடைய இஷ்டப்பிரசாத
மும் தேவசிநேகமும் இஸ்பிரீத்துசாந்து
வின் ஐக்கியமும் உங்கள் அனைவரோ
டுங்கூட இருக்கக்கடவது. ஆமென்.



# பாயிரம்.

---

கலாத்திய தேசமானது சின்ன ஆசியாவின் வடபுறத்திலிருந்த தேசமாம். அதிலே அர்ச். சின்னப்பர் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, புறஜாதியாரில் அநேகருக்கு ஞானஸ்நானங்கொடுத்து, அநேக சபைகளை ஏற்படுத்தியிருந்தார். அந்தச் சபையார்கள் மனந்திரும்பின துவக்கத்திலே வெகு பத்தி சுறுசுறுப்புள்ளவர்களாயிருந்து, வேதத்தைப்பற்றி அநேக துன்பதுரிதங்களை மிகுந்த தைரியத்தோடே பட்டநுபவித்தார்கள்.

ஆனால் அர்ச். சின்னப்பர் அவர்களைவிட்டு அப்பாலே போனபின், முன் யூதர்களாயிருந்து மனந்திரும்பின சிலர் அவர்களிடத்திலே நுழைந்து, சுவிசேஷத்தோடே கூடப் பழைய ஏற்பாட்டில் கற்பிக்கப்பட்ட விருத்தசேதனமுதலான சடங்குகளையும் அநுசரிக்கவேண்டும் என்றுசொல்லி, அவர்களை மிகவும் கலக்கினதுந்தவிர, அவர்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்த அர்ச். சின்னப்பர் அப்போஸ்தலர்களுடைய சீஷனேயன்றி அப்போஸ்தலரல்ல என்றும், அப்போஸ்தலர்கள் போதிக்கிறபடி அவர் போதிக்கிறதில்லை என்றும், பலவிதமாய் அவர் பேரில் குறைபேசினதினாலே அச்சபையார் அந்தக் கள்ளப்போதகர்களுடைய பேச்சை நம்பி, விருத்தசேதன முதலான பழைய ஏற்பாட்டின் சடங்குகளை அநுசரிக்கத் துவக்கியிருந்தார்கள்.

அர்ச். சின்னப்பர் இவைகளையெல்லாம் கேள்விப்பட்டு, அவர்களை மறுபடியுஞ் சுவிசேஷத்தின் நன்னெறியிலே திருப்பத்தக்கதாகக் கர்த்தர் அவதாரத்துக்குப்பின் சுமார் 55-ம். வருஷத்தில் எபேசு நகரத்திலிருந்து இந்த நிருபத்தை எழுதி, அந்தக் கள்ளப்போதகர்களுடைய பொய்ப் போதகங்களை மிகுந்த திறமையோடு மறுத்து, தாம் மற்ற அப்போஸ்தலர்களிலும் அற்பமல்லவென்று ஒப்பிக்கிறார். பின்னும் பழைய ஏற்பாட்டின் சடங்குகள் ஈடேற்றத்துக்கு அவசியமும், பிரயோசனமும் உள்ளவைகளல்லவென்று பற்பல வேத உதாரணங்களால் ஒப்பித்து, நல்லொழுக்கத்துக்கடுத்த சில புத்திமதிகளையுஞ்சொல்லி நிருபத்தை முடிக்கிறார். இந்த நிருபம் உரோமாபுரியாருக்கு எழுதிய நிருபத்துக்கு ஒப்பாகவும், அதன் சுருக்கம்போலவும் இருக்கிறது.



# அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர்

## கலாத்தியருக்கு

# எழுதிய நிருபம்.

### முதல் அதிகாரம்.

*கலாத்தியர் நூதனமாய்வந்த பொய்ப்போதகர்களுக்குக் காதுகொடுத்ததைப்பற்றி அவர்களைக் கண்டிக்கிறார்.*

1. மனிதர்களாலுமல்ல, யாதொரு மனிதன் வழியாயுமல்ல, யேசுக்கிறீஸ்துநாதராலும் அவரை மரித்தோரினின்று உயிர்ப்பித்த பிதாவாகிய சர்வேசுரனாலும் அப்போஸ்தலனாயிருக்கிற சின்னப்பனும்,

2. என்னுடனேகூட இருக்கிற சகல சகோதரர்களும் கலாத்திய நாட்டிலுள்ள சபையார்களுக்கு எழுதுவது:

3. பிதாவாகிய சர்வேசுரனாலும் நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவினாலும் உங்களுக்கு இஷ்டப்பிரசாதமும் சமாதானமும் உண்டாவதாக.

4. அவர் சர்வேசுரனும் நம்முடைய பிதாவுமானவருடைய சித்தத்தின்படிக்குப் பொல்லாத இப்பிரபஞ்சத்தினின்று நம்மை மீட்டுக்கொள்ளும்படி தம்மைத்தாமே நம்முடைய பாவங்களுக்காக ஒப்புக்கொடுத்தார்.

5. அவருக்கு அநவரதகாலமும் தோஸ்திரமுண்டாகக்கடவது. ஆமென்.

6. உங்களைக் கிறீஸ்துநாதருடைய இஷ்டப்பிரசாதத்திற்கு அழைத்தவரை நீங்கள் இவ்வளவு சீக்கிரமாய் விட்டு, வேறொரு சுவிசேஷத்துக்கு மாறிப்போகிறதைப்பற்றி நான் ஆச்சரியப்படுகிறேன்.

7. ஆகிலும் உங்களைக் கலகப்படுத்திக் கிறீஸ்துவினுடைய சுவிசேஷத்தைப் புரட்ட மனதாயிருக்கிற சிலர் உண்டேயொழிய, வேறே சுவிசேஷமென்பதில்லை.

---

1. *கலாத்தியரை மயக்குவித்த கள்ளப்போதகர்கள், அர்ச். சின்னப்பர் அப்போஸ்தலருடைய சீஷனல்லாதே மெய்யான அப்போஸ்தலன் அல்லவென்றும், அப்போஸ்தலர்கள் போதிப்பதைப்போல சரியாய்ப்போதிக்கிறதில்லையென்றும் [illegible]க்குறித்து அவதூறாய்ப்பேசியிருந்தபடியால், அர்ச். சின்னப்பர் இந்த அவதூறான பேச்சை மறுத்து, தாம் யேசுநாதரால் அப்போஸ்தலனாகத் தெரிந்துகொள்ளப்பட்டவரென்றும், அவரிடத்திலேயே சகலமுங் கற்றுக்கொண்டு, மற்ற அப்போஸ்தலர்கள் போதிக்கிறதற்கு யாதொரு விபரீதமுமின்றிப் போதித்து வருவதாகவும் இந்த வசனந்தொடங்கிப் பற்பல இடங்களில் போதித்து வருகிறார்.*

6. **வேறே சுவிசேஷம்.** *யூத ஆசாரத்துக்கடுத்த போதனைகளாம்.*

8. ஆகையால் நாங்கள் உங்களுக்குப் பிரசங்கித்த சுவிசேஷத்தையல்லாமல், நாங்களாவது பரலோகத்தினின்று வருகிற தேவதூதனாவது வேறொரு சுவிசேஷத்தை உங்களுக்குப் பிரசங்கித்தால், அவன் சபிக்கப்பட்டவனாயிருக்கக்கடவான்.

9. முன்னே நாங்கள் உங்களுக்குச் சொன்னதுபோலவே மறுபடியும் நான் சொல்லுகிறேன்: நீங்கள் ஏற்றுக்கொண்ட சுவிசேஷத்தையல்லாமல் வேறொன்றை யாதொருவன் உங்களுக்குப் பிரசங்கித்தால், அவன் சபிக்கப்பட்டவனாயிருக்கக்கடவான்.

10. இப்போது நான் மனிதர்களுக்கு ஏற்கவோ அல்லது சர்வேசுரனுக்கு ஏற்கவோ இதைப் போதிக்கிறேன்? மனிதர்களுக்குப் பிரியப்படத் தேடுகிறேனோ? நான் இன்னம் மனிதர்களுக்குப் பிரியப்படப் பார்த்தால் கிறீஸ்துவின் ஊழியனாயிருக்கமாட்டேன்.

11. ஆகையால் சகோதரரே, என்னால் பிரசங்கிக்கப்பட்ட சுவிசேஷம் மனுஷனுடைய யோசனைப்படி உண்டானதல்லவென்று உங்களுக்குத் தெரிவிக்கிறேன். (1. கொ. 14-1.)

12. ஏனெனில் யேசுக்கிறீஸ்துநாதர் எனக்கு அதை வெளிப்படுத்தின மூலமாய் அன்றி நான் யாதொரு மனிதனிடத்திலிருந்தும் அதைப் பெற்றுக்கொண்டதுமில்லை, கற்றுக்கொண்டதுமில்லை. (எபே. 3-3.)

13. நான் ஒருகாலத்தில் யூதமார்க்கத்திலிருந்தபோது என்னுடைய நடபடிக்கைகளைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். அப்போது நான் சர்வேசுரனுடைய திருச்சபையை மட்டின்றி உபாதித்து அதை நாசமாக்கி, (அப். 22-4; 26-9.)

14. என் ஜனத்தாரில் என் வயதுக்கொத்த அநேகரைப் பார்க்கிலும், யூதமார்க்கத்திலே தேர்ச்சியடைந்தவனாயிருந்ததுமன்றி என் பிதாக்களுடைய பாரம்பரிய முறைமைகளிலே மிகவும் பத்தி வைராக்கியமுமாயிருந்தேன்.

15. ஆயினும் நான் என் தாய் வயிற்றிலிருக்கும்போதே என்னைப் பிரித்தெடுத்து, தம்முடைய வரப்பிரசாதத்தால் என்னை அழைத்தவர்

8-9. கிறீஸ்துவர்கள் விசுவாசிக்க வேண்டிய யாதொரு வேத சத்தியத்தையாவது, அநுசரிக்க வேண்டிய யாதொரு முறைமையையாவது, கத்தோலிக்குத் திருச்சபை அந்தந்தக் காலத்தில் கற்பிப்பது இந்த வசனங்களுக்கு விரோதமல்ல. ஏனெனில், திருச்சபையானது யாதொரு சத்தியத்தை விசுவாசிக்கவும், யாதொரு முறைமையை அநுசரிக்கவும் அந்தந்தக் காலத்தில் கற்பிக்கும்போது, அப்போஸ்தலர் போதித்த சுவிசேஷத்தில் அடங்கியிருந்ததும் அதுவரையில் உட்படையாய் விசுவாசித்ததுமாகிய சத்தியங்களையும் முறைமைகளையும் அந்தந்தக்காலத்தின் அவசரத்துக்குத்தக்கது விளக்கிக்காண்பித்து, வெளிப்படையாய் விசுவாசிக்கக் கற்பிக்கிறதேயொழிய அந்தச் சுவிசேஷத்தை விட்டுவிட்டு, அதற்கு விரோதமான வேறே சுவிசேஷத்தைப் போதிக்கிறதில்லை. இந்தப்பிரகாரமாய் அப்போஸ்தலர்களும் யேசுநாதரும் முதலாய் வேதத்தின் சகல சத்தியங்களையும் முறைமைகளையும் திருச்சபையின் துவக்கமுதல் முழுதும் வெளிப்படுத்தாமல், அவைகளைப் பிற்பாடு கொஞ்சங்கொஞ்சமாய்ப் போதித்துக் கற்பித்தார்களென்று வேதவாக்கியங்களினாலே அறிந்திருக்கிறோம். அப்படியே, நாம் இன்னம் உங்களுக்குப் போதிக்கவேண்டிய காரியங்கள் அநேகமுண்டு. ஆனால் அவைகளை இப்போது தாங்கமாட்டீர்களென்று அர்ச். அருளப்பர் சுவிசேஷம் 16-ம் அதிகாரம் 12-ம் வசனத்தில் யேசுநாதர் தம்முடைய அப்போஸ்தலர்களுக்குத் திருவுளம்பற்றியிருக்கிறார். அவ்வண்ணமே முதல் கொரிந்தியர் 3-ம் அதிகாரம் 2-ம் வசனத்தில் உங்களைக் குழந்தைகளைப்போல் எண்ணி உங்களுக்குப் போஜனத்தையல்ல, பாலையே குடிக்கக்கொடுத்தேன் என்று அர்ச். சின்னப்பர் அந்தச் சபையாருக்குச் சொல்லுகிறார்.

16. தம்முடைய திருக்குமாரனை நான் புற ஜாதியாருக்குப் பிரசங்கிக்கும்பொருட்டு, அவரை எனக்கு வெளிப்படுத்தச் சித்தமானபோது, உடனே நான் மாம்சத்துக்கும் இரத்தத்துக்கும் சம்பந்தமான ஆலோசனைபண்ணுமலும்,

17. எனக்கு முன்னே அப்போஸ்தலர்களானவர்களிடத்திலே எருசலேமுக்குப் போகாமலும் அராபியா தேசத்துக்குப் புறப்பட்டுப்போய், மறுபடியும் தமாஸ்கு நகரத்துக்குத் திரும்பி வந்தேன்.

18. பிறகு மூன்று வருஷம் சென்று, இராயப்பரைக் கண்டுகொள்ளும்படி நான் எருசலேமுக்குப்போய், அவரோடு பதினைந்துநாள் தங்கியிருந்தேன்.

19. ஆண்டருடைய சகோதரனுகிய இயாகப்பரைத்தவிர, அப்போஸ்தலர்களில் வேறொருவரையும் நான் காணவில்லை.

20. நான் உங்களுக்கு எழுதுகிறவைகள் பொய்யல்லவென்று இதோ, சர்வேசுரனுக்கு முன்பாகச் சொல்லுகிறேன்.

21. பின்பு சீரியா, சிலீசியா நாட்டுப்புறங்களில் வந்தேன்.

22. யூதேயாவில் கிறீஸ்துவுக்குள்ளான சபைகளுக்கு முகமறியாதவனுயிருந்தேன்.

23. ஆனுல் முன்னே நம்மைத் துன்பப்படுத்தினவனே தான் முந்தி நிர்மூலம்பண்ணத் தேடின விசுவாசத்தை இப்போது பிரசங்கிக்கிறுன் என்பதை மாத்திரம் அவர்கள் கேள்விப்பட்டு,

24. என்னைக்குறித்துச் சர்வேசுரனை ஸ்துதித்தார்கள்.

## 2-ம். அதிகாரம்.

சின்னப்பருடைய போதகம் மற்ற அப்போஸ்தலர்களால் அங்கீகரிக்கப்பட்டதும், புறஜாதியார் யூதர்களுக்குரிய பழைய முறைமைகளை அநுசரிக்கக் கடமைப்பட்டவர்களல்ல என்பதும்.

1. பதினுலு வருஷம் சென்றபின்பு நான் தீத்துவைக் கூட்டிக்கொண்டு பர்னபாவுடனேகூட மறுபடியும் எருசலேமுக்குப் போனேன்.

16. மாம்சத்துக்கும் இரத்தத்துக்கும் சம்பந்தமான ஆலோசனைபண்ணுமல் என்பதற்கு அர்த்தமேதெனில், முன் பழைய ஏற்பாட்டின் முறைமைகளின் பேரில் தமக்கிருந்த பத்தி வைராக்கியத்தைக் கவனிக்காமலும், எந்த மனுஷனிடத்திலும் ஆலோசனை கேட்காமலும் என்று அர்த்தமாகும்.

17. அவர் உடனே அராபியா தேசத்துக்குப் போனது ஏனென்று அவர் சொல்லுகிறதில்லை. ஆகிலும் அவர் அஞ்ஞானிகளுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கத் தெரிந்துகொள்ளப்பட்டிருந்தபடியால், அந்தப் பரமதொழிலுக்கு ஆயத்தமாக, அர்ச். ஸ்நாபக அருளப்பரும் யேசுநாதரும் தாங்கள் பிரசங்கிக்கப் போகுமுன் இஸ்பிரீத்துசாந்துவினுல் வனுந்தரத்துக்குக் கூட்டிக்கொண்டு போகப்பட்டதுபோல், இவரும் அராபியா ஆரணியத்திற்குக் கூட்டிக்கொண்டு போகப்பட்டாரென்று நினைக்கத்தகும்.

18. யேசுநாதரிடத்திலே அப்போஸ்தலப்பட்டத்தைப் பெற்றுக்கொண்ட இவர் அர்ச். இராயப்பரைமாத்திரம் சந்திக்கிறதுக்கு எருசலேமுக்குப்போன காரணமென்ன? அர்ச். இராயப்பர் திருச்சபைக்கெல்லாம் தலைவராயிருப்பதைப்பற்றித்தானென்று சொல்லவேணுமென்றறிக. (அப். 9-27 ; 22-17.)

1. இந்தப் பிரயாணம் அவர் மனந்திரும்பின 14 வருஷத்துக்குப்பின் சம்பவித்தது. (நடபடி. 11-30 ; 12-25 காண்க.)

2. தேவ அறிவிப்பின்படி நான் அங்கே போய், புற ஜாதியாருக்கு நான் பிரசங்கிக்கிற சுவிசேஷத்தை அவர்களுக்கு விவரித்துக் காண்பித்தேன். ஆயினும் நான் ஓடுகிறதும் ஓடினதும் ஒருவேளை வீணாகாதபடிக்கு அங்கே பெரியவர்களாய் எண்ணப்பட்டிருந்தவர்களுக்கும் தனிப்பட விவரித்துக் காண்பித்தேன்.

3. ஆகிலும் என்னுடனேகூட இருந்த தீத்து புற ஜாதியானாயிருந்தபோதிலும், விருத்தசேதனம்பண்ணிக்கொள்ளும்படிக்குக் கட்டாயம் பண்ணப்படவில்லை.

4. ஆகிலும் இது யேசுக்கிறீஸ்து நாதரில் நமக்குள்ள சுயாதீனத்தை வேவுபார்த்து நம்மை அடிமைத்தனத்துக்குள்ளாக்கும்பொருட்டுத் தந்திரமாய் நமக்குள் நுழைந்துவந்த கள்ளச் சகோதரர் நிமித்தம் இப்படியானது. (அப். 15-24.)

5. ஆனாலும் சுவிசேஷத்தின் உண்மை உங்களிடத்திலே நிலைநிற்கும்படி அவர்களுக்கு நாங்கள் ஒரு நிமிஷமுதலாய்க் கீழ்ப்படிந்து இணங்கவில்லை.

6. பெரியவர்களாய் எண்ணப்பட்டவர்களைக் குறித்தோவென்றால், முன்னே அவர்கள் எப்படிப்பட்டவர்களாய் இருந்தார்கள் என்பதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. சர்வேசுரன் முகத்தாக்ஷிணியம் பார்க்கிறவரல்ல; அப்படிப் பெரியவர்களாய் எண்ணப்பட்டவர்களும் எனக்கு ஒன்றும் படிப்பித்ததில்லை. (உபாக. 10-17; அப். 10-34; 2. உரோ. 2-11; 1. இரா. 1-17.)

---

2. இதிலே அர்ச். சின்னப்பர் தாம் போதிக்கிற போதகம் ஒருவேளை தப்பிதமாயிருக்குமோவென்று ஒருபோதும் நினைத்தவரல்ல. ஆயினும் தாம் போதிப்பது சத்தியமான போதனையென்பதற்கு மற்ற அப்போஸ்தலருடைய அத்தாட்சியில்லாதிருந்தால், முன் கலாத்தியருக்குள்ளே சில கள்ளப்போதகருடைய துர்ப்போதனையால் சம்பவித்ததுபோல, மற்றச் சபையாருக்குள்ளும் தமது போதகத்தின்மேல் சந்தேகமுண்டானால், தாம் பட்ட பிரயாசம் வீணாய்ப் போகுமென்று யோசித்து, மற்ற அப்போஸ்தலர் தம்முடைய போதகத்தை ஏற்றுக்கொள்ளும்படிக்கு அதை அவர்களுக்கு விவரித்தார். அன்றியும் ஒருவன் சர்வேசுரனிடத்திலிருந்து என்ன ஞானப்போதகத்தைப் பெற்றிருந்தாலும், திருச்சபையின் தலைவரிடம் அனுமதி பெறாமல் போதிக்கப்படாதென்று காட்டும்படியாகவும் இப்படிச் செய்தார்.

3. மனந்திரும்பின அஞ்ஞானிகள் முதலாய்ப் பழைய ஏற்பாட்டில் கற்பிக்கப்பட்ட விருத்தசேதனத்தைப் பெறவேண்டுமென்று கள்ளப் போதகர்கள் சொல்லி, கலாத்தியரைக் கட்டாயம்பண்ணினதினிமித்தம், அவர்களுக்குள்ளே பெருங் கலகமுண்டாக்கியிருந்தார்கள். இதை அவர் மறுக்கும்படி தம்மோடேகூட எருசலேமுக்குக் கூட்டிக்கொண்டுபோன தம்முடைய சீஷனாகிய தீத்து என்பவர் அக்கியானத்தில் பிறந்து மனந்திரும்பினவராயிருந்தாலும் அவருக்கு முதலாய் விருத்தசேதனஞ் செய்யவேண்டுமென்று அப்போஸ்தலர்கள் கற்பிக்கவில்லையென்று காண்பிக்கிறார்.

4. கள்ளச் சகோதரர் என்பது அந்தியோக்கியாபுரியிலிருந்து வந்து, யூத ஆசாரங்களை அகத்தியம் அநுசரிக்கவேண்டுமென்று பிதற்றின யூத கிறீஸ்துவர்களாம்.

6. இங்கே அர்ச். சின்னப்பர் அப்போஸ்தலர்களைக் குறித்துப் பேசுகிறாரென்று தெளிவாயிருக்கிறதுமல்லாமல், 9-ம் வசனத்தில் அவர்களில் மூன்றுபேர்களைக்குறித்துக் காட்டுகிறார். அவர்கள் யேசுநாதரராலே அப்போஸ்தலராகத் தெரிந்துகொள்ளப்படுவதற்குமுன் படிப்பறியாதவர்களும், மீன்பிடிக்கிறவர்களும், ஏழைகளுமாயிருந்தார்களென்பதைத் தாம் கவனியாமல், இப்போது அவர்கள் திருச்சபையிலே தூண்களாகவும் தலைவர்களாகவும் சுவிசேஷப் போதகர்களாகவும் இருக்கிறதை மாத்திரம் கவனித்துத் தாம் சுவிசேஷத்தைப் போதிக்கும் வகையை அவர்களுக்கு வெளிப்படுத்தி, அவர்கள் அதின்பேரில் செய்யும் தீர்ப்புக்குள்ளாயிருக்கச் சம்மதிக்கிறார். ஆகிலும் அவர்கள் அவருக்கு யாதொன்றையும் போதித்ததுமில்லை, யாதொன்றையும் திருத்தினதுமில்லை என்றர்த்தமாம்.

7. இதுவுமன்றி இராயப்பனை விருத்தசேதனமுள்ளவர்களுக்கு அப்போஸ்தலனாகச் செய்தவர் புறஜாதிகளுக்கு என்னை அப்போஸ்தலனாகச் செய்தபடியால்,
8. விருத்தசேதனமுள்ளவர்களுக்குப் பிரசங்கிக்கும்படி இராயப்பருக்குச் சுவிசேஷம் ஒப்பிக்கப்பட்டதெப்படியோ, அப்படியே விருத்தசேதனமில்லாதவர்களுக்குப் பிரசங்கிக்கும்படி அது எனக்கு ஒப்பிக்கப்பட்டதென்று அவர்கள் கண்டபோது,
9. தூண்களாக எண்ணப்பட்ட இயாகப்பரும், கேபாவும், அருளப்பரும் எனக்கு அளிக்கப்பட்ட வரப்பிரசாதத்தை அறிந்து, நாங்கள் புறஜாதியார்களுக்குள்ளும், தாங்கள் விருத்தசேதனமுள்ளவர்களுக்குள்ளும் சுவிசேஷத்தைப் போதிக்கும்படி எங்களுக்குள்ளிருக்க வேண்டிய அன்னியோன்னிய ஒற்றுமையின் அடையாளமாக, எனக்கும் பர்னபாவுக்கும் வலது கைகொடுத்து,
10. தரித்திரர்மேல் நினைவுண்டாயிருக்கும்படிக்கு மாத்திரம் கேட்டுக்கொண்டார்கள்; நானும் அப்படியே செய்யக் கருத்துள்ளவனாயிருந்தேன்.
11. ஆனால் கேபா அந்தியோக்கியாவுக்கு வந்தபோது, அவர் கண்டனைக்கு ஏதுவானதால், நான் அவர்முகதாவிலே எதிர்த்தேன்.
12. அதெப்படியென்றால், இயாகப்பராலே அனுப்பப்பட்ட சிலர் வருமுன்னே அவர் புற ஜாதியாரோடே போஜனம்பண்ணிக்கொண்டிருந்தார். அவர்கள் வந்தபிறகோவெனில் விருத்தசேதனமுள்ளவர்களுக்குப் பயந்து, புறஜாதியாரைவிட்டு விலகியிருந்தார்.
13. அப்படியே மற்ற யூதர்களும் அவருடைய பாசாங்குக்கு ஒத்திருந்ததினால் பர்னபாவும் அந்தப் பாசாங்குக்குள் அவர்களால் இழுக்கப்படும்படியாயிற்று.
14. ஆகையால் அவர்கள் சுவிசேஷ சத்தியத்தின்படி சரியாய் நடக்கிறதில்லையென்று கண்டு, எல்லாருக்குமுன்பாக நான் கேபாவைநோக்கி: யூதனாகிய நீர் யூதர் முறைமைப்படி நடவாமல், புற ஜாதியாரின் முறைமைப்படி நடக்கும்போது, புறஜாதியாரை யூதர் முறைமையாக நடக்கும்படி நீர் கட்டாயம் பண்ணுகிறதெப்படி என்றேன்.

7-8. இந்த வசனங்களில் விருத்தசேதனமுள்ளவர்களென்பது யூத ஜனங்களையும், விருத்தசேதனமில்லாதவர்களென்பது யூதரல்லாத புற ஜாதி ஜனங்களையுங் குறிக்கிறது. அர்ச். இராயப்பர் யூதருக்குச் சுவிசேஷத்தைப் போதிக்கும்படி தெரிந்துகொள்ளப்பட்டதெப்படியோ, அப்படியே அர்ச். சின்னப்பரும் புறஜாதியாருக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படி தெரிந்துகொள்ளப்பட்டாரென்பதினாலே, அலுவல் பிரித்துக் கொடுக்கப்பட்டதொழிய, அர்ச். இராயப்பருக்குச் சர்வ திருச்சபையின்மேலும் கொடுக்கப்பட்ட அதிகாரத்துக்குக் குறைவல்ல என்றறிக.

14. அர்ச். இராயப்பரிடத்திலே அர்ச். சின்னப்பர் கண்டித்த குற்றம் அவருடைய போதகத்தைப்பற்றியல்ல. ஆனால் அவர் யூதர்களுக்கு இளக்காரம் காட்டினதைப்பற்றித்தான். அதேதென்றால், விருத்தசேதனமுள்ள யூதர்கள் முன்பாக விருத்தசேதனமில்லாமல் அஞ்ஞானத்திலிருந்து மனந்திரும்பினவர்களோடு போஜனபானம்பண்ண விலகிக்கொண்டிருந்தார். அப்படிச் செய்வதினால் விருத்தசேதனமுள்ளவர்கள் விருத்தசேதனமில்லாதவர்களைவிட மேன்மைப்பட்டவர்களென்று மற்றவர்கள் எண்ணுவதற்குக் காரணமாயிருந்ததினாலே அது ஒருவிதத் துர்மாதிரிகையாயிருந்தது. ஆகையால் கண்டித்தார். இப்படிக் கண்டிப்பது அர்ச். இராயப்பருடைய தலைமை அதிகாரத்துக்கு விரோதமானதல்ல. ஏனெனில் கீழ்ப்பட்டவர்களும் மேற்பட்டவர்களை மரியாதையோடு அநேகவிஷயங்களில் கண்டிப்பது வழக்கமே. ஆனாலும், அர்ச். இராயப்பர் இப்படிச் செய்தாலும் (நடபடி. 16-3; 18-18; 21-23-ல்) கண்டிருக்கிறபடி அர்ச். சின்னப்பரும் யூதர்களுக்கு இடறலாயிருந்தவரல்ல. கால விஷயங்களைக் குறித்து அவர்களுக்கு இளக்காரத்தைக் காட்டியிருக்கிறாரொழிய மற்றப்படியல்ல.

15. நாமோ புற ஜாதியாரில் பிறந்த பாவிகளாயிராமல், சுபாவத்தின்படி யூதராயிருக்கிறோம்.

16. ஏனெனில் யேசுக்கிறீஸ்துநாதரைப் பற்றும் விசுவாசத்தினாலேயன்றிப் பிரமாணத்தின் கிரியைகளினாலே மனுஷன் நீதிமானாக்கப் படுகிறதில்லையென்று அறிந்து, நாம் பிரமாணத்தின் கிரியைகளினாலேயல்ல, கிறீஸ்துநாதரைப்பற்றும் விசுவாசத்தினாலே நீதிமான்களாகும்படிக்குக் கிறீஸ்து யேசுநாதரிடத்தில் விசுவாசிகளானோம். ஆகையால் நியாயப்பிரமாணத்தின் கிரியைகளினாலே எந்த மனிதனும் நீதிமானாவதில்லை. (உரோ. 3-20.)

17. கிறீஸ்துவுக்குள் நீதிமான்களாக்கப்படும்படி தேடுகிற நாமும் பாவிகளாகக் காணப்படுவோமாகில், கிறீஸ்துநாதர் பாவத்துக்குக் காரணமாவாரோ? அல்லவே.

18. நான் இடித்துப்போட்டவைகளையே திரும்பக் கட்டுவேனாகில், அப்போது நானே மாறுபாடுள்ளவனாகிறேன்.

19. ஏனெனில் நான் சர்வேசுரனுக்காகப் பிழைக்கும்படி நியாயப்பிரமாணத்தினாலே நியாயப்பிரமாணத்துக்கு மரித்தவனாயிருக்கிறேன். கிறீஸ்துநாதருடனேகூட சிலுவையிலே அறையப்பட்டவனாயிருக்கிறேன்.

20. நான் ஜீவிக்கிறேன்; ஆனாலும் நானல்ல; கிறீஸ்துநாதர்தான் என்னில் ஜீவிக்கிறார். ஏனெனில் நான் இப்போது சரீரத்தில் ஜீவிக்கிறதோ, இது என்னைச் சிநேகித்து எனக்காகத் தம்மைத் தாமே ஒப்புக்கொடுத்த தேவசுதனைப் பற்றும் விசுவாசத்தினாலே ஜீவிக்கிறேன்.

21. நான் சர்வேசுரனுடைய வரப்பிரசாதத்தைப் புறக்கணித்துத் தள்ளமாட்டேன். நியாயப்பிரமாணத்தினால் நீதியுண்டாகுமாகில் கிறீஸ்து மரித்தது வீணாயிருக்குமே.

## 3-ம். அதிகாரம்.

*அபிரகாமுக்குப் பண்ணப்பட்ட வாக்குத்தத்தங்கள் நியாயப்பிரமாணத்தினாலேயல்ல, கிறீஸ்துநாதரைப்பற்றும் விசுவாசத்தினாலே வந்ததென்பது.*

1. ஓ மதியீனரான கலாத்தியரே, உங்களுக்காகச் சிலுவையிலே அறையுண்ட யேசுக்கிறீஸ்துநாதர் உங்கள் கண்முன்பாகப் பிரத்தியக்ஷரூபமாய்க் காண்பிக்கப்பட்டிருக்க, நீங்கள் சத்தியத்திற்குக் கீழ்ப்படியாதபடி உங்களை மயக்கினவன் யார்?

---

17. நியாயப்பிரமாணத்தின் கிரியைகளன்னியில் கிறீஸ்துநாதரைப்பற்றும் விசுவாசத்தினாலே, நீதிமான்களாகத்தேடின நாம், நீதிமான்களாகமாட்டாமல் இன்னும் பாவத்திலே கிடந்தால் அதாவது அந்தக் கள்ளப்போதகர் பிதற்றுகிறதுபோல, பழைய ஏற்பாட்டின் ஆசார முறைமைகளை அநுசரியாமல் கிறீஸ்துநாதர்மேலுள்ள விசுவாசத்தினாலே நீதிமான்களாகக் கூடாதாகில், அந்த ஆசார முறைமைகளை ஒழித்து நீக்கின கிறீஸ்துநாதரோ பாவத்துக்குக்காரணமென்று சொல்லவேண்டியிருக்கும். இது மகா தப்பறையானதினாலே, அந்த முறைமைகளை அநுசரிக்கவேண்டுமென்பது பிசகென்று ஒப்பிக்கிறார்.

19. அர்ச். சின்னப்பர் கலாத்தியரைப் பார்த்து நான் அஞ்ஞானத்திலே பிறந்தவனல்ல. மோயீசனுடைய பிரமாணத்துக்கு உட்பட்டவனாகப் பிறந்தேன். அப்படியிருந்தும் யேசுக்கிறீஸ்துநாதரைப் பற்றும் விசுவாசத்தினாலே மோயீசனுடைய நியாயப்பிரமாணத்தை விட்டுவிட்டு யேசுநாதரைப் பற்றிக்கொண்டேன். அந்தப் பிரமாணமே என்னை யேசுநாதரிடத்தில் கூட்டிக்கொண்டுவந்தது. அந்தப் பிரமாணத்துக்கு யேசுநாதர்தான் முடிவு. ஆகையால் சர்வேசுரனுக்கென்று உயிர் வாழும்படிக்குக் கிறீஸ்துநாதருடைய பிரமாணத்தைக்கொண்டு பழைய பிரமாணத்துக்கு மரித்தவனாயிருக்கிறேன் என்கிறார்.

20. மனுஷ உயிர் என்னிடமிருந்தபோதிலும், யேசுக்கிறீஸ்துநாதர் தம்முடைய இஷ்டப்பிரசாதத்தினாலே என்னிடம் வசித்து என் நினைவு பற்றுதலெல்லாம் ஆண்டு நடத்திவருவதால், அவரே என்னிடத்தில் ஜீவிக்கிறார் என்று அர்ச். சின்னப்பர் சொல்லுகிறாரென்றறிக.

2. நீங்கள் நியாயப்பிரமாணத்தின் கிரியைகளினாலேயோ, விசுவாசத்துக்குக் காதுகொடுத்ததினாலேயோ, எதினாலே இஸ்பிரீத்துவைப் பெற்றுக்கொண்டீர்கள்? இது ஒன்றையே உங்களிடத்தில் அறிய விரும்புகிறேன்.

3. நீங்கள் இஸ்பிரீத்துவினால் துவக்கியிருக்க, இப்போது மாம்சத்தில் முடிக்கும்படி அவ்வளவு புத்தியீனரானீர்களோ?

4. இத்தனை பாடுகளையும் வீணுகப் பட்டீர்களோ? வீணுகமாத்திரமென்றாலும் போகட்டுமென்றிருக்கலாமே.

5. உங்களுக்கு இஸ்பிரீத்துவைக் கொடுத்து, உங்கள்மத்தியில் அற்புதங்களை நடத்துகிறவர் அவைகளை நியாயப்பிரமாணத்தின் கிரியைகளைப்பற்றியோ, அல்லது விசுவாசத்தைக் கேட்டதைப்பற்றியோ எதைப்பற்றி நடத்தி வருகிறார்?

6. இதற்கு ஒத்தபடி: அபிரகாம் சர்வேசுரனை விசுவாசித்தார்; அது அவருக்கு நீதியாக எண்ணப்பட்டதென்று எழுதப்பட்டிருக்கிறது. (ஆதி. 15-6; உரோ. 4-3.)

7. ஆகையால் விசுவாசத்தைச்சேர்ந்தவர்கள் எவர்களோ, அவர்களே அபிரகாமின் புத்திரர்களென்று அறிந்துகொள்ளுங்கள்.

8. அன்றியும் சர்வேசுரன் புறஜாதியாரை விசுவாசத்தினாலே நீதிமான்களாக்கினுரென்று நியாயப்பிரமாணமானது ஏற்கனவே அறிந்து: உன்னில் சகலமான ஜனங்களும் ஆசீர்வதிக்கப்படுவார்களென்று அபிரகாமுக்கு முன் அறிவித்தது. (ஆதி. 12-3.)

9. ஆகையால் விசுவாசத்தினாலுண்டானவர்கள் விசுவாசியான அபிரகாமுடனேகூட ஆசீர்வதிக்கப் படுவார்கள்.

10. நியாயப்பிரமாணத்தின் கிரியைகளைச் சார்ந்தவர்களோவெனில் சாபத்துக்குள்ளாயிருக்கிறார்கள். ஏனெனில் நியாயப்பிரமாணத்தின் புஸ்தகத்தில் எழுதப்பட்டிருக்கிற யாவையும் நிறைவேற்றத்தக்கதாக அவைகளில் நிலைத்திராதவன் சபிக்கப்பட்டவனுயிருக்கிறான் என்று எழுதியிருக்கின்றது. (உபாக. 27-26.)

11. ஆகையால் நியாயப்பிரமாணத்தினாலே ஒருவனும் சர்வேசுரனுடைய சமுகத்தில் நீதிமானுகிறதில்லையென்பது வெளியரங்கமாய் இருக்கின்றது. ஏனெனில் நீதிமான் விசுவாசத்தினாலே பிழைக்கிறான். (உரோ. 1-17.)

12. எப்படியெனில் நியாயப்பிரமாணமானது விசுவாசத்தில் ஊன்றினதல்ல; ஆனால் அவைகளைச் செய்கிறவன் அவைகளால் பிழைப்பான். (லேவி. 18-5.)

13. மரத்திலே தூக்கப்பட்ட எவனும் சபிக்கப்பட்டவனென்று எழுதியிருக்கிறதுக்கு ஒத்தபடி கிறீஸ்துநாதர் நமக்காகச் சாபமாகி, நியாயப்பிரமாணத்தின் சாபத்தினின்று நம்மை இரட்சித்தார். (உபாக. 21-23.)

---

4. நீங்கள் ஞானஸ்நானம் பெற்றபிறகு அஞ்ஞானிகளாலே அநேக கலாபனைகளையும், துன்பங்களையும், நஷ்டங்களையும் விரோதங்களையும் பட்டு, அதெல்லாம் யேசுநாதரைக் குறித்து மிகுந்த தைரிய பொறுமையோடு சகித்துக்கொண்டு வந்தீர்கள். இப்போதோ நீங்கள் யேசுநாதரைவிட்டு, மோயீசனுடைய பிரமாணத்தைப் பின்பற்றுவதினால் அந்தப் புண்ணிய பலன்களெல்லாம் உங்களுக்கு வீணுக்கிக்கொள்ளப் பார்க்கிறீர்களோ? அப்படியாகமாட்டாதென்று எண்ணுகிறேன்.. ஏனெனில் நீங்கள் மறுபடியும் புத்தி தெளிந்து, உங்கள் முந்தின விசுவாசத்தில் திரும்புவீர்களென்று நம்பிக்கையாயிருக்கிறேன் என்கிறார்.

8-9. எல்லா ஜாதி ஜனமும் அபிரகாமிடத்தில் ஆசீர்வதிக்கப்படுவார்கள் என்று வேதாகமம் சொல்லுகிறது. (ஆதி. 12-3; 18-18.) எல்லா ஜாதி ஜனமும் அபிரகாமுடைய வித்தல்லவே. ஆகையால், விசுவாசத்தினாலே சகல ஜாதி ஜனமும் ஆசீர்வதிக்கப்படுகிறார்களென்று சொல்லவேண்டியது.

14. அபிரகாமுக்குக் கொடுக்கப்பட்ட ஆசீர்வாதம் கிறீஸ்து யேசுநாதர் மூலமாய்ப் புறஜாதியாருக்கும் உண்டாகும்படியாகவும், வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட இஸ்பிரீத்துசாந்துவானவரை நாம் விசுவாசத்தினாலே பெற்றுக்கொள்ளும்படியாகவும் இவ்விதமாயிற்று.

15. சகோதரரே, மனுஷனுக்கடுத்தபடி பேசுகிறேன். ஒரு உடன்படிக்கை ஒரு மனிதனுடையதானாலும் உறுதிப்படுத்தப்பட்டதானால், அதை ஒருவனும் புறக்கணிக்கிறதுமில்லை, அத்தோடே ஒன்றையுங் கூட்டுகிறதுமில்லை. (எபி. 9-17.)

16. அபிரகாமுக்கும் அவனுடைய வித்துக்கும் வாக்குத்தத்தங்கள் பண்ணப்பட்டன. உன் வித்துகளுக்கென்று அநேகரைக் குறித்தாற்போல் சொல்லாமல் ஒருவரைக்குறித்து உன் வித்துக்கு என்கிறார். அந்த வித்து கிறீஸ்துநாதர்தான்.

17. ஆதலால் நான் சொல்லுகிறதாவது: சர்வேசுரனாலே உறுதிபண்ணப்பட்ட அந்த உடன்படிக்கையை நானூற்று முப்பது வருஷத்துக்குப் பிறகு உண்டான நியாயப்பிரமாணமானது தள்ளி வாக்குத்தத்தத்தை வீணாக்கமாட்டாது.

18. அல்லாமலும் சுதந்தரமானது நியாயப்பிரமாணத்தினாலே உண்டானால் அது வாக்குத்தத்தத்தால் உண்டாயிராது. ஆனால் சர்வேசுரன் அதை அபிரகாமுக்கு வாக்குத்தத்தத்தின் மூலமாகவே அருளிச்செய்தார்.

19. அப்படியானால் நியாயப்பிரமாணம் கொடுக்கப்பட்டதேன்? வாக்குத்தத்தம் பெற்ற வித்தானது வருந்தனையும், அது மீறுதலினித்தம் ஏற்படுத்தப்பட்டுச் சம்மனசுக்களாலே ஒரு மத்தியஸ்தன் கையிலே ஒப்புவிக்கப்பட்டது.

20. மத்தியஸ்தன் ஒருவனுக்கே மத்தியஸ்தனல்ல. சர்வேசுரனோ ஒருவராயிருக்கிறார்.

21. அப்படியானால் நியாயப் பிரமாணம் சர்வேசுரனுடைய வாக்குத்தத்தத்துக்கு விரோதமோ? அல்லவே. ஏனெனில், சீவியத்தைப் பயக்கக்கூடிய நியாயப்பிரமாணம் கொடுக்கப்பட்டிருந்ததானால், நீதியானது மெய்யாகவே நியாயப் பிரமாணத்தினால் உண்டாயிருந்திருக்குமே.

17. அபிரகாம் வாக்குத்தத்தம் பெற்றநாள் துவக்கி யூதர் கானான் தேசத்துக்குப் போனகாலம் வரையில் 645 வருஷமாகிறது. இவ்விடத்திலோ யூதர்கள் எஜிப்து தேசத்திலிருந்தது முதல் கானான் தேசத்தில் குடிபோன காலத்தைக் கணித்து 430 வருஷமென்கிறார்.

19. (மீறுதலினிமித்தம்) பயத்தினாலும் மிரட்டுதலினாலும் மனிதர்களைப் பாவத்தில் விழாதபடி செய்வதற்கு வேதப் பிரமாணம் ஏற்பட்டது. அது சர்வேசுரனுக்கும் மனிதர்களுக்கும் மத்தியஸ்தனாயிருந்த மோயீசன் கையில் சம்மனசுக்களால் ஒப்புவிக்கப்பட்டது.

20. சீனாய் மலையின் அடிவாரத்தில் சர்வேசுரன் சம்மனசுக்கள் மூலமாய் மோயீசனை மத்தியஸ்தனாகக்கொண்டு இஸ்ராயேல் ஜனங்களோடு ஓர் உடன்படிக்கை செய்து, அவர்கள் தம்முடைய கற்பனைகளையும், வேதாசார முறைமைகளையும் அநுசரித்தால், அதற்குச் சம்பாவனையாக உலக நன்மைகளை தாம் அவர்களுக்கு அளிப்பதாக வாக்குத்தத்தம் பண்ணினார். அது சர்வேசுரனுக்கும் அந்த ஜனங்களுக்கும் நடந்த உடன்படிக்கையாகையால் அதற்கு ஓர் மத்தியஸ்தன் வேண்டியதாயிருந்தது.

ஆனால் சர்வேசுரன் அபிரகாமுக்குக் கொடுத்த வாக்குத்தத்தம் சர்வேசுரனுடைய சுய தயவினாலே கொடுக்கப்பட்டதினாலே, மனுஷன் செய்யும் யாதொரு தர்மக்கிருத்தியத்தைப் பார்த்துச் சர்வேசுரன் அந்த வாக்குத்தத்தத்தை நிறைவேற்றக் கடமைப்பட்டவருமல்ல, அந்த வாக்குத்தத்தம் மத்தியஸ்தன் மூலமாய்க் கொடுக்கப்பட்டதுமில்லை. (கிராம்போன்)

22. ஆனால் (சர்வேசுரனால்) செய்தருளப்பட்ட வாக்குத்தத்தமானது விசுவாசிக்கிறவர்களுக்கு யேசுக்கிறீஸ்துநாதரைப்பற்றும் விசுவாசத்தினால் தந்தருளப்படும்படியாக வேதமானது எல்லாவற்றையும் பாவத்துக்குள் அடக்கினது. (உரோ. 3-9.)

23. எப்படியெனில், விசுவாசம் வருவதற்குமுன்னே வெளிப்படுவதாயிருந்த விசுவாசத்துக்கு (ஆயத்தமாக) நாம் நியாயப் பிரமாணத்திற்குள் அடைக்கப்பட்டவர்களாய்க் காக்கப்பட்டிருந்தோம்.

24. ஆகையால் நாம் விசுவாசத்தினால் நீதிமான்களாகும்பொருட்டு நியாயப்பிரமாணமானது நம்மைக் கிறீஸ்துநாதரிடத்திற்குக் கூட்டிக்கொண்டு போகிற உபாத்தியாயிருந்தது.

25. விசுவாசம் வந்தபிறகோவெனில், நாம் இன்னமும் அந்த உபாத்திக்குக் கீழ்ப்பட்டிருக்கிறவர்களல்ல.

26. ஏனெனில் நீங்களெல்லாரும் கிறீஸ்துநாதரைப்பற்றும் விசுவாசத்தினாலே சர்வேசுரனுடைய பிள்ளைகளாயிருக்கிறீர்கள்.

27. எப்படியெனில் கிறீஸ்துநாதரிடத்தில் ஞானஸ்நானம் பெற்றிருக்கிற நீங்களெல்லோரும் கிறீஸ்துநாதரை அணிந்துகொண்டிருக்கிறீர்கள். (உரோ. 6-3.)

28. யூதனென்றும், கிரேக்கனென்றுமில்லை, அடிமையென்றும் சுயாதீனனென்றுமில்லை, ஆணென்றும் பெண்ணென்றுமில்லை. நீங்களெல்லாரும் யேசுக்கிறீஸ்துநாதரிடத்தில் ஒன்றாயிருக்கிறீர்கள்.

29. நீங்கள் கிறீஸ்துவினுடையவர்களானால், அபிரகாமுடைய வித்தாயும் வாக்குத்தத்தத்தின்படிக்குச் சுதந்தரவாளிகளுமாயிருக்கிறீர்கள்.

## 4-ம். அதிகாரம்.

*நியாயப்பிரமாணத்தின் அடிமைத்தனத்தினின்று மீட்கப்பட்டு அபிரகாமின் சுயாதீன புத்திரராயிருக்கிறோமென்பது.*

1. இப்போது நான் சொல்லுகிறதாவது: சுதந்தரவாளி எல்லாத்துக்கும் எஜமானாயிருந்தும், அவன் சிறுபிள்ளையாயிருக்குமட்டும் அவனுக்கும் அடிமையானவனுக்கும் வித்தியாசமில்லை.

2. தன் பிதாவினால் குறிக்கப்பட்ட காலம் வரைக்கும், அவன் வீட்டு விசாரணைக்காரருக்கும், காரியஸ்தருக்கும் கீழ்ப்பட்டிருக்கிறான்.

3. அத்தன்மைபோல, நாமும் சிறுவர்களாயிருக்கும்போது இவ்வுலகத்தின் பஞ்ச பூதியங்களுக்கு அடிமைப்பட்டவர்களாயிருந்தோம்.

4. இப்படியிருக்க, நாம் புத்திர சுவீகாரத்தை அடையும்படி நியாயப்பிரமாணத்துக்குக் கீழ்ப்பட்டவர்களை மீட்டுக்கொள்ளத்தக்கதாக,

5. காலம் நிறைவேறியபோது ஸ்திரீயினிடத்தில் பிறந்தவரும் நியாயப்பிரமாணத்துக்குக் கீழ்ப்பட்டவருமான தம்முடைய சுதனை சர்வேசுரன் அனுப்பினார். (அருள். 1-12.)

6. அல்லாமலும் நீங்கள் புத்திரர்களாயிருக்கிறபடியால் சர்வேசுரன் அப்பா, பிதாவே என்று கூப்பிடுகிற தம்முடைய சுதனுடைய இஸ்பிரீத்துவை உங்கள் இருதயங்களில் அனுப்பினார். (உரோ. 8-15.)

7. ஆதலால் இப்போது (உங்களில்) எவனும் அடிமையாயிருக்கிறதில்லை, புத்திரனாயிருக்கிறான். புத்திரனாகில், சர்வேசுரனுடைய சுதந்தரனுமாயிருக்கிறான்.

8. முற்காலத்தில்நீங்கள் சர்வேசுரனை அறியாதிருந்தபோது, சுபாவமாய்த் தேவர்களல்லாதவர்களுக்கு அடிமைகளாயிருந்தீர்கள் என்பது மெய்யே.

9. இப்பொழுதோ, நீங்கள் சர்வேசுரனை அறிந்திருக்கிறதுந்தவிர, அவராலே அறியப்பட்டவர்களுமாயிருக்கக்கொள்ள, பலவீனமும் வெறுமையுமான பஞ்சபூதியங்கள் பாரிசமாய் மறுபடியும் திரும்பி, அவைகளுக்கு இன்னமும் அடிமைப்பட விரும்புகிறதெப்படி?

10. நாட்களையும், மாதங்களையும், காலங்களையும், வருஷங்களையும் அநுசரித்துக்கொண்டு வருகிறீர்களே. (கொலோ. 2-16-20.)

11. நான் உங்களுக்காக உழைத்தது வீணாய்ப்போயிற்றோவென்று உங்களைப்பற்றிப் பயந்திருக்கிறேன்.

12. நான் உங்களைப்போலானேனே. சகோதரரே, நீங்கள் என்னைப்போலாகுங்களென்று உங்களை மன்றாடுகிறேன். நீங்கள் எனக்கு ஓர் குறையும் செய்யவில்லை.

13. துவக்கத்தில் நான் உங்களுக்குச் சுவிசேஷத்தைச் சரீர பலவீனத்தோடே அறிவித்தேனென்று அறிந்திருக்கிறீர்கள். ஆகிலும் என் சரீரத்தில் உங்களுக்குச் சோதனையாயிருந்ததினிமித்தம்,

14. நீங்கள் என்னைப்புறக்கணியாமலும் அரோசியாமலும் சர்வேசுரனுடைய தூதனைப்போலவும், யேசுக்கிறீஸ்துநாதரைப்போலவும் என்னை ஏற்றுக்கொண்டீர்கள்.

15. அப்பொழுது உங்களுக்குண்டாயிருந்த ஆனந்தம் எங்கே? உங்கள் கண்களைப் பிடுங்கி எனக்குக்கொடுக்கக்கூடுமானால், அவைகளையும் கொடுத்திருப்பீர்களென்று நானே உங்களுக்குச் சாட்சியாயிருக்கிறேன்.

16. உங்களுக்கு நான் உண்மையைச் சொல்லி உங்களுக்குச் சத்துராதியானேனோ?

17. அவர்கள் உங்களுக்குக் காண்பிக்கிற அன்புவைராக்கியம் நல்ல கருத்தோடு காண்பிக்கிறதல்ல. ஏனெனில் அவர்கள்மட்டில் நீங்கள் அன்புவைராக்கியமாயிருக்கும்படி உங்களை (எங்களிடத்தினின்று) பிரிக்கத் தேடுகிறார்கள்.

18. நான் உங்களோடிருக்கும்போது மாத்திரமல்ல, எப்போதும் நன்மையில் நன்மையை நாடி நடங்கள்.

19. என் சிறு பிள்ளைகளே, கிறீஸ்துநாதர் உங்களில் உருவாகுமட்டும் நான் மறுபடியும் பிரசவவேதனைப்படுகிறேன்.

20. நான் உங்கள் விஷயத்தில் சந்தேகப்படுகிறபடியால், இப்போது நான் உங்கள் நடுவில் வந்திருந்து, வேறுவகையாய்ப் பேசக்கூடுமானால் தாவிலை.

21. நியாயப்பிரமாணத்துக்குக் கீழ்ப்பட்டிருக்க விரும்புகிறவர்களே, நீங்கள் நியாயப்பிரமாணத்தை வாசித்ததில்லையோவென்று எனக்குச் சொல்லுங்கள்.

3-9. பஞ்சபூதியங்களென்பது இவ்விடத்தில் வெளியாசாரச் சடங்குகளாம்.

10. கலாத்தியர் மாதங்களையும் நாட்களையும் வருஷங்களையும் அநுசரித்து, அதுகளில் சிலது அதிர்ஷ்ட நாளென்றும், சிலது கெடுதியானதென்றும் எண்ணி, அதன்படி நடந்துவந்ததினால் இந்த வசனத்தில் அர்ச். சின்னப்பர் அவர்களைக் கண்டிக்கிறார். ஆனால், கிறீஸ்துவர்கள் வாரத்தில் வெள்ளி சனி நாட்களையும் வருஷத்தில் பற்பல திருநாட்களையும் அநுசரிக்கவொண்ணாது என்று சொல்லுகிறதில்லை.

12. முன்னே உங்களைப்போல் நானும் பழைய ஏற்பாட்டு முறைமைகளையெல்லாம் அநுசரித்துக்கொண்டு வந்தேன். ஆனால், யேசுநாதரைப் பற்றிக்கொள்ளும்படிக்கு இவையெல்லாம் விட்டுவிட்டேன். நீங்களும் அப்படி செய்யுங்களென்றர்த்தமாம்.

22. அபிரகாமுக்கு இரண்டு குமாரர் இருந்தார்களென்று எழுதியிருக்கிறது. ஒருவன் அடிமையானவளிடத்தில் பிறந்தவன், ஒருவன் சுயாதீனமுள்ளவளிடத்தில் பிறந்தவன். (ஆதி. 16-15; 21-2.)

23. அடிமையானவளிடத்தில் பிறந்தவன் மாம்சத்தின்படி பிறந்தான்; சுயாதீனமுள்ளவளிடத்தில் பிறந்தவன் வாக்குத்தத்தத்தின்படி பிறந்தான்.

24. இவைகள் ஒட்டுவமைகளாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஏனெனில் அவ்விரண்டு ஸ்திரீகளும் இரண்டு ஏற்பாடுகளாம். ஒன்று சீனாய்மலையில் உண்டாகி, அடிமைத்தனத்தில் புத்திரரை உற்பத்தியாக்குகிறது. அது ஆகார் என்பவளாமே.

25. ஏனெனில் சீனாய் என்பது அரபிய தேசத்தின் மலை. அது இப்பொழுது இருக்கிறதும், தன் மக்களோடு அடிமைத்தனத்துக்குள்ளாயிருக்கிறதுமாகிய எருசலேமுக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது.

26. உன்னதத்திலிருக்கிற எருசலேமாகிய மற்றொருத்தியோ சுயாதீனமுள்ளவள். அவள்தான் நம்முடைய தாய்.

27. அதைப்பற்றித்தான்: பிள்ளைகளைப்பெறாத மலடியே, மகிழ்ச்சியாயிரு. பிரசவிக்காதவளே, ஆனந்தங்கொண்டெழுந்து ஆர்ப்பரி; ஏனெனில் புருஷனுள்ளவளைப்பார்க்கிலும் கைவிடப்பட்டவளுக்குப் புத்திரர் அநேகர் என்று எழுதியிருக்கின்றது. (இசை. 54-1.)

28. சகோதரரே, நாம் ஈசாக்கைப்போல வாக்குத்தத்தத்தின் புத்திரராயிருக்கிறோம். (உரோ. 9-8.)

29. ஆகிலும் மாம்சத்தின்படி பிறந்தவன் இஸ்பிரீத்துவின்படி பிறந்தவனை அப்போது எப்படித் துன்பப்படுத்தினானோ, இப்போதும் அப்படியே ஆகிறது.

30. ஆகிலும் வேதம் இதைப்பற்றிச் சொல்லுகிறதென்ன? அடிமையையும் அவள் குமாரனையும் துரத்திவிடு. ஏனெனில் அடிமையின் புத்திரன் சுயாதீனமுள்ளவளுடைய புத்திரனோடே சுதந்தரவாளியாய் இரானென்று சொல்லுகிறது. (ஆதி. 21-10.)

30-31. அபிரகாமுக்கு இரண்டு மனைவிகள் இருந்தார்கள். சுயாதீனமுள்ள சாராளும் அடிமையாயிருந்த ஆகாருமாம். அந்த ஆகாரென்பவள் இஸ்மாயேல் என்ற புத்திரனைப் பெற்றாள். ஆனால் அவன் வாக்குத்தத்தத்தின் படியல்ல, சுபாவத்தின்படி பிறந்தவன். சாராளோவெனில் சுபாவமாய் மலடியாயிருக்கையில் வாக்குத்தத்தத்தின்படி ஈசாக்கைப் பெற்றாள். சிலகாலத்துக்குப் பிறகு சுபாவத்தின்படி பிறந்த இஸ்மாயேல் வாக்குத்தத்தத்தின்படி பிறந்த ஈசாக்கை அடித்துத் துன்பப்படுத்தினபோது இஸ்மாயேலையும் அவன் தாயையும் துரத்திவிடும்படி சர்வேசுரன் கற்பித்தார். இதுவே சரித்திரம். இதிலே அடங்கியிருக்கிற உவமையாவது: அபிரகாமுடைய இரண்டு கலியாணம்: இரண்டு உடன்படிக்கை. அவ்விரு மனைவிகள்: பழைய ஏற்பாடும், புதிய ஏற்பாடுமாம். அந்த இரண்டு தாய்மாரிடம் பிறந்த பிள்ளைகள்: யூதர்களும் கிறீஸ்துவர்களுமாகிய இரண்டு தேவ பிரஜைகளாம். அபிரகாமுடைய முதல் விவாகம், சர்வேசுரன் யூதர்களோடு செய்த பழைய ஏற்பாட்டின் உடன்படிக்கை. அடிமையாயிருந்த ஆகாரென்பவள் சீனாய்மலையில் சர்வேசுரன் யூதர்களுக்கு மோயீசன் கையில் கொடுத்த வேதப்பிரமாணமாம். அது அடிமைகளைப் பிறப்பிக்கிறது. ஏனெனில் அடிமைகளை நடத்துகிறாப்போல அந்தப் பிரமாணம் யூதர்களை நடத்திக்கொண்டுவந்தது. அபிரகாம் சுயாதீனமுள்ளவளோடு செய்த மற்றொரு கலியாணம் வாக்குத்தத்தத்தின்படி மனுஷர்களைப் பசாசின் அடிமைத்தனத்தினின்று விடுவித்து, சுயாதீனர்களாக்குகிற சுவிசேஷப் பிரமாணமாம். சாராளிடம் பிறந்த ஈசாக்கு யாரென்றால் வாக்குத்தத்தத்தின் பிள்ளைகளாகிய கிறீஸ்துவர்களாம். அதைப்பற்றித்தான் கிறீஸ்துவர்கள் அபிரகாமுடைய ஞானப் புத்திரரும் வாக்குத்தத்தத்தின் பிள்ளைகளும் என்னப்படுகிறார்கள். ஆனால் அப்போது இஸ்மாயேல் ஈசாக்கையும் அவன் தாயையும் பகைத்துத்

31. ஆதலால் சகோதரரே, நாம் அடிமையானவளுக்குப் பிள்ளைகளாயிராமல், சுயாதீனமுள்ளவளுக்கே பிள்ளைகளாயிருக்கிறோம். அந்தச்சுயாதீனத்திற்குக் கிறீஸ்துநாதர் நம்மை விடுவித்தார்.

## 5-ம். அதிகாரம்.

விசுவாசிகளுக்குரிய சுயாதீனத்தில் நிலைநிற்கும்படி புத்திசொல்லி, மாம்சத்தினாலும் இஸ்பிரீத்துவினாலும் விளைகிற பலன்கள் என்னவென்று காட்டுகிறார்.

1. நீங்கள் மறுபடியும் அடிமைத்தனத்தின் நுகத்துக்குக் கீழ்ப்படாமல் நிலை நில்லுங்கள்.

2. இதோ, நீங்கள் விருத்தசேதனம் பண்ணிக்கொள்வீர்களாகில், கிறீஸ்துநாதரால் உங்களுக்கு ஒரு பிரயோசனமுமிராதென்று சின்னப்பனாகிய நானே உங்களுக்குச் சொல்லுகிறேன். (அப். 15-1.)

3. மேலும் விருத்தசேதனம் பெறுகிற எந்த மனுஷனும் நியாயப்பிரமாண முழுவதையும் அநுசரிக்கக் கடனாளியாயிருக்கிறானென்று அவனுக்கு மறுபடியும் நிச்சயமாய்ச்சொல்லுகிறேன்.

4. நியாயப்பிரமாணத்தினாலே நீதிமான்களாகத் தேடுகிற நீங்கள் கிறீஸ்துநாதரை இழந்து, இஷ்டப்பிரசாதத்தினின்று தவறிவிழுந்தீர்கள்.

5. நாங்களோ நீதியை அடைவோமென்று இஸ்பிரீத்துவின் மூலமாய் விசுவாசத்தினால் நம்பிக் காத்திருக்கிறோம்.

6. ஏனெனில் கிறீஸ்து யேசுநாதரிடத்தில் சிநேகத்தினால் கிரியைகளைச் செய்யும் விசுவாசமேயன்றி, விருத்தசேதனமும் விருத்தசேதனமில்லாமையும் பிரயோசனப்படாது. (1. கொ. 7-19.)

7. நீங்கள் நன்றாய் ஓடினீர்களே; சத்தியத்துக்குக் கீழ்ப்படியாதபடிக்கு உங்களைத் தடுத்தவன் யார்?

8. இந்தப்போதனை உங்களை அழைக்கிறவரிடத்திலிருந்து உண்டானதல்ல.

9. கொஞ்சம் புளிக்காரம் பிசைந்த மாமுழுமையும் கெடுத்துப்போடுகிறது. (1. கொ. 5-6.)

10. நீங்கள் வேறுவிதமாய் எண்ணமாட்டீர்களென்று நான் உங்களைக்குறித்துக் கர்த்தரிடத்தில் நம்பிக்கையாயிருக்கிறேன். உங்களைக் கலகப்படுத்துகிறவன் எப்படிப்பட்டவனானாலும் ஆக்கினைத் தீர்ப்பையடைவான்.

---

துன்பப்படுத்தினதுபோல திருச்சபையின் துவக்கத்திலிருந்த யூதர்கள் கிறீஸ்துவர்களையும் சுவிசேஷத்தையும் பகைத்துத் துன்பப்படுத்திக்கொண்டு வந்தார்கள். ஆதலால் அபிரகாம் இஸ்மாயேலையும் அவன் தாயையும் துரத்திவிட்டதுபோல சர்வேசுரன் யூதர்களையும் பழைய பிரமாணத்தையும் விலக்கிவிட்டாரென்று அர்த்தமாம்.

2. யேசுநாதர் பாடுபட்டு நம்மை இரட்சித்த நாள் தொடங்கி, விருத்தசேதனம் யூதர்களுக்கும் அஞ்ஞானிகளுக்கும் அவசரமில்லாத காரியமென்பது மெய்யே. ஆகிலும் யூதர்களுக்குள்ளே விருத்தசேதனமானது ஜாதி முறைமை போலிருந்ததினாலே அவர்களுக்கு அது விலக்கப்படவில்லை. அதைப்பற்றித்தான் நடபடி ஆகமம் 16-ம் அதி. 2-ம் வசனத்தில் சொல்லிய வண்ணம் அர்ச். சின்னப்பரின் சீஷனாகிய தீமோத்தேயு என்பவருடைய தாயார் யூதகுலத்தாளானதினால், அர்ச். சின்னப்பர் அவருக்கு விருத்தசேதனம் செய்வித்தார். ஆனால் கலாத்தியர் அப்படியில்லாமல் அஞ்ஞானத்திலிருந்து ஞானஸ்நானம் பெற்றவர்களானபடியால் அவர்கள் விருத்தசேதனத்தைப்பெறும்போது ஜாதி முறைமையைப் போலல்ல, கனையேற்றத்துக்கு அவசியமான முறைமையைப்போல் அதைப் பெறுவார்கள். கள்ளப்போதகர்களும் அப்படியே அவர்களுக்குப் போதித்திருந்தார்கள். ஆனால் கனையேற்றத்துக்கு விருத்தசேதனம் அவசரமென்று விசுவாசிக்கிறது யேசுநாதரைப்பற்றும் விசுவாசத்துக்கு முழுதும் விரோதமாயிருக்கிறபடியினாலே, அப்படி விசுவாசிக்கிறவர்கள் யேசுநாதரால் உண்டாகிற இரட்சணியத்தை இழந்து போகிறார்களென்றும் யேசுநாதரால் அவர்களுக்குப் பிரயோசனமில்லாமல் போகிறதென்றும் அர்ச். சின்னப்பர் சொல்லுகிறார்.

11. சகோதரரே, விருத்தசேதனத்தை நான் இன்னம் பிரசங்கிக்கிறேனாகில், ஏன் இன்னம் உபாதிக்கப்படுகிறேன். அப்படியானால் சிலுவையைப் பற்றிய இடறல் ஒழிந்துபோயிருக்குமே. (1. கொ. 1-23.)

12. உங்களைக் கலகப்படுத்துகிறவர்கள் வெட்டுண்டுபோனாலும் தாவிலை.

13. சகோதரரே, நீங்கள் சுயாதீனத்துக்கு அழைக்கப்பட்டிருக்கிறீர்கள். ஆயினும் இந்தச் சுயாதீனத்தைச் சரீர இச்சைகளுக்கு ஏதுவாக்காமல், ஞான சிநேகத்தினால் ஒருவருக்கொருவர் ஊழியஞ் செய்யுங்கள்.

14. எப்படியெனில் உன்னைச் சிநேகிக்குமாப்போல, உன் பிறனையும் சிநேகிப்பாயாக என்கிற இந்த ஒரே வாக்கியத்தில் நியாயப்பிரமாணம் முழுமையும் நிறைவேறுகிறது. (லேவி. 19-18; மத். 22-39; உரோ. 13-8.)

15. நீங்கள் ஒருவரொருவரைக் கடித்துப் பட்சித்தீர்களோ, எச்சரிக்கை; ஒருவர் ஒருவரால் சிதைந்துபோவீர்கள்.

16. ஆகையால் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: இஸ்பிரீத்துவுக்கு ஏற்றபிரகாரம் நடந்துகொள்ளுங்கள். அப்போது மாம்ச இச்சைகளை நிறைவேற்றமாட்டீர்கள். (1. இரா. 2-11.)

17. எப்படியெனில் மாம்சம் இஸ்பிரீத்துவுக்கு விரோதமாயும், இஸ்பிரீத்து மாம்சத்துக்கு விரோதமாயும் இச்சிக்கிறது. உங்களுக்கு இஷ்டப்பட்டவைகள் எவைகளோ, அவைகளை நீங்கள் செய்யாதபடி இவைகள் ஒன்றுக்கொன்று விரோதமாயிருக்கின்றன.

18. இஸ்பிரீத்துவினால் நடத்தப்படுகிறீர்களாகில், நீங்கள் நியாயப்பிரமாணத்துக்கு உட்பட்டவர்களல்ல.

19. மாம்சத்தின் கிரியைகள் பிரத்தியக்ஷமாயிருக்கின்றன; அவைகளாவன: விபசாரம், வேசித்தனம், அசுசி, காமவிகாரம்,

20. விக்கிரக ஆராதனை, பில்லிசூனியம், பகைகள், வாக்குவாதம், கோபங்கள், சண்டைகள், வைராக்கியங்கள், பிரிவினைகள், பதிதத்தனங்கள்,

21. காய்மகாரங்கள், கொலைகள், குடிவெறிகள், களியாட்டுகள் இவை முதலியவைகளாம். இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்கள் சர்வேசுரனுடைய இராச்சியத்தைச் சுதந்தரித்துக்கொள்ளமாட்டார்கள் என்று முன் சொன்னதுபோல் இப்போதும் உங்களுக்குச் சொல்லுகிறேன். (1. கொ. 6-9.)

22. இஸ்பிரீத்துவின் கனிகளேதென்றால்: பரம அன்பு, சந்தோஷம், சமாதானம், பொறுமை, தயாளம், நன்மைத்தனம், சகிப்பு,

23. சாந்தம், விசுவாசம், அடக்கவொடுக்கம், இச்சையடக்கம், நிறைகற்பு இவைகளாம். இப்படிப்பட்டவைகளுக்கு விரோதமான பிரமாணமில்லை.

24. கிறீஸ்துநாதருடையவர்கள் தங்கள் மாம்சத்தை அதின் துர்க்குணங்களோடும், இச்சைகளோடும் சிலுவையில் அறைந்திருக்கிறார்கள்.

25. நாம் இஸ்பிரீத்துவினால் ஜீவிக்கிறோமாகில், இஸ்பிரீத்துவுக்கேற்றபடி நடக்கவுங்கடவோம்.

26. வீண் மகிமையை விரும்பாமலும், ஒருவருக்கொருவர் கோபமூட்டாமலும், ஒருவர்மேலொருவர் பொறாமை கொள்ளாமலும் இருக்கக்கடவோம்.

---

12. உங்களைக் கலகப்படுத்துகிறவர்கள் வெட்டுண்டுபோனாலும் தாவிலையென்று அர்ச். சின்னப்பர் சொல்லுகிறார். ஆனால் எவ்விதமாய் வெட்டுண்டுபோவதைக்குறித்து சொல்லுகிறாரென்று விளங்குகிறதில்லை. வேதபாரகரில் சிலர் திருச்சபையிலிருந்து வெட்டுண்டு அதாவது சபிக்கப்பட்டுப் பிரிக்கப்பட்டால் தாவிலை என்கிறாரென்றும்; வேறு சிலர் அவர்கள் சரீரம் முதலாய் வெட்டுண்டு பிளந்துபோனாலும் தாவிலை என்கிறாரென்றும் சொல்லுகிறார்கள். வாசிக்கிறவன் தெரிந்து கொள்ளக்கடவான்.

## 6-ம். அதிகாரம்.

*சிநேகம், தாழ்ச்சி முதலியவைகளைப்பற்றிப் போதித்து, தாம் யேசுநாதருடைய சிலுவையில் மாத்திரம் மகிமை பாராட்டுவதாகச்சொல்லி நிருபத்தை முடிக்கிறார்.*

1. சகோதரரே, ஒரு மனிதன் நினையாமல் யாதொரு குற்றத்தில் அகப்பட்டால், ஞானவான்களாகிய நீங்கள் சாந்த குணத்தோடு அப்படிப்பட்டவனுக்குப் புத்திசொல்லுங்கள். ஆனால் சோதனையில் நீயும் அகப்படாதபடிக்கு உன்மட்டில் கண்ணுண்டாயிரு.

2. ஒருவர் பாரத்தை ஒருவர் சுமந்துகொள்ளுங்கள். இவ்விதமாய்க் கிறீஸ்துநாதருடைய கட்டளையை நிறைவேற்றுவீர்கள்.

3. ஆகிலும் ஒருவன் தான் ஒன்றுமில்லாதிருக்கையிலே தன்னை ஒரு பொருட்டாய் எண்ணினால், தன்னைத்தானே மயக்கிக் கெடுக்கிறான்.

4. அவனவன் தன்தன் கிரியைகளைப்பரிசோதித்துப்பார்க்கக்கடவான். அப்போது அவனுக்கு மற்றவர்களைப் பார்ப்பதினாலல்ல, தன்னைத்தான் பார்ப்பதினால் மகிமையுண்டாகும்.

5. ஏனெனில் ஒவ்வொருவனும் தன் தன் பாரத்தைச் சுமந்துகொள்வான். (1. கொ. 3-8.)

6. இதன்றியே, வேத உபதேசம் கேட்கிறவன் தனக்கு உபதேசஞ்செய்கிறவனுக்குத் தனக்குள்ள நன்மைகளில் பங்களிப்பானாக.

7. மோசம் போகாதேயுங்கள். சர்வேசுரன் நகைக்கப்படுகிறவரல்ல.

8. மனுஷன் எதை விதைத்திருப்பானோ அதையே அறுப்பான். தன் மாம்சத்தில் விதைக்கிறவன் மாம்சத்திலிருந்து அழிவை அறுப்பான். ஞானத்தில் விதைக்கிறவன் ஞானத்திலிருந்து நித்திய சீவியத்தை அறுப்பான்.

9. ஆகையால் நன்மை செய்வதில் சோர்ந்துபோகாதிருப்போமாக. ஏனெனில் நாம் சோர்ந்துபோகாதிருந்தால், தக்ககாலத்திலே பலனையறுப்போம். (2. தெச. 3-13.)

10. ஆனதால் நமக்குக் காலமிருக்கும்போதே, எல்லாருக்கும், விசேஷமாய் விசுவாசக் குடும்பத்தாருக்கும் நன்மைசெய்வோமாக.

11. என் கையினால் எப்படிப்பட்ட நிருபம் உங்களுக்கு எழுதினேனென்று பாருங்கள்.

12. மாம்சத்தின்படி மற்றவர்களுக்குப் பிரியப்படத்தேடுகிறவர்கள் எவர்களோ, அவர்கள் கிறீஸ்துநாதருடைய சிலுவையினிமித்தம்வரும் துன்பத்தை அநுபவியாதபடிக்கே நீங்கள் விருத்தசேதனம் பண்ணிக்கொள்ளவேண்டுமென்று உங்களைக் கட்டாயம்பண்ணுகிறார்கள்.

13. ஏனெனில் விருத்தசேதனம் பெற்றிருக்கிறவர்களும் நியாயப்பிரமாணத்தை அநுசரியாதிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் உங்கள் மாம்சத்தில் மகிமை பாராட்டும்பொருட்டு நீங்கள் விருத்தசேதனம் பண்ணிக்கொள்ளவேண்டுமென்று விரும்புகிறார்கள். (உரோ. 2-23.)

14. நானோ நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய சிலுவையிலன்றி, வேறொன்றிலும் மேன்மை பாராட்டாதிருப்பேனாக. அவர் வழியாய் உலகம் எனக்குச் சிலுவையில் அறையுண்டிருக்கிறது. நானும் உலகத்துக்குச் சிலுவையில் அறையுண்டிருக்கிறேன்.

15. யேசுக்கிறீஸ்துநாதரிடத்தில் விருத்தசேதனத்தினாலும் காரியமில்லை; விருத்தசேதனமில்லாமையினாலும் காரியமில்லை. நவமான சிருஷ்டியினாலே காரியமாகிறது. (2. கொ. 5-17.)

16. இந்தப் பிரமாணத்தின்படி நடக்கிறவர்கள் எவர்களோ அவர்களுக்கும், கடவுளுடைய இஸ்ராயேலருக்கும் சமாதானமும், கிருபையும் உண்டாவதாக.

17. இனிமேல் ஒருவனும் என்னைத் துன்பப்படுத்தவேண்டாம். ஏனெனில் ஆண்டவராகிய யேசுவினுடைய அடையாளங்களை நான் என் சரீரத்தில் தரித்துக்கொண்டிருக்கிறேன். (2. கொ. 4-10.)

18. சகோதரரே, நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய இஷ்டப்பிரசாதம் உங்கள் ஆத்துமத்தோடுகூட இருக்கக்கடவதாக.

ஆமென்.

16. கடவுளுடைய இஸ்ராயேல் என்பது அபிரகாமின் சுபாவ புத்திரர்களாகிய யூதர்களல்ல. ஆனால் விசுவாசத்தினால் அவருடைய புத்திரர்களாகிய கிறீஸ்துவர்களாம்.

17. யேசுநாதருடைய (திருக்காயங்களின்) அடையாளங்களை என் சரீரத்திலே தரித்துக்கொண்டிருக்கிறேனென்று அர்ச். சின்னப்பர் சொல்லும்போது 2-ம் கொரிந்தியர் 11-ம் அதிகாரம் 24-ம் வசனத்தில் சொல்லியிருக்கிறதுபோல, அவர் யேசுநாதனைப்பற்றிக் கல்லால் எறியப்பட்டும், வாரினால் அடிபட்டும் அடைந்த காயங்களைப்பற்றியாவது, யேசுநாதனைக்குறித்துத் தாம்தாமே தம்முடைய சரீரத்தை ஒறுத்துக்கொண்டுவருகிற தவக்கிரியையைக்குறித்தாவது பேசுகிறாரென்றறியவும்.



# பாயிரம்.

எபேசு நகரமானது சின்ன ஆசியாவின் பிரதான பட்டணமாம். கர்த்தர் அவதாரத்தின் 66-ம் ஆண்டில் அர்ச். சின்னப்பர் உரோமாபுரியில் சிறையிலிருக்கும்போது எபேசியருக்கு இந்த நிருபத்தை எழுதினார். மூன்று வருஷமளவும் இரவும் பகலுமாக அவர் மிகுந்த பிரயாசப்பட்டு ஏற்படுத்திய இந்தச் சபையை விசுவாசத்தில் உறுதிப்படுத்தவும் யேசுக்கிறீஸ்துநாதரைப்பற்றிய உந்நதமான தேவரகசியங்களின் அறிவில் அவர்கள் தேறவும் வேண்டுமென்று இதை எழுதினார். ஆகையால் அவர் எழுதிய மற்ற நிருபங்களைப்பார்க்க இந்த நிருபம் அதிக சிறந்த வாக்கியங்களும், உயர்ந்த அர்த்தங்களும் உள்ளதுமாய் மனிதருடைய வாக்குக்கெட்டாததும் சம்மனசுகளுக்குரியதுமாய் இருக்கின்றது. முதல் மூன்று அதிகாரங்களில் நித்திய அழைத்தலையும், யேசுநாதருடைய மரணத்தினால் உண்டாகிய இரட்சண்ணியத்தையும், புறஜாதியாருடைய அழைத்தலையும், புறஜாதியார்களுக்காக விசேஷமாய்த் தாம் அப்போஸ்தலராக ஏற்படுத்தப்பட்டிருக்கிறதையும், மற்ற மூன்று அதிகாரங்களில் அவனவன் தன்தன் அந்தஸ்தில் அநுசரிக்கவேண்டிய பிரதான புண்ணிய ஒழுக்கங்களையுங்குறித்துப் பேசுகிறார்.



# அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர்

## எபேசியருக்கு

# எழுதிய நிருபம்.

## முதல் அதிகாரம்.

*கிறீஸ்துநாதர் வழியாகச் சர்வேசுரன் நமக்களித்த நன்மைகளுக்காக ஸ்தோத்திரஞ் செய்து, யேசுநாதனைத் தேவ பிதா மரித்தோரினின்று எழுப்பி, திருச்சபைக்குத் தலைவராகச் சதாகாலமும் தமது வலது பாரிசத்தில் உட்காரச்செய்திருக்கிறாரென்று படிப்பிக்கிறார்.*

1. தேவ சித்தத்தினாலே யேசுக்கிறீஸ்துநாதருடைய அப்போஸ்தலனாகிய சின்னப்பன் எபேசிலுள்ள அர்ச்சிக்கப்பட்ட சகலருக்கும், யேசுக்கிறீஸ்துநாதரிடத்தில் விசுவாசமுள்ளவர்களுக்கும் (எழுதுகிறதாவது):

2. நம்முடைய பிதாவாகிய சர்வேசுரனாலும், கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துவினாலும் உங்களுக்கு இஷ்டப்பிரசாதமும் சமாதானமும் உண்டாவதாக.

3. நம்முடைய கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துவின் பிதாவாகிய சர்வேசுரன் ஸ்தோத்தரிக்கப்படுவாராக. அவர் கிறீஸ்துநாதரில் நம்மைப் பரலோகத்துக்காக எல்லா ஞான ஆசீர்வாதத்தினாலும் ஆசீர்வதித்திருக்கிறார். (2. கொ. 1-3; 1. இரா. 1-3.)

4. அவருடைய சமுகத்திலே நாம் பரிசுத்தரும் மாசற்றவர்களுமாய் இருக்கும்படிக்கு நம்மை அவர் அன்போடு கிறீஸ்துநாதரிடத்தில் உலக சிருஷ்டிப்புக்குமுன்னே தெரிந்துகொண்டபடியே, (பரலோகத்துக்காக எல்லா ஞான ஆசீர்வாதத்தினாலும் நம்மை ஆசீர்வதித்திருக்கிறார்.)

5. அன்றியும் அவர் தமது திருவுளநோக்கத்தின்படி தம்முடைய வரப்பிரசாதத்தின் மகிமைக்குப் புகழ்ச்சியாக யேசுக்கிறீஸ்துமூலமாய் நம்மைத் தமக்குச் சுவீகாரப்புத்திரராக முன்னியமகம் பண்ணி,

6. அந்த வரப்பிரசாதத்தைக் கொண்டே தம்முடைய பிரியகுமாரனிடத்தில் நம்மைத் தமக்கு உகந்தவர்களாக்கினார்.

7. அவருடைய வரப்பிரசாதப் பெருக்கத்தின்படியே இவருடைய இரத்தத்தால் நமக்கு இவரிடத்தில் பாவப்பொறுத்தலாகிய இரட்சணியம் உண்டாயிருக்கிறது.

---

1. எபேசு நகரம் சின்ன ஆசியாவின் மகா பேர்போன துறை முகப்பட்டணமாம். இதில் உலகத்திலுள்ள ஏழு அதிசயங்களில் ஒன்றாகிய தியானா என்னும் பொய்த் தேவதையின் கோவிலிருந்தது.

8. அந்த வரப்பிரசாதத்தை அவர் சகல ஞானத்திலும், விவேகத்திலும் எங்களிடத்தில் ஏராளமாய்ப் பொழிந்து,

9-10. தாம் நியமித்த காலங்கள் நிறைவேறும்போது பரலோகத்திலுள்ளவைகளும், பூலோகத்திலுள்ளவைகளுமாகிய சகலத்தையும் கிறீஸ்துவுக்குள் புதுப்பிக்கவேண்டுமென்று, தம்முடைய தயவுள்ள சித்தத்தின்படி தமக்குள் தீர்மானித்திருந்த தமது திருவுள இரகசியத்தை எங்களுக்கு அறிவித்தார். (கலாத். 4-4; கொலோ. 1-18.)

11. கிறீஸ்துநாதர்மேல் முன்னே நம்பிக்கை வைத்தவர்களாகிய நாங்கள் அவருடைய மகிமைக்குப் புகழ்ச்சியாயிருக்கும்படியாய்,

12. தமது திருவுளத்தின் ஆலோசனைக்கேற்கச் சகலத்தையும் நடப்பிக்கிற அவருடைய தீர்மானப்படி நாங்கள் முன்நியமிக்கப்பட்டு, அவருடைய சுதந்தரமாக அவருக்குள் அழைக்கப்பட்டிருக்கிறோம்.

13. நீங்களும் உங்கள் இரட்சணியத்தின் சுவிசேஷமாகிய சத்திய வாக்கியத்தைக்கேட்டு, விசுவாசித்தபோது வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட இஸ்பிரீத்துசாந்துவினால் அவருக்குள் முத்திரையிடப்பட்டீர்கள்.

14. சர்வேசுரன் தமது மகிமைக்குப் புகழ்ச்சியாகத் தமக்குச் சொந்தமாக்கிக்கொண்டவர்களைப் பூரணமாய் இரட்சிக்குமளவும் இஸ்பிரீத்துவானவர் நம்முடைய சுதந்தரத்துக்கு அச்சாரமாயிருக்கிறார்.

15. ஆகையால் ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவின்மேல் உங்களுக்குள்ள விசுவாசத்தையும், சகல அர்ச்சிக்கப்பட்டவர்கள்மேலும் உங்களுக்குள்ள அன்பையும் நான் கேள்விப்பட்டு,

16. இடைவிடாமல் உங்களுக்காக ஸ்தோத்திரம்பண்ணி, என்னுடைய ஜெபங்களில் உங்களை நினைவுகூர்ந்து,

17. நம்முடைய கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துவின் தேவனும் மகிமையின் பிதாவுமாயிருக்கிறவர் தம்மை நீங்கள் அறிந்துகொள்வதற்குரிய ஞானமும் தெளிவுமாகிய இஸ்பிரீத்துவின் வரங்களை உங்களுக்குத் தந்தருளவேண்டுமென்றும்,

18. அவர் நம்மை அழைத்ததில் நமக்குண்டாயிருக்கிற நம்பிக்கை இன்னதென்றும், அர்ச்சிக்கப்பட்டவர்களுக்கு அவர் நியமித்திருக்கிற சுதந்தரமாகிய மகிமையின் ஐசுவரியம் ஏதென்றும்,

19. அவருடைய பராக்கிரம வல்லமையின் செய்கையின்படி விசுவாசித்தவர்களாகிய நம்மிடத்தில் அவர் காண்பிக்கும் தமது வல்லமையின் மேலான மகத்துவம் ஏதென்றும் அறிந்துகொள்ளும்படி பிரகாசமுள்ள மனக் கண்களை உங்களுக்குத் தந்தருளவேண்டுமென்றும் (மன்றாடுகிறேன்.)

20. அவர் கிறீஸ்துவை மரித்தோரினின்று உயிர்ப்பித்ததினாலே இந்த வல்லமையை அவரிடத்தில் விளங்கப்பண்ணி, அவரை உன்னதத்திலே,

21. சகல பிராதமிகர், பலவத்தர், சத்துவகர், நாதகிருத்தியருக்கும் மேலாகவும் இவ்வுலகத்திலுமன்றி, மறுவுலகத்திலும் சொல்லப்படுகிற சகல நாமத்திற்கும் மேலாகவும் தமது வலது பாரிசத்திலே ஸ்தாபித்து,

22. எல்லாவற்றையும் அவருடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தினதுமன்றி, அவரைச் சர்வ திருச்சபைக்கும் தலைமையாகக் கொடுத்தார். (சங். 8-8.)

23. அந்தத் திருச்சபை அவருடைய சரீரமாகவும், எல்லாவற்றிலும் எல்லாமுமாக நிறைந்து நிரப்புகிற அவருடைய பூரணமாகவும் இருக்கின்றது.

## 2-ம். அதிகாரம்.

*சகல நன்மையும் கிறீஸ்துநாதரால் நமக்கு வருகிறதென்பதும், அவரே நம்முடைய சமாதானமென்பதும்.*

1. நீங்கள் உங்கள் அக்கிரமங்களினாலும், பாவங்களினாலும் மரித்தவர்களாயிருந்தபோது (அவரே உங்களைப் பிழைப்பித்தார்). (கொலோ. 2-13.)

2. அவைகளில் நீங்களும் ஒருகாலத்திலே இவ்வுலகத்தின் வழக்கத்துக்கேற்றபடியாகவும், நம்பிக்கையற்ற புத்திரரை இப்பொழுது ஆட்கொள்ளுகிற இந்த ஆகாய அதிகாரப் பிரபுவாகிய அரூபிக்கேற்றபடியாகவும் நடந்துவந்தீர்கள்.

3. அவைகளுக்குள் நாமெல்லாரும் ஒருகாலத்தில் உட்பட்டு, நமது மாம்ச இச்சைகளின்படி நடந்து, நம்முடைய மாம்சமும், மனசும் விரும்பினவைகளைச் செய்து, மற்றவர்களைப் போலவே நாமும் சுபாவமாய்த் (தேவ) முனிவின் புத்திரராய் இருந்தோம்.

4. ஆனால் இரக்கத்தில் ஐசுவரியராகிய சர்வேசுரன் நம்மைச் சிநேகித்த தம்முடைய அன்பின் பெருக்கத்தினால்,

5. நாம் பாவத்தால் மரித்தவர்களாயிருக்கும்போதே, கிறீஸ்துநாதரோடுகூட நம்மை உயிர்ப்பித்தார். (அவருடைய வரப்பிரசாதத்தால் இரட்சிக்கப்பட்டிருக்கிறீர்கள்.) (கொலோ. 2-13.)

6. இன்னும் அவர் யேசுக்கிறீஸ்துநாதரிடத்தில் நம்மை ஒருமிக்க எழுப்பி, உன்னதத்திலே அவரோடேகூட உட்காரவுஞ்செய்தார்.

7. ஏனெனில் கிறீஸ்துயேசுவினிடத்தில், அவர் நமதுபேரில் வைத்த தயவினாலே தமது வரப்பிரசாதத்தின் ஏராளமான திரவியத்தைப் பின்வரும் காலங்களில் வெளிப்படுத்தத்தக்கதாக இவ்விதஞ்செய்தார்.

8. ஏனென்றால் வரப்பிரசாதத்தால் விசுவாசத்தைக்கொண்டு இரட்சிக்கப்பட்டிருக்கிறீர்கள். இது உங்களாலாகாமல், சர்வேசுரனுடைய நன்கொடையாயிருக்கிறது. (உரோ. 3-24.)

9. எவனும் மேன்மைபாராட்டாதபடிக்கு, இது கிரியைகளினால் உண்டானதல்ல.

10. ஏனெனில் நாம் நற்கிரியைகளைச் செய்கிறதற்குக் கிறீஸ்து யேசுவுக்குள் சிருஷ்டிக்கப்பட்டுத் தேவனுடைய கைவேலையாயிருக்கிறோம். அவைகளில் நாம் நடக்கும்படி அவர் முன்னதாக அவைகளை ஆயத்தம்பண்ணியிருக்கிறார்.

11. ஆகையால் முன்னே மாம்சத்தின்படி அஞ்ஞானிகளாயிருந்து, மாம்சத்தில் கையினால் செய்யப்படுகிற விருத்தசேதனமுடையவர்களால் விருத்தசேதனமில்லாதவர்களென்று சொல்லப்பட்ட நீங்கள்,

12. அந்தக் காலத்திலே கிறீஸ்துநாதரற்றவர்களும், இஸ்ராயேலருடைய பாத்தியத்துக்குப் புறம்பாக்கப்பட்டவர்களும், உடன்படிக்கைக்கு அந்நியரும், வாக்குத்தத்தத்தில் நம்பிக்கையடையாதவர்களும், இவ்வுலகத்தில் தேவன் இல்லாதவர்களுமாய் இருந்தீர்களென்று நினைத்துக்கொள்ளுங்கள்.

---

3. **தேவமுனிவின் புத்திரர்.** ஜென்மப் பாவத்தால் பிறந்ததினால் தேவ முனிவுக்குப் பாத்திரமான புத்திரரென்று அர்த்தமாம்.

9. **கிரியைகள்** அதாவது: நம்முடைய சொந்தப் பலத்தினாலே நாம் செய்த செய்கைகளால் ஆகாமல் சர்வேசுரனுடைய வரப்பிரசாதத்தால் உண்டானதாம்.

10. **கைவேலை:** நீதிமானாக்கப்பட்டவன் மெய்யாகவே இஷ்டப்பிரசாதத்தால் புது உயிர் அடைந்தவனாயிருப்பதால், சர்வேசுரனுடைய கைவேலை என்னப்படுகிறான்.

12. **நீங்கள் முந்தித் தேவனில்லாதவர்களாயிருந்தீர்கள்.** எண்ணிக்கையில்லாத தேவர்களை வணங்குகிற அஞ்ஞானிகள் தேவனில்லாதிருக்கிறார்களென்று சொல்லுவது

13. முன் ஒருகாலத்திலே தூரமாயிருந்த நீங்கள் இப்போது கிறீஸ்து யேசுவுக்குள்ளானவர்களாய் இருப்பதால், அவருடைய இரத்தத்தினலே (சர்வேசுரனுக்குக்) கிட்டினவர்களானீர்கள்.

14. எப்படியெனில் அவரோ நமக்குச் சமாதான காரணமாயிருந்து, இரு திறத்தாரையும் ஒன்ருக்கி, பகையாக நின்ற பிரிவினையாகிய நடுச்சுவரைத் தம்முடைய சரீரத்திலே தகர்த்து,

15. இரு திறத்தாரையும் தமக்குள்ளே ஒரே புதிய மனுஷனைச் சிஷ்டிக்கும்படிக்குக் கற்பனைகளாகிய நியாயப்பிரமாணத்தைத் தம்முடைய சட்டங்களால் ஒழித்துச் சமாதானத்தை ஏற்படுத்தி,

16. பகையைச் சிலுவையினலே கொன்று, அதினல் இருதிறத்தாரையும் ஒரே சரீரத்தில் சர்வேசுரனேடு உறவாக்கினர்.

17. அன்றியும் அவர் வந்து, தூரமாயிருந்த உங்களுக்கும், சமீபமாயிருந்த அவர்களுக்கும் சமாதானத்தைச் சுவிசேஷமாகப் பிரசங்கித்தார்.

18. ஆகையால் நம்மிருதிறத்தாருக்கும் ஒரே இஸ்பிரீத்துவுக்குள் அவர் மூலமாகவே பிதாவினிடத்தில் அண்டிப்போகக் கிடைத்திருக்கிறது. (உரோ. 5-2.)

19. ஆகையால் நீங்கள் இனி அந்நியரும், பரதேசிகளுமாயிராமல், பரிசுத்தவான்களுடைய நகரத்தாரும், சர்வேசுரனுடைய வீட்டாருமாயிருந்து,

20. அப்போஸ்தலர்கள், தீர்க்கதரிசிகள் என்னப்பட்ட அஸ்திவாரத்தின்மேல் கட்டப்பட்டவர்களாயிருக்கிறீர்கள். அதற்குக் கிறீஸ்து யேசுநாதர்தாமே ஆதிமூலைக்கல்லாயிருக்கிறர்.

21. அவர்மேல் கட்டப்பட்ட எல்லாக்கட்டிடமும் ஆண்டவருடைய பரிசுத்த தேவாலயமாக எழும்புகிறது.

22. அவரில் நீங்களும் இஸ்பிரீத்துசாந்துவினல் சர்வேசுரனுடைய வாசஸ்தலமாகச்சேர்த்துக் கட்டப்பட்டவர்களாயிருக்கிறீர்கள்.

எப்படி? அந்த எண்ணிக்கையில்லாத தேவர்களில் ஒருவனுகிலும் மெய்யான தேவனல்லவென்கிறதினல், அவைகளை ஆராதிக்கிறவர்கள் தேவனில்லாதவர்கள்தான். மெய்யான சர்வேசுரனை ஆராதிக்கிறவன்மாத்திரம் தேவனுள்ளவன் என்றறிக.

21-22. இந்த அதிகாரத்திலே அர்ச். சின்னப்பர் எபேசியரைப்பார்த்து: முன்னே நீங்கள் அஞ்ஞானிகளாயிருக்கும்போது எல்லாப் பாவங்களிலும் அமிழ்ந்தினவர்களாய் ஆத்துமத்தில் மரித்தவர்களாயிருந்தீர்கள். அன்றியும் நீங்கள் இரட்சகரில்லாமலும், தேவப் பிரஜைகளோடு பங்கில்லாமலும், சர்வேசுரன் அவர்களுக்குச் செய்தருளிய வாக்குத்தத்தங்களுக்கு அந்நியருமாயிருந்தீர்கள். மேலும் இந்த நன்மைகளையெல்லாங் கொண்டிருந்த இஸ்ராயேல் பிரஜைகளுக்கும் உங்களுக்கும் தீராப்பகையும் விரோதமுமாயிருந்தது. ஆகிலும், சர்வேசுரனுடைய இலவசமான கிருபையினலே நீங்கள் கிறீஸ்துநாதரை விசுவசித்தவுடனே, அவர் தம்முடைய திரு இரத்தத்தினல் உங்கள் பாவங்களினின்று உங்களை மீட்டு, உங்களுக்கும் இஸ்ராயேல் பிரஜைகளுக்கும் உண்டாயிருந்த பகையாகிய நடுச்சுவரைத் தம்முடைய மாம்சத்திலே அதாவது: தமது பாடுகளினலே தகர்த்துவிட்டு, இஸ்ராயேல் பிரஜைகளுக்கு வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட சகல நன்மைகளுக்கும் உங்களையும் பங்காளிகளாக்கி, உங்களையும் அவர்களையும் ஒரே தேவப் பிரஜைகளாக்கினர். ஆகையால் நீங்களும் அவர்களும் இனி ஒருவருக்கொருவர் அந்நியராயிராமல் கிறீஸ்துநாதராகிய அடிஅஸ்திவார மூலைக் கல்லின்மேலும், மேலஸ்திவாரமாகிய அப்போஸ்தலர்கள் தீர்க்கதரிசிகள்மேலும் இஸ்பிரீத்துசாந்துவினல் கட்டப்பட்ட தேவாலயமாயிருக்கிறீர்கள் என்று விவரிக்கிறர்.

## 3-ம். அதிகாரம்.

*தேவ வாக்குத்தத்தங்களுக்குப் புற ஜாதியாரும் பங்காளிகளாயிருக்கிறார்கள் என்று காண்பிக்கிறார்.*

1. இதினிமித்தமாகச் சின்னப்பனாகிய நான் புற ஜாதியாராகிய உங்களுக்காகக் கிறீஸ்து யேசுநாதரைப்பற்றிக் கட்டுண்டவனாயிருக்கிறேன். (அப். 28-16.)

2. ஏனெனில் உங்களைக் குறித்து எனக்கு அருளப்பட்ட தேவ கிருபையின் உத்தியோகத்தைப்பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்களே.

3. அதாவது, நான் முன்னே சுருக்கமாய் எழுதினதுபோல ஒரு பரமரகசியம் எனக்குக் காட்சியில் வெளிப்படுத்தப்பட்டது.

4. அதை நீங்கள் வாசிக்கும்போது கிறீஸ்துநாதருடைய பரம இரகசியத்தில் எனக்குள்ள அந்த அறிவை அறிந்துகொள்ளலாம்.

5. இந்தப் பரமரகசியம் இப்போது அவருடைய பரிசுத்த அப்போஸ்தலர்களுக்கும் தீர்க்கதரிசிகளுக்கும் இஸ்பிரீத்துவினால் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறதுபோல, முந்தின காலங்களில் மனுமக்களுக்கு வெளியாக்கப்பட்டதில்லை.

6. அதாவது, புறஜாதியார் சுவிசேஷத்தின் வழியாய்க் கிறீஸ்துநாதருக்குள் உடன்சுதந்தரராகவும், உடன் அங்கத்தாராகவும், அவருடைய வாக்குத்தத்தத்துக்கு உடன் பங்காளிகளாகவும் இருக்கிறார்கள் என்பதே (இந்தப் பரம ரகசியமாம்.)

7. சர்வேசுரனுடைய வல்லபச் செயலின்படி எனக்கு அளிக்கப்பட்ட நன்கொடையாகிய வரப்பிரசாதத்தினாலே நான் அந்தச் சுவிசேஷத்துக்கு ஊழியனானேன்.

8. அர்ச்சிக்கப்பட்டவர்கள் அனைவரிலும் அற்பனாகிய எனக்கு அருளப்பட்ட இந்த வரப்பிரசாதம் எதுக்கெனில், கிறீஸ்துவின் அளவறுக்கப்படாத ஐசுவரியங்களை நான் புற ஜாதியாருக்குள் சுவிசேஷமாய்ப் பிரசங்கிக்கவும், (1. கொ. 15-9.)

9. சகலத்தையும் சிருஷ்டித்த சர்வேசுரனிடத்தில் ஆதிமுதல் மறைந்திருந்த இரகசியங்களின் நியமம் இன்னதென்று சகலருக்கும் பிரத்தியட்சமாக்கவும்,

10-11 இவ்விதமாய்ச் சர்வேசுரன் அநவரதகாலமாய் நம்முடைய கர்த்தராகிய கிறீஸ்துயேசுநாதருக்குள் செய்திருந்த தீர்மானத்தின்படியே அவருடைய நானாவித ஞானமானது திருச்சபைமூலமாய் உன்னதங்களிலுள்ள பிராதமிகர்களுக்கும், பலவத்தர்களுக்கும் தெரியப்படும்படியாகவும் (இந்த வரப்பிரசாதம் எனக்கு அளிக்கப்பட்டது)

12. அவரிடத்திலே நமக்கு நம்பிக்கையும், அவரைப்பற்றும் விசுவாசத்தினாலே (சர்வேசுரனிடத்தில்) தைரியமாய் அண்டிப்போவதற்கான வரமுமுண்டாயிருக்கிறது.

13. ஆகையால் உங்கள் நிமித்தம் நான் பட்டனுபவிக்கிற துன்ப உபத்திரவங்களினால் நீங்கள் சோர்ந்துபோகாதிருக்கும்படி உங்களை மன்றாடுகிறேன். அவைகள் உங்களுக்கு மகிமையாயிருக்கின்றது.

14. இதுகாரியத்தின் நிமித்தம் நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய பிதாவின் முன்பாக நான் முழந்தாட்படியிட்டு,

1. இது உரோமாபுரியில் அர்ச். சின்னப்பர் (61-63) காவலில் இருந்த வருஷங்களைக் குறிக்கிறது.

15. பரலோகத்திலும், பூலோகத்திலுமுள்ள எவ்வித பிதாத்துவ நாமகாணத்துக்கும் ஊற்றாகிய அவரிடம் பிரார்த்திக்கிறதாவது :

16. நீங்கள் அவருடைய இஸ்பிரீத்துவினால் உள்ளாங்க மனிதனை வல்லமையால் பலபடவும்,

17. விசுவாசத்தினாலே கிறீஸ்துநாதர் உங்கள் இருதயங்களில் வாசம் பண்ணவும், நீங்கள் பரம அன்பில் வேரூன்றி நிலைபெற்று, (கோலோ. 2-7.)

18. (அந்த அன்பின்) விசாலம், நீளம், உயரம், ஆழம் இன்னதென்று சகல அர்ச்சிக்கப்பட்டவர்களோடுங் கூட நீங்களும் அளாவி உணரவும்,

19 அறிவுக்கெட்டாததாகிய கிறீஸ்துவினுடைய அன்பை அறிந்துகொள்ளவல்லவர்களாகவும், கடவுளுடைய சர்வ சம்பூரணத்தாலும் நிறையப்படவும், அவர் தம்முடைய மகிமையின் திரவியங்களுக்குத்தக்கபடி உங்களுக்கு அளிக்கருளவேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

20 நமக்குள் முயற்சியாயிருக்கிற தமது வல்லபத்தைக்கொண்டு நாம் கேட்பதற்கும், எண்ணுவதற்கும் மிகவும் அதிகமாய்ச் சகலத்தையும் செய்ய வல்லமையுள்ளவராகிய அவருக்குத்

21. திருச்சபையில் கிறீஸ்துநாதர் மூலமாய்த் தலைமுறை தலைமுறைகளாகச் சதாகாலங்களிலும் ஸ்தோத்திரம் உண்டாகக்கடவது ஆமென்.

## 4-ம். அதிகாரம்.

அந்நியோன்னிய பிறசிநேகமாயிருக்கவும், புது மனிதனை அணிந்துகொண்டு, பழைய மனிதனாகிய துர்க்குணங்களை நீக்கவும் புத்திசொல்லுகிறார்.

1. ஆகையால் ஆண்டவரைக் குறித்துக் கட்டுண்டவனாகிய நான் உங்களைக் கேட்டுக்கொள்வதேதெனில் : நீங்கள் அழைக்கப்பட்டிருக்கிற அழைப்புக்கு யோக்கியமாய் நடந்து, (1. கொ. 6-20; பிலி. 1-27.)

2. எவ்வித தாழ்ச்சியோடும், சாந்தத்தோடும், பொறுமையோடும், ஒருவரொருவரைப் பரம அன்போடு தாங்கிக்கொண்டு,

3. சமாதான பந்தனத்தில் மன ஒற்றுமையைச சாக்கிரதையாய்க் காப்பாற்றிக்கொள்ளுங்கள். (உரோ. 12-10.)

4. உங்களுக்கு உண்டான அழைப்பினால் ஒரே நம்பிக்கைக்கு நீங்கள் அழைக்கப்பட்டிருக்கிறதுபோல, உங்களுக்கு ஒரே சரீரமும், ஒரே ஆத்துமமும் உண்டு.

5. ஒரே ஆண்டவரும், ஒரே விசுவாசமும், ஒரே ஞானஸ்நானமும் உண்டு.

6. சகலருக்கும் தேவனும பிதாவுமானவர் ஒருவரே. அவரே எல்லாருக்கும் மேலாய், எல்லாவற்றிலும், நம்மெல்லாருக்குள்ளும் இருக்கிறவர். (மலாக். 11-10.)

7. கிறீஸ்துநாதருடைய ஈகையின் அளவுக்குத் தக்கதாக நம்மில் ஒவ்வொருவருக்கும் வரப்பிரசாதங்கொடுக்கப்பட்டிருக்கிறது. (1 கொ. 12-11 ; 2. கொ. 10-13.)

8. ஆகையால் அவர் உன்னதத்திற்கு ஏறினபோது சிறைப்பட்டவர்களைச் சிறையாக்கி, மனிதர்களுக்கு வரங்களைக்கொடுத்தாரென்று சொல்லியிருக்கிறது. (சங். 67-49.)

9. ஏறினார் என்பதற்கு அவர் முந்திப் பூமியின் பாதாளஸ்தலத்திலே இறங்கினார் என்பதேயன்றி, வேறு அர்த்தமென்ன ?

15. பிதாத்துவம் : கடவுளே சம்மனசுகளுக்கும் மனுஷர்களுக்கும் பிதாவாயிருக்கிறார். பிதா என்று அழைக்கப்படும் யாவரும் அவரிடமிருந்து அந்தப்பட்டத்தைப் பெற்றுக்கொள்ளுகிறார்களொழிய, மற்றப்படியல்ல.

10. இறங்கினவரே எல்லாவற்றையும் நிரப்பத்தக்கதாக எல்லா வானமண்டலங்களுக்கும் மேலாக ஏறினவர்.

11. அவரே சிலரை அப்போஸ்தலராகவும், சிலரைத் தீர்க்கதரிசிகளாகவும், சிலரைச் சுவிசேஷகராகவும், சிலரை மேய்ப்பராகவும், போதகர்களாகவும் கொடுத்திருக்கிறார். (1. கொ. 12-28.)

12. ஏதுக்கெனில் அர்ச்சிக்கப்பட்டவர்கள் உத்தமதனத்தை அடையும் பொருட்டுச் சுவிசேஷத்தின் வேலைக்காகவும், கிறீஸ்துவினுடைய சரீரமாகிய சபையைக்கட்டி எழுப்புவதற்காகவும்,

13. தேவகுமாரனைப்பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் நாம் ஒற்றுமைப்பட்டுப் பூரண மனுஷராக கிறீஸ்துநாதருடைய நிறைவான வயதின் அளவுக்குத்தக்கது சேருமட்டும் இவர்கள் கொடுக்கப்பட்டிருக்கிறார்கள்.

14. ஆகையால் நாம் இனி அலைக்கழிக்கப்படுகிற குழந்தைகளாயிராமல், மனிதருடைய அக்கிரமத்தினாலும், தப்பறைக்குள் வஞ்சகமாய் இழுக்கும் சூதுவாதினாலும் உண்டாகும் எவ்வித போதகக் காற்றில் சுழன்று திரியாமலும்,

15. பரம அன்பில் உண்மையோடு நடந்து, தலைமையாயிருக்கிற கிறீஸ்துநாதரிடத்தில் எல்லாவற்றிலும் வளருவோமாக.

16. அவராலே சரீரமுழுவதும், அதற்கு உதவியான சகல கணுக்களினாலும் பொருந்தி இசைக்கப்பட்டு, ஒவ்வொரு அவயவமும் தன் தன் அளவுக்குத் தக்கது கிரியையைச் செய்கிறபடியே, அது அன்பினாலே தனக்குப் பத்தி விர்த்திக் கேதுவாகச் சரீர வளர்ச்சியை உண்டாக்குகிறது.

17. ஆகையால் நான் உங்களுக்கு ஆண்டவருக்குள் சாட்சியமாய் அறிவித்துச் சொல்லுவதேதெனில்: புறஜாதிகள் தங்கள் வீணான சிந்தனைகளின்படி நடக்கிறதுபோல, இது முதல் நீங்கள் நடவாதிருங்கள். (உரோ. 1-21.)

18. அவர்கள் அந்தகாரத்தால் இருளடைந்த புத்தியையுடையவர்களாய், தங்கள் இருதயக் குருட்டாட்டத்தின் நிமித்தம் தங்களிலுள்ள அறியாமையினாலே தேவ ஜீவனுக்கு அன்னியராயிருந்து,

19. நம்பிக்கையிழந்தவர்களாய், எல்லா அசுத்த கிரியைகளையும் தீராத ஆவலோடே நிறைவேற்றும்படி காமவிகாரத்துக்குத் தங்களைக் கையளித்திருக்கிறார்கள்.

20. நீங்களோ கிறீஸ்துநாதரை இவ்விதமாய்க் கற்றுக்கொள்ளவில்லையே.

21. யேசுநாதரிடத்திலுள்ள சத்தியத்தின்படியே நீங்கள் அவருக்குக் காது கொடுத்து, அவரால் போதிக்கப்பட்டிருக்கிறீர்களோயாகில்,

22. உங்கள் முந்தின நடக்கையின்படி மோசம்போக்குவதற்கு ஏதுவான இச்சைகளாலே கெட்டுப் போகிற பழைய மனிதனை உரிந்து போடுங்கள். (கொலோ. 3-8.)

23. உங்கள் மனதில் புதிதான ஞானமுடையவர்களாகி, (உரோ. 6-4.)

24. நீதியிலும், உண்மையான பரிசுத்ததனத்திலும் சர்வேசுரனுடைய சாயலாகச் சிருஷ்டிக்கப்பட்ட புது மனிதனைத் தரித்துக்கொள்ளுங்கள். (கொலோ. 3-12.)

11-13. இந்த இரண்டு வசனங்களால் நமது ஆண்டவரே தமது திருச்சபையை ஒன்றிப்பிலும் உண்மையிலும் காப்பாற்றும்படி அதில் மேய்ப்பர்களும் போதகர்களும் எந்நாளும் நீடித்துத் தொடர்ந்துவரும்படி செய்திருக்கிறாரென்று தெளிவாய்த் துலங்குகிறது.

25. அன்றியும் நாம் ஒருவருக்கொருவர் அவயவங்களாயிருக்கிறபடியால், பொய்யைத் தள்ளி, உங்களில் ஒவ்வொருவரும் தங்கள் பிறனோடு உண்மையைப் பேசுவீர்களாக. (சக். 8-16; 1. இரா. 2-1.)

26. (கோபிப்பதில்) பாவம் வராமல் கோபியுங்கள். உங்கள் கோபத்தின்மேல் சூரியன் அஸ்தமிக்காதிருக்கக்கடவது. (சங். 4-5.)

27. பசாசுக்கு இடங்கொடாதிருங்கள். (யாக். 4-7.)

28. திருடிவந்தவன் இனித் திருடாதிருப்பானாக; இக்கட்டுப்படுகிறவனுக்குக் கொடுக்க வகையுள்ளவனாயிருக்கும்படி அவன் தன் கைகளினாலே நலமான வேலைசெய்து, பிரயாசப்படுகிறதே தாவிளை.

29. கெட்ட பேச்சு ஒன்றும் உங்கள் வாயிலிருந்து புறப்பட வேண்டாம். விசுவாசத்தின் நல்விர்த்திக்கேதுவான பேச்சு உண்டானால், கேட்கிறவர்களுக்குப் பத்தியை வருவிக்கும்படி அதைப் பேசுங்கள்.

30. அன்றியும் நீங்கள் மீட்கப்படும் நாளுக்காகச் சர்வேசுரனுடைய இஸ்பிரீத்துசாந்துவினால் முத்திரையிடப்பட்டிருக்கக்கொள்ள, அவரை மனநோகப் பண்ணாதேயுங்கள்.

31. சகலவித கசப்பும், கோபமும், எரிச்சலும், கூக்குரலும், தூஷணமும், இது முதலான எவ்வித துர்க்குணமும் உங்களைவிட்டு விலகக்கடவது.

32. ஆனால் ஒருவருக்கொருவர் தயவாயும், இரக்கமாயுமிருந்து, கிறீஸ்துநாதரில் சர்வேசுரன் உங்களுக்கு மன்னித்ததுபோல, நீங்களும் ஒருவருக்கொருவர் மன்னித்துக்கொள்ளுங்கள். (கொலோ. 3-13.)

## 5-ம். அதிகாரம்.

*கிறீஸ்துநாதரைப் பின்பற்றும்படி புத்தி சொல்லி, சமுசாரிகளுடைய கடமைகளை விவரித்துக் காட்டுகிறார்.*

1. ஆகையால் நீங்கள் மிகவும் பிரியமான பிள்ளைகளைப்போல, சர்வேசுரனைப் பின்பற்றுகிறவர்களாயிருந்து,

2. கிறீஸ்துநாதர் நமக்காகத் தம்மைச் சர்வேசுரனுக்குப் பரிமள வாசனையுள்ள காணிக்கையாகவும், பலியாகவும் ஒப்புக்கொடுத்து, நம்மைச் சிநேகித்ததுபோல நீங்களும் சிநேகத்தில் நடந்துவருவீர்களாக. (அருள். 13-34; 15-12; 1. அரு. 4-21.)

3. மேலும் அர்ச்சிக்கப்பட்டவர்களுக்கு யோக்கியமானபடி எவ்வித வேசித்தனமும், அசுத்தமும், பொருளாசையும் ஆகிய இவைகளின் பேர் முதலாய் உங்களுக்குள்ளே சொல்லப்படக் கூடாது. (கொலோ. 3-5.)

4. இன்னமும் வெட்கங்கெட்டதனமும், மூடப்பேச்சும், சரசபரியாசமும் உங்கள் வாயில் வராதிருப்பதாக. இவைகளெல்லாம் நம்முடைய அழைப்புக்கு அடாதவைகள். ஆனால் நன்றியறிந்த ஸ்தோத்திர வசனமே தகும்.

28. நலமான வேலை என்பதின் அர்த்தம் என்னவெனில் ஆத்துமத்துக்குக் கெடுதலில்லாத தொழிலைச்செய்வதென்றர்த்தமாம். ஏனென்றால் ஆத்துமத்துக்குக் கெடுதலான அநேக தொழில்களுண்டு. அப்படிப்பட்ட தொழிலைச்செய்து பணம் சம்பாதித்துத் தர்மம் செய்தாலும் அந்தத் தர்மம் தர்மமல்லவென்றறிக.

5. ஏனெனில் எவ்வித விபசாரக்காரனும், அசுத்தனும், விக்கிரகங்களுக்கு ஊழியனாகிய பொருளாசைக்காரனும், கிறீஸ்துநாதருடையவும், சர்வேசுரனுடையவும் ராச்சியத்திலே பங்குச்சுதந்தரம் அடையமாட்டானென்று அறிந்து உணர்ந்துகொள்ளுங்கள். (கலாத். 5-21.)

6. வீண் வார்த்தைகளால் ஒருவனும் உங்களை மயக்க இடங்கொடாதிருங்கள். ஏனெனில் இப்படிப்பட்டவைகளின் நிமித்தமே சர்வேசுரனுடைய கோபம் அவநம்பிக்கையின் புத்திரர் மேல் வருகின்றது. (மத். 24-4; மாற். 13-5; லூக். 21-8; 2. தெச. 2-3.)

7. ஆகையால் அப்படிப்பட்டவர்களோடே உங்களுக்குச் சம்பந்தம் வேண்டாம்.

8. இதற்குமுன் நீங்கள் இருளாயிருந்தீர்கள். இப்பொழுதோ கர்த்தருக்குள் ஒளியாயிருக்கிறீர்கள். ஒளியின் புத்திரராக நடந்துகொள்ளுங்கள்.

9. ஒளியின் கனியோ சகலவித நன்மைத்தனத்திலும், நீதியிலும், சத்தியத்திலும் விளங்குகிறது.

10. சர்வேசுரனுக்குப் பிரியமுள்ளது இன்னதென்று நீங்கள் ஆராய்ந்து பார்த்து,

11. பலனில்லாத இருள்களின் கிரியைகளோடு நீங்கள் கலவாதிருப்பதன்றியே, அவைகளைக் கடிந்துகொள்ளுங்கள்.

12. ஏனெனில் அவர்களால் இரகசியத்தில் செய்யப்படுகிறவைகளைச் சொல்லுகிறதும் வெட்கக்கேடாயிருக்கின்றது.

13. கண்டிக்கப்படுகிற அவைகளெல்லாம் வெளிச்சத்தில் வெளியாக்கப்படுகின்றன. ஏனெனில் சகலத்தையும் வெளியாக்குவது வெளிச்சமாயிருக்கிறது.

14. இதின் நிமித்தமே: நித்திரை செய்கிறவனே, நீ எழுந்து, மரித்தோரைவிட்டுப் புறப்படு; அப்போது கிறீஸ்துநாதர் உன்னைப் பிரகாசிப்பார் என்று சொல்லியிருக்கின்றது.

15. ஆதலால் சகோதரரே, நீங்கள் எவ்வளவு சாக்கிரதையாய் நடக்கவேண்டுமென்று பார்த்துக்கொள்ளுங்கள். புத்தியீனரைப்போல் நடவாமல், (கொலோ. 4-5.)

---

5. பொருளாசை விக்கிரகங்களுக்கு ஊழியமென்று சொல்வதெப்படி? உன் திரவியமெங்கேயோ அங்கே உன் இருதயமும் இருக்குமென்று யேசுநாதர் திருவுளம்பற்றினது போல, மிதமிஞ்சின பொருளாசைக்காரன் தன் திரவியங்களை ஒரு தெய்வம்போல் எண்ணி, அவைகளின்பேரில் தன் நம்பிக்கையெல்லாம் வைத்து, அவைகளுக்குத் தன் இருதயத்தையும், மனதையும், ஆத்துமத்தையும் அடிமையாக்கி, அவைகளுக்கு மெய்யாகவே ஆராதனை பண்ணுகிறான் என்கிறதினாலே அந்தப்பொருளாசை விக்கிரகங்களுக்கு ஊழியமென்று சொல்லப்படும்.

11-12-13. கெட்டவர்களுடைய இரகசியமான துர்க்கிரியைகளுக்கு நீங்கள் எவ்விதத்திலும் பாத்தியப்படாதிருப்பதுமன்றி, அறிவாகிய ஒளியின் புத்திரராகிய நீங்கள் அப்படிப்பட்ட கெட்ட கிரியைகளை அரோசித்துத் தைரியமாய் கண்டிக்கக் கடவீர்கள். அந்தக் கெட்ட கிரியைகள் இன்னதென்று இங்கே சொல்லமாட்டேன். ஏனெனில், அவைகளைச் சொல்லுகிறது முதலாய் வெட்கக்கேடாயிருக்கிறது. கெட்டவர்கள் இரகசியமாய்ச் செய்கிற அந்தக் கிரியைகளை நீங்கள் கண்டிக்கும்போது அவைகளைச் செய்கிறவர்கள் வெளியாக்கப்பட்டு வெட்கப்படுவார்கள். நீங்களோ ஒளியின் புத்திரரென்று விளங்குவீர்களென்று அர்த்தமாம். வெளிச்சத்தால் நல்லது பொல்லாதது தெரியவருவதுபோல், ஞான வெளிச்சமாகிய சுவிசேஷ போதகத்தால் தின்மையெல்லாம் வெளியாகிறது.

16. காலம் கெட்டுப்போயிருக்கிற படியால், போன காலத்தைமீட்டு, ஞானிகளைப்போல் நடங்கள்.

17. ஆகையால் நீங்கள் மதியற்றவர்களாயிராமல், சர்வேசுரனுடைய சித்தம் இன்னதென்று உணர்ந்துகொள்ளுங்கள். (உரோ. 12-2; 1. தெச. 4-3.)

18. காம விகாரத்துக்கு ஏதுவான மதுபானத்தால் லாகிரிகொள்ளாதிருங்கள். ஆனால் இஸ்பிரீத்துசாந்துவினால் நிரப்பப்பட்டு,

19. சங்கீதங்களிலும், கீர்த்தனைகளிலும், ஞானப்பாட்டுகளிலும் உங்களுக்குள் சம்பாஷித்து, உங்கள் இருதயங்களில் ஆண்டவருக்குக் கீர்த்தனைகளும் சங்கீதங்களும் பாடுங்கள்.

20. எல்லாருக்காகவும் நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய நாமத்தினாலே பிதாவாகிய சர்வேசுரனுக்கு இடைவிடாமல் நன்றியறிந்த ஸ்தோத்திரம்பண்ணி,

21. கிறீஸ்துநாதருடைய பயத்தில் ஒருவருக்கொருவர் கீழ்ப்பட்டிருப்பீர்களாக.

22. மனைவிகள் கர்த்தருக்கென்றாற்போல் தங்கள் புருஷர்களுக்குக் கீழ்ப்படியக்கடவார்கள். (ஆதி. 3-16; கொலோ. 3-18.)

23. ஏனெனில் கிறீஸ்துநாதர் திருச்சபைக்குத் தலைவராயிருக்கிறதுபோல, புருஷனானவன் தன் மனைவிக்குத் தலைவனாயிருக்கிறான். அவர் தம்முடைய சரீரத்தின் இரட்சகராய் இருக்கிறாரல்லோ. (1. கொ. 11-3.)

24. ஆனால் திருச்சபை கிறீஸ்துநாதருக்குக் கீழ்ப்பட்டிருக்கிறதுபோல, சகலத்திலும் மனைவிகள் புருஷர்களுக்குக் கீழ்ப்பட்டிருக்கிறார்கள்.

25. புருஷர்களே, கிறீஸ்துநாதர் திருச்சபையை நேசித்து, அதற்காகத் தம்மைத்தாமே கையளித்ததுபோல, நீங்களும் உங்கள் மனைவிகளை நேசியுங்கள். (கொலோ. 3-19.)

26. கிறீஸ்துநாதர் ஜீவ வாக்கியத்தைக்கொண்டு ஜலஞானஸ்நானத்தால் அதைச் சுத்திகரித்துப் பரிசுத்தமாக்கவும்,

27. கறைதிரை இவை முதலியவைகள் ஒன்றுமில்லாமல், அர்ச்சிக்கப்பட்டதும், மாசற்றதுமான மகிமையுள்ள சபையாக அதைத் தமக்குமுன் துலங்கப்பண்ணவும் தம்மைத்தாம் கையளித்தாரே.

28. அப்படியே, புருஷர்களும் தங்கள் மனைவிகளைத் தங்கள் சரீரத்தைப் போல் நேசிக்கக் கடவார்கள். தன் மனைவியை நேசிக்கிறவன் தன்னைத் தானே நேசிக்கிறான்.

16. காலத்தை மீட்டுக்கொள்ளுங்கள் என்பதின் கருத்தாவது: இக்காலங்கள் கெட்டவைகளாயிருக்கிறபடியினாலே எச்சரிக்கையோடும், விமரிசையோடும், விழிப்போடுமிருந்து எவ்விதத்திலும் காலத்தைப் புண்ணிய வர்த்திப்புக்குப் பிரயோசனமாக்கிக்கொள்ளுங்கள். அவனவன் இதுவரையில் சீவித்த சீவியத்தை இப்போது யோசித்துப் பார்த்தால், அதில் அநேக காலம் வீணாய்க் கெட்டுப்போயிற்றென்று காண்பான். அவன் இவ்விதமாய் நஷ்டமாக்கின காலத்துக்குப் பரிகாரஞ் செய்து அந்தக்காலத்தை மீட்கும்படி சுறுசுறுப்போடு புண்ணிய சம்பத்துக்களை அதிகமாய் தேடிக்கொள்ளவேண்டுமென்பது கருத்து.

24. திருச்சபை கிறீஸ்துநாதருக்குக் கீழ்ப்படிந்திருக்கிறதுபோல் என்பதினால் அர்ச். சின்னப்பர் சத்திய திருச்சபை எந்நாளும் கிறீஸ்துநாதருக்குக் கீழ்ப்படிந்திருக்கிறதென்றும், சத்தியத்தை விட்டுத்தவறாமல், உலக முடியுமட்டும் மாசுபடாமலும், வேறுபடாமலும் அவருக்குப் பிரமாணிக்கமாயிருக்குமென்றும் காட்டுகிறார்.

29. எவனானாலும் தன் மாம்சத்தை ஒருபோதும் பகைத்ததில்லை. ஆனால் கிறீஸ்துநாதர் திருச்சபைக்குச் செய்கிறதுபோல அவனவன் தன் சரீரத்தைப் போஷித்துப் பேணிக்கொண்டு வருகிறான்.

30. ஏனெனில் நாம் அவருடைய சரீரத்தின் அவயவங்களும், மாம்சத்தில் மாம்சமும், எலும்பில் எலும்புமாயிருக்கிறோம்.

31. இதினிமித்தம் மனுஷனானவன் தன் தந்தை தாயைவிட்டு, தன் மனைவியோடே சார்ந்து, இருவரும் ஒரே மாம்சமாயிருப்பார்கள். (ஆதி. 2-24; மத். 19-5.)

32. இது பெரிய தேவதிரவிய அனுமானமாயிருக்கின்றது. கிறீஸ்துநாதரிலும், திருச்சபையிலும் என்று சொல்லுகிறேன்.

33. அன்றியும் உங்களில் ஒவ்வொருவனும் தன் மனைவியைத் தன்னைப்போல் நேசிப்பானாக. மனைவியோ தன் புருஷனுக்குப் பயந்து நடப்பாளாக.

## 6-ம். அதிகாரம்.

பிள்ளைகள், பெற்றோர், எஜமான்கள், ஊழியர் இவர்களுடைய கடமைகளும், கிறீஸ்துவனுடைய யுத்த ஆயுதங்களும்.

1. பிள்ளைகளே, உங்கள் பெற்றோருக்கு ஆண்டவரிடத்தில் கீழ்ப்படியுங்கள். இது நியாயமாமே.

2. உன் பிதாவையும், மாதாவையும் சங்கித்திருப்பாயாக. (யாத். 20-17; மத். 15-4.)

33. சத்திய விசுவாசமுள்ள கிறீஸ்துவர்களே, அர்ச். சின்னப்பருடைய வாக்கியங்களினாலே உங்கள் அந்தஸ்தின் மேன்மையையும் உங்களுக்குண்டான கடமைகளையும் நன்றாய் உணர்ந்து அறிந்துகொள்ளக்கடவீர்கள். கிறீஸ்துவர்களுடைய விவாகபந்தனமானது கிறீஸ்துநாதருக்கும், திருச்சபைக்குமுள்ள ஞானப் பந்தனத்துக்கு அடையாளமாயிருக்கிறது. அதெப்படியென்றால்: நீங்கள் அறிந்திருக்கிறபடியே ஆதித் தகப்பனாகிய ஆதாமுக்குச் சர்வேசுரன் ஆழ்ந்த நித்திரையையனுப்பி, அவனுடைய விலாவிலிருந்து ஓர் எலும்பை எடுத்து, அதை ஒரு ஸ்திரீயாகச் சிருஷ்டித்து, அவளை ஆதாமுக்கு மனைவியாகக் கொடுத்தார். மேலும் அவர்கள் விவாகத்தை ஆசீர்வதித்து, அதுமுதல் மனிதன் தன் தந்தை தாயை விட்டுத் தன் மனைவியுடன் இசைந்து இருவரும் ஒரே சரீரமாக இருக்கக்கடவார்களென்று அருளிச்செய்தார். அப்படியே யேசுநாதர் தாம் சிலுவையில் அறையுண்டு மரண நித்திரையடைந்தபோது ஈட்டியினால் திறக்கப்பட்ட தம்முடைய திரு விலாவிலே நின்று புறப்பட்ட திரு இரத்தத்தினாலும் தண்ணீராலும் குறிக்கப்பட்ட ஞானஸ்நானத்தின் வழியாகத் திருச்சபையைக்கழுவி, கறைதிரையில்லாததும், மாசற்றதுமான பத்தினியாகத் தமக்குமுன் நிறுத்திக்கொண்டார். ஆகையால் கிறீஸ்துவர்களுடைய விவாகமானது கிறீஸ்துநாதருக்கும் திருச்சபைக்கும் உண்டான இந்த ஞான ஐக்கியத்துக்கு அடையாளமாயிருக்கிறதினாலே இது பெரியதேவதிரவிய அனுமானமென்று அர்ச். சின்னப்பர் சொல்லுகிறார். ஆகையால் திருச்சபையானது தன் பத்தாவாகிய கிறீஸ்துநாதரைச் சங்கித்து, நேசித்து, வணங்கிக் கீழ்ப்படிவதுபோல, மனைவியானவள் தன் பத்தாவைக் கிறீஸ்துநாதருடைய ஸ்தானாபதியென்று பாவித்து, அவனைச் சங்கித்து, நேசித்து, வணங்கிக் அவனுக்குக் கீழ்ப்படிவாளாக. அன்றியும் கிறீஸ்துநாதர் திருச்சபையை நேசித்து, ஆதரித்துப் போஷித்துப் பேணி, இடைவிடாமல் காப்பாற்றிக்கொண்டு வருவதுபோல், புருஷனானவன் தன் மனைவியை நேசித்துப் பேணி, நடத்தி, அவளை இடைவிடாமல் காப்பாற்றிக்கொண்டு வரக்கடவானென்று அறிவீர்களாக.

1. ஆண்டவரிடத்தில் கீழ்ப்படியுங்கள் என்னும்போது ஆண்டவரைக்குறித்தும், ஆண்டவருடைய கற்பனைகளுக்கு விரோதமில்லாத காரியங்களிலும் என்று அர்த்தமாம். ஏனெனில் தாய் தகப்பன் தங்கள் பிள்ளைகளுக்குச் சர்வேசுரனுடைய சித்தத்துக்கும், கற்பனைகளுக்கும் விரோதமான காரியங்களைக் கற்பித்தால், அப்படிப்பட்ட சமயங்களில் அவர்களுக்குக் கீழ்ப்படியவொண்ணாதென்றறிக.

3. இது, நீ நன்றாயிருப்பதற்கும், பூமியிலே நீ நீண்ட ஆயுசுள்ளவனாயிருப்பதற்கும் என்கிற வாக்குத்தத்தத்தையுடைய முதல் கற்பனையாயிருக்கின்றது.

4. தகப்பன்மார்களே, நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்குக் கோபமூட்டாதிருங்கள். ஆனால் அவர்களை ஆண்டவருக்கேற்க ஒழுக்கத்திலும், கண்டிப்பிலும் வளர்ப்பீர்களாக.

5. ஊழியரே, கிறிஸ்துநாதருக்குக் கீழ்ப்படிகிறதுபோல், உங்கள் லௌகீக எஜமான்களுக்கு அச்ச நடுக்கத்தோடும், இருதய நேர்மையோடும் கீழ்ப்படியுங்கள். (கொலோ. 3-22; தீத்து. 2-9; 1. இரா. 2-18.)

6. மனிதருக்குப் பிரியப்படுகிறவர்களைப்போல் பார்வைக்கு ஊழியஞ்செய்யாமல், கிறீஸ்துவின் ஊழியக்காரரைப்போல் மனப்பூர்வமாய்ச் சர்வேசுரனுடைய சித்தத்தை நிறைவேற்றுங்கள்.

7. மனிதர்களுக்கென்றாற்போலல்ல, ஆண்டவருக்கென்றே நல்ல மனதோடு ஊழியஞ் செய்யுங்கள்.

8. ஏனெனில் அடிமையானாலுஞ்சரி, சுயாதீனனானாலுஞ்சரி, அவனவன் என்ன நன்மைசெய்திருப்பானோ, அதற்குத் தக்கது ஆண்டவரிடத்தில் பிரதிபலன் அடைவான் என்று அறிந்துகொள்ளுங்கள்.

9. எஜமான்களே, நீங்களும் உங்கள் மிரட்டல்களை அடக்கி, அவர்களுக்கு அவ்விதமே செய்யக்கடவீர்கள். அவர்களுக்கும், உங்களுக்கும் எஜமானானவர் மோட்சத்திலிருக்கிறாரென்றும், அவரிடத்தில் பாரபட்சமில்லையென்றும் அறிந்துகொள்ளுங்கள். (கலாத். 2-6.)

10. கடைசியாய், சகோதரரே, கர்த்தரிடத்திலும், அவருடைய சர்வ வல்லப சக்தியிலும் திடங்கொள்ளுங்கள்.

11. நீங்கள் பசாசின் தந்திர சர்ப்பனைகளுக்கு எதிர்த்து நிற்கத் திராணியுள்ளவர்களாய் இருக்கும்படிக்குச் சர்வேசுரனுடைய போராயுதங்களை அணிந்துகொள்ளுங்கள். (உரோ. 13-12.)

12. ஏனெனில் நமக்குள்ள போராட்டம் மாம்சத்தோடும், இரத்தத்தோடுமல்ல; துரைத்தனங்களோடும், வல்லமைகளோடும் இந்த அந்தகார லோகாதிபதிகளோடும், ஆகாசமண்டலங்களிலுள்ள அக்கிரம அரூபிகளோடும் நாம் போராட வேண்டியிருக்கிறது.

13. இதினிமித்தம் பொல்லாத நாளிலே அவைகளை எதிர்த்து நிற்கவும், எல்லாக் காரியங்களிலும் நீங்கள் உத்தமராய் நிலைநிற்கவும் திராணியுள்ளவர்களாயிருக்கும்படிக்குச் சர்வேசுரனுடைய போராயுதங்களை எடுத்துக்கொள்ளுங்கள்.

14. ஆதலால் நிலைமையாய் நின்று, சத்தியத்தில் உங்கள் இடையைவரிந்து கட்டுங்கள்; நீதியின் மார்க்கவசத்தைப் பூண்டுகொள்ளுங்கள்.

15. சமாதான சுவிசேஷத்துக்கு ஆயத்தமாகிய பாதரட்சையை உங்கள் கால்களில் தொடுத்துக்கொள்ளுங்கள்.

16. கொடுங்கொடியோன் எய்யும் அக்கினியாஸ்திரங்களையெல்லாம் அவித்துப்போடுவதற்கு வல்லவர்களாயிருக்கும்படிக்கு எல்லாக் காரியங்களிலும் விசுவாசக் கேடையத்தைப் பிடித்துக்கொள்ளுங்கள்.

17. இரட்சணியத்தின் தலைச்சீராவையும், தேவ வாக்கியமாகிய ஞான வாளையும் எடுத்துக்கொள்ளுங்கள். (இசை. 59-17; 1. தெச. 5-8.)

12. ஆகாசமண்டலம் என்பது வான மண்டலங்களின் கீழ்ப்பாகங்களாம். இவைகளில் சர்வேசுரன் தமது திருவுளத்தின்படிக்கு கெட்ட அரூபிகளை உலாவும்படி சில விசைகளில் உத்தரவு தருகிறார். நமது ஞானயுத்தம் மனிதரோடு அல்ல கெட்ட அரூபிகளோடு தான்.

18. இடைவிடாமல் எவ்வித ஜெபமும், வேண்டுதலுஞ்செய்து, உள்ளரங்கத்தில் மன்றாடுங்கள். அவ்விதமே விழித்திருந்து இடையறாத நிலைமையோடு அர்ச்சிக்கப்பட்ட சகலருக்காகவும் வேண்டிக்கொள்ளுங்கள். (அப். 12-5; கொலோ. 4-2.)

19. அன்றியும் சுவிசேஷத்தின் பரம இரகசியத்தை அறிவிப்பதற்கு நான் என் வாயைத்திறந்து திடாரிக்கத்தோடு பேசும்வரம் எனக்குத் தந்தருளப்படும்படிக்கு எனக்காகவும் வேண்டிக்கொள்ளுங்கள். (கொலோ. 4-3; 2. தெச. 3-1.)

20. அந்தச் சுவிசேஷத்துக்காக நான் சங்கிலியால் கட்டுண்டு, என் ஸ்தானுபதிக்கத்தை நிறைவேற்றிவருகிறேன். இதிலும் நான் பேசவேண்டியதுபோல பேசுவதற்கு எனக்குத் துணிவுண்டாகும்படியாகப் பிரார்த்தித்துக்கொள்ளுங்கள்.

21. கடைசியாய் என்னைப்பற்றிய காரியங்களும், நான் செய்துகொண்டு வருகிறவைகளும் உங்களுக்குத் தெரியவரும்படிக்கு அவைகளையெல்லாம் நமக்கு மிகவும் பிரியமான சகோதரனும், ஆண்டவருக்குள் உண்மையான ஊழியனுமாகிய தீகிக்கு என்பவன் உங்களுக்கு வெளிப்படுத்துவான்.

22. நீங்கள் எங்களைப்பற்றிய செய்திகளை அறியவும், உங்கள் இருதயங்களுக்கு ஆறுதல்செய்யவும் அவனை உங்களிடத்தில் அனுப்பியிருக்கிறேன்.

23. பிதாவாகிய சர்வேசுரனாலும், ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதராலும், சகோதரர்களுக்குச் சமாதானமும், விசுவாசத்தோடுகூடிய பரம அன்பும் உண்டாவதாக.

24. நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர்மேல் பழுதற்ற அன்புவைத்திருக்கிற சகலருக்கும் இஷ்டப்பிரசாதம் உண்டாகக்கடவது. ஆமென்.

18-20. கிறீஸ்துவர்களே, இவ்வுலகமானது ஓர் போர்க்களமாயிருக்கிறது. உலகம் பசாசு சரீரமென்கிற மூன்று சத்துருக்களோடு மரணபரியந்தம் இடைவிடாமல் போராடி ஜெயங்கொண்டு நமது மேல்வீடாகிய பரலோகத்திற் சேரக்கடவோம். இந்த அதிகாரத்திலே அர்ச். சின்னப்பர் இந்த ஞான யுத்தத்துக்கு உங்களை அழைத்து உற்சாகப்படுத்தி, நீங்கள் வீரியமாய்ப் போராடும்படிக்கு வேண்டிய ஆயுதவர்க்கங்களை உங்கள் கண்ணுக்கு முன்பாக விரித்துக் காட்டி, அவைகளை நீங்கள் அணிந்துகொள்ளக் கற்பிக்கிறார். அவைகளாவன: எல்லாக் கிறீஸ்துவர்களுக்கும் தலைவரும், ராஜாவுமாகிய யேசுக்கிறீஸ்துநாதருக்கு நீங்கள் ஞானஸ்நானத்திலே கொடுத்த வார்த்தைப்பாட்டில் பிரமாணிக்கமென்கிற இடைக் கச்சையும், இருதயப் பரிசுத்ததனமாகிய மார்க்கவசமும், சர்வேசுரனோடும் பிறரோடும் தன்னோடும் சமாதானத்தைப் பெறுவிக்கிற சுவிசேஷத்தின் கற்பனைகளையும், சாங்கோபாங்கத்தையும் அநுசரிப்பதற்கும், மற்றவர்களுக்கு அதைப் பிரசங்கிக்கும்படி எங்கும் போவதற்கும் வேண்டிய தைரியமென்கிற பாதரட்சையும், உலகம் பசாசு சரீரம் என்கிற மூன்று சத்துருக்களும் ஓயாமல் எய்யும் சோதனைகளாகிய அக்கினியாஸ்திரங்களை அவைகளின்பேரில்தானே திருப்பிவிடத்தக்க கேடையமென்கிற விசுவாசமும், அந்த அருமையான யுத்தத்தில் நம்முடைய தலைவராகிய யேசுக்கிறீஸ்துநாதர் உங்களுக்குத் தப்பாமல் ஜெயத்தைப் பெறுவிப்பாரென்னும் முழு நம்பிக்கையாகிய தலைச்சீராவும், சத்துருக்களைத் தாக்கி வெட்டி ஜெயிக்கும்படி தேவ வாக்கியமாகிய பட்டயமுமாமே. இவ்விதமாய்ப் பாதாதிகேசம்வரையில் ஆயுதமணிந்தவர்களாய் எல்லா ஜெபத்தோடும் வேண்டுதலோடும் விழித்திருந்து, உங்களுக்காகவும், உங்கள் தோழர்களாகிய சகல விசுவாசிகளுக்காகவும் இடைவிடாமல் பிரார்த்தித்து இந்த ஞானப் போராட்டத்தை நடத்திவரக்கடவீர்களென்றர்த்தமாம்.



# பாயிரம்.

---

பிலிப்பி நகரமானது மக்கேதோனியா நாட்டில் உரோமையர் குடியேறியிரு ந்த பாகத்துக்குப் பிரதான பட்டணமாம். அர்ச். சின்னப்பர் அந்தப் பட்டணத் தாருக்குச் சுவிசேஷத்தை முதலாவது பிரசங்கித்ததைப்பற்றி அப்போஸ்தலர் நடபடி 16-ம். அதிகாரத்தில் சொல்லியிருக்கிறது. அந்தப் புதுச் சபையார் எப்போதும் மிகவும் பத்தியுள்ளவர்களுமாய் அர்ச். சின்னப்பர்பேரில் அத்தியந்த பற்றுதலுள்ளவர்களுமாய் இருந்ததுந்தவிர, அவர் எங்கே போயிருந்தாலும் அவருடைய செலவுக்கு வேண்டியதை அனுப்புவார்கள். அப். நடபடி 27-ம் 28-ம். அதிகாரங்களில் சொல்லியிருக்கிறதுபோல், அவர் முதல்விசை உரோமா புரிக்குச் சேவகர்களால் கொண்டுபோகப்பட்டபோது அவருக்குச் சம்பவித் ததை அறியவும், அவருடைய செலவுக்குச் சில பணங்களைக் கொண்டுபோய்க் கொடுக்கவும், தங்கள் மேற்றிராணியாராகிய எப்பாப்புரோதீத்து என்பவரை அனுப்பினார்கள். அவர் அங்கே சேர்ந்து சிலநாள் அர்ச். சின்னப்பரோடேகூட இருக்கும்போது, கர்த்தரவதாரம் 62-ம் வருஷத்தில் அர்ச். சின்னப்பர் தமதுசிறை யிலிருந்தே இந்த நிருபத்தை எழுதி, அவர் கையில் கொடுத்து அவரைத்திரும்பி அனுப்புவித்தார். இந்த நிருபத்தில் அர்ச். சின்னப்பர் மிகுந்த சந்தோஷத் தோடு பிலிப்பியரை வாழ்த்தி, விசுவாசத்திலும் தர்மக் கிரியைகளிலும் அவர் கள் நிலைக்கொண்டவர்களென்று அவர்களைப் புகழ்ந்து, அவர்கள் கிறீஸ்துநாத ரைப்பற்றிப் படுகிற துன்பங்களில் அவர்களுக்கு ஆறுதல்சொல்லி, எப்போதும் சுவிசேஷத்துக்குத் தகுதியான நடக்கையும் துன்பங்களில் தைரியமுங்கொண்டிரு க்கவேண்டுமென்றும், அந்நியோந்நிய சிநேகத்திலும், சமாதானத்திலும் நிலைபெற் று, தங்களிடத்தில் வருகிற கள்ளப்போதகர்களுக்குக் காது கொடாமல், அஞ் ஞானத்தின் நடுவில் மெய்யான சுடராக நின்று விளங்கவேண்டுமென்றும் புத்தி சொல்லுகிறார்.

---



# அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர் பிலிப்பியருக்கு எழுதிய நிருபம்.

## முதல் அதிகாரம்.

*சின்னப்பர் தாம் பிலிப்பியருடைய நன்மையை உத்தேசியாதேபோனால், மரித்து, கிறீஸ்துநாதரோடிருக்க ஆசித்திருப்பதாகச் சொல்லுகிறார்.*

1. யேசுக்கிறீஸ்துநாதருடைய ஊழியர்களாகிய சின்னப்பனும், திமோத்தேயும் பிலிப்பிப் பட்டணத்தில் கிறீஸ்து யேசுநாதருக்குள்ளான அர்ச்சிக்கப்பட்ட சகலருக்கும், மேற்றிராணிமார்களுக்கும், தியாக்கோன்மார்களுக்கும் எழுதுவது :

2. நம்முடைய பிதாவாகிய சர்வேசுரனாலும், ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவினாலும் உங்களுக்கு இஷ்டப்பிரசாதமும், சமாதானமும் உண்டாவதாக.

3. நான் உங்களை நினைவுகூரும்போதெல்லாம் என் கடவுளுக்கு நன்றியறிந்த ஸ்தோத்திரஞ்செய்கிறேன்.

4-5. நீங்கள் முதல்நாள் தொடங்கி, இதுவரையில் கிறீஸ்துநாதருடைய சுவிசேஷத்துக்கு உடந்தையாயிருக்கிறதைப்பற்றி எப்போதும் என் சகல ஜெபங்களிலும் உங்களெல்லாருக்காகவும் சந்தோஷத்தோடு பிரார்த்தித்து வருகிறேன்.

6. உங்களுக்குள் அந்த நற்கிரியையைத் துவக்கினவர் யேசுக்கிறீஸ்துவின் நாள்வரையில் அதை முற்றுமுடிய நடத்துவாரென்று நம்புகிறேன்.

7. உங்கள் எல்லாரையுங்குறித்து நான் இப்படிப் பற்றுதலாயிருப்பது நியாயமாயிருக்கின்றது. ஏனெனில் என் கட்டுகளிலும், நான் சுவிசேஷத்துக்காக உத்தரவாதஞ்சொல்லி அதை உறுதிப்படுத்துவதிலும், நீங்கள் எல்லோரும் என் சந்தோஷத்துக்குப் பங்காளிகளாயிருக்கிறீர்களென்று உங்களை என் இருதயத்தில் வைத்திருக்கிறேன்.

---

1. **அர்ச்சிக்கப்பட்டவர்கள்** என்பது கிறீஸ்துவர்களாம்; அப். 6-ம் அதிகாரத்தில் சொல்லியிருப்பதுபோல தியாக்கோன் என்பவர்கள் மேற்றிராணிமார்களுக்கும் குருமார்களுக்கும் ஒத்தாசையாயிருந்து, விசுவாசிகளுக்குத் தேவநற்கருணையையும் தரித்திரர்களுக்குக் கோவில் தர்மப் பணங்களையும் பகிர்ந்துகொடுக்கும்படிக்கு அப்போஸ்தலர்களாலே ஏற்படுத்தப்பட்ட திருப்பணிவிடைப் பட்டத்தை பெற்றவர்களாம்.

5. **முதல்நாள் தொடங்கி** என்பது நீங்கள் கிறீஸ்துநாதரை விசுவசித்து ஞானஸ்நானம் பெற்றநாள் தொடங்கி என்றர்த்தமாம்.

6. **கிறீஸ்துநாதருடைய நாள்** என்பது தீர்வை நாள்.

8. அப்படியே யேசுக்கிறீஸ்துநாதருடைய உள்ளத்தில் நான் உங்கள் எல்லோர்பேரிலும் எவ்வளவோ வாஞ்சையாயிருக்கிறேனென்பதற்குச் சர்வேசுரனே எனக்குச் சாட்சியாயிருக்கிறார்.

9. ஆகையால் உங்கள் அன்பானது அறிவிலும், எல்லா உணர்விலும் இன்னம் அதிகமதிகமாய்ப் பெருகவும்,

10. இவ்விதமாய் நீங்கள் அதிக நலமானவைகளைப் பகுத்தறிந்துகொள்ளவும், கிறீஸ்துநாதருடைய நாள்வரைக்கும் ஓர் குற்றமுமின்றித் துப்புரவுள்ளவர்களாயிருக்கவும்,

11. சர்வேசுரனுக்கு மகிமையும், ஸ்தோத்திரமும்உண்டாகும்படிக்குநீங்கள் யேசுக்கிறீஸ்துவின் மூலமாய் நீதியின்கனிகளால் நிறைந்தவர்களாயிருக்கவும் வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

12. சகோதரரே, எனக்குச் சம்பவித்தவைகள் சுவிசேஷத்தின் அதிவிர்த்திக்காகவே சம்பவித்ததென்று நீங்கள் அறிய விரும்புகிறேன்.

13. அப்படியே, நான் கட்டப்பட்டிருக்கிற கட்டுகள் கிறீஸ்துநாதரைப் பற்றியவைகளென்று அரமனையடங்கலிலும், மற்ற எல்லா இடங்களிலும் பிரபலியமாகி,

14. சகோதரரில் அநேகர் என் கட்டுகளால் கர்த்தருக்குள் தைரியங்கொண்டு,அச்சமின்றித்தேவவாக்கியத்தைப்பேசுவதற்கு அதிகமாய்த் துணிவு கொண்டிருக்கிறார்கள்.

15. ஆகிலும் சிலர் காய்மகாரத்தினாலும், விரோதக்குணத்தினாலும், வேறு சிலர் நல்ல மனதினாலும் கிறீஸ்துநாதரைப் பிரசங்கிக்கிறார்கள்.

16. சிலர் நான் சுவிசேஷத்துக்கு உத்தரவாதஞ்சொல்ல ஏற்படுத்தப்பட்டிருக்கிறேனென்று அறிந்து, அன்பினாலே பிரசங்கிக்கிறார்கள்.

17. வேறு சிலரோ, என் கட்டுகளை அதிமாய் இறுக்கவேண்டுமென்று எண்ணி, நேர்மையான மனதோடு கிறீஸ்துநாதரைப் பிரசங்கியாமல் விரோதத்தினாலே பிரசங்கிக்கிறார்கள்.

18. இதினாலென்ன? ஒப்புக்கானாலும், நேர்மையாகவென்கிலும், எவ்விதமும் கிறீஸ்துநாதர் பிரசங்கிக்கப்படுகிறாரோ; அதினாலே நான் சந்தோஷப்படுகிறேன், இன்னமும் சந்தோஷப்படுவேன்.

19. ஏனெனில் உங்கள் வேண்டுதலினாலும், யேசுக்கிறீஸ்துநாதருடைய இஸ்பிரீத்துவின் உதவியினாலும் இது எனக்கு இரட்சிப்பாக முடியுமென்று அறிந்திருக்கிறேன்.

13. இங்கே சொல்லப்பட்ட அரமனை அப்போது உரோமாபுரி ராயனாயிருந்த நெரோ என்பவனுடைய அரமனையாம். கிறீஸ்துவர்களுக்கு விரோதமாய் வேத கலகம்பண்ணின உரோமாபுரி ராயர்களுக்குள்ளே இந்த நெரோ என்பவன் அதிகக்கொடூரமுள்ளவனாயிருந்தான். அப்படியிருந்தாலும் அவனுடைய அரமனையிலே முதலாய் அநேகர் ஞானஸ்நானம் பெற்றிருந்தார்கள்.

14-17. அர்ச். சின்னப்பர் சிறைப்பட்டிருக்கிறாரென்று அறிந்து, உரோமாபுரியிலுள்ள கிறீஸ்துவர்கள் உரோசங்கொண்டு சுவிசேஷத்தை அஞ்ஞானிகளுக்குள்ளே பிரசங்கிக்கும்படி அதிகமாய்த் துணிந்தார்கள். ஆகிலும் எல்லாரும் நல்ல கருத்தோடு பிரசங்கியாமல், சிலர் மற்றவர்கள்பேரில் காய்மகாரத்தினாலும், தங்களுக்குக் கீர்த்தியுண்டாகவேணுமென்ற ஆசையினாலும், வேறே சிலர் ஆண்டவருடைய ஸ்தோத்திரம் அதிகரிக்கவேணுமென்கிற நல்ல கருத்தினாலும், இன்னுஞ் சிலர் அர்ச். சின்னப்பர் வெளியே வந்து, பிரசங்கிக்க கூடாதவராயிருக்கிறாரென்று கண்டு, அவர்பேரில் தாங்கள் வைத்த பட்சத்தினாலும், மற்றுஞ்சிலர் அர்ச். சின்னப்பர்பேரில் காய்மகாரத்தினால் அவரை இராயர் சமுகத்தில் அதிகக் குற்றப்படுத்தும்பொருட்டும் பிரசங்கிப்பார்களென்றர்த்தமாம்.

20. நான் நம்பி, எதிர்பார்த்திருக்கிறபடி ஒன்றிலும் வெட்கப்பட்டுப் போகமாட்டேன். ஆனால் எப்பொழுதும்போல் இப்பொழுதும் நான் பிழைத்தாலுஞ்சரி, செத்தாலுஞ்சரி, கிறீஸ்துநாதர் என் சரீரத்தில் மகிமைப்படுவாரென்று முழு நிச்சயமாய் அறிந்திருக்கிறேன்.

21. ஏனெனில் கிறீஸ்துநாதர் எனக்கு ஜீவன், மரணம் எனக்கு ஆதாயம்.

22. ஆகிலும், சரீரத்தில் பிழைத்திருப்பதினால் என் கிரியைக்குப் பலனுண்டாகுமானால் எதைத் தெரிந்துகொள்ளுகிறதோ, அறியேன்.

23. ஆகையால் இருபக்கத்திலும் நெருக்கப்படுகிறேன். என் தேகக் கட்டவிழ்ந்து, கிறீஸ்துவுடனேகூட இருக்க எனக்கு ஆசையுண்டு. இதுவும் அதிமிக நன்மைதான்.

24. ஆனால் இன்னம் சரீரத்தில் நிலைத்திருக்கிறது உங்களைப்பற்றி அவசியமாயிருக்கின்றது.

25. உங்கள் நல்விர்த்திக்காகவும், விசுவாசத்தில் உங்கள் சந்தோஷத்துக்காகவும் நான் பிழைத்திருந்து, உங்கள் அனைவரோடும் தங்கியிருப்பேனென்று நிச்சயமாய் அறிந்திருக்கிறேன்.

26. அதினாலே நான் மறுபடியும் உங்களிடத்தில் வரும்போது, என்னைக் குறித்துக் கிறீஸ்துநாதரிடத்தில் உங்கள் மகிழ்ச்சி பெருகும்படியாகும்.

27. ஆகையால் நான் வந்து, உங்களைக் கண்டாலுஞ்சரி, வராதிருந்தாலுஞ்சரி, நீங்கள் ஒரே இஸ்பிரீத்துவில் மனஒற்றுமையாயிருந்து, சுவிசேஷத்தின் விசுவாசத்திற்காக உடன் பிரயாசப்படுகிறீர்களென்று நான் கேள்விப்படும்படிக்குக் கிறீஸ்துநாதருடைய சுவிசேஷத்திற்கு எவ்விதத்திலும் தகுதியானவர்களாகமாத்திரம் நடந்துகொள்ளுங்கள். (எபே. 4-1; கொ. 1-10.)

28. எதிரிகளைப்பற்றி ஒன்றுக்கும் பயப்படாதிருங்கள். அது அவர்களுக்குக் கேட்டுக்குக் காரணமாகவும், உங்களுக்கு இரட்சணியத்துக்குக் காரணமாகவும் இருக்கின்றது. இதுவும் சர்வேசுரனுடைய செயலே.

29. ஏனெனில் நீங்கள் கிறீஸ்துநாதரை விசுவாசிப்பதற்குமாத்திரமல்ல, அவருக்காகப் பாடுபடுவதற்கும் உங்களுக்கு வரங் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

30. என்னிடத்தில் முன்னே நீங்கள் கண்டதும், இப்பொழுது எனக்குண்டென்று கேள்விப்படுகிறதுமான போராட்டமே உங்களுக்கும் உண்டு.

## 2-ம். அதிகாரம்.

*அந்நியோன்னிய சமாதானமும், சிநேகமும், தாழ்ச்சியுமுள்ளவர்களாயிருந்து, பயத்தோடே தங்கள் ஈடேற்றத்தை நிறைவேற்றவேண்டுமென்று புத்தி சொல்லுகிறார்.*

1. ஆகையால் கிறீஸ்துநாதரிடமாய் யாதொரு தேறுதலும், பரம அன்பின் யாதொரு ஆறுதலும், இஸ்பிரீத்துவின் யாதொரு ஐக்கியமும், இரக்கமுள்ள யாதொரு நெஞ்சமும் உங்களுக்கு உண்டானால்,

---

22. **என் கிரியைக்குப் பலன்.** இந்த வசனத்திலே அப்போஸ்தலர் தாம் உடனே கிறீஸ்துநாதருக்காக உயிரைக்கொடுத்து நித்திய பாக்கியத்தை அடைவது தமக்கு ஆதாயமென்றாலும், தாம் இன்னம் கொஞ்சக்காலம் உயிரோடிருப்பது கிறீஸ்துவர்களுடைய ஆத்துமத்துக்கு அதிக பிரயோசனமாயிருக்குமென்பதால், தாம் சாகவோ அல்லது உயிரோடிருக்கவோ, எதை ஆசிக்கவேண்டுமென்று தமக்குத் தெரியவில்லை என்கிறார்.

28. வேதத்தைப்பற்றி உங்களைத் துன்பப்படுத்துகிற அஞ்ஞானிகளுக்குப் பயப்படாதேயுங்கள். அவர்கள் உங்களுக்குச் செய்கிற துன்பங்கள் அவர்களுக்கே கெடுதலல்லாது, உங்களுக்குக் கெடுதலல்ல. அது உங்களுக்கு நன்மையாயிருப்பதைப்பற்றியே சர்வேசுரன் அப்படிப்பட்ட துன்பங்களைத் தடுக்காதிருக்கிறாரென்று அர்த்தமாம்.

2. நீங்கள் ஒரே சிந்தையாயிருந்து, என் சந்தோஷத்தை நிரப்புங்கள். ஆகையால் ஒரே பரமஅன்பும், ஒரே மனமும், ஒரே உணர்வும் உள்ளவர்களாயிருங்கள்.

3. யாதொன்றையும் பிடிவாதத்தினாலாவது, வீண் மகிமையினாலாவது செய்யாமல், தாழ்ச்சியோடு ஒருவரையொருவர் தனக்கு மேற்பட்டவர்களென்று எண்ணிக்கொள்ளுங்கள்.

4. அவனவன் தன் நலத்தையல்ல, பிறனுடைய நலத்தையே கோருவானாக. (1. கொ. 10-33.)

5. கிறீஸ்து யேசுவினிடத்தில் உண்டாயிருந்த சிந்தைகளே உங்களிடத்திலும் உண்டாயிருக்கக்கடவது.

6. அவர் தேவ ரூபமாயிருக்கையில், தாம் சர்வேசுரனுக்குச் சரிசமானமாயிருப்பதைத் திருட்டென்று எண்ணாமல்,

7. தம்மைத்தாமே வெறுமையாக்கி, அடிமையின் ரூபமெடுத்து, மனுஷர் சாயலாகி, மனுரூபமாகக் காணப்பட்டார்.

8. தம்மைத்தாமே தாழ்த்தி, மரணமட்டுக்கும் அதாவது சிலுவை மரணமட்டுக்கும் கீழ்ப்படிதலுள்ளவரானார். (எபி. 2-9.)

9. அதினிமித்தம் சர்வேசுரனும் அவரை உயர்த்தி, எல்லா நாமத்துக்கும் மேலான நாமத்தை அவருக்கு அளித்து,

10. யேசுவின் நாமத்திற்குப் பரமண்டலத்தாரும், பூமண்டலத்தாரும், பாதாளத்தாருமாகிய சகலரும் முழந்தாட்படியிடவும், (இசை. 45-24; உரோ. 14-11.)

11. ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர் பிதாவாகிய சர்வேசுரனுடைய மகிமையில் வீற்றிருக்கிறாரென்று எல்லா நாவும் அறிக்கையிடவும்பண்ணினார்.

12. ஆகையால் எனக்கு மிகவும் பிரியமானவர்களே, நீங்கள் எப்பொழுதும் எனக்குக் கீழ்ப்படிந்துவந்தது போல, என் முகதாவில்மாத்திரமல்ல, நான் தூரமாயிருக்கிற இப்பொழுதும் அதிகமதிகமாய் அச்ச நடுக்கத்தோடு உங்கள் ஈடேற்ற வேலையைப் பாருங்கள்.

13. ஏனெனில் உங்களிடத்தில் விரும்புதலையும், செய்துமுடித்தலையும் சர்வேசுரன் தாமே தம்முடைய தயவுள்ள சித்தத்தின்படி செய்துகொண்டுவருகிறார்.

8-9. யேசுநாதர் சிலுவைமரணமட்டும் தம்முடைய பிதாவுக்குக் கீழ்ப்படிந்ததினாலே அறிவுள்ள சகலமான படைப்புகளும் அவருடைய திருநாமத்துக்குப் பணிந்து அதை எப்போதும் வணங்கி நமஸ்கரிக்கும்படி பிதாவாகிய சர்வேசுரன் கட்டளையிட்டிருக்கிறார். ஆனால் அந்தத் திருநாமத்துக்குப் பண்ணப்படுகிற வணக்கம் இரண்டு விதமாயிருக்கிறது. மோட்சத்திலே சம்மனசுக்களும், அர்ச்சியசிஷ்டவர்களும், பூலோகத்திலுள்ள விசுவாசிகளும், பாதாளத்தில் உத்தரிக்கிறஸ்தலத்து ஆத்துமாக்களும் தேவசிநேகத்தோடு கூடின வணக்க நமஸ்காரத்தைப் பொருந்தினமனதோடு அத்திருநாமத்துக்குச் செலுத்துகிறார்கள். பூலோகத்திலுள்ள அவிசுவாசிகளும், நரகத்திலுள்ள பசாசுகளும், தேவசிநேகமின்றிக் கட்டாயமாய் நடுநடுக்கத்தோடு அந்தத் திருநாமத்துக்குப் பணிகிறார்கள்.

12. **அச்சத்தோடும், நடுக்கத்தோடும்:** இரட்சணியமடைவோமென்று மிதமிஞ்சின நம்பிக்கையால், எச்சரிக்கை தப்பி, மனம்போல் நடவாமல், எங்கே கெட்டுப்போவோமோ என்று எப்போதும் பயத்தோடும் எச்சரிக்கையோடும் நடக்கப் புத்திசொல்லுகிறார். ஏனெனில் மிஞ்சின நம்பிக்கையானது ஆங்காரத்தைப் பிறப்பிக்கிறது. ஆங்காரம் சகல பாவத்துக்கும் மூலமாமே. பயமானது தாழ்ச்சியையும், தன்னை நம்பாமையையும், தேவ நம்பிக்கையையும், எச்சரிக்கையையும் பிறப்பிக்கிறது.

14. ஆகையால் எல்லாவற்றையும் முறுமுறுப்பில்லாமலும், தர்க்களிப்பில்லாமலும் நிறைவேற்றிவாருங்கள். (1. இரா. 4-9.)

15. இத்தன்மையாய்க் கோணலும், மாறுபாடுள்ளதுமான ஜனத்தின் நடுவில் நீங்கள் குற்றமற்றவர்களாகவும், சர்வேசுரனுடைய நேர்மையான பிள்ளைகளாகவும், மாசற்றவர்களாகவும் இருப்பீர்கள். (மத். 5-16.)

16. ஏனெனில் நான் வீணாக ஓடினதும், வீணாகப் பிரயாசப்பட்டதுமில்லையென்கிறதினாலே கிறீஸ்துவின் நாளில் எனக்கு மகிமையுண்டாயிருக்கும்படிக்கு நீங்கள் அவர்கள் நடுவிலே ஜீவ வாக்கியத்தைக் கையிலேந்திக்கொண்டு, உலகத்தில் சுடர்களைப்போல் பிரகாசிக்கிறீர்கள். (1. தெச. 2-19.)

17. பின்னும் உங்கள் விசுவாசத்தின் ஆராதனைப்பலியின்மேல் நானும் பலியாவேனாகில், நான் மகிழ்ந்து உங்கள் அனைவரோடும் சந்தோஷிப்பேன்.

18. இதினிமித்தம் நீங்களும் என்னுடனேகூட சந்தோஷித்து, மகிழுங்கள்.

19. அல்லாமலும் நான் உங்கள் செய்திகளை அறிந்து, மனத்தேறுதலடையும்படிக்குச் சீக்கிரமாய்த் தீமோத்தேயுவை உங்களிடத்தில் அனுப்புவேனென்று ஆண்டவராகிய யேசுவினிடத்தில் நம்பிக்கையாயிருக்கிறேன். (அப். 16-1.)

20. ஏனெனில் என்னைப்போல உண்மையான பட்சத்தோடே உங்கள் பேரில் கவலையுள்ள மனதைக்கொண்ட வேறொருவனும் என்னிடத்திலில்லை.

21. ஏனெனில் (மற்ற) எல்லோரும் யேசுக்கிறீஸ்துநாதருடையவைகளைத் தேடாமல், தங்களுடையவைகளையே தேடுகிறார்கள். (1. கொ. 13-5.)

22. தகப்பனுக்குப் பிள்ளை ஊழியஞ்செய்வதுபோல அவர் என்னோடேகூடச் சுவிசேஷத்துக்கு ஊழியஞ்செய்தாரென்பதினால், அவருடைய சற்குணத்தைப் பரிட்சித்தறிந்துகொள்ளுங்கள்.

23. ஆதலால் எனக்குச் சம்பவிக்கப்போகிறதேதென்று நான் அறிந்தவுடனே அவரை உங்களிடத்தில் அனுப்பலாமென்று நினைக்கிறேன்.

24. அன்றியும் நானும் உங்களிடத்தில் சீக்கிரமாக வருவேனென்று ஆண்டவருக்குள் நம்பிக்கைகொண்டிருக்கிறேன்.

25. ஆனால் என்னுடைய சகோதரனும், உடன்வேலையாளும், உடன்சேவகனும், உங்கள் அப்போஸ்தலனும், என் அவசரங்களில் எனக்கு உதவி செய்தவனுமாகிய எப்பாப்புரோத்திதுவை உங்களிடத்தில் அனுப்புவது அவசரமென்று எண்ணினேன்.

26. ஏனெனில் அவர் உங்கள் எல்லோர்மேலும் வாஞ்சையுள்ளவரும், தான் வியாதிப்பட்டதை நீங்கள் கேள்விப்பட்டதினாலே மிகவும் வியாகுலப்பட்டவருமாயிருந்தார்.

27. அவர் வியாதிப்பட்டு, மரண அவஸ்தையாயிருந்தது மெய்தான். ஆகிலும் சர்வேசுரன் அவர்பேரில் இரக்கமாயிருந்தார். அவர்பேரில்மாத்திரமல்ல, எனக்குக் கஸ்தியின்மேல் கஸ்தியுண்டாகாதபடிக்கு என்பேரிலும் இரக்கமாயிருந்தார்.

---

18. யூதர்களுடைய பூசையில் பலியைப் பீடத்தின்மேல், வைத்து அதன்மேல் இரத்தத்தின் அடையாளமாகத் திராட்ச ரசத்தை வார்ப்பார்கள். இவ்விடத்திலே, நான் உங்களுக்குச் சுவிசேஷத்தைப்பிரசங்கித்து, உங்களை விசுவாசிகளாக்கினதினால், பிரியமான பரிமளப்பலியாக உங்களைச் சர்வேசுரனுக்குக் கொடுத்தேன். அந்தச் சுவிசேஷத்தின் நிமித்தம் நான் வேதசாட்சியாக என் இரத்தத்தைச் சிந்துவேனாகில், என் இரத்தம் உங்கள் பலியின்மேல் வார்க்கப்பட்டதாயிருக்குமென்கிறதினால், நான் சந்தோஷத்தோடு உங்களுக்காக என்னை ஒப்புக்கொடுப்பேன் என்கிறார்.

28. ஆகையால் நீங்கள் அவரை மறுபடியும் கண்டு, சந்தோஷப்படும்படியாகவும், நானும் கஸ்தியில்லாமலிருக்கும்படியாகவும் அவரை நான் அதிகத் தீவிரமாய் அனுப்பினேன்.

29. ஆகையால் கர்த்தரிடத்தில் எவ்வித சந்தோஷத்தோடும் அவரை நீங்கள் ஏற்றுக்கொள்ளுகிறதுந்தவிர, அப்படிக்கொத்தவர்களைக் கனம்பண்ணுங்கள்.

30. ஏனெனில், நீங்கள் எனக்குச் செய்யவேண்டிய பணிவிடையிலே உங்களால் ஏலாததை நிறைவேற்றும்படிக்கு, அவர் தம்முடைய பிராணனையும் எண்ணாமல், கிறீஸ்துநாதரின் ஊழியத்தினிமித்தம் மரண அவஸ்தைக்குள்ளானார்.

## 3-ம். அதிகாரம்.

*கள்ளப்போதகர்கள்மட்டில் எச்சரிக்கையாயிருக்கும்படி போதிக்கிறார்.*

1. மேலும், என் சகோதரரே, ஆண்டவருக்குள் சந்தோஷப்படுங்கள். உங்களுக்கு ஒரே காரியத்தை எழுதிக்கொண்டிருப்பதில் எனக்குச் சலிப்பில்லை. உங்களுக்கோ அது அவசரமாயிருக்கிறன்து.

2. நாய்கள்மட்டில் எச்சரிக்கையாயிருங்கள், கெட்ட வேலையாட்கள்மட்டில் எச்சரிக்கையாயிருங்கள், விருத்தசேதனக்காரர்மட்டில் எச்சரிக்கையாயிருங்கள்.

3. ஏனெனில், மாம்சத்தைப்பற்றி நம்பிக்கைவையாமல், இஸ்பிரீத்துவில் சர்வேசுரனைச் சேவித்து, கிறீஸ்துயேசுவுக்குள் மேன்மைபாராட்டுகிற நாங்களே மெய்யான விருத்தசேதனமுள்ளவர்கள்.

4. ஆகிலும் மாம்சத்தைப்பற்றி நம்பிக்கைகொள்வதற்கு எனக்கு இடமிருக்கலாம். யாதொருவன் மாம்சத்திலே நம்பிக்கைவைக்கிறதாகக் காணப்பட்டால், நானும் அதிகமாய் அப்படி நம்பிக்கை வைக்கலாமே.

5. நான் எட்டாம்நாளில் விருத்தசேதனமடைந்தவன். இஸ்ராயேல் வம்சத்திலும், பென்ஜமீன் கோத்திரத்திலும் பிறந்தவன், எபிரேயரில் பிறந்த எபிரேயன், நியாயப் பிரமாணத்தை அநுசரிப்பதில் நான் பரிசேயன். (அப். 22-3; 23-6.)

---

1. இந்த வசனத்தில் அர்ச். சின்னப்பர் அவர்களுக்கு அவசியமென்று சொல்லுகிற காரியமென்னவென்றால் 1 அதி. 28-29-ம் வசனங்களில் கண்டிருக்கிறதுபோல, அவர்கள் கள்ளப்போதகர்மேல் எச்சரிக்கையாயிருக்கும்படித் தாம் திரும்பத் திரும்பச் சொல்லுவது அவசியம் என்கிறார்.

2. இந்த வசனத்தில் சொல்லப்பட்ட நாய்களும், கெட்டவேலையாட்களும், விருத்தசேதனக்காரரும் யாரெனில், விருத்தசேதனம் முதலான பழைய ஏற்பாட்டின் ஆசாரங்களை அநுசரிக்கவேண்டுமென்று போதித்துக்கொண்டு ஊருக்கூர் திரிந்து, அர்ச். சின்னப்பர் ஏற்படுத்தின திருச்சபைகளைக் கலக்கிக்கொண்டுவந்த கள்ளப்போதகர்களாம்.

3. அந்தக் கள்ளப்போதகர்கள் பழைய ஏற்பாட்டில் கற்பிக்கப்பட்டிருந்த சரீர விருத்தசேதனத்தைப் பெறவேணுமென்று உங்களுக்குப் போதிக்கிறார்கள். உள்ளிந்திரிய அடக்கமாகிற விருத்தசேதனத்தைப் போதிக்கிறதில்லை. கிறீஸ்துவர்களாயிருக்கிற நாமே மெய்யான விருத்தசேதனமுள்ளவர்களாயிருக்கிறோம். எங்கள் விருத்தசேதனம் மாம்சத்தில் மாத்திரம் செய்யப்படுகிற விருத்தசேதனமாயிராமல், சரீர இச்சைகளை அடக்கிக் கிறீஸ்துவர்களுக்குரிய இருதய சுத்தமாகிற விருத்தசேதனத்தை அடைந்தவர்களாயிருக்கிறோம் என்கிறாரென்றறிக.

5. எட்டாம் நாள் விருத்தசேதனம் அடைந்தேன் என்பதால் தாம் யூதனைப் பிறந்தவரென்றும், அஞ்ஞானத்திலிருந்து யூதனானவரல்லவென்றும் காட்டுகிறார்.

6. மதவைராக்கியப்படி சர்வேசுரனுடைய திருச்சபையைத் துன்பப்படுத்தினவன். நியாயப்பிரமாணத்தில் அடங்கிய நீதிக்கொத்தபடி குற்றமின்றி நடந்துவந்தவன். (அப். 26-10.)

7. ஆகிலும், எனக்கு லாபமாயிருந்த இந்தக் காரியங்களைக் கிறீஸ்துநாதரைப் பற்றி நஷ்டமென்று எண்ணினேன்.

8. இதுவுமன்றி, என் ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவை அறிகிற உன்னதமான அறிவைப்பற்றி நான் எல்லாவற்றையும் நஷ்டமென்று எண்ணுகிறேன். அவருக்காக எல்லாவற்றையும் இழந்துவிட்டு, அவைகளைக் குப்பையென்றும் எண்ணுகிறேன்.

9. ஏதுக்கோவெனில் நான் கிறீஸ்துநாதரை ஆதாயமாக்கிக்கொள்ளவும், நியாயப்பிரமாணத்தினால் வருகிற சுயநீதியைக்கொண்டிராமல், கிறீஸ்துயேசுவைப்பற்றும் விசுவாசத்தினால் வருகிறதும், விசுவாசமூலமாய்ச் சர்வேசுரனால் உண்டாகிறதுமான நீதியை உடையவனாய்க் கிறீஸ்துநாதருக்குள்ளானவனாகக் காணப்படவும்,

10. இப்படி நான் அவரையும், அவருடைய உத்தானத்தின் வல்லமையையும், அவருடைய பாடுகளின் ஐக்கியத்தையும் அறிந்து, அவருடைய மரணத்துக்கு ஒத்த சாயலாகி, (உரோ. 8-17.)

11. எப்படியாயினும் நான் மரித்தோரினின்று உயிரோடு எழுந்திருப்பதற்குத் தகுதியாகும்படியாகவும் இப்படிச்செய்கிறேன்.

12. ஆகிலும் நான் (பலனை) அடைந்தாயிற்று, அல்லது உத்தமனானேன் என்பதல்ல; ஆனால் கிறீஸ்து யேசுநாதர் எதற்காக என்னைக் கைவசப்படுத்தினாரோ அதையே நானும் கைவசப்படுத்தும்படி தொடருகிறேன்.

13. சகோதரரே, நான் அதைக் கைவசப்படுத்திக்கொண்டேனென்று எண்ணவில்லை. ஒரு காரியம் செய்கிறேன்: பின் கடந்துபோனவைகளை மறந்து, முன்னிருக்கிறவைகளை நாடித் தாவி,

14. கிறீஸ்து யேசுநாதரில் சர்வேசுரன் அழைத்த பரம அழைப்பின் பந்தயப் பொருளுக்காக இலக்கை நோக்கித் தொடருகிறேன்.

15. அப்படியே நம்மில் உத்தமரானயாவரும் இந்தச் சிந்தையோடிருக்கக் கடவோம். ஆகிலும், நீங்கள் எதிலாவது வேறு விதமாய்ச் சிந்தித்தால், அதையும் சர்வேசுரன் உங்களுக்கு வெளிப்படுத்துவார்.

16. ஆகிலும் நாம் ஒரே சிந்தையாயிருக்கும்படி எதுவரையில் தேறினோமோ, அதே ஒழுங்காக நிலைநிற்போமாக.

17. சகோதரரே, நீங்கள் என்னைப் பின்பற்றுகிறவர்களாயிருந்து, என்னிடத்தில் நீங்கள் கண்ட மாதிரிகைப்படி நடக்கிறவர்களைப் பின்செல்லுங்கள்.

18. ஏனெனில், கிறீஸ்துநாதருடைய சிலுவைக்குப் பகைஞராக நடக்கிறவர்கள் அநேகருண்டென்று முன்னே நான் உங்களுக்குப் பலமுறை சொன்னதுபோல, இப்பொழுதும் அழுகையோடு சொல்லுகிறேன். (உரோ. 16-17.)

19. நாசமே அவர்களுக்குக் கதி; வயிறே அவர்களுக்குத் தெய்வம், அவர்களுக்கு மகிமை அவர்களுடைய இலச்சையே. அவர்கள் இலௌகிக காரியங்களைச் சிந்திக்கிறார்கள்.

20. நமது சஞ்சாரமோ பரலோகத்திலிருக்கின்றது. அங்கேயிருந்து நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்தென்னும் இரட்சகர் வருவாரென்று எதிர்பார்த்திருக்கிறோம்.

21. அவர் சகலத்தையும் தமக்குக் கீழ்ப்படுத்திக்கொள்வதற்கு வல்லமையுள்ள தமது செயலின்படியே, தாழ்மையான நமது சரீரத்தைத் தமது மகிமைப்பிரதாப சரீரத்தின் சாயலாக்கி, மறுரூபமாக்குவார்.

## 4-ம். அதிகாரம்.

எல்லா நன்மைகளிலும் நிலைநிற்கும்படி சகலருக்கும் பொதுவாகவும், சிலருக்கு விசேஷமாகவும் சில புத்திமதிகளைச்சொல்லி, காவலிலிருந்த தமக்கு அவர்கள் செய்த உதவிக்காக அவர்களை வாழ்த்தி, அவர்களுக்காகச் சர்வேசுரனை மன்றாடி, நிருபத்தை முடிக்கிறார்.

1. ஆகையால் எனக்கு மகா பிரியமும், வாஞ்சையுமுள்ள சகோதரர்களே, என் சந்தோஷமே, என் கிரீடமே, மிகவும் பிரியமானவர்களே, இப்படியே ஆண்டவரிடத்தில் நிலைத்திருங்கள்.

2. எவோதியாளும், சிந்திக்கையாளும் ஆண்டவருக்குள் ஒரேமனதாயிருக்க மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

3. எனது உண்மையான கூட்டாளியே, நீரும் அவர்களுக்கு உதவியாயிருக்கும்படி உம்மை மன்றாடுகிறேன். அவர்கள் கிளேமெந்தென்பவரோடும், எனக்கு உதவிசெய்த மற்றவர்களோடும் சுவிசேஷத்தைப்பற்றி என்னோடேகூட உழைத்தவர்கள். அவர்களெல்லாருடைய நாமங்களும் ஜீவிய புஸ்தகத்தில் எழுதப்பட்டிருக்கின்றது. (காட்சி. 3-5.)

4. ஆண்டவரிடத்தில் எப்போதும் சந்தோஷமாயிருங்கள்; மறுபடியுஞ் சொல்லுகிறேன்: சந்தோஷமாயிருங்கள்.

5. உங்கள் அடக்கவொடுக்கம் எல்லா மனுஷருக்கும் தெரிந்திருப்பதாக; கர்த்தர் அருகில் இருக்கிறார்.

6. எதின்பேரிலும் கவலைப்படாதிருங்கள். ஆனால் எல்லா ஜெபத்திலும், வேண்டுதலிலும், நன்றியறிந்த ஸ்தோத்திரத்தோடுகூடிய உங்கள் மன்றாட்டுகள் தேவசமுகத்தில் தெரியவரக்கடவது.

7. அப்படியே எல்லா அறிவையுங் கடந்த சர்வேசுரனுடைய சமாதானமானது உங்கள் இருதயங்களையும் உங்கள் சிந்தைகளையும் யேசுக்கிறீஸ்துவுக்குள் காப்பாற்றுவதாக.

8. கடைசியாய்ச் சகோதரரே, எதெது உண்மையோ, எதெது யோக்கியமோ, எதெது நீதியோ, எதெது பரிசுத்தமோ, எதெது அன்புக்குரியதோ, எதெது நற்கீர்த்திக்குரியதோ, எதெது புண்ணியமோ, எதெது நல்லொழுக்கப் புகழ்ச்சியோ அவைகளைச் சிந்தித்துக்கொண்டிருங்கள்.

9. நீங்கள் என்னிடத்தில் எவைகளைக்கற்றும், பெற்றும், கேட்டும், கண்டுமிருக்கிறீர்களோ, அவைகளையே செய்யுங்கள். அப்போது சமாதானக் கடவுள் உங்களோடிருப்பார்.

---

2. இங்கே சொல்லப்பட்ட இரண்டு ஸ்திரீகளும் பிலிப்பி நகரத்துச் சபையாருக்குள் தங்கள் பத்தியினாலும், தர்மத்தினாலும், விசுவாசம் பரம்பும்படிக்குப் பட்ட பிரயாசத்தினாலும் பேர்போனவர்களாம். ஆனால் அர்ச். சின்னப்பர் இந்த நிருபத்தை எழுதின காலத்தில் அவர்களுக்குள்ளே ஒற்றுமைப் பேதகம் இருந்ததாகத் தோன்றுகிறது.

3. இங்கே சொல்லப்பட்ட கிளேமெந்தென்பவர் அர்ச். இராயப்பருக்குப் பிறகு நாலாவதாக பாப்புப்பட்டத்தில் உயர்த்தப்பட்டவரொன்று அநேக சாஸ்திரிகள் எண்ணுகிறார்கள். இங்கே அர்ச். சின்னப்பர் குறிக்கிற உண்மையுள்ள துணைவர் அவருடனேகூட அந்தச் சபையில் உழைத்த பிரதான விசுவாசியாம். ஆனால் அவர் இன்னாரொன்று சரியாய்த் தெரியவில்லை. இந்தத் துணைவர் சின்னப்பருடைய மனைவியென்று சில பதிதர் சொல்லத் துணிந்தார்கள். ஆனால் ஆதியில் எழுதப்பட்ட சகல கையெழுத்துப் பிரதிகளிலும், பூர்வ பாஷையில் துணையென்னும் வார்த்தை ஆண்பாலைக் குறிக்கிறது. ஆகையால் இந்தத் துணைவர் பிலிப்பிப் பட்டணத்து மேற்றிராணியாரொன்று சில வேதசாஸ்திரிகள் சொல்லுகிறார்கள்.

5. கர்த்தர் அருகில் இருக்கிறார். அதாவது உதவி செய்யக் காத்திருக்கிறார்.

10. முன்னே என்பேரில் உங்களுக்கிருந்த பற்றுதலான மனம் கடைசியாய் இப்பொழுது மறுபடியும் மலர்ந்ததைப்பற்றி நான் ஆண்டவரிடத்தில் வெகுவாய்ச் சந்தோஷப்பட்டேன். முந்தியும் இந்தப் பற்றுதல் உங்களுக்கு இருந்தாலும், அதைக்காண்பிக்க உங்களுக்குச் சமயமில்லாதிருந்தது.

11. ஆகிலும் அவகாசக்குறைவைப் பற்றி நான் இப்படிச் சொல்லுகிறதில்லை. ஏனெனில், நான் எந்த ஸ்திதியிலிருந்தாலும், மனத்திருப்தியாயிருக்கக் கற்றுக்கொண்டேன்.

12. சிறுமைப்படவும், சம்பத்தோடிருக்கவும் எனக்குத் தெரியும். எங்கும், எல்லாக் காரியங்களிலும் நான் திருப்தியாயிருக்கவும், பட்டினியாயிருக்கவும், செல்வத்தோடிருக்கவும், வறுமைப்படவும் அப்பியாசப்பட்டிருக்கிறேன்.

13. என்னைப் பலப்படுத்துகிறவரைக் கொண்டு என்னால் எல்லாங் கூடும்.

14. ஆகிலும் நீங்கள் என் துன்பத்தில் உதவிசெய்தது நல்லகாரியந்தான்.

15. பிலிப்பியரே, சுவிசேஷ ஆரம்பத்தில் நான் மக்கேதோனியாவிலிருந்து புறப்பட்டபோது, உங்களைத்தவிர வேறே எந்தச் சபையும் கொடுக்கல் வாங்கலில் எனக்கு உதவிசெய்யவில்லையென்று நீங்கள் அறிவீர்களே. (அப். 16-10.)

16. நான் தெசலோனிக்கையிலிருந்தபோதுமுதலாய் ஒருவிசை, இரண்டுவிசை என் செலவுக்கு அனுப்பினீர்களென்று அறிந்திருக்கிறீர்கள். (அப். 17-1.)

17. ஆகிலும் நான் ஈகையைத்தேடாமல், உங்கள் கணக்கிலே பேறுபலன் பெருகும்படிக்கே விரும்புகிறேன்.

18. எனக்கு எல்லாமிருக்கிறது; சம்பன்னனாயிருக்கிறேன். உங்களால் அனுப்பப்பட்டவைகளைச் சுகந்தவாசனையாகவும், சர்வேசுரனுக்கு உகந்த பிரியமான பலியாகவும் எப்பாப்புரோதீத்துவின் கையில் பெற்றுக்கொண்டு, திருப்தியாயிருக்கிறேன்.

19. ஆதலால் என் சர்வேசுரன் தம்முடைய ஐசுவரியத்தின்படியே உங்கள் விருப்பமெல்லாவற்றையும் கிறீஸ்து யேசுநாதருக்குள் மகிமையாக நிறைவேற்றுவாராக.

20. நம்முடைய பிதாவாகிய சர்வேசுரனுக்கு என்றென்றைக்கும் மகிமை உண்டாவதாக. ஆமென்.

---

10. பிலிப்பி நகரத்துச் சபையார் ஞானஸ்நானம்பெற்ற நாள்முதல் அர்ச். சின்னப்பர்பேரில் அத்தியந்த பற்றுதலாயிருந்து, அவர் எங்தெந்தத் தேசங்களுக்குப் போயிருந்தாலும், அவருடைய சுப செய்திகளை அறிவதற்கு அவரிடத்தில் ஆளனுப்பி, அவருடைய செலவுக்கும் உதவிசெய்துகொண்டு வருவார்கள். ஆனால் அப்போஸ்தலர் நடபடியில் சொல்லியபடி, அவர் யூதர்களாலே பிடிபட்டு இரண்டு மூன்று வருஷகாலம் சிறையிற் கிடந்து, உரோமாபுரிக்குக் கூட்டிக்கொண்டு போகப்பட்ட காலத்தில், அந்தச் சபையார் அவரை மறந்ததுபோலிருந்தாலும், பிற்பாடு அவர் உரோமாபுரியில் விலங்கில் கிடக்கிறதொன்று கேள்விப்பட்டு, முந்தியைப்போல் மறுபடியும் அவரை விசாரிக்கவும், அவருக்குச் செலவுக்கு அனுப்பவும் பிரயத்தனம்பண்ணி, அதற்காகத் எப்பாப்புரோதீத்தென்பவரை வேண்டிய பண உதவியோடு அனுப்பினார்கள். அதைக் கண்டு அர்ச். சின்னப்பர் மிகுந்த சந்தோஷப்பட்டு, கொஞ்சக்காலம் அவர்கள் தம்மை மறந்தாற்போலிருந்தாலும், அவர்கள் எப்போதும் பற்றுதலுள்ளவர்களென்றும், சமயமில்லாததினாலே தங்கள் பற்றுதலைக் காண்பிக்காதிருந்தார்களென்றும் அவர்களைப் புகழுகிறார்.

21. அர்ச்சிக்கப்பட்ட எல்லாருக்கும் கிறீஸ்து யேசுநாதரிடத்தில் மங்களஞ்சொல்லுங்கள்.

22. என்னோடேகூட இருக்கிற சகோதரர்கள் உங்களுக்கு மங்களஞ் சொல்லுகிறார்கள். அர்ச்சிக்கப்பட்ட அனைவரும், முக்கியமாய்ச் செசாருடைய அரமனையிலிருக்கிறவர்களும் உங்களுக்கு மங்களஞ் சொல்லுகிறார்கள்.

23. நமதாண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய இஷ்டப்பிரசாதம் உங்கள் ஆத்துமத்தோடேகூட இருப்பதாக. ஆமென்.



# பாயிரம்.

கொலோசா என்கிற பட்டணம் பிரிஜியா நாட்டின் பிரதான பட்டணமாம். அர்ச். சின்னப்பர் அந்தச் சபையாருக்கு தாமே வேதத்தைப் போதியாமல், எப்பாப்புராஸ் என்பவரை அவர்களுக்கு மேற்றிராணியாராக அனுப்பி, அவர் மூலமாய்ச் சுவிசேஷத்தை அவர்களுக்குப் பிரசங்கித்ததில், அநேகர் ஞானஸ்நானம் பெற்று, பத்தி சுறுசுறுப்புள்ள சபையாராயிருந்தார்கள். அவர்களுக்கு இந்த நிருபத்தை எழுதும்படியான முகாந்தரமேதென்றால், அவர்களிடத்தில் இரண்டு வகைப் பதிதர்கள் பிரவேசித்திருந்தார்கள். அந்தப் பதிதர்களில் சிலர் : யேசு நாதரல்ல, சம்மனசுக்களே நம்முடைய இரட்சணியத்துக்குக் காரணமென்றும், வேறு சிலர் : சுவிசேஷத்தோடுகூடப் பழைய ஏற்பாட்டின் முறைமைகளையும் அநுசரிக்கவேண்டுமென்றும் போதித்தார்கள். அர்ச். சின்னப்பர் இந்த இரண்டுவகைப் பதிதர்களையும் மறுத்து, அந்தக் கிறீஸ்துவர்கள் அநுசரிக்க வேண்டிய பிரதான முறைமைகளை அவர்களுக்கு ஞாபகப்படுத்துகிறார். அவர் உரோமாபுரியில் விலங்கிலே கிடக்கிறபோது கர்த்தரவதாரம் 62-ம் வருஷத்தில் எழுதிய இந்த நிருபம் எபேசியருக்கு எழுதிய நிருபத்தைப்போல் மிகவும் உயர்ந்த கருத்துகள் நிறைந்ததாம்.



# அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர்

## கொலோசியருக்கு

# எழுதிய நிருபம்.

## முதல் அதிகாரம்.

*கிறீஸ்துநாதர் சர்வேசுரனுடைய சாயலென்றும், அவரால் எல்லாம் படைக்கப்பட்டதென்றும், திருச்சபைக்குத் தலைவரென்றும், அவரால் சகலமும் சர்வேசுரனோடு உறவாக்கப்பட்டதென்றும் சொல்லுகிறார்.*

1. சர்வேசுரனுடைய சித்தத்தினாலே யேசுக்கிறீஸ்துநாதருடைய அப்போஸ்தலனாகிய சின்னப்பனும், சகோதரனாகிய தீமோத்தேயும்,

2. யேசுக்கிறீஸ்துநாதருக்குள் கொலோசா நகரத்திலுள்ள அர்ச்சிக்கப்பட்டவர்களும், விசுவாசிகளுமான சகோதரருக்கு எழுதுவது :

3. நம்முடைய பிதாவாகிய சர்வேசுரனாலும், ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவினாலும் உங்களுக்கு இஷ்டப்பிரசாதமும், சமாதானமும் உண்டாவதாக. உங்களுக்காக எப்பொழுதும் வேண்டிக்கொண்டு, நம்முடைய கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய பிதாவாகிய சர்வேசுரனுக்கு ஸ்தோத்திரம் பண்ணுகிறோம்.

4. ஏனெனில், பரலோகத்தில் உங்களுக்காக வைக்கப்பட்டிருக்கிற நம்பிக்கையை முன்னிட்டு, யேசுக்கிறீஸ்துவின்மேல் நீங்கள் கொண்டிருக்கிற விசுவாசத்தையும், அர்ச்சிக்கப்பட்ட எல்லோர்மேலும் உங்களுக்குள்ள அன்பையுங்குறித்துக் கேள்விப்பட்டோம்.

5. நீங்கள் அந்த நம்பிக்கையைச் சத்திய வசனமாகிய சுவிசேஷத்தினாலே கேட்டறிந்திருக்கிறீர்கள்.

6. இந்தச் சுவிசேஷம் உலகமெங்கும் பரம்பினதுபோல உங்களிடமும் வந்துசேர்ந்து, சத்தியத்தில் சர்வேசுரனுடைய கிருபையை நீங்கள் கேட்டு அறிந்த நாள்முதலாக உங்களிடத்தில் பலன்தந்து வளருகிறதுபோல, எங்கும் பலன்தந்து வளருகிறது.

---

1. அர்ச். சின்னப்பர் இந்த நிருபத்தை எழுதும் சமயத்தில் தீமோத்தேயு என்பவர் உரோமாபுரியில் இருந்ததாகத் தோன்றுகிறது. ஒருவேளை அப்போஸ்தலர் சொல்ல, அவரோ இந்த நிருபத்தை எழுதியிருக்கலாமென்றுஞ் சிலர் நினைக்கிறார்கள். (அப். 4-18.)

7. இதை எங்களுக்கு மிகவும் பிரியமான உடன்வேலையாளும், உங்கள்மட்டில் யேசுக்கிறீஸ்துநாதருடைய உண்மையுள்ள ஊழியனுமாகிய எப்பாப்புராஸ் என்பவரிடத்தில் நீங்கள் கற்றுக்கொண்டீர்கள்.

8. அவரே உங்கள் ஞான அன்பையும் எங்களுக்குத் தெரியப்படுத்தினார்.

9. ஆகையால் நாங்களும் இதைக் கேள்விப்பட்ட நாள்முதல் இடைவிடாமல் உங்களுக்காக ஜெபஞ்செய்து, எல்லா ஞானத்தோடும், இஸ்பிரீத்துவின் விவேகத்தோடும், சர்வேசுரனுடைய சித்தத்தை அறியும் அறிவினால் நீங்கள் நிரப்பப்படவும்,

10. எவ்வித நற்கிரியைகளாகிய பலனைத் தந்து, சர்வேசுரனை அறியும் அறிவில் வளர்ந்து, சகலத்திலும் சர்வேசுரனுக்குப் பிரியப்பட்டு, அவருக்கு யோக்கியமானவிதமாய் நடந்துகொள்ளவும்,

11. அவருடைய பிரதாப வல்லமைக்கேற்றபடி எவ்வித புண்ணியத்திலும் பலப்படுத்தப்பட்டு, சந்தோஷத்தோடுகூடிய சகல பொறுமையிலும், நீடிய சாந்தத்திலும் நடந்துவரும்படி உங்களுக்காகப் பிரார்த்தித்துவருகிறோம்.

12. பிரதாப ஒளியில் அர்ச்சியசிஷ்டவர்களுடைய சுதந்தரத்தில்பங்கடைவதற்கு நம்மைத் தகுதியுள்ளவர்களாக்கின பிதாவாகிய சர்வேசுரனுக்கு நன்றியறிந்த ஸ்தோத்திரஞ் செலுத்துகிறோம்.

13. அவரே அந்தகாரத்தின் வல்லமையினின்று நம்மை விடுதலையாக்கி, தமது அன்புள்ள குமாரனுடைய இராச்சியத்தில் சேர்த்துக்கொண்டார்.

14. இவருடைய இரத்தத்தின் மூலமாய் நாம் இவருக்குள் பாவப்பொறுத்தலாகிய மீட்பை அடைந்திருக்கிறோம்.

15. இவரே காணப்படாதவராகிய சர்வேசுரனுடைய சாயலும், சகல சிருஷ்டிகளுக்கும் முந்தின பேறுமானவர்.

16. அதெப்படியென்றால், பரலோகத்திலும் பூலோகத்திலும் காணப்பட்டவைகளும், காணப்படாதவைகளுமான சகலமும் இவருக்குள் சிருஷ்டிக்கப்பட்டது; பத்திராசனரோ, நாதகிருத்தியரோ, பிராதமிகரோ, பலவத்தரோ, சகலமும் இவர் மூலமாயும் இவருக்கென்றும் உண்டாக்கப்பட்டன.

17. இவரே எல்லாருக்கும் முந்தினவராயிருக்கிறார். இவருக்குள்ளே சகலமும் நிலைபெறுகின்றது.

7. எப்பாப்புராஸ் என்பவர் அர்ச். சின்னப்பருடைய சீஷனாயிருந்து கொலோசாப் பட்டணத்தில் திருச்சபையை முந்தமுந்த ஸ்தாபித்தவரென்று தோன்றுகிறது. இந்த நிருபம் எழுதப்பட்டபோது அவர் உரோமாபுரியில் அர்ச். சின்னப்பரோடு காவலிலிருந்தார்.

15. **காணப்படாத சர்வேசுரனுடைய சாயல்:**— யேசுநாதர் பிதாவாகிய சர்வேசுரனுக்குச் சகலத்திலும் சரிசமானமாயிருப்பதால் அவருடைய சாயல் என்று சொல்லப்படுகிறார்.

**முந்தின பேறுமானவர் :** சிருஷ்டிகளைப்போல் முதல்முதல் உண்டானவரென்று அர்த்தங்கொள்ளாமல், யாதொரு சிருஷ்டியும் உண்டாக்கப்படுமுன் நித்தியத்தில் பிதாவினால் ஜெனிப்பிக்கப்பட்டு, பிதாவோடும் இஸ்பிரீத்துசாந்துவோடும் சரிசமானமாயிருக்கிறாரென்று அர்த்தமாம். இதுவுமன்றி அவரெடுத்த மனுஷீகத்திலும் சர்வேசுரனுடைய சமுகத்தில் சகல சிருஷ்டிகளுக்கும் மேன்மையினால் முந்தினவரென்று அர்த்தமாம்.

18. அவரோ திருச்சபையாகிய சரீரத்துக்குத் தலைமையானவர். எல்லாவற்றிலும் தலைமைப்பட்டம் பெற்றவராயிருக்கும்படிக்கு அவரோ ஆதியும், மரித்தோரிலிருந்து எழுந்த முதற்பேறுமானவர்.

19. ஏனெனில், சகல சம்பூரணமும் அவருக்குள்ளே வாசமாயிருக்கவும்,

20. அவர் சிலுவையில் சிந்தின இரத்தத்தினால் பூலோகத்திலுள்ளவைகளானாலுஞ்சரி, பரலோகத்திலுள்ளவைகளானாலுஞ்சரி, சகலத்தையும் சமாதானப்படுத்தி, அவர்வழியாய்த் தம்மோடு உறவாக்கிக்கொள்ளவும் (பிதாவுக்குச்) சித்தமாயிற்று.

21. மேலும் நீங்கள் முன் ஒரு காலத்திலே அவருக்கு அந்நியராகவும், துர்க்கிரியைகளினாலே மனதில் சத்துருக்களாகவும் இருந்தபோதிலும்,

22. இப்போது தமக்குமுன்பாக உங்களைப் பரிசுத்தர்களாகவும், மாசற்றவர்களாகவும், குறையற்றவர்களாகவும் செய்யும்படி அவருடைய மாம்ச சரீரத்தில் அடைந்த மரணத்தினாலே (உங்களை) உறவாக்கினார்.

23. இதற்காக, நீங்கள் கேட்ட சுவிசேஷத்தினாலுண்டாகும் நம்பிக்கையை விட்டு அசையாமல், விசுவாசத்தில் ஊன்றி, ஸ்திரமாய் நிலைத்திருந்தாலல்லோசரி. அந்தச் சுவிசேஷம் வானத்தின் கீழுள்ள சகல சிருஷ்டிகளுக்கும் பிரசங்கிக்கப்பட்டுவருகிறது. இதற்கே சின்னப்பனாகிய நான் ஊழியனானேன்.

24. இப்போது நான் உங்கள் நிமித்தம் அனுபவிக்கிற பாடுகளில் சந்தோஷித்து, கிறீஸ்துவின் பாடுகளில் குறைவாயிருப்பதை அவருடைய சரீரமாகிய திருச்சபைக்காக என் மாம்சத்தில் நிறைவேற்றிவருகிறேன்.

25. தேவ வாக்கியத்தைப் பூரணமாய் அறிவிப்பதற்கு உங்கள்மட்டில் சர்வேசுரனால் எனக்கு அளிக்கப்பட்ட உத்தியோகத்தின்படியே நான் அந்தத் திருச்சபைக்கு ஊழியனாயிருக்கிறேன்.

---

18. **மரித்தோரில் முதற்பேறுமானவர் :—** முதல்முதல் மரித்தோரினின்று மகிமையோடு உயிர்த்தவராம். இதனால் ஆதாம் எப்படி முதல் மரித்தவராயிருந்து தனது பிதிர்வழிக்கெல்லாம் மரணத்துக்குக்காரணமாயிருந்தாரோ, அப்படியே யேசுநாதரும் மகிமையோடு உயிர்த்தவர்களில் முதல்வராயிருந்து தம்முடைய அவயவங்களாகிய நல்ல கிறீஸ்துவர்களெல்லாரும் மகிமையோடு உயிர்ப்பதற்குக் காரணமாயிருக்கிறாரென்று அப்போஸ்தலர் இங்கே காட்டுகிறார்.

24. கிறீஸ்துநாதருடைய பாடுகளில் குறைவாயிருப்பதை அவருடைய சரீரமாகிய திருச்சபைக்காக என் மாம்சத்தில் நிறைவேற்றிவருகிறேன் என்கிற இந்த வார்த்தைகளுக்கு அர்த்தம் என்ன ? யேசுநாதர் திருச்சபைக்காகப் பட்ட பாடுகள் போதாமல் குறைவாயிருந்ததென்பவோ ? ஆனால் யேசுநாதருடைய பாடுகளில் குறைவாயிருக்கிறதை என் மாம்சத்தில் நிறைவேற்றுகிறேனென்று அவர் சொல்லும்போது, நான் யேசுநாதருடைய பாடுகளுக்குப் பங்காளியாயிருக்கும்படிக்கும், அந்தப் பாடுகளை எனக்குச் சொந்தமாக்கிக் கொள்ளும்படிக்கும், என் பங்காக எனக்கு நியமிக்கப்பட்டிருக்கிற பாடுகளை என் சரீரத்தில் நிறைவேற்றி, யேசுநாதருடைய பாடுகளோடு கூட்டிச் சேர்த்துவைக்கிறேனென்று அர்த்தமாகும். பின்னும் திருச்சபைக்காக அந்தப் பாடுகளை நான் நிறைவேற்றுகிறேனென்று அவர் சொல்வதென்ன ? யேசுநாதர் திருச்சபைக்காகப் பாடுபட்டதுபோல, யேசுநாதருடைய அவயவமாகிய ஒவ்வொரு கிறீஸ்துவனும் தனக்காக மாத்திரமல்ல, பொதுவாயிருக்கிற திருச்சபைக்காகவும் பாடுபடவும், புண்ணிய பலன்களைச் சம்பாதித்துக்கொள்ளவும் கடனாளியாயிருக்கிறானென்று காட்டும்படி இப்படிச்சொல்லுகிறார். ஏனென்றால் சரீரத்தைச் சேர்ந்த ஒவ்வொரு அவயவமும் தன் தொழிலை நிறைவேற்றும்போது தனக்காக மாத்திரமல்ல, மற்ற அவயவங்களுக்காகவும், சரீர முழுமைக்காகவும் பிரயோசனமாகச் செய்கிறது.

26. தேவ வாக்கியமாகிய இந்தப் பரமரகசியம் முந்தின காலங்களுக்கும், தலைமுறை தலைமுறைகளுக்கும் மறைக்கப்பட்டிருந்து, இப்போது அவருடைய அர்ச்சிக்கப்பட்டவர்களுக்கு வெளியாக்கப்பட்டிருக்கிறது.

27. இந்தப் பரம இரகசியத்தின் மகிமைத் திரவியங்கள் அஞ்ஞானிகள் மட்டில் எம்மாத்திரம் விளங்குகிறதென்று சர்வேசுரன் தமது அர்ச்சிக்கப்பட்டவர்களுக்குத் தெரிவிக்கச் சித்தமானார். உங்களுக்கு மகிமையின் நம்பிக்கையாகிய கிறீஸ்துநாதரே இந்தப் பரமஇரகசியம்.

28. யேசுக்கிறீஸ்துநாதரிடத்தில் எந்த மனுஷனையும் உத்தமனாக வெளிப்படக்காட்டும்படிக்கு அவரையே நாங்கள் பிரசங்கித்து, எந்த மனுஷனுக்கும் புத்திசொல்லி, எந்த மனுஷனுக்கும் எவ்வித ஞானத்தோடும் உபதேசிக்கிறோம்.

29. இதற்காகவே அவர் என்னிடத்தில் வல்லமையோடு செய்விக்கிற செய்கையின்படி நான் உழைத்துப் போராடுகிறேன்.

## 2-ம். அதிகாரம்.

*கிறீஸ்துநாதருக்கு எதிரிகளாகிய கள்ளப் போதகர்கள், தத்துவசாஸ்திரிகள் முதலியவர்கள்மேல் எச்சரிக்கையாயிருக்கக் கற்பிக்கிறார்.*

1. உங்கள்மட்டிலும், இலவோதிக்கேயாவிலிருக்கிறவர்கள் மட்டிலும், இன்னம் என் முகத்தைக் கண்ணால் காணாதிருக்கிற மற்றெல்லோர்மட்டிலும் நான் கொண்டிருக்கிற கவலை எவ்வளவென்று நீங்கள் அறிய விரும்புகிறேன்.

2. அவர்களுடைய இருதயங்கள் தேற்றப்படவும், அவர்கள் பரம அன்பால் ஒன்றாயிணைக்கப்பட்டு, பிதாவாகிய சர்வேசுரனையும், யேசுக்கிறீஸ்துநாதரையும்பற்றிய பரம இரகசியங்களை அறிந்துகொள்ளும்படி பூரண நிச்சயமாகிய எல்லா ஐசுவரியத்தாலும் நிரப்பப்படவேண்டுமென்றே (கவலைப்படுகிறேன்.)

3. இவருக்குள் ஞானம், அறிவு என்பவைகளின் பொக்கிஷங்கள் யாவும் அடங்கியிருக்கின்றன.

4. நுட்ப வாக்கியங்களால் உங்களை ஒருவனும் எய்க்காதபடிக்கு நான் இதைச் சொல்லுகிறேன்.

5. ஏனெனில், சரீரத்தினால் உங்களுக்கு நான் தூரமாயிருந்தாலும், மனதினால் உங்களுடனேகூட இருந்து, உங்களுடைய நல்லொழுக்கத்தையும், கிறீஸ்துநாதர்மேலுள்ள உங்கள் விசுவாசத்தின் உறுதியையுங் கண்டு சந்தோஷப்படுகிறேன். (1. கொ. 5-3.)

6. ஆகையால் ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரை நீங்கள் ஏற்றுக்கொண்டபடியே அவருக்குள் நடந்துவருவீர்களாக.

7. நீங்கள் கற்றுக்கொண்டபடியே அவருக்குள் வேரூன்றினவர்களாகவும், அவர்மேல் கட்டப்பட்டவர்களாகவும், விசுவாசத்தில் உறுதிப்பட்டு, நன்றியறிந்த ஸ்தோத்திரத்தோடு அவரிடத்தில் வளர்ந்தேறுவீர்களாக.

---

1. **இலவோதிக்கேயா:**—இது பிரிஜியாவில் லீக்குஸ் என்னும் நதியோரத்திலிருந்த பட்டணமாம். இதில் இருந்த திருச்சபை கொலோசாவிலிலுள்ள திருச்சபையோடு அந்நியொந்நியமாயிருந்தது.

2. **சர்வேசுரனையும் யேசுக்கிறீஸ்துவையும் பற்றிய பரம இரகசியம்:**—பிதாவாகிய சர்வேசுரனால் நித்திய காலமாய்த் தீர்மானிக்கப்பட்டு யேசுநாதரால் இவ்வுலகத்தில் நிறைவேற்றப்பட்ட இரட்சணியத்தின் வேலையே இந்தப் பரம இரகசியமாம்.

8. மனிதர்களுடைய பாரம்பரியங்களுக்கும், உலகநூல் கோட்பாடுகளுக்கும் பொருந்தினதும், கிறீஸ்துநாதருக்குப் பொருந்தாததுமான தத்துவசாஸ்திரத்தாலும், மாயமான தந்திர நியாயங்களாலும் ஒருவனும் உங்களை ஏய்க்காதபடிக்குப் பார்த்துக்கொள்ளுங்கள்.

9. ஏனெனில் தெய்வத்துவத்தின் சம்பூரணமெல்லாம் அவரிடத்தில் சரீரப் பிரகாரமாய்க் குடிகொண்டிருக்கிறது.

10. மேலும் எல்லாத் துரைத்தனத்துக்கும், அதிகாரத்துக்கும் தலைவராயிருக்கிற அவரிடத்தில் நீங்கள் சம்பூரணமாக்கப்பட்டிருக்கிறீர்கள்.

11. அன்றியும் நீங்கள் பாவ மாம்சத்தைக் களைந்துவிடுவதாகிய கிறீஸ்துவின் விருத்தசேதனத்தை அவரிடத்தில் பெற்றுக்கொண்டீர்களேயொழிய, கையாலாகும் விருத்தசேதனத்தைப் பெற்றுக்கொள்ளவில்லை.

12. மேலும் நீங்கள் ஞானஸ்நானத்தில் அவரோடு அடக்கம்பண்ணப்பட்டு, அவரை மரித்தோரினின்று எழுப்பின கடவுளின் (வல்லப) செய்கையின் மேலுள்ள விசுவாசத்தைக்கொண்டு அவரோடு நீங்களும் உயிர்த்தெழுந்திருக்கிறீர்கள்.

13. உங்கள் பாவங்களாலும், மாம்ச விருத்தசேதனமில்லாமையாலும் நீங்கள் மரித்தவர்களாயிருந்தபோது, அவருடனேகூட உங்களை உயிர்ப்பித்து, சகல அக்கிரமங்களையும் உங்களுக்குப் பொறுத்து,

14. நமக்கு எதிரிடையாயும், நமக்கு விரோதமாயுமிருந்த தீர்ப்பின் கையெழுத்தை அழித்து, அதைச்சிலுவையில் அறைந்து, முழுதும் ஒழித்துப் போட்டார்.

15. மேலும் துரைத்தனங்களையும் அதிகாரங்களையும் உரிந்துதள்ளி, மகா தைரியத்தோடு அவைகளைப் பிரசித்தமாய்க் காட்டி, தம்மில்தாமே அவைகளின்மேல் வெற்றிகொண்டாடினார்.

8. **தந்திர நியாயங்கள்** என்பதால்:—கொலோசியரிடத்தில் பிரவேசித்திருந்த இரண்டுவகை தப்பறைப் போதகங்களைக்குறிக்கிறார். அதாவது: யேசுநாதரல்ல, சம்மனசுக்கள் தான் நம்முடைய இரட்சணியத்தின் காரணமென்பதும்; சுவிசேஷத்தோடு பழைய ஏற்பாட்டின் முறைமைகளையும் அவசியம் அநுசரிக்கவேண்டுமென்பதுமான போதகங்களாம்.

**பாரம்பரியம்**:—சம்மனசுக்கள் நம்முடைய இரட்சகர்கள் என்பது சர்வேசுரனாலல்ல, மனிதராலுண்டான போதகமானதால், மனுஷ பாரம்பரியமென்கிறார். சர்வேசுரனால் உண்டான பாரம்பரிய வழக்கங்களுக்கு விரோதமாய் அப்போஸ்தலர் இங்கே போதிக்கிறதில்லை.

**உலகநூல் கோட்பாடுகள்**:—திவ்விய கர்த்தருடைய காலத்துக்கு முன்னிருந்த உலக ஞானிகளும் லௌகீகரான சில யூத ஞானிகளும் கற்றுக்கொடுத்த ஞானம் இப்போது அர்ச். சின்னப்பர் போதிக்கிற கிறீஸ்துநாதருடைய ஞானத்துக்கு ஒவ்வாததும், இத்தோடு அத்தை ஒப்பிட்டால், பாடசாலைகளில் முதல் நூலாதாரம் படிக்கிற பிள்ளைகளுடைய ஞானத்துக்கு ஒத்ததாயிருக்குமென்றும் அர்த்தமாம்.

9. மனுஷ சுபாவம் தேவ சுபாவத்தோடு யேசுக்கிறீஸ்துநாதரில் ஒன்றித்தபடியால் தெய்வீக மகத்துவமெல்லாம் அவரிடத்தில் வசித்திருந்ததென்று அர்த்தமொழிய தெய்வீகம் மனுஷ ரூபமாய் மாறிப்போனதென்று அர்த்தமில்லை. ஆகையால் உலக போதகங்களையும் யூதர் போதகங்களையும் புறக்கணித்து, திவ்விய கர்த்தனைப் பின்சென்றால் நாம் தப்பிப்போகமாட்டோம்.

11. **கிறீஸ்துநாதருடைய விருத்தசேதனம்**:—மாம்சத்தைத் துண்டிக்கிறதல்ல, மனுஷ சுபாவத்தின் கெட்ட பாசங்களை அறுத்துத் தள்ளுவதென்பதாம்.

15. நாமெல்லோரும் ஜென்மப் பாவத்தினாலும் கர்மப்பாவங்களினாலும் நரக நித்திய மரணத்துக்குத் தீர்வையிடப்பட்டவர்களாய்ப் பசாசுகளுக்கு அடிமைப்பட்டிருந்தோம்.

16. ஆதலால் போஜனபானத்தைப் பற்றியாவது, பண்டிகைநாள், அமாவாசி, ஓய்வுநாள் இவைகளைப்பற்றியாவது ஒருவனும் உங்களைக் குற்றப்படுத்தாதிருப்பானாக.

17. இவைகள் வருங்காரியங்களுக்கு நிழலாயிருந்தன: இவைகளுக்கு உடலோ கிறீஸ்துநாதராமே.

18. தாழ்மையிலும், சம்மனசுக்களுடைய வணக்கத்திலும் விருப்பமுற்று, காணாதவைகளில் பிரவேசித்து, மாம்ச சிந்தையில் வீணான கர்வங்கொண்ட எவனும் உங்களை ஏய்க்காதிருப்பானாக. (மத். 24-4.)

19. இப்பேர்ப்பட்டவன் தலையோடு ஒன்றித்திராதவன்; அந்தத் தலையிலிருந்தே சரீரமுழுவதும் கணுக்களாலும் மூட்டுகளாலும் உதவிபெற்று, இணைக்கப்பட்டுத் தெய்வ வளர்ச்சியாய் வளருகிறது.

20. ஆகையால் நீங்கள் கிறீஸ்துநாதரோடேகூட உலகநூல் கோட்பாடுகளுக்கு மரித்தவர்களானால், இன்னம் உலகத்துக்கேற்க நடக்கிறவர்களைப் போல,

21. இதைத் தொடாதேயுங்கள், இதைப் புசியாதேயுங்கள், இதைத் தீண்டாதேயுங்கள் என்பவைகளுக்கு உட்பட்டிருப்பதேன்?

22. இவையெல்லாம் உபயோகிக்கப்படுவதில் அழிந்துபோகிறவைகளும், மனிதர்களுடைய கற்பனைகளுக்கும், போதகத்துக்கும் இசைந்தவைகளுமாயிருக்கின்றன.

---

ஆனால் யேசுநாதர் தம்முடைய திரு இரத்தத்தினால் நம்முடைய பாவங்களைக் கழுவி, நமக்கு விரோதமாயிருந்த நித்திய மரணத்தீர்ப்பைத் தம்முடைய மரணத்தினாலே அழித்து, அந்தத் தீர்ப்பின் சாதனத்தைத் தம்முடைய சிலுவையிலறைந்து நிர்மூலமாக்கினார். அன்றியும் நம்மை அடிமைப்படுத்தியிருந்த பசாசுக்களின் அதிகாரத்தையும் ஆளுகையையும் பிடுங்கிக்கொண்டு அவைகளை வெறுமையாக்கி, அந்த ஆளுகையைத் தாமே எடுத்துக்கொண்டு மரணத்தையும், பசாசையும் ஜெயித்த ஜெயசீலராய்க் கல்லறையைவிட்டு எழுந்தருளினார். அவர் ஏற்படுத்திய ஞானஸ்நானத்தினாலே நாமும் அவரோடேகூடப் பாவத்துக்கு மரித்து, அவரோடேகூட அடக்கம்பண்ணப்பட்டு அவரோடேகூட நித்திய சீவியத்திற்கு உயிர்த்தவர்களானோமென்று அர்த்தமாம்.

**துரைத்தனங்கள் அதிகாரங்கள்:**—என்பது மனுஷர்மேல் ஜென்மப் பாவத்தினால் அதிகாரம்பெற்றிருந்த தீய அரூபிகள்.

16. உரோமர் 14-ம் அதிகாரம் 3-ம் வசன வியாக்கியானம் காண்க.

18. பொய்யான தாழ்ச்சியின் வேஷத்தைத் தரித்துக்கொண்டு மாம்சத்துக்குரிய சிந்தனைகளில் ஆங்காரிகளாகித் தாங்கள் அறியாத காரியங்களைப் பிதற்றித் திருச்சபைக்கு உயிரும் வளர்த்தியும் கொடுக்கிற யேசுநாதரை விட்டுவிட்டு, ஒருவிதமான சம்மனசுக்களின் வேதத்தைப் போதிக்கத் துணிகிற கள்ளப் போதகரால் ஏய்க்கப்படாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்களென்பது இதின் பொருளாம். இதிலே அர்ச். சின்னப்பர் குறிக்கிற கள்ளப் போதகர்கள் யாரென்றால்: அந்நாட்களிலே யூதர்களுக்குள்ளே தோன்றின நோஸ்திக்கர் என்கிற பதிதர்களாம். அந்தப் பதிதர்கள் யேசுநாதர் அர்ச். திரித்துவத்தின் இரண்டாமாளாகிய சர்வேசுரன் அல்ல; மோயீசனைப்போல ஒரு வெறுந் தீர்க்கதரிசியென்றும், சர்வேசுரன் மோயீசனுக்குச் சம்மனசுக்களைக்கொண்டு பேசினதுபோல் யேசுநாதருக்கும் சம்மனசுக்களைக்கொண்டு பேசினாரென்றும், அந்தச் சம்மனசுக்கள்தான் சர்வேசுரனுக்கும் மனிதர்களுக்கும் மத்தியஸ்தரென்றும் இதுமுதலான அபத்தங்களைப் பிதற்றிக்கொண்டு வந்தார்கள்.

19. **தலையோடு ஒன்றித்திராதவன்:**—சம்மனசுக்களுக்கும் மனுஷர்களுக்கும் தலைவராகிய யேசுநாதரை விட்டுச் சம்மனசுக்களை ஆராதிக்கிறவர்களைக் கண்டிக்கிறாரொழிய சம்மனசுக்களுடைய வணக்கம் வேண்டாமென்று சொல்லுகிறதில்லை.

23. இவைகள் சுய இஷ்ட ஆராதனையையும், தாழ்மையையும், சரீரப் புறக்கணிப்பையும்பற்றி ஞானத்தின் வேஷத்தைக்கொண்டிருந்தாலும், மாம்சத் திருப்திக்கு உதவுகிறவைகளேயன்றி உண்மையான பிரயோஜனமுள்ளவைகளல்ல.

## 3-ம். அதிகாரம்.

பழைய மனிதனை உரிந்துபோட்டுப் புது மனிதனை அணிந்துகொள்ளப் புத்தி சொல்லி, புருஷன் பெண்சாதிகளுடைய கடமைகளைக் கற்பிக்கிறார்.

1. ஆகையால் நீங்கள் கிறீஸ்துநாதரோடு உயிர்த்தெழுந்திருக்கிறீர்களானால், கிறீஸ்துநாதர் சர்வேசுரனுடைய வலதுபாரிசத்தில் உட்கார்ந்திருக்கிறஸ்தலமாகிய உன்னதத்தில் உள்ளவைகளைத் தேடுங்கள்.

2. பூமியில் உள்ளவைகளையல்ல, மேலாவில் உள்ளவைகளையே நாடுங்கள்.

3. ஏனெனில் மரித்தவர்களாயிருக்கிறீர்கள், உங்கள் ஜீவியம் கிறீஸ்துநாதரோடு சர்வேசுரனுக்குள் மறைந்திருக்கின்றது.

4. உங்கள் ஜீவனாகிய கிறீஸ்துநாதர் தோன்றும்போது, நீங்களும் அவருடனேகூட மகிமையிலே தோன்றுவீர்கள்.

5. ஆகையால் உங்களுடைய லௌகீக அவயவங்களைச் சாகடியுங்கள். அவையாவன : விபசாரம், அசுத்தம், காமம், துர் இச்சை, விக்கிரக ஆராதனையாகிய பொருளாசை.

6. இவைகளின் நிமித்தமே அவிசுவாச புத்திரர்மேல் தேவகோபம் வருகின்றது.

7. நீங்களும் முன் ஒருகாலத்திலே அவர்களோடே சஞ்சரிக்கும்போது இவைகளின்படி நடந்தீர்கள்.

8. இப்போதோவெனில் கோபம், எரிச்சல், வஞ்சகம், உங்கள் வாயில் வருந் தூஷணம், வெட்கத்துக்குரிய பேச்சுகள் ஆகிய சகலத்தையும் விட்டுவிடுங்கள்.

9. ஒருவருக்கொருவர் பொய் சொல்லாதிருங்கள். இப்படிப் பழைய மனிதனையும், அவன் கிரியைகளையும் உங்களிடத்தினின்று உரிந்துபோட்டு,

10. தன்னைச் சிருஷ்டித்தவருடைய சாயலுக்கொப்பாய், அவரை அறியும் அறிவினால் புதுப்பிக்கப்படுகிற புதிய மனிதனை அணிந்துகொள்ளுங்கள்.

3-4. நீங்கள் ஞானஸ்நானத்தினாலே கிறீஸ்துநாதரோடு இவ்வுலகத்துக்கு மரித்தவர்களாகி, அவரோடு ஞான ஜீவியத்துக்கு உயிர்த்தவர்களாயிருக்கிறீர்கள். சர்வேசுரனுக்குப் பிள்ளைகளும், மோட்சராச்சியத்துக்குச் சுதந்தரவாளிகளுமானீர்கள். இஷ்டப்பிரசாதத்தின் ஞான உயிரை அடைந்திருக்கிறீர்கள். மோட்சத்திலே மகிமையான உயிரை அடையப் போகிறீர்கள். அந்த ஞான உயிரும் ஞான நன்மைகளும் இம்மையில் உலகத்தாருடைய கண்ணுக்கு வெளிப்படாமல் மறைவாயிருக்கிறது. வெளிப் பார்வைக்கு மற்ற மனிதர்களைப்போலிருக்கிறீர்கள். இன்னமும் ஒருவேளை உலகமானது உங்களை நிந்தித்துப் புறக்கணித்துத் துன்பப்படுத்துமாக்கும். ஆனால் கிறீஸ்துநாதர் உலகத்தை நடுத்தீர்க்கவரும்போது நீங்களும் அவரோடேகூட அவருடைய மகிமைக்குப் பங்காளிகளாய், உங்களைப் புறக்கணித்துத் துன்பப்படுத்தின உலகத்தை நடுத்தீர்க்க வருவீர்கள். ஆகையால் இவ்வுலகத்தின் காரியங்களைச் சட்டைபண்ணாமல் பரலோகத்துக்குரியவைகளை இடைவிடாமல் நாடித்தேடுங்கள் என்று அர்த்தமாம்.

5. விக்கிரகங்களுக்கு அடிமைத்தனமாகிற பொருளாசை என்பதற்கு எபேசியர் 5-ம். அதிகாரம் 5-ம். வசனம் காண்க.

11. இதிலே புறஜாதியானென்றும் யூதனென்றுமில்லை; விருத்தசேதன முள்ளவனென்றும், விருத்தசேதனமி ல்லாதவனென்றுமில்லை; நாகரீகமற்ற வனென்றும், சீத்தியனென்றுமில்லை; அடிமையென்றும், சுயாதீனனென்று மில்லை; கிறிஸ்துவே எல்லாரிலும் எல் லாமுமாயிருக்கிறார்.

12. ஆதலால், சர்வேசுரனால் தெரிந் துகொள்ளப்பட்ட நீங்கள் பரிசுத்த ரும், பிரியமுள்ளவர்களுமாய்த் தயாள மான உள்ளத்தையும், சாந்தத்தையும், தாழ்ச்சியையும், அடக்கவொடுக்கத் தையும், பொறுமையையுந் தரித்துக் கொண்டு,

13. ஒருவரொருவரைத் தாங்கி, எவனுக்காவது, மற்றொருவன்மேல் முறைப்பாடிருந்தால், அதைப்பொறு த்துக்கொண்டு, ஆண்டவர் உங்களை மன்னித்ததுபோல் நீங்களும் உங்களுக் குள் ஒருவரொருவரை மன்னித்துக் கொள்ளுங்கள்.

14. ஆனால் இவையெல்லாவற்றிற் கும் மேலாக உத்தமதனத்தின் பந்தன மாகிய பரமஅன்பைக் கொண்டிருங் கள்.

15. கிறீஸ்துநாதருடைய சமாதா னம் உங்கள் இருதயங்களில் சந்தோஷ அக்களிப்புக்கொள்ளட்டும். இதற்கா கவே நீங்கள் ஒரே சரீரமாக அழைக்கப் பட்டிருக்கிறீர்கள். இதற்காக நன்றி யறிந்திருங்கள்.

16. கிறீஸ்துநாதருடைய வாக்கியம் உங்களிடத்தில் சம்பூரணமாய்ச் சகல ஞானத்தோடுங் குடிகொண்டிருக்கக் கடவது. அப்படியே நீங்கள் ஒருவ ரொருவருக்குப் போதித்து, புத்தி சொல்லி, சங்கீதங்களிலும், கீர்த்தனை களிலும், ஞானப் பாட்டுகளிலும் சர் வேசுரனுக்கு நன்றியறிந்த ஸ்தோத்தி ரங்களை உங்கள் இருதயங்களில் பாடிக் கொண்டுவாருங்கள்.

17. வார்த்தையினாலாவது கிரியை யினாலாவது நீங்கள் எதைச் செய் தாலும், அவையெல்லாம் ஆண்டவரா கிய யேசுக்கிறீஸ்துவின் நாமத்தினாலே செய்து, அவர் மூலமாய்ப் பிதாவாகிய சர்வேசுரனுக்கு நன்றியறிந்த ஸ்தோத் திரம்பண்ணுங்கள். (1. கொ. 10-31.)

18. மனைவிகளே, கடமைப்படி உங் கள் புருஷர்களுக்கு ஆண்டவருக்குள் கீழ்ப்படிந்திருங்கள். (எபே. 5-22.)

19. பூமான்களே, உங்கள் மனைவி களைச் சிநேகியுங்கள். அவர்களுக்குக் கசப்பாயிராதேயுங்கள்.

20. பிள்ளைகளே, உங்கள் பெற்றோர் க்கு எல்லாக்காரியத்திலும் கீழ்ப்படி யுங்கள். இது ஆண்டவருக்குப் பிரிய மானது. (எபே. 6-2.)

21. தகப்பன்மார்களே, உங்கள் பிள் ளைகள் மனத்தைரியமற்றுப்போகாத படிக்கு, அவர்களுக்கு எரிச்சலையுண் டாக்காதேயுங்கள். (எபேசு. 6-4.)

22. ஊழியர்களே, சரீரத்தின்படி உங்கள் எஜமான்களாயிருக்கிறவர்களு க்கு எல்லாக் காரியத்திலும் கீழ்ப் படிந்து, மனிதர்களுக்குப் பிரியப்படுகி றவர்களைப்போல் பார்வைக்குமாத்தி ரம் ஊழியஞ்செய்யாமல், சர்வேசுர னுக்குப் பயந்தவர்களாய் நேர்மையான இருதயத்தோடு அவர்களுக்கு ஊழி யஞ்செய்யுங்கள். (தீத். 2-9.)

11. சீத்தியதேசத்தார் அக்காலத்திலே மற்றத் தேசத்தாரெல்லாரையும் விட நாக ரீகமற்றவர்களாக எண்ணப்பட்டிருந்தார்கள்.

19. **உங்கள் மனைவிகளுக்குக் கசப்பாயிராமல்**, என்பதற்கு உங்கள் பேச்சு வார்த்தை நடபடிக்கைகளிலும், கண்டித்துப் புத்திசொல்லவேண்டிய விஷயங்களிலும், மனவருத்தத்தை உண்டுபண்ணாமல், பிரியத்தோடும் தயாளத்தோடும் நடத்திவரவேண்டு மென்பது தாற்பரியம்.

23. நீங்கள் எதைச் செய்தாலும், மனிதருக்கென்று செய்யாமல், ஆண்டவருக்கென்று மனப்பூர்வமாய்ச் செய்யுங்கள்.

24. ஆண்டவரிடத்தில் சுதந்தரத்தின் சம்பாவனையைப் பெற்றுக்கொள்வீர்களென்று அறிந்து, கிறீஸ்துநாதருக்கு ஊழியஞ் செய்யுங்கள்.

25. ஏனெனில் அநியாயஞ்செய்கிறவனும் தான் செய்த அக்கிரமத்துக்குத் தக்க பலனைப் பெற்றுக்கொள்ளுவான். சர்வேசுரனிடத்திலே பாரபட்சமில்லை. (உரோ. 2-6.)

## 4-ம். அதிகாரம்.

*கொலோசியர் தமக்காக வேண்டிக்கொள்ளவும், அஞ்ஞானிகளோடு எச்சரிக்கையாயும், விமரிசையாயும் புழங்கவும் வேண்டுமென்று கேட்டுக்கொண்டு நிருபத்தை முடிக்கிறார்.*

1. எஜமான்களே, உங்களுக்கும் மோட்சத்தில் ஓர் எஜமான் இருக்கிறாரென்று அறிந்து, உங்கள் ஊழியருக்கு நீதியும், நியாயமுமானதைக் கொடுங்கள்.

2. ஜெபத்தில் நிலைத்திருங்கள். நன்றியறிந்த ஸ்தோத்திரத்தோடு ஜெபத்தில் விழித்திருங்கள். (லூக். 18-1; 1. தெச. 5-17.)

3. கிறீஸ்துநாதருடைய இரகசியத்தைப் போதிக்கும்படி சர்வேசுரன் எங்களுக்கு ஓர் பிரசங்கவாசலைத் திறந்தருளும்படிக்கும், அந்த இரகசியத்தைப்பற்றிக் கட்டுண்டவனாகிய நான்

4. அதைப் பேசவேண்டிய விதமாய்ப் பேசி, வெளிப்படுத்தும்படிக்கும் எங்களுக்காகவும் வேண்டிக்கொள்ளுங்கள். (எபே. 6-19.)

5. காலத்தை மீட்டுக்கொண்டு, புறம்பேயிருக்கிறவர்கள்மட்டில் விவேகத்தோடு நடந்துகொள்ளுங்கள்.

6. அவனவனுக்கு இன்னவிதமாக மறுமொழி சொல்ல வேண்டுமென்று நீங்கள் அறிந்துகொள்ளும்படிக்கு உங்கள் பேச்சு எப்போதும் இனிதாகவும், (விவேகமாகிய) உப்பின் சாரமுள்ளதாகவும் இருக்கவேண்டியது.

7. என்னைப்பற்றிய காரியங்களையெல்லாம் மிகவும் பிரியமுள்ள சகோதரனும், பிரமாணிக்கமுள்ள ஊழியனும், கர்த்தருக்குள் என் உடன்வேலையாளுமாகிய தீகிக்கு என்பவர் உங்களுக்குத் தெரிவிப்பார்.

8. உங்களைப்பற்றிய சங்கதிகளை அறிந்து, உங்கள் இருதயங்களுக்கு ஆறுதல் செய்யவேண்டுமென்றே,

---

23. ரோமானருக்குள் அடிமைகள் என்ன வேலை செய்தாலும் அவர்களுக்குச் சுதந்தரமென்று ஒன்றுமில்லை. சர்வேசுரனுடைய ஊழியர்களாகிற கிறீஸ்துவர்கள் எவ்விதத்தாராயிருந்தாலும் ஆண்டவருடைய இராச்சியத்துக்குச் சுதந்தரக்காரராயிருக்கிறார்கள்.

5. எபேசியர் நிருபம் 5-ம் அதிகாரம் 16-ம் வசன வியாக்கியானம் காண்க.

**புறம்போயிருக்கிறவர்கள்மட்டில் விவேகம்:**—அஞ்ஞானிகளால் உங்கள் ஆத்துமங்களுக்கு எவ்விதத்திலும் கெடுதல் வராதபடிக்கு அவர்கள் நடுவில் எச்சரிக்கையாய் நடந்து, தருணத்தையும் சமயத்தையும் பார்த்து ஆனவகையோடு அவர்களுக்கு நல்ல புத்தி சொல்லுங்கள். வேதத்தைக்குறித்து அவர்கள் கேட்கிற கேள்விகளுக்குத் தக்க மறுமொழி சொல்லவும், அதன் பேரில் அவர்கள் சொல்லுகிற தூஷணங்களை ஆனவகையோடு மறுக்கவும், அவனவனுடைய அந்தஸ்துகளுக்குத்தக்கது நடப்பித்துக்கொள்ளவும் வேணுமென்று அர்த்தமாம்.

7. தீகிக்கு என்பவர் கொலோசியருக்கும் எபேசியருக்கும் நிருபத்தைக்கொண்டு போனவர்.

8. நீங்கள் உங்கள் விசுவாசத்தைப்பற்றிப் படும் துன்ப வேதனைகளில் உங்களுக்கு ஆறுதல் தரும்படி அனுப்பியிருக்கிறேன்.

9. அவனையும் அவரோடு எனக்கு மிகவும் பிரியமுள்ளவரும் உங்களைச் சேர்ந்தவரும் பிரமாணிக்கமுள்ள சகோதரனுமாகிய ஒநேஸிமுவையும் அனுப்பியிருக்கிறேன். இவ்விடத்திலுள்ள சங்கதிகளையெல்லாம் இவர்கள் உங்களுக்குத் தெரிவிப்பார்கள்.

10. என்னோடேகூடக் காவலிலிருக்கிற அரிஸ்தார்க்கும், பர்னபாவுக்கு இனத்தானாகிய மாற்கு என்பவரும் உங்களுக்கு மங்களஞ்சொல்லுகிறார்கள். இவனைக்குறித்து உங்களுக்கு முன்னே எழுதியிருக்கிறேன்; இவர் உங்களிடத்தில் வந்தால், இவனை ஏற்றுக்கொள்ளுங்கள்.

11. நீதிமான் என்னப்படுகிற யேசு உங்களுக்கு மங்களஞ்சொல்லுகிறார். விருத்தசேதனத்தாரில் இவர்கள்மாத்திரம் சர்வேசுரனுடைய இராச்சியத்துக்கடுத்தவைகளில் எனக்கு உதவியாட்களாயிருந்து எனக்கு ஆறுதல் வருவித்தார்கள்.

12. உங்களைச்சேர்ந்தவரும் யேசுக்கிறீஸ்துநாதருடைய ஊழியனுமாகிய எப்பாப்புராஸ் என்பவர் உங்களுக்கு மங்களஞ் சொல்லுகிறார். நீங்கள் சர்வேசுரனுடைய சகல சித்தத்திலும் உத்தமராகவும், பூரணராகவும் நிலைநிற்கும்படி இவர் எப்போதும் உங்களைப் பற்றிக் கவலையாய் வேண்டிக்கொண்டுவருகிறார்.

13. இவர் உங்கள்பேரிலும் இலவோதிக்கேயாவிலும் எராப்போலியிலும் இருக்கிறவர்கள்பேரிலும் மிகவும் கரிசனமுள்ளவரென்பதற்கு நானே சாட்சியாயிருக்கிறேன்.

14. மிகவும் பிரியமுள்ள வைத்தியனாகிய லூக்காஸும், தேமாவும் உங்களுக்கு மங்களஞ்சொல்லுகிறார்கள். (2. தீமோ. 4-11.)

15. இலவோதிக்கேயாவிலிருக்கும் சகோதரர்களுக்கும், நிம்பாவுக்கும், அவர் வீட்டிலிருக்கும் சபையாருக்கும் மங்களஞ்சொல்லுங்கள்.

16. இந்த நிருபம் உங்களிடத்தில் வாசிக்கப்பட்டபின்பு, இலவோதிக்கேயாவிலிருக்கும் சபையிலும் வாசிக்கப்படும்படி செய்யுங்கள். இலவோதிக்கேயாவிலுள்ளவர்களுக்கு நான் எழுதிய காகிதத்தை நீங்களும் வாசித்துக்கொள்ளுங்கள்.

17. பின்னும் அர்க்கிப்பு என்பவனை நோக்கி: நீர் ஆண்டவரிடத்தில் பெற்றுக்கொண்ட ஊழியத்தை நிறைவேற்றும்படி பார்த்துக் கொள்ளுவீராக என்று சொல்லுங்கள். (பிலோ. 2.)

18. சின்னப்பனாகிய நான் என் கையொப்பம்வைத்து மங்களஞ்சொல்லுகிறேன். என் விலங்குகளை நினைத்துக் கொள்ளுங்கள். இஷ்டப்பிரசாதம் உங்களோடிருப்பதாக. ஆமென்.

9. ஒநேஸிமு:—கோலோசா பட்டணத்தானாகிய பிலேமினிடம் அடிமையாயிருந்து அவனை விட்டு ஓடிப்போனவன். இவனை அர்ச். சின்னப்பர் காவலில் இருந்தபோது மனந்திருப்பினார்.

10. அரிஸ்தார்க்:—தெசலோனிக்கேயிலிருந்து அர்ச். சின்னப்பரோடு தன்மனமாய் கட்டாயமின்றி எபேசுக்கும், பிறகு உரோமாபுரிக்கும் வழித்துணையாய்ப்போனவர்.

13. இப்பட்டணங்கள் கோலாசா நகருக்குக் கிட்டினவைகளாம்.

14. லூக்காஸ்:—சுவிசேஷம் எழுதினவர்.



# பாயிரம்.

தெசலோனிக்கே நகரமானது மக்கேதோனியா நாட்டின் பிரதான பட்டணமாம். அர்ச். சின்னப்பர் அந்தப் பட்டணத்தாருக்குச் சத்தியவேதத்தைப் போதித்தது எப்படியென்று அப். நடபடி. 14-ம். அதிகாரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அவர் அத்தேன் பட்டணத்திலிருக்கும்போது அந்தச் சபையாருக்குப் பல உபத்திரவங்களுண்டானதால், அவர்களைத் தேற்றவும், அவர்கள் விசுவாசம் உறுதியாயிருக்கிறதோவென்று விசாரித்தறியவும் தீமோத்தேயு என்பவனை அனுப்பினார். இவர் போய் அவர்களுடைய உறுதியான விசுவாசநிலைமையை அறிந்து சந்தோஷத்தோடு கொரிந்து நகரத்திற்கு அர்ச். சின்னப்பரிடத்தில் திரும்பி வந்து சேர்ந்தார். அந்தச் சமயத்தில் அர்ச். சின்னப்பர் கர்த்தரவதாரத்தின் 52-ம் ஆண்டில் இந்த நிருபத்தைத் தெசலோனிக்கேயருக்கு எழுதினார். முதல் அதிகாரத்தில் அவர்களுடைய விசுவாசத்தையும் துன்பங்களில் பொறுமையையும்பற்றிக்கொண்டாடுகிறார். 2-ம் அதிகாரத்தில் அவர்கள்பற்றிக்கொண்ட விசுவாசத்தில் உறுதியாயிருக்கப் புத்திசொல்லித் தாம் அவர்களுக்குச்சுவிசேஷத்தைப் போதித்த தன்மையை அவர்களுக்கு ஞாபகப்படுத்துகிறார். 3-ம் அதிகாரத்தில் அவர்கள் செய்தியை அறியவேண்டுமென்கிற ஆசையினால் தாம் அவர்களிடத்தில் தீமோத்தேயுவை அனுப்பினதையும், அவர் திரும்பிவந்து சொன்ன நல்ல செய்திகளையும்பற்றிச் சர்வேசுரனுக்கு ஸ்தோத்திரஞ் சொல்லி, அவர்களுக்காகச் சர்வேசுரனை வேண்டிக்கொள்ளுகிறதாகத் தெரிவிக்கிறார். 4-ம் அதிகாரத்தில் உத்தானத்தின் நம்பிக்கையினால் கற்பு முதலான புண்ணியங்களை அநுசரிக்கவும், 5-ம். அதிகாரத்தில் நடுத்தீர்வையின் பயத்தினால் எப்போதும் எச்சரிக்கையோடு நற்கிரியைகளினால் அதற்கு ஆயத்தமாயிருக்கவும் வேண்டுமென்று புத்திசொல்லுகிறார்.



# அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர் தெசலோனிக்கேயருக்கு எழுதிய முதல் நிருபம்.

## முதல் அதிகாரம்.

*தெசலோனிக்கேயருக்கு ஆண்டவர் செய்த நன்மைகளுக்காக நன்றியறிந்தஸ்தோத்திரம் சொல்லுகிறார்.*

1. சின்னப்பனும், சில்வானும், தீமோத்தேயும் பிதாவாகிய சர்வேசுரனுக்குள்ளும் ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவுக்குள்ளும் இருக்கிற தெசலோனிக்கேயருடைய சபைக்கு (எழுதுவதாவது.)

2. உங்களுக்கு இஷ்டப்பிரசாதமும் சமாதானமும் உண்டாவதாக. இடைவிடாமல் எங்கள் ஜெபங்களில் உங்கள் மேல்ஞாபகமாயிருந்து, உங்களெல்லாருக்காகவும் எப்போதும் சர்வேசுரனுக்கு நன்றியறிந்த ஸ்தோத்திரஞ்செலுத்துகிறோம். (அப். 16-19.)

3. ஏனெனில் உங்கள் விசுவாசத்தின் கிரியையையும், உங்கள் பிரயாசத்தையும், பரம அன்பையும், நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவின் மேலுள்ள நம்பிக்கையில் உங்கள் பொறுமையையும் நம்முடைய பிதாவாகிய சர்வேசுரன் முன்பாக நினைவுகூர்ந்து வருகிறோம்.

4. சகோதரரே, சர்வேசுரனால் நேசிக்கப்பட்டவர்களே, நீங்கள் தெரிந்துகொள்ளப்பட்டவர்களென்று எங்களுக்குத்தெரியும்.

5. ஏனெனில், எங்கள் சுவிசேஷப் போதகம் உங்களிடத்தில் பேச்சில்மாத்திரம் அல்லவே, வல்லமையிலும் இஸ்பிரீத்துசாந்துவிலும் மிகுந்த சம்பூரணவரத்திலும் இருந்தது. அன்றியும் நாங்கள் உங்கள் நடுவிலிருக்கும்போது உங்கள் நிமித்தம் எப்படியிருந்தோமென்று அறிந்திருக்கிறீர்கள்.

6. மேலும், நீங்கள் உங்களுக்குண்டான மிகுந்த துன்பத்தில் இஸ்பிரீத்துசாந்துவின் சந்தோஷத்தோடு எங்கள் போதகத்தை ஏற்றுக்கொண்டு, எங்களையும் ஆண்டவரையும் கண்டுபாவிப்பவர்களானீர்கள்.

5. **வல்லமை என்பது** சுவிசேஷ போதகத்துக்கு மனிதர்களுடைய மனதை இணக்கக்கூடிய புதுமைகளின் வல்லமையென்றும், இஸ்பிரீத்துசாந்து என்பது விசுவாசிகளுடைய இருதயங்களில் கடவுள் பொழிந்த ஞானவரங்களென்றும் அர்த்தமாம். (ரோமை. 13-5.)

7. இதினாலே மக்கேதோனியாவிலும் அக்காயாவிலுமுள்ள சகல விசுவாசிகளுக்கும் மாதிரியானீர்கள்.

8. அதெப்படியெனில், ஆண்டவருடைய வாக்கியம் உங்களிடத்திலிருந்து மக்கேதோனியாவிலும் அக்காயாவிலும் பரம்பினதுமல்லாமல், சர்வேசுரன்மேல் உங்களுக்குள்ள விசுவாசம் எப்பக்கத்திலும் பிரபலியமானதினால், அதைக்குறித்து நாங்கள் யாதேனும் சொல்லவேண்டியதில்லை.

9. ஏனெனில், அவர்களே எங்களைப் பற்றிப் பேசும்போது, உங்களிடத்தில் நாங்கள் வந்தது எவ்வளவு அநுகூலமாயிருந்ததென்றும், நீங்கள் ஜீவந்தராகிய மெய்யான சர்வேசுரனுக்கு ஊழியம்பண்ணி,

10. அவரால் மரித்தோரினின்று உயிர்ப்பிக்கப்பட்டவரும், இனி வரும் கோபாக்கினைக்குள்ளாகாமல் நம்மை மீட்டிரட்சித்தவருமாகிய யேசு என்னும் அவருடைய குமாரன் பரலோகத்தினின்று (வருவதை) எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்படியாக எவ்விதமாய் விக்கிரகங்களை விட்டுச் சர்வேசுரனை நோக்கி மனந்திரும்பினீர்களென்றும் அறிவிக்கிறார்கள்.

## 2-ம். அதிகாரம்.

தாம் அவர்களுக்குச் சுவிசேஷத்தை எவ்வளவு அக்கறையோடு பிரசங்கித்ததாகச் சொல்லிக்காண்பித்து, அவர்கள் தங்கள் சுய ஜனங்களால் பட்ட துன்பங்களுக்குள்ளே வேதத்தில் உறுதியாயிருந்ததைப்பற்றிச் சர்வேசுரனுக்கு ஸ்தோத்திரம் சொல்லுகிறார்.

1. சகோதரரே, நாங்கள் உங்களிடத்தில் வீணாக வரவில்லையென்று நீங்களே அறிவீர்கள்.

2. எப்படியென்றால், உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடியே முன்னே பிலிப்பிநகரத்தில் பாடுபட்டு, அவமானங்களால் பூரிக்கப்பட்ட நாங்கள் நம்முடைய சர்வேசுரனை நம்பி, உங்களுக்கு அவருடைய சுவிசேஷத்தை வெகு கவலையோடு பிரசங்கிக்கத் துணிந்தோம்.

3. ஏனெனில் எங்கள் போதகம் தப்பறையினாலும் நற்கருத்தின்மையினாலும் உண்டானதல்ல. அது வஞ்சகத்தில் ஊன்றினதுமல்ல.

4. ஆனால் சுவிசேஷத்தை எங்களுக்கு ஒப்புவிக்கும்படி சர்வேசுரன் எங்களை அங்கிகரித்துக்கொண்டபடியே, நாங்கள் அதை மனுஷருக்குப் பிரியப்படுகிறவர்கள்போல் பிரசங்கியாமல், எங்கள் இருதயங்களைப் பரிசோதிக்கிற சர்வேசுரனுக்கே பிரியப்படும்படி பிரசங்கிக்கிறோம்.

5. எப்போதாவது நாங்கள் இச்சகமாய்ப் பேசவில்லையென்பது உங்களுக்குத்தெரியுமே. பொருளாசையை முன்னிட்டும் நாங்கள் பேசினவர்களல்ல. இதற்குத் தெய்வமே சாட்சி.

6. உங்களிடத்திலேயாகிலுஞ்சரி, வேறே யாரிடத்திலேயாகிலுஞ்சரி; மனிதரிடத்திலே நாங்கள் பெருமையைத் தேடினவர்களல்ல.

7. கிறீஸ்துநாதருடைய அப்போஸ்தலர்களைப்போல உங்களுக்கு நாங்கள் பாரமாயிருக்கக் கூடுமாகிலும், உங்கள் நடுவில் குழந்தைகளைப்போலிருந்தோம். பாலூட்டுகிற தாய் தன் பிள்ளைகளைப் பேணுகிறதுபோல, (1. கொ. 9-14.)

---

7. உரோமானர் கிரேக் தேசத்தை இரண்டு பாகமாகப் பிரித்து வடபாகத்தை மக்கேதோனியாவென்றும் தென்பாகத்தை அக்காயாவென்றும் பெயரிட்டிருந்தார்கள்.

1. **வீணாகவரவில்லை** என்பது பிரயோசனமில்லாமலாவது, வருத்தமின்றியாவது வரவில்லையென்று அர்த்தங்கொள்ளும்.

8. நாங்கள் உங்கள்மேல் பிரீதியாயிருந்து, சர்வேசுரனுடைய சுவிசேஷத்தைமாத்திரமல்ல, எங்கள் ஜீவன்களையும் உங்களுக்காகக் கையளிக்கவேண்டுமென்று ஆவலாயிருந்தோம். ஏனெனில் நீங்கள் எங்களுக்கு அம்மாத்திரம் பிரியமுள்ளவர்களாயிருக்கிறீர்கள்.

9. சகோதரரே, நாங்கள்பட்ட பிரயாசமும் வருத்தமும் உங்களுக்கு ஞாபகமாயிருக்கும். உங்களில் எவனுக்கும் நாங்கள் பாரமாயிராதபடிக்கு நாங்களே இரவும் பகலும் வேலைசெய்து சர்வேசுரனுடைய சுவிசேஷத்தை உங்களுக்குள் போதித்துவந்தோம். (அப். 20-34; 1. கொ. 4-12; 2. தெ. 3-8.)

10. மேலும், விசுவாசத்தைக் கைக்கொண்டவர்களாகிய உங்களுக்குள்ளே நாங்கள் எவ்வளவு பரிசுத்தமாயும், நீதியாயும், குற்றமற்றவர்களாயும் நடந்துவந்தோமென்பதற்கு நீங்களும சாட்சி; தெய்வமும் சாட்சி.

11. அன்றியும பிள்ளைகள்மட்டில் தகப்பன் எப்படியோ, அப்படியே நாங்களும் உங்கள் ஒவ்வொருவர்மட்டிலும் நடந்து,

12. உங்களைத் தம்முடைய இராச்சியத்துக்கும் மகிமைக்கும் அழைத்த சர்வேசுரனுக்கு நீங்கள் யோக்கியமானவர்களாய் நடக்கவேண்டுமென்று உங்களைத் தூண்டி ஏவி, தேற்றி, எச்சரித்துவந்தோம் என்பதை நீங்கள் அறிவீர்கள்.

13. ஆகையால் நீங்கள் தேவவாக்கியத்தை எங்களாலே கேட்டுப் பெற்றுக்கொண்டபோது, அதை மனுஷர்களுடைய வாக்கியமாகப் பெற்றுக்கொள்ளாமல், கடவுளுடைய வாக்கியமாகப் பெற்றுக்கொண்டதினாலே நாங்கள் இடைவிடாமல் சர்வேசுரனுக்கு நன்றியறிந்த ஸ்தோத்திரஞ் செலுத்துகிறோம். அது மெய்யாகவே சர்வேசுரனுடைய வாக்கியந்தான்; அவர் விசுவாசிகளாகிய உங்களிடத்தில் முயற்சியாயிருக்கிறார்.

14. அதெப்படியென்றால், சகோதரரே, யூதேயா தேசத்தில் கிறீஸ்து யேசுவுக்குள்ளான சர்வேசுரனுடைய சபைகளை நீங்கள் பின்பற்றினவர்களானீர்கள். ஏனெனில் அவர்கள் யூதர்களாலே என்ன பாடுபட்டார்களோ, அந்தப பாடுகளையே நீங்களும் உங்கள் சுயஜனங்கள் கையில் பட்டீர்கள்.

15. அந்த யூதர்கள் ஆண்டவராகிய யேசுநாதரையும், தீர்க்கதரிசிகளையும் கொலைசெய்தார்கள்; எங்களையும் துன்பப்படுத்தினார்கள். அவர்கள் சர்வேசுரனுக்கு ஏற்காதவர்களும், எல்லா மனிதருக்கும் விரோதிகளுமாய் இருந்து,

16. புறஜாதியார் இரட்சணியம் அடைவதற்கேதுவாக நாங்கள் அவர்களோடு பேசாதபடி தடுத்து, இவ்விதமாய் எப்போதும் தங்கள் பாவங்களின் அளவை நிரப்புகிறார்கள். ஏனெனில் தேவ கோபாக்கினை கடைசிமட்டும் அவர்கள்மேல் வந்திறங்கிற்று.

17. நாங்களோவென்றால், சகோதரரே, இருதயத்தில் உங்களைவிட்டுப் பிரியாமல, கண்ணுக்குமாத்திரம் சில காலம் உங்களைவிட்டுப் பிரிந்திருந்ததினால், திரும்பவும் உங்கள் முகத்தைக் காண வேண்டுமென்று மென்மேலும் மிகுந்த ஆசையோடு எங்கள் மனந் தீவிரிததுக்கொண்டிருந்தது.

18. ஆகையால் நாங்கள் உங்களிடத்தில் வர மனதாயிருந்தோம். விசேஷமாய்ச் சின்னப்பனாகிய நானும் ஒருமுறைக்கு இருமுறை ஆசைப்பட்டேன். ஆனால் எங்களுக்குச் சாத்தான் தடையாயிருந்தான்.

19. எங்களுக்கு நம்பிக்கையும், மகிழ்ச்சியும், மகிமைக் கிரீடமுமாய் இருப்பதென்ன? அது நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர் வருங்காலத்தில் அவர் சமுகத்தில் நீங்கள்தானல்லோ.

20. (ஆம், மெய்யாகவே) நீங்களே எங்களுக்கு மகிமையும் மகிழ்ச்சியுமாயிருக்கிறவர்கள்.

## 3-ம். அதிகாரம்.

*அவர்கள் பட்ட துன்பத்தில் விசுவாசத்தை விட்டுத் தவறுவார்களோ என்று அஞ்சி, தீமோத்தேயுவை அவர்களிடத்தில் அனுப்பினதும், அவர்களுடைய விசுவாச நிலைமையை அறிந்து சர்வேசுரனுக்கு ஸ்தோத்திரஞ்செய்ததும்.*

1. ஆதலால் இப்படி உங்களிடம் (வரக்கூடாததை) இனி அதிகமாய்த் தாங்கமாட்டாமல், அத்தேன்பட்டணத்தில் நாம் தனித்திருப்பது தாவிளை என்று எண்ணி,

2. இந்தத் துன்பங்களில் ஒருவனும் அசையாதிருக்கும்படி உங்களை உறுதிப்படுத்தவும், உங்கள் விசுவாசத்தைப்பற்றி உங்களுக்குப் புத்திசொல்லவும் எங்கள் சகோதரனும், கிறீஸ்துநாதருடைய சுவிசேஷ காரியத்தில் தேவ ஊழியனுமாகிய தீமோத்தேயுவை உங்களிடம் அனுப்பியிருக்கிறோம். (அப். 16-1.)

3. இப்படிப்பட்ட துன்பப்படுவதற்கே நாம் குறிக்கப்பட்டிருக்கிறோம் என்று உங்களுக்குத் தெரியுமே.

4. ஏனெனில், நாம் உங்களிடத்திலிருக்கும்போது இனி நமக்குத் துன்பம் நேரிடுமென்று முன்னமே உங்களுக்கு அறிவித்தோமல்லோ? அதுபோலவே சம்பவித்திருக்கிறதென்றும் அறிவீர்கள்.

5. நானோ இனித் தாங்கமாட்டாமல், சோதிப்போன் ஒருவேளை உங்களைச் சோதித்தானோவென்றும், எங்கள் பிரயாசை வீணுகுமோவென்றும் (அஞ்சி) உங்கள் விசுவாசத்தைப்பற்றிக் கிரகித்துவரும்படி அவனை அனுப்பினேன்.

6. ஆனால், இப்போது தீமோத்தேயு உங்களிடத்திலிருந்து எங்களிடத்திற்குத் திரும்பி வந்து, உங்களுடைய விசுவாசத்தையும், பரம அன்பையுங்குறித்து விளக்கி, நீங்கள் எப்போதும் எங்களைப் பிரியத்தோடே நினைவுகூருகிறீர்களென்றும், நாங்கள் உங்களைக் காண எப்படி ஆசையாயிருக்கிறோமோ, அப்படியே நீங்களும் எங்களைக் காண ஆசையாயிருக்கிறீர்களென்றும் அறிவித்தார்.

7. இதினிமித்தம் சகோதரரே, எங்கள் சகல இக்கட்டுத் துன்பங்களிலும் உங்கள் விசுவாசத்தை முன்னிட்டு உங்களால் ஆறுதலடைந்தோம்.

8. ஏனெனில், நீங்கள் ஆண்டவரிடத்தில் நிலைத்திருக்கிறதினால், இப்போதுதான் எங்களுக்கு உயிர்வந்திருக்கிறது.

9. ஆகையால் நம்முடைய சர்வேசுரனுக்கு முன்பாக உங்கள் நிமித்தம் நாங்கள் அடைகிற பூரண சந்தோஷத்திற்காக உங்களைக்குறித்துச் சர்வேசுரனுக்கு எவ்விதமாய் நன்றியறிந்த ஸ்தோத்திரஞ்செய்வோம்?

1-2. அப். நடபடி 17-ம் அதி. 14-15-ம் வசனங்களில் கண்டிருக்கிறபடி அர்ச். சின்னப்பர் அத்தேன் பட்டணத்துக்குப் புறப்பட்டுப் போனபின்பு, சீலாவும், தீமோத்தேயும் பேறாநகரத்தில் தங்கியிருந்தார்கள். இவ்விடத்திலிருந்துதான் அர்ச். சின்னப்பர் தீமோத்தேயுவைத் தெசலோனிக்கே நகரத்துக்குஅனுப்பினர்.

10. அதினாலே உங்கள் முகத்தைக் காணவும், உங்கள் விசுவாசத்துக்குக் குறைவாய் இருக்கிறவைகளை நிறைவாக்கவும் வேண்டுமென்று இரவும் பகலும் வேண்டிக்கொள்ளுகிறோம்.

11. ஆகையால் நம்முடைய பிதாவாகிய சர்வேசுரனும் நம்முடைய கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துநாதருமே எங்களை உங்களிடத்திற்கு வழி நடத்துவாராக.

12. கர்த்தர் உங்களைப் பலுகச்செய்து, உங்கள் மட்டில் எங்களுக்குள்ள சிநேகம் எப்படியோ, அப்படியே ஒருவரொருவர்மட்டிலும் மற்றெல்லா மனுஷர்மட்டிலும் உங்களுக்குள்ள சிநேகத்தையும் ஓங்கிவளரப்பண்ணுவாராக.

13. அன்றியும் நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர் தமது சமஸ்த அர்ச்சியசிஷ்டவர்களோடுங் கூட வரும்போது, நமது பிதாவாகிய சர்வேசுரன் முன்பாக நீங்கள் பரிசுத்தத்தில் குறையற்றவர்களாயிருக்கும்படி உங்கள் இருதயங்களை ஸ்திரப்படுத்துவாராக. ஆமென். (1. கொ. 1-7; பிலோ. 1-10.)

## 4-ம். அதிகாரம்.

*தாம் அவர்களுக்குக் கற்பித்தபடி நடக்கக் கட்டளையிட்டு, கற்புக்கு விரோதமான பாவங்களைத் தள்ளவும், மரித்தவர்களைப்பற்றி மிதமிஞ்சித் துக்கப்படாமல் ஒருவரொருவனை அந்நியோந்நியமாய்ச் சிநேகிக்கவும் புத்திசொல்லுகிறார்.*

1. அன்றியும் சகோதரரே, நீங்கள் என்னவிதமாய் நடந்து, சர்வேசுரனுக்குப் பிரியப்படவேண்டுமென்று எங்களிடத்தில் கேட்டு அறிந்துகொண்டீர்களோ, அப்படியே நீங்கள் நடந்துமென்மேலும் விர்த்திக்கவேண்டுமென்று ஆண்டவராகிய யேசுநாதரிடத்தில் உங்களை மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

2. ஆண்டவராகிய யேசுவின் நாமத்தினாலே நான் உங்களுக்குக் கொடுத்த கற்பனைகள் ஏதென்று அறிந்திருக்கிறீர்கள்.

3. நீங்கள் அர்ச்சியசிஷ்டவர்களாக வேண்டுமென்பதே சர்வேசுரனுடைய சித்தம். ஆதலால் நீங்கள் காமநடத்தைக்கு விலகி, (உரோ. 12-2; எபே. 5-17.)

4. உங்களில் ஒவ்வொருவனும் தன் பாத்திரத்தைப் பரிசுத்தமாயும், யோக்கியமாயும் காப்பாற்றிக்கொள்ளவும்,

5. சர்வேசுரனை அறியாத புறஜாதியாரைப்போல் இச்சையின் பாசத்துக்கு உட்படாதிருக்கவும் அறிந்துகொள்வானாக.

6. மேலும் இந்தக் காரியத்தில் ஒருவனும் தன் சகோதரனுக்குப் பலவந்தம் பண்ணாமலும், வஞ்சனை செய்யாமலும் இருப்பானாக. ஏனெனில், நாம் முன்னமே உங்களுக்குச் சத்தியமாக அறிவித்தபடியே இவைகளெல்லாவற்றிற்கும் ஆண்டவரே பழிவாங்குவார்.

7. சர்வேசுரன் நம்மை அசுத்தத்துக்கல்ல, அர்ச்சியசிஷ்டதனத்துக்கே அழைத்திருக்கிறார்.

8. ஆகையால் இவைகளைப் புறக்கணிக்கிறவன் மனுஷனையல்ல, தம்முடைய இஸ்பிரீத்துசாந்துவை முதலாய் நமக்குத் தந்தருளின சர்வேசுரனையே புறக்கணிக்கிறான்.

9. சகோதர சிநேகத்தைக் குறித்தோவெனில் நாங்கள் உங்களுக்கு எழுதவேண்டுவதில்லை. ஏனெனில் ஒருவரொருவனைச் சிநேகிக்கும்படி நீங்கள் சர்வேசுரனிடத்தில் கற்றுக்கொண்டீர்களே. (அருள. 13-34; 1. அருள. 2-10.)

10. ஏனெனில் மக்கேதோனியா நாடெங்குமுள்ள சகல சகோதரர் மட்டிலும் நீங்கள் இந்தச் சிநேகத்தை அநுசரித்து வருகிறீர்கள். ஆகையால் சகோதரரோ, நீங்கள் இதில் இன்னும் அதிகமாய் வளர்ந்தோங்கவும்,

11. நாங்கள் உங்களுக்குக் கற்பித்த படியே சகலத்திலும் அமைதலுள்ள வர்களாயிருக்கப் பிரயாசப்படவும், உங்கள் சொந்த அலுவல்களைப் பார்த்து, உங்கள் கையினால் வேலைசெய்யவும், புறம்பே இருக்கிறவர்கள்மட்டில் யோக்கியவான்களாய் நடந்து, எவனிடத்திலாவது எந்தப் பொருளையும் அபேட்சியாதிருக்கவும் வேண்டுமென்று உங்களைக்கேட்டுக்கொள்ளுகிறோம்.

12. அல்லாமலும் சகோதரரோ, நம்பிக்கையற்ற மற்ற மனுஷரைப்போல் நீங்களும் துக்கிக்காதபடிக்கு, மரித்தோர் விஷயமாய் நீங்கள் அறிவீனராயிருப்பது எங்களுக்குப் பிரியமில்லை.

13. ஏனெனில், யேசுநாதர் மரித்து, உயிர்த்தெழுந்தாரென்று நாம் விசுவாசிக்கிறோமானால்,அவ்விதமே யேசுநாதரிடத்தில் மரித்தவர்களையும் சர்வேசுரன் அவரோடே கொண்டு சேர்ப்பார் (என்று விசுவசிக்கவேண்டும்.)

14. அதினாலே நாங்கள் ஆண்டவருடைய வார்த்தையாக உங்களுக்குச் சொல்லுகிறதாவது : உயிரோடிருந்து, ஆண்டவருடைய வருகைக்குக் காத்திருக்கிற நாம் ஏற்கனவே மரித்தவர்களுக்கு முந்திக்கொள்ளமாட்டோம். (1. கொ. 15-23.)

15. ஏனெனில் கட்டளைப்படியே அதிதூதன் தொனிக்க, தேவ எக்காளம் முழங்க, ஆண்டவர் வானத்தினின்று இறங்கிவருவார். அப்பொழுது கிறீஸ்துநாதரிடத்தில் மரித்தவர்கள் முந்தி உயிர்த்தெழும்புவார்கள்.

16. பின்பு (இவ்வுலகத்தில்) உயிரோடே விடப்பட்டிருக்கிற நாம் அவர்களோடேகூட மேகங்களில் எடுபட்டு, ஆகாசத்தில் கிறீஸ்துநாதருக்கு எதிர்கொண்டுபோய், அப்படியே ஆண்டவரோடு எப்போதும் இருப்போம்.

17. ஆனபடியினாலே இந்த வார்த்தைகளைக்கொண்டு நீங்கள் ஒருவரொருவரைத் தேற்றிக்கொள்ளுங்கள்.

---

14. **ஆண்டவருடைய வார்த்தை என்பது :**—அப்போஸ்தலருக்கு யேசுநாதரே நேராய் வெளிப்படுத்தின சத்தியமென்று நினைக்கத்தகும்.

**முந்திக்கொள்ளமாட்டோம்** என்பது :—அவர்களுக்கு முன்னும் அவர்களில்லாமலும் நாம் பரலோக இராச்சியத்தில் பிரவேசிப்பதில்லையென்று அர்த்தமாம். ஆகையால் இவ்விடத்தில் அப்போஸ்தலர் தாமும் அப்போதிருந்த தெசலோனிக்கேயரும் ஆண்டவர் வருமளவும் உயிரோடிருப்பதாகச் சொல்லாமல், உலக முடிவில் இருப்பவர்களைக்குறித்துத் தன்மையிடமாகப் பேசுகிறார்.

15. இவ்விடத்தில் சொல்லியிருக்கும் எக்காள சத்தம் மரித்தோரெல்லாரையும் நடுத்தீர்வைக்கு அழைக்கும்படி சம்மனசு ஊதும் எக்காள சத்தமாம். இதற்குப்பின் நடப்பது 16-ம் வசனத்தில் சொல்லியிருக்கிறது.

17. தெசலோனிக்கே சபையார் தங்களில் மரிக்கிறவர்களைப்பற்றி மிகவும் கிலேசப்படுவார்கள். அவர்களுக்கு ஆறுதலாக அர்ச். சின்னப்பர் போதித்த தன்மையாவது : நம்பிக்கையற்ற அஞ்ஞானிகளைப்போல் நீங்களும் உங்கள் மரித்தோர்களைக்குறித்துக் கிலேசப்படவேண்டாம். ஏனெனில், அவர்கள் என்றென்றைக்கும் மரித்தவர்களல்ல. அவர்களுடைய மரணம் நித்திரையைப்போலிருக்கிறது. அவர்கள் மறுபடியும் உயிர்த்தெழுந்திருப்பார்கள். அதெப்படியென்றால், உலகமுடிவிலே யேசுநாதர் சம்மனசுக்கள் சூழ,

## 5-ம். அதிகாரம்.

நடுத்தீர்வைநாள் நினையாத நேரத்தில் வருமென்றும் அதற்கு அவர்கள் எப்போதும் ஆயத்தமாயிருக்கவேண்டுமென்றும் புத்தி சொல்லுகிருர்.

1. சகோதரரே, இவைகள் நடக்கும் காலத்தையும் வேளையையுங்குறித்து நாம் உங்களுக்கு எழுதவேண்டியதில்லை.

2. ஏனெனில் இரவிலே திருடன் எப்படி வருவானே, அப்படியே ஆண்டவருடைய நாளும் வருமென்று உங்களுக்கு நன்ருய்த் தெரியுமே. (2. இரா. 3-10; காட். 3-3.)

3. சமாதானமாயும் சேமமாயும் இருக்கிறேமென்று மனிதர்கள் சொல்லிக்கொண்டிருக்கும்போதே, சடிதியில் கர்ப்பவதிக்குப் பிரசவ வேதனை வருகிறதுபோல் அவர்கள்மேல் கேடு வந்துவிடியும். அவர்கள் அதற்குத் தப்ப மாட்டார்கள்.

4. நீங்களோ, சகோதரரே, அந்த நாள் திருடனைப்போல் உங்களைப் பிடிக்கும்படிக்கு நீங்கள் இருட்டிலிருக்கிறவர்களல்லவே.

5. நீங்களெல்லாரும் பிரகாசத்தின் மக்களும், பகலின் புத்திரருமாய் இருக்கிறீர்கள். நாம் இரவுக்கும் இருளுக்கும் புத்திரர் அல்ல.

6. ஆகையால் மற்ற மனுஷர்களைப் போல் நித்திரைபோகாமல், விழிப்புள்ளவர்களும், மனமயக்கமற்றவர்களுமாய் இருப்போமாக.

7. ஏனெனில், நித்திரை போகிறவர்கள் இரவிலே நித்திரை போகிருர்கள். குடிவெறியரும் இராக்காலத்திலே வெறிகொள்ளுகிருர்கள்.

---

மிகுந்த மகிமைப் பிரதாபத்தோடு பரலோகத்தினின்று இறங்கிவந்து, அதிதூதர் நான்கு திசைகளிலும் கேட்கும்படி எக்காளம் ஊதி: மரித்தோரே எழுந்திருங்களென்று கூப்பிடக் கற்பிப்பார். அப்பொழுது கிறீஸ்துநாதருடைய சமாதான ஐக்கியத்தில் மரித்தவர்களாகிய சகலரும் ஒருக்ஷணத்தில் கல்லறைகளைவிட்டு எழுந்து, அப்போது உயிரோடிருக்கும் மற்ற விசுவாசிகளோடு ஏகோபித்துக் கிறீஸ்துநாதருக்கு எதிர்கொண்டுபோய் அவரோடேகூடப் பரமண்டலங்களில் ஏறி என்றென்றைக்கும் அவருடனேகூடப் பாக்கியமாயிருப்பார்கள். ஆகையால் இந்த நம்பிக்கையைக்கொண்டிருக்கிற நீங்கள் இந்த வாக்கியங்களைக்கொண்டு ஒருவரொருவரைத் தேற்றி ஆறுதலடைந்திருங்கள் என்கிருர். இதிலே அர்ச். சின்னப்பர் அந்தச் சபையார்களுக்கு ஆறுதல் வருவிக்கவேண்டுமென்கிற கருத்தாயிருந்தபடியால், நடுத்தீர்வையில் நடக்கப்போகிற மற்றவைகளெல்லாம் சொல்லாமல் விட்டுவிட்டு, ஆறுதலுக்கு ஏதுவானவைகளைமாத்திரம் இங்கே காட்டுகிருர். அதைப்பற்றியே முதலாவது கிறீஸ்துநாதரிடத்தில் மரித்தவர்களுடைய உத்தானத்தைக்குறித்துப் பேசுகிருர்.

ஆனல் முதல் கொரிந்தியர் 15-ம். அதிகாரம் 15-ம். வசனத்தில் கிறீஸ்துநாதரிடத்தில் மரித்தவர்களுமன்றிப் பாவிகளும் உயிர்ப்பார்கள் என்கிருர். 2-வது. யேசுநாதர் நடுத்தீர்க்க வரும்போது உயிரோடிருக்கிறவர்கள் ஒருக்ஷணத்தில் மரித்து உயிர்ப்பார்களென்று சொல்லாமல், முன் மரித்தவர்கள் உயிர்த்தெழுந்தவுடனே அவர்களும் இவர்களும் ஒன்ருகக்கூடி ஆகாசத்தில் எழுந்து யேசுநாதருக்கு எதிராகப் போவார்கள் என்கிருர். ஆகையால் அப்போது உயிரோடிருப்பவர்கள் மரிப்பதில்லையென்று சிலர் நினைப்பதற்கு இடமாகிறது. ஆயினும் அர்ச். சின்னப்பரோ எபிரேயர் 9-ம். அதிகாரம் 27-ம். வசனத்தில் சொல்லுமாப்போல தேவதீர்மானத்தால் எல்லா மனிதர்களும் மரிக்கவேண்டியதென்பது குன்ருத சத்தியமாமே. 3-வது. நடுத்தீர்வையைக்குறித்து இதிலே பேசாதிருக்கிருர். ஆனல் யேசுநாதர் தம்முடைய ஐக்கியத்தில் மரித்தவர்களைத் தம்மோடு பரலோகத்துக்குக் கூட்டிக்கொண்டு போகுமுன்னே நல்லவர்களை வலது பாரிசத்திலும், கெட்டவர்களை இடது பாரிசத்திலும் நிறுத்தி எந்தப் பிரகாரமாய் நடுத்தீர்ப்பாரென்று அர்ச். மத்தேயு 25-ம். அதிகாரம் 33-ம் 34-ம். வசனங்களில் சொல்லியிருக்கிறது. 4-வது. மரித்தவர்களெல்லோரும் எந்தச் சரீரத்தோடு அல்லது எவ்வித ஸ்திதியில் உயிர்ப்பார்களென்று இதிலே சொல்லவில்லை. ஆனல் 1-ம். கொரிந்தியர் 15-ம் அதிகாரத்தில் அதை விஸ்தாரமாய் விவரித்திருக்கிருர்.

8. பகலின் புத்திரராகிய நாமோ வெனில் மயக்கமற்றவர்களாயிருந்து, விசுவாசமும் சிநேகமுமாகிய மார்க் கவசத்தையும், ஈடேற்றத்தின் நம்பிக் கையாகிய தலைச்சீராவையும் அணிந்து கொள்ளக்கடவோம். (இசை. 49-17; எபே. 6-14.)

9. ஏனென்றால் சர்வேசுரன் நம்மைத் தமது கோபமுனிவுக்கென்றல்ல, நம்மு டைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்து வின் வழியாய் இரட்சணியம் அடைவ தற்கென்றே நியமித்திருக்கிறார்.

10. ஏனெனில் நாம் விழித்திருந்தா லும், நித்திரை செய்தாலும் அவரோ டேகூடப் பிழைத்திருக்கும்படி அவர் நமக்காக மரித்தார். (உரோ. 14-7.)

11. ஆனதால், நீங்கள் இப்போது செய்துவருகிறபடியே ஒருவரொருவ ரைத் தேற்றி, ஒருவரொருவருக்கு நன் மாதிரியாயிருங்கள்.

12. அன்றியும் சகோதரரே, உங்கள் நடுவில் உழைத்து ஆண்டவ ருக்கேற்க உங்களை விசாரணைசெய்து, உங்களுக்குப் புத்திசொல்லிவருகிறவர் களை நீங்கள் மதித்துவரும்படி உங்களை மன்றாடுகிறோம்.

13. அவர்கள் உங்களுக்காகப் படு கிற பிரயாசையின்நிமித்தம் அவர்களை விசேஷித்த அன்போடு சங்கித்துவரு வீர்களாக; அவர்களோடு சமாதான மாயிருங்கள்.

14. சகோதரரே, இன்னும் நாங் கள் உங்களிடத்தில் கேட்டுக்கொள்வ தேதென்றால்: அடங்காதவர்களைக் கண்டியுங்கள்; தைரியமற்றவர்களைத் தேற்றுங்கள்; பலவீனரைத் தாங்குங் கள்; எல்லாரோடும் பொறுமையாயி ருங்கள்.

15. ஒருவரும் எவனுக்காவது தின் மைக்குத் தின்மை செய்யாதபடி பார்த் துக்கொள்ளுங்கள். உங்களுக்குள் ளும் மற்றெல்லாருக்குள்ளும் எப்போ தும் நலமானதைச் செய்யும்படி நாடுங் கள். (உபா. 17-13; உரோ. 12-17.)

16. எப்பொழுதும் சந்தோஷமாயி ருங்கள்.

17. இடைவிடாமல் ஜெபம்பண்ணு ங்கள். (பிர. 18-22; கொலோ. 4-2.)

18. சகலத்திலும் நன்றியறிந்த ஸ்தோத்திரஞ் செய்யுங்கள். ஏனெனில் யேசுக்கிறீஸ்துநாதருக்குள் உங்களெல் லாரையும்பற்றிய தேவசித்தம்இதுவே.

19. இஸ்பிரீத்துசாந்துவைப் போக் கடியாதேயுங்கள்.

10. இவ்விடத்தில் விழித்திருக்கிறவர்கள் என்பது உலகம் முடியுங்காலத்தில் உயி ரோடிருக்கிறவர்களையும், நித்திரை செய்கிறவர்கள் என்பது அதற்குமுன் மரித்தவர்களை யும் குறிக்கிறது.

13. கிரேக்கப்பிரதியில் உங்களுக்குள் சமாதானமாயிருங்கள் என்றிருக்கக் காண் கிறோம்.

14. **அடங்காதவர்கள் :—** தாறுமாறான நடத்தையுடையவர்கள்.

19. மூலபாஷையில் இஸ்பிரீத்துவை அவித்துப்போடாதேயுங்கள் என்றிருக்கிறது. ஏனெனில் வேதப்பிரமாணத்தில் இஸ்பிரீத்துசாந்துவை தேவசிநேக அக்கினியென்று அநேக இடங்களில் சொல்லியிருக்கிறதறிவோம். அக்கினியை நாம் மூட்டிப் பற்றுவிக்க வும் அவித்துப்போடவுங்கூடுமல்லோ. ஆதலால் இஸ்பிரீத்துவை அவித்துப்போடாதிரு ங்கள் என்பதற்கு அர்த்தமேதெனில்: அந்தகாரமான இவ்வுலகத்தின் நடுவிலே நடக்கிற உங்களுக்குப் புண்ணிய நன்னெறியைக் காட்டி, உங்களுக்கு ஞான ஒளிவீசுகிற அக்கினியா கிய இஸ்பிரீத்துசாந்துவை உங்கள் பத்தி முயற்சிகளில் அசதி அசட்டைத்தனத்தினாலும், லௌகீக கவலைகளினாலும், சரீர இச்சைகளினாலும், வேறே எந்தெந்தப் பாவத்தினாலும் அவித்துப்போடாதபடிக்கு எச்சரிக்கையாயிருந்து, ஜெபத்தியான சுறுசுறுப்பினாலும் மற் றெவ்வித புண்ணிய முயற்சிகளாலும் அவருடைய வரமாகிய தேவசிநேகாக்கினியை உங்க

20. தீர்க்கதரிசனங்களைப் புறக்கணியாதேயுங்கள்.

21. ஆனால் எல்லாவற்றையும் பரிசோதித்து, நலமானதைக் கைப்பற்றிக் கொள்ளுங்கள்.

22. தின்மையாகத் தோன்றுகிற எல்லாவற்றையும் விட்டுவிலகுங்கள்.

23. நமது ஆண்டவராகிய யேசுக் கிறீஸ்துநாதர் வரும்போது, உங்கள் ஞான ஜீவன், ஆத்துமம், சரீரம் முழுவதும் குற்றமற்றதாய்க் காக்கப்படும்படியாகச் சமாதான கடவுளே உங்களை எல்லாவற்றிலும் பரிசுத்தப்படுத்துவாராக.

24. உங்களை அழைத்தவர் பிரமாணிக்கமுள்ளவர். அவர் அப்படியே செய்வார். (1. கொ. 1-9.)

25. சகோதரரே, எங்களுக்காக வேண்டிக்கொள்ளுங்கள்.

26. சகோதரரெல்லாருக்கும் பரிசுத்த முத்தமிட்டு மங்களஞ் சொல்லுங்கள்.

27. அர்ச்சிக்கப்பட்ட சகல சகோதரர்களுக்கும் இந்த நிருபம் வாசிக்கப்படவேண்டுமென்று ஆண்டவருடைய பேரால் உங்களுக்கு ஆணையிட்டுச் சொல்லுகிறேன்.

28. நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய இஷ்டப்பிரசாதம் உங்களோடு இருப்பதாக. ஆமென்.

---

ளிருதயங்களில் பற்றியெரியப்பண்ணுவீர்களாக என்று அர்த்தமாம். ஆயினும் அவித்துப்போடுகிறதென்பதும், போக்கடிக்கிறதென்பதும் இவ்விடத்தில் ஒரே கருத்தென்பதால் தமிழுக்கு இணங்க போக்கடிக்கிறதென்னும் வார்த்தை பிரயோகிக்கப்பட்டிருக்கிறது.

20. இதிலே சொல்லப்படுகிற தீர்க்கதரிசனம் வருங்காரியங்களை முன்னறிவிக்கிறதை மாத்திரமல்ல, தேவ வாக்கியங்களுக்கு அர்த்தம் சொல்லுவதையும் வேதத்தைப் போதிப்பதையும் குறிக்கும். ஆட்டுத்தோலைப் போர்த்துக்கொண்டு உள்ளத்தில் கவ்வுகிற ஓநாய்களாய் உங்களிடத்தில் வருகிற கள்ளத் தீர்க்கதரிசிகள்மட்டில் எச்சரிக்கையாயிருங்களென்றும், அவர்கள் கனிகளால் அவர்களை அறிவீர்களென்றும் மத்தேயு 7-ம் அதி. 15 முதல் 20-ம் வசனம் வரையிலும் யேசுநாதர் போதித்ததுபோல் அர்ச். சின்னப்பரும் இவ்விடத்தில் போதிக்கிறார். ஆகையால் எது நல்ல போதகமோ அதை ஏற்றுக்கொள்ளவும், எதில் தின்மையின் அடையாளம் எவ்வளவேனும் தோன்றுமோ அதை விலக்கவும் கற்பிக்கிறார்.

23. **ஞான ஜீவன்** என்பது சுவாதீனம் இஷ்டப்பிரசாதம் தெய்வீகம் இது முதலியது குடியிருக்கும் ஆத்துமத்தின் மேலாங்கிஷமாம்.

**ஆத்துமம்** என்பது சரீரத்துக்கு உயிரைக்கொடுத்து, மனுஷ சுபாவத்துக்கு இயல்பான கிரியை நடத்துகிறதாம்.

---



# பாயிரம்.

---

முந்தின நிருபத்தை எழுதி ஏறக்குறைய ஒரு வருஷம் ஆனபின் அர்ச். சின்னப்பர் இந்த நிருபத்தை எழுதினார். இதற்கு முகாந்தரம் ஏதெனில், நடுத்தீர்க்கிற நாளைக்குறித்து முந்தின நிருபத்தில் அவர் சொன்னவைகளினிமித்தம் நடுத்தீர்க்கிறநாள் கிட்டிவந்திருக்கிறதென்று அவர்கள் எண்ணி, மிகவும் கலங்கிக்கொண்டிருந்தார்கள். இந்தப் பிசகான எண்ணத்தைத் திருத்துவதற்கு விசேஷமாய் இந்த நிருபத்தை எழுதினதாகத் தோன்றுகிறது. ஆகையால் இந்த நிருபத்தின் 2-ம் அதிகாரம் முழுவதிலும் அதின்பேரில் விசேஷமாய்ப் பேசித் தெளிவித்து, 3-ம் அதிகாரத்திலே வேறே சில புத்திகளையுஞ் சொல்லி நிருபத்தை முடிக்கிறார்.



# அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர்

# தெசலோனிக்கேயருக்கு

# எழுதிய 2-ம். நிருபம்.

## முதல் அதிகாரம்.

*தெசலோனிக்கேயருடைய விசுவாசத்தையும் பொறுமையையுங் குறித்து அவர்களைப் புகழ்ந்து, அவர்கள் தங்கள் அழைப்புக்கு யோக்கியமாய் நடக்கும்படி அவர்களுக்காக வேண்டிக்கொள்ளுகிறார்.*

1. சின்னப்பனும் சில்வானும் தீமோத்தேயும் நம்முடைய பிதாவாகிய சர்வேசுரனுக்குள்ளும் ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவுக்குள்ளும் இருக்கிற தெசலோனிக்கேயருடைய திருச்சபைக்கு எழுதுவது :

2. நம்முடைய பிதாவாகிய சர்வேசுரனாலும் ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவினாலும் உங்களுக்கு இஷ்டப்பிரசாதமும் சமாதானமும் உண்டாவதாக.

3. சகோதரரே, உங்கள் விசுவாசம் அதிகமதிகமாய் ஓங்கி வளருகிறதினாலும், உங்களில் ஒவ்வொருவருக்கும் உள்ள அந்நியோந்நிய சிநேகம் பெருகி வருகிறதினாலும் நியாயத்தின்படியே நாங்கள் உங்களுக்காக எப்போதும் சர்வேசுரனுக்கு நன்றியறிந்த ஸ்தோத்திரஞ்செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். (எபே. 5-6)

4. இன்னும் நீங்கள் சகித்துவருகிற சகல உபத்திரவங்களிலும் துன்பங்களிலும் உங்களுடைய பொறுமையையும் விசுவாசத்தையும்பற்றிச் சர்வேசுரனுடைய சபைகளில் நாங்களே உங்களைக் குறித்து மகிமைபாராட்டுகிறோம்.

5. சகோதரரே, நீங்கள் சர்வேசுரனுடைய இராச்சியத்தைக்குறித்துப் பாடுபடுகிறீர்களே; அந்த இராச்சியத்துக்கு நீங்கள் பாத்திரவான்களாக சர்வேசுரனுடைய நீதித்தீர்வைப்படி (நீங்கள் தீர்ப்படைவீர்கள் என்பதற்கு அந்தப் பாடுகள்) அத்தாட்சியாயிருக்கின்றது.

6. ஏனெனில் உங்களை உபத்திரவப் படுத்துகிறவர்களுக்கு உபத்திரவத்தைப் பிரதிபலனாக அளிப்பது தேவ சமுகத்தில் நீதியாயிருந்தால்,

7. துன்பப்படுகிற உங்களுக்கும் எங்களுடன் இளைப்பாற்றியை அளிப்பது தகுதியல்லோ.

8. சர்வேசுரனை அறியாதவர்களையும், நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய சுவிசேஷத்துக்குக் கீழ்ப்படியாதவர்களையும் பழிவாங்கும்படி ஆண்டவராகிய யேசுநாதர் அக்கினிச்சுவாலை நடுவில் தமது வல்லப தூதர்களோடு பரலோகத்தினின்று பிரசன்னமாகும்போது (இவ்விதந் தீர்ப்பார்.)

9. ஆண்டவர் தம்முடைய அர்ச்சியசிஷ்டவர்களிடத்தில் மகிமைப்படத்தக்கவரும், அவரை விசுவாசித்த சகலரிடத்திலும் ஆச்சரியப்படத்தக்கவருமாய் வரும்போது பொல்லாதவர்கள் ஆண்டவருடைய சன்னிதானத்திலும், அவருடைய வல்லமையின் மகிமையிலும் நின்று தள்ளப்பட்டு, கேட்டுக்குள்ளாகி நித்திய தண்டனையை அடைவார்கள்.

10. அந்த நாளைப் பற்றியே எங்கள் சாட்சியம் உங்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

11. அதற்காக நம்முடைய சர்வேசுரன் உங்களைத் தமது அழைப்புக்குப் பாத்திரவான்களாக்கவும், தமது தயையின் சகல சித்தத்தையும், விசுவாசத்தின் கிரியையையும் தம்முடைய வல்லபத்தால் (உங்களிடத்தில்) நிறைவேற்றவும்,

12. இவ்விதமாய் நம்முடைய சர்வேசுரனுடையவும் ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடையவும் வரப்பிரசாதத்தினாலே நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவின் நாமம் உங்களிடத்திலும், நீங்கள் அவரிடத்திலும் மகிமைப்படும்படியாகவும் உங்களுக்காக எப்போதும் வேண்டிக்கொள்ளுகிறோம்.

## 2-ம். அதிகாரம்.

*ஆண்டவருடைய நாளைக்குறித்தும், அந்திக்கிறீஸ்துவைக்குறித்தும் அவர்களுக்கு எச்சரித்துப் புத்திசொல்லுகிறார்.*

1. ஆகையால் சகோதரரே, நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவின் வருகையையும், அவரோடே நாம் ஒன்றாய்க் கூடியிருப்பதையுங்குறித்து நாங்கள் உங்களை மன்றாடுகிறதாவது:

2. யாதொரு ஞானத்தினாலாவது, பிரசங்கத்தினாலாவது, எங்களால் அனுப்பப்பட்டாற்போல் வருகிற யாதொரு நிருபத்தினாலாவது ஆண்டவருடைய நாள் அடுத்திருக்கிறதாகச் சொல்லப்பட்டால், உடனே உங்கள் எண்ணம் மாறாமலும் திகிலடையாமலும் இருப்பீர்களாக.

3. எவ்விதத்திலும் ஒருவனும் உங்களை மயக்காதிருப்பானாக. ஏனெனில் முந்த முந்த (விசுவாச துரோகமாகிய) பிரிவினை உண்டாகி, கேட்டின் புத்திரனும் பாவ மனிதனுமானவன் வெளிப்பட்டாலொழிய (அந்தநாள் வராது.)

---

8. **அக்கினிச்சுவாலை நடுவில்** என்பது சர்வேசுரனுடைய மகிமைப் பிரதாபத்தைக் காட்டுகிறது. சீனைமலையில் சுவாமி வேதப்பிரமாணத்தைக் கொடுத்தபோது அக்கினிச்சுவாலை நடுவில் தமது மகிமையை வெளிப்படுத்தினதுபோல், வேதத்தை மீறினவர்களை நடுத்தீர்க்க வரும்போதும் அக்கினிச் சுவாலை நடுவில் மகிமையோடு வருவார் என்பதாம்.

3. இவ்விடத்தில் விசுவாச துரோகமாகிய பிரிவினை என்பது வேத சத்தியங்களில் சிலவற்றை மாத்திரம் மறுக்கிற பதித மதங்களைக் குறிக்காமல், கடைசிக் காலங்களில் சுவிசேஷத்தை முழுதும் புறக்கணித்து, நல்லொழுக்கமெல்லாம் விட்டு யேசுநாதரை முழுதும் மறுக்கிற அக்கிரம துரோகிகளைக் குறிக்கிறது.

**கேட்டின் புத்திரன்** என்பதினால் அந்திக்கிறீஸ்து மனித ரூபமெடுத்த பசாசு அல்ல, மெய்யாகவே மனுஷனாகப் பிறக்கும் ஒரு அக்கிரமியென்று தெரியவருகிறது. அந்திக்கிறீஸ்து என்னும் பதத்துக்குக் கிறீஸ்துநாதருடைய விரோதி என்றர்த்தமாம்.

4. அவன் எதிரியாய்நின்று, தேவன் என்னப்படுகிறதும் ஆராதிக்கப்படுகிறதுமாகிய சகலத்துக்கும் மேலாகத் தன்னை உயர்த்தி, தன்னைத்தானே தெய்வம் போல் காட்டி, சர்வேசுரனுடைய ஆலயத்தில் உட்காருவான்.

5. நான் உங்களிடத்திலிருக்கும்போது இவைகளைக்குறித்துச் சொல்லிக்கொண்டுவந்தது உங்களுக்கு ஞாபகமில்லையோ?

6. அவன் தன் காலத்திலே வெளிப்படும்படிக்கு, இப்போது அவன் வராமல் தடைபண்ணுகிறது என்னவென்று அறிவீர்கள்.

7. ஏனெனில் அக்கிரமத்தின் இரகசியம் இப்போது வேலையாயிருக்கின்றது. ஆனாலும் இப்போது தடுக்கிறவன், தான் நடுவினின்று எடுபடும்வரைக்கும் தடுத்துக்கொண்டிருக்கட்டும்.

8. அப்போது அந்த அக்கிரமக்காரன் தோன்றுவான். ஆனால் ஆண்டவராகிய யேசுநாதர் தமது வாயின் சுவாசத்தால் அவனை அழித்துத் தமது வருகையின் பிரதாபத்தால் நிர்மூலமாக்குவார்.

9. அந்தப் பாவியினுடைய வருகையோ சாத்தானுடைய செய்கையின்படி எவ்வித வல்லபத்தோடும் அடையாளங்களோடும் எய்ப்பான அதிசயங்களோடும்,

10. கெட்டுப்போகிறவர்களை அக்கிரமத்துக்குள்ளாக்கும் எவ்வித மாய்கையோடும் கூடினதாயிருக்கும். ஏனெனில் அவர்கள் இரட்சிக்கப்படுவதற்குச் சத்தியத்தின் பரமஅன்பை ஏற்றுக்கொள்ளாததினாலே, பொய்யை விசுவசிக்கும்படிக்குத் தப்பறையின் செய்கைகளைச் சர்வேசுரன் அவர்களுக்கு அனுப்புவார்.

11. இவ்விதமாய்ச் சத்தியத்தை விசுவாசியாமல், அக்கிரமத்துக்குச் சம்மதித்தவர்களெல்லாரும் தீர்க்கப்படும்படியாகும்.

---

6. மகாசாஸ்திரியாகிய அகுஸ்தீன் என்பவரும் மற்றச் சாஸ்திரிகளும் இவ்விடத்தில் அப்போஸ்தலர் அந்திக்கிறீஸ்துவைக் குறித்தோ அல்லது கிறீஸ்துநாதரைக் குறித்தோ பேசுகிறாரென்று தங்களுக்குத் தெரியவில்லை என்கிறார்கள்.

7. ஆனாலும், அந்திக்கிறீஸ்து தொலையுமுன் கிறீஸ்துநாதர் வரமாட்டாரென்றும், அந்திக்கிறீஸ்துவரத் தடங்கல்செய்கிறது எடுபடுமுன் அந்திக்கிறீஸ்து வரமாட்டானென்றும் அர்த்தங்கொள்க.

8. இவ்விடத்தில் **அப்போது** என்பது அவன் நடுவினின்று எடுபடுங் காலத்தைக் குறிக்கிறது.

10. **கடவுள் அனுப்புவார்:**—உண்மையை விரும்பாத துரோகத்துக்கு ஆக்கினையாகப் பொய்யான அதிசயங்களால் மனிதர்கள் எய்க்கப்படும்படி கடவுள் விட்டுவிடுவாரென்று அர்த்தமாம்.

11. பாயிரத்திலே சொல்லியிருக்கிறதுபோல, நடுத்தீர்க்கிற நாள் சமீபமாயிருக்கிறதென்று தெசலோனிக்கேயிலுள்ள கிறீஸ்துவர்கள் நினைத்திருந்தார்கள். அந்தநாள் எப்போது வருமென்று சர்வேசுரனேயல்லாதே வேறொருவருக்கும் தெரியாதென்று யேசுநாதர் அர்ச். மத்தேயு சுவிசேஷம் 24-ம் அதிகாரத்தில் வசனித்திருக்கிறார். ஆகிலும் இதிலே அர்ச். சின்னப்பர் அந்தக்காலம் சமீபித்து வரும்போது 1-வது திருச்சபையிலே ஒரு பெரிய பிரிவினையுண்டாகுமென்றும், 2-வது அந்திக்கிறீஸ்து அல்லது யேசுநாதரை எதிர்க்கிறவன் உலகத்தில் தோன்றுவானென்றுஞ் சொல்லி, இரண்டு அடையாளங்களைக் குறிப்பிடுகிறார். அந்தப் பிரிவினை யாராலே உண்டாகும், எங்கே உண்டாகும், எப்படிக்கொத்ததாயிருக்குமென்பது அது நடக்கிற காலத்தில்தான் தெரியவரும். அந்த அந்திக்கிறீஸ்து எப்படிக்கொத்தவனாயிருப்பானென்றால்: 1-வது பாவமனிதனாயிருப்பான், அதாவது: பெரும் துர்நடத்தைக்காரன், பெரும் வஞ்சகன், பெரும் துரோகி, பெரும்தேவ தூஷணன், பெரும்

12. ஆகையால் சர்வேசுரனுக்கு உகந்த சகோதரரே, இஸ்பிரீத்துசாந்துவின் அர்ச்சிப்பினாலும், சத்தியத்தின் விசுவாசத்தினாலும், இரட்சணியம் அடைவதற்குச் சர்வேசுரன் உங்களை முதல் பலனாகத் தெரிந்துகொண்டதினாலே, நாங்கள் உங்களுக்காக இடைவிடாமல் சர்வேசுரனுக்கு நன்றியறிந்த ஸ்தோத்திரஞ் செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். (எபே. 1-4.)

13. அந்த விசுவாசத்தினாலே நீங்கள் நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய மகிமையை அடையும்பொருட்டு எங்கள் சுவிசேஷத்தைக்கொண்டு உங்களை அழைக்கச் சித்தமானார்.

14. ஆகையால் சகோதரரே, எங்கள் பிரசங்கத்தினாலாவது, நிருபத்தினாலாவது நீங்கள் கற்றுக்கொண்ட போதக முறைகளைக் கடைப்பிடித்து நிற்பீர்களாக.

15. நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரும் நம்மைச் சிநேகித்து நித்திய ஆறுதலையும் வரப்பிரசாதத்தில் ஊன்றிய நல் நம்பிக்கையையும் நமக்குத் தந்தருளிய நமது பிதாவாகிய சர்வேசுரனும்,

16. உங்கள் இருதயங்களைத் தேற்றிச் சகல நற்கிரியைகளிலும், நல்வாக்கிலும் உங்களை ஸ்திரப்படுத்துவாராக.

ஆங்காரியுமாய்ச் சாத்தானால் ஆவேஷமானவனுமாயிருப்பான். 2-வது கேட்டின் மகனாயிருப்பான். அதாவது: கேட்டுக்குப் பிறந்தவன், நித்திய கேட்டுக்குத் தீர்வையிடப்பட்டவன், மனிதர்களை நித்திய கேட்டுக்குள்ளாக்கிறவனாயிருப்பான். 3-வது தெய்வமென்னப்படுகிற யாவற்றையும் எதிர்க்கிறவனாயிருப்பான். அதாவது: தன்னைத்தானே தெய்வமென்று சொல்லித் தன்னையல்லாது வேறே ஒருவரையும் வணங்காதபடி விலக்கி, பிதாவாகிய சர்வேசுரனையும், சுதனாகிய யேசுக்கிறீஸ்துநாதரையும், இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரனையும் ஆராதித்துவருகிற கிறீஸ்துவர்களைத் துன்பப்படுத்துவான். பொய்த்தேவர்களைக் கும்பிடுகிற அஞ்ஞானிகளையும் துன்பப்படுத்திச் சர்வேசுரனுக்குப் பூசை செலுத்துகிற பீடங்களின்மேல் உட்கார்ந்து, தன்னைத் தேவனாக ஆராதனைசெய்யக் கட்டாயப்படுத்துவான். 4-வது அர்ச். மத்தேயு 24-ம் அதிகாரம் 24-ம் வசனத்தில் யேசுநாதர் திருவுளம்பற்றினது போல், கூடுமாகில் தெரிந்துகொள்ளப்பட்டவர்களும் மயங்கத்தக்கப் பொய்ப் புதுமைகளையும், பொய் அற்புதங்களையும், மாய்கையான அதிசயங்களையும், சாத்தான் உதவினாலே செய்து, சத்திய சுவிசேஷத்தை ஏற்றுக்கொள்ளாதவர்களை நித்திய கேட்டுக்குள்ளாக்கும்படி அக்கிரமமான வஞ்சனை மாயத்தால் தன்னைப் பின்செல்லப்பண்ணுவான். 5-ம் 6-ம் வசனங்களில் சொல்லியிருக்கிறதுபோல, அர்ச். சின்னப்பர் தெசலோனிக்கேயரிடத்திலிருக்கும்போது, அந்த அந்திக்கிறீஸ்து என்பவனைக்குறித்து அவர்களுக்கு இவையெல்லாம் விபரமாய்ப் போதித்திருந்ததுந்தவிர அவன் உடனே உலகத்தில் தோன்றாதபடிக்குக் காரணமேதென்றும் சொல்லியிருந்ததினாலே அதை இவ்விடத்தில் சொல்லவில்லை. ஆனால் யேசுநாதர் உலகத்தை நடுத்தீர்க்க வரும்போது, தம்முடைய திருவாக்கினாலும் தம்மைச் சூழ்ந்திருக்கும் மகிமையினாலும் அவனை அழித்து நிர்மூலமாக்குவார் என்கிறார்.

14. வாக்கினாலாவது, எழுத்தினாலாவது, தங்களுக்குப் போதிக்கப்பட்ட பாரம்பரைகளை வித்தியாசமொன்றின்றி ஒரே தன்மையாய்க் காப்பாற்றி அவைகளில் நிலைத்திருக்கவேண்டுமென்று அர்ச். சின்னப்பர் தெசலோனிக்கேயருக்குக் கற்பிக்கிறார். ஆகையால் வேதப் பிரமாணத்தில் எழுதப்பட்ட வேதசத்தியங்களை மாத்திரம் கைக்கொண்டு, வாக்கினால் போதிக்கப்பட்டவைகளை ஏற்றுக்கொள்ளவொண்ணாதென்று சொல்லுகிறவர்கள் அர்ச். சின்னப்பருடைய போதகத்துக்கு விரோதமாய்ப் போதிக்கிறார்களென்றறிக.

15. **போதகமுறைகள்:**—அப்போஸ்தலர் எழுதின நிருபங்களைப்போலவே அவர்கள் எழுதாமல் வாய்மொழியாய்ப் போதித்தும், அவர்கள் எழுதித்தந்து காணாமற்போன நிருபங்களிலும் அடங்கியதும் கிரியைகளால் செய்துகாட்டிய பாரம்பரை முறைகளையும் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று இங்கே கற்பிக்கப்படுகிறது.

## 3-ம். அதிகாரம்.

*தமக்காக வேண்டிக்கொள்ளவேண்டுமென்றும், தாம் கற்பித்தவைகளை அநுசரிக்க மனதில்லாதவர்களோடு அவர்கள் சேரலாகாதென்றும் புத்திசொல்லுகிறார்.*

1. கடைசியாய்ச் சகோதரரே, தேவவாக்கியம் உங்களுக்குள்ளே பரவி, மகிமைப்படுகிறதுபோல எவ்விடத்திலும் பரவி மகிமைப்படும்படிக்கும்,

2. தொந்தரவுக்காரரும் கெட்டவர்களுமான மனிதர்களிடத்திலின்று நாங்கள் விடுதலையாகும்படிக்கும் எங்களுக்காக வேண்டிக்கொள்ளுங்கள். ஏனெனில் எல்லாரிடத்திலும் விசுவாசம் இல்லையே.

3. சர்வேசுரனே பிரமாணிக்கமுள்ளவர். அவர் உங்களை ஸ்திரப்படுத்தித் தின்மையினின்று உங்களைக் காப்பாற்றுவார்.

4. நாங்கள் உங்களுக்குக் கற்பிக்கிறவைகளை நீங்கள் செய்துவருகிறீர்களென்றும், இனிமேலும் செய்துவருவீர்களென்றும் உங்களைக்குறித்து ஆண்டவரிடத்தில் நம்பிக்கையாயிருக்கிறோம்.

5. கர்த்தர் உங்கள் இருதயங்களைத் தேவசிநேகத்திலும், கிறீஸ்துநாதருடைய பொறுமையிலும் நடத்துவாராக.

6. அன்றியும் சகோதரரே, எங்களிடத்தில் கைக்கொண்ட போதக முறையின்படி நடவாமல், தாறுமாறாய் நடக்கிற எந்தச் சகோதரனையும் விட்டு விலகும்படி நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய நாமத்தினாலே உங்களுக்குக் கட்டளையிடுகிறோம்.

7. எப்படி எங்களைக் கண்டுபாவித்து நடக்கவேண்டுமென்று நீங்களே அறிவீர்கள். ஏனெனில் நாங்கள் உங்கள் நடுவில் ஒழுங்குத்தப்பி நடக்கவுமில்லை,

8. எவனிடத்திலாவது இலவசமாய்ப் போஜனம் பண்ணவுமில்லை. உங்களில் எவனுக்கும் பாரமாயிராதபடிக்கு நாங்கள் வருந்திக் களைத்து, இரவும் பகலும் வேலைசெய்து சாப்பிட்டோம். (1. தெச. 2-9.)

9. உங்கள்மேல் பாரத்தைச் சுமத்துவதற்கு எங்களுக்கு அதிகாரமில்லையென்று அப்படிச் செய்யாமல், நீங்கள் எங்களைக் கண்டுபாவிக்கிறதற்கு உங்களுக்கு மாதிரி காட்டவேண்டுமென்றே அப்படிச் செய்தோம்.

10. அப்படியே நாங்கள் உங்களிடத்திலிருக்கும்போது: யாதொருவனுக்கு வேலைசெய்ய மனமில்லாவிட்டால், அவன் சாப்பிடவும் கூடாதென்று உங்களுக்கு அறிவித்துவந்தோமே.

11. அப்படியிருந்தும், உங்களில் சிலர் கிரமந்தப்பி நடந்து, ஒரு வேலையுஞ்செய்யாமல், விநோதப் பிரியராய்ச் சுற்றித்திரிகிறார்களென்று கேள்விப்பட்டோம்.

12. இப்பேர்ப்பட்டவர்கள் அமைதியாய் தங்கள்பாட்டுக்கு வேலைசெய்து, தங்கள் சொந்தப் போஜனத்தைச் சாப்பிடவேண்டுமென்று ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர்பேராலே அவர்களுக்குப் புத்திசொல்லுகிறோம். (1. தெச. 4-11.)

13. நீங்களோ சகோதரரே, நன்மைசெய்வதில் அயர்ந்துபோகாதேயுங்கள். (கலாத். 6-9.)

6. முந்தின அதிகாரத்தின் 14-ம்வசனத்தில் கண்டபடியே எழுதப்பட்ட வேத வாக்கியங்களைப்போல் பாரம்பரை முறைமைகளையும் விசுவாசிகள் கைக்கொள்ளவேண்டுமென்று கற்பிக்கிறதுந்தவிர, இவ்விடத்தில் அப்படிப்பட்ட பாரம்பரை முறைமைகளைக் கைக்கொள்ளாமல் நடக்கிற சகோதரர்களைப் பதிதர்களாக எண்ணி, அவர்களை விலகி நடக்கவேண்டுமென்றும் கற்பிக்கிறார்.

14. இந்த நிருபத்தில் அடங்கிய எங்கள் வார்த்தைக்கு எவனாவது கீழ்ப்படியாதிருந்தால், அவனைக் குறிப்பிட்டு, அவன் வெட்கப்படும்படி அவனோடு புழங்காதிருங்கள்.

15. ஆனாலும் அவனைச் சத்துருவென்று எண்ணாமல், சகோதரனென்றே கண்டியுங்கள்.

16. சமாதான கர்த்தர் எவ்விடத்திலும் உங்களுக்கு முடிவில்லாத சமாதானத்தைத் தந்தருளுவாராக. கர்த்தர் உங்கள் அனைவரோடுங்கூட இருப்பாராக.

17. சின்னப்பனாகிய நான் என் கையொப்பம்வைத்து மங்களஞ்சொல்லுகிறேன். சகல நிருபத்திலும் இதுவே என் குறி. இப்படியே எழுதுகிறேன்.

18. நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய இஷ்டப்பிரசாதம் உங்கள் எல்லோரோடும் இருப்பதாக. ஆமென்.


2-தெசலோனிக்கேயர் நிருபம் முற்றிற்று.

# பாயிரம்.

தீமோத்தேயு என்பவர் லிக்கவோனியா தேசத்தின் பட்டணமாகிய லீஸ்திரா நகரத்தில் அஞ்ஞானியான தகப்பனால் விசுவாசியான ஓர் யூத ஸ்திரீயிடத்தில் பிறந்து சத்திய வேதத்திலே வளர்ந்து உலக சாஸ்திரங்களையும் ஞான சாஸ்திரங்களையும் நன்றாய்ப் படித்து அர்ச். சின்னப்பர் அந்தப் பட்டணத்தில் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க வந்தபோது அவருக்குச் சீஷனானார். அதுமுதல் அவருக்கு அவர் மிகவும் பிரியமும் நம்பிக்கையும் உள்ளவராயிருந்தபடியால், அர்ச். சின்னப்பர் அவரைத் தமக்குப்பதிலாகச் சபைகளை அடிக்கடி விசாரிக்க அனுப்புவார். அன்றியும், அவரை எபேசு நகரத்துக்கு அதிமேற்றிராணியாராக ஏற்படுத்தினார். கர்த்தர் அவதாரத்தின் ஏறக்குறைய 64-ம் வருஷத்தில் மக்கேதோனியாவிலிருந்து இந்த நிருபத்தை அவருக்கு எழுதினார். மேற்றிராணிமார்களுக்கும் குருக்களுக்கும் உள்ள கடமைகளை மிகவுஞ் சிறந்த மேரையாய் இதில் போதிக்கிறார்.



# அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர்
# தீமோத்தேயுக்கு
# எழுதிய முதல் நிருபம்.

## முதல் அதிகாரம்.

வீண்போதகர்களை விலக்கி, விசுவாசத்துக்கும், சிநேகத்துக்கும், நல்லொழுக்கத்துக்கும் உரியவைகளை அனுசரித்துப் போதிக்கும்படி கற்பிக்கிறார்.

1. நம்முடைய இரட்சகராகிய சர்வேசுரனும், நம்முடைய நம்பிக்கையாகிய யேசுக்கிறீஸ்துநாதரும் இட்ட கட்டளைப்படியே யேசுக்கிறீஸ்துவின் அப்போஸ்தலனாகிய சின்னப்பன்,

2. விசுவாசத்தில் (எனது) பிரிய குமாரனாகிய தீமோத்தேயுக்கு எழுதுகிறதாவது: நம்முடைய பிதாவாகிய சர்வேசுரனாலும் நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவினாலும் இஷ்டப்பிரசாதமும் கிருபையும் சமாதானமும் உண்டாவதாக. (அப். 16-1.)

3. நான் மக்கேதோனியாவுக்குப் புறப்பட்டுப் போகையில் நீர் எபேசு பட்டணத்திலிருந்து, சிலர் விபரீதமான உபதேசங்களைப் போதியாதபடிக்கும்,

4. கட்டுக்கதைகளையும் முடியாத வம்ச வரலாறுகளையும் கவனியாதபடிக்கும், அவர்களுக்குப் புத்திசொல்லும்படி நான் உம்மைக் கேட்டுக்கொண்டபடியே செய்வீராக. இந்த விஷயங்கள் வாக்குவாதங்களையன்றி விசுவாசத்தினால் உண்டாகிற தெய்வ பக்திவிர்த்தியை உண்டாக்குவதற்கு ஏதுவாயிராது. (2. தீமோ. 2-23; தீத். 3-9.)

5. கற்பனையின் கதி எதெனில் பரிசுத்த இருதயத்தினாலும், நல்ல மனச்சாட்சியினாலும், போலியற்ற விசுவாசத்தினாலும் உண்டாகிற பரமஅன்பாமே.

6. சிலர் இவைகளைவிட்டு விலகி, வீண் பேச்சுகளுக்குள்ளாகி, சிதறுண்டுபோனார்கள்.

7. அவர்கள் தாங்கள் சொல்லுகிறது இன்னதென்றும், தாங்கள் சாதிக்கிறது இன்னதென்றும் அறியாமல், நியாயப்பிரமாணத்தில் போதகராயிருக்கவேண்டுமென்று விரும்புகிறார்கள்.

---

4. **கட்டுக்கதைகள்:**—இவைகள் கடவுளுக்கும் உலகத்துக்கும் இடையில் இருப்பதாக அந்தக்காலத்தில் சாஸ்திரி வேஷங்கொண்டவர்கள் சொல்லிவந்த அரூபிகளின் வம்ச வரலாறுகளில் அடங்கிய விஷயங்களாம்.

8. ஒருவன் நியாயப்பிரமாணத்தைக் கிரமப்படி உபயோகித்தால், நியாயப் பிரமாணம் நல்லதென்று அறிவோம். (உரோ. 7-12.)

9. எங்களுக்குத் தெரிந்திருக்கிற படியே நியாயப்பிரமாணம் நீதிமானுக்காக அல்ல, அநீதருக்கும், அடங்காதவர்களுக்கும், துஷ்டருக்கும், பாவிகளுக்கும், அக்கிரமிகளுக்கும், அசுத்தருக்கும், தந்தை கொலை, தாய் கொலை, மனுஷ கொலைகாரருக்கும்,

10. காமாதுரருக்கும், ஆண்புணர்ச்சிக்காரருக்கும், மனுஷரைத் திருடுகிறவர்களுக்கும், பொய்யருக்கும், பொய்ச் சத்தியருக்கும், குணமான போதகத்துக்கு எதிரிடையாயிருக்கிற மற்றெதையும் செய்பவர்களுக்கும் விரோதமாய் ஏற்பட்டிருக்கிறது.

11. இந்தப் போதகம் எனக்கு ஒப்பிக்கப்பட்டிருக்கிற தெய்வத்தின் ஆனந்த மகிமைச் சுவிசேஷத்துக்கு ஒத்ததாயிருக்கின்றது.

12. என்னைப் பலப்படுத்தின நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்து நாதர் என்னை உண்மையுள்ளவனென்று எண்ணி, இந்த ஊழியத்தில் வைத்தபடியினாலே அவருக்கு நன்றியறிகிறேன்.

13. முற்காலத்தில் நான் தேவ தூஷணனும், கலகக்காரனும், அபாண்டனுமாயிருந்தேன். ஆயினும் நான் அறியாமல் அவிசுவாசத்தினாலே செய்தபடியால் சர்வேசுரனிடத்தில் கிருபைபெற்றேன்.

14. நமது ஆண்டவருடைய வரப்பிரசாதமோ கிறீஸ்து யேசுவின் மேலுள்ள விசுவாசத்தோடும் சிநேகத்தோடும் என்னிடத்தில் ஏராளமாய்ப் பெருகிற்று.

15. பாவிகளை இரட்சிக்கும்படி கிறீஸ்துயேசுநாதர் இவ்வுலகத்துக்கு வந்தார் என்பது உண்மையும், சர்வ அங்கீகரிப்புக்குத் தகுதியுமான வாக்கியம். பாவிகளில் முந்தின பாவி நானே. (மத். 9-3; மாற். 11-17.)

9. **நியாயப்பிரமாணம் நீதிமானுக்காக அல்ல:**—அதாவது நீதிமான் தின்மையை அகற்றி நன்மையைச்செய்வது வேதப்பிரமாணத்தின் கட்டாயத்தினாலுமல்ல; மீறுகிறவர்களுக்குக் கடவுள் நியமித்திருக்கும் தண்டனையைப்பற்றியுமல்ல. ஆனால் மனப்பூரணமாய்க் கடவுளைப்பற்றிய சிநேகத்தை முன்னிட்டுச் செய்வதினால் நியாயப்பிரமாணம் இல்லாதிருந்தாலும் புண்ணியத்தை அனுசரிப்பானென்று இதற்கு அர்த்தமாகும்.

10. **மனுஷரைத்திருடுகிறவர்கள்:**—இக்காலத்தில் நாகரீகமற்ற தேசங்களில் நடக்கிறதுபோல அக்காலத்திலும் மனுஷர்களை வலுவந்தமாய்ப்பிடித்து அடிமைகளாக்கி விலைக்கு விற்கிறது வழக்கமாயிருந்தது. ஆனாலும் மற்றவர்களுக்குப் பாவகாரணமாயிருக்கிறவர்களும் பணம் கொடுத்து தங்கள் தங்கள் துஷ்டக்கிரியைகளுக்கு மற்றவர்களை உடன்படுத்துகிறவர்களும் மனுஷரைத் திருடுகிறவர்கள் என்னப்படுகிறார்கள்.

11. எபேசுநகரத்துக் கிறீஸ்துவர்களுக்குள்ளே சில யூதர்கள் நுழைந்து, தங்களை வேதபாரகரென்று சொல்லி, மோயீசனுடைய பிரமாணத்தையும், யூதர்களுக்குள்ளே உண்டான பற்பல கட்டுக்கதைகளையும் போதித்து, அந்தச் சபையைக் கலக்கினார்கள். அப்படிப்பட்டவர்களை அடக்கும்படி அர்ச். சின்னப்பர் தீமோத்தேயுக்குக் கற்பிக்கிறார். ஆகிலும் சர்வேசுரனாலே கொடுக்கப்பட்ட மோயீசன் பிரமாணத்தை அவர் புறக்கணிக்கிறாரென்று தோன்றாதபடிக்கு, 1வது. அது சகலமான பாவக்கிரமங்களை அடக்குகிறதற்காகக் கொடுக்கப்பட்டிருந்தது. நாம் கைக்கொண்ட சுவிசேஷம் அவைகளையெல்லாம் உத்தமமான மேரையாய் விலக்கிக்கொண்டுவருகிறது. ஆகையால், மோயீசன் பிரமாணம் நமக்கு அவசரமில்லாததும் பிரயோசனமற்றதுமாய் இருக்கிறதென்றும்; 2-வது. மோயீசன் பிரமாணம் கிறீஸ்துநாதரிடத்தில் நம்மைச் சேர்க்கும் வழிகாட்டியாய்க் கொடுக்கப்பட்டிருந்ததினாலே அதைக் கொண்டு கிறீஸ்துநாதரைப் பற்றிக்கொள்ளுகிறவனுக்கு அது பிரயோசனமுள்ளதென்றுஞ் சொல்லுகிறார்.

16. ஆனாலும் நித்திய ஜீவியத்தை அடையும்பொருட்டு இனிக் கிறிஸ்து யேசுநாதனை விசுவாசிப்பவர்களுக்கு மாதிரியுண்டாயிருக்கும்படி முந்தின (பாவியாகிய) என்னிடத்தில் அவர் எவ்வித பொறுமையையும் காண்பிக்கச் சித்தமானதால் (நான் இரக்கமடைந்தேன்.)

17. அட்சயரும், அதரிசனரும், சதா கால ராஜனுமாகிய ஏக சர்வேசுரனுக்கு அநவரதகாலங்களிலும் சங்கையும் மகிமையும் உண்டாவதாக. ஆமென்.

18. என் மகனாகிய தீமோத்தேயுவே, நான் உமக்குக் கொடுக்கிற விசேஷ கற்பனையென்னவென்றால்: முன் உம்மைக் குறித்துப் பண்ணப்பட்ட தீர்க்கதரிசனங்களின்படியே நீர் அவர்களுக்குள்ளே நல்ல போர் பொருதுவீராக.

19. விசுவாசமும், நல்ல மனச்சாட்சியும் உள்ளவராயிரும். இதைச் சிலர் தள்ளிவிட்டதால், விசுவாசக் கப்பலை உடையவிட்டார்கள்.

20. இமெனேயனும் அலெக்சாந்தரும் அப்படிப்பட்டவர்கள். அவர்கள் தேவ தூஷணஞ் சொல்லாமலிருக்கக் கற்றுக்கொள்ளும்படிக்கு அவர்களைச் சாத்தானுக்குக் கையளித்தேன்.

## 2-ம். அதிகாரம்.

அரசர்களுக்காகவும், அதிகாரிகளுக்காகவும், வேண்டிக்கொள்ள வேண்டுமென்பதும், ஒரே கடவுளும் ஒரே மத்தியஸ்தரும் உண்டென்பதும், ஸ்திரீ பூமான்கள் ஜெபிக்கவேண்டிய விதமும்.

1. ஆகையால் சகல மனுஷர்களுக்காகவும் விண்ணப்பங்களும், ஜெபங்களும், மன்றாட்டுகளும், நன்றியறிந்த ஸ்தோத்திரங்களும் பண்ணப்படவேண்டுமென்று முந்தமுந்தக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

2. நாம் எவ்வித பக்தியோடும் நல்லொழுக்கத்தோடும் கலகமில்லாமல் அமரிக்கையான ஜீவனம்பண்ணும்படிக்கு அரசர்களுக்காகவும், மேலான அதிகாரமுள்ள யாவருக்காகவும் (அப்படியே வேண்டிக்கொள்ளவேண்டியது.) (உரோ. 13-1.)

3. ஏனெனில் நம்முடைய இரட்சகராகிய சர்வேசுரனுடைய சமுகத்திலே இது நன்மையாயும், உகந்ததாயும் இருக்கின்றது.

4. சகல மனுஷரும் இரட்சிக்கப்படவும், சத்தியத்தை அறியும் அறிவைக் கைக்கொள்ளவும் வேண்டுமென்று அவர் சித்தமாயிருக்கிறார்.

18. உம்மைக்குறித்துப் பண்ணப்பட்ட தீர்க்கதரிசனங்களின்படியே, என்கிற வார்த்தைகளினால் தீமோத்தேயு என்பவர் இஸ்பிரீத்துசாந்துவின் வெளியரங்கமான ஏவுதலைக் கொண்டு சுவிசேஷத்தைப் பிரசங்கிப்பவராகவும், மேற்றிராணியாராகவும் ஏற்படுத்தப்பட்டாரென்று காணப்படுகிறது. அப்படிப்பட்ட பிரசித்தமான இஸ்பிரீத்துசாந்துவின் ஏவுதல் திருச்சபையின் துவக்கத்திலே மிகவும் வழக்கமாயிருந்ததென்று அப். நடபடியின் பற்பல இடங்களில் காண்கிறோம்.

20. சாத்தானுக்குக் கையளித்தேன் என்பது அவர்களைச் சபித்துத் திருச்சபைக்குப் புறம்பாக்கினேன் என்று அர்த்தமாம். இமெனேயன் என்பவன் மாமிச உத்தானமில்லையென்று போதித்தவன். (2. தீமோத். II. 16.)

1. தீமோத்தேயு மேற்றிராணியாராயிருந்ததால் தம்முடைய சபையில் அந்திசந்தி ஜெபங்கள் நடந்தேறிவரும்படி ஏற்பாடுசெய்யவேண்டுமென்று காட்டுகிறார்.

5. சர்வேசுரன் ஒருவரே; சர்வேசுரனுக்கும் மனிதருக்கும் மத்தியஸ்தரும் ஒருவரே; இவரே மனுஷனை யேசுக்கிறீஸ்துநாதர்.

6. இவர் எல்லாருக்காகவும் தம்மைத்தாமே இரட்சணியமாக ஒப்புக்கொடுத்தார். குறிக்கப்பட்ட காலத்திலே இது ரூபிக்கப்பட்ட வர்த்தமானம். (மத். 20-28.)

7. இதற்குச் சாட்சி சொல்லவே நான் பிரசங்கியாகவும், அப்போஸ்தலனாகவும், புற ஜாதியாருக்கு விசுவாசத்தையும் சத்தியத்தையும் போதிக்கிற ஆசாரியனாகவும் நியமிக்கப்பட்டிருக்கிறேன். (நான் சொல்லுகிறது மெய்யேயன்றிப் பொய்யல்ல.)

8. ஆகையால் பூமான்கள் கோபமும் தர்க்கமுமில்லாமல், தூய்மையான கைகளை உயர்த்தி எவ்விடத்திலும் ஜெபம் பண்ணும்படி விரும்புகிறேன்.

9. அப்படியே ஸ்திரீகளும் யோக்கியமான ஆடையணிந்து, நாணத்தையும் இச்சையடக்கத்தையும் ஆபரணமாகப் பூண்டு, சடை பின்னுதலும், பொன்னினாலாவது முத்துக்களினாலாவது விலையேறப்பெற்ற வஸ்திரங்களினாலாவது தங்களை அலங்கரியாமலும், (1. இரா. 3-3.)

10. தேவபக்தியை முன்னிட்டு நடக்கிற பெண்பிள்ளைகளுக்கு யோக்கியமான விதமாய் நற்கிரியைகளால் தங்களை அலங்கரிக்கக்கடவார்கள்.

11. ஸ்திரீயானவள் முற்றுஞ் சிரவணத்தோடே மவுனமாயிருந்து கற்றுக்கொள்ளக்கடவாள்.

12. (கோவிலில்) போதிக்கவும் புருஷன்மேல் அதிகாரஞ் செலுத்தவும் ஸ்திரீயானவளுக்கு நான் உத்தரவு கொடுக்கிறதில்லை. அவள் மவுனமாகவே இருக்கவேண்டியது. (1. கொ. 14-34.)

13. ஏனெனில் முதலில் ஆதாம் உருவாக்கப்பட்டான்; அதன்பின் ஏவாள் உருவாக்கப்பட்டாள்.

14. மேலும் ஆதாம் ஏய்க்கப்படவில்லை. ஸ்திரீயோ ஏய்ப்புண்டு, கீழ்ப்படியாமற்போனாள்.

15. ஆகிலும் அவள் விசுவாசத்திலும் சிநேகத்திலும் இச்சையடக்கத்தோடுகூடிய பரிசுத்ததனத்திலும் நிலைத்திருந்தால், புத்திர சந்தானத்தால் இரட்சணியமடைவாள்.

## 3-ம். அதிகாரம்.

*மேற்றிராணிமார்களாகவும், தியாக்கோன்மார்களாகவுந் தெரிந்துகொள்ளப்படத்தக்கவர்கள் எப்படிக்கொத்தவர்களாய் இருக்கவேண்டுமென்று காண்பிக்கிறார்.*

1. மேற்றிராணப்பட்டத்தை விரும்புகிறவன் நல்ல தொழிலை விரும்புகிறானென்பது உண்மையான மொழி.

5 ஆயினும் சர்வேசுரனிடத்தில் நமக்குச் சகல நன்மைகளையும் பெறுவித்து நம்மை இரட்சிக்கிற யேசுக்கிறீஸ்துநாதரராகிய ஒரே மத்தியஸ்தருண்டென்றாலும், சர்வேசுரனையும், நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரையும் நமக்காக மன்றாடுகிறவர்களாகிய அநேக மத்தியஸ்தர்கள் பூலோகத்திலும் மோட்சத்திலும் இருப்பது குறையல்ல.

6. **ரூபிக்கப்பட்ட வர்த்தமானம்:**—முன் தீர்க்கதரிசிகளால் குறிக்கப்பட்ட காலமும், அவரைப்பற்றி முன் அறிவித்த சகல விஷயங்களும் யேசுநாதரில் நிறைவேறினதால், யேசுநாதர் சர்வேசுரனால் அனுப்பப்பட்டவரென்று தெளிவாய்த் துலங்குகிறது.

12. ஆரம்பத்தில் கிறீஸ்துவர்கள் சபையாய்க் கூடியிருக்கும்போது யாதொருவன் இஸ்பிரீத்துசாந்துவினால் ஏவப்பட்டால், மற்றவர்களுக்குப் போதிக்கவும், உரத்த சத்தமாய் வேண்டிக்கொள்ளவும் உத்தரவிருந்தது. இந்த உத்தரவு பெண்பிள்ளைகளுக்குக் கொடுக்கப்படவில்லை. இவர்கள் உத்தரவு கேட்டாலும் அதைக் கொடுக்கப்படாதென்று (கொரிந்தியர் 14-ம் அதி. 34 வசனத்தால்) அர்ச். சின்னப்பர் விலக்குகிறார்.

2. ஆனால் மேற்றிராணியாரானவர் குறைசொல்லுக்கு ஆளாகாதவரும், ஓரே தாரப்புருஷனும், மன அடக்கமுள்ளவரும், விவேகமுள்ளவரும், கனம்பொருந்தியவரும், கற்புள்ளவரும், அந்நியரை உபசரிக்கிறவரும், போதகத் திறமையுடையவருமாய் இருக்கவேண்டும். (தீத். 1-7.)

3. அவர் மதுபானப் பிரியரும் அடிக்கிறவருமாயிராமல், அடக்கமுள்ளவரும், வாக்குவாதம் செய்யாதவரும், பேராசையற்றவருமாய் இருந்து,

4. தன் வீட்டை நன்றாய் நடப்பிக்கிறவரும், எவ்வித நல்லொழுக்கத்திலும் தன் பிள்ளைகளைப் பணிந்து நடக்கச்செய்கிறவருமாயிருக்கவேண்டும்.

5. அதேதென்றால் ஒருவனுக்குத் தன் வீட்டை நடப்பிக்கத் தெரியாதிருந்தால், அவன் சர்வேசுரனுடைய திருச்சபையை எப்படி ஜாக்கிரதையாய் நடப்பிப்பான்?

2. திருச்சபைத் துவக்கத்திலே கலியாணமில்லாத கிறீஸ்துவர்கள் மெத்தக்கொஞ்சமாய் இருந்ததினாலே, மேற்றிராணப்பட்டத்துக்கும், குருப்பட்டத்துக்கும், தியாக்கோன் பட்டத்துக்கும் கலியாணக்காரர்களுக்குள்ளே தெரிந்துகொள்ளுவது அவசரமாயிருந்தது. அப்படித் தெரிந்துகொள்ளப்படுகிற கலியாணக்காரர், 1-வது ஒரே தாரம் கலியாணம்செய்தவர்களாயிருக்க வேண்டியது. யாதொருவன் தாரமிழந்து மறுபடியும் கலியாணஞ்செய்திருந்தால், அப்படிப்பட்டவன் ஒருக்காலும் தெரிந்துகொள்ளப்படுகிறதில்லை.

2-வது பட்டத்துக்குப்பிறகு முந்திக் கலியாணம்பண்ணின மனைவி மரணமாய்ப்போனால், மறுபடியும் இரண்டாந்தாரம் கலியாணஞ் செய்யத் திருச்சபை ஒருக்காலும் உத்தரவு கொடுக்கிறதில்லை.

திருச்சபை எங்கும் பரம்பின பிறகோவெனில், அப்படிப்பட்ட அவசியம் நீங்கி, அர்ச். சின்னப்பர் 1-கொரிந்தியர் 7-ம் அதிகாரத்தில் சொல்லுகிறபடி உலகக் கவலையற்றவர்களுமாய், சர்வேசுரனுக்குமாத்திரம் பிரியப்படக் கவலைப்படுகிறவர்களுமாகிய கலியாணமில்லாதவர்கள் வேண்டியமட்டும் இருந்ததினாலே இப்படிப்பட்ட மேன்மையான தொழிலுக்குக் கலியாணமில்லாதவர்களை மாத்திரம் தெரிந்துகொள்ள வேண்டுமென்று திருச்சபை கற்பிக்கிறது. அது முதற்கொண்டு கத்தோலிக்கு ரோமான் திருச்சபையிலே இப்படியே நடந்துவருகிறது.

மேற்றிராணிமார்களும், குருமார்களும், தியாக்கோன்மார்களும், கலியாணக்காரராயிருக்கவேண்டுமென்று அர்ச். சின்னப்பர் கற்பிக்கிறதாக அந்த வாக்கியத்தினாலே புரோட்டெஸ்டாண்டார் ஒப்பிக்கத் துணிகிறார்கள். ஆனால் முதல் கொரிந்தியர் 7-ம் அதிகாரத்தில் கண்டதுபோல், எல்லா மனிதரும் தன்னைப்போலே, அதாவது கலியாணமில்லாதிருக்க விரும்புகிறவரும், எப்படிக் கலியாணமில்லாதவன் சர்வேசுரனுக்குப் பிரியப்படலாமென்று கவலைப்படுகிறான்; கலியாணமுள்ளவனோ எப்படித் தன் மனைவிக்குப் பிரியப்படலாமென்று உலகத்துக்குரியவைகளைப்பற்றிக் கவலையுற்று இருமனப்பட்டிருக்கிறானென்று சொல்லுகிறவருமாகிய அர்ச். சின்னப்பர் இதிலே மேற்றிராணிமார்களும் தியாக்கோன்மார்களும் கலியாணக்காரர்களாயிருக்கக்கடவார்களென்று எப்படிக் கற்பிப்பார்?

அப்படிக் கற்பித்திருந்தால் அவர்தானே மற்றவர்களுக்குக் கற்பிக்கிற கற்பனையை மீறித் தாம் கலியாணமில்லாதிருப்பாரோ? தம்மால் மேற்றிராணப்பட்டத்துக்கு ஏற்படுத்தப்பட்ட தம்முடைய இரண்டு பிரியமான சீஷர்கள், அதாவது தீமோத்தேயும் தீத்தும் கலியாணமில்லாதிருக்க விடுவாரோ? இல்லையே. ஆகையால் இது அர்ச். சின்னப்பருடைய கருத்தல்ல.

6. மேலும் அவன் ஆங்கார கெம்பீரங்கொண்டு பசாசுக்கு இடப்பட்ட தீர்வைக்குள்ளாகாதபடிக்குப் புதுக் கிறீஸ்துவனாயிருக்கவொண்ணாது.

7. அன்றியும் அவன் நிந்தைக்கும், பசாசின் கண்ணிக்கும் உள்ளாகாதபடிக்குப் புறத்திப்பட்டவர்களிடத்தில் நற்சாட்சி பெற்றவனாயும் இருக்கவேண்டும்.

8. இந்தப் பிரகாரமாய்த் தியாக்கோன்மாரும் இருநாக்கு உள்ளவர்களாயும், மதுபானத்தில் கவிழ்ந்தவர்களாயும், இழிவான ஆதாயத்தைத்தேடுகிறவர்களாயும் இராமல், நல்லொழுக்கமுள்ளவர்களாய்,

9. விசுவாச இரகசியத்தைப் பரிசுத்த மனச்சாட்சியோடு காப்பாற்றிவரவேண்டும்.

10. இவர்கள் முந்திப் பரிட்சைபண்ணப்பட்டு, யாதொரு குற்றமுமில்லாதிருந்தால், திருப்பணிவிடை செய்யலாம்.

11. இவ்விதமே பெண்பிள்ளைகள் நாணமுடையவர்களும், கோள்குண்டணி பேசாதவர்களும், இச்சையடக்கமுள்ளவர்களும், சகலத்திலும் பிரமாணிக்கமுள்ளவர்களுமாய் இருக்கவேண்டியது.

12. மேலும் தியாக்கோன்மார்கள் ஒரே தாரப்பூமான்களாய்த் தங்கள் பிள்ளைகளையும் தங்கள் வீட்டாரையும் நன்றாய் ஆளுகிறவர்களாயிருக்கவேண்டியது.

13. இப்படித் தங்கள் ஊழியத்தை நன்றாய் நிறைவேற்றுகிறவர்கள் தங்களுக்கு மேல் நிலைமையைப் பெற்றுக்கொள்ளுவதுமன்றி, யேசுக்கிறீஸ்துவின் மேலுள்ள விசுவாசத்தில் மிகுந்த தைரியத்தையும் அடைவார்கள்.

இதுவே அவருடைய கருத்தாயிருந்ததானால், கிறீஸ்தவர்களெல்லோரும் 2-3-4 முதலான பல ஸ்திரீகளைக் கொண்டிருக்கிறதுபோலவும், அவர்களில் ஒரு ஸ்திரீயைமட்டும் விவாகம் செய்திருக்கிறவர்கள் அபூர்வமாயிருப்பது போலவும், மேற்றிராணப் பட்டமாகிய இந்த உயர்ந்த அந்தஸ்துக்கு அப்படியே ஒரு மனைவியை உடையவர்களைப் பார்த்துத் தெரிந்துகொள்ளவேணுமென்றும் சொன்னாற்போலாச்சுதே. இப்படிப்பட்ட அக்கிரமமான பேச்சு முதலாய் அவர் நினைக்கத்தக்கதோ? யூதர்களும் அஞ்ஞானிகளும் அப்படிச்செய்துவந்தார்களென்றும், அவர்களைப்போல் நடக்கிறவனை மேற்றிராணப் பட்டத்துக்குத் தெரிந்துகொள்ளக்கூடாதென்றும் அவர் போதிக்கிறதாகச் சொல்லத்துணிகிறார்கள். அப்படியே 2-3 ஸ்திரீகளை உடையவனைக் கிறீஸ்தவனென்று முதலாய் நினைக்கக்கூடாதிருக்க, மேற்றிராணப் பட்டத்துக்குத் தெரிந்துகொள்ளப் படுகிறவர்களுக்கு அப்படிப்பட்டவனாகாதென்று அவர் சொல்லுவாரென்று பைத்தியம் கொண்டவன் முதலாய் நினைக்கமாட்டான் என்றறிக.

6. கெட்டுப்போன சம்மனசுகள் தங்கள் மேன்மையான அந்தஸ்தினிமித்தம் ஆங்காரித்ததினாலே மோக்ஷத்தில் நின்று தள்ளுண்டு, பசாசுகளாய் நரகத்திலே தள்ளப்பட்டார்கள். மேற்றிராணப்பட்டம் திருச்சபையில் மிகவும் மேன்மையான பட்டமாயிருக்கக் கொள்ள, அப்படிப்பட்ட மேலான அந்தஸ்தினால் ஆங்காரங்கொண்டு, பசாசைப்போல் கெட்டுப்போகாதபடிக்கு அதுக்குத் தெரிந்துகொள்ளப்படுகிறவன் புதுக் கிறீஸ்துவனாயிருக்க ஒண்ணாதென்று கற்பிக்கிறார்.

7. மேற்றிராணப்பட்டத்துக்குத் தெரிந்துகொள்ளப்படுகிறவர் உலகத்தார் முன்பாக முதலாய்ப் பழுதற்றவர் என்று பேரெடுக்காவிட்டால், அவர்கள் அவர் பேரில் குறைபேசி அவரைப் புறக்கணிப்பார்கள். அவர் அதைக் கண்டு அவர்களுக்கு வேதத்தைப் போதிக்கத் துணியாமலிருப்பதுந்தவிர அவர்கள்மேல் பொறுமையடைந்து அந்தப் பொறுமையினாலே பசாசின் கண்ணியில் அகப்படுவாரென்று அர்த்தமாம்.

11. **பெண்பிள்ளைகள்:**—இவர்களால் அக்காலத்தில் திருப்பணிவிடைக்காகத் தெரிந்துகொள்ளப்பட்ட வயது சென்ற ஸ்திரீகளை விசேஷமாய்க் குறிக்கிறார். (ரோமை. 16-1.)

14. நான் உம்மிடத்திற்குச் சீக்கிரமாய் வருவேனென்று நம்புகிறேன். (1. இரா. 5-4.)

15. ஆகிலும் நான் தாமதித்தால், சர்வேசுரனுடைய வீட்டில் நீர் நடக்க வேண்டிய முறையை அறிந்துகொள்ளும்படிக்கு இவைகளை எழுதுகிறேன். இந்த வீடு ஜீவந்தரான கடவுளின் திருச்சபையும், சத்தியத்துக்குத் தூணும் அடிநிலையுமாமே.

16. இது தேவபக்திக்குரிய பெரிய இரகசியமென்பது பிரசித்தமாயிருக்கின்றது. இந்தப்பரம இரகசியம் மாம்சரூபத்தில் தோன்றினது; நீதியுள்ளதென்று இஸ்பிரீத்துவினால் விளக்கப்பட்டது; தேவதூதர்களுக்குக் காணப்பட்டது; புறஜாதிகளுக்குப் பிரசங்கிக்கப்பட்டது; உலகத்தில் விசுவசிக்கப்பட்டது; மகிமையில் எற்றப்பட்டது.

## 4-ம். அதிகாரம்.

*பிற்காலத்தில் பொய்ப்போதகர்கள் தோன்றுவார்களென்று முன்னறிவித்து, தீமோத்தேயு என்பவர் தன் கடமைகளைக் கிரமமாய் நிறைவேற்றும்பொருட்டு அவருக்குப் பற்பல புத்திமதிகளைச் சொல்லுகிறார்.*

1. அன்றியும் இஸ்பிரீத்துவானவர் வெளியரங்கமாய் அறிவித்திருக்கிறபடி, இனி வருங்காலங்களிலே சிலர் தப்பறைப் புத்தியுள்ளவர்களுக்கும், பசாசுகளின் உபதேசங்களுக்கும் காதுகொடுத்து, விசுவாசத்தை விட்டு விலகிப் போவார்கள். (2. தீமோ. 3-1.)

2. இந்தப் பித்தலாட்டக்காரர் கள்ளவேஷம் பூண்டு பொய்யைப் பிதற்றும் கல்நெஞ்சத்தனமுள்ளவர்கள்.

3. இவர்கள், விவாகம் பண்ணப்படாதென்றும், நன்றியறிதலோடே பொசிக்கும்படி சர்வேசுரன் விசுவாசிகளுக்காகவும், சத்தியத்தையறிந்தவர்களுக்காகவும் உண்டாக்கின போஜனபதார்த்தங்களைச் சாப்பிட ஒண்ணாதென்றும் விலக்குகிறவர்கள். (உரோ. 14-2.)

4. சர்வேசுரன் சிருஷ்டித்ததெல்லாம் நன்மையாயிருக்கக்கொள்ள, நன்றியறிந்த ஸ்தோத்திரத்தோடு சாப்பிடுகிற எதையும் தள்ள வேண்டுவதில்லை.

5. ஏனெனில் அது தேவவாக்கியத்தினாலும், ஜெபத்தினாலும் பரிசுத்தமாக்கப்படுகின்றது.

6. இவைகளை நீர் சகோதரருக்கு உபதேசித்துவந்தால், விசுவாசத்திற்குரிய வார்த்தைகளாலும் நீர் அனுசரித்துவருகிற நற்போதகத்தினாலும் பெலனடைந்து யேசுக்கிறீஸ்துவினுடைய நல்ல ஊழியனாயிருப்பீர்.

15. **ஜீவந்தரான கடவுளின் திருச்சபை:**—இதினால் திருச்சபையில் அங்கங்கே கிறீஸ்துவர்கள் தவறிப்போனாலும், திருச்சபையைப்படிப்பிக்கும் அர்ச். பாப்பானவரும் மேற்றிராணிமார்களும் ஒன்றாய்ச் சத்தியத்தைவிட்டுத் தவறமாட்டார்களென்று காண்பிக்கிறது. இதிலே அர்ச். சின்னப்பர் தாம் வரத் தாமதமானாலும், தீமோத்தேயு அதிமேற்றிராணியாராக மற்ற குருக்களையும், இன்னும் மற்றக் கீழ்விசாரணைக்காரர்களையும் விசாரித்துவர வேண்டுமென்று காண்பிக்கிறார்.

16. **பெரிய இரகசியம்:**—சுதனாகிய சர்வேசுரனுடைய மனுஷாவதார இரகசியம்.

1-2-3. இந்த வசனங்களிலே அர்ச். சின்னப்பர் குறிக்கிற கள்ளப்போதகர்கள் யாரென்றால் திருச்சபையின் துவக்கத்திலே தோன்றிய எபியோனித்தர், கினேஸ்திக்கர், மனிக்கேயர் என்னும் மூன்றுவகைப் பதிதர்களாம். அந்தப்பதிதர் மிகுந்த பரிசுத்தத்தனத்தின் வேஷத்தைத்தரித்துக்கொண்டு, ஞானஸ்நானம் பெற்றவர்கள் பரிசுத்தவான்களாகையால் அவர்கள் விவாகம்பண்ணுவது தகாதென்றும், விவாகமானது பசாசினாலே உண்டாக்கப்பட்டதென்றும், மரக்கறியல்லாமல் உயிர்ப்பிராணிகளை அடித்துப் பொசிக்கிறது பாவமென்றும் போதித்துக்கொண்டுவந்தார்கள். அர்ச். அகுஸ்தீன் முதலாய் வாலிபராயிருக்கும்போது அந்தவகைப் பதித்தனத்தில் உட்பட்டிருந்தார். ஆனால் மனந்திரும்பின பிறகு அந்தப் பதிதர்களை மிகுந்த திறமையோடு மறுத்துக்கொண்டுவந்தார்.

7. ஆனால் புத்தியற்றதும், கிழவிகளுக்குரியதுமான கட்டுக்கதைகளை விலக்கி, தேவபக்தியை அடையும்படி முயற்சிபண்ணுவீராக.

8. ஏனெனில் சரீரமுயற்சி சொற்பப் பிரயோஜனமுள்ளது. பக்தியோவென்றால் இந்த ஜீவியத்துக்கும், இதற்குப் பின்வரும் ஜீவியத்துக்கும் வாக்குத்தத்தமுள்ளதாகையால், எல்லாவற்றிற்கும் பிரயோஜனமுள்ளது.

9. இந்த வாக்கியம் உண்மையும், எல்லா அங்கீகரிப்புக்குத் தகுதியுமானது.

10. இதின் நிமித்தம் பிரயாசப்படுகிறோம், நிந்திக்கவும்படுகிறோம். ஏனெனில் எல்லாமனிதருக்கும், விசேஷமாய் விசுவாசிகளுக்கும் இரட்சகராகிய ஜீவனுள்ள சர்வேசுரன்பேரில் நாம் நம்பிக்கை வைத்திருக்கிறோம்.

11. இவைகளை நீர் கட்டளையிட்டுப் போதிக்கக்கடவீர்.

12. உம்முடைய இளமையைக்குறித்து எவனும் உம்மைப் புறக்கணியாதிருப்பானாக. உம்முடைய வார்த்தையிலும், நடக்கையிலும், அன்பிலும், விசுவாசத்திலும், கற்பிலும், விசுவாசிகளுக்கு நல்மாதிரியாயிரும். (தீத்து. 2-7.)

13. நான் வருமளவும் வாசிக்கிறதிலும், புத்தி சொல்லுகிறதிலும், உபதேசிக்கிறதிலும் கவனிப்பாயிரும்.

14. குருத்துவமுடையோர் உமது மேல் கைகளை நீட்டிவைத்தபோது தீர்க்கதரிசனத்தால் உமக்குக்கொடுக்கப்பட்டதும், உம்மிடத்திலிருக்கிறதுமான வரத்தை அசட்டைசெய்யாதிரும்.

15. உம்முடைய (புண்ணிய) வர்த்திப்பு யாவருக்கும் விளங்கும்படி இவைகளை நீர் தியானித்துக்கொண்டு, இவைகளிலே நிலைத்திரும்.

16. உமதுமட்டிலும் உபதேசத்தின் மட்டிலும் கவனமாயிருந்து, இவைகளில் நிலைமையாயிரும். ஏனெனில் இப்படிச் செய்வீரானால், உம்மையும் உம்முடைய புத்தியைக் கேட்பவர்களையும் இரட்சித்துக்கொள்ளுவீர்.

## 5-ம். அதிகாரம்.

பற்பல அந்தஸ்திலுள்ளவர்களையும், விதவைகளையும் நடத்தும் விதத்தைக்குறித்தும், குருப்பட்டத்துக்குத் தெரிந்துகொள்ளப்படுகிறவர்களைக் குறித்தும், பிரச்சித்தமான பாவிகளைக் குறித்தும் சொல்லிய புத்திமதிகள்.

1. முதிர்ந்த வயதுள்ளவனைக் கடிந்துகொள்ளாமல், அவனைத் தகப்பனைப் போலவும், வாலிபர்களைச் சகோதரர்களைப்போலவும்,

2. வயதுசென்ற பெண்பிள்ளைகளைத் தாய்களைப்போலவும், வாலியஸ்திரீகளை எல்லாக் கற்புடன் சகோதரிகளைப்போலவும் பாவித்துப் புத்திசொல்லும்.

3. மெய்யான விதவைகளாகிய விதவைகளைக் கனம்பண்ணும்.

4. யாதொரு விதவைக்குப் பிள்ளைகளாவது பேரப்பிள்ளைகளாவது உண்டானால், அவள் தன் வீட்டை நடப்பிக்கவும், பெற்றோர்களுக்குத் தன் கடமையை நிறைவேற்றவும் முந்தக் கற்றுக்கொள்வாளாக. ஏனெனில் இது சர்வேசுரனுடைய சமுகத்துக்கு உகந்ததாயிருக்கிறது.

5. மெய்யாகவே விதவையாய் ஆதரவற்றிருப்பவள் சர்வேசுரன்பேரில் நம்பிக்கைவைத்து, இரவும் பகலும் ஜெபத்திலும் வேண்டுதல்களிலும் நிலைத்திருப்பாளாக.

6. ஏனெனில் இன்ப சுகத்தோடிருப்பவள் உயிரோடிருந்தும் செத்தவளாயிருக்கிறாள். (எபே. 2-1.)

14. தீர்க்கதரிசனத்தால் என்கிற வார்த்தைக்கு திமோத்தேயு பட்டம் பெற்றபோது அவர்மேல் கைநீட்டிவைத்துச் சொல்லப்பட்ட தேவ வாக்கியங்கள் என்றர்த்தமாம்.

7. அவர்கள் குற்றஞ்சாட்டப்படாத வர்களாய் இருக்கும்படிக்கு இவைகளைக் கற்பியும்.

8. ஒருவன் தன் சொந்த ஜனங்களையும், விசேஷமாய்த் தன் வீட்டாரையும் விசாரியாதிருந்தால், அவன் விசுவாசத்தை மறுத்தவனும், அவிசுவாசியை விட அதிகக் கெட்டவனுமாய் இருக்கிறான்.

9. அறுபது வயதுக்குக் குறையாதவளும், ஒரே புருஷனுக்கு மனைவியாயிருந்தவளும்,

10. பிள்ளைகளை வளர்த்து, பரதேசிகளை உபசரித்தவளும், பரிசுத்தவான்களுடைய கால்களைக் கழுவி, துன்பப்படுகிறவர்களுக்கு உதவிசெய்து, சகல வித நற்கிரியைகளையும் நடத்தி, நற்கிருத்தியங்களுக்கு நற்சாட்சி பெற்றவளுமாகிய விதவையானவள் தெரிந்து கொள்ளப்படவேண்டும்.

11. இளவயதுள்ள விதவைகளை விலக்குவீராக. ஏனெனில் அவர்கள் கிறீஸ்துநாதருடைய (ஆலயத்தில்) இன்பத்தை அனுபவித்தபின் விவாகம் செய்துகொள்ள மனதாகி,

12. முந்தின பிரமாணிக்கத்தை அவமாக்குவதினால், சாபத்தண்டனைக்குள்ளாகிறார்கள்.

13. இதுவுமன்றி அவர்கள் சோம்பற்காரிகளாய் வீட்டுக்கு வீடு திரியப் பழகுகிறார்கள். சோம்பற்காரிகளாய் மாத்திரமல்ல, பேச்சுக்காரரும், விநோதப்பிரியரும், தகாதவைகளைப்பேசுகிறவர்களுமாகிறார்கள்.

14. ஆகையால் இளவயதுள்ள விதவைகள் விவாகம்செய்து, பிள்ளைகளைப் பெறவும், குடித்தனத்தை நடப்பிக்கவும்; எதிராளி அவதூறு சொல்லுகிறதற்கு இடங்கொடாதிருக்கவும் வேண்டுமென்று விரும்புகிறேன்.

15. ஏனெனில் ஏற்கனவே சில விதவைகள் சாத்தானைப் பின்பற்றி விலகிப் போனார்கள்.

16. விசுவாசியாகிய ஒருவனுக்கு விதவைகளிருந்தால், அவனே அவர்களுக்குச் சம்ரக்ஷணை செய்யக்கடவான். மெய்யாகவே விதவைகளாயிருக்கிறவர்களுக்குத் திருச்சபையானது உதவி செய்யக்கூடுமாயிருக்கும்பொருட்டு, இந்தப் பாரத்தை அதின்மேல் சுமத்தப்படாது.

14. இதனால் விதவை விவாகம் திருச்சபையின் போதகத்துக்கு ஒத்ததென்று காட்டுகிறார். இப்பேர்ப்பட்டவர்கள் விவாகம் இல்லாமலிருப்பது நல்லதென்று காட்டினாலும், தங்களை அடக்கக் கற்புவரம் பெறாதவர்கள் பாவத்தில் விழுந்து கெட்டுப்போய் அஞ்ஞானிகள் நமது வேதத்தைப்பற்றி அவதூறு சொல்லாதபடிக்குக் கலியாணம் செய்வது நல்லதென்கிறார்.

16. இதிலே அர்ச். சின்னப்பர் நாலுவகை விதவைகளைக்குறிக்கிறார். 1-வது உதவியும் ஆறுதலுமற்ற மெய்யான விதவைகள். 2-வது புருஷனை இழந்து பிள்ளைகளையும் சம்பத்துக்களையும் உடைய விதவைகள். 3-வது பிள்ளைகள் இல்லாதவர்களும் ஆஸ்திக்காரருக்குச் சம்பந்தப்பட்டவர்களுமான விதவைகள். 4-வது உலக சுகங்களை நாடிக்கொண்டிருக்கிற இளவயதுள்ள விதவைகள். இந்த நாலாம்வகை விதவைகளை விலக்கக் கற்பிக்கிறார். இவர்கள் உயிரோடிருந்தும் ஆத்துமத்திலே செத்தவர்களாயிருக்கிறார்கள். அப்படிப்பட்ட விதவைகளை மெய்யான விதவைகளின் சபையிலே சேர்த்துக்கொண்டு திருச்சபை தர்மப் பணத்தினாலே காப்பாற்றினால், தாங்கள் தெரிந்துகொண்ட விதவை அந்தஸ்தின் வார்த்தைப்பாட்டை மீறி, மறுபடியும் கலியாணம்பண்ண விரும்புவதுமன்றி சோம்பற்காரிகளாயிருந்து வீட்டுக்குவீடு திரியப் பழகி, விதவைகளுக்கு யோக்கியமற்றவிதமாய் நடப்பார்கள்.

17. நன்றாய் விசாரணை செய்கிற குருமார்களை, விசேஷமாய்ப் பிரசங்கத்திலும், உபதேசத்திலும் பிரயாசப்படுகிறவர்களை இரட்டிப்பான சங்கைக்கு உரியவர்களாக மதிக்கவேண்டும்.

18. ஏனெனில் போர் அடிக்கிற மாட்டுக்கு வாயைக் கட்டாதிருப்பாயாக என்றும், வேலைக்காரன் தன் கூலிக்குப் பாத்திரனாயிருக்கிறான் என்றும் வேத வாக்கியம் சொல்லுகிறது. (உபா. 25-4. 1. கொ. 9-9. லூக். 10-7.)

19. குருவுக்கு விரோதமாய் ஒருவன் செய்யும் பிராதை இரண்டு மூன்று சாட்சிகளில்லாமல் நீர் ஏற்றுக்கொள்ள வேண்டாம்.

20. பாவம் செய்தவர்களை மற்றவர்களுக்கும் பயமுண்டாகும்படி, எல்லாருக்கும் முன்பாகக் கடிந்துகொள்ளும்.

21. ஒரு பட்சத்தில் சார்ந்து நீர் ஒன்றுஞ்செய்யாமலும், விசாரிக்குமுன் தீர்மானிக்காமலும், இவைகளைக் காக்கும்படி சர்வேசுரன் முன்னும், யேசுக்கிறீஸ்துநாதர் முன்னும், தெரிந்துகொள்ளப்பட்ட தூதர்கள் முன்னும் ஆணையிட்டுச் சொல்லுகிறேன்.

22. நீர் துரிதமாய் ஒருவன்மேலும் கைகளை நீட்டி வைக்கவேண்டாம். பிறர் பாவத்துக்கு நீர் உடன்படவும் வேண்டாம். உம்மைக் கற்புடையவராகக் காப்பாற்றிக்கொள்ளும்.

23. இதுமுதல் வெறுந் தண்ணீர் மட்டும் குடியாமல், உம்முடைய வயிற்று நோவுக்காகவும், உமக்கு அடிக்கடி வருகிற பலவீனங்களுக்காகவும் கொஞ்சம் திராட்சரசம் சேர்த்துக்கொள்ளும்.

24. சில மனிதருடைய பாவங்கள் விசாரணைக்கு முன்னே வெளியரங்கமாயிருக்கின்றன. சிலருடையது விசாரணைக்குப் பிறகுமட்டும் வெளிப்படும்.

25. அப்படியே சிலருடைய நற்கிரியைகளும் வெளியரங்கமாயிருக்கின்றன. அப்படியிராதவைகளும் மறைவாயிருக்கமாட்டாது.

## 6-ம். அதிகாரம்.

*ஊழியர்களுடைய கடமைகளை விவரித்துப் பொய்ப் போதகர்களைக் கண்டித்து, பொருளாசையை விலக்கச் சொல்லி, ஐசுவரியவான்களுக்குச் சொல்லவேண்டிய புத்தி இன்னதென்று காண்பித்து நிருபத்தை முடிக்கிறார்.*

1. கர்த்தருடைய நாமமும், போதகமும் தூஷணிக்கப்படாதபடிக்கு, அடிமைத்தனத்தின் நுகத்துக்குட்பட்டிருக்கிற யாவரும் தங்கள் எஜமான்கள் எல்லாச் சங்கைக்கும் பாத்திரவான்களென்று எண்ணிக்கொள்ளக்கடவார்கள். (எபே. 6-5.)

அப்படிப்பட்ட விதவைகளில் சிலர் இந்தப்பிரகாரமாய்ச் சாத்தான் கண்ணியில் அகப்பட்டுக் கெட்டுப்போனார்கள். அப்படிப்பட்ட இளம்பிராயமுள்ள விதவைகள் மறுபடியுங் கலியாணஞ்செய்து பிள்ளைகளைப்பெற்று தாய்மார்களுக்குள்ள கடமையை நிறைவேற்றட்டுமென்று கற்பிக்கிறார். 3-ம் வகை விதவைகளை அவர்களுடைய சொந்தத்தார் காப்பாற்றிக்கொண்டுவரட்டும். திருச்சபையினுடைய தர்மப் பணத்தை அவர்களுக்காகச் செலவழிக்க வேண்டியதில்லை என்கிறார். 2-ம் வகை விதவைகள் தங்கள் பிள்ளைகளையும் பேரப்பிள்ளைகளையும் தேவபக்தியில் வளர்த்துத் தங்கள் வீட்டைக் கிரமத்தோடு நடத்தக்கற்பிக்கிறார்.

முதல்வகை விதவைகளைத்தான் திருச்சபையில் தர்மச்செலவைக்கொண்டு காப்பாற்றிவர வேண்டும் என்கிறார். அப்படிப்பட்ட மெய்யான விதவைகளுக்குள்ளே அறுபது வயதுக்கு மேற்பட்டவர்களும் முதல்விசை மாத்திரம் கலியாணம்பண்ணினவர்களும் எல்லாப் புண்ணியங்களிலும் வர்த்தித்து, பிறரால் நற்சாட்சி பெற்றவர்களுமாயிருக்கிறவர்களை மட்டும் கோவில் திருப்பணிவிடைக்குத் தெரிந்துகொள்ளக் கற்பிக்கிறார். அந்தத் திருப்பணிவிடைகள் ஏதெனில், கோவிலைப் பெருக்குகிறதும், பீடத்துவஸ்திரங்களை சுத்தஞ்செய்கிறதும், சிறுபிள்ளைகளுக்கு ஞானக்காரியங்களைப் படிப்பிக்கிறதும் இவைமுதலானவைகளாம்.

2. விசுவாசிகளாகிய எஜமான்களை உடையவர்களோவெனில், அவர்கள் சகோதரராய் இருக்கிறதினிமித்தம் அவர்களை அசட்டைபண்ணுகிறதுந்தவிர, நன்மைகளில் பங்கு பெற்றுக்கொள்ளுகிறவர்களாகிய அவர்கள் விசுவாசிகளும், அன்புக்குரியவர்களுமாயிருப்பதினால், அவர்களை அதிகமாய்ச் சேவிக்கக்கடவார்கள். இந்தப்படியே போதித்துப் புத்திசொல்லும்.

3. நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவின் பழுதற்ற வாக்கியங்களுக்கும், பக்திக்குரிய உபதேசத்திற்கும் கீழ்ப்படியாமல், யாராகிலும் வேறு விதமாய்ப் போதிப்பானாகில்,

4. அவன் ஆங்காரியும், ஒன்றையும் அறியாதவனும், தர்க்கங்களும் வாக்குவாதங்களுமாகிய நோய்களைக்கொண்டவனுமாய் இருக்கிறான். அவைகளால் பொறாமைகளும், சண்டைகளும், தூஷணங்களும், பொல்லாத சந்தேகங்களும் பிறக்கும்.

5. மேலும் கெட்ட சிந்தையுள்ளவர்களும், சத்தியத்தை இழந்தவர்களும், தேவபக்தியை ஆதாயத்தொழிலென்று எண்ணுகிறவர்களுமாகிய மனிதர்களால் நேரிடும் போராட்டங்களும் உண்டாகும்.

6. (உள்ளது) போதுமென்ற எண்ணத்தோடுகூடிய பக்தியே மிகுந்த ஆதாயம்.

7. ஏனெனில், உலகத்திலே நாம் ஒன்றும் கொண்டுவந்ததுமில்லை; இங்கிருந்து நாம் ஒன்றும் கொண்டுபோகவும் கூடாது என்பதற்குச் சந்தேகமில்லை. (யோப் 1-21. பிரச. 5-14.)

8. ஆகையால் அன்னமும் ஆடையும் இருந்தால், இதுவே நமக்குப் போதுமென்று இருக்கக்கடவோம். (பழ. 28-26.)

9. ஐசுவரியவான்களாக விரும்புகிறவர்கள் சோதனையிலும், பசாசின் கண்ணியிலும், கேட்டிலும், நரகாக்கினியிலும் மனிதர்களை அமிழ்த்துகிற வீணும் கெடுதியுமான பற்பல இச்சைகளிலும் விழுகிறார்கள்.

10. ஏனெனில், பொருளாசை எல்லாத்தின்மைகளுக்கும் வேராயிருக்கிறது. சிலர் அப்படிப்பட்ட இச்சைக்கு இடங்கொடுத்து, விசுவாசத்தினின்று தவறி, பற்பல துன்பங்களில் சிக்கிக்கொண்டார்கள்.

11. கடவுளுடைய மனுஷனாகிய நீரோ, இவைகளுக்கு விலகி ஓடி, நீதியையும், பக்தியையும், விசுவாசத்தையும், பரம அன்பையும், பொறுமையையும், சாந்தகுணத்தையும் நாடுவீராக.

12. விசுவாசத்தின் நல்ல போர் பொருதுவீராக; நித்திய ஜீவியத்தைக் கைப்பற்றிக்கொள்ளும். இதற்காகவே நீர் அழைக்கப்பட்டீர். இதைப்பற்றியே அநேகசாட்சிகளுக்கு முன்பாக விசுவாசத்தின் நல்லறிக்கையிட்டிருக்கிறீர்.

13. எல்லாவற்றிற்கும் உயிர்தருகிறவராகிய சர்வேசுரனுடையசந்நிதானத்திலும், போஞ்சுப்பிலாத்துவின் முன்பாக நல்லறிக்கையைச் சாட்சியாக விளங்கப்பண்ணினயேசுக்கிறீஸ்துநாதர் சந்நிதானத்திலும் நான் உமக்குக் கட்டளையிடுகிறதேதெனில், (மத். 27-11.)

14. நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர் வருமளவாக நீர் இந்தக் கற்பனைகளை மாசில்லாமலும், குறைசொல்லுவதற்கு இடமில்லாமலும் கைக்கொண்டு அநுசரிப்பீராக.

15. அவருடைய வருகையை அதின் காலத்திலே நித்திய ஆனந்தரும், ஏக வல்லவரும், ராஜாதிராஜாவும் கர்த்தாதி கர்த்தருமாயிருக்கிறவர் பிரசித்தப்படுத்துவார். (காட்சி. 17-14.)

16. அவர் ஒருவரே அட்சயர்; எட்டாத ஒளியில் வசிக்கிறவர்; மனுஷரில் ஒருவரும் கண்டிராதவரும், காணக் கூடாதவருமாயிருக்கிறவர்; அவருக்கே அநவரதகாலமும் மகிமையும் இராச்சிய பாரமும் உண்டாவதாக. ஆமென். (அருள. 1-18; 1. அரு. 4-12.)

17. இப்பிரபஞ்சத்தில் ஐசுவரியராய் இருக்கிறவர்கள் ஆங்கார சிந்தையுள்ளவர்களாய் இராமலும், நிலையற்ற ஐசுவரியத்தின்மேல் நம்பிக்கை வைக்காமலும், நாம் அநுபவிப்பதற்கு வேண்டியயாவையும் சம்பூரணமாய்க் கொடுக்கிற ஜீவனுள்ள சர்வேசுரன்பேரில் நம்பிக்கையாயிருக்கவும்,

18. நன்மைசெய்யவும், தர்மக்கிரியைகளில் ஐசுவரியராகவும், தாராளமாய்க் கொடுத்துப் பகிரவும்,

19. மெய்யான ஜீவியத்தைப் பற்றிக் கொள்ளும்படி வருங்காலத்திற்காகத் தங்களுக்கு நல்ல பொக்கிஷம் சேர்த்து வைக்கவும் அவர்களுக்குக் கற்பிப்பீராக.

20. ஓ தீமோத்தேயுவே, உம்மிடத்தில் ஒப்பிக்கப்பட்டதை நீர் காத்துக்கொண்டு, நூதனமான லௌகீக வாக்கியங்களையும், கல்வியென்று பொய்யாய்ப் பேர்பெற்றிருக்கிற விபரீத ஞானங்களையும் விலக்குவீராக.

21. இதைச் சிலர் பாராட்டி, விசுவாசத்தைவிட்டு வழுவிப்போனார்கள். இஷ்டப்பிரசாதம் உம்மோடு இருப்பதாக.

ஆமென்.


1-தீமோத்தேயு நிருபம் முற்றிற்று.

# பாயிரம்.

அர்ச். சின்னப்பர் கர்த்தரவதாரத்தின் 66-ம் வருஷத்தில் உரோமாபுரியில் விலங்கிலே கிடக்கிறபோது இந்த நிருபத்தை எழுதினார். அவர் எழுதின நிருபங்களில் இது கடைசியான நிருபமென்று காணப்படுகிறது. இந்த நிருபத்தின் பொருள் முந்தின நிருபத்தைப்போல மேற்றிராணிமார்களுக்குண்டான கடமைகளைக் காண்பித்து அவைகளை உண்மையாய் நிறைவேற்றும்படிக்குப் புத்திசொல்லுகிறார்.



# அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர்

# தீமோத்தேயுக்கு

# எழுதிய 2-ம். நிருபம்.

## முதல் அதிகாரம்.

*தீமோத்தேயுவின் பேரில் தாம் கொண்டிருந்த பட்சத்தைப் பாராட்டி, அவர் தமக்கு அருளப்பட்ட தேவவரத்தின்படி தம்முடைய கடமைகளை நிறைவேற்றப் புத்தி சொல்லுகிறார்.*

1. யேசுக்கிறீஸ்துவினிடத்தில் நமக்கு உண்டாயிருக்கிற ஜீவிய வாக்குத்தத்தத்தின்படி சர்வேசுரனுடைய சித்தத்தினால் யேசுக்கிறீஸ்துவின் அப்போஸ்தலனாகிய சின்னப்பன்,

2. மிகவும் பிரியமுள்ள மகனாகிய தீமோத்தேயுவுக்கு எழுதுவது: பிதாவாகிய சர்வேசுரனாலும், நம்முடைய கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துவினாலும், இஷ்டப்பிரசாதமும், கிருபையும், சமாதானமும் உண்டாவதாக.

3. என் முன்னோர்களைப்போல, பரிசுத்த மனதோடு நானும் சேவித்துவருகிற சர்வேசுரன் முன்பாக இரவும் பகலும் இடைவிடாமல் என் ஜெபங்களில் உம்மை நான் நினைவுகூருகிறதைப்பற்றி அவருக்கு நன்றியறிந்த ஸ்தோத்திரம் பண்ணுகிறேன்.

4. ஏனெனில், என்சந்தோஷம்சம்பூரணமாகும்படி உம்முடைய கண்ணீர்களை நினைத்து உம்மைக் காணவேண்டுமென்று ஆவலாயிருக்கிறேன்.

5. உம்மிடத்திலுள்ள போலியற்ற விசுவாசமும் என் ஞாபகத்திலிருக்கின்றது. அந்த விசுவாசம் முந்தமுந்த உம்முடைய பாட்டியாகிய உலோயிசாளிடத்திலும், உமது தாயாகிய எவுனிக்கேயாளிடத்திலும் குடிகொண்டிருந்ததெப்படியோ, அப்படியே உம்மிடத்திலும் குடிகொண்டிருக்கிறதென்று நிச்சயிக்கிறேன். (அப். 16-1.)

5. அர்ச். தீமோத்தேயு அர்ச். சின்னப்பர்பேரில் வைத்திருந்த அன்பின் மிகுதியால், அர்ச். சின்னப்பர் அவரை ஓரிடத்தில் விட்டுப்பிரியும்போதெல்லாம் அவர் மிகவும் கண்ணீர் விட்டு அழுவார். அந்த அன்பின் அடையாளத்தை அர்ச். சின்னப்பர் எப்போதும் நினைத்துக்கொண்டிருந்ததினாலே அதை இங்கே சொல்லிக்காட்டுகிறார். தீமோத்தேயு அதிமேற்றிராணியாராயிருந்து தமது அலுவலினிமித்தம் வெகு தொந்தரவுங் கஷ்டமும் அனுபவித்ததால், மனம்தளர்ந்து போயிருந்தார். அவரைத் தைரியப்படுத்த அப்போஸ்தலர் இப்படி எழுதுகிறார்.

6. இதினிமித்தம் நான் உமது மேல் என் கைகளை நீட்டி வைத்ததினால் உமக்கு அருளப்பட்ட தேவவரப்பிரசாதத்தை நீர் மூட்டி எழுப்பிக்கொள்ள வேண்டுமென்று உமக்குப் புத்திசொல்லுகிறேன்.

7. ஏனெனில், சர்வேசுரன் நமக்குப் பயத்தின் இஸ்பிரீத்துவைக் கொடாமல், தைரியம், சிநேகம், மன அமைதி என்பவற்றின் இஸ்பிரீத்துவைக் கொடுத்திருக்கிறார். (உரோ. 8-15.)

8. ஆகையால் நம்முடைய ஆண்டவருடைய சாட்சியத்தினிமித்தமாவது, அவரைப்பற்றிக் கட்டுண்டிருக்கிறவனாகிய என்னிமித்தமாவது நீர் வெட்கப்படாமல், சர்வேசுரனுடைய வல்லமையில் ஊன்றி, என்னுடனேகூடச் சுவிசேஷத்துக்காக உழைப்பீராக.

9. அவர் நம்முடைய கிரியைகளைப் பாராமல், தம்முடைய சித்தத்தையும், கிறீஸ்துயேசுவுக்குள் உலகாதிகாலத்துக்குமுன் நமக்கு அளிக்கப்பட்ட வரப்பிரசாதத்தையும் பார்த்து, நம்மை மீட்டிரட்சித்து, தம்முடையபரிசுத்த அழைப்பால் நம்மை அழைத்திருக்கிறார். (தீத்து. 3-5.)

10. அந்த வரப்பிரசாதமானது நம்முடைய இரட்சகராகிய யேசுக்கிறீஸ்துவின் பிரகாசத்தால் வெளியாக்கப்பட்டது. அவரே மரணத்தைஅழித்து, சுவிசேஷத்தைக்கொண்டு ஜீவனையும் அழியாமையையும் நமக்கு விளங்கப் பண்ணினார்.

11. இதினிமித்தம் நான் புறஜாதியாருக்குப் பிரசங்கியாகவும், அப்போஸ்தலனாகவும், ஆசாரியனாகவும் நியமிக்கப்பட்டிருக்கிறேன். (1 தீமோ. 2-7.)

12. இதைப்பற்றி நான் இந்தப் பாடுகளைப்படுகிறது எனக்கு வெட்கமில்லை. ஏனெனில் நான் யாரை விசுவசித்திருக்கிறேனென்று எனக்குத்தெரியும். அவரிடத்தில் நான் ஒப்புவித்திருக்கிறதை அவர் அந்த மகா நாள்வரைக்கும் காக்க வல்லபரென்று நிச்சயித்திருக்கிறேன்.

13. யேசுக்கிறீஸ்துவின்மேல் உள்ள விசுவாசத்தையும், அன்பையுங்குறித்து நீர் என்னிடத்தில் கேட்டிருக்கிற பழுதற்ற போதகத்தைச் சட்டமாக வைத்துக்கொள்ளும்.

14. நம்மிடத்தில் வாசம்பண்ணுகிற இஸ்பிரீத்துசாந்துவைக்கொண்டு அந்த நல்ல பொக்கிஷத்தைக் காத்துக்கொள்வீராக.

15. ஆசியாவில் உள்ளவர்களெல்லோரும், அவர்களில் விசேஷமாய்ப் பிகெல்லும், எர்மோகெனும் என்னை விட்டு அகன்றுபோனார்களென்று அறிவீர்.

16. ஒநேசிப்போருடைய வீட்டாருக்குக் கர்த்தர் கிருபை புரிவாராக. ஏனெனில் அவர் அடிக்கடி என்னைத் தேற்றி, என் விலங்கைப்பற்றி வெட்கப்படாமல், (2 தீமோ. 4-9.)

17. உரோமாபுரிக்கு வந்தவுடனே கவலையோடு என்னைத் தேடிக் கண்டுகொண்டார்.

18. அந்த மகா நாளில் கர்த்தரிடத்தில் அவர் கிருபையைக் கண்டடையும்படி, கர்த்தரே அவருக்கு அருள்புரிவாராக. எபேசிலும் அவர் எனக்கு எவ்வளவு உதவிசெய்தாரென்று உமக்கு நன்றாய்த் தெரியும்.

10. **பிரகாசத்தால்:**—அதாவது நமது இரட்சகர் இவ்வுலகத்துக்கு வந்து தமது ஞானவெளிச்சத்தைப்பிரகாசிப்பித்ததினாலே என்று அர்த்தமாம்.

13-14. இதுகளில் ஞானமேய்ப்பர்களாகிய மேற்றிராணிமார்கள் எழுதப்பட்ட வேத வாக்கியத்தை மாத்திரமல்ல, காதினால் கேட்டறிந்தவைகளையும் பாரம்பரையாய்க் காப்பாற்றவேண்டுமென்று போதிக்கிறார்.

## 2-ம். அதிகாரம்.

*தீமோத்தேயு பொறுமையாயிருக்க வேண்டுமென்றும், தர்க்கங்களையும், வீண்பேச்சுகளையும் தவிர்த்து விலக்கவேண்டுமென்றும் கற்பிக்கிறார்.*

1. நீரோ, என்மகனே, யேசுக்கிறீஸ்து நாதரிடத்திலுள்ள வரப்பிரசாதத்தில் உம்மை உறுதிப்படுத்திக்கொள்ளும்.

2. நீர் என்னிடத்தில் அநேக சாட்சிகள் முன்பாகக் கேட்டறிந்தவைகளை மற்றவர்களுக்குப் போதிக்கத்தக்க பிரமாணிக்கமுள்ள மனிதர்களுக்கு ஒப்புவிப்பீராக.

3. யேசுக்கிறீஸ்துவின் நல்ல சேவகனைப்போல் பிரயாசப்படும்.

4. சர்வேசுரனுக்காகப் போர் செய்கிற எவனும் தான் சேவகம்பண்ணுகிறவருக்குப் பிரியப்படும்படிக்கு, லௌகீக காரியங்களிலே சிக்கிக்கொள்ளமாட்டான்.

5. ஏனெனில் மல்லயுத்தம்பண்ணுகிறவன் முதலாய்ச் சட்டப்படி யுத்தம் பண்ணினாலொழிய முடி சூட்டப்படான். (1 கொ. 9-24.)

6. உழுகிற குடியானவன் பலனிலே முந்திப் பங்குபெறவேண்டும்.

7. நான் சொல்லுகிறவைகளை நன்றாய் உணர்ந்துகொள்ளும். எல்லாக் காரியங்களிலும் கர்த்தர் உமக்குப் புத்தியைத் தந்தருளுவார்.

8. நான் போதிக்கிற சுவிசேஷத்தின்படியே தாவீதின் சந்ததியில் பிறந்தவராகிய யேசுக்கிறீஸ்துநாதர் மரித்தோரினின்று உயிர்த்தெழுந்தார் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும்.

9. இந்தச் சுவிசேஷத்தின் நிமித்தம் நான் உழைத்ததற்குப் பொல்லாங்கு செய்தவனைப்போல் விலங்கிடப்படும்படியாயிற்று. ஆனாலும் தேவவாக்கியம் கட்டப்படவில்லை. (பிலோ. 1-13.)

10. ஆகையால் தெரிந்துகொள்ளப்பட்டவர்கள் யேசுக்கிறீஸ்துவினால் உண்டாகிய இரட்சணியத்தை மோட்சமகிமையோடு பெற்றுக்கொள்ளவேண்டுமென்று, நான் அவர்களைப்பற்றிச் சகலத்தையும் சகித்துக்கொள்ளுகிறேன்.

11. இது சத்தியவாக்கு. என்னவென்றால்: நாம் அவருடனேகூட மரித்தோமானால், அவருடனேகூட உயிர் வாழ்வோம்.

12. அவரோடேகூடப் பாடுபட்டால், அவரோடேகூட அரசாளுவோம். நாம் அவரை அறியோமென்றால், அவரும் நம்மை அறியோமென்பார். (மத். 10-33.)

13. அவரை நாம் விசுவசியாதே போனாலும், அவர் சத்திய சுரூபியாகவே இருப்பவர். ஆகையால் அவர் தம்மை மறுதலிக்க முடியாது.

---

2. இதோ திருச்சபையின் பாரம்பரிய போதகத்திற்கு உச்சிதமான அத்தாட்சி. அர்ச் சின்னப்பர் வேதசத்தியங்களையெல்லாம் யேசுநாதருடைய திருவாயினின்றே கற்றுக்கொண்டதுபோல அவரும் அந்தச் சத்தியங்களை வாய்மொழியாகவே தீமோத்தேயு என்பவருக்கும், மற்றவர்களுக்கும் போதித்தார். வாய்மொழியாகத் தம்மிடத்தில் கற்றுக்கொண்ட சத்தியங்களை மற்றவர்களுக்குப் போதிக்கத்தக்க மனிதர்களுக்கு வாய்மொழியாகவே போதிக்க அவருக்குக் கற்பிக்கிறார். இதில் ஏதாவது எழுதவும் ஏதாகிலும் எழுத்தினால் போதிக்கவுங் கற்பிக்கிறதில்லை. ஆகையால் வேத புஸ்தகத்தைக் கொண்டே வேதத்தைப் போதிக்கவேண்டுமென்றும், வேதபுஸ்தகத்தை எல்லாருக்கும் கொடுக்கவேண்டுமென்றும், அவனவன் தான் விசுவசிக்கவேண்டிய சத்தியங்களையும் அநுசரிக்கவேண்டிய வேத முறைமைகளையும் வேதபுஸ்தகத்திலிருந்தே கைக்கொள்ளவேண்டுமென்றும் சாதிக்கிறது எவ்வளவோ தப்பறையும் அப்போஸ்தலருடைய போதகத்துக்கு விரோதமுமாயிருக்கின்றது.

14. ஆண்டவரைச் சாட்சியாகக் கோரி இவைகளை நீர் அவர்களுக்கு எச்சரிப்பீராக. வாக்குவாதஞ் செய்யவேண்டாம்: அது கேட்கிறவர்களுடைய புத்தியைத் தடுமாற்றவேயன்றி வெறொன்றுக்கும் உதவாது.

15. நீர் வெட்கப்படாத ஊழியனைச் சத்தியவாக்கியத்தை ஒழுங்காய்ப் போதித்து, சர்வேசுரனுடைய அங்கீகரிப்புக்கு ஏற்றவராக உம்மைக் காட்டும்படி அக்கறையாய்ப் பார்த்துக்கொள்ளும்.

16. லௌகீக வீண் பேச்சுகளை விட்டு விலகுவீராக. ஏனெனில் இவைகள் அவபக்தியை வெகுவாய் வளர்ப்பிக்கும்.

17. இவ்வித அவபக்திக்காரருடைய பேச்சு பிளவைபோல் ஊர்ந்து படருகிறது. இமனேயனும், பிலேத்தனும் இப்படிக்கொத்தவர்கள்.

18. இவர்கள் சத்தியத்தை விட்டுத் தவறி, மரித்தோர் உத்தானம் ஏற்கனவே ஆயிற்றென்று சொல்லி, சிலருருடைய விசுவாசத்தைக் கெடுத்தார்கள்.

19. ஆகிலும் சர்வேசுரன் போட்ட அஸ்திவாரம் உறுதியாய் நிற்கின்றது. ஏனெனில் ஆண்டவர் தம்முடையவர்கள் இன்னாரென்று அறிந்திருக்கிறார் என்பதும், ஆண்டவருடைய நாமத்தைச் சொல்லுகிற எவனும் அக்கிரமத்தை விட்டு விலகக்கடவான் என்பதும் அதற்கு முத்திரையாயிருக்கின்றது.

20. ஒரு பெரிய வீட்டிலே பொன்னும் வெள்ளியுமான பாத்திரங்களுமல்லாமல், மண்ணும் மரமுமான பாத்திரங்களும் உண்டல்லோ? அவைகளில் சில யோக்கியமானவைகளுக்கும்,வேறு சில நிசிதமானவைகளுக்கும் உதவுகின்றன.

21. ஆகையால் ஒருவன் இவைகளை விட்டுத் தன்னைச் சுத்திகரிப்பானாகில், அவன் அர்ச்சிக்கப்பட்டதும், தன் எஜமானுக்குப் பிரயோஜனமானதும், எவ்வித நற்கிரியைகளுக்கும் ஏற்றதுமான யோக்கிய பாத்திரமாயிருப்பான்.

22. அன்றியும் வாலிபத்துக்குரிய இச்சைகளுக்கு விலகி, சுத்தமான இருதயத்தோடு ஆண்டவரைத் தொழுகிறவர்களுடனே கூட நீதி, விசுவாசம், சிநேகம், சமாதானம் இவைகளை நாடுவீராக.

23. அல்லாமலும், காரியமற்ற மதியீனமான தர்க்கங்கள் வியாச்சியங்களைப்பிறப்பிக்கிறதென்று அறிந்து, அவைகளைவிலக்குவீராக. (1. தீமோ. 1-4; தீத். 3-9.)

24. ஆண்டவருடைய ஊழியன் வழக்காடுகிறவனாய் இருக்கப்படாது. ஆனால் அவன் யாவர்மட்டிலும் சாந்தமுள்ளவனும், போதக சமர்த்தனும், சகிப்புள்ளவனுமாய் இருக்கவேண்டும்.

---

19. **விசுவாசிகளுடைய முத்திரை:**—திருச்சபையில் உட்பட்டிருக்கிற எவனும் இரட்சிப்பின் அழைத்தலுக்குத் தேவதிருவுளத்தால் முன்னியமம் பெற்றிருக்கிறான். இப்பேர்ப்பட்டவர்கள் திருச்சபைக்கு அஸ்திவாரம் போலிருக்கிறார்கள். தேவநியமம் தவறாததினால், இவர்கள் நிலைபெற்ற உறுதியான அஸ்திவாரந்தான்.

20. ஒரு வீட்டில் எல்லாப்பாத்திரங்களும் பொன்னும் வெள்ளியுமாயிருக்கிறதில்லை. எல்லாம் மேன்மையான காரியங்களுக்கு உதவிக்கொள்ளப்படுகிறதுமில்லை. மரமும் மண்ணுமானவைகளும் உண்டு. அவைகளில் சிலதுகள் நிசிதமான காரியங்களுக்கு நியமிக்கப்பட்டிருக்கிறதும் உண்டு. அப்படியே திருச்சபையிலும் எல்லாரும் புண்ணியவான்களுமல்ல, மேன்மையான நடக்கை நடக்கிறவர்களுமல்ல, அயோக்கியமாய் நடக்கிறவர்களும் உண்டு. ஆகிலும் இப்படிப்பட்டவர்கள் மனந்திரும்பித் தங்கள் பாவங்களையுந் தங்கள் அயோக்கியமான நடக்கைகளையும் விட்டுவிட்டால், அவர்களுஞ் சர்வேசுரனுடைய சமுகத்தில் யோக்கியரும் புண்ணியவான்களுமாய்ப் போகலாமென்றறிக.

25. அன்றியும் சத்தியத்தை எதிர்க்கிறவர்கள் ஒருவேளை சத்தியத்தை அறிந்துகொள்ளும்படி சர்வேசுரன் அவர்களுக்கு மனந்திரும்பும் வரத்தைத் தந்தருளுவாரென்றும்,

26. பசாசின் மனதின்படி நடக்க அதினால் அடிமைகளாக்கப்பட்டிருக்கிறவர்கள் மறுபடியும் மனந்தெளிந்து அதின் கண்ணியினின்று தப்புவார்களென்றும் நம்பி, அவன் அவர்களை மட்டுமிதத்தோடு கண்டிக்கிறவனாகவும் இருக்கவேண்டும்.

## 3-ம். அதிகாரம்.

பற்பல பாவங்களில் சிக்குண்டவர்களான பொய்ப்போதகர்கள் இனி வருங்காலங்களில் திருச்சபையில் தோன்றுவார்களென்றும், புண்ணியங்களை நாடி நடக்கவேண்டுமென்றும் கற்பிக்கிறார்.

1. மேலும் கடைசி நாட்களில் ஆபத்தான காலங்கள் அடர்ந்து வருமென்று அறிந்துகொள்வீராக. (1. தீமோ 4-1; 2. இரா. 3-3.)

2. எப்படியெனில் சுய நேசரும், பேராசையுள்ளவர்களும், கர்வமுள்ளவர்களும், அகங்காரிகளும், தேவதூஷணரும், பெற்றோருக்கு அமையாதவர்களும், நன்றிகெட்டவர்களும், பாதகரும்,

3. பற்றுதலற்றவர்களும், சமாதானமில்லாதவர்களும், அவதூறு சொல்லுகிறவர்களும், இச்சையை அடக்காதவர்களும்,

4. சதிகாரரும், மூர்க்கரும், இறுமாப்புள்ளவர்களும், தெய்வத்தைவிட்டுச் சுகபோகத்தை அபேட்சிக்கிறவர்களும்,

5. பக்தியின்வேஷம்பூண்டு, அதின் சாரத்தைக் கைவிடுகிறவர்களுமாகிய மனுஷர் தோன்றுவார்கள்.

6-7. இப்படிப்பட்டவர்களே வீடுகளில் நுழைந்து, பாவச்சுமை சுமந்து பற்பல இச்சைகளால் இழுபட்டு, எப்போதும் கற்றாலும், ஒருபோதும் சத்தியத்தின் அறிவை அடையமாட்டாத ஸ்திரீகளை அடிமைகளாக்கிக்கொள்ளுகிறவர்கள்.

8. யாந்நேயனும், மாம்பிரேயனும், மோயீசனை எதிர்த்ததுபோல, இவர்களும் சத்தியத்தை எதிர்த்து நிற்கிறார்கள். இவர்கள் அழுகின மனதையுடையவர்கள்; சத்தியத்தினின்று தவறிக் கெட்டவர்கள். (யாத. 7-11.)

9. ஆகிலும் இவர்கள் மிஞ்சிப்போகமாட்டார்கள். அவர்களுடைய மதிகேடு எல்லாருக்கும் வெளியானது போல, இவர்களுடைய மதிகேடும் வெளியாகும்.

10. நீரோ, என் போதகத்தையும், நடபடிக்கைகளையும், என் நோக்கத்தையும், விசுவாசத்தையும், நீடிய சாந்தத்தையும், நட்பையும், பொறுமையையும்,

11. அந்தியோக்கியா, இக்கோனியா, லீஸ்திரா என்னும் இடங்களில் எனக்கு நேரிட்ட துன்ப துரிதங்களையும், பாடுகளையும் நன்றாய் அறிந்திருக்கிறீர். எவ்வளவோ துன்ப துரிதங்களைப்பட்டு அநுபவித்தேன்! இவைகள் எல்லாவற்றிலுமினின்று கர்த்தர் என்னை இரட்சித்தார்.

12. அப்படியே யேசுக்கிறீஸ்துநாதருக்குள் பக்தியாய் நடக்க விரும்புகிற யாவரும் துன்ப துரிதப்படுவார்கள்.

8. யாந்நேயனும் மாம்பிரேயனும் யாரெனில், பரவோனிராஜாமுன்பாக மோயீசன் தேவபலத்தால் பற்பல அற்புதங்களைச்செய்து, தேவப்பிரஜைகளை எஜிப்து தேசத்தினின்று புறப்பட விடை கேட்டபோது, அவருக்கு எதிரிடையாய் வந்த மாயவித்தைக்காரராம்.

13. துஷ்ட மனிதர்களும், மயக்கிக் கெடுக்கிறவர்களும், அதிகமதிகமாய்க் கெட்டுத் தாங்களும் தவறி, மற்றவர்களையும் தவறப்பண்ணுவார்கள்.

14. நீரோவெனில் கற்றுக்கொண்டதிலும், உமக்கு ஒப்பிக்கப்பட்டதிலும் நிலைக்கொள்ளுவீராக. ஏனெனில் இவைகளை நீர் யாரிடத்தில் கற்றுக்கொண்டீரென்று அறிந்திருக்கிறீர்.

15. கிறீஸ்து யேசுநாதரைப் பற்றும் விசுவாசத்தினாலே உமக்கு இரட்சணியத்தின் அறிவைப் பயக்கும் வேதாகமங்களை உமது சிறுப்பமுதல் கற்றறிந்திருக்கிறீர்.

16-17. சர்வேசுரனுடைய மனுஷன் எவ்வித நற்கிரியையையுஞ் செய்வதற்குத் தகுந்த உத்தமனாவதற்குத் தேவ ஏவலால் அருளப்பட்டவேதாகமங்கள் போதிப்பதற்கும், கண்டிப்பதற்கும், திருத்துவதற்கும், நீதி நெறியில் நடத்துவதற்கும் பிரயோஜனமுள்ளது. (2. இரா. 1-20.)

## 4-ம். அதிகாரம்.

*கள்ளப்போதகர்கள் தோன்றுவார்கள் என்பதினால் ஜாக்கிரதையோடும் சுறுசுறுப்போடும் தேவ ஊழியத்தை நிறைவேற்றும்படி தீமோத்தேயுவைத் தூண்டி, தமக்கு மரணங்கிட்டியிருக்கிறபடியால் தம்மிடத்தில் சீக்கிரம் வரவேண்டுமென்று பிரார்த்தித்து, பற்பலசெய்திகளையும் சில வந்தனங்களையும் சொல்லி முடிக்கிறார்.*

1. சர்வேசுரன் முன்பாகவும், ஜீவியர்களையும் மரித்தவர்களையும் நடுத்தீர்க்கப்போகிறவராகிய யேசுக்கிறீஸ்துநாதர் முன்பாகவும் அவருடைய ஆகமனத்தையும் அரசாட்சியையுங் குறித்து உமக்குச் சாட்சியாகக் கற்பிக்கிறதாவது:

2. நீர் தேவவாக்கியத்தைப் பிரசங்கம்பண்ணக்கடவீர். சமயம் வாய்த்தாலும் வாய்க்காவிட்டாலும் அதில் ஊன்றி நிற்பீராக. எவ்விதப்பொறுமையோடும், உபதேசத்தோடும், கண்டித்து, மன்றாடி, கடிந்துகொள்வீராக.

3. ஏனெனில் மனிதர்கள் குணமான உபதேசத்தைச் சகிக்கமாட்டாமல், காதறிப்புள்ளவர்களாய், சுய இச்சைகளுக்கு இசைவான போதகர்களைத் தங்களுடன் சேர்த்துக்கொண்டு,

4. சத்தியத்துக்குச் செவிகொடாமல் விலகி, கட்டுக்கதைகளைப் பின்பற்றுகிற காலங்கள் வரும்.

5. நீரோ விழிப்பாயிருந்து, எல்லா விதத்திலும் பிரயாசப்பட்டு, சுவிசேஷகனுக்குரிய தொழிலைச் செய்து, உம்முடைய ஊழியத்தை நிறைவேற்றுவீராக: மன அமைதியுள்ளவராயிரும்.

6. நானோ, இதோ பலியாகப்போகிறேன். என் தேகக்கட்டு அவிழும் காலம் கிட்டியிருக்கிறது.

7. நல்ல யுத்தம் செய்தேன். என் அயனத்தை முடித்தேன். விசுவாசத்தைக் காத்தேன்.

8. கடைசியாய் நீதியின் கிரீடம் எனக்காக வைக்கப்பட்டிருக்கிறது. இதை நீதியுள்ள நடுவராகிய கர்த்தர் அந்த மகா நாளில் எனக்குக் கொடுப்பார். எனக்கு மாத்திரமல்ல, அவருடைய வருகையை ஆசிக்கிற சகலருக்கும் அவர் அதைக் கொடுப்பார். நீர் தாமதமில்லாமல், சீக்கிரமாய் என்னிடத்தில் வந்து சேரும்.

9. ஏனெனில் தெமாஸ் இப்பிரபஞ்சத்தின்மேல் ஆசைவைத்து, என்னை விட்டுவிட்டுத் தெசலோனிக்கே பட்டணத்துக்குப் போய்விட்டான்.

---

13. இதினால் திருச்சபை நீளித்திருக்கும் வரைக்கும் உபத்திரவங்களும், பதிதத்தனங்களும் இருக்குமென்று தெரியவருகிறது.

10. கிரோஸ்சென்ஸ் என்பவன் கலாத்தியா நாட்டுக்கும் தீத்து தல்மாசியா நாட்டுக்கும் போய்விட்டார்கள்.

11. லூக்காஸ் மாத்திரம் என்னோடே இருக்கிறான். மாற்குவை உம்முடனே கூட்டிக்கொண்டுவாரும்; ஏனெனில் அவன் தேவ ஊழியத்தில் எனக்கும் பிரயோசனமாயிருக்கிறான். (கோலோ. 4-14.)

12. தீக்கிக்கனை நான் எபேசுக்கு அனுப்பியிருக்கிறேன்.

13. துரோவாப் பட்டணத்திலிருக்கிற கார்ப்பு என்பவன் வசத்தில் நான் வைத்துவந்த போர்வையையும், புத்தகங்களையும் நீர் வரும்போது எடுத்துக் கொண்டுவாரும்.

14. கன்னானாகிய அலேக்சாந்தர் எனக்கு வெகு தீங்குசெய்தான். அவனுடைய செய்கைக்குத் தக்கது ஆண்டவர் அவனுக்குக் கூலிகொடுப்பார்.

15. நீர் அவனைவிட்டு விலகும். ஏனெனில் அவன் எனது வார்த்தைகளுக்கு மிகவும் எதிர்த்து நின்றான்.

16. நான் முதல்விசை பிரதிவாதம் சொல்ல நிற்கையில், ஒருவரும் எனக்கு உதவியாயிராமல், யாவரும் என்னைக் கைவிட்டு விலகிப்போனார்கள். அதை (ஆண்டவர்) அவர்கள்மேல் சாட்டாதிருப்பாராக.

17. ஆண்டவர் எனக்குத் துணையாய் நின்று, நான் பிரசங்கத்தை நிறைவேற்றவும், புறஜாதிகளும் கேட்கவும் வேண்டிய பெலனை எனக்குத் தந்தருளினார். சிங்கத்தின் வாயினின்று விடுதலையாக்கப்பட்டேன்.

18. சகல தீவினைகளிலுமின்று ஆண்டவர் என்னை இரட்சித்தார். அவரே தம்முடைய பரம இராச்சியத்தில் என்னை க்ஷேமமாய்ச் சேர்த்தருளுவார். அவருக்கே அநவரதகாலங்களிலும் மகிமை உண்டாகக்கடவது. ஆமென்.

19. பிரிஸ்காளுக்கும், அக்கில்லாவுக்கும், ஒநேசிப்போருடைய வீட்டாருக்கும் மங்களஞ்சொல்லும். (அப். 18-2.)

20. எராஸ்தன் கொரிந்து பட்டணத்தில் இருந்துவிட்டான். துரேப்பிமு என்பவனை மிலேத்துப் பட்டணத்தில் வியாதியாக விட்டுவந்தேன்.

21. தாமதமின்றி மாரிகாலத்துக்கு முன்னே வந்துசேரும். யூபுலும், புதென்சும், லீனும், கிலவுதியாளும் மற்ற சகோதரர் யாவரும் உமக்கு மங்களஞ் சொல்லுகிறார்கள்.

22. ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதர் உம்முடைய ஆத்துமத்தோடு கூட இருப்பாராக. ஆமென்.

14. இதில் அப்போஸ்தலர் தன் எதிராளியின்மேல் பழிவாங்கும் ஆசையோடு சொல்லுகிறதில்லை. ஆனால் திருச்சபைக்கு விரோதமாயிருக்கிறவர்களுக்கு வரப்போகிற ஆக்கினையை முன் அறிவிக்கிறார்.

17. இங்கே சொல்லப்பட்ட சிங்கம் மிகவும் கொடுங்கோலனான நேரோவென்னும் உரோமாபுரி இராயன் என்று சிலர் நினைக்கிறார்கள்.

21. இங்கே சொல்லப்பட்ட லீனு என்பவர்தாம் அர்ச். இராயப்பருக்குப் பிறகு அர்ச். பாப்புப்பட்டத்துக்கு வந்தவர் என்றறிக.



# பாயிரம்.

---

அர்ச். சின்னப்பர் கிரேத்தா என்கிற தீவிலே சுவிசேஷத்தைப் பிரசங்கித்த பிறகு தாம் அதிலே ஸ்தாபித்த திருச்சபைக்குத் தம்முடைய சீஷனாகிய தீத்து என்பவரை மேற்றிராணியாராக ஏற்படுத்திவைத்தார். அவர் அந்தப் பட்டத்தில் அநுசரிக்கவேண்டிய பிரதான காரியங்களை அவருக்குத் தெரிவிக்கிறதற்குக் கர்த்தர் அவதாரம் 61-ம் ஆண்டில் மக்கேதோனியாவிலிருந்து இந்த நிருபத்தை எழுதினார். இதிலுள்ள பொருளைப் பார்த்தால், அவர் தீமோத்தேயு என்பவருக்கு எழுதிய இரு நிருபங்களின் சுருக்கம்போலிருக்கிறது.

---



# அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர் தீத்துவுக்கு எழுதிய நிருபம்.

## முதல் அதிகாரம்.

*குருப்பட்டம் பெறுகிறவர்கள் எப்படிப்பட்டவர்களாயிருக்கவேண்டுமென்றும், எவ்வித குற்றவாளிகளைக் கண்டிப்பாய் நடத்தவேண்டுமென்றும் காட்டுகிறார்.*

1,2. சர்வேசுரனுடைய ஊழியனும், அவரால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களுக்கு விசுவாசத்தைப் பிரசங்கித்து, தெய்வபக்திக்கு வழிகாட்டி, நித்திய ஜீவியத்தைப் பயக்குகிற சத்தியத்தை அவர்களுக்கு அறியப்பண்ணும்படி யேசுக்கிறீஸ்துவின் அப்போஸ்தலனுமாகிய சின்னப்பன் (தீத்துவுக்கு எழுதுவது.)

3. பொய் உரையாத தெய்வம் உலகாதிமுதல் நமக்கு நித்திய ஜீவியத்தை வாக்குத்தத்தம் பண்ணி, நமது இரட்சகராகிய சர்வேசுரனுடைய கட்டளையால் எனக்கு ஒப்புவிக்கப்பட்ட பிரசங்கமூலமாய்த் தக்க காலத்தில் தமது வார்த்தையை (நமக்கு) வெளியாக்கினார்.

4. இவ்விதமாய் நமக்குப் பொதுவான விசுவாசத்தில் எனக்குப் பிள்ளையான தீத்துவே (உமக்குப்) பிதாவாகிய சர்வேசுரனாலும், நம்முடைய இரட்சகராகிய யேசுக்கிறீஸ்துவினாலும் இஷ்டப்பிரசாதமும், சமாதானமும் உண்டாவதாக.

5. குறைவாயிருப்பவைகளை நீர் சீர்திருத்தவும், நான் உமக்குக் கொடுத்த கட்டளைப்படியே பட்டணங்கள்தோறும் குருக்களை ஏற்படுத்தவும் வேண்டுமென்பதை உத்தேசித்தே உம்மை நான் கிரேத்தா தீவில் விட்டுவந்தேன். (அப். 14-22.)

6. ஆகையால் ஒருவன் குற்றமற்றவனும், ஒரேதாரப் பூமானும், துர்மார்க்கரென்றும் அடங்காதவர்களென்றும் பேரெடுக்காத விசுவாசிகளாகிய மக்களை உடையவனுமாயிருந்தால் (அவனைத் தெரிந்துகொள்ளலாம்). (1. தீமோ. 3-2.)

---

5. **குருப்பிரசாதிகள்:**—மூல பாஷையில் மூப்பர் குருவானவர்கள் என்று அர்த்தங்கொள்ளும். இதினால் தீத்து என்பவர் திருச்சபையில் அங்கங்கே மேற்றிராணிமார்களையும் குருக்களையும் இன்னம் மற்ற அதிகார உத்தியோகஸ்தரையும் ஸ்தாபித்தாரென்று தெரியவருகிறது.

7. ஏனெனில், மேற்றிராணியாரான வர் சர்வேசுரனுடைய காரியஸ்தருக்கு யோக்கியமானபடி குற்றமற்றவரும், ஆங்காரமில்லாதவரும், கோபமில்லாத வரும், மதுபானப் பிரியமில்லாதவரும், அடியாதவரும், இழிவானஆதாயத்தை இச்சியாதவரும், (1. கொ. 4-1.)

8. பிறரை உபசரிக்கிறவரும், அன்புள்ளவரும், மன அமைதியுள்ளவரும், நீதியுள்ளவரும், பரிசுத்தரும், இச்சையடக்கமுள்ளவரும்,

9. குணமான உபதேசத்தைக்கொண்டு புத்திசொல்லவும், எதிர்த்துப்பேசுகிறவர்களை மறுத்து அடக்கவும்வல்லவராயிருக்கும்படி தாம் கற்பிக்கப்பட்ட விசுவாச வாக்கியத்தை ஸ்திரமாய்ப் பற்றிக்கொண்டவருமாய் இருக்கவேண்டும்.

10. ஏனெனில் அநேகர், விசேஷமாய் விருத்தசேதனத்தைச் சேர்ந்தவர்கள் அடங்காதவர்களும், வீண்பேச்சுக்காரரும், புத்தியை மயக்குகிறவர்களுமாய் இருக்கிறார்கள்.

11. இவர்கள் போதகத்தை மறுத்து அடக்கவேண்டும். ஏனெனில் இவர்கள் ஈன ஆதாயத்தை முன்னிட்டு, தகாதவைகளைப் போதித்து, குடும்பங்கள் முழுவதையும் அடியோடே பேர்க்கிறார்கள்.

12. கிரேத்தா தீவார் ஓயாப் பொய்யர், துஷ்டமிருகங்கள், சோம்பேறி வயிற்றாளிகள் என்று அவர்களில் ஒருவனாகிய அவர்கள் சொந்தத் தீர்க்கதரிசியே சொல்லியிருக்கிறான்.

13. இந்தச் சாட்சியம் உண்மையாகவே இருக்கின்றது. இதினிமித்தமாக அவர்கள் விசுவாசத்திலே குணமுள்ளவர்களாயிருக்கவும்,

14. யூதர்களுடைய கட்டுக்கதைகளையும், சத்தியத்தை விட்டு விலகின மனுஷர்களுடைய கற்பனைகளையும் கவனியாதிருக்கவும், நீர் அவர்களைக் கண்டிப்பாய்க் கடிந்துகொள்ளும்.

15. சுத்தருக்கு எல்லாஞ் சுத்தம்; அசுத்தருக்கும், அவிசுவாசிகளுக்குமோ ஒன்றும் சுத்தமில்லை. அவர்களுடைய புத்தியும், மனச்சாட்சியும் கறைபிடித்திருக்கின்றது. (உரோ. 14-20.)

16. அப்படிப்பட்டவர்கள் சர்வேசுரனை அறிவோமென்று வெளிப்படச் சொன்னாலும், கிரியைகளால் அவரை மறுதலிக்கிறார்கள். ஏனெனில் அவர்கள் அருவருப்புக்குரியவர்களும், அவிசுவாசிகளும், எவ்வித நற்கிரியைகளுக்கும் தள்ளுபடியானவர்களுமாய் இருக்கிறார்கள்.

12. இதில் சொல்லப்பட்டவன் எப்பிமேனிதெஸ் என்ற அஞ்ஞானப் புலவன்.

13. யூதர்கள் அநேகங் கட்டுக்கதைகளையும், வீணான ஆசாரங்களையும் மோயீசனுடைய பிரமாணத்தோடு சேர்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்களில் ஞானஸ்நானம் பெற்றவர்கள் ஊருக்கூர் புதுச் சபைகளிலே நுழைந்து, மோயீசன் பிரமாணத்தையும், ஆகாத கட்டுக்கதைகளான ஆசாரங்களையும், புதுக்கிறீஸ்துவர்கள் அநுசரிக்கவேண்டுமென்று போதித்துக்கொண்டு வருவார்கள். அப்படிப்பட்ட கள்ளப்போதகர்களை அர்ச். சின்னப்பர் ஏறக்குறைய தமது எல்லா நிருபங்களிலுங் கண்டித்துக்கொண்டு வருகிறார்.

15. கலியாணம், மாம்ச உபயோகம், முதலியவைகள் பாவமென்று கள்ளப்போதகர்கள் சொன்னதால், இதை உண்மையென்று நினைத்து யாராவது செய்வார்களானால் அப்படிப்பட்டவர்களுடைய மனச்சாட்சியைப்பற்றி அது அவர்களுக்குப் பாவமாயிருக்கும். ஆனால் சத்தியத்தை அறிந்து தெளிவான மனச்சாட்சியோடு நடக்கிறவர்களுக்கு இவைகள் யாதொரு தீங்கும் செய்யாதென்பதைப்பற்றி சுத்தமுள்ளவர்களுக்கு எல்லாம் சுத்தமென்கிறார்.

## 2-ம். அதிகாரம்.

*அந்தந்த அந்தஸ்திலே உள்ளவர்களுக்குச் சொல்லத்தக்க புத்திமதிகளைக் காண்பிக்கிறார்.*

1. நீரோ, குணமான உபதேசத்துக் கேற்றவைகளைப் பேசும்.

2. வயதுசென்றவர்கள் மன அடக்கமுள்ளவர்களும், கற்புடையவர்களும், விவேகமுடையவர்களும், விசுவாசத்திலும், அன்பிலும், பொறுமையிலும் குணமுடையவர்களுமாய் இருக்கும்படி புத்திசொல்லும்.

3. அப்படியே வயதுசென்ற ஸ்திரீகள் பரிசுத்தமான மேனை மரியாதையுள்ளவர்களும், அவதூறு பேசாதவர்களும், மதுபானத்துக்கு அடிமைப்படாதவர்களும், நற்புத்திசொல்லுகிறவர்களுமாயிருந்து,

4. மங்கையருக்கு விவேகத்தைப் படிப்பிக்கவும், இவர்கள் தங்கள் புருஷர்மேல் அன்புவைத்து, பிள்ளைகளைச் சிநேகிக்கவும்,

5. தேவ வாக்கியம் தூஷணிக்கப்படாதபடி, இவர்கள் ஜாக்கிரதையுள்ளவர்களும், கற்புள்ளவர்களும், இச்சையடக்கமுள்ளவர்களும், தங்கள் வீட்டை நன்றாய் விசாரிக்கிறவர்களும், சாதுள்ளவர்களும், தங்கள் புருஷருக்குப் பணிந்து நடக்கிறவர்களுமாய் இருக்கும்படி இவர்களைப் படிப்பிக்கவும் வேண்டுமென்று அவர்களுக்குக் கற்பியும்.

6. அப்படியே வாலிபருக்கும் அவர்கள் மனஅடக்கமுள்ளவர்களாய் இருக்கும்படி புத்திசொல்லும்.

7. சகல காரியத்திலும் நற்கிரியைகளுக்கு உம்மையே மாதிரியாகக் காண்பிக்கவேண்டும். போதகத்திலும், பழுதற்ற நடத்தையிலும், கண்ணியத்திலும் (மாதிரியாயிரும்).

8. எதிரியாயிருக்கிறவன் பொல்லாங்கு சொல்வதற்கு இடமில்லாமல், வெட்கிப்போகும்படிக்கு நீர் குறைவாரதும், பழுதற்றதுமான உபதேசத்தைப் போதியும்.

9. அடிமைகள் தங்கள் எஜமான்களுக்குக் கீழ்ப்படிந்திருக்கவும், எல்லாக் காரியங்களிலும் அவர்களுக்குப் பிரியப்படவும், அவர்களுக்கு எதிர்த்துப் பேசாமலும், (எபே. 6-5.)

10. திருடாமலும், சகலத்திலும் தங்களைப் பூரண பிரமாணிக்கமுள்ளவர்களாய் காண்பிக்கவும், இவ்விதமாய் அவர்கள் நமது இரட்சகராகிய சர்வேசுரனுடைய உபதேசத்தை எவ்விதத்திலும் அலங்கரிக்கும்படி புத்திசொல்லும்.

11. ஏனெனில் நமது இரட்சகராகிய சர்வேசுரனுடைய வரப்பிரசாதம் சகல மனிதருக்கும் வெளியாகி,

12. நாம் அவபக்தியையும், லௌகிக இச்சைகளையும் வெறுத்துவிட்டு, இவ்வுலகத்தில் மன அமைதியோடும், நீதியோடும், பக்தியோடும் நடக்கவும்,

13. நமது நம்பிக்கைக்கு விஷயமாகிய ஆனந்த பாக்கியத்துக்கும், உந்நத கடவுளும், நமது இரட்சகருமாகிய யேசுக்கிறீஸ்துவின் மகிமைப்பிரதாப ஆகமனத்துக்கும் எதிர்பார்த்துக்கொண்டிருக்கவும் நமக்குப் படிப்பிக்கிறது.

14. இவரோ நம்மைச் சகல அக்கிரமங்களிலுநின்று இரட்சித்து, நம்மைச் சுத்தமாக்கி, தமக்கு உகந்தவர்களும், நற்கிரியைகளில் வைராக்கியருமான ஜனமாக்கிக்கொள்ளும்படி தம்மைத் தாமே நமக்காகக் கையளித்தார்.

15. சர்வ அதிகாரத்தோடும்நீர் இவைகளைப்போதித்து, புத்திசொல்லிக் கண்டித்து வருவீராக. உம்மை எவனும் புறக்கணியாதிருப்பானாக.

## 3-ம். அதிகாரம்.

போதிக்கத்தக்கவைகளையும், தகாதவைகளையும் தீத்துவுக்கு வெளியாக்கி, வைராக்கியங்கொண்ட வேதப்புரட்டரை விட்டு விலகக் கற்பித்து, அவர் தம்மிடத்தில்வர வேண்டிய காலத்தையும் இடத்தையும் குறித்துத் தெரிவித்து நிருபத்தைமுடிக்கிறார்.

1. துரைத்தன முள்ளவர்களுக்கும், அதிகாரமுள்ளவர்களுக்கும் அவர்கள் பணிந்து நடக்கவும், அவர்கள் சொல்லுக்குக் கீழ்ப்படியவும், எவ்வித நற்கிரியைகளையுஞ் செய்வதற்கு ஆயத்தமாயிருக்கவும்,

2. ஒருவனையும் தூஷணியாமலும், வழக்காடாமலும், அமைதியுள்ளவர்களும், எல்லாமனிதர் மட்டிலும் சாந்தகுணத்தைக் காண்பிக்கிறவர்களுமாயிருக்கும்படி அவர்களை எச்சரிப்பீராக.

3. நாமும் ஒருகாலத்தில் புத்தியீனரும், அவிசுவாசிகளும், வழிதப்பினவர்களும், பற்பல இச்சைகளுக்கும், இன்பங்களுக்கும் அடிமைப்பட்டவர்களும், வஞ்சனை காய்மகாரத்தில் நடந்தவர்களும், பகைக்குரியவர்களும், ஒருவரையொருவர் பகைக்கிறவர்களுமாய் இருந்தோம்.

4. ஆனால் நம்முடைய இரட்சகராகிய சர்வேசுரனுடைய கிருபாகடாட்சமும், மனுஷ அன்பும் தோன்றினபோது,

5. நாம் செய்த நீதிக்கிரியைகளைப் பற்றியல்லவே, தம்முடைய இரக்கத்தின்படியே, இஸ்பிரீத்து சாந்துவினால், நம்மை மறு ஜெனனமாக்கி, புதுப்பிக்கிற ஸ்நானத்தினாலே, நம்மை இரட்சித்து, (2. தீமோ.1-9.)

6. அந்த இஸ்பிரீத்துவை நம்முடை இரட்சகராகிய யேசுக்கிறீஸ்துநாதர் மூலமாய் நமதுமேல் ஏராளமாய்ப்பொழிந்து,

7. நமக்குள்ள நம்பிக்கைக்குத்தக்கபடி, தம்முடைய இஷ்டப்பிரசாதத்தினால் நாம் நீதிமான்களாக்கப்பட்டு, நித்திய ஜீவியத்துக்குச் சுதந்தரவாளிகளாகும்படி செய்தார்.

8. இது சத்திய வாக்கு: சர்வேசுரனை விசுவசிக்கிறவர்கள் நற்கிரியைகளில் கதித்தோங்கும்படி கவனிக்கத்தக்கதாக நீர் இவைகளைப்பற்றி ஸ்திரமாய்ப் போதிக்கவேண்டியது. இவைகள் மனுஷருக்கு நன்மையும் பிரயோஜனமுமானது.

9. ஆனால் புத்தியீனமான தர்க்கங்களையும், வம்சவரலாறுகளையும், வாக்குவாதங்களையும், வேதப்பிரமாணத்துக் கடுத்த சடுத்தங்களையும் விலக்குவீராக. ஏனெனில் இவைகள் பிரயோஜனமற்ற வியர்த்த காரியங்கள்.

10. பதிதனாய் இருக்கிறவனை ஒரு முறை கண்டித்த பிறகு, அவனை விட்டு விலகும்.

11. அப்படிப்பட்டவன் நிலை தவறி, தன் சொந்தப் புத்தியால் அவலதீர்வையடைந்த பாவியானென் என்று அறிந்து கொள்ளும்.

12. நான் அர்த்தேமாவையாவது, தீக்கிக்கனையாவது உம்மிடத்தில் அனுப்பும்போது நீர் தாமதமின்றி நிக்காப்போலியில் என்னிடம் வந்து சேரும். அவ்விடத்தில் மழைகாலத்துக்குத் தங்கியிருக்கத் தீர்மானித்திருக்கிறேன்.

13. நீதி சாஸ்திரியாகிய சேனாவுக்கும், அப்போலோவுக்கும் யாதொரு குறைவும் இராதபடி ஜாக்கிரதையாய் விசாரித்து அவர்களை முன்னனுப்புவீராக.

14. நம்முடைய சபையார் பயனற்றவர்களாய் இராமல் அவசியமான சமையங்களில் வேண்டிய தர்மக் கிரியைகளில் கதித்தோங்கக் கற்றுக்கொள்ளுவார்களாக.

15. என்னுடனே இருக்கிற யாவரும் உமக்கு மங்களஞ் சொல்லுகிறார்கள். விசுவாசத்தில் எங்களைச் சிநேகிக்கிறவர்களுக்கு மங்களஞ் சொல்லும். தேவ இஷ்டப்பிரசாதம் உங்கள் எல்லாரோடும் இருப்பதாக. ஆமென்.



# பாயிரம்.

விரிஜியா நாட்டின் பட்டணமாகிய பொலோசா என்னும் நகரத்திலிருந்த பிலமோன் என்பவர் நல்ல கிறீஸ்துவனும் ஓர் பிரபுவுமாயிருந்தார். அவரிடத்தில் அடிமையும் அஞ்ஞானியுமாயிருந்த ஒநேசிமு என்பவன் சில பொருட்களைத் திருடிக்கொண்டு உரோமாபுரிக்கு ஓடிப்போயிருக்கையில், அங்கே முதல்விசை சிறையில் அடைபட்டிருந்த அர்ச். சின்னப்பர் அவனுக்குப் புத்தியும் ஞான உபதேசமுஞ் சொல்லி ஞானஸ்நானங் கொடுத்து கர்த்தர் அவதாரம் 62-ம் வருஷத்தில் அவனை இந்த நிருபத்தோடே தன் எஜமானிடத்தில் அனுப்பினார். அந்த எஜமான் அவனை ஏற்றுக்கொள்ளும்படியாக அவனுக்கு வெகு திறமையோடு நியாயங்களைச் சொல்லிக் கேட்டுக்கொள்ளுகிறார். இதில் ஞான உபதேசத்துக்கடுத்த பொருள் ஒன்றுமில்லாதபோதிலும், பிறசிநேகத்துக்குரிய உத்தம மாதிரி அடங்கியிருக்கிறது. இந்த ஒநேசிமு அதுமுதற்கொண்டு நல்ல கிறீஸ்துவனாய் நடந்ததுந்தவிர எபேசு நகரத்தில் தீமோத்தேயுவுக்குப்பிறகு மேற்றிராணியாராகி, உரோமாபுரியில் திராஜா என்கிற இராயன் நாளிலே வேதசாட்சியானார்.



# அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர்

## பிலமோனுக்கு எழுதிய

# நிருபம்.

பிலமோனுடைய விசுவாசத்தையும் பிறசிநேகத்தையும் புகழ்ந்து அவரிடமிருந்து ஓடிப்போன அடிமையை ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறார்.

1\. யேசுக்கிறீஸ்துநாதரைப்பற்றி விலங்கில் கிடக்கிறவனாகிய சின்னப்பனும், சகோதரனாகிய திமோத்தேயும், எங்கள் சிநேகிதனும் உடன்வேலையாளுமாகிய பிலமோனுக்கும்,

2\. எங்களுக்கு மிகவும் பிரிய சகோதரியாகிய அப்பியாளுக்கும், எங்கள் உடன் சேவகனாகிய அர்க்கிப்புக்கும் உம்முடைய வீட்டிலிருக்கிற சபையாருக்கும் எழுதுவதாவது :

3\. நம்முடைய பிதாவாகிய சர்வேசுரனாலும், ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவினாலும் உங்களெல்லாருக்கும் இஷ்டப்பிரசாதமும் சமாதானமும் உண்டாவதாக.

4\. என் ஜெபங்களில் உம்மை எப்போதும் நினைவுகூர்ந்து, என் தேவனுக்கு நன்றியறிந்த ஸ்தோத்திரம் செலுத்திவருகிறேன்.

5\. கர்த்தராகிய யேசுவின்மேலும், அர்ச்சிக்கப்பட்டவர்களாகிய எல்லார் மேலும் உமக்குள்ள விசுவாசத்தையும் பரம அன்பையுங்குறித்துக் கேள்விப்பட்டிருக்கிறேன்.

6\. யேசுக்கிறீஸ்துவின் நிமித்தம் உங்களுக்குள் நடந்துவருகிற எவ்வித நற்கிரியையையும் சகலரும் ஒத்துக்கொள்ளுவதினால், உம்முடைய விசுவாசத்தின் தாராள தர்மகுணம் பிரச்சித்தமாயிருக்கின்றது.

7\. சகோதரனே, அர்ச்சிக்கப்பட்டவர்களுடைய நெஞ்சம் உம்மால் குளிர்ந்ததினால், உம்முடைய பிறசிநேகத்தைக்குறித்து நான் மிகுந்த சந்தோஷமும் ஆறுதலும் அடைந்தேன்.

---

2\. **அப்பியாள்:**—பிலமோனுடைய மனைவி. இவள் கிறீஸ்துவளாயிருந்ததால் நமது சகோதரி என்று அவளை அப்போஸ்தலர் இங்கே அழைக்கிறார். அர்க்கிப்பு பிலமோனுடைய மகன்.

6\. விசுவாசத்தால் ஏவப்பட்டு நீர் செய்கிற நற்கிரியைகள் மறைந்திராமல், யேசுநாதரைக்குறித்து நீர் செய்கிற இவ்வளவு காரியங்களையும் எல்லாரும் கண்டு, ஆண்டவனைத் தோத்தரிப்பதற்கு ஏதுவாயிருக்கிறதென்பது கருத்து.

8. ஆகையால் நீர் செய்யவேண்டியதைச் செய்யும்படி உமக்குக் கட்டளையிடுவதற்குக் கிறீஸ்துயேசுவுக்குள் எனக்குத் தைரியம் உண்டாயிருந்தாலும்,

9. (கட்டளையிடாமல்) விருத்தாப்பியனும், இப்போது யேசுக்கிறீஸ்துவைப்பற்றி விலங்கிடப்பட்டிருக்கிறவனுமாகிய சின்னப்பனாகிய என்னைப்போல நீரும் விருத்தாப்பியனாய் இருக்கிறதினாலே, பரமஅன்பை முன்னிட்டு உம்மைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

10. நான் விலங்கில் பெற்ற என் மகனாகிய ஓநேசிமூவுக்காக உம்மை மன்றாடுகிறேன்.

11. அவன் முன்னே உமக்கு உபயோகமற்றவனாயிருந்தாலும், இப்போது உமக்கும் எனக்கும் உபயோகமுள்ளவன்.

12. அவனை உம்மிடத்தில் திரும்ப அனுப்புகிறேன். அவனை நீர் என் உள்ளம்போல் ஏற்றுக்கொள்ளும்.

13. சுவிசேஷத்தின் நிமித்தம் விலங்கில் கிடக்கிற எனக்கு ஊழியஞ்செய்யும்படி உமக்குப் பதிலாக அவனை நிறுத்திவைக்க மனதாயிருந்தேன்.

14. ஆகிலும் நீர் செய்யும் நன்மை கட்டாயமில்லாமல், மனப்பூரணமாய்ச் செய்யப்பட்டதாகத் தோன்றும்படி உம்முடைய சம்மதமில்லாமல் எனக்கு ஒன்றுஞ் செய்ய மனதில்லை.

15. அவனை என்நாளும் உம்முடனே வைத்துக்கொள்ளும்படி அவன் கொஞ்சக்காலம் உம்மைவிட்டுப் பிரிந்துபோனானாக்கும்.

16. இப்போது அவனை அடிமையாக அல்ல, அடிமைக்குப் பதில் அருமையான சகோதரனாகவும், விசேஷமாய் எனக்கு மிகவும் பிரியமுள்ளவனாகவும் நீர் ஏற்றுக்கொள்ள வேண்டியது. எனக்கு அவன் அவ்வளவு பிரியமுள்ளவனாயிருக்க, உமக்குச் சரீர முறையிலும், ஆண்டவருக்குள்ளும் எவ்வளவோ பிரியமுள்ளவனாய் இருக்கவேண்டியது!

17. ஆதலால் நீர் என்னை உம்முடைய கூட்டாளி என்று எண்ணினால், என்னைப்போல் அவனை ஏற்றுக்கொள்ளும்.

18. அவன் உமக்கு யாதொரு பொல்லாங்கு செய்திருந்தால் அல்லது உமக்குக் கடனாளியாயிருந்தால், அதை என்பேரில் சாட்டிவிடும்.

19. சின்னப்பனாகிய நான் இதை என் கைப்பட எழுதினேன்; நானே அதை உத்தரிப்பேன். ஆனாலும் நீரோ எனக்குக் கடனாளியாயிருக்கிறதைப் பற்றி நான் பேசமாட்டேன்.

20. ஆம், சகோதரனே, ஆண்டவரிடத்தில் இந்தச் சந்தோஷம் எனக்கு உண்டாகச் செய்யும்; ஆண்டவரிடத்தில் என் உள்ளங் குளிரப்பண்ணுவீராக.

10. பிலமோனிடத்தில் அடிமையாயிருந்த ஒநேசிமூ சிலபொருட்களைத் திருடிக்கொண்டு, ரோமாபுரிக்கு ஓடிப்போயிருக்கையிலே, அங்கே முதல்விசை சிறையில் அடைபட்டிருந்த அர்ச். சின்னப்பர் அவனைக்கண்டு அவனுக்குப் புத்திசொல்லி உபதேசித்து, ஞானஸ்நானங் கொடுத்தார். பின்னும் கர்த்தரவதாரம் 62-ம். வருஷத்தில் இந்த நிருபத்தோடு தன் எஜமானிடத்தில் அவனை அனுப்பினார்.

16. **உமக்குச் சரீரமுறையில்:**—அதாவது உமக்கு அவன் அடிமையாயிருக்கிறதினிமித்தமும், **ஆண்டவருக்குள்:** அதாவது உம்மைப்போல் அவன் கிறீஸ்துவனாயிருப்பதினிமித்தமும், அவன் உமக்கு எவ்வளவோ பிரியமுள்ளவனாயிருக்கவேண்டும் என்பது இதற்கு அர்த்தமாம்.

21. நான் சொல்லுகிறதிலும் நீர் அதிகமாய்ச் செய்வீர் என்று அறிந்து, உம்முடைய கீழ்ப்படிதலின்பேரில் நம்பிக்கைவைத்து இதை உமக்கு எழுதினேன்.

22. மேலும் நான் இருக்கும்படிக்கு எனக்காக ஓர் விடுதியை ஆயத்தம் பண்ணும். உங்கள் வேண்டுதலினாலே நான் உங்களுக்குக் கொடுக்கப்படுவேன் என்று நம்பியிருக்கிறேன்.

23. யேசுக்கிறீஸ்துவின் நிமித்தம் என்னோடேகூட காவலிலிருக்கிற எப்பாப்பிரா உமக்கு மங்களஞ் சொல்லுகிறான்.

24. என் உதவியாட்களாகிய மாற்கும், அரிஸ்தார்க்கும், தேமாவும், லூக்காவும் அப்படியே மங்களஞ் சொல்லுகிறார்கள்.

25. நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய இஷ்டப்பிரசாதம் உங்கள் ஆத்துமத்தோடேகூட இருப்பதாக.

ஆமென்.



# பாயிரம்.

அர்ச். சின்னப்பர் உரோமாபுரியில் முதல்விசை சிறையிலிருக்கும்போது கர்த்தர் அவதாரமான ஏறக்குறைய 60-ம் வருஷத்தில் இந்த நிருபத்தை யூதேயா தேசத்திலுள்ள புதுக்கிறீஸ்துவர்களான யூதர்களுக்கு எழுதினார். அவர்கள் மோயீசன் பிரமாணத்தை முழுதும் விட்டுவிட்டுச் சுவிசேஷத்தில் அதிகம் அதிகமாய் உறுதிப்படும்படிக்கு மோயீசனிலும் பழைய ஏற்பாட்டின் ஆசாரியரிலும் யேசுக்கிறீஸ்துநாதர் மிகவும் மேன்மைப்பட்டவர் என்றும், பழைய ஏற்பாட்டின் பலிகளிலும் புதிய ஏற்பாட்டின் பலியானது மிகவும் உத்தமமானது என்றும், அநேக நியாயங்களினால் காட்டினபிறகு, நல் நடக்கைக்குரிய பற்பல புத்திமதிகளைச்சொல்லி நிருபத்தை முடிக்கிறார். இந்த நிருபம் அர்ச். சின்னப்பர் எழுதின நிருபங்களுக்குள்ளே வரிசை முறையில் கடைசியானதாகிலும், போதக விஷயத்தில் முந்தினதென்று சொல்லத்தகும்.



# அப்போஸ்தலரான அர்ச். சின்னப்பர் எபிரேயருக்கு எழுதிய நிருபம்.

## முதல் அதிகாரம்.

*சம்மனசுக்களிலும் யேசுக்கிறீஸ்துநாதர் மிகவும் மேன்மைப்பட்டவர் என்று பற்பல வேத அத்தாட்சிகளால் ஒப்பிக்கிறார்.*

1. பூர்வீகத்தில் பலமுறைகளிலும், பலவிதமாகவும் தீர்க்கதரிசிகளைக்கொண்டு நம்முடைய பிதாக்களோடு பேசின சர்வேசுரன்,

2. கடைசியாய் இந்நாட்களில் தம்முடைய சுதனைக்கொண்டு நம்மோடு பேசியிருக்கிறார். இவரைக்கொண்டே சர்வலோகங்களையும் சிர்ஷ்டித்து, அவைகளெல்லாவற்றிற்கும் இவரைச் சுதந்தரவாளியாக்கினார்.

3. இவர் அவருடைய மகிமையின் பிரதாபமும், அவருடைய தற்பொருளின் சொரூபமுமாய் இருந்து, எல்லாவற்றையும் தம்முடைய வல்லப வார்த்தையால் தாங்கி, நம்மைப் பாவங்களினின்று சுத்திகரித்து, உன்னத ஸ்தலங்களில் அவருடைய மகத்துவ வலது பாரிசத்தில் உட்கார்ந்திருக்கிறார். (ஞான. 7-26.)

---

1. **எபிரேயர்:**—யூதேயாதேசத்தில் குடியிருந்து, கிறீஸ்துவேதத்தில் உட்பட்ட யூதஜனங்கள்.

2. **கடைசியாய்:**—வரிசைக்கிரமத்தில் கடைசியான காலமென்றும், இதற்குமேல் இனிச் சர்வேசுரன் வேறு வேதத்தை அறிவிக்கமாட்டாராகையால் இது கடைசியான வெளிப்படுத்துதல் என்றும் கருத்தாம்.

3. **மகிமையின் பிரதாபம்:**—முகக்கண்ணாடியில் ஒருவனுடைய சாயல் முழுவதும் பிரதிவிம்பமாய்த் தோன்றுவதுபோல, பிதாவாகிய சர்வேசுரனுடைய சாயல் முழுவதும் சுதனிடத்தில் தோன்றுகிறது.

**அவருடைய தற்பொருளின் சொரூபம்:**—சுதனாகிய சர்வேசுரன் தேவபிதாவின் சுயசாயலும், அவருடைய தற்பொருளின் சொரூபமுமாயிருக்கிறார். முத்திரைக்கோலிலுள்ள சகல விஷயங்களும் முத்திரையில் பதிவதுபோல, பிதாவினிடத்திலுள்ள சுபாவமும் இலக்ஷணங்களும் சுதனிடத்தில் பதிந்திருக்கின்றன.

4. இவர் தேவதூதர்களைப் பார்க்கிலும் எவ்வளவு விசேஷித்த நாமத்தைச் சுதந்தரித்துக்கொண்டாரோ, அவ்வளவுக்கு அதிகமாய் அவர்களைப்பார்க்கிலும் மேன்மையுள்ளவராய் இருக்கிறார்.

5. ஏனெனில்: நீரே என்னுடைய குமாரன்; இன்று நான் உம்மை ஜெனிப்பித்தேன் என்றும், மீளவும்: நான் அவருக்குப் பிதாவாய் இருப்பேன்; அவர் எனக்குக்குமாரனாய் இருப்பாரென்றும் அவர் எக்காலத்திலாவது தூதர்களில் யாருக்காகிலுஞ் சொன்னதுண்டோ? (சங். 2-7; 2. இரா. 7-14.)

6. அன்றியும் தாம் முதல் ஜெனிப்பித்தவரைப் பூமண்டலத்தில் பிரவேசிக்கச் செய்தபோது: தேவதூதர்கள் அனைவரும் அவரை நமஸ்கரிப்பார்களாக என்றார். (சங். 96-7.)

7. தேவதூதர்களைக் குறித்தோவெனில்: அவர் தம்முடைய தூதர்களைக் காற்றுகளாகவும், தமது ஊழியரை அக்கினிச்சுவாலையாகவும் செய்கிறாரென்று சொல்லுகிறார். (சங். 103-4.)

8. ஆனால் தமது சுதனை நோக்கி: தேவனே, உம்முடைய பத்திராசனம் என்றென்றைக்கும் உள்ளது. உம்முடைய அரசின் செங்கோல் நீதிச் செங்கோலாயிருக்கின்றது. (சங். 44-7.)

9. நீர் நீதியை விரும்பி, அக்கிரமத்தை வெறுக்கிறீர்; ஆதலால் தேவனே, உம்முடைய தேவன் உம்முடைய தோழருக்குமேலாக உம்மை ஆனந்த தைலத்தினால் அபிஷேகம் பண்ணினார் என்றும்,

10. ஆண்டவரே, ஆதியில் நீரே பூமிக்கு அஸ்திவாரமிட்டீர்; பரமண்டலங்களும் உம்முடைய கை வேலையாமே. (சங். 101-26.)

11. அவைகள் அழிந்துபோம். நீரோ நிலைநிற்பீர். அவைகளெல்லாம் வஸ்திரம்போல் பழசாய்ப்போம்.

12. ஆடையை மாற்றுவதுபோல் நீர் அவைகளை மாற்றுவீர்; அவைகளும் மாறுபட்டுப்போம். நீரோ ஒரே தன்மையாய் இருக்கிறவர். உம்முடைய வருஷங்கள் குறைவுபடாது என்றும் சொல்லப்பட்டிருக்கின்றது.

13. அன்றியும் நான் உம்முடைய சத்துருக்களை உமக்குப் பாதப்படியாக போடுமட்டும் நீர் என்னுடைய வலது பாரிசத்தில் உட்கார்ந்திரும் என்று எக்காலத்திலாவது அவர் சம்மனசுக்களில் யாருக்காகிலும் சொன்னதுண்டோ? (சங். 109-1; 1. கொ. 15-25.)

14. இவர்களெல்லாரும் பணிவிடை செய்யும் அரூபிகளாயிருந்து, இரட்சணிய சுதந்தரத்தை அடைகிறவர்களுக்கு ஊழியஞ் செய்யும்படி அனுப்பப்பட்டவர்களல்லவா?

## 2-ம் அதிகாரம்.

சம்மனசுக்களாலே கொடுக்கப்பட்ட பழைய ஏற்பாட்டின் கற்பனைகளைப் பார்க்கிலும் தேவ சுதனாலே கொடுக்கப்பட்ட கற்பனைகளை எவ்வளவோ அதிக பயபக்தியோடே அனுசரிக்க வேண்டியதென்று காண்பிக்கிறார்.

1. ஆதலால் நாம் கேட்டவைகளைச் சிந்தவிடாமல், அவைகளை மிகுந்த எச்சரிக்கையோடு காத்து வரவேண்டும்.

14. இந்த அதிகாரத்திலும் இந்த நிருபத்தின் மற்ற அதிகாரங்களிலும் சொல்லப்பட்ட தீர்க்கதரிசனங்கள் யேசுநாதரைக்குறித்து நேராய்ப் பேசாதேபோனாலும் அவருக்கு முன்னோடிகளாகவும் அவருடைய முன்சாயலாகவும் இருந்த சாலோமோன், தாவீது, இஸ்ராயேலைப்பற்றி நேராய்ப்பேசி அவர்கள் மூலமாய் யேசுநாதரை மெய்யாகவே குறிக்கின்றன என்று அறியவும்.

2. ஏனெனில் தேவதூதர்களைக்கொண்டு கொடுக்கப்பட்ட கற்பனை ஸ்திரப்படுத்தப்பட்டு, அதற்கு விரோதமான எந்த மீறுதலுக்கும், கீழ்ப்படியாமைக்கும் நீதியின்படி செல்லவேண்டிய பிரதிபலன் கிடைத்திருக்குமாகில்,

3. இவ்வளவு பெரிதான இரட்சணியத்தை நாம் அசட்டைபண்ணுவோமானால், நாம் எப்படித் தப்பித்துக்கொள்ளுவோம்? இந்த இரட்சணிய காரியம் முந்த முந்த ஆண்டவரால் அறிவிக்கப்பட்டு, பின்பு அவரிடத்தில் கேட்டறிந்தவர்களால் நமக்குள் உறுதியாக்கப்பட்டது.

4. இதற்குச் சர்வேசுரனும் புதுமைகளாலும், அற்புதங்களாலும், பற்பல வல்லப கிரியைகளாலும், தமது சித்தத்தின்படியே பகிர்ந்தளித்த இஸ்பிரீத்துசாந்துவின் வரங்களாலும் சாட்சிகொடுத்திருக்கிறார். (மாற். 16-20.)

5. இனி வரப்போகிற உலகத்தைக் குறித்துப் பேசுகிறோமே. அதைச் சர்வேசுரன் தம்முடைய தூதர்களுக்குக் கீழ்ப்படுத்தவில்லை.

6. இன்னும் (வேதாகமத்தில்) ஓரிடத்தில்: மனிதனை நீர் நினைவுகூருகிறதற்கு அவன் என்ன? மனுமகனை நீர் சந்திக்கிறதற்கும் அவன் என்ன? (சங். 8-5.)

7. அவனைத் தேவதூதரிலும் கொஞ்சம் சிறியவனாக்கி, மகிமையினாலும் பெருமையினாலும் அவனுக்கு முடிசூட்டி, உமது கைவேலைப்பாடுகளின் மேல் அவனை அதிகாரியாக்கி,

8. எல்லாவற்றையும் அவனுடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தினீர் என்று ஒருவர் சாட்சி சொல்லியிருக்கிறார். சகலத்தையும் அவனுக்குக் கீழ்ப்படுத்தினார் என்றால், அவனுக்குக் கீழ்ப்படாத பொருள் ஒன்றுமில்லையே. ஆகிலும் இன்னும் அவனுக்குச் சகலமும் கீழ்ப்பட்டிருக்கக் காணோமே. (மத். 28-18; 1. கொ. 15-26.)

9. சர்வேசுரனுடைய கிருபையினாலே எல்லாருக்காகவும் மரணத்தைச் சுவைபார்க்கும்படி தேவதூதர்களிலும் சற்றுச் சிறியவராக்கப்பட்ட அந்த யேசுநாதர் தம்முடைய மரண உபத்திரவத்தின் நிமித்தம் மகிமையினாலும் பெருமையினாலும் முடிசூட்டப்பட்டவரென்று காண்கிறோம். (பிலி. 2-8.)

10. ஏனெனில் தமக்காகவும், தம்மாலேயும் சகலத்தையும் படைத்தவர் அநேகம் புத்திரர்களை மகிமைக்கு அழைத்திருந்ததினாலே, அவர்களுடைய இரட்சணியத்துக்குக் காரணமானவரைப் பாடுகளால் பூரணமாக்குவது அவருக்குத் தகுதியாயிருந்தது.

5. இதிலே சொல்லப்படுகிறதும் இனி வருவதுமான உலகமானது இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் நீளித்திருக்கவேண்டிய சத்திய திருச்சபையாமே. அதற்குத் தேவதூதர்களையல்ல, தம்முடைய சுதனாகிய யேசுநாதரைத்தாமே தலைவராகவும், அரசனாகவும், மகா ஆசாரியனாகவும் பிதாவாகிய சர்வேசுரன் ஏற்படுத்தினாரென்று அர்த்தமாம்.

8. பரலோகத்திலும் பூலோகத்திலும் வாழ்ந்திருக்கவேண்டிய சத்திய திருச்சபைக்கு இராஜாவாகப் பிதாவாகிய சர்வேசுரனாலே ஏற்படுத்தப்பட்ட சுதனாகிய சர்வேசுரன் மனுஷாவதாரம் எடுக்கும்போதும், விசேஷமாய்ப் பாடுபட்டு மரிக்கும்போதும், சம்மனசுக்களிலும் தாழ்த்தப்பட்டாரென்பது மெய்யே. ஆனால் பிதாவாகிய சர்வேசுரன் சகலத்தையும் தம்முடைய திருக்குமாரனாகிய யேசுநாதருக்குக் கீழ்ப்படுத்தினாரென்பது குன்றாத சத்தியமாமே. ஆகிலும் இன்னம் அவருக்குக் கீழடங்காத அநேகம் பாவிகளும், அஞ்ஞானிகளும், அவிசுவாசிகளும் இவ்வுலகத்தில் இருக்கிறார்கள். அப்படியே பொதுத்தீர்வைநாள் மட்டும் அநேகர் இருப்பார்கள். பொதுத்தீர்வைக்குப் பிறகோவென்றால் அவருக்குக் கீழடங்காதது ஒன்றுமில்லையென்று காண்போம்.

11. ஏனெனில் பரிசுத்தமாக்குகிறவரும், பரிசுத்தமாக்கப்படுகிறவர்களுமாகிய எல்லாரும் ஒருவரிடத்திலிருந்தே வருகிறார்கள். இது காரணத்தின் நிமித்தம் அவர்களைச் சகோதரர் என்று அழைக்க அவர் கூச்சப்படாமல்:

12. உம்முடைய நாமத்தை என் சகோதரருக்குப் பிரசங்கிப்பேன்; சபை நடுவில் உம்மை ஸ்துதிப்பேன் என்றும், (சங். 21-23.)

13. மறுபடியும்: நான் அவர்மேல் என் நம்பிக்கையை வைப்பேன் என்றும்; மீளவும், இதோ நானும் எனக்குச் சர்வேசுரன் கொடுத்த என்பிள்ளைகளும் என்றும் வசனித்திருக்கிறார். (சங். 17-3; இசை. 8-18.)

14. ஆகையால், பிள்ளைகள் மாம்சமும், இரத்தமும் உடையவர்களாயிருப்பதால், அவரும் அவர்களைப்போலவே மாம்சத்துக்கும் இரத்தத்துக்கும் பங்காளியானார். ஏனெனில் மரண அதிபதியாகிய பசாசைத் தமது மரணத்தால் நிர்மூலமாக்கி, (ஓசே. 13-14; 1 கொ. 15-54.)

15. மரணபயத்தினாலே ஜீவியகாலமெல்லாம் அடிமைத்தனத்துக்கு உள்ளாயிருந்தவர்களை மீட்டிரட்சிக்கச் சித்தமானார்.

16. ஏனென்றால் அவர் தேவதூதர்களுக்கு உதவியாக ஒருபோதும் கைகொடாமல், அபிரகாமின் சந்ததியாருக்கு (உதவியாகக்) கைகொடுத்துத் தூக்கினார்.

17. ஆதலால் அவர் இரக்கமுள்ளவரும், சர்வேசுரன்மட்டில் பிரமாணிக்கமான குருப்பிரசாதியுமாயிருந்து, ஜனங்களுடைய பாவங்களைப் பரிகரிக்கும்படிக்குச் சகலத்திலும் தம்முடைய சகோதரர்களுக்கு ஒப்பாகவேண்டியதாயிருந்தது.

18. ஏனெனில் அவரே பாடுபட்டுச் சோதிக்கப் பட்டிருக்கிறபடியினாலே, சோதிக்கப்படுகிறவர்களுக்கு அவர் உதவிசெய்ய வல்லவராயிருக்கிறார்.

## 3-ம் அதிகாரம்.

*மோயீசனைப் பார்க்கிலும் கிறீஸ்துநாதர் அதிக மேன்மையுள்ளவராய் இருக்கிறபடியால், நாம் விசுவாசத்தினாலும் கீழ்ப்படிதலினாலும் அவரோடு ஒன்றித்திருக்கவேண்டுமென்று கற்பிக்கிறார்.*

1. இதின் நிமித்தமாகவே, பரலோக அழைப்புக்குப் பங்காளிகளாயிருக்கிற அர்ச்சிக்கப்பட்ட சகோதரரே, நாம் அறிக்கைபண்ணும் வேத விசுவாசத்துக்கு அப்போஸ்தலரும், அதிகுருப்பிரசாதியுமாகிய யேசுநாதரைக் கவனித்துப்பாருங்கள்.

---

12. எல்லாத்துக்குங் காரணமாகி, எல்லாத்தையும் தம்முடைய தோத்திரத்துக்காகச் செய்கிற சர்வேசுரன் தம்முடைய திருச்சுதனைக்கொண்டு சுவிகாரப்புத்திரர் அநேகரைத் தம்முடைய மோட்ச மகிமைக்கு அழைக்க அநவரதகாலமாய்த் தீர்மானித்திருக்கையிலே, அவர்களுடைய இரட்சணியத்தின் காரணமானவரைப் பாடுகளைக்கொண்டும், மரணத்தைக்கொண்டும், மகிமையில் உயர்த்த நியாயமாய்த் தீர்மானித்தார். ஏனெனில் திருச்சபையைப் பரிசுத்தமாக்கிற குருவும், அவராலே பரிசுத்தமாக்கப்படுகிறவர்களும் ஒரே சுவாபமுள்ளவர்களாயிருக்கத்தகும். ஆதலால் சுதனாகிய சர்வேசுரன் நம்முடைய அதிகுருப்பிரசாதியாயிருக்கச் சித்தமானபோது நம்மைப்போலே பாடுகளுக்கும் கஸ்தி துன்பங்களுக்கும் மரணத்துக்கும் ஏதுவான சுபாவத்தைத் தரித்துக்கொள்ளுவது தகுதியாயிருந்தது.

14-15-16. யேசுநாதர்சுவாமி சம்மனசுக்களை இரட்சிக்க வராமல், மனிதர்களை இரட்சிக்க வந்ததால் மனுஷ சுபாவமெடுத்து, பாவமில்லாத சகலத்திலும் மனுஷரோடு சமானமாயிருப்பது தகுதியாயிருந்ததென்றுகாட்டுகிறார்.

2. சர்வேசுரனுடைய வீட்டிலெங்கும் மோயீசன் பிரமாணிக்கமாய் இருந்ததுபோல, இவரும் தம்மை ஏற்படுத்தினவர்மட்டில் பிரமாணிக்கராய் இருக்கிறுர். (எண். 12-7.)

3. வீட்டைக்கட்டினவன் வீட்டைவிட எவ்வளவு மேன்மையுள்ளவனாய் இருக்கிறுனே, அப்படியே இவரும் மோயீசனைவிட அதிக மகிமைக்குரியவராக மதிக்கப்பட்டிருக்கிறுர்.

4. எப்படியெனில் எந்தவீடும் ஒருவனுல் கட்டப்படும்; அப்படியே எல்லாவற்றையும் உண்டாக்கினவர் சர்வேசுரன்.

5. சொல்லவேண்டியிருந்தவைகளுக்குச் சாட்சியாக மோயீசன் ஓர் பணிவிடைக்காரனைப்போல் சர்வேசுரனுடைய வீட்டில் எங்கும் பிரமாணிக்கமுள்ளவராய் இருந்தார்.

6. கிறீஸ்துநாதரோ பிள்ளை தன் வீட்டில் இருக்கிறதுபோல் இருக்கிறுர். நாம் நம்பிக்கையையும், நம்பிக்கையிலிருந்து பிறக்கும் மகிமையையும் முடிவுபரியந்தம் உறுதியாகக் காப்போமாகில், நாமே அவருடைய வீடாய் இருப்போம்.

7. ஆதலால் இஸ்பிரீத்துசாந்துவானவர் சொல்லுகிறபடியே: இன்று அவருடைய சத்தத்தைக் கேட்பீர்களானுல், (சங். 94-8; எபி. 4-7.)

8. வனுந்தரத்திலே எதிரிடை என்ற ஸ்தலத்தில் என்னைச் சோதித்த நாளிலே நடந்ததுபோல் உங்கள் நெஞ்சங்களைக் கல்லாக்கிக்கொள்ளாதேயுங்கள்.

9. அவ்விடத்தில் உங்கள் பிதாக்கள் நாற்பது வருஷமாய் என்னைச் சோதித்து, என்னைப் பரீட்சைபண்ணி, என் கிரியைகளைக் கண்டார்கள்.

10. ஆகையால் நான் இந்தச் சந்ததியை அரோசித்து: இவர்கள் எப்போதும் வழுவிப்போகிற இருதயமுள்ளவர்கள்; இவர்கள் என்னுடைய வழிகளை அறியாதவர்கள்.

11. ஆகையால் இவர்களோ என் இளைப்பாற்றியில் பிரவேசிப்பவர்கள் என்று என் கோபத்தில் ஆணையிட்டேன் என்றுர்.

12. சகோதரரே, ஜீவந்தரரான கடவுளைவிட்டு விலகிப்போவதற்கு ஏதுவான விசுவாசமற்ற கெட்ட இருதயம் உங்களுக்குள் எவனிடத்திலாவது இராதபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்.

13. ஆனுல் உங்களில் ஒருவனுகிலும் பாவ மயக்கத்தால் கல்நெஞ்சனுகாதபடிக்கு இன்று என்னப்பட்ட காலம் இருக்குமளவும் ஒருவருக்கு ஒருவர் அநுதினமும் புத்திசொல்லிவாருங்கள்.

14. ஏனெனில் கிறீஸ்துநாதரோடு நாம் பங்குள்ளவர்களானேும். ஆயினும் அதற்கு நாம் ஆதியில் அவருக்குள் துவக்கின சீவியத்தை முடிவுமட்டும் உறுதியாய்க் காப்பாற்றினுலல்லோசரி.

15. ஏனெனில் இன்று அவர் சத்தத்தைக் கேட்பீர்களாகில், அந்த எதிரிடை ஸ்தலத்தில் சம்பவித்ததுபோல் உங்கள் இருதயங்களைக் கடினமாக்காதேயுங்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

16. ஏனெனில் கேட்டவர்களில் சிலர் கோபமூட்டினுர்கள். ஆகிலும் எஜிப்துத் தேசத்தினின்று மோயீசன் வழியாய்ப் புறப்பட்டுவந்த எல்லாருமல்ல.

8. **எதிரிடை என்ற ஸ்தலத்தில்:**—வனுந்தரத்தில் இஸ்ராயேல் பிரஜைகள் சர்வேசுரனுக்குக் கீழ்ப்படியாமல் அவருக்குக் கோபமூட்டின இடத்திற்கு இவ்வித பேர் இடப்பட்டது.

17. நாற்பது வருஷகாலமாய் அவர் யாரை அரோசித்து வந்தார்? பாவஞ் செய்தவர்களையல்லவா? வனாந்தரத்தில் விழுந்துகிடந்ததும் அந்தப் பாவிகளுடைய பிணங்களல்லோ. (எண். 14-37.)

18. தமது இளைப்பாற்றியில் பிரவேசிக்கமாட்டார்கள் என்று அந்த அவிசுவாசிகளைப்பற்றியல்லாதே வேறே யாரைப்பற்றி அவர் ஆணையிட்டார்?

19. ஆகையால் தங்கள் அவிசுவாசத்தினாலேதான் அவர்கள் அதில் பிரவேசிக்கமாட்டாமற்போனார்கள் என்று நாம் காண்கிறோம்.

## 4-ம். அதிகாரம்.

*விசுவாசத்தினாலே நித்தியஇளைப்பாற்றியை அடையக்கடவோம் என்றும் நம்முடைய பரம குருவாகிய யேசுக்கிறீஸ்துநாதர் தேவ சமுகத்திற்சேரும் வழியை நமக்குத் திறந்தார் என்றும் காட்டுகிறார்.*

1. ஆனபடியினாலே அவருடைய இளைப்பாற்றியில் பிரவேசிப்பதற்கு நமக்கு வாக்குத்தத்தஞ் செய்யப்பட்டிருக்க, அதைவிட்டு உங்களில் ஒருவனும் தவறிப்போனவனென்று எண்ணப்படாதபடிக்குப் பயந்திருக்கக்கடவோம்.

2. ஏனெனில் இந்த வாக்குத்தத்தம் அவர்களுக்கு அறிவிக்கப்பட்டதெப்படியோ, அப்படியே நமக்கும் அறிவிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் அவர்கள் கேட்ட வாக்கியத்தை விசுவாசத்தோடுங்கூடக் கேட்காததினாலே, அந்த வாக்கியம் அவர்களுக்குப் பிரயோசனப்படவில்லை.

3. இவர்கள் என் இளைப்பாற்றியில் பிரவேசிப்பவர்களோ என்று என் கோபத்தில் ஆணையிட்டேன் என்று அவர் சொல்லியிருக்கிறதினாலே, விசுவாசித்திருக்கிற நாம் அந்த இளைப்பாற்றியில் பிரவேசிப்போம். (சர்வேசுரன்) உலகத்தை உண்டாக்கித் தமது வேலையைமுடித்தபின்பு கொண்ட இளைப்பாற்றியே அந்த இளைப்பாற்றி. (சங். 94-11.)

4. ஏனெனில் சர்வேசுரன் தம்முடைய வேலைகளையெல்லாம் முடித்து, ஏழாம் நாளிலே இளைப்பாறினார் என்று ஏழாம் நாளைக்குறித்து (வேதாகமத்தில்) ஓரிடத்தில் சொல்லப்பட்டிருக்கிறதல்லோ? (ஆதி. 2-2.)

5. பின்னும் அதிலேயே: இவர்கள் என் இளைப்பாற்றிக்குள் பிரவேசிப்பார்களோ என்றும் சொல்லியிருக்கிறதே?

19. விசுவாசமானது சகல நன்மைகளுக்கும் அஸ்திவாரமும், அவிசுவாசமானது சகல தின்மைகளுக்குங் காரணமுமாய் இருக்கிறதென்று பற்பல திருஷ்டாந்தங்களினால் இந்த அதிகாரத்தில் காண்பிக்கிறார். விசுவாசத்தினால் நாம் சர்வேசுரனுடைய வீடும் வாசஸ்தலமுமாய் இருக்கிறோம்; கிறீஸ்துநாதரோடு ஒரே சரீரமாயிருக்கிறோம். அவருடைய இஷ்டப்பிரசாதத்துக்கும் இஸ்பிரீத்துசாந்துவுக்கும் அவருடைய சகல நன்மைகளுக்கும் பங்காளிகளுமாயிருக்கிறோம். அப்படிப்பட்ட நன்மைகளை எல்லாம் அவிசுவாசத்தினால் இழந்து போகாதபடிக்கு இடைவிடாமல் எச்சரிக்கையாயிருக்கக்கடவோம். ஜீவியரும் நம்முடைய ஜீவியத்துக்குக் காரணமுமாயிருக்கிற சர்வேசுரனை அவிசுவாசத்தினால் இவ்வுலகத்தில் விட்டு அகன்றுபோவோமாகில், மறுலோகத்தில் சர்வேசுரன் தம்முடைய சமுகத்தினின்று நம்மை அகற்றித்தள்ளுவார். வனாந்தரத்தில் இஸ்ராயேல் பிரஜைகளுக்குச் சம்பவித்தது இதற்கு அத்தாட்சியாயிருக்கிறது. சர்வேசுரன் அவர்களுக்கு வாக்குத்தத்தம் செய்திருந்த இளைப்பாற்றியின் பூமியில் அவர்கள் பிரவேசிக்காமல் தங்கள் அவிசுவாசத்தினாலே வனாந்தரத்திலே சிதறுண்டு செத்தார்களென்று காண்பிக்கிறார்.

6. ஆதலால் அந்த இளைப்பாற்றிக்குள் சிலர் இனிப் பிரவேசிக்கவேண்டியிருக்கிறதினாலும், முந்தி அந்த வாக்குத்தத்தத்தைப் பெற்றவர்கள் தங்கள் அவிசுவாசத்தினாலே அதில் பிரவேசியாததினாலும்,

7. வெகு காலத்துக்குப்பிறகு தாவீது என்பவருடைய வாக்கினால் ஒரு விசேஷித்த நாளை இன்று என்று எல்லையாகக் குறிக்கிறார். ஏனெனில் இன்று அவருடைய வாக்கைக் கேட்பீர்களாகில், உங்கள் இருதயங்களைக் கடினப்படுத்தாதிருங்கள் என்று ஏற்கனவே எழுதப்பட்டது. (இதில். 3-7.)

8. யோசுவா என்பவர் இளைப்பாற்றியை அவர்களுக்குப் பெறுவித்திருந்தால், பிந்தி வரும் வேறொரு நாளைக்குறித்து அவர் ஒருபோதும் சொல்லியிருக்கமாட்டாரே.

9. ஆகையால் தேவ பிரஜைகளுக்கு இளைப்பாற்றியின் காலம் இனி வருகிறதாயிருக்கிறது.

10. ஏனெனில் அவருடைய இளைப்பாற்றிக்குள் பிரவேசித்தவன் சர்வேசுரன் தம்முடைய கிரியைகளை முடித்து இளைப்பாறினதுபோல், தானும் தன் கிரியைகளை முடித்து இளைப்பாறுவான். (ஆதி. 2-2.)

11. ஆனதைப்பற்றி (நம்மில்) எவனும் அந்த அவிசுவாசிகளுடைய மாதிரியாகாதபடி, அந்த இளைப்பாற்றிக்குள் பிரவேசிக்கத் தீவரிப்போமாக.

12. ஏனெனில் தேவ வாக்கியமானது உயிருள்ளதும், சக்தியுள்ளதும், இருபுறமும் கருக்குள்ள எந்த வாளினும் அதிகக் கூரானதுமாயிருந்து, ஞானாத்துமாவையும், ஜீவாத்துமாவையும் மூட்டுகளையும், மூளையையுங்கூட ஊடுருவிப்பிரிக்கத் தக்கதுமாய், இருதயத்தின் நினைவுகளையும், கருத்துகளையும் வகையறுக்கத் தக்கதுமாய் இருக்கின்றது.

13. அவருடைய பார்வைக்கு மறைவான சிருஷ்டி ஒன்றுமில்லை. அவருடைய கண்களுக்கு முன்பாக சகலமும் திறப்பாயும், வெட்டவெளியாயும் இருக்கின்றது. அவருக்கே நாம் கணக்குக் கொடுக்கவேண்டும். (சங். 23-16; பிற. 15-20.)

14. ஆகையால் வானமண்டலங்களை எல்லாம் ஊடுருவிப்போயிருக்கிற சர்வேசுரனுடைய சுதனாகிய யேசுநாதர் நமக்கு அதிகுருப்பிரசாதியாய் இருக்கையில் நாம் ஏற்றுக்கொண்ட விசுவாசத்தைக் கடைப்பிடிப்போமாக.

15. ஏனெனில் நமக்கு உள்ள குருப்பிரசாதியானவர் நம்முடைய பலவீனங்களில் நமக்கு இரங்கமாட்டாதவர் அல்ல. ஆனால் பாவம் நீங்கலாக மற்ற எவ்விதத்திலும் அவர் நமக்கு ஒத்தவராய்ப் பரிசோதிக்கப்பட்டவராமே.

16. ஆதலால் நாம் இரக்கம் பெறும்படிக்கும், அவசிய சமயத்துக்குக் கிருபையைக் கண்டடையும்படிக்கும் அவருடைய கிருபை சிம்மாசனத்தை நம்பிக்கையோடு அண்டிப்போவோமாக.

## 5-ம். அதிகாரம்.

*அதிகுருப்பிரசாதியுடைய குணுகுணங்களையும் உத்தியோகத்தையும் வருணித்து யேசுக்கிறீஸ்துநாதர் நம்முடைய அதிகுருப்பிரசாதியென்று காண்பிக்கிறார்.*

1. எந்தக் குருப்பிரசாதியும் மனிதர்களுக்குள்ளே தெரிந்துகொள்ளப்பட்டு, காணிக்கைகளையும் பாவங்களுக்காகப் பலிகளையும் செலுத்தும்படிக்குத் தேவாராதனைக்கடுத்த காரியங்களில் மனிதர்களுக்குச் சனுவாக ஏற்படுத்தப்படுகிறான்.

2. ஏனெனில் அவன் தானும் பலவீனஞ் சூழ்ந்தவனாயிருக்கிறபடியினாலே, அறிவீனரோடும், நெறி தவறுகிறவர்களோடும் துயரப்படுகிறவனாய் இருக்க வேண்டும்.

3. அதினிமித்தம் அவன் ஜனங்களுக்காகப் பாவப்பரிகாரப்பலி ஒப்புக்கொடுக்கவேண்டியதுபோல், தனக்காகவும் பலி ஒப்புக்கொடுக்க வேண்டியது.

4. அன்றியும் ஆரோனைப்போல் சர்வேசுரனாலே அழைக்கப்பட்டாலொழிய ஒருவனும் இந்தமகிமைக்குத் தானாய் ஏற்படுகிறதில்லை. (யாத் 28-1.)

5. அப்படியே கிறீஸ்துநாதரும் குருப்பிரசாதியாகும்படி தம்மைத்தாமே உயர்த்தவில்லை. ஆனால்: நீர் என்னுடைய குமாரன். இன்று நான் உம்மை ஜெனிப்பித்தேன் என்று அவரை நோக்கிச் சொன்னவரோ அவரை உயர்த்தினார். (சங். 2-7.)

6. அப்படியே வேறோரிடத்திலும்: நீர் மெல்க்கிசதேக்கின் முறைமையின்படியே என்றென்றைக்கும் குருப்பிரசாதியாய் இருக்கிறீர் என்று திருவுளம் பற்றுகிறார். (சங். 109-4.)

7. இவர் தம்முடைய மாம்ச ஐக்கிய நாட்களில் தம்மை மரணத்தினின்று இரட்சிக்க வல்லமையுள்ளவரை நோக்கி உரத்த சத்தத்தோடும், கண்ணீர்களோடும் விண்ணப்பங்களையும், மன்றாட்டுகளையும் ஒப்புக்கொடுத்தபோது, தம்முடைய பயபக்தியைப்பற்றிக் கேட்டருளப்பட்டார்.

8. அவ்வண்ணமே இவர் தேவசுதனாயிருந்தும், தம்முடைய பாடுகளினாலே கீழ்ப்படிதலைக் கற்றுக்கொண்டு,

6. பிதாவாகிய சர்வேசுரன் தம்முடைய திருக்குமாரனைப்பார்த்து ஆணையிட்டு: மெல்க்கிசதேக்கின் முறைமையின்படிக்கு நீர் என்றென்றைக்கும் பூசிக்கிற குருவாயிருக்கிறீர் என்று திருவுளம்பற்றினார். அந்த மெல்க்கிசதேக்கோவெனில் அப்பத்தையும் திராட்சஇரசத்தையும் பலிபூசையாக ஒப்புக்கொடுத்துக்கொண்டு வந்தார் என்று ஆதியாகமம் 14-ம்அதி. 18-ம் வசனத்தில் காண்கிறோம். ஆகையால் யேசுநாதரும் மெல்க்கிசதேக்கின் முறைமையின்படிக்குக் குருவாயிருக்கக்கொள்ள, அவரும் அப்பத்தையும் திராட்ச இரசத்தையும் பலிபூசையாக அவசியமாய்ப் பலியிடுகிறவராயிருக்கவேண்டியது. இல்லாவிட்டால் மெல்க்கிசதேக்கின் முறைமையின்படிக்குக் குருவாயிருக்கமாட்டார். அப்பமும் திராட்ச இரசமுமுள்ள அந்தப் பலிபூசையை அவர் பெரிய வியாழக்கிழமையிலே தம்முடைய சீஷர்கள் முன்பாக நிறைவேற்றினதைக் காண்கிறோம். அப்பத்தையும் திராட்ச இரசத்தையுங்கொண்டு யேசுநாதர் அன்றைக்கு நிறைவேற்றின பூசையும், மறுநாள் தாம் கபாலமலையிலே ஒப்புக்கொடுக்கப்போகிற பலிபூசையும் ஒன்றுதானென்று அவர்தாமே காட்டத் திருவுளமாகி, உங்களுக்காக ஒப்புக்கொடுக்கப்படுகிற என் சரீரம் இதுவே என்று திருவுளம்பற்றினார். அல்லாமலும் மலேக்கியாஸ் தீர்க்கதரிசியானவர் முதல் அதிகாரம் 11-ம் வசனத்தில் சொல்லுகிறபடியே சூரியன் உதிக்கிற இடந்துவக்கி அஸ்தமிக்கிற இடமட்டும் எல்லாவிடங்களிலும் சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுக்கப்படும் உத்தமமான பலிபூசையும் அதுவேயல்லாமல் வேறில்லை. யேசுநாதர் என்றென்றைக்கும் அந்தப் பூசையை நிறைவேற்ற வேண்டிய குருவாயிருக்கையிலே, யேசுநாதர் நித்திய குருவாக என்றென்றைக்கும் நிறைவேற்ற வேண்டிய பூசை இதுவேயல்லாமல் வேறில்லை. அதினிமித்தம் அவர் தம்முடைய அப்போஸ்தலர்களைப் பார்த்து: நீங்கள் இதைச் செய்யும்போதெல்லாம் என்னை நினைவுகூர்ந்து, அதாவது: என் நாமத்தினால் செய்வீர்களாக என்று கற்பித்தார் என்று அறிவோம். ஏனெனில் திருச்சபைக் குருமார்கள் அத்திவ்வியபூசையை நிறைவேற்றும்போது யேசுநாதருக்கு பதிலாளிகளாய் இருக்கிறார்களொழிய தங்கள் சுயசெய்கையாகப் பலியை ஒப்புக்கொடுப்பதில்லை. ஆனால் யேசுநாதருடைய வார்த்தையாகத்தானே: இது என் சரீரம் என்றும் இது என் இரத்தம் என்றுஞ் சொல்லிப் பலியை நிறைவேற்றுகிறார்கள். ஆதலால் உலகமெங்கும் திருச்சபைக் குருமார்களாலே ஒப்புக்கொடுக்கப்படுகிற பலிபூசைக்கு யேசுநாதர் தாமே பிரதான குருவும் பிரதான பலியிடுகிறவருமாயிருந்து மெல்க்கிசதேக்கின் முறைமையின்படிக்கு என்றென்றைக்கும் பூசித்துக்கொண்டுவருகிற குருவாயிருக்கிறார்.

9. சம்பூரணரானபின்பு, தமக்குக் கீழ்ப்பட்டிருக்கிற யாவருக்கும் நித்திய ஈடேற்றத்தின் காரணராகி,

10. மெல்கிசதேக்கின் முறைமையின்படியே அதிகுருப்பிரசாதி என்று சர்வேசுரனாலே நாமம் சூட்டப்பட்டார்.

11. இந்த மெல்கிசதேக்கைப்பற்றி நாம் விஸ்தாரமாய்ப் பேசலாம். ஆயினும் நீங்கள் கேட்கச் சக்தியற்றவர்களாகையால், அதை விளங்கப்பண்ணுகிறது கூடாத காரியம்.

12. எப்படியெனில் காலத்தைப் பார்த்தால் போதகராய் இருக்கவேண்டிய உங்களுக்குச் சர்வேசுரனுடைய வாக்கியங்களின் முதல் நூலாதாரங்களை மறுபடியும் உபதேசிக்கவேண்டியதாயிருக்கிறது. நீங்கள் பலமான போஜனத்தையல்ல, பாலையே உண்ண வேண்டியவர்களாய் இருக்கிறீர்கள்.

13. பால்குடிக்கிற எவனும், குழந்தையாயிருக்கிறபடியினாலே, நீதிமொழியை அறியக்கூடியவனல்ல.

14. பூரண வயதுள்ளவர்களுக்குப் பலமான ஆகாரம் தகும். ஏனெனில் இவர்கள் நன்மை தின்மை பகுத்தறியும்படி வழக்கத்தினால் அப்பியாசப்பட்ட புலன்களை உடையவர்கள்.

## 6-ம். அதிகாரம்.

வேதத்தை மறுதலிக்கிறதாகிய கனத்த பொல்லாப்புக்கு விலகும்படி அவர்களை எச்சரித்துப் பொறுமையோடு புண்ணியத்தில் நிலைக்கும்படி புத்திசொல்லுகிறார்.

1. ஆதலால் கிறீஸ்துநாதர் படிப்பித்த போதகத்தில் ஆரம்ப போதகங்களை விட்டு, அதிக உத்தமமானவைகளுக்கு ஏகிச்செல்வோமாக. செத்த கிரியைகளினின்று மீட்கும் தவம், சர்வேசுரன் பேரில் விசுவாசம்,

2. ஸ்நானங்களின் உபதேசங்கள், கைவைத்தல், மரித்தோரின் உத்தானம், நித்திய தீர்வை என்பவைகளாகிய அஸ்திவாரத்தைத் திரும்பவும் போடவேண்டியதில்லை.

3. சர்வேசுரனுக்குச் சித்தமானால், அப்படியே ஏகுவோம்.

4. ஏனெனில் ஒருவிசை ஞான ஒளியடைந்தும், பரம கொடையைச் சுவை பார்த்தும், இஸ்பிரீத்துசாந்துவின் வரங்களைப்பெற்றும், (மத். 12-15; எபி. 10-26; 2. இரா. 2-20)

5. கடவுளின் நல்வாக்கியத்தையும் மறுமையின் வல்லபங்களையும் ருசிபார்த்தும்,

4-5-6. ஒவ்வொரு கிறீஸ்தவனும் உணர்ந்துகொள்ளத்தக்க இரண்டு பிரதான புத்திமதிகளாவன: 1-வது. ஒருவன் ஞானஸ்நானம் பெற்றுப் பரம ஒளியினால் துலக்கப்பட்டு, வேதசத்தியங்களின் உண்மையை உணர்ந்துகொண்டு, உறுதிபூசுதலால் இஸ்பிரீத்துசாந்துவின் வரங்களையும் இஷ்டப்பிரசாதத்தையும் அடைந்து, தேவ நற்கருணை முதலான தேவத்திரவிய அனுமானங்களால் அவன் ஆத்துமம் திருப்தியாக்கப்பட்டுப் பரலோக நன்மைகளின் இன்பத்தை ருசிபார்த்தபின் வேததுரோகியாய்த் தவறி விழுந்து அவிசுவாசியாகி அந்த நன்மைகளையெல்லாம் இழந்துபோவானானால், அப்படிப்பட்டவன் மனந்திரும்புகிறதும், முன்னிழந்த பரம நன்மைகளை முற்றும் திரும்ப அடைகிறதும் மகா வருத்தமும் அருமையுமான காரியமாயிருக்கிறது.

2-வது. அவனவனுடைய ஆத்துமத்தைச் சர்வேசுரனுடைய தோட்டம் என்கலாம். அதிலே சர்வேசுரன் நல்ல விதையைப்போல் தம்முடைய வேதவாக்கியங்களை விதைத்து, அடிக்கடி நல்ல மழை வருஷிக்கிறதுபோலே தேவத்திரவிய அநுமானங்களாலும் தம்முடைய இஷ்டப்பிரசாதத்தாலும் அந்த ஆத்துமத்தைக் குளிரச் செய்து அது தமக்குப் பிரியமான புண்ணிய கனிகளைக் கொடுக்கும்படிக்கு காத்துக்கொண்டிருக்கிறார். அப்படியே

6. தவறினவர்கள் மனந்திரும்பிப் புதுப்பிக்கப்படுவது கூடாத காரியம். ஏனெனில் அவர்கள் சர்வேசுரனுடைய குமாரனை மறுபடியும் தங்களாலானமட்டும் சிலுவையில் அறைந்து அவமான கோலமாக்குகிறார்கள்.

7. ஏனெனில் அடிக்கடி தன்மேல் பெய்கிற மழையைக்குடித்து, பயிரிடுகிற குடியானவர்களுக்குத் தகுதியான பயிரை முளைப்பிக்கும் பூமியானது சர்வேசுரனால் ஆசீர்வாதம் பெறும்.

8. முள்ளையும் முடல்களையும் முளைப்பிக்கிற நிலமோ தள்ளுபடியானதாயும், சாபத்துக்குக்கிட்டினதாயுமிருக்கிறது. சுட்டெரிக்கப்படுவதே அதற்கு முடிவு.

9. மிகவும் பிரியமானவர்களே, நாங்கள் இப்படிப் பேசினாலும், உங்களிடத்தில் அதிக நன்மையானவைகளும் இரட்சணியத்துக்கு அதிக உதவியானவைகளும் உண்டென்று நம்புகிறோம்.

10. ஏனெனில் உங்களுடைய கிருத்தியங்களையும், நீங்கள் தமதுபேரால் பரிசுத்தவான்களுக்கு ஊழியஞ்செய்ததிலும், இன்னும் செய்துவருகிறதிலும் காண்பித்த அன்பையும் மறந்துபோவதற்குச் சர்வேசுரன் அநீதமுள்ளவரல்லவே.

11. ஆனதால் உங்களில் ஒவ்வொருவரும் உங்கள் நம்பிக்கை நிறைவேறும்படி இப்படியே முற்றும்முடிய ஜாக்கிரதையைக் காண்பிக்கவேண்டுமென்று ஆசிக்கிறோம்.

12. ஆகையால் நீங்கள் அசதியாயிராமல், விசுவாசத்தினாலும், பொறுமையினாலும், வாக்குத்தத்தங்களைச் சுதந்தரித்துக்கொள்பவர்களைக் கண்டுபாவிக்கக்கடவீர்கள்.

13. ஏனெனில் சர்வேசுரன் அபிராகாமுக்கு வாக்குத்தத்தம் பண்ணும்போது, ஆணையிடும்படிக்குத் தமக்கு மேல்பட்டவர் ஒருவரும் இல்லாததினால் தமதுமேல்தாமே ஆணையிட்டு,

14. சத்தியமாகவே நான் உன்னை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்து, உன்னைப்பெருகவே பெருகப்பண்ணுவேன் என்றார். (ஆதி. 22-16.)

15. அப்படியே அவரும் நீடியபொறுமையாய்க் காத்திருந்து, வாக்குத்தத்தம் பண்ணப்பட்டதைப் பெற்றுக்கொண்டார்.

16. மனிதர் தங்களுக்கு மேற்பட்டவேறொருவனைக்கொண்டு ஆணையிடுகிறார்கள். எவ்வித தர்க்கத்தையும் முடிப்பதற்கு ஆணையே நிச்சயத்துக்கு உதவியாக நின்று, எவ்வித விவாதத்தையும் முடிக்கின்றது.

நற்கனிகளைக் கொடுக்கிற பூமியைச் சர்வேசுரன் ஆசீர்வதிக்கிறதுபோல் புண்ணிய பலனுகிற நற்கிருத்தியங்களை விளைவிக்கிறவனுடைய ஆத்துமத்தைச் சுவாமி ஆசீர்வதிக்கிறார். ஆனால் அடிக்கடி பெய்த மழையைக் குடித்தும் குடியானவனுக்குப் பலன்கொடாமல் முட்பூண்டுகளைமாத்திரம் முளைப்பிக்கும் பூமியானது சபிக்கப்பட்டு அக்கினியால் தகிக்கப்படுவதுபோல், சொல்லப்பட்ட ஞான நன்மைகளையெல்லாம் கைக்கொண்ட ஆத்துமம் சர்வேசுரனுக்குப் பிரியமான சுகிர்த புண்ணியக்கனிகளைத் தராமல் பாவமாகிய முள்பூண்டுகளைமட்டுந் தருமாகில், தேவகோபத்தை அடைந்து, அதன் முடிவு நரக அக்கினிதானென்பதற்குத் தப்பாது.

6. **கூடாதகாரியம்:**— இந்தவசனங்களுக்கு இரண்டு அர்த்தமுண்டு. (1) ஞானஸ்நானம் பெற்றவர்கள் பாவத்தில்விழுந்து நாறிப்போனால், திரும்பவும் ஆத்துமசுத்திகரத்துக்கு வழியாக ஞானஸ்நானம் பெறக்கூடாதென்பது. (2) வேதத்தில் உட்பட்டவர்கள் மனதறிய அதைவிட்டு விசுவாசத்தை மறுப்பார்களானால் அவர்கள் மனந்திரும்புவது அபூர்வமான காரியமாயிருக்கிறபடியால் கூடாதகாரியமாம்.

17. அப்படியே சர்வேசுரனும் தமது வாக்குத்தத்தத்தைச் சுதந்தரித்துக் கொள்ளுகிறவர்களுக்குத் தம்முடைய ஆலோசனை அசையாதென்று அதிக நிச்சயமாய் எண்பிக்கச் சித்தமாகி, அதற்கு ஓர் ஆணையையும் கூட்டி ஸ்திரப்படுத்தினார்.

18. இவ்விதமாய் நமக்கு நியமித்திருக்கிற நம்பிக்கையைக் கைக்கொள்ளத்தக்கதாக ஓடிவந்த நமக்குக் கடவுள் பொய்சொல்லவேகூடாதென்று காட்டுகிற அசைக்கப்படாத இரண்டு விஷயங்களால் நமக்கு மிகவும் பெலமான ஆறுதலுண்டாகும்படி செய்தார்.

19. அப்படிப்பட்ட நம்பிக்கை நமது ஆத்துமத்துக்கு க்ஷேமமும் உறுதியும் திரையின் உட்பாகத்துக்குள் செல்லுகிறதுமான ஆத்தும நங்கூரமாயிருக்கின்றது.

20. அந்த உட்பாகத்துக்குள் மெல்க்கிசதேக்கின் முறைமைப்படிக்கு என்றென்றைக்கும் அதி குருப்பிரசாதியாய் ஏற்படுத்தப்பட்ட யேசுநாதர் நமக்கு முன்னோடியாகப் பிரவேசித்திருக்கிறார்.

## 7-ம். அதிகாரம்.

*மெல்க்கிசதேக்கின் முறைமைக்கு ஒத்திருக்கிற கிறீஸ்துநாதருடைய குருத்துவம் லேவியருடைய குருத்துவத்துக்கு மேற்பட்டதென்று காட்டுகிறார்.*

1. சலேமின் இராஜாவுமாய், உன்னத கடவுளின்குருப்பிரசாதியுமாய் இருந்த அந்த மெல்க்கிசதேக் என்பவர் இராஜாக்களைச் சங்கரித்துத் திரும்பிவந்த அபிரகாமுக்கு எதிர்கொண்டுபோய் அவரை ஆசீர்வதித்தார். (ஆதி. 14-18.)

2. அபிரகாமோ, இவருக்குத் தம்முடைய சகல பொருட்களிலும் தசமபாகத்தைப் பகிர்ந்தார். இவருடைய முந்தின பேருக்கு நீதி இராஜன் என்றும், சலேம் இராஜா என்கிற மற்றொரு பேருக்குச் சமாதான இராஜன் என்றும் அர்த்தமாம்.

3. இவருக்குப் பிதா, மாதா, வம்சவரலாறு இல்லை. இவர் வாழ்நாட்களின் துவக்கமும், ஜீவியகாலத்தின் முடிவும் இல்லாதவராய்த் தேவசுதனுக்கு ஒப்பனையாகி என்றென்றைக்கும் குருப்பிரசாதியாக நிலைத்திருக்கிறார்.

4. இவருக்குப் பிதாப் பிதாவாகிய அபிரகாமே தமது பொருட்களில் முதல்தரமான தசமபாகத்தைக் கொடுத்திருக்க, இவருடைய பெருமை எவ்வளவென்று ஆராய்ந்து பாருங்கள்.

5. அன்றியும் லேவியின் புத்திரரில் குருப்பட்டம் பெற்றவர்கள் அபிரகாமின் அரையினின்று வந்தவர்களாயினும், தங்கள் சகோதரராகிய ஜனங்கள் கையிலிருந்து நியாயப்பிரமாணத்தின்படி தசமபாகம் வாங்குவதற்குக் கட்டளை பெற்றிருந்தார்கள் என்பது மெய்யே. (உபா. 18-1.)

2. மெல்க்கிசதேக் என்னும் இவருடைய முந்தினபேருக்கு நீதிராஜன் என்று அர்த்தமாம். (மெல்க்கு—இராஜா ; சதேக்—நீதி.)

3. இவருக்குத் தாய் தகப்பன் இல்லை என்பதுகருத்தல்ல. ஆனால் இவருடைய தாய் தகப்பன்பேரும் வம்சத்தின்பேரும் வேதாகமத்தில் எழுதப்படவில்லையென்றும், இவருடைய முன்னோர்களும் இவருடைய பிள்ளைகளும் குருப்பட்டத்தை அடைந்தவர்கள் அல்லவென்றும் அர்த்தங்கொள்ளும். ஆகையால் குருப்பட்டத்தின்விஷயமாய்த் தகப்பன், பிள்ளைகள் இல்லாதவரென்று சொல்லியிருக்கிறது. இதிலே விசேஷமாய் இவர் யேசுநாதருடைய குருத்துவத்தின் சாயலாயிருக்கிறார்.

6. ஆகிலும் இவருடைய கோத்திரம் அவர்களுடைய கோத்திர வரிசையில் எண்ணப்படாதிருந்தாலும், இவர் அபிரகாமிடத்தில்தானே தசமபாகம் வாங்கி, வாக்குத்தத்தங்களைப் பெற்றவராகிய அவனையே ஆசீர்வதித்தார்.

7. ஆனால் சிறியவன் தனக்கு மேற்பட்டவனாலே ஆசீர்வதிக்கப்படுகிறான் என்பதற்கு ஆக்ஷேபனை இல்லையே.

8. அன்றியும் இங்கே தசமபாகம் வாங்குகிறவர்கள் மரிக்கிற மனுஷர்கள். அங்கேயோ அதை வாங்கினவர் உயிரோடிருக்கிறவர் என்று சாட்சியம் பெற்றவர்.

9. ஆகையால் தசமபாகத்தைப் பெற்ற லேவியும் அபிரகாம் மூலமாய் இவருக்குத் தசமபாகஞ் செலுத்தினான் என்று சொல்லலாமே.

10. ஏனெனில் மெல்க்கிசதேக் என்பவர் அபிரகாமுக்கு எதிர்ப்பட்டபோது, லேவி தன் பிதாவின் அரையிலிருந்தான்.

11. ஆகையால் லேவியருடைய குருத்துவ நாட்களில் ஜனங்கள் வேதப்பிரமாணத்தைப் பெற்றிருக்க, அவர்களுடைய குருத்துவத்தினால் சகல சம்பூரணமும் உண்டாவதாயிருந்தால், ஆரோனுடைய முறைமைப்படி அழைக்கப்படாமல் மெல்க்கிசதேக்கின் முறைமைப்படி அழைக்கப்பட்ட வேறொரு குருப்பிரசாதி எழும்பவேண்டுமென்பதற்கு அவசியம் என்ன?

12. அப்படிக் குருத்துவம் கைமாறினபோதே, நியாயப்பிரமாணமும் மாறவேண்டியது அவசியமாமே.

13. ஆனால் இவைகள் எவரைக்குறித்துச் சொல்லப்பட்டிருக்கிறதோ, அவர் வேறொரு கோத்திரத்தைச்சேர்ந்தவர். அந்தக் கோத்திரத்தில் எவனும் பலிபீடத்துக்கு ஊழியம்பண்ணினவனல்ல.

14. நம்முடைய ஆண்டவர் யூதாவின்கோத்திரத்தில் பிறந்தார் என்பது வெட்டவெளியாய் இருக்கின்றது. குருத்துவ விஷயமாய் அந்தக் கோத்திரத்தைப்பற்றி மோயீசன் ஒன்றுஞ் சொல்லவில்லையே. (ஆதி. 49-10.)

15. அல்லாமலும் மெல்க்கிசதேக்குக்கு ஒப்பனையாக வேறொரு குருப்பிரசாதி எழும்புவாராகில், மேற்சொல்லியது இன்னும் அதிகமாய் வெளியாகின்றது.

16. இவர் மாம்ச சம்பந்தமான கட்டளையாகிய பிரமாணத்தின்படி குருவாகாமல், அழியாத ஜீவியத்துக்குரிய வல்லமையின்படி குருப்பிரசாதியானார்.

17. ஏனெனில் நீர் மெல்க்கிசதேக்கின் முறைமைப்படி எந்நாளும் குருப்பிரசாதியாயிருக்கிறீர் என்று சத்தியமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது. (சங். 109-4.)

18. இதற்கு முந்திய நியாயப்பிரமாணம் பெலவீனமுள்ளதும், உபயோகமற்றதுமாய்ப்போனதினாலே அது தள்ளுபடியாயிற்று.

19. ஏனெனில் அந்தப் பிரமாணமானது யாதொன்றையும் உத்தமமாக்கவில்லை. ஆனால் நம்மைச் சர்வேசுரனிடத்தில் நெருங்கிப் போகச் செய்கிற மேலான நம்பிக்கைக்கு அது ஓர் வழியாயிருந்தது.

20. இவர் ஆணையின்பேரில் தான் குருப்பிரசாதியானார் என்பது எவ்வளவு பெரிய காரியம். மற்றவர்கள் ஆணையின்றிக் குருக்களானார்கள்.

21. இவரையோவெனில் ஆண்டவர்: நீர் எந்நாளும் குருவாயிருக்கிறீரென்று நான் ஆணையிடுகிறேன். அதினிமித்தம் நான் மனம் வருந்துகிறதில்லையென்று சொல்லி ஆணையின்பேரில் குருவாக்கினார். (சங். 109-4.)

22. ஆகையால் யேசுநாதர் ஆணையின்பேரில் குருப்பிரசாதியானது எவ்வளவு பெரிதோ, அவ்வளவு மேன்மையான உடன்படிக்கைக்குப் பிணையாளியானார்.

23. அன்றியும் அந்தக் குருக்கள் மரணத்தின் நிமித்தம் எப்பொழுதும் நிலைநிற்கக் கூடாதவர்களானபடியால், அநேகர் குருக்களாக ஏற்படுத்தப்பட்டார்கள்.

24. இவரோ நித்தியகாலம் நிலைத்திருப்பவரானதால் என்றென்றைக்கும் குருத்துவம் உள்ளவராயிருக்கிறார்.

25. ஆகையால் இவர் நமக்காக மனுப்பேசுவதற்கு எப்போதும் ஜீவியராயிருந்து, தமதுமூலமாய்ச் சர்வேசுரனிடத்தில் அண்டிவருகிறவர்களை என்றென்றைக்கும் இரட்சிக்க வல்லவராயிருக்கிறார்.

26. பரிசுத்தரும், மாசில்லாதவரும், அமலரும், பாவிகளினின்று பிரிக்கப்பட்டவரும், பரமண்டலங்களுக்கு மேலாக உயர்ந்தவருமாகிய இவ்வித அதிகுருப்பிரசாதி நமக்கு உண்டாயிருப்பது தகுதியாமே.

27. இவர் மற்றக் குருப்பிரசாதிகளைப்போல் முன்பு தம்முடைய சொந்தப் பாவங்களுக்காகவும் பின்பு ஜனங்களுடைய பாவங்களுக்காகவும் நாள்தோறும் பலியிடவேண்டுவதில்லை. ஓரேவிசை தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்து இதை நிறைவேற்றினார். (லேவி. 16-6.)

28. வேதப்பிரமாணமானது பலவீனமுள்ள மனிதர்களைக் குருப்பிரசாதிகளாக ஏற்படுத்துகிறது. வேதப்பிரமாணத்துக்குப் பிறகு ஆணையோடு சொல்லப்பட்ட வாக்கியமோ என்றென்றைக்கும் உத்தமராகிய சுதனையே ஏற்படுத்துகின்றது.

## 8-ம். அதிகாரம்.

கிறீஸ்துநாதருடைய குருத்துவத்தின் மேன்மையும் புதியஏற்பாட்டின் அவசியமும்.

1. மேற்சொல்லியவைகளின் சங்க்ஷேபம் ஏதெனில்: பரலோகத்திலுள்ள (தேவ) மகத்துவ ஆசனத்தின் வலதுபாரிசத்தில் உட்கார்ந்திருக்கிறவரும்,

2. பரிசுத்த ஸ்தலத்திலும், மனுஷரால்ஸ்தாபிக்கப்படாமல் ஆண்டவரால் ஸ்தாபிக்கப்பட்ட மெய்யான கூடாரத்திலும் குருத்துவ ஊழியஞ்செய்கிறவருமாகிய அதிகுருப்பிரசாதி நமக்கு உண்டு.

28. இதில் அவர் பழைய ஏற்பாட்டின் ஆசாரியர்களைப்போல் நாள்தோறும் பலியிடவேண்டியதில்லை. ஒரேவிசை தம்மைத்தாமே ஒப்புக்கொடுத்து இதை நிறைவேற்றினார் என்கிறவாக்கியம் இந்த நிருபம் 5-ம் அதி. 6-ம் வசன வியாக்கியானத்தில் காண்பித்தபடியே யேசுநாதர் அநுதினமும் சர்வேசுரனுக்குப் பலியிடுகிறவரென்கிற சத்தியத்துக்கு விரோதமென்று நினைக்கவேண்டாம். ஏனெனில், அதிலே சொல்லியிருக்கிறதுபோல் யேசுநாதர் கபாலமலையில் தம்மைப் பலியாக ஒப்புக்கொடுத்து, ஒரே ஒருவிசையாக நிறைவேற்றின இரத்தஞ்சிந்தின அந்த ஒரேபலியைத் தாம்தாமே இரத்தஞ் சிந்தாத மேரையாய்ப் பெரிய வியாழக்கிழமையே அப்பம் இரசம் இவற்றின் குணங்களுக்குள்ளே நிறைவேற்றி, அநுதினமும் அப்படி அதை நிறைவேற்றத் தம்முடைய அப்போஸ்தலர்களுக்குக் கற்பித்தார். ஆகையால் இரத்தஞ் சிந்தாத அந்தப் பலிபூசை அநுதினம் நடந்தாலும் யேசுநாதர் பலமுறை பாடுபட்டுத் தமது இரத்தம் சிந்துகிறாரென்று சொல்லக்கூடாது. அர்ச். சின்னப்பர் இதிலே சொல்லுகிறப்போலே கர்த்தர் இரத்தஞ் சிந்துகிற பூசையை ஒரே ஒருவிசைதான் நிறைவேற்றினார். இதைப்பற்றியே அர்ச். சின்னப்பர் இந்த அதிகாரம் 24-ம் வசனத்தில் என்றென்றைக்கும் குருத்துவமுள்ளவராயிருக்கிறாரென்று தெளிவாய்க் காட்டுகிறார்.

3. ஏனெனில் எந்தக் குருவும் காணிக்கைகளையும் பலிகளையும் செலுத்தும்படி நியமிக்கப்பட்டிருக்கிறார்; ஆதலால் தாம் ஒப்புக்கொடுக்கும்படியான ஒரு பொருள் இவரிடத்திலும் அவசியமாய் இருக்கவேண்டியது.

4. ஆகையால் இவர் பூமியிலே இருப்பவரானால் குருவாயிருந்திருக்கமாட்டார். ஏனெனில் வேதப்பிரமாணப்படி காணிக்கைகளை ஒப்புக்கொடுக்க வேண்டிய குருக்கள் ஏற்கனவே இருக்கிறார்களே.

5. இவர்கள் பரலோக காரியங்களின் சாயலுக்கும் நிழலுக்கும் ஊழியஞ்செய்தார்கள். அப்படியே மோயீசன் கூடாரத்தைச் செய்து முடிக்கையில்: மலையிலே உனக்குக் காண்பிக்கப்பட்ட மாதிரியின்படிக்கு நீ எல்லாவற்றையும் செய்யும்படி பார்த்துக்கொள் என்று அவருக்குச் சர்வேசுரனால் அறிவிக்கப்பட்டது. (யாத். 25-40; அப். 7-14.)

6. இப்பொழுதோ, மேன்மையான வாக்குத்தத்தங்களால் உறுதியாக்கப்பட்டிருக்கிற மேலான உடன்படிக்கைக்கு இவர் எப்படிப்பட்ட மத்தியஸ்தராயிருக்கிறாரோ, அவ்வளவுக்கு மேலான குருத்துவ ஊழியத்தை அடைந்திருக்கிறார்.

7. முதல் உடன்படிக்கை குறையற்றதானால், இரண்டாம் உடன்படிக்கைக்கு இடம் தேடவேண்டியதில்லையே.

8. ஆனால் ஆண்டவர் அவர்களைக் கடிந்து பின்வருமாறு உரைக்கிறாரே. எப்படியெனில் ஆண்டவர் சொல்லுகிறதாவது: இஸ்ராயேல் கோத்திரத்தாரோடும் யூதா கோத்திரத்தாரோடும் நான் ஒரு புதிய உடன்படிக்கையைச்செய்துமுடிக்கும் நாட்கள் இதோ வருகிறது. (எரே. 31-31.)

9. அவர்களுடைய பிதாக்களை எஜிப்திலிருந்து மீட்டுக்கொண்டு வரும்படிக்கு நான் அவர்களுக்குக் கைகொடுத்த நாளிலே அவர்களோடு பண்ணின உடன்படிக்கையைப்போல் இது இராது. ஏனெனில் அவர்கள் என் உடன்படிக்கையில் நிலைக்கவில்லை. ஆகையால் நானும் அவர்களைப் புறக்கணித்தேன் என்று இப்படி ஆண்டவர் சொல்லுகிறார்.

10. ஆதலால் அந்நாட்களுக்குப் பின்பு இஸ்ராயேல் கோத்திரத்தாரோடு நான் பண்ணும் உடன்படிக்கையாவது: என்னுடைய பிரமாணங்களை அவர்களுடைய மனதிலே பதித்து, அவர்களுடைய இருதயங்களில் அவைகளை எழுதுவேன். அப்போது நான் அவர்களுக்குத் தெய்வமாயிருப்பேன்; அவர்களும் எனக்குப் பிரஜைகளாய் இருப்பார்கள்.

4. இவர் மற்றவர்களைப்போல் உலகத்திலிருந்து வந்தவரும், உலகத்தில் நியமிக்கப்பட்ட அதிகாரத்தின்படி ஏற்பட்டவருமாயிருந்தால், குருப்பிரசாதியாய் இருந்திருக்கமாட்டார். ஏனெனில் பலிகளை ஒப்புக்கொடுக்கிறதற்கு லேவிகோத்திரத்தார் நியமிக்கப்பட்டிருந்தார்கள். இவர் லேவிகோத்திரத்தைச் சேர்ந்தவரல்லவே.

5. பழைய ஏற்பாட்டிலிருந்த குருத்துவமும் வெவ்வேறு தொழில்களும், பின்காலங்களில் கிறீஸ்துநாதரால் இவ்வுலகத்தில் தமது யுத்த திருச்சபையிலும், பரலோகத்தில் தமது ஒட்டோலக சபையிலும் நிறைவேற்ற இருந்தவைகளுக்கு அடையாளமும், முன்குறிப்புகளுமாகமாத்திரம் இருந்தன: அப்படியே கூடாரம் பரலோகத்துக்கு அடையாளமாயிருந்தது.

7-8. இவ்விடத்தில் வேதப்பிரமாணம் அல்ல, ஆனால் பிரஜைகள் கண்டிக்கப்படுகிறார்கள்.

11. அப்போது சிறியோர் முதல் பெரியோர்வரையில் சகலரும் என்னை அறிந்துகொள்வார்களாகையால், எவனும் தன் சகோதரனுக்காவது, தன் அயலானுக்காவது ஆண்டவரை அறிந்துகொள் என்று போதித்துச் சொல்லமாட்டான்.

12. நான் அவர்களுடைய அக்கிரமங்களை மன்னித்து, அவர்களுடைய பாவங்களை இனிமேல் நினைக்கமாட்டேன். இவ்விதம் கர்த்தர் சொல்லுகிறார்.

13. புதிய உடன்படிக்கையென்று அவர் சொல்லுகிறதினால், முந்தினதை பழமையாக்கினார். பழைமையானதும் நாட்பட்டதும் அழிவுக்குக் கிட்டினதாயிருக்கிறது.

## 9-ம். அதிகாரம்.

*பழைய ஏற்பாட்டின் குருத்துவமும் பலவித பலிகளும் கிறீஸ்துநாதருடைய குருத்துவத்துக்கும் ஏக பலிக்கும் எவ்வளவோ கீழ்த்தரமானவைகள் என்று விவரித்துக் காட்டுகிறார்.*

1. அன்றியும் முந்தின உடன்படிக்கையானது ஆராதனைக்கடுத்த முறைமைகளையும், பூலோகத்துக்கான பரிசுத்த ஸ்தலத்தையும் கொண்டிருந்ததென்பது உள்ளதுதானே.

2. எப்படியெனில் முன் கூடாரம் ஒன்று செய்யப்பட்டிருந்தது. அதின் முதற்பாகத்தில் கவர்க்குத்துவிளக்கும், மேசையும் தேவசமுகத்து அப்பங்களும் இருந்தன. இது பரிசுத்த ஸ்தலம் என்னப்பட்டது. (யாத். 20-1; 36-8.)

3. இரண்டாந் திரைக்குப்பின் பரிசுத்தத்திலும் பரிசுத்தம் என்னப்பட்ட கூடாரம் இருந்தது.

4. இதில் பொன் தூபக்கலசமும், எப்பக்கமும் தங்கத்தால் பொதியப்பட்ட உடன்படிக்கைப் பெட்டகமும், அதினுள் மன்னா அடங்கிய தங்கப் பாத்திரமும், ஆரோனுடைய துளிர்த்த கோலும், உடன்படிக்கையின் கற்பலகைகளும் இருந்தன. (லேவி. 16; எண். 16, 17-10; 3. இரா. 8-9.)

5. அதற்கு மேலே கிருபாசனத்தை நிழலிடும் மகிமையுள்ள கெருபின் சம்மனசுக்கள் வைக்கப்பட்டிருந்தன. இவைகள் ஒவ்வொன்றையுங்குறித்துப் பேசுவதற்கு இது சமயமல்ல.

6. இவைகளெல்லாம் இவ்விதமாய் அமைக்கப்பட்டிருக்க, குருக்கள் பலிகளுக்கடுத்த முறைமைகளை நிறைவேற்றும்போது முன் கூடாரத்தில் எந்தக் காலத்திலும் பிரவேசிப்பார்கள்.

7. ஆனால் இரண்டாம் கூடாரத்தில் அதிகுருப்பிரசாதி ஒருவர்மட்டும் வருஷத்தில் ஒருதரம் இரத்தத்தை ஏந்திக்கொண்டு பிரவேசித்து, தாமும் பிரஜைகளும் செய்த அறிவீனப் பிழைகளுக்காக அதை ஒப்புக்கொடுப்பார். (யாத். 30-10; லேவி. 16-2.)

4. இவ்விடத்தில் சொல்லப்பட்ட தூபக்கலசம் பரிசுத்தமென்னப்பட்ட இடத்துக்கு முன் எப்போதும் தூபம் எரிந்துகொண்டிருந்த தூபப்பீடத்தைக் குறிக்கிறதென்றார்கள். இது பரிசுத்தத்திலும் பரிசுத்தமென்னப்பட்ட இடத்துக்கு அருகாமையிலிருந்ததால் அதைச்சேர்ந்ததாகவும் எண்ணலாம். அர்ச். சின்னப்பர் இவைகளைக் குறிப்பிட்டுப்பேசும்போது, அதில் இருந்தவைகளையும் அவைகளின் வெவ்வேறுஉபயோகத்தையும் விசேஷவகையாய்ச் சொல்லுகிறாரொழிய, அவைகள் இருந்த இடத்தை நுணுக்கமாய்ச் சொல்லத்தேவைஇல்லை.

8. இதினாலே அந்த முதல்கூடாரம் நிற்குந்தனையும் பரிசுத்த ஸ்தலத்துக்குச் செல்லும் வழி இன்னம் வெளியாக்கப்படவில்லையென்று இஸ்பிரீத்துசாந்துவானவர் குறிப்பாய்க் காண்பிக்கச் சித்தமானார்.

9. அந்தக் கூடாரம் இந்தக்காலத்துக்கு ஓர் உவமையாயிருக்கின்றது. அதின்படி ஒப்புக்கொடுக்கப்படுகிற காணிக்கைகளும் பலிகளும் ஆராதனை செய்கிறவனை மனச்சாட்சியின் விஷயத்தில் உத்தமனாக்கக் கூடாதவைகளாயிருந்தன.

10. ஏனெனில் அவைகள் சீர்திருத்தமாகிற காலம்வரையில் கற்பிக்கப்பட்ட போஜனபானத்திலும், பலவித ஸ்நானங்களிலும், சரீர சுத்திகரிப்புகளிலும் அடங்கியிருந்தன.

11. கிறீஸ்துநாதரோவெனில் வரப்போகிற நன்மைகளின் பிரதான குருவாகத் தோன்றி, (பழைய கூடாரத்தைப்போல்) இவ்வுலக சிருஷ்டிப்பாகிய கைவேலையாயிராததும், விசாலமும், உன்னதமுமான கூடாரத்தின் வழியாய்,

12. வெள்ளாட்டுக்கிடாய்கள், கன்றுக்குட்டிகள் இவைகளின் இரத்தத்தோடல்ல, தமதுசொந்த இரத்தத்தோடே பரிசுத்த ஸ்தலத்துக்குள் பிரவேசித்து, நித்திய இரட்சணியத்தை நமக்குப் பெறுவித்தார்.

13. வெள்ளாட்டுக்கிடாய்கள், காளைகள் இவைகளின் இரத்தமும், தீட்டுப்பட்டவர்களின்மேல் தெளிக்கப்படுகிற கிடாரியின் சாம்பலும், மாம்ச அசுத்தத்தை நீக்கி, அவர்களைச் சுத்தப்படுத்துமானால், (லேவி. 16-15.)

14. நாம் ஜீவந்தர கடவுளைச் சேவிக்கும்படிக்கு இஸ்பிரீத்துசாந்துவினால் மாசில்லாத பலியாகத் தம்மைத்தாமே சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுத்த கிறீஸ்துநாதருடைய இரத்தம் எவ்வளவோ அதிகமாய் நம்முடைய மனச்சாட்சிகளைச் செத்தகிரியைகளினின்று சுத்திகரிக்கும்! (1. இரா. 1-19; 1. அரு. 1-7; காட். 1-5.)

15. (கடவுளால்) அழைக்கப்பட்டவர்கள் வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட நித்திய சுதந்தரத்தைப் பெற்றுக்கொள்ளும்பொருட்டு முந்தின உடன்படிக்கையின் காலத்திலே நடந்த அக்கிரமங்களைப் பரிகரிக்கும்படி அவர் அடைந்த மரணத்தால் புதிய உடன்படிக்கையின் மத்தியஸ்தராய் இருக்கிறார். (3-25; கலா. 3-15.)

16. எப்படியெனில் எப்போது மரணசாதனம் உண்டாயிருக்கிறதோ, அதைச் செய்தவனுடைய மரணமும் அவசியமாய் உண்டாயிருக்கவேணும்.

17. ஏனென்றால் மரணசாதனம் அதைச்செய்தவனுடைய மரணத்தால் உறுதிப்படுகிறது. மற்றப்படி அவன் உயிரோடிருக்குமளவும் அதற்குப் பலமிராது.

18. இதினிமித்தமே முந்தின உடன்படிக்கையும் இரத்தமில்லாமல் பிரதிஷ்டை பண்ணப்படவில்லை.

19. எவ்வாறெனில் மோயீசன் வேதப்பிரமாணத்தின் கட்டளைகள் யாவையும் சகல ஜனங்களுக்கும் வாசித்தபின்பு,

20. காளைக்கன்றுகள், வெள்ளாட்டுக்கிடாய்கள் இவைகளின் இரத்தத்தைத் தண்ணீரோடு கலந்து, சிவப்பு ஆட்டுரோமத்தையும் ஈசோப்பையுங்கொண்டு அதைப் புஸ்தகத்தின்மேலும் சமஸ்த ஜனங்கள்மேலும் தெளித்து: சர்வேசுரன் உங்களுக்குக் கட்டளையிட்ட உடன்படிக்கையின் இரத்தம் இதுவே என்றார். (யாத். 24-8.)

21. அப்படியே கூடாரத்தின்மேலும், திருப் பணிமுட்டுகளின்மேலும் இரத்தத்தைத் தெளித்தார்.

22. அவ்வண்ணமே பிரமாணத்தின்படி ஏறக்குறைய சகலமும் இரத்தத்தினால் சுத்திகரிக்கப்படுகிறதொழிய இரத்தம் சிந்தப்படாமல் யாதொரு மன்னிப்பும் உண்டாகாது.

23. ஆதலால் பரலோக காரியங்களுக்குச் சாயலாயிருந்தவைகளே இப்படிப்பட்ட பலிகளினாலே சுத்திகரிக்கப்படவேண்டியிருந்தால், பரலோக காரியங்கள் இவைகளிலும் மேன்மையான பலிகளாலல்லோ சுத்தமாக்கப்படவேண்டியது.

24. ஏனெனில் யேசுநாதர் கைவேலைப்பாடும் மெய்யானவைகளுக்குச் சாயலுமாக மாத்திரமிருந்த பரிசுத்த ஸ்தலங்களுக்குள் பிரவேசியாமல், இப்பொழுது நமக்காகச் சர்வேசுரனுடைய சந்நிதியில் காணப்படும்படிக்குப் பரலோகத்திலேயே பிரவேசித்திருக்கிறார்.

25. பிரதான குரு அந்நிய இரத்தத்தோடு வருஷந்தோறும் பரிசுத்த ஸ்தலத்தில் பிரவேசிக்கிறதுபோல், அடிக்கடி தம்மைப் பலியிடும்படி அவர் பிரவேசிக்கிறதில்லை.

26. அல்லாவிட்டால் உலக ஆரம்பமுதல் அவர் அடிக்கடி பாடுபடவேண்டியதாயிருக்கும். இப்போதோவெனில் இந்தக் கடைசிக் காலங்களில் தம்மைத்தாமே பலியிட்டு, பாவத்தை நிர்மூலமாக்கும்படி ஒரேதரம் தோன்றினார். (1. கொ. 10-11.)

27. மனிதர்கள் ஒரேதரம் மரிக்கவும் அதன்பின் நடுத்தீர்க்கப்படவும் தீர்மானிக்கப்பட்டிருப்பது எப்படியோ,

28. அப்படியே கிறீஸ்துநாதரும் அநேகருடைய பாவங்களை நிர்மூலமாக்கும்படிக்கு ஒரேதரம் பலியிடப்பட்டார். இரண்டாந்தரமோ தம்மை எதிர்பார்த்திருப்பவர்களுக்கு இரட்சகராகப் பாவமின்றித் தோன்றுவார். (உரோ. 5-9; 1. இரா. 3-18.)

## 10-ம். அதிகாரம்.

*புதிய ஏற்பாட்டின் ஒரே பலியால் சகல பாவமும் மன்னிக்கப்படுவதென்பது.*

1. வேதப்பிரமாணமானது மெய்யான காரியங்களின் சாயலாக முதலாயிராமல், வரப்போகிற நன்மைகளின் நிழலாய் மாத்திரம் இருந்தபடியால், வருஷாவருஷம் தவறாமல் ஒப்புக்கொடுக்கப்படுகிற ஒரேவித பலிகளினாலே (பீடத்தை) அண்டிவருகிறவர்களை ஒருபோதும் உத்தமராக்கமாட்டாது.

2. உத்தமராக்குமானால், பலியிடுகிறவர்கள் ஒரு தரம் சுத்தமாக்கப்பட்டபின்பு இனிப்பாவமில்லையென்கிற மனச்சாட்சி அவர்களுக்கு உண்டாயிருக்கும் என்பதினாலே, பலிகள் ஒப்புக்கொடுக்கப்படுவது நின்றுபோயிருக்குமே.

25. நமது ஆண்டவர் சிலுவையில் நிறைவேற்றின இரத்தப்பலியால் உலக பாவங்களின் நிவர்த்திக்குவேண்டிய சகலமும் ஏற்கனவே செய்திருப்பதால், திரும்பவும் அவர் மரித்து இரத்தஞ் சிந்திப் பலிகொடுப்பவரல்ல. ஆனால் அந்தப்பலியின் ஞாபகமாகவும், அதின் பலன் நமக்குக் கிடைக்கும்படியாகவும் அவர் தேவநற்கருணையில் எங்கும் எந்நாளும் இரத்தம் சிந்தாத பலியாகத் தம்மைத்தாமே ஒப்புக்கொடுக்கிறார் என்பது சத்தியம்.

26. **கடைசிக்காலம்:**—ஆதியில் இயல்வேதமும், அதன்பின் வரிவேதமும் வழங்கினபின், இந்தக் கடைசிக்காலத்தில் கிறீஸ்துவேதமாகிய அருள்வேதம் கொடுக்கப்பட்டது. இதற்குமேல் ஆண்டவரால் வேறே வேதம் கொடுக்கப்படாதென்று காட்டும்படி, அருள்வேத காலத்தை உலகங்களுக்குக் கடைசிக்காலமென்று சொல்லியிருக்கிறது.

3. ஆனால் பலிகள் நடப்பதினால் பாவம் உண்டென்று வருஷாவருஷம் நினைப்பூட்டப்படுகிறது.

4. ஏனெனில் காளை, வெள்ளாட்டுக்கிடாய் இவைகளின் இரத்தத்தினாலே பாவங்கள் மன்னிக்கப்படுவது முற்றும் கூடாத காரியமாமே.

5. இதினிமித்தம் அவர் உலகத்தில் பிரவேசிக்கும்போது சொல்லுகிறதாவது: நீர் பலியையும் நைவேத்தியத்தையும் விரும்பாமல், எனக்கு ஒரு சரீரத்தைப் பொருத்தினீர். (சங். 39-7.)

6. பாவத்துக்குப்பரிகாரமாகத் தகனப் பலிகள் உமக்குப் பிரியப்படவில்லை.

7. அப்பொழுது என்னைக்குறித்து புத்தகத்தின் ஆரம்பத்தில் எழுதியிருக்கிறதுபோல்: சர்வேசுரா, உம்முடைய சித்தத்தின்படியே செய்ய இதோ வருகிறேன் என்றுசொன்னேன் என்கிறார். (சங். 39-8.)

8. வேதப்பிரமாணத்தின்படி செலுத்தப்படுகிற பலிகளைக்குறித்து: பலிகளையும் நைவேத்தியங்களையும் பாவத்துக்காகத் தகனப்பலிகளையும் நீர் விரும்பினதுமில்லை. அவைகள் உமக்குப் பிரியப்பட்டதுமில்லை என்று முந்தச் சொல்லி, அதற்குப்பின்:

9. சர்வேசுரா, உம்முடைய சித்தத்தை நிறைவேற்றுகிறதற்கு இதோ வருகிறேன் என்று சொன்னாரே. ஆகையால் பிந்தின பலியை ஸ்தாபிக்கும்படி, முந்தினதை நீக்கிப்போடுகிறார் என்க.

10. அந்தச் சித்தத்தின்படி யேசுக்கிறீஸ்துநாதருடைய சரீரத்தை ஒருதரம் ஒப்புக்கொடுத்ததினாலே நாம் பரிசுத்தமாக்கப்பட்டிருக்கிறோம்.

11. அன்றியும் எந்தக் குருவும் தன் குருத்துவத் தொழிலை நிறைவேற்ற அனுதினமும் தயாராயிருந்து,ஒருபோதும் பாவத்தை நிவிர்த்திக்கக் கூடாத ஒரேவகைப் பலிகளை அடிக்கடி செலுத்துகிறார். (எபி. 8-3; 9-9.)

12. இவரோ பாவங்களுக்காக ஏக பலி ஒன்றைச் செலுத்தி, என்றென்றைக்கும் சர்வேசுரனுடைய வலதுபாரிசத்தில் உட்கார்ந்து,

13. இனித் தம்முடைய சத்துருக்கள் தமக்குப் பாதப்படியாகப் போடப்படும் வரையில் காத்திருக்கிறார். (சங். 109-2.)

7. புத்தகத்தின் ஆரம்பத்தில் எழுதியிருக்கிறபடியே என்பதின் அர்த்தமாவது: இரட்சகர் வருவாரென்று ஆதித்தாய் தகப்பனுக்கு ஆதியிலே வார்த்தைப்பாடு கொடுத்தபடியே இதோ இப்போது வருகிறேனென்று அர்த்தமாம்.

10. காளைகள், வெள்ளாட்டுக்கிடாய்கள் இவைகளின் இரத்தம் சர்வேசுரனுக்குப் பிரியப்படக்கூடாத காரியமாமே. பழைய ஏற்பாட்டிலே கற்பிக்கப்பட்டிருந்த அப்படிப்பட்ட பலிகள் யேசுநாதர் கபாலமலையிலே செலுத்தவேண்டியிருந்த பலிக்கு அடையாளமாயிருந்ததொழிய, அவைகளால் யாதொரு பாவப்பரிகாரமும் ஆகத்தக்கதில்லை. ஆகையால் அர்ச். கன்னிமரியாயின் திரு உதரத்தில் சுதனாகிய சர்வேசுரன் மனுஷ சுபாவத்தைத் தரித்துக்கொண்டவுடனே தம்முடைய பிதாவை நோக்கி: என் பிதாவே, தேவரீர் பழைய ஏற்பாட்டிலே கற்பித்த மிருகங்களின் பலிகள் தேவரீருக்குப் பிரியப்படவில்லை. அதினாலே தேவரீருடைய நீதிக்கு யாதொரு பரிகாரமும் மனுக்குலத்தோருக்கு யாதொரு பிரயோசனமும் உண்டாகவில்லை. ஆனால் தேவரீர் எனக்கு ஒரு சரீரத்தைப் பொருத்தினீர். தேவரீருடைய சித்தத்தை நிறைவேற்றவும், மனுஷர்களுடைய பாவங்களுக்காக என் இரத்தத்தைச் சிந்தி உத்தரித்துத் தேவரீருடைய நீதிக்கு யோக்கியமான பரிகாரஞ்செய்யவும் இதோ ஆயத்தமாயிருக்கிறேன் என்று பிரார்த்தித்தார். பிதாவாகிய சர்வேசுரனும் தமது திருச்சுதனுடைய விண்ணப்பத்தைக் கையேற்றுக்கொண்டதினால் அவருடைய திரு இரத்தப் பலியினாலே நாம் கழுவப்பட்டு, பரிசுத்தமாக்கப் பட்டிருக்கிறோம் என்றர்த்தமாம்.

14. ஏனெனில் அந்த ஏக பலி ஒன்றினால் அர்ச்சிக்கப்பட்டவர்களை என்றென்றைக்கும் உத்தமராக்கினார்.

15. இதைக்குறித்து இஸ்பிரீத்து சாந்துவும் நமக்குச் சாட்சிசொல்லுகிறார். எப்படியெனில்:

16. அந்த நாட்களுக்குப்பின் நான் அவர்களோடு பண்ணும் உடன்படிக்கை இதோஎன்றபின்பு கர்த்தர் சொல்வதாவது: என்னுடைய பிரமாணங்களை நான் அவர்களுடைய இருதயங்களிலே பதித்து, அவைகளை அவர்களுடைய மனதிலே வரைவேன். (எரே. 31-31; எபி. 8-8.)

17. அவர்களுடைய பாவங்களையும் அக்கிரமங்களையும் இனி ஒருபோதும் நான் நினைக்கப்போகிறதில்லை என்கிறார்.

18. பாவம் எப்பொழுது மன்னிக்கப்பட்டதோ, இனிப் பாவத்துக்காகப் பரிகாரப்பலி கிடையாதே.

19. ஆகையால் சகோதரரே, கிறீஸ்துநாதருடைய இரத்தத்தைக்கொண்டு பரிசுத்த ஸ்தலங்களில் பிரவேசிப்பதற்கான நம்பிக்கையும்,

20. அவருடைய சரீரமாகிய திரையின்வழியாய் அவர் நமக்குத் திறந்த புதிதும் ஜீவியந் தருவதுமாகிய மார்க்கமும்,

21. சர்வேசுரனுடைய வீட்டுக்கு அதிகாரியான அதிகுருப்பிரசாதியும் நமக்கு உண்டாயிருக்க,

22. துர்மனச்சாட்சி நீங்க, தெளிக்கப்பட்ட இருதயங்களும் பரிசுத்த ஜலத்தால் கழுவப்பட்ட சரீரமும் உள்ளவர்களாய்ப் பூரண விசுவாசத்தோடும் உண்மையான இருதயத்தோடும் அவரிடம் அண்டிப்போவோமாக. (எபே. 5-26.)

23. நம்முடைய நம்பிக்கையை வெளிப்படுத்துவதில் தத்தளியாமல் நிலைநிற்போமாக; (ஏனெனில் வாக்குத்தத்தம் பண்ணினவர் உண்மையுள்ளவராயிருக்கிறார்.)

24. பரம அன்புக்கும் நற்கிரியைகளுக்கும் நமக்குத் தூண்டுதலுண்டாகும்படி ஒருவரை ஒருவர் கவனிப்போமாக.

25. சிலருக்குத் துர்வழக்கமாய் இருக்கிறதுபோல் நாம் சபைக்கூட்டத்தை விட்டுவிடாமல் ஒருவரை ஒருவர் தேற்றுவோமாக. அந்த மகா நாள் எவ்வளவுக்குநெருங்கக் காண்பீர்களோ அவ்வளவுக்கு அதிகமாய் இவ்விதஞ் செய்யுங்கள். (எபி. 9-28.)

26. ஏனெனில் சத்தியத்தை அறியும் அறிவை நாம் கைக்கொண்டபின்பு மனதாரப் பாவஞ்செய்வோமாகில், பாவப்பரிகாரமான வேறொரு பலி (நமக்குக்) கிடையாதே. (எபி. 6-4.)

27. பயங்கரமான நடுத்தீர்வைக்கு எதிர் பார்த்தலும், விரோதிகளைப் பட்சிக்கப்போகிற கோபாக்கினியுந்தான் உண்டாயிருக்கும்.

14. இந்த ஒரே பலியைக்குறித்து 7-ம் அதிகாரம் 28-ம் வசனத்திலே வைக்கப்பட்டிருக்கிற வியாக்கியானத்தைக் காண்க.

18. ஞானஸ்நானத்தால் பாவத்துக்குப் பூரண மன்னிப்பு உண்டாவதினால், அதுக்காகப் பாவ நிவாரணப் பலிகொடுப்பது அவசரமாயிராது. ஞானஸ்நானத்துக்குப் பின் உண்டான பாவங்களுக்கு நமது ஆண்டவருடைய மரணத்தின் சக்தியால் மாத்திரம் நிவாரணமாகிறபடியாலும் அதுவும் ஏற்கனவே ஒப்புக்கொடுக்கப்பட்டிருப்பதாலும் வேறே ஒரு புதுநிவாரணப்பலியும் அவசரமாயிராதென்பது இனிப் பாவத்துக்குப் பலியிராது என்பதுக்கு அர்த்தமாம்.

28. மோயீசனுடைய பிரமாணத்தை மீறுகிறவன் சற்றும் இரக்கமடையாமல், இரண்டு மூன்று சாட்சிகளின் வாக்கு மூலத்தால் சாகிறான். (உபா. 17-6; மத். 18-16.)

29. அப்படியானால் தேவ சுதனைக் காலின்கீழ் மிதித்துத் தன்னைப் பரிசுத்தப்படுத்தின உடன்படிக்கையின் இரத்தத்தை அசுத்தமென்றெண்ணி, வரப்பிரசாத இஸ்பிரீத்துவுக்கு அவமானஞ் செய்கிறவன் எத்தனையோ அதிக அகோரமான ஆக்கினைகளுக்குப் பாத்திரவானாயிருப்பானென்று நினைக்கிறீர்கள்?

30. ஏனெனில் பழிவாங்கல் என் காரியம், பதிலளிப்பதும் நான்தான் என்று சொன்னதும், மீளவும் கர்த்தர் தம்முடைய ஜனங்களை நடுத்தீர்ப்பாரென்று சொன்னதும் யார் என்று அறிவோம். (உபா. 32-35; உரோ. 12-19.)

31. ஜீவந்தர கடவுளின் கையில் விழுவது பயங்கரமான காரியம்.

32. நீங்கள் உங்கள் முந்தின நாட்களை நினைத்துக்கொள்ளுங்கள். அப்போது நீங்கள் தெளிவடைந்து உபத்திரவங்களின் பெரும் போராட்டத்தைச் சகித்தீர்களே.

33. ஒரு பக்கத்தில் நிந்தைகளிலும் உபத்திரவங்களிலும் பார்க்கிறவர்களுக்கு வேடிக்கையானீர்கள். மற்றொரு பக்கத்தில் அப்படிப் பாடுபட்டவர்களுக்கு நீங்களும் கூட்டாளிகளானீர்கள்.

34. எப்படியெனில் விலங்கிடப்பட்டவர்களுக்கு நீங்கள் மனதிரங்கினதுமன்றி, அதிக உத்தமமும் நிலைபெற்றதுமான ஐசுவரியம் உங்களுக்கு உண்டென்று அறிந்து சந்தோஷமாய் உங்கள் ஆஸ்திகளையும் கொள்ளையடிக்க விட்டீர்கள்.

35. ஆதலால் மிகுந்த சம்பாவனைக்கு ஏதுவான உங்கள் நம்பிக்கையை இழந்துபோகாதேயுங்கள்.

36. நீங்கள் தேவ சித்தத்தை நிறைவேற்றி, வாக்குத்தத்தத்தைக் கைக்கொள்ளும்படியாகப் பொறுமை உங்களுக்கு அவசரமாயிருக்கின்றது.

37. இன்னும் இருப்பது சொற்பக் காலம். வரவேண்டியவர் வருவார். தாமதம்பண்ணார்.

38. என் நீதிமான் விசுவாசத்தினாலே பிழைப்பான். அவன் அதைவிட்டுப் பின்வாங்குவானாகில், என் ஆத்துமம் அவன்மேல் பிரியங்கொள்ளாது என்று எழுதியிருக்கிறதே. (அபகூக். 2-4; உரோ. 1-17; கலாத். 3-11.)

39. நாமோ கேட்டுக்கு ஏதுவாய்ப் பின்வாங்குகிற பிள்ளைகளாயிராமல், ஆத்தும ஈடேற்றத்துக்குரிய விசுவாசத்தைக் கைப்பற்றுகிற புத்திரராயிருக்கிறோம்.

## 11-ம். அதிகாரம்.

விசுவாசமானது என்னவென்று சொல்லி, விசுவாசத்தினால் பிதாப்பிதாக்கள் செய்த அதிசயமான கிரியைகளையும் பட்ட பாடுகளையும் வர்ணிக்கிறார்.

1. விசுவாசமானது நாம் நம்பிக் காத்திருக்கவேண்டியவைகளின் அடிநிலையும், காணப்படாதவைகளின் நிச்சயிப்புமாயிருக்கின்றது.

2. இந்த விசுவாசத்தின் நிமித்தம் நமது முன்னோர்கள் நற்சாட்சியம் பெற்றார்கள்.

3. விசுவாசத்தினாலே காணப்படாதவைகள் காணப்பட்டவைகளாகும்படி, சர்வேசுரனுடைய வார்த்தையினாலே உலகங்கள் அமைக்கப்பட்டனவென்றும், அதரிசனமானவைகள் தரிசனமாயிற்றென்றும் விசுவாசத்தினால் அறிகிறோம்.

4. ஆபேல் தன் விசுவாசத்தினுலே காயீனுடைய பலியிலும் அதிக மேன்மையான பலியைச் சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுத்தான். சர்வேசுரன் அவனுடைய காணிக்கைகளைக்குறித்துச் சாட்சி கொடுத்ததினுலே, அவன் தன் விசுவாசத்தினுல் நீதிமான் ஆனுனென்று நற்சாட்சியம் பெற்றுன். அவன் மரித்திருந்தும், அவனுடைய விசுவாசத்தின்வழியாய் இன்னும்பேசுகிறுன். (ஆதி. 4-4; மத். 23-35.)

5. விசுவாசத்தினுலே ஏனேக்கென்பவன் மரணத்தைக் காணுதபடி எடுத்துக் கொள்ளப்பட்டான். சர்வேசுரன் அவனை எடுத்துக்கொண்டதினுலே கண்ணுக்குத் தெரியாமல் போனுன். ஏனெனில் அவன் எடுபடுவதற்குமுன்னமே கடவுளுக்கு உகந்தவனென்று நற்சாட்சியம் பெற்றிருந்தான். (ஆதி. 5-24; பிர. 44-16.)

6. விசுவாசமில்லாமல் சர்வேசுரனுக்குப் பிரியப்படவே கூடாது. ஏனெனில் சர்வேசுரனை அண்டிப்போகிறவன் அவர் உண்டென்றும், அவர் தம்மைத் தேடுகிறவர்களுக்குப் பதிலளிக்கிறவரொன்றும் விசுவசிக்கவேண்டும்.

7. விசுவாசத்தினுலே நோவா என்பவன் தான் இன்னும்காணுதவைகளைக் குறித்து எச்சரிக்கப்பட்டு, பயத்தோடே தன் குடும்பத்தின் இரட்சணியத்துக்காக ஒரு பேழையைச் சமைத்து, அத்தாலே உலகத்தைக் குற்றமுள்ளதென்று தீர்த்ததுமன்றி, விசுவாசத்தினுல் உண்டாகிற நீதிக்குச் சுதந்தரவாளியாக ஏற்படுத்தவும் பட்டான். (ஆதி. 6-14; பிர. 44-17.)

8. அபிரகாமென்று அழைக்கப்பட்டவன் தான் சுதந்தரமாகப் பெற்றுக்கொள்ளவேண்டியிருந்த ஸ்தலத்துக்குப் போகும்படி விசுவாசத்தினுலே கீழ்ப்படிந்து, தான் போகிற இடம் இன்னதென்று அறியாமல் புறப்பட்டுப் போனுன். (ஆதி. 12-11.)

9. விசுவாசத்தினுலே அவன் வாக்குத்தத்தம் பண்ணப்பட்டதேசத்திலே அந்நியதேசத்தில் இருந்தாற்போல் சஞ்சரித்து, அந்த வாக்குத்தத்தத்துக்கு உடன்சுதந்தரராகிய ஈசாக்கோடும் யாக்கோபோடும் குடிசைகளிலே குடியிருந்தான்.

10. ஏனெனில் ஸ்திரமான அஸ்திவாரத்தோடே சர்வேசுரனுலே உற்பத்தியாக்கப்பட்ட நகரத்துக்காக அவன் காத்திருந்தான்.

11. மலடியான சாராள் தனக்கு வயதுகாலமாய்விட்டாலும், கர்ப்பந்தரிக்கும்படியான சக்தியை விசுவாசத்தினுலே பெற்றுக்கொண்டாள். ஏனெனில் வாக்குத்தத்தஞ்செய்தவர் பிரமாணிக்கமுள்ளவரென்று விசுவசித்தாள். (ஆதி. 17-19.)

4. ஆபேலும் ஆபேலைப்போல் விசுவாசத்தோடே மரித்த சகலமான அர்ச்சியசிஷ்டவர்களும் உலகத்துக்கு மரித்தாலும், சர்வேசுரனிடத்தில் ஜீவியர்களாயிருந்து, தங்கள் சுகிர்தமாதிரியினுலே மனிதர்களுக்கு இன்னம் பேசுகிறுப்போல் படிப்பினையாயிருக்கிறுர்கள். மேலும் ஆபேலுடைய இரத்தம் ஆண்டவரைநோக்கிப் பழியென்று கூப்பிட்டதினுல், பாவிகளுக்குப் பயமுறுத்திப் பேசுகிறதுபோலிருக்கிறது.

7. காணப்படாதவைகளேதெனில், சலப்பிரளயந்தான். அதைப்பற்றி அவருக்கு அறிவிக்கப்படுகிறபோது அது வர இன்னும் 100-வருஷகாலமிருந்தது. அப்படியே அது வருமென்று விசுவாசித்து முஸ்திப்புப்பண்ணினுர்.

10. சர்வேசுரனுலே கட்டப்பட்ட மோட்சமாகிய பரம எருசலேமுக்குச் சேருவோமென்று விசுவாசித்து அபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்பவர்கள் இவ்வுலகத்திலே வீடுகளையும் பட்டணங்களையுங் கட்டாமல், அந்நியனைப் போலவும் வழிப்போக்கனைப் போலவும் கூடாரங்களில் சஞ்சரித்து வந்தார்கள்.

12. அப்படியே செத்தாற்போலிருந்த ஒருவனிடத்திலிருந்து வான நட்சத்திரங்களைப்போல் ஏராளமாகவும் கடற்கரை மணலைப்போல் எண்ணிறந்தவர்களாகவும் பிள்ளைகள் உற்பத்தியானார்கள். (உரோ. 4-19.)

13. இவர்கள் எல்லாரும் வாக்குத்தத்தங்களை அடைந்துகொள்ளாமல், அவைகளைத் தூரத்தில்கண்டு வாழ்த்தி, தாங்கள் பூலோகத்திலே பரதேசிகளும் அந்நியருமென்று வெளிப்படுத்தி விசுவாசத்தோடு மரித்தார்கள்.

14. இப்படி வெளிப்படுத்துகிறவர்கள் தங்கள் சுயதேசத்தை நாடிப்போகிறதாகத் தெரியப்படுத்துகிறார்களே.

15. தாங்கள் விட்டுவந்த தேசத்தின் பேரிலே அவர்களுக்கு எண்ணமுண்டாயிருந்ததானால், அவ்விடத்திற்குத் திரும்பிப்போவதற்கு அவர்களுக்குக் காலமிருந்ததே.

16. ஆனால் அவர்கள் நாடினது மேலான தேசமாகிய பரலோகமல்லோ. அதைப்பற்றிக் கடவுளும் தாம் அவர்களுடைய கடவுளென்று அழைக்கப்படக் கூச்சப்படவில்லை. ஏனெனில் அவரே அவர்களுக்கு ஓர் நகரத்தை ஆயத்தம்பண்ணினார்.

17. அபிரகாம் சோதிக்கப்பட்டபோது விசுவாசத்தினாலே ஈசாக்கைப் பலியிட்டான். (ஆதி. 22-1; பிர. 44-21.)

18. ஆனால் ஈசாக்கினாலே உனக்குச் சந்ததி உண்டாகுமென்று அவனுக்குச் சொல்லப்பட்டிருந்ததே. வாக்குத்தத்தத்தைப்பெற்றிருந்த அந்த ஏக சுதனையே அவன் ஒப்புக்கொடுத்தான். (ஆதி. 21-12; உரோ. 9-7.)

12. அபிரகாமென்பவர் வயது சென்று, புத்திரசந்தானம் உண்டாவதற்குக் காலங் கடந்துபோய், சாவுக்குக் கிட்டினவராயிருக்கையில்: உனக்கு ஒரு ஆண் குழந்தை பிறக்குமென்று சர்வேசுரன் அவருக்குச் செய்த வார்த்தைப்பாட்டை விசுவாசித்து, வானத்தின் நட்சத்திரங்களுக்கும் கடற்கரை மணலுக்கும் ஒப்பாக எண்ணில்லாத புத்திரர்களுக்குத் தகப்பனானார். அந்தப் புத்திரர்கள் இஸ்ராயேல் புத்திரர் மாத்திரமல்ல, அவரைப்போல் மெய்விசுவாசத்தைக் கொண்டிருக்கிற சகலமான விசுவாசிகளும் அவருக்குப் புத்திரர்களென்று அறியவும்.

16. பிதாப்பிதாக்கள் வாக்குத்தத்த பூமியாகிய மோட்சபாக்கியத்தை மரித்தவுடனே அடைந்துகொள்ளவில்லை. யேசுநாதர் மரித்து உயிர்த்துப் பரலோகத்திற்கு எழுந்தருளும்போது அவர்களுக்கு மோட்சத்தைத் திறந்தார். ஆனால் அவர்கள் அதை விசுவாசமென்கிற கண்ணாலே தூரத்தில் நின்று தரிசித்தாற்போல் அந்தப்பார்வையால் அகமகிழ்ந்து, அதை ஆசித்து அழைத்து, இப்பூவுலகத்தில் தாங்கள் பரதேசிகளென்றும், வழிப்போக்கரென்றுஞ் சொல்லிக்கொண்டு வந்தார்கள். ஆனால் தங்களை வழிப்போக்கரென்று சொல்லுகிறவர்கள் தங்கள் சொந்தத் தேசத்தை நாடுகிறவர்களென்றல்லோ சொல்லவேண்டும். அப்படியிருக்க அவர்கள் நாடினது எந்தத்தேசம்? அவர்கள் விட்டுவந்த கானான் தேசமோ? அல்ல. ஏனெனில், அதின்மேல் அவர்களுக்கு நாட்டமாயிருந்தால், தங்கள் ஆயுசுகாலத்திலே அவ்விடத்திற்குத் திரும்பிப்போயிருக்கலாமே. ஆனால் அவர்கள் விசுவாசத்தினாலே மோட்சத்தின்மேல் நாட்டமாயிருந்தார்கள். ஆகையால் சர்வேசுரனும் தம்மை அபிரகாம், ஈசாக்கு, இயாக்கோபுடைய தேவனென்று சொல்லக் கூச்சப்படாதிருந்ததுந்தவிர அவர்களுக்கும் அவர்கள் விசுவாசத்தைப் பின்சென்று நடக்கும் அவர்களுடைய புத்திரர்களுக்கும் பரம எருசலேமாகிய மோட்ச நகரத்தை ஆயத்தம்பண்ணினார்.

19. ஆகையால் அவனைச் சர்வேசுரன் மரித்தோரினின்று உயிர்ப்பிக்கவல்லவரென்று அவன் எண்ணியிருந்தான். அப்படியே அவனை ஒரு உவமானமாகவும் பெற்றுக்கொண்டான்.

20. விசுவாசத்தினாலே ஈசாக்கு பின் வருங்காரியங்களை முன்னோக்கி யாக்கோபையும் ஏசாவையும் ஆசீர்வதித்தான். (ஆதி. 27-27.)

21. விசுவாசத்தினாலே யாக்கோபு தன் மரணவேளையில் யோசேப்பின் குமாரர் ஒவ்வொருவரையும் ஆசீர்வதித்து, அவன் செங்கோலின் முனையைப் பிடித்து நமஸ்கரித்தான். (ஆதி. 46-15; 47-31.)

22. யோசேப்பு சாகும் வேளையில் இஸ்ராயேல் புத்திரர் எஜிப்துத்தேசத்தைவிட்டுப் புறப்படுவார்களென்பதை விசுவாசத்தினாலே முன்னதாக அறிவித்து, தன் எலும்புகளைக் குறித்தும் கட்டளையிட்டான். (ஆதி. 50-23.)

23. மோயீசன் பிறந்தபோது அவன் அழகுள்ள பிள்ளையென்று அவனுடைய தாய்தந்தையர் கண்டு, இராஜாவுடைய கட்டளைக்குப் பயப்படாமல், விசுவாசத்தினாலே மூன்றுமாதம் அவனை ஒளித்துவைத்தார்கள். (யாத். 2-2; 1-17.)

19. ஈசாக்கின் வழியாய்த் தமக்குச் சந்ததியுண்டாகுமென்று அபிரகாம் சர்வேசுரனாலே வாக்குத்தத்தம் பெற்றிருந்தாலும், செத்தவனை முதலாய்ச் சர்வேசுரன் மரித்தோரிலிருந்து உயிர்ப்பிக்க வல்லவராயிருக்கிறதினால் தன் குமாரனைப் பலியிட்டாலும் அந்த வாக்குத்தத்தம் நிறைவேறுமென்று அவர் விசுவாசித்து, அந்தக் குமாரனைச் சர்வேசுரனுக்குப் பலியிடப் பின்வாங்கினவரல்ல. அந்த விசுவாசத்துக்குச் சம்பாவனையாகத் தன் குமாரனை உயிருள்ளவனுமாய்ப் பெரிய தேவரகசியத்துக்கு அடையாளமுமாய்க் கையேற்றுக்கொண்டார். இந்த அடையாளம் ஏதென்றால் அபிரகாமுடைய ஏககுமாரனாகிய ஈசாக்கென்பவர் தம்முடைய பலிக்கு வேண்டிய விறகைச் சுமந்துகொண்டு ஓரேப்பு என்னும் மலையுச்சிமட்டுஞ் சென்றபோது சிலுவையைச் சுமந்து அதிலே அறையுண்டு மரித்து தம்மைத் தாமே பலியாக ஒப்புக்கொடுத்த சர்வேசுரனுடைய ஏககுமாரனாகிய யேசுக்கிறீஸ்துநாதருக்கு அடையாளமாயிருந்தார். மரணத்தினின்று உயிரோடே அபிரகாமுக்கு ஒப்புக்கொடுக்கப்பட்ட ஈசாக்கு சிலுவையிலே மரித்துத் தகனபலியான பிறகு மூன்றாம் நாள் உயிர்த்துத் தம்முடைய பிதாவின் வலதுபாரிசத்தில் சேர்ந்த யேசுநாதருக்கு அடையாளமாயிருந்தார்.

21. ஈசாக்கைப்போல் யோசேப்பும் யேசுநாதருக்கு ஓர் அடையாளமாயிருந்தார் எப்படியெனில் அவர் தன் சகோதரரால் விற்கப்பட்டு, அவருடைய வஸ்திரம் செம்மறியாட்டின் இரத்தத்தில் தோய்க்கப்பட்டு, எஜிப்துதேசத்துக்குக் கொண்டுபோகப்பட்டு அநியாயமாய்க் குற்றஞ் சாட்டப்பட்டுச் சிறையிலேயே அடைக்கப்பட்டபின்பு அதிலிருந்து மிகுந்த மகிமையோடே எஜிப்து தேசத்துக்கு இரட்சகனாகவும் எஜிப்தாரை போஷித்த தகப்பனாகவும் பாரவோன் இராஜாவாலே ஏற்படுத்தப்பட்டதுபோல், யேசுநாதரும் தம்முடைய சீஷனாகிய யூதாசால் யூதர்களுக்கு விற்கப்பட்டு, கட்டுண்டு அநியாயமாய்க் குற்றஞ்சாட்டப்பட்டு, மரித்துக் கல்லறையில் அடக்கம்பண்ணப்பட்ட பிறகு அதிலே நின்று ஒட்டோலகமாய் உயிர்த்தெழுந்து உலக இரட்சகராகவுந் தம்முடைய பிரஜைகளைத் தேவநற்கருணையைக்கொண்டு போஷிக்கிறவராகவும் பிதாவாகிய சர்வேசுரனாலே ஏற்படுத்தப்படுவாரென்று யாக்கோப்பென்பவர் காட்சியில்கண்டு யோசேப்பென்பவருடைய செங்கோலின் நுனியை நமஸ்கரிக்கும்போது அந்தச் செங்கோலுக்கு அடையாளமாயிருந்த யேசுநாதருடைய நித்திய அரசை வணங்கினார் என்று அர்த்தமாம்.

22. யோசேப்பென்பவர் மரிக்கும்வேளையில் தம்முடைய சகோதரர்களை அழைத்து: இனி வருங்காலத்தில் இத்தேசத்தைவிட்டு உங்கள் புத்திரர்கள் வாக்குத்தத்தத்தின் பூமிக்குப் புறப்படுவார்கள்; அப்போது என் சரீரத்தின் எலும்புகளை இங்கே விடாமல் கூடக் கொண்டுபோக வேணுமென்று அவர்களுக்குக் கற்பித்தாரென்று அர்த்தமாம்.

24. மோயீசன் என்பவன் பெரியவ
னனபிறகு விசுவாசத்தினுல் தான்
பாரவோனுடைய குமாரத்திக்கு மக
னுயிருக்கவேண்டியதில்லை என்று,

25. அநித்தியமான பாவசந்தோஷ
ங்களை அநுபவிப்பதிலும், சர்வேசுரனு
டைய ஜனங்களோடு துன்பப்படுவதே
தாவிளையென்று தெரிந்துகொண்டு,

26. எஜிப்தாருடைய பொக்கிஷங்
களிலும் கிறீஸ்துநாதருடைய அவமா
னங்களை அதிகப் பெரிதான திரவிய
மாக எண்ணினுன். ஏனெனில் இனி
வரும் சம்பாவனையை நோக்கிக்கொண்
டிருந்தான்.

27. விசுவாசத்தினுலே அவன் அத
ரிசனரைத் தரிசித்தாற்போல் உறுதி
யாயிருந்து, இராஜாவுடைய கோபாக்
கினைக்கு அஞ்சாமல், எஜிப்துத்தேசத்
தைவிட்டுப்போனுன்.

28. முதல்பேறுனவைகளைச் சங்கரி
த்தவர் இஸ்ராயேலரைத் தொடாத
படிக்கு அவன் விசுவாசத்தினுலே ஆட்
டுக்குட்டியின் இரத்தத்தைத் தெளித்
துப் பாஸ்காவைக் கொண்டாடினுன்.
(யாத். 12-21.)

29. விசுவாசத்தினுலே அவர்கள்
செங்கடலைக் கட்டாந்தரையைக் கடக்
கிறதுபோல் கடந்தார்கள். எஜிப்தி
யர் அப்படியே செய்யத்துணிந்து அமி
ழ்ந்திப்போனுர்கள். (யாத். 14-22.)

30. விசுவாசத்தினுலே அவர்கள்
ஜெரிக்கோக் கோட்டையின் மதில்களை
ஏழு நாள் சுற்றிவரவே, அவைகள் தகர்
ந்து விழுந்தன. (யோசு. 6-20.)

31. விசுவாசத்தினுல் ராஹாப் என்
னும்வேசியானவள்வேவுகாரரைச்சமா
தானத்தோடு விடுதியில் ஏற்றுக்கொ
ண்டதின் நிமித்தம் அவள் அவிசுவா
சிகளுடனேகூடச் சாகவில்லை. (யோசு.
2-1; யாக. 2-25.)

32. இதற்குமேல் இன்னம் என்ன
சொல்ல? ஜெதேயோன், பாராக்கு,
சம்சோன், ஜெப்தே, தாவீது, சாமு
வேல் என்பவர்களையும், தீர்க்கதரிசிக
ளையுங்குறித்துப் பேசுவேனுகில் நேரம்
போதாதே.

33. இவர்கள் விசுவாசத்தைக்கொ
ண்டு இராச்சியங்களை ஜெயித்தார்கள்,
நீதியைச் செலுத்திஞர்கள், வாக்குத்
தத்தங்களைக் கைக்கொண்டார்கள்,
சிங்கங்களின் வாயை அடைத்தார்கள்,
(தியா. 4-11.)

34. அக்கினியின் உக்கிரத்தை அவி
த்தார்கள், வாள் முனைக்குத் தப்பினு
ர்கள், வியாதியில் ஆரோக்கியமடைந்
தார்கள், யுத்தத்தில் வல்லவர்களானுர்
கள், அந்நியருடைய பாளையங்களை
முறியடித்தார்கள்.

35. ஸ்திரீகள் தாங்கள் சாகக்கொ
டுத்தவர்களை உயிரோடு எழுந்திருக்கப்
பெற்றுர்கள். வேறு சிலர் விடுதலை
யாகச் சம்மதியாமல் அதிக உத்தமமா
ன உத்தானத்தை அடையும்படிக்கு
வதைக்கப்பட்டார்கள்.

36. வேறு சிலர் இகழ்ச்சி நகைப்பு
களுக்கும், அடிகளுக்கும், இன்னம்
விலங்குகளுக்கும், சிறைக்கும் உள்ளா
னுர்கள்.

31. ராஹாப்பென்னும் வேசியானவள் இஸ்ராயேல் பிரஜைகளிடத்தில் சர்வேசுரன் பண்ணுகிற அற்புதங்களைக் கேள்விப்பட்டு தன் துர்நடக்கையை விட்டுச் சர்வேசுரனை விசுவாசித்து மோயீசனுலே அனுப்பப்பட்ட வேவுகாரர்களுக்குத் தன் வீட்டில் விடுதி கொடுத்ததினுலே இஸ்ராயேல் பிரஜைகள் ஜெரிக்கோக் கோட்டையைப்பிடித்து அழிக்கும்போது அந்த ஸ்திரீக்கு யாதொரு பொல்லாப்புஞ் செய்யப்படாதபடிக்கு யோசுவே கற்பித்தார்.

37. கல்லால் எறியப்பட்டார்கள், வாளால் அறுக்கப்பட்டார்கள், சோதிக்கப்பட்டார்கள், பட்டயத்தினால் வெட்டுண்டு மரித்தார்கள், செம்மறியாட்டுத்தோல்களையும் வெள்ளாட்டுத்தோல்களையும் உடுத்தித் திரிந்து, தரித்திரத்தையும் இக்கட்டுகளையும் துன்பங்களையும் பட்டநுபவித்தார்கள்.

38. இவர்கள் உலகத்திலிருக்க உலகம் பாத்திரமாயிருக்கவில்லை; வனாந்தரங்களிலும், மலைகளிலும், கெபிகளிலும், பூமியின் சுரங்கங்களிலும் சுற்றித் திரிந்தார்கள்.

39. இவர்கள் எல்லாரும் விசுவாசத்தின் சாட்சியத்தால் புகழப்பட்டிருந்தும், வாக்குத்தத்தத்தைப் பெற்றுக்கொள்ளவில்லை.

40. நாமில்லாமல் இவர்கள் சம்பூரணம் அடையாதபடிக்குச் சர்வேசுரன் நமக்கு அதிக மேன்மையான ஒரு தயவைச்செய்யச் சித்தமானார்.

## 12-ம். அதிகாரம்.

*பிதாப்பிதாக்களையும் யேசுநாதரையும் போலவே துன்பதுரிதங்களை மனத்திடமாய்ச் சகித்துக்கொள்ளப் புத்திசொல்லுகிறார்.*

1. ஆதலால் திரண்ட மேகம்போன்ற இம்மாத்திரம் சாட்சிகள் நம்மைச் சூழ்ந்திருக்க, நாம் எல்லாப் பாரத்தையும் நமதுமேல் சுமந்த பாவத்தையும் தள்ளிவிட்டு, (உரோ. 4-4.)

40. ஜெதேயோன், சம்சோன் முதலானவர்கள் ஆண்டவர்மேல் வைத்த விசுவாசத்தைக்கொண்டு பிலிஸ்தேயர், சல்தேயர் முதலான பற்பல சத்துருக்களோடே யுத்தஞ்செய்து வெற்றியடைந்தார்கள். அந்த விசுவாசத்தைக்கொண்டே இஸ்ராயேல் பிரஜையை நடத்தி நீதியைச் செலுத்தினார்கள். இஸ்ராயேலருக்கு வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட பூமியைச் சுதந்தரித்துக்கொண்டார்கள். விசுவாசத்தினால் தாவீது, சம்சோன், தனியேல் சிங்கங்களின் வாயினின்று இரட்சிக்கப்பட்டார்கள். விசுவாசத்தினால் மூன்று வாலர் அக்கினிச்சுவாலையினின்று காக்கப்பட்டார்கள். விசுவாசத்தினால் தாவீது, எலியாஸ் முதலானவர்கள் வாள்முனைக்குத் தப்பினார்கள். விசுவாசத்தினால் எசேக்கியாஸ், தோபியாஸ், ஜோப் முதலானவர்கள் வியாதியாய்க்கிடந்து சௌக்கியத்தை அடைந்தார்கள். விசுவாசத்தினால் இஸ்ராயேல் பிரஜைகளின் பல வீரர் வீரசூரத்தை அடைந்தார்கள். விசுவாசத்தினால் பிறதேசத்தாருடைய படைகளை முறிய அடித்தார்கள். விசுவாசத்தினால் சரேத்தாள் விதவையும், சுனேமித்தாளும் மரித்த தங்கள் பிள்ளைகளை எலியாஸ், எலிசேயுஸ் தீர்க்கதரிசிகளினால் மரித்தவர்களில் நின்று எழுப்பப் பெற்று உயிரோடே கைக்கொண்டார்கள். விசுவாசத்தினால் எலேயாசார் முதலானவர்கள் மோட்சத்தில் உயிர் வாழ விரும்பி, வேதத்துக்கு விரோதமான காரியங்களைச் செய்யாதபடிக்குப் பிராணனைக்கொடுக்கத் துணிந்தார்கள். விசுவாசத்தினால் அநேகர் அடியையும் நிந்தையையும் விலங்குகளையும் பொறுமையோடே சகித்தார்கள்.

விசுவாசத்தைப்பற்றி நபோத், எலியாஸ் முதலானவர்கள் கல்லெறியப்பட்டார்கள். இசையாஸ் முதலான சிலர் இரம்பத்தால் அருக்கப்பட்டார்கள். சிலர் வாள்முனையால் மரித்தார்கள். சிலர் விசேஷமாய்த் தீர்க்கதரிசிகள் ஆட்டுத்தோல்களை உடுத்திக்கொண்டு தரித்திரம், கஸ்தி, துன்பங்களை அநுபவித்து உலகம் அவர்களுக்கு அபாத்திரமாயிருந்ததினால், வனாந்தரங்களில் திரிந்து, மலைகளிலும் கெபிகளிலும் பூமியின் சுரங்கங்களிலும் சஞ்சரித்துச் சிதறடிக்கப்பட்டார்கள். அப்படிப்பட்டவர்கள் எல்லாரும் விசுவாசத்தினால் அத்தனை பெரிதானவைகளைச் செய்திருந்தும், விசுவாசத்தைப்பற்றி அத்தனை துன்பங்களை அநுபவித்திருந்தும், தங்கள் விசுவாசத்துக்குரிய நித்திய சம்பாவனையை அப்போது கைக்கொள்ளவில்லை. சர்வேசுரன் நமதுமேல் வைத்த அபரிமித பட்சத்தின் நிமித்தம் நம்முடனேகூட அவர்கள் இதைக் கைக்கொள்ளும்படி இக்காலம்வரைக்கும் அவர்களைக் காத்துக்கொண்டிருக்கப் பண்ணினதொன்று அர்த்தமாம்.

2. நமது விசுவாசத்தின் ஆதி கர்த்தாவும், அதைச் சம்பூரணமாக்கிறவருமாகிய யேசுநாதரை எப்போதும் கண்முன்பாக வைத்துக்கொண்டு, நமக்குக் குறிக்கப்பட்டிருக்கிற யுத்தத்துக்குப் பொறுமையோடு ஓடக்கடவோம். அவர் சந்தோஷ ஜீவியம் தமக்குமுன் வைக்கப்பட்டிருக்க, அவமானத்துக்குக் கூச்சப்படாமல் சிலுவையை ஏற்றுக்கொண்டு, இப்பொழுது சர்வேசுரனுடைய வலதுபாரிசத்தில் உட்கார்ந்திருக்கிறார்.

3. அப்படியே நீங்களும் களைத்து உங்கள் ஆத்துமத்தில் சோர்ந்துபோகாதபடிக்குப் பாவிகளால் தமக்கு விரோதமாய்ச் செய்யப்பட்ட இவ்வித எதிரிடையைச் சகித்த அவரையே நினைவுகூருங்கள். (உரோ. 15-3.)

4. பாவத்துக்குவிரோதமாய்ப் போராடுவதில் நீங்கள் இன்னும் இரத்தஞ் சிந்துமட்டும் எதிர்த்து நிற்கவில்லையே.

5. பின்னும்: என் மகனே, ஆண்டவருடைய சிட்சையை அசட்டை பண்ணாதே; அவரால் கண்டிக்கப்படும்போது சோர்ந்துபோகாதே என்று அவர் தம் சொந்த மக்களுக்குச் சொல்லுகிறதுபோல் உங்களுக்குச் சொல்லுகிற ஆறுதலான வார்த்தைகளை மறந்து போனீர்கள். (பழ. 3-2; காட்சி. 3-19.)

6. ஏனெனில் ஆண்டவர் தாம் சிநேகிக்கிறவனைத் தண்டிக்கிறார். தாம் பிள்ளையாக ஏற்றுக்கொள்ளுகிற எவனையும் பிரம்பால் அடிக்கிறார்.

7. அவர் தண்டிக்கும்போது பொறுமையில் நிலைக்கொள்ளுங்கள். சர்வேசுரன் உங்களைத் தம்முடைய புத்திரர்களைப்போல் நடத்துகிறார். தகப்பன் கண்டியாத பிள்ளை உண்டோ?

8. அன்றியும் (பிள்ளைகள்) எல்லோரும் சிட்சைக்குள்ளாயிருக்கையில், நீங்கள் அதற்குப் புறம்பாயிருந்தால், நீங்கள் சோர மக்களேயன்றிச் சுய மக்களல்லவே.

9. அல்லாமலும், மாம்சத்தின்படி நமக்குத் தந்தைகளானவர்கள் நம்மைச் சீர்படுத்தும்போது அவர்களுக்கு நாம் அஞ்சி நடந்திருக்க, நமது ஞானத்தும தந்தைக்கு எவ்வளவோ அதிகமாய்க் கீழ்ப்படிந்து பிழைக்கவேண்டியது?

10. அவர்களோ தங்களுக்கு இஷ்டமானபடி கொஞ்சத்தேசகாலமாத்திரம் நம்மைச் சீர்திருத்தினார்கள். இவரோவெனில் தம்முடைய பரிசுத்ததனத்தை நாம் பெற்றுக்கொள்வதற்கு உதவுகிறவனாயில் நம்மைச் சீர்திருத்துகிறார்.

11. ஆகிலும் எந்தத் தண்டனையும் தற்காலத்தில் சந்தோஷமாகத் தோன்றாமல் துக்கமாகத் தோன்றும். ஆனால் அதில் பழகிப்போனவர்களுக்குப் பின்னால் அது மிகுந்த சமாதானத்துக்குரிய நீதிப்பலனை பெறுவிக்கும்.

11. துன்பங்களில் கிறீஸ்துவனுக்கு ஆறுதல் வருவிக்கக்கூடிய ஐந்து பிரதான முகாந்தரங்கள் உண்டு. 1-வது. அந்தத் துன்பங்களுக்குச் சர்வேசுரன் தாம் பட்சமுள்ள தகப்பனைப்போல் காரணமாயிருக்கிறார்.

2-வது. சர்வேசுரன் நமக்கு அனுப்புகிற துன்பங்கள் அவருடைய பட்சத்தின் அத்தாட்சிகளாயிருக்கின்றன.

3-வது. சர்வேசுரனுக்குப் பிரியமான பிள்ளைகளாக ஏற்றுக்கொள்ளப்பட்டோமென்பதற்கு அவைகள் அத்தாட்சிகளாயிருக்கின்றன.

4-வது. நாம் சர்வேசுரனுக்குப் பிள்ளைகளாயிருக்கிறபடியினாலே துன்பங்கள் அவசியமாய் நமக்கு வரவேண்டியது. இல்லாவிட்டால் சர்வேசுரனுக்கு நாம் பிள்ளைகளாயிருக்கமாட்டோம். சர்வேசுரன் நம்மைத் தம்முடைய பிள்ளைகளாக ஏற்றுக்கொள்ளாமல் நம்மை விபசாரத்தின் பிள்ளைகள்போல் எண்ணித் தள்ளுவார்.

5-வது. துன்பங்கள் தற்காலத்திலே கசப்பாய்த் தோன்றினாலும் பிற்பாடு நித்தியமான சந்தோஷத்துக்குக் காரணமாயிருக்கின்றன.

12. ஆகையால் சோர்ந்த கைகளையும் தளர்ந்தமுழங்கால்களையும் திரும்ப நிமிர்த்தி, (இசை. 35-3.)

13. உங்களில் நொண்டுகிறவன் பிசகிநடவாமல், குணமாகும்படிக்கு உங்கள் கால்களைச் செவ்வழியாய் நடக்கப் பண்ணுங்கள்.

14. சமஸ்தரோடும் சமாதானத்தையும் பரிசுத்ததனத்தையும் நாடுங்கள். பரிசுத்தமில்லாமல் சர்வேசுரனை ஒருவனும் தரிசிக்கமாட்டான். (உரோ. 12-18.)

15. எவனும் சர்வேசுரனுடைய வரப்பிரசாதத்தைத் தவறவிடாதிருக்கவும், யாதொரு கசப்பானவேர் முளைத்தெழும்பி, தடை உண்டாக்குவதினால் அநேகர் மாசுபடாதிருக்கவும் கண்ணுண்டாயிருங்கள்.

16. எவனும் காமாதுரனாகவும், ஒருவேளைப் போஜனத்துக்காகத் தன் சிரேஷ்ட புத்திர பாத்தியத்தை விற்றுப் போட்ட ஏசாவைப்போல் லௌகீகனாகவும் வேண்டாம். (ஆதி. 25-33.)

17. ஏனெனில் அவன் மறுபடியும் ஆசீர்வாதத்தைச் சுதந்தரித்துக்கொள்ள விரும்பியும், ஆகாதவனாகத் தள்ளுண்டு போனான் என்று அறிந்துகொள்ளுங்கள். அவன் அதை அழுகையோடு கேட்டுக் கொண்டபோதிலும், (தன் தகப்பன்) மனம் மாறுவதற்கு இடங் காணவில்லை. (ஆதி. 27-38.)

18. அல்லாமலும் ஸ்பரிசிக்கக்கூடிய மலையினிடத்திற்கும், பற்றியெரிகிற அக்கினியினிடத்திற்கும், மேகமந்தாரம், இருள், புசல் ஆகிய இவைகளிடத்திற்கும், (யாத். 19-12 ; 20-21.)

19. எக்காள முழக்கத்தினிடத்திற்கும், வார்த்தைகளின் சத்தத்தினிடத்திற்கும்நீங்கள் வந்துசேரவில்லை. அந்த முழக்கத்தைக் கேட்டவர்கள் அது தங்களைநோக்கிப் பேசாதபடிக்கு மிகவும் கெஞ்சினார்கள்.

20. ஏனெனில் ஒரு மிருகமாவது மலையைத் தொட்டால், அது கல்லெறியுண்டு சாகவேண்டும் என்று சொல்லப்பட்டதைத் தாங்கமாட்டாதிருந்தார்கள். (யாத். 19-12, 13.)

21. அந்தக் காட்சி அம்மாத்திரம் பயங்கரமுள்ளதாயிருந்தது. மோயீசனும்: நான் மிகவும் பயந்து நடுநடுங்குகிறேன் என்றான்.

22. நீங்களோ, சீயோன் மலையினிடத்திற்கும், ஜீவந்தர கடவுளின் நகரமாகிய பரலோக எருசலேமினிடத்திற்கும், அநேகம் ஆயிரம் ஆயிரமானதேவதூதர் கூட்டத்திற்கும், (கலா. 4-26.)

23. முதற் பேறானவர்களாகப் பரலோகத்தில் பேர் வரையப்பட்டவர்களின் கூட்டத்திற்கும், சமஸ்தருக்கும் நடுவராகிய கடவுளிடத்திற்கும், உத்தமரான நீதிமான்களுடைய ஆத்துமங்களிடத்திற்கும்,

15. யாதொரு வாக்குவாதமாவது, யாதொரு பொய்ப்போதகமாவது, யாதொரு துர்ப்புத்தி துர்மாதிரியாவது கசப்பான வேர்போலே உங்களுக்குள்ளே முளைத்து உங்கள் சமாதானத்தையாவது உங்கள் விசுவாசத்தையாவது உங்கள் புண்ணியநடக்கையையாவது கெடுக்கத் துவக்குகிறதைக் கண்டால், அவைகளை உங்களிடத்தில் வளரவொட்டாமல் வேரோடு களைந்து, பிடுங்கி, எறிந்துபோடுங்கள் என்று அர்த்தமாம்.

22-23. சத்திய திருச்சபையின் இலட்சணங்கள் காணப்படுகின்றன. 1-வது. சீயோன் மலையின் மேலே கட்டப்பட்ட நகரத்துக்கொப்பாய் எல்லாருடைய பார்வைக்கும் பிரசித்தமாய்க் காணப்படுகின்றது. 2-வது. பரம எருசலேமைப்போலே ஒன்றாகவும் பரிசுத்தமாகவும் இருக்கின்றது. 3-வது. சகலமான அர்ச்சியசிஷ்டவர்களும் விளங்குகிற

24. புது உடன்படிக்கையின் மத்தியஸ்தராகிய யேசுவினிடத்திற்கும், ஆபேலினுடைய இரத்தத்தைப்பார்க்க அதிக நன்றாய்ப்பேசுகிற இரத்தத் தெளிப்பினிடத்திற்கும் வந்துசேர்ந்திருக்கிறீர்கள்.

25. (உங்களிடத்தில்) பேசுகிறவரை அலட்சியம்பண்ணுதபடி பார்த்துக்கொள்ளுங்கள். ஏனெனில் பூமியிலே பேசினவரை அலட்சியம் பண்ணினவர்கள் தப்பிப்போகாதிருக்க, பரலோகத்தினின்று பேசுகிறவரை நாம் புறக்கணித்தால், எப்படித்தான் தப்பித்துக்கொள்வோம்?

26. அக்காலத்திலே தம்முடைய வாக்கால் பூமியை அசைத்தவர் இன்னும் ஒருதரம் பூமியைமாத்திரமல்ல, வானலோகத்தையும் அசைப்போம் என்று இப்போது வாக்குத்தத்தம் பண்ணியிருக்கிறார். (அக். 2-7.)

27. இன்னும் ஒருதரம் என்பது அசையாப் பொருட்கள் (எந்நாளும்) நிலைபெற்றிருக்கும்படியாக, அசையும் பொருட்கள் (தற்காலத்துக்குச்) சிருஷ்டிக்கப்பட்டவைகளாகக்கொள்ள, மாறிப்போம் என்பதைக் குறிக்கின்றது.

28. ஆதலால் அசையாத இராச்சியத்தைப் பெறுகிறவர்களாகிய நாம் வரப்பிரசாதத்தை அடைந்து அதின் வழியாய்ப் பயத்தோடும் வணக்கத்தோடும் சர்வேசுரனுக்கு உகந்த ஊழியஞ் செய்வோமாக.

29. ஏனெனில் நம்முடைய சர்வேசுரன் சுட்டெரிக்கும் அக்கினியாயிருக்கிறார். (உபா. 4-24.)

சாதாரணமாயிருக்கின்றது. 4-வது. மூத்தோராகிய அஸ்திவாரத்தின்மேல் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது. 5-வது. யேசுநாதர் அதற்குத் தலைவருமாய்ப் பிரதான ஆசாரியருமாய்ப் பலியுமாயிருக்கிறார். அவருடைய இரத்தத்தினாலே திருச்சபைக் கழுவப்பட்டுக் கறை திரையில்லாததும் மாசற்றதுமான பத்தினியாகச் சர்வேசுரனுடைய சமுகத்தில் நிறுத்தப்பட்டிருக்கிறது.

29. ஆபேலினுடைய இரத்தம் அதைச் சிந்தச் செய்த காயீன் பேரிலே பழிவாங்க அபயமிட்டு நீதியுள்ள தண்டனையைக் கேட்டுநின்றது. ஆனால் யேசுநாதருடைய திரு இரத்தம் அதைச் சிந்துவதற்குக் காரணமாகிய சகல பாவிகளுக்காகவும் தமது பிதாவாகிய சர்வேசுரனுடைய சமுகத்தில் பொறுத்தலைக் கேட்டுக்கொண்டு வருகிறது. அத்தனை தயவாய் நமக்காக மனுப்பேசுகிற யேசுநாதருடைய திரு இரத்தத்தை நாம் புறக்கணியாதிருக்கவும், அந்தத் திருச்சபையின் விசுவாசத்தை விடாதிருக்கவும் எச்சரிக்கையாயிருக்கக்கடவோம். ஏனெனில் பூவுலகத்தில் பேசினவனுடைய வார்த்தையைப் புறக்கணித்தவர்கள் சர்வேசுரனுடைய தண்டனைக்குத் தப்பவில்லையென்றால், நாம் அவருடைய திருக்குமாரனுக்குச் செவிகொடாதிருந்தால் அவருடைய கோபத்துக்கு எப்படித் தப்புவோம்? சீனாய்மலையிலே மோயீசனோடு பேசின சர்வேசுரனுடைய வாக்குப் பூமியை அசையப்பண்ணினது. யேசுநாதர் நடுத்தீர்க்க வரும்போதோவெனில், அவருடைய வாக்குப் பூலோகத்தையும் வானலோகத்தையும் அசைத்து இனி என்றென்றைக்கும் அசையப்படாத தம்முடைய இராச்சியத்தைப் பரலோகத்திலே ஸ்தாபிப்பார். என்றென்றைக்கும் அசையப்படாத யேசுநாதருடைய இராச்சியத்துக்குப் பங்காளிகளாயிருக்கிறதற்குத் தேவ இஷ்டப்பிரசாதத்தை அடைந்திருக்கிறோம். அதைக்கொண்டு நாம் பயத்தோடும் வணக்கத்தோடும் சர்வேசுரனுக்கு ஊழியம் பண்ணக்கடவோம். ஏனெனில், நம்முடைய சர்வேசுரன் சுட்டெரிக்கிற அக்கினியாயிருக்கிறார். தம்முடைய கற்பனைகளை மீறத் துணிகிறவர்களை நரகாக்கினையில் அகோரமாய்த் தண்டித்து அதில் சுட்டெரிப்பார். தம்மைச் சிநேகித்துச் சேவிக்கிறவர்களைத் தம்முடைய சிநேக அக்கினிச் சூளையாகிய மோட்சத்தில் என்றென்றைக்கும் ஆனந்த அக்களிப்பால் எரியப்பண்ணுவார் என்றர்த்தமாம்.

## 13-ம். அதிகாரம்.

*பிறரையும், தன்னையும், வேதத்தையும் பற்றிப் பற்பல புத்திமதிகளைச் சொல்லி நிருபத்தை முடிக்கிறார்.*

1. சகோதர அன்பு உங்களில் நிலைத்திருப்பதாக.

2. அந்நியரை உபசரிக்க மறவாதிருங்கள். அதினாலே சிலர் தாங்கள் அறியாமலே தேவதூதர்களை உபசரித்தது உண்டு. (உரோ. 12-13; 1. இரா. 4-9; ஆதி. 18-3.)

3. விலங்கிடப்பட்டவர்களுடனே கூட நீங்களும் விலங்கிடப்பட்டவர்கள் போல், அவர்களை நினைத்துக்கொள்ளுங்கள். நீங்களும் ஒரு சரீரத்தோடிருக்கிறீர்களென்று எண்ணி, துன்பப்படுகிறவர்களையும் (மறவாதேயுங்கள்.)

4. யாவருக்குள்ளும் விவாகமானது சங்கைக்குரியதாயும்,விவாகமஞ்சமானது அசுசிப்படாததாயும் இருப்பதாக. காமாதுரர்களையும் விபசாரரையும் தெய்வம் நடுத்தீர்க்கும்.

5. உங்கள் ஒழுக்கம் பேராசையின்றி, உள்ளது போதுமென்று இருக்கட்டும். நான் உன்னைவிட்டு விலகுவதுமில்லை, உன்னைக் கைவிடுவதுமில்லை என்று அவரே சொல்லியிருக்கிறார். (யோசு. 1-5.)

6. ஆகையால், ஆண்டவரே எனக்கு உதவி; மனிதன் எனக்கு என்னசெய்வானோவென்று பயப்படமாட்டேன் என்று நாம் நம்பிக்கையோடு சொல்லலாமே. (சங். 117-6.)

7. உங்களுக்குத் தேவ வாக்கியத்தைப் போதித்து, உங்களுக்கு ஞான வழிகாட்டினவர்களை நினைவுகூருங்கள். அவர்களுடைய நடக்கையின் முடிவை உற்றுப்பார்த்து, அவர்களுடைய விசுவாசத்தைப் பின்பற்றுங்கள்.

8. யேசுக்கிறீஸ்துநாதர் நேற்றும் இருந்தவர்; இன்றும் இருக்கிறவர். அவரே என்றும் இருப்பவர்.

9. விபரீதமும், நூதனமுமான போதகங்களால் இழுபட்டுப் போகவேண்டாம்; ஏனெனில் இருதயத்தைப் போசனங்களால் அல்ல, இஷ்டப்பிரசாதத்தால் உறுதிப்படுத்துவது உத்தமம். போசன வித்தியாசம் பார்த்துநடந்தவர்களுக்கு அதினாலே ஒரு பலனுமாகவில்லை.

10. நமக்கு ஒரு பலிபீடமுண்டு. அதிலுள்ளவைகளைப் புசிப்பதற்குப் (பழைய) ஏற்பாட்டின் கூடாரத்துக்கு ஊழியஞ் செய்கிறவர்களுக்குச் சுதந்தரமில்லை.

11. ஏனெனில் எந்த மிருகங்களின் இரத்தம் பாவப்பரிகாரமாக அதிகுருப்பிரசாதியினால் பரிசுத்த ஸ்தலத்துக்குள் கொண்டுவரப்படுகிறதோ, அந்த மிருகங்களின் உடல்கள் பாளயத்துக்குப் புறம்பேசுட்டெரிக்கப்படுகின்றன. (லேவி. 16-27.)

12. அதினிமித்தம் யேசுநாதரும் தம்முடைய இரத்தத்தைக்கொண்டு ஜனங்களை அர்ச்சிக்கும்படி பட்டணத்தின் வாசலுக்குப் புறம்பே பாடுபட்டார்.

9. உங்களுக்குப் போதிக்கப்பட்ட சுவிசேஷத்தில் ஸ்திரமாய் நிலைத்திருந்து, நூதனமும் விபரீதமுமான பதிதத் துர்ப்போதனைகளால் மயங்கிக் கெடாதபடி எச்சரிக்கையாயிருங்கள். விசேஷமாய்ப் பழைய ஏற்பாட்டின் ஆசாரப்படி பலியிடப்பட்ட போஜன பதார்த்தங்களின்மேல் நீங்கள் விசுவாசப்பற்றுதல் வைக்காமல், இஷ்டப்பிரசாதத்தின்மேலும், இருதயப் பரிசுத்ததனத்திலும் பற்றுதல் வைப்பீர்களாக. அந்தப் பதார்த்தங்களைப் பொசித்த யூதர்கள் அதினால் யாதொரு பிரயோசனத்தையும் அடையவில்லை. ஆகிலும் ஒரு பலிபீடமும் பலியிடப்பட்ட தேவநற்கருணையாகிற போஜனமும் நமக்கு உண்டு. அந்தப் போஜனத்தினால் நம்முடைய இருதயம் தேவ இஷ்டப்பிரசாதத்தில் பலப்படுகிறது. ஆனால் பழைய ஏற்பாட்டை அநுசரிக்க வேணுமென்கிறவர்கள் இந்தத் திவ்விய போஜனத்தைப் பொசிக்கக்கூடாதென்று அர்த்தமாம்.

13. ஆதலால் நாம் அவருடைய நிந்தையைச் சுமந்துகொண்டு, பாளையத்துக்குப் புறம்பே அவரிடம் புறப்பட்டுப்போவோமாக.

14. ஏனெனில் நமக்கு இங்கே நிலைபெற்ற பட்டணமில்லை. இனிவரும் பட்டணத்தையே நாடிப்போகிறோம். (மிக். 2-10.)

15. ஆகையால் அவரைக்கொண்டு தேவநாமத்தை ஸ்துதித்து வெளியாக்கிற உதடுகளின் கனியாகிய தேவ தோத்திரப் பலியை எந்நாளும் சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுப்போமாக.

16. இதன்றியே தர்மஞ்செய்வதையும், உங்களுக்கு உள்ளதை நிரந்து கொள்வதையும் மறவாதிருங்கள். ஏனெனில் இப்படிப்பட்ட பலிகளால் தெய்வ சனுவை அடைகிறோம்.

17. உங்கள் ஞானவழிகாட்டிகளுக்குப் பணிந்து அடங்கிநடங்கள். ஏனெனில் அவர்கள் உங்கள் ஆத்துமங்களுக்காக உத்தரவாதம் பண்ணவேண்டியவர்களாகக்கொள்ள, உங்கள்மேல் விழிப்பாயிருக்கிறார்கள். அவர்கள் அதைச் சந்தோஷத்தோடேயன்றி ஆயாசத்தோடு செய்யவிடாதேயுங்கள். ஏனெனில் இப்படிச்செய்யவிடுவது உங்களுக்கு யோக்கியம் அல்ல.

18. எங்களுக்காக வேண்டிக்கொள்ளுங்கள். ஏனெனில் எல்லாக் காரியங்களிலும் ஒழுங்காய் நடக்கவேண்டுமென்று நாம் விரும்புவதினால், நல்மனச்சாட்சியுடையவர்களாய் இருக்கிறோமென்று நிச்சயித்திருக்கிறோம். (2. கொ. 1-12.)

19. விசேஷமாய் நான் அதிசீக்கிரத்தில் உங்களிடம் வந்து சேருவதற்காக நீங்கள் இப்படிச் செய்யவேண்டுமென்று மிகவும் வருந்திக்கேட்டுக்கொள்ளுகிறேன்.

20. கடைசியாய் நித்திய உடன்படிக்கையின் இரத்தத்தினாலே ஆடுகளின் பெரிய மேய்ப்பரான நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதரை மரித்தோரினின்று எழுந்துவரச்செய்த சமாதானத்தேவன்,

21. யேசுக்கிறீஸ்துநாதரைக்கொண்டு தமது சமுகத்திற்குப் பிரியமானதை உங்களிடத்தில் நடப்பித்து, நீங்கள் தம்முடைய சித்தத்தின்படி செய்ய உங்களைச் சகலவித நற்கிரியைகளுக்கும் இணைக்குவாராக. யேசுக்கிறீஸ்துநாதருக்கே அநவரதகாலமும் மகிமையுண்டாவதாக. ஆமென்.

22. சகோதரரே, இந்த ஆறுதலான வார்த்தைகளை நீங்கள் பொறுமையாய் ஏற்றுக்கொள்ள உங்களை மன்றாடுகிறேன். ஏனெனில் உங்களுக்கு வெகு சுருக்கமாய் எழுதுகிறேன்.

23. சகோதரனாகிய தீமோத்தேயு விடுதலையாக்கப்பட்டானென்று அறிந்துகொள்ளுங்கள். அவர் சீக்கிரத்தில் வந்து சேர்ந்தால், அவருடனேகூட நான் வந்து, உங்களைக் காண்பேன்.

24. உங்கள் ஞானவழிகாட்டிகள் யாவருக்கும், சமஸ்த பரிசுத்தவான்களுக்கும் மங்களஞ் சொல்லுங்கள். இத்தாலியாவிலுள்ள சகோதரர் உங்களுக்கு மங்களஞ் சொல்லுகிறார்கள்.

25. வரப்பிரசாதம் உங்கள் அனைவரோடுங்கூட இருப்பதாக. ஆமென்.

13. வருத்தம், கஸ்தி, உபத்திரவம் ஆகிய சிலுவையைச் சுமந்துகொண்டு நாம் கிறீஸ்துநாதரிடம் செல்லவேண்டுமென்று நமக்கு இவ்வசனத்தில் கற்பிக்கப்படுகிறது.



# பாயிரம்.

பன்னிரண்டு அப்போஸ்தலர்களுக்குள் ஒருவரும், அப். அர்ச். யூதாவுக்குச் சகோதரரும், எருசலேம் பட்டணத்துக்கு முதல் மேற்றிராணியாருமான அர்ச். சின்ன யாகப்பர் இந்த நிருபத்தைக் கர்த்தர் அவதாரயான ஏறக்குறைய 61-ம் வருஷத்தில் எழுதினார். விசுவாசத்துக்கும் நல் நடக்கைக்கும் உரிய அநேக சுகிர்த புத்திமதிகள் இதில் அடங்கியிருக்கின்றன. இது எல்லாக் கிறீஸ்துவர்களுக்கும் பொதுவாக எழுதப்பட்டதினால் சாதாரண நிருபமென்று சொல்லப்படுகிறது.



# அப்போஸ்தலரான அர்ச். இயாகப்பர்

## எழுதிய

# பொது நிருபம்.

## முதல் அதிகாரம்.

*துன்பங்களின் பிரயோஜனம் ஏதென்பதும் விசுவாசத்தோடு சர்வேசுரனைப் பிரார்த்திக்கவேண்டுமென்பதும், சர்வநன்மைக்கும் சர்வேசுரன் காரணமாயிருப்பதல்லாதே பாவத்துக்கு அவர் காரணமல்லவென்பதும், சத்தியத்தைக் கேட்பது போதாமல் அதை அநுசரிக்கவேண்டுமென்பதும்.*

1. சர்வேசுரனுக்கும் நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துநாதருக்கும் ஊழியனாகிய இயாகப்பன் சிதறிப் போயிருக்கிற பன்னிரண்டு கோத்திரங்களுக்கும் வாழ்த்துதல் சொல்லி எழுதுவது :

2. என் சகோதரரே, உங்களுக்குப் பற்பல சோதனைகள் நேரிட்டிருக்கும் போது, அது அவ்வளவும் சந்தோஷமென்று எண்ணிக்கொள்ளுங்கள்.

3. ஏனெனில் உங்கள் விசுவாசத்தின் பரீட்சை பொறுமையைப் பெறுவிக்கிறதென்றுஅறிந்துகொள்ளுங்கள்.

4. பொறுமையோ நீங்கள் யாதொன்றிலும் குறையுள்ளவர்களாயிராமல், உத்தமரும் பூரணருமாய் இருக்கும்படி உத்தம கிரியையைப் பிறப்பிக்கின்றது. (உரோ. 5-3.)

5. உங்களில் ஒருவன் ஞானத்தில் குறையுள்ளவனாயிருந்தால், கடிந்துகொள்ளாமல் யாவருக்கும் ஏராளமாய்க் கொடுக்கிற சர்வேசுரனிடத்தில் கேட்கக்கடவான். அப்போது அவனுக்குக் கொடுக்கப்படும். (மத் 7-7.)

1. **ஊழியனாகிய இயாகப்பன் :**— பன்னிரண்டு அப்போஸ்தலர்களில் ஒருவரும், அப்போஸ்தலராகிய அர்ச். யூதாவுக்குச் சகோதரரும், எருசலேம் பட்டணத்துக்கு முதல்மேற்றிராணியாருமான அர்ச். சின்ன யாகப்பர் இந்த நிருபத்தை கர்த்தர் அவதாரமாயின 61-ம் வருஷத்தில் எழுதினார். விசுவாசத்துக்கும் நல்நடக்கைக்கும் உரிய அநேக சுகிர்த புத்திமதிகள் இதில் அடங்கியிருக்கின்றன. (பன்னிரண்டு கோத்திரங்கள்) யூதர் மார்க்கத்திலிருந்து கிறீஸ்தவர்களாகி அஞ்ஞானிகள் நடுவில் வசித்து வந்தவர்கள்.

2. **சோதனைகள் :**— இவ்விடத்திலும் இந்த நிருபத்தில் இன்னம் பல இடங்களிலும் சோதனை என்பது உபத்திரவம், கஸ்தி, துன்பங்கள் என்று அர்த்தங்கொள்ளும்.

6. ஆனால் அவன் சற்றுந் தத்தளியாமல், விசுவாசத்தோடு கேட்கக்கடவான்; ஏனெனில் தத்தளிக்கிறவன் காற்றினால் அடிபட்டு எப்பக்கத்திலும் கொண்டுபோகப்படுகிற கடல் அலைக்கு ஒப்பாயிருக்கிறான்.

7. அப்படிக்கொத்த மனுஷன் ஆண்டவரிடத்தில் ஏதாகிலும் பெற்றுக்கொள்ளலாமென்று எண்ணவேண்டியதில்லை.

8. இருமனமுள்ள மனிதன் தன் சகல வழிகளிலும் நிலையற்றவனுமே.

9. தாழ்மையிலிருக்கிற சகோதரன் தன் உயர்வை நினைத்து; மகிமைபாராட்டக்கடவான்.

10. ஐசுவரியவான் தன் தாழ்மையில் மகிமைபாராட்டக்கடவான். ஏனெனில் அவன் புல்லின் பூவைப்போல் ஒழிந்துபோவான். (பிரச. 14-1-18; இசை. 40-6; 1 இரா. 1-24.)

11. எப்படியெனில் சூரியன் உக்கிரத்தோடே உதயமாகிப் புல்லை உலர்த்தவே, பூ உதிர்ந்து, அதின் அழகான வடிவும் அழிந்துபோயிற்று. அத்தன்மைபோல் ஐசுவரியவானும் தன் வழிகளில் வாடுவான்.

12. சோதனையைச் சகிக்கிறவன் பாக்கியவான்; ஏனெனில் அவன் பரீட்சிக்கப்பட்டபின், சர்வேசுரன் தம்மைச் சிநேகிக்கிறவர்களுக்கு வாக்குத்தத்தம் பண்ணின ஜீவியகிரீடத்தைப் பெற்றுக்கொள்ளுவான். (ஜோப் 5-17; 2 தீமோ. 4-8.)

13. எவனும் சோதிக்கப்படுகையில், சர்வேசுரனாலே நான் சோதிக்கப்படுகிறேனென்று சொல்லாதிருப்பானாக. ஏனெனில் சர்வேசுரன் தின்மைக்குச் சோதிப்பவரல்ல. ஆகையால் அவர் எவனையும் சோதிக்கிறவரல்ல.

14. ஆனால் அவனவன் தன் சுய இச்சைகளால் இழுபட்டு, மருண்டு, சோதனைப்படுகிறான்.

10-11. தாழ்மை அல்லது எளிமையான அந்தஸ்திலிருக்கிற சகோதரன் அதாவது கிறீஸ்துவன் உலகத்தார் முன்பாகத் தாழ்ந்தவனாயிருந்தாலும் மெய்யாகவே சர்வேசுரனுடைய சமுகத்திலே மேன்மையுள்ளவனாயிருக்கிறதுந்தவிர, அப்படிப்பட்ட மேன்மை ஊழியுள்ளகாலமாய் அவனுக்கு நிலைநிற்குமென்பதினால், அவன் தன் மேன்மையிலே மகிமைபாராட்டுவது நியாயந்தான். ஐசுவரியவானோவெனில் உலகத்தார் முன்பாக மேன்மையுள்ளவனாய்த் தோன்றினாலும், அவனுடைய ஐசுவரியம் அவனிடத்தில் நிலைநில்லாமல் காலமே மலர்ந்து சாயங்காலம் உலர்ந்துபோகிற பூவைப்போல் கொஞ்சத்துக்குள்ளே அவனைவிட்டுப் போகிறபடியினாலே மெய்யாகவே சர்வேசுரனுடைய சமுகத்தில் தரித்திரனாயிருக்கிறான். ஆகையால் அவன் புத்திமானாயிருப்பானாகில், தற்காலம் தனக்குள்ள ஆஸ்திகளைப்பற்றி மேன்மைபாராட்டாமல், சர்வேசுரன் சமுகத்தில் தனக்குள்ள எளிமையைப் பற்றி மகிமைபாராட்டக்கடவான் என்றறியவும்.

14-15. இதிலே அர்ச். இயாகப்பர் இருவகைச் சோதனைகளைப்பற்றிப் பேசுகிறார். அதின் முதலாவது: கஸ்தி, துன்பம், வியாதி, தரித்திர முதலிய பாவத்துக்குச் சம்பந்தப்படாததும், ஆத்துமத்துக்குப் புறத்திப்பட்டதுமான சோதனைகள். அப்படிப்பட்ட சோதனைகளைச் சர்வேசுரன்தான் அனுப்புகிறார். ஆகையால் நல்ல கிறீஸ்துவன் அவைகளெல்லாம் சர்வேசுரனாலே அனுப்பப்பட்ட சோதனைகளென்று அறிந்து, சர்வேசுரனுடைய சித்தத்துக்கு இணங்கி, அவைகளைப் பொறுமையோடு சகித்துக்கொள்வதினால் பாக்கியவானாவான். ஏனென்றால் நாம் பொறுமையோடு சகித்துக்கொள்ளுகிற அப்படிப்பட்ட சோதனைகள் பாவத்துக்கு உத்தரிப்பாக ஆத்துமத்தைச் சுத்திகரிக்கவும், புண்ணிய பலன்களைப் பெறுவிக்கவும் உதவுவதுமன்றி, அவைகளுக்குச் சம்பாவனையாக மோக்ஷத்தில் நித்திய ஜீவியமுடியைப் பெறுவதற்குங் காரணமாயிருக்கின்றன. எல்லா அர்ச்சியசிஷ்டவர்களும் இப்படிப்பட்ட சோதனைகளால் பரீட்சிக்கப்படுவதுந்தவிர அர்ச்சியசிஷ்டதனத்தில் எவ்வளவுக்கு உயர்ந்து போகிறார்களோ, அப்படிப்பட்ட சோதனைகளால் அவ்வளவுக்கு அதிகமாய்ச் சோதிக்கப்படுகிறார்களென்பது உண்மை. அப்படியே தட்டானானவன் பொன்னை உலையில் சோதிக்

15. பின்பு ஆசாபாசாம் கர்ப்பந்தரித்துப் பாவத்தைப் பிறப்பிக்கும். பாவமோ முற்றினால், மரணத்தைப் பிறப்பிக்கின்றது. (உரோ. 6-23; 7-5.)

16. ஆதலால் என் மிகவும் பிரிய சகோதரரே, மோசம்போகாதேயுங்கள்.

17. உத்தமமான எந்தக் கொடையும், பூரணமான எந்த வரமும் ஒளிகளின் பிதாவினிடத்திலிருந்து இறங்குவதால், மேலாவிலிருந்து வருகின்றது. அவரிடத்தில் யாதொரு வேற்றுமையும், விகற்பத்தின் நிழலுமில்லை.

18. தம்முடைய (ஞான) சிஷ்டிப்புக்கு நாம் ஒரு ஆரம்பமாயிருக்கும்படி, அவர் தமது சித்தத்தின்படியே நம்மைச் சத்திய வாக்கியத்தால் ஜெனிப்பித்தார். (எபே. 2-12; உரோ. 8-23.)

19. எனக்கு மிகவும் பிரியமான சகோதரரே, இதை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். எந்த மனிதனும் கேட்கிறதுக்குத் தீவிரமாயிருக்கக்கடவான்; பேசுகிறதுக்கும் கோபிக்கிறதற்குமோ தாமதம் பண்ணக்கடவான். (பழ. 17-27.)

20. ஏனெனில் மனிதனுடையகோபம் தேவ நீதியைப் பிறப்பிக்கமாட்டாது.

கிறதுபோல் சர்வேசுரன் நீதிமான்களைப் பரிசோதிக்கிறாரென்று ஞானாகமம் 3-ம் அதிகாரம் 5-ம் 6-ம் வசனங்களில் சொல்லியிருக்கின்றது. இந்தப்பிரகாரமாய்ச்சர்வேசுரனுக்கு மிகவும் பிரியமாயிருந்த அபிரகாமுடைய விசுவாசம் சோதிக்கப்பட்டது. இவ்வண்ணமாய் யோபு ஆகமம் முதலாம் அதிகாரம் 8-ம் வசனத்தில்: என் தாசனாகிய யோபென்பவனைப் போல் சற்குணமுள்ளவனும், நீதிமானும், சர்வேசுரனுக்குப் பயந்து தின்மைக்கு விலகி நடக்கிறவனும் இல்லையென்று சர்வேசுரன்தாமே அவனைக்குறித்து சாட்சி கொடுத்தாலும், நிகரில்லாத துன்பங்களால் அவனைச் சோதிக்கும்படி சர்வேசுரன் சாத்தானுக்கு உத்தரவுகொடுத்தார். அப்படியே தோபியாஸ் சர்வேசுரனுக்குப் பிரியமுள்ளவராயிருந்ததினால், சோதனைகளால் பரீட்சிக்கப்பட வேண்டியதாயிருந்ததென்று தோபியாஸ் ஆகமம்12-ம் அதிகாரம் 13-ம் வசனத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 2-ம் வகை சோதனையாவது: விசுவாசம், நம்பிக்கை, தேவசிநேகம், பிறசிநேக முதலிய புண்ணியங்களுக்கும் விசேஷமாய்க் கற்புக்கும் விரோதமாக ஆத்துமத்திலே எழும்புகிற பாவச்சோதனைகளாம். இப்படிப்பட்ட சோதனைகள் உலகம் பசாசு சரீரம் என்கிற மூன்று சத்துருக்களால் வருகிறது. அவைகளைத் தள்ளுகிறதற்குச் சர்வேசுரன் தம்முடைய வரப்பிரசாதத்தினால் நமக்கு உதவிசெய்கிறாரொழிய, அவரோ அவைகளுக்கு ஒருபோதும் காரணமாயிருக்கிறதில்லை. அதினிமித்தமாக யேசுநாதர் தாமே நமக்குப் படிப்பித்திருக்கிற பரமண்டலமந்திரத்திலே சோதனையிலே எங்களைப் பிரவேசிப்பியாதேயுமென்று அவரே மன்றாடக் கற்பித்திருக்கிறார். பின்னும் பாவச்சோதனையில் மூன்றுபடி உண்டென்கலாம். 1-வது வெறும் பாவ நினைவு அல்லது மாயமான தோற்றம். 2-வது அந்த நினைவின்பேரில் பிரியமான யோசனை. 3-வது அந்தப் பாவத்துக்கு மனச்சம்மதி. பாவச்சோதனையின் முதல்படியிலே அதாவது: சோதனை வெறும் மாயத்தோற்றமாயிருக்குமட்டும் பாவமல்ல. ஆகிலும் அப்படிப்பட்ட தோற்றமானது பாவம் உட்பிரவேசிப்பதற்கான வாசலாயிருக்கிறபடியினாலே பாவம் ஆத்துத்திலே நுழையாதபடிக்கு அதைத் தாமதமின்றித் தள்ளி, அந்த வாசலை அடைத்தாற்போல் துர்விசாரத்தை அகற்றக்கடவோம். சோதனையின் இரண்டாம்படி ஏதென்றால், அந்தப் பாவத்தோற்றமான நினைப்பின்பேரில் தற்சுபாவமான பிரியத்துக்கு மனது சம்மதியாதிருந்தால் இன்னம் சாவான பாவமாயிராது. ஆனால் அந்தப் பிரியமான நினைவை உடனே தள்ளுவதற்குத் தாமதித்தால், அற்பப் பாவமாகிலுமிருக்கும். பாவச்சோதனையின் 3-ம்படியிலே சேர்ந்தாலோவெனில் அதாவது: சோதனைப்படுகிறவன் அந்தப் பாவ நினைப்பை மனதுபொருந்தி ஏற்றுக்கொண்டு, அந்த நினைவினால் உண்டாகிற பிரியத்துக்கும் ஆசைக்கும் முழுமனதோடு சம்மதிக்கும்போது, அப்படி சம்மதிக்கப்பட்ட பாவக்கிரியை கனமானதாயிருக்குமாகில் அந்தச் சம்மதமே ஆத்துமத்துக்கு ஞான உயிராகிய இஷ்டப்பிரசாதத்தைப் போக்கி ஆத்துமத்தை நித்திய நரக மரணத்துக்குப் பிராப்தியாக்குகிறது என்றறிக.

21. ஆகையால் எவ்வித அசுசியை யும், துர்க்குணப்பெருக்கத்தையும் அகற்றிவிட்டு, உங்கள் உள்ளத்தில் ஒட்டப்பட்டதும் உங்கள் ஆத்துமங்களை இரட்சிக்கக் கூடியதுமான வாக்கியத்தைச் சிரவணத்தோடு கைக்கொள்ளுங்கள்.

22. நீங்கள் வாக்கியப்படி செய்கிறவர்களாயிருங்கள். ஆனால் உங்களையே மோசம்போக்கி (வாக்கியத்தைக்) கேட்கிறவர்களாய்மாத்திரம் இருக்கவேண்டாம். (மத். 7-21; உரோ. 2-13.)

23. ஏனெனில் ஒருவன் வாக்கியத்தைக்கேட்டு, அதின்படி செய்யாதிருந்தால், அவன் பார்வைக்கண்ணாடியிலே தன் முகச்சாயலை உற்றுப்பார்க்கிற மனுஷனுக்கு ஒப்பாயிருக்கிறான்.

24. அதிலே அவன் தன்னை உற்றுப் பார்த்து, அப்பால்போகவே, தன் சாயல் இன்னதென்பதை மறந்துவிட்டான்.

25. சுயாதீனந்தரும் பிரமாணத்தை உற்றுப்பார்த்து, மறக்கிறவனாகாமல், அதிலே நிலைத்து, கிரியையைச் செய்கிறவன் எவனோ, அவனே செய்கையில் பாக்கியவானாயிருப்பான்.

26. யாதொருவன் தன் நாவை அடக்காமல், தன் மனதை மோசம்போக்கி, தன்னைப் பக்திமானென்று எண்ணுவானாகில், அப்படிப்பட்டவனுடைய பக்தி வியர்த்தமானது.

27. நம்முடைய பிதாவாகிய சர்வேசுரனுடைய சமுகத்தில் பரிசுத்தமும் மாசற்றதுமான தேவபக்தியேதெனில், அநாதப்பிள்ளைகளையும், விதைவைகளையும் அவர்களுடைய துன்பத்தில் சந்திக்கிறதும், இப்பிரபஞ்சத்தினின்று தன்னை மாசற்றவனாய்க் காப்பாற்றுகிறதும் என்க.

## 2-ம். அதிகாரம்.

ஐசுவரியவான்களைச் சங்கித்து ஏழைகளைப் புறக்கணிப்பது தகாதென்றும், ஒரு கற்பனையை மீறுகிறவன் எல்லாக் கற்பனைகளுக்கும் குற்றவாளியாயிருக்கிறானென்றும், தர்மக்கிரியைகளில்லாத விசுவாசம் செத்த விசுவாசமென்றும் காட்டுகிறார்.

1. என் சகோதரரே, மகிமைபொருந்திய நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவின்மேலுள்ள விசுவாசத்தைப் பாரபட்சத்தோடு இணைக்காதேயுங்கள். (லேவி. 19-15; பழ. 24-23.)

2. ஏனெனில் பொன் மோதிரமும், மினுக்கான வஸ்திரமும் தரித்த ஒருவன் உங்கள் சபையில் பிரவேசிக்கும்போது, அழுக்குத் துணியையுடைய ஒரு தரித்திரனும் உள்ளே பிரவேசித்தால்,

3. நீங்கள் மினுக்கான வஸ்திரந் தரித்தவனைக் கண்ணோக்கி: நீர் இங்கே நன்றாய் உட்காரந்திரும் என்றும், பிற்பாடு தரித்திரனை நோக்கி: நீ அங்கே நில் அல்லது என் பாத அணையின் கீழ் உட்கார் என்றும் சொன்னால்,

4. நீங்களே உங்களுக்குள் வித்தியாசமாய் வகையறுத்து, அநீத சிந்தனையுள்ள நடுவர்களானீர்களல்லோ?

1. **பாரபட்சத்தோடு:** விசுவாசத்துக்கு அடுத்தவைகளிலும், தேவத்திரவிய அநுமானங்களிலும், இன்னம் சர்வேசுரனுடைய திருச்சபையிலுள்ள மற்ற ஞான ஊழியங்களிலும் மனுஷ முகப்பிரீதியென்பது ஒன்றுமில்லாமல் ஆஸ்திக்காரர் என்ற வித்தியாசமின்றி நடத்தவேண்டுமென்பது இதின் கருத்து.

4. விசுவாசத்துக்கடுத்த காரியங்களிலே ஆஸ்திக்காரருடைய ஆத்துமங்களையும் தரித்திரருடைய ஆத்துமங்களையும் ஒருகண்ட சீராய் எண்ணக்கடவோமொழிய வெளித்தோற்றத்தைப்பற்றி ஆஸ்திக்காரனுடைய ஆத்துமம் மேன்மையானதென்றும் தரித்திரனுடைய ஆத்துமம் தாழ்மையானதென்றும் எண்ணப்படாது. ஏனென்றால், சர்வேசுரன்

5. என் மிகவும் பிரிய சகோதரரே, கேளுங்கள்: சர்வேசுரன் இவ்வுலகத்தில் தரித்திரரை விசுவாசத்தில் ஐசுவரியராகவும், தம்மைச் சிநேகிக்கிறவர்களுக்குத் தாம் வாக்குத்தத்தம்பண்ணின இராச்சியத்துக்குச் சுதந்தரராகவும் தெரிந்துகொள்ளவில்லையா?

6. நீங்களோ தரித்திரனைக் கனவீனம்பண்ணுகிறீர்கள். தங்கள் வல்லமையினால் உங்களை உபத்திரவப்படுத்துகிறவர்கள் ஐசுவரியவான்களல்லோ? அவர்களல்லோ உங்களை நியாயாசனங்களுக்கு முன்பாக இழுத்துக்கொண்டு போகிறவர்கள்!

7. உங்கள்மேல் உச்சரிக்கப்பட்ட நல்ல நாமத்தைத் தூஷணிக்கிறவர்கள் அவர்களல்லோ?

8. ஆகிலும், உன்னைப்போல் உன் பிறனையும் சிநேகிப்பாயாக என்று வேதப்பிரமாணத்தில் எழுதியிருக்கிற இராஜ கட்டளையை நீங்கள் நிறைவேற்றினால், நன்மையாமே. (மத். 22-39; லேவி. 19-18.)

9. ஆனால் நீங்கள் பட்ச பாதகம் பண்ணினால், பாவத்தைக் கட்டிக்கொண்டு பிரமாணத்தை மீறுகிறவர்களாக அதினாலே தீர்வையிடப்படுவீர்கள்.

10. ஒருவன் பிரமாணம் முழுவதையும் கைக்கொண்டும், ஒன்றிலேமாத்திரம் தவறுவானாகில், எல்லாக் கற்பனைகளுக்கும் குற்றவாளியாகிறான். (உபா. 1-18; மத். 5-19.)

11. அதெப்படியென்றால்: விபசாரஞ் செய்யாதிருப்பாயாக என்று சொன்னவர், கொலைசெய்யாதிருப்பாயாக என்றும் சொல்லியிருக்கிறார். ஆகையால் நீ விபசாரம் செய்யாதிருந்தும், கொலைசெய்தால், பிரமாணத்தை மீறுகிறவனானாய்.

12. சுயாதீனத்துக்குரிய பிரமாணத்தால் நடுத்தீர்க்கப்படப் போகிறவர்கள் போல், நீங்கள் பேசவும் வேண்டும், செய்யவும் வேண்டும்.

மாத்திரம் அந்தந்த ஆத்துமத்தின் அந்தஸ்தை அறிந்திருக்கிறார். அவர் மாத்திரம் ஒரு ஆத்துமம் மேன்மையானதென்றும், ஒரு ஆத்துமம் தாழ்மையானதென்றும் தீர்க்கக்கூடும். ஆனால் வெளி ஆசாரத்துக்கடுத்த விஷயங்களாகிய மேலான அந்தஸ்தும் கீழான அந்தஸ்தும் உலகத்திலே எப்போதும் எங்கும் இருந்தது, இப்பொழுதும் இருக்கிறது. திருச்சபையிலும் இப்படிப்பட்ட அந்தஸ்து வித்தியாசம் இருப்பதவசியம். மேற்றிராணிமார் குருமார் முதலிய ஞானமேய்ப்பர்களுக்கும் மற்றும் கிறீஸ்துவர்களுக்குமுள்ள அந்தஸ்தின் வித்தியாசத்துக்குத் தக்கது பெரியவர்களைச் சிறியவர்கள் எண்ணவும், கனம்பண்ணவும் கடவார்கள். அப்படியே பிதாவையும் மாதாவையும் சங்கித்திருப்பாயாக என்று பிள்ளைகளுக்குக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. அப்படியே துரைத்தனமுள்ளவர்களைக் கனம்பண்ணக்கடவோமென்று அர்ச். சின்னப்பர் உரோமர் 13-ம் அதி. 7-ம் வசனத்தில் சொல்லுகிறார். அப்படியே அர்ச். இராயப்பர் முதல் நிருபம் இரண்டாம் அதிகாரம் 17-ம் வசனத்தில் ராஜாவைக் கனம்பண்ணுங்கள் என்கிறார்.

10. ஒருகற்பனையை மீறுகிறவன் ஒருவிதத்தில் எல்லாக் கற்பனைகளையும் மீறுகிறான். ஏனெனில், கற்பனையைக் கொடுத்த கடவுளுக்கு விரோதமாய் ஒன்றில் மீறுகிறவன் அவருடைய மகத்துவத்தைப் புறக்கணிப்பதால், எல்லாவற்றிலும் அவரைப் புறக்கணித்ததற்குச் சரியாகும். மேலும் எல்லாக் கற்பனைகளுக்கும் ஆதாரமாகிய சிநேகத்தை ஒன்றில் மீறுகிறவன் மற்றொன்றிலும் அந்தச் சிநேகத்தை மீறுவதற்குச் சரி.

12. சுயாதீனத்தின் பிரமாணம் அல்லது முந்தின அதிகாரம் 25-ம் வசனத்தில் சொல்லியதுபோல சுயாதீனந்தரும் பிரமாணம் என்பது சுவிசேஷப் பிரமாணமாமே. ஏனெனில் மோயீசனுடைய பிரமாணமல்ல, சுவிசேஷப்பிரமாணமே நம்மைப் பேயின் அடிமைத்தனத்தினின்று மீட்டு, தெய்வபுத்திரருக்குரிய சுயாதீனத்தை நமக்குப் பெறுவிக்கின்றது.

13. ஏனெனில் இரக்கஞ்செய்யாதவனுக்கு இரக்கமில்லாத நியாயத்தீர்ப்புக் கிடைக்கும். இரக்கமோ நியாயத்தீர்ப்புக்கு மேற்கொண்டுபோகிறது.

14. என் சகோதரரே, ஒருவன் தனக்கு விசுவாசம் உண்டென்று சொல்லியும், கிரியைகளில்லாதிருந்தால், அவனுக்குப் பிரயோஜனம் என்ன? விசுவாசம் அவனை இரட்சிக்கக்கூடுமோ?

15. அதெப்படியென்றால்: ஒரு சகோதரனாவது சகோதரியாவது வஸ்திரமில்லாமலும், அநுதின ஆகாரமில்லாமலும் இருக்கும்போது, (1. அரு. 3-17.)

16. உங்களில் ஒருவன் அவர்களைப் பார்த்து: சமாதானத்தோடே போங்கள்; குளிர்காய்ந்து, பசியாறுங்கள் என்று சொல்லி, சரீரத்துக்குவேண்டியவைகளை அவர்களுக்குக் கொடாதிருந்தால், பிரயோஜனம் என்ன?

17. அப்படிப்போல விசுவாசமும் கிரியைகளைக் கொண்டிராவிட்டால், தன்னிலே செத்த விசுவாசமாயிருக்கின்றது.

18. ஒருவன் உன்னைப்பார்த்து: உனக்கு விசுவாசம் உண்டு, எனக்குக் கிரியைகள் உண்டு. கிரியைகளில்லாமல் உன் விசுவாசத்தை எனக்குக் காண்பி, நான் என் விசுவாசத்தை என் கிரியைகளால் உனக்குக் காண்பிப்பேன் என்று சொல்லலாமே.

19. ஒரே சர்வேசுரன் உண்டென்று விசுவசிக்கிறாய், நல்லதுதான். பசாசுகளும் விசுவசித்து நடுநடுங்குகிறதல்லோ.

20. ஓ, வீண் மனிதனே, கிரியைகளில்லாத விசுவாசம் செத்ததாயிருக்கிறதென்று அறியவேண்டுமோ?

21. நம்முடைய பிதாவாகிய அபிராகாம் பீடத்தின்மேல் தன் குமாரனைப் பலியிடுகையில், கிரியைகளினாலல்லோ நீதிமானாக்கப்பட்டார். (ஆதி. 22-9.)

22. விசுவாசமானது அவருடைய கிரியைகளோடு உடந்தையாய் முயற்சி செய்ததென்றும், கிரியைகளினாலே விசுவாசம் சம்பூரணமானதென்றும் காண்கிறாயல்லோ?

23. அப்படியே அபிராகாம் சர்வேசுரனை விசுவசித்தார், அது அவருக்கு நீதியாக எண்ணப்பட்டதென்றும், சர்வேசுரனுடைய சிநேகிதனாக அழைக்கப்பட்டாரென்றும் சொல்லப்பட்ட வேதவாக்கியம் நிறைவேறிற்று. (ஆதி. 15-6; உரோ. 4-3.)

24. ஆதலால் மனுஷன் கிரியைகளினாலேயன்றி, விசுவாசத்தினாலே மாத்திரம் நீதிமானாவதில்லையென்று காண்கிறீர்களே.

14-26. இந்த வசனங்களில் அப்போஸ்தலர் நற்கிரியைகளோடு சேர்ந்திராத விசுவாசம் செத்த விசுவாசமென்றும், ஞானப் பலனற்றதென்றும் பிரயோஜனமில்லாததென்றும் காட்டுகிறார். ஆனால் அர்ச். யாகப்பர் இங்கே சொல்வதற்கும், அர்ச். சின்னப்பர் ரோமானருக்கு எழுதிய நிருபத்தில் 3-ம் 4-ம் அதிகாரங்களில் சொல்வதற்கும் விரோதமில்லை. ஏனெனில் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் போதகத்துக்குத்தக்கது ஒன்றை முன்னிட்டுப் பேசுகிறதால் வேறொன்றை மறுதலிக்கிறதில்லை. பழைய ஏற்பாட்டில் கற்பிக்கப்பட்ட சடங்குகளினால் மாத்திரம் நீதியை அடையலாமென்று எண்ணியிருந்தவர்களுடைய தப்பிதத்தை மறுதலிக்க அர்ச். சின்னப்பர் அந்தச்சடங்கு கிரியைகளினால் ஒன்றும் ஆகிறதில்லையென்றும், விசுவாசமே ஒருவனை நீதிமானாக்குகிறதென்றும் காட்டுகிறார். அர்ச். யாகப்பரோ: விசுவசித்தால்போதும் வேதகற்பனைகளை மீறுவதினால் ஒன்றுமில்லை என்ற தப்பான எண்ணத்தை மறுத்து, நற்கிரியைகளோடு கூடியிராத வெறும் விசுவாசம் ஒன்றுக்கும் உதவாதென்று காட்டுகிறார்.

25. அந்தப்பிரகாரமாய் ராஹாப்பென்னும் வேசியும் தூதர்களை ஏற்றுக்கொண்டு வேறு வழியாய் அனுப்பிவிட்டபோது, கிரியைகளினாலல்லோ நீதியுள்ளவளாக்கப்பட்டாள். (யோசு. 2-4; எபி. 11-31.)

26. அப்படியே ஆவியற்ற சரீரம் செத்ததாயிருக்கிறதுபோல, கிரியைகளில்லாத விசுவாசமும் செத்ததாயிருக்கின்றது.

## 3-ம். அதிகாரம்.

நாவினால் வருகிற பொல்லாப்புகளை விவரித்து, மெஞ்ஞானம் ஏதென்று காட்டுகிறார்.

1. என் சகோதரரே, உங்களில் போதகர் நிரம்பப்பேராயிருக்கவேண்டாம். ஏனெனில் அதிகக் கண்டிப்பான தீர்வையை உங்கள்மேல் சுமத்திக்கொள்ளுகிறீர்களென்று அறிந்துகொள்ளுங்கள். (மத். 23-8.)

2. நாமெல்லோரும் அநேக காரியங்களில் தவறிப்போகிறோம். ஆகிலும் யாதாமொருவன் வார்த்தையில் தவறாதிருந்தால், அவன் உத்தம புருஷன். ஏனெனில் அவன் தன் சரீரமுழுமையும் கடிவாளத்தால் நடப்பித்துக் கொள்ள வல்லவன்.

3. அப்படியே குதிரைகள் நமக்கு அடங்கும்படிக்கு அவைகள் வாயில் கடிவாளமிட்டுக்கொண்டால், அவைகளின் சரீரமுழுமையும் எப்பக்கமும் திருப்பி நடத்துவோம்.

4. கப்பல்களைப் பாருங்கள்; அவைகள் மகா பெரியவைகளாயினும், கடுங்காற்றினால் அடிபட்டாலும், அவைகளை நடத்துகிறவன் அற்பமான சுக்கானால் தன்னிஷ்டப்படி அவைகளைத் திருப்புகிறானல்லோ?

5. அப்படியே இதோ, நாவானது ஓர் சிறிய உறுப்பானாலும், பெரியகாரியங்களையும் பாராட்டும். எவ்வளவு சொற்ப நெருப்பு எவ்வளவோ பெருங் காட்டைச் சுட்டெரிக்கின்றது!

6. அப்படியே நாவும் ஒருநெருப்பு: அது அக்கிரமங்களெல்லாம் நிறைந்த உலகம்; நாவானது நம்முடைய உறுப்புகளில் ஒன்றாயிருந்து, சரீர முழுமையும் கறையாக்குகின்றது. அது நரக அக்கினியில் கொளுத்தப்பட்டு, நமது பிறப்புமுதல் நமது ஆயுள் சக்கரத்தை எரிக்கின்றது.

7. சகலவித மிருகங்கள், பறவைகள், சர்ப்பங்கள், இன்னும் மற்றவைகளின் சுபாவமெல்லாம் மனுஷனுடைய சுபாவத்தால் அடக்கப்படக்கூடும்; அடக்கப்பட்டுமிருக்கின்றது.

8. ஆனால் நாவை அடக்கவோ எந்த மனுஷனாலும் கூடாது. அது அடங்காத் தீங்கு; கொல்லும் விஷம் நிறைந்தது.

9. அதைக்கொண்டே நாம் பிதாவாகிய சர்வேசுரனையும் ஸ்துதிக்கிறோம்; அதைக்கொண்டே நாம் தெய்வசாயலாக உண்டாக்கப்பட்ட மனுஷர்களையும் சபிக்கிறோம்.

1. அர்ச். சின்னப்பர் நிருபங்களிலும், அப்போஸ்தலர் நடபடியிலும் பலமுறை காணப்படுகிறதுபோல் புதிதாய் ஞானஸ்நானம் பெற்ற யூதர்களுக்குள்ளே அநேகர் குருமார்கள் மேற்றிராணிமார்களால் அனுப்பப்படாமலும், யாதொரு உத்தரவில்லாமலும், தாங்களாய்ப் புறப்பட்டு ஊருக்கூர்போய், அஞ்ஞானத்திலிருந்து மனந்திரும்பின புதுக்கிறீஸ்துவர்களுக்குப் போதகர்களாகத் தங்களைத்தாங்களே ஏற்படுத்திக்கொண்டு, அவர்கள் விருத்தசேதனம் பெறவேண்டுமென்றும், பழைய ஏற்பாட்டில் தாங்கள் அநுசரித்துவந்த பற்பல முறைமைகளை அவர்களும் அநுசரிக்கவேண்டுமென்றும் அவைகள் இரட்சணியத்துக்கு அவசரமென்றும் போதித்து, அந்தப் புதுச்சபைகளைக் கலங்கடிப்பார்கள். அப்படிப்பட்டவர்களுக்குத்தான் இங்கே அர்ச். இயாகப்பர் புத்திசொல்லுகிறார்.

10. ஸ்துதித்தலும் சபித்தலும் ஒரே வாயிலிருந்தே புறப்படுகின்றது. என் சகோதரரே, இப்படியிருக்கலாகாது.

11. ஒரே ஊற்றுக் கண்ணிலிருந்து நல்ல தண்ணீரும், உப்புத்தண்ணீரும் சுரக்குமா?

12. என் சகோதரரே, அத்திமரம் திராட்சப்பழங்களையும், திராட்சச் செடி அத்திப்பழங்களையும் பிறப்பிக்குமா? அப்படியே உப்புநீர் நல்ல ஜலத்தைக் கொடுக்கமாட்டாது.

13. உங்களில் ஞானியும் கல்விமானும் யார்? அவன் ஞானத்துக்குரிய சாந்தகுணத்தோடு தன் கிரியைகளை நல்லொழுக்கத்தினாலே காண்பிக்கக் கடவான்.

14. ஆனால் உங்கள் இருதயங்களில் கசப்பான வைராக்கியத்தையும் வாக்குவாதங்களையும் கொண்டிருந்தால், நீங்கள் பெருமைகொள்ளவேண்டாம். சத்தியத்திற்கு விரோதமாய்ப் பொய்சொல்லவும் வேண்டாம்.

15. ஏனெனில், இப்படிப்பட்ட ஞானம் மேலாவிலிருந்து வருகிறதல்ல. அது லௌகீகத்திற்கும், மிருகத்திற்கும், பேய்க்கும் உரியது.

16. வைராக்கியமும் வாக்குவாதமும் எங்கே உண்டோ, அங்கே நிலையின்மையும், சகல துர்க்கிரியையும் உண்டு.

17. மேலாவிலிருந்துவருகிற ஞானமோ முந்தமுந்தக் கற்புள்ளதும், பின்னும் சமாதானமுள்ளதும், மரியாதையுள்ளதும், இணக்கமுள்ளதும், நல்லவைகளுக்கு உடந்தையுள்ளதும், இரக்கத்தாலும் நற்கனிகளாலும் நிறைந்ததுமாயிருக்கின்றது. அது யாதொன்றுக்கும் தீர்ப்பிடுகிறதுமில்லை, பாசாங்கு பண்ணுகிறதுமில்லை.

18. நீதியாகிய கனியானது சமாதானத்தை உண்டாக்கிறவர்களால் சமாதானத்திலே விதைக்கப்படுகின்றது.

## 4-ம். அதிகாரம்.

பேயை எதிர்த்து, நல்வழியில் ஒழுகக் கற்பிக்கிறார்.

1. உங்களுக்குள்ளே சண்டைகளும் வியாச்சியங்களும் எதினாலே வருகின்றது? உங்கள் அவயவங்களில் போராடுகிற உங்கள் இச்சைகளினாலல்லவா?

2. நீங்கள் இச்சித்தும், கைக்கொள்ளுகிறதில்லை. நீங்கள் கொலைசெய்தும், பொறாமைப்பட்டும் அடையக்கூடாதிருக்கிறீர்கள். நீங்கள் வழக்காடியும் போர்செய்தும், மன்றாடிக் கேளாததினாலே உங்களுக்கு ஒன்றும் கிடைப்பதில்லை.

3. நீங்கள் கேட்டும், அடையாமல் போகிறீர்கள். ஏனெனில் உங்கள் இச்சைகளுக்குத் திர்ப்தியாகவேண்டுமென்று ஆகாத விதமாய்க் கேட்கிறீர்கள்.

4. விபசாரக்காரரே, இவ்வுலகத்தின் சிநேகம் சர்வேசுரனுக்குப் பகையாயிருக்கிறதென்று அறியீர்களோ? ஆகையால் இவ்வுலகத்துக்குச் சிநேகிதனாயிருக்க விரும்புகிறவன் சர்வேசுரனுக்குத் தன்னைப் பகைஞனாக்கிக் கொள்ளுகிறான்.

2. பற்பல காரியங்களுக்கு ஆசைப்படுகிறீர்கள். அவைகளை ஜெபத்தினாலும்வேண்டுதலினாலும் பெற்றுக்கொள்ளவேண்டியிருக்க, நீங்கள் அதைவிட்டு, போராடி, வியாச்சியம் செய்து அடைந்துகொள்ளலாமென்று நினைக்கிறீர்கள். அதினாலே அதை அடைந்து கொள்ளாமல் போகிறீர்களென்று அர்த்தமாம்.

5. உங்களுக்குள்ளே வாசமாயிருக்கிற இஸ்பிரீத்துவானவர் பொறுமையான சிநேகமுள்ளவரென்று வேதவாக்கியம் சும்மா சொல்லுகிறதாக நினைக்கிறீர்களோ?

6. அவர் மிகுதியான வரப்பிரசாதத்தைத் தருகிறார். ஆகையால் சர்வேசுரன் ஆங்காரிகளுக்கு எதிர்த்துநின்று, தாழ்மையுள்ளவர்களுக்கு வரப்பிரசாதத்தைக்கொடுக்கிறார் என்று சொல்லியிருக்கின்றது. (பழ. 3-34; 1. இரா. 5-5.)

7. ஆகையால் நீங்கள் சர்வேசுரனுக்குக் கீழ்ப்படிந்திருங்கள்; பசாசையோ எதிர்த்து நில்லுங்கள். அது உங்களைவிட்டு ஓடிப்போம்.

8. சர்வேசுரனை அண்டிப்போங்கள்; அவரும் உங்களை அண்டிவருவார். பாவிகளே, உங்கள் கைகளைச் சுத்திகரியுங்கள். இருமனமுள்ளவர்களே, உங்கள் இருதயங்களைப் பரிசுத்தமாக்குங்கள்.

9. உங்கள் நிர்ப்பாக்கியத்தை உணர்ந்து புலம்பி அழுங்கள். உங்கள் நகைப்பு துக்கமாகவும், உங்கள் சந்தோஷம் துயரமாகவும் மாறக்கடவது.

10. ஆண்டவர் சமுகத்தில் உங்களைத் தாழ்த்திக்கொள்ளுங்கள்; அவர் உங்களை உயர்த்துவார். (1. இரா. 5-6.)

11. சகோதரரே, ஒருவரொருவர்பேரில் புறணிசொல்லாதிருங்கள். தன் சகோதரன்பேரில் புறணிசொல்லுகிறவன் அல்லது தன் சகோதரனுக்குத் தீர்ப்பிடுகிறவன் வேதப்பிரமாணத்தைத்தூற்றி, அதற்கே தீர்ப்பிடுகிறான். ஆனால் நீ பிரமாணத்துக்குத் தீர்ப்பிடுவாயாகில், பிரமாணத்தை அநுசரிக்கிறவனாகாமல், அதற்கு நடுவனாகிறாய்.

12. ஆகிலும் வேதப்பிரமாணத்தைக் கொடுத்தவரும், நடுத்தீர்க்கிறவரும் ஒருவரே. அவரோ அழிக்கவும் இரட்சிக்கவும் வல்லவர்.

13. பிறனை நடுத்தீர்ப்பதற்கு நீயார்? நாங்கள் இன்றைக்கு அல்லது நாளைக்கு இன்னபட்டணத்துக்குப் போய், அங்கே ஒருவருஷம் தங்கி, வியாபாரஞ்செய்து சம்பாத்தியம் பண்ணுவோமென்று சொல்லுகிறவர்களே, கேளுங்கள். (உரோ. 14-4.)

14. நாளைக்கு என்ன நடக்குமென்று அறியீர்களே.

15. மெய்யாகவே உங்கள் ஜீவியம் எப்பேர்ப்பட்டது? கொஞ்சநேரம் தோன்றி, பின்பு ஒழிந்துபோகும் புகையல்லோ. ஆகையால் நீங்கள் அந்தப் பேச்சைவிட்டு: ஆண்டவருக்குச் சித்தமானால், அல்லது நாங்கள் உயிரோடிருந்தால், இதை அதைச் செய்வோம் என்று சொல்லுங்கள்.

16. இப்பொழுதோவெனில் உங்கள் வீம்புகளில் துள்ளுகிறீர்கள். இவ்விதத் துள்ளாட்டமெல்லாம் அக்கிரமமாயிருக்கிறது.

17. ஆகையால் நன்மைசெய்ய அறிந்திருந்தும், செய்யாதவனுக்கு அது பாவமாகும்.

5. நீங்கள் உலகத்துக்கும், சர்வேசுரனுக்கும் பிரியப்படலாமென்று நினைக்கிறீர்கள். அது முற்றும் கூடாத காரியம். உலகத்தை நேசிக்கிறவன் சர்வேசுரனுக்குச் சத்துருவாய்ப்போகிறான். ஏனென்றால் உங்களுக்குள்ளே வாசம்பண்ணுகிற இஸ்பிரீத்துசாந்து உங்கள் இருதயத்தைமுழுதும் தமக்கே சொந்தமாக்கிக்கொள்ள விரும்புகிறதல்லாதே, உலகம் சரீர முதலிய பிரபஞ்சத்துக்கடுத்த சிநேகமும் உங்கள் இருதயத்திலிருக்க அவர் சகிக்கிறவரல்லவென்று அர்த்தமாம்.

## 5-ம். அதிகாரம்.

*தரித்திரரை உபத்திரவப்படுத்துகிற ஐசுவரியவான்களைக் கண்டித்து, கிறீஸ்துவர்கள் தங்கள் உபத்திரவங்களில் பொறுமையாயிருக்கவும், ஆணையிடுதலை விலக்கவும், வியாதிக்காரர் அவஸ்தைபூசுதலைப் பெறவும், பாவசங்கீர்த்தனஞ் செய்யவும், புத்தி சொல்லி ஜெபத்தின் பலனை வெளிப்படுத்துகிறார்.*

1. வாருங்கள், ஐசுவரியவான்களே, உங்கள்மேல் வரப்போகிற நிர்ப்பந்தங்களை நினைத்து, இப்போது புலம்பி அழுங்கள்.

2. இதோ, உங்கள் திரவியங்களும் அழுகி, உங்கள் வஸ்திரங்களும் பொட்டரித்துப்போயின.

3. உங்கள் பொன்னும் வெள்ளியும் துருப்பிடித்தது, அவைகளில் ஏறின துரு உங்களுக்கு எதிர்ச்சாட்சியாயிருந்து, அக்கினியைப்போல் உங்கள் மாம்சங்களைப் பட்சிக்கும். கடைசிக்காலத்துக்குத் (தேவ) கோபத்தைத் தேடிக் குவிக்கிறீர்கள்.

4. இதோ, உங்கள் வயல்களை அறுத்த வேலையாட்களுடைய கூலி உங்களால் வஞ்சிக்கப்பட்டு, கூக்குரலிடுகின்றது அவர்களின் கூக்குரல் சேனைகளுடைய கர்த்தரின் செவிக்குள் புகுந்தது.

5. பூமியிலே விருந்தாடி, உங்கள் இருதயங்களைக் கொலையுண்ணும் நாளுக்காகக் கொழுக்க வளர்த்தீர்கள்.

6. நீதிமானைக் குற்றவாளியாகத் தீர்த்துக் கொலைசெய்தீர்கள்; அவனோ உங்களை எதிர்த்து நிற்கவில்லை.

7. இப்படியிருக்க, சகோதரரே, ஆண்டவர் வருமளவும் பொறுமையாயிருங்கள். இதோ, பயிரிடுகிறவன் முன்மாரியும் பின்மாரியும் வருமளவும் நீடிய பொறுமையோடு காத்திருந்து, பூமியின் அரும்பலனுக்கு எதிர்பார்த்திருக்கிறான்.

8. ஆகையால், நீங்களும் பொறுமையாயிருந்து, உங்கள் இருதயங்களை ஸ்திரப்படுத்துங்கள். ஏனெனில் ஆண்டவருடைய வருகை சமீபமாயிற்று.

9. சகோதரரே, உங்களுக்குத் தீர்ப்பு வராதபடிக்கு ஒருவருக்கொருவர் விரோதமாய் முறைப்படாதிருங்கள். இதோ, நடுவர் வாசலுக்குமுன் நிற்கிறார்.

10. சகோதரரே, துன்ப மரணத்திலும், கஷ்டப்படுவதிலும், பொறுமையிலும் ஆண்டவருடைய நாமத்தினால் பேசின தீர்க்கதரிசிகளை உங்களுக்கு மாதிரியாக வைத்துக்கொள்ளுங்கள்.

11 பொறுமையாய்ச் சகித்தவர்களைப் பாக்கியவான்கள் என்கிறோமே. யோபென்பவருடைய பொறுமையைக் குறித்துக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். கர்த்தருடைய முடிவையும் கண்டிருக்கிறீர்கள். கர்த்தர் தயவும் இரக்கமும் உள்ளவர்.

12. எல்லாத்துக்கும் முக்கியமாய், என் சகோதரரே, வானத்தின்பேரிலாவது, பூமியின்பேரிலாவது, வேறெந்த ஆணையிட்டாவது சத்தியம்பண்ணாதிருங்கள். நீங்கள் தீர்வைக்குள்ளாகாதபடிக்கு உள்ளதை உள்ளதென்றும், இல்லாததை இல்லையென்றும் சொல்லக்கடவீர்கள் (மத். 5-34.)

---

5. **கொலையுண்ணும் நாள் :**—தீர்வைநாள், அந்நாளில் தேவசாபத்தையடைந்து நரக நெருப்பில் சாகாமல் செத்து, வேகாமல் வேகும்படியாகச் சரீரத்தைக் கொழுக்கவைத்தாற்போல் சரீர இச்சைப்படி நடக்கிறதென்பது கருத்து.



"உங்களில் ஒருவன் வியாதியாயிருக்கிறானோ, அவன் சபையின் குருக்களை வரவழைப்பானாக. அவர்கள் ஆண்டவருடைய நாமத்தினாலே அவனைத் தைலத்தால் பூசி, அவனுக்காக ஜெபம் பண்ணுவார்கள்..... அன்றியும் அவன் பாவங்களோடிருந்தால் அவைகள் அவனுக்கு மன்னிக்கப்படும்."

(இயாக. 5. 14-15.)

13. உங்களில் யாதொருவன் துக்கமாயிருக்கிறானே, ஜெபம்பண்ணக்கடவான். சந்தோஷமாயிருக்கிறானே, சங்கீதம் பாடக்கடவான்.

14. உங்களில் ஒருவன் வியாதியாயிருக்கிறானே, அவன் சபையின் குருக்களை வரவழைப்பானாக. அவர்கள் ஆண்டவருடையநாமத்தினாலே அவனைத் தைலத்தால் பூசி, அவனுக்காக ஜெபம் பண்ணுவார்கள். (மாற். 6-13.)

15. அப்போது விசுவாசமுள்ள ஜெபம் வியாதிக்காரனை இரட்சிக்கும். ஆண்டவரும் அவனுடைய வருத்தத்தை இலகுவாக்குவார். அன்றியும் அவன் பாவங்களோடிருந்தால் அவைகள் அவனுக்கு மன்னிக்கப்படும். (அப். 27-8.)

16. நீங்கள் இரட்சணியம் அடையும்பொருட்டு, ஒருவருக்கொருவர் உங்கள் பாவங்களைச் சங்கீர்த்தனம்பண்ணி, ஒருவரொருவருக்காக வேண்டிக்கொள்ளுங்கள். ஏனெனில் நீதிமானுடைய அயராத வேண்டுதல் மிகுந்த வல்லமையுள்ளது.

17. எலியாசென்பவர் நம்மைப்போல் துன்பங்களுக்குள்ளான மனிதனாயிருந்தும், பூமியில் மழைபெய்யாதபடிக்கு உருக்கமாய்வேண்டிக்கொண்டதினாலே மூன்று வருஷமும் ஆறுமாதமும் மழைபெய்யவில்லை. (3-அர. 17-1; லூக். 4-25.)

18. அவர் மறுபடியும் வேண்டிக்கொண்டார். வானமும் மழைபொழிய, பூமியும் தன் பலனைத் தந்தது.

19. என் சகோதரரே, உங்களில் ஒருவன் சத்தியத்தினின்று தவறிவிழும்போது யாதாமொருவன் அவனை மனந்திருப்பினால்,

20. தவறின வழியினின்று பாவியை மனந்திரும்பச்செய்தவன் அவனுடைய ஆத்துமத்தை மரணத்தினின்று இரட்சித்து, திரளான பாவங்களை மூடுவானென்று அறியக்கடவான்.

14. வியாதிக்காரர்கள் தங்களுக்காக வேண்டிக்கொள்ளவும், தங்கள்பேரில் தைலத்தைப்பூசவும் திருச்சபையின் குருமார்களை வரவழைக்கக் கற்பிக்கிறார். இது கத்தோலிக்கு ரோமான் திருச்சபையிலே எக்காலத்திலும் நடந்துவருகிற ஏழு தேவத்திரவிய அநுமானங்களில் ஒன்றாகிய அவஸ்தை பூசுதல் என்றறிக.

16. பின்னும் நீங்கள் இரட்சணியமடையும்படிக்கு ஒருவருக்கொருவர் உங்கள் பாவங்களைச் சங்கீர்த்தனம் பண்ணுங்களென்று கற்பிக்கிறார். இங்கே ஒருவருக்கொருவர் என்கிற வார்த்தைக்கு அர்த்தமேதெனில், பாவப்பொறுத்தல் கொடுக்க அதிகாரம் பெற்ற குருமார்கள் ஒருவருக்கொருவர் என்றும், மற்றக்கிறீஸ்துவர்கள் அந்த அதிகாரம் பெற்றிருக்கிற தங்கள் குருமார்களிடத்திலென்றும் அர்த்தமல்லாது வேறல்ல. ஏனெனில், பாவப்பொறுத்தலைக்கொடுக்க அதிகாரமில்லாதவர்களிடத்தில் ஒருவன் தன் பாவங்களை அறிக்கையிட்டால் பிரயோசனமென்ன?



# பாயிரம்.

---

தலையான அப்போஸ்தலராகிய அர்ச். இராயப்பர் யூதேயாதேசத்திலுள்ள கலிலேயா நாட்டில் பெத்சாயிதா என்ற நகரத்தில் எபிரேய கோத்திரத்தில் யோனா என்பவரிடத்தில் பிறந்து சீமோன் என்று பெயரிடப்பட்டிருந்தார். அவருடைய தமையனாகிற அர்ச். அந்திரேயா என்கிறவர் அர்ச். ஸ்நாபக அருளப்பர் சொன்ன வார்த்தையைக்கொண்டு யேசுநாதர் உலகத்தை இரட்சிக்கிறவர் என்று அறிந்து, தமது தம்பியாகிய சீமோன் என்பவனையும் அவரிடத்தில் அழைத்துக்கொண்டுபோனார். கர்த்தர் அவனைக் கண்டவுடனே தாம் இனி ஸ்தாபிக்கப்போகிற தமது திருச்சபையாகிய ஞான மாளிகைக்குத் தாமே எப்போதும் காணப்படாத அஸ்திவாரக் கல்லாய் இருந்தாலும், அவனைத் தமது இடமாகக் காணப்படும் அஸ்திவாரக் கல்லாக ஸ்தாபிக்கச் சித்தமாகி, அவர் கொண்டிருந்த சீமோன் என்னும் முந்தின பெயரைமாற்றி கெபாஸ் அதாவது இராய் அல்லது கல் என்று பெயரிட்டார்.

பின்னும் யேசுநாதர் அவனைத் தம்முடைய சீஷனாகச் சேர்த்துக்கொண்ட பின், அர்ச். மத்தேயு 16-ம் அதிகாரம், 16-ம், 17-ம், 18-ம், 19-ம் வசனங்களில் கண்டிருக்கிறபடி, திவ்விய கர்த்தர் தேவசுதனென்று, இராயப்பர் பிரத்தியட்சமாய் வெளிப்படுத்தின விசுவாச உச்சாரணத்தைக் கேட்டு, கர்த்தர் அவனைப் புகழ்ந்து கொண்டாடி: நீ இராயாயிருக்கிறாய்; இந்த இராயின்மேல் என் திருச்சபையைக் கட்டுவேன், நரகத்தின் வாசல்கள் அதை மேற்கொள்ளமாட்டாது. மோக்ஷத்தின் திறவுகோல்களையும் உனக்குக் கொடுப்பேன்; பூலோகத்தில் நீ எதைக் கட்டுவாயோ, அது பரலோகத்திலும் கட்டப்பட்டிருக்கும்; நீ பூலோகத்தில் எதைக் கட்டவிழ்ப்பாயோ, அது பரலோகத்திலும் கட்டவிழ்க்கப்பட்டிருக்கும் என்று சொல்லி, அவனைத் தமது திருச்சபைக்கு அஸ்திவாரக் கல்லாகவும், அதின்மேல் பூரண அதிகாரமுள்ளவராகவும் நியமித்தார்.

மேலும் திவ்விய கர்த்தர் மரித்து உயிர்த்தபின், அர்ச் அருளப்பர் 21-ம் அதிகாரம் 16-ம், 17-ம் வசனங்களில் சொல்லப்பட்டிருக்கிறபடியே, தம்முடைய ஞான மந்தையாகிய திருச்சபையை மேய்க்கும்படி அர்ச். இராயப்பருக்கு அதிகாரங்கொடுத்து அதை அவரிடத்தில் ஒப்புவித்தார்.

அர்ச். இராயப்பர் கர்த்தரிடத்தில் பெற்றுக்கொண்ட திருச்சபையின் ஆளுகையை எப்படி நடத்திவந்தாரென்று அப். நடபடி ஆகமத்தில் கண்டு கொள்ளலாம்.

அப்படியே அவர் சில வருஷகாலம் எருசலேமிலும், சுற்றுப்புறங்களிலும் போய்த் திருச்சபையை விசாரித்துவந்தபின், அந்தியோக்கியாவில் தமது பத்திராசனத்தை ஸ்தாபித்து 25 வருஷம் திருச்சபையை ஆண்டுநடத்தினார். அவ்விடத்தில் இருக்கும்போது கர்த்தரவதாரம் 44-ம் வருஷத்தில் தமது முதல் நிருபத்தையும், தாம் மரணமான வருஷமாகிய 66-ம் வருஷத்தில் தமது இரண்டாம் நிருபத்தையும் எழுதித் தந்தார். கடைசியாய் வேத விரோதியாகிய நெரோன் என்னும் கொடியஇராயனால் தலைகீழாகச் சிலுவையில் அறையப்பட்டு வேதசாட்சியானார்.

---



# தவஸ்யான அப். அர்ச். இராயப்பர் திருச்சபைக்கு எழுதிய

# பொது நிருபம்.

## முதல் அதிகாரம்.

*நம்மை விசுவாசத்துக்கும், நித்திய ஜீவியத்துக்கும், அழைத்தருளின சர்வேசுரனுக்கு ஸ்தோத்திரஞ்சொல்லி, கிறீஸ்துநாதருடைய இரத்தத்தினாலே இரட்சிக்கப்பட்டவர்களாகிய நாம் மிகுந்த பரிசுத்தத்தோடே நடக்கவேண்டியதென்று காண்பிக்கிறார்.*

1. யேசுக்கிறீஸ்துநாதருடைய அப்போஸ்தலனாகிய இராயப்பன், போந்து கலாத்தியா, கப்பதோசியா, ஆசியா, பித்தினியா தேசங்களில் சிதறியிருக்கிறவர்களில்,

2. பிதாவாகிய சர்வேசுரனுடைய முன்னறிவின்படியே, இஸ்பிரீத்துசாந்துவின் பரிசுத்தமாக்குதலுக்கும், கீழ்ப்படிதலுக்கும், யேசுக்கிறீஸ்துநாதருடைய இரத்தத் தெளிப்புக்கும் தெரிந்துகொள்ளப்பட்ட பரதேசிகளுக்கு எழுதுவது: உங்களுக்கு வரப்பிரசாதமும் சமாதானமும் மென்மேலும் உண்டாவதாக.

3. நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவின் பிதாவாகிய சர்வேசுரன் ஸ்தோத்தரிக்கப்படுவாராக. அவர் தம்முடைய இரக்கப் பெருக்கத்தின்படியே மரித்தோரிலிருந்து உயிர்த்த யேசுக்கிறீஸ்துநாதருடைய உத்தானத்தின் வழியாய் ஜீவனுள்ள நம்பிக்கைக்கும், (2. கொ. 1-3; எபே. 1-3.)

4. அழியாததும், மாசற்றதும், வாடாததுமாகிய சுதந்தரத்துக்கும் நம்மை மறுபடியும் ஜெனிப்பித்தார்.

5. கடைசிக்காலத்தில் வெளிப்பட ஆயத்தமாயிருக்கிற இரட்சணியத்துக்கு விசுவாசத்தைக்கொண்டு சர்வேசுரனுடைய வல்லமையால் காப்பாற்றப்பட்டிருக்கிறவர்களாகிய உங்களுக்கு அந்தச் சுதந்தரம் மோட்சத்தில் பத்திரமாய் வைக்கப்பட்டிருக்கிறது.

6-7. அக்கினியிலே சோதிக்கப்படுகிற பொன்னைப் பார்க்கிலும், அதிக விலையேறப்பெற்றதாகிய உங்கள் விசுவாசத்தின் பரிட்சையானது யேசுக்கிறீஸ்துநாதர் வெளிப்படும்போது, உங்களுக்குப் புகழ்ச்சியாகவும், மேன்மையாகவும், மகிமையாகவும் காணப்படும் பொருட்டு, இப்பொழுது சொற்பக்காலம் பலவித சோதனைகளினாலே துக்கப்படவேண்டியிருந்தாலும், அந்தச்சுதந்தரத்தை நினைத்து, நீங்கள் அக்களிப்பீர்கள்.

8. அவரை நீங்கள் காணுதிருந்தும், சிநேகிக்கிறீர்கள் ; இப்போது நீங்கள் அவரைத் தரிசியாதிருந்தும், அவரை விசுவசிக்கிறீர்கள். விசுவசித்து,

9. உங்கள் விசுவாசத்தின் கதியாகிய ஆத்தும இரட்சணியத்தை அடைவீர்களென்பதால், வாக்குக்கெட்டாததும், மகிமை நிறைந்ததுமான சந்தோஷத்தால் அகமகிழுவீர்கள்.

10. உங்களுக்கு வரவேண்டியிருந்த இந்த வரப்பிரசாதத்தைக் குறித்துத் தீர்க்கதரிசனம் உரைத்த தீர்க்கதரிசிகள் இந்த இரட்சணிய இரகசியத்தை ஆராய்ந்து, தியானித்தார்கள். (மத். 13-17.)

11. இவர்கள், கிறீஸ்துநாதர் படும் பாடுகளையும், அதற்குப்பின் அவருக்கு வரவேண்டியிருந்த மகிமைகளையும் தங்கள் உள்ளத்திலிருந்து தங்களுக்கு முன்னறிவித்த கிறீஸ்துவின் இஸ்பிரீத்துவானவர் எந்தக்காலத்தையும், எவ்விதமான காலத்தையும் குறித்தாரென்று ஆராய்ந்தார்கள்.

12. அவர்கள் தங்கள் நிமித்தமாக அல்ல, உங்கள் நிமித்தமாகவே அவைகளை வெளிப்படுத்தினுர்களென்று அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது. தேவதூதர் உற்றுத் தரிசிக்க விரும்புகிறவரும் பரலோகத்திலிருந்து அனுப்பப்பட்டவருமாகிய இஸ்பிரீத்துசாந்துவைக்கொண்டு உங்களுக்குச் சுவிசேஷத்தைப் போதித்தவர்களாலே இவைகள் இப்பொழுது உங்களுக்கு அறிவிக்கப்படுகின்றன.

13. ஆதலால், உங்கள் மனதின் இடையைவரிந்துகொண்டு, உள்ளடக்கமுள்ளவர்களாய், யேசுக்கிறீஸ்துநாதர் வெளிப்படும் காலத்திற்காக உங்களுக்கு அளிக்கப்படுகிற வரப்பிரசாதத்தின் பேரில் பூரண நம்பிக்கையாயிருங்கள்.

14. நீங்கள் அறியாமையினுலே முன் கொண்டிருந்த இச்சைகளின்படி இனி நடவாமல், கீழ்ப்படிதலுள்ள பிள்ளைகளாய்,

15. உங்களை அழைத்த பரிசுத்தரைப்போல், நீங்களும் உங்கள் சர்வநடபடிக்கைகளிலும் பரிசுத்தராயிருங்கள்.

16. ஏனெனில், நாம் பரிசுத்தராயிருக்கிறபடியால், நீங்களும் பரிசுத்தராயிருங்கள் என்று எழுதியிருக்கின்றது. (லேவி. 11-44.)

17. அன்றியும் பாரபட்சமில்லாமல், அவனவனுடைய கிரியைகளின்படியே நடுத்தீர்க்கிறவரை நீங்கள் பிதா என்று அழைத்தால், இங்கே நீங்கள் பரதேசிகளாய்ச் சஞ்சரிக்குமளவும் பயத்தோடே நடந்துகொள்ளுங்கள். (உபா. 10-17 ; உரோ. 2-11 ; கலாத். 2-6.)

18. உங்கள் பிதாக்கள்வழியாய் நீங்கள் அநுசரித்துவந்த வீணுனஆசாரங்களினின்று அழிவுள்ள பொன்னினுலும், வெள்ளியினுலும் நீங்கள் இரட்சிக்கப்படாமல்,

19. மாசுமறையற்ற ஆட்டுக்குட்டிக்கொப்பாகிய கிறீஸ்துநாதருடைய விலையேறப்பெற்ற இரத்தத்தினுல் இரட்சிக்கப்பட்டிருக்கிறீர்கள் என்று அறிந்திருக்கிறீர்கள். (1. கொ. 6-20 ; 7-23 ; எபி. 9-14.)

---

17. **பயத்தோடு நடந்துகொள்ளுங்கள் :** என்பதற்கு 1-வது. சர்வேசுரன் நமக்குப் பிதாவாயிருக்கிறதினுலே, பெற்ற தகப்பனைப் பிள்ளை மனநோகப்பண்ணுவதற்குப் பயந்து தகப்பனுக்கு ஏற்க நடப்பதுபோல், நாமும் சர்வேசுரன்மட்டில் பத்தியோடும், பயத்தோடும் நடக்கக்கடவோம் என்றும், 2-வது. சர்வேசுரன் நமக்குப் பிதாவாயிருக்கிறதுமன்றி, நம்மை நடுத்தீர்க்கிற நியாயாதிபதியாகவும், பாரபட்சமில்லாதவரும் கோணுத நீதியுள்ள நடுவருமாயிருப்பதினுல் அவருக்குப் பயந்து நடக்கக்கடவோம் என்றும் கருத்தாகும்.

20. அவர் உலக ஆரம்பத்துக்குமுன் குறிக்கப்பட்டவராயிருந்து, இந்தக் கடைசிக் காலங்களில் உங்களுக்காக வெளிப்பட்டார்.

21. அவர் வழியாகவே நீங்கள் சர்வேசுரன்பேரில் விசுவாசமாயிருக்கிறீர்கள். உங்கள் விசுவாசமும், நம்பிக்கையும் தமது பேரிலிருக்கும்படி சர்வேசுரன் அவரை மரித்தோரினின்று உயிர்ப்பித்து, அவருக்கு மகிமையைக் கொடுத்திருக்கிறார்.

22. ஆகையால் நீங்கள் பரம அன்பின் கீழ்ப்படிதலினாலே உங்கள் ஆத்துமங்களைச் சுத்தமாக்கியிருக்க, சகோதரசிநேக விஷயத்தில் நேர்மையான மனதோடு ஒருவரையொருவர் அதிக ஊக்கமாய் நேசிக்கக்கடவீர்கள்.

23. ஏனெனில் அழிவுள்ள வித்தினாலேயல்ல; ஜீவியரும் என்றென்றைக்கும் நிலைநிற்பவருமாகிய கடவுளுடைய வார்த்தையான அழியா வித்தினாலே மறுபடியும் ஜெனிப்பிக்கப்பட்டிருக்கிறீர்கள்.

24. ஏனெனில் மாம்சமெல்லாம் புல்லைப்போலவும், அதின் மகிமையெல்லாம் புல்லின் பூவைப்போலவும் இருக்கின்றது. புல் உலர்ந்து, அதின் பூவும் உதிர்ந்தது. (இசை. 40-6; யாக. 1-10.)

25. ஆண்டவருடைய வார்த்தையோ என்றென்றைக்கும் நிலைத்திருக்கின்றது; உங்களுக்குச் சுவிசேஷிக்கப்பட்டதே இந்த வார்த்தை.

## 2-ம். அதிகாரம்.

உலகப்பற்றுதலெல்லாம் விட்டு, மேலானவைகளை நாடவேண்டுமென்று போதிக்கிறார்.

1. ஆகையால் எவ்வித துர்க்குணத்தையும், எவ்வித கபடத்தையும், எவ்வித அபிநயத்தையும், பொறாமைகளையும், எவ்வித புறணிகளையும் ஒழித்துவிட்டு, (உரோ. 6-4.)

2. இப்போதே பிறந்த பிள்ளைகளைப்போல், கலப்பில்லாத ஞானப்பாலை உண்டு இரட்சணியத்துக்காக வளரும்படி அதன்மேல் விருப்பமாயிருங்கள்.

3. ஆண்டவர் மதுரமுள்ளவரென்று நீங்கள் ருசி பார்த்திருந்தாலல்லோ (இப்படிச் செய்வீர்கள்.)

4. மனிதர்களால் தள்ளப்பட்டதாயினும், சர்வேசுரனால் தெரிந்து, மகிமைப்படுத்தப்பட்ட ஜீவனுள்ள கல்லாகிய அவரை அண்டினவர்களாய்,

22-23. நாம் ஒருவரையொருவர் அன்போடு சிநேகிப்பதற்கு நாம் அடைந்திருக்கிற மறுபிறப்பே, ஆதாரமான முகாந்தரமாகும். நமது வெளி நிலைமையும் அந்தஸ்தும் எப்படியிருந்தாலும், ஞானஸ்நானத்தின் வழியாய் நாம் அடைந்த மறுபிறப்பினாலே நாம் எல்லாரும் சர்வேசுரனுடைய பிள்ளைகளாகவும், ஒருவருக்கொருவர் சமானஸ்தராகவும், சகோதரராகவும் இருக்கிறோம். அழிவுக்குரிய வித்தினால் அல்ல, அழியா வித்தாகிய நித்திய கடவுளுடைய வாக்கியத்தை விசுவசித்து, ஞானஸ்நானத்தால் அந்தக் கடவுளுக்கு நாம் பிள்ளைகளாகிறதினால், ஒருவரையொருவர் குறையற்ற சிநேகத்தோடு நேசிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

2. ஞானப்பால் என்பது ஞான உபதேசமென்று அர்த்தமாம். பிறந்த குழந்தை வளர்ந்து பலப்படுவதற்குப் பால் ஆதாரமாவதுபோல, ஞானஸ்நானத்தினால் மறுபிறப்படைந்தவர்கள் இரட்சணியத்துக்காக வளர்ந்து பலப்படுவதற்கு ஞான உபதேசமாகிய ஞானப்பாலை ஆவலோடு தேடிச் சாப்பிடவேண்டியது.

4. **ஜீவனுள்ள கல்:**—யேசுநாதர் ஞான ஜீவியத்திற்கு ஊற்றும் மூலமுமாயிருப்பதினாலே அவர் ஜீவனுள்ள கல் என்னப்படுகிறார்.

5. நீங்களும் ஜீவனுள்ள கற்களைப்போல யேசுக்கிறீஸ்துவின் வழியாய்ச் சர்வேசுரனுக்கு உகந்த ஞானப்பலிகளை ஒப்புக்கொடுக்கும்படி, பரிசுத்த குருத்துவமும், ஞானமாளிகையுமாகக் கட்டுப்பட்டு எழும்புங்கள்.

6. இதினிமித்தமே இதோ, தெரிந்துகொள்ளப்பட்டதும், விலையேறப்பெற்றதுமான முக்கிய மூலைக்கல்லை சீயோன்நகரில் வைக்கிறேன்; அதன்மேல் விசுவாசமாயிருக்கிறவன் கலங்கமாட்டான் என்று வேதத்திலே சொல்லியிருக்கின்றது. (இசை. 28-16; உரோ. 9-33.)

7. ஆகையால் விசுவசிக்கிறவர்களாகிய உங்களுக்கு அது மகிமையாயிருக்கின்றது. விசுவாசியாதவர்களுக்கோ, கொத்தர்களால் தள்ளுண்டு, மூலைக்குத் தலைக்கல்லாகிய அந்தக் கல், (சங். 97-22; மத். 21-42.)

8. அவர்களுக்கு இடறுகல்லாகவும் தவறிவிழுவதற்கு ஏதுவான கற்பாறையாகவும் இருக்கின்றது. அவர்கள் விசுவசியாதநிமித்தம் தேவ வாக்கியத்துக்கு விரோதமாய் இடறுகிறார்கள். அப்படி இடறுவதற்கே அவர்கள் கைவிடப்பட்டிருக்கிறார்கள்.

9. நீங்களோ, இருளினின்று உங்களைத் தமது ஆச்சரியமான ஒளிக்கு அழைத்தவருடைய வல்லப செய்கைகளைப் பிரசித்தமாக்கும்படிக்கு, தெரிந்து கொள்ளப்பட்ட வம்சமும், இராஜரீக ஆசிரியக் கூட்டமும், பரிசுத்த ஜனமும், அவருடைய சம்பாத்திய பிரஜைகளுமாயிருக்கிறீர்கள். (யாத். 19-6.)

10. ஒருகாலத்தில் சர்வேசுரனுடைய ஜனங்களாயிராத நீங்கள் இப்பொழுது அவருடைய ஜனங்களாயிருக்கிறீர்கள். முன்னே இரக்கம்பெறாதிருந்த நீங்கள் இப்போது இரக்கம்பெற்றவர்களாயிருக்கிறீர்கள். (ஓசை. 2-24; உரோ. 13-14.)

11. மிகவும் பிரியமானவர்களே, நீங்கள் அந்நியரும் வழிப்போக்கருமாயிருக்கக்கொள்ள, ஆத்துமத்துக்கு விரோதமாய்ப் போராடுகிற மாம்ச இச்சைகளை விட்டு விலகி,

5. கிறீஸ்துவர்கள் அனைவரும் ஜீவக்கல்லாகிய யேசுநாதரிடத்திலிருந்து பொழிந்து வரும் தேவசிநேகத்தைப் பெற்று, அந்தச் சிநேகத்தால் அவரிடத்தில் நிலைமையாய் ஒன்றித்திருந்து தர்மக்கிரியைகளைச் செய்துவருவதினால், தாங்களே ஜீவக்கற்களாய் அவரிடத்தில் கட்டப்படுகிற ஞான மாளிகையைப்போலாவதுமன்றி, பரிசுத்த ஆசாரியக் கூட்டமுமாகிறார்கள். யேசுநாதர் இவ்வுலகத்திலிருக்கும்போது, தமது தேவபிதாவை ஸ்தோத்தரித்து எவ்விதம் தம்மை அவருக்கு ஒப்புக்கொடுத்தாரோ, அந்தக் கருத்தோடு அவர்களும் தங்கள் தவம், ஒறுத்தல், ஜெபம் முதலிய புண்ணியக்கிருத்தியங்களை ஒப்புக்கொடுக்கும்போது சர்வேசுரனுக்கு ஏற்கையான ஞானப் பலிகளாகிறார்கள்.

9. **தெரிந்துகொள்ளப்பட்ட வம்சம்:**—பூர்வத்தில் இஸ்ராயேல் ஜனங்கள் சர்வேசுரனால் தெரிந்துகொள்ளப்பட்ட பிரஜைகளாயிருந்ததுபோல், கிறீஸ்துவர்கள் எல்லாரும் சர்வேசுரனுடைய விசேஷ கிருபைபெற்ற ஜனங்களாயிருக்கிறார்கள். (இசை. 43-20.)

**இராஜரீக ஆசிரியக்கூட்டம்:**—சர்வேசுரன் இஸ்ராயேல் ஜனங்களைத் தமக்கு இராஜரீகக் குருத்துவமுடையவர்களாகத் தெரிந்துகொண்டதுபோல், கிறீஸ்துவர்களையும் யேசுநாதரிடத்தில் தெரிந்துகொண்டார். ஆகையால் கிறீஸ்துவர்கள் எல்லாரும் கிறீஸ்துநாதருடைய இராஜத்துவத்துக்கும் அவருடைய குருத்துவத்துக்கும் பங்காளிகளாயிருக்கிறார்களென்று அர்த்தமாம். (யாத். 19-6.)

12. புறஜாதியார் உங்களைக்குறித்து, நீங்கள் அக்கிரமிகளென்று அவதூறு சொல்லும்போதே அவர்கள் உங்கள் நற்கிரியைகளால் உங்களை மதித்து, சந்திப்பின்நாளிலே சர்வேசுரனை ஸ்துதிக்கும்படியாக, நீங்கள் அவர்கள்நடுவில் நல்நடக்கையுள்ளவர்களாயிருக்க வேண்டுமென்று உங்களை மன்றாடுகிறேன்.

13. ஆகையால்சர்வேசுரனைப்பற்றிச் சகல மனுஷ சிஷ்டிக்கும் கீழ்ப்படிந்திருங்கள். (உரோ. 12-1.)

14. இராஜாவானாலும், எல்லாரிலும் மேன்மைப்பட்டவனாய் இருப்பதினாலே அவனுக்கும், அதிகாரிகளானால் துஷ்டர்களைத் தண்டிப்பதற்கும், நல்லவர்களைப் புகழுவதற்கும் அவனால் அனுப்பப்பட்டவர்களாயிருப்பதினாலே, அவர்களுக்கும் கீழ்ப்படிந்திருங்கள்.

15. இந்தப் பிரகாரமாய் நீங்கள் நன்மையைச்செய்வதினால், மதியீன மனிதருடைய அறியாமையை அடக்குவது சர்வேசுரனுடைய சித்தமாமே.

16. உங்கள் சுயாதீனத்தைத் துர்க்குணத்திற்கு மூடுபோர்வையாகக்கொள்ளாமல், மெய்யாகவே சுயாதீனராய், சர்வேசுரனுடைய ஊழியரைப்போல் பணிந்து நடங்கள்.

17. எல்லாருக்கும் மரியாதைசெய்யுங்கள். சகோதரரை நேசியுங்கள். சர்வேசுரனுக்குப் பயந்திருங்கள். இராஜாவுக்குச் சங்கை செய்யுங்கள். (உரோ. 12-10.)

18. ஊழியர்களே, உங்கள் எஜமான்களுக்கு எவ்வித அச்சத்தோடும் கீழ்ப்படிந்திருங்கள். நல்லவர்களுக்கும், சாந்தகுணமுள்ளவர்களுக்கும் மாத்திரமல்ல, முரட்டுக்குணமுள்ளவர்களுக்கும் பணிந்திருங்கள்.

19. ஏனெனில், சர்வேசுரனைச்சார்ந்த மனச்சாட்சியினால் ஒருவன் அநியாயமாய்ப் பாடுபட்டு, உபத்திரவங்களைப் பொறுமையோடு சகித்தால், அதுவே அவருக்குப் பிரியமாயிருக்கும்.

20. ஏனெனில் நீங்கள் குற்றஞ்செய்து கன்னத்தில் அறையப்படும்போது, சகித்துக்கொள்வதினால் உங்களுக்குப் பெருமை என்ன? ஆனால் நன்மைசெய்யும்போது பொறுமையோடு துன்பங்களைச் சகித்தால், அதுவே சர்வேசுரனுடைய சமுகத்தில் உகந்ததாயிருக்கும். (மத். 5-10.)

21. இதற்காகவே நீங்கள் அழைக்கப்பட்டிருக்கிறீர்கள். ஏனெனில் கிறீஸ்துநாதரும் நமக்காகப் பாடுபட்டு, தம்முடைய அடிச்சுவடுகளை நீங்கள் பின்பற்றும்படியாக உங்களுக்கு மாதிரி வைத்துவிட்டுப்போயிருக்கிறார்.

22. அவர் பாவம் செய்யவுமில்லை. அவருடைய வாயில் வஞ்சனை காணப்படவுமில்லை. (இசை. 53-9.)

23. அவர் தூஷணிக்கப்படும்போது, தூஷணித்தவருமல்ல. பாடுபடும்போது மிரட்டினவருமல்ல. ஆனால் அநியாயமாய்த் தமக்குத் தீர்ப்பிட்டவனுக்குத் தம்மை ஒப்புவித்தார்.

19. இந்த வாக்கியத்துக்கு அர்த்தமேதென்றால், ஒருவன் தான் துன்பப்படுவது சர்வேசுரனுடைய சித்தமென்று அறிந்து, அப்படித் துன்பப்படுவது சர்வேசுரனுடைய சித்தமானதால், தனக்குக் கடமையென்று எண்ணி, அதைப் பொறுமையோடு சகித்துக்கொண்டால், தேவசமுகத்தில் ஏற்கையாயிருக்கும்.

20. அநீதமாய்த் தங்கள் எஜமான்களால் துன்பப்படுகிற ஊழியர் பொறுமையோடு அந்தத் துன்பங்களை அநுபவிக்கிறது சர்வேசுரனுக்கு உகந்ததாயிருக்குமென்று இவ்வாக்கியத்தால் அறிக.

24. நாம் பாவங்களுக்கு மரித்தவர்களாய் நீதிக்கு ஜீவிக்கும்படி, அவர்தாமே சிலுவைமரத்தின்மேல் தமது சரீரத்தில் நமது பாவங்களைச் சுமந்தார். அவருடைய காயங்களினால் சொஸ்தமாக்கப்பட்டீர்கள். (இசை. 53-5; 1. அருள்.3-5.)

25. சிதறிப்போன ஆடுகளைப்போல் இருந்தீர்கள். இப்பொழுதோ உங்கள் ஆத்துமங்களுக்கு மேய்ப்பரும் அத்தியட்சருமானவரிடத்தில் திரும்பி வந்திருக்கிறீர்கள்.

## 3-ம். அதிகாரம்.

ஸ்திரீ புருஷர்களுடைய கடமைகளையும், நானாவித சுகிர்த புத்திமதிகளையும் சொல்லுகிறார்.

1. இந்தப் பிரகாரமாய் ஸ்திரீகள் தங்கள் புருஷர்களுக்குக் கீழ்ப்படிந்திருக்கக்கடவார்கள். அப்பொழுது அவர்களில் யாராவது தேவவாக்கியத்தை விசுவசியாதிருந்தால், (எபே.5-22.)

2. பயத்தோடுகூடிய உங்கள் கற்புள்ள நடக்கையைக்கண்டு, அவர்கள் போதனையின்றியே மனைவிகளுடைய நல்நடக்கையினாலே ஆதாயமாக்கிக் கொள்ளப்படுவார்கள். (1. தீமோ.2-9)

3. உங்களுடைய அலங்கரிப்பு கூந்தலைப்பின்னுவதும், பொன்னாபரணங்களை அணிவதும், அல்லது உயர்ந்த வஸ்திரங்களை உடுத்திக்கொள்வதுமாகிய வெளி அலங்கரிப்பாயிராமல், (1. தீமோ. 2-9.)

4. இருதய உள்ளரங்க மனுஷத்துவமானது சாந்தமும் அமரிக்கையுமான மனத்தூய்மையினாலே அலங்கரிக்கப்படவேண்டியது. இதுவே சர்வேசுரனுடைய சமுகத்தில் விலையேறப்பெற்றது.

5. இவ்வண்ணமே பூர்வீகத்தில் சர்வேசுரன்பேரில் நம்பிக்கைவைத்த பரிசுத்த ஸ்திரீகள் தங்கள் புருஷர்களுக்குக்கீழ்ப்படிந்து, தங்களை அலங்கரித்தார்கள்.

6. அந்தப்படியே சாராள் அபிரகாமை ஆண்டவனென்று சொல்லி, அவனுக்குக் கீழ்ப்படிந்திருந்தாள். நீங்களும் நன்மையைச்செய்து, எவ்வித ஆபத்துக்கும் அஞ்சாதிருந்தால்,அவளுக்குக் குமாரத்திகளாயிருப்பீர்கள்.(ஆதி. 18-12.)

7. அப்படியே புருஷர்களே, மனைவியானவள் பலவீன பாத்திரமாயிருக்கிறதினாலே, உங்கள் ஜெபங்களுக்குத் தடையுண்டாகாதபடிக்கு நீங்கள் விவேகத்தோடு அவர்களுடன் வாழ்ந்து, உங்களுடனேகூட அவர்களும் (நித்திய)ஜீவியத்தின் வரப்பிரசாதத்தைச்சுதந்தரித்துக் கொள்ளுகிறவர்களானபடியினாலே அவர்களுக்குச் செய்யவேண்டிய கனத்தைச் செய்யுங்கள். (1. கொ. 7-3.)

8. கடைசியாய் நீங்கள் எல்லாரும் ஒரு மனப்பட்டவர்களும், அந்நியோந்நிய இரக்கமுள்ளவர்களும், சகோதர நேசமுள்ளவர்களும், மன உருக்கமுள்ளவர்களும், சாந்தமும் தாழ்ச்சியுமுள்ளவர்களுமாயிருங்கள்.

9. நீங்கள் தின்மைக்குத் தின்மை செய்யாமலும், சாபத்துக்குச் சாபமிடாமலும் இருப்பதுந்தவிர, அதற்குப் பதிலாக நீங்கள் ஆசீர்வாதத்தைச் சுதந்தரித்துக்கொள்ளும்படி அழைக்கப்பட்டவர்களாகையால், ஆசீர்வதியுங்கள். (பழ. 17-13; உரோ. 12-17; 1. தெச. 5-15.)

10. ஏனெனில், ஜீவனை விரும்பி, நல்ல நாட்களைக் காணும்படி ஆசிக்கிறவன் பொல்லாப்புக்குத் தன்நாவையும், கபடமான பேச்சுக்களுக்குத் தன் உதடுகளையும் அடக்கி, (சங். 33-13.)

11. தின்மைக்கு விலகி, நன்மையைச் செய்து, சமாதானத்தை நாடி அதைப் பின்பற்றுவானாக. (இசை. 1-16.)

12. ஏனெனில், ஆண்டவருடைய கண்கள் நீதிமான்கள்மேலும் அவருடைய செவிகள் அவர்களுடைய ஜெபத்தின்மேலும் நோக்கமாயிருக்கின்றன. ஆனால் தின்மையைச் செய்கிறவர்கள் மேல் ஆண்டவர் கோபமுகமாயிருக்கிறார்.

13. நீங்கள் நன்மையை நாடிச்சென்றால், உங்களுக்குத் தீங்குசெய்பவன்யார்?

14. ஆகிலும் நீங்கள் நீதியினிமித்தம் ஏதேனும் பாடுபட்டால் பாக்கியவான்கள். ஆதலால் அவர்கள் மிரட்டலுக்குப் பயப்படாமலும், கலங்காமலுமிருங்கள். (மத். 5-10.)

15. ஆண்டவராகிய கிறீஸ்துநாதரை உங்கள் இருதயங்களில் அர்ச்சியுங்கள். உங்களிலுள்ள நம்பிக்கையைக்குறித்து உங்களிடத்தில் விசாரித்துக் கேட்கிற யாவருக்கும் சாந்தத்தோடும், வணக்கத்தோடும் தகுந்த பதில்சொல்லும்படி எப்போதும் ஆயத்தமாயிருங்கள்.

16. ஆயினும் கிறீஸ்துநாதருக்கேற்கையான உங்கள் நல்நடக்கையைத் தூஷணிக்கிறவர்கள் உங்கள்மேல் அவதூறு சொல்லும் விஷயத்தில் அவர்களே வெட்கிப்போகும்படி நல்மனச்சாட்சியுடையவர்களாய் இருங்கள்.

17. தின்மையைச்செய்து துக்கத்தை அநுபவிப்பதிலும், சர்வேசுரனுக்குச் சித்தமானால், நன்மையைச்செய்து, துக்கத்தை அநுபவிப்பது நலமாமே.

18. ஏனெனில், கிறீஸ்துநாதரும் நம்மைச் சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுக்கும்படி நம்முடைய பாவங்களுக்காக ஒருதரம் மரித்தார். அநீதருக்காக நீதிமானாகிய அவர் மரித்தார். அவர் மாம்சத்தில் கொலையுண்டு, ஆத்துமத்தில் உயிர்ப்பிக்கப்பட்டவராய், (உரோ. 5-6; எபி. 9-28.)

19. அந்த ஆத்துமத்தில் அவர் போய், சிறையிலிருந்த ஆத்துமங்களுக்குப் பிரசங்கித்தார்.

20. அந்த ஆத்துமங்கள் பூர்வத்திலே நோயனுடைய நாட்களில் அவன் பேழையைச் செய்யும்போது, சர்வேசுரனுடைய நீடியபொறுமையை எதிர்பார்த்துக்கொண்டு அவிசுவாசிகளாயிருந்தவர்கள். அந்தப்பேழையில் சொற்பப்பேராகிய எட்டுப்பேர் மாத்திரம் ஜலத்தினின்று இரட்சிக்கப்பட்டார்கள். (ஆதி. 6-14; மத். 24-37.)

21. அதற்கொத்த ஒப்பனையான ஞானஸ்நானமானது சரீர அழுக்கை நீக்குவதாயிராமல், சர்வேசுரன்மட்டில் நல்ல மனச்சாட்சி உண்டாவென்று அத்தாட்சியாயிருந்து, யேசுக்கிறீஸ்துநாதருடைய உத்தானத்தைக்கொண்டு நம்மை இரட்சிக்கிறது.

22. நாம் நித்திய ஜீவியத்துக்குச் சுதந்தரராகும்படி அவர் மரணத்தைச் சுகித்தபின் பரலோகத்துக்கு எழுந்தருளி, சர்வேசுரனுடைய வலதுபாரிசத்தில் உட்கார்ந்திருக்கிறார். தூதர்களும், பலவத்தரும், சத்துவகரும் அவருக்குக் கீழ்ப்பட்டிருக்கிறார்கள். (எப். 1-21.)

19-20. அப்போஸ்தலர்களால் உண்டாக்கப்பட்ட விசுவாசமந்திரத்தில் சொல்லியிருப்பதுபோல், யேசுநாதர் மரித்தவுடனே அவருடைய திரு ஆத்துமம் பாதாளங்களிலே, அதாவது: பிதாப்பிதாக்கள் ஸ்தலத்திலே இறங்கினது. அங்கிருந்த ஆத்துமாக்கள் யாரெனில் யேசுநாதருடைய திரு மரணத்துக்கு முன்னிருந்தவர்களில் மெய்யான சர்வேசுரனையும், வர இருந்த இரட்சகரையும் விசுவசித்துச் சாவானபாவமில்லாமல் மரித்தவர்களுடைய ஆத்துமாக்களாம். அந்தச் சகல ஆத்துமாக்களுக்கும் யேசுநாதர்சுவாமி தம்முடைய மரணத்

## 4-ம். அதிகாரம்.

*பாவத்தை விலக்கி, ஜெபத்திலும், அந்நியோந்நிய சிநேகத்திலும் நிலைத்திருக்கவும், எல்லாவற்றையும் தேவ ஸ்தோத்திரமாகச்செய்யவும், கிறீஸ்துநாதருடைய பாவனையாகத் துன்பங்களில் பொறுமையாயிருக்கவும் கற்பிக்கிறார்.*

1. ஆகையால் கிறீஸ்துநாதர் நமக்காகத் தமது சரீரத்தில் பாடுபட்டிருக்கக்கொள்ள, நீங்களும் அப்படிப்பட்ட சிந்தனையை ஆயுதமாகத் தரித்துக்கொள்ளுங்கள். (உரோ. 6-7.)

2. ஏனெனில், சரீரத்தில் பாடுபட்டவன் இனித் தான் சரீரத்தோடிருக்கும் காலம்வரையில், மனுஷருடைய இச்சைகளின்படி நடவாமல், சர்வேசுரனுடைய சித்தத்தின்படியே நடக்கத்தக்கதாகப் பாவங்களைவிட்டு விலகியிருப்பான். (எபே. 4-23.)

3. ஆகையால், காமவிகாரம், துராசை, மதுபானம், பேருண்டி, குடிவெறி, அக்கிரமமான விக்கிரக ஆராதனை ஆகிய இவைகளில் உழன்றவர்கள் உண்டே, அவர்கள் அஞ்ஞானிகளுடைய மனதின்படி நடப்பதற்கு இவைகளில் செலவழித்தகாலம் போதும்.

4. இப்பொழுதோ வெட்கத்துக்குரிய அப்படிப்பட்ட துர்மார்க்கத்திலே அவர்களோடேகூட நீங்களும் நடவாததினாலே அவர்கள் ஆச்சரியப்பட்டு, உங்களைத் தூஷணிக்கிறார்கள்.

5. அவர்கள் ஜீவியர்களையும் மரித்தவர்களையும் நடுத்தீர்க்க ஆயத்தமாயிருக்கிறவருக்குக் கணக்குக் கொடுப்பார்கள்.

6. இதினிமித்தம் மரித்தோரானவர்கள், மனுஷர் முன்பாகச் சரீரத்தில் தீர்வையிடப்பட்டிருந்தாலும், சர்வேசுரன் முன்பாக ஆத்துமத்தில் பிழைக்கும்படியாக அவர்களுக்குச் சுவிசேஷம் பிரசங்கிக்கப்பட்டது.

7. எல்லாவற்றிற்கும் முடிவு சமீபமாயிற்று. ஆகையால் விவேகிகளாயிருந்து, ஜெபம்பண்ணுவதில் விழித்திருங்கள்.

8. எல்லாவற்றிற்கும் மேலாக ஒருவரோடொருவர் நிலைமையான சிநேகமுள்ளவர்களாயிருங்கள். ஏனெனில் சிநேகமானது திரளான பாவங்களை மூடும். (பழ. 10-12.)

---

*தால் அடைந்த இரட்சணியமாகிய நல்ல செய்தியை, அதாவது: சுவிசேஷத்தை அறிவிக்கப்போனார். அந்த ஆத்துமங்களுக்குள்ளே நோயன் காலத்தில் ஜலப்பிரளயத்தில் அமிழ்ந்தி மடிந்த அநேக ஆத்துமங்களும் இருந்தன. எப்படியெனில், அப்பொழுது ஏறக்குறைய எல்லோரும் பாவிகளாயிருந்தாலும், அவர்களுக்குள் ஒருவனும் அஞ்ஞானியாயிருந்ததில்லை. ஏனெனில் ஜலப்பிரளயத்துக்குப்பின் பாஷை வேறுபட்டு, ஜனங்கள் பற்பல பிரிவுகளாய்ப் பிரிந்துபோனபிறகு அஞ்ஞான மார்க்கங்கள் உண்டானதேயொழிய, அதற்குமுன் சகலரும் மெய்யானசர்வேசுரனை ஆராதித்து, இரட்சகர் வருவாரென்று எதிர்பார்த்திருந்தார்கள். ஜலப்பிரளயம் வரப்போகிறதென்று நோயன் அவர்களுக்கு எச்சரித்துப் புத்திசொல்லும்போது, அவர்கள் நம்பாமல் சர்வேசுரன் நீண்டகாலம் பொறுமையாயிருப்பாரென்று சொல்லி, மனந்திரும்பாதிருந்தார்கள். ஆயினும் ஜலப்பிரளயந் துவக்கினவுடனே அவருடைய வார்த்தைகள் உண்மையென்று நம்பி, அவர்களில் அநேகர் தங்கள் பாவங்களுக்காக மனஸ்தாபப்பட்டு மனந்திரும்பினார்களென்று எண்ணுவதற்கு இடமுண்டு.*

*6. இந்த அதிகாரத்தின் துவக்கமுதல் விளங்குகிறபடி மறு ஜீவியம் உண்டென்று விசுவசியாத அஞ்ஞானிகளைப்போல் கிறீஸ்துவர்கள் நடக்கப்படாதென்றும், அவர்கள் நிந்தை பரியாசம்பண்ணினாலும், அவர்கள் ஜீவியரையும் மரித்தோரையும் நடுத்தீர்க்கப்போகிற கர்த்தருக்குக் கணக்குக் கொடுக்கவேண்டியதென்றுங் காண்பித்தபின், மறு ஜீவியம் உண்டென்று தெளிவிக்கும்படி முந்தின அதிகாரம் 19-ம் 20-ம் வசனங்களில் சொல்லியதைத் திரும்பவுஞ் சொல்லுகிறார்.*

9. முறுமுறுப்பில்லாமல் ஒருவரை யொருவர் உபசரியுங்கள். (உரோ. 12-13; எபி. 13-2; பிலி. 2-14.)

10. அவனவன் பெற்றுக்கொண்ட வரத்தின்படியே சர்வேசுரனுடைய பலவித வரப்பிரசாதங்களைப் பங்கிடுகிற நல்ல உக்கிராணக்காரரைப்போல், நீங்கள் ஒருவருக்கொருவர் உதவிசெய்யுங்கள்.

11. ஒருவன் போதித்தால், தேவ வாக்கியத்துக்கேற்கப் போதிக்கக் கடவான். ஒருவன் பணிவிடைசெய்தால், சர்வேசுரன் தனக்கருளிய பெலத்தின்படி செய்யக்கடவான். இப்படியே சகல காரியங்களிலும் யேசுக்கிறீஸ்துவின் மூலமாய்ச் சர்வேசுரனுக்கு ஸ்துதியுண்டாகும்படி செய்வீர்களாக. அவருக்கே மகிமையும் இராச்சியபாரமும் அநவரதகாலங்களிலும் உண்டாகக்கடவது. ஆமென்.

12. மிகவும் பிரியமானவர்களே, உங்களைச் சோதிக்கும்படி உங்களுக்கு நேரிடுகிற (துன்பமாகிற) அக்கினியைப் பற்றி ஏதோ நூதனமென்று ஆச்சரியப்படாமல்,

13. கிறீஸ்துநாதருடைய மகிமை வெளிப்படும்போது,நீங்கள் களிகூர்ந்து மகிழும்படியாக அவருடைய பாடுகளுக்கு நீங்கள் பங்காளிகளானதினாலே சந்தோஷப்படுங்கள். (மத். 5-10.)

14. நீங்கள் கிறீஸ்துநாதருடைய நாமத்தைப்பற்றி நிந்திக்கப்பட்டால்,பாக்கியவான்கள். ஏனெனில், சர்வேசுரனுடைய மாட்சிமையும் மகிமையும் வல்லமையுமாகிய அவருடைய இஸ்பிரீத்துவானவர் உங்கள்மேல்தங்கியிருக்கிறார்.

15. உங்களில் ஒருவனும் கொலைபாதகன், திருடன், அவதூறுசொல்லுபவன், பிறர் பொருளை அபேட்சிக்கிறவனுகை ஆக்கினைப்படக்கூடாது.

16. ஆனால், ஒருவன் கிறீஸ்துவனுயிருப்பதைப்பற்றிப் பாடுபட்டால் வெட்கப்படாமல், இந்த நாமத்தின் நிமித்தம் சர்வேசுரனை மகிமைப்படுத்துவானுக.

17. ஏனெனில், நடுத்தீர்வை சர்வேசுரனுடைய வீட்டிலே துவக்குங்காலமாயிருக்கின்றது. நம்மிடத்திலே அது முந்தித் துவக்கினல்,சர்வேசுரனுடைய சுவிசேஷத்துக்குக் கீழ்ப்படியாதவர்களுடைய முடிவு என்னமாயிருக்கும்?

18. நீதிமானே இரட்சணியமடைவது அரிதானல், தேவதுரோகிக்கும் பாவிக்கும் இடம் எங்கே? (பழ. 11-31.)

19. ஆகையால் சர்வேசுரனுடைய சித்தத்தின்படி துன்பப்படுகிறவர்கள் நற்கிரியைகளைச் செய்து, தங்கள் பிரமாணிக்கமுள்ள சிர்ஷ்டிகராகிய அவர் கையில் தங்கள் ஆத்துமங்களை ஒப்புவிக்கக்கடவார்கள்.

## 5-ம். அதிகாரம்.

*மூப்பர்களாகிய குருக்கள் தங்களுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஞான மந்தையைத் தங்கள் வார்த்தையினலும் மாதிரியினலும் மேய்க்கவேண்டுமென்றும், சிறியோர் அவர்களுக்குக் கீழ்ப்படிந்திருக்கவேண்டுமென்றும் கற்பிக்கிறார்.*

1. ஆகையால், உங்களிலுள்ள மூப்பர்களுக்கு உடன்மூப்பனும், கிறீஸ்துநாதருடைய பாடுகளுக்குச் சாட்சியும், இனி வெளிப்படப்போகிற மகிமைக்குப் பங்காளியுமாகிய நான் மூப்பர்களைக் கேட்டுக்கொள்ளுகிறதாவது.

12. இதில் சொல்லப்படுகிற அக்கினி, துன்ப துரிதங்களின் பெருக்கமாம். ஏனெனில் தட்டானனவன் அக்கினியினல் பொன்னைப் பரிசோதித்துச் சுத்தமாக்கிறதுபோல், சர்வேசுரனும் சகல புண்ணியாத்துமாக்களையும் பெருந்துன்ப துரிதங்களினல் சோதித்துப் பரிசுத்தமாக்குவது வழக்கமாயிருக்க, நமக்கு ஏதேனும் துன்பதுரிதம் நேரிடும்போது, அது நூதனமென்று எண்ணித் திகைக்கலாகாதென்று அறியவும்.

1. **மூப்பர்:**—இவ்விடத்தில் மூப்பர் என்னுஞ் சொல், திருச்சபையின் மேல் அதிகாரம்பெற்ற குருக்களையும் மேற்றிராணிமார்களையுங் குறிக்கிறது.

2. உங்களிடத்தில் ஒப்புவிக்கப்பட்ட சர்வேசுரனுடைய மந்தையை மேய்த்து, கட்டாயமாயல்ல, கடவுளுக்கேற்க வலியமனதோடும், இழிவான ஆதாயத்தை நாடியல்ல, மனப்பிரீதியோடும், (அப். 20-28.)

3. (கர்த்தருடைய) சுதந்தரவாளிகளின்மேல் அதிகாரஞ் செலுத்துகிறவர்கள்போலல்ல; நல்லமனதோடும் மந்தைக்கு மாதிரிகளாகக் கண்காணித்துவாருங்கள். (லூக். 22-25.)

4. இவ்விதமாய், பிரதான மேய்ப்பர் வெளிப்படும்போது மகிமையுள்ள வாடாத கிரீடத்தைப் பெற்றுக்கொள்ளுவீர்கள்.

5. வாலிபர்களே, மூப்பருக்குக் கீழ்ப்படிந்திருங்கள். நீங்கள் எல்லாரும் ஒருவருக்கொருவர் மனத்தாழ்மை விளங்க நடந்துகொள்ளுங்கள். ஏனெனில், சர்வேசுரன் ஆங்காரிகளை எதிர்த்துத் தாழ்ச்சியுள்ளவர்களுக்குத் தமது வரப்பிரசாதத்தை அளிக்கிறார். (உரோ. 12-10; யாக. 4-5.)

6. ஆகையால், சர்வேசுரன் உங்களைச்சந்திக்கும் காலத்தில் உங்களை உயர்த்தும்படிக்கு அவருடைய வல்லமையுள்ள கரத்தின்கீழ் உங்களைத் தாழ்த்திக்கொள்ளுங்கள். (யாக. 4-10.)

7. அவர் உங்களை விசாரிக்கிறவராகையால், அவர்மேல் உங்கள் சகல கவலைகளையும் வைத்துவிடுங்கள். (சங். 54-23; மத். 6-25.)

8. மனஅடக்கமும் விழிப்பும் உள்ளவர்களாயிருங்கள். ஏனெனில் உங்கள் சத்துருவாகிய பசாசு கர்ச்சிக்கிற சிங்கத்தைப்போல் யாரை விழுங்கலாமோவென்று தேடி, சுற்றித்திரிகிறது.

9. ஆகையால் நீங்கள் விசுவாசத்தில் உறுதியுள்ளவர்களாய், அதற்கு எதிர்த்து நில்லுங்கள். உலகத்திலுள்ள உங்கள் சகோதரருக்கும் இவ்வித துன்பங்கள் உண்டென்று அறிந்துகொள்ளுங்கள்.

10. கிறீஸ்துயேசுவுக்குள் நம்மைத் தமது நித்திய மகிமைக்கு அழைத்தவராகிய சர்வ கிருபையுள்ள சர்வேசுரன் கொஞ்சக்காலம் துன்பப்படுகிறவர்களை உத்தமராக்கி, உறுதிப்படுத்தி ஸ்திரப்படுத்துவார்.

11. அவருக்கே அநவரதகாலமும் மகிமையும் இராச்சியபாரமும் உண்டாவதாக. ஆமென்.

12. உங்களை மன்றாடவும், நீங்கள் நிலைபெற்று நிற்கிற இஷ்டப்பிரசாதம் சர்வேசுரனுடைய மெய்யான இஷ்டப்பிரசாதமென்று சாட்சி கொடுக்கவும், இதைச் சுருக்கமாய் எனக்குத் தோன்றுகிறபடி எழுதி உங்களுக்கு உண்மையுள்ள சகோதரனாகிய சில்வான் வழியாய் அனுப்பினேன்.

13. உங்களோடு தெரிந்துகொள்ளப்பட்ட பபிலோனிலுள்ள திருச்சபையும், என் குமாரனாகிய மாற்கும் உங்களுக்கு மங்களஞ் சொல்லுகிறார்கள்.

14. பரிசுத்த முத்தத்தோடு ஒருவரொருவருக்கு மங்களஞ்சொல்லிக்கொள்ளுங்கள். கிறீஸ்துவுக்குள்ளிருக்கிற உங்கள் அனைவருக்கும் இஷ்டப்பிரசாதம் உண்டாவதாக. ஆமென்.

---

12. சில்வான் அல்லது சீலா என்பவர் இந்த நிருபத்தைக் கொண்டுபோனவர். இவர் அர்ச். இராயப்பருக்குத் தோழனாயிருந்தவர். (அப். 15-27. காண்க.)

13. அர்ச். இராயப்பர் இவ்விடத்தில் தாமிருந்த உரோமாபுரியைப் பபிலோனென்று சொல்லுகிறார். ஏனெனில் அது பழைய பபிலோனைப்போல் அஞ்ஞானத்திலும் பாவாக்கிரமத்திலும், சுக செல்வ வாழ்விலும் மிகுத்த பட்டணமாயிருந்தது.



# பாயிரம்.

---

தலையான அப்போஸ்தலராகிய அர்ச். இராயப்பர் இந்த 2-ம் நிருபத்திலே தம்முடைய மரணம் அடுத்திருக்கிறதை வெளிப்படுத்தி, எவ்வித துர்க்குணங் களையும் விசேஷமாய் அந்நாட்களிலிருந்த பதிதர்களுடைய துர்க்குணங்களையும் விசுவாசிகள் விலகி நடக்கக் கற்பித்துப் பற்பல சுகிர்த புத்திமதிகளையுஞ் சொல்லி, தாம் மரணமான 66-ம் வருஷத்தில் உரோமாபுரியிலிருந்து இதை எழுதினார்.



# தவஸ்யான அப். அர்ச். இராயப்பர்

# திருச்சபைக்கு எழுதிய

# 2-ம். நிருபம்.

## முதல் அதிகாரம்.

*தங்கள் ஈடேற்றத்தை நிச்சயப்படுத்தும் பொருட்டு விசுவாசத்தோடுகூடிய சகல புண்ணிய முயற்சிகளையும் அநுசரிக்க வேண்டுமென்று புத்திசொல்லுகிறார்.*

1. யேசுக்கிறிஸ்துநாதருடைய ஊழியனும் அப்போஸ்தலனுமாகிய சீமோன் இராயப்பன், நம்முடையதேவனும் இரட்சகருமாகிய யேசுக்கிறீஸ்துநாதருடைய நீதியில் எங்களோடு சரியொத்த விசுவாசத்தைக் கைக்கொண்டவர்களுக்கு எழுதுவது :

2. சர்வேசுரனையும் நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவையும் அறிகிற அறிவினால் உங்களுக்கு இஷ்டப்பிரசாதமும் சமாதானமும் சம்பூரணமாய் உண்டாவதாக.

3. தம்முடைய சுய மகிமையாலும் கருணையாலும் நம்மை அழைத்தவரை அறியும் அறிவினால் ஜீவியத்துக்கும் தேவபக்திக்கும் வேண்டியவைகள் யாவும் அவருடைய தெய்வீக வல்லமையால் நமக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன.

4. அவர் வழியாக (சர்வேசுரன்) நமக்கு மகா மேன்மையும் விலையேறப்பெற்றதுமான வாக்குத்தத்தங்களைக் கொடுத்து, அவைகளால் நாம் உலகத்திலுள்ள துரிச்சைகளின் கேட்டுக்குத் தப்பி, தெய்வீக சுபாவத்துக்குப் பங்காளிகளாகும்படி செய்கிறார்.

5. அப்படியிருக்க, நீங்களும் உங்களாலான முயற்சியெல்லாஞ் செய்து, உங்கள் விசுவாசத்தோடு புண்ணியத்தையும்,

6. புண்ணியத்தோடு விவேகத்தையும், விவேகத்தோடு இச்சையடக்கத்தையும், இச்சையடக்கத்தோடு பொறுமையையும், பொறுமையோடு பக்தியையும்,

7. பக்தியோடு சகோதர சிநேகத்தையும், சகோதர சிநேகத்தோடு தேவசிநேகத்தையும் சேர்த்து அநுசரியுங்கள்.

8. இவைகள் உங்களிடத்தில் இருந்து பெருகுமானால், நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவை அறியும் அறிவில் உங்களை வெறுமையானவர்களும் பலனற்றவர்களுமாய் இருக்கவொட்டாது.

9. இவைகள் எவனிடத்தில் இல்லையோ, அவன் குருடனும், கையால் தடவுகிறவனுமாயிருப்பதுமன்றி, தன் பழைய பாவங்களினின்று சுத்தமானதையும் மறந்தவனாகிறான்.

10. ஆதலால் சகோதரரே, உங்கள் அழைத்தலையும் தெரிந்துகொள்ளுதலையும் உங்கள் நற்கிரியைகளால் நிச்சயப்படுத்திக்கொள்ளும்படி அதிகம் அதிகமாய்ப் பிரயாசப்படுங்கள். இப்படிச் செய்தால், ஒருபோதும் பாவத்தில் விழுமாட்டீர்கள்.

11. இவ்விதமாய் நம்முடைய ஆண்டவரும், இரட்சகருமாகிய யேசுக்கிறீஸ்துவின் நித்திய இராச்சியத்தில் பிரவேசிக்கும் பாக்கியம் உங்களுக்குத் தாராளமாய் அளிக்கப்படும்.

12. ஆகையால் நான் இப்பொழுது உங்களுக்குச் சொல்லுகிற சத்தியத்தை நீங்கள் அறிந்து, இதில் உறுதிப்பட்டவர்களாயிருந்தாலும், இவைகளைப்பற்றி உங்களை எப்பொழுதும் எச்சரித்துக்கொண்டே வருவேன்.

13-14. நம்முடைய கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துநாதர் எனக்கு அறிவித்தபடியே, நான் இந்தச் சரீரக்கூட்டை விட்டுப் பிரியுங்காலம் விரைந்துவருகிறதென்று எனக்கு நிச்சயமாயிருப்பதால், நான் இந்தச் சரீரக்கூட்டிலிருக்குமளவும் உங்களை எச்சரித்துத் தூண்டுவது நியாயமென்று எண்ணுகிறேன். (அருள. 21-19.)

15. அல்லாமலும் என் மரணத்துக்குப்பின்னும் நீங்கள் இவைகளை அடிக்கடி ஞாபகப்படுத்திக்கொள்ளுவதற்கு ஏதுவுண்டாகும்படி வழிபண்ணுவேன்.

16. ஏனெனில் நாங்கள் தந்திரமான கட்டுக்கதைகளை அநுசரிக்கிறவர்களைப்போல் அல்ல; நம்முடைய கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துவின் மகத்துவத்தைக் கண்ணால் கண்டவர்களாகவே அவருடைய வல்லமையையும் வருகையையும் உங்களுக்குத் தெரியப்படுத்தினோம். (1. கொ. 1-17.)

17. எப்படியெனில் மகத்துவம் பொருந்திய மகிமையினின்று ஓர் குரல் சப்தித்து, அவரைநோக்கி: இவர் என் நேசகுமாரன், இவர்பேரில் பிரியமாயிருக்கிறேன்; இவருக்குச்செவிகொடுங்கள் என்றபோது, அவர் பிதாவாகிய சர்வேசுரனிடத்தினின்று மகிமையையும் பெருமையையும் பெற்றுக்கொண்டார். (மத். 17-5.)

18. நாங்களும் பரிசுத்த மலையில் அவருடனே இருக்கையில் வானத்தினின்று உண்டான இந்தச் சப்தத்தைக் கேட்டோம்.

19. இவ்விதமாய்த் தீர்க்கதரிசன வாக்கியமும் நமக்கு அதிக உறுதியாயிற்று. பொழுதுவிடிந்து, விடிவெள்ளி உங்கள் இருதயங்களில் உதயமாகுமளவும், இருண்ட ஸ்தலத்தில் எரிகிற விளக்கைப்போன்ற அந்த வசனத்தை நீங்கள் கவனித்துவந்தால், நன்மையாயிருக்கும்.

20. ஆகிலும் வேதப்பிரமாணத்திலுள்ள எந்தத் தீர்க்கதரிசனத்துக்கும் அவனவன்தானே வியாக்கியானஞ் செய்யத்தக்கதல்லவென்று முந்தமுந்த அறிந்துகொள்ளக்கடவீர்கள். (2. தீமோ. 3-16.)

20-21. கிறீஸ்துவர்கள் பரலோக மகிமைப் பிரதாப ஒளியில் சேருந்தனையும் இவ்வுலக அந்தகாரத்தில் நடக்கிறதினாலே, எப்போதும் தேவவாக்கியத்தைத் திருவிளக்காகக் கையிலேந்தி அதின் ஒளியில் நடக்கவேண்டுமென்று அர்ச். இராயப்பர் படிப்பிக்கிறார். இத்தோடு இன்னொரு விசேஷத்தையும் கவனிக்கவேண்டுமென்று அவர் படிப்பிக்கிறார். என்னவெனில்: பரிசுத்ததீர்க்கதரிசிகள் தங்கள்சுயமனதாய் ஒருபோதும்பேசாமல், இஸ்பிரீத்து

21. ஏனெனில், தீர்க்கதரிசனமானது ஏக்காலத்திலாவது மனுஷருடைய மனதினால் உண்டானதல்ல. சர்வேசுரனுடைய பரிசுத்த மனுஷர்கள் இஸ்பிரீத்துசாந்துவினால் ஏவப்பட்டுப் பேசினார்கள்.

## 2-ம். அதிகாரம்.

கள்ளப்போதகர்களுடைய அக்கிரமத்தையும், அதினால் அவர்களுக்கும் அவர்களைப் பின்பற்றுகிறவர்களுக்கும் உண்டாகும் தண்டனையையும் விவரித்துக் காண்பிக்கிறார்.

1. கள்ளத்தீர்க்கதரிசிகளும் ஜனங்களுக்குள்ளே இருந்தார்கள். அப்படியே உங்களுக்குள்ளும் கள்ளப்போதகர்கள் இருப்பார்கள். அவர்கள் கேட்டுக்கேதுவான பதித மார்க்கங்களை நுழையப்பண்ணித் தங்களைக் கிரயத்துக்கு வாங்கின ஆண்டவரை மறுதலித்துத் தங்களுக்குத்தீவிரமான அழிவை வருவித்துக்கொள்ளுவார்கள். (மத். 24-11; யூதா. 4.)

2. அநேகர் அவர்களுடைய துர்நடக்கைகளைப் பின்பற்றுவார்கள். அவர்களால் சத்தியநெறி தூஷணிக்கப்படும்.

3. பொருளாசையை முன்னிட்டுத் தந்திரமான வார்த்தைகளால் உங்களை வியாபாரம் பண்ணுவார்கள். ஏற்கனவே அவர்களுக்கு நியமிக்கப்பட்டிருக்கிற தீர்ப்பு அயராது, அவர்களுடைய அழிவும் உறங்காது. (தீத். 1-11.)

4. எப்படியெனில் பாவஞ்செய்த தூதர்களைச் சர்வேசுரன் மன்னியாமல், நரகச்சங்கிலிகளால் அவர்களைக் கட்டி, உபாதைப்படும்படி பாதாளத்தில் தள்ளி, நடுத்தீர்ப்புக்கு வைத்திருக்கிறாரே. (யோப். 4-18; யூதா. 6.)

5. பூர்வ உலகத்தையும் அவர் மன்னியாமல், நீதியைப் பிரசங்கித்த எட்டாவது ஆளாகிய நோயனைக் காப்பாற்றி, பாவிகள் நிறைந்த உலகத்தின்மேல் ஜலப்பிரளயத்தை வரப்பண்ணினாரே. (ஆதி. 7-1.)

6. சோதோம் கொமோரா என்னும் பட்டணங்களையும் சாம்பலாக்கி, அவைகள் தகர்ந்து அழிந்துபோகும்படி ஆக்கினையிட்டு, இனி அக்கிரமஞ் செய்பவர்களுக்கு அவைகளை ஓர் திஷ்டாந்தமாக வைத்தார். (ஆதி. 19-25.)

7. அக்கிரமிகளுடைய கொடுமையையும், அவர்களுடைய காமவிகார நடக்கைகளையுங் கண்டு, துயரப்பட்டிருந்த லோத்தென்னும் நீதிமானை அவர் இரட்சித்தார்.

சாந்துவானவர் தங்களுக்கு ஏவினபடியே பேசினபடியால், அந்த ஏவலின்படி அவர்கள் பேசினவைகளுக்கும், எழுதினவைகளுக்கும், எவனும் தன் சுயமனதின்படி அர்த்தமாவது வியாக்கியானமாவது செய்யலாகாதென்று கட்டளையிடுகிறார். இஸ்பிரீத்துசாந்துவினால் நடத்தப்படுகிற சத்திய திருச்சபைமாத்திரம் அவைகளுக்கு மெய்யான அர்த்தத்தையும் வியாக்கியானத்தையுஞ் சொல்லக்கூடும். இதினிமித்தம் உரோமன்கத்தோலிக் திருச்சபையிலுள்ள வேதபாரகரெல்லாரும் வேதவாக்கியங்களுக்கு வியாக்கியானஞ் செய்யும்போது, தங்கள் இஷ்டப்படி செய்யாமல், திருச்சபையின் படிப்பினையையும் நோக்கத்தையுமுன்னிட்டு வியாக்கியானம் செய்கிறார்கள். அன்றியும் அவர்கள் வேதசம்பந்தமாய் எழுதியதெல்லாவற்றையும், திருச்சபையானது பரிசோதித்து ஆராயும்படிக்கு அதற்கு ஒப்புக்கொடுத்து, திருச்சபையால் செய்யப்படும் திருத்தங்களையும், அங்கீகரிப்பையும் பெற்றுக்கொள்ளுகிறார்கள்.

8. ஏனெனில் தங்கள் அக்கிரமசெய்கைகளால் புண்ணிய ஆத்துமத்தை நாள்தோறும் உபாதித்துவந்த அந்தப் பொல்லாதவர்கள் நடுவில் அவர் வசித்திருந்தும், தமது பார்வையிலும் கேள்வியிலும் நீதிமானுயிருந்தார்.

9. இப்படியிருக்க, ஆண்டவர் பக்திமான்களைச் சோதனையினின்று இரட்சிக்கவும், அக்கிரமிகள் உபாதிக்கப்படும்படி அவர்களை நடுத்தீர்வைநாளுக்கு நிறுத்திவைக்கவும் அறிந்திருக்கிறார்.

10. விசேஷமாய் அசுசியான தங்கள் சரீர இச்சையைப் பின்பற்றுகிறவர்களையும், அதிகாரத்தைப் புறக்கணிக்கிறவர்களையும், கர்வமுள்ளவர்களையும், தற்பிரியரையும், தூஷணிக்கிற பதிதத்தனங்களை உள்ளே நுழையப் பண்ணுவதற்கு அஞ்சாதவர்களையும் அப்படிச் செய்வார்.

11. மேலான வல்லபமும், பெலமுமுள்ள தேவதூதர்கள் முதலாய்த் தங்களுக்குள்ளே சாபத் தீர்ப்புச் சொல்லத் துணியமாட்டார்களே.

12. இவர்களோ சுபாவமாய்ப் பிடிபட்டு, அழிக்கப்படவேண்டிய புத்தியற்ற மிருக ஜீவன்களைப்போல் தங்களுக்குத் தெரியாதவைகளை தூஷணித்து, தங்கள் கேட்டிலே கெட்டழிவார்கள்.

13. இவர்கள் ஒருநாள் சுகத்தை இன்பமென்று எண்ணி, தங்கள் அநீதத்தின் கூலியைக் கைக்கொள்ளுகிறவர்கள்; அசுத்தமுள்ளவர்கள், சிற்றின்பத்தில் மிகுத்தவர்கள், தங்கள் விருந்துகளில் உங்களோடு களியாடுகிறவர்கள்.

14. விபசாரமும், ஓயாத அக்கிரமமும் நிறைந்த கண்களையுடையவர்கள்; நிலையற்ற ஆத்துமாக்களை மயக்கி வசப்படுத்துகிறவர்கள், பேராசையில் பழகின இருதயம் உடையவர்கள், சாபத்தின் புத்திரர்கள்.

15. இவர்கள் நேர்மையான வழியை விட்டுத் தவறி, அக்கிரமத்தின் சம்பளத்தை விரும்பின போசோரின் குமாரனுகிய பாலாமின் வழியைப் பின்பற்றினவர்கள். (யூதா. 11.)

16. ஆனால் அவன் தன் மதியீனத்துக்காகக் கண்டிக்கப்பட்டான். வாய் பேசாத பொதிமிருகம் மனுஷபேச்சைப் பேசி, தீர்க்கதரிசியின் புத்தியீனத்தை விலக்கினது. (எண். 22-12.)

17. இவர்கள் நீரில்லா ஊற்றுகள். சுழல் காற்றினால் அடிபட்டோடும் மேகங்கள். இவர்களுக்கு அந்தகார இருளை நியமிக்கப்பட்டிருக்கிறது. (யூதா. 12.)

---

11. நல்ல சம்மனசுகள் கெட்டுப்போன சம்மனசுகளிலும் மேன்மையும் வல்லமையும் உள்ளவர்களாயிருந்தும், கெட்டுப்போன அந்தச் சம்மனசுகளைத் தாங்களே சபிக்கவும் தூஷணிக்கவுந் துணியமாட்டார்கள். அப்படியிருக்க அதிகாரத்தைப் புறக்கணித்து, நிந்திக்கிற அக்கிரமிகள் எவ்வளவு ஆக்கினைக்குப் பாத்திரமாயிருக்கிறார்களென்று அறியவும்.

16. எண்ணாகமம் 22-ம் அதி. 12-ம் வசனத்தில் சொல்லியிருக்கிறபிரகாரம் பாலாம் என்கிற தீர்க்கதரிசி பாலாக் என்ற இராஜாவுடைய வெகுமானத்துக்கு ஆசைப்பட்டு இஸ்ராயேல் பிரஜைகளைச் சபிக்கப்போகும்போது, அவன் ஏறிப்போன கழுதை அற்புதமாய் வாய்திறந்து, அவனுள்ளத்திலிருந்த கெட்டகருத்தை நிறைவேற்றாதபடிக்கு அவனைக் கடிந்துகொண்டது என்றறிக.

18. தவறுதலாய் நடக்கிறவர்களை விட்டுத் தப்பிவந்தும் வராதிருக்கிறவர்களிடத்தில் இவர்கள் அகந்தையான வீண்வார்த்தைகளைப் பேசி, காமவிகாரத்துக்குரிய மாம்ச இச்சைகளுக்குள் அவர்களைத் தந்திரமாய் இழுக்கிறார்கள்.

19. ஆயினும் இவர்கள் தாங்களே துர்க்குணத்துக்குஅடிமைகளாயிருக்க, அவர்களுக்குச் சுயாதீனத்தை வாக்குத்தத்தம்பண்ணுகிறார்கள். ஆனாலும் அவனவன் எவனாலே ஜெயிக்கப்பட்டிருக்கிறானோ, அவனுக்கே அடிமைப்பட்டிருக்கிறான். (அரு. 8-34; உரோ. 6-16.)

20. நம்முடைய ஆண்டவரும் இரட்சகருமாகிய யேசுக்கிறீஸ்துவை அறியும் அறிவினாலே உலகத்தின் அசுத்தங்களுக்குத் தப்பினவர்கள் மறுபடியும் அவைகளில் சிக்குண்டு ஜெயிக்கப்பட்டால், அவர்களுடைய முன்னிலைமையிலும் பின்னிலைமையானது அதிகக் கேடுள்ளதாகும். (எபி. 6-4; மத். 12-45.)

21. அவர்கள் நீதியின் மார்க்கத்தை அறிந்தபின்பு தங்களுக்கு ஒப்பிக்கப்பட்ட பரிசுத்த கற்பனையைவிட்டு விலகுவதைப்பார்க்கிலும், அதை அவர்கள் அறியாதிருந்தால், அவர்களுக்கு நலமாயிருக்கும்.

22. நாய் தான் கக்கினதைத் தின்னவும், கழுவப்பட்ட பன்றி திரும்பச் சேற்றில் புரளவும்போனதென்று சொல்லப்படுகிற மெய்யான பழமொழியின் படியே அவர்களுக்குச் சம்பவிக்கின்றது. (பழ. 26-11.)

## 3-ம். அதிகாரம்.

*யேசுக்கிறீஸ்துநாதருடைய கடைசி வருகையைக்குறித்துப் பரியாசம்பண்ணுகிறவர்களை மறுக்கக் கிறீஸ்துநாதர் சீக்கிரத்தில் திடீரென வருவாரென்று ஒப்புவித்து, அவர் வரவுக்கு ஆயத்தமாயிருக்கச் சொல்லி, அர்ச். சின்னப்பர் எழுதின நிருபங்களையும், மற்றும் வேத வசனங்களையும், சிலர் தங்களுக்குக் கேடாகப் புரட்டுகிறார்களென்றும் எச்சரித்து நிருபத்தை முடிக்கிறார்.*

1. மிகவும் பிரியமானவர்களே, இதோ, இந்த இரண்டாம் நிருபத்தை உங்களுக்கு எழுதுகிறேன். இவ்விரு நிருபங்களிலும்,

2. நான் உங்களுக்கு எடுத்துக் காட்டின பரிசுத்த தீர்க்கதரிசிகளின் வாக்கியங்களையும், உங்கள் அப்போஸ்தலர்களின் வாக்கியங்களையும், கர்த்தராகிய இரட்சகருடைய கற்பனைகளையும் நீங்கள் நினைவுகூரும்படி உங்கள் நேர்மையான மனதை எச்சரித்துத் தூண்டுகிறேன்.

3. முந்த முந்த நீங்கள் அறியவேண்டியதாவது: கடைசிநாட்களில் தங்கள் இச்சைகளின்படியே நடக்கிற பரியாசக்காரர் வந்து, பழிப்புவார்த்தை நிறைந்தவர்களாய், (1. திமோ. 4-1; யூதா. 17.)

18. தவறுதலாய் நடக்கிறவர்களைவிட்டுத் தப்பிவந்தும் வராதிருக்கிறவர்கள் என்பது அஞ்ஞானத்தினின்று புதிதாய் மனந்திரும்பினவர்களாம். அப்படிப்பட்டவர்கள் இன்னும் விசுவாசத்தில் வேர்க்கொள்ளாதவர்களாயிருக்க, அந்நாள் பதிதர் அவர்களைச் சரீரத் துராசாபாச இச்சைகளுக்குள் இழுத்துக் கெடுக்கத் தேடினார்கள் என்றறிக.

19. இன்னும் அந்தப்பதிதர் போதித்ததேதெனில்: கிறீஸ்துநாதர் நமக்காகப் பாடுபட்டு நம்மை இரட்சித்தார். ஆகையால் கிறீஸ்தவனுக்கு உலகசட்டமும் தேவசட்டமும் இல்லையென்றும் எதேச்சையாய் நடக்கலாமென்றும் பிதற்றி, இதைக் கிறீஸ்துவ சுயாதீனம் என்று படிப்பித்தார்கள்.

4. அவருடைய வாக்குத்தத்தம் எங்கே? அவருடைய வருகை எங்கே? பிதாக்கள் மரணமானதுமுதல் சகலமும் சிர்ஷ்டிப்பின் ஆரம்பத்தில் எப்படியிருந்ததோ, அப்படியே நிலைத்திருக்கிறதே என்பார்கள். (எசே. 12-27.)

5. சர்வேசுரனுடைய வார்த்தையினாலே முந்தி வானம் உண்டாயிருந்ததென்பதையும், பூமியோ ஜலத்தினின்று தோன்றி, ஜலத்தால் நிலைபெற்றதென்பதையும்,

6. அவைகளாலேயே அப்போதிருந்த உலகம் ஜலப்பிரளயத்தில் அழிந்ததென்பதையும், அவர்கள் மனம்பொருந்தி அறியாதிருக்கிறார்கள்.

7. இப்போதிருக்கிற வானமும் பூமியும் நடுத்தீர்வைக்கும் அக்கிரமிகளின் நாசத்துக்கும் குறிக்கப்பட்ட நாளிலே அக்கினிக்கு இரையாய்ப்போவதற்கு அந்த வார்த்தையினாலேயே காப்பாற்றி வைக்கப்பட்டிருக்கிறது. (2. தெச. 1-8.)

8. மிகவும் பிரியமானவர்களே, நீங்கள் இந்த ஒரு காரியத்தை அறியாதிருக்கப்படாது; அதாவது: கர்த்தர் சமுகத்தில் ஒருநாள் ஆயிரம் வருஷம் போலும், ஆயிரம் வருஷம் ஒருநாள் போலுமாம்.

9. சிலர் எண்ணுகிறபடி ஆண்டவர் தமது வாக்குத்தத்தத்தை நிறைவேற்றுவதற்குத் தாமதிப்பதில்லை. ஆனாலும் அவர் ஒருவராவது கெட்டுப்போகவிரும்பாமல், எல்லாரும் தவத்துக்குத் திரும்பவேண்டுமென்று விரும்பி, உங்களைப் பற்றிப் பொறுமையோடு சகித்துவருகிறார். (எசெ. 18-23.)

10. கர்த்தருடைய நாள் திருடனைப் போல் வரும். அப்போது வானங்கள் சண்டப்பிரசண்டமாய் ஒழிந்துபோம். பூதியங்கள் உஷ்டணத்தால் வெந்து உருகிப்போம். பூமியும் அதிலுள்ள சகல வேலைப்பாடுகளும் வெந்து அழியும். (மத். 24-42; 1. தெச. 5-2; காட். 3-3.)

11. இப்படி இவைகளெல்லாம் அழிந்துபோகவேண்டியதால், நீங்கள் எவ்வளவோ பரிசுத்ததனத்தோடும், பயபக்தியோடும் நடந்துவரவேண்டும்.

12. ஆண்டவருடைய நாளின் வருகைக்கு எதிர்பார்த்துத் தீவரித்துப் போங்கள். அந்த நாளில் வானங்கள் வெந்து அழிந்து, பூதியங்கள் அக்கினியின் உக்கிரத்தால் உருகிப்போம்.

13. அவருடைய வாக்குத்தத்தத்தின்படியே நீதிவாழும் புதிய வானமும் புதிய பூமியும் உண்டாகுமென்று காத்திருக்கிறோம்.

14. ஆதலால், மிகவும் பிரியமானவர்களே, இவைகளை எதிர்பார்த்திருக்கிற நீங்கள் மாசும், கறையுமற்றவர்களாய் சமாதானத்தோடு அவர் சந்நிதியில் காணப்படும்படி பிரயாசப்படுங்கள்.

15. மேலும், நமது ஆண்டவருடைய நீடிய பொறுமையை உங்களுக்கு இரட்சிப்பென்று எண்ணுங்கள். இப்படியே நமக்குப்பிரியமுள்ள சகோதரனாகிய சின்னப்பர் தமக்கு அருளப்பட்ட ஞானத்தின்படிக்கு உங்களுக்கு எழுதியிருக்கிறார். (உரோ. 2-4.)

---

6. **அவைகள்:**—என்பது வானத்தையும் பூமியையும் குறிக்கின்றது. ஏனெனில் வானத்தினின்றும் பூமியினின்றும் ஜலப்பிரளயமுண்டாகிப் பூமியை அழித்தது.

15. இவ்விடத்தில் சொல்லப்பட்ட நிருபம் அர்ச். சின்னப்பர் ஒருக்கால் அவர்களுக்குத் தனித்து எழுதியிருக்கக்கூடிய நிருபத்தையாவது, எபேசியருக்கு எழுதிய நிருபத்தையாவது குறிக்கிறதென்கிறார்கள்.

16. தம்முடைய சகலநிருபங்களிலும் இவைகளைக்குறித்துப்பேசியிருக்கிறார். ஆனால், அவர் சொன்னவைகளில் சில காரியங்கள் அறிவதற்கு அரிதாயிருக்கின்றது. கல்லாதவர்களும், நிலையற்றவர்களும் மற்ற வேதவாக்கியங்களைத் தங்களுக்குக் கேடாகப் புரட்டுகிறது போல், இவைகளையும் புரட்டுகிறார்கள்.

17. நீங்களோ சகோதரரே, இவைகளை ஏற்கனவே அறிந்திருக்கிறபடியால், மதியீனருடைய அறியாமையில் இழுபட்டு, உங்கள் சுய நிலைமையினின்று தவறிவிழாதபடிக்கு எச்சரிக்கையாய்ப் பார்த்துக்கொள்ளுங்கள்.

18. இஷ்டப்பிரசாதத்திலும் நம்முடைய ஆண்டவரும் இரட்சகருமாகிய யேசுக்கிறீஸ்துவை அறியும் அறிவிலும் வளர்ந்து வருவீர்களாக. அவருக்கே இப்பொழுதும் என்றென்றைக்கும் ஸ்தோத்திரமுண்டாகக்கடவது.

ஆமென்.

16. இந்நிருபம் முதல் அதிகாரத்தின் கடைசியில் கண்டிருக்கிறபடி ஒருவனும் தன் சுய அபிப்பிராயத்தின்படி வேதவாக்கியங்களுக்கு வியாக்கியானமும் கருத்துஞ் சொல்லக்கூடாதென்று அர்ச். இராயப்பர் விலக்கியபின், இவ்விடத்தில்: கல்லாதவர்களும் நிலையற்றவர்களுமாகிய சிலர் அவ்விதஞ் செய்யத்துணிந்து, அறிவதற்கரிய வேதவாக்கியங்களைத் தங்களுக்கே கெடுதியாகப் புரட்டிக்கொள்ளுகிறார்களென்று எச்சரிக்கிறார். இப்படியிருக்க, அவனவன் தனக்குத் தோன்றியபடி வேதவாக்கியங்களுக்கு அர்த்தம் பண்ணிக்கொள்ளட்டுமென்று யாவர் கையிலும் வேதாகமங்களைக் கொடுக்கிறவர்கள், குழந்தை கையில் கூரானகத்தியைக் கொடுக்கிறவர்களுக்கு ஒப்பாய், கல்லாதவர்களும் நிலையற்றவர்களும் கெட்டுப்போக வழிபண்ணுகிறார்கள்.




6538 / (7846)

# பாயிரம்.

பன்னிரண்டு அப்போஸ்தலர்களில் ஒருவரும், யேசுநாதரால் விசேஷமாய்ச் சிநேகிக்கப்பட்டவரும், நாலு சுவிசேஷங்களில் ஒன்றையும், காட்சி ஆகமத்தையும் எழுதினவருமாகிய அர்ச். அருளப்பர் கர்த்தர் அவதாரமான ஏறக்குறைய 99-ம் வருஷத்தில் திருச்சபைக்குப் பொதுவாக இந்த நிருபத்தையும் பின்பு 2-சிறு நிருபங்களையும் எழுதினார். அவர் எழுதின சுவிசேஷத்தில் எங்கும் விளங்குகிற தேவ சிநேகமும் பிறசிநேகமும் இதிலேயும் முக்கியமாய் விளங்குகிறது.



# அப்போஸ்தலரான அர்ச். அருளப்பர்

## எழுதிய

# முதல் நிருபம்.

### முதல் அதிகாரம்.

*யேசுக்கிறீஸ்துநாதருடைய இரத்தத்தால் சகலருடைய பாவங்களும் பரிகரிக்கப்படு கிறதென்பது.*

1. ஆதிமுதல் இருந்ததும், நாங்கள் கேட்டதும், எங்கள் கண்களால் நாங்கள் கண்டதும் தரிசித்ததும், எங்கள் கைகளால் ஸ்பரிசித்ததுமான ஜீவவார்த்தையைப்பற்றி உங்களுக்கு அறிவிக்கிறோம்.

2. அந்த ஜீவன் வெளியாக்கப்பட்டது; பிதாவினிடத்திலிருந்து வந்ததும், நமக்குத் தோன்றினதுமாகிய அந்த நித்திய ஜீவனை நாங்கள் கண்டு, அதற்குச் சாட்சிசொல்லி, அதை உங்களுக்கு அறிவிக்கிறோம்.

3. நீங்கள் எங்களோடு ஐக்கியமாகத்தக்கதாகவும், நம்முடைய ஐக்கியம் பிதாவோடும் அவருடைய சுதனாகிய யேசுக்கிறீஸ்துவோடுங்கூட இருக்கத்தக்கதாகவும், நாங்கள் கண்டதையும் கேட்டதையும் உங்களுக்கு அறிவிக்கிறோம்.

4. நீங்கள் மகிழ்ச்சியடையவும், உங்கள் மகிழ்ச்சி பூரணமாயிருக்கவும் வேண்டுமென்று இவைகளை உங்களுக்கு எழுதுகிறோம். (அரு. 15-11.)

5. நாங்கள் அவரிடத்தில் கேட்டதும் உங்களுக்கு அறிவிக்கிறதுமாகிய விசேஷம் ஏதெனில்: கடவுள் ஒளியாயிருக்கிறார்; அவரிடத்தில் இருள் அற்பமேனும் இல்லை. (அருள. 8-12.)

6. ஆகையால் நாம் அவரோடு ஐக்கியமாயிருக்கிறோமென்று சொல்லியும் இருளில் நடப்போமானால், நாம் பொய்யரேயன்றி, உண்மைப்படி நடப்பவர்களல்ல.

7. அவர் பிரகாசத்தில் இருப்பதுபோல், நாமும் பிரகாசத்தில் நடப்போமானால், நாம் அந்நியோந்நிய ஐக்கியமுள்ளவர்களாயிருப்பதுமன்றி, அவருடையகுமாரனாகிய யேசுக்கிறீஸ்துவின் இரத்தம் நம்மைச் சகல பாவத்திலுநின்று சுத்திகரிக்கும்.

8. நம்மிடத்தில் பாவமில்லை என்போமாகில், நம்மையே நாம் மோசம்போக்கிறோம்; சத்தியமும் நம்மிடத்திலிராது. (3. அர. 3-46.)

9. நம்முடைய பாவங்களை நாம் சங்கீர்த்தனம்பண்ணினால், நம்முடைய பாவங்களை நமக்கு மன்னித்துச் சகல அக்கிரமத்திலுநின்று நம்மைப் பரிசுத்தமாக்குவதற்கு அவர் பிரமாணிக்கமும் நீதியும் உள்ளவராயிருக்கிறார்.

10. நாம் பாவஞ்செய்யவில்லை என்போமாகில், நாம் அவரைப்பொய்யராக்குகிறோம். அவருடைய வாக்கியமும் நம்மிடத்திலிராது.

## 2-ம். அதிகாரம்.

கிறீஸ்துநாதர் பிதாவினிடத்தில் நமக்காக மன்றாடுகிறவராகையால், நாம் அவருடைய கற்பனைகளைக் கைக்கொண்டு, ஒருவரொருவரைச் சிநேகிக்கவேண்டும் என்று புத்திசொல்லுகிறார்.

1. என்பாலகரே, நீங்கள் பாவஞ்செய்யாதிருக்கும்படிக்கு இவைகளை உங்களுக்கு எழுதுகிறேன். ஆகிலும் யாதொருவன் பாவஞ்செய்தால், நீதிபரனாகிய யேசுக்கிறீஸ்துநாதர் பிதாவினிடத்தில் நமக்கு மனுப்பேசுகிறவராயிருக்கிறார்.

2. நம்முடையபாவங்களுக்கு அவரே பிராயச்சித்தப்பலியாய் இருக்கிறார். நம்முடைய பாவங்களுக்காகமாத்திரமல்ல, சர்வலோக பாவங்களுக்காகவும் அவர் பிராயச்சித்தப்பலியாமே.

3. நாம் அவருடைய கற்பனைகளை அநுசரித்தால், அதின் வழியாகவே, அவரை அறிந்திருக்கிறோமென்பது நமக்குத்தெரியும்.

4. நான் அவரை அறிந்திருக்கிறேனென்று சொல்லியும், அவருடைய கற்பனைகளைக் காக்காதவன் பொய்யன். சத்தியமும் அவனிடத்தில் இல்லை.

5. அவருடைய வார்த்தையை அநுசரிக்கிறவனிடத்தில் தேவசிநேகம் மெய்யாகவே உத்தமமாய் இருக்கின்றது. நாம் அவருக்குள் இருக்கிறோமென்பதையும் இதினால் அறிந்துகொள்ளுகிறோம். (அரு. 13-35.)

6. அவருக்குள் இருக்கிறேனென்று சொல்லுகிறவன், அவர் நடந்தபடியே தானும் நடக்கவேண்டியது.

7. எனக்கு மிகவும் பிரியமானவர்களே, நான் உங்களுக்கு எழுதுவது ஒரு புதுக் கற்பனையைப்பற்றி அல்ல; ஆதிமுதல் நீங்கள் கைக்கொண்டிருக்கிற பழைய கற்பனையைப்பற்றியே எழுதுகிறேன். அந்தப்பழைய கற்பனை நீங்கள் கேட்டிருக்கிற வார்த்தைதான்.

8. இன்னொருவகையில் ஒரு புதுக் கற்பனையைப்பற்றியே உங்களுக்கு எழுதுகிறேன். இது அவருக்குள்ளும் உங்களுக்குள்ளும் புதிதென்பது உண்மையாமே. ஏனெனில் இருள் ஒழிந்து, இப்போது மெய்யான ஒளிவீசுகின்றது. (அருள. 13-34.)

10. நாம் பாவஞ்செய்யவில்லை என்போமாகில், அவரைப் பொய்யராக்குகிறோம்; அவருடைய வாக்கியம் நம்மிடத்தில் இராதென்பது எப்படியென்றால், பிரசங்கி ஆகமம் 7-ம் அதி.21-ம் வசனத்தில்: பாவஞ்செய்யாத நீதிமான் பூமியில் இல்லையென்றும், 3-ம் அரச. 8-ம் அதி. 46-ம் வசனத்தில்: பாவஞ்செய்யாதவன் ஒருவனும் இல்லையென்றும், நீதிமொழி 20-ம் அதி. 9-ம் வசனத்தில்: என் இருதயம் பரிசுத்தமாய் இருக்கிறதென்றும், பாவமில்லாமல் சுத்தமாய் இருக்கிறேனென்றும், யார் சொல்லக்கூடுமென்றும், நீதிமொழி 24-ம் அதி. 16-ம் வசனத்தில்: நீதிமான் ஏழுதரம் விழுகிறானென்றும், இயாகப்பர் நிருபம் 3-ம் அதி. 2-ம் வசனத்தில்: நாம் எல்லாரும் அநேக விஷயங்களில் தவறுகிறோமென்றும் சொல்லியிருக்கிறபடியினாலே: நான் ஒருபாவமும் செய்யவில்லையென்று சொல்லுகிறவன் சர்வேசுரன் பொய் சொன்னாரென்றாற்போலாச்சுது. அப்படிச் சொல்லுகிறவன் அந்த வேதவாக்கியங்களை அறியாதவனென்று அர்த்தமாகும்.

8. எல்லாவற்றையும் பார்க்கச் சர்வேசுரனையும், தன்னைத்தான் சிநேகிக்குமாப்போல் பிறனையும் சிநேகிக்கவேண்டுமென்கிற கற்பனை உலக ஆரம்பமுதல் உண்டாயிருந்த பழைய கற்பனைதான். ஆனால் புதிய ஏற்பாட்டில் அதிக உத்தமமான மேரையாக அதை அநுசரிக்கவேண்டியதென்று யேசுநாதர் கற்பித்தபடியால், அவரைப்பற்றியும் சுவிசேஷ வெளிச்சமாகிய போதனையைப்பற்றியும் அது புதுக்கற்பனையாயிருக்கிறது.

9. வெளிச்சத்தில் இருக்கிறேனென்று சொல்லியும், தன் சகோதரனைப் பகைக்கிறவன் இன்னும் இருளில் இருக்கிறவன்தான்.

10. தன் சகோதரனைச் சிநேகிக்கிறவன் வெளிச்சத்திலிருக்கிறான். அவன் இடறிவிழுவதற்கேதுவில்லை.

11. தன் சகோதரனைப் பகைக்கிறவனோ இருளில் வசித்து, இருளில் நடக்கிறான். இருள் அவன் கண்களைக் குருடாக்கினபடியால், தான் போகும் இடம் இன்னதென்று அறியாதிருக்கிறான்.

12. பிள்ளைகளே, அவருடைய நாமத்தினிமித்தம் உங்கள்பாவங்கள் மன்னிக்கப்பட்டிருக்கிறதினால்,உங்களுக்கு எழுதுகிறேன்.

13. தந்தையர்களே, ஆதிமுதல் இருக்கிறவரை நீங்கள் அறிந்திருக்கிறதினால், உங்களுக்கு எழுதுகிறேன். இளைஞரே, நீங்கள் துர்ச்சனனை ஜெயித்ததினால், உங்களுக்கு எழுதுகிறேன்.

14. குழந்தைகளே, பிதாவானவரை நீங்கள் அறிந்திருக்கிறதினால், உங்களுக்கு எழுதுகிறேன். வாலிபரே, நீங்கள் வீரர்களாயிருக்கிறதினாலும், தேவவாக்கியம் உங்களிடத்தில் நிலைத்திருக்கிறதினாலும் துர்ச்சனனை நீங்கள் ஜெயித்ததினாலும் உங்களுக்கு எழுதுகிறேன்.

15. உலகத்தையும் உலகத்திலுள்ளவைகளையும் சிநேகியாதேயுங்கள். ஒருவன் உலகத்தைச் சிநேகித்தால், அவனிடத்தில் பிதாவின் சிநேகமிராது.

16. ஏனெனில் உலகத்திலுள்ளயாவும் சரீர இச்சையும், கண்களின் இச்சையும், ஜீவியத்தின் அகங்காரமுமாயிருக்கின்றது. அவைகள் பிதாவினிடத்தினின்று வராமல் உலகத்தினின்றே வருகின்றது.

17. ஆயினும் உலகமும் அதின் இச்சையும் ஒழிந்துபோம். தெய்வ சித்தத்தை நிறைவேற்றுகிறவனோ என்றென்றைக்கும் நிலைநிற்பான்.

18. பிள்ளைகளே, இது கடைசிக்காலமாயிருக்கின்றது. அந்திக்கிறீஸ்து வரவேண்டியதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்களே. அப்படியே இப்போது அந்திக்கிறீஸ்துகள் அநேகர் உண்டாயிருக்கிறார்கள். அதினாலே இது கடைசிக்காலமென்று அறிகிறோம்.

19. அவர்கள் நம்மிடத்திலிருந்து வெளியேறினவர்கள். ஆயினும் அவர்கள் நம்முடையவர்களாயிருக்கவில்லை. நம்முடைவர்களாயிருந்தால், சந்தேகமின்றி நம்முடனே நிலைத்திருப்பார்கள். ஆயினும் எல்லாரும் நம்முடைவர்கள் அல்லவென்று வெளியாகும்படிக்கு அவர்கள் (பிரிந்துபோனார்கள்).

18. உலகத்தின் முடிவிலே வரவேண்டிய அந்திக்கிறீஸ்துவைக்குறித்து 2-ம் தெசலோனிக்கர் 2-ம் அதி. 15-ம் வசனத்தின் வியாக்கியானத்தைக் காண்க. இப்போது அநேக அந்திக்கிறீஸ்துகள் உண்டாயிருக்கிறார்கள் என்பதினால் அவர்கள் யேசுநாதருடைய திருப்போதகத்துக்கு விரோதமாய் அப்போஸ்தலருடைய காலந்துவக்கி உலகம் முடியுமட்டும் திருச்சபையினின்று பிரிந்துபோகிற பதிதர்கள்தான் என்றறிக. ஏனெனில், இவர்களும் கடைசிக்காலத்தில் தோன்றும் அந்திக்கிறீஸ்துவைப்போல் சாத்தானால் ஏவப்பட்டு, யேசுநாதருடைய திருச்சபையைப் பகைத்து அதைக் கெடுக்கவேண்டுமென்று இடைவிடாமல் பிரயாசப்படுகிறார்கள்.

19. **நம்முடையவர்களாயிருக்கவில்லை :**—அதாவது, அவர்கள் ஸ்திரமும் நிலைமையுமுள்ள கிறீஸ்துவர்கள் அல்ல. அப்படியிருந்தால், நம்மோடுகூட திருச்சபையில் நிலைத்திருப்பார்கள்.

20. நீங்களோ பரிசுத்தரால் அபிஷேகம்பெற்று யாவற்றையும் அறிந்திருக்கிறீர்கள்.

21. சத்தியத்தை நீங்கள் அறியாததினாலல்ல, சத்தியத்தை நீங்கள் அறிந்திருக்கிறதினாலும், சத்தியத்தினின்று பொய்யொன்றும் வராதென்பதை நீங்கள் உணர்ந்திருப்பதினாலும் உங்களுக்கு எழுதியிருக்கிறேன்.

22. யேசுநாதரைக் கிறீஸ்து அல்லவென்று மறுதலிக்கிறவனேயல்லாமல் வேறே யார் பொய்யன்? பிதாவையும் சுதனையும் மறுதலிக்கிறவனே அந்திக்கிறீஸ்து.

23. ஏனெனில் சுதனை மறுதலிக்கிற எவனும் பிதாவை உடையவனல்ல. சுதனை ஒத்துக்கொள்ளுகிறவன் பிதாவையும் உடையவனாயிருக்கிறான். (அரு. 15-23.)

24. ஆகையால் நீங்கள் ஆதிமுதல் கேள்விப்பட்டது உங்களுக்குள் நிலைத்திருப்பதாக. ஆதிமுதல் நீங்கள் கேள்விப்பட்டது உங்களுக்குள் நிலைக்கொள்ளுமாகில், நீங்கள் சுதனிலும், பிதாவிலும் நிலைக்கொள்வீர்கள்.

25. அவர் நமக்குச் செய்தருளிய வாக்குத்தத்தம் நித்திய ஜீவியமாமே.

26. உங்களை மயக்குகிறவர்களைப் பற்றி இவைகளை உங்களுக்கு எழுதியிருக்கிறேன்.

27. அவராலே நீங்கள் பெற்றுக்கொண்ட அபிஷேகம் உங்களிடத்தில் நிலைத்திருப்பதாக. அப்பொழுது ஒருவரும் உங்களுக்குப் போதிக்கவேண்டியதில்லை. அவருடைய அபிஷேகம் சகலத்தையும்பற்றி உங்களைப் படிப்பிப்பதினாலே, அந்தப் படிப்பினை உண்மையுள்ளதும் பொய்யற்றதுமாயிருக்கின்றது. அது உங்களைப் படிப்பித்தபடியே அவரிடத்தில் நிலைக்கொள்வீர்களாக.

28. ஆதலால் பிள்ளைகளே, அவர் வருங்காலத்தில் அவரால் நாம் வெட்கமடையாமல், அவருடைய வருகையில் நம்பிக்கையாயிருக்கும்படி அவரிடத்தில் நிலைத்திருங்கள்.

29. அவர் நீதியுள்ளவரென்று அறிவீர்களாகில், நீதியைச்செய்கிறவனெவனும் அவரிடத்திலிருந்து பிறந்தவனென்று அறிந்துகொள்ளுங்கள்.

## 3-ம். அதிகாரம்.

சர்வேசுரனுக்கு நமதுமேலுள்ள சிநேகத்தையும், நாம் பிறர்மேல் வைக்கவேண்டிய சிநேகத்தையும்பற்றிப் போதிக்கிறார்.

1. நாம் சர்வேசுரனுடைய பிள்ளைகளென்று அழைக்கப்பட்டு, மெய்யாகவே அவருக்குப் பிள்ளைகளாயிருக்கும்படிக்கு எத்தன்மையான பரம அன்பைப் பிதாவானவர் நமக்குத் தந்தருளினாரென்று பாருங்கள். ஆகையால் உலகம் நம்மை அறியாதிருந்தால், அது அவரையும் அறியாதிருப்பதே அதற்குக் காரணம். (உரோ. 8-15; அரு. 16-2.)

---

20. நீங்கள் இஸ்பிரீத்துசாந்துவின் இஷ்டப்பிரசாதத்தினாலும், திருச்சபையின் போதகத்தினாலும், விசுவாசிக்கவேண்டிய சத்தியங்களையும் அநுசரிக்கவேண்டிய கற்பனைகளையும் அதாவது: உங்கள் கரையேற்றத்துக்கு அவசியமான சகலத்தையும் அறிந்திருக்கிறீர்கள். அதினாலே திருச்சபைக்குப் புறம்பாயிருக்கிறவர்களிடத்தில் யாதொன்றையும் கற்றுக்கொள்ளுவது உங்களுக்கு அவசரமில்லையென்று அர்த்தமாம்.

28. அவரால் வெட்கம் அடையாமல் என்பதற்கு, அவர் உங்கள்மேல் குற்றம் சுமத்தி உங்களுக்கு அவல தீர்வையிட்டால், வெட்கமடைவீர்களே. அப்படியாகாமல் அவர் உங்களுக்கு நல்ல தீர்வையிடும்படி அவரிடத்தில் நிலைத்து நன்மையைச் செய்யுங்கள் என்பது கருத்து.

2. மகா அன்பரே, இப்போது நாம் சர்வேசுரனுடைய பிள்ளைகளாயிருக்கிறோம். இனி எவ்விதமாயிருப்போமென்பது இன்னும் நமக்கு வெளிப்படவில்லை. அவர் தோன்றும்போது அவருக்கு ஒப்பாயிருப்போமென்று அறிவோம். ஏனெனில் அவர் இருக்கிற மாதிரியே அவரைத் தரிசிப்போம்.

3. மீளவும் அவர்மேல் இந்த நம்பிக்கை வைத்திருக்கிறவனெவனும், அவர் பரிசுத்தமாயிருக்கிறதுபோல் தன்னையும் பரிசுத்தமாக்கிக்கொள்ளுகிறான்.

4. பாவத்தைச் செய்கிற எவனும் அநீதத்தைச் செய்கிறான். ஏனெனில் பாவம் அநீதமாம்.

5. அவர் நம்முடைய பாவங்களைப் போக்கவந்தவரென்றும், அவரிடத்தில் பாவமில்லையென்றும் அறிவீர்கள். (இசை. 53-9; 1. இரா. 2-12.)

6. அவரிடத்தில் நிலைக்கொள்ளுகிற எவனும் பாவத்தைச் செய்யான். ஆனால் பாவத்தைச் செய்கிற எவனும் அவரைக் காணாதவனும், அவரை அறியாதவனுமாயிருக்கிறான்.

7. பிள்ளைகளே, ஒருவனும் உங்களை மயக்கவொட்டாதேயுங்கள். அவர் நீதிபரராயிருப்பதுபோல், நீதியைச்செய்கிறவன் நீதிமானாயிருக்கிறான்.

8. பாவத்தைச்செய்கிறவன் பசாசின் மகனாயிருக்கிறான். ஏனெனில் பசாசானது ஆதிமுதல் பாவஞ்செய்கின்றது. ஆனால் பசாசின் கிரியைகளை அழிக்கவேண்டுமென்றே தேவசுதன் தோன்றினார். (அரு. 8-44.)

9. சர்வேசுரனுக்குப் பிள்ளையாய்ப் பிறந்த எவனும் பாவத்தைச்செய்யான். ஏனெனில் அவருடைய வித்து அவனுக்குள்ளிருக்கிறது. அவன் சர்வேசுரனுக்குப் பிள்ளையாயிருக்கிறதினாலே பாவஞ்செய்யக்கூடாதவனாயிருக்கிறான்.

10. இதைக்கொண்டே தெய்வ புத்திரரும், பேயின் மக்களும் வெளியாகிறார்கள். நீதிமானல்லாதவனுஞ்சரி, தன் சகோதரனை நேசியாதவனுஞ்சரி, இவர்கள் சர்வேசுரனிடத்திலிருந்து வருகிறவர்கள் அல்ல.

11. எப்படியெனில் ஒருவரொருவரை நேசிக்கவேண்டுமென்பது ஆதிமுதல் நீங்கள் கேள்விப்பட்ட விசேஷமல்லோ.

12. தூர்ச்சனனுக்குப் பிள்ளையாய்த் தன் சகோதரனைக்கொன்ற காயீனைப்போல் இராதேயுங்கள். எதினிமித்தம் அவனைக்கொலைசெய்தான்? தன் கிரியைகள் கெட்டவைகளும், தன் சகோதரனுடைய கிரியைகள் நீதியுள்ளவைகளுமாய் இருந்ததைப்பற்றியல்லோ?

13. என் சகோதரரே, உலகம் உங்களைப்பகைத்தால், அதைப்பற்றி நீங்கள் அதிசயப்படவேண்டாம்.

14. நாம் சகோதரரைச் சிநேகிக்கிறபடியால் மரணத்தினின்று நீங்கி, ஜீவியத்துக்குட்பட்டிருக்கிறோமென்று அறிவோம். சிநேகியாதவன் மரணத்தில் நிலைக்கொண்டிருக்கிறான். (லேவி. 19-17.)

15. ஆகையால் தன் சகோதரனைப் பகைக்கிற எவனும் கொலைபாதகன். ஆனால் எந்தக்கொலைபாதகனும் தனக்குள் நிலைமையான நித்தியஜீவியத்தைக் கொண்டிருக்கிறதில்லை என்று அறிவீர்கள்.

9. அவருடைய வித்து என்பது தேவ இஷ்டப்பிரசாதம். அதைக் காப்பாற்றி, அதின் ஏவுதலின்படி நடக்கிறவன் பாவம் செய்யமாட்டான். அதின் ஏவுதலைப் புறக்கணிக்கிறவனே பாவத்தைச் செய்கிறான்.

16. சர்வேசுரன் நமக்காகத் தம்முயிரைக் கொடுத்ததினுல், அவருடைய அன்பு இன்னதென்று அறிந்திருக்கிறோம். ஆதலால் நாமும் சகோதரருக்காக நம்முயிரைக்கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். (அரு. 15-13.)

17. இவ்வுலக சம்பத்தையுடைய ஒருவன் தன் சகோதரன் இக்கட்டுப்படுகிறதைக் கண்டும், அவனுக்கு (இரங்காமல்) தன்னுள்ளத்தை மூடிக்கொண்டால், தேவசிநேகம் அவனிடத்தில் நிலைப்பதெப்படி? (லூக். 3-2; யாக 2-15.)

18. என் பிள்ளைகளே, நம்முடைய சிநேகம் வார்த்தையிலும், நாவிலும் இராமல், கிரியையிலும் உண்மையிலும் இருக்கவேண்டியது.

19. இவ்விதமாய் நாம் சத்தியத்துக்குப் பிள்ளைகளென்று அறிந்து, அவருடைய சமுகத்தில் நம்முடைய இருதயங்களைத் தேற்றிக்கொள்ளுவோம்.

20. ஆனுல் நம்மிருதயமே நம்மைக் குற்றஞ்சாட்டினுல், நம்மிருதயத்திலும் சர்வேசுரன் பெரியவர்; அவர் சகலத்தையும் அறிந்திருக்கிறுர்.

21. மிகவும் பிரியமானவர்களே, நம்மிருதயம் நமதுமேல் குற்றஞ்சாட்டாதிருந்தால், நாம் சர்வேசுரன்மேல் நம்பிக்கையாயிருப்போம்.

22. அன்றியும் நாம் அவருடைய கற்பனைகளைக்கைக்கொண்டு அவர் சமுகத்துக்கு ஏற்கையானவைகளைச் செய்கிறபடியினுலே, நாம் வேண்டிக்கொள்வதெதுவோ, அதை அவரிடத்தில் பெற்றுக்கொள்வோம். (மத். 21-22.)

23. நாம் அவருடைய சுதனுகிய யேசுக்கிறீஸ்துவின்மேல் விசுவாசமாயிருந்து, அவர் நமக்குக் கட்டளையிட்டபடியே ஒருவரொருவரைச் சிநேகிப்பதே அவருடைய கற்பனையாயிருக்கிறது. (அரு. 6-29; 17-3.)

24. இதினுலே அவருடையகற்பனைகளை அநுசரிக்கிறவன் அவரிடத்தில் வசிக்கிறுன்; அவரும் அவனிடத்தில் வசிக்கிறுர். அவர் நமக்குக் கொடுத்தருளின இஸ்பிரீத்துவினுல் அவர் நமக்குள் வசிக்கிறுரென்று அறிவோம். (அரு. 14-23.)

## 4-ம். அதிகாரம்.

*சர்வேசுரனிடத்திலிருந்து உண்டாகிற ஏவுதல் எதுவென்றும், சர்வேசுரனிடத்திலிருந்து வராதது எதுவென்றும் காண்பிக்கிறுர்.*

1. எனக்கு மிகவும் அன்பரே, நீங்கள் எல்லா ஞானிகளையும் நம்பாமல், அவர்கள் சர்வேசுரனிடத்திலிருந்து வந்தவர்களோ என்று சோதித்து அறிந்துகொள்ளுங்கள். ஏனெனில், உலகத்தில் அநேகம் கள்ளத் தீர்க்கதரிசிகள் தோன்றியிருக்கிறுர்கள். (யூதா. 4.)

2. சர்வேசுரனுடைய ஞானி யாரெனில்: யேசுக்கிறீஸ்துநாதர் மாம்ச ஐக்கியத்தோடு வந்தாரென்று ஏற்றுக்கொள்ளுகிற எவனும் சர்வேசுரனிடத்திலிருந்து வருகிற ஞானி என்றறிக.

3. ஆனுல் யேசுநாதரைப் பிரித்தழிக்கிற எந்த ஞானியும் சர்வேசுரனிடத்திலிருந்துவருகிறவனல்ல; அவனே அந்திக்கிறீஸ்து. அவன் வருகிறதாகக் கேள்விப்பட்டிருக்கிறீர்களே. இதோ இப்போதே உலகத்தில் இருக்கிறுன்.

4. பிள்ளைகளே, நீங்கள் சர்வேசுரனுல் உண்டாயிருக்கிறீர்கள். உங்களுக்குள் இருக்கிறவர் உலகத்திலிருக்கிறவனைவிடப் பெரியவராய் இருக்கிறபடியால், நீங்கள் அவனை ஜெயித்தீர்கள்.

5. அவர்கள் உலகத்தார்கள். ஆகையால் உலகத்துக்குரியவைகளைப் பேசுகிறார்கள். உலகமும் அவர்களுக்குச் செவிகொடுக்கிறது. (அருள. 8-47.)

6. நாங்கள் சர்வேசுரனால் உண்டானவர்கள். சர்வேசுரனை அறிந்தவன் எங்களுக்குச் செவிகொடுக்கிறான். சர்வேசுரனால் உண்டாயிராதவன் எங்களுக்குச்செவிகொடுக்கிறதில்லை. இதினாலே சத்தியஞானம் இன்னதென்றும், தப்பறை ஞானம் இன்னதென்றும் உணர்ந்துகொள்ளுகிறோம்.

7. எனக்கு மிகவும் பிரியமானவர்களே, நாம் ஒருவரொருவரைச் சிநேகிப்போமாக. ஏனெனில் சிநேகம் சர்வேசுரனால் உண்டாயிருக்கிறது. ஆகையால் சிநேகமுள்ளவனெவனும் சர்வேசுரனால் பிறந்து, சர்வேசுரனை அறிந்திருக்கிறான்.

8. சிநேகமில்லாதவன் சர்வேசுரனை அறியான். ஏனெனில் சர்வேசுரன் சிநேகமாகவே இருக்கிறார்.

9. தம்முடைய ஏக குமாரனால் நாம் ஜீவிக்கும்படிக்குச் சர்வேசுரன் அவரை இவ்வுலகத்தில் அனுப்பினதினாலே, சர்வேசுரன் நமதுபேரில் வைத்த சிநேகம் வெளிப்பட்டது. (அருள. 3-16.)

10. நாம் சர்வேசுரனைச் சிநேகித்ததினால் அல்லவே, அவரோ நம்மை முந்திச் சிநேகித்து, நம்முடைய பாவங்களுக்குப் பரிகாரப்பலியாகத் தமது குமாரனை அனுப்பினதிலே அவருடைய அன்பு இன்னதென்று விளங்குகின்றது.

11. மிகவும் பிரியமானவர்களே, சர்வேசுரன் நம்மை இத்தன்மையாய்ச் சிநேகித்திருக்கையில், நாமும் ஒருவரொருவரைச் சிநேகிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

12. சர்வேசுரனை ஒருவரும் ஒருபோதும் கண்டதில்லை. நாம் ஒருவரொருவரைச் சிநேகித்தால், சர்வேசுரன் நம்முள் நிலைத்திருக்கிறார். அவருடைய பரம அன்பும் நம்மில் உத்தமமாயிருக்கின்றது. (அருள. 1-18.)

13. அவர் தம்முடைய இஸ்பிரீத்துவிலிருந்து நமக்குத் தந்தருளினதினால், நாம் அவரிலும், அவர் நம்மிலும் நிலைத்திருக்கிறதாக அறிந்திருக்கிறோம். (அருள. 14-17.)

14. பிதாவானவர் தமது குமாரனை உலக இரட்சகராக அனுப்பினாரென்று நாங்களே கண்டு, சாட்சிசொல்லுகிறோம்.

15. யேசுநாதர் தேவசுதனென்று எவனெவன் அறிக்கையிடுகிறானோ, அவனிடத்தில் சர்வேசுரன் நிலைத்திருக்கிறார். அவனும் சர்வேசுரனிடத்தில் நிலைத்திருக்கிறான்.

16. சர்வேசுரன் நமதுமேல் வைத்திருக்கிற நேசத்தை நாம் அறிந்து, விசுவாசித்திருக்கிறோம். சர்வேசுரன் சிநேகமாகவே இருக்கிறார். சிநேகத்தில் நிலைத்திருக்கிறவன் சர்வேசுரனிடத்தில் நிலைத்திருக்கிறான்; சர்வேசுரனும் அவனிடத்தில் நிலைத்திருக்கிறார்.

12. சர்வேசுரனை ஒருவரும் ஒருபோதும் கண்டதில்லை. இவ்வுலகத்தில் அநேகர் சர்வேசுரனைக் கண்டதாக வேதத்தில் எழுதப்பட்டிருப்பது மெய்யே. ஆனாலும் அர்ச். சின்னப்பர் 1. கொ. 13-ம் அதி. 12-ம் வசனத்தில் சொல்லியிருக்கிறபடியே: கண்ணாடியில் கண்டதுபோல அவரைத் தரிசித்தார்களேயன்றி, அவருடைய சுபாவ சொரூபத்தில் ஒருவரும் கண்டதில்லை.

13. இஸ்பிரீத்துவிலிருந்து:—அதாவது, யேசுநாதர்சுவாமி இஸ்பிரீத்துசாந்துவின் வரங்களில் நமக்கு வேண்டியதை அளிக்கிறாரென்று அர்த்தமாம்.

17. நடுத்தீர்வைநாளில் நாம் நம்பிக்கையாயிருக்கச் செய்வதே நம்மிடத்திலுள்ள உத்தம தேவசிநேகமாம். ஏனெனில் அவர் எப்படியிருக்கிறாரோ நாமும் இவ்வுலகத்தில் அப்படியேயிருக்கிறோம்.

18. சிநேகத்தில் பயமில்லை. உத்தம சிநேகம் பயத்தைப் புறம்பே தள்ளுகிறது. பயம் வேதனையுள்ளது. ஆகையால் பயப்படுகிறவன் சிநேகத்தில் உத்தமனல்ல.

19. ஆகையால் சர்வேசுரன் நம்மை முந்திச் சிநேகித்தபடியினாலே நாமும் அவரைச் சிநேகிப்போமாக.

20. சர்வேசுரனைச் சிநேகிக்கிறேன் என்று ஒருவன் சொல்லியும், தன் சகோதரனைப் பகைத்தால், அவன் பொய்யன். ஏனெனில், தான் கண்ணால் காண்கிற சகோதரனைச் சிநேகியாதவன், தான் காணாத சர்வேசுரனை எப்படிச் சிநேகிக்கக்கூடும்?

21. சர்வேசுரனைச் சிநேகிக்கிறவன் தன் சகோதரனையும் சிநேகிக்கக்கடவான் என்கிற இந்தக் கற்பனையைச் சர்வேசுரனிடத்தில் நாம் பெற்றிருக்கிறோம்.

## 5-ம். அதிகாரம்.

*சிநேகத்தோடேகூடிய விசுவாசம் உலகத்தை ஜெயிக்கிறதென்றும், யேசுநாதரைப்பற்றிச் சாட்சி கொடுக்கிறவர்கள் மூவரொன்றும், மரணத்துக்கு ஏதுவான பாவங்களும், ஏதுவாகாத பாவங்களும் உண்டென்றும் சொல்லி, நிருபத்தை முடிக்கிறார்.*

1. யேசுநாதரே கிறீஸ்து என்று விசுவாசிக்கிற எவனும் சர்வேசுரனால் பிறந்தவனாயிருக்கிறான். அன்றியும் ஜெனிப்பித்தவரைச் சிநேகிக்கிற எவனும் அவரால் பிறந்தவனையும் சிநேகிக்கிறான்.

2. நாம் சர்வேசுரனைச் சிநேகித்து, அவருடையகற்பனைகளை அநுசரிக்கும்போது, சர்வேசுரனுடைய பிள்ளைகளையும் நாம் சிநேகிக்கிறோமென்று அதினால் அறிந்துகொள்ளுகிறோம்.

17. அவர் நம்மைப் பூரணமாய்ச் சிநேகிக்கிறதுபோல் நாமும் பிறரைத் தேவசிநேகத்தினால் பூரணமாய்ச் சிநேகித்து வருவோம்.

18. உத்தம சிநேகமானது பயத்தைப் புறம்பே தள்ளுகிறது என்கிறார். சின்னப்பர் பிலிப்பியருக்கு எழுதிய 2-ம் அதி. 12-ம் வசனத்தில்: பயத்தோடும் நடுக்கத்தோடும் உங்கள் இரட்சணியத்தை நிறைவேற்றப் பிரயாசப்படுங்கள் என்கிறார். தாவீது இராஜா 18-ம் சங்கீதம் 9-ம் வசனத்தில்: தேவபயமானது பரிசுத்தமுள்ளது; அது என்றென்றைக்கும் நிலைநிற்கிறது என்று சொல்லியிருக்கிறார். இப்படியே வேதாகமங்களில் இன்னம் அநேக இடங்களில் தேவ பயமானது நல்லதென்று சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளெல்லாம் அருளப்பருடைய இந்த வசனத்துக்கு விரோதமென்று நினைக்கத்தக்கதல்ல. அருளப்பர் பாவிகளுடைய தீர்வைக்கும் தண்டனைக்கும் பயப்படுகிற அடிமைப் பயத்தைப்பற்றிப் பேசுகிறார். தாவீது இராஜா, அர்ச். சின்னப்பர் முதலானவர்களோ புத்திர பயத்தைப் பற்றிப் பேசுகிறார்கள். அதேதென்றால் குற்றஞ்செய்த அடிமைகள் தண்டனைக்குப் பயந்து தங்கள் குற்றத்தை எஜமான்கள் கண்டுகொள்வார்களென்று பயப்படுவார்கள். நல்லகுணமுள்ள பிள்ளைகள் தங்கள் குற்றத்தால் தங்கள் தகப்பனுக்கு மனவருத்தம் வருவிப்போமே, என்று பயப்படுவார்கள். இதுவே தாவீது இராஜாவும், அர்ச். சின்னப்பர் முதலானவர்களும் சொல்லுகிற புத்திரபயமென்று சொல்லப்படும். இப்படிப்பட்ட பயம் தேவசிநேகத்துக்கு விரோதமாயிராததுமன்றி, அதைக் காப்பாற்றுவதற்கு மகா உதவியாயிருக்கிறது.

1. சர்வேசுரனால் பிறந்தவனென்று சொல்லும்போது, நாம் ஞானஸ்நானத்தினால் அடைகிற ஞானப்பிறப்பைக் குறித்துச் சொல்லுகிறார். ஆகையால் சகல விசுவாசிகளும் சர்வேசுரனால் பிறந்தவர்களென்று சொல்லப்படுவார்கள். சர்வேசுரனைச் சிநேகிக்கிறவன் அவருடைய பிள்ளைகளும், தனக்குச் சகோதரருமாகிய பிறரை எப்படிச் சிநேகியாதிருக்கக்கூடும்.

3. நாம் சர்வேசுரனுடைய கற்பனைகளை அநுசரிப்பதே அவரைச் சிநேகிப்பதாம். அவருடைய கற்பனைகளும் பாரமானவைகளல்ல.

4. சர்வேசுரனால் பிறந்ததெல்லாம் உலகத்தை ஜெயிக்கின்றது; நம்முடைய விசுவாசமே உலகத்தை ஜெயிக்கின்ற ஜெயமாமே.

5. யேசுநாதரே சர்வேசுரனுடைய குமாரனென்று விசுவாசிக்கிறவனேயன்றி, உலகத்தை ஜெயிக்கிறவன் யார்? (1. கொ. 15-57.)

6. யேசுக்கிறீஸ்துவாகிய இவரே ஜலத்தினாலும், இரத்தத்தினாலும் வந்தவர். ஜலத்தினால் மாத்திரமல்ல; ஜலத்தினாலும், இரத்தத்தினாலும் வந்தவர். கிறீஸ்துநாதர் சத்தியமென்று இஸ்பிரீத்துவானவரே சாட்சிகொடுக்கிறவர்.

7. எப்படியெனில், பரலோகத்திலே சாட்சியங்கொடுக்கிறவர்கள்: பிதா, வார்த்தை, இஸ்பிரீத்துசாந்து ஆகிய மூவர். இம்மூவரும் ஒன்றாயிருக்கிறார்கள்.

8. பூலோகத்திலும் சாட்சியங்கொடுக்கிறது: இஸ்பிரீத்து, ஜலம், இரத்தம் ஆகிய மூன்று. இம்மூன்றும் ஒன்றுதான்.

9. நாம் மனுஷருடைய சாட்சியத்தை ஏற்றுக்கொண்டால், அதைப்பார்க்கிலும் சர்வேசுரனுடைய சாட்சியம் அதிக பெரிதாயிருக்கின்றதே. சர்வேசுரன் தம்முடைய சுதனைப்பற்றிக் கொடுத்த சாட்சியமே அந்தச் சாட்சியம். அது மிகவும் பெரிது.

10. சர்வேசுரனுடைய சுதனை விசுவசிக்கிறவன் சர்வேசுரனுடைய சாட்சியத்தைத் தனக்குள் கொண்டிருக்கிறான். சுதனை விசுவசியாதவனோ, சர்வேசுரன் தம்முடைய சுதனைப்பற்றிக் கொடுத்த சாட்சியத்தை விசுவசியாததினாலே, அவரைப் பொய்யராக்குகிறான். (அரு. 3-36.)

11. சர்வேசுரன் நமக்கு நித்திய ஜீவியத்தைக்கொடுத்தார் என்பதே இந்தச் சாட்சியம். அந்தஜீவியமோ அவருடைய சுதனில் இருக்கின்றது.

12. சுதனை உடையவன் ஜீவனை உடையவன்; தேவசுதனைக்கொண்டிராதவன் ஜீவனில்லாதவன்.

13. தேவ சுதனுடைய நாமத்தை விசுவசிக்கிற நீங்கள் நித்திய ஜீவியத்தைக்கொண்டிருக்கிறீர்களென்று அறியும்படிக்கு இவைகளை உங்களுக்கு எழுதுகிறேன்.

6-7. **ஜலத்தினாலும் இரத்தத்தினாலும்:**—பழைய ஏற்பாட்டிலே யூதர்கள் ஜலத்தையும் இரத்தத்தையுங்கொண்டு தங்கள் பாவங்களுக்குப் பரிகாரச் சடங்குகளை நிறைவேற்றி வந்தார்கள். இவ்வித சடங்குகள் உலக இரட்சகருக்குக் குறிப்பாயிருந்தபடியால், யேசுநாதசுவாமி ஸ்நாபக அருளப்பர் கையால் பச்சாத்தாப ஸ்நானம்பெற்று, சிலுவையில் தமது உதிரத்தைச்சிந்தி உயிர்விட்டு, தாம்தாமே உலகத்தை இரட்சிக்க அனுப்பப்பட்டவரென்று காட்டினார். இஸ்பிரீத்துசாந்துவாகிய சர்வேசுரன் யேசுநாதசுவாமி ஸ்நானம் பெற்றபோது அவர்பேரில் இறங்க, இவர் தாம் எனது பிரிய குமாரனென்று பிதாவாகிய சர்வேரன் திருவுளம்பற்றினார். பூமியிலுள்ள சத்திய திருச்சபையிலோ ஜலத்தால் கொடுக்கப்படுகிற ஞானஸ்நானமும், இரத்தத்தால் குறிக்கப்படுகிற யேசுநாதசுவாமியுடைய பாடுகளும், இஸ்பிரீத்துசாந்துவானவர் விசுவாசிகள்மேல் பொழியும் பரம வரங்களும், யேசுநாதசுவாமி உலக இரட்சகரென்று எண்பிக்கின்றது. ஆகையால் மோட்சத்தில் அர்ச். திறித்துவமாகிய மூன்றுபேராலும், பூமியில் மூன்று காரியங்களாலும் ஒரே உலக இரட்சகர் சுட்டிக்காட்டப்படுகிறார் என்க.

14. நாம் அவருடைய சித்தத்தின்படி எதைக்கேட்டாலும், நமக்கு அவர் செவிகொடுக்கிறாரென்பதே நமக்கு அவர்மேலுள்ள நம்பிக்கையாகும்.

15. நாம் எதைக்கேட்டாலும் அவர் நமக்குச் செவிகொடுக்கிறாரென்று அறிந்திருக்கிறோம்; அவரிடத்தில்நாம் கேட்கிற மன்றாட்டுகளை அடைகிறோமென்றும் அறிந்திருக்கிறோம்.

16. மரணத்தைப் பயக்காத பாவத்தைத் தன் சகோதரன் செய்கிறதாக அறிந்திருக்கிறவன் வேண்டிக்கொள்வானாக. அப்போது மரணத்தைப் பயக்காத பாவத்தைச் செய்கிறவனுக்கு உயிர் கொடுக்கப்படும். மரணத்தைப் பயக்குகிற பாவமுண்டு. அந்தப் பாவத்தைக்குறித்து எவனும் வேண்டிக்கொள்ள நான் சொல்லுகிறதில்லை.

17. அக்கிரமமெல்லாம் பாவந்தான். அதில் மரணத்தைப் பயக்குகிற பாவமும் உண்டு.

18. சர்வேசுரனால் பிறந்த எவனும் பாவஞ்செய்யானென்று அறிந்திருக்கிறோம். சர்வேசுரனால் பிறந்தவன் தனனைக் காத்துக்கொள்ளுகிறான். துர்ச்சனன் அவனைத்தொடான்.

19. நாம் சர்வேசுரனால் உண்டாயிருக்கிறோமென்றும், உலகமோ முழுதும் தின்மையில் அமிழ்ந்தியிருக்கிறதென்றும் அறிந்திருக்கிறோம்.

20. சர்வேசுரனுடைய குமாரன் வந்திருக்கிறாரென்றும், நாம் மெய்யான சர்வேசுரனை அறிந்து, அவருடைய மெய்யான சுதனுக்குள் இருக்கும்படிக்கு நமக்கு அறிவைத் தந்தருளினாரென்றும் அறிந்திருக்கிறோம். இவரே மெய்யான சர்வேசுரனும் நித்திய ஜீவியமுமாயிருக்கிறார்.

21. சிறுபிள்ளைகளே, விக்கிரகங்களுக்கு விலகி, உங்களைக் காத்துக்கொள்ளுவீர்களாக. ஆமென்.

(லூக். 24-45.)

16. **மரணத்தைப் பயக்குகிற பாவம்:**—யேசுநாதசுவாமி உலகத்தை இரட்சிக்க வந்த தேவசுதன் அல்லவென்று பிடிவாதமாய்ச் சாதித்த பதிதரைப்பற்றி இவ்விடத்தில் பேசுகிறாரென்று அறியவும்.





# அப்போஸ்தலரான அர்ச். அருளப்பர்

## எழுதிய

# 2-ம். நிருபம்.

*எலெக்த்தா அம்மாளையும் அவள் பிள்ளைகளையும் விசுவாசத்திலும் பரம அன்பிலும் உறுதிப்படுத்துகிறார்.*

1. மூத்தோனாகிய நான் எலெக்த்தா அம்மாளுக்கும் அவளுடைய பிள்ளைகளுக்கும் எழுதுவது: உங்களை நான் மெய்யாகவே சிநேகித்துவருகிறேன். நான்மாத்திரமல்ல, சத்தியத்தை அறிந்த சகலரும்,

2. நம்மில் நிலைத்திருக்கிறதும், என்றென்றைக்கும் நம்மோடு இருப்பதுமாகிய சத்தியத்தினிமித்தம் (உங்களைச் சிநேகிக்கிறார்கள்.)

3. பிதாவாகிய சர்வேசுரனாலும், பிதாவின் சுதனாகிய யேசுக்கிறீஸ்துவினாலும் வரப்பிரசாதமும் கிருபையும் சமாதானமும் சத்தியத்திலும் பரம அன்பிலும் உங்களோடு இருப்பதாக.

4. பிதாவினிடத்தில் நாம் பெற்றுக்கொண்ட கற்பனையின்படியே உம்முடைய பிள்ளைகளில் சிலர் சத்தியத்திலே நடக்கிறதைக் கண்டு நான் மிகவும் சந்தோஷப்பட்டேன்.

5. இப்பொழுது நாயகி, நாம் ஒருவரையொருவர் சிநேகிக்கவேண்டுமென்று உமக்குப் புதிய கற்பனையாக எழுதாமல், ஆதிமுதல் நமக்குண்டாயிருக்கிற கற்பனையாக எழுதி, உம்மை மன்றாடுகிறேன்.

6. நாம் அவருடைய கற்பனைகளின்படி நடப்பதே அன்பு. நீங்கள் ஆதிமுதல் கேட்டதெப்படியோ அப்படி நடந்துகொள்வதே அந்தக்கற்பனை. (1. அரு. 5-3.)

7. ஏனெனில், இப்போது உலகத்தில் மோசக்காரர் அநேகர் நடமாடுகிறார்கள். இவர்கள், யேசுக்கிறீஸ்துநாதர் மாம்சத்தில் வந்தாரென்று ஏற்றுக்கொள்ளுகிறதில்லை. இப்படிப்பட்டவனே மோசக்காரனும், அந்திக்கிறீஸ்துவுமாயிருக்கிறான்.

---

1. **மூத்தோன்:**—அர்ச். அருளப்பர் தம்மையே மூத்தோன் என்கிறார்.

**எலெக்த்தா:**—ஒரு புண்ணிய ஸ்திரீயின் பேர். சிலர் இதை ஒரு குடும்பத்தின் அல்லது சபையின் பேராயிருக்கலாமென்றும் நினைக்கிறார்கள்.

8. நீங்கள்செய்த வேலையை இழக்காமல், அதின் பூரண சம்பாவனையைப் பெற்றுக்கொள்ளும்படிக்கு எச்சரிக்கையாயிருங்கள்.

9. கிறீஸ்துவின் போதகத்தில் நிலைக்கொள்ளாமல், அதைவிட்டு விலகுகிற எவனும் சர்வேசுரனை உடையவனல்ல. அந்தப்போதகத்தில் நிலைக்கொள்ளுகிறவனே பிதாவையும் சுதனையும் உடையவன்.

10. உங்களிடத்தில் வருகிற எவனும் இந்தப் போதகத்தைக் கொண்டு வராதிருந்தால், அவனை வீட்டில் ஏற்றுக்கொள்ளவும், அவனை நோக்கி: வாழ்க என்றுஞ் சொல்லவும் வேண்டாம். (உரோ. 16-17.)

11. ஏனெனில் அவனைநோக்கி: வாழ்க என்பவன் அவனுடைய துர்க்கிரியைகளுக்குப் பங்காளியாகிறான்.

12. உங்களுக்கு இன்னும் எழுத வேண்டிய காரியங்கள் அநேகமுண்டு. என்றாலும், அவைகளைக் காகிதத்தில் மையைக்கொண்டு எழுத எனக்குப் பிரியப்படவில்லை. நானே உங்களிடம் வந்து, உங்கள் சந்தோஷம் பூரணமாகும்படி முகமுகமாய்ப் பேசலாமென்று நம்புகிறேன்.

13. உம்முடையசகோதரி எலெக்தா அம்மாளின் பிள்ளைகள் உமக்கு மங்களஞ்சொல்லுகிறார்கள்.

10. இந்த வாக்கியத்தினால் மெய்யான விசுவாசத்தைவிட்டுப் பிரிந்தவர்களோடு சிநேகப் பழக்கத்தால் உண்டாகிற தின்மைகள் முதலிய ஆபத்துகளுக்கு விரோதமாய் எச்சரிக்கிறதொழிய எல்லா மனிதர்மட்டிலும் நமக்கு இருக்கவேண்டிய பொது சிநேகத்தையாவது, அவர்களுக்குச் செய்யவேண்டிய மகிமை ஆசாரங்களையாவது செய்யவேண்டாமென்று விலக்குகிறதில்லை.





# அப்போஸ்தலரான அர்ச். அருளப்பர் எழுதிய

# 3-ம் நிருபம்.

*அர்ச். அருளப்பர் காயு என்பவனிடத்திலுள்ள பிறசிநேகத்தைப் புகழ்ந்து, தியோத்திரப்பன் என்பவனுடைய கெட்ட நடக்கையைக் கண்டித்து, தெமேத்திரியு என்பவனைப்பற்றி நற்சாட்சி சொல்லுகிறார்.*

1. மூத்தோனாகிய நான் மெய்யாகவே சிநேகிக்கிற மிகவும் பிரியமான காயு என்பவனுக்கு எழுதுவது :

2. எனக்கு மிகவும் பிரியமுள்ளவனே, உன் ஆத்துமம் நன்றாய் வாழ்ந்திருப்பதுபோல், நீ எல்லாவற்றிலும் வாழ்ந்து சுகமாயிருக்கும்படிக்குப் பிரார்த்திக்கிறேன்.

3. சகோதரர் வந்து, நீ சத்தியத்தில் நடக்கிறாயென்று உன்னுடைய உண்மையைக் குறித்துச் சாட்சி கொடுத்ததினால், மிகவும் சந்தோஷப்பட்டேன்.

4. என் பிள்ளைகள் சத்தியத்திலே நடக்கிறார்கள் என்று நான் கேள்விப்படுகிறதைவிட அதிகமான சந்தோஷம் எனக்கு வேறே இல்லை.

5. எனக்கு மிகவும் அன்பனே, நீ சகோதரர்களுக்கும் விசேஷமாய் அந்நியர்களுக்கும் செய்கிற யாவற்றையும் பிரமாணிக்கமாய்ச் செய்கிறாய்.

6. அவர்கள் உன்னுடைய சிநேகத்தைக்குறித்துச் சபைக்கு முன்பாகச் சாட்சி சொன்னார்கள். நீயும் அவர்களைத் தேவசமுகத்துக்கு ஏற்கையானபடி வழிவிட்டு அனுப்புவது நலமாயிருக்கும்.

7. ஏனெனில், அவர்கள் புறஜாதியார்களிடத்தில் ஒன்றும் வாங்காமல், அவருடைய நாமத்தினிமித்தம் பயணப்பட்டார்கள்.

8. ஆகையால் நாம் சத்தியத்திற்கு உடன்வேலையாட்களாய் இருக்கும்படி அப்படிப்பட்டவர்களை ஏற்றுக்கொள்ளுவது நமது கடமை.

---

7. இப்பேர்ப்பட்டவர்கள் பணத்துக்காக வேலைசெய்கிறார்களென்று தோன்றாதபடி, அவர்களை விசாரிக்கவேண்டுமென்று அப்போஸ்தலர் சொல்லுகிறார்.

9. நான் ஒருவேளை சபைக்கு எழுதியிருப்பேன். ஆனாலும் அவர்களில் முதன்மையாயிருக்க விரும்புகிற தியோத்திரப்பன் எங்களை ஏற்றுக்கொள்ளவில்லை.

10. ஆகையால் நான்வந்தால், துர்ச்சன வார்த்தைகளால் அவன் எங்களுக்கு விரோதமாய்ப் பிதற்றி, செய்துவருகிற கிரியைகளைப்பற்றிக் கண்டிப்பேன். அவன் அப்படிச்செய்வதும் போதாதென்றாற்போல், தானே சகோதரர்களை ஏற்றுக்கொள்ளாமலிருப்பது மன்றி, ஏற்றுக்கொள்ளுகிறவர்களையும் தடுத்து, அவர்களைச் சபைக்குப் புறம்பாக்குகிறான்.

11. எனக்கு மிக அன்பனே, நீ தின்மையைப் பின்பற்றாமல், நன்மையைப் பின்பற்று. நன்மையைச் செய்கிறவன் சர்வேசுரனிடத்திலிருந்து வருகிறான். தின்மையைச் செய்கிறவன் சர்வேசுரனைக் காணாதவன்.

12. தெமேத்திரியு எல்லாராலும் நற்சாட்சியம் பெற்றிருக்கிறதுமன்றி, சத்தியத்தாலும் நற்சாட்சியம் பெற்றிருக்கிறான். நாங்களும் சாட்சியங் கொடுக்கிறோம். எங்கள் சாட்சியம் உண்மை என்பது உனக்குத் தெரியும்.

13. நான் உனக்கு எழுதவேண்டிய காரியங்கள் அநேகமுண்டு. ஆனால், மையினாலும் இறகினாலும் எழுத எனக்கு மனமில்லை.

14. சீக்கிரத்தில் உன்னைக் காண்பேன் என்று நம்புகிறேன். அப்பொழுது முகமுகமாய்ப் பேசிக்கொள்வோம். உனக்குச் சமாதானம் உண்டாவதாக. சிநேகிதர் உனக்கு மங்களஞ்சொல்லுகிறார்கள். நீயும் சிநேகிதர்களுக்குப் பேர்பேராகமங்களஞ்சொல்லுவாயாக.





# அப்போஸ்தலரான அர்ச். யூதா

## எழுதிய

# நிருபம்.

அக்காலத்திலிருந்த பொல்லாதவர்களுடைய துர் நடக்கைகளை வெளிப்படுத்தி, அவர்களை விலகிநடக்கக் கற்பித்து, அவர்களுடைய அவலமான முடிவை எடுத்துக் காண்பிக்கிறார்.

1. யேசுக்கிறீஸ்துநாதருடைய ஊழியனும், யாகப்பருடைய சகோதரனுமாகிய யூதாவாகிய (நான்), பிதாவாகிய சர்வேசுரனால் நேசிக்கவும், யேசுக்கிறீஸ்துநாதரால் காப்பாற்றவும்,அழைக்கவும்பட்டிருக்கிறவர்களுக்கு எழுதுவது :

2. கிருபையும், சமாதானமும், பரம அன்பும்உங்களுக்குப் பூரணமாய் உண்டாவதாக.

3. மிகவும் பிரியமானவர்களே, உங்கள் பொதுவான இரட்சணியத்தைக் குறித்து எழுதும்படி நான் மிகவுங் கவலையுற்றவனாயிருக்கையில், பரிசுத்தவான்களுக்கு ஒருவிசை ஒப்புவிக்கப்பட்ட விசுவாசத்திற்காக நீங்கள் உற்சாகமாய்ப் போராடவேண்டுமென்று உங்களுக்கு எழுதுவது அவசியமாயிற்று.

4. ஏனெனில் நமது சர்வேசுரனுடைய வரப்பிரசாதத்தைத் தங்கள் துர்மார்க்கத்துக்கேதுவாகப் புரட்டி, நம்முடைய கர்த்தரும் ஆண்டவருமாகிய யேசுக்கிறீஸ்துவை மறுதலிக்கிற அவபக்தரான சில மனிதர் தந்திரமாய் வந்து நுழைந்திருக்கிறார்கள். இவர்களுக்கு அடியில்கண்ட ஆக்கினை ஏற்கனவே விதிக்கப்பட்டிருக்கிறது.

5. நீங்கள் ஏற்கனவே அறிந்திருந்தாலும், நான் உங்களுக்கு நினைப்பூட்ட விரும்புவதென்னவெனில், யேசுநாதர் பிரஜைகளை எஜிப்தினின்று இரட்சித்து, பின்பு விசுவசியாதவர்களைச் சங்கரித்தார். (எண். 14-37.)

6. தங்களுடைய ஆதி மேன்மையைக் காப்பாற்றிக்கொள்ளாமல், தங்கள் வாசஸ்தலத்தைக் கைவிட்ட தூதர்களையும் மகாநாளின் தீர்ப்புக்கென்று நித்திய சங்கிலிகளினால்கட்டி, அந்தகாரத்தில் அடைத்துவைத்திருக்கிறார். (2. இரா. 2-4.)

---

5. யேசுநாதர் சர்வத்துக்கும் கர்த்தராயிருக்கிறபடியால், கர்த்தர் என்கிற வார்த்தையைப் பிரயோகிக்கவேண்டிய இடத்தில் யேசு என்னும் வார்த்தையைப் பிரயோகிக்கிறார்.

6. **ஆதிமேன்மை :**—இஷ்டப்பிரசாதத்தோடு அவர்கள் முதல் முதல் சிருஷ்டிக்கப்பட்ட பாக்கியமான ஸ்திதி.

7. அப்படியே சோதோம்கொமோரா பட்டணத்தாரும், அவர்களைப்போல் விபசாரிகளாகி, அந்நிய மாம்சத்தைப் பின்பற்றின மற்றச் சுற்றுப்புறத்தாரும் நித்திய அக்கினியின் ஆக்கினையை அடைந்து, மற்றவர்களுக்குப் படிப்பினையானார்கள். (ஆதி. 19-24,)

8. இந்தப்பிரகாரமாய் இவர்களும் மாம்சத்தைக்கறைப்படுத்திக்கொண்டு, அதிகாரத்தைப் புறக்கணித்து, மகத்துவத்தைத் தூஷணிக்கிறார்கள். (2. இரா. 2-10)

9. அதிதூதராகிய மிக்கயேல் மோயீசனுடைய சரீரத்தைக்குறித்துப் பசாசுடனே தர்க்கித்துப் பேசினபோது, அவனுடைய தூஷணத்துக்குத்தீர்வையிடத் துணியாமல், ஆண்டவரே உனக்கு ஆக்கியாபிப்பாராக என்றார். (சக. 3-2.)

10. இவர்களோ, தங்களுக்குத் தெரியாதவைகளையெல்லாம் தூஷணித்து, சுபாவமாய்த் தாங்கள் அறிந்தவைகளில் வாய்பேசாதமிருகங்களைப்போல் தங்களை அழுகப்பண்ணுகிறார்கள்.

11. இவர்களுக்கு ஐயோ கேடு! ஏனெனில் இவர்கள் காயின் வழியில் சென்றவர்கள்; பாலாமைப்போல் தவறி, கூலிக்காக விழுந்தோடினவர்கள்; கோரையனைப்போல் எதிர்த்து நின்று நாசமானவர்கள். (ஆதி. 4-8; எண். 22-23; 16-32)

12. இவர்கள் தங்கள் விருந்துகளில் அசுசிகள்; அச்சமின்றி விருந்தாடுகிறவர்கள்; தங்களைத் தாங்களே மேய்த்துக்கொள்ளுகிறவர்கள். இவர்கள் காற்றில் அடிபட்டோடும் நீரில்லாத மேகங்கள்; இலையுதிர்ந்து, கனியற்று, இருதரஞ்செத்து, வேரற்றுப்போன மரங்கள். (2. இரா. 2-17.)

13. இவர்கள் தங்கள் வெட்கக்கேடுகளை நுரையாகத்தள்ளும் அமளியான கடலலைகள்; மார்க்கந்தப்பி ஓடும் நட்சத்திரங்கள். இவர்களுக்காக அந்தகாரச் சுழல்காற்று நித்தியத்துக்கும் வைக்கப்பட்டிருக்கின்றது.

14. ஆதாமுக்கு ஏழாந்தலைமுறையான ஏனோக்கு இவர்களைக்குறித்துத் தீர்க்கதரிசனமாக: இதோ, ஆண்டவர் எல்லாருக்கும் நியாயத் தீர்ப்பிடுவதற்கும், எல்லா அக்கிரமிகளுக்கும் அவர்கள் அக்கிரமமாய்ச்செய்த சகல அக்கிரம செய்கைகளைப்பற்றியும், (காட்சி. 1-7.)

---

8. **மகத்துவத்தைத் தூஷணிக்கிறார்கள்:**—உலோக அதிகாரிகளுக்கு விரோதமாய்ப் பேசுவதுமன்றி, தேவமகத்துவத்தையும் அவர்கள் தூஷணிக்கிறார்கள்.

9. இங்கே சொல்லப்பட்டிருக்கிற வாக்குவாதம் வேதபுஸ்தகத்தில் எந்த இடத்திலும் குறிக்கப்பட்டதில்லை. ஆகையால் இது விசேஷ தேவ ஏவுதலால் அறியப்பட்டு, பாரம்பரியமாய் யூதர்களுக்குள் தெரியப்பட்ட விஷயமாயிருக்கவேண்டும். பசாசு மோயீசனுடைய சரீரத்தைக் கைக்கொண்டிருந்தால் ஒருவேளை அதற்கு யூதர்கள் தேவ ஆராதனை செய்யத் தூண்டிக் கெடுத்திருக்கக்கூடும். இதினாலே அர்ச். மிக்கயேல் அவனைக் கண்டித்திருக்கிறார்.

11. **கள்ளப்போதகர்கள் காயின்வழியிலே நடக்கிறார்கள்,** எப்படியெனில் காயீன் தன் தம்பியைக்கொலைசெய்ததுபோல், அவர்களும் தங்கள் சகோதரருடைய ஆத்துமங்களைக் கொலைசெய்கிறார்கள். **பாலாமையும் பின்சேல்லுகிறார்கள்,** எப்படியெனில் பாலாக்கு ராஜா கொடுக்க உடன்பட்ட கைக்கூலிக்கு ஆசைப்பட்டு அவன் இஸ்ராயேல் பிரஜைகளைச் சபிக்கத்துணிந்ததுபோல், இவர்களுஞ் சம்பளத்துக்கு ஆசைப்பட்டு, சர்வேசுரனுடைய திருச்சபையைத் தூஷணிக்கத்துணிகிறார்கள். **கோரை என்பவனையும் பின்சேல்லுகிறார்கள்,** எப்படியெனில் அவன் மோயீசனையும் ஆரோனையும் எதிர்த்துத் தேவனுக்குத் தூபம் கொடுக்கத்துணிந்ததுபோல், இவர்களும் திருச்சபையை ஆளுகிறவர்களை எதிர்த்து, வேதத்தைப்போதிக்கத் துணிகிறார்கள். இப்படியே இந்த மூவருக்கும் வந்த ஆக்கினை இவர்களுக்கும் வரும்.

15. அவபக்தரான பாவிகள் கடவுளுக்கு விரோதமாய்ச்சொல்லிய சகல கொடிய வார்த்தைகளைப்பற்றியும் அவர்களைக் கண்டிப்பதற்குத் தம்முடைய ஆயிரமாயிரமான அர்ச்சியசிஷ்டவர்களோடேகூட வருகிறார் என்று சொல்லியிருக்கிறார்.

16. இவர்கள் முறுமுறுத்து முறையிடுகிறவர்கள்; தங்கள் இச்சைகளின்படி நடக்கிறவர்கள்; வீம்புபேசும் வாயையுடையவர்கள்; ஆதாயத்துக்காக முக ஸ்துதி சொல்லுகிறவர்கள். (சங். 16-10.)

17. நீங்களோ என் அன்பரே, நமது கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துவின் அப்போஸ்தலரால் முன் சொல்லப்பட்ட வார்த்தைகளை நினைத்துக்கொள்ளுங்கள். (2. தீமோ. 3-1.)

18. கடைசிக்காலத்தில் தங்கள் இச்சைகளின்படியே துன்மார்க்கங்களில் நடக்கிற பரியாசக்காரர் தோன்றுவார்களென்று அவர்கள் உங்களுக்குச் சொல்லியிருக்கிறார்களே.

19. இவர்கள் தாங்களாய்ப் பிரிந்து போகிறவர்கள்; இந்திரிய ஜீவன்கள்; ஞான ஜீவனற்றவர்கள்.

20. நீங்களோ மிகவும் பிரியமுள்ளவர்களே, உங்கள் மகாபரிசுத்த விசுவாசத்தின்மேல் உங்களை மாளிகையாக எழுப்பி, இஸ்பிரீத்துசாந்துவில் ஜெபித்து,

21. உங்களைத் தேவசிநேகத்தில் காப்பாற்றி, நித்திய ஜீவியத்துக்கேதுவான தமது இரக்கத்தை நமது கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துநாதர் அளிக்கும்படி எதிர்பார்த்திருங்கள்.

22. ஆகையால் அவதீர்வைக்குஉள்ளானவர்களைக் கண்டியுங்கள்.

23. சிலரை அக்கினியினின்று இழுத்து இரட்சியுங்கள். மற்றவர்கள்மட்டிலோ இரக்கமாயிருங்கள்; ஆனாலும் அச்சமும் வேண்டியது. மாம்சத்தால் கறைபட்ட துணியை முதலாய்வெறுத்துத்தள்ளுங்கள்.

24. பாவமின்றி உங்களைக் காப்பாற்றவும், நமது கர்த்தராகிய யேசுக்கிறீஸ்துநாதர் வரும்போது தம்முடைய மகிமையுள்ள சந்நிதியிலே மாசற்றவர்களாய் மிகுந்த மகிழ்ச்சியோடு உங்களை நிறுத்தவும் வல்லமையுள்ளவரும்,

25. நமது ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவின்வழியாய் நம்மை இரட்சித்தவருமாகிய ஏக கடவுளுக்கு மகிமையும், ஸ்தோத்திரமும், கர்த்தத்துவமும், வல்லபமும் காலாகாலங்களுக்குமுன் (இருந்ததுபோல்) இப்பொழுதும் அநவரத காலங்களிலும் உண்டாவதாக.

ஆமென்.

22-23. பிறருக்குப் புத்தி சொல்லுகிற விஷயத்திலே மூவித ஜனங்கள் காணப்படுகிறார்கள். சிலர் பாவத்தில் மூர்க்கராயிருக்கிறவர்கள்; அப்படிப்பட்டவர்கள் நடுத்தீர்க்கப்பட்டவர்களென்று எண்ணி, அவர்களைக் கண்டித்துப் புத்திசொல்லவேண்டியது. வேறே சிலரை அக்கினியினின்று இழுத்தாற்போல் பாவவழியினின்று பலவந்தமாய் இழுத்துக்கொள்ளவேண்டும். பலவீனத்தினாலும் அறிவீனத்தினாலும் கெட்டுப்போகிற வேறே சிலருக்குத் தயவோடும் இரக்கத்தோடும் புத்தி சொல்லவேண்டும். ஆனால் பாவிகளைத் தயவோடும் இரக்கத்தோடும் நடத்தினாலும், ஆத்துமத்தையும் சரீரத்தையும் அசுசிப்படுத்துகிற சரீரத்துக்கடுத்த எவ்வித நேசத்தையும் அருவருத்து விலக்கவேண்டுமென்று அர்த்தமாகும்.



# பாயிரம்.

அப். அர்ச். அருளப்பர் தொமிசியானு என்கிற இராயனால் பத்மோஸ் என்ற தீவுக்குப் பரதேசியாக அனுப்பப்பட்டிருக்கையிலே கர்த்தர் அவதாரத்தின் 95-ம் வருஷத்தில் இந்த அருமையான காட்சி ஆகமத்தைக் கிரேக்குப் பாஷையில் எழுதினார். முதல் மூன்று அதிகாரங்களில் சின்ன ஆசியாவிலுள்ள ஏழு மேற்றிராணிமார்களுக்கு எழுதும்படி தமக்குக் கற்பிக்கப்பட்டவைகளை எழுதுகிறார். மற்ற அதிகாரங்களில் கடைசிமட்டும் திருச்சபையில் நடக்கப் போகிற பிரதான காரியங்களையும், விசேஷமாய் உலக முடிவில் வரப்போகிற அந்திக்கிறீஸ்துவின் செய்கைகளையுங்குறித்து ஆழ்ந்த கருத்துள்ள தீர்க்கதரிசனங்களை வெளிப்படுத்தியிருக்கிறார்.

இந்த அதிசயத்துக்குரிய பிரபந்தத்திலே எத்தனை வார்த்தைகள் உண்டோ அத்தனை பரம இரகசியங்கள் உண்டென்று சொல்லுவதுமாத்திரம் போதாது. ஒவ்வொரு வார்த்தையிலும் பற்பல ஞான அர்த்தங்கள் அடங்கியிருக்கின்றன என்று மிகவும் பேர்போன வேதபாரகராகிய அர்ச். எரோனிமுஸ் என்பவர் வசனித்திருக்கிறார்.

அதின்பேரில் வியாக்கியானம் பண்ணின சாஸ்திரிகளுக்குக் கணக்கில்லை.

நாமோ, இந்தத் தீர்க்கதரிசனங்களுக்கு உள்ள அர்த்தம் இன்னதென்று சொல்லத் துணியாமல், வாசிக்கிறவர்களுக்குக் கருத்து விளங்கும்படியாகச் சிறிது வியாக்கியானங்களைமட்டும் சேர்த்திருக்கிறோம்.



# அப்போஸ்தலரான அர்ச். அருளப்பர் வெளிப்படுத்தின காட்சியாகமம்.

## முதல் அதிகாரம்.

*ஏழு பொற் குத்துவிளக்குகளால் குறிக்கப்பட்ட ஆசியாவிலுள்ள ஏழுசபைகளுக்கு அர்ச். அருளப்பர் எழுதக் கற்பிக்கப்பட்டது.*

1. சீக்கிரத்தில் நடக்கவேண்டியவைகளைத் தம்முடைய ஊழியர்களுக்குத் தெரிவிக்கும்பொருட்டு, சர்வேசுரன் யேசுக்கிறீஸ்துவுக்கு ஒப்புவித்ததும், அவர் தம்முடைய தூதனை அனுப்பி, தம்முடைய ஊழியனாகிய அருளப்பருக்கு அறிவித்ததுமாகிய காட்சி:

2. இவர் சர்வேசுரனுடைய வாக்கியத்துக்குச் சாட்சியஞ் சொல்லி, தாம் கண்ட யாவற்றையும் யேசுக்கிறீஸ்துநாதருடைய சாட்சியாக வெளிப்படுத்தினார்.

3. இந்தத் தீர்க்கதரிசனத்திலுள்ள வாக்கியங்களை வாசிக்கிறவனும், கேட்கிறவனும், இதிலே எழுதியிருக்கிறவைகளை அநுசரிக்கிறவனும் பாக்கியவான். ஏனெனில் காலம் சமீபித்திருக்கின்றது.

4. அருளப்பன் ஆசியாவிலுள்ள ஏழு சபைகளுக்கும் எழுதுவதாவது: இருக்கிறவரும், இருந்தவரும், இனி வருபவருமானவராலும், அவருடைய சிங்காசனத்துக்கு முன்பாக நிற்கிற ஏழு அரூபிகளாலும், யேசுக்கிறீஸ்துநாதராலும் உங்களுக்கு இஷ்டப்பிரசாதமும் சமாதானமும் உண்டாவதாக. (யாத். 3-14.)

1. இந்தக் காட்சியானது பிதாவாகிய சர்வேசுரனால் அல்லது அர்ச். தமதிறித்துவத்தினால் யேசுநாதருடைய மனுஷ சுபாவத்துக்கும், யேசுநாதரால் தம்முடைய தூதனாகிய சம்மனசுவுக்கும், சம்மனசானவரால் அர்ச். அருளப்பருக்கும், அர்ச். அருளப்பரால் சாதாரண திருச்சபைக்கும் வெளிப்படுத்தப்பட்டதென்று அறிக.

சீக்கிரத்தில் என்பதை நாம் நினைப்பதுபோல் எண்ணத்தகாது. கடவுள் சமுகத்தில் ஒருநாள் ஆயிரம் வருஷம்போலவும், ஆயிரம் வருஷம் ஒருநாள்போலவும் இருப்பதினால், நமக்கு வெகு காலமாய்த் தோன்றுவது சுவாமிக்கு ஒரு க்ஷணமாகவும், நமக்கு ஒரு க்ஷணமாய்த் தோன்றுவது அவருக்கு நெடுங்காலமாகவும் இருக்கலாம்.

3. இந்த ஆகமத்தில் சொல்லப்பட்டவைகளில் சில காரியங்கள் அக்காலத்தில் உடனேயும், சிலவைகள் பிற்காலங்களிலும், இன்னம் சிலவைகள் உலக முடிவிலும், கடைசியாய் மற்றவைகள் மோட்சத்தில் நித்தியமாயும் நிறைவேறவேண்டியவைகளாம்.

5. இவர் உண்மையுள்ள சாட்சியும், மரித்தோரிலிருந்து முதல் பேறுன வரும், பூமியின் இராஜாக்களுக்கு அதிபதியுமாயிருக்கிறூர். இவர் நம்மைச் சிநேகித்து, தமது இரத்தத்திஞலே நம்முடைய பாவங்களினின்று நம்மைக் கழுவி, (1. கொ. 15-21 ; எபி. 9-14.)

6. தம்முடைய பிதாவாகிய சர்வேசுரனுக்கு முன்பாக நம்மை இராஜாக்களும் குருக்களுமாக்கினூர். அவருக்கே அநவரதகாலத்துக்கும் மகிமையும் வல்லமையும் உண்டாவதாக. ஆமென்.

7. இதோ, மேகங்களின்மீது வருகிறூர். கண்கள் யாவும் அவரைக்காணும்; அவரைக் குத்தினவர்களும் அவரைக் காண்பார்கள். பூமியிலுள்ள எக்குலத்தாரும் அவரைப் பார்த்து, தங்கள் மேல்நொந்து அழுவார்கள். அப்படியே ஆகும். ஆமென். (இசை. 3-13 ; மத். 24-30.)

8. நானே அல்பாவும், ஓமேகாவும், ஆதியும் அந்தமும் என்று ஆண்டவராகிய கடவுள் சொல்லுகிறூர். இவரோ இருக்கிறவர், இருந்தவர், இனி வரப் போகிறவர், சர்வ வல்லபமுள்ளவர். (இசை. 41-4 ; காட். 26-6.)

9. உங்கள் சகோதரனும், யேசுக்கிறீஸ்துவுக்குள் துன்பத்துக்கும் இராச்சியத்துக்கும் பொறுமைக்கும் உடன் பங்காளியுமாகிய அருளப்பன் என்னப்பட்ட நான் தேவ வாக்கியத்தைக்குறித்தும், யேசுநாதருடைய சாட்சியத்தைக் குறித்தும் பாத்மோஸ் என்னப்பட்ட தீவிலே இருந்தேன்.

10. கர்த்தருடைய நாளில் நான் பரவசமாகி, எனக்குப் பின்னூலே எக்காள சத்தம்போன்ற ஓர் பெரும் சத்தத்தைக்கேட்டேன்.

11. அது: நீ காண்கிறதை ஒருபுஸ்தகத்திலே எழுதி, ஆசியாவிலுள்ள எபேசு, சிமிர்னு, பெர்காமு, தியத்திரா, சார்தீஸ், பிலதெல்பியா, லவோதிக்கையா என்னும் ஏழு சபைகளுக்கும் அனுப்பு என்றது.

12. அப்பொழுது என்னுடனே பேசின சத்தம் இன்னதென்று பார்க்கும்படி திரும்பினேன். திரும்பின அளவில் ஏழு பொற்குத்துவிளக்குகளையும்,

13. அவ்வேழு பொற்குத்துவிளக்குகளின் மத்தியில் மனுமகனுக்கு ஒப்பாயிருந்த ஒருவரையும் கண்டேன். அவர் நிலையங்கிதரித்து, மார்பினருகே பொற்கச்சை கட்டியிருந்தார். (தனி. 7-13.)

14. அவருடைய தலையும், மயிரும் தூய்மையான ஆட்டுரோமத்தைப் போலவும், உறைந்த பனியைப்போலவும் வெண்மையாயிருந்தது. அவருடைய கண்கள் அக்கினிச் சுவாலைபோலிருந்தன.

15. அவருடைய பாதங்கள் உலைக்களத்தில் காய்கிற வெண்கலத்துக்கு ஒப்பாயிருந்தன. அவருடைய குரலோ, பெரும்வெள்ளத்தின் இரைச்சலைப்போலிருந்தது.

8. இந்த ஆகமம் அர்ச். அருளப்பரால் எழுதப்பட்ட கிரேக்க பாஷையில் அல்பா என்பது முதல் எழுத்தும், ஓமேகா என்பது கடைசி எழுத்துமாயிருக்கின்றது. ஆகையால் சர்வேசுரன் நாமே, அல்பா ஓமேகா என்று சொல்லும்போது எல்லாத்துக்கும் ஆதிகாரணமும் முடிவும் கதியும் நாமே என்று சொல்லுகிறூரென்று அறியவும்.

9. பாத்மோஸ் என்கிற தீவு ஏஜ் என்கிற கடலிலே கிரீஸ் தேசத்துக்குச் சமீபமாயிருக்கின்றது. அத்தீவிலே மூந்நூறு ஜனங்கள்போலே குடியிருக்கிறூர்கள்.

10. கர்த்தருடைய நாள்:—ஞாயிற்றுக்கிழமை.

16. அல்லாமலும் அவர் தம்முடைய வலதுகரத்தில் ஏழுநட்சத்திரங்களை ஏந்திக்கொண்டிருந்தார். அவருடைய வாயிலிருந்து இருபுறமும் கருக்கான பட்டயம் புறப்பட்டது. அவருடைய முகம் தன் பெலனெல்லாங்கொண்டு ஜொலிக்கிற சூரியனைப்போலிருந்தது.

17. நான் அவரைக் கண்டவுடனே செத்தவனைப்போல் அவருடைய பாதத்திலே விழுந்தேன். ஆனால் அவர் தம்முடைய வலது கரத்தை என்மேல் வைத்து, என்னைப்பார்த்துச் சொன்னதாவது: பயப்படாதே; நானே ஆதியும் அந்தமும், (காட். 21-6.)

18. ஜீவியருமாயிருக்கிறேன். நான் மரித்தேன்; ஆனாலும் இதோ, என்றென்றைக்கும் ஜீவனுள்ளவனாயிருக்கிறேன். மரணம் நரகம் இவைகளின் திறவுகோல் என் கையிலிருக்கின்றது. (காட். 20-13.)

19. ஆதலால், நீ கண்டவைகளையும், இருக்கிறவைகளையும், இவைகளுக்குப் பின் சம்பவிக்கவேண்டியவைகளையும்,

20. என் வலது கரத்தில் நீ கண்ட ஏழு நட்சத்திரங்களின் இரகசியத்தையும், ஏழு பொற்குத்துவிளக்குகளையும் பற்றி எழுது. அந்த ஏழு நட்சத்திரங்களும் ஏழு சபையின் தூதர்களாம்; அந்த ஏழு விளக்குகளும் ஏழு சபைகளாம்.

## 2-ம். அதிகாரம்.

எபேசு, சிமிர்ணு, பெர்காமு, தியத்தீரா என்னும் பட்டணங்களிலுள்ள, சபைகளின் தூதர்களுக்கு எழுதவேண்டியவைகள் கற்பிக்கப்படுகின்றன.

1. எபேசு சபையின் தூதனுக்கு எழுது: ஏழு நட்சத்திரங்களைத் தம்முடைய வலதுகரத்தில் ஏந்திக்கொண்டு, ஏழு பொற்குத்துவிளக்குகளின் நடுவே உலாவுகிறவர் சொல்லுகிறதாவது:

2. உன் கிரியைகளையும், உன் பிரயாசத்தையும், உன் பொறுமையையும் அறிந்திருக்கிறேன். நீ பொல்லாதவர்களைச் சகிக்கமாட்டாதிருக்கிறதையும், அப்போஸ்தலராயிராமல் தங்களை அப்போஸ்தலரென்று சொல்லுகிறவர்களை நீ பரிசோதித்து, அவர்களைப் பொய்யர் என்று கண்டறிந்திருக்கிறதையும்,

3. நீ பொறுமையாயிருக்கிறதையும், தளர்ந்துபோகாமல், என் நாமத்தின் நிமித்தம் துன்பப்பட்டதையும் அறிந்திருக்கிறேன்.

4. ஆனாலும், நீ முன் கொண்டிருந்த பரம அன்பை விட்டுவிட்டாயென்று உன்பேரில் எனக்கு முறைப்பாடு உண்டு.

18. முதலும் கடைசியும் என்பது எல்லாவற்றையும் படைத்து, எல்லாவற்றிற்கும் கதியாயிருக்கிற சர்வேசுரனென்றும்; மரணம், நரகம் இவற்றின் திறவுகோல்களைக் கைக்கொண்டிருக்கிறேன் என்கிறதினாலே உயிர்வாழப்பண்ணவும் சாகடிக்கவும், நரகத்தில் விழாதபடிக்கு இரட்சிக்கவும், நரகத்தில் தள்ளவும் வல்லபராயிருக்கிறேனென்று அர்த்தமாம்.

20. இரண்டாம் மூன்றும் அதிகாரங்களில் சொல்லப்போகிறபடியே, ஏழு நட்சத்திரங்களால் குறிக்கப்பட்ட ஏழு தூதர்கள் அந்த ஏழு சபைகளின் மேற்றிராணிமார்களாம். அந்த நட்சத்திரங்கள் யேசுநாதருடைய வலது கையில் இருக்கின்றன. அதாவது: மேற்றிராணிமார்கள் யேசுநாதருடைய பிரதான ஸ்தானாபதிகளென்றும், அவர்கள் நட்சத்திரங்களைப்போல் சுவிசேஷ வெளிச்சத்தைத் தங்களைச் சுற்றிலும் பிரகாசிக்கப்பண்ணுகிறார்களென்றும், அவர்கள் தவறிப்போகாமலும், அஞ்சாமலும் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படியாக யேசுநாதருடைய வலதுகரத்தால் தாங்கப்படுகிறார்களென்றும் அர்த்தமாம்.

5. ஆதலால், நீ இன்ன நிலைமையிலி ருந்து விழுந்தாய் என்பதை நினைவு கூர்ந்து, தவஞ்செய்து, முந்தின(தர்மக்) கிரியைகளைச் செய். இல்லாவிட்டால் இதோ, நான் உன்னிடத்திற்கு வந்து, நீ தவஞ்செய்யாதிருந்தால் உன்விளக்குத் தண்டை அதினிடத்தினின்று தள்ளி விடுவேன்.

6. ஆகிலும் நான் வெறுக்கிற நீக்கொ லாய்த்தாருடைய கிரியைகளை நீயும் வெறுக்கிறாயே. இந்த நற்காரியம் உன் னிடத்தில் உண்டு.

7. இஸ்பிரீத்துவானவர் சபைகளுக் குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவான். ஜெயங்கொள்ளுகிற வனுக்கு என் சர்வேசுரனுடைய சிங் காரத்தோட்டத்திலுள்ள ஜீவவிருட் சத்தின் கனிகளில் புசிக்கக் கொடுப் பேன். (ஆதி. 2-9.)

8. சிமிர்ணு சபையின் தூதனுக்கு எழுது: ஆதியும் அந்தமுமானவர், மரி த்தும், உயிரோடிருக்கிறவர் சொல்லு கிறதாவது:

9. உன் உபத்திரவத்தையும், உன் தரித்திரத்தையும் அறிந்திருக்கிறேன். ஆனாலும் நீ ஐசுவரியவானாயிருக்கிறாய். தங்களை யூதரென்று சொல்லியும் யூத ராயிராமல், சாத்தானுடைய கூட்டமா யிருக்கிறவர்களால் நீ தூஷணிக்கப்படு கிறாய்.

10. ஆகிலும் நீ படப்போகிற பாடு களைக்குறித்து எவ்வளவும் பயப்படா தே. இதோ, நீங்கள் சோதிக்கப்படும் படியாகப் பசாசானது உங்களில் சில ரைக் காவலில்போடப்போகிறது. பத்து நாளைக்கு உபத்திரவப்படுவீர் கள். ஆகிலும் நீ மரணபரியந்தம் பிரமா ணிக்கமாயிரு; அப்பொழுது ஜீவ கிரீ டத்தை உனக்குத் தருவேன்.

11. இஸ்பிரீத்துவானவர் சபைகளு க்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவான். ஜெயங்கொள்ளுகி றவனை இரண்டாம் மரணம் தீண்டாது.

12. பெர்காமு சபையின் தூதனுக் கு எழுது: இருபுறமும் கருக்குள்ள பட்டயத்தை உடையவர் சொல்லுகிற தாவது:

13. சாத்தானுடைய சிங்காசனமி ருக்கிற இடத்தில் நீ வசிக்கிறதையும், என் நாமத்தை நீ கைப்பற்றியிருக்கிற தையும், உங்கள் நடுவில் சாத்தான் குடி யிருக்கிற இடத்தில் எனக்கு உண்மை யுள்ள சாட்சியாகிய அந்திப்பாஸ் கொ லையுண்ட நாளிலே முதலாய் நீ என்மே லுள்ள விசுவாசத்தை மறுதலியாதிருந் ததையும் அறிந்திருக்கிறேன்.

5. தவஞ்செய்:—வேதாகமத்தில் தவஞ்செய்தல் என்னும் வாக்கியத்துக்கு தன்பாவ ங்களைக்குறித்து மனதில் நொந்து வியாகுலப்பட்டு அவைகளைத் துவேஷித்துத் தள்ளுகிற தென்றும், மன வியாகுலத்தைக் காண்பிக்கிற வெளி ஒறுத்தல்களை அநுசரிக்கிறதென்றும் அர்த்தமாம். நான்வந்து விளக்குத்தண்டை தள்ளுவேன் என்பது, உனக்குப்பதிலாக வே றொரு மேற்றிராணியாரை ஸ்தாபிப்பேனென்று அர்த்தமாகும். அல்லது நீ ஆளுகிற சபை யானது உன்னுடைய தப்பிதத்தினாலே கெட்டுப்போனபிறகு அதற்குப் பதிலாக வேறொரு சபையை ஸ்தாபிப்பேனென்றும் அர்த்தங்கொள்ளும்.

6. அந்த நீக்கொலாய்த்தார் யாரென்றால் அப். 6-ம் அதி. 5-ம் வசனத்தில் கண்ட நீக் கொலா என்ற தியாக்கோனால் உற்பத்தியான பதிதமார்க்கமமென்று வேதபாரகர் சொல் லுகிறார்கள். கிறீஸ்துவர்களுக்குள்ளே விபசாரம் பாவமல்லவென்பதும், பரிசுத்தவான்களு க்குள்ளே எல்லாம் பரிசுத்தமாயிருக்கிறதென்பதும், விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைப் பொசிக்கலாமென்பதும், அந்த மார்க்கத்திலுள்ள ஒரு விசேஷ துர்ப்போதனையாயிருந்தது.

10. உலகபொருட்களில் நீ தரித்திரனென்றாலும், புண்ணியத்தில் நீ ஐசுவரியவானா யிருக்கிறாய். இதுவரையில் நீ பட்ட துன்பத்திலும் இன்னும் அதிக துன்பமுண்டாகும். அதினாலே நீ பயப்படாதே. அவைகள் சொற்பகாலந்தானிருக்கும் என்பது கருத்து.

11. இரண்டாம் மரணம் என்பது ஆத்தும மரணம். ஆத்துமம் தேவ இஷ்டப்பிரசா தத்தை இழந்து நித்திய நரகாக்கினைக்குப் பிராப்தியாகிற நிர்ப்பாக்கியமாம்.

14. ஆகிலும், சில காரியங்களைக் குறித்து உன்பேரில் எனக்கு முறைப்பாடு உண்டு. விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைப் புசிப்பதற்கும், வேசித்தனம் பண்ணுவதற்கும் ஏதுவான இடறலை இஸ்ராயேல் புத்திரர்முன்பாகப் போடும்படி பாலாக் என்பவனுக்குப் போதனைசெய்த பாலாமுடைய போதகத்தைக் கைக்கொள்ளுகிறவர்கள் உன்னிடத்தில் உண்டு. (எண். 24-3.)

15. அப்படியே நீக்கொலாய்த்தாருடைய போதகததைக் கைக்கொள்ளுகிறவர்களும் உன்னிடத்தில் உண்டு.

16. ஆகையால் நீ தவஞ்செய். இல்லாவிட்டால் நான் சீக்கிரமாய் உன்னிடத்தில் வந்து, என் வாயின் பட்டயத்தைக்கொண்டு அவர்களோடே யுத்தம் பண்ணுவேன்.

17. இஸ்பிரீத்துவானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவான். ஜெயங்கொள்ளுகிறவனுக்கு நான் மறைவான மன்னாவைக் கொடுப்பதுமன்றி, அவனுக்கு வெண்மையான குறிக்கல்லையுங்கொடுப்பேன். அந்தக் குறிக்கல்லின்மேல் ஓர் புதிய நாமம் எழுதப்பட்டிருக்கிறது. அதை வாங்குகிறவனொழிய வேறெவனும் அதை அறியான்.

18. தியத்தீரா சபையின் தூதனுக்கு எழுது: அக்கினிச் சுவாலைபோன்ற கண்களும், வெண்கலம்போன்ற பாதங்களுமுள்ள தேவ சுதன் சொல்லுகிறதாவது:

19. உன் கிரியைகளையும், உன் விசுவாசத்தையும், உன் பரம அன்பையும், உன் ஊழியத்தையும், உன் பொறுமையையும், நீ முன்பு செய்த கிரியைகளிலும் பின்பு செய்தவைகள் அதிகமாயிருக்கிறதையும் அறிந்திருக்கிறேன்.

20. ஆகிலும் உன்மேல் எனக்குச் சில முறைப்பாடுகள் உண்டு. என்னவெனில்: தன்னைத் தீர்க்கதரிசியென்று சொல்லுகிற ஜெசாபெல் என்னும் ஸ்திரீயானவள் என்னுடைய ஊழியர்கள் வேசித்தனம்பண்ணவும், விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைப் பொசிக்கவும் அவர்களுக்குப் போதித்து, அவர்களை மயக்கும்படி நீ அவளுக்கு இடங்கொடுக்கிறாய்.

21. அவள் தவஞ்செய்யும்படியாய் அவளுக்குக் காலம் கொடுத்தேன். அவளுக்கோ தன் வேசித்தனத்தை விட்டுத் தவஞ்செய்ய மனமில்லை.

15. மோயீசன் எண்ணாகமம் 22-ம் அதிகாரமுதல் சொல்லியிருக்கிறதுபோல் மோவாப்பித்தாருடைய ராஜாவாகிய பாலாக் என்பவன் இஸ்ராயேல் பிரஜைகளைச் சபிக்கும்படி பாலாமென்னும் தீர்க்கதரிசியை வரவழைத்திருந்தான். ஆனால் அவன் அவர்களைச் சபிப்பதற்குப் பதிலாய் அவர்களை ஆசீர்வதிக்கும்படி ஒருதேவதூதன் அவனைக் கட்டாயஞ் செய்தார். ஆகையால் அவன், இஸ்ராயேல் பிரஜைகள் மோவாப் ஸ்திரீகளோடு பாவத்தைக்கட்டிக்கொள்ளவும், அதினாலே அவர்கள்பேரில் தேவகோபாக்கினையை வருவிக்கவும் வழிபண்ணவேண்டுமென்று பாலாக் என்பவனுக்குத் துராலோசனை சொன்னான். அவனைப்போலவே நிக்கோலாய்த்தர் என்னப்பட்ட பதிதரும் கிறீஸ்துவர்கள்மேல் தேவகோபம் உண்டாகும்படி தங்கள் துர்ப்போதனைகளால் அவர்களைக் கெடுக்கப்பார்த்தார்கள்.

17. மறைவான மன்னா:—தங்கள் ஞானசத்துருக்களை ஜெயிக்கிற புண்ணியவான்களுக்குச் சர்வேசுரன் இவ்வுலகத்தில் அளிக்கும் இஷ்டப்பிரசாதமும், மறு உலகத்தில் அளிக்கும் நித்திய சம்பாவனையுமாம்.

20. இங்கே சொல்லப்பட்ட ஸ்திரீ நீக்கொலாய்த்தாருடைய பதித மார்க்கத்திலே உட்பட்ட ஓர் மேன்குல ஸ்திரீயாமே. அவள் செல்வத்திலும் துஷ்டத்தனத்திலும் பேர்போனவளாய் இருந்தபடியால், பழைய ஏற்பாட்டிலே காணப்படுகிற ஜெசாபேல் என்கிற துர்மார்க்க இராக்கினியின்பேர் அவளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறதாகத் தோன்றுகிறது.

22. இதோ, நான் அவளைக் கட்டிலில் படுக்கையாக்குவேன். அன்றியும் அவளுடனே விபசாரஞ் செய்தவர்கள் தங்கள் கிரியைகளைவிட்டுத் தவஞ்செய்யாதிருந்தால், அவர்கள் அகோர துன்பத்துக்குள்ளாவார்கள்.

23. அவளுடைய மக்களையும் கொல்லவே கொல்லுவேன். அப்போது உள்ளிந்திரியங்களையும் இருதயங்களையும் பரிசோதிக்கிறவர் நானே என்று சகல சபைகளும் அறிந்துகொள்ளும். இப்படியே உங்களில் ஒவ்வொருவனுக்கும் தன்தன் கிரியைகளின்படியே பலனளிப்பேன். (1. அரச. 16-7; சங். 11-20; ஜெரே. 11-20.)

24. பின்பு உங்களுக்கும் தியத்திராவிலுள்ள மற்றவர்களுக்கும் நான் சொல்லுகிறதாவது: அந்தப் போதகத்தை ஏற்றுக்கொள்ளாமலும், மகா ஆழ்ந்ததென்று அவர்கள்சொல்லி வருகிற சாத்தானுடைய ஞானங்களை அறியாமலும் இருக்கிறவர்களாகிய உங்கள்மேல் வேறே பாரத்தைச் சுமத்தமாட்டேன்.

25. ஆனாலும் நீங்கள் கைக்கொண்டிருக்கிறதை நான் வருந்தனையும் கடைப்பிடியுங்கள்.

26. ஜெயங்கொண்டு, முடிவுபரியந்தம் என் கிரியைகளைக் காப்பாற்றினவனெவனோ, அவனுக்கு ஜனங்கள்மேல் அதிகாரங்கொடுப்பேன்.

27. அவன் இருப்புக்கோலால் அவர்களை ஆளுவான். அவர்கள் குசக்கலம்போல் நொறுக்கப்படுவார்கள். இவ்வித அதிகாரம் என் பிதாவினிடத்தில் பெற்றுக்கொண்டேன்.

28. அன்றியும் விடிவெள்ளியையும் அவனுக்குக் கொடுப்பேன்.

29. இஸ்பிரீத்துவானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவான்.

## 3-ம். அதிகாரம்.

*சார்திஸ் பிலதெல்பியா, லவோதிக்கையா என்ற சபைகளுக்கு எழுதவேண்டியவைகள் கற்பிக்கப்படுகின்றன.*

1. சார்திஸ் சபையின் தூதனுக்கு எழுது: சர்வேசுரனுடைய ஏழு அரூபிகளையும், ஏழு நட்சத்திரங்களையும் உடையவர் சொல்லுகிறதாவது: உன் கிரியைகளை அறிந்திருக்கிறேன். நீ உயிருள்ளவனென்று பெயர்கொண்டிருந்தும் செத்தவனாயிருக்கிறாய்.

2. நீ விழிப்பாயிருந்து, சாகப்போனவைகளை ஸ்திரப்படுத்து. ஏனெனில் என் சர்வேசுரனுக்கு முன்பாக உன்கிரியைகள் பூரணமானவைகளாகக் காணேன்.

---

28. காட்சி. 22-ம் அதி. 16-ம் வசனம் காண்க. விடிவெள்ளி என்பது நித்தியகாலம் விடியப்போகிறதைக் காண்பிக்கிறது. அதாவது: ஒருபோதும் அஸ்தமிக்காத நித்திய பிரகாசமுள்ள நாள் பரிசுத்தவான்களுக்குத் துவக்கப்போகிறதைக் குறிக்கிறது.

1. **செத்தவனாயிருக்கிறாய்:**—சார்திஸ் நகரத்துச் சபையாரில் அநேகர் தங்கள் பாவங்களால் தேவ இஷ்டப்பிரசாதமாகிய ஞான உயிரை இழந்து, ஞான சாவு செத்தவர்களாயிருந்தார்கள்.

2. **சாகப்போனவைகளை:**—என்பது சாகிறதற்குரிய ஆபத்தில் இருந்தவர்களென்றும், கர்த்தர் எச்சரியாதேபோனால், அவர்கள் ஞானவிதமாய்ச் செத்திருப்பார்கள் என்றும் அறிக.

3. ஆகையால் நீ எவ்விதம் பெற்றுக் கொண்டாயென்றும், எவ்விதம் சொல்லக்கேட்டாயென்றும் நினைவுகூர்ந்து, அதைக் கைக்கொண்டு தவஞ்செய். நீ விழித்திராவிட்டால் திருடனைப்போல் உன்னிடத்தில் வருவேன். நான் எந்த நேரம் உன்னிடத்தில் வருவேனென்றும் அறியாய். (1. தெச. 5-2; காட். 16-15.)

4. ஆகிலும், தங்கள் வஸ்திரங்களை அசுசிப்படுத்தாத சிலபேர் சார்திஸ் நகரில் உனக்குண்டு. அவர்கள் வெண்மையான வஸ்திரந்தரித்து, என்னுடனேகூட நடப்பார்கள். ஏனெனில் அதற்கு அவர்கள் பாத்திரவான்கள்.

5. இப்படியே ஜெயங்கொள்ளுகிறவன் வெண்மையானவஸ்திரம் தரிப்பிக்கப்படுவான். ஜீவ புஸ்தகத்திலிருந்து அவனுடைய நாமத்தை நான் கிறுக்கமாட்டேன். என் பிதாவின் முன்பாகவும், அவருடைய தூதர் முன்பாகவும் அவனுடைய நாமத்தை விளம்புவேன்.

6. இஸ்பிரீத்துவானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவான்.

7. பிலதெல்பியா சபையின் தூதனுக்கு, எழுது: பரிசுத்தரும், சத்தியரும், தாவீதின் திறவுகோலை உடையவரும், எவனும் பூட்டாவண்ணம் திறக்கிறவரும், திறக்காவண்ணம் பூட்டுகிறவருமாயிருக்கிறவர் சொல்லுகிறதாவது: (இசை. 22-22; யோப். 12-14.)

8. உன் கிரியைகளை அறிந்திருக்கிறேன். இதோ, உனக்குமுன்பாக வாசலைத் திறந்துவைத்திருக்கிறேன்; அதை ஒருவனும் பூட்டமாட்டான். ஏனெனில் நீ சற்றுப் பெலனுள்ளவனாய் என் வார்த்தையைக் காத்து, என் நாமத்தையும் மறுதலியாதிருந்தாய்.

9. இதோ, யூதரல்லாதிருந்தும், தங்களை யூதரென்று பொய்சொல்லுகிறவர்களாகிய சாத்தானுடைய கூட்டத்தாரில் சிலரை உனக்குக் கொடுப்பேன். இதோ, அவர்கள் உன் பாதங்களுக்கு முன் வந்து நமஸ்கரிக்கச்செய்வேன். அப்போது நான் உன்மேல் அன்பாயிருக்கிறதை அவர்கள் அறிந்துகொள்வார்கள்.

10. பொறுமையைக் கற்பிக்கும் என் வாக்கியத்தை நீ காத்துக்கொண்டபடியினாலே, பூமியின்மேல் வாசமாயிருப்பவர்களைச் சோதிக்கும்படியாக உலகமெங்கும் வரப்போகிற சோதனைவேளையில்நின்று நானும் உன்னைக் காத்துக்கொள்வேன்.

7. **தாவீதின் திறவுகோலையுடையவர்** :—தாவீது ராஜா கட்டின சீயோன் கோட்டையானது திருச்சபைக்கும் பரலோகத்துக்கும் ஓர் உருவகமென்று வேதத்தில் பல இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறதறிவோம். தாவீது ராஜா அந்தக் கோட்டையின் வாசல் திறவுகோலைக்கொண்டிருந்து, அந்தக்கோட்டையின்மேல் அதிகாரஞ் செலுத்திவந்தார். ஆகையால் யேசுநாதர் தாவீதின் திறவுகோலையுடையவரென்கும்போது பரலோகத்தின்மேலும் திருச்சபையின்மேலும் சர்வாதிகாரமுடையவர் என்பது கருத்தாம்.

10. நீ வேத கலகங்களுக்கு பயப்படுகிற பலவீனமான சுபாவமுடையவனாயிருந்தும், என் நாமத்தை மறுதலிக்காமல், என் வாக்கியத்தைக் காத்துக்கொண்டபடியினாலே அந்தப் புண்ணியத்துக்குச் சம்பாவனையாக இதுவரைக்கும் உன்னை எதிர்த்து நின்ற பசாசின் மக்களாகிய யூதர்களுக்குள்ளே உனக்கு ஒரு வாசலைத்திறந்து, அவர்களில் சிலர் உன் போதகத்துக்கு காது கொடுத்து உன் பாதத்திலே விழுந்து வணங்கி உன் கையினாலே ஞானஸ்நானம் பெறப்பண்ணுவேன். அப்போது நீ எனக்கு உகந்த ஊழியனாயிருக்கிறாய் என்று

11. இதோ, சீக்கிரமாய் வருகிறேன், ஒருவனும் உன் கிரீடத்தை எடுத்துக்கொள்ளாதபடிக்கு உன்னிடத்திலுள்ளதை வைத்துக்கொள்.

12. ஜெயங்கொள்ளுகிறவனெவனோ அவனை என் தேவனுடைய ஆலயத்தில் ஒரு தூணாக ஏற்படுத்துவேன்; அதினின்று அவன் ஒருபோதும் வெளியே போகான். என் தேவனுடைய நாமத்தையும், என் தேவனால் பரலோகத்தினின்று இறங்கிவருகிற புதிய எருசலேமாகிய என் தேவனுடைய நகரத்தின் நாமத்தையும், என் புதிய நாமத்தையும் அவன்மேல் எழுதுவேன். (காட்சி. 19-13.)

13. இஸ்பிரீத்துவானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவான்.

14. லவோதிக்கையா சபையின் தூதனுக்கு எழுது: ஆமென் என்னப்பட்டவரும், பிரமாணிக்கமும் சத்தியமுமுள்ள சாட்சியானவரும், சர்வேசுரனுடைய சிஷ்டிப்புக்கு ஆதியுமானவர் சொல்லுகிறதாவது. (அருள. 14-6.)

15. உன் கிரியைகளை அறிந்திருக்கிறேன். நீ குளிர்ந்தவனுமல்ல, அனலுள்ளவனுமல்ல. நீ ஒன்றில் குளிர்ந்தவனாய் அல்லது அனலுள்ளவனாய் இருந்தால் தாவிலை.

16. ஆனால் நீ குளிர்ந்தவனாயாவது, அனலுள்ளவனாயாவது இராமல், வெதுவெதுப்புள்ளவனாய் இருக்கிறபடியால், என் வாயினின்று உன்னை வாந்திபண்ணத் துவக்குவேன்.

17. நீ நிர்ப்பாக்கியனும் பரிதாபத்துக்குரியவனும் தரித்திரனும் குருடனுமாயிருக்கிறாய் என்பதை அறியாமல், நான் ஐசுவரியவான், செல்வம் நிறைந்தவன், எனக்கு ஒரு குறைவும் இல்லையென்று சொல்லுகிறபடியால்:

18. நீ செல்வனாகும்படி நெருப்பில் புடமிடப்பட்ட பொன்னை என்னிடத்தில் விலைக்கு வாங்கிக்கொள்ளவும், உன் நிர்வாணத்தின் இலச்சை தோன்றாதபடிக்கு வெண்மையான வஸ்திரங்களை உடுத்திக்கொள்ளவும் உனக்குப் புத்திசொல்லுகிறேன். மேலும் உன் கண்கள் பார்வை அடையும்படிக்கு உன் கண்களுக்குக் கலிக்கம்போட்டுக்கொள்.

எல்லாரும் அறிந்துகொள்வார்கள். அல்லாமலும் இதுவரைக்கும் உனக்கு நேரிட்ட துன்பங்களில் நான் போதித்தபடி நீ பொறுமையாயிருந்தபடியால், இப்போது கொஞ்சத்துக்குள்ளே உலகமெங்கும் வரப்போகிற அதிக பெரிதான வேதகலகத்தில்நின்று உன்னைக் காப்பாற்றுவேன். உன் முடியை வேறொருவரும் கைக்கொள்ளாதபடி இதுவரைக்கும் நீ புண்ணிய நெறியில் நிலைத்ததுபோல் கடைசிமட்டும் உறுதியாய் நிலைக்கொள் என்று அர்த்தமாம்.

11. உன்னிடத்தில் உள்ளது: உன் விசுவாசமும், பொறுமையும் என்றறிக. (கிராம்போன்.)

14. யேசுநாதசுவாமி மனுஷனாகியமட்டும், தம்முடைய மேன்மையினாலே சகல சிர்ஷ்டிப்புகளுக்கும் முதன்மையாயிருக்கிறார்.

15. குளிர் என்பது பாவமாகிய செத்த ஸ்திதியையும், அனல் என்பது புண்ணியமாகிய உயிருள்ள ஸ்திதியையும் குறிக்கிறது.

18. புடமிட்ட பொன் என்பது: சோதனையில் பரீட்சிக்கப்பட்ட விசுவாசத்தையும், வெள்ளுடையென்பது மனத்தூய்மையையும், கலிக்கமென்பது இஸ்பிரீத்துசாந்துவின் வரமாகிய ஞான தைலத்தையும் குறிக்கிறது. (கிராம்போன்.)

19. நான் நேசிக்கிறவர்களைக் கடிந்துகொண்டு சிட்சிக்கிறேன். ஆகையால், நீ உரோசமடைந்து தவஞ்செய். (பழ. 3-12; எபி. 12-6.)

20. இதோ, நான் வாசற்படியிலே நின்று தட்டுகிறேன். எவனாவது என் குரலைக் கேட்டுக் கதவைத் திறந்தால், அவனிடத்தில் நான் பிரவேசித்து அவனோடு போஜனம் பண்ணுவேன். என்னோடு அவனும் போஜனம்பண்ணுவான்.

21. நான் ஜெயங்கொண்டு, என்பிதாவோடேகூட அவருடைய சிங்காசனத்தில் உட்கார்ந்திருக்கிறதுபோல், ஜெயங்கொள்ளுகிற எவனும் என்னுடைய சிங்காசனத்தில் என்னோடேகூட உட்காரும்படிக்கு அவனுக்கு அருளுவேன்.

22. இஸ்பிரீத்துவானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவான்.

## 4-ம். அதிகாரம்.

*இருபத்துநாலு வயோதிகரும் நாலு ஜீவஜெந்துக்களும் சிங்காசனத்தில் உட்கார்ந்திருக்கிற சர்வேசுரனை இடைவிடாமல் நமஸ்கரிக்கிறார்கள்.*

1. இவைகளுக்குப் பின்பு நான் கண்டதாவது: இதோ, பரலோகத்தில் ஒரு வாசல் திறக்கப்பட்டது. அப்போது எக்காள சத்தம்போல் முன்னே என்னுடனே பேசக் கேட்டேனே, அந்தச் சத்தம் என்னைநோக்கி: நீ இங்கே ஏறிவா, இவைகளுக்குப்பின் சம்பவிக்க வேண்டியவைகளை உனக்குக் காண்பிப்பேன் என்றது.

2. உடனே நான் பரவசமானேன்: அப்பொழுது இதோ, பரலோகத்தில் ஒரு சிங்காசனம் வைக்கப்பட்டிருக்க, அந்தச் சிங்காசனத்தின்மேல் ஒருவர் வீற்றிருந்தார்.

3. வீற்றிருந்திருந்தவர் பார்வைக்கு வச்சிரகல்லுக்கும்,கோமேதகத்துக்கும் ஒப்பாயிருந்தார். மரகதம்போல் தோன்றிய வானவில் அந்தச் சிங்காசனத்தைச் சூழ்ந்துகொண்டிருந்தது. (எசே. 1-26.)

4. அந்தச் சிங்காசனத்தைச் சுற்றி இருபத்துநாலு ஆசனங்கள் இருந்தன. இருபத்துநாலு வயோதிகர் வெண்மையான வஸ்திரங்களை அணிந்து, தங்கள் சிரசுகளில் பொன்முடி சூடி அந்த ஆசனங்களில் உட்கார்ந்திருந்தார்கள்.

5. அன்றியும் அந்தச் சிங்காசனத்திலிருந்து மின்னல்களும், குமுறல்களும், இடி முழக்கங்களும் புறப்பட்டன. சிங்காசனத்துக்குமுன்பாகச் சர்வேசுரனுடைய ஏழு அரூபிகளாகிய ஏழு தீபங்கள் எரிந்துகொண்டிருந்தன. (சக்காரி. 4-2.)

6. அந்தச் சிங்காசனத்துக்கு முன் பளிங்குக்கு ஒப்பான கண்ணாடிச் சமுத்திரம்போலிருந்தது. அந்தச் சிங்காசனத்தின் மத்தியிலும், அந்தச் சிங்காசனத்தைச் சுற்றிலும், முன்னும் பின்னும் கண்களால் நிறைந்த நாலு ஜீவஜெந்துக்கள் இருந்தன.

4. அவருடைய சிங்காசனத்தைச் சுற்றிலும் இருந்த இருபத்துநாலு வயோதிகர் அர்ச்சியசிஷ்டவர்களுக்கு அடையாளமாம். ஏனெனில் சமஸ்த அர்ச்சியசிஷ்டவர்களும் மோட்சத்தில் ராஜாதி ராஜனாகிய சர்வேசுரனாலே முடி சூடப்பெற்று, அவருடைய சிங்காசனத்தைச் சூழ இவர்களும் ராஜாக்களாய் ஆசனங்களில் உட்கார்ந்திருப்பார்கள்.

5. அந்தச் சிங்காசனத்திலிருந்து உண்டாகும் மின்னல், இடி, குமுறல்கள், தேவ வல்லப மகத்துவத்தை எண்பிக்கும் அடையாளங்களாம்.

6. சிங்காசனத்துக்குமுன் இருந்த கண்ணாடிச்சமுத்திரமென்பது, சர்வேசுரனுடைய அளவற்ற ஞானத்துக்கும் அறிவுக்கும் குறிப்பாகும்: பளிங்கியின் வழியாய்ப் பொருட்களை

7. முதலாம் ஜீவஜெந்து சிங்கத்துக்கு ஒப்பாகவும், இரண்டாம் ஜீவஜெந்து காளைக்கன்றுக்கு ஒப்பாகவும், மூன்றாம் ஜீவஜெந்து மனுஷனைப்போல் முகரூபம் உடையதாகவும், நாலாம் ஜீவஜெந்து பறக்கிற கழுகுக்கு ஒப்பாகவும் இருந்தது.

8. அந்த நான்கு ஜீவஜெந்துக்களில் ஒவ்வொன்றும் அவ்வாறு சிறகுகள் உடையவைகளுமாய், உள்ளும், சுற்றிலும் கண்களால் நிறைந்தவைகளுமாய் இருந்தன. அவைகள் இரவும் பகலும் ஓய்வின்றி: இருந்தவரும், இருக்கிறவரும், இனி வருபவருமாகிய சர்வவல்லமையுள்ள கர்த்தராகிய சர்வேசுரன் பரிசுத்தர், பரிசுத்தர், பரிசுத்தர் என்று சொல்லிக்கொண்டிருந்தன. (இசை. 6-3.)

9. அப்படியே, சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்து, சதாகாலங்களிலும் ஜீவியராயிருக்கிறவருக்கு அந்த ஜீவஜெந்துக்கள் மகிமையையும், ஸ்தோத்திரத்தையும் செலுத்தும்போது,

10. இருபத்துநான்கு வயோதிகரும் சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கிறவர் முன்பாகச் சாஷ்டாங்கமாக விழுந்து, சதாகால ஜீவியரை ஆராதித்து, அவருடைய சிங்காசனத்துக்கு முன்பாகத் தங்கள் கிரீடங்களை வைத்து:

11. எங்கள் கர்த்தராகிய சர்வேசுரா, தேவரீர் மகிமையையும், மேன்மையையும், வல்லமையையும் அடைந்துகொள்வதற்குப் பாத்திரராயிருக்கிறீர். ஏனெனில் தேவரீரே சகலத்தையும் சிர்ஷ்டித்தீர். உமது சித்தத்தினாலேயே சகலமும் இருந்தன, சகலமும் சிர்ஷ்டிக்கப்பட்டன என்று தொழுதார்கள். (தனி. 7-10.)

## 5-ம். அதிகாரம்.

*எவராலும் திறக்கமுடியாதிருந்த ஏழு முத்திரையுள்ள புஸ்தகத்தைப் பலியான செம்மறிப்புருவையானவர் திறந்ததினாலே, நான்கு ஜீவஜெந்துக்களாலும், இருபத்துநான்கு வயோதிகராலும், மற்றச் சகல படைப்புகளினாலும் கொண்டாடப்படுகிறார்.*

1. அல்லாமலும், சிங்காசனத்தின்மேல் உட்கார்ந்திருக்கிறவருடைய வலதுகரத்தில் உள்ளும் புறமும் எழுதப்பட்டு, ஏழு முத்திரை பதிக்கப்பட்டிருந்த ஒரு புஸ்தகத்தைக் கண்டேன். (எசே. 2-9.)

ஊடுருத்துப் பார்ப்பதுபோல், சுவாமி தமது ஞானத்தின்வழியாய்த் தமது சகல கிரியைகளையும், தாம் படைத்ததும் படைக்கக்கூடியதுமான சகலத்தையும் அறிந்திருக்கிறார் என்க.

8. நாலு ஜீவஜெந்துக்கள் என்பது பொதுவான அர்த்தத்தில் சமஸ்த சிர்ஷ்டிகளையுங் குறிக்கிறதென்றும், விசேஷித்த அர்த்தத்தில் நாலு சுவிசேஷகரைக் குறிக்கிறதென்றும் வேதபாரகர் சொல்லுகிறார்கள்.

சிங்கமுகமுள்ளது அர்ச். மாற்குவின் சாயலாம். ஏனெனில் அவர் சிங்கத்தின் வாசமாகிய வனத்திலே ஸ்நாபக அருளப்பர் பிரசங்கித்ததைக்கொண்டு தமது சுவிசேஷத்தை ஆரம்பிக்கிறார். காளைக்கன்று அர்ச். லூக்காஸுக்குச் சாயலாம். ஏனெனில் அவர் பலியிடுகிற குருப்பிரசாதியாகிய சக்கரியாசுக்குத் தேவதூதன் தரிசனமான வர்த்தமானத்திலிருந்து தமது சுவிசேஷத்தைத் துவக்குகிறார். மனுஷ முகம் அர்ச். மத்தேயுவுக்குச் சாயலாம். ஏனெனில் அவர் யேசுநாதருடைய வம்ச வரிசையைக்கொண்டு தமது சுவிசேஷத்தைத் துவக்குகிறார். கழுகினால் அர்ச். அருளப்பர் குறிக்கப்படுகிறார். ஏனெனில் அவர் தம்முடைய சுவிசேஷத்தின் ஆரம்பத்திலேயே பூமியை விட்டெழும்பி, வானத்தை நோக்கி உயர்ந்து பறந்தாற்போல், யேசுநாதருடைய தேவசுபாவத்தை எடுத்துரைக்க ஆரம்பிக்கிறார். முன்பக்கத்திலும் பின்பக்கத்திலும் கண்கள் நிறைந்தவைகள் என்பது இஸ்பிரீத்துசாந்துவானவர் கொடுத்த அறிவாகிய வரமாம்.

2. அப்போது புஸ்தகத்தைத் திறக்கவும், அதின் முத்திரைகளை உடைக்கவும் பாத்திரவான் யார் என்று மிகுந்த சத்தமிட்டுக் கூறுகிற பலமுள்ள ஒரு தூதனையும் கண்டேன்.

3. ஆனால், வானத்திலும் பூமியிலும் பூமியின் கீழும் அந்தப் புஸ்தகத்தைத் திறக்கவாவது அதைப் பார்க்கவாவது எவனாலும் கூடாதிருந்தது.

4. நானோ, அந்தப் புஸ்தகத்தைத் திறக்கவும் பார்க்கவும் பாத்திரவான் ஒருவனும் காணப்படவில்லையே என்று மிகவும் அழுதேன்.

5. அப்போது வயோதிகர்களில் ஒருவர் என்னை நோக்கி: நீ அழாதே; இதோ, யூதா கோத்திரத்தின் சிங்கமும் தாவீதின் வேருமானவர் அந்தப் புஸ்தகத்தைத் திறக்கவும், அதின் ஏழு முத்திரைகளை உடைக்கவும் வெற்றியடைந்திருக்கிறார் என்றார். (ஆதி. 49-9.)

6. அப்பொழுது நான் கண்டதாவது: இதோ, சிங்காசனத்திற்கும் நான்கு ஜீவஜெந்துக்களுக்கும் நடுவிலும் வயோதிகர்களுக்கு நடுவிலும் ஒரு செம்மறிப்புருவை கொலையுண்ட தன்மையாய் நிற்கிறதைக் கண்டேன். அதற்கு ஏழு கொம்புகளும், ஏழு கண்களும் இருந்தன. அவைகள் பூமி எங்கும் அனுப்பப்படும் சர்வேசுரனுடைய ஏழு அரூபிகளாம்.

7. அவர் வந்து, சிங்காசனத்தில் வீற்றிருக்கிறவருடைய வலதுகரத்திலிருந்த புஸ்தகத்தை வாங்கி,

8. அந்தப் புஸ்தகத்தை அவர் திறந்தமாத்திரத்தில் அந்த நான்கு ஜீவஜெந்துக்களும், இருபத்துநான்கு வயோதிகரும் தங்கள் தங்கள் சுரமண்டலங்களையும், பரிசுத்தவான்களுடைய ஜெபங்களாகிய தூபவர்க்கத்தால் நிறைந்த பொற்பாத்திரங்களையும் பிடித்துக்கொண்டு, செம்மறிப்புருவையானவருக்கு முன்பாக (சாஷ்டாங்கமாய்) விழுந்து:

1-2-3. அந்தப் புஸ்தகம் இது முதற்கொண்டு காட்சியில் அர்ச். அருளப்பர் காணப்போகிறவைகள் அடங்கியிருந்த தேவ இரகசியங்களுள்ள புஸ்தகமாம்.

ஏழு முத்திரைகளால் அந்தப் புஸ்தகத்தில் அடங்கிய ஏழு பிரதான தேவ இரகசியங்கள் குறிக்கப்படுகிறது. அந்த முத்திரைகளை உடைத்துப் புஸ்தகத்தைத் திறக்க ஒருவனாலும் கூடாதென்கிறது அந்த இரகசியங்களைச்சர்வேசுரன் தம்முடைய திருக்குமாரனுக்கேயன்றி வேறொருவனுக்கும் அறிவிக்கச் சித்தமில்லாதிருக்கிறாரென்று அர்த்தமாம்.

யேசுநாதர் மனுஷசுபாவத்தின்படி யூதா கோத்திரத்தில் பிறந்ததினாலேயும், பசாசையும் மரணத்தையும் ஜெயித்து, ஜெயங்கொண்டதினாலேயும், ஆதியாகமம் 49-ம் அதி. 9-ம் வசனத்தில் பிதாப்பிதாவாகிய யாக்கோபு உரைத்த தீர்க்கதரிசனத்தின்படியே யூதா கோத்திரத்தின் சிங்கம் என்றும், தாவீதின் பிதிர்வழியில் பிறந்ததினாலே தாவீது இராஜாவின் வேரென்றும் சொல்லப்படுகிறார்.

அவர் சிலுவையில் பலியானதினால் கொலையுண்ட செம்மறிப்புருவையென்று சொல்லப்படுகிறார். அவர் உயிர்த்தபிற்பாடு உயிருள்ளவராயிருந்தாலும், தம்முடைய திருமேனியில் ஐந்து திருக்காயங்களை வைத்திருக்கிறபடியினாலே கொலையுண்ட தன்மையாய் நிற்கிறாரென்று சொல்லப்படுகிறது.

6. ஏழு கொம்புகள் பராக்கிரம வல்லமையும், ஏழு கண்கள் அயராத கவனமுள்ள விசாரணையையுங் குறிக்கிறது. இவைகளால் குறிக்கப்பட்ட ஏழு அரூபிகள் முதல் அதி. 4-ம் வசனத்தில் சொல்லப்பட்டதுபோல் திருச்சபைக்குப் பாதுகாவலான ஏழு தூதர்களாம்.

8. மோட்சவாசிகள் பரிசுத்தவான்களுடைய ஜெபங்களைப் பொற்பாத்திரத்தில் ஏந்திச் சுகந்த வாசனையாகத் தேவசமுகத்திலே ஒப்புக்கொடுக்கிறார்களென்று இந்த வாக்கியத்தால் தெளிவாயிருக்கையில், நாம் மோட்சவாசிகளை நோக்கி வேண்டிக்கொள்ளுகிற விஷயத்திலே சிலர் இன்னும் குறை காண்பதேனோ?

9. ஆண்டவரே, தேவரீர் புஸ்தகத்தை வாங்கவும், அதின் முத்திரைகளை உடைக்கவும் பாத்திரராயிருக்கிறீர். ஏனெனில் தேவரீர் கொலையுண்டு, சகல கோத்திரங்களிலும் பாஷைக்காரரிலும் ஜனங்களிலும் தேசத்தாரிலுமிருந்து எங்களை உம்முடைய இரத்தத்தினாலே சர்வேசுரனுக்காக மீட்டுக்கொண்டீர்.

10. எங்கள் சர்வேசுரனுக்குமுன்பாக எங்களை இராஜாக்களும் குருக்களுமாக்கினீர்; நாங்களும் பூமியில் அரசாளுவோம் என்று சொல்லி, ஒரு புதிய பாட்டைப்பாடினார்கள்.

11. மேலும் நான் பார்த்தபோது, சிங்காசனத்தையும் ஜீவஜெந்துக்களையும், வயோதிகர்களையும் சூழ்ந்திருந்த அநேக தூதர்களுடைய சத்தத்தைக் கேட்டேன். அவர்களுடைய தொகை ஆயிராயிரமாயிருந்தது.

12. அவர்கள் மிகுந்த சத்தமிட்டு: கொலையுண்ட செம்மறிப்புருவையானவர் வல்லமையையும், தெய்வத்துவத்தையும், ஞானத்தையும், பெலத்தையும், வணக்கத்தையும், மகிமையையும், ஸ்தோத்திரத்தையும் பெற்றுக்கொள்ளப் பாத்திரராயிருக்கிறார் என்றார்கள்.

13. அப்போது வானத்திலும், பூமியிலும், பூமியின் கீழும் உள்ள சகல சிருஷ்டிகளும், சமுத்திரத்திலும் அதிலடங்கிலும் உள்ளவைகளுமாகிய யாவும் சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கிறவருக்கும், செம்மறிப்புருவையானவருக்கும் ஸ்தோத்திரமும், வணக்கமும், மகிமையும், வல்லபமும், காலாகாலங்களுக்கும் உண்டாவதாக என்று சொல்லக் கேட்டேன்.

14. அதற்கு நான்கு ஜீவஜெந்துக்களும்: ஆமென் என்றன. இருபத்துநான்கு வயோதிகரும் தங்கள் முகங்குப்புற விழுந்து, சதாகால ஜீவியனை ஆராதித்தார்கள்.

## 6-ம். அதிகாரம்.

உடைக்கப்பட்ட முந்தின ஆறு முத்திரைகளின் விசேஷம் வருமாறு.

1. பின்பு செம்மறிப்புருவையானவர் ஏழு முத்திரைகளில் ஒன்றை உடைக்கக் கண்டேன். அப்பொழுது நான்கு ஜீவஜெந்துக்களில் ஒன்று என்னைநோக்கி: நீ வந்து பார் என்று இடிமுழங்கின சத்தம்போல் சொல்லக்கேட்டேன்.

2. அப்போது நான் கண்டதாவது: இதோ, ஒரு வெண்குதிரை தோன்ற, அதின்மேல் ஏறியிருந்தவர் ஒரு வில்லைப்பிடித்திருந்தார். அவருக்கு ஒரு கிரீடங் கொடுக்கப்பட்டது. அவர் ஜெயசீலராய் ஜெயிக்கும்படிக்குப் புறப்பட்டார்.

3. மேலும் அவர் இரண்டாம் முத்திரையை உடைத்தபோது, இரண்டாம் ஜீவஜெந்து: நீ வந்துபார் என்று சொல்லக்கேட்டேன்.

4. அப்பொழுது செந்நிறமான வேறொரு குதிரை புறப்பட்டது; அதன்மேல் ஏறியிருந்தவனுக்குப் பூலோகத்திலிருந்து சமாதானத்தை அகற்றித்தள்ளவும், ஒருவனொருவனைக் கொல்லும்படி (செய்யவும்) வல்லமை அளிக்கப்பட்டது. ஒரு பெரியபட்டயமும் அவனுக்குக் கொடுக்கப்பட்டது.

---

2. வெண்குதிரையால் சுவிசேஷத்தைப் பிரசங்கிப்பதற்கு யேசுநாதர்சுவாமி அனுப்பிய அப்போஸ்தலரும் அவர்களைத் தொடர்ந்துவரும் மற்றுந்திருச்சபைக் குருக்களும் குறிக்கப்படுகிறார்கள்.

4. செந்நிறமான குதிரை உலகத்தில் நடக்கும் யுத்தங்களையும், வேத கலாபங்களையும் குறிக்கின்றது.

5. பின்பு அவர் மூன்றும் முத்திரையை உடைத்தபோது, மூன்றும் ஜீவஜெந்து: நீ வந்து பார் என்று சொல்லக்கேட்டேன். அப்போது இதோ, ஒருகருங்குதிரைதோன்றினது. அதன்மேல் ஏறியிருந்தவன் ஒரு தராசைத் தன் கையிலே, பிடித்திருந்தான்.

6. அப்போது அந்த நான்கு ஜீவஜெந்துக்களின் நடுவிலிருந்து ஒரு சத்தம் புறப்பட்டு: ஒருபணத்துக்கு இரண்டு ராத்தல் கோதுமையென்றும், ஒருபணத்துக்கு ஆறு ராத்தல் வாற்கோதுமையென்றும், திராட்சரசத்தையும், ஒலிவ எண்ணெயையும் சேதப்படுத்தாதேயென்றும் சொல்லக்கேட்டான்.

7. பின்பு அவர் நான்காம் முத்திரையை உடைத்தபோது, நான்காம் ஜீவஜெந்து: நீ வந்து பார் என்று சொல்லும் சத்தத்தைக்கேட்டேன்.

8. அப்போது இதோ, ஒரு சோகைக் குதிரைதோன்றினது. அதின்மேல் ஏறியிருந்தவனுக்கு மரணம் என்று பெயர். பாதாளம் அவனைப் பின்சென்றது. பட்டயத்தினாலும், பஞ்சத்தினாலும், சாவினாலும், பூமியின் துஷ்ட மிருகங்களினாலும் கொலைசெய்யும்படி உலகத்தின் நாற்றிசையின்மேலும் அவனுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது.

9. பின்பு அவர் ஐந்தாம் முத்திரையை உடைத்தபோது, சர்வேசுரனுடைய வாக்கியத்தினிமித்தமும் தாங்கள் கொடுத்த சாட்சியினிமித்தமும் கொலையுண்டவர்களுடைய ஆத்துமங்களைப் பலிபீடத்தின்கீழே கண்டேன்.

10. அவர்கள் உரத்த சத்தமிட்டு: பரிசுத்தரும் சத்தியருமாகிய ஆண்டவரே, தேவரீர் பூமியின்மேல் குடியிருக்கிறவர்களிடத்தில் எதுவரைக்கும் எங்கள் இரத்தத்தைக்குறித்து நியாயத்தீர்ப்புச் செய்யாமலும், பழிவாங்காமலும் இருப்பீர் என்று கூவினார்கள்.

11. அப்பொழுது அவர்களில் ஒவ்வொருவருக்கும் ஒரு வெள்ளை அங்கி கொடுக்கப்பட்டது. அன்றியும் அவர்கள் தங்களைப்போல் கொலையுண்ணப் போகிற தங்கள் உடனூழியரும், தங்கள்சகோதரருமானவர்களுடைய தொகை நிறைவாகுமட்டும் இன்னங்கொஞ்சக்காலம் பொறுமையாயிருக்க வேண்டுமென்று அவர்களுக்கு அறிவிக்கப்பட்டது.

12. பின்பு அவர் ஆறும்முத்திரையை உடைத்தபோது நான் கண்டதாவது: இதோ, பூமி மிகவும் அதிர்ந்தது. சூரியன் மயிர்க் கம்பளியைப்போல் கறுத்தது. சந்திரன் முழுதும் இரத்தம்போலாயிற்று.

13. நட்சத்திரங்களும் பெருங்காற்றினால் அசைக்கப்பட்ட அத்திமரம் தன்காய்களை உதிர்க்கிறதுபோல் வானத்திலிருந்து பூமியின்மேல் விழுந்தன.

14. அப்பொழுது வானமானது சுருட்டப்பட்ட புஸ்தகம்போல் சுருங்கிப் போயிற்று; மலைகள் தீவுகள்யாவும் தங்கள் இடம்விட்டுப் பெயர்ந்துபோயின.

---

5. கருங்குதிரையானது அந்தந்தக் காலங்களில் தோன்றும் கடும்பஞ்சங்களாம். திராட்ச இரசத்தையும் எண்ணெயையும் சேதப்படுத்தவேண்டாம் என்பதினால், பஞ்ச காலங்களிலும் சர்வேசுரன் மனிதர்மேல் இரங்கி அவர்களுக்குக் கொஞ்சம் ஆறுதலும் உதவியும் உண்டாகும்படி செய்வாரென்று அறிக.

8. சோகை நிறக்குதிரை சாவுக்கு அடையாளமாகும். முக்கியமாய்ப் பஞ்சம் படைகளுக்குப்பின் கொள்ளைநோய் உண்டாகி, மனுஷர் உயிரை வதைத்துக் கொல்லுவதினால் இந்தக் குதிரை கொள்ளைநோயால் உண்டாகும் சாவுக்கு அடையாளமாகும்.

13. **நட்சத்திரம் விழுந்தன**:—மத். 24-ம் அதி. 29-ம் வசன வியாக்கியானம் காண்க.

15. பூமியின், ராஜாக்களும் பிரபுக்களும், சேனுபதிகளும், ஐசுவரியவான்களும், பாராக்கிரமசாலிகளும், அடிமைகள் யாவரும், சுயாதீனர் யாவரும் மலைகளின் குகைகளிலும் கற்பாறைகளுக்குள்ளும் ஒழிந்துகொண்டு,

16. பருவதங்களையும், கற்பாறைகளையும் நோக்கி: நீங்கள் எங்கள்மேல் விழுந்து, சிங்காசனத்தில் வீற்றிருக்கிறவருடைய முகத்திற்கும் செம்மறிப்புருவையானவருடைய கோபத்திற்கும் எங்களை மறைத்துக்கொள்ளுங்கள். (இசை. 2-19. ஓசை. 10-8.)

17. இதோ, அவர்களுடைய கோபாக்கினியின் மகாநாள் வந்தது; யார் நிற்கக்கூடும்? என்றார்கள்.

## 7-ம். அதிகாரம்.

ஜீவகடவுளின் முத்திரையிடப்பட்டவர்களுடைய தொகை வருமாறு.

1. இவைகளுக்குப்பின்பு நான்கு தூதர்கள் பூமியின் நான்கு கோடிகளிலும் நின்றுகொண்டு, பூமியின் நான்கு காற்றுகளும் பூமியின்மேலாவது சமுத்திரத்தின்மேலாவது ஒரு மரத்தின் மேலாவது வீசாதபடிக்கு அவைகளை நிறுத்திவைக்கக் கண்டேன். (சக்.6-1.)

2. அன்றியும் ஜீவகடவுளின் முத்திரைக் கோலையுடைய வேறொரு தூதன் சூரியன் உதிக்கிற திசையிலிருந்து ஏறிவரக் கண்டேன். இவர் பூமியையும் சமுத்திரத்தையும் சேதப்படுத்துவதற்கு அதிகாரம்பெற்ற அந்த நான்கு தூதர்களையும்நோக்கிப் பெலத்த சத்தமாய்ச் சொன்னதாவது:

3. நாம் நமது சர்வேசுரனுடைய ஊழியக்காரரின் நெற்றிகளிலே முத்திரையிடுகிறவரையில் பூமியையும் சமுத்திரத்தையும் மரங்களையும் சேதப்படுத்தாதேயுங்கள் என்றார். (எசேக். 9-4.)

4. அப்போது முத்திரையிடப்பட்டவர்களுடைய தொகையைச் சொல்லக்கேட்டேன்: இஸ்ராயேல் புத்திரரின் சகலகோத்திரங்களிலும் முத்திரையிடப்பட்டவர்கள் லட்சத்து நாற்பத்து நாலாயிரம்பேர்.

5. யூதாகோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள் பன்னீராயிரம். ரூபன்கோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள் பன்னீராயிரம். காத்கோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள் பன்னீராயிரம்.

6. ஆசேர் கோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள் பன்னீராயிரம். நெப்தலி கோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள் பன்னீராயிரம். மனாஸ்லே கோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள் பன்னீராயிரம்.

7. சிமியோன்கோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள் பன்னீராயிரம். லேவி கோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள் பன்னீராயிரம். ஈசாக்கார் கோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள் பன்னீராயிரம்.

---

17. உலகம் எப்படி முடியுமென்று திறக்கப்பட்ட 6-ம் முத்திரையால் காட்டப்படுகிறது. இது யேசுநாதர், மத். 24-ம் அதி. 29-ம் வசனத்திலும், இன்னம் மற்ற இடங்களிலும் சொல்லப்பட்டவைகளுக்கு ஒப்பாயிருக்கின்றது.

1. **நாலு காற்றுகள்:**—சுவாமி உலகத்துக்கு அனுப்புகிற கொடிய ஆக்கினைகள். இவைகளால் எவ்வித மோசமும்தெரிந்துகொள்ளப்பட்டவர்களுக்கு நேரிடாதபடிக்குச் சில காலம் அவைகள் நிறுத்திவைக்கப்படுகிறதாகக் காண்பிக்கப்படுகிறது. (கிராம்போன்.)

4. லட்சத்து நாற்பத்து நாலாயிரம் என்பது கணக்கில்லாதபேர்கள் என்று அர்த்தங்கொள்ளும்.

7. தான் என்கிற கோத்திரத்தார் அஞ்ஞானத்திலே விழுந்ததினாலே மோட்சவாசிகளுக்குள்ளே குறிக்கப்படவில்லை.

8. சாபுலோன் கோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள் பன்னீராயிரம். யோசேப்பு கோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள் பன்னீராயிரம். பென்ஜமீன் கோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள் பன்னீராயிரம்.

9. இவர்களுக்குப்பின் சகல ஜாதிகளிலும், கோத்திரங்களிலும், தேசத்தாரிலும், பாஷைக்காரரிலுமிருந்து வந்ததும், எவராலும் எண்ணக்கூடாததுமான திரளான கூட்டமாகிய ஜனங்களைக்கண்டேன். இவர்கள் வெண்மையான வஸ்திரந்தரித்து, தங்கள் கைகளில் குருத்தோலைகளைப் பிடித்துக்கொண்டு, சிங்காசனத்தின்முன்பாகவும், செம்மறிப்புருவையின் சமுகத்திலும் நின்றார்கள்.

10. இவர்கள் மிகுந்த சத்தமிட்டு: சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கிற நம்முடைய சர்வேசுரனுக்கும் செம்மறிப் புருவையானவருக்கும் ஜெயமங்களம் உண்டாவதாக என்றுசொல்லி ஆர்ப்பரித்தார்கள்.

11. தூதர்களெல்லாரும் சிங்காசனத்தையும் வயோதிகர்களையும் நான்கு ஜீவஜெந்துக்களையும்சூழ்ந்துநின்று, சிங்காசனத்திற்கு முன்பாக முகங்குப்புற விழுந்து சர்வேசுரனைத் தொழுது:

12. ஆமென், எங்கள் சர்வேசுரனுக்கு ஸ்துதியும், மகிமைப்பிரதாபமும், ஞானமும், நன்றியறிந்த ஸ்தோத்திரமும், சங்கையும், வல்லமையும், பலமும் காலாகாலங்களுக்கும் உண்டாவதாக, ஆமென் என்றார்கள்.

13. அப்போது வயோதிகரில் ஒருவர் என்னை நோக்கி: தூய ஆடை அணிந்த இவர்கள்யார்? எங்கிருந்து வந்தவர்கள் என்று என்னைக்கேட்டார்.

14. அதற்கு நான்: என் ஆண்டவனே, இதை நீர் அறிவீர் என்க, அவர் பிரத்தியுத்தாரமாக: இவர்கள் மிகுந்த உபத்திரவத்திலிருந்து வந்தவர்கள். இவர்கள் தங்கள் வஸ்திரங்களைச் செம்மறிப் புருவையானவருடைய இரத்தத்திலே தோய்த்துவெண்மையாக்கினவர்கள்.

15. ஆகையால் இவர்கள் சர்வேசுரனுடைய சிங்காசனத்திற்கு முன்பாக இருந்து இரவும் பகலும் அவருடைய ஆலயத்திலேஅவரைச்சேவிக்கிறார்கள். சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கிறவரும் இவர்களைத் தமது கூடாரத்துக்குள் காப்பாற்றுவார்.

16. இவர்களுக்கு இனிப் பசியும் இல்லை, தாகமும் இல்லை; வெயிலாவது உஷ்ணமாவது இவர்கள்மேல் படுவதுமில்லை. (இசை. 49-10.)

17. ஏனெனில் சிங்காசனத்தின் மத்தியிலிருக்கிற செம்மறிப்புருவையானவரே இவர்களை மேய்த்து, இவர்களை ஜீவஜல ஊற்றுகளுக்கு கூட்டிக்கொண்டு போவார். சர்வேசுரன்தாமே இவர்களுடைய கண்களினின்று கண்ணீரெல்லாம் துடைப்பார் என்றார். (இசை. 25-8; காட். 21-4.)

## 8-ம். அதிகாரம்.

*ஏழாம் முத்திரை உடைக்கப்பட்டதும், ஏழு தூதர்களுக்கு ஏழுஎக்காளங்கள் கொடுக்கப்பட்டதும், நாலுபேர் எக்காளம் ஊதுவதும் வருமாறு.*

1. அவர் ஏழாம் முத்திரையை உடைத்தபோது, ஏறக்குறைய அரைமணிநேரமளவும் பரலோகத்தில் அமைதல் உண்டாயிற்று.

1. இந்த அதிகாரத்தில் சொல்லப்படுகிற காட்சியில் அர்ச். அருளப்பர் பொதுத் தீர்வையைக் காண்கிறார்.

2. அப்போது தேவசமுகத்தில் நிற்கிற ஏழு தூதர்களையும் கண்டேன். அவர்களுக்கு ஏழு எக்காளங்கள் கொடுக்கப்பட்டது.

3. பின்பு வேறொரு தூதன்வந்து, பொன் தூபக்கலசத்தைக் கையில் ஏந்திக்கொண்டு பலிபீடத்துக்குமுன்பாக நின்றார். அப்போது சிங்காசனத்திற்கு முன்பாக இருக்கிற பொற்பீடத்தின் மேல் சகல அர்ச்சியசிஷ்டவர்களுடைய ஜெப காணிக்கையை ஒப்புக்கொடுக்கும்படி மிகுந்த தூபவர்க்கங்கள் அவருக்குக் கொடுக்கப்பட்டன. (சங். 140-2.)

4. ஆகையால் அர்ச்சியசிஷ்டவர்களுடைய ஜெபங்களிலிருந்து கொடுக்கப்பட்ட தூபவர்க்கப் புகையானது தூதன் கையிலிருந்து சர்வேசுரனுக்கு முன்பாக எழும்பிற்று.

5. பின்பு தூதன் அந்தத் தூபக்கலசத்தை எடுத்து, அதைப் பீடத்தின் நெருப்பினால் நிரப்பி, பூமியிலே கொட்டினார். உடனே இடிகளும் முழக்கங்களும் மின்னல்களும் பலத்த பூமியதிர்ச்சியும் உண்டாயின.

6. அப்போது ஏழு எக்காளங்களையுடைய ஏழுதூதர்களும் எக்காளமூதுகிறதற்குத் தங்களை ஆயத்தம்பண்ணினார்கள்.

7. அப்படியே முதல்தூதன் எக்காளமூதினான். அப்போது இரத்தங்கலந்த கல்மழையும் அக்கினியும் உண்டாகிப் பூமியின்மேல் கொட்டப்பட்டது. அதினாலே பூமியின் மூன்றிலொரு பங்கு எரிந்துபோய், மரங்களின் மூன்றிலொருபங்கும் தீய்ந்து, பசும்புல்லெல்லாம் வெந்துபோயிற்று.

8. பின்பு இரண்டாம் தூதன் எக்காளமூதினான். அப்போது பெரிய எரிமலைபோன்றதொன்று சமுத்திரத்திலே போடப்பட்டது. உடனே சமுத்திரத்தில் மூன்றிலொருபங்கு இரத்தமாய்ப் போக,

9. சமுத்திரத்திலுள்ள ஜீவஜெந்துக்களில் மூன்றிலொருபங்கு மடிந்து, கப்பல்களிலும் மூன்றிலொரு பங்கு சேதமாயிற்று.

10. மூன்றாம் தூதன் எக்காளமூதினான். அப்போது ஒரு பெரிய நட்சத்திரம் தீவட்டியைப்போல் எரிந்து வானத்தினின்று விழுந்தது. அது ஆறுகளில் மூன்றிலொருபங்கின்மேலும் நீரூற்றுகளின்மேலும் விழுந்தது.

11. அந்த நட்சத்திரத்திற்கு எட்டி என்று பெயர். ஆகையால் தண்ணீரில் மூன்றிலொருபாகம் எட்டியைப்போல் கசப்பாயிற்று. அப்படிக் கசப்பான தண்ணீரினால் மனிதரில் அநேகர் மாண்டுபோனார்கள்.

12. நான்காம் தூதன் எக்காளமூதினான். அப்போது சூரியனில் மூன்றிலொரு பங்கும், சந்திரனில் மூன்றிலொருபங்கும், நட்சத்திரங்களில் மூன்றிலொரு பங்கும் அடிபட்டு, அததுகளில் மூன்றிலொரு பங்கு இருளடைந்தது. பகலிலே மூன்றிலொரு பங்கும் இராவிலே மூன்றிலொரு பங்கும் ஒளியற்றுப்போயிற்று.

10. இதில் சொல்லப்பட்ட நட்சத்திரம் தேவநீதிக்கோபத்தை நிறைவேற்றுவதற்குக் குறிக்கப்பட்ட ஒரு சம்மனசாயிருக்கலாம். அல்லது உருவகமான ஒரு எரி நட்சத்திரமாயிருக்கலாம். (கிராம்போன்.)

11. தண்ணீர் கசப்பாயிற்று என்பது தண்ணீர் கெட்டு, கொள்ளைநோய்க்கு ஏதுவாயிற்றென்று அர்த்தமாம். (கிராம்போன்.)

13. பின்பு வானத்தின் மத்தியில் ஒரு கழுகு பறந்துவரக் கண்டேன். அது பேரொலியிட்டு: எக்காளமூதப் போகிற மற்ற மூன்று தூதர்களுடைய எக்காள சத்தங்களினால் பூமியில் குடியிருக்கிறவர்களுக்குக் கேடு ஐயோ! ஐயோ! ஐயோ! என்று சொல்லக்கேட்டேன்.

## 9-ம். அதிகாரம்.

*ஐந்தாம் தூதன் எக்காளமூத, பாதாளக்குழி திறக்கப்பட்டு, விட்டில்கள் புறப்பட்டதும்; ஆறும்தூதன் எக்காளமூத, மிகுந்த படையோடு நான்குதூதர் அவிழ்த்து விடப்பட்டதும் வருமாறு.*

1. பின்பு ஐந்தாம் தூதன் எக்காளமூதினான். அப்போது வானத்திலிருந்து ஒரு நட்சத்திரம் பூமியின்மேல் விழுந்ததைக் கண்டேன். அவனுக்குப் பாதாளக்குழியின் திறவுகோல் கொடுக்கப்பட்டது.

2. அவன் பாதாளக் குழியைத் திறந்தான். உடனே பெருஞ்சூளையின் புகையைப்போல் அந்தக் குழியிலிருந்து புகை எழும்பிற்று. அந்தக் குழியின் புகையினாலே சூரியனும் ஆகாயமும் இருண்டுபோனது.

3. அந்தக் குழியின் புகையிலிருந்து விட்டில்கள் புறப்பட்டுப் பூமியின்மேல் வந்தன. பூமியிலுள்ள தேள்களுக்கு எவ்வித வல்லமையுண்டோ, அவ்வித வல்லமை அவைகளுக்குக் கொடுக்கப்பட்டது.

4. தங்கள் நெற்றிகளில் சர்வேசுரனுடைய முத்திரையில்லாத மனுஷரை மாத்திரம் அவைகள் சேதப்படுத்தலாமேயொழிய மற்றப்படி பூமியிலுள்ள புல்லையாவது, பச்சையையாவது, மரத்தையாவது ஒன்றையும் சேதப்படுத்தலாகாதென்று அவைகளுக்குக் கட்டளையிடப்பட்டது.

5. அன்றியும் அவர்களைக் கொலை செய்யும்படிக்கு அவைகளுக்கு உத்தரவு கொடுக்கப்படாமல், ஐந்து மாதம் வரைக்கும் அவர்களை உபாதிப்பதற்கு உத்தரவுகொடுக்கப்பட்டது. அவைகள் செய்யும் உபாதை தேள் கொட்டினால் மனுஷருக்கு உண்டாகும் உபாதைக்கு ஒப்பாயிருந்தது.

6. அந்நாட்களில் மனுஷர்கள் சாவைத் தேடுவார்கள்; ஆயினும் அதைக் காணமாட்டார்கள். சாகவேண்டுமென்று ஆசைப்படுவார்கள், சாவு அவர்களை விட்டோடிப்போம். (இசை. 2-19; ஓசை. 10-8; லூக். 23-30.)

7. அந்த விட்டில்களின் உருவம் யுத்தத்துக்கு ஆயத்தமான குதிரைகளைப் போலிருந்தது. அவைகளுடைய தலைகளின்மேல் பொன்மயமான கிரீடம் போன்றவைகள் இருந்தன. அவைகளின் முகங்கள் மனுஷருடைய முகங்களைப்போலிருந்தன. (ஞான. 16-9; ஜோ. 2-4.)

8. அவைகளுடைய கூந்தல் ஸ்திரீகளுடைய கூந்தல்போலவும், அவைகளின் பற்கள் சிங்கங்களின் பற்களைப் போலவும் இருந்தன.

9. அன்றியும் இருப்புக் கவசங்களைப்போல் மார்க்கவசங்கள் அவைகளுக்கு இருந்தன. அவைகளுடைய சிறகுகளின் இரைச்சல் யுத்தத்துக்கு ஓடுகிற அநேகங் குதிரைரதங்களின் இரைச்சலுக்கு ஒப்பாயிருந்தது.

---

13. இதில் சொல்லப்பட்ட கழுகு தேவதூதனுக்கு அடையாளமாகும். சில கிரேக்குப் பிரதிகளில் கழுகு என்பதற்குப் பதிலாய் தேவதூதன் என்றே சொல்லியிருக்கிறது.

1. வானத்திலிருந்து விழுந்த நட்சத்திரம் என்பது கெட்டுப்போன சம்மனசுகளையும், வேதத்தில் சிறந்து விளங்கி, பின்பு தவறிக் கெட்டுப்போன போதகர்களையும் குறிக்கிறதென்கலாம்.

10. அன்றியும், அவைகள் தேள்களின் வால்களுக்கு ஒப்பான வால்களையும், அந்த வால்களில் கொடுக்குகளையும் கொண்டிருந்தன. ஐந்து மாதம் வரையில் மனிதரைச் சேதப்படுத்தும்படி அவைகளுக்கு அதிகாரமிருந்தது.

11. பாதாள தூதன் அவைகளுக்கு ராஜாவாயிருந்தான். அவனுக்கு எபிரேய பாஷையில் அபத்தோன் என்றும், கிரேக்குப் பாஷையில் அப்பொல்லியோன் என்றும், லத்தீன் பாஷையில் எக்ஸ்தெர்மினென்ஸ் (சங்காரன்) என்றும் பெயர்.

12. அப்படியே முதல் கேடு கடந்து போயிற்று. இதற்குப் பின் இன்னும் இரண்டுகேடுகள், இதோ, வருகின்றது.

13. ஆறும் தூதன் எக்காளமூதினான். அப்போது தேவ சமுகத்துக்கு முன்பாக இருக்கிற பொற்பீடத்தின் நான்கு கொம்புகளிலுமிருந்து ஒரு குரல் சத்தம் புறப்படக் கேட்டேன்.

14. அது எக்காளத்தைப் பிடித்திருந்த ஆறும் தூதனை நோக்கி: எபிராத்தென்னும் பெரிய நதியோரத்தில் கட்டப்பட்டிருக்கிற நான்கு தூதர்களையும் அவிழ்த்துவிடு என்றது.

15. அப்படியே மனிதர்களில் மூன்றிலொரு பங்கைக் கொல்லவேண்டிய நாழிகைக்கும் நாளுக்கும் மாதத்துக்கும் வருஷத்துக்கும் ஆயத்தமாக்கப்பட்டிருந்த அந்த நான்கு தூதர்களும் அவிழ்த்துவிடப்பட்டார்கள். (காட். 16-14)

16. குதிரைச் சேனைகளாகிய இராணுவங்களின் தொகையோ இருபதினாயிரம் தரம் பதினாயிரமாயிருந்தது. அவைகளின் தொகையைச் சொல்லக் கேட்டேன்.

17. குதிரைகளையும் அவைகளின் மேல் ஏறியிருந்தவர்களையும் நான் தரிசனத்தில் கண்டவிதமாவது: அவர்கள் அக்கினிநிறமும், நீலநிறமும், கந்தகநிறமுமுள்ள மார்க்கவசங்களை அணிந்திருந்தார்கள். குதிரைகளின் தலைகள் சிங்கங்களின் தலைகளைப்போலிருந்தன. அவைகளுடைய வாய்களிலிருந்து அக்கினியும் புகையும் கந்தகமும் புறப்பட்டது.

18. அவைகளுடைய வாய்களிலிருந்து புறப்பட்ட அக்கினி, புகை, கந்தகமாகிய இம்மூன்று வாதைகளாலும் மனுஷரில் மூன்றிலொரு பங்கு கொல்லப்பட்டார்கள்

19. அந்தக் குதிரைகளின் வல்லமை அவைகளின் வாயிலேயும் வால்களிலேயும் இருக்கின்றது. பாம்புகளுக்கு ஒப்பாயிருந்த அவைகளின் வால்கள் தலைகளை உடையவைகளாயிருந்தன. அவைகளாலே மோசஞ்செய்கின்றன.

20. ஆயினும் அந்த வாதைகளால் கொல்லப்படாத மற்ற மனுஷர்கள் பேய்களையும் பொன் வெள்ளி செம்பு கல் மரம் என்பவைகளால் செய்யப்பட்டவைகளும் காணவும் கேட்கவும் நடக்கவும் மாட்டாதவைகளுமான விக்கிரகங்களையும் வணங்காதபடிக்குத் தாங்கள் கையால் செய்த கிரியைகளை விட்டுத் தவம்புரியவுமில்லை; (உபாக. 32-17; சங். 95-5.)

---

13. **நான்கு கொம்புகள்:**—பழைய ஏற்பாட்டில் மோயீசன் செய்த பலிபீடத்தின் நான்கு மூலைகளிலும் தெய்வ வல்லபத்துக்கு அடையாளமாகவும், ஜெபத்துக்கும் பலிகளுக்குமுள்ள வல்லமைக்கு அடையாளமாகவும் நான்கு கொம்புகளைச் செய்துவைத்திருந்தார். அர்ச். அருளப்பர் காட்சியில் கண்ட பீடம் அந்தப் பீடத்தின் சாயலாயிருந்தது.

16. இருபதினாயிரந்தரம் பதினாயிரம் என்பது இருபது கோடியாகும்.

17. இவ்விடத்தில் கண்டிருக்கிற வர்ணிப்புகளை வார்த்தைக்கு வார்த்தையாக எடுத்து வியாக்கியானம் பண்ணுவது கூடாத காரியமென்று அறியவும். (கிராம்போன்.)

21. தங்கள் கொலைபாதகங்களையும், தங்கள் பில்லி சூனியங்களையும், தங்கள் காம நடக்கைகளையும், தங்கள் களவுகளையும் விட்டுத் தவம்புரியவுமில்லை.

## 10-ம். அதிகாரம்.

*மகா வல்லமையுள்ள ஒரு தூதன் ஒரு புஸ்தகத்தை விழுங்கச் சொல்லி அருளப்பருக்குக் கொடுக்கிறார்.*

1. பின்பு மேகத்தை ஆடையாக அணிந்த பராக்கிரமமுள்ள ஒரு தூதன் வானத்திலிருந்து இறங்கிவரக் கண்டேன். அவருடைய சிரசின்மேல் வானவில் இருந்தது. அவருடைய முகம் சூரியனைப்போலவும் அவருடைய கால்கள் அக்கினி ஸ்தம்பம்போலவும் இருந்தன.

2. அவர் தம்முடைய கையிலே ஒரு சிறு புஸ்தகத்தைத் திறந்துவைத்திருந்தார். அவர் தமது வலது பாதத்தைச் சமுத்திரத்தின்மேலும், இடது பாதத்தைப் பூமியின்மேலும் வைத்து,

3. சிங்கம் கர்ச்சிக்கிறதுபோல் மகா சத்தமாய்க் கூப்பிட்டார். அவர் கூப்பிட்டவுடனே ஏழு இடிகளும் அதிர்ந்து முழங்கின.

4. அவ்வேழு இடிகளும் அதிர்ந்து முழங்கினபோது நான் எழுதவேண்டுமென்றிருந்தேன். அப்போது வானத்திலிருந்து ஓர் சத்தம் உண்டாகி: அவ்வேழு இடி முழக்கங்கள் சொன்னவைகளை நீ எழுதாமல், முத்திரையிட்டுக்கொள் என்று என்னைநோக்கிச் சொல்லக் கேட்டேன்.

5. சமுத்திரத்தின் மேலும் பூமியின் மேலும் நிற்கிறதாக நான் கண்ட தூதன் தன் கையை வானத்தை நோக்கி உயர்த்தி, (தனி. 12-7.)

6. வானத்தையும், அதிலுள்ளவைகளையும், பூமியையும் அதிலுள்ளவைகளையும், சமுத்திரத்தையும் அதிலுள்ளவைகளையும் சிர்ஷ்டித்தவரும், சதாகால ஜீவியருமாயிருக்கிறவர் பேரால் ஆணையிட்டு: இனிக் காலமென்பது இராது.

7. ஆனாலும் சர்வேசுரன் தம்முடைய ஊழியராகிய தீர்க்கதரிசிகளைக்கொண்டு அறிவித்தபடியே, ஏழாம் தூதன் எக்காளமூதி, தன்னுடைய சத்தம் முழங்கப்பண்ணும் நாளிலே தேவரகசியம் நிறைவேறும் என்றார்.

8. வானத்திலிருந்து உண்டான சத்தம் மீண்டும் என்னுடனே பேசி: நீ போய், சமுத்திரத்தின்மேலும் பூமியின்மேலும் நிற்கிற அந்தத் தூதனுடைய கையிலே திறந்திருக்கிற புஸ்தகத்தை வாங்கிக்கொள் என்று சொல்லக்கேட்டு,

9. நான் அந்தத் தூதனிடத்திலே போய்: அந்தப் புஸ்தகத்தை எனக்குத்தாரும் என்று கேட்டேன். அதற்கு அவர்: நீ இந்தப்புஸ்தகத்தை வாங்கி விழுங்கு. இது உன் வயிற்றுக்குக் கசப்பாயிருக்கும், ஆயினும் உன்வாய்க்குத் தேனைப்போல் மதுரமாயிருக்கும் என்றார். (எசே. 3-1.)

---

4. **முத்திரையிடு**:—இரகசியமாய் வைத்துக்கொள்.

6 **இனிக் காலமிராது**:—யூதர்கள் ஒரு இராச்சியமாகவும், ஜனமாகவும் இருக்கமாட்டார்களென்றும், அவர்களுடைய வேதத்துக்குப் பதிலாய் யேசுநாதர்சுவாமி புதிய ஏற்பாடாகிய மெய்யான வேதத்தை ஸ்தாபிப்பாரென்றும் அர்த்தமாம்.

9. **புஸ்தகத்தை வாங்கி விழுங்கு**:—புஸ்தகத்திலுள்ள யாவையும் நன்றாய்க் கற்றறிந்துகொள் என்பதாம்.

10. நான் அந்தப் புஸ்தகத்தைத் தூதனுடைய கையிலிருந்து வாங்கி அதை விழுங்கினேன். அது என் வாய்க்குத் தேனைப்போல் மதுரமாயிருந்தது. நான் அதை விழுங்கினவுடனே என் வயிறு கசப்பாயிற்று.

11. அப்பொழுது அவர் என்னைநோக்கி: நீ மறுபடியும் அநேக ஜனங்களையும், ஜாதிகளையும், பாஷைக்காரர்களையும், ராஜாக்களையுங்குறித்துத் தீர்க்கதரிசனஞ்சொல்லவேண்டும் என்றார்.

## 11-ம். அதிகாரம்.

தேவாலயத்தின் அளவும், இருசாட்சிகள் தீர்க்கதரிசனஞ்சொல்வதும், மிருகம் அவர்களைக் கொன்றும், அவர்கள் உயிரோடெழுந்திருக்கிறதும் வருமாறு.

1. பின்பு ஊன்றுகோலுக்கு ஒப்பான ஒரு அளவுகோல் என் கையில் கொடுக்கப்பட, என்னைநோக்கிச்சொல்லப்பட்டதாவது: நீ எழுந்து, சர்வேசுரனுடைய ஆலயத்தையும், பலிபீடத்தையும், அதில் ஆராதனைசெய்கிறவர்களையும் அளந்துபார். (எசே. 40-3.)

2. ஆலயத்துக்குப் புறம்பேயிருக்கிற ஆசார முற்றத்தை அளக்காமல் புறம்பாக்கிப்போடு; ஏனெனில் அது புறஜாதியாருக்குக் கொடுக்கப்பட்டது. பரிசுத்த நகரத்தை அவர்கள் நாற்பத்திரண்டுமாதமளவும் மிதிப்பார்கள்.

3. அப்போது என்னுடைய இரண்டு சாட்சிகளும் கம்பளியணிந்தவர்களாய் ஆயிரத்திருநூற்றறுபது நாளளவும் தீர்க்கதரிசனஞ் சொல்லும்படி அவர்களுக்கு வரங்கொடுப்பேன். அவர்களும் அப்படியே செய்வார்கள்.

4. பூலோகத்தில் ஆண்டவருடைய சமுகத்தில் நிற்கிற இரண்டு ஒலிவமரங்களும், இரண்டு குத்துவிளக்குகளும் இவர்களே. (சக். 4-1.)

5. ஒருவன் அவர்களுக்குப் பொல்லாங்குசெய்ய நினைத்தால், அவர்கள் வாயிலிருந்து அக்கினி புறப்பட்டு, அவர்களுடைய சத்துருக்களைப் பட்சிக்கும். அவர்களுக்குப் பொல்லாங்கு செய்ய நினைக்கிற எவனும் இவ்விதமாய்க் கொல்லப்பட வேண்டியதாமே.

10. **என் வயிறு கசப்பாயிற்று:**—இந்தத் தீர்க்கதரிசனத்தில் யூதருடைய அழிவும் கிறீஸ்து வேதத்தின் உயர்வும் குறிக்கப்பட்டிருந்ததால், அர்ச். அருளப்பர் யூதனுகியமட்டும் கஸ்திப்பட்டதுக்கு அடையாளமாக அவர் வயிறு கசப்பாயிற்றென்றும், கிறீஸ்துவனுகியமட்டும் அவருடைய சந்தோஷத்தைக் காட்ட அவருடைய வாய்க்குத் தேன்போல் மதுரமாயிருந்ததென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

1. அளவுகோல் என்பதற்கு மூலபாஷையில் வைத்திருக்கிற வார்த்தையை உள்ளபடி மொழிபெயர்த்தால், நாணல் குச்சி என்கவேண்டும். நாணல் குச்சி இயல்பாய் நேராகவும், இலேசாகவும் இருப்பதினுல் பூர்வீகத்திலே நாணல் குச்சியை அளவுகோலாகப் பிரயோகிப்பார்கள். ஆகையால் அளவுகோலென்று மொழிபெயர்க்கப்பட்டது.

4. இந்த அதிகார முழுவதும் உலக முடியுங்காலத்தில் மகாத்துமாக்களாகிய ஏனேக், எலியாஸ் என்பவர்கள் வருவதைப்பற்றியும், அந்தக்காலத்தில் உலகத்தில் தோன்றும் அந்திக்கிறீஸ்துவுக்கு விரோதமாய் இவர்கள் வேதத்தைப் பிரசங்கித்து, கிறீஸ்துவர்களை உறுதிப்படுத்தி, யூதர்களை மனந்திருப்பிக் கடைசியாய் அந்திக்கிறீஸ்துவினுல் வேதசாட்சிகளாய்க் கொல்லப்படுவதைப்பற்றியும் விவரிக்கின்றது. (கிராம்போன்.)

5-6. இந்த வசனங்களில் அவர்கள் வாயிலிருந்து மெய்யான அக்கினி புறப்படுமென்று அர்த்தமல்ல. ஆனுல் அவர்களுக்கு அற்புதங்களைச் செய்ய உண்டான வல்லபத்தைக் காட்ட இவைகள் உருவகமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

6. அவர்கள் தீர்க்கதரிசனஞ்சொல்லிவருகிற நாட்களிலே மழைபெய்யாதபடிக்கு வானத்தை அடைக்க அவர்களுக்கு அதிகாரம் உண்டு. அவர்களுக்கு இஷ்டமானபோதெல்லாம் தண்ணீரை இரத்தமாக மாற்றவும், பூமியை எவ்வித உபாதைகளாலும் உபாதிக்கவும் அவர்களுக்கு அதிகாரமுண்டு.

7. அவர்கள் தங்கள் சாட்சியஞ்சொல்லி முடித்தபின்பு பாதாளத்திலிருந்து ஏறிவருகிற மிருகம் அவர்களோடே யுத்தம்பண்ணி, அவர்களை ஜெயித்து அவர்களைக் கொன்றுபோடும். (காட்சி. 17-8.)

8. அவர்களுடைய உடல்கள் மகா நகரத்தின் வீதியிலே கிடக்கும். அந்த நகரம் சொதோமா என்றும், எஜிப்து என்றும் ஞானார்த்தமாய்ச் சொல்லப்படும். அதிலே அவர்களுடைய கர்த்தரும் சிலுவையிலே அறையுண்டார்.

9. அந்தந்தக் கோத்திரங்களையும், ஜனங்களையும், பாஷைக்காரரையும், ஜாதிகளையும் சேர்ந்த ஜனங்கள் மூன்றரை நாளளவாக அவர்களுடைய உடல்களைப் பார்ப்பார்கள். அவர்களுடைய உடல்களைக் கல்லறைகளிலே வைக்கவொட்டார்கள்.

10. இவ்விரண்டு தீர்க்கதரிசிகளும் பூமியின் குடிகளை வேதனைப்படுத்தினதினால், அவர்கள் நிமித்தம் பூமியில் குடியிருக்கிறவர்கள் சந்தோஷப்பட்டுக் களிகூர்ந்து, ஒருவருக்கொருவர் வெகுமதிகளை அனுப்புவார்கள்.

11. மூன்றரை நாளைக்குப்பிறகு சர்வேசுரனிடத்திலிருந்து ஜீவாத்துமம் அவர்களுக்குள் பிரவேசித்தது. உடனே அவர்கள் காலூன்றி நிற்க, அவர்களைக் கண்டவர்களுக்கு மகா திகிலுண்டாயிற்று.

12. அன்றியும்: இங்கே ஏறிவாருங்களென்று வானத்திலிருந்து தங்களுக்கு உண்டான சத்தத்தை அவர்கள் கேட்டு, மேகத்தில் ஏறி வானத்துக்குப் போனார்கள். அவர்களுடைய சத்துருக்களும் அவர்களைக் கண்டார்கள்.

13. அந்நேரத்தில் பூமி மிகவும் அதிர்ந்தது. அந்த நகரத்தில் பத்திலொரு பாகம் இடிந்துவிழுந்தது. பூமியின் அதிர்ச்சியால் மனிதர்களில் ஏழாயிரம் பேர் மடிந்தார்கள். மீதியானவர்கள் பயமடைந்து, பரமதேவனை மகிமைப்படுத்தினார்கள்.

14. இரண்டாங்கேடு முடிந்துபோயிற்று. இதோ, மூன்றாங்கேடு சீக்கிரத்தில் வரப்போகிறது.

15. ஏழாம் தூதன் எக்காளமூதினான். அப்போது வானத்திலே, கெம்பீரத் தொனிகள் உண்டாகி: இவ்வுலக இராச்சியம் நம்முடைய ஆண்டவருக்கும் அவருடைய கிறீஸ்துவுக்கும் சொந்தமாயிற்று. அவர் அநவரதகாலங்களிலும் அரசாளுவார், ஆமென் என்று சப்தித்தது.

16. அப்பொழுது சர்வேசுரனுடைய சமுகத்திலே தங்கள் ஆசனங்களில் உட்கார்ந்திருந்த இருபத்துநான்குவயோதிகரும் முகங்குப்புற விழுந்து:

17. இருக்கிறவரும், இருந்தவரும், இனிவருபவருமாகிய சர்வவல்லமையுள்ள கர்த்தராகிய சர்வேசுரா, உம்மை ஸ்தோத்தரிக்கிறோம். ஏனெனில் தேவரீர் உமது மகா வல்லமையைக் கொண்டு அரசாட்சிசெய்கிறீர்.

18. ஜனங்கள் கோபங்கொண்டார்கள்; அதினாலே உமது முனிவுண்டாயிற்று. மரித்தோரை நடுத்தீர்க்கவும், தீர்க்கதரிசிகளாகிய உம்முடைய ஊழியருக்கும், பரிசுத்தவான்களுக்கும், உமது நாமத்துக்குப் பயப்படுகிறவர்களாகிய சிறியோர் பெரியோர்களுக்கும் சம்பாவனையளிக்கவும், பூமியைக் கெடுத்தவர்களை நிர்மூலமாக்கவும் காலம் வந்ததென்று சொல்லிச் சர்வேசுரனை நமஸ்கரித்தார்கள்.

19. அப்போது பரலோகத்திலே சர்வேசுரனுடைய ஆலயம் திறக்கப்பட்டது, அவருடைய ஆலயத்திலே அவருடைய உடன்படிக்கைப்பெட்டகம் தோன்றினது. உடனே மின்னல்களும், குமுறல்களும், பூமியதிர்ச்சியும் பெருங் கல்மழையும் உண்டாயிற்று.

## 12-ம். அதிகாரம்.

*சூரியனை ஆடையாக அணிந்த ஓர்ஸ்திரீயின் காட்சியும், அவளைத் துன்பப்படுத்தின பறவைநாகமும்.*

1. அன்றியும் வானத்திலே ஒரு பெரிய அடையாளம் காணப்பட்டது; அதாவது : ஒரு ஸ்திரீ சூரியனை ஆடையாக அணிந்திருந்தாள். அவளுடைய பாதங்களின்கீழ் சந்திரனும், அவளுடைய சிரசின்மேல் பன்னிரு நட்சத்திரங்களுள்ள ஓர் கிரீடமும் இருந்தது.

2. அவள் கர்ப்பவதியாயிருந்து, பிரசவ வேதனையடைந்து, குழந்தைபெறும்படி அம்பாயப்பட்டு அலறினாள்.

3. அப்போது வானத்தில் வேறொரு அடையாளம் காணப்பட்டது; அதாவது : ஏழுதலைகளையும், பத்துக்கொம்புகளையுமுடைய சிவப்பான ஒரு பெரிய பறவைநாகம் தோன்றினது. அதின் தலைகளின்மேல் ஏழு முடிகளிருந்தன.

4. அதின் வால் வானத்தின் நட்சத்திரங்களில் மூன்றிலொருபங்கை இழுத்து, அவைகளைப் பூமியிலே விழத்தள்ளிற்று. பிரசவ வேதனைப்படுகிற அந்த ஸ்திரீ பிள்ளைபெற்றவுடனே, அவளுடைய பிள்ளையை விழுங்கிப்போடும்படிக்கு அந்தப் பறவைநாகம் அவளுக்கு முன்பாக நின்றுகொண்டிருந்தது.

5. சகல ஜனங்களையும் இருப்புக்கோலால் அரசாட்சிசெய்யும் ஆண்குழந்தையை அவள் பெற்றாள். அவளுடைய பிள்ளை சர்வேசுரனிடத்திற்கும், அவருடைய சிங்காசனத்திற்கும் எடுத்துக்கொள்ளப்பட்டது.

6. அந்த ஸ்திரீயானவள் வனாந்தரத்துக்கு ஓடிப்போனாள். அங்கே ஆயிரத்திருநூற்றறுபது நாளளவும் அவளைப் போஷிக்கும்படி சர்வேசுரன் அவளுக்கு ஓரிடம் ஆயத்தம்பண்ணி வைத்திருந்தார்.

1. இந்த அதிகாரத்தில் சோபன சிறப்போடு வர்ணிக்கப்பட்டிருக்கிற ஸ்திரீ திவ்விய கர்த்தராகிய யேசுநாதரைப் பெற்றெடுத்த பரம நாயகிதான் என்று அர்ச். அகுஸ்தீன், கிரகோரியார் முதலியவர்கள் நிச்சயித்திருக்கிறார்கள். இந்த ஆச்சரியத்துக்குரிய ஆண்டவள் அடைந்த ஞானத்துக்கு அடையாளமாய்ச் சூரியனை ஆடையாக அணிந்திருக்கிறதாகவும், அவளுடைய மாறாத தயாளத்துக்கு அடையாளமாகச் சந்திரனைப் பாதத்தினகீழ் மிதித்திருக்கிறதாகவும், இஸ்ராயேல் பன்னிரு கோத்திரத்தாராலும், பன்னிரு அப்போஸ்தலராலும் குறிக்கப்பட்ட திருச்சபையானது அவளுடைய மகிமையென்பதற்கு அடையாளமாக அவள் பன்னிரு நட்சத்திரங்களைக் கிரீடமாகச் சூடியிருப்பதாகவும் அர்ச். அருளப்பருக்குக் காட்சியில் காண்பிக்கப்பட்டது. இன்னும் இந்த ஆண்டவள் திருச்சபைக்கு உருவகமாயிருக்கிறாள். அவள் கர்ப்பவாதைப்படுவது கிறீஸ்துவர்கள் உள்ளத்தில் யேசுநாதர்மேலுள்ள பத்தி விசுவாசத்தைப் பிறப்பித்து, ஸ்திரப்படுத்துவதற்குத் திருச்சபையானது படும் அரும் பிரயாசைக்கு அடையாளமாம். அவளைப் பறவைநாகம் பகைத்துக் கெடுக்கத் தேடுவதும், அவள் அதற்கு எட்டாத தூலையில் ஒதுங்கிச் சர்வேசுரனால் போஷிக்கப்படுவதும், திருச்சபையானது வேதவிரோதிகளால் பகைக்கப்படுவதற்கும், தேவகிருபையால் காப்பாற்றப்பட்டு வெற்றியடைவதற்கும் அடையாளமாம்.

3. பறவைநாகம் என்பது சாத்தான். அதின் சிவந்த நிறம் மனுஷருடைய இரத்தத்தைச் சிந்துவதற்கு அதற்குள்ள கொடிய ஆசை. ஏழு தலைகளும் பத்து கொம்புகளும், அதின் தந்திர யோசனைகளும், கெடுதி செய்வதற்கு அதற்குள்ள வல்லமையுமாம்.

7. அன்றியும் வானத்திலே ஒருபெரிய யுத்தம் உண்டாயிற்று. மிக்கயேலும் அவருடைய தூதர்களும் பறவைநாகத்தோடே யுத்தஞ்செய்தார்கள். பறவைநாகமும் அவனுடைய தூதர்களும் யுத்தஞ்செய்தார்கள்.

8. அவர்கள் ஜெயங்கொள்ளவும் இல்லை, வானத்திலே அவர்களிருந்த இடம் அதுமுதல் காணப்படவும் இல்லை.

9. அப்படியே ஆதிசர்ப்பமாகிய அந்தப் பெரிய பறவைநாகம் வெளியே தள்ளப்பட்டது. அதற்குப் பேய் என்றும், சாத்தான் என்றும் பெயர். அது பூமியிலே விழத்தள்ளப்பட்டது. அத்தோடேகூட அதின் தூதர்களும் தள்ளப்பட்டார்கள்.

10. அப்பொழுது வானத்திலே ஒரு பெருஞ்சத்தமுண்டாகி: இப்பொழுது இரட்சிப்பும், வல்லமையும், நமது சர்வேசுரனுடைய இராச்சியமும், அவருடைய கிறீஸ்துவின் அதிகாரமும் உண்டாயிருக்கிறது. இரவும் பகலும் நம்முடைய சர்வேசுரனுக்குமுன்பாக நம்முடைய சகோதரருக்கு விரோதியாய் அவர்கள்மேல் குற்றஞ்சாட்டிக்கொண்டிருந்தவன் தள்ளுண்டுபோனான்.

11. அவர்கள் தாங்கள் செத்தாலும் சரி, உயிரைப் பாரோம் என்று, செம்மறிப்புருவையின் இரத்தத்தைக்கொண்டும் தங்கள் சாட்சியத்தின் வாக்கியத்தைக்கொண்டும் அதை ஜெயித்தார்கள்.

12. ஆகையால் பரலோகங்களே, அகமகிழுங்கள்; அவைகளில் வசிக்கிறவர்களே, அகமகிழுங்கள். பூமிக்கும் சமுத்திரத்துக்கும் ஐயோ கேடு! இதோ, பசாசானவன் தனக்குச் சொற்பக்காலமாத்திரம் உண்டென்று அறிந்து, மிகுந்த ஆங்காரங்கொண்டவனாய் உங்களிடத்தில் இறங்கியிருக்கிறான் என்று சொல்லக் கேட்டேன்.

13. பறவைநாகம் தான் பூமியிலே தள்ளப்பட்டதைக் கண்டு, அந்த ஆண்குழந்தையைப் பெற்ற ஸ்திரீயைத் துன்பப்படுத்தினது.

14. அந்த ஸ்திரீ வனாந்தரத்திலே தனக்குரிய ஸ்தலத்துக்குப் பறந்து போகும்படி பெருங்கழுகின் இரண்டு சிறகுகள் அவளுக்குக் கொடுக்கப்பட்டது. அவ்விடத்திலே அவள் அந்தப் பாம்புக்கு எட்டாத்துலையில் காலமும், காலங்களும், அரைக்காலமுமாகப் போஷிக்கப்படுகிறாள்.

15. அப்பொழுது அந்த ஸ்திரீயை வெள்ளம் கொண்டுபோகும்பொருட்டு அவளுக்குப்பிறகே நாகமானது தன் வாயிலிருந்து ஒரு நதிபோல் ஜலம் பாயும்படி செய்தது.

16. பூமியானது அந்த ஸ்திரீக்கு உதவியாகத் தன் வாயைத் திறந்து, பறவைநாகம் தன் வாயிலிருந்து பாயச்செய்த வெள்ளத்தை உறிஞ்சிக்கொண்டது.

17. ஆதலால் பறவைநாகமானது ஸ்திரீயின்மேல் கோபங்கொண்டு, சர்வேசுரனுடைய கற்பனைகளை அநுசரிக்கிறவர்களும் யேசுக்கிறீஸ்துவின் சாட்சியத்தையுடையவர்களுமாகிய அவளுடைய சந்ததியான மற்றவர்களுடனே கூட யுத்தம்பண்ணப் புறப்பட்டுப் போய்,

18. கடற்கரை மணல்மேல் நின்றது.

15-16. திருச்சபையை அழிக்கும்படி பசாசானது பற்பல துன்ப துரிதங்களையும், வேதகலாப உபத்திரவங்களையும் வெள்ளம்போல் பெருகிவரச்செய்தாலும், அவைகள் மிஞ்சாதபடி சர்வேசுரன் இயல்பான பற்பல வழிபாடுகளைக்கொண்டு அவைகளை அடக்கிவருகிறாரென்று அறிக.

## 13-ம். அதிகாரம்.

*சமுத்திரத்திலிருந்து ஏழு தலையுள்ள ஓர் மிருகம் ஏறிவந்து, தேவதூஷணஞ் சொல்லுகிறது; பூமியினின்று இரண்டு கொம்புள்ள வேறோர் மிருகம் அதற்கு உதவியாக ஏறிவருகின்றது.*

1. அப்பொழுது ஏழுதலைகளும் பத்துக்கொம்புகளும் உள்ள ஓர் மிருகம் சமுத்திரத்திலிருந்து ஏறிவரக் கண்டேன். அதின் கொம்புகளின்மேல் பத்து முடிகளும் அதின் தலைகளின் மேல் தூஷணமான நாமங்களும் இருந்தன.

2. நான் கண்ட மிருகம் வேங்கையைப்போலிருந்தது. அதின் கால்கள் கரடியின் கால்களைப்போலவும், அதின் வாய் சிங்கத்தின் வாயைப்போலவும் இருந்தது. பறவைநாகமானது தன் வல்லபத்தையும் மிகுந்த அதிகாரத்தையும் அதற்குக் கொடுத்தது.

3. அதின் தலைகளிலொன்று படுகாயம்பட்டிருக்கக் கண்டேன். ஆகிலும் அந்தப் படுகாயம் சொஸ்தமாக்கப்பட்டது. அப்போது பூலோகமெல்லாம் அதிசயித்து, அந்த மிருகத்தைப்பின் பற்றி,

4. அந்த மிருகத்திற்கு அதிகாரத்தைக் கொடுத்த பறவைநாகத்தை நமஸ்கரித்தார்கள். அன்றியும்: இந்த மிருகத்துக்கு ஒப்பானவன் யார்? இத்தோடு யுத்தம்பண்ணத்தக்கவன் யார்? என்று சொல்லி, அந்த மிருகத்தையும் நமஸ்கரித்தார்கள்.

5. பெருமையானவைகளையும் தூஷணங்களையும் பேசும்படியான வாய் அதற்குக் கொடுக்கப்பட்டது. நாற்பத்திரண்டு மாதமளவும் யுத்தம்பண்ண அதற்கு அதிகாரங்கொடுக்கப்பட்டது.

6. ஆகையால் அது சர்வேசுரனைத் தூஷணிக்கும்படி வாயைத்திறந்து, அவருடைய நாமத்தையும், அவருடைய கூடாரத்தையும், பரலோகத்திலேவாசமாயிருக்கிறவர்களையும் தூஷணித்தது.

7. அர்ச்சியசிஷ்டவர்களோடேகூட யுத்தஞ்செய்யவும் அவர்களை ஜெயிக்கவும் அதற்கு அதிகாரங்கொடுக்கப்பட்டது. அன்றியும் சகல கோத்திரத்தார்மேலும் ஜனங்கள்மேலும் பாஷைக்காரர்மேலும் ஜாதிகளின்மேலும் அதற்கு அதிகாரங்கொடுக்கப்பட்டது.

8. கொலையுண்ட செம்மறிப்புருவையானவருடைய ஜீவபுஸ்தகத்தில் உலக ஆரம்பமுதல் எவர்களுடைய பெயர்கள் எழுதப்படவில்லையோ, அவர்களெல்லாரும் அதை நமஸ்கரித்தார்கள்.

9. காதுள்ளவனெவனோ, அவன் கேட்கக்கடவான்.

10. சிறைப்படுத்துகிறவன் சிறையாளியாய்ப் போவான். வாளாலே கொல்லுகிறவன் வாளாலே கொல்லப்படவேண்டும். இதிலேதான் அர்ச்சியசிஷ்டவர்களுடைய பொறுமையும் விசுவாசமும் விளங்குகின்றது. (ஆதி. 9-6; மத். 26-25.)

11. பின்பு வேறொரு மிருகம் பூமியிலிருந்து ஏறிவரக்கண்டேன். அது செம்மறிப்புருவையின் கொம்புகளைப்போல் இரு கொம்புகளுடையதாய்ப் பறவைநாகத்தைப்போல் பேசிற்று.

12. அது முந்தின மிருகத்தின் அதிகாரமுழுவதையும் அதின் முன்பாகச் செலுத்தி, படுகாயம் ஆறிக்குணமான முந்தின மிருகத்தைப் பூமியும் அதின் குடிகளும் நமஸ்கரிக்கும்படி செய்தது.

13. அன்றியும் அது மனுஷர்முன்பாக (எவ்வளவு) பெரிய அற்புதங்களைச் செய்ததென்றால், வானத்திலிருந்து அக்கினியைமுதலாய் பூமியின்மேல் இறங்கும்படி செய்தது. (2 தெச. 2-9; மத். 24-24.)

14. அது தனக்குக் கொடுக்கப்பட்ட வல்லமையால் மிருகத்திற்கு முன்பாகச் செய்த அற்புதங்களைக்கொண்டு பூமியின்குடிகளை மயக்கி, வாளால் காயப்பட்டுப் பிழைத்த அந்த மிருகத்திற்கு ஓர் உருவம் செய்யவேண்டுமென்று பூமியின் குடிகளுக்குச் சொல்லிற்று.

15. அந்த மிருகத்தின் உருவம் பேசவும், அந்த மிருகத்தின் உருவத்தை நமஸ்கரியாதவர்கள் கொலையுண்ணும்படி செய்யவும், அந்த மிருகத்தின் உருவத்துக்கு உயிர்கொடுக்கும்படி அதற்கு வல்லபங்கொடுக்கப்பட்டது.

16. அது சிறியோர், பெரியோர், தனவான்கள், தரித்திரர், சுயாதீனர் அடிமைகளாகிய யாவரும் தங்கள் வலதுகையிலாவது, தங்கள் நெற்றிகளிலாவது ஓர் முத்திரையைத் தரித்துக்கொள்ளவும்,

17. அந்த முத்திரையையாவது, மிருகத்தின் நாமத்தையாவது, அதின் நாமத்தின் இலக்கத்தையாவது தரித்திருக்கிறவனொழிய வேறொருவனும் விற்கவும், வாங்கவும் கூடாதபடி செய்யும்.

18. இதிலே ஞானம் விளங்கும். அறிவுள்ளவன் அந்த மிருகத்தின் இலக்கத்தைக் கணிக்கக்கடவான். அது ஒரு மனுஷனுடைய இலக்கமாயிருக்கிறது. அவனுடைய இலக்கம் அறுநூற்றறுபத்தாறு.

## 14-ம். அதிகாரம்.

இஸ்ராயேலர் முத்திரையிடப்பட்டுச் செம்மறிப்புருவையானவரோடு நிற்பதும், சுவிசேஷம் எங்கும் பிரசங்கிக்கப்படுவதும், பாபிலோன் அழிவும், உலக சங்காரமும் வருமாறு.

1. இன்னும் நான் கண்டதேதெனில்: இதோ, சியோன்மலையின்மேல் செம்மறிப்புருவையானவர் நின்றார்; அவரோடேகூட தங்கள் நெற்றிகளில் அவருடைய நாமமும் அவருடைய பிதாவின் நாமமும் எழுதப்பட்டிருந்த லட்சத்து நாற்பத்துநாலாயிரம்பேரும் நின்றார்கள்.

2. அப்போது பெரும்வெள்ளத்தின் இரைச்சலையும் பலத்த இடிமுழக்கத்தையும்போன்ற ஓர் சத்தம் வானத்திலிருந்து சப்திக்கக் கேட்டேன். நான் கேட்ட அந்தச்சத்தம் சுரமண்டலக்காரர் தங்கள் சுரமண்டலங்களை வாசிக்கிற ஓசையைப்போலிருந்தது.

3. அவர்கள் சிங்காசனத்திற்கு முன்பாகவும் நான்கு ஜீவஜெந்துக்களுக்கும் வயோதியர்களுக்கும் முன்பாகவும் ஓர் புதுப்பாட்டைப் பாடிக்கொண்டிருந்தார்கள். அந்தப்பாட்டைப் பூமியிலிருந்து மீட்டுக்கொள்ளப்பட்ட லட்சத்து நாற்பத்துநாலாயிரம்பேர் தவிர வேறெவனும் பாடக் கூடாமலிருந்தது.

4. ஸ்திரீகளோடு தங்களை அசுத்தப்படுத்தாதவர்கள் இவர்களே; ஏனெனில் இவர்கள் கன்னியர்கள். செம்மறிப்புருவையானவர் போகும் இடங்கள்தோறும் அவரைப் பின்செல்லுகிறவர்கள் இவர்களே. இவர்கள் சர்வேசுரனுக்கும், செம்மறிப்புருவையானவருக்கும் முதற்பலனாக மனிதர்களிலிருந்து மீட்டுக்கொள்ளப்பட்டவர்கள்.

5. இவர்களுடைய வாயிலே பொய் காணப்பட்டதில்லை: இவர்கள் சர்வேசுரனுடைய சிங்காசனத்திற்கு முன்பாக மாசற்றவர்களாயிருக்கிறார்கள்.

2. வெள்ளத்தின் இரைச்சல் இடிமுழக்கத்துக்கு ஒப்பிட்டிருப்பது அதின் வலிமையைக் காட்டவும், சுரமண்டலத்துக்கு ஒப்பிட்டிருப்பது அதின் இனிமையைக் காட்டவுமாமே.

6. பின்பு, வேறொருதூதன் வானத்தின் நடுவே பறக்கக்கண்டேன்: அவர் பூமியின்மேல் குடியிருக்கிற சகல தேசத்தாருக்கும், கோத்திரத்தாருக்கும், பாஷைக்காரருக்கும், ஜனங்களுக்கும் போதிக்கத்தக்கதாக நித்திய சுவிசேஷத்தைக் கையிலே வைத்திருந்தார்.

7. அவர் மகா சத்தமிட்டு: கர்த்தருக்குப் பயந்து, அவரை மகிமைப்படுத்துங்கள். ஏனெனில் அவர் தீர்வையிடும் நேரம் வந்தது. பரலோகத்தையும், பூலோகத்தையும், நீரூற்றுகளையும் உண்டாக்கினவரை நமஸ்கரியுங்கள் என்றார். (சங். 145-6; அப். 14-14.)

8. வேறொரு தூதன் அவருக்குப்பின் வந்து: மகா பாபிலோன் விழுந்தது, விழுந்தது. கோபாக்கினைக்கு ஏதுவான தன் வேசித்தனமாகிய மதுவைச் சகல ஜனங்களுக்கும் குடிக்கக் கொடுத்த நகரம் அதுவே என்றார். (இசை. 21-9; ஜெ. 51-14.)

9. அவர்களுக்குப்பின் மூன்றாம்தூதன்வந்து மகா சத்தமாய்க் கூப்பிட்டு: மிருகத்தையும், அதின் உருவத்தையும் நமஸ்கரித்து, தன் நெற்றியிலாவது, தன் கையிலாவது அதின் முத்திரையைத் தரித்துக்கொள்ளுகிறவன் எவனோ,

10. அவன் சர்வேசுரனுடைய கோபாக்கினையின் பாத்திரத்தில் ஒரு கலப்புமின்றி வார்க்கப்பட்ட அவருடைய கோபாக்கினையாகிய மதுவைக்குடித்து, பரிசுத்த தூதர்களுக்கு முன்பாகவும், செம்மறிப்புருவையானவருக்கு முன்பாகவும் அக்கினியிலும், கந்தகத்திலும் உபாதிக்கப்படுவான்.

11. அவர்களுடைய வாதையின் புகை சதாகாலங்களிலும் எழும்பிக்கொண்டிருக்கும். மிருகத்தையும், அதின் உருவத்தையும் நமஸ்கரிக்கிறவர்களுக்கும், அதின் நாமத்தின் முத்திரையைத் தரித்துக்கொள்ளுகிறவனுகிய எவனுக்கும் இரவும் பகலும் இளைப்பாற்றி இராது.

12. சர்வேசுரனுடைய கற்பனைகளையும், யேசுநாதர்மேலுள்ள விசுவாசத்தையும் காத்துக்கொள்ளுகிற அர்ச்சியசிஷ்டவர்களுடைய பொறுமை இதிலே விளங்குகின்றது என்று கூறினார்.

13. பின்பு வானத்திலிருந்து ஓர் சத்தமுண்டாகக் கேட்டேன். அது என்னை நோக்கி: ஆண்டவருக்குள் மரிக்கிறவர்கள் பாக்கியவான்கள் என்று எழுது. ஆம், இது முதல் அவர்கள் தங்கள் வேலை முடிந்து இளைப்பாறுவார்கள். ஏனெனில் அவர்களுடைய கிரியைகள் அவர்களைப் பின்பற்றும் என்று இஸ்பிரீத்துவானவர் சொல்லுகிறார் என்றது.

14. அன்றியும் இதோ, வெண்மையான மேகத்தையும் அந்த மேகத்தின் மேல் மனுமகனுக்கு ஒப்பான ஒருவர் உட்கார்ந்திருக்கிறதையும் கண்டேன். அவருடைய சிரசில் பொற்கிரீடமும் கையில் கருக்கான அரிவாளும் இருந்தது. (தனி. 3-25.)

15. அப்பொழுது வேறொருதூதன் தேவாலயத்திலிருந்து புறப்பட்டு, மேகத்தின்மேல் உட்கார்ந்திருக்கிறவரை நோக்கி: பூமியின் பயிர் முற்றிப்போனது, அறுப்பதற்குக் காலமாயிற்று. ஆகையால், உம்முடைய அரிவாளைப் போட்டு அறுத்துவிடும் என்று மகா சத்தத்தோடே கூப்பிட்டுச் சொன்னார். (ஜொயெல். 3-13.)

10. கலப்புமின்றி என்பது கடைசிநாளில் ஆண்டவர் பாவிகளுக்குத் தீர்வையிடும்போது எவ்வளவும் இரக்கம்பாராட்டாமல், கோரதை நீதியையே செலுத்துவாரென்பது கருத்து.

12. நித்திய நரக ஆக்கினைகளை யோசித்து அர்ச்சியசிஷ்டவர்கள் தேவ கற்பனைகளையும் விசுவாசத்தையும் பொறுமையோடு காத்துவருவார்கள்.

16. அப்பொழுது மேகத்தின்மேல் உட்கார்ந்திருந்தவர் பூமியிலே தமது அரிவாளைப்போடவே, பூமியின்விளைவு அறுப்பாயிற்று.

17. பின்பு பரலோகத்திலுள்ள தேவாலயத்திலிருந்து வேறொரு தூதனும் கருக்கான அரிவாளைக் கையில் எடுத்துக்கொண்டு புறப்பட்டுவந்தார்.

18. அன்றியும் அக்கினியின்மேல் அதிகாரமுள்ள வேறொரு தூதன் பலிபீடத்திலிருந்து புறப்பட்டு, கருக்கான அரிவாளை வைத்திருக்கிறவரைநோக்கி: பூமியின் திராட்சத்தோட்டத்திலுள்ள திராட்சைக் கனிகள் பழுத்திருக்கின்றன; உமது கருக்கான அரிவாளைவீசி, அதின் குலைகளை அறுத்துவிடும் என்று உரத்த சத்தமாய்க் கூவினர்.

19. அப்படியே அந்தத்தூதன் தன் அரிவாளைப் பூமியின்மேல் வீசி, பூமியின் திராட்சைப்பழங்களை அறுத்து, சர்வேசுரனுடைய கோபாக்கினையென்னும் பெரிய ஆலைத்தொட்டியிலே போட்டார்.

20. பட்டணத்துக்குப் புறம்பேயுள்ள அந்த ஆலையிலே அது மிதிக்கப்பட்டது. அந்த ஆலையிலிருந்து ஆயிரத்தறுநூறு ஸ்தாது தூரத்துக்கு இரத்தம் புறப்பட்டுக் குதிரைகளின் கடிவாளங்கள்மட்டும் பெருகிவந்தது.

## 15-ம். அதிகாரம்.

*மிருகத்தையும், அதின் உருவத்தையும், அதின் முத்திரையையும் வென்று ஜெயங்கொண்டவர்கள் சர்வேசுரனை ஸ்துதிப்பதும், தேவகோபத்தால் நிறைந்த ஏழுகலசங்கள் ஏழு தூதர்களுக்குக் கொடுக்கப்படுவதும் வருமாறு.*

1. பின்பு வானத்திலே பெரிதும் ஆச்சரியமுமான வேறொரு அடையாளத்தைக் கண்டேன். அதாவது: ஏழு தூதர்கள் கடைசியான ஏழுவாதைகளை வைத்திருந்தார்கள். அவைகளிலே சர்வேசுரனுடைய கோபம் நிறைவுபெற்றது.

2. அல்லாமலும், அக்கினி கலந்த கண்ணாடிக்கடல்போன்ற ஒரு கடலையும், மிருகத்தையும் அதின் உருவத்தையும், அதின் நாமத்தின் இலக்கத்தையும் ஜெயித்தவர்கள் சர்வேசுரனுடைய சுரமண்டலங்களைப் பிடித்துக்கொண்டு அந்தக் கண்ணாடிக் கடல்மேல் நிற்கிறதையும் கண்டேன்.

3. அவர்கள் சர்வேசுரனுடைய ஊழியனாகிய மோயீசன் பாடின பாட்டையும், செம்மறிப்புருவையானவருடைய பாட்டையும் பாடி: சர்வ வல்லப தேவனாகிய கர்த்தாவே, உமது கிரியைகள் மகத்துவமும், அதிசயமுமானவைகள். சதா காலங்களின் ராஜனே, தேவரீருடைய வழிகள் நீதியும் உண்மையுமானவைகள். (யாத். 15-1.)

4. கர்த்தாவே, உமக்குப் பயப்படாமலும், உமது நாமத்தை மகிமைப்படுத்தாமலும் இருப்பவன் யார்? தேவரீர் ஒருவரோ பரிசுத்தர்; சகல ஜனங்களும் உமது சமுகத்தில் வந்து, உம்மை நமஸ்கரிப்பார்கள். ஏனெனில் உமது நீதித்தீர்ப்புகள் வெட்டவெளியாயின என்றார்கள். (ஜெரெ. 10-7.)

5. அதற்குப்பின் நான் கண்டதாவது: இதோ, வானத்தில் சாட்சியக் கூடாரமாகிய ஆலயம் திறக்கப்பட்டது.

18. **திராட்சத்தோட்டம்**:—உலகமெல்லாம் ஒரு திராட்சத்தோட்டமாகவும், அதிலுள்ள மனிதர் திராட்சச் செடியாகவும் பாவிக்கப்படுகிறார்கள்.

20. பட்டணத்துக்குப் புறம்பே என்பது சர்வேசுரனுடைய இராச்சியத்தினின்று அதாவது: பரலோகத்தினின்று பாவிகள் தள்ளுண்டு ஆக்கினைப்படும் ஸ்தலமாம். ஒரு ஸ்தாது என்பது 675 ஜாதி அடிகொண்ட தூரம்.

6. அந்த ஆலயத்திலிருந்து ஏழுவாதைகளையுடைய அந்த ஏழு தூதர்களும் புறப்பட்டார்கள். அவர்கள் தூய்மையானவஸ்திரம் அணிந்து, மார்பினருகே பொற்கச்சையைக் கட்டியிருந்தார்கள்.

7. அப்போது நான்கு ஜீவஜெந்துக்களில் ஒன்று சதாகால ஜீவியராகிய சர்வேசுரனுடைய கோபாக்கினையால் நிறைந்த ஏழு பொற்கலசங்களை அந்த ஏழு தூதர்களுக்கும் கொடுத்தது.

8. சர்வேசுரனுடைய மகிமையினாலும் அவருடைய வல்லமையினாலும் உண்டான புகையினாலே தேவாலயம் நிறைந்தது. ஏழு தூதர்களுடைய ஏழு வாதைகளும் முடியும்வரைக்கும் தேவாலயத்திற்குள் ஒருவரும் பிரவேசிக்கக்கூடாதிருந்தது. (யாத். 40-34.)

## 16-ம். அதிகாரம்.

வாதைகள் நிறைந்த ஏழுகலசங்களையும் தூதர் பூமியின்மேல் வார்த்ததினால் உண்டாகிய ஆக்கினைகளாவன.

1. அப்போது தேவாலயத்திலிருந்து ஓர் பெருஞ்சத்தம் உண்டாகி அந்த ஏழு தூதர்களையும்நோக்கி: நீங்கள் போய், சர்வேசுரனுடைய கோபாக்கினையாகிய கலசங்களைப் பூமியின்மேல் ஊற்றுங்கள் என்று சொல்லக்கேட்டேன்.

2. அப்பொழுது முதலாம் தூதன் போய்த் தன்கலசத்தைப் பூமியின்மேல் ஊற்றவே, மிருகத்தின் முத்திரையை உடையவர்களிடத்திலும், அதின் உருவத்தை நமஸ்கரித்தவர்களிடத்திலும் மகாபொல்லாத கொடிய புண்ணுண்டாயிற்று. (ஜெரெ. 9-9.)

3. இரண்டாம் தூதன் தன் கலசத்தைச் சமுத்திரத்தில் ஊற்றவே, அது செத்தவனுடைய இரத்தம்போலாயிற்று. சமுத்திரத்திலுள்ள உயிர்ப் பிராணிகளெல்லாம் மடிந்துபோயின.

4. மூன்றாம் தூதன் தன் கலசத்தை ஆறுகளிலும் நீரூற்றுகளிலும் ஊற்றவே, அவைகள் இரத்தமாய் மாறிப்போயின. (யாத். 7-17.)

5. அப்போது தண்ணீர்களின் தூதன்: இருக்கிறவரும், இருந்தவருமான பரிசுத்த கர்த்தாவே, தேவரீர் இந்தத் தீர்ப்புச்செய்தீரே, தேவரீர் நீதியுள்ளவர்.

6. அவர்கள் அர்ச்சியசிஷ்டவர்களின் இரத்தத்தையும், தீர்க்கதரிசிகளின் இரத்தத்தையும் சிந்தினதினாலே தேவரீர் அவர்களுக்கு இரத்தத்தைக் குடிக்கக் கொடுத்தீர்; அதற்கு அவர்கள் பாத்திரவான்களாயிருக்கிறார்கள் என்று சொல்லக்கேட்டேன்.

7. அப்பொழுது வேறொரு தூதன் பலிபீடத்திலிருந்து: ஆம், சர்வவல்லப தேவனாகிய கர்த்தாவே, உம்முடைய நியாயத்தீர்ப்புகள் சத்தியமும் நீதியுமுள்ளவைகள் என்று சொல்லக்கேட்டேன்.

8. நான்காம் தூதன் தன் கலசத்தைச் சூரியன்மேல் ஊற்றவே, உஷ்டணத்தினாலும் அக்கினியினாலும் மனுஷர்களைத் துன்பப்படுத்த அதற்கு வல்லமை கொடுக்கப்பட்டது.

9. அப்போது மனிதர்கள் மிகுந்த உஷ்டணத்தால் வெந்து, இந்த வாதைகளின்மேல் வல்லபமுள்ள ஆண்டவருடைய நாமத்தைத் தூஷணித்தார்களேயல்லாமல், அவரை மகிமைப்படுத்தும்படி தவஞ்செய்தவர்களல்ல.

10. ஐந்தாம் தூதன் தன் கலசத்தை மிருகத்தின் சிம்மாசனத்தின்மேல் ஊற்றவே, அதின் இராச்சியம் இருண்டுபோயிற்று. மனிதர்கள் வருத்தத்தினால் தங்கள் நாவுகளைக் கடித்துக்கொண்டு, (யாத். 10-21.)

11. தங்கள் உபாதைகளையும், காயங்களையும்பற்றிப் பரலோக தேவனைத் தூஷணித்தார்களேயல்லாமல், தங்கள் கிரியைகளைவிட்டுத் தவஞ்செய்தவர்களல்ல.

12. ஆறும் தூதன் தன் கலசத்தை எப்பிராத்தென்னும் அந்தப் பெரிய நதியில் ஊற்றவே, சூரியன் உதிக்கும் திசையிலுள்ள ராஜாக்களுக்கு வழி ஆயத்தமாக்கப்படும்படி அந்த நதியின் தண்ணீர் வற்றிப்போயிற்று.

13. அப்பொழுது பறவைநாகத்தின் வாயிலும், மிருகத்தின்வாயிலும் ஒரு கள்ளத்தீர்க்கதரிசியின் வாயிலுமிருந்து தவளைகளுக்கு ஒப்பான மூன்று அசுத்த அரூபிகள் புறப்பட்டுவரக்கண்டேன்.

14. அவைகள் அற்புதங்களைச்செய்கிற பேயரூபிகள். அவைகள் பூலோகமெங்குமுள்ள ராஜாக்களிடத்தில் போய், சர்வ வல்லமையுள்ள சர்வேசுரனுடைய மகாநாளிலே நடக்கப்போகிற யுத்தத்திற்கு அவர்களைக் கூட்டிச்சேர்க்கும்படி புறப்பட்டுப்போகின்றன.

15. இதோ, திருடனைப்போல் வருகின்றேன். தன் மானத்தை (மனிதர்) காணும்படி நிர்வாணமாய் நடவாமல் விழிப்பாயிருந்து, தன் வஸ்திரங்களைக் காத்துக்கொள்ளுகிறவன் பாக்கியவான். (மத். 24-43; காட். 3-3.)

16. அப்பொழுது எபிரேய பாஷையில் அர்மகேதோன் என்னப்பட்ட இடத்தில் அவர்களைக் கூட்டிச்சேர்ப்பான்.

17. பின்பு ஏழாம் தூதன் தன் கலசத்தை ஆகாயத்தில் ஊற்றவே, தேவாலயத்திலுள்ள சிங்காசனத்திலிருந்து ஒரு பெருஞ்சத்தமுண்டாகி : முடிந்து போயிற்று என்றது.

18. உடனே மின்னல்களும், குமுறல்களும், இடிகளும் உண்டாகிப் பூமி மிகவும் அதிர்ந்தது. பூமியின்மேல் மனுஷன் உண்டான நாள்முதற்கொண்டு அப்படிப்பட்ட பூமியதிர்ச்சி ஒருபோதும் உண்டானதில்லை ; அது அம்மாத்திரம் பெரிதாயிருந்தது.

19. அப்பொழுது மகாநகரம் மூன்று பங்காக்கப்பட்டது ; புறஜாதியாருடைய பட்டணங்களும் தகர்ந்துவிழுந்தன. மகா பாபிலோனுக்குச் சர்வேசுரனுடைய உக்கிரமான கோபாக்கினையாகிய மதுவுள்ள பாத்திரத்தைக் கொடுக்கும்படி அது அவருக்கு ஞாபகத்தில் வந்தது.

20. தீவுகளெல்லாம் பறந்துபோயின ; பர்வதங்களும் காணப்படவில்லை.

21. அன்றியும் தாலெந்து நிறையுள்ள பெருங்கல்மழை வானத்திலிருந்து மனிதர்கள்மேல் விழுந்தது. அந்தக் கல்மழையினால் உண்டான வாதை மகா கொடிதானதினாலே அதின் நிமித்தம் மனிதர்கள் சர்வேசுரனைத் தூஷணித்தார்கள்.

## 17-ம். அதிகாரம்.

ஏழுதலைகளும், பத்துக்கொம்புகளுமுள்ள மிருகத்தின்மேல் உட்கார்ந்திருக்கிற பாபிலோன் என்கிற பெரிய வேசியைக் காண்கிறார்.

1. பின்பு ஏழு கலசங்களையுடைய ஏழு தூதர்களில் ஒருவர்வந்து, என்னை நோக்கிச் சொன்னதாவது : நீ வா, திரண்ட தண்ணீர்களின்மேல் உட்கார்ந்திருக்கிற பெரியவேசிக்கு வரப்போகிற அவல தீர்வையை உனக்குக் காண்பிப்பேன்.

16. அர்மகேதோன் என்பது மானசே கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு ஊரிலுள்ள மாகிதோன் என்னும் மலையின் பெயராம். அந்த ஸ்தலத்திலே இஸ்ராயேலர் கனானெயரென்னும் சத்துருக்களோடு போராடி இருமுறை கனத்த தோர்வை அடைந்ததினால், அந்த ஸ்தலம் தோர்வைக்கும் சங்காரநாசத்துக்கும் அடையாளமாம்.

2. இவ்வேளோடேதான் பூவுலக ராஜாக்கள் சோரம்போனார்கள். இவளுடைய வேசித்தன மதுவால் பூவுலகவாசிகள் வெறிகொண்டு திரிந்தார்கள் என்று சொல்லி,

3. என்னைப் பரவசமாய் ஒரு வனாந்தரத்துக்குக் கொண்டுபோனார். அப்பொழுது ஏழு தலைகளையும், பத்துக் கொம்புகளையும் உடையதும், தூஷணமான நாமங்களால் நிறைந்ததுமான ஒரு செந்நிற மிருகத்தின்மேல் ஏறியிருந்த ஓர் ஸ்திரீயைக் கண்டேன்.

4. அந்த ஸ்திரீ இரத்தாம்பரமும், தூமிர உடையும் தரித்து, பொன்னினாலும், விலையேறப்பெற்ற இரத்தினங்களினாலும், முத்துக்களினாலும் சிங்காரிக்கப்பட்டுத் தன்னுடைய வேசித்தனத்தின் அருவருப்புகளாலும் அசுத்தங்களாலும் நிறைந்த பொற்பாத்திரத்தைத் தன் கையில் வைத்திருந்தாள்.

5. மேலும் இரகசியம்: மகா பாபிலோன் பூமியிலுள்ள வேசித்தனங்களுக்கும், அருவருப்புகளுக்கும் தாய் என்னும் நாமம் அவள் நெற்றியில் எழுதியிருந்தது.

6. அந்த ஸ்திரீ பரிசுத்தவான்களின் இரத்தத்தினாலும் யேசுநாதருடைய சாட்சிகளின் இரத்தத்தினாலும் வெறிகொண்டிருக்கிறதையும் கண்டேன். நான் அவளைக் கண்டு நான் மிகவும் அதிசயித்து ஆச்சரியப்பட்டேன்.

7. அப்பொழுது தூதன் என்னை நோக்கி: நீ ஏன் அதிசயப்படுகிறாய்? அந்த ஸ்திரீயின் இரகசியத்தையும், ஏழு தலைகளையும், பத்துக்கொம்புகளையும் உடையதாய் அவளைச் சுமக்கிற மிருகத்தின் இரகசியத்தையும் உனக்குச் சொல்லுவேன்.

8. நீ கண்ட மிருகம் முன்னே இருந்தது; இப்பொழுது இல்லை. இனி அது பாதாளத்திலிருந்து ஏறிவந்து நாசமாய்ப்போம். உலகாதிமுதல் ஜீவிய புஸ்தகத்தில் பெயரெழுதப்பட்டிராத பூலோகவாசிகள் முன் இருந்ததும், இப்பொழுது இராததுமான அந்த மிருகத்தைக் கண்டு, ஆச்சரியப்படுவார்கள்.

9. ஞானமடங்கிய கருத்து இதில் உண்டு. ஏழுதலைகள் அந்த ஸ்திரீ உட்கார்ந்திருக்கிற ஏழு மலைகளாம். அவைகள் ஏழு ராஜாக்களுமாம்.

10. அவர்களில் ஐந்துபேர் விழுந்து போனார்கள். ஒருவன் இருக்கிறான்; மற்றவன் இன்னம் வரவில்லை. வரும்போது அவன் இருக்கவேண்டியது சொற்பக்காலந்தான்.

11. இருந்ததும் (இப்போது) இராததுமான அந்த மிருகம் எட்டாவதாயிருக்கிறது. அது ஏழிலிருந்து உண்டாகி, கெட்டழியப்போகிறது.

12. பின்னும் நீ கண்ட பத்துக்கொம்புகளும் பத்து ராஜாக்களாம். அவர்கள் இன்னம் அரசாட்சி அடையவில்லை. ஆனாலும் மிருகத்தைத் தொடர்ந்து ஒருமணிநேரத்துக்கு அவர்கள் ராஜாக்களைப்போல் அதிகாரம்பெற்றுக்கொள்வார்கள்.

13. இவர்கள் ஒரே யோசனையுள்ளவர்கள். இவர்கள் தங்கள் வல்லமையையும் அதிகாரத்தையும் மிருகத்திற்குக் கொடுப்பார்கள்.

1-2. இதில் சொல்லப்பட்ட ஸ்திரீ அஞ்ஞான உரோமையருடைய இராச்சியத்தையும், அந்த இராச்சியத்துக்குத் தலைநகரமாகிய உரோமாபுரியையும் குறிப்பதாக வேதபாரகர்கள் உத்தேசிக்கிறார்கள். அந்தப் பட்டணம் செல்வத்திலும் நாகரீகத்திலும் சிறந்திருந்தாலும், அஞ்ஞான மூர்க்கமும் காமவிகார நடக்கையும் மிகுத்ததாயிருந்ததை அந்த மிருகத்தின் வர்ணிப்பில் காண்க.

14. இவர்கள் செம்மறிப்புருவையானவருடனே யுத்தம் பண்ணுவார்கள். ஆனால் செம்மறிப் புருவையானவர் அவர்களை வெல்லுவார். ஏனெனில் அவர் கர்த்தாதி கர்த்தனும் ராஜாதிராஜனுமாயிருக்கிறார். அவருடனேகூட இருக்கிறவர்கள் அழைக்கப்பட்டவர்களும், தெரிந்துகொள்ளப்பட்டவர்களும், பிரமாணிக்கமுள்ளவர்களுமாயிருக்கிறார்கள். (2. தீமோ. 6-15; காட். 19-16.)

15. அவர் மறுபடியும் என்னைப்பார்த்து: அந்த வேசி உட்கார்ந்திருக்கிற இடத்தில் தண்ணீர்களைக் கண்டாயே; அந்தத் தண்ணீர்கள் ஜனங்களும், இராச்சியத்தாரும், பாஷைக்காரருமாமே.

16. நீ மிருகத்தின்மேல் கண்ட பத்துக் கொம்புகளானவர்கள் அந்த வேசியைப் பகைத்து, அவளை நாசமும் நிர்வாணியுமாக்கி, அவளுடைய மாம்சத்தைப் பட்சித்து அவளை நெருப்பினால் சுட்டெரித்துப் போடுகிறவர்களாம்.

17. ஏனெனில், சர்வேசுரன் தம்முடைய வாக்கியங்கள் நிறைவேறுமளவும் அவர்கள் தம்முடைய நோக்கத்தின்படி நடந்து, தங்கள் அரசாட்சியை மிருகத்துக்குக் கொடுக்கும்படி அவர்களுடைய இருதயங்களை ஏவினார்.

18. நீ கண்ட ஸ்திரீயோ பூமியின் ராஜாக்கள்மேல் அரசாட்சிபண்ணுகிற பெரிய பட்டணமாம் என்றார்.

## 18-ம். அதிகாரம்.

மகா பாபிலோன் விழுந்துபோகும்படி தீர்ப்பிடப்பட்டதும், அதற்கு வந்த தேவ கோபாக்கினையைக் கண்டு ராஜாக்களும் வியாபாரிகளும் துயரப்பட்டதும்.

1. இவைகளுக்குப் பின்பு மிகுந்த வல்லமையுள்ள வேறொரு தூதன் வானத்திலிருந்து இறங்கிவரக் கண்டேன். அவருடைய மகிமையால் பூமி பிரகாசமாயிற்று.

2. அவர் பலத்த சத்தமிட்டு: விழுந்தது, மகா பாபிலோன் விழுந்தது. அது பேய்களுடைய குடியிருப்பும், சகலவித அசுத்த அரூபிகளுடைய கிடங்கும், அசுத்தமும் அருவருப்புமுள்ள சகல பறவைகளும் அடைகிற பொந்துமாயிற்று. (காட். 14-8.)

3. ஏனெனில் அவளுடைய வேசித்தனத்தின் உக்கிரமமான மதுவைச் சகல ஜாதி ஜனங்களும் குடித்தார்கள். பூமியின் ராஜாக்கள் அவளோடே சோரம்போனார்கள். பூமியின் வர்த்தகர்கள் அவளுடைய செல்வச்செருக்கின் மிகுதியால் ஐசுவரியரானார்கள் என்றார்.

4. பின்பு பரலோகத்திலிருந்து வேறொரு சத்தம் புறப்படக் கேட்டேன். அது சொன்னதாவது: என் ஜனங்களே, நீங்கள் அவளுடைய அக்கிரமங்களுக்குப் பங்காளிகளாகாதபடிக்கும், அவளுக்கு நேரிடும் வாதைகளில் அகப்படாதபடிக்கும் அவளைவிட்டு வெளியே வாருங்கள்.

5. ஏனெனில் அவளுடைய பாவங்கள் வானலோகமட்டும் ஏறிற்று; ஆண்டவர் அவளுடைய அக்கிரமங்களை நினைவுகூர்ந்தார்.

6. அவள் உங்களுக்குச் செய்தது போல் நீங்களும் அவளுக்குப் பதில்செய்யுங்கள். அவளுடைய கிரியைகளுக்குத்தக்கபடி அவளுக்கு இரட்டிப்புக்கு இரட்டிப்பாய்க் கொடுங்கள். அவள் உங்களுக்குக் கலந்துகொடுத்த பாத்திரத்தில் இரட்டிப்பாய் அவளுக்குக் கலந்து கொடுங்கள்.

7. எவ்வளவுக்கு அவள் தன்னை மகிமைப்படுத்தி: நான் இராக்கினியாய் வீற்றிருக்கிறேன், நான் விதவையல்ல, நான் துக்கத்தைக் காண்பதில்லை என்று சொல்லி, செல்வச்செருக்கிலிருந்தாளோ, அவ்வளவுக்கு வேதனையையும் துக்கத்தையும் அவளுக்குக் கொடுங்கள். (இசை. 47-8.)

8. ஆகையால், அவளுக்குரிய வாதைகளாகிய சாவு, துக்கம், பஞ்சம் இவைகள் ஒருநாளிலே அவளுக்கு வரும். அக்கினியினாலே அவள் சுட்டெரிக்கப்படுவாள். ஏனெனில் அவளுக்கு நியாயந்தீர்க்கச் சர்வேசுரன் வல்லபமுள்ளவராயிருக்கிறார்.

9. அவளோடே வேசித்தனஞ்செய்து, சுகபோகமாய் வாழ்ந்த பூமியின் ராஜாக்களோவெனில் அவள் வேகிறதினால் எழும்பும் புகையைக் காணும்போது, அவளைப்பற்றி அழுது புலம்பி,

10. அவளுக்கு உண்டான வாதைக்குப் பயந்து, தூரத்திலே நின்று: ஐயையோ பாபிலோன், மகா நகரே, பேர்போன பராக்கிரம பட்டணமே, ஒரே நாழிகையில் உனக்குத் தீர்ப்பு வந்ததே என்பார்கள்.

11. அப்படியே பூமியின் வர்த்தகர்களும் தங்கள் சரக்குகளாகிய பொன்னையும், வெள்ளியையும், விலையேறப்பெற்ற இரத்தினங்களையும், முத்துக்களையும், சல்லாப் புடவைகளையும், இரத்தாம்பரத்தையும், பட்டாடைகளையும், சிவப்பாடைகளையும்,

12. சகலவித வாசனைக்கட்டைகளையும், தந்தத்தால் செய்யப்பட்ட சகல வஸ்துக்களையும், விலை உயர்ந்த கற்களினாலும், வெண்கலத்தினாலும், இரும்பினாலும், சலவைக்கற்களினாலும் செய்யப்பட்ட சகல பாத்திரங்களையும்,

13. இலவங்கைப் பட்டையையும், சுகந்த வர்க்கங்களையும், தைலங்களையும், சாம்பிராணியையும், திராட்சைரசத்தையும், எண்ணெயையும், மெல்லிய மாவையும், கோதும்பையையும், மாடுகளையும், ஆடுகளையும், குதிரைகளையும், இரதங்களையும், அடிமைகளையும், மனுஷ உயிர்களையும் இனிக் கொள்வார் இல்லாதபடியால், அதின்மேல் அழுது புலம்புவார்கள்.

14. உன் ஆத்துமம் இச்சித்த கனிவர்க்கங்களும் உன்னைவிட்டு நீங்கிப் போயின; செழிப்பும், சம்பிரம சிறப்புமானவைகளெல்லாம் உன்னைவிட்டு அழிந்துபோயிற்று இனி நீ அவைகளைக் காணமாட்டாய் என்று சொல்லி,

15. இவைகளைக்கொண்டு வியாபாரம்பண்ணி ஐசுவரியரானவர்கள் அவளுக்கு உண்டான வாதைகளுக்குப் பயந்து, தூரத்திலே நின்று அழுது பிரலாபித்து:

16. ஐயோ, ஐயோ, இந்த மகா நகரம் தூமிரமும், இரத்தாம்பிரமும், சிவப்பாடையும் தரித்து, பொன்னினாலும், விலையேறப்பெற்ற இரத்தினங்களாலும், முத்துக்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்ததே!

17. ஒரு நாழிகையிலே இவ்வளவு ஐசுவரியங்களும் அழிந்துபோயிற்றே என்று சொல்லி, அழுது துக்கிப்பார்கள். மாலுமிகள்யாவரும், கடலிலே யாத்திரை பண்ணுகிறவர்கள் யாவரும், கப்பலாட்களும் சமுத்திரத்திலே வேலைசெய்கிற யாவரும் தூரத்திலே நின்று,

18. அது வெந்துபோகிற இடத்தைக் கண்டு, இந்த மகா நகரத்திற்கு ஒப்பான நகரம் உண்டோ என்று சத்தமிட்டு,

---

13. அக்காலத்தில் அடிமைகளை மிருகங்களெனப்பாவித்து அவர்களை விற்றதினாலே அந்த அடிமைகளுக்கு மெய்யான ஞான ஆத்துமம் உண்டென்றும், அப்படிப்பட்ட ஆத்துமத்தை விற்பது மகா அக்கிரமமென்றும் காட்டும்படி மனுஷருடைய ஆத்துமத்தையும் விற்றதாகச் சொல்லியிருக்கிறது.

19. தங்கள் தலையின்மேல் மண்ணை வாரிப் போட்டுக்கொண்டு: அழுது பிரலாபித்து, ஐயோ, ஐயோ, அந்த மகா நகரம் சமுத்திரத்திலே கப்பல்களையுடைய யாவரையும் தான் கொடுத்த கிரயங்களினால் ஐசுவரியர்களாக்கினதே; ஒரு நாழிகைக்குள்ளே அது பாழாய்ப் போயிற்றே என்பார்கள்.

20. பரலோகமே, பரிசுத்தவான்களாகிய அப்போஸ்தலர்களே, தீர்க்கதரிசிகளே, அதைப்பார்த்துக் களிகூருங்கள். ஏனெனில் இதோ, உங்கள் நிமித்தம் சர்வேசுரன் அதற்குத் தீர்வையிட்டார் என்று சொல்லக்கேட்டேன்.

21. பின்பு பலமுள்ள வேறொரு தூதன் பெரிய திரிகைக் கல்லையொத்த ஒருகல்லைத் தூக்கிக் கடலிலே எறிந்து: இப்படியே வேகமாய்ப் பாபிலோன் மாநகரம் தள்ளுண்டு இனி ஒருபோதும் காணப்படாமற்போம்.

22. சுரமண்டலக்காரர்கள், கீதவாத்தியக்காரர்களுடைய வாத்தியங்களும், நாகசுரக்காரர்களுடைய குரலொலியும், எக்காளச் சத்தமும் இனி உன்னிடத்தில் கேட்கப்படுவதுமில்லை; எந்தெந்த தொழில்செய்யும் தொழிலாளி எவனும் உன்னிடத்தில் இனிக் காணப்படுவதுமில்லை; வேலை யந்திரச் சத்தமும் இனி உன்னிடத்தில் கேட்கப்படுவதுமில்லை.

23. விளக்கு வெளிச்சம் இனி உன்னிடத்தில் பிரகாசிப்பதுமில்லை; மணவாளனும் மணவாட்டியுமானவர்களுடைய குரலும், இனி உன்னிடத்தில் கேட்கப்படுவதுமில்லை; ஏனெனில் உன் வர்த்தகர்கள் பூலோகத்திலே பெரியோர்களாயிருந்தார்கள்; உன் மாய சூனியத்தால் எல்லாத் தேசத்தாரும் மோசம் போனார்கள்.

24. தீர்க்கதரிசிகளுடைய இரத்தமும், பரிசுத்தவான்களுடைய இரத்தமும், பூமியிலே கொல்லப்பட்ட அனைவருடைய இரத்தமும் அவளிடத்திலே காணப்பட்டது என்று உரைத்தார்.

## 19-ம். அதிகாரம்.

*செம்மறிப்புருவையானவருக்குக் கலியாணம் ஆயத்தம் பண்ணப்பட்டதும்; தேவ வார்த்தையானவர் பரலோக சேனைகளோடுவந்து, மிருகத்தையும் அதின் பரிவாரத்தையும் ஜெயித்ததும்.*

1. இவைகளுக்குப்பின்பு பரலோகத்திலே திரளான கூட்டத்தாருடைய குரலொலிக்கொப்பான சத்தத்தைக் கேட்டேன். அவர்கள்: அல்லேலுயா; இரட்சணியமும், மகிமையும், வல்லமையும் நம்முடைய சர்வேசுரனுக்கே உரியது.

2. ஏனெனில் அவருடைய நியாயத்தீர்ப்பு சத்தியமும் நீதியுமாயிருக்கின்றது. தன் வேசித்தனத்தால் பூமியைக் கெடுத்த பெரியவேசிக்குத் தீர்ப்பிட்டு, அவள் தன் கையால் சிந்தின தம்முடைய ஊழியர்களின் இரத்தத்துக்குப் பழிவாங்கினார் என்றார்கள்.

3. மறுபடியும் அவர்கள்: அல்லேலுயா, அவளைச் சுடுகிற புகை அநவரதகாலத்துக்கும் எழும்புகிறது என்றார்கள்.

4. இருபத்துநான்கு வயோதிகர்களும், நான்கு ஜீவஜெந்துக்களும் தெண்டனாகவிழுந்து: ஆமென், அல்லேலுயா என்று சொல்லி சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கும் தேவனை நமஸ்கரித்தார்கள்.

5. அல்லாமலும் சிங்காசனத்திலிருந்து ஓர் குரல்சத்தம் புறப்பட்டு: நம்முடைய சர்வேசுரனுடைய ஊழியரே, அவருக்குப் பயப்படுகிற சிறியோரும் பெரியோருமானவர்களே, நீங்கள் யாவரும் அவருக்குப் புகழ்கூருங்கள் என்றது.

6. அன்றியும் திரளான ஜனக்கூட்டத்தின் ஆரவாரம்போலவும், பெரும் வெள்ளத்தின் இரைச்சல்போலவும், பலத்த இடிகளின் முழக்கம்போலவும், ஒரு சத்தம் உண்டாகி: அல்லேலுயா, ஏனெனில் சர்வ வல்லபமுள்ள நம்முடைய ஆண்டவர் இராச்சியபாரம் பண்ணுகிறார்.

7. நாம் களித்து, மகிழ்ந்து அவரை மகிமைப்படுத்துவோமாக. ஏனெனில் செம்மறிப் புருவையானவருடைய கலியாணநாள் வந்தது. அவருடைய பத்தினியும் தன்னை ஆயத்தம்பண்ணியிருக்கிறாள் என்று சொல்லக்கேட்டேன்.

8. பளபளப்பான மெல்லிய வஸ்திரந் தரித்துக்கொள்ளும்படி அவளுக்குக் கொடுக்கப்பட்டது. அந்த மெல்லிய வஸ்திரம் அர்ச்சியசிஷ்டவர்களுடைய புண்ணிய செய்கைகளாமே.

9. பின்னும் அவர் என்னைநோக்கி: செம்மறிப்புருவையானவருடைய கலியாண விருந்துக்கு அழைக்கப்பட்டவர்கள் பாக்கியவான்களென்று எழுது என்றார். மேலும் இவைகள் சர்வேசுரனுடைய சத்தியமான வசனங்கள் என்று என்னுடனே சொன்னார். (மத். 22-2.)

10. அப்பொழுது நான் அவரை நமஸ்கரிக்கும்படி அவருடைய பாதத்திலே விழுந்தேன். அவரோ என்னைப் பார்த்து: பத்திரம் அப்படிச்செய்யாதே. உன்னோடும் யேசுவின் சாட்சியத்தைக்கொண்டிருக்கிற உன் சகோதரரோடும் நானும் ஒரு ஊழியன். சர்வேசுரனை நமஸ்கரி. யேசுநாதரைப்பற்றிய சாட்சியம் தீர்க்கதரிசனத்துக்குரிய இஸ்பிரீத்துவாமே என்றார்.

11. அப்பொழுது பரலோகம் திறக்கப்படக் கண்டேன். இதோ, ஒரு வெள்ளைக்குதிரை தோன்றினது: அதின்மேல் ஏறியிருந்தவருக்குப் பிரமாணிக்கமுள்ளவரென்றும், சத்தியமுள்ளவரென்றும் பெயர். அவர் நீதியோடு நடுத்தீர்த்து யுத்தம்பண்ணுகிறவர்.

12. அவருடைய கண்கள் அக்கினிச் சுவாலையைப்போல் இருந்தது. அவருடைய சிரசின்மேல் அநேககிரீடங்களும் இருந்தன. அவர் ஒருவருக்கேயன்றி வேறொருவருக்கும் தெரியாத ஒருநாமம் எழுதி அவருக்குச் சூடியிருந்தது.

13. அவர் இரத்தத்தினால் தெளிக்கப்பட்ட வஸ்திரத்தைத் தரித்திருந்தார். தேவனுடைய வார்த்தை என்று அவருக்குப் பெயர். (இசை. 43-2.)

14. பரலோகத்திலுள்ள சேனைகள் வெண்மையான மெல்லிய வஸ்திரங்களைத் தரித்து, வெள்ளைக் குதிரைகள்மேலேறி அவரைப் பின்சென்றுபோனார்கள்.

15. புறஜாதியாரை வெட்டும்படிக்கு அவருடைய வாயிலிருந்து இருபுறமும் கூரான பட்டயம் புறப்பட்டது. அவர் இருப்புக்கோலால் அவர்களை ஆளுவார். அவரே சர்வ வல்லமையுள்ள சர்வேசுரனுடைய உக்கிரம கோபமாகிய மதுவின் ஆலையை மிதிக்கிறார். (சங். 11-9.)

16. ராஜாதி ராஜன், கர்த்தாதி கர்த்தன் என்று அவருடைய வஸ்திரத்திலும், தொடையிலும் எழுதப்பட்டிருந்தது. (காட்சி. 17-14.)

17. பின்பு ஒரு தூதன் சூரியனில் நிற்கக் கண்டேன். அவர் வானத்தின் நடுவே பறக்கிற சகலமான பறவைகளையும் நோக்கி: மகா சத்தத்தோடே கூப்பிட்டு:

10. இஸ்பிரீத்துசாந்துவினால் ஏவப்பட்ட சம்மனசானவர் தீர்க்கதரிசனம் உரைக்கிறதுபோல், அர்ச். அருளப்பரும் இஸ்பிரீத்துசாந்துவினால் ஏவப்பட்டுத் தீர்க்கதரிசனஞ் சொல்ல வரம்பெற்றதினால் இருவரிடத்திலும் ஒரே இஸ்பிரீத்துசாந்துவானவர் குடியிருந்தார். ஆகையால் சம்மனசானவர்: நானும் உன்னைப்போல் ஒரு ஊழியன்தானே என்கிறார்.

18. வாருங்கள், நீங்கள் ராஜாக்களின் மாம்சங்களையும், சேனைத்தலைவர்களின் மாம்சங்களையும், வீரசூரருடைய மாம்சங்களையும், குதிரைகளின் மாம்சங்களையும், அவைகளின் மேல் ஏறியிருக்கிறவர்களின் மாம்சங்களையும் சுயாதீனர், அடிமைகள், சிறியோர், பெரியோர் ஆகிய இவர்களெல்லோருடைய மாம்சங்களையும் பட்சிக்கும்படி சர்வேசுரன் கொடுக்கும் மகா விருந்துக்கு வந்துகூடுங்கள் என்றார்.

19. பின்பு மிருகமும், பூமியின் ராஜாக்களும் அவர்களுடைய சேனைகளும் குதிரையின்மேல் ஏறியிருக்கிறவரோடும் அவருடைய இராணுவத்தோடும் யுத்தம்பண்ணும்படிக்குக் கூடிவரக்கண்டேன்.

20. அப்போது மிருகம் பிடிபட்டது. அத்தோடுகூட கள்ளத்தீர்க்கதரிசியும் பிடிபட்டான். இவன் அதற்குமுன்பாக அற்புதங்களைச் செய்து அவைகளின் மூலமாய் மிருகத்தின் முத்திரையைத் தரித்து, அதின் உருவத்தை நமஸ்கரித்தவர்களையும் மயக்கிக் கெடுத்தவன். இருவரும் கெந்தகம் பற்றியெரிகிற அக்கினித்தடாகத்திலே உயிரோடே தள்ளப்பட்டார்கள்.

21. மற்றவர்களோ, குதிரையின்மேல் ஏறியிருக்கிறவருடைய வாயிலிருந்து புறப்படுகிற பட்டயத்தால் கொல்லப்பட்டார்கள். பறவைகளெல்லாம் அவர்களுடைய மாம்சங்களால் திர்ப்தியடைந்தன.

## 20-ம். அதிகாரம்.

*சாத்தான் ஆயிரம் வருஷமளவாகக் கட்டப்படுகிறது; அந்த ஆயிரம் வருஷமும் வேதசாட்சிகளாகிய ஆத்துமாக்கள் கிறீஸ்துநாதரோடு கூட அரசாளுகிறார்கள். அதின்பின் சாத்தான் அவிழ்த்துவிடப்பட்டு, தன் தூதரோடு தேவ நகரத்தார் மேல் எதிர்த்து யுத்தம்பண்ணுகிறது; கடைசியாய் அக்கினி அவர்களைச் சுட்டெரிக்கிறது, மரித்தோர் தீர்வையிடப்படுகிறார்கள்.*

1. பின்பு ஒரு தூதன் பாதாளத்தின் திறவுகோலையும், ஒரு பெரிய சங்கிலியையும் தன்கையில் பிடித்துக்கொண்டு, வானத்திலிருந்து இறங்கிவரக் கண்டேன்.

2. பசாசென்றும், சாத்தானென்றும் சொல்லப்பட்ட ஆதி சர்ப்பமாகிய பறவைநாகத்தை அவர் பிடித்து, அதை ஆயிரம் வருஷமளவாகக் கட்டிவைத்து,

3. அந்த ஆயிரம் வருஷமும் முடியும்வரைக்கும் அது ஜனங்களை மோசம் போக்காதபடிக்கு அதைப் பாதாளத்திலே தள்ளியடைத்து அதின்மேல் முத்திரையிட்டார். அதற்குப்பின் அது கொஞ்சக்காலத்துக்கு அவிழ்த்து விடப்படவேண்டும். (2. தீமோ. 2-9)

20. மிருகத்தினால் அந்திக்கிறீஸ்தும், கள்ளத்தீர்க்கதரிசியால் அவனுடைய பொல்லாத மந்திரியும் குறிக்கப்படுகிறார்கள். (கிராம்போன்.)

21. மற்றவர்கள் என்பது மிருகமும் அதின் மந்திரியும் நீங்கலாக, அந்த மிருகத்தைப் பின்சென்ற ராஜாக்கள் முதலியவர்களாம்.

2. பறவைநாகமென்பது சாத்தான்; மிருகமென்பது அந்திக்கிறீஸ்து; கள்ளத்தீர்க்கதரிசி என்பது அவனுடைய மந்திரி.

3. சாத்தான் ஆயிரம் வருஷம்வரைக்கும் கட்டுண்டு பாதாளத்தில் தள்ளப்பட்டதைப் படியெனில், சுவாமி உலகத்தை மீட்டிரட்சிக்குமுன், சாத்தான் உலகத்தில் வெகு கெம்பீரமாய் அதிகாரஞ் செலுத்திவந்திருக்க, சுவாமி உலகத்தை இரட்சித்தபின் அதின் கர்வத்தை வெகுவாய் அடக்கி, அது தன்னிஷ்டப்படி செய்யாமல் ஒடுக்கினதொன்று அர்த்தமாம். ஆயிரம் வருஷமென்பது பொதுப்பட அநேக யுகங்களையும் அல்லது உலகமுடியும்வரையில் செல்லும் காலத்தையும் குறிக்கிறது. உலகமுடிவு நெருங்கிவரும்போது மனுஷருடைய விசுவாசம் குறைந்து, பாவாக்கிரமம் வளருமாகையால் சாத்தான் விடுதலையானதுபோல் அதின் அதிகாரம் கெம்பீரமாகும்.

4. அன்றியும் நான் சிங்காசனங்களைக்கண்டேன். அவைகளின்மேல் (சிலர்) உட்கார்ந்திருந்தார்கள். நியாயத்தீர்ப்புச் செய்வதற்கு அவர்களுக்கு அதிகாரங்கொடுக்கப்பட்டது. யேசுநாதருடைய சாட்சியத்தினிமித்தமும், சர்வேசுரனுடைய வாக்கியத்தினிமித்தமும் கொலையுண்டவர்களுடைய ஆத்துமங்களையும் மிருகத்தையாவது அதின் உருவத்தையாவது நமஸ்கரியாமலும், தங்கள் நெற்றியிலும், தங்கள் கையிலும் அதின்முத்திரையைத் தரித்துக்கொள்ளாமலும் இருந்தவர்களையும் கண்டேன். அவர்கள் உயிரடைந்து கிறீஸ்துவுடனேகூட ஆயிரம் வருஷம் அரசாண்டார்கள். (மத். 19-28.)

5. மரித்த மற்றவர்கள் அந்த ஆயிர வருஷம் முடியுமளவும் உயிர் அடையவில்லை. இதுவே முதல் உத்தானம்.

6. முதல் உத்தானத்துக்குப் பங்குள்ளவன் பாக்கியவானும் பரிசுத்தவானுமாயிருக்கிறான். இவர்கள்மேல் இரண்டாம் மரணத்துக்கு அதிகாரமில்லை. இவர்கள் சர்வேசுரனுக்கும்கிறீஸ்துவுக்கும் முன்பாக குருக்களாயிருந்து, அவரோடேகூட ஆயிரம்வருஷம் அரசாளுவார்கள்.

7. அந்த ஆயிரம் வருஷம் முடிந்தபின், சாத்தான் தன் சிறையினின்று விடுதலையாகிப் புறப்பட்டு, பூமியின் நான்கு திசைகளிலுமுள்ள தேசத்தாரையும், கோகு மாகோகு என்பவர்களையும் மயக்குவித்து, அவர்களை யுத்தத்துக்குத் திரட்டுவான். அவர்களுடையதொகை கடற்கரை மணலத்தனையாயிருக்கும்.

8. அவர்கள் பூமியின் விஸ்தீரணமெல்லாம் பரவி, பரிசுத்தவான்களுடைய பாளையத்தையும் நேசிக்கப்பட்ட நகரத்தையும் வளைந்துகொண்டார்கள்.

9. வானத்திலிருந்து சர்வேசுரனால் அக்கினி இறங்கி, அவர்களைப் பட்சிக்கின்றது. அவர்களை மயக்கின பசாசு அக்கினியும் கெந்தகமுமுள்ள தடாகத்திலே தள்ளப்பட்டது. (எசேக். 38-22.)

---

4. கொலையுண்டவர்களுடைய ஆத்துமங்களையும் கண்டேன் என்பதினால் வேதசாட்சிகள் முதலிய சகல புண்ணியவான்களும் மரணத்தையடைந்தபின் அவர்களுடைய ஆத்துமங்கள் பொதுவான உத்தானகாலமட்டும் காத்திராமல், உடனே மோட்சபாக்கியத்தை அடைந்து யேசுநாதரோடேகூட அரசாளுகின்றன என்று பிரசித்தமாகிறது.

5. மற்றவர்கள் உயிரடையவில்லை. வேதாகமத்தில் பரலோகபாக்கியத்தை நித்திய ஜீவியமென்றும் உயிரென்றும் சொல்லியிருப்பதினால், மரித்தவர்களில் மற்றவர்களாகிய பாவிகள் அந்தப் பேரின்பமாகிய உயிரை அடையாமல் நித்திய நிர்பாக்கியராயிருப்பார்கள் என்று விளங்குகிறது.

7. தேவதிருவுளத்தால் குறிக்கப்பட்ட காலம் நிறைவேறி, உலகமுடிவு நெருங்கும்போது, சாத்தான் உலகத்தின் நாலாதிசைகளிலும் உள்ள ஜனங்களில் வெகுவெகுபேரை மயக்கிக்கெடுத்துத் தன் பாரிசமாய்ச் சேர்ப்பான். கிறீஸ்துவர்களுக்குள்ளே முதலாய் அநேகர் அவன் கைவசமாவார்கள். இதைப்பற்றியே லூக்கா சுவிசேஷம் 18-ம் அதி. 8-ம் வசனத்தில் மனுமகன் திரும்பிவரும்போது உலகத்தில் விசுவாசத்தைக் காண்பது அரிது என்று சொல்லப்பட்டிருக்கிறது. கோகு மாகோகு என்பவர்கள் கிரேக்குத் தேசத்துக்கு வடக்கே சீரிய நாட்டில் வசித்த நாகரீகமற்ற காட்டுமிராண்டிகள். இவர்கள் பூர்வீகத்தில் இஸ்ராயேல் ஜனங்களை ஜெயித்துத் துன்பப்படுத்தினவர்களாகையால், உலகத்தின் முடிவில் இவர்களைப்போலொத்த துஷ்டர்களைச் சாத்தான் தன்பாரிசமாக்கி, பரிசுத்தவான்களுடைய பாளையமும் நேசிக்கப்பட்ட நகரமுமாகிய திருச்சபையை எதிர்த்துத் துன்பப்படுத்துவான் என்றறிக.

10. அவ்விடத்தில் மிருகமும் கள்ளத் தீர்க்கதரிசியும் இரவும் பகலும் என்றென்றைக்கும் உபாதிக்கப்படுவார்கள்.

11. பின்பு வெண்மையான ஒரு பெரியசிங்காசனத்தையும், அதின்மேல் வீற்றிருக்கிறவரையும் கண்டேன். அவருடைய சமுகத்திலிருந்து பூமியும் வானமும் ஒழிந்துபோயின. அவைகளுக்கு இடமும் அற்றுப்போயிற்று. (காட். 3-12; மலக். 3-16; லூக். 10-20.)

12. மரித்தோராகிய சிறியோரும், பெரியோரும் அந்தச் சிங்காசனத்தின் முன்பாக நிற்கக்கண்டேன். அப்பொழுது புஸ்தகங்கள் திறக்கப்பட்டன. ஜீவிய புஸ்தகமாகிய வேறொரு புஸ்தகமும் திறக்கப்பட்டது. அந்தப் புஸ்தகங்களில் எழுதப்பட்டபடி மரித்தோர் தங்கள் தங்கள் கிரியைகளுக்குத் தக்கதாக நியாயந்தீர்க்கப்பட்டார்கள்.

13. சமுத்திரம் தன்னிடத்திலுள்ள மரித்தோரை ஒப்புவித்தது. மரணமும் பாதாளமும் தங்களிலுள்ள மரித்தோரை ஒப்புவித்தன. ஒவ்வொருவருக்கும் தங்கள் தங்கள் கிரியைகளின்படி தீர்வையிடப்பட்டது.

14. அப்போது பாதாளமும் மரணமும் அக்கினித் தடாகத்தில் தள்ளப்பட்டன. இதுவே இரண்டாம் மரணம். (1. கொ. 15-26.)

15. ஜீவிய புஸ்தகத்தில் எழுதப்பட்டதாகக் காணப்படாதவன் அந்த அக்கினித்தடாகத்திலே தள்ளப்பட்டான்.

## 21-ம். அதிகாரம்.

மோட்சமாகிய புதிய எருசலேமும், அதின் சிறப்பு மகிமையும் வெளியாக்கப்படுகிறது.

1. பின்பு நான் புதிய வானத்தையும், புதிய பூமியையும் கண்டேன். எனெனில் முந்தின வானமும் முந்தின பூமியும் ஒழிந்துபோயின. சமுத்திரமும் இல்லாமற்போயிற்று. (இசை. 45-17; 2. இரா. 3-13.)

2. அருளப்பனாகிய நான் புதிய எருசலேமாகிய பரிசுத்த நகரம் சர்வேசுரனிடத்தினின்று பரலோகத்தைவிட்டிறங்கிவரக் கண்டேன். அது தன் பத்தாவுக்காக அலங்கரிக்கப்பட்ட மணவாளியைப்போல் ஆயத்தமாக்கப்பட்டிருந்தது.

3. அப்போது சிங்காசனத்திலிருந்து ஒரு பெரிய குரல்சத்தம் உண்டாகி: இதோ, மனிதரோடு சர்வேசுரன் வசிக்கும் ஸ்தலம். அவர்களோடு அவர் வாசம்பண்ணுவார்; அவர்களும் அவருடைய ஜனங்களாயிருப்பார்கள். சர்வேசுரன்தாமே அவர்களுடைய தெய்வமாக அவர்களோடேகூட இருப்பார்.

4. சர்வேசுரன் அவர்களுடைய கண்களினின்று கண்ணீர்யாவையும் துடைப்பார்; இனி மரணமேஇராது; இனித் துக்கமும், அழுகைச் சத்தமும் துயரமும் கிடையாது. முந்தினவைகள் ஒழிந்துபோயினஎன்று உரைக்கக்கேட்டேன். (காட். 7-17.)

5. அன்றியும் சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்தவர்: இதோ, நான் சகலத்தையும் புதிதாக்குகிறேன் என்றார். மீளவும் அவர் என்னைப் பார்த்து: இவைகள் மகா பிரமாணிக்கமும், உண்மையுமான வார்த்தைகள். இவைகளை எழுது என்றார். (இசை. 43-19; 2. கொ. 5-17.)

6. மேலும் அவர் என்னைநோக்கி: எல்லாம் முடிந்தது; நானே ஆல்பாவும் ஓமேகாவும், ஆதியும் அந்தமுமாயிருக்கிறேன். தாகமாயிருக்கிறவனுக்கு ஜீவிய நீரூற்றில் இலவசமாய்க் குடிக்கக் கொடுப்பேன். (காட். 1-18.)

5. **சகலத்தையும் புதிதாக்குகிறேன்:**—பாவத்தினால் உலகத்துக்கு உண்டான துன்பங்களும், கேடுகளும் ஒழிந்துபோனபின், சர்வசிர்ஷ்டிகளும் தத்தமக்குரிய பாக்கியமான ஸ்திதியில் நிலைபெற்றிருக்கும் என்பதாம். (2. கொ. 5-27.)

7. ஜெயங்கொள்ளுகிறவனெவனோ அவன் இவைகளைச் சுதந்தரித்துக்கொள்ளுவான். நான் அவனுக்குத் தேவனாயிருப்பேன்; அவன் எனக்குப் பிள்ளையாயிருப்பான்.

8. ஆனால் பயங்காளிகளும், அவிசுவாசிகளும், அருவருப்புக்குரியவர்களும்,கொலைபாதகரும், விபசாரக்காரரும், சூனியக்காரரும், விக்கிரகாராதனைக்காரர், பொய்யர் அனைவரும் அக்கினியும், கெந்தகமும் எரிகிற தடாகத்திலே பங்கடைவார்கள். இரண்டாம் மரணம் இதுவே என்றார்.

9. பின்பு கடைசியான ஏழு வாதைகளால் நிறைந்த ஏழுபாத்திரங்களையுடைய ஏழுதூதரில் ஒருவர் வந்து என்னுடனே பேசி: நீ இங்கே வா, செம்மறிப்புருவையானவருடைய பத்தினியாகிய மனைவியை உனக்குக் காண்பிப்பேன் என்றார்.

10. உடனே பெரிதும், உயரமுமான ஒரு பருவதத்தின்மேல் என்னைப் பரவசமாகக்கொண்டுபோய், சர்வேசுரனிடத்தினின்று பரலோகத்தைவிட்டிறங்கிவருகிற எருசலேமாகிய பரிசுத்த நகரத்தை எனக்குக் காண்பித்தார். அது தெய்வீக மகிமைப்பிரதாபமுடையதாயிருந்தது.

11. அதின் பிரகாசம் மிகவும் விலையுயர்ந்த இரத்தினக் கல்லைப்போலவும், பளிங்கைப்போல் துலக்கமான வச்சிரக்கல்லைப்போலவும் இருந்தது.

12. அதற்குப் பெரிதும் உயரமுமான மதிலும், அதில் பன்னிரண்டு வாசல்களும் இருந்தன. அந்த வாசல்களில் பன்னிரண்டு தூதர்கள் இருந்தார்கள். அவைகளின்மேல் இஸ்ராயேல் புத்திரராகிய பன்னிருகோத்திரங்களின் நாமங்களும் வரையப்பட்டிருந்தன. (எசெக். 48-31.)

13. கீழ்புறத்தில் மூன்று வாசல்களும், வடபுறத்தில் மூன்று வாசல்களும், தென்புறத்தில் மூன்று வாசல்களும், மேல்புறத்தில் மூன்று வாசல்களும் இருந்தன.

14. நகரத்தின் மதிலுக்குப் பன்னிரண்டு அஸ்திவாரங்கள் இருந்தன; அவைகளில் செம்மறிப் புருவையானவருடைய பன்னிரண்டு அப்போஸ்தலர்களின் பன்னிரண்டு நாமங்களும் இருந்தன.

15. என்னுடனே பேசினவர் நகரத்தையும், அதின் வாசல்களையும், அதின் மதிலையும் அளப்பதற்கு ஒரு பொற்கோலைப் பிடித்துக்கொண்டிருந்தார். (எசே. 40-3.)

16. அந்த நகரம் சதுரமாகக் கட்டப்பட்டிருக்கிறது. அதின் நீளம் எவ்வளவோ,அகலமும் அவ்வளவுதான். அவர் அந்தப் பொற்கோலைக்கொண்டு பன்னீராயிரம் ஸ்தாது அளந்தார். அதின் நீளமும், உயரமும், அகலமும் எல்லாம் சரிசமானமாயிருந்தது.

8. **பயங்காளிகள்:** வேதகலகங்களில் ஆக்கினைகளுக்குப் பயந்து வேதத்தை மறுதலித்தவர்கள்.

**பொய்யர்:** கள்ளப்போதகங்களைப் போதிக்கிறவர்கள்.

**இரண்டாம் மரணம்:** நித்திய சாபத்தின் தீர்ப்பு.

12. இஸ்ராயேல் புத்திரராகிய பன்னிரு கோத்திரத்தாரும் பூர்வீகத்தில் சர்வேசுரனால் தெரிந்துகொள்ளப்பட்ட ஜனங்களாயிருந்ததுமன்றி, பன்னிரு அப்போஸ்தலர்களாலும் புறஜாதியாருக்குள் மனந்திருப்பித் திருச்சபையில் சேர்த்துக்கொள்ளப்பட்ட கிறீஸ்துவர்களுக்கு அவர்கள் அடையாளமுமாயிருந்தார்கள். ஆகையால் அவர்களுடைய கோத்திர நாமங்கள் பரலோக வாசல்களில் பதிக்கப்பட்டதாகக் காண்பிக்கப்பட்டதாமே.

17. பின்பு அதின் மதிலை அளந்த போது, அது தூதனுடைய அளவாகிய மனுஷ அளவின்படியே நூற்றுநாற்பத்துநான்கு முழும் உயரமாயிருந்தது.

18. அதின் மதில்கட்டிடம் வச்சிரக்கல்லால் கட்டப்பட்டிருந்தது. அந்த நகரம் தூய பளிங்குக்கு ஒப்பான பசும் பொன்னுயிருந்தது.

19. நகரத்து மதில்களின் அஸ்திவாரங்கள் எவ்வித இரத்தினங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. முதலாவது அஸ்திவாரம் வச்சிரக்கல்லும், இரண்டாவது நீலக்கல்லும், மூன்றாவது சந்திரகாந்தமும், நான்காவது மரகதமும்,

20. ஐந்தாவது கோமேதகமும், ஆறாவது பதுமராகமும், ஏழாவது சுவர்னரத்தினமும், எட்டாவது படிக்கைப் பச்சையும், ஒன்பதாவது புஷ்பராகமும், பத்தாவது வைடூரியமும், பதினோராவது சுநீரமும், பன்னிரண்டாவது சுகந்திக்கல்லுமாயிருந்தது.

21. தனித்தனியே பன்னிரண்டு வாசல்களும் பன்னிரண்டு முத்துக்களாம். ஒவ்வொரு வாசலும் ஒவ்வொரு முத்தாலானது. நகரத்தின் வீதி துலக்கமான பளிங்குபோல் சுத்தப் பொன்னுயிருந்தது.

22. அதிலே நான் ஆலயத்தைக் காணவில்லை. ஏனெனில், சர்வ வல்லப கடவுளாகிய ஆண்டவரும் செம்மறிப் புருவையானவருமே அதற்கு ஆலயமாயிருக்கிறார்கள்.

23. அந்த நகரத்தில் பிரகாசிப்பதற்குச் சூரியனுவது சந்திரனுவது வேண்டியதில்லை. ஏனெனில், தெய்வப் பிரதாபம் அதைப் பிரகாசிப்பிக்கிறது; செம்மறிப் புருவையானவர் அதற்குத் தீபமாயிருக்கிறார். (இசை. 60-19.)

24. ஜனங்கள் அதின் ஒளியில் நடப்பார்கள். பூமியின் ராஜாக்கள் தங்கள் மகிமையையும், மேன்மையையும் அதற்குள்ளே கொண்டுவருவார்கள்.

25. பகலில் அதின் வாசல்கள் அடைக்கப்படுவதில்லை. இராக்காலமும் அங்கே கிடையாது. (இசை. 60-11.)

26. ஜனங்களுடைய மகிமையையும் மேன்மையையும் அதற்குள்ளே கொண்டுவருவார்கள்.

27. தீட்டுள்ளதும் அருவருப்பையும் பொய்யையும் நடப்பிக்கிறதுமாகிய எதுவும் அதில் பிரவேசிப்பதில்லை. செம்மறிப் புருவையின் ஜீவ புஸ்தகத்தில் எழுதப்பட்டவர்களே அதில் பிரவேசிப்பார்கள்.

## 22-ம். அதிகாரம்.

*ஜீவ ஜலமும், ஜீவ விருட்சமும், சர்வேசுரன் தாம் தெரிந்துகொண்டவர்களோடு நித்தியமாய் அரசாளுவதும் வருமாறு.*

1. பின்பு, பளிங்கைப்போல் தெளிந்த ஜீவ ஜலமுள்ள ஒரு நதி சர்வேசுரனும் செம்மறிப் புருவையானவரும் இருக்கிற சிங்காசனத்தினின்று புறப்பட்டு வருகிறதை எனக்குக் காண்பித்தார்.

---

17. சரீரமில்லாத சம்மனசுக்களுக்குக் கை இல்லாததினுலே அவர் அளந்த அளவு மனுஷருடைய முழக்கணக்கின்படி இத்தனை முழமென்று கணக்கிடப்பட்டது.

25. கோட்டைவாசல்கள் சாதாரணமாய் இராக்காலங்களிலும், யுத்த காலங்களில் பகலிலே முதலாய் அடைக்கப்படுவது வழக்கம். மோட்ச இராச்சியத்திலோ இரா இருளும் சத்துரு பயமுமின்றி எப்போதும் சதா பகலாய் சமாதானம் குடியிருக்கும். ஆகையால் அதின் வாசல்கள் அடைக்கப்படுவதில்லை என்று சொல்லப்படுகிறது.

1. இந்த அதிகாரத்தில் சொல்லப்பட்டவைகளைப் பழைய ஏற்பாட்டில் எசேக்கியேல் ஆகமம் 47-ம் அதிகாரத்தோடு ஒத்துப்பார்க்கவும்.

**ஜீவஜலநதி :**—சர்வேசுரன் மோட்சத்தில் நீதிமான்களுடைய உள்ளத்தில் இஸ்பிரீத்துவானவர்வழியாய்ப் பொழியும் பேரானந்த பாக்கியமாம்.

2. அந்த நகரத்து வீதியின் மத்தியிலும், நதியின் இருபுறத்திலும் பன்னிரண்டு கனிகளைத்தரும் ஜீவ விருட்சம் இருந்தது. அது மாதந்தோறும் தன் கனியைத்தரும். அந்த விருட்சத்தின் இலைகள் ஜனங்களுக்கு ஆரோக்கியத்தைத் தரக்கூடியவைகள். (எசே. 47-7.)

3. இனி எவ்வித சாபமும் இராது. சர்வேசுரனும் செம்மறிப்புருவையானவரும் வீற்றிருக்கிற சிம்மாசனம் அதில் இருக்கும். அவருடைய ஊழியரும் அவருக்கு ஊழியஞ்செய்து,

4. அவருடைய சமுகத்தைத் தரிசிப்பார்கள். அவருடைய நாமம் அவர்களுடைய நெற்றிகளில் இருக்கும்.

5. அங்கே இராக்காலம் இராது; விளக்கு வெளிச்சமும், சூரியனுடைய பிரகாசமும் அவர்களுக்கு வேண்டியதில்லை. ஏனெனில் கர்த்தராகிய தேவனே அவர்கள்மேல் பிரகாசிப்பார். அவர்களும் அநவரதகாலம் அரசாளுவார்கள். (இசை. 60-20.)

6. பின்பு அவர் என்னைநோக்கி: இந்த வார்த்தைகள் மகா பிரமாணிக்கமும், உண்மையுமானவைகள். சீக்கிரத்தில் சம்பவிக்கவேண்டியவைகளைத் தம்முடைய ஊழியருக்குக் காண்பிக்கும் பொருட்டுத் தீர்க்கதரிசிகளின் மனதை ஏவுகிற கர்த்தாவாகிய சர்வேசுரன் தம்முடைய தூதனை அனுப்பியிருக்கிறார்.

7. இதோ, வேகமாய் வருகிறேன். இந்தப் புஸ்தகத்தில் அடங்கிய தீர்க்கதரிசன வாக்கியங்களைக் காக்கிறவன் பாக்கியவான்.

8. அருளப்பனாகிய நானே இவைகளைக் கேட்டேன்; நானே இவைகளைக் கண்டேன். நான் கேட்டு, கண்டபோது இவைகளை எனக்குக் காண்பித்த தூதனை நமஸ்கரிக்கும்படி அவருடைய பாதத்தில் விழுந்தேன்.

9. அவர் என்னை நோக்கி: பத்திரம், அப்படிச் செய்யாதே; உன்னோடும், உன் சகோதரர்களாகிய தீர்க்கதரிசிகளோடும், இந்தப் புஸ்தகத்தில் அடங்கிய தீர்க்கதரிசன வாக்கியங்களைக் கைக்கொள்ளுகிறவர்களோடுங்கூட நானும் ஒரு ஊழியன்தான். சர்வேசுரனை நமஸ்கரி என்றார்.

10. மீளவும் அவர் என்னை நோக்கி: இந்தப் புஸ்தகத்திலுள்ள தீர்க்கதரிசன வாக்கியங்களுக்கு முத்திரையிடாதே. ஏனெனில் காலம் சமீபமாயிருக்கின்றது.

11. தின்மை செய்கிறவன் இன்னும் தின்மை செய்யட்டும்; அசுத்தங்களிலிருக்கிறவன் இன்னும் அசுத்தமாகட்டும்; நீதிமான் இன்னும் நீதிமானாகட்டும்; பரிசுத்தவான் இன்னும் பரிசுத்தவானாகட்டும்.

12. இதோ, சீக்கிரமாய் வருகிறேன். அவனவனுக்குத் தன்தன் கிரியைகளுக்கேற்றபடி நான் அளிக்கும் பலன் என்னுடனே இருக்கிறது.

13. நானே அல்பாவும் ஒமேகாவும், முந்தினவரும் பிந்தினவரும், ஆதியும் அந்தமுமாயிருக்கிறேன். (காட். 21-6.)

---

10. **முத்திரையிடாதே:**—அதாவது இத்தீர்க்கதரிசனங்களை இரகசியமாய் வைத்துக் கொள்ளாமல் எல்லாருக்கும் பிரசித்தப்படுத்து என்பதாம்.

11. **இன்னும் தின்மை செய்யட்டும்:**—இதினால் தின்மைசெய்வதற்கு உத்தாரங்கொடுக்கப்படுகிறதென்று எண்ணத்தக்கதல்ல. ஆனால் தீர்க்கதரிசியானவர் சொல்லுகிறதை எவனாவது கவனியாதிருந்தால், அவன்மேல் விழுகிற தண்டனை அவனுடைய குற்றத்தினால் வருகிறதென்றும், சர்வேசுரன்பேரில் முறையிட இடமிராதென்றும் அர்த்தமாம்.

14. ஜீவ விருட்சத்திற்குச் சுதந்தர முள்ளவர்களாய் வாசல்களின் வழியாய் நகரத்துக்குள் பிரவேசிக்கும்படி செம்மறிப் புருவையின் இரத்தத்தில் தங்கள் வஸ்திரங்களைக் கழுவுகிறவர்கள் பாக்கியவான்கள்.

15. நாய்களும், சூனியக்காரரும், விபசாரக்காரரும், கொலைபாதகரும், விக்கிரகாராதனைக்காரரும், பொய்யானதை விரும்புகிறவனும், அதைச் செய்கிறவனும் புறம்பே நிற்பார்கள்.

16. யேசுவாகிய நான் சபைகளில் இவைகளை உங்களுக்குச் சாட்சியாக அறிவிக்கும்படிக்கு என் தூதனை அனுப்பினேன். நான் தாவீதின் வேரும், வம்சமும், பிரகாசமுள்ள விடிவெள்ளி நட்சத்திரமுமாயிருக்கிறேன் என்றார்.

17. அப்போது இஸ்பிரீத்தும், மணவாளியும்: வாரும் என்கிறார்கள். கேட்கிறவனும்: வாரும் என்பானாக. தாகமாயிருக்கிறவன் வரக்கடவான். விருப்பமுள்ளவன் ஜீவஜலத்தை இலவசமாய் வாங்கிக்கொள்வானாக. (காட். 21-9; இசை. 55-7.)

18. இந்தப் புஸ்தகத்திலுள்ள தீர்க்கதரிசன வாக்கியங்களைக் கேட்கிற யாவருக்கும் நான் சாட்சியாய் அறிவிக்கிறதென்னவென்றால்: ஒருவன் இவைகளோடே எதையாகிலும் கூட்டினால், இந்தப் புஸ்தகத்தில் எழுதியிருக்கிற வார்த்தைகளைச் சர்வேசுரன் அவன் மேல் கூட்டிவைப்பார்.

19. ஒருவன் இந்தத் தீர்க்கதரிசனப் புஸ்தகத்தின் வாக்கியங்களிலிருந்து எதையாகிலும் எடுத்துப்போட்டால், ஜீவ புஸ்தகத்திலிருந்தும் பரிசுத்த நகரத்திலிருந்தும் இந்தப் புஸ்தகத்தில் எழுதப்பட்டவைகளிலிருந்தும் சர்வேசுரன் அவனுடைய பங்கை எடுத்துப் போடுவார்.

20. இவைகளுக்குச் சாட்சிசொல்லுகிறவர்: மெய்யாகவே நான் சீக்கிரமாய் வருகிறேன் என்கிறார். ஆமென்; ஆண்டவராகிய யேசுவே வாரும்.

21. நம்முடைய ஆண்டவராகிய யேசுக்கிறீஸ்துவின் வரப்பிரசாதம் உங்களனைவரோடுங்கூட இருப்பதாக. ஆமென்.

15. **நாய்கள்:**—தின்மைசெய்த துஷ்டர்கள் இவர்கள் தங்கள் துஷ்டக்கிரியைகளால் மற்றவர்களைக் கடிக்கிறதுபோல் இருப்பதால் நாய்களென்னப்படுகிறார்கள்.

16. யேசுநாதர்சுவாமி சர்வேசுரனாகியமட்டும் தாவீதைச் சிர்ஷ்டித்ததினால் அவருக்கு வேர் என்று சொல்லப்பட்டபோதிலும், மனுஷசுபாவத்தில் அவருடைய வம்சத்தில் பிறந்ததால், அவர் பிதிர்வழி என்னப்படுகிறார்.



## ஞாயிற்றுக்கிழமைகளிலும் பிரதான திருநாட்களிலும்

வாசிக்கப்படுகிற

# வேதாகமக் குறிப்புகள்.

| காலம். | சுவிசேஷம். | | நிருபம் முதலியன. | |
|---|---|---|---|---|
| | அதிகாரம். | வசனம். | அதிகாரம். | வசனம். |
| **ஆகமனகாலம்.** | | | | |
| முதல் ஞாயிறு ... | லூக் 21 | 25—33 | உரோ. 13 | 11—14 |
| இரண்டாம் ஞாயிறு ... ... | மத். 11 | 2—10 | ,, 15 | 4—13 |
| மூன்றும் ஞாயிறு ... ... | அரு. 1 | 19—28 | பிலிப். 4 | 4—7 |
| நான்காம் ஞாயிறு ... ... | லூக். 3 | 1—6 | 1 கொரி. 4 | 1—5 |
| **சதுர்காலம்.** | | | | |
| புதன் கிழமை ... ... | லூக். 1 | 26—38 | இசயா. 2 | 2—5 |
| | | | ,, 7 | 10—15 |
| வெள்ளிக்கிழமை ... ... | லூக். 1 | 39—47 | ,, 11 | 1—5 |
| சனிக்கிழமை ... ... | லூக். 3 | 1—6 | ,, 19 | 20—22 |
| | | | ,, 35 | 1—7 |
| | | | ,, 40 | 9—11 |
| | | | ,, 45 | 1—8 |
| கர்த்தர் பிறந்த திருநாளுக்கு முந்தின நாள் ... ... | மத் 1 | 18—21 | உரோ. 1 | 1—6 |
| ஷை திருநாள் முதல் பூசை ... | லூக். 2 | 1—14 | தீத். 2 | 11—15 |
| ஷை திருநாள் இரண்டாம் பூசை ... | லூக். 2 | 15—20 | தீத். 3 | 4—7 |
| ஷை திருநாள் மூன்றும் பூசை ... | அரு. 1 | 1—14 | எபிரே. 1 | 1-12 |
| அர்ச். முடியப்பர் திரு டிசம்பர்-மீ 26வ | மத் 23 | 34—39 | நடபடி. 6 | 8—10 |
| | | | நடபடி. 7 | 54—59 |
| அர்ச். அருளப்பர் திரு. டிசம்பா-மீ 27வ | அரு 21 | 19—24 | எக்லே. 15 | 1—6 |
| மாசில்லாக்குழந்தைகளின் திரு. டிசம்பர்-மீ 28வ ... | மத். 2 | 13—18 | காட்சி. 14 | 1—5 |
| கர்த்தர் பிறந்த திருநாளுக்குப் பின் வரும் ஞாயிறு ... ... | லூக். 2 | 33—40 | கலா. 4 | 1—7 |
| ஜனவரி-மீ 1வ விருத்தசேதன திரு. | லூக். 2 | 21—... | தீத். 2 | 11—15 |
| ஷை திருநாளுக்கு அடுத்த ஞாயிறு ... | மத். 2 | 13—15 | 1 அரு. 4 | 9—15 |
| மூன்றிராசாக்கள் திரு. ஜனவரி-மீ 6வ | மத். 2 | 1—12 | இசை. 60 | 1—6 |
| ஷை திருநாளுக்குப்பின்வரும் ஞாயிறு... | லூக் 2 | 42—52 | உரோ. 12 | 1—5 |
| ஷை திருநாளுக்குப்பின்வரும் 8-ம் நாள். | அரு. 2 | 29—34 | இசை. 60 | 1—6 |
| மூன்றிராசாக்கள் திருநாளுக்குப் பின் வரும் 2-ம் ஞாயிறு ... ... | அரு. 2 | 1—11 | உரோ. 12 | 6—6 |
| ஷை மூன்றும் ஞாயிறு ... | மத். 8 | 1—13 | உரோ. 12 | 16—21 |
| ஷை நான்காம் ஞாயிறு ... ... | மத். 8 | 23—27 | உரோ. 13 | 8—10 |

| காலம். | சுவிசேஷம். | | நிருபம் முதலியன. | |
|---|---|---|---|---|
| | அதிகாரம். | வசனம். | அதிகாரம். | வசனம். |
| ஷை ஐந்தாம் ஞாயிறு ... ... | மத். 13 | 24—30 | கொலோ. 3 | 12—17 |
| ஷை ஆறும் ஞாயிறு ... ... | மத். 13 | 31—35 | I தெச. 1 | 2—10 |
| சதுரிகை ஞாயிறு ... ... | மத். 20 | 1—16 | I கொரி. 9 | 24—27 |
| | | | I கொரி. 10 | 1— 5 |
| சடிகை ஞாயிறு ... ... | லூக். 8 | 4—15 | II கொரி. 11 | 19—33 |
| | | | ,, 12 | 1— 9 |
| பஞ்சுகை ஞாயிறு ... ... | லூக். 18 | 31—43 | I கொரி. 13 | 1—13 |
| விபூதித்திருநாள் ... ... | மத். 6 | 16—21 | ஜோயேல். 2 | 12—19 |
| தபசுகாலம் முதல்வெள்ளி ... ... | மத். 5 | 43—48 | இசை. 58 | 1— 9 |
| ஷை முதல் ஞாயிறு ... ... | மத். 4 | 1—11 | II கொரி. 6 | 1—10 |
| ஷை இரண்டாம் வெள்ளி ... ... | அரு. 5 | 1—15 | இசக்கி. 18 | 20—28 |
| ஷை ஷை ஞாயிறு ... ... | மத். 17 | 1— 9 | I தெச. 4 | 1— 7 |
| ஷை மூன்றும் வெள்ளி ... ... | மத். 21 | 33—46 | ஜெனே. 37 | 6—22 |
| ஷை ஷை ஞாயிறு ... ... | லூக். 11 | 14—28 | எபேசி. 5 | 1— 9 |
| ஷை நாலாம் வெள்ளி ... ... | அரு. 4 | 5—42 | எண். 20 | 2—13 |
| ஷை ஷை ஞாயிறு ... ... | அரு. 6 | 1—15 | கலாத். 4 | 22—31 |
| ஷை ஐந்தாம் வெள்ளி ... ... | அரு. 11 | 1—45 | III இரா. 17 | 17—24 |
| ஷை ஷை ஞாயிறு திருப்பாடுகள் ... | அரு. 8 | 46—59 | எபிரே. 9 | 11—15 |
| ஷை ஆறும் வெள்ளி ... ... | அரு. 11 | 47—54 | எரேமி. 17 | 13—18 |
| குருத்து ஞாயிறு ... ... | மத். 21 | 1— 9 | யாத்தி. 15 | 27—... |
| | மத். 26 | ... | ,, 16 | 1— 7 |
| | மத். 27 | ... | பிலிப்பி. 2 | 5—11 |
| அர்ச்சியசிஷ்ட வாரம் | | | | |
| திங்கள் ... ... | அரு. 12 | 1— 9 | இசை. 50 | 5—10 |
| செவ்வாய் ... ... | மார். 14 | ... | எரேமி. 11 | 18—20 |
| | மார். 15 | ... | | |
| புதன் ... ... | லூக். 22 | ... | இசை. 53 | 1—12 |
| | லூக். 23 | ... | இசை. 62 | 11—12 |
| | | | இசை. 63 | 1— 7 |
| பெரிய வியாழன் ... ... | அரு. 13 | 1—15 | I கொரி. 11 | 20—32 |
| பெரிய வெள்ளி ... ... | அரு. 18 | ... | ஓசேயே. 6 | 1— 7 |
| | ,, 19 | ... | யாத்தி. 12 | 1—11 |
| பெரிய சனி ... ... | மத். 28 | 1— 7 | கொலே. 3 | 1— 4 |
| உயிர்த்த திருநாள் ... ... | மார். 16 | 1— 7 | I கொரி. 5 | 7— 8 |
| உயிர்த்த திருநாளுக்குப் பின்வரும் முதல் ஞாயிறு ... ... | அரு. 20 | 19—31 | I அரு. 5 | 4—10 |
| ஷை இரண்டாம் ஞாயிறு ... ... | அரு. 10 | 11—16 | I இரா. 2 | 21—25 |
| ஷை மூன்றும் ஞாயிறு ... ... | அரு. 16 | 16—22 | I இரா. 2 | 11—19 |
| ஷை நாலாம் ஞாயிறு ... ... | அரு. 16 | 5—15 | இயாக. 1 | 17—21 |
| ஷை ஐந்தாம் ஞாயிறு ... ... | அரு. 16 | 23—20 | இயாக. 1 | 22—27 |
| ஆரோகணத்திருநாளுக்கு முந்தினநாள். | அரு. 17 | 1—11 | எபேசி. 4 | 7—13 |
| ஆரோகணத்திருநாள் ... ... | மார். 16 | 14—20 | நடபடி. 1 | 1—11 |
| ஷை திருநாளுக்கு அடுத்த ஞாயிறு ... | அரு. 15 | 26—21 | I இராய. 4 | 7—11 |
| | அரு. 16 | 1— 4 | | |

| காலம். | சுவிசேஷம். | | நிருபம் முதலியன. | |
|---|---|---|---|---|
| | அதிகாரம். | வசனம். | அதிகாரம். | வசனம். |
| இஸ்பிரீத்துசாந்து திரு. முந்தின நாள்.. | அரு. 14 | 15—21 | நடபடி. 19 | 1— 8 |
| இஸ்பிரீத்துசாந்துவின் திருநாள் ... | அரு. 14 | 23—31 | நடபடி. 2 | 1—11 |
| அர்ச். திரித்துவத்தின் திருநாள் ... | மத். 28 | 18—20 | உரோ. 11 | 33—36 |
| இஸ்பிரீத்துசாந்துவின் திருநாளுக்குப்பின்வரும் முதல் ஞாயிறு ... | லூக். 6 | 36—42 | I அரு. 4 | 8—21 |
| திவ்வியநற்கருணைத் திருநாள் ... | அரு. 6 | 56—59 | I கொரி. 11 | 23—29 |
| இஸ்பிரீத்துசாந்துவின் திருநாளுக்குப் பின்வரும் இரண்டாம் ஞாயிறு ... | லூக். 14 | 16—24 | I அருள. 3 | 13—18 |
| ஷை மூன்றும் ,, ... | லூக். 15 | 1—10 | I இராய. 5 | 6—11 |
| ஷை நான்காம் ,, ... | லூக். 5 | 1—11 | உரோ. 8 | 18—23 |
| ஷை ஐந்தாம் ,, ... | மத். 5 | 20—24 | I இராய. 3 | 8—15 |
| ஷை ஆறும் ,, ... | மார்க். 8 | 1— 9 | உரோ. 6 | 3—11 |
| ஷை ஏழாம் ,, ... | மத். 7 | 15—21 | உரோ 6 | 19—23 |
| ஷை எட்டாம் ,, ... | லூக். 16 | 1— 9 | உரோ. 8 | 12—17 |
| ஷை ஒன்பதாம் ,, ... | லூக். 19 | 41—47 | I கொரி. 10 | 6—13 |
| ஷை பத்தாம் ,, ... | லூக். 18 | 9—14 | I கொரி. 12 | 2—11 |
| ஷை பதினொராம் ,, ... | மார்க். 7 | 31—37 | I கொரி. 15 | 1—10 |
| ஷை பன்னிரண்டாம ,, ... | லூக். 10 | 23—37 | II கொரி. 3 | 4— 9 |
| ஷை பதின்மூன்றும் ,, ... | லூக். 17 | 11—19 | கலாத். 3 | 16—22 |
| ஷை பதினான்காம் ,, ... | மத். 6 | 24—33 | கலாத். 5 | 16—24 |
| ஷை பதினைந்தாம் ,, ... | லூக். 7 | 11—16 | கலாத். 5 | 25—26 |
| | | | கலாத். 6 | 1—10 |
| ஷை பதினாறும் ,, ... | லூக். 14 | 1—11 | எபேசி. 3 | 13—21 |
| ஷை பதினேழாம் ,, ... | மத். 22 | 35—46 | எபேசி. 4 | 1— 6 |
| ஷை பதினெட்டாம் ,, ... | மத். 9 | 1— 8 | I கொரி. 1 | 4— 8 |
| ஷை பத்தொன்பதாம் ,, ... | மத். 22 | 1—14 | எபேசி. 4 | 23—28 |
| ஷை இருபதாம் ,, ... | அரு. 4 | 46—53 | எபேசி. 5 | 15—21 |
| ஷை இருபத்தொராம் ,, ... | மத். 18 | 23—35 | எபேசி. 6 | 10—17 |
| ஷை இருபத்திரண்டாம் ,, ... | மத். 22 | 15—21 | பிலிப். 1 | 6 11 |
| ஷை இருபத்துமூன்றும் ,, ... | மத். 9 | 18—26 | பிலிப். 3 | 17—21 |
| | | | பிலிப். 4 | 1— 3 |
| ஷை இருபத்துநான்காம் ,, ... | மத். 24 | 15—35 | கொலே. 1 | 9—14 |

# மாறுந் திருநாட்கள்.

| திருநாள். | சுவிசேஷம். | | | நிரூபம் முதலியன. | | |
|---|---|---|---|---|---|---|
| | அதிகாரம். | | வசனம். | அதிகாரம். | | வசனம். |
| சேசுவின் திருநாமத்தின் திருநாள் ... | லூக். | 2 | 21— .. | நடபடி. | 4 | 8—12 |
| சேசுவின் திரு இருதயத்திருநாள் ... | அரு. | 19 | 31—35 | இசை. | 12 | 1— 6 |
| கர்த்தர் மறுரூபமான திருநாள் ... | மத். | 17 | 1— 9 | II இரா | 1 | 16—19 |
| தேவமாதா பிறந்த திருநாள் ... | மத். | 1 | 1—16 | பழமொ. | 8 | 22—35 |
| காணிக்கைமாதாத் திருநாள் ... | லூக். | 11 | 27—28 | எக்கிளே. | 24 | 14—16 |
| மங்களவார்த்தைத் திருநாள் ... | லூக். | 1 | 26—38 | இசை. | 7 | 10—15 |
| எலிசபேத்தம்மாளை மினவின திருநாள். | லூக். | 1 | 39—47 | கானம். | 2 | 8—14 |
| சுத்திகரத் திருநாள் ... | லூக். | 2 | 22—32 | மால். | 3 | 1— 4 |
| தேவமாதா மோக்ஷத்துக்குப் போன திருநாள் ... | லூக். | 10 | 38—42 | எக்கிளே. | 24 | 11—20 |
| ஜெபமாலைமாதாத் திருநாள் ... | லூக். | 11 | 27—28 | எக்கிளே. | 24 | 14—16 |
| ஜென்மப்பாவமில்லாமல் உற்பவித்த தேவமாதா திருநாள் ... | மத். | 1 | 1—16 | பழ. | 8 | 22—35 |
| வியாகுலமாதாத் திருநாள் ... | அரு. | 19 | 25—27 | யூதித். | 13 | 22—25 |
| அர்ச். சூசையப்பர் திருக்கலியாணத் திருநாள் ... | மத். | 1 | 18—21 | பழ. | 8 | 22—35 |
| அர்ச். சூசையப்பரின் திருமரணத் திருநாள் ... | மத். | 1 | 18—21 | எக்கிளே. | 45 | 1— 6 |
| அர்ச். மத்தியாஸ் திருநாள் ... | மத். | 11 | 25—30 | நடபடி. | 1 | 15—26 |
| ,, மாற்கு திருநாள் ... | லூக். | 10 | 1— 9 | எசக். | 1 | 10—14 |
| ,, பிலிப்பு யாக்கோப்பு திருநாள் ... | அரு. | 14 | 1—13 | ஞான. | 5 | 1— 5 |
| ,, ஞானப்பிரகாசியார் திருநாள் ... | மத். | 22 | 26—33 | எக்கி. | 31 | 8—11 |
| ,, ஸ்நாபக அருளப்பர் பிறந்த திரு.. | லூக். | 1 | 57—68 | இசை. | 49 | 1— 7 |
| ,, இராயப்பர் சின்னப்பர் திருநாள்.. | மத். | 16 | 13—19 | நடபடி. | 12 | 1—11 |
| ,, பெரிய யாகப்பர் திருநாள் ... | மத். | 20 | 20—23 | I கொரி. | 4 | 9—15 |
| ,, அன்னம்மாள் திருநாள் ... | மத். | 13 | 44—52 | பழ. | 31 | 10—31 |
| ,, பர்தலோமெயு திருநாள் ... | லூக். | 6 | 12—19 | I கொரி. | 12 | 27—31 |
| ,, மத்தேயு திருநாள் ... | மத். | 9 | 9—13 | எசக். | 1 | 10—14 |
| ,, மிக்கேல் திருநாள் ... | மத். | 18 | 1—10 | காட். | 1 | 1— 5 |
| ,, காவல் சம்மனசு திருநாள் ... | மத். | 18 | 1—10 | யாத். | 23 | 20—23 |
| ,, லூக்காஸ் திருநாள் ... | லூக். | 10 | 1— 9 | II கொரி. | 8 | 16—24 |
| ,, சீமோன், யூதா திருநாள் ... | அரு. | 15 | 17—25 | எபேசி. | 4 | 7—13 |
| ,, பிலவேந்திரர் திருநாள் ... | மத். | 4 | 18—22 | உரோ. | 10 | 10—18 |
| சகல மோக்ஷவாசிகள் திருநாள் ... | மத். | 5 | 1—12 | காட்சி. | 7 | 2—12 |
| உத்தரிக்கிற ஆத்துமாக்கள் திருநாள் ... | அரு. | 5 | 25—29 | I கொரி. | 15 | 51—57 |
| அர்ச். சவேரியார் திருநாள் ... | மார்க். | 16 | 15—18 | உரோ. | 10 | 10—18 |
| அர்ச். தோமையார் திருநாள் ... | அரு. | 20 | 24—29 | எபேசி. | 2 | 19—22 |

# விபரம்.

---

திருச்சபைக் கணக்கின்படியே இஸ்பிரீத்துசாந்து திருநாளுக்குப் பிறகு சாதாரணமாய் 24 ஞாயிற்றுக்கிழமைகள் வரும். ஆனால் சில வருஷங்களில் குறைந்தால் 23 ஞாயிற்றுக்கிழமைகளுக்குக் குறையாது. அதிகப்பட்டால் 28 ஞாயிற்றுக் கிழமைகளுக்கு மேற்படாது. எப்படி வந்தாலும் மேற்சொன்ன இஸ்பிரீத்துசாந்து திருநாளுக்குப் பிறகு வருகிற 24-ம் கிழமை வாசகம் கடைசிக் கிழமையில் வாசிக்கப்படும். நடுவேயுள்ள கிழமைகளில் மூன்றிராஜாக்கள் திருநாளுக்குப்பின் உள்ள ஞாயிற்றுக்கிழமை வாசகங்களை வாசிக்கவும். அப்படியே,

| | | | | |
|---|---|---|---|---|
| இஸ்பிரீத்துசாந்து திருநாளுக்குப்பின் | 24-ம்.25-ம்.26-ம்.27-ம்.28-ம். | | ஞாயிறு | வந்தால் |
| மூன்றிராஜாக்கள் திருநாளுக்குப்பின் | 3-ம்.4-ம்.5-ம்.6-ம். | இஸ். பின். 24-ம். | ,, | வாசகமும் |
| இஸ்பிரீத்துசாந்து திருநாளுக்குப்பின் | 24-ம். 25-ம். 26-ம். 27-ம். | | ,, | வந்தால் |
| மூன்றிராஜாக்கள் திருநாளுக்குப்பின் | 4-ம். 5-ம். 6-ம். | இஸ். பின். 24-ம். | ,, | வாசகமும் |
| இஸ்பிரீத்துசாந்து திருநாளுக்குப்பின் | 24-ம். 25-ம். 26-ம். | | ,, | வந்தால் |
| மூன்றிராஜாக்கள் திருநாளுக்குப்பின் | 5-ம். 6-ம். | இஸ். பின். 24-ம். | ,, | வாசகமும் |
| இஸ்பிரீத்துசாந்து திருநாளுக்குப்பின் | 24-ம். 25-ம். | | ,, | வந்தால் |
| மூன்றிராஜாக்கள் திருநாளுக்குப்பின் | 6-ம். | இஸ். பின். 24-ம். | ,, | வாசகமும் |

வாசிக்கப்படும்.

